# உலகப் பொதுமறை
# திருக்குறள் உரைவிளக்கம்

தமிழ்மறைக் காவலர்

திருக்குறளார் வீ. முனிசாமி




திருமகள் நிலையம்

13, எர்ரபாலு தெரு, சென்னை-600001

PHONE : 26183

திருவள்ளுவர் திருநாள் விழாவில்

**(15—1—1983)**

சென்னை வள்ளுவர் கோட்டத்தில்

**பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவர்**

தமிழக முதல்வர் மாண்புமிகு

**எம். ஜி. இராமச்சந்திரன்** அவர்களால்

பாராட்டி வெளியிடப்பெற்ற நூல்

# BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title of the Book : | Ulaga Pothumarai<br>Thirukkural Urai Vilakkam |
| Author : | Thirukkuralar V. Munisamy, B.A., B.L. |
| Language : | Tamil |
| Copy Right Holder : | Author |
| Date of Publication : | December, 1982 |
| Edition : | First |
| Size of the Book : | 18 × 24 cm (Crown Quarto) |
| No. of Pages : | 1172 |
| Paper Used : | White Printing 27.2 kg. Quad. Cr. |
| Binding : | Full Calico Binding |
| Printer : | Vettri Achagam, Madras-600 005. |
| Artist : | Anandan (Eswari) |
| Proof Readers : | Muthu Etherasan, M.A., B.ED.<br>M. Iyasami, M.A., B.ED.<br>M. S. Vimalanandam, M.A.<br>Pulaver Tamaraikannan<br>Pulavar S. Kuppusami<br>Vellayampattu Sundaram |
| Publisher : | A. Ramanathan<br>Thirumagal Nilayam<br>13, Errabalu Chetty Street, Madras-600 001. |
| Price : | Rs. 150/- |

க. இராசாராம்
பேரவைத் தலைவர்,
தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை



செயின்ட் ஜார்ஜ் கோட்டை
சென்னை - 600 009

51, சாந்தோம் நெடுஞ்சாலை
சென்னை - 600 028

# சிறப்புரை

திருவள்ளுவர் அருளிய திருக்குறள் ஓர் **உலகப் பொதுமறை**. உலக மக்கள் அனைவருக்கும் பொருந்தக் கூடிய சிறந்த கருத்துக்களைத் தன்னகத்தே கொண்ட ஓர் ஒப்பற்ற நூல். ஒவ்வொரு குறளும் ஒன்றே முக்கால் அடிதான். ஆனால் அதற்குள்ளேதான் எவ்வளவு எண்ணங்கள். கடுகையே துளைத்து, அதனுள் ஏழு கடலையே வைத்திருந்தால், அது எவ்வளவு அதிசயிக்கத் தக்கதோ, அவ்வளவு அதிசயமான கருத்துக்களைக் கொண்ட நூல். ஆனால், எல்லா அதிசயமான கருத்துக்களையும், மனித சமுதாயம் கடைப்பிடிக்கத் தக்கதாகும் என்பது குறளுக்கு மேலும் சிறப்புச் சேர்ப்பதாகும்.

திருக்குறள் ஆயிரத்து முந்நூற்று முப்பது அறைகளைக் கொண்டதோர் அரண்மனை. அரண்மனை போன்ற அமைப்பே தவிர, திருவள்ளுவர், அத்தனை மக்கள் சமுதாயம் முழுவதற்கும் பயன்படத்தக்க வகையில், கட்டித் தந்துள்ளார்.

திருக்குறள்—அறம், பொருள், இன்பம்—இம்மூன்றினையும் ஒன்றாக மக்களுக்கு வழங்கியுள்ளது. இம் மறைநூலுக்கு, பரிமேலழகரிலிருந்து, பலரும் உரை எழுதியுள்ளார்கள். ஒவ்வொருவர் எழுதிய உரையிலிருந்தும் நாட்டுக்குப் பல புதிய கருத்துக்கள் கிடைத்தவண்ணம் உள்ளன.

மேலும் பலரது கருத்துக்கள், திருக்குறளிலிருந்து உலகம் பெற வேண்டும் என்ற நல்ல நோக்கத்தின் அடிப்படையில்தான் பேரறிஞர் அண்ணா அவர்கள், நம் தமிழகத்தில் உள்ள மூன்று பல்கலைக் கழகங்களி லிருந்தும், ஆராய்ச்சி உரைகள் வெளிவர வேண்டும் என விரும்பி, அதற்கான ஏற்பாட்டினை இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் செய்து முடித்தார்கள்.

தற்போது, நமது திருக்குறளார், வீ. முனிசாமி அவர்கள், நமக்கு **உலகப் பொதுமறை திருக்குறள் உரைவிளக்கம்** என்ற சிறந்த நூலை அளித்து, திருக்குறளுக்கு மேலும் சிறப்பினை நல்கியுள்ளார்கள்.

திருக்குறளாரின் சொற்பொழிவைக் கேட்காத தமிழர்கள் எவரும் இருக்க மாட்டார்கள், கடந்த நாற்பதாண்டுகளாக அவர் ஆற்றிவரும்

திருக்குறள் தொண்டு சாதாரணமானதன்று. சேலத்தில் அவர் வாழ்ந்த காலத்திலேயும், அவர் திருக்குறளுக்காகவே குறள்மலர் என்ற வார இதழை நடத்திய போதும், அவரை நான் நன்கறிவேன்.

திருக்குறளை, படிக்காத பாமரரும் புரிந்து கொள்ளத்தக்க வகையில், எளிய முறையில், தக்க உதாரணங்களோடு, சுவை ததும்ப அவர் எடுத்துக் கூறும் முறை, அவருக்கே உரித்தான தனிப்பாணி ஆகும். அவரது சொற்பொழிவுகளை, இசைத்தட்டுக்களிலேயும், நாடாக்களிலும் பதிவு செய்து, உலகில் தமிழர்கள் வாழும் பகுதிகளிலெல்லாம் ஒலிபரப்ப வேண்டும் என்பது எனது பேரவா.

திருக்குறளார், காலத்தால் அழியாத உரை விளக்கத்தினை நமக்கெல்லாம் தந்திருக்கிறார்கள். ஒரு குறளுக்கு, மற்றொரு குறள் மூலமே அதன் முழுப் பொருளையும் உணர்ந்து கொள்ளும் வண்ணம் நமக்கு உணர்த்தியுள்ள முறை முற்றிலும் புதியது.

திருக்குறளாருக்கு, குறள்கள் ஆயிரத்து முந்நூற்று முப்பதும் மனப்பாடம் என்றே கூறலாம். எத்துணையோ ஆண்டுக்காலம் சிந்தித்துச் சிந்தித்து, ஒவ்வொன்றையும் வகுத்துத் தொகுத்து, சிறந்த ஆராய்ச்சியை இந்நூலின் மூலம் நாட்டுக்காக அருளியுள்ளார்கள். இந்நூலினை ஐந்து பகுதிகளாகப் பிரித்துள்ளார்கள். 1. முன்னுரைப் பகுதி 2. குறிப்புப் பகுதி 3. உரைப்பகுதி 4. உரைவிளக்கப் பகுதி 5. சிந்தனைப் பகுதி எத்துணை ஆண்டுக்கால உழைப்பின் பலன் இது என்பதனை, நூலினை நுகர்வோரே அறிய இயலும். புலவர் துணை ஏதுமின்றி திருக்குறளினைக் கற்க விரும்புபவர்கட்கு இந்நூல் கற்கண்டேயாகும். நூலினை எடுத்தால், கீழே வைக்க முடியாதபடி, படித்துக் கொண்டே இருக்கத் தூண்டும் நடைவளம்! சிந்தனைப் பகுதி தெவிட்டாத தேன் விருந்து! பல கருத்துக்களை எடுத்து வைத்து விவாதிக்கின்ற அழகே தனி. திருக்குறளார் இந்நூலின் மூலம் செய்துள்ள குறள் தொண்டிற்கு தமிழகம் என்றென்றும் கடமைப் பட்டிருக்கிறது. இது தமிழர்தம் இல்லந்தோறும் இருக்க வேண்டிய நூல்.

க. இராசாராம்

டாக்டர் நாவலர்
**இரா. நெடுஞ்செழியன்**
நிதியமைச்சர்




புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை - 600 009

நாள்: 1 - 10 - 82

# அணிந்துரை

உலகோர் உய்ய, உயர்பேரற நெறி காட்ட வந்த உலகப் பொது மறையாம் தேன்தமிழ்த் திருக்குறளைத் தந்த திருவள்ளுவப் பெருந்தகையார், தண்டமிழ் நாட்டின் தொல்லாணை நல்லாசிரியப் பெருமக்களுள், தலைசிறந்து விளங்கிய பெருமகனாவார். அவர் என்றென்றும் புலவர்களுக்கெல்லாம் புலவராகத் திகழும் பெற்றியினைப் பெற்றவர். அவர் பற்பல நாடுகளின் எல்லைகளையும், பற்பல மொழிகளின் ஏற்றமிகு நெறிகளையும், பற்பல இனங்களின் எண்ண ஏற்பாடுகளையும் கடந்து நிற்கும் பேரறிவாளராவார்.

பொய்யாமொழிப் பெருந்தகையாளரான வள்ளுவனார் செயற்கரிய செயல்களையெல்லாம் சொல்லிக் காட்டிய பெரியவராவார்; ஒழுக்கத்தை உயிரினும் ஓம்பியவர்; ஒழுக்கத்தின் வாயிலாக மேன்மை எய்தியவர்; சொல்லில் பயனுடைய சொற்களைச் சொல்லியவர்; அறிவை நன்றின்பால் உய்க்க வைத்தவர்; ஆவது அறிந்து அறிவுறுத்திய அறிவுடையார்; உள்ளுவதையெல்லாம் உயர்வாகவே உள்ளியவர்; வசையொழிய வாழ்ந்து காட்டியவர்; புகழ்ந்தவை போற்றிச் செயலாற்றியவர்; சொற்களைத் திறனறிந்து சொல்லியவர்; நாட்டின் நிலை அறிந்து ஆராய்ந்து சொல்லியவர்; இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லியவர்; பற்றற்றான் பற்றினைப் பற்றியவர்; எவ்வெவ்வரிடத்திலும் மெய்ப் பொருள் கண்டவர்; எவ்வெவ் பொருளிடத்திலும் மெய்ப்பொருள் கண்டவர்.

அறிவுத் திறனையும், ஆற்றல் திறனையும் பண்பாட்டுத் திறனையும் ஒருங்கே பெற்று, 'உலகப் பொதுமறை நூலாக', 'உலகப்பேரற நூலாக', 'உலகப் பொது நூலாக', 'உலக வாழ்வியல் வழிகாட்டி நூலாக', 'உலக ஒழுக்க நூலாக', 'உலக முதல் நூலாக', 'உலக வாழ்க்கை இலக்கண நூலாக', 'உலகப் பேரிலக்கிய நூலாக'த் திருக்குறளை வடித்தெடுத்து வழங்கிய காரணத்தால்தான், திருவள்ளுவப் பெருந்தகையாளரைப் பற்றிக் குறிப்பிடும்போது, புதுமைக்கவி பாரதியார், ''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து, வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'' என்று புகழ்ந்து பாராட்டி மகிழ்ந்தார். தமிழகம் வள்ளுவரைப் பெற்றெடுத்து உலகிற்குத் தந்தது. அந்தச் செயலுக்கு மாற்றாக வான்புகழை உலகத்திடமிருந்து தமிழகம் பெற்றுக்கொண்டது என்று பாரதியார் குறிப்பிடும் பாங்கு வியந்து பாராட்டுதற்குரியதாகும்.

திருக்குறளைப் போற்றிப் புகழாத புலவர் எவருமிலர். அதனை வாழ்த்தி வரவேற்காத வள்ளல்கள் எவருமிலர். தமிழ் இலக்கியங்களுக்கெல்லாம் தலைமை தாங்கும் பெற்றியினைப் பெற்றுள்ள நூல் திருக்குறளேயாகும். நம் நாட்டில், நாட்டுக்குரிய கொடியைப் போல், நாட்டுக்குரிய பறவையைப் போல், நாட்டுக்குரிய இலச்சினையைப் போல், 'நாட்டுக்குரிய நூலாக' விளங்கும் தகுதியைத் திருக்குறளே பெற்றிருக்கிறது.

குறட்பாக்களின் அருமை பெருமைகளையும், அணி அழகுச் சிறப்புக் களையும், பொருள் நயப்பாடுகளையும், கருத்துச் செறிவுகளையும், சொற்பொழிவு களையும், பேருண்மைகளையும், அறிவுச் செறிவுகளையும், கொள்கைக் கோட் பாடுகளையும் சுட்டிக் காட்ட வந்த உரையாசிரியர்கள் பல நூற்றுக்கணக்கானவர்கள் ஆவர். மணக்குடவர், பரிதியார், பரிமேலழகர் போன்ற பழம் பேராசிரியர்கள் பல பேருண்டு.

அண்மைக் காலத்தில் சென்ற இரண்டு நூற்றாண்டு காலத்திற்குள் புதிய புதிய உரைகளை அழகாகவும், அருமையாகவும், தெளிவாகவும், திட்பமாகவும் கொண்டு வந்துள்ளவர்கள் பலப்பல பேர்கள் இருக்கிறார்கள். பழைய உரையாசிரியர்கள் ஆகியோரின் கருத்துக்களின் ஆழத்தையும், அகலத்தையும், உயரத்தையும் நன்கு அறிந்து உள்ளத்தே வைத்துக்கொண்டு, ஒவ்வொரு குறளின் வெளிப்பொருள் — உட்பொருள் — கருப்பொருள் — தெளிபொருள் — உணர் பொருள் — அறிபொருள் ஆகியவற்றை யெல்லாம் உணர்ந்து, அவற்றை நடைமுறை உலகியல் வாழ்க்கையின் பழக்க வழக்கங்களோடு ஒப்பிட்டுப் பார்த்துச், சொல்லுக்குச் சொல் சுவையறிந்து, பொருளுக்குப் பொருள் ஒளியுணர்ந்து, ஈடற்ற, எடுப்பான ஒரு நனி சிறந்த உரைவிளக்கத்தை, உலகப் பொதுமறையாம் திருக் குறளுக்கு, இன்றைய நிலையில் தந்துள்ள பெருமை **திருக்குறளார் வி. முனிசாமி பெருந்தகையாளரையே** சாரும்.

அறியாமை இருளை அகற்ற, அறிவொளியை ஓயாமல் ஒழியாமல் வீசிக் கொண்டிருக்கும் பணியைத் திருக்குறள் செய்துகொண்டே இருந்தாலும், அதனைப் பார்த்தறியாத மக்களும், அதனைப் பற்றிக் கேட்டறியாத மக்களும், அதன் பயனை நுகர்ந்தறியாத மக்களும் தமிழகத்தில் கோடானுகோடி பேர்கள் இருக் கிறார்கள்.

திருக்குறளின் பெயரைக் கேள்வியுற்ற மக்கள் சிலபல நூறாயிரம் பேர்கள் இருப்பார்கள். அவர்களில் மிகச் சிலரே திருக்குறளை அரையும்குறையு மாகப் படித்திருப்பார்கள். அவர்களிலும் மிகச் சிலரே குறட்பாக்களின் பொருளை விளங்கிக் கொண்டிருப்பார்கள். அவர்களிலும் மிகச்சிலரே அணியழகு, சொல்லழகு, பொருளழகு ஆகியவற்றைத் தெரிந்து கொண்டிருப்பார்கள். அவர்களிலும் மிகச் சிலரே நயப்பாடுகளைப் புரிந்து கொண்டிருப்பார்கள். அவர்களிலும் மிகச்சிலரே புரிந்துகொண்ட நயப்பாடுகளைத் தெளிவுப்படுத்தும் திறனைப் பெற்றிருப்பார்கள். அவர்களிலும் மிகச்சிலரே உரைவிளக்கம் தரும் பெற்றியினைப் பெற்றிருப்பார்கள். அவர்களிலும் மிகமிகச் சிலரே 1330 அருங் குறட்பாக்களுக்கு உரைவிளக்கம் தரும் ஆற்றலுடையவர்களாக இருப்பார்கள். அந்த மிகமிகச் சிலரிலும் குறட்பாக்களுக்குக் குறிப்புரை தந்து, பொருளுரை பயந்து,

கருத்துரை வழங்கித், தெளிபொருள் விளக்கம் தந்து, பண்டிதர் மட்டுமல்லாமல் பாமரமக்களும் புரிந்து கொள்ளும்படி நகைச்சுவையோடு சொல்லி, அவர்களைச் சிரிக்க வைத்து, நயப்பாடுகள் கூறிச் சிந்திக்க வைத்துத், திருக்குறளை முழுமையாகக் கொண்டுவந்து நிறுத்தும் வல்லமை பெற்றவர் ஒருவராகத்தான் இருக்கிறார்; ஒரே ஒருவராகத்தான் இன்றைய நிலையில் இருக்க முடிகிறது. அந்த ஒரே ஒருவராகக் காட்சியளிப்பவர்தாம் பெருமதிப்பிற்குரிய திருக்குறளார் ஆவார்கள். அவர் உலகப் பொதுமறையாம் திருக்குறளுக்கு உரைவிளக்கப் பேராசிரியராகத் திகழ்வதை எடுத்துக்காட்டுவதுதான் இந்தப் பெருநூல்.

இந்தப் பெருநூலில், குறட்பாவின் வடிவில், திருவள்ளுவப் பெருந்தகை யாரைக் காண்கிறோம். உரைவிளக்க வடிவில், திருக்குறளார் பெருந்தகையைக் காண்கிறோம்.

திருக்குறளின் பல்வேறு சீர்களையும், சிறப்புகளையும், பொலிவுகளையும், வலிவுகளையும், அழகுகளையும், அருமைகளையும், வனப்புக்களையும், வளங் களையும், தகுதிகளையும், திறன்களையும் ஒருங்கிணைந்த முறையில் விளக்கிக் காட்டிடும் ஒருபெரும் பேராளராய் விளங்குகின்ற காரணத்தால்தான், பெருந் தகையாளர் வீ. முனிசாமி அவர்கள் திருக்குறளார் என்று பெரும் பெயர் பெற்றுள்ளார்கள்.

''அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக், குறுகத்தறித்த குறள்'' என்பது திருக்குறளின் தனிச் சிறப்பைப் படம் பிடித்துக் காட்டும் பாராட்டு மொழியாகும். அணுவை அதன் நடுவே துளைத்து, அதற்குள் ஏழு கடல்களையும் செலுத்தி வைத்தால் எப்படி இருக்குமோ அப்படி வள்ளுவப் பெருந்தகையார் ஒவ்வொரு குறளுக்குள்ளேயும் அளவிட முடியாத வகையிலான கருத்துச் செறிவுகளைப் புகுத்திக் குறட்பாவின் வடிவமைப்பைக் குறுக்கிக் காட்டியுள்ளார் என்பது மேற்கண்ட பாராட்டு மொழியின் உட்கருத்தாகும்.

திருவள்ளுவர் சிறு குறட்பாவினுள் பெருங் கருத்துச் செறிவுகளைப் புகுத்தினார். திருக்குறளார் அப்படிப் புகுத்தப்பட்ட கருத்துச் செறிவுகளை ஒவ்வொரு குறட்பாவினின்றும் பிழிந்தெடுத்து வெளிப்படுத்திக் காட்டும் பணியை, அரங்கச் சொற்பொழிவுகளின் மூலமாகவும், திருக்குறள் வகுப்பின் வாயிலாகவும், கட்டுரைகள் மூலமாகவும் நிறைவேற்றியுள்ளார்.

திருக்குறளார் அவர்கள் 1935ஆம் ஆண்டு தொடங்கிய குறள்நெறி பரப்பும் பெரும்பணி இன்றளவும் தொடர்ந்து பல்வேறு வகைகளில், பல்வேறு வழிகளில், பல்வேறு இடங்களில், பல்வேறு மக்களிடையே, பல்வேறு விதங்களில், பல்வேறு சுவைகளுடன் வீறுநடை போட்டுக் கொண்டு வருகிறது. அரண்மனை களில் மட்டுமே மன்னர்கள் முன்னிலையில் தவழ்ந்து கொண்டிருந்த திருக்குறளை, ஆலமரத்தடிக்குக் கொண்டு வந்து பாமர மக்களின் முன்னிலையில் நடமாடச் செய்தவர் திருக்குறளார் ஆவார்கள்.

பண்டிதர்களின் அரங்கிலே மட்டும் இடம் பெற்றிருந்த திருக்குறளை பாமரர்களிடத்தில் கொண்டு வந்து சேர்த்தவரும் அவரே ஆவார்கள். பண்டிதர்கள், அரைகுறையாகப் படித்தவர்கள், பாமரர்கள் ஆகிய அனைவர்

முன்னிலையிலும் நின்று குறள்நெறியின் பேருண்மையையும், பெருஞ்சிறப்பையும், பெரும் பயனையும் எளிமையாக எடுத்துச் சொல்லி, அவர்களையெல்லாம் செவிமடுக்க வைத்தார்; நகைச்சுவைபடச் சொல்லி எல்லோரையும் சிரிக்க வைத்தார்; நயம்படச் சொல்லி எல்லோரையும் சிந்திக்க வைத்தார்; நன்மைபடச் சொல்லி எல்லோரையும் செயலாற்ற வைத்தார்.

திருக்குறளார் இந்தப் பெருநூலில் உலகப் பொதுமறையான திருக்குறளின் அருமை பெருமைகளையும், திருவள்ளுவப் பெருந்தகையாரின் ஆழ்ந்து அகன்று உயர்ந்த அறிவின் திறனையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார். திருக்குறளின் அமைப்பு, முறையையும், சிறப்பையும் சுட்டிக்காட்டி, அதனைக் கற்க வேண்டிய நெறிமுறைகள் யாவை என்பதையும் விளக்கிக் காட்டுகிறார்.

திருவள்ளுவரின் வழிநின்று, குறள் நெறிக் கருத்துக்களைச் சிந்தையாலும், சொல்லாலும், செயலாலும் கடைப்பிடிக்க, குறட்பாக்களின் எந்தஎந்தச் சொற்றொடர்கள் முக்கியமானவையாகவும், எளிமையானவையாகவும், ஏற்றமுள்ளவையாகவும் பயன்படக் கூடியன என்பதை உரை ஆசிரியர் அறுதியிட்டு உறுதியாகக் கூறியுள்ளார்.

'கடவுள் வாழ்த்து' என்னும் தலைப்பின் கீழ், எழுத்துக்கெல்லாம் முதன்மை, உலகுக்கெல்லாம் முதன்மை, ஆதியானவன், விதி, ஊழ், இயற்கைமுறை போன்ற பல சொற்களுக்கு அரிய விளக்கம் தருகிறார் உரை ஆசிரியர்.

'குறிப்புப் பகுதி' என்னும் தலைப்பின் கீழ், வள்ளுவர் கையாண்டுள்ள பல்வேறு அருஞ் சொற்களைச் சுட்டிக் காட்டி, அவையுணர்த்தும் உண்மையான பொருளை எடுத்துக்காட்டி, ஒரு சொல்லுக்கும் அதனைச் சார்ந்த மற்ற சொற்களுக்கும், ஒரு கருத்துக்கும் அதனை ஒட்டிய மற்ற கருத்துக்களுக்கும் உள்ள தொடர்பினை விளக்கிக் காட்டித் திருவள்ளுவரின் உயர்ந்த உள்ளத்தை உரை ஆசிரியர் உணர்த்துகிறார்.

'உரைப்பகுதி' என்னும் தலைப்பின் கீழ், 1330 அருங்குறள்களுக்கும் நேரடி உரைவிளக்கம் தருகிறார். ஒவ்வொரு குறட்பாவைப் பொறுத்தும் முதலில் கருத்துரையைச் சொல்லி, இரண்டாவதாகக் குறட்பாவின் சொற்களைத் தெளிவுறப் பிரித்துக் காட்டி, மூன்றாவதாகக் குறளின் உண்மை வடிவத்தைச் சுட்டிக் காட்டி, நான்காவதாகச் சொல்லுக்குச் சொல் பொருள் விளக்கம் தருகிறார் உரை ஆசிரியர்.

'உரைவிளக்கப்பகுதி' என்னும் தலைப்பின் கீழ் ஒவ்வொரு குறளுக்குள்ளும் நுழைந்து சென்று, உள்ளே பொதிந்து கிடக்கும் தெளிபொருள் — உட்பொருள் — மறைபொருள் — அறிபொருள் -- உணர்பொருள் — நயப்பாடு — அணிஅழகு ஆகியவற்றை வாரி வெளியே கொண்டு வந்து உரை ஆசிரியர் காட்டுகிறார்.

''சிந்தனைப்பகுதி'' என்னும் தலைப்பின் கீழ் வள்ளுவப் பெருந்தகையாரின் ஆழ்ந்த சிந்தனை ஓட்டத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறார் உரை

ஆசிரியர். வள்ளுவரின் சிந்தனை, இடம் — பொருள் — ஏவல் — காலம் ஆகிய வற்றைப் பொறுத்த பொதுவான கருத்துக்கள், சிறப்பான கருத்துக்கள், தனித் தனியான கருத்துக்கள் ஆகியவற்றை எப்படியெல்லாம் அழுத்தந் திருத்தமாகவும், உறுதியாகவும், நிலையாகவும் தெரிவிக்கின்றது என்பதை உரை ஆசிரியர் ஆழ்ந்த சிந்தனையுடன் ஆராய்ந்து அறிந்து தெரிவிக்கிறார்.

'சிந்தனைக்குச் சில' என்னும் தலைப்பின் கீழ் சிந்தித்துத் தெளிவுபெற்றுப் பயன் கண்டு, பயன்பெற வேண்டியவை என்ற முறையில், பொறுக்கி எடுக்கப்பட்ட முக்கியமான குறட்பாக்கள் சிலவற்றைச் சுட்டிக்காட்டுகிறார் உரை ஆசிரியர். அருஞ்சொற்றொடர் சிலவற்றிற்கும் தெளிபொருள் விளக்கம் தருகிறார்.

'மேற்கோள் சில' என்னும் தலைப்பின்கீழ் வள்ளுவர் எவ்வாறு மேற் கோள் காட்டி கருத்து விளக்கம் செய்கிறார் என்பதைச் சில குறட்பாக்கள் மூலம் தெளிவுபடுத்துகிறார் உரை ஆசிரியர். அதோடு பொருள் விளக்கம் பெற வேண்டிய சில அரிய சொற்றொடர்களை உரை ஆசிரியர் எடுத்துக்காட்டி, அவற்றின் பொருள் விளக்கத்தைச் சிறப்பாக அளிக்கிறார்.

'பரிமேலழகர் உரைவளம்' என்னும் தலைப்பின்கீழ், பழம்பெரும் உரை யாசிரியர்களில் மிகச் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற பரிமேலழகர் அவர்கள் திருக்குறளின் பால்களுக்கும், இயல்களுக்கும், அதிகாரங்களுக்கும், அதிகார வைப்பு முறைகளுக்கும் தந்துள்ள காரணகாரிய விளக்கங்களைப் படிப்போரின் நலங்கருதி அப்படியே அறிமுகப்படுத்தியுள்ளார் உரை ஆசிரியர்.

'திருவள்ளுவ மாலை' என்னும் தலைப்பின்கீழ், திருக்குறளின் அருமை பெருமைகளைத் தெரிவிக்கும் பழம்பெரும் பாராட்டுச் செய்யுட்களை வெளியிட்டு, அந்தச் செய்யுட்களுக்கான பொழிப்புரையையும் உரை ஆசிரியர் அளித்துள்ளார்.

இறுதியில் 'வரலாற்றுச் சுருக்கம்' என்னும் தலைப்பின்கீழ், திருக்குறளார் 'திருக்குறளாரை'ப் பற்றிப் படிப்போர்க்கு அறிமுகப்படுத்துகிறார். இந்த நூலின் முதல் பெரும்பகுதியில் 'திருவள்ளுவரை' முழுவதுமாக அறிமுகப்படுத்திய திருக் குறளார், இறுதியில் சிறு பகுதியில் 'திருக்குறளாரைச்' சிறிதளவே படம் பிடித்துக் காட்டுகிறார். 'திரு. வீ. முனிசாமி' அவர்கள் 'திருக்குறளாராக' ஆன வரலாற்றைச் சுருக்கமாகவும், ஆனால் தெளிவாகவும் விளக்கிக் காட்டுகிறார்.

சென்ற நாற்பது ஆண்டுக் காலத்திற்கு மேலாகக் குறள் நெறிக் கருத்துக் களைத் தமிழகத்தின் நாடு நகரங்களிலும், சிற்றூர் பேரூர்களிலும், பட்டி தொட்டி களிலும் பரப்பியதோடல்லாமல், இந்தியத் துணைக் கண்டத்தின் பெருநகரங் களிலும் அறிமுகப்படுத்திச் சிறந்த தமிழ்ப்பண்பாட்டை வளர்க்க, அரும்பாடுபட்ட திருக்குறளார் அவர்கள், என்றென்றும் போற்றுதலுக்கும், பாராட்டுதலுக்கும், வாழ்த்துதலுக்கும், வரவேற்றலுக்கும் உரியவர் ஆவார்கள்.

திருக்குறளாரின் 'திருஉருவத்தை', இந்த நூலின் மூலம் என்றென்றும் உலகம் கண்டு மகிழ்ந்திருக்கும் என்பது உறுதி.

நாட்டுக்கு நல்ல தொண்டாற்றிவரும் திருக்குறளாருக்குத் தமிழக அரசு தின் நன்றிக் கடனை உரிய முறையில் செலுத்தவேண்டும் என்ற விழைவை நானும், மாண்புமிகு செய்தித்துறை அமைச்சர் அருமை நண்பர் இராம. வீரப்பன் அவர்களும் கொண்டிருந்தோம். அந்த விழைவை மாண்புமிகு தமிழக முதல்வர், பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். அவர்கள் ஏற்று, 1982 செப்டம்பர் 15-ஆம் நாள் நடைபெற்ற பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்த நாள் விழாவில், தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களின் பெயரால் அமைந்துள்ள விருதையும், பத்தாயிரம் வெண் பொற்காசுகள் அடங்கிய பொற்கிழியினையும் திருக்குறளாருக்கு வழங்க இசைவு அளித்தார்கள். அந்த விருதினையும், பொற்கிழி யினையும் பெருந்தகை திருக்குறளாருக்கு வழங்கும் பேறு எனக்குக் கிடைத்தமையை எண்ணி எண்ணி நான் இறும்பூதெய்தினேன். ''நயனொடு நன்றி புரிந்த பயனுடை யார், பண்பு பாராட்டும் உலகு'' என்னும் குறட்பாவின் கருத்துக்கு ஏற்ப நிகழ்ச்சி நடைபெற்றது, என்போன்றார்க்கு பெருமகிழ்ச்சியை அளித்தது.

பெருந்தகை வீ. முனிசாமி அவர்கள் 'திருக்குறளார்', 'குறள்நாவலர்' 'திருக்குறள் கேசரி', 'முப்பால் வித்தகர்', 'திருக்குறள் இரத்தினம்' போன்ற பாராட்டுப் பட்டங்கள் பலவற்றை, அறிஞர் பெருமக்களிடமிருந்து அவ்வப்போது பல்வேறு இடங்களிலும் பெற்றிருப்பதே, அவரது ஓங்கு புகழுக்கு எடுத்துக் காட்டாகும்.

குறள் நெறியைப் பரப்புவதற்கு என்று திருக்குறளார் நடத்திவந்த 'குறள் மலர்' என்ற இதழும், குறள் நெறிக் கருத்துக்களைப் பற்றி அவ்வப்போது அவர் வெளியிட்டுள்ள சிறுசிறு நூல்களும் அவரது எழுத்தாற்றல் சிறப்புக்கும், அவரது பெருமை மிகு புகழுக்கும் எடுத்துக்காட்டாக விளங்குவனவாகும்.

தமிழ்கூறு நல்லுலகம் நீண்ட பெருநாட்களாகத் திருக்குறளாரிடத்தில் எதிர்பார்த்த சிறப்புக்குரிய சீரிய பணி இப்பெருநூல் வெளிவருவதன் மூலம் நிறைவேறிவிட்டது. திருக்குறளார் தம் கடமையைச் செய்து முடித்துவிட்டார். திருமகள் நிலையத்தார் இந்த நூலை அழகாக அச்சியற்றி வெளியிட்டுவிட் டார்கள். இனித் தமிழார்வங்கொண்ட தமிழ்ப்பெருங்குடி மக்கள் இந்தப் பெரு நூலை விலை கொடுத்து வாங்குவதன் மூலம் தத்தம் கடமையை ஆற்ற முன்வர வேண்டும். ஒவ்வொரு குடும்பத்திலும் என்றென்றும் நிலையான செல்வமாக இருக்கவேண்டிய நூல் இது. இதன் மூலம் ஒவ்வொருவரும் பயன்பெற வேண்டும்! ஒவ்வொரு குடும்பமும் பயன்பெற வேண்டும்! இவற்றால் நாடு நல்லபயன் பெற வேண்டும்!

வாழ்க திருக்குறளார்! வளர்க குறள் நெறி!

இரா. நெடுஞ்செழியன்

செ. அரங்கநாயகம்,
கல்வித்துறை அமைச்சர்




புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை - 600 009

நாள் : 15 - 11 - 82

# மதிப்புரை

தமிழ்மொழிக்குக் கிடைத்துள்ள புகழ் முடி திருக்குறள். தமிழரும் தமிழ்நாடும் திருக்குறள் ஒன்றினாலே பெரும் மதிப்பைப் பெற்றிருப்பது உண்மை. திருக்குறள் ஒப்பற்ற அறநூல் ; மனிதகுலம் அனைத்துக்கும் வழிகாட்டும் ஒரே வாழ்க்கை நூல். எனவே தான் உலகப் பேரறிஞர்களால் திருக்குறள் '**உலகப் பொதுமறை**' என்று போற்றப் பெறுகின்றது.

திருக்குறள், நமது தாய்மொழியான தமிழில் உருவானது. தமிழ் நாட்டுச் சான்றோரால் படைக்கப்பட்டுள்ளது. ஆனால், தமிழர்களாகிய நாம் அறநூலாகிய திருக்குறளை எவ்வாறு போற்றுகிறோம் ; எந்த அளவு பயின்று அறிந்திருக்கிறோம் ; எந்த அளவு அதனைப் பயன்படுத்துகிறோம் ; எப்படி எப்படி திருக்குறளைப் பரப்பி வருகிறோம் என்று சிந்திக்கும்போது மிகவும் ஏமாற்றமாகவும் ஏளனத்துக்குரியதாகவும் நம் நிலை இருக்கிறது.

இன்று திருக்குறள் உலகெங்கும் அறியப்பட்டும், பலநாட்டு மொழிகளில் பெயர்க்கப் பெற்றும், பல நாட்டு அறிஞர்களால் போற்றப் பெற்றும் வருகிறது. அந்த நிலைக்கு அந்நூலின் உயர்வே முற்றிலும் காரணமாயுள்ளது.

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'

என்று பாரதியார் பெருமைபடப் பாடிச் சென்றதையும் நாம் அறிந்துள்ளோம்.

பல்வேறு காலங்களில் பல பெரியோர்களால் திருக்குறள் பதிப்பிக்கப் பெற்று வந்துள்ளது. அச்சுக்கலை அறிமுகமாகிய பின் ஏறக்குறைய 170 ஆண்டுகளில்-மூலமும் உரையுமாக ஏறத்தாழ அறுபது பதிப்புகள் வந்துள்ளதாகத் தெரிய வருகிறது. பழைய உரைகளும், புத்துரைகளும், பகுதிகளும், கட்டுரைகளுமாக, தமிழில் மட்டும் ஏறத்தாழ 550-க்கு மேற்பட்ட வெளியீடுகள் வெளிவந்துள்ளன என்று அறிய முடிகிறது. தமிழர்களின் மெத்தனப் போக்கை எண்ணுங்கால் 170 ஆண்டுகளில் இதுவே பெரிது என்று கூறி அமைதியடையலாம்.

ஐம்பது ஆண்டுகட்கு முன்னால் திருக்குறள் பெரும் புலவர்களிடம் மட்டுமே அறிமுகமாகியிருந்தது. கொஞ்சம் கொஞ்சம் தெரிந்து வைத்த புலவர்களும் திருக்குறள் படித்தவர் என்று தம்மைக் கூறிக்கொண்டு பெருமை பெற்று வந்த நிலையை நாம் அறிகிறோம். புலவர்க்கெல்லாம் புலவராக விளங்கிய ஒரு சிலர் மட்டுமே திருக்குறளின் தெளிந்த அறிவை உணர்ந்தவராக விளங்கியிருக்கின்றனர். புலமை பெற்றவர்களுக்கே புலப்படாத திருக்குறளின் உண்மைக் கருத்துக்கள் பொதுமக்களுக்கு எட்டவே முடியாமல் இருந்தன.

உலகப் போக்கில் பல துறைகளிலும் 'பொதுமக்கள் காலம்' உருவாகியது. அரசியல், அறிவியல், வாழ்வியல், கல்வித் துறை, தொழில் துறை, கலைத் துறை எனும் அனைத்திலும் 'பொதுமக்களின் காலம்' உருவாயிற்று. இந்த இயற்கைப் போக்கை ஒட்டித் திருக்குறள் கருத்துக்களும் பொதுமக்களுக்கு உணர்த்தப்பெற்றது. அதற்கு ஒருவர் சிறப்பாகத் தோன்றியுள்ளார்; அன்னார் பெயர் **திருக்குறளார் வீ. முனிசாமி** என்பதாகும்.

அறநூல் என்றும், உயர்ந்த நீதி நூல் என்றும், புலவர்கட்கு மட்டுமே உரிய தத்துவச் செல்வம் என்றும் ஒரு வரையறைக்குள் வைக்கப் பெற்றிருந்தது திருக்குறள். திருக்குறளார் வீ. முனிசாமி அவர்கள் தமது இளம் வயதிலேயே திருக்குறளில் ஈடுபட்டுத் தாம் அறிந்து சுவைத்ததை 'மக்கள் எல்லோரும் அறிந்திட வேண்டும், அனைவருமே பயன்பெற வேண்டும்' என்று எண்ணமிட்டார். 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையம்' என்னும் பெருநோக்குடன் திருக்குறளார், திருக்குறளை மக்கள் விரும்பி ஏற்கும் வகையில் விளக்கமாகக் கூறலானார். அதிலும் சிறப்பாக நகைச் சுவையுடன் கலந்து தரலானார். யாரும் முயலாத முறையில், எவராலும் இயலாத வகையில், இவருக்கு மட்டுமே கை வந்த ஓர் அரிய வாய்ப்பாக அமைந்துவிட்ட புதுமை பாராட்டுக்குரியதாகும்.

படித்துப் பட்டம் பெற்று அரசு வேலையில் புகுந்தார்; பிறகு சட்டக் கல்வி பயின்று வழக்கறிஞர் பட்டமும் பெற்றார். பிறகு சமுதாயப் பணிகளில் ஈடுபட்டார். பட்டம் பதவிகளில் மனநிறைவு பெற்று அடங்கி முடங்கும் வகையில் இவர்தம் வாழ்வு அமையவில்லை அரசியல் சார்பிலும் மக்களுக்குத் தொண்டு புரியலானார். அதன் வழியே இந்தியப் பாராளுமன்ற உறுப்பினராகவும் பணியாற்றினார். பின்னும் பல நிலைகளில் அரசியல் சார்ந்த பணிகளில் இவர் உழைக்க நேர்ந்தது. என்றாலும் அத்தனைப் பணிகளையும் பின்தள்ளிவிட்டு **திருக்குறள்** பரப்பும் பணி ஒன்றினையே தமது தலையாய தொண்டாக — இயல்பாகக் கொண்டு, நாற்பதாண்டுகட்கும் மேலாகச் செயலாற்றி வருகின்றார். இது திருக்குறளுக்கு அமைந்த நல்வாய்ப்பு எனலாம்; அல்லது தமிழ் மக்கள் பெற்ற பெரும் பேறு எனலாம்.

திருக்குறளையே வாழ்க்கையாகக் கொண்டு சிந்தனை, சொல், செயல் என முழுமையாக ஏற்று மக்களுக்குத் தினந்தோறும் திருக்குறள் கருத்துக்களை எடுத்துச் சொல்லி, பரவலாகத் திருக்குறளைப் பரப்பி வருகிற திருக்குறளார், தமிழறிஞர் அனைவராலும் பாராட்டப் பெறுகிறார்.

படிக்கத் தெரிந்தவர்கள் அனைவரும் திருக்குறள் மீது கருத்துச் செலுத்த வேண்டும் என்னும் நோக்கத்துடன் '**குறள் மலர்**' என்னும் பெயரில் ஒரு வார இதழை அவர் 35 ஆண்டுகட்கு முன்னரே தொடங்கி பயன் வளர்த்தார். இதனை இப்பொழுது நினைத்தாலும் வியப்பாக இருக்கிறது. 'குறள் மலரால்' குறள் ஆர்வம் பெற்றவர் பல்லாயிரம் பேர்கள் என்பது உண்மையாகும்.

திருக்குறளை ஆழமாகவும் விரிவாகவும் நுணுக்கமாகவும் நீண்ட நாட்களாக ஆய்ந்து ஆய்ந்து தாம்கண்ட உண்மைக் கருத்துகளை, என்றும், எல்லாரும் பெற்றுச் சுவைத்துப் பயன் கொள்ள வேண்டும் என்னும் பெருநோக்குடன் நூலாகவும் எழுதியுள்ளார். அதுவே '**உலகப் பொதுமறை திருக்குறள் உரை விளக்கம்**' என்னும் பெருநூலாகக் காட்சி தருகிறது.

இந்நூல் பிற பதிப்புகளிலிருந்து மாறுபட்டதாக இருப்பதை முதலில் குறிப்பிட வேண்டும். ஓரளவு கல்வி பெற்றவர்களும், வாழ்க்கையில் — பல துறைகளில் ஈடுபட்டவர்களும், முடிவாக ஆராய்ச்சியாளரும் ஆகிய அனைவர்க்கும் ஏற்றதாக நூல் படைக்கப்பட்டுள்ளதை மனதாரப் பாராட்ட வேண்டும். மக்கள், தத்தம் நிலையில்

தேவைக்கேற்றவாறு வேண்டிய இடங்களைப் பார்த்து விளக்கம் பெற்றிடும் பாங்கில் மிக அரிய முறையில் ஆசிரியர் விளக்கம் கூறியுள்ளார்.

1. முன்னுரைப் பகுதி
2. குறிப்புப் பகுதி
3. உரைப் பகுதி
4. உரை விளக்கப் பகுதி
5. சிந்தனைப் பகுதி

எனும் ஐந்து பகுதிகளாக இந்நூல் அழகாக அமைந்துள்ளது. மரபுச் சிறப்பும் மறையக் கூடாதென்னும் பொறுப்புணர்ச்சியுடன் திருவள்ளுவ மாலை, பரிமேலழகர் உரைச் சிறப்பு முதலியனவும் முடிவில் சேர்க்கப் பட்டிருக்கிறது. ஆராய்ச்சிக்கு அப்பகுதி தேவைப்படும்.

ஒவ்வொரு தமிழனும் படிக்க வேண்டிய ஒரே நூல் இத் திருக்குறள். ஒவ்வொருவரிடமும்இந்த நூல் இருக்க வேண்டும். நினைத்த பொழுது எடுத்துப் பார்க்கவும், தோன்றும் ஐயங்களைப் படித்துப் போக்கிக் கொள்ளவும், வேண்டும் விளக்கங்களைப் பெறவும் இந்நூல் துணை புரியும். உலகப் பொது மறையும், தமிழ் மறையும், தமிழகத்தின் தமிழின் பெருமைக்குச் சான்றாக விளங்கும் தேசீய நூல் எனத் தக்கதும் ஆகிய திருக்குறளை மிகவும் விளக்கமாகக் கொண்டுள்ள இந்நூலினை அனைவரும் போற்றிப் பயின்று பயன்பெற வேண்டும். இது தமிழர் கடமையாகும்.

அரிய பெரிய இந்நூலை ஆக்கித் தந்த அறிஞர் திருக்குறளார் வீ. முனிசாமி அவர்கட்குத் தமிழுலகம் கடமைப்பட்டுள்ளது ; அவர் தொண்டு மிகப் பெரியது ; அவரைப் போற்றிப் பாராட்டுகிறேன் ; இந்நூலினை அழகாக அச்சிட்டுத் தமிழகத்திற்குப் படைக்கின்ற திருமகள் பதிப்பக உரிமையாளர் திரு. அ. இராமநாதன் அவர்களையும் பாராட்டி வாழ்த்துகிறேன்.

வாழ்க திருக்குறள் ! வளர்க தமிழகம் !

செ. அரங்கநாயகம்

**இராம. வீரப்பன்**
செய்தி · சுற்றுலா
அறநிலையத்துறை அமைச்சர்




புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை - 600 009

நாள் : 12 - 1 - 83

# பாராட்டுரை

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

என்றார் மகாகவி பாரதியார்.

"அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்"

"எல்லாப் பொருளும் இதன்பால் உளஇதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்"

என்று பாராட்டினார்கள் புலவர்கள்.

இரண்டாயிரம் ஆண்டுகளாக தமிழின் உயிராக, தமிழ் இனத்தின் உணர்வாக, மனித்குலத்தின் பொதுமறையாக விளங்கி வருவது தெய்வப்புலவன் தந்த திருக்குறள்.

அத்தகைய ஒப்புயர்வற்ற திருக்குறளின் சிறப்புக்களை, திருக்குறள் காட்டும் வாழ்க்கை நெறிகளை, எண்ணி எண்ணி மகிழும் இலக்கிய நயங்களை, சாதாரண—எளிய, பாமரரும் உணரும் வகையில் எடுத்து விளக்கிடும் பணியை, கடந்த நாற்பது ஆண்டுகட்கு மேலாகத் தமிழறிஞர் திரு. முனிசாமி அவர்கள் மேற்கொண்டு வருகிறார்கள்.

திருக்குறள் என்றால் புலவர்களும் படித்தவர்களும் மட்டுமே தெரிந்து கொள்ள வேண்டிய 'நூல்' என்றிருந்ததை எழுதப் படிக்கத் தெரியாதவரும் புரிந்து கொள்ளும் வகையில், சிரிக்கச் சிரிக்கச் சொல்லி, சிந்தனையைத் தூண்டி, குறளைப் பரப்பும் மகத்தான பணிக்குத் தன்னை ஒப்படைத்துக் கொண்டவர் திரு. முனிசாமி அவர்கள்.

அவருடைய ஆற்றல் மிக்க தமிழறிவும், திருக்குறள் மீது அவர் கொண்ட அளவற்ற பற்றும், நாடெங்கும் திருக்குறளை முழங்கச் செய்த மகத்தான தொண்டும் அவருக்குத் "திருக்குறளார்", "திருக்குறள் முனிசாமி" என்ற சிறப்புப் பட்டங்களை ஈட்டித் தந்தன. 'திருக்குறளார்' என்றாலே திரு. முனிசாமி அவர்களைத்தான் குறிக்கும் என்ற சிறப்பே, தமிழகம் ஏன் இந்தியத் துணைக்கண்டம் அவரைப் பாராட்டிக் கொண்டிருப்பதற்கு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

வாழ்நாள் முழுதும் பல்லாயிரக் கணக்கான சொற்பொழிவுகளின் மூலமும், கட்டுரைகளின் மூலமும் எடுத்துரைத்து வந்த ஆராய்ச்சிக் கருத்துக்களை ஒன்றாகத் திரட்டி

**'உலகப் பொதுமறை திருக்குறள் உரை விளக்கம்''** என்ற பெயரில் இந்நூலை உருவாக்கி யுள்ளார்கள்.

இத்தனை ஆண்டுகளாக அவர் ஆற்றிய தமிழ்ப்பணியைவிட, திருக்குறள் பணியை விட இந்நூலை ஆக்கித் தந்திருப்பது தமிழ் மொழிக்கு, தமிழ் நாட்டிற்கு ஏன் மனித சமுதாயத்திற்கு செய்துள்ள மகத்தான சேவையாகும்.

திருக்குறளுக்குப் பல அறிஞர்களால் உரை வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால் திருக்குறளார் தந்துள்ள உரை விளக்கம் அவருக்கே உள்ள சிறப்புமிக்க ஆற்றலின் அடிப்படையில் வழங்கப்பட்டிருப்பது இந்நூலின் சிறப்பாகும்.

எக்காலத்திற்கும் பொதுமறையாக விளங்கும் திருக்குறளின் ஆழமும், புதிய கருத்துக்களும் திருக்குறளாரின் ஆய்வின் மூலம் மேலும் புதுமை அடைகிறது.

இத்தகைய ஒரு சிறந்த நூலைப் படைத்துத் தமிழ் மொழிக்கு — தமிழ் நாட்டிற்கு அளித்த திருக்குறளாரைத் தமிழ்மக்கள் என்றென்றும் போற்றிப் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

இந்த நூலை அழகிய முறையில் அச்சேற்றி தமிழ் இலக்கியத்திற்குப் பெருமை சேர்க்கும்வகையில் தன் பங்கினை அரிய முறையில் ஆற்றியுள்ள திருமகள் நிலையத்தாரும் நமது பாராட்டுக்குரியவர்கள்.

வாழ்க திருக்குறள் !
வளர்க திருக்குறள் நெறி !
வெல்க திருக்குறளார் பணி !

அன்பன்
**இராம வீரப்பன்**

ஆர். ஷண்முக சிகாமணி
ஐ.ஏ.எஸ்.
ஆணையாளர்

இந்து சமய அறநிலைய
ஆட்சித்துறை
சென்னை - 34

# புகழுரை

தனது வாழ்க்கையையே ' திருக்குறளுக்கு ' அர்ப்பணித்துக் கொண்ட திருக்குறளார் அவர்கள், உலகப் பொதுமறையான " **திருக்குறள் உரை விளக்கம்** " என்ற அரிய நூலுக்கு, ஒரு வாழ்த்துரை வழங்கவேண்டும் என்று அன்போடு என்னிடம் வற்புறுத்தியதால், இந்த வாழ்த்துரையை அளிக்க முன் வந்துள்ளேன்.

தனது வாழ்நாளில் பெரும்பகுதியை 1330 திருக்குறள்களைப் பயின்று, அதற்கு உரிய பொருளைச் சிறப்போடு முன்னுரைப் பகுதி, குறிப்புப் பகுதி, உரைப் பகுதி, மூன்று பால்களுக்கும் உரை விளக்கப் பகுதி, சிந்தனைப் பகுதி ஆகிய எல்லாவற்றையும் கொண்டு 1330 திருக்குறள்களைச் சீருடனும் சிறப்புடனும் ஆராய்ச்சி செய்து, தமிழனின் மிகச் சிறந்த கருவூலமான திருக்குறளுக்கு பண்டிதரும் பாமரரும் போற்றி வியக்கும் வண்ணம், இன்றைய தலைமுறை யினருக்கும் வருங்கால சந்ததியினருக்கும் பெரிதும் பயனளிக்கும் வகையில் வள்ளற்றன்மையுடன் விளக்கங்களை வாரி வழங்கி இருக்கிறார்கள்.

திருக்குறளார் அவர்கள் தமிழனின் விலை மதிப்பிடுவதற்கரிய பொதுமறையை தெள்ளிய தமிழில் எழுதியதற்குத் தமிழ் கூறும் நல்லுலகம் அவர்களுக்கு என்றென்றும் கடமை பட்டிருக்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

இந்த அரிய நூலுக்கு அடியேனின் வாழ்த்துரை ஒன்று கொடுக்க திருக்குறளார் பணித்ததால் பெருமை அடைவது நான்தான். அவர்கள் பணி மேலும் சிறக்கவும், அதனால் தமிழ் மக்கள் வாழ்வாங்கு வாழவும், அவர் பல்லாண்டு பல்லாண்டு வாழவும் இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

ஆர். ஷண்முக சிகாமணி

# நுழைவாயில்

தமிழர் பெற்ற பெரும் பேறுகளுள் தலையாய சிறப்புடையது திருக்குறள். உலகப் பேரறிஞர்களால் ஒருமனதாகப் போற்றப் பெறுகிறது திருக்குறள். சமயங் கடந்த, இனம் கடந்த, மொழி வரம்புகளைக் கடந்த, பொதுமை நோக்குடைய அறநூல் திருக்குறள்.

தமிழர்தம் சிந்தனை வளர்ச்சிக்கும் சீரிய பண்பாட்டு நெறிகட்கும் ஓர் ஒப்பற்ற எடுத்துக்காட்டாக விளங்குவது திருக்குறள்.

இந்நூல் பண்டைக்காலம் முதலே அறிஞர்களைக் கவர்ந்திருக்க வேண்டும். அதனாற்றான் பலரும் உரைவகுத்துப் பரப்ப முனைந்துள்ளனர்.

தமிழ்நாடு பண்டைக் காலந்தொட்டு பலவித அரசியல் மாற்றங்களில் சிக்குண்டு, இடர்ப்பட்டு, எண்ணற்ற இழப்புகளை அடைந்துள்ளது. மேலும் தமிழ் நாட்டில் பலவாறான மாற்றங்களும் நிகழ்ந்துள்ளன. அழிவு, இழிவு, மாற்றம் ஏற்பட்ட போதெல்லாம் தமிழ்நாட்டின் பல பண்பாட்டுச் செல்வங்களை இழந் திருக்கிறோம்; கலைச் செல்வங்களைப் பறி கொடுத்திருக்கிறோம். அறிவுச் செல்வத்தை நழுவவிட்டிருக்கிறோம். எண்ணற்ற வரலாற்றுச் செய்திகளை இழந் திருக்கிறோம். என்றாலும் ஒருசில தமிழ்க் கருவூலங்கள் தப்பி நிலைத்தன; தமிழ் மக்கள் கரங்களில், நெஞ்சங்களில் அவை இடம் பெற்றன. அவ்வாறு இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழர்களிடம் தங்கியுள்ள செல்வங்கள் திருக்குறள், தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் என்பனவாம்.

இக்காலத்தில் அறியப்பெறும் திருக்குறள் உரையாசிரியர்கள் பதின்மராவர். காலந்தோறும் திருக்குறளுக்கு எத்தனை உரைகள் எழுதப்பட்டனவோ, தெரிய வில்லை கிடைத்துள்ள பிற்கால உரைகளில் பரிமேலழகர் என்பாரின் உரையே அறிஞர்களால் பெரிதும் போற்றப் பெறுகிறது. அவர் உரை கற்றோர்க்கு இன்பமளிக்கும்; மற்றோர்க்கு எட்ட முடியாததாக இருக்கிறது.

திருக்குறள் மூலமாகவும், உரை — கருத்துரைகளாகவும் பல்வேறு காலங் களில் பல பெரியோர்களால் தொடர்ந்து வெளியிடப் பெற்றுள்ளன. ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்ட பிறகு அச்சுக்கலை வந்தது. அதன் வாய்ப்பாக விரைந்து பல நூல்கள் வெளிப்படலாயின. புலவர் பெருமக்கள் திருக்குறளை ஏற்றிப் போற்றி வந்துள்ளனர். அவர்கள் புலமைக் கேற்ப திருக்குறள் புலவர்கட்குள்ளேயே பேசப்பட்டு வந்தது. ஓரளவு கற்றாரும் ஒன்றுமே கல்லாதாரும் திருக்குறளைப் பற்றி அறிய முடியாமலே இருந்து வந்தது. 1935 வரையிலும் இதே நிலைதான் நீடித்தது. மாணவர்கட்கோ, மக்களுக்கோ உதவும் வகையில், விளக்கும் வகையில் திருக்குறள் பற்றிய தனி நூல்கள் வெளிவரவில்லை. இவ்வகையில் யாரும் விரும்பிச் செயலாற்றவில்லை.

பிறகு ஒரு மாற்றம் தோன்றியது. ''திருக்குறள் நெறிகள், கருத்துக்கள் மக்கள் அனைவரும் அறியத்தக்கன; பாமரமக்களும் கேட்டுப் பயன்பெற வேண்டும்''

என்னும் ஆர்வமும் குறிக்கோளும் கொண்டு, ஒருவர் தன்னந்தனியாய் செயல்பட முனைந்தார். அத்தகைய செயற்கரிய செயலை மேற்கொண்ட சிறப்புக்குரியவர் இன்று மக்கள் போற்றும் **திருக்குறளார் வீ. முனிசாமி** அவர்கள்.

''படித்த மக்களுக்கும் படிக்காத பாமர மக்களுக்கும் எழுதப் பெற்றதே திருக்குறள் ; அது அறிஞர்கட்கு மட்டும் உரியதன்று எல்லார்க்கும் திருக்குறளின் திரண்ட அரிய கருத்துக்கள் தெரிவிக்கப்பட வேண்டும் ; எல்லாரும் புரிந்து கொள்ளும் வண்ணமாக விளக்கிச் சொல்ல வேண்டும் ; அவரவர் தகுதி யறிந்தும் தேவையறிந்தும் சொல்ல வேண்டும்.''

''அப்பொழுதுதான் மக்கள் உண்மையை உணர முடியும். மக்கள்அனைவரும் சாதி சமய சமுதாயக் கொடுமைகளை — தங்களைப் பிணித்துள்ள அறியாமைக் கட்டுகளை உணரவும், அவற்றை உதறித் தள்ளிவிட்டு, தகுதியும் துணிவும் தெளிவும் பெற்ற மனிதர்களாக மாறவும் வேண்டும். அதற்குத் திருக்குறள் கருத்துக்களைப் பட்டிதொட்டி எங்கும் தேடிச் சென்று தொடர்ந்து விளக்கிக் கூறவேண்டும்'' என்று திடமான முடிவெடுத்து, சளைக்காமல் அதனைச் செயற்படுத்திப் பெருஞ்சாதனை புரிந்து வெற்றிச் சின்னமாக விளங்குகிறார் திருக்குறளார் வீ. முனிசாமி அவர்கள்.

'பொதுமறையாகிய திருக்குறள் கருத்துக்களைப் பொதுமக்களிடம், எடுத்துச் சொன்னால் எடுபடாது ' என்று புலவர் பெருமக்கள் அஞ்சிக் கிடந்த காலத்தில், சொல்ல வேண்டிய விதத்தில் — சொல்ல வேண்டிய முறையில் சொல்லி விளக்கத் துணிவோடு முனைந்தவர் நமது திருக்குறளார்.

'திருக்குறள் அறவழிக் கருத்துக்களை இவர் வந்துதான் நகைச்சுவையோடு விளங்கச் சொல்ல வேண்டும்' என்று காலம் காத்திருந்தது போல் தெரிகிறது. நடைமுறை வாழ்க்கையுடன் ஒப்பிட்டு நகைச்சுவையோடு, கேட்போர் நெஞ்சில் பதியும் வண்ணம் எடுத்து விளக்கும் பாங்கு, இவர் ஒருவருக்கு மட்டுமே வாய்த்தது. இது நாடறிந்த உண்மை. திருக்குறள் கருத்துக்களைச் சிறு சிறு விளக்க நூல்களாக முதலில் வெளியிட்ட பெருமை திருக்குறளாரையே சாரும். ''குறள் மலர்'' எனும் வார இதழ் மூலம் அவர் பரப்பியமுறை புரட்சியானது; புதுமை யானது! ''திருக்குறளில் இப்படி எல்லாம்கூட கூறப்பட்டிருக்கிறதா? எல்லா வற்றுக்குமா அதில் இடமிருக்கிறது? இத்தனை இத்தனைச் செய்திகள், முறைகள், நெறிகள், வழிகள் எல்லாம் திருக்குறளிலே இருக்கின்றனவா? இதுவரை இதனை யாரும் தெரிவிக்கவில்லையே! இப்படி விளக்கியவர்களும் இல்லையே! திருக் குறளார், கதைபோல் சுவையாகச் சொல்கிறாரே!'' என்று எங்கெங்கும் மக்கள் வியந்து பேசுமாறு, மகிழ்ந்து கேட்குமாறு புதியதோர் நிலையை — புதுமையை உருவாக்கி வைத்தவர் திருக்குறளார் ஒருவர்தாம் என்பது வரலாற்று உண்மை.

மக்களிடம் நாற்பதாண்டுகளாக ஒரு சிலர் திருக்குறள்பற்றிப் பேசவும், கட்டுரைகள் எழுதவும், நூல்கள் எழுதி வெளியிடவும் நேரிட்டுள்ள நிலைமை அதற்கு முன்பு இல்லாமலிருந்தது. ஏனெனில் அப்பொழுது திருக்குறளார் இல்லை. அவர்கள் தன்னந் தனியாய் — திருக்குறளுக்கென்றே தம்மை — அந்தச் சிறுவய திலேயே ஆட்படுத்திக் கொண்டு, **' திருக்குறளை எல்லா மக்களுடைய செவிகளிலும் புகட்டுவேன் ; மக்கள் அனைவருடைய நெஞ்சங்களிலும் புகுத்துவேன் '** என்று தமக்குத் தாமே உறுதி எடுத்துக் கொண்டு, ஓய்வைக் கருதாமல், ஊர்ஊராகச் சென்று, நண்பர்தம் நல்லன்பின் துணை கொண்டு, திருக்குறளைத் தினந்தோறும் பரப்பி வந்தார்.

படித்துப் பட்டம் பெற்ற திருக்குறளார் நினைத்திருந்தால், அவர் வாழ்க்கைப் பாதை ஓர் அலுவலகத்தில் அமைதியாகக் கழித்திருக்கலாம். ஆனால், அவர் சராசரி மனிதராகவும் இராமல், சமயத்துக் கேற்ப பணந் திரட்டும் திசைகளில் செல்லவும் விரும்பாமல், ''என் பணி திருக்குறள் தொண்டு ஒன்றுதான்'' என்று கூறி, உறுதியுடன் அதற்காகவே வாழ்ந்து வருகிறார்.

எந்த இடத்தில் யார் அழைத்தாலும், எதைக் குறிப்பிட்டாலும் இவர்தம் சிந்தனையும் பேச்சும் விளக்கமும் திருக்குறள் பக்கமே திரும்பும் எந்தப் பணியையும் திருக்குறள் விளக்கப் பணியாக மாற்றியமைத்துக் கொள்ளும் தனிப் பண்பு, ஒரு வல்லமை, ஒரு பக்குவம், இவர் ஒருவருக்கே உரியதாயுள்ளது. திருக்குறள் அறக் கருத்துக்களை எடுத்துரைக்கத்தக்க உளப்பண்பும் உரையாற்றலும் இவர் ஒருவரிடம்தான் பொருந்தியுள்ளது. இது ஒரு புதுமை!

இவருடைய பேச்சைக் கேட்டு மகிழ்ந்து வியந்தவர்கள், நூலுருவில் திரட்டித் தருமாறு பல்லாண்டுகளாக வலியுறுத்தி வந்தனர். ஓய்வில்லாத பயணத்திற்கிடையே, தமிழுக்கு — திருக்குறளுக்கு — தமிழ் மக்களுக்கு நன்மை பயக்கும் என்ற ஆர்வத்துடனும் கடமையுணர்வுடனும் 'திருக்குறள் உரைவிளக்கம்' எழுதத் தொடங்கினார். பல ஆண்டுகளாகச் செய்த முயற்சியின் பயனாக அரிய தொகுப்பு உருவாயிற்று. உருவான நூல் பெரிய அளவில் அமைந்தது. அதனால் பெரும்பொருள் முதலீடு செய்து பதிப்பிக்க யாரும் முன் வரவில்லை. என் போன்று ஆர்வமுள்ளவர்களும் வசதியற்ற நிலையில் செயல்பட முடியாமல் இருந்தோம். பல அன்பர்கள் பலவாறு முயன்றும் அச்சேறாமலே இருந்தது.

திருக்குறளாரிடம் மிக்க அன்புடைய அறிஞர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்கள் சென்னை திருமகள் நிலையத்தின் உரிமையாளர் வலையபட்டி அ. இராமநாதன் அவர்களிடம் சொல்லி திருக்குறள் உரைவிளக்கம் அச்சிடுமாறு ஏற்பாடு செய்தார்.

ஐயா திருக்குறளார் அவர்களின் வேண்டுதலும் எனது வலியுறுத்தலும் கூடியது. அவ்வளவுதான்! கையெழுத்துப் பிரதியைச் சரிபார்க்கும் பணி — அச்சிடும் வேலை — பிழை திருத்தம் செய்யும் பணி வேகமாக நடைபெற்றது. விரைவான வேலைக்குப் பெயர் பெற்ற வெற்றி அச்சகம் ஐயா அவர்களிடம் கொண்ட மரியாதையுடனும் மகிழ்வுடனும் இப்பெரிய பதிப்புப் பணியில் செயல் பட்டது. மதிப்பிற்குரிய திருக்குறளார் அவர்கள், என்னை இந்நூல் அச்சிடும் பணியைப் பொறுப்பாயிருந்து முடித்துத் தருமாறு அன்புக் கட்டளையிட்டார். நானும் கிடைத்தற்கரிய வாய்ப்பாக எண்ணி இப்பணியில் ஈடுபட்டேன். தகுதி யில்லை என்ற குறையை உணர்ந்திருந்தும் அவர் கட்டளைப்படி பணியாற்றி முடித்தேன். எனக்குப் பதிப்புப் பணியில் உதவிட நண்பர்கள் முன்வந்தனர். புதுவை — பாகூர் புலவர் சு குப்புசாமி, அச்சிறுபாக்கம் புலவர் தாமரைக் கண்ணன், சென்னை முத்து. எத்திராசன் எம்.ஏ பி.எட்., சேலம் உடையாப்பட்டி புலவர் ம. அய்யாசாமி எம். ஏ., பி. எட்., ஆகியோர் நான் அழைத்தபோதெல்லாம் வந்திருந்து, என்னுடன் தங்கியிருந்து ஊக்கமுடன் உதவி புரிந்தனர். நூல் முடிவுறும் காலத்தில் தஞ்சைப் பேராசிரியர் மது. ச. விமலானந்தம் அவர்கள் மனமுவந்து, திருக்குறள் கடமையாற்றியதும் மறக்க முடியாததாகும். என்னுடன் ஐந்து மாதங்கள் அடிக்கடி வந்து வந்து துணை செய்து உதவிய மேற்கண்ட ஆசிரியர் பெருமக்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியுரியது.

வெற்றி அச்சகத் தொழிலாளர்கள் அனைவரும் விருப்பத்தோடு சுறுசுறுப்பாக இயங்கினர் என்பதும், அச்சக உரிமையாளர் திரு. குப்புசாமி காட்டிய வேகமும் பல தொல்லைகளுக்கும் ஈடுகொடுத்து — சளைக்காமல் நூலை முடித்த திறமும் பாராட்டுதற்குரியது. மொத்தத்தில் திருக்குறள் வேள்வி யாகவே அச்சுவேலை தினமும் நடைபெற்றது. இந்தப் பெரும் பணியில் ஈடுபட்ட எங்கட்கெல்லாம் உணவு முதலானவற்றை உடனிருந்து கவனித்துப் பணிபுரிந்த எனது சேகர் பதிப்பகத்தைச் சேர்ந்த பெ. பன்னீர் செல்வம், சு. அருள் ஆகியோரை யும் இங்கே குறிப்பிடுவது முக்கியம். இவ்வாறு பலரும் கூடி, பம்பரமாகச் செயல்பட்டு இப்பெரிய நூலை அச்சிட்டு முடித்தோம்.

தமிழ் நாட்டுக்கு — தமிழ் மக்களுக்கு மாபெரும் கடமையாற்றிய பெருமைக்குரியவர் திருக்குறளார் ஆவார். அவருக்குத் துணை நின்று இப்பெரிய நூலை அழகுடன் பெருஞ் செலவில் அச்சிட்டு வெளியிடும் திருமகள் நிலையத்தாரும் பாராட்டுக்குரியவராகிறார். தமிழகம் இவர்களை என்றும் மறவாதென்பதில் ஐயமில்லை.

தமிழகத்தின் இல்லந்தோறும் பயன்தர வேண்டிய ‘உலகப் பொதுமறை திருக்குறள் உரை விளக்கம்!’ சென்று பரவட்டும் !

மற்ற உரை நூல்களிலிருந்து இந்நூல் பெரிதும் மாறுபட்ட முறையில் சிந்தித்து எழுதப்பட்டுள்ளது. பரிமேலழகர் உரை அப்படியே - ஒரு சில கருத்து வேறுபாடுகளுடன் — தரப்பட்டுள்ளது. படிப்போர் தெளிவு பெற குறட்பாவுக்கு முதலில் கருத்துரை தந்துள்ளார். பிறகு, குறட்பா சொல் பிரித்துத் தரப்பட் டுள்ளது. மூன்றாவதாக குறட்பா படிப்பதற்கு எளிதாகத் தனித் தனிச் சொற் களாகவே தரப்பட்டுள்ளது. இந்த முறை வேறு உரை நூலில் காணமுடியாதது.

எல்லாரும் விரும்பிப் படிப்பதற்கு ஏற்றவாறு நூலின் தொடக்கத்தில் முன்னுரைப் பகுதி அமைந்துள்ளது. அடுத்து, நல்ல விளக்கம் பெறுவதற்குரிய வகையில் குறிப்புப் பகுதி திகழ்கிறது. மூன்றாவதாக உரைப்பகுதி உள்ளது. அதைப் படித்தவுடன் ஓரளவு விளக்கம் பெறுவதற்காக உரைவிளக்கப் பகுதி தரப்பட்டுள்ளது. ஐந்தாவது பகுதியாகச் சிந்தனைப் பகுதி விளங்குகிறது. இது குறள் நெறிகளின் திரண்ட கருத்துப் பெட்டகமாக எழுதப்பட்டுள்ளது. இத்தகைய பயன் தரும் பகுதிகளைக் கொண்ட இந்நூல், இனி வருங் காலத்தில் திருக்குறளை அனைவர் நெஞ்சங்களிலும் பாய்ச்சிப் பயன் வளர்க்கும் என்பது உறுதி.

ஆய்வாளர்கட்குப் பயன்தரும் எண்ணத்தோடு பரிமேலழகர் உரைவளம், ‘திருவள்ளுவ மாலை’ எனும் இரு பகுதிகளை இணைத்துள்ளோம். நூலின் முடிவில், ‘வரலாற்றுச் சுருக்கம்’ என்னும் தலைப்பில் ஆசிரியர் திருக்குறளார், இளமைமுதல் திருக்குறள் பரப்பிய தொண்டினைக் காணலாம். அதனால் பல நல்லவர்களை அறிந்து கொள்ளலாம். அவருடன் நாமும் நன்றி கூறி விம்மித மடையலாம். மொத்தத்தில் இத்தகையதோர் அமைப்புடன் ஒரு நூல் இதுவரை வந்ததில்லை என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வார்கள்.

உயர்ந்த அமைப்புடைய இந்நூல், உயர்ந்த தாளில் உயர்தரமாக பெரும் செலவில் அச்சிட்டு, அழகான உருவில் தரப்பட்டுள்ளது என்பதையும் காண்போர் உணரலாம்.

திருக்குறள் **தமிழ்நாட்டுத் தேசிய நூல்** என்று போற்றுகின்ற நமது தமிழக அரசு, இச்சிறந்த விளக்கவுரை நூலினை எல்லாக் கல்வி நிலையங்கட்கும் பரப்பிப் பயன் வளர்க்குமாறு செய்யுமென்று நம்புகின்றோம். மேலும் அரசு அலுவலகங்கள் அனைத்திலும் இந் நூலினை அவசியம் வாங்கி வைக்குமாறு செய்ய வேண்டும். தக்கபோழ்து தேவைக்கேற்ற கருத்து விளக்கம் பெற இந்நூல் பெரிதும் உதவும்.

எல்லாம் இதன்பால் உள; இது உலகப் பொதுமறை! எளிதில் தேவையான விளக்கம் பெற உதவும் சிறந்த நூல் இது ஒன்றேயாகும். எனவே இல்லந்தோறும் இந்நூல் இருக்க வேண்டும்.

தமிழ்மக்கள் பொறுப்புணர்ந்து, தமிழ்மறையின் சிறப்புணர்ந்து, இதனை வாங்கிப் பயின்று, சிந்தனை வளமும் செயல் ஊக்கமும் சிறப்பும் பெற்று வாழுமாறு விரும்பி வேண்டுகின்றோம்.

வாழ்க திருக்குறளார் தொண்டு!

வளர்க திருக்குறள் பயன்!

அன்பன்,

**வெள்ளையாம்பட்டு சுந்தரம்**

# பதிப்புரை

தமிழ்நாட்டு மக்கள் எல்லாரும் திருக்குறளின் அரிய கருத்துக்களை எளிதில் அறிந்து பயன்பெற வேண்டும் என்ற குறிக்கோளுடன் அறிஞர் பெருந்தகை திருக்குறளார் வீ. முனிசாமி பி.ஏ., பி எல்., (இந்திய நாடாளுமன்றத்தின் முன்னாள் உறுப்பினர்) அவர்கள் எழுதிய **உலகப் பொதுமறை திருக்குறள் உரை விளக்கம்** என்னும் அரிய அறிவுச் செல்வத்தை நூலாக்கித் தமிழ் மக்கள்முன் படைப்பதில் பெருமையடைகிறோம்.

கற்றவரெல்லாரும் குறள் நெறிகளைப் பெற்றவராக வேண்டும் என்று விரும்புகிறோம்.

இந்நூலை வெளியிட எனக்கு வாய்ப்பளித்த திருக்குறளார் அவர்கட்கு என் அன்பும் நன்றியும் உரியது. அதற்கு வழி வகுத்த சிலம்பொலி செல்லப்பன் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். திருக்குறளார் அவர்களுடைய அன்பினைப் பெற்ற சேகர் பதிப்பக உரிமையார் திரு. வெள்ளையாம்பட்டு சுந்தரம் முழுப் பொறுப்பேற்று நூலை உருவாக்கி முடித்துத் தந்தார். அவர்கட்கும், அவருக்குத் துணை புரிந்த ஆசிரியர் பெருமக்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூலை மிக விரைவாக அச்சிட்டுத் தந்த வெற்றி அச்சக உரிமையாளர் திரு. எஸ். குப்புசாமிக்கும் அவரது அச்சகத் தொழிலாளர்கட்கும் எமது அன்பார்ந்த நன்றி உரியதாகும்.

தமிழர்க்குப் பெருமை சேர்க்கும் இப்பெரிய நூலுக்கு அணிந்துரை, வாழ்த்துரை, பாராட்டுரைகளைத் தந்து மேலும் மெருகூட்டிய மதிப்பிற்குரிய மாண்புமிகு தமிழக முதல்வர், புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். அவர்கட்கும் சட்டப்பேரவைத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம் அவர்கட்கும், நிதியமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் இரா நெடுஞ்செழியன் அவர்கட்கும், கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கட்கும், செய்தி-சுற்றுலா, அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கட்கும், இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர் திருமிகு ஆர். ஷண்முக சிகாமணி ஐ. ஏ. எஸ். அவர்கட்கும் எமது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆர்வமும் கடமையும் உந்த, இந்த அரிய பெரிய நூலை அச்சிட்டு வெளியிடுகின்றோம். அறிவுசார்ந்த கல்வியுலகமும் பொதுமக்களும் நூலை வாங்கி குறட்பயன் வளர்க்குமாறு வேண்டிக்கொள்கிறோம்.

வாழ்க திருக்குறளார் ! வளர்க திருக்குறள் நெறி!

அன்பன்
**அ. இராமநாதன்**
திருமகள் நிலையம்

# பொருளடக்கம்

## 1 முன்னுரைப் பகுதி



## 2 குறிப்புப் பகுதி

## உரைப் பகுதி

### அறத்துப்பால்

#### பாயிர இயல்



#### இல்லற வியல்



#### துறவற இயல்

##### விரதம்



##### ஞானம்



#### ஊழ் இயல்

# பொருட்பால்

## அரசியல்



## அங்க இயல்

### ஒழிபு இயல்



## காமத்துப்பால்

### களவு இயல்



### கற்பு இயல்



## உரை விளக்கப் பகுதி

## சிந்தனைப் பகுதி

---

# உலகப் பொதுமறை

திருவள்ளுவர் அருளிய திருக்குறள், உலகத்திலுள்ள எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்திற்கும் பொருந்தும். சாதி, சமய, மத வேறுபாடுகள் ஏதுமின்றி, நிலைத்து நிற்கின்ற பொதுத் தன்மையான அறநெறிகளைக் கூறுவதால் இதனை உலக அறிஞர் பெருமக்கள் **'உலகப் பொதுமறை'** என்று போற்றுகின்றனர்.

உலகிற்கு அறம் வகுத்த பெரியார் பலர் அரிய நீதி நூல்களை வழங்கியுள்ளனர். அத்தகைய எல்லா நூல்களையும்விட பொதுத் தன்மையில் சிறந்து விளங்குவதால் திருக்குறள் முதலிடம் பெறுகின்றது.

அன்று முதல் இன்று வரை மனித வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டியாகத் திருக்குறள் போற்றப் பெறுகிறது; ஆதலால், உலகில் வழங்கிவரும் பெரும்பான்மையான மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு உலக மக்களுக்கு நல்வழிகாட்டியாகத் திகழ்கிறது.

திருக்குறள் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு பொருள்களையும் அடிப்படையாகக் கொண்டு மக்களின் அன்றாட வாழ்க்கைக்குப் பயன் தருகிறது. ஈராயிரம் ஆண்டுகள் சென்றாலும் இந்நூலில் கூறப்பட்ட மறைமொழிகள் அன்றுபோல் இன்றும் போற்றப்பட்டு வருகின்றன; மேலும், மனித குலம் இவ் வுலகில் உள்ளவரை போற்றப்பெறும் என்பதும் உண்மை.

இஃது ஓர் இலங்கு நூல்; அறநூல்; மறைநூல்; மனித வாழ்க்கையினை உயர்ந்த வாழ்க்கையாக அமைத்துக் கொள்ளு வதற்கு அடிகோலும் நூல்!

பொதுவாக உலகில் வழங்கிவரும் சமய நூல்களும் மத நூல்களும், எல்லாம் வல்ல இறை வழிபாட்டினை மட்டும் உணர்த்துபவை. ஆனால், திருவள்ளுவர் அருளிய திருக்குறள், வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு வகுக்கப்பட்ட நெறிகள் அனைத்தையும் கூறுவதாகும்.

ஆட்சி முறைகள், அமைச்சர் இயல்புகள், மறவர் போர்த்திறன், உழவர் பெருமை, காதலர் வாழ்க்கை, கற்பின் திறம், பொருள் செயல்வகை, ஈகையின் உயர்ச்சி, சான்றாண்மை, இல்லற மேன்மை என்றெல்லாம் அனைத்தும் நிறைந்து செறிந்திருப்பது திருக்குறள். மனிதன் குறிக்கோளோடு வாழவேண்டும் என்பதையும் அக் குறிக்கோளினை எவ்வாறு நிறைவேற்ற வேண்டும் என்பதையும் அன்றாட வாழ்க்கையில் இந்நூல் போதிக்கின்றது.

உலகில் வாழ்ந்து வரும் மக்கள் அனைவரும் ஒரே துறையில் வாழ்ந்து வருபவர்களாக இருத்தல் இயலாது. பற்பல துறைகளிலும் வாழ்க்கை நடத்துகின்றவர்களுக்கு அந்தந்தத் துறைக்கு ஏற்ற முறையில் அறம் வகுத்துக் கொடுக்கும் தனிச் சிறப்பு, ஆசிரியர் திருவள்ளுவர் ஒருவருக்கே உரியது. வாழ்கின்ற வாழ்க்கையில் இயல்பாக பற்பல நேரங்களில் நமக்குத் தோன்றுகின்ற மனக் குழப்பத்தை நீக்கி, மயக்கங்களைப் போக்கி, ஐயப்பாடுகளிலிருந்து விடுவித்துத் தெளிவினைப் புகட்டுவது இந்நூலாகும். இருள் நீக்கி ஒளி அளிக்கும் சுடர் விளக்காகத் திருக்குறள் அமைந்துள்ளது.

வாழ்க்கையைத் திறமையுடன் நடத்தி வெற்றி காண்பதற்கு ஊக்கமளித்து, முயற்சி என்னும் குன்றின்மேல் நிறுத்தி, புகழேந்தியாக வாழ வழி வகுக்கின்றது திருக்குறள். காலச் சூழ்நிலைகளால் தளர்ந்திருக்கும் உள்ளத்தில் ஆண்மையைப் புகுத்தி, எதற்கும் அஞ்சாமல் கவலை நீக்கி வாழ்கின்ற வாழ்க்கையினை உணர்த்துகின்றது; மனக் கவலைக்கு மருந்தாகவும் இந்நூல் அமைந்துள்ளது.

நம் வாழ்க்கையை நாமே உயர்த்திச் செப்பனிட்டு, ஓங்கி உயர்ந்து சிறப்புள்ளதாகச் செய்து கொள்ளுதல் வேண்டும். முயற்சி எக்காலத்திலும் உயர்ச்சியினை அளிக்கும். விடா முயற்சியை மேற்கொண்டவர்கள் செல்வப் பெருக்கில் நிலைத்து நிற்பார்கள். இந்த உண்மையினைக் குறட்பாக்கள் நன்கு வலியுறுத்துகின்றன.

இயற்கையாகவும் இயல்பாகவும் பல பிறவிகளில் தொடர்ந்துவரும் நம் வினைப் பயன்களால் ஏற்படும் தாக்குதல்களையும் எதிர்த்து நின்று வெற்றி காணும் வழியைத் திருக்குறள் போதிக்கிறது.

மனித வாழ்க்கையில் உண்டாகின்ற தாழ்வுகளையும் குறைபாடுகளையும் எண்ணிக் கொண்டு வேதனைப் படாமல் இடைவிடாத முயற்சியால், அறிவின் துணையால் இன்பம் எய்தி வாழ வேண்டுமென்று திருக்குறள் உணர்த்துகின்றது.

பிறந்த பிறப்பினாலும், கற்ற கல்வியினாலும் பெற்றிருக்கின்ற அறிவினாலும் மேம்பாடு அடைய வேண்டுமென்றால், அவன் செய்கின்ற செயல்களையே அடிப்படையான காரணங்களாகக் கொள்ளுதல் வேண்டும். பல குறட்பாக்கள் சீரிய இந்த உண்மையினைப் போதிக்கின்றன. 'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்' என்னும் குறள் இதற்கு எடுத்துக்காட்டாகும்.

இல்லறத்தை மேற்கொண்டு வாழ்பவர்கள், அந்த அறத்திலேயே நின்று நிலைத்துக் கடமையாற்றி வாழ்தல் வேண்டும். இக்கருத்தினை, 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை', 'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன்', 'நோற்பாரின் நோன்மையுடைத்து', 'புறத்தாற்றில் போஒய்ப் பெறுவது எவன்?' என வருகின்ற குறளடித் தொடர்கள் வற்புறுத்துகின்றன.

துறவறத்தினை மேற்கொண்டுள்ள ஒருவன் அதே வாழ்க்கையில் அதே நெறியில் நிற்றல் வேண்டும். 'மறந்தார்கொல் மற்றையவர்கள் தவம்', 'எண்ணின் தவத்தான் வரும்', 'ஈண்டு முயலப்படும்', 'அவம் செய்வார் ஆசையுட்பட்டு' என்பன போன்ற குறட்பாத் தொடர்கள் தவத்தின் சிறப்பினை உணர்த்துவன. இவற்றின்மூலம் அவரவர் தாங்கள் மேற்கொண்ட நெறியில் நின்றே கடமையாற்ற வேண்டும் என்ற பேருண்மை உணர்த்தப் பெறுகிறது.

இல்லற வாழ்க்கையில் வாழ்பவனுக்கு 'அன்பு' என்கின்ற உயர் பண்பினைக் கூறிய ஆசிரியர், அந்த அன்பு வளர்ந்து பெருகி உலகில் உயிர் வாழ்கின்ற இனங்கள் அனைத்திடத்தும் கருணை நிறைந்து இருக்கவேண்டிய சிறந்த தவசிகளுக்கு 'அருளுடைமை' என்பதனைப் போதித்தார்.

மறவன் ஒருவன் போர்க்களத்தில் எதிர்த்து வருகின்ற பகைவர்களைக் கொல்லுதல் வேண்டும். அதுவே அவனுடைய கடமையாகும்; அவன் செய்ய வேண்டிய அறமும் ஆகும். அவ்வாறின்றி, அந்த இடத்தில் அன்பினைக் காட்டிப் பகைவர்களைக் கொல்லவில்லையென்றால், அவன் கடமையை மறந்தவனாவான். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக வேண்டிய அந்தணாளனாகிய துறவியோ, எல்லா உயிர்களிடத்தும் எல்லாக் காலத்திலும் அருளுடைமை கொண்டவனாக இருத்தல் வேண்டும்.

தமக்கென்று விதிக்கப்பட்ட வாழ்க்கை நெறிகளை அறிந்து, புரிந்து, கடமையாற்றுபவனே அறம் செய்பவனாவான். 'துறந்தார்கொல்' என்று கூறப்படுகின்ற தவ வாழ்க்கையினை மேற்கொண்ட முனிவர்களைத் தவிர, உலகில் பலவகையான துறைகளில் வாழும் ஏனையோர் அனைவருமே **இல்லறத்தார்கள்** என்று கொள்ளுதல் வேண்டும்.

திருவள்ளுவருடைய அறநெறிகளை வாழ்க்கையில் பின்பற்றி வெற்றி கண்டு, மேலான வாழ்க்கையில் பயனடைந்து வருபவர்கள் இன்றும் பலருண்டு. எண்ணியதை எண்ணியபடியே அடைய முடியும் என்ற மறை மொழியினை மனத்திற்கொண்டு, 'துன்பம் உறவரினும் செய்க' என்ற பொன்னுரையைப் பின்பற்றி இன்ப வாழ்க்கை வாழ்தல் வேண்டும்.

மனித மனத்தில் எத்தகைய சூழ்நிலையிலும் 'மடி' என்று சொல்லப்படுகின்ற சோம்பல் தன்மையே வருதல் கூடாது என்பது ஆசிரியரின் உறுதியான 'மறைஉரை'யாகும்.

உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருளினை மிகுந்த முயற்சியினால் ஈட்டுதல் வேண்டும் என்று வற்புறுத்தி, வலியுறுத்திக் கூறுகின்ற ஆசிரியர், அவ்வாறு ஈட்டிய பொருளினை எவ்வாறெல்லாம் நன் முறையில் செலவு செய்தல் வேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றார். இவ்வாறு ஈடு இணையற்ற பெருமை வாய்ந்த உண்மைகளையெல்லாம் கொண்டிருப்பதால்தான் உலகப் பெரியார்கள் 'இது போன்ற நூல் ஒன்று இதுவரை தோன்றியதில்லை' என்று கூறுகின்றார்கள்.

குறட்பாக்களின் அருமையினை உணர்ந்த உலகோர் இந்நூலாசிரியரை 'தெய்வப் புலவர் திருவள்ளுவர்' என்று உயர்த்திக் கூறினார்கள்.

**திருவள்ளுவ மாலை** என்னும் நூலில் உள்ள ஐம்பத்தொரு பாடல்களும் திருக்குறளின் அரிய சிறப்பியல்புகளை ஓதுகின்றன.

பல்வேறு வகையான கொள்கைகளை உடையவர்களும் பொதுமறையான இந்நூலினை **வழிபாட்டுக்குரிய நூலாக** ஏற்றுக் கொண்டுள்ளனர்.

மனம் எப்போதும் தூய்மையான அறவழியில் நிலைக்க வேண்டும் என்ற பொன்னான உண்மையினைக் கூறுகின்றபொழுது, 'ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாய் எல்லாம் செயல்' என்ற குறட்பாவினை அமைத்துக் காட்டினார்.

பற்பலவகையான உயர்ந்த அறநெறிகளைச் செம்மையான அறங்களாகக் கூறுகின்றார். என்றாலும், அவற்றில் ஏதாவது ஓர் அறத்தினை, உறுதியாகப் பின்பற்றி வருவானேயானால், ஏனைய அறங்கள் இயல்பாகவே அவனைச் சார்ந்து நிற்கும். இது அனைவரும் அறிந்து கொள்ள வேண்டிய உண்மையாகும்.

உலகில் வாழ்கின்ற மக்களின் மனிதத்தன்மை நிறைந்த உள்ளங்களில் தோன்றக் கூடிய எண்ணங்கள் அனைத்தையுமே குறிப்பாக ஆசிரியர் திருவள்ளுவனார் பற்பல இடங்களில் உணர்த்துகின்றார். இந்நூலுக்கு ஒப்பாகக் கூறுவதற்கோ அல்லது இந்நூலைவிட உயர்வாகக் கூறுவதற்கோ உலகில் பிறிதோர் நூல் இல்லை என்பது எக்காலத்தும் உண்மையாகும்.

சிந்திக்கச் சிந்திக்கப் பெருகி வரும் எண்ணங்களைத் தரக்கூடிய குறட்பா சுருக்கமான வடிவத்தில் அமைக்கப்பட்டிருப்பது பெருஞ் சிறப்பாகும்.

திருவள்ளுவர் மறை மொழிகள் அருளிய நிறைமொழி அந்தணராவார். அவர் அருளிய கருத்துக்கள் எல்லாம் உலகில் எங்கணும் புகழ்மணம் வீசிப் பெருமிதத்துடன் விளங்கிக் கொண்டிருக்கின்றன.

திருக்குறளுக்கு இணையான ஒரு நூல் இவ்வுலகில் இனித் தோன்றுதல் அரிது என்று பேரறிஞர்கள் நன்கு உணர்ந்துள்ளார்கள்; நமக்கும் உணர்த்தியுள்ளார்கள். 'எல்லாப் பொருளும் இதன்பால் உள' என்று கற்றறிந்த புலவர் பெருமான் ஒருவர் கூறிய சொற்கள் எவ்வளவு உண்மையாக அமைந்துவிட்டன!

இந்நூலினை **'ஒழுக்க நூல்'** என்றே கூறுகின்றனர்; **'முதல் நூல்'** என்றும் போற்றுகின்றார்கள். பல பெயர்களைக் கொண்ட இந்நூலுக்குப் **'பொய்யா மொழி'** என்பதும் அரியதொரு பெயராகும். தீமைகளை நிரப்பிக் கொள்ளுகின்ற மனத்தினைக் 'குறளடிச் சொற்கள்' திருத்தி அமைக்கும் ஆற்றல் படைத்தவையாகும்.

பொல்லாத மக்கள் உள்ளங்களிலே தோன்றுகின்ற தீய எண்ணங்களை யெல்லாம் சுட்டிக் காட்டி, நல்லபடி வாழ்வதற்கு வழி செய்கின்ற நூலாகவும் இஃது அமைந்துள்ளது.

இந் நூல் தமிழ் மொழியில் எழுதப்பட்டாலும் குறிப்பிட்ட ஒரு மொழியினர்க்கோ அல்லது நாட்டினர்க்கோ அமைந்த நூலாக எழுதப்படவில்லை. தேமதுரத் தமிழ் மணம் உலகமெலாம் பரவும் பணியினை இந்நூல் செய்கின்றது. 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்தது' என்ற வாய்மொழி உண்மையிலும் உண்மையாகும்.

ஒரு நூலின் பெருமையினைப் புகழ்ந்து பாடுவதற்கு மற்றொரு நூல் தோன்றியது என்ற உண்மை, அக்காலத்தில் திருக்குறள் ஒன்றிற்கே உரியதாகும். இவ்வாறு வேறு எந்த நூலுக்கும் அமைந்ததில்லை. பேராசிரியர்கள் பத்துப் பேர்களுக்கு மேல் உரை எழுதிய தனிச் சிறப்புமிக்க நூல் திருக்குறள் ஒன்றேயாகும். இவ்வாறு பிற நூல்களுக்குப் பல உரைகள் தோன்றியதாகத் தெரியவில்லை.

தமிழ் மக்கள் உலகப் புகழ் எய்தி, பெருமைப்பட்டுக் கொள்வதற்கு முதற் காரணமாக அமைந்த திருக்குறளினை அருளிய திருவள்ளுவனாருக்கு, நாம் என்றென்றும் கடமைப் பட்டவர்களாவோம்.

உண்டவர்களுக்கு இறவாத இன்பத்தை அளிப்பது 'அமிழ்தம்' என்று கூறுவார்கள். அதுவே போன்று, கற்று உணர்ந்தவர்களுக்கு அழியா அமைதியினையும், அறிவினையும், இன்பத்தினையும் கொடுத்து வருவது இந்நூலே யாகும். வேற்றுமைகளைப் பல்வேறு முறைகளில் உண்டாக்கிக் கொண்டிருக்கும் உலகியல் தன்மைகளில், ஒற்றுமையினை நிலைநிறுத்தி ஒன்றுபட்டு வாழ்தற்கு வழி வகுக்கும் நூல் இஃது ஒன்றே.

திருவள்ளுவர் அருளிய பொன்னுரையான 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்னும் அரிய உண்மை திருவள்ளுவர் ஒருவருக்கே பொருந்துவதாகும். உலகில் உயர்வாகக் கருதப் படுகின்ற நூல்களையெல்லாம் ஆசிரியர் திருவள்ளுவர் நன்கு கற்றறிந்து, அக்கருத்துக்களைத்

தழுவி எழுதுகின்றார். தமக்கு முன்னேயிருந்த பேரறிஞர்கள் கருத்துக்களையும் தாம் ஏற்றுக் கொண்டு நூலினை அமைத்திருக்கின்றார்.

அறநெறிகளைக் கூறிக் கொண்டு வருகின்ற பொழுது மக்களிடையே பரவி இருக்கின்ற அறமல்லாத முறைகளையும் கண்டிக்கிறார். ஒவ்வொருவருக்கும் செயற்கை அறிவுடன் இயற்கை அறிவும் நிறைந்திருக்க வேண்டும் என்பது ஆசிரியரின் கோட்பாடாகும். மனிதப் பிறவி எடுத்தவர்கள் மிருகத் தன்மையுடனும் மற்றும் தாழ்ந்த உயிரினங்கள் போலவும் வாழ்ந்து வருகிறார்களென்றும் சுட்டிக் காட்டுகின்றார்.

மக்கள் சமுதாயம் பெருமை பெற்று வாழ்வதற்கு, ஒழுக்கத்தினைப் பற்பல இடங்களிலும் பற்பல முறைகளிலும் ஆசிரியர் சுட்டிக் காட்டத் தவறவில்லை. ஆதலால்தான் எல்லா வகையான பேரறிஞர்களும் ஒரே குரலில் திருவள்ளுவரைப் புகழ்ந்து பேசலாயினர். வடமொழியில் காணப்படுகின்ற வேதங்களில் உள்ள நன்மை பயக்கும் அரிய உண்மைகளெல்லாம் ஒன்றாகக் காணப்படுகின்ற நூல் திருக்குறளே என்று கூறுகின்றார்கள்.

மக்கள் அனைவரும் நாள்தோறும் தம் நடைமுறை வாழ்க்கையில், திருவள்ளுவர் உணர்த்திய நெறிகளில் வாழ ஆரம்பித்து விட்டால், உலகில் காணப்படுகின்ற பலவகைப்பட்ட தீமைகளும் கொடுமைகளும் மறைந்தோடிவிடும். அது மட்டுமல்ல; இனி, அவை நிகழ்வதற்கும் இடம் இராது என்றே சொல்ல வேண்டும்.

திருக்குறள் மனித குலத்திற்கே ஒளி வீசுகின்ற முழுமையான, நிறைவான, **பேரறநூல்** என்று உலகப் பெரியார்கள் கூறுகின்றார்கள். இந்நூல் மிக மிகப் பழமையான **உலக நூல்** என்று பாராட்டப்பட்டு வருகின்றது.

இந்நூலாசிரியர் ஓர் அறவோர்; செந்தண்மை பூண்ட அந்தணாளர்; இலங்கு நூல்கள் பலவற்றையும் கற்றுத் தேர்ந்த பேராசிரியர்; கற்றறிந்த பெரியார்களுக்கெல்லாம் தாம் வரம்பாகிய தன்மையாளர்!

இவரைப் போற்றாத தேசமில்லை; புகழாத மக்கள் இலர். இன்றைய உலகம் திருவள்ளுவரை நன்றாகப் புரிந்துகொண்டது என்று கூற வேண்டும். திருக்குறளைப் பல்வேறுபட்ட கொள்கையினரும் உரிமையோடு தங்கள் நூலாகப் போற்றுகின்றனர். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற சமத்துவத்தை வேரூன்றச் செய்யும் அரிய பொன்னுரை போல நூல் முழுதும் மனித குலத்தைச் செப்பனிடும் செம்மொழிகள் பரவலாகக் காணப்கின்றன. சிந்தனை செய்யும் பெரும் சிந்தனையாளர்க்கு இந்நூல் சிந்தனைச் சுரங்கமாக அமைந் திருக்கின்றது. திருக்குறள் காலத்திற்குக்கட்டுப்பட்ட நூல் அல்ல!

வாழ்க்கைக்குத் தேவையான நெறிமுறைகளையெல்லாம் தட்டுப்பாடின்றி இந்நூல் வழங்கிக் கொண்டிருக்கிறது. திருவள்ளுவரும், தாம் கற்பனை நிறைந்த பேரறிஞர் என்பதைப் பல இடங்களில் வெளிப்பட உணர்த்துகின்றார். உலகில் வாழும் மக்களின் உள்ளம் நல்ல பண்புகளைப் பெற்று, நல்ல ஒழுக்கம் நிறைந்ததாக, உணர்ச்சி மிகுந்ததாக, அறிவுடைமையுடன் எல்லா இன்பமும் பெற்று, பிறருக்குப் பயன்பட்டு வாழ்வதையே ஆசிரியரின் உள்ளம் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது.

திருவள்ளுவர் குறிப்பாக நாடு, மொழி, இனம் என்பனவற்றை யெல்லாம் கடந்து நிற்கும் பேராசிரியர் ஆவார். உலகில் இன்று போற்றப்பெறும் அறிவு நூல்கள் அனைத்தையும் விட இந்நூல் மேலானதாகத் திகழ்கின்றது. இவ்வாசிரியர் சொல் வளத்திலும், பொருள் வளத்திலும், அனுபவத்திலும் தலை சிறந்தவராகத் திகழ்கின்றார். உலகில் நற்கருத்துக்கள் வழங்கி உள்ள மற்ற பேராசிரியர்களின் கருத்துக்களையெல்லாம் இவர் அறிந்திருக்கின்றார்.

உலக மக்கள் அனைவரையும் ஒன்றாக ஒப்பு நோக்கி அனைவருக்கும் பொதுத் தன்மையான கருத்துக்களை இவர் வழங்கி இருக்கின்றார். உலகில் பல தரப்பட்ட வாழ்க்கையினை நடத்துகின்ற பற்பல துறைகளிலும் மேம்பாடான தெளிந்த அறிவும், நிறைந்த அனுபவமும், எடுத்துக் கூறும் ஆற்றலும் திருவள்ளுவரிடம் நிரம்பக் காணப்படு கின்றன; உலகின் இயற்கை, செயற்கை என்பனவற்றில் அடங்கியுள்ள தத்துவங்கள் அனைத் தையும் நன்கு புரிந்து கொண்டிருக்கின்றார். குறிப்பிட்ட ஒரு மதத்தையோ சமயத்தையோ சேர்ந்தவர் என்று இவரைக் கூற முடியாது.

இவ்வாசிரியரின் கருத்துக்களை நன்கு புரிந்து கொள்வதற்குப் பொது அறிவும், சிந்தனா சக்தியும் நிறைந்திருக்க வேண்டும்.

எல்லா உயிரினங்களையும் தம் உயிர்போல் கருதி, மனிதப் பண்புடன் பழகி, இயன்றவரை பிறருக்கு ஆதரவு தந்து வாழ்வதே மனிதப் பிறவிக்கு அடையாள மென்பது இவருடைய கருத்தாகும்.

அருமையான குணங்களையும், மேலான ஒழுக்க நெறிகளையும் பின்பற்றி வாழ்வதே இறைவழிபாடாகும் என்பதனை இவர் நன்கு எடுத்துக் காட்டுகின்றார். இந்த நூலினை அறிவுச் சுரங்கம், கரையிலாக் கல்விக் களஞ்சியம், வற்றாத ஊற்று, சிந்தனைச் சேமிப்பு என்றெல்லாம் அறிஞர் போற்றுகின்றனர். வேறுபட்டுக் கிடக்கும் இந்த உலகினை ஒன்றுபடுத்தும் 'சக்தி' இந்த ஒரு நூலில்தான் நன்கு அமைந்துள்ளது.

உலகில் வாழ்கின்ற மக்களின் உள்ளங்களில் எல்லாம் தோன்றுகின்ற எண்ணங்கள் அனைத்தையும் உணர்ந்து அறிந்த நிறைமொழி மாந்தர் இவரே ஆவார். திருவள்ளுவரை நன்கு ஆராய்ந்தறிந்த பேரறிஞர்கள் இவரை 'அனுபவக் கடல்' என்று குறிப்பிடுகின்றனர். மிகப் பெரிய தத்துவங்களையும் ஆழ்ந்த கருத்துக்களையும் சுருக்கமாகச் சொல்லும் தனிச் சிறப்பு இவர் ஒருவருக்குத்தான் உண்டு. இந்த நூலுக்கு ஒழுக்க நூல், அறிவு நூல், சமரச நூல், அரசியல் நூல் என்றெல்லாம் பல பெயர்களைச் சூட்டி மகிழ்கின்றனர். எல்லா மக்களும் ஏற்றுக் கொள்ளக் கூடிய, ஒற்றுமையான ஓர் இறை வழிபாட்டினைத் திருவள்ளுவர் ஒருவர்தான் உலகிற்குத் தந்திருக்கின்றார். இந்த உலகம் பொருளாதாரத்திலும் மற்ற இன்றியமையாத் தேவைகளிலும் சிறந்து விளங்குவதற்குக் கடினமான உழைப்புத்தான் அடிப்படைக் காரணமென்று பற்பல முறைகளிலும் அவர் கூறுகின்றார்.

எனவேதான், பிற்காலத்தில் வந்த பேரறிஞர்கள் பலரும் தம் கருத்துக்களை வலியுறுத்தக் குறட்பாக்களை மேற்கோள் காட்டினர். 'நவில்தொறும் நூல் நயம்' என்று கூறு வதற்கிணங்க இந்நூலினைப் பன்முறையும் படித்து உண்மை உணர்தல் வேண்டும்.

இந்நூலினை ஓர் 'செயல் நூல்' என்றே புலவர்கள் கூறுகின்றார்கள். இது ஒரு 'தாய்மை நூல்' என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள். உலக இன்பங்கள் அனைத்தையும் நன்முறையில் துய்த்து வாழ வேண்டுமென்பதே இவர் குறிக்கோளாகும். கொடியதான கொடுமைகள், நோய் நொடிகள், வறுமை, பசிப்பிணி, உயர்வு தாழ்வு முதலானவை இல்லாத சமுதாயத்தை உண்டாக்கிக் கொடுத்தவர் திருவள்ளுவப் பெருமான் ஆவார். ஆதலால்தான், திருக்குறளை உலகத்தில் ஒப்பில்லாத 'உலக நூல்' என்றும், ஈடு இணையிலாத 'பெரு நூல்' என்றும் பெரும் புலவர்கள் கூறுகின்றார்கள்.

இதுவரை இவ்வுலகில் தோன்றிய அறிஞர்களுக்கெல்லாம், சான்றோர்களுக்கெல்லாம், முனிவர்களுக்கெல்லாம், மாமேதைகளுக்கெல்லாம் திருவள்ளுவர் முதன்மையானவராகத் திகழ்கின்றார். இந்த உலகம், திருவள்ளுவர் போன்ற எல்லாம் நிறைந்த மாமேதை ஒருவரை வருங்காலத்தில் சந்திக்க முடியாது என்று கூறுவது மிகையாகாது. உலகம் முழுவதையுமே பொதுப் பார்வையில் நோக்கி, பொதுத் தன்மையில் பொதுவான மறை மொழிகளை வாரி

வழங்கிய, விரிந்து பரந்த கடல் போன்ற உள்ளம் இவர் ஒருவருக்குத்தான் இருந்திருக்க முடியும்; இவர் வானளாவிய நிறை அறிவு பெற்றவர்; ஆராய்ந்தறியும் இயற்கையறிவு நிறைந்தவர்; எண்ணிறந்த நூல்களைக் கற்றவர்; சிந்தனை ஆற்றல் நிறைந்த தெள்ளியர்; இவருடைய ஆற்றலுக்கு எல்லை யில்லை என்றே கூற வேண்டும். செயல்படுத்தி வாழ்வதே வாழ்க்கை என்பதைப் பன்முறையும் இவர் வற்புறுத்துகின்றார்.

உலகில் உள்ள மக்கள் பல வகையான முறைகளில், வெவ்வேறு வகைகளில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். ஆதலால், அவரவர்களை அந்தந்த நெறிகளில் இருக்கச் செய்து, அற நெறிகளைப் போதிக்கும் திருவள்ளுவனாரின் ஆற்றல் தனிச் சிறப்பான ஆற்றலாகும். ஆசிரியர் வள்ளுவனாரின் நெறிவழிப்படி வாழ்பவர்கள் ஓங்கி உயர்ந்து சிறப்படைவார்கள் என்பது திண்ணம்.

நம் உள்ளத்தில் தோன்றுகின்ற எண்ணங்க ளெல்லாம் உயர்ந்த எண்ணங்களாக இருக்கட்டும்! நாம் இடைவிடா முயற்சி என்னும் ஏணிப் படிகளில் ஏறிச் செல்வோமாக! பிறருக்குப் பயன்பட்டு வாழ்வோமாக! உயர்ந்த ஒழுக்கம், பண்புடைமை என்பவையெல்லாம் நம் வாழ்க்கையின் மூச்சாக இருப்பனவாகுக! வையத்துள் வாழ்வாங்கு வாழ வேண்டும் என்ற கடமை உணர்ச்சி தோன்றி, புகழுடன் வாழ்வதே ஆசிரியர் பெருமானுக்கு நாம் காட்டுகின்ற செய்ந்நன்றியாகும்.

# கற்க வேண்டிய நெறிகளும், திருக்குறள் அமைப்பு முறையும், சிறப்பும்!

உலகப் பொது மறையான திருக்குறள் அறம் பொருள் இன்பம் என்ற மூன்று பொருள்களையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது. இவை முறையே அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற பெரும் பிரிவுகளாகப் பெயரிடப்பட்டுள்ளன.

**அறத்துப்பால்** பாயிரம், இல்லறம், துறவறம், ஊழ் என்று பகுக்கப்பட்டுள்ளது. இவை முறையே பாயிரவியல், இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என்று வகைப்படுத்தப் பட்டுள்ளன.

திருக்குறள் அறம் போதிக்க வந்த அறநூல். உலகத்திற்கெல்லாம் பொதுவாக அமைந்துள்ள கருத்துக்களைப் பாயிரத்தில் 'கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல்' என்ற நான்கு அதிகாரங்களில் கூறுகிறார்.

உலக மக்கள் அனைவர்க்கும் பொதுவாக அமைந்தவை, "கடவுள் வழிபாடு, மழை, அறம் போதிக்கும் முனிவர்கள், அவர்கள் வகுத்துக் கூறிய அறம்"—ஆகிய நான்குமாகும். ஆதலின் அவை பாயிரத்தில் கூறப்பட்டன. பாயிரமே முன்னுரை என்றும் முகவுரை என்றும் இன்ன பல பெயர்களால் வழங்கப்படுதல் மரபு.

உலகத்திற்கு அறம் போதிக்கும் ஆசிரியர் பொதுப்பட உலகத்தில் வாழும் மக்களை இரண்டு வகைகளாகப் பிரிக்கிறார். அவர்களே, "இல்லறத்தார், துறவறத்தார்' எனப் படுவோராவர். அதாவது, உலகியல் ஆசைகொண்டு பற்றுடன் வாழ்கின்றவர்கள் இல்லறத்தார், ஆசைகளை அறவே விட்டுப் பற்றற தவம் செய்து வாழ்கின்றவர்கள் துறவறத்தார்!

அறநெறிகளை இந்த இரண்டு வகையான வாழ்க்கைகளின் அடிப்படையில் அமைத்து விளக்கி விரித்துரைக்கின்றார். இதனையே **'அறத்துப்பால்'** என்ற பெரும்பகுதி கொண்டிருக்கின்றது. முதல் நான்கு அதிகாரங்கள் (பாயிரம்) நீங்கலாக—அறத்துப்பால் இறுதி அதிகாரம் (ஊழ்) நீங்கலாக மீதி இருப்பவை, 'இல்லறவியல், துறவறவியல்' என்று பிரிக்கப்பட்டுள்ளன.

பொருட்பாலும், காமத்துப்பாலும், இல்லற வாழ்க்கையின் அடிப்படையில் எழுந்தவைகளாகும். காமத்துப்பால் என்பது இல்லற இன்பத்தில் வாழ்பவர்களுக்கே ஆகும். இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணை நலம் என்ற இரண்டு அதிகாரங்களின் அடிப்படையில் எழுந்த விளக்கமே காமத்துப்பாலாகும்.

பொருட்பால், இல்லறத்தில் வாழ்கின்ற மக்களைக் குறித்தும், உலகியலில் அவரவர் மேற்கொண்டுள்ள பற்பல வாழ்க்கைத் துறைகளில் அமைத்தும் அறநெறிகளைக் கூறுவதாகும். பெரும்பாலும் எல்லோருமே - பொருட்பாலில் குறிப்பிடப்படுபவர்கள் அனைவருமே இல்லற வாழ்க்கையினர் என்று கூறவேண்டும்.

தனி உலகமாக அமைந்திருப்பது "துறவறவியலா"கும். இந்தப் பகுதியில் காணப்படுகின்ற **பதின்மூன்று** அதிகாரங்களும், "விரதம், ஞானம்" என்று பிரிக்கப்பட்டுள்ளன. அறத்துப்பாலில் கடைசி அதிகாரம் 'ஊழ்' என்பதாகும். இது, 'ஊழியல்' என்று தனிப் பெயரிட்டு அழைக்கப்படுகிறது.

எழுநூறு குறட்பாக்களைக் கொண்ட 'பொருட்பால்' அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்று மூன்று இயல்களாகக் கூறப்பட்டுள்ளது. நாட்டுத்தலைவனை மன்னன், வேந்தன், அரசன் என்பன போன்ற பெயர்களால் ஆசிரியர் அழைக்கின்றார்.

தனிச்சிறப்பு வாய்ந்த தலைவனான அரசனின் குணங்கள்,கடமைகள் இன்னபிறவற்றைக் கூறுகின்ற அதிகாரத்திற்கு "இறைமாட்சி" என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது.

அதாவது, இது முதன்மையான தலைவனின் சிறப்பியல்புகளைக் கூறுவதாகும். நாட்டுத்தலைவனை மன்னன், வேந்தன் என்ற பெயர்களால் அழைத்தாலும், 'மன்னர் மகன் மன்னன்' என்ற **அரச பரம்பரையினை** ஆசிரியர் குறிப்பிடவில்லை.

உயர்ந்த குணங்களையே முதன்மையாக வைத்து அவர், தான் கண்ட மன்னனைக் கூறுகின்றார். இக்காலத்தில் 'முடியரசு' இல்லாத காரணத்தினால், நாட்டுத்தலைவர்கள் 'பிரதமர்','முதலமைச்சர்' என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றனர்; குடி அரசு ஆனபடியால் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள். இவர்களே மற்ற அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

திருவள்ளுவர் குறிப்பிடுவதுபோல அன்றுபோல் இன்றும் பல அமைச்சர்கள் உடனிருந்து முதல்வருக்குப் பெரிதும் துணைபுரிந்து வருகிறார்கள்.

மன்னனை முதன்மையாக வைத்து 'அரசியல்' அதிகாரங்களும், அமைச்சர்களை முதன்மையாக வைத்து 'அங்கவியல்' அதிகாரங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. 'ஒழிபியல்' என்பது மிகப் பொதுவான கருத்துக்களைக் கொண்டு **பதின்மூன்று** அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

திருக்குறளில் காணப்படும் 133 அதிகாரங்களில், **பாயிரம் நான்கும், காமத்துப்பால் 25 அதிகாரங்களும்** போக, மீதியுள்ள அதிகாரங்களை அவை அமைந்திருக்கின்ற **'இயல்களை'**ப் பொதுவாக மனதிற்கொண்டு, "பொதுப்பட", அனைவர்க்கும் பொருத்தமான கருத்துக்களைக்

கூறுகின்ற அதிகாரங்களென்றும், "தனிப்பட்ட" சிறப்பான துறையை மேற்கொண்டவர்களுக்காகவே அமைக்கப்பட்டனவென்றும் நன்கு அறியலாம்.

பொதுத்தன்மை வாய்ந்த ஒழுக்க முறைகள், பண்பாடுகள், தன்மைகள் எல்லாம், வேறுபாடெதுவும் இன்றி மனித இனம் மேற்கொள்ளப்படவேண்டியவை என்பதையும் நாம் சிந்தித்து அறிந்துகொள்ள வேண்டும்.

ஆசைகளை அறவே விட்டொழித்துத் தவத்தினை மேற்கொண்டவர்கட்குக் காமத்துப்பால் தேவையில்லாத பகுதியாகும். மனைவி மக்களிடம் பாசமும் பற்றும் வைத்து உலகியலில் வாழ்கின்ற மக்கள் துறவறவியலில் கூறப்படுகின்றவைகளை —நோன்பு முறைகளை— அப்படியே பின்பற்ற இயலாது. ஆதலால்தான், அடிப்படையில் இல்லறத்தினை மேற்கொண்டவர்களுக்குத் **தானமும்** துறவறத்தினை மேற்கொண்டவர்களுக்குத் **தவமும்** வற்புறுத்தப்பட்டன.

துறவறப்பகுதியில் கூறப்பட்டுள்ள நோன்பு முறைகள் கடுமையானவையாகும். உலக ஆசையினை அறவே விட்டு, எவ்விதமான உலகத் தொடர்பும் இல்லாமல், பற்றும் பந்தமும் இல்லாமல் வாழ்பவர்களே துறவிகட்குக் கூறப்பட்ட நோன்புகளை முழுமையாகப் பின்பற்ற முடியும். அவர்களே துறவிகளாவர். உலக வாழ்க்கையில், இல்லறத்தில் பலவிதமான பணிகளை மேற்கொண்டிருப்பவர்கள் அவ்வாறு நோன்பு நோற்க முடியாது.

ஆதலால்தான் **ஈகை - தானம்** என்பவற்றையே இல்லறத்தார்க்குக் கூறினார். இவற்றைத் துறவிகள் செய்தல் அரிதாகும். துறவறத்தார்க்குக் கூறப்பட்டுள்ள நோன்பு முறைகளை இல்லறத்தார்கள் இயன்றவரை பின்பற்றலாம் என்பது இதன் குறிப்பாகும். எனவே, எளிமையான பண்புகளே இல்லறப்பகுதியில் கூறப்பட்டன. மேலான துறவறத்தினை மேற்கொண்டு, கடுமையான நோன்புகளை நோற்பவர்களுக்கு இல்லறப்பகுதியில் காணப்படும் எளிமையான தன்மைகள் கூறாமலேயே இயல்பாக அமைந்திருப்பனவாகும்.

இல்லறத்தாரைப் பற்றிப் பேசுகின்ற ஆசிரியர், இல்லறக் கடமைகளைத் தவறாமல் செய்தாலே போதும் என்பதற்காகத்தான், "துறவறம் உனக்கு ஏன்?" என்று கேட்பதுபோல்,

| | |
|---|---|
| புறத்தாற்றில் போஒய்ப் பெறுவது எவன் | 46 |
| முயல்வாருள் எல்லாம் தலை | 47 |
| இல்வாழ்க்கை நோற்பாரின் நோன்மை உடைத்து | 48 |
| வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும் | 50 |
| துறந்தாரின் தூய்மை உடையர் | 159 |

என்பன போன்று பல இடங்களில் எடுத்துக் காட்டினார். இல்லறத்தினை மேற்கொண்டிருப்பவர்கள், அங்கே சொல்லிய அறநெறிகளைப் பின்பற்றி வருதலே போதும் என்பதை வற்புறுத்த வேண்டி, இல்லறத்தின் சிறப்பினைத் துறவறத்துடன் ஒப்பிட்டுக் காட்டி உயர்த்தினார்.

துறவறத்தின் சிறப்பைக் கூறுகின்றபோது, அத்துறையினை மேற்கொண்டவர்கள், இல்லறத்தில் கூறப்பட்டிருப்பதைவிட **துறவற** முறையே உயர்ந்ததாகக் கொண்டு வாழ வேண்டும் என்பதற்காக, இல்லறத்தினைச் சுட்டிக் காட்டித் துறவறத்தினை உயர்த்துகிறார்.

| | |
|---|---|
| தவமும் தவமுடையார்க்கு ஆகும் | 262 |

என்று கூறி, தவத்திற் கென்றே பல பிறவிகளில் செய்தவை தொடர்ந்து வருவதால், அதற்குரியவர்கள்தாம் அதனை மேற்கொள்ள வேண்டும் என்கிறார்.

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம் 263

என்பதைச் சொல்லி இல்லறத்தார், துறவற எண்ணத்தினை மறக்க வேண்டும் என்று உய்த்துணர வைக்கிறார்.

இல்லறத்தார் மனைவி மக்களுடன், உற்றார் உறவினர்களுடன் வாழ்ந்து கொண்டு இருப்பவர்கள் என்பது மட்டுமல்ல; உலகியல் நடைமுறையில் பல பணிகளை மேற்கொண்டு பற்பல இடங்களில் - பற்பல சூழ்நிலைகளில் - பொருளீட்டி, நல்லவை தீயவை எனும் பற்பல குணங்கள் கொண்டிருக்கும் மக்களிடையே வாழ்பவரும் ஆவர்.

ஆதலால்தான், தவம் செய்வதையும் உண்டி வெறுத்து உடல் சுருக்கிக் கடுமையான நோன்பினைப் பின்பற்றுவதையும் துறவிகட்கு மட்டும் கூறினார். இல்லறத்தார் - உலகியலில் வாழ்பவர்கள் - அவைகளைப் பின்பற்றி வாழ முடியாது. அப்படியென்றால் அவைகளுக்கு **மாறாக நடக்கலாம் என்று நினைத்தல் முற்றிலும் தவறாகும்.** இயைந்தால் பின்பற்றலாம் என்பதே குறிப்பு. எளிமையாகப் பின்பற்றக் கூடிய குணங்கள் இல்லறத்தார்க்குக் கூறப்பட்டுள்ளன. தலையான ஒரு கடமை யாதென்றால் இல்லறத்தார் 'தானம்' செய்து வாழ வேண்டும் என்பதாகும். துறவறத்தாரால் இது நடைபெறாது.

தூய்மையான ஆடை தரித்து மருத்துவ மனைக்குச் செல்ல வேண்டும் என்பது மருத்துவர்களுக்கு இன்றியமையாத விதியாகும். அதனால், மற்றவர்கள் அழுக்கு ஆடைகளுடன் போக வேண்டும் என்பது பொருளல்ல; மற்றவர்களும் தூய்மையான ஆடையுடன் போக முடிந்தால் போகலாம்; அப்படிப் போகாவிட்டாலும் குற்றமல்ல; ஆனால் மருத்துவர்கள் தூய ஆடைகளுடன் செல்லாதிருந்தால் அது குற்றமாகக் கருதப்படலாம். இவ்வாறு சிந்தித்தறிக.

களவாடிக் கொண்டு ஓடுகிறவனைப் பிடிக்க வேண்டியது காவல் துறையினரின் கடமையாகும்; பிடிக்காவிட்டால் குற்றமாகும். மற்றவர்கள் அவனைப் பிடிக்கக் கூடாது என்பது பொருளல்ல; பிடித்தால் நல்லது; பிடிக்க இயலாவிட்டால் குற்றமல்ல.

'கல்வி' என்கின்ற அதிகாரத்தினை ''அரசியல்'' பகுதியில் அமைத்திருப்பதால், அது ஆட்சியாளர்களுக்கு மட்டும்தான் என்பது பொருளல்ல; அது அனைவர்க்குமே பொதுவாகும். பொது மக்களின் வளர்ச்சிக்குத் தேவையானவற்றைச் செய்து கொடுக்க வேண்டியது ஆட்சியாளரின் கடமையாதலால் சிறப்பினைக் கருதி அவ்வாறு அமைக்கப்பட்டிருக்கின்றது என்று கருதுதல் வேண்டும்.

தீயவற்றை ஒழிக்க வேண்டியது சிறப்பாக அரசியலாரின் இயல்பான கடமை. எனவே வரைவின் மகளிர், சூது, கள்ளுண்ணாமை முதலியன பொருட்பாலில் இடம்பெற்றன என்று சிந்தித்து அறிதல் வேண்டும். பிறவற்றையும் இவ்வாறே கருதலாம்.

திருவள்ளுவர் கூறிய நல்லன அனைத்தும் உலகில் வாழும் மக்கள் அனைவர்க்கும் பொதுவென்பது வெளிப்படை. அதுதான் பொது மறையின் நோக்கமாகும்.

ஆட்சியாளருக்கென்றே தனிப்பட்ட முறையில் தனிச் சிறப்புடன் அமைக்கப்பட்ட அதிகாரங்கள் என்று சில அதிகாரங்களைக் கூறலாம்.

எடுத்துக்காட்டாக இறைமாட்சி, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை, ஒற்றாடல், அமைச்சு, தூது, அரண், இகல், படைச்செருக்கு என்பன போன்ற

அதிகாரங்கள் எல்லாம் ஆட்சியாளர்களுக்கென்றே சொல்லப்பட்டவை. இதனைக் குறிப்பாகக் கொள்ளுதல் வேண்டும்.

ஆட்சியாளர்க்குத் தலையாய கடமையாக ஒன்று கூறப்படுகின்றது. அதாவது, வேற்றரசன் நம்மீது படையெடுத்தால் அவனை விரட்டித் தோற்கடித்தல் வேண்டும். தேவைப் பட்டால் வேற்று நாட்டின் மீது படையெடுத்தலும் வேண்டும். இவை 'அரசியல், அமைச்சியல்' என்ற பகுதிகளில் தனிச்சிறப்புடன் கூறப்பட்டுள்ளன.

இத்தகைய பணியினை ஆட்சியாளர்கள்தான் செய்தல் வேண்டும். பிறவற்றைப் பொதுமக்கள், தக்கார்கள், பெரியார்கள் நாட்டுக்காகச் செய்தல் கூடும்.

பகைவர்களைப் பற்றிப் பல அதிகாரங்கள் பொருட்பாலில் கூறப்பட்டுள்ளன. போர் முறைகளைப் பற்றியே நட்பு, பகை, துணை, பிறவும் பொருட்பாலில் தனிச்சிறப்பாக நன்கு இடம் பெற்றுள்ளன. "வலியறிதல், காலமறிதல், இடமறிதல்" முதலான அதிகாரங்கள், பிற நாட்டின்மீது படையெடுப்பதைப்பற்றிப் பொதுவாகக் கூறுகின்றன. பிறர் நம்மீது படையெடுத்துத் தாக்குவதைத் தடுத்துப் போர்செய்வதை 'அரண்' என்ற அதிகாரம் கூறுகிறது.

இவ்வாறு, பாகுபாடுகளை நன்கு புரிந்து கொண்டால்தான்
ஆசிரியர் உள்ளத்தினை நாம் அறிந்து நன்கு தெளிய முடியும்.

'துறவறம்' தனி உலகமாக அமைக்கப்பட்டுள்ளது. இது பதின்மூன்று அதிகாரங்களைக் கொண்டது. விரதம், ஞானம் என்ற இரண்டு பிரிவுகள் துறவறத்தில் கூறப்பட்டுள்ளன.

**விரதம்** (நோன்பு)

1 அருள் உடைமை
2 புலால் மறுத்தல்
3 தவம்
4 கூடாவொழுக்கம்
5 கள்ளாமை
6 வாய்மை
7 வெகுளாமை
8 இன்னாசெய்யாமை
9 கொல்லாமை

**ஞானம்**

10 நிலையாமை
11 துறவு
12 மெய்யுணர்தல்
13 அவாவறுத்தல்

அறத்துப்பாலில் கடைசி அதிகாரமாக 'ஊழ்' அமைந்துள்ளது. இது தனிச்சிறப்பு வாய்ந்தது.

தவத்தினை மேற்கொண்ட துறவிகள் மிகப் பெரிய ஆற்றல்களைப் பெறுவார்கள். கடுமையான நோன்புகளைப் பின்பற்றித் . தவம் செய்வதால் அவர்கட்கு மிகப் பெரும் ஆற்றல்கள் (சக்திகள்) உண்டாகிவிடும். அவர்கள் பெறுகின்ற ஆற்றல்களைக் கூறுகின்ற சில இடங்களாவன :

'ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்' 264
'வேண்டிய வேண்டியாங்கு எய்தலால்' 265
'மன்உயிர் எல்லாம் தொழும்' 268
'கூற்றம் குதித்தலும் கைகூடும்' 269

இவ்வாறாகத் தவம் செய்தவர்கள் பறபல ஆறறல்களைப் பெற்று உயர்வார்கள். அந்தத் தவம், தவ ஆற்றல் சிதைவுறா வண்ணம் அவர்கள் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். மனத்தில் நினைத்த இன்பமெல்லாம், செல்வமெல்லாம் அவர்கள் எண்ணிய மாத்திரத்தில் அடையக்கூடும். விரதம் (நோன்பு) என்ற ஒன்பது அதிகாரங்களிலும் இவை கூறப்படுகின்றன.

உலகில் சொல்லப்படும் பிற கடுமையான நோன்புகள் அனைத்தும், இந்த **ஒன்பது** நோன்புகளில் அடங்கும். வேண்டியதை வேண்டியபடியே அடைகின்ற ஆற்றல்களைப் பெற்ற பின், அந்த இன்பச் செல்வங்கள் அனைத்தையும் வேண்டாம் என எறிந்துவிட வேண்டும்.

அனுபவிக்கக் கூடிய செல்வங்களைப் பெற்று இன்புற ஆற்றலிருந்தும், அவற்றை வெறுத்து ஒதுக்கிய பிறகுதான், ஞானம் பிறக்கும்; இதுவே இறைத் தன்மையுடன் ஒன்று படுகின்ற பேரின்ப நிலையாகும். இதனை, 'ஞானம்' என்ற பகுதியில் இருக்கின்ற நான்கு அதிகாரங்களான நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவா அறுத்தல் ஆகியவை கூறுகின்றன.

இவையனைத்தும் பற்றற்ற ஞானத் துறவிகளே பின்பற்ற வேண்டியவை. உலகியலில் வாழ்கின்ற இல்லறத்தார் பின்பற்றப்பட வேண்டியவை யல்ல; இவற்றில் உள்ள கருத்துச் செறிவும் ஆழ்ந்த உண்மைகளும் அனைவரும் கற்றுத் தெரிந்து கொள்ள வேண்டியவை.

இல்லறத்தார்க்கு எளிமையான தன்மைகள், குணங்கள் கூறப்பட்டுள்ளன. இவை யெல்லாம், கடுமையான நோன்புகளை மேற்கொண்டுள்ள தவத்தினர்க்கு இயல்பாகவே இருப்பனவாகும்.

தொடர்பு உள்ளவர்களிடம் காட்ட வேண்டிய அன்பு இல்லறத்தில் கூறப்பட்டது; அவ்வளவு இருந்தாலே சிறப்பாகும். உலகிலுள்ள உயிர்கள் அனைத்திடத்தும் கருணை காட்டுவது 'அருள் உடைமை'யாகும். எனவேதான், இது துறந்தார்க்குக் கூறப்பட்டது.

மனைவி மக்கள் உற்றார் உறவினர் அக்கம் பக்கத்தார் இடத்தில் கூட அன்பு காட்டத் தெரியாதவர்கள் 'அருளுடைமை'யினைப் பின்பற்ற முடியாதென்பது உலக இயற்கையின் இலக்கணமாகும். 'இல்லறத்திற்கு அன்புடைமைபோல, துறவறத்திற்கு அருளுடைமை சிறந்ததாகும்' என்று, தலைசிறந்த உரையாசிரியர் **பரிமேலழகர்** கூறுவது கருதத் தக்கது.

அடுத்து வருகின்ற அதிகாரம் ஊன் உண்ணுதலை ஒழிப்பதாகும்.'கொலைப்பாவத்தைப் பின்னும் உளது ஆக்கலின் அதற்குக் காரணம் ஆதலையும்,...ஊன் உண்டல் அருளுடையார்க்கு இயைவதன்று ஆகலின் அதனை விலக்குதற்கு, இஃது அருளுடைமையின் பின் வைக்கப்பட்டது' என்ற விளக்கத்தினை உரையாசிரியர் பரிமேலழகர் எடுத்துரைக்கின்றார்.

புலால் உண்ணாதிருத்தலை ஒரு சிலர் பரம்பரைப் பழக்கம் காரணமாகக் கொண்டிருக் கலாம். ஆதலால், இப்பழக்கம் அருளுடைமை காரணமாக வந்ததென்று கொள்ளுதலாகாது. உலகில் வாழும் உயிர்கள் அனைத்தின் மேலும் கொண்ட அருளுடைமையின் காரணமாக உண்டாவதுதான் புலால் மறுத்தலாகும்.

புலால் உண்ணாதிருத்தல் ஓர் அறமாகும். உயிர்கள் மீது அன்பு, கருணை, அருள் இல்லாதவர்கள் அப்பழக்கத்தினால் பயனடைதல் இயலாததாகும்.

''ஞானம் இல்லாதவன் மெய்ப்பொருளினைக் கண்டான் என்று கூறுதல் எவ்வளவு அறியாமையோ, அதுபோல அருளில்லாதவன் அறம் செய்கின்றான் என்று நினைப்பதாகும்'' என்ற கருத்தினை, 'புலால் மறுத்தல்' அதிகாரத்திற்கு முன்னதாக உள்ள 'அருளுடைமை'

அதிகாரத்தில் ஆசிரியர் வள்ளுவனார் கூறி வைத்தார்.

> தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
> அருளாதான் செய்யும் அறம். **249**

'பெண் காமுற் றற்று' (402) என்பதையும் இங்கு ஒப்பிட்டு மகிழலாம். ஆதலால், அருள் ததும்பும் உள்ளம் உள்ளவர் செய்யும் அறமே அறமாகக் கருதப்படும் என்பதாயிற்று. **'புலால் மறுத்தல்' என்ற பழக்கம் நல்லது என்ற கொள்கையினால், அப்பழக்கம் கொண்டவர்கள் எல்லாம் அறமுடைய நல்ல மனம் கொண்டவர்கள் என்று கூறிவிடக்கூடாது.** ஒருசில விதிவிலக்குகள் இருக்கலாம்.

'புலால் மறுத்தல்' பழக்கத்திற்கு மாறுபட்டவர்கள் எல்லாம் தீயமனம் படைத்தவர்கள் என்று கூறுதல் முற்றிலும் தவறானதாகும். தவம் செய்யும் உடம்பிற்குப் புலால் உண்ணுதல் மிகவும் தீமை பயப்பதாகும். 'உலகப் பொதுமறை' அருளிய ஆசிரியர் வகுத்துக் கூறிய இல்லற துறவற வேறுபாடுகள் நன்கு புரிந்து கொள்ளற்பாலது.

அடுத்துத் 'தவம்' என்ற அதிகாரம்; இது கடுமையானதாகும். உண்டி சுருக்குதல், வருகின்ற துன்பங்களையெல்லாம் பொறுத்துக் கொள்ளுதல் என்பதே தவம். முற்றும் துறந்த முனிவர்கள் தவத்தினை மேற்கொண்டு நோன்பு நோற்றாலும், சிற்றின்ப வாதனை வந்து அவர்களைக் கெடுக்கும். துறவிகள்போல் காட்சியளித்துத் தீமை செய்பவர்களைக் 'கூடா வொழுக்கம்' அதிகாரம் கூறுகிறது. 'பிறனில் விழையாமை' இல்லறத்தார்க்குக் கூறப்பட்டது.

மனத்தாலும் பிறர் பொருளைக் களவு செய்ய நினைக்கக் கூடாது. களவு செய்யக் கருதுதலும் **செய்தலோடு ஒக்கும்** என்கிறார். உலகச் சூழ்நிலையில் இருப்பவர்கள் இக்குற்றத் திற்கு ஆளாகக் கூடும். ஆதலால் அறவே நீக்க, 'கள்ளாமை' இங்கு வைக்கப்பட்டது. நற்பண்புகள் அனைவர்க்கும் பொருத்தமே என்பது பொது இலக்கணமாகும். இல்லறத்தார்க்குக் கூறிய 'வெஃகாமை' அதிகாரம் போன்றவையும் சிந்திக்கத் தக்கது.

அடுத்து வருகின்ற 'வாய்மை' என்பது மெய்யினது தன்மை யாகும். இது பெரும்பான்மை **காமம்** பற்றியும், **பொருள்** பற்றியும் நிகழ்வதாகும். துறவிகள் **அணுவளவும் தவறாமல்** இவ்விரதத்தினைப் பின்பற்றுதல் வேண்டும். உலகியல் துறையில் வாழ்கின்ற இல்லறத்தார் **இயன்றவரை** பின்பற்றுதல் நலமாகும். பலதிறப்பட்ட குணங்கள் நிறைந்த மக்களிடையே வாழ்கின்ற இல்லறத்தார் கடுமையான நோன்புகள் நோற்றல் அரிது' இல்லறத்தார்க்கு எளிமையான, 'இனியவை கூறல்', 'புறங்கூறாமை', 'பயனில சொல்லாமை, முதலியன கூறப்பட்டன. இவற்றை இல்லறவியலில் காண்க.

தவம் செய்து ஞானம் பெற்றுப் பேரின்ப நிலை யடைகின்ற தன்மையினை, **தானம்** செய்து வாழ்கின்ற இல்லறத்தார் அடைகின்றனர் என்பது முடிவான கருத்தாகும்.

அடுத்துக் கூறப்படுவது 'வெகுளாமை' எனும் அதிகாரம். உலகியல் வாழ்க்கையில் இருப்பவர்கள் இதனை அறவே பின்பற்ற இயலாது. எத்தனையோ சூழ்நிலைகளில் கோபம் தவிர்க்க முடியாததாகிவிடும். உலகப் பற்றற்ற - தொடர்பில்லாத - முனிவர்களே இந்த நோன்பினை முழுமையாகச் செய்ய இயலும். 'கூடுமானால் இல்லாதிருத்தல் நன்மை' என்று அவர், **புணரின் வெகுளாமை நன்று** (308) என்றார். தவமேற்கொண்டவர்களாலேயே, சில நேரங்களில் சினத்தைத் தவிர்க்க முடியாமற் போகும் என்பதும் தெரிந்ததே.

'இன்னா செய்யாமை' என்ற அதிகாரம் பின்னர் கூறப்பட்டது. இல்லறத்தார்க்குத் 'தீவினையச்சம்' கூறியது போலத் துறவறத்தார்க்கு 'இன்னா செய்யாமை' சொன்னார் என்று கொண்டாலும், 'இன்னா செய்யாமை' என்பது, தவத்தின் வலிமையினால், யோக சித்திகளால்

பெற்ற வன்மையினைக் கொண்டு பிற உயிர்கட்குத் தீமை செய்யக் கூடாது என்று கொள்வதே பெருஞ் சிறப்பாகும்.

விரதம் (நோன்பு) என்ற இப்பகுதியின் இறுதி அதிகாரம் 'கொல்லாமை'; அதாவது ஐயறிவு உடையன முதல் ஓர் அறிவு உடைய செடி, கொடி, மரம் முதலியன ஈறாக உள்ள உயிர்களை எக்காரணத்தைக் கொண்டும் கொல்லுதலைச் செய்யாமை! உலக வாழ்க்கையில் இடத்தினாலும் காலத்தினாலும் சூழ்நிலைகளினாலும் கொல்லுதலை மேற்கொள்வோர் உண்டு. ஆகையினால், சிறப்பாக இது துறவிகட்குச் சொல்லப்பட்டது. பிறரும் முடிந்த வரை பின்பற்றுதல் நல்லதே யாகும். ஓரறிவுள்ள உயிரைக்கூடக் கொல்லாதிருத்தல் தவ முனிவர்கட்கே இயைவதாகும்.

ஒன்பது அதிகாரங்களில் கூறப்பட்ட நோன்புகளை நோற்றுத் தூயமனம் ஆன பிறகு ஞானம் உண்டாகும். பின்வரும் நான்கு அதிகாரங்கள் ஞான நிலை அடைந்தவர்கட்கே உரியன.

> *ஆசிரியரின் இப்பாகுபாடுகளை உரையாசிரியர் பரிமேலழகர் நன்கு விளக்கிக் கூறியுள்ளார். உரையாசிரியர், வாழ்ந்த காலத்தின் சூழ்நிலையால் உலகப் பொதுமறைக்கு ஒவ்வாத சிலவற்றைத் தாம் எழுதிய உரைகளில், சில இடங்களில் சொல்லியுள்ளார் என்கின்ற 'நறைபாடு' தவிர, பிற உரை விளக்கங்கள் அனைத்தும் சாலச் சிறந்தவையே.*

# திருவள்ளுவர் வழிபாடு

'திருவள்ளுவர்' என்று கூறுவதும் உலகப் பொதுமறையான திருக்குறளையே குறிக்கும். அவர் நிறைமொழிமாந்தர் ஆதலின், அவருடைய திருவாக்காக அமைந்த சொற்கள் ஆற்றல் நிறைந்தவையாகும். அறமான அச்சொற்களை உள்ளத்தில் நினைத்தாலும் நாவினால் சொன்னாலும் எண்ணத்திற்கு வலிமையை யுண்டாக்கும்; அவை, நன்முறையில் செயல்படுத்தி வாழ்க்கையை முன்னேற்றப் பாதையில் நடத்திச் செல்லும் என்பது திண்ணம்.

ஆதலால், குறட்பாக்கள் கொண்டுள்ள சிறந்தவற்றுள் சில தொடர்களைத் தந்துள்ளோம். இவற்றை நாள்தோறும் நாவினால் சொல்லுதல் வேண்டும். ஒவ்வொரு குறட்பாவினையும் முழுமையாகக் கற்றுணர்வதே சிறப்பு ஆகும். முன்னோடியாக இருக்க வேண்டி எளிமையில் வழி காட்டுவனவாக இவை கொடுக்கப்பட்டுள்ளன. **வழிபாடு** என்பது **நினைத்தலும், சொல்லலும், செயல்படுத்தலும்** ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| ஆதி பகவன் முதற்றே உலகு | 1 | அறத்தான் வருவதே இன்பம் | 39 |
| செயற்கரிய செய்வார் பெரியர் | 26 | செயற்பால தோரும் அறனே | 40 |
| அந்தணர் என்போர் அறவோர் | 30 | அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை | 49 |
| அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை; | | மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை | 57 |
| அதனை மறத்தலின் ஊங்கில்லை கேடு | 32 | மங்கலம் என்ப மனைமாட்சி | 60 |
| அன்றறிவாம் என்னாது அறம்செய்க | 36 | தம்பொருள் என்ப தம் மக்கள் | 63 |

| | | | |
|---|---|---|---|
| அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ் | 71 | யாகாவாராயினும் நா காக்க | 127 |
| அன்புடையர் என்பும் உரியர் பிறர்க்கு | 72 | ஆறாதே நாவினால் சுட்ட வடு | 129 |
| அன்பின் வழியது உயிர் நிலை | 80 | ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும் | 131 |
| மறவற்க மாசற்றார் கேண்மை | 106 | ஒழுக்கம் உடைமை குடிமை | 133 |
| நன்றி மறப்பது நன்றன்று | 108 | ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் | 136 |
| நன்றல்லது அன்றே மறப்பது நன்று | 108 | ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை | 137 |
| எல்லார்க்கும் நன்றாம் பணிதல் | 125 | நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் | 138 |

## 2

| | | | |
|---|---|---|---|
| அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் | 165 | பயவாக் களர் அனையர் கல்லாதவர் | 406 |
| அழுக்கற்று அகன்றாரும் இல்லை | 170 | செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் | 411 |
| வேண்டற்க வெஃகிஆம் ஆக்கம் | 177 | எனைத்தானும் நல்லவை கேட்க | 416 |
| தீதே புறனழீஇப் பொய்த்து நகை | 182 | அறிவு அற்றம் காக்கும் கருவி | 421 |
| சொல்லுக சொல்லிற் பயனுடைய | 200 | நன்றின்பால் உய்ப்பது அறிவு | 422 |
| கண்ணுடையர் என்பவர் கற்றோர் | 393 | நுண்பொருள் காண்பது அறிவு | 424 |
| தொட்டனைத்து ஊறும் மணற்கேணி | 396 | மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு | 425 |
| கற்றனைத்து ஊறும் அறிவு | 396 | அஞ்சுவது அஞ்சாமை பேதைமை | 428 |
| கேடுஇல் விழுச் செல்வம் கல்வி | 400 | அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில் | 428 |

## 3

| | | | |
|---|---|---|---|
| மறந்தும் பிறன் கேடு சூழற்க | 204 | மன நலத்தின் ஆகும் மறுமை | 459 |
| அறிவுடையார் ஆவது அறிவார் | 427 | நல்லினத்தி னூஉங்கும் துணையில்லை | 460 |
| வியவற்க எஞ்ஞான்றும் தன்னை | 439 | உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் | 596 |
| முதலிலார்க்கு ஊதியம் இல்லை | 449 | உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை | 600 |
| மதலையாம் சார்பிலார்க்கு இல்லை நிலை | 449 | அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும் | 611 |
| மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு | 452 | பெருமை முயற்சி தரும் | 611 |
| மனத்தானாம் மாந்தர்க்கு உணர்ச்சி | 453 | மடி உளாள் மா முகடி என்ப | 617 |
| மனந்தூயார்க்கு எச்சம் நன்றாகும் | 456 | பொறியின்மை யார்க்கும் பழியன்று | 618 |
| மனநலம் மன் உயிர்க்கு ஆக்கம் | 457 | அறிவறிந்து ஆள்வினை இன்மை பழி | 618 |

## 4



## 5



## 6

## 7

செய்க பொருளை 759
தார் தாங்கிச் செல்வது தானை 767
தானை தலை மக்கள் இல்வழி இல் 770
பேராண்மை என்ப தறுகண் 773
உறின் உயிர் அஞ்சா மறவர் 778
நிறை நீர நீரவர் கேண்மை 782
நகுதற் பொருட்டன்று நட்டல் 784
புணர்ச்சி பழகுதல் வேண்டா 785
நாடாது நட்டலில் கேடில்லை 791
உள்ளற்க உள்ளம் சிறுகுவ 798
நட்பிற்கு உறுப்புக்கெழு தகைமை 802
எல்லைக்கண் நின்றார் துறவார் 806
சொல் வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க 827
தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் 828
அறிவு இன்மை இன்மையுள் இன்மை 841
இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம் 858
வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக 861
நோவற்க நொந்தது அறியார்க்கு 877
இளைதாக முள்மரம் கொல்க 879
நிழல் நீரும் இன்னாத இன்னா 881
வாள்போல் பகைவரை அஞ்சற்க 882
உட்பகை அஞ்சித் தற்காக்க 883
ஆற்றுவார் ஆற்றல் இகழாமை 891
கெடல் வேண்டின் கேளாது செய்க 893
கூற்றத்தைக் கையால் விளித்தற்று 894
மனை விழைவார் மாண்பயன் எய்தார் 901
பொருட் பொருளார் புன்னலம் தோயார் 914
பொது நலத்தார் புன்னலம் தோயார் 915
தந்நலம் பாரிப்பார் தோயார் 916
நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர் 917
உட்கப்படாஅர் ஒளி இழப்பர் 921
உண்ணற்க கள்ளை 922
நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் 924

## 8

உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் 927
களித்தறியேன் என்பது கைவிடுக 928
வேண்டற்க வென்றிடினும் சூதினை 931
இழத்தொறூஉம் காதலிக்கும் சூது 940
மிகினும் குறையினும் நோய் செய்யும் 941
சலம் பற்றிச் சால்பில செய்யார் 956
நிலத்தில் கிடந்தமை கால் காட்டும் 959
காட்டும் குலத்தில் பிறந்தார் வாய்ச் சொல் 959
நலம் வேண்டின் நாணுடைமை வேண்டும் 960
பெருக்கத்து வேண்டும் பணிதல் 963
சிறிய சுருக்கத்து வேண்டும் உயர்வு 963
குன்றின் அனையாரும் குன்றுவர் 965
மருந்தோ மற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை 968
மயிர் நீப்பின் வாழாக் கவரிமா 969
ஒளி ஒருவற்கு உள்ள வெறுக்கை 971
பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் 972
மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் 973
பணியுமாம் என்றும் பெருமை 978
சிறுமை அணியுமாம் தன்னை வியந்து 978
அற்றம் மறைக்கும் பெருமை 980
சிறுமைதான் குற்றமே கூறி விடும் 980

## 9

கடன் என்ப நல்லவையெல்லாம் 981
குணநலம் சான்றோர் நலனே 982
கொல்லா நலத்தது நோன்மை 984
பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு 984
ஆற்றுவார் ஆற்றல் பணிதல் 985
ஊழி பெயரினும் தாம் பெயரார் 989
உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று 993
பண்பு ஒத்தல் ஒப்பதாம் ஒப்பு 993
நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி 995
பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் 996
கருமத்தால் நாணுதல் நாணு 1011
அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு 1014
நாணால் உயிரைத் துறப்பர் 1017
குலம் சுடும் கொள்கை பிழைப்பின் 1019
சூழாமல் தானே முடிவெய்தும் 1024
குடி செய்வார்க்கு இல்லை பருவம் 1028

சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம் 1031
உழுவார் உலகத்தார்க்கு ஆணி 1032
உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் 1033
பலகுடை நீழலும் தம் குடைக் கீழ்க் காண்பர் 1034
இரவார் இரப்பார்க்கு ஒன்று ஈவார் 1035
உழவினார் கைம்மடங்கின் இல்லை 1036
நிலம் என்னும் நல்லாள் நகும் 1040
நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் 1049
உப்பிற்கும் காடிக்கும் கூற்று 1050
இரப்பான் வெகுளாமை வேண்டும் 1060
தேவர் அனையர் கயவர் 1073
அச்சமே கீழ்களது ஆசாரம் 1075
அறை பறை அன்னர் கயவர் 1076
ஈர்ங்கை விதிரார் கயவர் 1077
சொல்லப் பயன்படுவர் சான்றோர் 1078
கரும்புபோல் கொல்லப் பயன்படும் கீழ் 1078

## 10

அருட் செல்வம் செல்வத்துள் செல்வம் 241
நல்லாற்றால் நாடி அருள் ஆள்க 242
அல்லல் அருள் ஆள்வார்க்கு இல்லை 245
அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை 247
பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை 247
பொருளற்றார் பூப்பர் ஒருகால் 248
பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை 252
அருள் ஆட்சி ஆங்கில்லை ஊன் தின்பவர்க்கு 252
உண்ணாமை உள்ளது உயிர் நிலை 255
உயிர் செகுத்து உண்ணாமை நன்று 259
தவமும் தவம் உடையார்க்கு ஆகும் 262
தவம் செய்வார் தங்கருமம் செய்வார் 266

கூற்றம் குதித்தலும் கை கூடும் 269
நீராடி மறைந்தொழுகும் மாந்தர் பலர் 278
மழித்தலும் நீட்டலும் வேண்டா 280
நிற்கும் களவறிந்தார் நெஞ்சில் கரவு 288
கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை 290
தன் நெஞ்சு அறிவது பொய்யற்க 293
பொய்யாமை அன்ன புகழில்லை 296
புறம்தூய்மை நீரால் அமையும் 298
அகம் தூய்மை வாய்மையால் காணப்படும் 298
மறத்தல் வெகுளியை யார் மாட்டும் 303
தன்னைத்தான் காக்கின் சினம் காக்க 305
காவாக்கால் தன்னையே கொல்லும் சினம் 305

# கடவுள் வாழ்த்து

## 1 இறைவழிபாடு

உலகம் **ஆதி பகவனை** முதன்மையாக உடையது.

அவன் தூய **அறிவானவன்;** அவனே வாலறிவன். அவனுடைய நல்ல தாள்களை வணங்குவோமாக. கற்றறிந்ததனால் ஆன பயன் வால் அறிவனைத் தொழுதலாகும்.

அன்பினால் நினைப்பவரது **மனமாகிய தாமரை** மலரில் ஆதிபகவன் வீற்றிருக்கின்றான்; அவன் திருவடிகளை இடைவிடாமல் நினைத்தல் வேண்டும். அவ்வாறு நினைப்பவர்கள் பேரின்ப உலகில் என்றென்றும் வாழ்வார்கள்; இறைவன் திருவடிகளை இடைவிடாமல் நினைப்போமாக!

**வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாதவனுடைய** திருவடிகளை நினைப்பவர்களுக்கு எக்காலத்திலும் துன்பங்கள் இல்லை.

**இறைவனுடைய** உண்மையான புகழை விரும்பினவர்களிடத்தில் மயக்கம் தருகின்ற நல்வினை தீவினை ஆகிய இரண்டும் சேருவதில்லை; எப்பொழுதும் இறைவனைச் சிந்தித்திருப்போமாக!

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பொறிகளின் வழியாக வரும் **ஆசைகளை அறுத்தவன் இறைவன்;** அந்த இறைவனது மெய்யான ஒழுக்க நெறியில் வழுவாமல் நடப்பவர்கள் எக்காலத்தும் ஒருதன்மையராய் சிறப்புடன் வாழ்வர்; ஒழுக்க நெறியில் நின்று வாழ்வோமாக!

எல்லா வகையிலும் **தனக்கு உவமை இல்லாதவன்** இறைவன். அவன் திருவடிகளை நினைத்து வாழ்பவர்களால்தான் மனக் கவலையைப் போக்க முடியும்; மற்றவர்களால் இயலாது. இறைவனை நினைந்து நினைந்து மனக்கவலையைத் தீர்ப்போமாக!

**அறக்கடலாக இருக்கும் அந்தணனே இறைவன்; அறமே இறைவன்.** அவன் திருவடிகளை நினைத்தவர்களால்தான் பொருள், இன்பம் என்கின்ற ஏனைய கடல்களைக் கடக்க முடியும்; ஏனையோர்களால் கடக்க முடியாது. அவனடி தொழுது அவற்றைக் கடப்போமாக!

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து பொறிகளும் தத்தமக்குரிய உணர்தல், சுவைத்தல், பார்த்தல், முகர்தல், கேட்டல் ஆகிய புலன்களைக் கொள்ளாதவை பயனற்றவையாம். அதுபோல் சிந்திப்பவர்களுக்கு **எளிமையான குணங்களையுடைய இறைவ னுடைய** தாள்களை வணங்காத தலைகள் பயனற்றவை ஆகும்; **மேலான குணங்களான வனை** நினைத்து வாழ்வோமாக!

இறைவனின் திருவடிகளாகிய புணையை எப்போதும் சிந்தித்திருப்பவர்கள் பிறவி யாகிய பெரிய கடலை நீந்திவிடுவார்கள். அவ்வாறு இல்லாதவர்கள் பிறவிக்கடலை நீந்த மாட்டார்கள்; நீந்தாமல் உழலுவார்கள். இறைவனைச் சிந்தித்து பிறவிக் கடலை நீந்து **வோமாக.**

## 2 இறைவன் இலக்கணம்

இறைவன் ஆதி பகவன்; இந்த உலகம் ஆதி பகவனாகிய முதல்வனை உடையது. அவன் தூய அறிவானவன்; அன்பர்களின் தூய மனத்தில் இருப்பவன்; விருப்பும் வெறுப்பும் இல்லாதவன்; அதாவது வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து பொறிகளின் வழியாக வரும் ஆசைகளை அறுத்தவனே இறைவன்; அவன் மெய்யான ஒழுக்க நெறியில் நிற்பவன்; தனக்கு உவமை இல்லாதவன்; அறக் கடலாகிய அந்தணன்; எண் குணங்களை யுடையவன்.

**தொழுதல், சேர்தல், புரிதல், நிற்றல், வணங்குதல்** என்பவற்றிற் கெல்லாம் **நினைத்தல்** என்பதுதான் முழுப்பொருள்.

## 3 அந்தணர்கள்

அந்தணர்கள் என்பவர்கள் அறவோர்களாவர். அவர்களே முனிவர்கள் எனப்படுவர். நீத்தார் என்பவர்களும் அவர்களேயாவர். அவர்கள்தாம் குணம் என்னும் குன்றேறி நின்றவர் என்று கூறப்படுவர். அவர்கள் நிறைமொழி மாந்தராவர்.

அறக்கடலாகிய அந்தணனே இறைவன். இறைவன் அந்தணன் என்ற சொல்லால் அழைக்கப்படுகிறான். அறக்கடல் என்ற முறையினால் அந்தணத் தன்மை விளக்கப்படுகிறது.

### மாசு இன்மை

மனத்தில் மாசு (தீய குணங்கள்) இல்லாமல் இருத்தல் அறம் ஆகும். மாசு என்பது, பொறாமை, பேராசை, கோபம், இழிசொல் பேசுதல் என்பன போன்ற தீயகுணங்கள் இல்லாமல் இருத்தலாகும். இவ்வாறு மனத்தை வைத்துக் கொண்டிருப்பதே அறம் ஆகும். இவ்வாறு தூய்மையான ஒழுக்கத்தில், மனத்தை வைத்துக் கொண்டிருக்காமல், வெளிப் பகட்டாகச் செய்யப்படுகின்ற செயல்களெல்லாம் அறச் செயல்கள் ஆகா; ஆரவாரத்தன்மை களே ஆகும்; போலித்தனமான பயனற்ற ஆடம்பரச் செயல்களேயாகும்.

அறம் என்பது இன்னது என்று விளக்கியும் அவ்வாறு மனம் தூய்மையில்லாமல் செய்யப்படுவன அறம் ஆகாதென்றும், அவை ஆரவார வெளிவேடச் செயல்களே என்றும் இக்குறட்பா கூறுகின்றது.

மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற 34

மனத்தில் தூய்மையான எண்ணங்களை வைத்துக் கொள்ளாமல், மனத்தில் பொறாமை, வஞ்சனை, சூது, பிறரை இகழ்தல் முதலிய தீய எண்ணங்களை [மாசுகளை] வைத்துக் கொண்டு, பிறர் தம்மைத் தூய்மையானவர்கள் என்று நினைத்துக் கொள்ள வேண்டுமென்று நடத்தல் தீமையான செயலாகும்.

### மறைந்து ஒழுகுதல்

ஒருசிலர் தூய்மையும் பெருமையும் உடையவர்போலத் தண்ணீரில் நீராடிக் காட்டுவர். இவ்வாறான வேடத்தில் மறைந்து வாழும் மக்கள் இவ்வுலகில் பலர் இருக்கிறார்கள் என்று ஒரு குறட்பா குறிக்கின்றது.

மனத்தது மாசுஆக மாண்டார் நீராடி
மறைந்துஒழுகும் மாந்தர் பலர் 278

### ஆதியானவன்

அறநெறியினை உலகிற்கு எடுத்துக் கூறுபவர் முனிவர் எனப்படும் அந்தணர்களே ஆவர். ஆதலால்தான், நாட்டுத் தலைவனாகிய மன்னவன் அந்தணர்களையும் அறத்தையும் காப்பாற்றுகிற **அடிப்படையானவன் ஆகிறான்** என்ற குறிப்பில் குறட்பா அமைந்துள்ளது.

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல் 543

மனம் தூய்மையாக இருக்க வேண்டும் என்பதுதான் **அறத்திற்கு** அடிப்படை ஆயிற்று. இறைவன் 'தூய்மையான மனத்தில்தான் இருப்பான்' என்பதனை **மலர் மிசை ஏகினான்** என்கிற விளக்கம் தெளிவுப்படுத்துகிறது. 'உண்மையான இன்பம் யாது?' என்று கேட்டால், தூய்மையான மனத்தால் — அறத்தினால் — வருகின்ற இன்பமேயாகும். இந்த உண்மையை, **அறத்தான் வருவதே இன்பம்** (39) என்ற தொடர் நன்கு எடுத்துக்காட்டுகிறது. மனம் தூய்மையாக இருத்தலாகிய அறத்தைப் பின்பற்றாமல், மனம் போன போக்கில் தீய ஒழுக்கத்தில் — தீய வழிகளில் செயல் புரிந்து கொண்டு, அதனால் இன்பம் பெறுவதாக நினைப்பதெல்லாம் இன்பமும் ஆகாது; அறமும் ஆகாது. அவை புகழுக்கும் உரியன அல்ல.

அறத்தான் வருவதே இன்பம் மற்றுஎல்லாம்
புறத்த புகழும் இல 39

உயர்ந்த ஒழுக்கத்தில் இருப்பதுதான் இறைவழிபாடு எனப்படும். அறத்தின் வழி இருப்பதென்பது மனத்தில் தீய எண்ணங்கள் இல்லாதிருப்பதேயாகும். நாம் அறத்தன்மையுடைய அந்தணர்கள் வழி நிற்போமாக!

## 4 என் குணத்தான்

முனிவர்களின் சிறப்பினைக் கூறுகின்றபோது 'குணம் என்னும் குன்று ஏறி நின்ற வர்கள்' (29) என்று எளிமையாகக் கூறப்பட்டது. இறைவனை விளக்கிக் கூறுகின்ற போது, **என் குணத்தான்** என்றும் கூறுகின்றார்.

'வேண்டுதல் வேண்டாமை இலான்' (4) என்று சொல்லுகின்றபோது, இறைவனின் குணத்தன்மை எடுத்துக் காட்டப்பட்டது. ஐம்பொறிகளினால் வருகின்ற ஆசைகள் அனைத்தையும் அறுத்தவன் இறைவன் என்றும், அவன் வழியே 'பொய்தீர் ஒழுக்கநெறி' (6) என்றும் கூறப்பட்டு, முதன்மையான குணச்சிறப்பு விளக்கப்பட்டது.

இறைவழிபாடு, இறைவனையே சிந்தித்திருக்கும் நெறியில் நிற்பவர்கள் அடைகின்ற பயனைக் கூறுகின்ற பொதுப்படையான முறையில், **நீடுவாழ்வார், இடும்பையில, இருவினையும் சேரா, மனக்கவலை மாற்றல், பிற ஆழிகள் நீந்தல், பிறவிப் பெருங்கடல் நீந்தல்** என்பனவற்றால் எடுத்துக்காட்டப்பட்டன.

### தனித் தன்மை

இறைவனின் தனிப் பெருஞ் சிறப்பினை உணர்த்துவனவாக, **ஆதிபகவன் முதற்றே, வால் அறிவன், ஏகினான், தனக்கு உவமை யில்லாதான், அறவாழி அந்தணன், எண்குணத்தான்** என்பன அமைந்துள்ளன என்றும் குறிப்பிடலாம். மேலே கூறப்பட்டவை அனைத்தும் பொதுவாகச் சிந்தனைக்கு உரியன என்றே கொள்ளப்பட வேண்டும்.

இறைவன் ஒருவனே என்று சிறப்பித்துக் கூற வேண்டியே, 'தனக்கு உவமை இல்லாதான்' என்று கூறினார். அந்த ஒருவனுக்கு விளக்கம் சொல்லுகின்றபோது, குணத்தின் தன்மையானவனே இறைவன் என்பதனை விளக்க வேண்டி **மனத்தில் இருப்பவன்** என்று கூறினார். 'மலர் மிசை ஏகினான்' (3) என்பது இவ்வுண்மையினைப் புரிய வைக்கின்றது. உலக மக்கள் அனைவருக்கும் பொதுவான இறைவனை வழிபடச் செய்ய வேண்டும் என்பதனைக் கருதியே, குணத்தின் தன்மையனைத்தையும் இலக்கணமாக அமைத்து இறைவனுக்கு விளக்கம் தந்தார்.

### உருவமில்லை

எந்த ஓர் உருவத்தையும் திருவள்ளுவர் குறிப்பிடவில்லை. உருவத்தை அமைத்துக் காட்டினால், அதற்கேற்ப மற்றொன்றினைக் காட்டி 'உவமை' சொல்லவும் கூடும். ஆனால், இறைவனோ, தனக்கு உவமை இல்லாதவன் ஆகின்றான்.

ஒழுக்கத்தில் சிறந்த தூய்மையான மேலோர்களை நாம் பார்த்த போது கைகுவித்து வணங்குகின்றோம். இன்றும் இது நடைமுறையில் பழக்கமாக இருக்கின்றது. ஏன்? அவருடைய உருவத்திற்காகவா அவரை வணங்குகிறோம்? இல்லையே! குணத்திற்காகத்தான் என்பதை அறிகின்றோம். சிந்திக்க வேண்டும்; இது குறிப்பான எடுத்துக்காட்டாகும்.

'நினைப்பவர் உள்ளத்தில் இருப்பவன் இறைவன்' என்று கூறிய முறை குணத் தன்மையினையே எடுத்துக் காட்டும். **தூய அறிவு, அறக் கடல், பொய்தீர் ஒழுக்கம்** ஆகிய இம்மூன்றும் எளிய அரிய குணங்களை நிறுவுகின்றன.

> கோளில் பொறியில் குணம்இலவே எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை 9

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு 424

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு 760

எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும் 548

எண்பதத்தால் எய்தல் எளிதுஎன்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு 991

மேலே சில குறட்பாக்கள் குறிக்கப்பெற்றன. இவை 'எண்' என்ற சொல்லின் கருத்தினை விளக்குவனவாகும். பிறவற்றையும் இவ்வாறே கண்டு தெளிதல் வேண்டும்.

## உருவகப்படுத்தும் பழக்கம்

குணத்தினைக் கொண்டு உருவகப்படுத்திப் பேசுதல் தொன்று தொட்டு வருகின்ற பழக்கமாகும். இதை மரபு என்று கூறுவார்கள். '**காமன்**' என்கின்ற சொல் உயர்திணை ஆண்பாலாகச் சொல்லப்பட்டது. 'காமம்' என்பது இன்ப உணர்ச்சி. அதையும் ஒரு குணமாகக் கொள்ளுகின்றோம். அக்குணத்தைக் கொண்டு உருவகப்படுத்திக் 'காமன்' என்பதாகக் கூறுகின்றனர். அவ்வாறு உருவம் கொண்ட ஒருவன் இல்லை யென்றாலும், உருவகப்படுத்திக் கூறுதல் மரபாகும். திருவள்ளுவர் கூறுகின்ற ஓர் இடம்:

பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்று ஒழுகலான் 1197

இங்குக் **காமம்** என்று சொல்லப்படுகின்ற ஒரு குணம் உருவகப்படுத்தப்பட்டுள்ளது. இதையே குணம், குணி என்று கூறுவார்கள்.

நிலத்தைக் கூறுகின்றபோது ஒரு பெண்ணாகக் கூறுகின்றார்; "**நிலம் என்னும் நல்லாள்**" (1040) என்பதே அவர் வாக்கு. 'நாணம்' என்பது அருமையானதொரு குணம்.

இக் குணம் பெண்ணாக உருவகப்படுத்தி "**நாண் என்னும் நல்லாள்**" (924) என்று கூறியுள்ளார். இவ்வாறே பிற இடங்களிலும் கண்டு தெளிதல் வேண்டும்.

## இயற்கை — ஊழ்

நியதி, ஊழ், பாழ், முறை, உண்மை, தெய்வம், விதி, என்பன ஒரு பொருளினையே குறிக்கும் சொற்களாகும். உலகில் இயல்பாக நடைபெறக்கூடிய **விதி** ஒன்று உண்டு. இதனையே **ஊழ்** என்று சொல்லுவார்கள். **இயற்கை முறை** என்றும் சொல்லப் படும். இவ்வாறு ஊழ் என்றும் இயற்கையென்றும் அமைக்கப்பட்ட விதி முறைகளின்படி ஒருவருக்கு இன்ப துன்பங்கள் உண்டாகும். செயற்கை யென்பது முயற்சி யெனப்படும். நம்முடைய ஊக்கத்தினாலும் முயற்சியினாலும் நடைபெறும் செயல்கள் செயற்கையானவை. பிறவியின் வினைப்பயன் என்பதும், இயல்பாகவே பிறந்து வரும் பிறவிகளில் தொடர்ந்து வரும் வினைகள் என்பதும், உலக இயற்கையில் இயல்பாக இருந்து வரும் இலக்கணமாகும். இவை இயற்கையின் விதிமுறைகளாகும்.

**அனுபவித்தல்**

ஊழ் என்பதன் விதி முறைச் செயல்களைப் பலவாக **ஊழ்** என்ற பகுதியில் ஆசிரியர் தெளிவாகக் கூறிவிடுகின்றார். பொருளின்பத்தை நுகர்வதற்கு ஊழ் — **விதி** இருந்தாக வேண்டும். நிறைந்த செல்வத்தைப் பெற்றிருந்தாலும் அதை ஐம்பொறிகளாலும் நுகர்ந்து அனுபவிப்பதற்கு ஊழ்வினை – விதி இருந்தாக வேண்டும். ஊழ் **வினை** இல்லாதவர்க்கு இன்பம் நுகரும் தன்மை கிட்டாது. இன்பம் நுகர்வதற்கென்று விதிமுறை வகுக்கப்பட்டு அமையா விட்டால், கோடியளவில் பொருள் வைத்திருப்பவர்களும் அதை நுகர முடியாது என்கிறது குறட்பா.

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது 377

இக் குறட்பாவில் ஊழ் வினையின் அமைப்பைக் கூறவந்த ஆசிரியர் திருவள்ளுவனார், அந்த ஊழினை உருவகமாகச் சொல்லி **வகுத்தான்** என்று உயர் திணையாகக் கூறினார். இது ஒரு மரபு. அப்படி ஒருவன் இருந்து கொண்டு வகுத்து அமைக்கின்றான் என்பது பொருளல்ல; இயற்கையின் விதியைக் கூற வந்த ஆசிரியர் குணத்தன்மையினை விளக்கினார். காமம் என்ற உணர்ச்சியினைக் காமன் என்று சொன்னது போல, இயற்கையின் நிகழ்ச்சியினைப் பகுப்பு — வகுப்பு முறையினை உருவகப்படுத்தி **வகுத்தான்** என்று கூறினார்.

''வேண்டுதல் வேண்டாமையிலான்'' என்ற இறைவன் இலக்கணத்தோடு இவைகளையெல்லாம் ஒன்றுபடுத்திக் கருதுதல் கூடாது; கருதினால் அது குற்றமாகும். இறைவனைப் **பற்று அற்றான்** (350) என்று அவர் கூறுவதைக் கவனிக்க வேண்டும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு 350

என்கின்ற குறட்பாவும் இறைவனின் குணங்களை — இறைத் தன்மையை எடுத்துக் கூறுவதாகும். அத்தன்மையோடு, ''இப்படி இப்படி வகுத்து வைத்தான்'' என்ற ஊழ்வினைச் செயல்களை — வினைப் பயன்களை ஒன்றுபடுத்தி மயக்கம் கொள்ளுதல் கூடாது.

அதுவே போன்று **உலகு இயற்றியான்** (1062) என்பதையும் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். இந்த உலகம் இயற்கையின் நியதியால் உண்டாக்கப்பட்டதாகும். நிலம், நீர், தீ, காற்று, விண் என்று சொல்லப்படும் ஐந்து இயற்கையின் கூறுபாடுகளால் அமைக்கப்பட்டதாகும்: இதனை **இயற்கையின் விளைவு** என்றும் கூறுவார்கள்.

**உலகம்**

ஆதலால்தான் 'கடவுள் வாழ்த்து' என்ற பகுதியில் முதலாவது குறட்பாவிலேயே 'இறைவன் இந்த உலகத்தைப் படைத்தான்' என்று கூறாமல், **இந்த உலகம் ஆதிபகவனாகிய முதலை உடையது''** என்று அமைத்தார். அத்தகைய இறைவன் நினைப்பவர்கட்குத் துன்பத்தினைப் போக்குபவன், மனக் கவலை நீக்குபவன் என்றெல்லாம் விளக்கங்களை ஆசிரியர் தருகின்றார்.

அப்படியிருக்க உலக மக்களில் பலர் அறியாமையால், இந்த உலகத்தினை ஒருவன் உண்டாக்கினான் (இயற்றியான்) என்றும், அவனே ''சிலர் பிச்சையெடுத்துத்தான் வாழ வேண்டும் என்று விதித்து விட்டான்'' என்றும் மயங்கி நினைத்து இருப்பார்களேயானால், ''அப்படி உலகத்தைப் படைத்தவனே அழியட்டும்'' என்றும் கூறினார். அவ்வாறு ஒருவன்

இருந்து செய்யவில்லை யென்பதையும், இந் நிலைகளெல்லாம் இயற்கையின் விதிமுறை யென்பதையும் குறிப்பால் காட்டி உய்த்துணர வைத்தார். தம் தம் வினையான் வரும் (63) என்பதும் இத்தகையதே யாகும்.

இயற்கையால் நடைபெறுகிற ஊழ் முறைகளையும், முயற்சி யென்னும் செயற்கை யால் நடத்தப்பட வேண்டிய செயல் முறைகளையும் ஆசிரியர் எடுத்துக் காட்டுகின்றார். அவற்றுள் சில :

இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு 374

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல் 637

**பல பிறவிகள்**

உலகில் கண்டறிகின்ற பிறவிகள் பலவாயும், ஓரறிவு முதற்கொண்டு ஆறறிவு படைத்த மனிதப் பிறவிவரை இருப்பனவாயும், அவைகளுக்குள்ளே எண்ணிறைந்த வேறு பாடுகள் காணப்பட்டும், உயர்ந்த மக்கட் பிறவியில் இன்ப துன்பங்கள் நுகர்வதிலும் பிற அமைப்புகளிலும் வேறுபாடுகள் இருப்பனவாயும் உள்ளன. இவை அனைத்தும் இயற்கை யினால் உண்டானவையே. இதையே **வினைப் பயன்** என்றும் குறிப்பிடுவர். இவையெல்லாம் 'பற்றற்றான்', 'வேண்டுதல் வேண்டாமையிலான்' என்பன போன்ற ஒப்பற்ற தன்மைகளால் விளக்கப்பெற்ற **ஆதிபகவனாகிய ஒருவனால்** நியமிக்கப்பட்டவை அல்ல; இறைவன் தூய்மையுடன் நினைப்பவர்களுக்கு என்றென்றும் இன்பம் நல்கி, கவலை போக்கி, பிறவி அறுத்து ஒரு தன்மையராக நீடுவாழ்கின்ற பேற்றினை அளிப்பவனாவான்.

**வினைப்பயனால் தொடர்ந்து வருவனவற்றையெல்லாம் ஊழ் என்றும் இயற்கையின் நியதி என்றும் அறிதல் வேண்டும்.**

**கூற்றுவன்**

காமன், இயற்றியான், வகுத்தான் என்று குணமாகிய தன்மைகளை உருவகப் படுத்திக் கூறுவது போலவே, ஆசிரியர் **கூற்று** என்றும் கூறுவார். உலக நடை முறையில் 'யமன்' என்று கூறுவார்கள். உயர்திணையில் **கூற்றுவன்** என்று கூறுவர். சில குறட்பாக்களை மட்டும் எடுத்துக் காட்டுகளாகக் கொள்ளலாம்.

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு 269

கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல் 894

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து 1085

உடம்பிலிருந்து உயிரைப் பிரிக்கின்ற நிகழ்ச்சிக்குக் கூறு படுத்துதல் என்பது பொருள். அதனையே கூற்றம் (கூற்றுவன்) என உருவகப்படுத்திக் கூறினார்.

'கூற்றுவன்' என்பவன் ஒருவன் இருப்பதாகக் கூறி, கற்பனையாகப் பேசுவது உலகியல் பழக்கமாகும். பழக்கத்தினை அப்படியே அமைத்துக் காட்டி, உண்மை உரைத்தல் ஆசிரியரின் கோட்பாடாகும்.

அவ்வாறே பிறவற்றையும் கண்டு தெளிதல் வேண்டும். ஒழுக்க நெறிகள் அனைத்தையும் ஒன்றுபடுத்தி உருவகப்படுத்தி 'ஆதிபகவனுக்கு' விளக்கம் தந்தார். உலகப் பொது மறை ஆதலால், 'எல்லாக் காலத்திற்கும் எல்லா மக்களுக்கும் பொதுத்தன்மையான - நிலைத்து நிற்கின்ற குணங்களாக அமையப் பெற்றவனே இறைவன்' என்ற உண்மையினை ஆசிரியர் விளக்கம் செய்தார்; அவனே எண் குணத்தான் என்றார்: தூய்மையான மனத்தில் அவனை நினைப்பதே வழிபாடு என்றும் கூறினார்.

**மனிதப் பிறவியில் பல பிறவிகள்**

மனிதப் பிறவிக்கென்றே உண்டான அரிய குணங்களில் முதன்மையானது அன்புடைமை என்று கூற வேண்டும். எல்லோரிடத்திலும் அன்பு காட்டிப் பழகுதல் வேண்டும். பேதா பேதம் அகற்றி அன்பு செய்து வாழ்தல் வேண்டும். அவ்வாறு அன்பு இல்லாதவனை உயிருடன் வாழ்பவன் என்று சொல்லுதலும் தவறு. அவனுடைய வாழ்க்கை உயிர் வாழ்க்கையும் ஆகாது. அவனை உயிருடன் வாழ்பவன் என்றும் கூறுதல் ஆகாது. அவனை உயிருடன் வாழ்பவன் என்றும் கூறுதல் தகாது; 'அவன் வாழ்கிறான்' என்பது, பாலைவனத்தில் வற்றல் மரம் தளிர்த்தது என்று கூறுவது போன்றதாகும்; அது தளிர்க்காது; அவனும் வாழ்பவன் ஆகமாட்டான்.

அன்புஅகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று 78

மக்கட் பிறவிக்கென்று தனிப்பட்ட பண்புகள் உண்டு. அறிவுடையராக வாழ்தல், பிறர்க்கு இயன்ற வரை உதவுதல், ஈகை செய்தல், இழிசொல் கூறாமை என்பன போன்ற பற்பல குணங்கள் உண்டு. இவை பொருந்தி இருப்பதுதான் மனிதப் பிறவிக்கு அடையாளங்களாகும். மக்களுக்குரிய பண்புகள் இல்லாவிட்டால், அரம் போன்ற கூர்மையான புத்தியுடையவர்களும் மரத்திற்குச் சமமானவர்களேயாவர்.

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர் 997

இதனால் அறிவும், புத்திசாலித்தனமும் இருந்தாலும் மக்கட்பண்பு இல்லையென்றால், அப்படிப்பட்டவர்கள் மரத்திற்குச் சமமாகக் கருதப்படுவர். மனிதர்களிடையேயும் ஓரறிவு மரங்களுண்டு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. இவ்வாறு பல எடுத்துக்காட்டுகளைக் கண்டறிதல் கடமையாகும்.

" விலங்கினங்கள் "

'மக்கட்பிறவி எடுத்தவர்களிடையே விலங்குகளை ஒத்தவர்களும் இருக்கின்றார்கள்' என்று கூற ஆசிரியர் தயங்கவில்லை. மனிதத் தன்மையை வளர்க்கின்ற, நல்வழியை உணர்த்துகின்ற - ஒழுக்கத்தைப் போதிக்கின்ற அரிய நூல்களை, ஆசிரியர் '**இலங்குநூல்**' என்று குறிக்கின்றார். இலங்கு நூல்களைக் கற்றார்களோடு அத்தகைய நூல்களைக் கல்லாதவர்களை ஒப்பிட்டுக் காட்டுகின்றார். இயல்பாக வாழ்கின்ற மக்களையும் விலங்கினத்தையும் ஒப்பிட்டுக் காட்டுகின்றார். விலங்கினத்தோடு சேர்க்கப்படவேண்டிய மனிதர் சிலரும் உண்டு என்பது வெளிப்படை யாயிற்று; '**பலரும்**' என்று கூறுவதும் தவறாகாது.

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர் 410

மனத்தையும், அறிவையும், ஒழுக்கத்தையும் இன்ன பிற நல்லனவற்றையெல்லாம் கெடுக்கின்ற நூல்களும் உண்டு. அவற்றைக் கற்றவர்கள் தீமைதான் செய்வார்கள். ஆதலால், கெட்ட செயல்களைத் தாமாக செய்கின்ற விலங்கினங்கள் ஒப்பிடப்பட்டன. விலங்கினங்கள் நல்ல செயல்கள் செய்ய வேண்டுமென்றால், அவற்றை நாம் செய்யுமாறு தூண்ட வேண்டும்; விலங்குகள் தாமாக நன்மையான காரியங்களைச் செய்யமாட்டா.

**கயவர்கள்**

மக்களுக்குள்ளே 'கயவர்' என்பவர்களும் உண்டு. இவர்கட்கு இழிவான குணங்களே இருக்கும். இவர்கள் பிறரைப் பற்றி இழிவாகப் பேசிக் கொண்டிருப்பர். பிறர்மீது குற்றங்களைக் கற்பனைசெய்து பேசிக் கொண்டிருப்பர். மனம்போன போக்கில் பேசித்திரிவர். இவர்களை மக்கள் என்று கூறுதலும் குற்றமாகும். ஆனால், மக்களுக்கு இருக்கின்ற தோற்றம் இவர்களுக்கும் உண்டு; மக்களுக்குரிய உறுப்புக்களையும் பெற்றிருப்பர்!

மக்களே போல்வர் கயவர் அவர்அன்ன
ஒப்பாரி யாம்கண்டது இல் 1071

கயமைத்தன்மை நீங்கியவர்களே **மக்கள்** என்ற பெயருக்கு உரியவர் ஆவர். ஆதலால்தான், தோற்றத்தினை மட்டும் கண்டு மக்கள் வகையில் சேர்த்துக் கணக்கிடுதல் தவறானதென்பது குறிக்கப்பட்டது.

**பிறப்பும் ஒழுக்கமும்**

மக்கட் பிறவிக்கென்றே இருக்க வேண்டிய ஒழுக்கம் மனிதனிடம் இருக்க வேண்டும். அப்படியில்லாதவன் இழிந்த பிறப்பு எனப்படுவான். ஒழுக்கம் கெட்டவனே இழிந்த பிறப்பாளன் என்று கூறப்படல் வேண்டும். பிறப்புத் தன்மையால் எல்லா உயிர்களும் ஒத்தவை என்று கூறப்பட்டுள்ளது. செய்கின்ற செயல்களின் காரணமாகத்தான் உயர்வு தாழ்வு கணிக்கப்படும் என்றும் குறள் கூறுகின்றது.

பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்புஒவ்வா
செய்தொழில் வேற்றுமை யான் 972

விரிவாக எண்ணப்பட வேண்டிய குறட்பாக்களுள் இரண்டினை இங்கே எடுத்துக்காட்டாகக் கொள்வோம்.

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும் 133

தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை 964

மனிதப் பிறவியென்று கூறப்படுவதற்குக் காரணமான தன்மைகளில் **ஒழுக்கம்** முதன்மையாகக் கருதப்பட வேண்டியதாகும்.

**வைக்கப்படும்**

மனிதர்களுக்குள்ளேயே **செத்தவர்கள்** என்ற பெயரில் கூறப்பட வேண்டியவர்களும் இருக்கின்றார்கள். உலக நடையினை அனுசரித்து ஒத்து வாழ வேண்டும். பிறர்க்கு இயன்ற அளவு உதவி செய்தலும் வேண்டும். எந்த ஒன்றிலும் கலந்து கொண்டு வாழாமல், பிறர்க்குச் சிறிதளவும் உதவாமல், யாருக்கும் பயன்படாமல் தனித்தே இருந்து வாழ்பவனைச் செத்தவர்கள் கூட்டத்தில் சேர்த்தாக வேண்டும். இப்படியும் பலர் இருக்கின்றார்கள்.

ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும் 214

மனிதப் பிறவியெடுத்து அதற்கு ஏற்ற தன்மைகள் அனைத்தும் இருந்தால்தான் அவன் மனிதன் என்ற பெயருக்கு உரியவனாவான். முதலில் மனிதன் தன்னை மனிதனாகச் செய்து கொள்ளுதல் வேண்டும். மேலே சொன்னவை ஆசிரியர் வள்ளுவனார் குறித்துக் காட்டியவை களில் ஒரு சிலவாகும். **'நச்சு மரம்'** (1008) என்று சிலரைக் கூறுகின்றார் விரிப்பிற்பெருகும்; ஆசிரியர் நூல் முழுவதிலும் பண்பின் அடிப்படையில் வைத்தே பல அரிய உண்மைகளைக் குறித்துக் காட்டுகின்றார். இவை கவனிக்கப்பட வேண்டியனவாம்.

# குறிப்புப் பகுதி

## உள்ளத்திற்கு உணவு

நாம் ஒவ்வொரு நாளும் வேளை தவறாமல் உணவு கொள்கிறோம். உணவு உடலுக்கு அளிக்கப்படுவது. நல்ல உணவு உண்டால் உடல் நன்றாக இருக்கும்; உணவு இல்லையென்றால் உடல் கெடும். வேளைக்கு வேளை உண்ணவில்லை எனில் சோர்வு உண்டாகும்; இன்னும் எத்தனையோ துன்பங்கள் உண்டு.

**உள்ளம்** என்றும் **மனம்** என்றும் கூறப்படுவதற்கு உண வளிக்க வேண்டும் என்ற பழக்கம் நம்மில் பலருக்கும் இல்லை. நல்ல கருத்துக்களைக் கேட்டால், அவற்றை **உணவு** என்று சொல்கிற பழக்கமும் இல்லை. செவியால் கேட்கும் நல்ல கருத்துக்களை மனம் நன்றாக இருப்பதற்குக் கொள்ளும் உணவு என்று கூறுவதும் இல்லை. ஆசிரியர் திருவள்ளுவனார் அதை **உணவு** என்றே கூறுகின்றார். மனச் சோர்வு, கவலை, துன்பம் என்பன போன்ற நோய்கள் வராமல் இருக்க வேண்டுமென்றால் உள்ளத்திற்கு அன்றாடம் சிறிது நேரமாவது சிறந்த உணவளிக்க வேண்டும்.

உடலுக்கு உணவளிக்கும்போது சுவையுள்ளதாகவும், நன்றாகச் சமைக்கப் பெற்றதாகவும், சத்துள்ளதாகவும் பார்த்துதான் உண்கின்றோம். கண்ட கண்ட உணவைச் சாப்பிட்டால் உடல் கெட்டு நோயும் வந்து சேரும். அதுவேபோல நல்ல ஒழுக்க சீலர்கள் கூறிய கருத்துக்களைக் கேட்க வேண்டும்; அல்லது கற்று உணர்தல் வேண்டும். அந்தக் கருத்தினை மனத்தில் எண்ணுதல் வேண்டும். **தவ முனிவர்கள் - சான்றோர்கள் கூறிய நல்ல உரைகளையே மனத்திற்கு உணவென்று கொள்ளுதல் வேண்டும்.**

உடல் எப்படி வலுவடையும்? உணவு உண்பது வலிமை பெறுவதற்கேயாகும். நல்ல உணவு நல்ல பலத்தை அளிக்கும் என்று கருதித்தான் நாம் உட்கொள்கின்றோம். நம்பிக்கைதான்

பெரிதும் அவ்வாறு உண்ணச் செய்கின்றது. அவ்வாறன்றி ஒவ்வொரு வேளையும் உண்ட பிறகு எவ்வளவு சத்து உண்டாகி இருக்கிறதென்று யாரும் சோதித்துப் பார்ப்பதில்லை. இப்போது இவ்வுணவினால் எவ்வளவு பலம் உண்டாயிற்றென்று அளந்து காண முயற்சிப்ப தில்லை.

அதுவேபோல, உயர்ந்த பெரியோர்கள் கூறியவற்றை நாள்தோறும் மனத்தில் சிந்திக்க வேண்டும்; சிந்திக்கச் சிந்திக்க மனத்தில் வலிமையுண்டாகும்; அவற்றை நாவால் சொல்ல வேண்டும். சிறிது நேரம் சொன்னாலும் போதும். சொன்ன சொற்கள், ஆற்றல் நிறைந்த, ஒழுக்கம் மிகுந்த தவத்தினர் கூறியவை ஆதலால், அச் சொற்களுக்கு ஆற்றல் உண்டு. கருத்து நன்கு தெரிந்துவிட்டது என்று இருத்தல் கூடாது; அவற்றை நாள்தோறும் சொல்லிப் பயிலுதல் வேண்டும். கற்காதவர்கள் அவற்றைக் காதால் கேட்க வேண்டும். சொன்னாலும், கேட்டாலும், நினைத்தாலும் உள்ளம் நிறைந்த சக்தியைப் பெறும்; ஆற்றல் பெறும்! நாளாக நாளாக அதன் வலிமை நன்கு தெரியவரும்.

அத்தகைய சிறந்த உணவு அளிப்பவரே திருவள்ளுவர் ஆவார். அவர் தவ முனிவர், மேலான ஒழுக்கத்தில் நின்று நிறைமொழியான மறைமொழி கூறியவர். மனத்திற்கு வலிமை வளர வளர, கவலை, ஏக்கம், குழப்பம், துன்பம் என்பன போன்ற நோய்கள் நீங்கிவிடும்; ஊக்கம் பிறக்கும்; மகிழ்ச்சி வளரும்; முயற்சி தோன்றும்; மனம் நல்ல செயல்களில் முனைந்து நிற்கும். எனவே, திருவள்ளுவர் அருளிய நற்கருத்துக்களை நாள்தோறும் சிறிது நேரமாவது நாவினால் சொல்லி வருதல் வேண்டும்.

நற்கருத்துக்களை நல்லவர் சொல்லக் கேட்கும்போது, 'சொற்பொழிவு' என்று மட்டும் நினைக்காமல், 'உள்ளத்திற்கு உணவு கொள்கின்றோம்' என்றே எண்ணுதல் வேண்டும். பேரறிவு படைத்துப் பேரொழுக்கம் நிறைந்த பெரியார்கள் கூறியதையே உணவென்று கொள்ளுதல் வேண்டும். இத்தகைய உண்மைகளை **செவிக்கு உணவு** (412), **கற்றிலனாயினும்** (414), **ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்** (415), **நவில்தொறும்** (783) என்பன போன்ற குறட்பாக்கள் மெய்ப்பிக்கின்றன.

**நினைத்ததை அடைதல்**

மனித மனம் மிக்க ஆற்றல் பெற்றது; ஆழ்ந்த எண்ணங்களை உண்டாக்க வல்லது. நுட்பமான திறம் படைத்தது. இதைப் பலர் எளிதில் புரிந்துகொள்ள முடிவதில்லை என்பதும் உண்மை. இவ்வாறு குறிப்பதில் தவறில்லை.

திருவள்ளுவர் கூறும் சொற்கள் உள்ளத்தில் ஆழப் பாய்ந்துவிட்டால் நினைத்தவை பெரும்பாலும் கைகூடாமல் போகாது. ஆசிரியர் வழியிலேயே சொல்ல வேண்டுமானால் **நினைத்ததை அடைதல் 'எளிது'** என்றும் கூறலாம்.

உள்ளத்தில் தோன்றுகின்ற நல்ல எண்ணத்தை நன்கு உறுதிப்படுத்திக் கொள்ளுதல் வேண்டும். ஒரு முறை இரு முறை நினைத்துப் பார்த்து விட்டுவிடுதல் கூடாது; நினைத்துக் கொண்டே இருக்க வேண்டும்; எண்ணம் உள்ளத்தில் ஆழப்பதிந்துவிடும்; பதிந்து சிந்தனைகள் தோன்றும்; சிந்தனைகள் செயல் படுத்துகின்ற முயற்சியில் மனிதனைக் கொண்டு செலுத்தும்.

மனிதன் எண்ணத்தில் தளர்ச்சியடைதல் கூடாது; சோம்பியிருத்தல் ஆகாது; மனித மனத்தின் பயன் அத்தனையும் பெற்றே தீர வேண்டும். நினைத்ததை விடாமல் நினைத்துப் பார்க்கின்ற பழக்கம் பலருக்கு இருப்பது அரிது. ஆகையால் ஆசிரியர் **பெறின்** என்றார். அத்தகைய ஆற்றலைப் '**பெற்று விட்டால்**' என்பது அதன் குறிப்பாகும். நினைத்தவை எல்லாம் முடியும் என்று அவர் உறுதி கூறுகின்றார். அது மட்டுமல்ல, நினைத்த மாதிரியே வந்து சேரும் என்கிறார். இது மறைமொழி கூறிய நிறைமொழி மாந்தராகிய திருவள்ளுவரின் உயர்ந்த வாக்காகும்.

உள்ளம் திண்ணியதாக இருக்க வேண்டும். மலைப்பு உண்டாகி, அருமையானதாயிற்றே என்று கலங்குதல் கூடாது. மனிதன், நினைப்பினால் - எண்ணத்தால் ஆக்கப்படுகின்றான் என்பது உலகியல் உண்மையாகும். நினைக்க நினைக்க உள்ளம் வலிமை பெறும் என்பது மறை பொருளான ஒரு கருத்தாகும்.

இக் கருத்தைத் தெளிவுபடுத்தும் பல குறட்பாக்கள் இருந்தாலும், மூன்று குறட் பாக்களை நாள்தோறும் நாவினால் சொல்லிக் கொண்டு வரவேண்டும். சொல்லச் சொல்ல உள்ளம் உரம் பெற்று ஆக்க வேலையில் முனையும். இது உண்மையிலும் உண்மையாகும். மனம் செயல் புரியத் துடிக்கும். மனிதனைச் செயலில் ஈடுபடுத்தி, நினைத்ததை அடையச் செய்யும். **உள்ளிய தெல்லாம் உடனெய்தும்** (309), **உள்ளியது எய்தல்** (540), **எண்ணிய எண்ணியாங்கு** (666) என்பன போன்ற குறட்பாக்களை நன்கு அறிந்துணர்க.

**இவர்கள் யாவர்?**

உலகில் வாழ்கின்ற மக்கள் பல வகைப்படுவர். மனிதர்களாக வாழக் கற்றுக் கொள்வதே சிறந்த ஆற்றல் எனவும் கூறப்படும். மக்கட் பிறவியில் வாழ்பவர்கள் எல்லோருமே **மனிதர்கள்** என்று அழைப்பதற்கு உரியவர் அல்லர்.

மனிதர்கள் என்று சொல்ல முடியாத ஒரு வகையினர்க்குக் **கயவர்கள்** என்று பெயர். இவர்கள் யாவர்? இவர்கள் எதைப் பற்றியும் கவலைப்பட மாட்டார்கள். மனம் போன போக்கில் வாழ்வார்கள். நல்ல எண்ணத்தையே மனத்தில் கொள்ள மாட்டார்கள். ஆனால் ஒன்று; பார்ப்பதற்கு மட்டும் மக்கள் போலவே இருப்பார்கள்! இத்தகையவர்கள் நிறைந் திருக்கும் சமுதாயம் முன்னேறுதல் அரிதாகும்.

நல்லது செய்ய வேண்டும் என்ற நோக்கமே இவர்களுக்கு உண்டாகாது. பிறர் நன்றாக உண்டும் உடுத்தியும் வாழ்ந்தால் பொறாமைப்பட்டு அவர்கள் மீது கற்பனை செய்து குற்றங்களைச் சொல்லிக் கொண்டு இருப்பார்கள். யாருக்கும் பயன்பட மாட்டார்கள். இவர்களை நல்லதற்குப் பயன்படுத்த வேண்டுமென்றால், கரும்பைப் பிழிவதுபோல் நசுக்கிப் பிழிய வேண்டும். மனிதப் பண்பு என்பதனை எடுத்துக் காட்டுகின்ற ஈகைக் குணம் இவர் களிடத்தில் கடுகளவேனும் இருக்காது. இவர்கள் எப்படிப் பட்டவர்களென்றால், அடித்து நொறுக்குகிறவர்களுக்குக் கொடுப்பார்கள்.

பிறர்க்கு இயன்ற வரை உதவி செய்தல், முடிந்தவரை ஈகை செய்தல் என்பதுதான் மனிதத் தன்மையாகும். கயவர்களிடம் நல்லதே எதிர் பார்க்கக் கூடாது. அவர்களை நடத்த வேண்டிய முறையும் கூறப்பட்டது. எப்படி நடந்தால் அவர்கள் பிறர்க்குக் கொடுப்பார்கள் என்பதும் சொல்லப்பட்டது. இவர்களே கயவர் எனப்படுவர். **மக்களே போல்வர்** (1071) என்பதும் பிறவும் இவர்களை அடையாளங் கண்டு கொள்ள (அதி. 108) உதவுவனவாகும்.

**திருக்குறள் ஏன்?**

திருக்குறள் என்பது ஒழுக்கம் நிறைந்த சான்றோர்கள் எனப்படும் அறவோர்கள் அருளிய நூல்களின் கருத்துக்கள் அனைத்தையுமே குறிப்பதாகும். உலகப் பொதுமறை தந்த திருவள்ளுவர், அனைவர்க்கும் ஆசானாகக் கருதப்படுவதால், திருக்குறள் முதன்மையாகக் கொள்ளப்படுகின்றது.

பிறந்தோம், வளர்ந்தோம், வாழ்கின்றோம் என்று அனைவரும் இயல்பாக நினைக் கின்றார்கள். கற்றோம், அறிவு பெற்றோம், பணியினை மேற்கொண்டோம், வாழ்கின்றோம் என்றும் கூறுகின்றார்கள். திருமணம் செய்து கொண்டோம்; மனைவி மக்களோடு வாழ் கின்றோம்; காலம் வந்தால் போவோம் என்றும் சிலர் இருக்கின்றார்கள். சிலர் செல்வம் படைத்தவர் வீட்டில் பிள்ளைகளாகப் பிறந்துவிட்டதால், 'முயற்சி யின்றியே பொருள் பெற்றோம்; வாழ்கின்றோம்' என்றும் பேசுகிறார்கள்!

மேலே கூறிய இவை யெல்லாம் திருக்குறள் கற்றதனால்தானா நடைபெற்றது என்று நினைப்பவர்கள் பலருண்டு என்று கூறுவது மிகையாகாது. நடைமுறை வாழ்க்கையில் இவ்வாறு எண்ணுவதும் பேசுவதும் தவறு என்று கூறிவிடவும் முடியாது.

அறம் கூற வந்த திருவள்ளுவர் இவற்றை யெல்லாம் அறியாதவரா? இவைகட் கெல்லாம் மேலாக ஒன்றை எடுத்துக் கூறத்தான் ஆசிரியர் இந் நூலினைத் தந்தார். அது தான் **மனிதப் பிறவியின் குறிக்கோள் என்ன** என்ற கேள்விக்கு விடையாகும்.

நாம் வாழ்ந்து, மனைவி, குழந்தைகள், குடும்பம் என்பதாகக் காலம் கழித்து முடிவதென்றால், இப்படிப்பட்ட வாழ்க்கையை நம்மை விடத் தாழ்ந்த பிறவிகளும்தாம் நடத்துகின்றன. அது அறிவற்ற - இழிவான முறையில் இருக்கலாம்; அவ்வளவுதானே!

மனிதப் பிறவி யென்பது மிகச் சிறந்த அறிவினைப் பெற்றிருப்பதுதான். மனித உள்ளம் **குணம்** என்பதைப் பெற்றிருப்பது. நிலைத்து நிற்கின்ற புகழையும் பெயரையும் இந்த உலகில் இருக்குமாறு (எச்சம்) செய்வதே மனித வாழ்க்கையின் குறிக்கோள். அவரவர் களின் நிலைமைக்கு ஏற்றவாறு இந்த எண்ணத்தை மனத்திற் கொள்ளுதல் வேண்டும். இதை வற்புறுத்திக் கூற வந்தவரே திருவள்ளுவர். இந்தக் குறிக்கோளைச் செயற்படுத்துதல் எவ்வாறு?

**இசைபட வாழ்தல் (231)** என்று அவர் கூறுகின்றார். புகழுண்டாக வாழ்தல் வேண்டும். அப்புகழ் நிலைத்து நிற்பதாக இருத்தல் வேண்டும். புகழ் போன்று காட்டி நிலைத்து நிற்காதவை பலவுண்டு. நிலைத்து நிற்கும் புகழ் முதன்மையாக ஈகையால் வருதல் வேண்டும். அளவுடன், நம்மால் இயன்றவரை ஈதல் வேண்டும். பிறர்க்குக் கூடியவரை உதவி செய்தல் வேண்டும். பிறர் நம்மை விரும்புமாறு நடந்து கொள்ளுதல் வேண்டும். அவ்வாறன்றி 'நாம் உண்டு, நாம் தனித்து வாழ்வது உண்டு; மகிழ்வது உண்டு; எதையும் காதில் போட்டுக் கொள்ளாமல் ஒதுங்கியே தனித்து இருப்பதுண்டு' என்று எண்ணுவது அறிவுள்ள மனிதப் பிறவிக்கு அடையாளமல்ல. இவ்வாறான எண்ணங்களைக் குறிக் கோளாகக் கூற வந்தவர் திருவள்ளுவர். இத்தகைய எண்ணங்கள் இயல்பாக மக்கள் உள்ளத்தில் உண்டாகிவிடாது. எனவே, வற்புறுத்திக் கூற அவர் வந்தார்; திருக்குறள் தந்தார்.

செல்வம் படைத்தவர்கள் உண்டும் மகிழ்ந்தும், அல்லது உண்ணாமலும் மகிழா மலும், இருப்பவர்களும் மறைபவர்களும் பலருண்டு. செல்வம் என்பதைப் **புணம்** என்று

பொதுவாகக் குறிப்பிடுகின்றோம். செல்வம் படைத்தவர்கள், **புகழ்** என்கின்ற எச்சத்தினைத் தேடாமல் மறைவார்களேயானால் அவர்கள் குற்றம் செய்தவர்களாவார்கள்.

குறிப்பாகச் செல்வம் படைத்தோர் நிலைத்து நிற்கின்ற குறிக்கோளான புகழை நிலை நிறுத்தியே ஆக வேண்டும். பொருளைப் பத்திரமாகக் காத்து வைத்து, ஈகை செய்து அதனால் அடைய வேண்டிய புகழை அடையாதவர்கள் இழி பிறப்பானவர்கள். சிறப்பாக ஈகை ஒன்றினாலேயே புகழ் வரும். 'ஈகை' யென்பதையே எண்ணாத செல்வந்தர்கள் குற்றம் செய்தவர்களே யாவர். இதைக் குறித்துக் காட்டவே ஆசிரியர் திருக்குறள் தந்தார். **குற்றங் கடிதல், நன்றியில் செல்வம்** என்ற அதிகாரங்கள் ஈகை யறியாத செல்வர்கள் செய்ய வேண்டிய கடமைகளைக் கூறுகின்றன.

செல்வம் கடின உழைப்பினால் வரக் கூடியது. உழைக்காமலேயே செல்வக்குடியில் பிறந்ததன் காரணமாகவும் ஒருவருக்குச் செல்வம் உண்டாகும்; இயற்கையில் எதிர்பாராத படியும் வந்து சேரும். இவ்வாறு கிடைக்கப் பெறும் செல்வம், பலருக்கும் இன்பம் தருமாறு உதவுதல் வேண்டும். இல்லாவிட்டால் செல்வத்திற்கே தீங்கு இழைத்தவர்கள் ஆவர்; மனிதப் பிறவியின் குறிக்கோளை அறியாதவர்களாவர். **ஒப்புரவறிதல், ஈகை, புகழ்** முதலிய அதிகாரங்கள் இதனைக் கூறுகின்றன. **ஒத்தது அறிவான்** (214), **எச்சம் என்று என்** (1004), **ஏதம் பெருஞ் செல்வம்** (1006), **நச்சப்படாதவன்** (1008) **ஈர்ங்கை விதிரார்** (1077), **ஈதல் இசைபட** (231) முதலிய குறட்பாக்களும் பிறவும் மனிதப் பண்பாடு, மனிதக் கடமை, மனிதத் தன்மை, குறிக்கோள் என்பவற்றை எடுத்துக் கூறுகின்றன.

மனிதப் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டு அரிய பல உயர்ந்த உண்மைகளைப் புகட்டவே திருவள்ளுவர் திருக்குறள் என்னும் அரிய மறை நூலினைத் தந்தார்.

**எச்சம்** என்று கூறப்படுகின்ற புகழினை ஒவ்வொருவரும் தங்கள் தகுதிக்கேற்ப நிலை நிறுத்தியாக வேண்டும் என்றும், அந்த எண்ணம் இல்லாதவர்கள் மனிதப்பிறவி என்று கூறுவதற்கு உரியவர்கள் அல்லர் என்றும், அந்தப் புகழ் என்பது பிறர்க்கு இயன்ற வரை உதவுதல் — ஈகையினைச் செய்தல் ஆகியவற்றால்தான் உண்டாகும் என்றும், வற்புறுத்த வேண்டியே ஆசிரியர் திருக்குறள் தந்தார். இந்த எண்ணங்களைக் கொண்டு வாழும் மக்கள் சமுதாயமும் நாடும் முன்னேறும். அவ்வாறு செய்தல் எல்லா மக்களுடைய கடமையும் தொண்டும் ஆகும்.

**உயர்வதற்கு வழி**

மேலும் மேலும் உயர்ந்து செல்லுதல் வேண்டும் என்ற எண்ணம் கொண்டிருத்தலே மனிதப் பிறவிக்கு ஓர் அடையாளமாகும். மனமும், அறிவும், ஊக்கமும், இன்ன பிறவும் அமைந்திருப்பது மனிதப் பிறவியல்லவா?

ஊக்கம் பிறக்கின்ற இடம் மனமேயாகும். மனவெழுச்சியே ஊக்கமாகும். எழுச்சி இடைவிடாது இருத்தல் வேண்டும். உள்ளத்தில் உணர்ச்சி மிகுந்து கொண்டே வருதல் வேண்டும். **மனத்தானும் மாந்தர்க்கு உணர்ச்சி** (453) என்பது ஆசிரியரின் மறைவாக்கு. **உள்ளம்** என்பதற்கே **ஊக்கம்** என்பது நிறைந்த பொருளாகும்.

நீர்ப் பூக்கள் என்பன நீரின் மேல் காணப்படுகின்றன அந்த மலர்கள் அழகாகக் காட்சியளிக்கின்றன. பல வண்ணங்களில் தோன்றுகின்றன. இவ்வாறு பல வகைகளில் பேசிக் கொண்டு போகலாம். மனிதன் உயர்வும் அவ்வாறு பலரும் பாராட்டுமாறு தோன்றும். பலரும் பாராட்டுமாறு தோன்றுவதோடு அவனுக்குப் பெருமையும் தரும்; 'அவன் மனிதப் பிறவிக்கு எடுத்துக் காட்டாக வாழ்கின்றான்' என்பதையும் உணர்த்தும்,

நீர்ப்பூக்கள், அவைகளைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற தாள்கள் (கொடிகள்), அவை இருக்கும் நீர் என்பவற்றைக் கருதுதல் வேண்டும். தாள்களின் நீளம், தண்ணீரின் அளவைப் பொறுத்திருக்கின்றது. நீர் உயர உயர தாள்களின் (தண்டுகளின்) நீட்டம் உயரும். தாள்கள் உயர்ந்திருந்தால் மலர்கள் உயரத்தில் வெளிப்பட்டு அழகாகத் தோன்றும்!

மனிதனே! ஊக்கம் அதிகப்பட அதிகப்பட உனது உயர்ச்சி மேலோங்கித் தோன்றும். உயர்ச்சிக்கு ஒரே வழி ஊக்கம்! எனவே ஊக்கத்தில் தளராதே! குன்றாதே! மனவெழுச்சியிலே குறியாக இருப்பாயாக! அது வாழ்வில் உயர்ச்சியைத் தருதல் உறுதி! உறுதி! **வெள்ளத்தனைய மலர் நீட்டம்** (595) எனும் குறட்பாவைச் சிந்தனைச் செய்வோமாக!

**காமத்துப்பால்**

திருவள்ளுவர் அருளிய திருக்குறள் முறையே அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பிரிவுகளை உடையது. இவை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று வழங்கப் பெறும்; மூன்றாவது பகுதியாகிய காமத்துப்பாலின் சுருக்கம் காண்போம்.

இது, **களவியல், கற்பியல்** என இரண்டு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பிறர் அறியாமல் (களவு) மறைவாக நடைபெறுவதைக் கூறுவது களவியல். ஆடவனும் பெண்ணும் இயற்கையமைப்பால் எதிர்பாராதபடி ஒருவரை யொருவர் சந்திக்கும் வாய்ப்பு உண்டாகின்றது. அப்பெண்ணின் அழகில் முதலில் உள்ளத்தைப் பறி கொடுத்து மலைத்து நின்று ஆடவன் பேசு கின்றான். அவளுடைய உறுப்புக்களின் அழகு, தோற்றம் பற்றியெல்லாம் கூறுகின்றான்.

பிறகு அவளும் அவனைப் பார்க்கின்றாள். இருவருடைய பார்வைகளும் தொடக்கத் திலிருந்து பல வகைகளாக அமைகின்றன. நோக்குகள் வளர்ந்து ஒருவர் உள்ளக் குறிப்பினை ஒருவர் புரிந்து கொள்ளுகின்றனர். மனம் ஒன்றுபட்டுவிடுகின்றனர். காதலர் ஆயினர்; இன்பம் நுகர்ந்தனர்; இன்ப மகிழ்ச்சியில் ஒருவரை யொருவர் பாராட்டிப் பேசிக் கொள்ளு கின்றனர். இனிச் சந்திப்பில்லாமல் நாம் இருக்க முடியாது என்ற நிலைக்கு வந்துவிட்டனர்.

இப்படியிருந்து வருகையில், பெண்ணின் பெற்றோர் காதல் ஒழுக்கத்தைத் தெரிந்து கொண்டனர்; பெண்ணுக்குத் தடை போட்டு விட்டனர். காதலி காதலனைச் சந்திக்க முடி யாமல் வேதனைப்படுகின்றாள். காதலனும் அப்படியே வருந்துகின்றான். காதலியைச் சந்திக்க முடியாத காதலன் முன்னர் நுகர்ந்த இன்பத்தினைப் பெற முடியாதவனாகி அல்லல் பட்டு உயிரையும் இழக்க முற்பட்டுவிடுகின்றான். தனது நாணத்தினையும் வீரத்தினையும் விட்டு, தான் அடைகின்ற துன்பத்தை ஊரார் அறியச் செய்ய எண்ணுகின்றான். ஊரார் அறியுமாறு செய்கின்ற பழக்கத்தை **மடன் மா ஊர்தல்** என்று கூறுவார்கள்.

பனை ஓலையில் ஒரு மிருகம் போன்று செய்து அதன் மீது ஏறி ஊர்மக்கள் காணச் செல்வார்கள். இது ஒரு பழக்கம். காதலன் படுகின்ற அவல நிலையையும் தன்னுடைய காத லுக்குத் தடை போட்டு இருப்பதையும் இச்செயல் வெளிப்படுத்தும். காதலன் மடன் மா ஊர்தலைக் கண்ணுற்ற ஊரார், அவர்கள் இருவர்க்கும் உண்டான காதலை அறிந்து பலவித மாகத் தூற்றிப் பேசுகின்றனர். இவ்வாறிருக்க, தோழியின் துணையால் காதலர் இருவரும் ஒருமனப்பட்டுப் பெற்றோர்கள் அறியாதவாறு வெளியூர் சென்றுவிட முனைகின்றனர் இவர்கள் உள்ளத்தை நன்கு புரிந்து கொண்ட பெற்றோர், திருமணம் செய்து வைக்கின்றனர். களவியல் பகுதி இத்துடன் முடிந்தது.

அடுத்தது 'கற்பு இயல்' என்பதாகும். **களவியல்** பகுதியைவிட இப்பகுதி இரு மடங்கு அதிகமான கருத்துக்களைக் கூறுவது எனலாம். இல்லறம் நடத்தும்போது நிகழ்வது கற்பியல்.

பெரும்பாலும் கற்பு நிறைந்த நாயகியின் குணங்களையும், உணர்ச்சிகளையும், தன்மைகளையும் எடுத்துக் காட்டுவதால் இப்பகுதி **கற்பியல்** எனப்பட்டது.

இல்லறம் நடத்தி வாழ்ந்து கொண்டிருக்கும் போது, நாயகன் நாயகியைவிட்டுப் பிரிந்திருக்க நேர்கிறது. ஒரு நாயகியின் கற்பின் திறம், நாயகன் பிரிந்திருக்கும்போதுதான் அறியப்படும். இது ஆசிரியர் காட்டும் குறிப்பு. ஆதலால்தான், கற்பியல் பகுதி **பிரிவு ஆற்றாமை** என்ற அதிகாரத்தை முதலாவதாகக் கொண்டிருக்கின்றது.

பொருள் தேடல், போர்க்குச் செல்லுதல் என்பன போன்று நாயகன் பிரிந்து செல்லு வதற்குப் பல காரணங்கள் உண்டு. தலைவன் பிரிந்து செல்ல இருக்கின்றான் என்பதனை அவன் முந்திய இரவில் தன்னுடன் இன்பம் நுகர்ந்த தன்மையிலிருந்தே ஒருவாறு தலைவி புரிந்து கொண்டாள். அவள், அவன் பிரிந்து செல்லுவதைத் தடுக்க முடியவில்லை; பிரிவுக்கும் உடன் பட்டாள். அவன் பிரிந்து சென்றான். அவன் மேற்கொண்டு செல்ல வேண்டிய பணி அவ்வளவு இன்றியமையாததாகும்.

தலைவன் பிரிந்தவுடனே தலைவியின் வேதனை தொடங்கி விடுகின்றது. அவளுடைய வேதனை பல முறைகளில் வெளிப்படுகின்றது. அவ்வப்போது தோழி சிறிது துணையாக இருந்து வருகின்றாள். பிரிவை நினைக்க நினைக்க தலைவியின் வருத்தம் அதிகமாகி விட்டது. நாளுக்கு நாள் துன்பம் மிகுந்தது. உடம்பு மெலிவடைந்தது. நாயகனைக் காண அவள் கண்கள் துடிக்கின்றன. கண்கள் படுகின்ற துன்பத்தையெல்லாம் கூறுகின்றாள். இப்படியிருக்க அவள் உடல் மெலிந்தது மட்டுமல்லாமல், மேனி முழுவதும் பசலை நிறம் வந்து விட்டது. இன்பம் இல்லாமல் துயருறுவதை இந்த நிறம் உணர்த்துவதாகும். அழகும் குறைந்து விட்டது.

தனியாக இருக்கும் அவள், **தனிமையில் உண்டாகின்ற எண்ணங்கள் தன்னைத் தின் கின்றன** என்று கூறுகின்றாள். காம இன்ப வேகம் தாங்க முடியாதவளாகித் தவிக்கின்றாள். இந் நிலையில் அதிகமாகத் தனது நாயகன் நினைவு வந்துவிடவே அழுது கொண்டிருக்கின்றாள். அவன் வருகைக்கு ஏங்கித் தணியாத துயரம் கொண்டவளானாள்.

அவள் நாள்தோறும் கனவு காணுகின்றாள். நினைப்பின் வலிமை புலனாகின்றது. தலைவனைக் கனவில் காணுகின்ற வாய்ப்பு அவளுக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கின்றது. மாலைப் பொழுது வரும் போதெல்லாம் மிகப் பெரிய வேதனை அவளைத் தாக்குகின்றது. நாளுக்கு நாள் உறுப்புக்களெல்லாம் அழகிழந்து விடுகின்றன. அவரிடம் தூது அனுப்பலாமா என்றும் எண்ணுகின்றாள்; தன்னுடைய நெஞ்சத்தோடு தானே போராட்டம் நடத்துகின்றாள். காம வேகம் அளவு கடந்து, உணர்ச்சியை மறைத்து வைக்க முடியாமல் தன்னை மீறி வெளிப் பட்டு விடுகின்றதே என்று தலைவி கலங்குகின்றாள்.

இப்படியிருக்க, பணி மேல் சென்ற தலைவன் அங்கே வேலை முடியும் தருவாயில், தலைவியைக் காணும் வேட்கை மிகுந்தவன் ஆனான். அவளைக் கண்டு இன்பம் துய்க்கத் துடிக்கின்றான். அவன் வேலையும் முடிந்தது. புறப்பட்டு விட்டான். வீடு வந்து சேர்ந்தான். பிரிந்தவர் கூடினர். இன்ப நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. பிரிந்திருந்து வந்தவன் தன் இன்ப நுகர்ச்சி களை நிறைவேற்றுகிறான்.

நாயகி மீண்டும் கவலைக் குறிப்பினைக் காட்டுகின்றாள். ஏன்? ‘மறுபடியும் நாயகன் பிரிவானோ’ என்பதே காரணமாகும். நாயகன் அவள் எண்ணத்தினைப் புரிந்துகொண்டான். ‘பிரியவில்லை’ என்று உணர்த்தினான். அவள் மிகவும் மகிழ்ச்சி கொண்டாள்.

நாயகன் நாயகியிடையே நடைபெறுகின்ற **புலவி** நிகழ்கின்றது. அது **ஊடல்** என்று கூறப்படும். ஊடலில் நாயகியின் அரிய நுட்பமான புத்திசாலித்தனம் எடுத்துக் காட்டப்படு கின்றது. **புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை** என்ற அதிகாரங்களோடு கற்பியல் முற்றுப் பெற்று காமத்துப்பால் முடிவடைகின்றது.

**துன்பம் நிற்காது!**

உலக வாழ்க்கையில் எல்லோருக்குமே துன்பம் வருவது இயல்பேயாகும். அதுவே கவலைக்கு இடமாகும். ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு வகையில் துன்பங்கள் இருக்கும். ஒவ்வொரு காலத்தில்தான் துன்பம் வரும். எப்போதுமே எல்லோருக்குமே துன்பம் நிலைத்து நிற்பதில்லை. இதனைப் பற்றி ஆசிரியர் திருவள்ளுவனார் மிகத் தெளிவாக விளக்குகின்றார்.

வள்ளுவர் மறை மொழிகளை அடிக்கடி நினைத்தல் வேண்டும். மனத்தின்கண் மன வெழுச்சி என்று கூறப்படும் ஊக்கம் மிகுதியாகப் பெற்றிருக்கும் அறிஞர்களைத் துன்பம் ஒன்றும் செய்து விடாது. துன்பத்தினையே **இடுக்கண்** என்று கூறுவர். தொழிற் புரியும் போது இடையூறுகள் பல வருதலும் உண்டு. ஊக்கமும் முயற்சியும் துன்பத்தை ஓட வைப்பன வாகும்.

பாரம் நிறைய ஏற்றியிருக்கும் வண்டியினைச் சேற்று நிலத்தில் இழுத்துச் செல்லும் மாட்டினைப் போல ஒருவன் தன் முயற்சியை மேற்கொள்ள வேண்டும் என்று கூறுகிறார். **பகடு** என்றால் எருது மாடு என்று பொருள். வண்டியை இழுத்துச் செல்லும் பகடு மெய் வருத்தம் பார்க்காது. நாமும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும்போது மெய் (உடல்) வருத்தம் பார்க்கக் கூடாது.

முயற்சியுள்ள மாடு எல்லா இடத்திலும் வண்டியை இழுத்துச் செல்லும்; வண்டி ஓட்டுகிறவர் விரும்பியபடி யெல்லாம் இழுத்துச் செல்கிறது. வழியில் தடை இருந்தால் அதைக் கடக்க ஒவ்வொரு பக்கமும் சாய்ந்து சாய்ந்து இழுத்துப் போகின்றது; மூக்கினையும் சில நேரங் களில் தாழ்ந்தும் உயர்ந்தும் இழுக்கின்றது. எந்தத் தடையையும் பொருட்படுத்தாமல் வண்டி யினை இழுத்துக் கொண்டு சேர்க்கிறது. அதுபோல் நாம் நமது முயற்சியில் தொடர்ந்து ஊக்கத்தினை மேற்கொண்டு சென்றால் எந்தத் துன்பமும் நம் முன்னே நிற்காது. **மடுத்தவாய் எல்லாம்** (624) என்ற குறட்பாவை நன்கு அறிதல் வேண்டும்.

**இடுக்கண்அழியாமை** என்ற அதிகாரத்தினை நாள்தோறும் கற்போமாக.

**வெள்ளம் போல் வரும்**

வெள்ளம் வருவதைப் போல கரையில்லாத துன்பங்கள் வருவதுண்டு. அவை அனைத் தையும் அறிவுடைய ஒருவன் தனது மனத்தில் வேறு ஒன்றினை நினைத்து அவற்றை மறையும் படிச் செய்து விடுவான். மனவெழுச்சியான ஊக்கம் அவ்வளவு ஆற்றல் உடையதாகும். ஆசிரியர் துன்பங்கள் கெட்டோடும் என்று கூறுகின்றார். துன்பம் என்பது மனத்தின் ஒரு வகை யான நிலைமையேயன்றி பிறிதொன்றில்லை. **அறிவுடைமை** அதிகாரத்தினை அடிக்கடி சிந்தித்தல் வேண்டும். **உள்ளக் கெடும்** (622) என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

இடுக்கண் (துன்பம்) வரும்போது அது ஒருவனுடைய அறிவினையும் மனத்தினையும் பற்றிக் கொண்டு அழிக்க முயலும். அதற்கு இடங் கொடுத்து விட்டால், பிறகு செய்வ தறியாது திகைப்பு உண்டாகும். ஆதலால், துன்பம் வருகின்ற போது மலைக்காமல் உள் மகிழ்தல் வேண்டும். அதனையே ஆசிரியர் **நகுக** (621) என்று கூறினார். அப்படிச் செய் தால், மனம் தடுமாற்றம் அடையாமல் உறுதிப்பட்டு முயற்சியினை மேற்கொள்ளும்; பிறகு வரு வதெல்லாம் இன்பமே யாகும்.

அடுக்கடுக்காகவும் துன்பம் வரும்; **அடுக்கி வரினும்** (625) என்று ஆசிரியர் குறிப்பிடு கிறார். மேன்மேலும் தொடர்ந்து துன்பங்கள் வருமாம். அப்போதும்கூட உள்ளக் கோட்பாடு திடமாக உள்ளவர்க்கு இடையூறு வாராது மறைமொழிச் சொற்களை அடிக்கடி சொன்னால் மனம் திடம் பெறும்; ஊக்கம் பிறக்கும்; முயற்சி உயரும்.

மனம் கலக்கமடையவே கூடாது என்று திருவள்ளுவர் அறிவுறுத்துகின்றார். **துன்பங் களுக்கு இந்த உடம்பு இலக்கு** என்று தெரிந்து கொள்ளுதல் வேண்டும். **இலக்கு** என்றால் இடம். துன்பம் தங்குவதற்கு வேறு எங்கு இடமுண்டு? ஆதலால், துன்பம் வந்து நம் உடலில் இருந்துவிட்டுப் போகும்! இந்த உண்மையினையும் புரிந்து கொள்ள வேண்டும். ஆதலால், துன்பம் வந்தபோதும் கலங்கக் கூடாது. அறிவினால் சிந்தித்துச் செயல்பட, அத்துன்பம் போகும். **இலக்கம் உடம்பு** (627) என்பதும் இதனை உணர்த்தும். அளவுக்கு மீறி அதிகப் படியாக இன்பத்தை விரும்புபவனுக்கும் துன்பம் வந்து சேரும். அறிவுடைய முயற்சியாளர்கள் துன்பத்தினைத் துன்பமாகவே நினைக்க மாட்டார்கள். அவர்களிடம் வந்த அத்துன்பம் தானே துன்பப்பட்டு ஓடிவிடும்.

**உலகம் கைவிட்டுவிட்டது!**

தொழில் செய்வதையே குறிப்பாகக் கொண்டிருத்தல் வேண்டும். தொழில் என்பதே வினை என்று கூறப்படும். வினை யென்பது இன்றியமையாத் தன்மை யாகும். மன எழுச்சியும் ஊக்கமும் கொண்டு எப்போதும் செயல் செய்து கொண்டே இருக்கவேண்டும்.

அப்படிப்பட்ட வினை யெனப்படும் தொழிலைச் செய்யாது விட்டவரை **தீர்ந்தாரின்** (612) என்று குறிப்பிடுகின்றார். அப்படிப்பட்டவர்களை, உலகம் கைவிட்டது என்பதை **உலகு தீர்ந்தன்று** என்று (612) கூறுகின்றார். ஆதலால், எப்போதும் மக்கள் வினை (தொழில்) செய்து கொண்டே இருத்தல் வேண்டும். தொழில் செய்யாது சோம்பலாக இருக்கும் மக்கள் நிறைந்திருக்கும் சமுதாயமும் நாடும் உயர்வு அடையாது. உலகத்தார் அப்படிப்பட்டவர்களைக் கை விட்டு விடுவார்கள் என்பது குறிப்பாகும். வினையாகிய செயலைச் செய்யாது விட்டாரை உலகம் விட்டுவிட்டது. ஆதலால், தொழில் செய்யாது நீங்கி யிருத்தலைத் தவிர்ப்பாயாக! இதனை உணர்த்தும் **வினைக்கண்** (612) என்ற குறட்பா பன்முறையும் சிந்தனைக்குரியது.

வினை (தொழில், செயல்) செய்வதிலேயே திட்பமுள்ளவர்களாக இருத்தல் வேண்டும். வேறு பல திட்பங்கள் எல்லாம் பெற்றிருந்தாலும் தொழில் புரிவதில் திட்பம் இல்லாதவரை, இந்த உலகம் வேண்டாது என்கிறார். **வினைத்திட்பம் வேண்டாரை வேண்டாது உலகு** (670) என்று குறிப்பிடுவது அருமையான உண்மையாகும். தொழில் செய்வதில் மன உறுதி வேண்டும். அதனையே செய்து கொண்டிருக்க விரும்புவாயாக! வினைத் திட்பம் என்பது ஒருவனுடைய மனத்திட்பமே யாகும். எனவே, வினைத்திட்பத்திற்கு - செயல் திறனுக்கு மனத் திட்பமே (மன உறுதியே) அடிப்படையாகும். **வினைத்திட்பம்** (661) என்னும் குறட்பா இதனை நன்கு எடுத்துக் கூறுகிறது. மக்கள் செயல் செய்துகொண்டே இருக்கவேண்டும். அப்படிப்பட்டவர்களையே பயன்பட்டவர்களாகக் கருதி உலகம் விரும்பும்.

**வீழ்த்தும் படகு**

**காமக் கலன்** என்று ஆசிரியர் கூறுவது விரும்பி ஏறுகின்ற மரக்கலம் என்பதாகும். மரக்கலம் என்கின்ற அப்படகு ஏறியவர்களைக் கொண்டு போய் நடுக்கடலில் வீழ்த்தும்.

அப்படி வீழ்த்துகின்ற மரக்கலத்தில் ஏறிச் செல்லுகிறவர்களைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். இக்குறட் (605) பாவினை நாள்தோறும் ஒரு முறையாவது சொல்லுதல் மிகமிக நல்லதாகும். கீழ்வரும் நான்கு தீய குணங்களைக் குறிப்பிடும் போதுதான் இவ்வாறு ஆசிரியர் கூறுகிறார்.

**நெடுநீர்** என்பது ஒரு தீய குணம். அதாவது விரைந்து செய்து முடிக்க வேண்டியதைப் 'பிறகு செய்வோம்' என்று ஒத்திப் போடுதல். இக்குணம் மிகவும் கொடியது. செய்ய வேண்டியதை அப்போதே செய்தல் வேண்டும்.

அடுத்த குணம் மிகுதியும் தீதானது. அதுதான் **மறதி**. எப்போதுமே ஒருசிலர் 'மறந்துவிட்டேன்' என்பார்கள். இது மிகக் கொடிதான பழக்கம்.

**மடி** என்பது சோம்பல். இந்தக் கொடிய தீமை வாழ்க்கையினையே பாழாக்கி விடும்.

நான்காவது தீமை **துயில்**! அளவு கடந்து தூங்குதல் மிகக் கெடுதியானது. தூக்கத்தில் நல்ல ஆர்வம் வைத்து நினைத்த போதெல்லாம் தூங்குவார்கள். இப்படிப்பட்டவர்கள் கெடுவது உறுதி.

**நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்**
**கெடுநீரார் காமக் கலன் 605**

இக் குறட்பாவின் கருத்தினை நன்கு அறிந்துணர்ந்து விழிப்புடன் வாழ்வோமாக. அடிக்கடி இக் குறட்பா கண்முன்னே தோன்றட்டும்.

**காதல் நோக்கு!**

அன்பு நிறைந்த இருவர் காதலர்களாகி, ஒருவரோடொருவர் மனம் ஒத்துத் திருமணம் செய்துகொண்டு இல்லறத்தில் வாழ்கின்றனர்.

காதல் தொடக்கத்தில் அவர்கள் ஒருவரையொருவர் நோக்குகின்ற நோக்குகளைப் பலவகையாக ஆசிரியர் கூறுகின்றார். பெரும்பாலும் காதலியின் நோக்குகளே அதிக வகைகளில் குறிப்பிடப்படுவது சிந்தனைக்குரியதாம்.

| | | | |
|---|---|---|---|
| எதிர் நோக்கு | 1082 | நிலன் நோக்கும் | 1094 |
| நோக்கம் இம்மூன்றும் | 1085 | தான் நோக்கி | 1094 |
| மட நோக்கு | 1089 | குறிக்கொண்டு நோக்காமை ... சிறக்கணித்தாள் | 1095 |
| இரு நோக்கு | 1091 | செற்றார்போல் நோக்கும் | 1097 |
| சிறு நோக்கம் | 1092 | பொது நோக்கு நோக்குதல் | 1097 |
| நோக்கினாள் நோக்கி | 1093 | கண்ணிணை நோக்கொக்கின் | 1100 |

என்கின்ற இடங்களும் பிறவும் சிந்தித்தறிய வேண்டிய நுட்பங்களை உணர்த்துவன.

**வழி கேட்டுக்கொண்டு போதல்**

திருவள்ளுவர் அருளிய திருக்குறள் மனிதர்தம் வழிபாட்டுக்குரிய நூலாகும். வழிபாடு என்பது உயர்ந்த நல்ல எண்ணங்களை மனத்தில் நினைத்தலாகும். நினைத்தலால் உள்ளம் தூய்மையாகி வலுவடையும். உள்ளம் எண்ணத்தினை உறுதியாக்கிக் கொண்டால் அதைச்

செயல்படுத்தியே தீரும். ஆதலால்தான், நிறைமொழி மாந்தருடைய சொற்களை நாம் சொல்லிப் பழக வேண்டும். செறிவுள்ள கருத்துக்களை மட்டும் அறிந்து கொள்ளுதல், குறட் பாக்களை நன்கு படித்தல் ஆகிவிடாது. குறட் சொற்களை அடிக்கடி சொல்லுதல் வேண்டும். ஏனெனில், அவை தவமுனிவர் வாக்கினால் வந்தவை. அந்தச் சொற்களுக்கு மிக்க ஆற்றல் உண்டு. அச் சொற்களுக்குள் ஆற்றல் பொதிந்துள்ளது.

மின்சாரம் ஓடிக் கொண்டிருக்கும் கம்பிக்கும் சாதாரண கம்பிக்கும் வேறுபாடு உண்டு அல்லவா? இரண்டும் பார்ப்பதற்கு ஒன்றாகக் காணப்பட்டாலும், அவற்றுள் ஒன்றனுள்ளே ஆற்றல் உள்ளது. அதுவேபோல் ஒழுக்கமுடையவர்களான தவத்தோர் சொற்களில் வன்மை யுண்டு. அவர்கள் கூறியவற்றை எப்போதும் சொல்லுதல் வேண்டும்.

பொருள், செல்வம் என்பவற்றால் குறிக்கப்படுபவற்றை இக்காலத்தில் **பணம்** என்றும் சொல்கின்றோம். ஆனால், பணம் என்பது குறிப்பிட்ட ஒன்றை மட்டும் குறிக்கும். 'பொருள், செல்வம், ஆக்கம்' என்பன பரந்த பொருளில் பலவற்றையும் குறிக்கும்.

'பொருள், வழி தேடிக்கொண்டு போய்ச் சேரும் இடம் ஒன்று உண்டு' என்று ஆசிரியர் கூறுகின்றார். **'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும்' (594)** என்பது மறைமொழியாகும். அவ்வளவு எளிய முறையில் பொருள் தானே வருமாறு செய்தல் முடியும் என்று ஆசிரியர் கூறுகின்றார். யாரிடத்திற்குப் பொருள் வழி கேட்டுக் கொண்டு போகும் என்பதை நாம் இங்கு சிந்திக்க வேண்டும்.

அசைவில்லாத ஊக்கத்தை மேற்கொண்டிருப்பவர்களிடம் பொருள் வழி கேட்டுப் போய்ச் சேரும். சோம்பல் என்பதே சிறிதும் இருத்தல் கூடாது. ஊக்கமும், முயற்சியும், உழைப்பும் ஒன்றுபட்டு இருப்பவர்களிடம் ஆக்கம் தானே வரும். அப்படிப்பட்டவர்கள் ஒரு காலத்தில் சூழ்நிலையினால், இயற்கையின் தன்மையால் பொருள் இழந்தோம் என்று கவலைப்படவே மாட்டார்கள். ஏன்? ஊக்கம் மறுபடியும் அச்செல்வத்தினைக் கொண்டு வந்து சேர்த்துவிடும். **ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் (593)** என்பது குறள் முனிவர் வாக்காகும். மனவெழுச்சி யென்னும் ஊக்கத்தினைக் கொண்டு முயல்க! முயல்க! முயல்க!!

### ஒளி விளக்கு!

ஒளி தருகின்ற விளக்கு எவ்வளவு பயன் தரும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? நல்ல குடும்பத்தைக் **குன்றா விளக்கு (601)** என்கிறார் ஆசிரியர். நல்லவர்கள் பிறந்து வாழ்கின்ற குடும்பம் நற்குடும்பமாகும். நற்பண்பும், ஊக்கமும், முயற்சியும், சோம்பரில்லாத தன்மையும் உள்ளவர்களே நல்லவர்கள் எனப்படுவர்; சிறந்த அறிவுடையார் என்று சொல்லப்படுவர்.

நன்கு ஒளி தந்து கொண்டிருக்கும் குடும்பமாகிய விளக்கையும் சோம்பல் (மடி) என்னும் இருள் மங்கச் செய்து விடும்; அணைத்து விடும். கெடுத்தே விடும் என்க. மடி (சோம்பல்) என்னும் கொடிய குணம் அவ்வளவு பொல்லாதது. நல்ல குடும்பத்தில் சோம்பல் நிறைந்த ஒருவன் இருந்துவிட்டாலும், அவன் அக்குடும்பம் தலையெடுக்க ஒட்டாமல் செய்து விடுவான்.

**மடி** என்னும் தீய குணம் மெதுவாக வந்து கெடுத்து விடும். மடி யென்பதை நெருங்க விடக்கூடாது. குடும்பத்தை இருந்த இடம் தெரியாமல் செய்து விடக்கூடியது சோம்பல். இக்குணத்தைத்தான் **தாமத குணம்** என்றும் சொல்லுவார்கள். 'சோம்பல்' என்பது கரிய நிறமான இருள் எனப்பட்டது.

குடியென்பது தன்னுள் பிறந்தாரை விளக்குவதால் **குடியென்னும் குன்றா விளக்கு** (601) என்று கூறப்பட்டது. அந்த விளக்கை மேலும் மேலும் ஒளிவிடுமாறு செய்தல் வேண்டும். முயற்சி என்னும் உள்ளத்தின் எழுச்சி அதைச் செய்யும். ஊக்கம் அதனை உண்டாக்கும். ஊக்கத்தினால் சோம்பலை ஒழித்தல் வேண்டும். மடி கெடுவதாகுக! **குடியென்னும்** (601) என்ற குறட்பாவும் பிறவும் நினைப்பில் நின்று வாழ்க்கையை உயர்த்துவனவாகுக!

**எல்லாம் எமக்கே!**

தானும் தன்னைச் சார்ந்தவர்களுந்தான் 'எல்லாவற்றிற்கும் உரியவர்களாக இருக்க வேண்டும்; எல்லாவற்றையும் நுகர வேண்டும்; பிறர்க்கு இருந்தாலென்ன, இல்லாவிட்டால் என்ன?' என்று எண்ணி வாழ்பவர்கள் உண்டு. இவர்கள் மக்கள் கூட்டத்திலிருந்து ஒதுக்கப்பட வேண்டியவர்களே! நல்லவர்கள் இதனைச் சிந்தனை செய்தல் வேண்டும். அன்புடைமை என்ற அதிகாரம் இதை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

பிறர்க்குப் பயன்படுபவர்களுக்குத்தான் அன்புடையவர்கள் என்று பெயர். அன்பின் வடிவமே இறைவன் என்பது உலகியல் உண்மை; தன்னைச் சார்ந்த மக்களிடத்தில் மட்டும் பிரியத்துடன் இருப்பதொன்றே அன்பாகி விடாது. **அன்பு உடையார் என்பும் உரியர் பிறர்க்கு** (72) என்ற மறைமொழியை மனத்தில் எப்போதும் நிறுத்த வேண்டும். அன்புடையவர் மக்களிடையே எவ்வித வேறுபாடுகளையும் காணமாட்டார்கள். மற்றவர்களுக்கு இயன்ற வரைப் பயன்படுவார்கள்.

அன்பு இல்லாதவர்களை அறம் தண்டிக்கும். ஆதலால், அவர்கள் அஞ்சி நடக்க வேண்டும். **அறம்** (77) என்பது நினைவிலிருக்க வேண்டும். அன்பு நிறைந்த நெஞ்சம் கொண்டவர்கள் மக்களிடையே பேதம் காணமாட்டார்கள். பிறர்க்குக் கூடியவரை நன்மையே செய்வார்கள். அதுவே அன்பு. "மற்றவர் நன்கு வாழ வேண்டும் என்று கருதாதவர்கள், வற்றல் மரங்களுக்கு ஒப்பாவார்கள்." அன்பு உடையவர்களிடத்தில் அறம் நிற்கும். அறம் நிற்பதென்பது இறைவன் வழிபாடாகும். இறைவன் **அறவாழி அந்தணன்** (8) எனப்படுவான். **எல்லாம் தமக்குரியனர்** (72) என்பவன் அன்பில்லாதவன்; அறம் அறியாதவன்; இறைவன் நெறி அறியாதவன். அன்பின் பொருளைத் தெரிந்து வாழ்வோமாக!

**அசாவாமை!**

மனம் தளர்ச்சியடையாமல் இருப்பது **அசாவாமை** என்று சொல்லப்படும். அது மனச் சோர்வடையாமல் இருப்பதாகும். இயல்பாகவே சில நேரங்களில், 'அருமையான செயலாயிற்றே, எப்படி முடிக்க முடியும்' என்ற மலைப்பு உள்ளத்தில் தோன்றும்.

அப்படித் தோன்றினால் அதனைப் போக்குவதற்கு ஆசிரியர் வழி காட்டுகிறார். மறைமொழி யானதால் அவர் சொல்வழி நின்று வெற்றி பெறுதல் வேண்டும். அவர்தம் சொற்களை உள்ளத்தில் ஆழச் சிந்தித்துவிட்டால், அச் சிந்தனையே வழி காட்டும்; உறுதுணையாகும். ஒழுக்க சீலர்களின் சொற்களே **ஊற்றுக்கோல்** களாகும் (415). இதை நாவினால் சொல்லி நினைவில் நிறுத்துவோமாக!

தொழிலை மேற்கொண்டவர்கள் 'அசாவாமை' பெற்றவுடனேயே முயற்சியானது இயல்பாகவே தன்னிடம் வந்துவிடும். தொழிலை முடிக்கும் பெருமையினை முயற்சியானது உண்டாக்கும் என்று கூறுகின்றார். எத்தொழிலையும் கண்ட உடனேயோ, தொடங்கிய

உடனேயோ **"அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும்"** (611) என்பதை மறை மொழி அறிவுறுத்துகின்றது.

'தாம் சிறியவர்களாக இருக்கிறோமே; நம்மால் முடியுமா!' என்ற எண்ணமே வருதல் கூடாதாம்! 'தளர்ச்சியுறாமல் முயல்வார்க்குப் பெருமை வந்தே தீரும்' என்பது தவமுனிவர் வாக்காகும். அப்படி என்றால் அது பலித்து விடும். தளராமை என்ற குணம் இன்றியமையாததாகும் விடாது முயல்வோர் பெரியோர்களாவர். ஆதலால், அரியதான செயல்களும் எளிமையானதாக முடியும். இது பெருமை வேண்டுவோர் முயற்சியில் காணும் அரிய உண்மையாகும்.

### கொலைக் களம்

காதலியானவள், 'தன்னைக் கொலைக்களத்திற்கு அழைத்துச் செல்லும் ஆட்கள் வருகிறார்கள்' என்னும் பொருள் தோன்றப் பேசுகின்றாள். இவ்வாறு தன் மனவேதனையின் கொடுமையைக் காதலி அதன் மூலம் கூறுகின்றாள். இதைவிடத் தன் வேதனையை இவள் வேறு எவ்விதத்திலும் கூற முடியாது. கொலைக் களம் எது என்பதே இங்குச் சிந்தித்தறிய வேண்டும்.

கொலை செய்வதற்கு அழைத்துப் போக வருகின்ற ஆட்களை, அக்கொலைக்கு ஆளாக்கப்பட்டவன் காண்பானேயானால் அவன் மனம் எத்தகைய வேதனையில் துடிக்கும்! அக்காதலியும் அப்படித் துடித்தாள்!

தன் காதலன் இல்லாத காலம். அவன் வெளியூரில் இருக்கின்றான். மாலைப் பொழுது வருகின்றது. மாலைப் பொழுது வந்தால் இரவு வந்து விட்டது என்று கருதப்படுகிறது. இரவில் அவள் உறங்கும் இடத்திற்கு மாலைப் பொழுது அவளை அழைத்துப் போக வந்து விட்டதாம். அந்த இடமே கொலைக்களம். ஏன்? நாயகன் இல்லை. **"காதலர் இல்வழி"** (1224) என்பது இதனை உணர்த்தும் அருமையான குறட்பாவாகும்!

### குன்றேறி நின்றார்

நற்குணங்கள் அனைத்தும் நிறையப் பெற்றவர்களாகி, துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலியவற்றால் உயர்ந்தவர்களே முனிவர் எனப்படுவர். அவர்களே நீத்தார், அந்தணர் என்றும் அழைக்கப்படுவார்கள். செயற்கரிய செய்யும் பெரியவர்களும் அவர்களே யாவர்; மறை மொழிகளை உலகத்திற்களிக்கும் நிறைமொழி மாந்தர்களாவர். அவர்கள்தாம் **குணமென்னும் குன்றேறி** நின்றவர்கள் (29).

இறைவனை **எண் குணத்தான்** (9) என்று ஆசிரியர் கூறுகின்றார். சிந்தித்து அறிவதற்கு அரிதாயும் எளிமையாகவும் உள்ளவன் இறைவன். நற்குணங்கள் அனைத்தும் ஓர் உருவாக உள்ளவனே இறைவன். ஆதலால், **குணத்தான்** எனப் பட்டான். நிறைமொழி மாந்தராகிய திருவள்ளுவர் கூறியவை மறை மொழிகளாகும். அவை ஆற்றல் நிறைந்த சொற்கள்.

அத்தகைய ஆற்றலை எடுத்துக் கூறவே **காத்தலரிது** (29) என்ற குறட்பாவை அமைத்தார். அவர்கட்கு **வெகுளி** வராது. சில நேரங்களில் வருதலும் கூடும். வந்தால் வெகுளப்

பட்டவரால் அதைத் தடுத்தல் முடியாது. முனிவர்களே அந்தணர்கள் எனப்படுவார்கள். அவர்கள் கூறிய சொற்களை அடிக்கடி சொல்லுதல் வேண்டும். ஒழுக்கத்தில் நின்று ஆற்றல் பெற்றவர்களாதலின், அவர்தம் சொற்கள் என்றென்றும் நிலைத்து நிற்க வல்லவை.

நல்லறிவு, புலமை, ஆராய்ச்சி முதலியவற்றில் சிறந்தவர்களாகப் பலர் இருப்பார்கள். அவர்கள் ஒழுக்கம் இல்லாதவர்களாகவும் இருக்கலாம். ஒழுக்கம் இல்லாவிட்டாலும் அருமையான, இனிமையான கருத்துக்களைத் தரலாம். ஆனால், அவை நிலைத்து நிற்காமல் போகும். அதற்குக் காரணம் ஒழுக்கம் இல்லாத உள்ளமும் நாவும் உடையவர்களாக இருப்பதேயாகும்.

பலர் மிகச் சிறப்பான கருத்துச் செறிந்த பாடல்கள் பாடுவார்கள். எழுதியும் தருவார்கள். ஆனால், அவர்கள் ஒழுக்கமில்லாதவர்களாக இருக்கவும் கூடும். ஆதலால், அவர்கள் கூறியவை தோன்றிய உடனே மறையும். நல்ல அறிவுடைமையும், புலமையும், ஆராய்ச்சியும், இன்னபிற ஆற்றல்களுடன் ஒழுக்கமும் நிறைந்திருந்தால் அவர்கள் சொல்வன நிலைத்து நின்று அறவுரை களாகப் பயன்படும். இல்லாவிட்டால் நாளடைவில் அவர்களுடைய சொற்கள் மறைந்து போகும்.

**ஒழுக்கமுடையார் வாய்ச் சொல்** (415), **நிற்க அதற்குத் தக** (391) **மறை மொழி காட்டி விடும்** (28) என்பவை எல்லாம் ஒழுக்கம் நிறைந்த முனிவர்கள் சிறப்பிற்கு எடுத்துக் காட்டுகளாகும். நோன்பு நோற்றுத் தவம் செய்து பெறுகின்ற ஆற்றல் அனைவரும் பெற்றிட முடியாது. வையத்தில் வாழ்கின்ற முறையில் ஒழுக்கம் இருத்தல் வேண்டும். அவ்வொழுக்கம் இல்லாதவர்கள் பெற்றிருக்கும் கல்வி, அறிவு, ஆராய்ச்சி அனைத்தும் நல்லவற்றிற்குப் பயன் படாமல் போகும். **'ஒழுக்கத்து நீத்த'** முனிவர் ஆகையால், திருவள்ளுவர் அருளிய மறை மொழிகளைச் சொல்லிக் கொண்டிருந்தாலே, அவை ஒருவனை உயர்வில் கொண்டு செலுத்தும்.

**பூரியார்!**

செல்வங்கள் என்பவை பல வகைகளாகக் கூறப்படும். அவை அருட் செல்வம், செவிச் செல்வம், விழுச் செல்வம் (கல்வி), பொருட் செல்வம் முதலியனவாகும். இவற்றில் அருட் செல்வம் அருளாளர்களிடத்தில் இருக்கும். ஆனால் பொருட் செல்வம் என்பது இழிந்தவர் களிடத்திலும் இருக்கும். அதாவது அற்பர்களிடத்திலும் இருக்கும்.

நல்லவர்களிடத்தில் செல்வம் இருக்கும். அது நல்லவற்றிற்குப் பயன்படும். பலருக்கும் பயன்படும். நல்ல மனமும் குணமும் முதன்மையாக பெற்றிருப்பவர்கள் நல்லவர்கள். இவர் களை ஆசிரியர் வள்ளுவனார் **பேரறிவாளர், நயனுடையவர், பெருந்தகையாளர்** என்னும் பெயர் களால் அழைக்கின்றார். இதனை விளக்கமாக **ஒப்புரவறிதல்** என்ற அதிகாரத்தில் கண்டு தெளிக.

**பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள** (241) என்று கூறுகின்றார். இழிவான மனம் படைத்தவர்களை, 'பூரியார்' என்று குறிப்பிடுகின்றார். யாருக்குமே பயன்படாத செல்வம் என்பதை, **நன்றியில் செல்வம்** என்ற அதிகாரம் கூறுகின்றது. செல்வம் படைத் திருந்தும், யாருக்குமே பயன்படாதவாறு இருப்பவன் கொடிய தீமை செய்பவனாகின்றான் என்று ஆசிரியர் அறிவுறுத்துகின்றார். யாருக்கும் பயன்படாமல், செல்வம் வீணாகக் கழிந்து போவது சமுதாயத்திற்குத் தீமையாகும். அத்தகைய செல்வம் பலருக்கும் பயன்படுமாறு செய்யும் பொறுப்பு நல்லவர்களின் கடமை யாகும்.

யாருக்குமே பயன்படாதபடி செல்வத்தை வைத்திருப்பவன் கொடியவனாவான். அவன் வைத்திருக்கும் செல்வத்தைப் **பழுத்த நச்சு மரம்** (1008) என்று கூறுகின்றார் அப்படிப் பட்டவன், இந்தப் பூமிக்குப் **பாரம்** (1003) என்றும் உலகில் அவன் போன்றவர்கள் வாழ்வதற்கு உரிமையில்லாதவர்கள் என்றும் குறிப்பாக உணர்த்தப்பட்டன.

களவு செய்தும் பொருள் சேர்ப்பவர்கள் இருக்கிறார்கள். இவர்களே திருடர்கள் எனப்படுவார்கள். இவர்கள் சமுதாயத்திற்குப் பெரும் தீமை செய்பவர்கள். இவர்களுக்குச் செல்வம் அதிகமாவது போல் தோன்றி விரைவில் கெட்டுவிடும். **களவினால் ஆகிய** (283) என்னும் குறள் இதனை விளக்குகின்றது. 'கள்ளாமை' என்ற அதிகாரமும் நன்கு எடுத்துரைக்கின்றது.

**பேதைகள்** என்று சிலர் இருக்கிறார்கள். **பேதைமை** என்ற அதிகாரம் இவர்களைப் பற்றிக் கூறுகின்றது. இவர்கள் ஏதும் அறியாதவர்கள். இவர்களே மூடர்கள்! இப்பேதைகள் தாமாகவே தம்மைத் துன்பத்தில் செலுத்திக் கொள்வார்கள். இவர்களிடத்திலும் பெருஞ் செல்வம் இருக்க நேரிடும். இது இயற்கையின் செயலாகும். **பேதை பெருஞ் செல்வம் உற்றக் கடை** (837) முதலான பாடல்கள் இதனை உணர்த்துகின்றன.

இயற்கை, செயற்கை என்று இருவகை உண்டு. செயற்கை, மனித முயற்சி; இயற்கை, மனித முயற்சியின்றி இயல்பாக நடைபெறுவது. இந்த இயற்கைச் செயல்களை ஊழ், வினைப் பயன், முன்வினைப் பயன், தலைவிதி என்பன போன்றவற்றுள் அடக்கலாம். **நம்மால் நடைபெறாமல் இயற்கையினால் நடைபெறுவது முதல் சட்டம்.** ஆகையால் இது **தலை விதி** எனப்படும். தலை — முதல், விதி — சட்டம் என்க; இக்கருத்துக்களை ஆசிரியர் பல இடங்களில், குறிப்பாக உய்த்துணர வைக்கின்றார். இதைச் சிந்தித்தறிதல் வேண்டும்.

இயற்கையின் செயல்களை இரு வகையாகப் பிரித்துக் கூறலாம். ஒன்று கண்களுக்கு புலப்படுமாறு நிகழ்வன. அவை மழை பெய்தல், புயல் வீசுதல், பூமி அதிர்ச்சி முதலியன. இன்ன பிற நிகழ்ச்சிகளும் இவற்றுள் அடங்கும். மற்றொரு வகை, கண்களுக்குப் புலப்படாமல் அறிவு கொண்டு அறியும் செயல்களாகும். அவை, கற்றவர்களிடம் பொருள் இல்லாதிருத்தல், தீமையான குணம் உள்ளவர்களிடத்தில் செல்வம் இருத்தல், நல்ல அறிஞர்களுக்கு மூடர்கள் பிள்ளைகளாக இருத்தல், சான்றோர்கள் வறுமையுற்றிருத்தல் முதலியன. இவை பற்றிச் சிந்தித்துத் தெளிவு பெறுதல் வேண்டும். ஆசிரியர் திருவள்ளுவனார் பல இடங்களில் இவற்றைக் குறிக்கின்றார்.

மனிதப் பண்பே இல்லாதவனிடத்திலும் செல்வம் இருக்கும். 'இவனிடத்தில் இருக்கின்றதே!' என்று பலரும் நொந்து கொள்வர். இது இயற்கையின் செயலாகும். இதுவே **பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம்** (1000) என்று கூறப்படுகின்றது. இது பயன்படாமல் போகும்.

இவர்கள் பழிச் செயல்களையே செய்து பொருள் தேடிய பெரிய செல்வந்தர்களாவார்கள். இவர்களால் சமுதாயம் மிகவும் கெட்டுவிடும். இவர்கள் பெற்றிருக்கும் செல்வத்தைப் **பழி மலைந்து எய்திய ஆக்கம்** (657) என்கின்றார். கல்வியறிவே, பண்பே இல்லாதவனிடத்திலும் செல்வம் இருக்கும். இதனை **அவ்விய நெஞ்சத்தான் ஆக்கம்** (169) என்று குறிக்கின்றார். இவை போன்று பற்பல இடங்களிலும் காணப்படுகின்றவைகளை ஆங்காங்கு கண்டு தெளிக. செல்வம், பிறர்க்கும் பயன்படுமாறு வாழ்கின்ற எண்ணமில்லாத மக்கள் நிறைந்திருக்கும் சமுதாயம் முன்னேற்றம் காண முடியாது.

**களிறு**

ஆண் யானை களிறு எனப்படும். அது ஐந்தறிவுள்ள விலங்கினத்தைச் சேர்ந்ததுதான் என்றாலும், அதனுடைய மிக அரிய குணத்தினை நாம் என்றும் நினைவில் கொள்ள வேண்டும். சிறிதளவும் தளர்ச்சியடையாமல் தனது பெருமையை நிலை நிறுத்திக் காட்டுவதே களிற்றினுடைய ஒப்புயர்வற்ற குணமாகும். அது, துன்பம் வந்ததே என்று கலங்காத திண்மை உடையது. ஊக்கத்தைக் கடைப்பிடித்து மனச்சோர்வுக்கு இடமளிக்கக் கூடாது. ஆசிரியரின் மறைமொழி இதை அறிவுறுத்தும்.

போர்க்களத்தில் அம்புக் கூட்டிலிருந்து அம்புகளெல்லாம் பாய்ந்த போதும், அந்தக் களிறு தளர்ந்து கலங்காமல் தனது பெருமையை ஊன்றி, வெற்றியினைத் தேடித் தரும். அப்படியென்றால், ஆறறிவு படைத்த நாம் துன்பம் வந்த போது தளர்ச்சி யடையலாமா? மேலும் மேலும் முயன்று நமது பெருமையினை நிலைநிறுத்த வேண்டுமல்லவா? ஆசிரியர் ஊக்க முடைய மக்களை **உரவோர்** (597) என்று அழைக்கின்றார். தாம் கருதிய உயர்ச்சிக்கு ஒருகால் சிதைவு வரலாம்; எனினும் **மனம் கலங்காதே** என்கிறார். களிற்றின் தன்மையினைச் சிந்தித்துக் கைக்கொள்ளுதல் வேண்டும்.

தனது பெருமையினைக் களிறு கைவிடாது. தாம் பெறக் கருதிய உயர்ச்சிக்குத் தளர்வு வந்தாலும் ஊக்கமுடையார் சோர்வு அடைய மாட்டார்கள். முயற்சியில் குன்றாமல் நினைத்த காரியத்தை நிறைவேற்றுவர். எவ்வளவு துன்பத்தை அந்த மிருகம் தாங்கிக் கொண்டு நிலைத்து நின்று தனது பெருமையினைக் காப்பாற்றிக் கொள்ளுகின்றது! அதுபோல அறிவு மிகுந்த நாம் நமது ஊக்க மிகுதியில் மிகச் சிறிதும் குறைதல் கூடாது. **பாடு** (பெருமையினை) (597) ஊக்கத்தால் நிலைநிறுத்த வேண்டும். உள்ளத்தில் இக்குறட்பா ஒலித்துக் கொண்டிருப்பதாக!

**அடிமையாக்கிவிடும்!**

மற்றவர்களிடம் தாழ்ந்து நின்று அவர்கள் ஏவலுக்குக் கட்டுப் பட்டு அவர்கள் சொல்லுவதைக் கேட்டு நிற்பதற்குக் காரணம் என்ன? **மடி** என்கின்ற சோம்பல் குணமே யாகும். சோம்பலை எக்காலத்திலும், எள்ளளவும் நெருங்கவிடக் கூடாது. **அடிமை புகுத்தி விடும்** (608) என்பது மறைமொழி. தனிமனிதன் அடிமையாகி விடுவதென்பது மட்டுமல்ல; சோம்பல் உடைய மக்கள் நிறைந்துள்ள சமுதாயமும் நாடும் அடிமையாகிவிடும். மடியினை (சோம்பலினை) அணுக விடாதே. **புகுத்தி விடும்** என்று ஆசிரியர் கூறுவதைச் சிந்தித்து மனத்தில் உறுதியாகக் கொள்ளுதல் வேண்டும். **மடியின்மை** என்ற அதிகாரத்தினை அடிக்கடி சிந்தித்தல் வேண்டும்.

நல்ல முயற்சியுள்ளவன் தானும் தனது மக்களும் உயர்வடைய வேண்டும் என்ற எண்ணத்தில் மடி யென்னும் தன்மையினைத் தங்க விடுதல் கூடாது. அது பகைவர்களுக்குத் தன்னை அடிமையாக்கிவிடும். மடிமைக் குணமும் அடிமைக் குணத்திற்கு அடிமையாக்கிவிடும்.

மேலும், **இன்மை புகுத்தி விடும்** (616) என்றும் கூறுகின்றார். முயற்சி என்பதனைக் கொள்ளாதவனுக்கு வறுமை வந்துவிடும். முயற்சியில்லாத தன்மை வறுமையினைக் கொண்டு வந்து சேர்த்துவிடும் — புகுத்திவிடும் என்று கூறுகின்றார். முயற்சி செய்து கொண்டே இருக்க வேண்டும். அது செல்வத்தை வளர்க்கும்; இது உறுதியிலும் உறுதி. **திருவினை யாக்கும்** (616) என்கின்ற மறைமொழியினை உள்ளத்திற் கொண்டு செயல்படுவோமாக!

**கைம்மாறு**

நாயகன் கொடுத்துவிட்டுப் போன கைம்மாறு எது என்பதைக் காதலி நயமாக எடுத்துக் கூறுகின்றாள். அவள் கூறுவதில் நயமும் சுவையும் காணப்படுகின்றன. அவள் அடைந்த துன்பத்தினைக் கூறுகின்றாள் என்றாலும், அப்படிக் கூறுவதிலே உள்ளூர சிந்திக்க வேண்டிய உண்மையும் உள்ளது. 'பிரிந்த நாயகன் ஒன்றும் கொடுக்காமல் போய் விடவில்லை; கைம்மாறு (பதிலாகக்) கொடுத்துவிட்டுப் போனார்' என்று கூறினாள்.

நாயகன் பிரிந்து சென்று விட்டான். நாயகி துன்பத்தில் ஆழ்ந்திருக்கின்றாள். நாயகன் பிரிந்ததால், அவளுடைய உடம்பின் அழகு போய் விட்டது. அத்துடன் அவளுடைய நாணமும் போய்விட்டது. ஆதலால், 'இந்த இரண்டு அருமையானவைகளையும் அவர் கொண்டு போய் விட்டார்' என்று அவள் கூறுகின்றாள்.

நாயகன் பிரிவினால் 'காம நோய்' அவளுக்கு நாளுக்கு நாள் மிகுந்து வருகிறது. அவள் துன்பம் அத்துடன் நின்றுவிடவில்லை; பசலை நிறத்தையும் தந்துவிட்டது. இவை இரண்டும், பிரிந்த நாயகன் தனக்குக் கைம்மாறாகத் தந்தவை என்கிறாள் நாயகி. **சிறந்த பொருள்களைக் கொண்டு போய், இழிந்த பொருளைக் கொடுத்தது** என்பதே குறிப்பு. இது கற்பு நிறைந்த நாயகியின் உளப் பாங்கினை எடுத்துக் காட்டுவதாகும் (1183). இது போன்ற குறட்பாக்கள் காமத்துப்பால் முழுவதும் உளநூல் உண்மைகளை நயம்பட எடுத்துக் கூறுகின்றன.

**கிழவனும் கோலும்**

இங்கே கூறப்படும் நான்கு குறட் பாக்களும் ஒரு சேர நன்கு சிந்திக்கத் தக்கவை. ஆழ்ந்த உண்மைகளுடன் உய்த்துணர வேண்டிய நயமான கருத்துரைகளும் பொதிந்திருப்பவை.

**'கிழவன்'** என்ற சொல்லுக்கு **உரிமையுள்ளவன்** என்பது பொருள். இது உறவு. சொந்தம் என்பன போன்று தனக்கென்ற உரிமையைக் குறிக்கும். பயிரிடப்படும் நிலம், இல்லாளுக்குச் சமமாகக் கூறப்பட்டது. பயிரிடுகின்ற உழவன் நாயகனுக்குச் சமம்; அவனையே **கிழவன்** (1039) என்று கூறினார். தானே நேரில் சென்று அனைத்தையும் பார்க்க வேண்டு மென்ற காரணத்திற்காக உழவனுக்கும் கணவனுக்கும் இங்கு ஒற்றுமை கூறப்பட்டது. இருவருக்கும் பொதுவாக இருப்பது கிழவன் என்ற சொல்லாகும்.

உலகில் வாழ்கின்ற மக்களுக்கு மழை இன்றியமையாதது. மழை பெய்வது இன்பம் பயக்கும் (1192) என்று கூறப்பட்டது. அதுவே போல விரும்பப்பட்ட நாயகிக்கு நாயகன் வந்து செய்கின்ற அன்பு, மழை போன்றதாகும். மக்கள் மழையையே நோக்கியிருப்பார்கள். நாயகி நாயகனின் 'காதல் மழை'யையே நோக்கி யிருப்பாள்.

மழையில்லாவிட்டால் உலகில் வாழும் உயிர்களெல்லாம் அளவு கடந்த துன்பத்தில் வாடிவிடும். மழைத் துளிகள் பெய்யாவிட்டால் இந்தப் பூமியும் வறண்டு போகும் (557). வறட்சி செய்யும் கொடுமை கூறாமலேயே விளங்கும். அதுபோல நாட்டை ஆளுகின்ற தலைவனான காவலன் என்னும் வேந்தன் கருணை காட்டாவிட்டால் மக்கள் துடித்து வாடுவர். **வேந்தன் அளியின்மை** (557) என்பதையும் **அளிக்கும் அளி** (1192) என்பதையும் இங்கு எண்ணிப் பார்த்தல் வேண்டும். மழையின் இன்றியமையாத் தன்மை நன்கு கூறப்பட்டது.

**மன்னவன் கோல்** (542) என்பது நாடாளும் மன்னனின் செங்கோன்மையைக் குறிக்கும். 'கோல்' என்பது ஆட்சி செய்யும் மன்னனின் நேர்மையினைக் கூறுவதாகும். உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் மழையினால்தான் உயிர் வாழ்கின்றன. அது போன்று செங்கோலினை நோக்கிக் குடிமக்கள் (542) வாழ்கின்றார்கள். ஆகவே, உழவன், நிலம், கணவன், இல்லாள், பூமி, வேந்தன், நாயகன், நாயகி மழை முதலிய அனைத்தும் ஒருசேர சிந்திக்க வேண்டியனவாகும்.

**மூன்று**

அறம், **அந்தணன்**, அறவாழி **அந்தணன்** ஆகிய இம்மூன்றும் நன்கு சிந்தித்து அறியத் தக்கனவாகும். இறைவன் தன்மையினை நன்கு புரிந்து தெளிவதற்கு இம்மூன்று குறட்பாக்களும் விளக்கம் தருகின்றன. மனத்தில் மாசு இல்லாமல் இருப்பதே (34) அறம் ஆகும். மனத்தில் தீய எண்ணங்கள் இல்லாமல் இருத்தல் வேண்டும். தீய எண்ணங்களை, மனத்தில் வைத்துக் கொண்டு செய்வன யாவும் பயனற்றவை. **ஆரவாரமும் வெளி வேடமுமேயாகும்** (34). அறவாழ்க்கையில் இருப்பவர்களே **அந்தணர்** (30) என்று கூறப்படுவர். அவர்களே அறத்தையும் உலகினர்க்குக் கூறுபவர்களாவர்; அறமும் அந்தணத் தன்மையும் ஒன்றுபட, அறக் கடலான அந்தணனே (8) இறைவனாவான். எனவே, மனத்தில் அறத்தன்மையை நிலை நிறுத்துவதே இறைவனை வழிபடுதலாகும். இதனை நன்கு சிந்தித்தறிக.

**நினைப்பவை எல்லாம்!**

நினைப்பவை யெல்லாம் தமது உயர்ச்சியினையே எண்ணுதல் வேண்டும். உள்ளத்தில் உயர்ந்த எண்ணங்கள் எப்போதும் இருந்து வளர்ந்து கொண்டே இருக்க வேண்டும். மனித உள்ளம் மிகவும் ஆற்றல் நிறைந்தது. மனிதப் பிறவி மிகவும் சிறப்பான - மேலான பிறவியாகும். ஆதலால், உயர்ந்த எண்ணங்களாக இருத்தலே மனிதப் பிறவிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். நோக்கமெல்லாம் உயர்ந்தே செல்ல வேண்டும். உள்ளத்தில் அவை நிலைத்து நின்றுவிட்டால் நினைத்தவை செயல்பட்டு நிறைவேறிவிடும்.

சிற்சில நேரங்களில் இயற்கையின் சூழ்நிலைகளால் நாம் நினைத்த பெரிய திட்டங்கள் நிறைவேறாமல் போகலாம் (596). இருந்தாலும் குறைவு வந்து விடாது என்ற கருத்தை ஆசிரியர் அறிவுறுத்திக் காட்டுகிறார். நிறைவேற்றப்படாமற் போனாலும், நிறைவேற்றப் படும் தன்மையை உடையதாகும் என்கிறார்.

உயர்ந்த எண்ணங்கள்தாம் ஒருவருடைய மேலான முயற்சியின் உயர்ச்சியைக் காட்டுவனவாம். ஆதலால், ஒருகால் எண்ணங்கள் நிறைவேறாமல் போனாலும், முயற்சியின் பெருமை பலருக்கும் புலப்படும். ஆகையால், பழிக்கப்பட மாட்டார்கள். எனவே, உள்ளம் நிறைய உயர்ந்த சிந்தனைகளை வளர்த்துக் கொண்டே வருதல் வேண்டும்.

**உள்ளுவது எல்லாம்** (596) என்கின்ற மறைமொழி என்றென்றும் சொல்லப்படுதல் வேண்டும். தவமுனிவரின் சொற்களானபடியால் இது பயனளிக்கும் என்பதில் ஐயமில்லை.

உயர்ந்த நோக்கம் பெருஞ் சிறப்பைத் தரும் என்ற உண்மை, வீரன் ஒருவனின் செயலால் நன்கு உணர்த்தப்படுகிறது. நாமும் அதைச் சிந்தித்து மேற்கொள்ளுதல் வேண்டும்; அது நமது உள்ளத்தின் உயர்ச்சியினை வலுப்படுத்தத் துணையாகும்.

முயலின் மீது ஒருவன் அம்புவிட்டான்; அதை வீழ்த்த எண்ணினான். ஆனால் குறி தவறியது. யானை தப்பிவிட்டது. என்றாலும் அவன் சிறந்த வீரனேயாவான். ஏனெனில், அவன் நோக்கம் மிக உயர்ந்ததாகும். சிறிய படையுள்ள ஒருவனைத் தோற்கடித்து வெற்றி பெறுவதைவிட, தன்னைவிட வலிமை மிகுந்தவனை வெல்ல முடியாமற் போனாலும், எதிர்த்து நின்று போரிட்டாலும், எதிர்த்த அந்த நோக்கமே பெருமையைத் தருவதாகும் (772). ஆகவே உயர்ந்த எண்ணங்களையே நினைப்போமாக! உயர்வோமாக!

**கார் அறிவு**

'அறிவுடைமை' என்ற அதிகாரம் மனித அறிவின் திறத்தையும் மேன்மையையும் அறிவுள்ளவர்களின் பெருமையையும் எடுத்துரைக்கிறது; இது நன்கு கற்றுணர வேண்டிய குறட்பாக்களைக் கொண்டுள்ளது.

**அறிவுடையார் எல்லாம் உடையார்** (430) என்ற மறைமொழி உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்திருத்தல் வேண்டும். கற்பதும் சிந்திப்பதும் இடைவிடாமல் இருத்தல் வேண்டும். எல்லை யின்றி என்றென்றும் வளர்ந்து வருவதே அறிவின் இலக்கணம்.

**புல்லறிவு** என்பது ஒன்று. இது இழிவான தன்மையைக் குறிக்கும். இதைப் **புல்லறிவாண்மை** என்ற அதிகாரம் விளக்குகின்றது. இது புல்லிய அறிவினைக் கூறுவது. சிற்றறிவுடைய ஒருவன் தன்னைப் பேரறிவுடையவனாக நினைத்துக் கொண்டு, தன்னைத் தானே மதித்து, உயர்ந்தோர் சொற்களைக் கேட்கமாட்டான்; தானும் தெரிந்து கொள்ள மாட்டான்; பிறர் சொன்னாலும் கேட்க மாட்டான். இவ்வாறு புல்லறிவாளனின் இழிதன்மை கள் பலவுண்டு.

இனி, **கார் அறிவு** என்பது ஒன்று. இது இருண்ட அறிவு எனப்படும். இதனைக் **காரறிவாண்மை** என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். காரறிவு படைத்தவர்கள்தான் (287) கள்ளத் தனம் செய்வார்கள். உலக நடையில் திருடர்கள் என்று சொல்லப்படுவார்கள். அந்த அறிவு களவு வேலைக்கு மட்டுமே பயன்படுவதாக இருக்கும். இதனைக் **கள்ளாமை** என்ற அதிகாரத்தில் கண்டுணர்தல் வேண்டும். கள்ளத்தனத்திற்குப் பயனாகும் அறிவு 'காரறிவு!'

**உலகம் பழிக்கும்**

செயற்கையாகிய முயற்சி அதற்குத் தக்க ஊதியத்தினைக் கொடுக்கும் என்பது உறுதி. பயனளிக்காத முயற்சியே இல்லை எனலாம். கொடுக்கின்ற அளவில்தான் மாறுதல் இருக்குமே யல்லாமல், நல்ல முயற்சியானது பயனைத் தருதல் உறுதி. இது மறைமொழியாகும். எனவே முயன்று கொண்டே இருத்தல் வேண்டும். முயற்சியின் பெருமையை **ஆள்வினையுடைமை** என்ற அதிகாரம் தெள்ளத் தெளிய உணர்த்துகிறது. முயற்சி செய்து கொண்டிருப்பவர்களை உலகத்தார் மதிப்பர்; பாராட்டுவர்.

இயல்பாக நடைபெறுவது இயற்கை. இது நம்முடைய தொடர்பில்லாமல் தானாகவே நடப்பதாகும். இவ் இயற்கை ஊழ் எனப்படும். **ஊழ்வினை** என்பது தானாக நிகழும் செயல். ஒருவனுடைய வாழ்க்கை இயற்கை, செயற்கை எனும் இருவகை நிகழ்ச்சிகளால் நடைபெறு கிறது. 'ஊழ்' நன்மையையும் விளைவிக்கும்; தீமையையும் விளைவிக்கும். இயற்கையின் வலிமை மிகவும் பெரிது. அவ் வலிமையும் காலத்தினால் மாறுதலடையும். செயற்கையாகிய முயற்சி, வலிமை நிறைந்த இயற்கையையும் ஒதுங்கி நிற்கச் செய்யும் வல்லமை யுடையது.

'எனக்கு ஊழ் உதவவில்லை; காலம் துணை நிற்கவில்லை' என்று சொல்பவனை உலகம் பழிக்கும். ஊழ்வினை உதவுகிறதா, இல்லையா என்று உலகத்தார் சிந்திக்க மாட்டார்கள். 'முயற்சி செய்யாதவன்' என்றுதான் பழிப்பார்கள். ஆகையால் ஒருவன் முயற்சி செய்து கொண்டே யிருத்தல் வேண்டும். 'நல்ல ஊழ்வினை' இல்லை என்பது பற்றி நினைக்கவே கூடாது. முயற்சி (618) செய்து உயர்தல் வேண்டும்.

**வினாவும் விடையும்**

ஆசிரியர் கேள்வி கேட்கும் முறைகளில் கருத்துக்களை அமைத்துக் காட்டுகின்றார். அவற்றுக்கு விடையான கருத்துக்களும் அவ்வப்போதே கூறப்படுகின்றன. இவற்றை ஊன்றிப் படித்துப் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

**கற்பு என்னும் திண்மை** (54) என்ற குறட்பா கற்பின் சிறப்பினை எடுத்துரைக்கின்றது. மனங் கலங்காது இருக்கும் உறுதிப்பாட்டிற்குக் 'கற்பு' என்று பெயர். இந்த அரிய குணமே வாழ்க்கைத் துணைவியின் மேலான சிறப்பினை எடுத்துக் காட்டுவதாகும். இன்பம் காரணமாக மனம் கலக்கமடையாதிருப்பதையே அடிப்படையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதலால், ஆண்களைப் போல தமது உணர்ச்சிகளை வெளிப்படுத்தாமல் உறுதியுடன் அடக்கி வைத்திருப்பது பெண்களுக்குரிய தனி ஆற்றலாகும். **பெண்ணிற் பெருந்தக்க யாவுள** (54) — என்ற வினாவுக்கு விடை கூறுகின்ற முறையில் 'பெண்ணிற் பெருந்தக்கது இல்' (1137) என்ற குறட்பா அமைந்துள்ளது. பிற முறைகளையும் கண்டு தெளிக.

**மறைத்து வைப்பதல்ல!**

கல்விச்செல்வம் ஒருவர்க்கு மட்டும் பயன்படுவதல்ல; பலருக்கும் பயன்படுவதாகும். கல்வியைப் பலருக்கும் பயன்படும்படியாகச் செய்தல் வேண்டும். கற்ற கல்வி ஒருவரோடு மட்டும் இருந்துவிடுமாறு செய்தலாகாது. கல்வி, மணம் வீசும் மலர் போன்றது. ஒரு மலரின் மணமாக இருந்தாலும் அந்த மணத்தைப் பலரும் நுகர்ந்து இன்புற முடியும்.

கற்றிருக்கும் ஒருவர், தான் கற்றிருப்பதை மறைத்து வைத்திருக்கக் கூடாது. பலரும் பயன் பெறுமாறு எடுத்துக் கூறும் பழக்கத்தை உண்டாக்கிக் கொள்ளுதல் வேண்டும். மலரைப் போல் கல்வி மணம் வீசிக் கொண்டிருக்க வேண்டும். கற்றவர் தெளிவாக எடுத்துக் கூறும் ஆற்றல் பெறாவிட்டால் மணமில்லாத மலர் போன்றவராவர். மணமில்லாத மலர்கள் பார்ப்பதற்கு மட்டும்தான் மலராக இருக்கும். அதனை யாரும் நுகர்ந்து மகிழ மாட்டார்கள். மணமில்லாத மலர் பலரையும் தன்னிடம் இழுக்காது. கற்றவர்கள் அப்படி இருத்தல் கூடாது. தன்னிடம் பலரும் வருமாறும் பயனடையுமாறும் செய்தல் வேண்டும். **நாறாமலர்** (650) என்பதனை நன்கு அறிந்துணர்தல் வேண்டும்.

சொற்பொழிவு நிகழ்த்துவதைத்தான் கற்ற கல்வியைப் பிறர் அறியச் செய்யும் வழி என்றிருத்தல் கூடாது. பழகும் நிலையிலேயே ஒருவன் தான் கற்றிருப்பதைப் பலரும் உணருமாறு செய்தல் இயலும். இதனையே **'தாம் இன்புறுவது'** (399) எனும் தொடர் விளக்குகிறது. எல்லோருமே கற்றிருக்க முடியாது. கற்றவர்கள் ஒரு கொத்தில் பல மலர்கள் இருப்பது (650) போன்றவராவர். கல்விப் பயனைப் பிறரறியச் செய்து கொண்டேயிருத்தல் வேண்டும்.

**கூர்மையான எஃகு**

பொருள், இவ்வுலக வாழ்க்கைக்கு எவ்வளவு இன்றியமையாதது என்பதைப் **'பொருள் செயல் வகை'** என்ற அதிகாரம் நன்கு விளக்கிக் கூறுகிறது. **'செய்க பொருளை'** என்பதை

நன்கு சிந்திக்க வேண்டும். நாமே பொருள் அதிகரிக்கும் முறையினை உண்டாக்குதல் வேண்டும். **இயற்றலும்** (385) என்ற குறளும் இதனையே வற்புறுத்துகின்றது. பொருளைப் பெருக்க **புத்தம் புதிய முறைகளைக் கண்டு பிடித்தல் வேண்டும்**. நுட்பமான அறிவினால் புதுமைகளைச் செய்தல் வேண்டும். அதனால் பொருள் பெருக்கம் உயர்வடையும். எனவே 'செய்க' (759) என்றார். படைக் கருவியைக் கூர்மையான எஃகு என்றார். சிந்தனையைப் பெருக்கிச் செயல்படுதல் வேண்டும்.

**கூடா ஒழுக்கமும் கூடா நட்பும்**

இப் பெயர்களில் இரண்டு அதிகாரங்கள் இருக்கின்றன. இவை இரண்டும் ஒரு சேர சிந்திக்கத் தக்கவை. இரண்டு வகையினரும் கொடிய தீமை புரிபவரே ஆவர். இவர்கள், பிறர் எளிதில் கண்டு பிடிக்காத முறையில் பழகியவாறு சமுதாயத்தைக் கெடுப்பவர்கள்.

தாம் கருதிய இச்சையினை நிறைவேற்றிக் கொள்ளவே சிலர் துறந்தவர்கள் போல (சாமியார்கள் மாதிரி) வேடம் தரித்துக் கொண்டு மக்களிடையே பழகுவார்கள். ஆனால் அவர்கள் மனத்திற்குள் தீய ஒழுக்கம் நிறைந்திருக்கும்; சிற்றின்ப எண்ணம் மிகுந்திருக்கும். அந்த எண்ணத்தை அவர்கள் வேடத்தால் மறைத்துக் கொண்டு பழகுவார்கள். தவசிகள் போல் காணப்படுவார்கள். அவ் வேடத்திற்குப் பொருந்தாத காம இன்பத்தையே மனத்தில் வைத்திருப்பார்கள். இவர்களைப் பற்றிக் **கூடா ஒழுக்கம்** என்ற அதிகாரம் (28) மிக நன்கு எடுத்துக் காட்டுகிறது.

**கூடா நட்பு** என்ற அதிகாரம் (83) கொடிய பகைவர்களைப் பற்றிக் கூறுவது. இவர்கள் நண்பர்களே அல்ல; தீமை செய்யும் காலம் வரும்வரை நம்முடன் நண்பர்கள் போலப் பழகிக் கொண்டு இருப்பார்கள்; வஞ்சக நெஞ்சத்தினர் ஆவர். மனத்தால் நம்முடன் கூடாதவர்கள். நமக்குத் தீமை செய்யும் எண்ணத்துடன் நம்முடன் நண்பர்கள் போலப் பழகிக் கொண்டே வந்து, காலமும் வாய்ப்பும் அவர்களுக்குக் கிட்டிய உடனே நமக்குத் தீமை செய்து முடிப்பர். இவர்களைப் பற்றிக் கூறுகின்ற 'கூடா நட்பு' என்ற அதிகாரம் சிந்தனைக்குரியது.

**தெரிந்து செயல் வகை!**
**தெரிந்து வினையாடல்!**

தொழில் செய்யப்பட வேண்டிய முறைகளையும் திறங்களையும் இந்த இரண்டு அதிகாரங்களும் கூறுகின்றன. தலைமையில் இருக்கும் தலைவன், தானே நேரில் கண்காணித்துச் செயல் புரிய வேண்டிய வேலைகள் உண்டு. அவற்றைத் தானே தனது அறிவினாலும் ஆற்றல்களினாலும் தக்கவர்களைத் துணையாக வைத்துக் கொண்டு செய்து முடித்தல் வேண்டும். நேரில் இருந்து முடிக்க வேண்டியவைகளைத் **'தெரிந்து செயல் வகை'** என்ற அதிகாரம் கூறுகின்றது.

தானே எல்லா வேலைகளையும் நேரில் இருந்து செய்தல் இயலாது. ஆதலால் சில தொழில்களைத் தக்க ஆற்றலும் திறமையும் உள்ளவர்களிடம் ஒப்படைத்தல் வேண்டும். அப்படி ஒப்படைத்திருந்தாலும், தான் மேற்கொண்டு கவனித்தலும் வேண்டும். ஒப்படைக்கப் பட்டவர்களிடம் தலைவன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதைத் தெளிவு படுத்துவதே **'தெரிந்து வினையாடல்'** என்ற அதிகாரம். பணியினை மேற்கொண்டு செய்து வருபவர்களிடம் சந்தேகம் கொள்ளுதல் கூடாது. அவர்கட்கு முழுப் பொறுப்பினையும் ஒப்படைக்க வேண்டும். இவை போன்ற பல கருத்துக்களையும் இந்த அதிகாரம் விளக்கு கின்றது.

நல்ல பதவிகளில் அமர்த்துவதற்கு முன்பாக அப்படிப்பட்டவர்களை நன்கு ஆராய்ந்து பார்த்துத் தேர்ந்தெடுக்க வேண்டிய வழி முறைகளையெல்லாம் ''தெரிந்து தெளிதல்'' என்ற அதிகாரம் விளக்கிச் சொல்கின்றது.

**புலி**

''நமக்கெல்லாம் இது முடியுமா?'' என்பது போன்ற எண்ணங்கள் பலருக்குத் தோன்றுதல் கூடும். மனித மனம் உள்ளவர்கள் அவ்வாறு நினைத்தல் சரியல்ல! மனவெழுச்சி என்பது மனத்திற்கென்றே இருக்க வேண்டிய உணர்ச்சியாகும். அந்த மனவெழுச்சியே ஊக்கம் என்று கூறப்படுகிறது.

'நம்முடைய அளவுக்குப் பெரியதாயிற்றே' என்று மலைத்தல் கூடாது. ஊக்கமும் முயற்சியும் அந்த மலைப்பினைத் தகர்த்துப் போக்கிவிடும்.

உருவத்தில் மிகப் பெரியது யானை. அதுமட்டுமல்ல; நல்ல பலமும் உள்ளது. காட்டில் பெரிய விலங்கு யானை. அதுவும் பயந்து நடுங்கி விடும். எப்போது?

யானையின் உடம்பினையும் தோற்றத்தினையும் பார்க்கின்றபோது புலியின் உருவமும் தோற்றமும் மிகச் சிறியதேயாகும். ஆனால் புலி எதிர்ப்பட்டால் யானை அஞ்சுகின்றது. ஏன்? யானைக்கு ஊக்கமுடைமை இல்லை. ஆனால் புலியோ ஊக்கம் மிகுதியாக உடையது.

எதிரிகள் படைமிகுதி பெற்றிருப்பினும் ஊக்கம் நிறைந்த சிறுபடையினரிடம் தோற்பர். மனித வாழ்க்கையில் ஊக்கத்தை மிகுதியாக வளர்த்தல் வேண்டும். மனவெழுச்சி எப்போதும் துடித்துக் கொண்டிருக்க வேண்டும். அந்த மனவெழுச்சியான ஊக்கம், பெரியதான செயல் களையும் செய்து முடிக்க உதவும். ''**புலி தாக்குறின்**'' (599) என்ற குறிப்பு அரிய மேலான உண்மையைப் புலப்படுத்துகிறது. இவ்வாறே பிறவற்றையும் கண்டுணர்தல் நல்லது.

**புலியின் தோல்**

'ஒரு பசுவானது புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு மேய்ந்தது போன்றதாகும்' என்று குறிப்பிட்டார். புலியின் தோற்றத்தைக் கண்டு காவற்காரர்கள் பயந்து விடுவார்களாம். சிற்றின்ப இச்சையினை நிறைவேற்றிக் கொள்ளத் துறவிகள்போல் சிலர் வேடம் தரித்துக் கொண்டு '**மேய்வார்கள்**' என்று கூறப்பட்டது. மிகமிக வலிமை நிறைந்த புலியின் தோற்றத் தைக் காட்டுகின்ற வலிமையில்லாத பசுவினைப் போல, சிற்றின்ப மனம் படைத்த, மனவலிமை யற்றவர்கள் உயர்ந்த தவ வலிமை பெற்ற முனிவர்கள் போலக் காட்சியளித்துக் கொண்டு தவறு செய்வார்கள்.

புலித் தோலைப் போர்த்திக் கொண்டு புல்மேய்ந்த அப் பசுவுக்குப் 'புலி புல் தின்னாது' என்பது தெரியாது போலும்!

பிறர்க்குரிய மகளிரை விரும்பும் வஞ்சக நெஞ்சத்தினராகிய வேடதாரிகள் வெளிப் படுத்தப்படுகிறார்கள் என்பதாம். 'மேய்ந்தற்று' என்று கூறி, **வல்லுருவம்** (273) என்றும் கூறப்பட்டது சிந்தனைக் குரியனவாம்.

மனம் போன போக்கிலேயே நடப்பவர்கள் போலித் துறவிகள் ஆவர். தனக்குரிய தோட்டத்தில் புல்லினைத் தின்னாமல் பிறர்க்குரிய தோட்டத்தில் மேய்ந்தது என்பது உணர்த்தப்பட்டது. பேசும் சொற்களையும் காட்டும் தோற்றத்தினையும் அடிப்படையாகக்

கொண்டு ஒருவரை உணர முற்படுதல் மிகத் தவறு என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. அவரவர்கள் செய்கின்ற பண்பான செயல்களைக் கொண்டுதான் அவர்களை அளந்து பார்த்தல் வேண்டும். இவ்வாறு சொல்லுதல் உலகியல் நடைமுறைப் பழக்கமாகும்.

**பச்சிலை மூலிகை**

பச்சிலை என்றும் 'மூலிகை' என்றும் கூறுவார்கள். பச்சிலை மூலிகை எனச் சேர்த்தும் கூறுவார்கள். அனைத்தும் ஒரே பொருளினைக் குறிப்பது என்று கூறுவ ல் தவறேதும் இல்லை.

பூமியில் விளைகின்ற செடிகள், மரங்கள் என்பன பலவகையுண்டு. பூமியில் முளைக்கின்ற செடி, கொடி, மரம் என்பவற்றிற்குக் கணக்கில்லையென்றே கூறலாம். முளைக்கின்ற அனைத்தும் பயனுள்ளவை என்றும் கூற முடியாது; பயனற்றவை பலவுண்டு!

பயனுள்ளவையும் மிகப் பலவுண்டு. **மருந்தாகித் தப்பா மரங்களும் (217)** உண்டு. சில செடிகள் அழகிய மலர்களை உண்டாக்கித் தருகின்றன. மலர்கள் சிறிது நேரம் அழகினைக் காட்டி மறைவன வாகும். ஒன்றுக்குமே பயனில்லாத செடிகளும் தோன்றி மறைகின்றன.

மிகவும் பயனுள்ள பச்சிலைகள் என்பனவும் மூலிகைகள் என்பனவும் பூமியில் தோன்றுபவையே. அவை சிற்சில இடங்களில்தான் காணப்படும். மருத்துவ அறிவு கொண்டவர்களுக்கே அம்மூலிகைகள் தெரியும். அவற்றை உட்கொண்டால் கொடிய நோய்களெல்லாம் பறந்தோடும். மூலிகைகள் பார்ப்பதற்கும் ஆராய்வதற்கும் இருப்பன என்பதல்ல; உட்கொண்டு நோய்களைப் போக்குதல் வேண்டும். அவை உடம்புக்கு வலிமையும் உண்டாக்குவனவாகும்.

உலகில் நூல்கள் பற்பல எழுதப்படுவதுண்டு. பயனற்ற பல நூல்களும் எழுதப்பட்டுக் காணப்படுகின்றன. சிற்சில நூல்கள் சுவையானவையாய் இருக்கும். ஆனால் வாழ்க்கைக்குப் பயனற்றவையாய் மறையும்!

தவமுனிவர்கள் அருளுகின்ற நூல்கள் ஒழுக்க நூல்களாகும். அவைகளில் காணப்படும் சொற்களுக்கு 'மறை மொழிகள்' என்று பெயர். திருக்குறள் அத்தகைய மறைமொழிகள் நிறைந்த நூல். ஒவ்வொரு சொல்லும் ''பச்சிலை மூலிகை' போன்று உள்ளத்தின் நோய்களைப் போக்கி உரம் அளிக்கும்; வலிமையுண்டாக்கும். மனக்கவலைக்கு மருந்தாகும். உட்கொள்ளுகின்ற மூலிகையினைப் போல குறட்பாக்களின் சொற்கள் நெஞ்சில் எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்க வேண்டும். மனப்பாடம் செய்து முடித்தால் மட்டும் போதாது. எப்பொழுதும் சொல்லிக் கொண்டே இருத்தல் வேண்டும். உள்ளத்தில் சிந்தனை செய்து கொண்டே இருக்க வேண்டும். அச்சொற்கள் மறைமொழிகளானபடியால் நம்மையறியமலேயே செயல்படுத்தும் ஆற்றல் கொண்டவை.

திருவள்ளுவர் அருளிய திருக்குறள் கருத்துக்களை யுணர்த்தும் சொற்களை மட்டும் கொண்டதென்று நின்று விடுதல் கூடாது; பயனுள்ள ஆராய்ச்சி செய்வதற்குரிய நூல் என்பதும் கண்டு போற்ற வேண்டும். இதை மறுக்க முடியாது; என்றாலும், ஆராய்ச்சிலேயே காலங் கழித்தல் மறைமொழியின் பயனை உணராததாய் முடியும்.

திருக்குறள் வழிபாட்டிற்குரிய அரிய நூலாகும். நம்பிக்கையுடன் நாள்தோறும் சிறிது நேரமாவது குறட்பாக்கள் சொல்லப்பட வேண்டும். பயனை உடனே தெரிந்து கொள்ள முடியும். 'காட்டி விடும்' (28) என்பது அருமையான எடுத்துக் காட்டாகும். உலகப் பொது மறையான திருக்குறள், அன்றும் இன்றும் என்றும் நிலைத்து நிற்பதற்குக் காரணம், தவமுனிவர் அருளிய சொற்களின் தவத்தன்மை என்பதைப் புரிந்து கொண்டு பயன் பெறுவோமாக.

**பொருள் செயல் வகையும்**
**நன்றியில் செல்வமும்**

'பொருள் செயல்வகை', 'நன்றியில் செல்வம்' என்று கூறப்பட்ட இரண்டு அதிகாரங்களையும் ஒருசேர எண்ணிப் பார்த்தல் பயனுள்ளதாக இருக்கும். பொருள், செல்வம் என்பன ஒரே பொருளினைக் குறிப்பன. இக்கால நடைமுறையில் 'பணம்' என்றும் கூறப்படுகிறது. ஆனால், இச்சொல் பொருள், செல்வம் என்பன குறிப்பதுபோலப் பரந்த கருத்தினைக் குறித்துக் காட்டுவது ஆகாது.

பொருள் எத்தகைய பெருமையினை உண்டாக்கும்; எத்தகைய பயனுள்ளது என்பதையெல்லாம் **பொருள் செயல் வகை** என்ற அதிகாரம் நன்கு விளக்குகிறது. அவ்வாறு ஈட்டிய (சேர்த்த) பொருள் எவ்வாறு பயன்படுத்தப்பட வேண்டும் என்பதை **நன்றியில் செல்வம்** என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்துகிறது.

தனக்கும் பயன்படாமல், பிறர்க்கும் பயன்படாத செல்வம் பற்றிக் கூறப்பட்டது. "நன்றி இல்" என்பது பயன்படாதது என்பதனைக் குறித்தது. குற்றம் புரிபவன், செல்வம் பெற்றிருப்பவனேயானாலும், அக்குற்றம் செல்வத்தின்மேல் ஏற்றப்பட்டு 'நன்றியில் செல்வம்' எனப்பட்டது.

செல்வம் ஒன்றுக்கும் பயன்படாதவாறு முடக்கி வைத்திருத்தல் குற்றமாகும். செல்வத்தின் பயன் தடுக்கப்படுதல் கூடாது. தான் அடைய வேண்டிய பெருமையினை செல்வத்தைக் கொண்டு அடையாதவன் பயனற்றவனே யாவான். செல்வத்தைப் பெற்றிருப்பதும் சேர்ப்பதும் எவ்வளவு இன்றியமையாததோ அதுபோல அச்செல்வம் பலருக்கும் தனக்கும் பயன்படுமாறு செய்தலும் இன்றியமையாததாகும்

**காமத்திற்குக் கண்ணில்லை!**

காதலன் காம இன்பத்தில் திளைத்தவனாகித் தன்னுடைய காதலியைப் பிரிய முடியாதவனாய் இருக்கின்றான். தன் காதலியைப் பார்க்க முடியாத நேரமே இருக்கக் கூடாது என்று கருதுகிறான். எந்நேரமும் அவள் தன் கண் முன்னேயே இருக்க வேண்டும் என்பது அவனுடைய அவா. அத்துடன் அவன் நின்று விடவில்லை; தன்னுடைய அருமைக் காதலியைத் தன் கண்களிலேயே கொண்டு வந்து வைத்திருக்க வேண்டும் என்று முடிவு செய்துவிட்டான்!

அப்போது அவனுக்கு எண்ணம் ஒன்று தோன்றிற்று. காதலியைக் கண்களில் கொண்டுவந்து வைத்திருக்க **இடமில்லை** என்று கண்டு கொண்டான். ஏன்? முன்னமேயே கண்களில் இரண்டு பாவைகள் இருக்கின்றன. ஆதலால் தன் காதலியைக் கொண்டு வந்து அங்கே வைத்திருக்க இடமில்லை! அவனுக்குக் கண்களில் இருக்கும் பாவைகளைவிடச் சிறந்தவள் அவனுடைய காதலி. ஆதலால், பாவைகளைப் பார்த்து, "பாவைகளே, நீங்கள் இருக்கும் இடத்தை விட்டுப் போய் விடுங்கள்" (1123) என்று கூறுகின்றான். பாவைகள்

இல்லையென்றால் "பார்வை கிடையாது - குருடனாவோம்" என்பதையும் அவன் மறந்தான்! காம இன்பம் கண்களையும் பயனற்றதாக்கிவிடும் என்பது குறிப்பாயிற்று. காமத்திற்குக் கண்ணில்லை!

### பகுத்தறிவு

அறிவுக்கு எல்லை என்பது இல்லை. அது வளர்ந்து கொண்டே போவது. அதனுடைய வளர்ச்சிக்கு முடிவு கூறுதல் முடியாது. மணற்கேணியினைத் தோண்டத் தோண்ட நீர் ஊறி வருவதைப் போல அறிவு (396) மேலும் மேலும் வளர்ந்து கொண்டே போகும். சிறந்த அறிவுடைமை என்பதற்கு அடையாளம், கண்டது, கேட்டது என்பனவற்றை அப்படியே கொள்ளாமல் ஆராய்ந்து எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதேயாகும்.

'அறியாமை' என்பது எல்லோரிடத்திலும் இயல்பாக இருக்கக் கூடும் என்று ஆசிரியர் அறிவுறுத்துகிறார். "இவர் அரிய நூல் பலவற்றைக் கற்றவராயிற்றே; குற்றம் சொல்லுவதற்கு ஒன்றுமே இல்லாத தன்மையுடையவராயிற்றே" என்று யாரைப் பற்றி நினைத்திருக்கின்றோமோ, அப்படிப்பட்டவரிடத்திலும் ஆராய்ந்து பார்த்தால், **தெரியுங்கால்** (503) அறியாமை என்பது இல்லாமல் இருக்காது என்று கூறுகின்றார். ஆதலால் ஆராய்ந்து பார்க்க வேண்டிய இன்றியமையாத் தன்மை கூறப்பட்டது. எல்லோரிடத்திலும் ஒவ்வொரு நேரத்தில் அறியாமை இருக்கும் என்கிறார். பகுத்துப் பார்க்கின்ற போதுதான் "அங்கேயும் அறியாமை இருக்கின்றது" என்பது புலப்படும்.

ஒருவர் கூறுவதையும் ஆய்ந்து பார்த்துத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதை "**யார் யார் வாய்க் கேட்பினும்**" (423) என்பது உணர்த்துகிறது.

ஒரு பொருளினைப் பார்த்த மாத்திரத்திலேயே முடிவு செய்து விடுதல் கூடாது. அப்பொருளின் காட்சியளவிலேயே முடிவு செய்து விடாமல் நன்கு ஆராய்ந்தே அறிதல் வேண்டும் என்பதை "**எப்பொருள் எத்தன்மைத்து**" (355) என்பது உணர்த்துகிறது. இதுவே போன்று இன்ன பிறவும் கண்டு தெளிக.

பகுத்தறியும் ஆற்றலும் சிறந்த அறிவு படைத்தவர்களாலேயே முடியும் என்பதும் அறிந்துணர வேண்டியதாகும். "**அறிவுடையார் எல்லாம் உடையார்**" (430) என்ற அருங்குறட்பா அனைத்தையும் தன்னுள் கொண்டு விளங்குகிறது. விளக்கத்தைப் பிற இடங்களில் கண்டு தெளிக.

### உலகப் பொதுமறையும் உலகியல் நடைமுறையும்

திருக்குறள் உலகப் பொதுமறை என்ற சிறப்புடன் போற்றப்பட்டு வருகிறது. எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்திற்கும் பொதுவான உண்மைகளைக் கூறுவதே இதற்குக் காரணமாகும். மக்களினம் ஒருமைப்பட்டு வாழ்தல் வேண்டும் என்பதே திருவள்ளுவரின் அடிப்படைக் கருத்து. அறிவுக்குப் பொருந்தாத வேறுபாடுகளைக் களைந்தெறிவதுதான் மக்கள் முன்னேற்றமாகும் என்பது ஆசிரியரின் கொள்கை.

உலகத்தில் பேரறிஞர்கள் கூறிய கருத்துரைகளையும், சான்றோர்கள் வகுத்துக் கூறிய அறநெறிகளையும், உலகத்தில் மேலாகக் கூறப்படும் நூல்களில் காணப்படும் உண்மைகளையும்

நன்கு ஆராய்ந்து அறிந்து கூறுதலும் திருவள்ளுவரின் முறைகளாகும். அவர் ஆங்காங்கு 'என்ப' என்று குறிப்பதையும் நாம் கண்டறிதல் வேண்டும்.

அறிவு, கல்வி, ஆற்றல், ஆராய்ச்சி இன்ன பிறவும் ஒருவர் பெற்றிருந்தாலும் உலகில் அவ்வப்போது நடைபெறும் நிலைமைகளை யறிந்து, அதற்கேற்ப நடந்து கொள்ள வேண்டு மென்பதும், அது நல்வழியாக இருக்க வேண்டுமென்பதும், உலக மக்களோடு நெருங்கிப் பழக வேண்டுமென்பதும் ஆசிரியர் கூறும் வழி முறையாகும். இவற்றையும் இன்ன பிறவற்றையும் குறிக்கும் சில குறட்பாக்களை அறிந்து, புரிந்து கொள்ளுதல் வேண்டும். பிறவற்றையும் கண்டு தெளிக.

| | | | |
|---|---|---|---|
| ஒத்தது அறிவான் | 214 | எவ்வது உறைவது உலகம் | 426 |
| உலகத்தோடு ஒட்ட ஒழுகல் | 140 | செயற்கை அறிந்தக் கடைத்தும் | 637 |

என்பன போன்றவை அரிய கருத்துக்களைத் தெளிவுபடுத்துவனவாம்.

**அரண்**

சிறப்பான நாட்டிற்கு இருக்க வேண்டிய உறுப்புக்களில் 'அரண்' என்பதும் ஒன்று. நாட்டைக் காப்பாற்றும் அரசு போற்றிக் காப்பாற்ற வேண்டியது அரண். காவலனுக்கு நிறைந்த பாதுகாப்பை யளிப்பது அரணேயாகும். உலக நடைமுறையில் கோட்டை என்றும் கூறப்படுவதுண்டு. அரண் இயற்கையான அமைப்புகளால் அமைக்கப்படுவது உண்டு. எல்லா இடங்களிலும் அப்படிப்பட்ட இயற்கை யமைப்பு இருக்காது. ஆதலால் செயற்கை முறையில் அமைக்கப்பட்டிருப்பதும் உண்டு.

கோட்டை என்பது போர் வீரர்கள் பாதுகாவலாகத் தங்கி இருக்கவேண்டிய இடமாகும். அந்தந்தக் காலத்திற்கு ஏற்றபடி அறிவு நுட்பத்தினால் அரண் அமைக்கப்பட்டிருக்க வேண்டு மென்பதனைச் சுட்டிக் காட்டவே **அருமை** (743) என்று கூறப்பட்டது. பொதுவாக அரண், பொறிகளினால் தாக்க முடியாததாக இருக்க வேண்டும் என்பது குறிப்பு. எல்லாக் காலத்திற்கும் ஒரே மாதிரியான அரண் பயன்படாது என்பதை வற்புறுத்தவே **அரிதாய்** (745) **எல்லாப் பொருளும் உடைத்தாய்** (746) என்பன போன்று கூறினார். அந்தந்தக் காலத்திற்கு ஏற்றவை களைப் பொதுவாகக் கூறவேண்டியே, 'எல்லாப் பொருளும்' என்றார். காலமாறுபாடுகளால், கருவிகள் மாறுபடக் கூடியவை. ஆகையால் அவ்வப்போது நுட்ப மதியினால் அறிந்துணர்ந்து அமைத்தல் வேண்டும் என்பதற்காகவே 'அருமை', 'அரிதாய்' என்றும் குறித்துக் காட்டினார். இதனை நன்கு புரிந்து கொள்ளுதல் வேண்டும். 'அரண்' என்ற தனி அதிகாரத்தினைச் சிந்தித்தறிக.

போர் செய்தலென்பதனைப் பொதுப்படக் கூறும்போது இருவகைகளாய்க் கூறலாம். ஒன்று, தான் பகைவன்மேல் படையெடுத்துச் செல்வது. மற்றொன்று, தன்மீது வந்து தாக்கிய படையினின்று தான் பாதுகாத்துக் கொள்ளுதலும், வந்த பகைவனை ஓடச் செய்தலுமாகும் போர் செய்தலில் மிகவும் பொதுவானதும் எக்காலத்திற்கும் பொருந்துவனவும் ஆகிய உண்மைகளை மட்டுமே ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

பகைவன் மீது படையெடுத்துச் செல்வதை **வலியறிதல், காலமறிதல், இடனறிதல்** முதலிய அதிகாரங்கள் பொதுப்பட எடுத்துக் கூறுகின்றன. தன் நாட்டின்மீது போருக்கு வந்த

பகைவனிடமிருந்து காத்துக் கொள்ளுதலையும், பிறவற்றையும் **'அரண்'** முதலிய அதிகாரங்கள் குறிப்பாக உணர்த்துகின்றன. காவலர்க்கு முதன்மையானது போர் முறைகளேயன்றோ!

**குறிப்பறிதலும் குறிப்பறிவுறுத்தலும்**

'குறிப்பறிதல்' என்ற பெயரில் இரண்டு அதிகாரங்கள் உள்ளன. ஒன்று பொருட்பாலில் உள்ளது. மற்றொன்று காமத்துப்பாலில் உள்ளது. பொருட்பாலில் உள்ள **குறிப்பறிதல்** என்ற அதிகாரம் சிறந்த தனிப்பட்ட ஆற்றல் படைத்தவர்களைப் பற்றிக் கூறுவதாகும். அத்தகைய ஆற்றல் பெற்றிருப்பவர்கள் மிகவும் அரிதாகக் காணப்படுவர். அத்தகைய ஆற்றல் பெற்றிருப்பவர்களை நாட்டுக் காவலனாகிய மன்னன், அவர்கள் விரும்புவது எதுவேண்டு மானாலும் கொடுத்துத் தனது அவையில் வைத்துக் கொள்ளவேண்டும். அரசன் கூறாமலேயே அவன் உள்ளத்தில் உள்ளதை அவர்கள் அப்படியே கண்டு கொள்ளும் ஆற்றல் பெற்றவர் ஆவர்.

மாற்றார் தனது தலைவரிடம் வந்தபோது அவர்கள் உள்ளத்தில் உள்ளதை அவர்கள் கூறாமலேயே கண்டு கொள்வார்கள். கண்களின் நுட்பத்தின் வகைகளைப் புரிந்தவர்கள் ஆவர். அவர்கள் இயற்கையறிவு நிரம்பப் பெற்றவர்கள். ஆதலால்தான் அவர்களைத் **தெய்வத்தோடு ஒப்பக் கொளல் (702)** என்று கூறப்படுகிறது. நுண்ணிய பல கருத்துக்களை இந்த அதிகாரம் கூறுகிறது.

காமத்துப்பாலில் **குறிப்பறிதல்** என்ற அதிகாரம் ஒன்று உண்டு. இது காதலியின் பார்வைகளின் தன்மைகளைக் கூறுகிறது; காதலர் நிலையில் தோன்றும் (நோக்கப்படுகின்ற) நோக்குகளின் கருத்தினைக் குறிப்பால் உணர்த்துகின்றது. தலைமகன் தலைமகளின் குறிப்பினை அறிந்து கொள்வதும், தோழி குறிப்பினை அறிதலும், அத்தோழி இருவர் குறிப்பினை அறிதலும் ஆகிய அனைத்தையும் இவ்வதிகாரம் கூறுகின்றது; கண்களின் பலவிதமான பார்வைகளை விளக்குகின்றது; இது காமத்துப்பாலில் **களவியல்** பகுதியில் உள்ளது.

இனி, காமத்துப்பாலில் **கற்பியல்** பகுதியில் **குறிப்பு அறிவுறுத்தல்** என்றொரு அதிகாரம் உள்ளது. இதுவும் கண்களின் துணைகொண்டே கூறப்படுகிறது. தலைவியின் கண்களே அவள் உள்ளத்தில் உள்ள எண்ணங்களைத் தெரிவிக்கின்றன.

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றிருந்தான். பிரிந்த காலத்தில் தலைவி அளவிலாத் துன்பத்தில் ஆழ்ந்திருந்தாள். தலைவன் தனது பணி முடிந்த பிறகு வீடு திரும்பினான். இருவரும் இன்பம் நுகர்ந்தனர். மகிழ்ச்சியுற்றனர். மீண்டும் தலைவன் பிரிந்து சென்று விடுவானோ என்று தலைவி அச்சமுற்றாள். ஆனால் அக்கருத்தினை அவள் வாய்விட்டுக் கூறவில்லை. என்றாலும் அவள் மனத்திலுள்ளதை அவளுடைய கண்களே உரைக்கின்றன; அறியாதவனை அறியுமாறு செய்கின்றன. தலைமகன் புரிந்து கொள்கின்றான். நுட்பம் நிறைந்த பற்பல கருத்துக்களைக் **குறிப்பறிவுறுத்தல்** என்ற அதிகாரம் (128) கூறுகின்றது.

**கண்கள்**

கண்களை அடிப்படையாகக் கொண்டு 'ஐந்து அதிகாரங்கள்' திருக்குறளில் கூறப்படு கின்றன. இவ்வைந்து அதிகாரங்களில் இரண்டு பொருட்பாலிலும் மூன்று காமத்துப்பாலிலும்

காணப்படுகின்றன. சிந்தித்தறிய வேண்டிய பல நுட்பமான உண்மைகள் இந்த அதிகாரங்களில் காணப்படுகின்றன.

**குறிப்பறிதல், கண்ணோட்டம்** ஆகிய இரண்டு அதிகாரங்களும் பொருட்பாலில் காணப்படுகின்றன. **குறிப்பறிதல்** என்ற பெயரிலேயே அமைந்திருக்கும் மற்றுமொரு அதிகாரமும், **கண்விதுப்பழிதல், குறிப்பறிவுறுத்தல்** ஆக மூன்று அதிகாரங்களும் காமத்துப்பாலில் காணப்படுகின்றன. அதிகாரங்களாகக் கூறப்படுகின்ற இவையல்லாமல் கண்களின் இயல்புகளை யெல்லாம் பிற இடங்களிலும் கண்டு தெளிதல் வேண்டும்.

### கீழ்மக்கள் ஆசாரம்

கயவர்கள் கீழ்மக்கள் எனப்படுவார்கள். **கயமை** என்ற அதிகாரம் இவர்களைப்பற்றித் தெளிவு படுத்துகிறது. இவர்கட்கு நல்லெண்ணமே இருப்பதில்லை. இவர்களும் ஆசாரமாகத் தங்களைக் காட்டிக் கொள்வார்கள். உள்ளத்தில் அழுக்குடனும் பார்ப்பதற்கு ஆசாரமாகவும் காட்சியளிப்பார்கள். அப்படி ஆசாரமாக இருப்பதற்குக் காரணங்கள் இரண்டு உண்டு. ஒன்று தனக்கு மேலாக இருப்பவர்களிடத்தில் கொண்ட அச்சமாக இருக்கும். மற்றொன்று அவ்வாறு ஆசாரமாகக் காட்சியளிப்பதால் பொருள் வருவாய் உண்டு. ஆதலால் இத்தகைய தீயவர்கள், ஆசாரம் (1075) என்பதாகக் காட்டிக் கொண்டாலும், கீழ்மக்கள் என்றே அறிதல் வேண்டும்.

### இடங்கண்டு குறட்பாக்களுக்குப் பொருளுணர்தல்

திருவள்ளுவர் அருளிய திருக்குறளில் கூறப்பட்டுள்ள நற்பண்புகள் மக்கள்அனைவர்க்கும் இருக்க வேண்டியதென்பது பொதுவிதி. உலகில் வாழும் மக்கள் மேற்கொண்டுள்ள வாழ்க்கைத் துறைகள் பலவகை. ஆதலால் அறிவுகொண்டு சிந்தித்து நடந்து கொள்ள வேண்டியதே சீரிய முறையாகும்.

திருக்குறளில் காணப்படும் சொற்கள் இடத்துக்கேற்ப நல்ல முறையில் விளக்கம் தருவனவாம். முதல் அதிகாரத்தில் 'இறைவன்' என்ற சொல் கூறப்படுகிறது. ஒழுக்கம் நிறைந்து தூய அறிவினனாகிய எண்குணத்தான் இறைவன் ஆவான். இந்த உலகம் ஒருவனை முதலாகக் கொண்டதென்பது முதல் குறட்பாவின் கருத்து சிறந்த குறிப்பு. இப்பகுதியில் கூறப்படும் **இறைவன்** என்ற சொல் அந்த முதல்வனையே குறிக்கும்.

அரசியல் பகுதியில் பேசும்போது நாட்டுத் தலைவனான காவலன் என்னும் மன்னனும் **இறைவன்** என்று குறிக்கப்படுகின்றான். **இறைவன் செறினும்** (778), இறைவர்க்கு, **இறைவற்கு** (690, 733) என்பன போன்ற இடங்களையும் கண்டு தெளிதல் வேண்டும்.

'அன்புடைமை' என்ற அதிகாரம் மக்களுயிர்க்கு இன்றியமையாத பண்பு அன்பேயாகும் என்று சிறப்பித்துப் பேசுகிறது. அன்புக்கு இலக்கணம் மிக நன்றாக இப்பகுதியில் கூறப்படு கிறது. அரசியல் பகுதியில் நல்ல பதவிகளுக்குத் தக்கவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டிய வழிமுறைகளைத் 'தெரிந்து தெளிதல்' என்ற அதிகாரம் விளக்கிக் கூறுகின்றது. அங்கே மன்னன், அன்பு காரணமாக அறிவிலாரிடம் தொழிலினை ஒப்படைக்கக் கூடாது என்கின்றார்! 'இந்த இடத்தில் சிறந்த அன்பு கொண்டவர்கள் என்பதைக் கருதாதே' என்று இதைக் **'காதன்மை கந்தா'** (507) எனும் குறட்பா கூறுகின்றது. பிறவற்றையும் கண்டு தெளிக.

பணிவு என்பது சிறந்த, பெருந்தன்மையான ஒரு குணமாகும். இல்லறப் பகுதியில் **பணிவுடையன் இன்சொலன்** (95) என்று கூறப்படுகிறது. **நன்றாம் பணிதல்** (125) என்றும் சொல்லப்படுகிறது **பணியுமாம் என்றும் பெருமை** என்பது போன்றும் பணிந்து நடத்தலின் சிறப்பு இன்னும் பிற இடங்களிலும் தெளிவுபடுத்தப்படுகிறது. என்றாலும், பணிந்து, தாழ்ந்து நடத்தல் கூடாது என்று கூறப்படுகின்ற இடமும் உண்டு.

நிறைந்த செல்வம் உண்டானபோது யாவர் மாட்டும் பணிவு வேண்டும். பணிவாகப் பழகினாலும் செல்வம் கருதிப் பிறர் உயர்த்துவர் என்பது குறிப்பு.

ஆனால் செல்வம் குறைந்து வறுமை போன்ற நிலை உண்டானபோது பணியாமை வேண்டும். அதாவது தாழ்வு வராமல் பழைய உயர்ச்சியின்கண்ணே நிற்றல் வேண்டும் என்பதாம். **பெருக்கத்து வேண்டும்** (963) என்பதைச் சிந்தித்தல் வேண்டும். பிறவும் கருதுக. உலகியல் நடைமுறைகளை நன்கு அறிந்து ஏற்றபடி ஒழுகுதலே அறிவுடைமை யென்பது இங்கு வற்புறுத்தப்பட்டது.

**மாந்தர்க்குக் கற்றனைத்து ஊறும் அறிவு** (396) என்று குறிப்பிட்டுக் கல்வியின் மேன்மையும் அறிவின் சிறப்பும் உணர்த்தப்பட்டது. என்றாலும் உலகத்தின் நடைமுறைகளை யொட்டி அதற்கேற்ப நடந்து கொள்ள அவன் தெரிந்து கொள்ளவில்லை யென்றால், அவன் பல கற்றிருந்தாலும் **அறிவிலாதான்** (140) என்றே கருதப்படுவான்.

இல்லறத்தின் பெருமையைக் குறிப்பிடுகின்றபோது மிகவும் மேலானதாக எடுத்துக் காட்டுகிறார். அவரவர்கள் மேற்கொண்ட வாழ்க்கையில் கடமை தவறாமல் உறுதியாக அவ்வாழ்க்கையிலேயே தூய்மையாக இருந்துவிட்டால் அதுவே எல்லா மேலான சிறப்பினையும் தரும். ஆதலால் இல்வாழ்க்கையில் இருப்பவனின் பெருமையினை **முயல்வாருள் எல்லாம்தலை** (47), **நோற்பாரின் நோன்மை யுடைத்து** (48) என்பன போன்ற பல குறிப்புகளால் எடுத்துக் காட்டுகிறார். இல்லறத்தை மேற்கொண்டவன் துறவற வாழ்க்கையைப் பற்றி நினைத்தல் கூடாது. அப்படி நினைத்துக் கொண்டிருந்தால், மேற்கொண்ட இல்லற வாழ்க்கையில் தவறு ஏற்பட்டு விடும். ஆதலால் இல்லறத்தில் நிலைத்து உறுதிப்படவேண்டும் என்பது உணர்த்தப் பட்டது. துறவிகளை விடவும் மேலானவன் என்று கருதி கடமை யாற்றுதல் வேண்டும் என்பதும் இல்லற நெறியிலேயே நிற்றல் வேண்டும் என்பதும் தெளிவுபடுத்தப்படுகிறது.

அதுவே போலத் தவ வாழ்க்கை (துறவற வாழ்க்கை)யை மேற்கொண்டவர்கள் பற்றற்ற அவ்வாழ்க்கையையே சிறப்பாகக் கொள்ள வேண்டும். இல்லற வாழ்க்கையைவிட துறவறம் எவ்வளவோ சிறப்புடையது என்று பாராட்டுகிறார். **தவம் செய்வார் தங்கருமம்** (266), **மறந்தார்கொல்** (263) என்பன போன்று குறிப்பிடுவனவெல்லாம் துறவற வாழ்க்கையே மிக மேலான தென்றும், அந்த வாழ்க்கையினை மேற்கொண்டவர்கள் உறுதியாக அந்நெறியிலேயே நிற்றல் வேண்டுமென்றும், இல்லற வாழ்க்கையினைக் கருதுதல் தகாது என்றும் உய்த்துணர வைக்கப்பட்டது.

உலகியல் இன்பங்களையும் ஆசைகளையும் பற்றிக்கொண்டு வாழ்வது இல்லறம். அதுவே உலகியல் வாழ்க்கை. ஆசைகளை அறவே விட்டொழித்த பற்றற்ற வாழ்க்கையே துறவறமாகும்.

அருளாளர்கள் என்பவர்கள் துறவறத்தினை மேற்கொண்ட தவத்தோர் ஆவர். அது நோன்பு நோற்றல் எனப்படும். அவர்களே அந்தணர், முனிவர், துறவிகள், நீத்தார் என்று அழைக்கப்படுவர். அவர்கள் உள்ளம் எப்போதும் எவ்வுயிரிடத்தும் அருளுள்ளமாகவே இருந்து வரும்.

உலகியலில் வாழ்கின்ற இல்லறத்தார்கள் எப்போதும், எல்லா உயிர்களிடத்தும் அவ்வாறு இருத்தல் இயலாது. ஏனெனில், அவர்கள் பல்வேறு வாழ்க்கையினை மேற்கொண்டு வாழ்பவர்களாவர். ஆனால், உலகியலில் வாழும் இல்லறத்தார்க்கு அருள் உள்ளமே இருக்காது என்பதல்ல! ஒவ்வோர் நேரத்தில் அவர்கட்கும் கருணை, இரக்கம், அருள் என்பது இருக்கும்; பிறகு மாறிவிடும். உலகியல் வாழ்க்கை அப்படிப்பட்டது.

ஆனால் பற்றற்ற முனிவர்களோ என்றால் எல்லாக் காலத்திலும் எல்லா உயிர்களிடத்திலும் அருள் கொண்டே வாழ்வார்கள். ஆதலால்தான் அவர்கள் அருளாளர்கள் எனப்பட்டனர்.

'அருளுடைமை' என்ற அதிகாரத்தில், **தன்னின் மெலியார் மேல்** (250) என்று குறிக்கப்பட்டது. பிற உயிர்களுக்குத் துன்பம் செய்தல் தகாது என்று கூறப்பட்டது. 'மெலிந்தவர்களை நடுங்கச் செய்யாதே' என்று முனிவர்க்கு அருள் திறம் பலவாறாகக் கூறப்பட்டது. நோன்பு நோற்பவர்களின் வழிமுறைகளும் எடுத்துரைக்கப்பட்டன.

படையெடுக்கும் நாட்டுத் தலைவனுக்குக் கூறும்போது தன்னைவிட மெலிந்தவர்கள் மீது பகைத்தலை விரும்பிப் போர் தொடுக்கலாம் என்கின்றார். **மெலியார் மேல் மேகபகை** (861) என்பது சிந்திக்கத் தக்கதாகும். வலிமையுள்ள மன்னன் தன்னைவிட மெலிந்தவர்கள் மீது பகை கொள்ளுதலும் படையெடுத்தலும் வேண்டும் என்கிறார் திருவள்ளுவனார். இன்ன பிற இடங்களை அறிந்துணர்க; வேறுபாடுகளைப் புரிந்து கொள்க.

உலக நடையினைக் கண்டு உணர்ந்து தம்மால் இயன்ற அளவு மற்றவர்களுக்கு உதவியாக இருக்கும் நெறிமுறைகளை யெல்லாம் **ஒப்புரவறிதல்** என்ற அதிகாரம் (22) விளக்குகின்றது. **தக்கார்க்கு வேளாண்மை** (212) என்பதும் பிறவும் ஒப்புரவறிதலின் ஒப்பற்ற சிறப்பினைக் கூறுகின்றன. ஆனால் அந்த ஒப்புரவறிதலும் உள்ள அளவுக்குத் தகுந்தபடி இருத்தல் வேண்டும் என்றும் ஆசிரியர் கூறுகின்றார்.

'வலியறிதல்' என்ற அதிகாரத்தில், **உளவரை தூக்காத ஒப்புரவாண்மை** (480) என்று சொல்லப்பட்டுள்ளதையும் கருதிப் பார்த்து, உலகியல் நடைமுறையினைக் கண்டுகொண்டு நடந்து கொள்ளுதல் வேண்டும்.

'ஈகை' என்ற அதிகாரம் மிகவும் மேலான மனிதப் பண்பாட்டினை எடுத்துரைக்கிறது. உலகில் புகழ் நிலை நிறுத்தப்படுவது ஈகையினாலேயேயாம். **இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்** (223) என்றெல்லாம் ஈகைத் தன்மை உயர்த்திப் பேசப்படுகின்றது. என்றாலும், தம் பொருளின் அளவறிந்து ஈதல் வேண்டும் என்பதை, **ஆற்றின் அளவறிந்து ஈக** (477) என்பது குறிக்கின்றது. உலகில் வாழ்கின்றபோது பலவற்றையும் உள்ளத்தில் கொண்டு அறிவுடைமை யுடன் செய்தல் வேண்டும் என்பது பெறப்பட்டது.

எல்லோர்க்கும் பயன்தரும் நன்மைகளையே சான்றோர்கள் செய்வார்கள் என்று "சால்பின்" அருமை கூறப்பட்டது; இனிமையான நல்லனவற்றையே செய்வார்கள். அதுவே சால்புக்கு இலக்கணம். **இனியவே செய்யாக்கால்** (987) என்பது இக்கருத்தைக் கூறும். என்றாலும் நல்லன செய்யும் போதும் செய்யப்படுபவர்களின் பண்பினை யறிந்தே செய்தல் வேண்டும் என்பதையும் குறிப்பிடுகின்றார். அப்படி அறிந்து செய்யாவிட்டால் நல்லனவற்றிலும் தவறு உண்டாகி விடும் என்று கூறுகின்றார். எனவே, **நன்றாற்றலுள்ளும் தவறுண்டு** (469) என்பதைக் கருதி, அந்தந்த இடத்திற்கேற்ப அறிவு கொண்டு சிந்தித்துச் செய்தல் வேண்டும்.

நோன்பு நோற்றல் என்பது தவ வாழ்க்கை. உயர்ந்த நன்னெறிக ளெல்லாம் அருளாளர்களிடம் இயல்பாய் இருத்தல் வேண்டும். அவை எக்காலத்திலும் இடைவிடாமல் இருத்தல் வேண்டும். அதுவே நோன்பு நோற்கின்ற தவ வாழ்க்கை யென்னும் துறவற வாழ்க்கையாகும். துறவறம் ஏற்ற முனிவர்கட்குக் கூறப்பட்ட ஒழுக்க நெறியில் அமைக்கப்பட்ட உயர்ந்த குணங்கள், சிற்சில நேரங்களில் இல்லறத்தினை மேற்கொண்ட மக்களிடம் காணப்படும். ஆனால் எக்காலத்திலும் உலக மக்களிடம் அவற்றைக் காண முடியாது. ஏனெனில் அவர்கள் தவத்தோர் போல நோன்பு நோற்பவர்கள் அல்லர்.

'புலால் மறுத்தல்', 'கொல்லாமை' போன்ற உயர்ந்த ஒழுக்க நெறிகள் நோன்பு (விரதம்) நோற்கின்ற தவத்தோர்களிடம் என்றென்றும் இருந்தாக வேண்டும். இல்லறத்தினை மேற்கொண்டு உலகியலில் வாழ்பவர்களிடம், நோன்பு நோற்றல் இருத்தல் இயலாது.

படைவீரர்கள் கொல்லுவதற்கென்றே போர் செய்பவர்களாவர். கொலை செய்கின்ற குற்றவாளிகளை அழித்தல் அரசனுக்குக் கடமையாகும்; அரசுக்கு வேண்டியதாகும். **வேந்தன் தொழில்** (549) **வேந்து ஒறுத்தல்** (550) என்பன சிந்திக்க வேண்டியவையாகும்.

நோன்பு நோற்கின்ற தவத்தோர் ஒழுகுகின்ற நெறிகளை இல்லறத்தில் இருக்கும் உலகியல்பாளர் பின்பற்றி ஒழுகுவார்களேயானால் மிகவும் நலம் சேர்க்கும். ஆதலால்தான் உலக மக்களால் எக்காலத்திலும் பின்பற்றுதற்கு இயலாத கடினமான பண்புகள், நோன்பு நோற்கின்ற தவத்தோர்க்கு இன்றியமையாதவையாகக் கூறப்பட்டன. தவத்தோர் அந்த இயல்புகளில் எக்காலத்திலும் சிறிதும் நழுவுதல் கூடாது. உயர்ந்த இயல்பான, கடினமான பண்பாடுகளெல்லாம் துறவறத்தில் குறிக்கப்பட்டு விட்டபடியால், ஏனைய எளிய அறங்களும் அதனுள் அடங்கும்.

காலத்தின் அருமையினை மிகவும் சிறப்பாகக் கூறுவது 'காலம் அறிதல்' என்ற அதிகாரம். பொதுவான கருத்துக்களும் சிறப்பான கருத்துக்களும் இவ்வதிகாரத்தின்கண் கூறப்பட்டுள்ளன. **ஞாலம் கருதினும் கைகூடும்** (484) **பருவத்தோடு ஒட்ட ஒழுகல்** (482) என்றெல்லாம் கூறப்படுகின்றது. நாட்டின் காவலனுக்குச் சிறப்பாகவும், உலக வாழ்க்கையினர் அனைவர்க்கும் பொதுவாகவும் இவை கூறப்பட்டன.

ஆனால் பிறிதோர் இடத்தில் கூறுகின்ற போது **இல்லை பருவம்** (1028) என்று கூறுகின்றார். தான் வாழும் நாட்டு மக்களுக்குத் தொண்டாற்றுபவர் பருவத்தை (காலத்தைக் கருதிக் கொண்டிருக்கக் கூடாது என்று அறிவுறுத்துகின்றார். தனக்கென்று தனிப்பட்ட முறையில் செயல் புரிபவர்கள் மட்டுமே காலத்தினைக் கருதிக் கொண்டிருத்தல் வேண்டும்! பொது மக்களுக்குத் தொண்டாற்றுபவர் எக்காலத்திலும் தொண்டு செய்யு

வேண்டும் என்று கூறுகின்றார். இதனைக் "குடிசெயல் வகை" என்ற அதிகாரம் குறிப்பிடுகின்றது. 'குடி' என்பது சிறு கூட்டமாகிய குடும்பத்தையும் பெருங்கூட்டமாகிய நாட்டு மக்களையும் உணர்த்தும்.

'மானம்' என்றொரு அதிகாரம் உண்டு. பொதுவாக மானம் என்ற சொல்லுக்கு **அளவு** என்று பொருள். மனித வாழ்க்கை என்பது இப்படித்தான் வாழ வேண்டும் என்ற அளவினைக் கொண்டது, எதைச் செய்தேனும் வாழ்ந்தால் போதும் என்பது மானங் கெட்ட வாழ்வாகும்! ஆதலால்தான் தனது நிலைமை குறையாமல், இழிவு வராமல், தனது மானத்திற்குப் பங்கம் வராமல் வாழ வேண்டும் என்பதையெல்லாம் 'மானம்' என்ற அதிகாரம் விளக்குகின்றது.

என்றாலும், பொது மக்களுக்காகத் தொண்டாற்றுகிறவர்கள் மானத்தையும் கருதிக் கொண்டிருக்கக் கூடாது என்று கூறுகின்றார். தனிப்பட்டவன் வாழ்க்கையில்தான், மானம் கருதிக் கொண்டிருக்க வேண்டிய முறை உண்டு பொது மக்களுக்குத் தொண்டாற்றுபவன் 'மானம்' என்பதையும் கருத வேண்டியதில்லை. இதை **மானம் கருதக் கெடும்** (1028) என்று உணர்த்தப்படுகின்றது. ஆகவே, இடனறிந்து நற்பொருள் உணர வேண்டும். ஒருவன் தனிப்பட்ட முறையில் தவறு செய்துவிட்டு அதற்காகத் தண்டிக்கப்பட்டு, சிறை செல்வானேயானால் அது அவனை மானமழிந்தவன் என்பதாக்கிவிடும். நாட்டு மக்களுக்குத் தொண்டு செய்வதில் சிறை செல்லும் காலம் வந்து அவ்வாறு சென்று வருவானேயானால் அது பெருமையேயாகும்; மானமழிதல் ஆகாது என்று தெளிய வேண்டும்.

மனவெழுச்சி என்பதே ஊக்கமாகும். மனிதனை உயர்த்த வல்லது ஊக்கம். ஊக்கம் எவ்வளவுக்கெவ்வளவு உயர்கின்றதோ அந்த அளவு அவனது வாழ்க்கையும் உயர்ந்து சென்று கொண்டிருக்கும். இவை போன்ற அரிய உண்மைகளெல்லாம் 'ஊக்கமுடைமை' என்ற அதிகாரத்தில் கூறப்படுகின்றன. ஊக்கத்தைத் தளரவிடாதே என்பது தமிழ்மறை வாக்காகும்.

அத்தகைய ஊக்கம் என்னும் மனவெழுச்சியும் அளவு கடந்து போகக் கூடாது என்றும் கூறப்படுகின்றது. அளவு கடந்த மனவெழுச்சி உயிரையும் போக்கிவிடும். ஆதலால் அறிவின் துணைகொண்டு ஊக்கத்தையும் அளவுடன் வைத்துக் கொண்டு செயல் புரிய வேண்டுமென்பதும் கூறப்படுகின்றது. இடமறிந்து, நன்கு ஆராய்ந்து அறிவுடைமையுடன் செயல்பட வேண்டும். **'ஊக்கத்தின் ஊக்கி'** (473), **அஃது இறந்து ஊக்கின்** (476) என்பனவும் சிந்திக்க வேண்டியன.

தன்னுடன் பழகியவர்களையும் பயின்றவர்களையும் கண்டால் அவர்கள் கூறியவற்றை மறுக்க முடியாத தன்மைக்கு **கண்ணோட்டம்** என்று கூறப்படும். இப் பெயரில் அதிகாரம் ஒன்று உண்டு. இது இரக்கம் (தாட்சண்யம்) என்றும் கூறப்படும். **பழைமை** என்ற அதிகாரத்தினையும் இதனுடன் ஒப்பிட்டுக் கருதலாம். யாவரிடமும் இரக்கத்துடனும், கருணையுடனும் இன்ன பிற தன்மைகளுடனும் இருப்பதைக் கூறுவதே 'கண்ணோட்டம்'.

அத்தகைய கண்ணோட்டமும் இருக்கக்கூடாது என்று சொல்லப்படுவதும் கவனிக்கத் தக்கது. அதாவது நீதி வழங்குகின்றபோது **கண்ணோட்டம் கூடாது** என்கின்றார். 'செங்கோன்மை' என்ற அதிகாரத்தில் **ஓர்ந்து கண்ணோடாது** (541) என்று அறிவிக்கப் படுகின்றது. இதுவும் இவை போன்றவைகளையும் இடம் நோக்கி அறிந்துணர்க.

**கெழுதகைமை** என்றொரு குணமுண்டு. இது அருமையான குணமாகும். 'பழைமை' என்ற அதிகாரத்தில் கெழுதகைமை நன்கு விளக்கிக் கூறப்படுகிறது. கெழுதகைமை என்பதற்குப் 'பழைய உரிமை' என்று பொருள். நெடுநாள் பழகிய நண்பர்கள் உரிமையுடன் செய்வனவற்றைப் பொறுத்துக் கொள்ளுவதற்குக் கெழுதகைமை என்று பெயர். நண்பர்களிடம் காணப்படும் உயர்ந்த சிறப்பு இந்தக் கெழுதகைமையே யாகும். **நட்பிற்கு உறுப்பு கெழுதகைமை** (802) என்று கூறுகின்றார். நெடுநாட்களாகப் பழகியவர்கள், தாம் வருந்துவன செய்தாலும் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும் என்பதாகும்.

என்றாலும் இந்தக் கெழுதகைமை எல்லா இடத்திலும் நன்மையே செய்துவிடாது என்றும் கூறப்படுகின்றது. நன்கு சிந்தித்தறிய வேண்டிய பகுதி இது. மன்னர்களிடத்தில் பழகும் போதும், தலைவர்களிடத்தில் பழகும்போதும் நெடுநாள் பழக்கம் உள்ளதால் கெழுதகைமை பாராட்டப்படும் என்று கருதிப் பழகிவிடக் கூடாது. அதனால் **கெழுதகைமை கேடுதரும்** என்று கூறப்பட்டது. ஆதலால் எதனையும் அறிவாராய்ச்சியால் செய்ய வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது.

'நட்பு' என்ற அதிகாரம் நட்பின் சிறப்பினையும் நண்பர்களின் உயர்ச்சியினையும் எடுத்துக் காட்டுகிறது. மனத்தினாலே ஒத்து நடப்பதே நட்பாகும். **அகநக நட்பது நட்பு** (786) என்பது போன்று பல அரிய உண்மைகள் சொல்லப்படுகின்றன.

ஆனால் சிலரிடம் நாமும் முகத்தில் மட்டும் பொய்யாக நகைத்துக் காட்டி மனத்தில் நட்பினைக் கொள்ளாமல் பழகிக் கொண்டே நட்புக்கு அழிவு வருமாறு செய்தல் வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்; அது எப்போது என்பதும் குறிக்கப்படுகிறது. வெளிக்குக் காட்டிக் கொள்ளாத பகைவர்கள் நமக்குத் தீமை செய்வதற்காக நம்முடன் நெருங்கிப் பழகுவார்களாம். அவர்களிடம் நாமும் பொய்யாகப் பழகி, பொய்நட்பு காட்டி அவர்களை அழித்தல் வேண்டும். **நகச்செய்து நட்பினுள்** (829) என்பதும், **முகநட்டு அகநட்பு ஒரீஇ** (830) என்பதும் இதை மெய்ப்பிக்கின்றன.

**நாணுடைமை** என்ற அதிகாரம் (102) மிகச் சிறந்த கருத்துரைகளைக் கொண்டது. இழிதொழில் செய்தற்கு நாணமடைதல் வேண்டும். மனிதப் பிறவிக்கு இதுவே எடுத்துக் காட்டாகும். மகளிர்க்குக் கூறும்போது நாணம் என்பது அளவுடன் அவர்கட்கு எல்லா வகைகளிலும் இருத்தல் வேண்டும் என்று கூறப்படுகிறது. பெண்பிறவி என்பது தனிச் சிறப்பு வாய்ந்த தாகையால், 'நாணுடைமை' அவர்கட்கு மிக மேலானதாக வற்புறுத்திக் கூறப்படுகின்றது. நாணம், வாழ்வில் என்பது உயிரினும் மேலானதாகக் கருதப்படும் என்பது உண்மையிலும் உண்மையாகும். நாணமற்ற வாழ்க்கை மக்கள் வாழ்க்கையே ஆகாது. என்றாலும், அத்தகைய நாணமும் ஒரு பெண்ணிற்கு இருக்கத் தேவையில்லாத நேரமும் ஒன்று உண்டு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. "இவ்வுலகில் நாணம் என்பது உண்டு என்பதை அறியாதவளானேன்" என்று ஒரு பெண் கூறுகின்றாள். தனது நாயகனுடன் இன்பம் நுகர்கின்ற காலத்தில் அவள் நாணத்தினை மறந்து நடந்து கொள்ள வேண்டும் என்பது குறிப்பாகும். **நாண் என ஒன்றோ அறியலம்** (1257) என்று அவள் கூறுகின்றாள். இப்படிப் பலப்பல.

உலகியல் முறையில் உயர்ந்த உண்மைகளை உணர்த்துவதோடு அவைகளைப் பின்பற்றிக் கடமையாற்றி வாழும் முறையினையும் கூறி, அறிவின் துணையே துணை என்ற உண்மைக்குச் சில சான்றுகளையும் கண்டோம். பிறவும் கண்டு தெளிக.

**இரண்டு வாழ்க்கை**

உலகில் வாழும் அனைவரும் அறநெறியில் வாழ்தல் வேண்டும் என்பது ஆசிரியர் திருவள்ளுவரின் முடிந்த முடிபு. அறவாழ்க்கையை மேற்கொண்டு வாழ்பவர்கள் இருவகையினராவர். அவர்களே இல்லறத்தார், துறவறத்தார் எனப்படுவர். உலகில் இந்த இருவித வாழ்க்கை அறங்கள் கூறப்படுகின்றன.

இல்வறம், மனைவி மக்களுடன் உலகியல் இன்பம் நுகர்ந்து பொருளீட்டி ஈகை முதலியன செய்து வாழ்கின்ற வாழ்க்கை. இதனைப் பொதுப்பட **'இல்லறவியல்'** என்ற பகுதி விளக்குகிறது. காமத்துப்பால் முழுவதும் இப்பகுதியிலேயே அடங்குகிறது. அரசன், அமைச்சன், மறவன், ஒற்றன், தூதன், தொழிலாளி, ஆசிரியன் இன்ன பிறரும் இல்லறத்தார்களேயாவர். பெரும்பாலும் இவ்வுண்மை பெறப்படும். எனவே, பொருட்பாலும் இல்லற வாழ்க்கையைத் தழுவிய உலகியல் வாழ்க்கையே ஆகும்.

ஆனால் துறவறம் என்பது தனிப்பட்டது; பற்றில்லாதது; அஃது நோன்பு நோற்று தவம் செய்யும் வாழ்க்கையாகும். இதன்கண் **பதின்மூன்று** அதிகாரங்கள் உண்டு. முதல் **ஒன்பது** அதிகாரங்கள் **நோன்பு நோற்றல் (விரதம்)** பற்றியன. ஏனைய **நான்கு** அதிகாரங்களும் **'ஞானம்'** என்கின்ற நிலையினை உணர்த்துவன. அது பேரின்பம் என்னும் நிலை எனப்படும். எல்லா நற்குணங்களும் ஒன்று சேர்ந்து அடக்கிக் கொண்ட பண்புகள் இப்பகுதியில் கூறப்படுகின்றன என்பது சுருக்கமான விளக்கமாகும்.

**நோன்பு நோற்றல்**

நோன்பு நோற்றல் என்பது உலகியல் பழக்கத்தில் **'விரதம்'** என்றும் கூறப்படும். உலகியல் பழக்கத்தில் இயல்பான குணங்களுடன் வாழ்வது இல்லற வாழ்க்கை. அறவாழ்க்கையென்பது இல்லறம், துறவறம் என்று இருவகையாகக் கடைபிடிக்கப்படும். இல்லறத்தில் இருப்பவர்களே உலகியல் நடைமுறைகளில் கலந்து கொண்டு வாழ்பவர்களாவர். காமத்துப் பாலில் கூறப்பட்ட அனைத்தும் இல்லறமான உலகியலில் பற்றுக் கொண்டவர்களுக்கே உரியன. பொருட்பாலில் கூறப்படும் வாழ்வியல்மக்கள் எல்லாரும் பெரும்பாலும் இல்லறத்தார்களே யாவர்.

திருக்குறளில் கூறப்படும் நற்பண்புகள் அனைத்துமே பொதுவாக இல்லறம், துறவறம் என்பனவற்றை மேற்கொண்டவர்களுக்கும் பொருந்தும் என்று கூறவேண்டும். இது பொது விதியாகும்.

சிறப்பாகக் கருதும்போது சிற்சில அதிகாரங்களும் குறட்பா கருத்துக்களும் சிலருக்கு மட்டுமே பொருந்துவனவாகும் என்பது குறிப்பாக உணர்ந்து கொள்ளப்பட வேண்டும்.

உதாரணமாக அரண், ஒற்றாடல், தூது, செங்கோன்மை, கொடுங்கோன்மை வெருவந்த செய்யாமை, படைச்செருக்கு முதலியனவும் இவை போல்வனவும் நாடாளும் அரசுக்கே உரியன. ஆங்காங்கு குணநலன்களாகக் கூறப்பட்டவைகளைப் பலரும் கருதி வாழ்வில் கைக்கொள்ளுதல் வேண்டும்.

கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை போன்ற அதிகாரங்களும் பிறவும் பொதுப்பட அனைவர்க்கும் உரியவாகும். அரசியல் பகுதியில் கூறப்பட்டன என்று தனித்துக் கருதுதல் தவறு.

இல்லறம் என்ற பகுதியில் ஒருவனை இல்லறத்தானாக அமைத்துக் காட்டி, அவனுக்கு இன்றியமையாத நற்குணங்கள் குறிப்பிடப்பட்டன; இல்லறத்தானாக அவனை நிறுத்திப் பார்க்கின்றபோது அவன் சிறப்பாகக் கொள்ள வேண்டிய நற்பண்புகள் கூறப் பட்டன. அவன்தான் உலகியல் நடைமுறையில் இருப்பவனும் ஆவான்.

உலகில் ஒருவனைப் பொதுவாக அமைத்துக் காட்டிப் பல வகையான மக்கள் வாழ்கின்ற உலகில் அவன் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதையே 'பொருட் பால்' குறிப்பிடுகிறது. உலகில் மக்களிடையே வாழ்பவனும் இல்லறத்தானே என்பதும் நன்கு புரிந்து கொள்ள வேண்டும்.

சிற்சில அதிகாரங்களில் கூறப்படும் கருத்துக்களைச் **சிறப்பானதென்றும், பொதுவான தென்றும் கொள்ள வேண்டும்.** அமைச்சருக்கு என்றே சில குறட்பாக்கள் குறித்துக் காட்டும்; என்றாலும் பொதுவாக அறியப்படுவனவும் அதே அதிகாரத்தில் காணப்படும் நாட்டுக் காவலனாகிய மன்னர் என்று குறிப்பிட்டு அவர்களுக்கென்று சில கருத்துக்கள் கூறப்பட்டாலும், அதே அதிகாரம் பொதுப்பட அறிந்து கொள்ள வேண்டிய சில உண்மைகளையும் கொண்டிருக்கும்.

'துறவறம்' என்ற பகுதி நோன்பு நோற்றல் என்பதை அடிப்படையாகக் கொண்டது. நோன்பு நோற்றல் என்பது எல்லாராலும் எளிதில் பின்பற்ற முடியாது. இதையே 'விரதம்' என்று கூறுவார்கள். வாழ்வியலில் இன்றும்கூட சிலர் சில நாட்களில் 'விரதம் இருக்கின்றோம்', விரத நாட்கள்' என்று கூறுவதைப் பார்க்கின்றோம். விரத நாட்களில் அதிகமாகச் சாப்பிடாமல் இருப்பது என்றும் கூறப்படுகிறது. இதனையே நோன்பு என்பர்.

நோன்பு நோற்றல் என்றால் இயல்பாக உள்ள விரும்பத் தகாத குணங்கள் அனைத்தையும் அறவே நீக்கி விடுதல் என்று பொருள். இதை உலகியலில் வாழுகின்ற இல்லறத்தார் எளிதில் பின்பற்ற முடியாது. ஆகவே 'நோன்பு நோற்றல்' என்ற முறையில் வாழ மேற்கொண்ட துறவறத்தார்களுக்கு இது கூறப்பட்டது. அத்தகைய பண்புகளை முற்றிலும் ஆசையற்றவர்களே பின்பற்றுதல் கூடும். எந்த நேரத்திலும் அக்குணங்கள் அவரை விட்டு நீங்காதிருத்தல் வேண்டும்.

ஆகவே, அத்தகைய பண்புகள் அமைவதற்குத் 'தவம்' செய்தல் வேண்டும். துறவறத்தை மேற்கொண்டவர்கட்கே 'தவம்' என்ற அதிகாரம் கூறப்பட்டது. **துன்பம் சுடச்சுட நோற்கிற்பவர்க்கு** (267) என்று நோன்பு நோற்றலைக் குறிக்கிறார். **நோற்பார் சிலர் பலர் நோலாதவர்** (270) என்பதும் தவம் என்ற அதிகாரத்தில் காணப்படுகிறது. நோன்பு நோற்றல் என்பது சிலரால்தான் முடியும் என்பதும் உணர்த்தப்பட்டது. **தவமும் தவமுடையார்க்கு ஆகும்** (262) என்பதும் பிறவும் நன்கு சிந்தித்தறிய வேண்டுவனவாகும்.

பற்றற்றவர்களே நோன்பு நோற்கும் வாழ்க்கையினை மேற்கொள்ள முடியும் என்பதனைச் சுட்டிக் காட்டவே **'இயல்பாகும் நோன்பிற்கு ஒன்று இன்மை'** (344) என்று கூறினார். கொல்லாமை அதாவது ஓரறிவு உயிரையும்கூடக் கொல்லுதல் கூடாது என்கிற நோன்பு, மிகவும் தலையானது என்பதைச் சுட்டிக் காட்டவே **'கொல்லா நலத்தது நோன்மை'** (984) என்று குறிப்பிட்டுள்ளார். துறவறத்தை மேற்கொண்ட முனிவர்கள் 'குணமென்னும் குன்றேறி நின்றவர்கள்' ஆவார்கள். அருமையானவைகளைப் பெறவேண்டும் என்றால், 'நோன்பு' நோற்க வேண்டும் என்பதை **'என்நோற்றான்'** (70) (எப்படிப்பட்ட நோன்பு நோற்றிருப்பானோ) என்பதும் எடுத்துக் காட்டத் தக்கதாகும்.

அந்தந்த வாழ்க்கையில் கூறப்பட்ட நெறிகளில் தவறாது கடமையாற்றிக் குற்றமின்றி வாழ்வார்களேயானால், அதுவே உயர்ந்த நிலையினை அடைவதற்கு வழியாகும் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இல்லறத்தை மேற்கொண்டவர்கள் அதற்குக் கூறிய நெறிமுறை களில் உறுதியாக நின்று அவ்வாறே வாழ்தல் வேண்டும். அத்தகையவர்கள் துறவறத்தைப் பற்றி நினைத்தல் கூடாது. அதை வற்புறுத்திக் காட்டவே இல்லற நெறியில் கடமை தவறாது வாழ்பவர்கள் துறவற நெறியில் நின்றவர்களையும்விடச் சிறந்தவர் என்றார். ஏன்? அது நோன்பு நோற்றுத் துன்பங்கள் பலவற்றையும் தாங்கிச் செய்வது அரிய தென்பதால் ஆகும்.

துறவறத்தினைப் பற்றிக் குறிப்பிடும்போது **'உண்ணாது நோற்பார்'** (160) என்று கூறினார். மேலும் துறவறம் கடுமையாக முயற்சி செய்து பின்பற்ற வேண்டியதாகும். இதை **'முயல்வாருள் எல்லாம்'** (47) என்றும் குறித்தார். **'நோற்பாரின்'** (48) என்று கூறி நோன்பு நோற்கின்ற வாழ்க்கையே துறவற வாழ்க்கை என்பதை அறிவுறுத்தினார். இன்ன பிறவும் இவ்வாறே கண்டு தெளிதல் வேண்டும்.

'துறவறம்' என்பது இரண்டு பிரிவுகளாகக் கருதப் படுதல் வேண்டும். முதற் பிரிவு **'நோன்பு நோற்றல்'** (விரதம்) என்பது. மற்றொரு பகுதி **'ஞானம்'** ஆகும். ஞானம் என்பது பேரின்ப நிலையில் நிற்றல் என்பதாகும். முதல்பிரிவில் ஒன்பது அதிகாரங்கள் கூறப் பட்டுள்ளன. அடுத்த பகுதியில் நான்கு அதிகாரங்கள் கூறப்பட்டுள்ளன. இந்த நான்கு அதிகாரங்களில் காணப்படும் குறட்பாக்களின் கருத்துக்களை நன்கு தெரிந்து புரிந்து கொள்ளு வதற்கு நூலறிவு மட்டும் முழுதும் துணை புரியாது. இதைச் சிந்தித்து அறிதல் வேண்டும். நோன்பு நோற்றல் என்ற நெறிகளில் முழுத்தன்மை பெற்ற பிறகே, **'ஞானநிலை'** உணர்தல் முடியும். 'ஞானநிலை' என்பது பேரின்பத்தில் ஒன்றித்து நிலைத்து நிற்பதாகும்.

'துறவு' கடின முயற்சியினால் பின்பற்றப்பட வேண்டியதாகும். இடைவிடாமல் இதைப் பின்பற்றியாக வேண்டும். அவ்வாறு செய்வதே நோன்பு நோற்றல் என்பதற்கு இலக்கணமாகும். துறவறப் பகுதியில் இரண்டாவது பிரிவாகக் கூறப்படும் **'ஞானம்'** என்ற பிரிவில் **'துறவு'** என்ற அதிகாரம் காணப்படுகிறது.

முதற்பகுதியான நோன்புப் பகுதியில் கூறப்பட்டவை அனைத்தையும் பின்பற்றி ஒழுகினால் அப்படிப் பட்டவன் துறவி என்னும் பெயருக்கு உரியவனாக மாட்டான்; பேரின்ப நிலையை அடைதலும் முடியாது. முதற் பகுதியில் தவம் செய்தல் முதலியவற்றைக் கூறி, அந்நெறியில் நின்றவன் பெரிய ஆற்றல்களைப் பெறுகிறான். பல சித்திகளும் அவனுக்கு உண்டாகும். தவத்தினால் பெறக் கூடியவைகளையெல்லாம் **'ஒன்னார்த் தெறலும்'** (264) **'வேண்டிய வேண்டியாங்கு'** (265), **'கூற்றங் குதித்தலும்'** (269) என்றெல்லாம் ஆசிரியர் எடுத்தோதுகின்றார்.

எல்லாவித ஆற்றல்களையும் தவசிகள் அடைதல் கூடும். நினைத்தால் எல்லா இன்பங்களையும் அவர்கள் நுகர முடியும். தவத்தின் ஆற்றல் அத்தனைச் செல்வங்களையும் கொடுக்கும். மேலான சிறப்பினை யுண்டாக்கும். அனைத்தையும் தவத்தோர் பெற்றிருப் பார்கள்.

அவ்வளவு ஆற்றல்களும் செல்வங்களும் பெற்றிருக்கும் ஒருவன் அவை அனைத்தையும் தூக்கியெறிதல் வேண்டும். அப்பொழுதுதான் அவன் **ஞான நிலையை** அடைய முடியும். அப்படித் துறந்த நிலையில்தான் அவன் துறவறத் தன்மையின் முழுப் பொருளுக்கு இலக்கணமாவான். **ஞானம்** என்ற பிரிவு இரண்டாவது ஆகும். அது **நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவா அறுத்தல்** என்ற நான்கு அதிகாரங்களைக் கொண்டதாகும்.

இன்பம் நுகர்வதற்கு ஏதும் இல்லாதவன், ஆசை கொள்ளுவதற்கு எந்த வாய்ப்பும் இல்லாதவன் 'துறவியானான்' என்று கூறுவது தவறாகும். ஒன்றுமே இல்லாததால் துறவி போல் ஆக்கப்பட்டவன், பிறகு சூழ்நிலையால் இன்பம் நுகர்வதற்கு வாய்ப்புக்கள் உண்டாகி விடுமேயானல் உடனே இன்பத்திற்கு வந்து நுழைந்து கொள்வான். நுகர்வதற்கு ஒன்றும் இல்லாததால் துறவியாதல் என்பது கற்பனையாகும், தவறானதுமாகும். குற்றங்கள் புரிவதற்கும் இடமாகும்.

ஆதலால்தான், **நோன்பு நோற்றல்** என்ற பகுதி மிகவும் சிறப்பானதாக அமைக்கப் பட்டுள்ளது. இப்பகுதியில் கூறப்பட்ட **தவம்** முதலியன செய்து, பெறற்கரிய ஆற்றல்களும் பெற்று, அத்தகைய செல்வங்களையெல்லாம் வெறுத்து ஒதுக்கிவிட்டு, அவன் **ஞானியாக விளங்க வேண்டும்**. பெறற்கரிய செல்வங்கள் அனைத்தும் பெற்று அதன்பிறகு ஆசைகளை விட்டவனே பற்றற்ற ஞானியாகிறான். இதனைச் சிந்தித்தறிதல் வேண்டும்.

'நோன்பு நோற்றல்' (விரதம்) என்ற பகுதியில் உயர்ந்த பண்புகள் **ஒன்பது** அதிகாரங் களிலே மட்டும் கூறப்பட்டிருந்தாலும், ஏனைய பிற அறங்களும் இவைகளுக்குள்ளே அடங்கும்.

இப்பகுதியில் கூறப்பட்டவை உலகியலில் கலந்து வாழும் இல்லறத்தார் என்பவர் களால் எல்லா நேரத்திலும் பின்பற்ற முடியாதனவாகும். அதற்குக் காரணம் உலகியல் என்பது பலதிறப்பட்ட வாழ்க்கை முறைகளையும் பலதிறப்பட்ட மக்கள் வகையினரையும் கொண்டிருப்பதுதான். எனவே, அக்குணங்கள் ஒவ்வொரு நேரத்தில் இல்லறத்தாரான மக்களால் பின்பற்றுதல் கூடும். என்றாலும், தொடர்ந்து அத்தகைய குணங்கள் அவர்களிடம் இருத்தல் இயலாது. எனவேதான், 'நோன்பு நோற்றல்' பகுதியில் ஒன்பது அதிகாரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

குறிப்பாகக் கூறுகின்றபோது, இல்லறத்தாராலேயே நடத்தப்பட வேண்டியதும் நடத்த முடிவதுமான விருந்தோம்பல், ஒப்புரவறிதல், ஈகை முதலியன போன்றவை நோன்பு நோற்பவர்களால் செய்தல் இயலாது. என்றாலும், நோன்பு நோற்றுப் பெறுகின்ற உயர்ந்த நிலை இல்லறத்தார் மேற்கொண்ட தூய செயல்களால் அடைதல் கூடும் என்பது குறிப்பால் உணர்த்தப் பெற்றது. அவரவர் கடமையினை வழுவாது செய்தல் வேண்டும் என்பது உய்த்துணர வைக்கப்பட்ட செய்தியாகும்.

நோன்பு நோற்று அதன் பிறகு பேரின்ப நிலை அடைகின்ற துறவிக்கு அளிக்கும் சிறப்பு, உலகியலில் வாழ்ந்து உயர்ந்த பண்பாடுகள் நிறைந்த **சான்றோர்**களுக்கும் அளிக்கப்படும். சான்றோர்' என்பவர் **இல்லற ஞானி** என்று கூறப்படுவார். உயர்ந்த பண்பாடுகள் அனைத்தும் நிறைந்திருப்பவரே 'சான்றோர்'. இத்தகையவர்களைக் காண்பது அரிதாகும். **சான்றோன் எனக் கேட்டதாய்** (69) என்பதும் இங்குச் சிந்திக்கத் தக்கதாகும். இல்லறத்தில் வாழ்கின்றவர் களுக்குக் கூறப்படும் குணங்களுடன் துறவறத்தார்க்குக் குறிக்கப்பட்டுள்ள பண்புகளும் 'சான்றோர்' என்பவரிடம் காணப்படும்.

'நோன்பு நோற்றல்' பகுதியில் கூறப்பட்டுள்ள முதல் அதிகாரம் **அருளுடைமை**. அருளாளர், அந்தணர், முனிவர், தவத்தோர், துறவி என்பவரெல்லாரும் ஒரே துறையில் வைத்துக் கருதிப் பார்க்கத் தக்கவர் ஆவர்.

அன்பு முதிர்ந்து, அருள் நிறைந்து உலகில் வாழும் எல்லா உயிர்களிடத்தும் கழிபேரிரக்கம் கொண்டவர்களே அருளாளர்களாவர். அருட் செல்வம் சிறந்த செல்வம். ஆசைகளையெல்லாம்

அறவே விட்டு எல்லோரும் ஒப்ப நோக்கப்பட வேண்டியவர்கள் என்பதே அருள் நிலைக்கு ஏற்ற குணம். பற்றற்றவர்களே எந்த நேரத்திலும் இத்தன்மையில் இருத்தல் கூடும். நோன்பு நோற்றலில் கூறப்படும் அனைத்து அறங்களுக்கும் அருள் அடிப்படையாக இருத்தல் வேண்டும். அருள் உள்ளம் பெற்ற பிறகே ஏனைய அறங்கள் நிலைத்து நிற்கும். அருள் உள்ளம் இல்லாமல் பேசப்படும் இரக்கம், அருள் என்பதை உணர்த்தும் சொற்களும் செயல்களும் பயனற்றவைகளே யாகும். அருள் உள்ளம் அவ்வளவு மேன்மையானதாகும்.

'அருள் உள்ளம்' இல்லாதவர்களும் நல்லவை என்று தோன்றக் கூடிய அறங்களைச் செய்தலும் கூடும். ஆனால், அவை பொருளற்றவை; பயனற்றவையேயாம். **அருளாதான் செய்யும் அறம்** (249) என்பது இதைக் குறிப்பிடுகிறது. பின்னே கூறப்படுகின்ற **புலால் மறுத்தல்** என்ற அதிகாரத்திற்கு இவ்வுண்மை பொருந்தும்.

**அன்புடைமை** என்ற அதிகாரம் இல்லறத்திலுள்ள மக்களுக்குக் கூறப்பட்டது. அது எளிமையாக அனைவராலும் பின்பற்றக் கூடியது. அந்த அன்புகூட இல்லாதவன் மனிதப் பிறவிக்குப் புறம்பானவன். முதிர்ந்த அன்பு, பெற்றெடுக்கும் குழந்தை 'அருள்' ஆகையால் அது நோன்பு நோற்றலில் கூறப்பட்டது.

கொலைப் பாவம் மிகவும் கொடியது. அதற்குக் காரணமாக இருப்பது புலால் உண்ணு தல் ஆகும். அடுத்து வருகின்ற அதிகாரம் **தவம்**. தவத்தை மேற்கொண்டவர்கள் பொதுவாக உடலை வருத்தி உணவு உண்ணாமலும் துன்பம் மேற்கொள்ளுதலும் உடையவர்கள் ஆவர். **'உற்ற நோய் நோன்றல்'** (261) முதலியன தவத்திற்குரிய செயல்களை எடுத்துக் காட்டுவன. அப்படியிருக்க ஊன் உண்ணுதல் மிகவும் துன்பம் தரத்தக்கது. ஊன் உண்ணாமை தலை சிறந்த நோன்பாகும். ஊன் உண்ணல் அவருடைய நோன்பிற்குச் சிறிதும் பொருந்ாது. இது அருளுடையார்களுக்கென்று நோன்புப் பகுதியில் கூறப்பட்டதேனும், உலகியலில் வாழ் பவர்களும் இப்பழக்கத்தைக் கொள்ளுதல் சாலச் சிறந்ததாகும். ஆனால், அவர்கட்கு இந் நோன்பு விதியாகக் கூறப்பட்டதன்று. ஏனெனில், பற்பல நிலைகளில் வாழ்ந்து வரவேண்டிய முறைகள் இல்லறத்தார்க்கு உண்டு. 'புலால் மறுத்தல்' என்கின்ற நோன்பு, 'பழக்கத்தினால்' பலரிடம் காணப்படும். ஆனால், அவர்கள் தீய எண்ணங்கள் நிறைந்தவராகவும், கொடிய செயல்கள் புரிபவர்களாகவும் இருப்பார்கள். ஆகையினால், பழக்கத்தினால் 'புலால் மறுத்தல்' என்பது நோன்பாகாது.

அருள் உள்ளம் பெற்றிருப்பதனால் புலால் மறுத்திருப்பதே நோன்பு என்று உயர்த்திக் கூறப்படும். பழக்கத்தினால் புலால் உண்பவர்கள் பலர் உள்ளனர். ஆனால், அவர்களிடம் நற்பண்புகளும் செயல்களும் பல இருத்தல் கூடும். எனவே, உள்ளம் அருள் தன்மை பெற்றிருக்க வேண்டுமென்பதே தலையானதாயிற்று. தவம் செய்பவர்கள் உடம்புக்குப் 'புலான் மறுத்தல்' மிகமிகத் தேவையானபடியால் **தவம்** என்பதைக் கூறுவதற்கு முன்பாகப் **'புலால் மறுத்தல்** என்னும் அதிகாரம் அமைக்கப்பட்ட தென்பதை நன்கு சிந்துத்து உணர்தல் வேண்டும். **அருளுடைமை, புலான் மறுத்தல், கொல்லாமை** ஆகிய மூன்றும் ஒரே கருத்தினை ஆழப் பதிப்பனவாகும்.

உலகில் தோன்றிய அருளாளர்களான அடியார்கள், முனிவர்கள் முதலியோர் 'மக்கள் அனைவரும் எம்மைப்போல் இருக்க வாருங்கள்!' என்று அழைத்து, அறம் போதிப்பார்கள். உலகோர் அனைவருமே வருதல் வேண்டும்; தங்கள் அருள் மார்க்கத்தில் மக்கள் ஒழுகுதல் வேண்டும் என்று அருள் உள்ளம் கொண்டு கூறுவார்கள். திருவள்ளுவனார் உலகில் வாழும் பலதிறப்பட்ட மக்களையும் அவரவர்கள் மேற்கொண்டுள்ள நற்பணிகளில் நிறுத்தி அறம்

போதித்து, உயர்ந்து சிறக்க வழிவகைகளைக் கூறுகின்றார். உலகிற்குப் பொதுமறை கூற வந்தவர் இவ்வாசிரியர். ஆகையால், எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்திற்கும் பொருத்தமான செம்மையான நெறிகளைக் கூறினார்.

மூன்றாவதாகத் **தவம்** என்ற பகுதி கூறப்பட்டது. இதை இல்லறத்தார் செய்தல் **இயலாது.** ஆதலால், இது நோன்பு நோற்கின்ற தவத்தினர்க்கென்றே கூறப்பட்டதாகும். மேலும் எல்லோருமே தவம் செய்தல் வேண்டுமென்றும் நினைத்தல் கூடாது. **தவமும் தவமுடையார்க்கு ஆகும்** (262) என்பதை இங்கு நன்கு அறிந்துணர்தல் வேண்டும்.

தவ வாழ்க்கையை மேற்கொண்டவர்களுக்கு, கொடிய பகையாக இருப்பது 'சிற்றின்பம்' ஆகும். துறவிகள்போல் வேடம் போட்டுக் கொண்டு சிற்றின்பத்தை நுகரும் கொடியவரைப் பற்றிக் **கூடா ஒழுக்கம்** என்ற அதிகாரம் கூறுகின்றது. தீய ஒழுக்கங்கள் பலவும் நீக்கப்பட வேண்டியதென்றாலும் மிகக் கொடிய சிற்றின்பம் குறிப்பாகக் கூறப்பட்டது. இதை 'நோன் பாளர்கள்' அறவே நீக்கி யொழித்தல் வேண்டும். இல்லத்தார்க்கு மட்டும் சிற்றின்பம் உரியது. **கூடா ஒழுக்கம்** என்று இங்கு கூறப்பட்டதைக் கருதி, **பிறனில் விழையாமை** இல்லறத்தார்க்குக் கூறப்பட்டதென்று பொதுபடக் கொள்ளுதல் வேண்டும்.

பிறர் பொருளை அவரறியாமல் கவர்ந்து கொள்ளும் எண்ணங்கூட முனிவர் உள்ளத்தில் தோன்றுதல் கூடாது. இல்லறத்தார்க்கு விளையாட்டாகவேனும் பிறர் பொருளைக் கைக் கொள்ளுதல் என்ற எண்ணம் வருதல் கூடும். ஆனால், நோன்பு நோற்பவர்கள் உள்ளத் தூய்மையையே முதலாகக் கொண்டவர்கள்; ஆதலால், **'உள்ளலும் தீதே'** (282) என்பவை 'கள்ளாமை' என்கின்ற நோன்பாகக் கூறப்பட்டன. இல்லறப் பகுதியில் **'வெஃகாமை, அழுக் காறாமை, ஒழுக்கமுடைமை** என்பவையும் கூறப்பட்டன. இவை சிந்தனைக்குரியன.

எக்காலத்திலும் தீமையான சொற்கள் நாவில் வருதல் கூடாது. **வாய்மை** என்ற அதிகாரம் தலைசிறந்த நோன்பாகும். இங்கு நெஞ்சறியப் பொய் சொல்லாதே என்றும், இன்ன பிற அரிய உண்மைகளும் கூறப்படுகின்றன. யாதொரு தொடர்பும், ஆசையும் இல்லாதவர்களே தவத்தோராகையால், இவ்வுயர்ந்த நோன்பு அவர்கட்கு விதியாக வைக்கப் பட்டுள்ளது. இல்லறத்தை மேற்கொண்டு மனைவி மக்களோடு குடும்பம் நடத்தி, சமுதா யத்தில் பற்பல பணிகளை மேற்கொண்டு வாழ்பவர்கள் இந்த நோன்பை எக்காலத்திலும் கடைப்பிடித்தல் என்பது இயலாது. அப்படியென்றால், உலகில் வாழ்பவர்கள் எக்காலத்திலும் பொய் பேசித்தான் வாழ வேண்டுமென்பதில்லை! உலகியல் வாழ்க்கையை நடத்த வேண்டி யிருப்பதால் **வாய்மை** என்பதை எக்காலத்திலும் பின்பற்றுதல் இயலாததென்பது குறிக்கப் பட்டது. இல்லற வாழ்க்கையில் கூறப்பட்ட **இனியவை கூறல், புறங் கூறாமை, பயனில சொல்லாமை** முதலிய அதிகாரங்கள் சிந்திக்கத் தக்கவை. இவை இல்லறத்தார் பின்பற்றுதற்கு எளிமையான குணங்கள் ஆகும்.

அடுத்து, நோன்பாகக் கூறப்பட்டிருப்பது **வெகுளாமை** என்னும் அறமாகும். நோன்பு நோற்பவர்களுக்கு இக்குணம் — கோபம் — அறவே இருத்தல் கூடாது. உலகில் வாழ்பவர்க்கு அநேக நேரங்களில் கோபம் வருதல் கூடும். ஏனெனில், அது உலகின் சூழ்நிலை ஆகும். ஆனால், பற்றற்ற முனிவர்களோ சினத்தைக் கருதவே கூடாது. கோபம் எல்லோருக்கும் வருவதாகும். **'புணரின் வெகுளாமை நன்று'** (308) என்று குறிப்பிடுவது சிந்திக்கத் தக்கது.

'நோன்பு நோற்றல்' என்னும் பகுதியில் கூறப்படுவன யாவும் சிறிதும் பிழையாமல் கைக் கொள்ளப்பட வேண்டியவை. இதைத் துறவறத்தார் நன்கு அறிந்துணர்தல் வேண்டும்.

**வாய்மை** என்ற அதிகாரத்தில் கூறப்பட்டவைகளை நோன்பாகக் கொண்டு ஒழுகுதல் இல்லறத்தார்க்கு இயலாத தென்பது உண்மையாகும். இது துறவிகட்கு மட்டுமே முடியும் என்பது வெளிப்படை.

இல்லறப் பகுதியில் **தீவினையச்சம்** என்று கூறப்பட்டது. துறவறத்தில் **இன்னா செய்யாமை** என்பது கூறப்பட்டது. இது பிற உயிர்களுக்குத் துன்பம் செய்தலை நினைக்கவும் கூடாது, செய்தலும் கூடாது என்பது வலியுறுத்தப்பட்டது. மறைபொருளான உண்மை யொன்றையும் **இன்னா செய்யாமை** என்ற இந்த அதிகாரம் உணர்த்துகிறது. இல்லறத்தார்க்குக் கூறப்பட்ட 'தீவினையெச்சம்' என்பது போன்றதல்ல இந்த அதிகாரம். இதைக் குறிப்பால் அறிதல் வேண்டும். தவத்தால் ஆற்றல் பெற்று அத்தவத் தன்மையை யொட்டிச் செய்தல் கூடாது என்பதை முதன்மையாகக் கொண்டு **இன்னா செய்யாமை** என்ற அதிகாரம் கூறப்பட்டது. தவ ஆற்றல் பெற்றவர்கட்கு இத்தகைய எண்ணங்கள் வருதல் கூடவே கூடாது என்று உரைக்கப்பட்டது.

நோன்பு நோற்றல் பகுதியின் இறுதியில் காணப்படுவது **கொல்லாமை** என்ற அதிகாரமாகும். இது ஐயறிவு உடையன முதலாக ஓரறிவு உடையன ஈறாக உயிர்களைக் கொல்லுதல் கூடாது என்கிறது. பற்றற்று இருக்கும் அந்தணாளர்களாகிய முனிவர்கள் இதைப் பெரிய தலைசிறந்த அறமாகவும் கொள்ளுதல் வேண்டும். இல்லறத்தில் வாழுகின்றவர்கள் இந்த அறத்தை மேற்கொண்டு எக்காலத்திலுமே இருத்தல் கூடுமென்று கூறுதல் கூடாது. போர்த் தொழிலினை மேற்கொண்டவர்கள் இதைச் சிந்தித்தலே கூடாது. அரசு நடத்துகிறவர்கள் கொலைத் தண்டனையும் கொடுத்தல் நேரிடும். ஆதலால், நோன்பு நோற்பவர்களுக்கு மட்டுமே கொல்லாமை இன்றியமையாததாயிற்று. **தன்னுயிர் நீப்பினும் செய்யற்க (327)** என்று கூறப்பட்டிருப்பது போன்றவை தவத்தோர்களின் அருள் உடைமையைத் தெளிவாக விளக்குகின்றன.

பின்னர், நோன்பு நோற்று முழுத்தன்மை பெற்றதன் பயனான 'ஞானம்' கூறத் தொடங்கினார். நோன்பு நோற்றலால் வினைமாசு தீர்ந்து அந்தக் கரணங்கள் தூய்மை பெற்றன. தூய்மை பெற்ற பிறகு 'ஞானம்' உண்டாகும்.

இப்பிரிவின் முதல் அதிகாரமாகக் கூறப்படுவது **'நிலையாமை'**. இது, தோன்றுவன அனைத்தும் நிலைத்து நிற்காமல் மறையும் என்ற எண்ணம் உறுதியாக இருத்தல் வேண்டும் என்று உணர்த்துவது. 'ஞானம்' என்னும் பேரின்ப நிலையடைவதற்கு 'நிலையாமை உணர்வு' முதற்படியாகும். 'எல்லாம் மறைந்து விடும்' என்ற உறுதிப்பாடு உண்டான உடனே 'அனைத்தையும் விட்டு விடல் வேண்டும்' என்னும் அடுத்த எண்ணம் உண்டாகிவிடும். புரிந்து கொள்ள வேண்டிய உலகியல் உண்மைகள் பல இந்த அதிகாரங்களில் காணப்படுகின்றன.

புறமாகிய செல்வத்தின் மீதும் அகமாகிய யாக்கையின் மீதும் உள்ள பற்றினை, அவற்றின் நிலையாமை கண்டு விட்டு விடுதல் வேண்டும் என்னும் உண்மையைத் 'துறவு' என்ற அதிகாரம் விளக்குகிறது. இவற்றை யெல்லாம் உலகில் வாழ்கின்ற இல்லறத்தார் பின்பற்றவே கூடாது. இல்லறத்தார் பொருளீட்டுவதும் தக்கமுறையில் ஈகை செய்வதுமான நல்ல நெறியிலேயே இருந்து வருதல் வேண்டும்.

துறவறத்தின் ஆழ்ந்த பொருள்களையெல்லாம் 'துறவு' என்ற அதிகாரத்தில் நன்கு அறிந்துணர்க; இங்ஙனம் நிலையாமை, துறவு ஆகியவற்றைக் கூறிய பிறகுதான் **'மெய்யுணர்வு'** விளக்கப்படுகின்றது.

**மெய்யுணர்தல்** என்பது ஒரு ஞானாசிரியர் மறைமொழியை **உணர்த்த** ஒருவர் உணர வேண்டும். பேரின்பம், (நுகர்கின்ற) மெய்ப் பொருளைக் கண்டு **உணர்கின்ற** நிலையாகும். செம்பொருளினைக் காணுகின்ற நிலையே மெய்யுணர்வு எனப்படும். இப் பகுதியில் கூறப்பட்டுள்ளவை பெரிதும் கற்றுணர்ந்து அறிபவையல்ல. அந்த நிலையிலேயே ஒன்றி நிலைத்து நின்று பேரின் பமயமாவதாகும்.

இறுதியாக 'அவா அறுத்தல்' என்ற அதிகாரம் வைக்கப்பட்டிருக்கிறது. இங்கே சிந்திக்க வேண்டிய ஆழ்ந்த கருத்தொன்றை அறிந்து கொள்ள வேண்டும்.

ஆசைகள் அனைத்தையும் விட்டுவிட்டு (துறவு) மெய்யுணர்தல் என்ற நிலையில் நின்ற பிறகு, அவா (ஆசைகள்) இருக்க இடமில்லை. அப்படியிருக்க **'அவாவறுத்தல்'** என்று ஆசிரியர் கூற வேண்டிய காரணம் என்ன? இதுவும் நன்கு சிந்திக்கத்தக்கது.

துறந்த பின்புகூட பழைய பயிற்சி வயத்தால், பிறவிப் பழக்கத்தால் விட்டுத் துறந்த ஆசைகள், ஒவ்வோர் நேரத்தில் மீண்டும் வந்து சேருதலும் உண்டு. ஆகையால், இடைவிடாத மெய்ப்பொருளுணர்வால் அதனை **அறுத்தல் வேண்டும்** என்பதற்காகவே 'அவா அறுத்தல்' என்று கூறப்பட்டது. **அந் நிலையே பேரா இயற்கை தரும்** (370) என்று கூறப்பட்டதும் பிறவும் சிந்தித்தறிதல் வேண்டும்.

திருவள்ளுவர் அருளிய திருக்குறளில் 'துறவறப் பகுதி என்பதை ஒருபகுதியாகவும், ஏனைய 'இல்லறவியல்', 'பொருட்பால்', காமத்துப் பால்' ஆகிய மூன்றனையும் ஒருபகுதி யாகவும் கண்டு கொள்ளுதல் வேண்டும். முதல் நான்கு அதிகாரங்கள், இந்த இருவகைக்கும் பொதுவாக அமைக்கப்பட்டன.

**இரண்டு தொழில்கள்**

உலகில் தொழில்கள் பலவகைகளாகப் பிரித்துக் கூறப்படும். பல தொழில்கள் இடத் தினாலும் காலச் சூழ்நிலைகளாலும் மாறுதல் அடையக் கூடியவை. ஆதலால்தான் ஆசிரியர் தொழில்களைப் பற்றியும், அவை செய்யும் வழிமுறைகளைப் பற்றியும், தொழிலாளர்களைப் பற்றியும் (வினை செய்வார்) எக்காலத்தும் நிலைத்து நிற்பதாகிய கருத்துக்களை மட்டும் இன்றியமையாதனவாகக் கூறியிருக்கிறார். **மாறுதல் அடையக் கூடியவைகளைத் திருக்குறளில் காண முடியாது.**

மாறுதல் அடையக் கூடாததும், என்றும் உலகத்தில் நிலைத்து நிற்பதுமான இரண்டு தொழில்களை மட்டும் ஆசிரியர் கூறுகின்றார். ஒன்று **உழவு** என்பது. 'உழவு' என்ற அதிகாரம் கூறப்பட்டுள்ளது. மற்றொன்று **'வாணிபம்'**; இதனை **'நடுவு நிலைமை'** என்ற அதிகாரத்தில் குறிப்பால் உணர்த்தினார்.

**பெரியாரைத் துணைக் கோடல்**
**பெரியாரைப் பிழையாமை**

இந்த இரண்டு அதிகாரங்களும் நன்கு சிந்தித்தறிய வேண்டுவனவாகும். நாட்டுத் தலைவனாகிய காவலன் பேரறிவு படைத்தவர்களைத் துணையாக வைத்துக் கொண்டிருத்தல் வேண்டும். அமைச்சர்கள், தலைவனுக்குத் துணையாக இருந்தாலும்கூட பெரியாரை— சிறப்பானவரைத் துணையாகக் கொள்ள வேண்டும் என்பது இன்றியமையாதது. தவத்தினால்

சிறந்த பெரியார்களிடத்திலும் ஆற்றல் நிறைந்த வேந்தர்களிடத்திலும் அவமதித்து நடக்கக் கூடாது என்பதைப் 'பிழையாமை' என்று குறிப்பிட்டார். அப்படி நடந்தால், பெருந் தீமை உண்டாகும் என்பது உணர்த்தப்பட்டது.

**ஒருவகையான மரம்**

ஊக்கம் மிகுதியே ஒருவர்க்குத் திண்ணிய அறிவாகும். ஊக்கம் என்பது மனவெழுச்சி. மனத்தில் தோன்றும் எழுச்சியே மனிதனை உயர்த்தும். இந்த எழுச்சி எப்போதும் இருந்து கொண்டே இருக்க வேண்டும். அதுவே, ஊக்கமாகும். இதனை **வெறுக்கை** (600) என்று நன்கு சிறப்பித்துக் கூறுகின்றார்.

அத்தகைய ஊக்கம் இல்லாத ஒருவன் பயனற்றவனாகி விடுவான். அவன் மிகவும் இழிவானவனாகவும் கருதப்படுவான். ஊக்கமில்லாதவன் வாழ்க்கை ஒன்றுக்குமே உதவாது. ஆதலால் அவனை 'மரம்' என்றே கூறினார்.

ஆனால், வேறுபாடு ஒன்று இருக்கின்றது. அவ் வேறுபாடு என்னவென்றால், 'மனித வடிவத்தில் இவன் இருப்பதேயாகும்' என்று கூறினார். இந்த மனித மரத்திற்கும் இயல்பான மரங்களுக்கும் உள்ள வேறுபாடு வடிவமேயாகும் என்று குறிப்பிட்டார். ஊக்கம் இல்லாத வனுடைய இழிதன்மை இங்கு குறிக்கப்பட்டது. ஊக்கத்தைப் பிடிப்பாகக் கொண்டு உயர்ந்து சிறப்படைய வேண்டியது மக்கட் பிறவியின் கடமையாகும்.

மக்களுக்கு இருக்க வேண்டிய முயற்சி இல்லாதபடியால் 'மரம்' என்று கூறினார். மரம், பழம் முதலியன கொடுத்துப் பயன்படுகிறது. இவன் எந்தப் பயனும் இல்லாதவனாகை யால் **மக்களாதலே வேறு** (600) என்றும் சுட்டிக் காட்டி, இப்படிப்பட்டவன் தனிவகையான மரம் என்பது போல அமைத்தார்.

**இருக்கும் இடம்**

உலகில் வாழும் மக்கள் பலதிறப்பட்டவர்கள். எனவே அவரவருடைய எண்ணங்களும் பழக்க வழக்கங்களும் பலதிறப்பட்டனவாக இருக்கும். ஆசிரியர் அத்தகைய கருத்துக்களைப் பல இடங்களில் சுட்டிக் காட்டுகின்றார். அவ்வாறு சுட்டிக் காட்டி மக்களுக்குத் தெளிவான விளக்கத்தினைக் கொடுத்து அறிவுறுத்திச் செய்ய வேண்டியது யாது என்பதையும் புலப் படுத்துகிறார்.

மனிதன் முயற்சியால் உயர்வடைகின்றான். அம் முயற்சி அவனுக்கு செல்வத்தை உண்டாக்கித் தரும். முயற்சியில்லாதவன் தாழ்ந்து போவான்; வறுமையாளனாவான். முயற்சி யில்லாதவன் சோம்பல் (மடி) உள்ளவனாகின்றான். முயற்சி உயர்த்தும்; மடி தாழ்த்தும். முயற்சி செல்வத்தைக் கொண்டு வந்து கொடுக்கும். மடியென்னும் சோம்பல் வறுமையினைச் சேர்க்கும்.

மக்களிடையே இருக்கும் பழக்க வழக்கங்களையும் எண்ணங்களையும் திருவள்ளுவர் எடுத்துரைக்கின்றார். இவை அக்காலத்தில்தான் இருந்தன என்பது இல்லை. இக்காலத் திலும் இருக்கும். எக்காலத்திலும் இருக்கும்; ஏன்? மக்கள் பலதிறப்பட்டவர். செல்வத்தைப் பெண்ணாகக் கூறுவதும் வழக்கம். அவள் தாமரையில் இருப்பவள் என்று கூறுவதும் வழக்கம். ஆனால், ஆசிரியர் திருவள்ளுவர் அந்தச் செல்வமாகிய பெண், முயற்சியுடையவனிடத்தில்

இருக்கின்றாள்; **தாள் உளாள்** (617) என்று கூறுகின்றார். 'தாள்' என்பதற்கு **முயற்சி** என்று பொருள். **பாதம்** என்றொரு பொருளும் உண்டு. 'முயற்சி செய்து கொண்டே இரு', அதுவே செல்வப் பெருக்கத்தினை யுண்டாக்கும் என்று கூறி முடித்தார். உலகப் பழக்கத்தில் ஒரு சிலர் கொண்டிருக்கின்ற எண்ணம் எத்தகையது என்பதையும் உய்த்துணர வைத்தார்.

அதுவே போல, 'மாமுகடி' என்றும் கூறுவதுண்டு. இது திருவள்ளுவர் கூறுகின்ற சொல்லாகும். இதனையே 'மூதேவி' என்று மக்கள் கூறுகின்றார்கள். மாமுகடி (617) என்பதனைக் **கரிய சேட்டை** என்று குறிப்பிடுவர். இவள் வறுமையினைக் கொண்டுவந்து விடுவாள் என்பது உலக மக்கள் கருத்து. ஆசிரியர் இதைத் தெளிவுபடுத்துகிறார். சோம்பலிலேயே—மடி—இருப்பவன் வறுமைப்பட்டு வருந்துவான். மடியினை விரட்டுதல் வேண்டும். மடி நீங்கினால் வறுமை நீங்கும். முயற்சி பெருகினால், செல்வம் வளரும். சோம்பலைப் போக்கி முயற்சியை மேற்கொள்ள வேண்டும். இவை ஆசிரியரின் மறை மொழிகளாகும், உலகியல் பழக்கமான எண்ணங்களைச் சுட்டிக் காட்டிக் கொள்ள வேண்டாதது யாது என்பதனைப் புலப்படுத்தினார். அறிவு கொண்டு சிந்தித்தறிக. உலகப் பழக்கங்கள் பலவகைகளில் இருக்கும்; அவற்றைப் பற்றி நிற்றல் கூடாது.

### ஐந்து பூதங்கள்

இந்த உலகம் ஐந்து இயற்கைப் பிரிவுகளைக் கொண்டது. உலகில் அவையேயன்றி வேறு எதுவும் இல்லை. அவை நிலம், நீர், தீ, காற்று, விண் என்பவை. இவற்றை ஐந்து பூதங்கள் என்று கூறுவது உலகியல் வழக்கம். எனவே ஆசிரியரும் **பூதங்களைந்தும்** (271) என்று கூறுகிறார்.

உலகிலிருந்து தோன்றியவை, இவ்வுலகத்து உயிரினங்கள். அவை ஓரறிவு முதற் கொண்டு ஆறறிவு படைத்த மக்கள் வரை காணப்படுகின்றன. இவ்வுயிரினங்களில் மேலான பிறவி, மக்கட் பிறவியே! ஏனெனில், இப்பிறவிதான் பகுத்தறிவினைப் பெற்றிருக்கின்றது. உலகிலிருந்து தோன்றியதால் உலகிலுள்ள நிலம், நீர், தீ, காற்று, விண் என்ற ஐந்தும் இவ்வுடம்பினுள்ளும் கலந்திருக்கிறது. ஆதலால்தான் '**பூதங்களைந்தும் அகத்தே நகும்** (271) என்று குறிப்பிடுகிறார். உள்ளேயே இருந்து அவனது மறைவான தீய வொழுக்கத்தினைக் கண்டு அவை சிரிக்கும் என்கிறார்.

இயற்கைப் பிரிவுகளான ஐந்தும் ஆற்றல் நிறைந்தவை. இந்த ஐந்தும் ஒன்று சேர்ந்து நிகழ்கின்ற நிகழ்ச்சிதான் 'மழை'. உலகில் உள்ள பூதங்கள் ஐந்து பிரிவுகட்கும் இந்த உடம்பில் உள்ள ஐந்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. உலகியல் வழக்கில் 'மனச்சாட்சி' என்று கூறுவார்கள். அதனை அறிந்து, தெரிந்து, தெளிதல் மிகவும் கடினமாகும். அங்ஙனம் தெரிந்து கொள்ளுபவனே முனிவனாவான். **வகை தெரிவான் கட்டே உலகு** (27) என்று கூறியதும் அதனாலேயே யாகும். மக்கட் பிறவி இந்த ஐந்து பூதங்களையும் கொண்டு வாழ்வதால்தான், இயற்கை எனப்படும் இவ்வுலகப் பிரிவுகளான நிலம், நீர், தீ, காற்று, விண் என்பன மனித முயற்சியினால் ஏவல் செய்யும் என்றும் கூறப்படும். இவ்வுலகத்தை **அண்டம்** என்றும் அந்த அண்டத்திலிருந்து தோன்றிய இவ்வுடம்பினைப் **பிண்டம்** என்றும் கூறுவது உலக வழக்கு.

ஐம்பூதங்களைக் கொண்டிருக்கும் இப்பிறவியில் ஆற்றல் பெற்றிருப்பவர்கள் எண்ணியது நடக்கும் என்பது இயற்கையின் உண்மை நியதியாகும். உலகில் காணப்படும் ஐந்து பூதங்களும் நிலை தடுமாறி, முறை தவறி நடக்குமேயானால் உலகமே அழிந்து விடும். உலகப் பிரிவுகளான இந்த ஐந்தும் முறையாக நடத்து வருவதால்தான் உலகமும் மக்களும் இருந்து வருகின்றார்கள்.

**ஐந்து பூதங்களைக் கொண்டிருக்கும் உடலே ஒரு சிறிய உலகமாகும்.** இதனுள் ஐந்து பூதங்களும் செயல் புரிந்து வருகின்றன. அதனை, மனச்சாட்சி கண்காணித்து வருகின்றது. இந்த ஐந்தும் கொதித்து எழுந்தால், எல்லா மக்களும் அதே நிலையில் எழுவார்களேயானால் அரசும் குலைந்து விடும். **அல்லல் பட்டு** (555) என்பதும் இந்த உண்மையினை உணர்த்தும். சிந்தித்தறிக.

**வளப்பம் குன்றும்; பூமிக்கும் பாரம்!**

உடம்பிற்கு 'யாக்கை' என்று பெயர். இரசம், இரத்தம், எலும்பு, சுக்கிலம், தசை, தோல், மூளை என்னும் ஏழு தாதுக்களால் உடம்பு யாக்கப்பட்டதால், யாக்கை எனப்பட்டது.

உயர்ந்த பிறவியாகிய இந்த மானிடப் பிறவியைப் பெற்று, ஈகை செய்து, நற்பண்புகளை வளர்த்து, நல்லன ஆற்றிப் புகழடைதல் வேண்டும். அப்புகழே '**இசை**' யாகும். அத்தகைய இசையைப் பெறாதவர்கள் வாழ்கின்ற நிலத்தில் வளப்பம் குன்றிவிடும் என்று ஆசிரியர் கூறுகின்றார். **வண்பயன் குன்றும்** (239) என்று மறை மொழி கூறுகின்றது. மக்கள் உடலுக்கும் இயற்கைக்கும் தொடர்பு உண்டென்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. "**இசையிலா யாக்கை பொறுத்த நிலம்**" (239) என்று கூறினார். உயிர் கொண்டிருந்தாலும் அதனால் பெற வேண்டிய பயன் கொள்ளாமையால் 'யாக்கை' என்றார். இறந்த பின் அந்த யாக்கையினைப் புதைத்த இடம் (நிலம்) வளப்பம் குன்றிவிடும் என்பதும் பொருந்தும். செய்ய வேண்டியதைச் செய்யாத மானிட வாழ்க்கையின் இழிவு இதனால் கூறப்பட்டது.

பொருளீட்ட வேண்டுமென்பதை உலக வாழ்க்கையின் நல்ல குறிக்கோளாகக் கொள்ள வேண்டும். அத் டன் ஈட்டிய பொருளினால் ஈகை முதலிய நற்செயல்களைப் புரிதலும் வேண்டும். இரண்டும் இன்றியமையாதவை. 'எப்படியும் பொருளை நிறையச் சேர்த்துக் கொள்ளுவோம்' என்று பொருள் சேர்த்து, அதனால் அடைய வேண்டிய புகழினை விரும்பாத மக்கள் இப் பூமிக்குச் சுமையே ஆவர். அவர்கள் இருப்பது **நிலக்குப் பொறை** (1003) என்று கூறுகின்றார். அவர்களின் உயிரைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற உடல் நிலத்திற்குச் சுமை என்று அறிவுறுத்தினார். எனவே, இப்பூமியில் வாழ்வதற்கென்று ஒரு தகுதி உண்டென்பது இதனால் உய்த்துணரப்பட்டது.

**வேறு வேறு வேறு**

உலகத்தின் இயற்கை முறையை ஆசிரியர் ஊழ், விதி, பழவினை, முன்வினை, வினைப் பயன் என்பன போன்றவற்றால் குறிக்கின்றார். இவை அனைத்தும் 'இயற்கை' என்பதில் அடங்கும்.

இயற்கையின் அமைப்பை ஒரு வகையில் கவனிக்கும்போது, செல்வர்களாக இருப்பதும் அறிவு நிறைந்தவர்களாக இருப்பதும் வேறுபட்ட இயற்கை எனத் தெரிகிறது. செல்வர் ஆவதற்குரிய ஊழுக்கும் அறிஞர்களாகின்ற ஊழுக்கும் தொடர்பில்லை என்பது **இரு வேறு உலகத்து இயற்கை** (374) என்பதால் குறிக்கப்பட்டது. **தெள்ளியர்** என்பது அறிவு, மனத்தூய்மை இன்னபிற அனைத்தையும் பெற்றவரைக் குறிக்கும். 'அறிஞர்களிடத்தில் செல்வப் பெருக்கம் இல்லையே! அது இல்லாதாரிடத்தில் செல்வம் பெருகி இருக்கின்றதே, ஏன்?' என்ற வினாவுக்கு இயற்கை அமைப்பு விடை தருகிறது.

முயற்சியினால் அளவுடன் கூடிய செல்வம் பெறக் கூடும் என்றாலும், இயற்கையினால் செல்வம் எவ்வாறு அமைந்திருக்கும் என்பது விளக்கப்பட்டுள்ளது. நல்ல மனம் படைத்த அறிஞர்களிடமும் செல்வம் காணப்பட்டால், அது அரிதாகவே இருக்கும். ஆகவே, இதற்கு

உலகத்தின் இயற்கை முறையினைக் காட்டினார். செல்வம் உண்டாவதற்குரிய இயற்கை (ஊழ்) இருந்து விடுமேயானால், அறிவில்லாதார்க்கும் அது உண்டாகி விடும் என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

### இயற்கையும் செயற்கையும்

உலகில் தோன்றிய உயிரினங்களில் எல்லாம் ஐம்பூதங்களின் தன்மைகள் காணப்படுகின்றன. இயற்கைப் பிரிவுகளான இந்த ஐந்தும் ஒன்று சேர இருப்பது மக்கட் பிறப்பே! ஒவ்வொரு மனித உடலிலும் இவ் ஐந்தும் இருந்து வரும். இவற்றை **ஐம்பூதங்கள்** (271) என்று கூறுவர். மனித அமைப்பின் கூறுபாடுகளையும் உலக நடப்பின் முறைகளையும் நுட்பமாக அறிந்துணரும் ஆற்றல் பெற்றிருப்பவனே (27) முனிவன் ஆவான். **மனித உள்ளத்தின் நிகழ்ச்சிகளுக்கும் உலக நடப்புக்கும் நெருங்கிய தொடர்பு** உண்டு என்பதை நுண்ணிய அறிவினால் அறிதல் கூடும்.

இந்த இயற்கையின் செயல் மனித உடம்பின் ஐம்பூதங்களால் நிகழ்கின்ற - உயிர் வாழ்கின்ற மக்களின் மன உணர்ச்சியையும் பொறுத்திருக்கின்றது என்பது நுண்ணறிவு படைத்தோர் கூறும் உண்மையாகும்.

நாட்டின் ஆட்சி நல்லாட்சியாக இருக்க வேண்டும். ஆளுகின்ற காவலன் நல்ல முறையில் மக்கள் மனம் நிறைவு பெற ஆட்சி செய்தல் வேண்டும். மக்கள் உள்ளம் வேதனைப்படக் கூடாது. மக்கள் மனம் வேதனைப்பட்டால் நாடு கெட்டுவிடும் என்ற குறிப்பு காட்டப்படுகிறது. நல்ல முறையில் ஆட்சி செய்யும் மன்னவனுடைய நாட்டில், குன்றாத மழையும் நல்விளைச்சலும் இருந்து வரும் (545) என்று கூறுகின்றார். மக்கள் உள்ளத்தின் எழுச்சி உலக இயற்கை முறையையும் தொடும் என்பது உணர்த்தப்பட்டது. **மனித உடம்பில் இருக்கும் ஐம்பூதங்களும் உலகில் நிகழ்ந்து வரும் ஐம்பூதங்களையும் செயல்படுத்தும்** என்பது குறிப்பால் உணர்த்தப் படுகிறது.

மக்கள் உள்ளம் மகிழ்ச்சியில் இருந்தால் உலகில் மழையும் நன்கு பெய்யும். மனித உள்ளத்தின் ஆற்றல் இயற்கையையும் செயல்புரிய வைக்கும் என்பது சிந்திக்க வேண்டிய ஒன்று. நல்ல முறையில் மக்கள் எல்லோரும் களிப்புற்று மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்திருக்கச் செய்தால், மக்கள் மனத்தின் வேகம் நன்கு மழை (545) பொழிய வைக்கும்.

மக்கள் உள்ளம் வேதனைப்பட்டு நொந்து துடிக்குமேயானால், உலகத்தின் ஐம்பூதங்களும் நன்கு செயல்படாமல், மழை பொழியாது (559) என்று உணர்த்துகின்றார்.

மனிதன் முயற்சிக்கும் நல்ல எண்ணத்திற்கும் மனச்சாட்சிக்கும் இந்த உடம்பில் இருக்கும் ஐம்பூதங்களும் துணையாக உள்ளன. நல்ல எண்ணத்தோடு மக்களுக்குத் தொண்டாற்றுகின்ற உண்மையாளனுக்கு இயற்கையும் (தெய்வம்) தன் ஆடையை இறுகக் கட்டிக் கொண்டு வந்து ஏவல் செய்யும் (1023) என்கிறார். மனித உள்ளத்தின் உறுதிப்பாட்டிற்கு இயற்கையும் வேலை செய்யும் என்பதைப் **பெய்யெனப் பெய்யும்** மழை (55) என்பதும் சான்று பகரும். ஐம்பெரும் பிரிவுகளையும் (நிலம், நீர், தீ, காற்று, விண்) தெய்வங்கள் எனக் கூறுவது உலக மக்களின் பழக்கம். மக்களின் பழக்கத்தினைச் சுட்டிக் காட்டி இந்த உண்மையை உணர்த்துகிறார்.

## எண்ணங்களின் இயல்பு

மனித உள்ளங்களிலே தோன்றும் எண்ணங்கள் உறுதியாக இருந்து விடுமேயானால் அவற்றுக்கு மிகுந்த ஆற்றல் உண்டு. நெருங்கிய தொடர்பு கொண்ட உள்ளங்கள் ஒன்றோ டொன்று இணைந்து இருப்பவை. அதற்குக் காரணம், எல்லாப் பிறவிகளும் ஐம்பூதங்கள் நிறைந்துள்ள இவ்வுலகத்திலிருந்து தோன்றியவை என்பதே.

'உங்களை நினைத்திருந்தேன்! நீங்களும் வந்துவிட்டீர்கள்!' என்று சொல்லுவதை, உலகில் பன்முறையும் கேட்கின்றோம். இவற்றைச் சாதாரண நிகழ்ச்சியாகக் கருதுபவர்கள் உண்டென்றாலும் இயற்கையின் கூறுபாடுகளை உணர்ந்த நுண்ணிய அறிவு படைத்தவர்கள்(27) இந்த உண்மையின் மறைபொருளை நன்கு புரிந்து கொள்வர்.

**சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தன்** (27) என்ற குறட்பாவுக்கு உரை எழுத வந்த தலை சிறந்த உரையாசிரியரான பரிமேலழகர், 'இவ் இருபத்தைந்து (தன் மாத்திரைகள்) அல்லது உலகு எனப் பிறிதொன்று இல்லை என உலகினது உண்மை அறிதலின், அவன் அறிவின்கண்ணதாயிற்று' என்று குறித்துக் காட்டினார்.

உலக மக்களிடையே 'தும்மல்' பேசப்படுகிறது. நாயகனைப் பிரிந்திருக்கும் நாயகி, நாயகனை நினைந்து வருந்துகின்றாள்.

அப்போது அவளுக்குத் தும்மல் வருவது போன்றிருந்து, பின்னர் அது வராமல் நின்று விடுகிறது. அதைக் கருதி அவள் சொல்லுவதாவது: நாயகன் என்னை நன்றாக நினைப்பதில்லை போல் தோன்றுகிறது. கொஞ்சம் நினைத்துப் பிறகு நினையாமல் இருந்து விடுகின்றார். ஆதலால்தான், எனக்குத் தும்மல் வருவது போன்று இருந்து, பிறகு வராமல் நின்று விடுகிறது.

**இதனைக் கூறும் சினைப்பது போன்று கெடும்** (1203) என்ற குறட்பா நன்கு சிந்திக்கத் தக்கது. உளநூல் தத்துவங்களின் விரிவு இதனைப் புலப்படுத்தும்.

நாயகனும் நாயகியும் பஞ்சணையில் இருக்கின்றார்கள். ஊடல் கொண்டுள்ள நேரம். அப்போது இயல்பாக நாயகன் தும்மினான். வேறு ஒருத்தி உங்களை நினைக்கின்றாள்; ஆகவே தான், உங்களுக்குத் தும்மல் வருகின்றது (1317) என்று நாயகி ஊடல் நிகழ்த்துகிறாள். இவை போன்ற உலக இயற்கையமைப்பின் தன்மைகளும் மனித உள்ளங்களின் வன்மையும் இவ்வாறு பற்பல நிகழ்ச்சிகளில் கூறப்படுகிறது.

## அறமே தண்டிக்கும்

அறநூல் அருளிய ஆசிரியர் திருவள்ளுவனார் அறமே அனைத்துமாகும் என்ற குறிப்பைப் பற்பல முறையில் தெளிவுபடுத்துகிறார். மனம் தூய்மையாக இருப்பதே **அறம்** (34), அறநெறியில் வாழ்பவர்களே **அந்தணர்கள்** (30), **அறக்கடலானவனே** (8) இறைவன் என்றெல்லாம் கூறுகிறார். அவ் அறத்தின் இயல்புகளைப் பலவாறு சிறப்பிக்கின்றார்.

மனித உள்ளத்தின் உயர்ச்சியாக மேலோங்கி இருப்பது அறச் செயலே. உலகில் அறநிலையில் வாழ்பவர்களது உள்ளமே அறத்தின் வடிவம் என்பது குறிப்பால் உணர்த்தப் படுகிறது. **அறம் உலகில் இயங்கி வரும் நுண்ணிய ஆற்றலாகும்.** அறன் வலியுறுத்தல் என்ற அதிகாரமும் பிறவும் அறத்தின் வன்மையையும் சிறப்பையும் உரைக்கின்றன.

அன்பில்லாத உயிரினங்களை அறமே தண்டிக்கும் என்கிறார். **'அன்பு இல் அதனை அறம்'** (77) என்பது இதற்கு எடுத்துக் காட்டு. அறத்தினை மறத்தினால் பெருங்கேடு வரும் (32) என்றும் கூறப்படுகிறது. அறத்தன்மையையே **அறம்** என்று கூறுகின்றார். அதனையே **இறைவன்** என்றும் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

நல்ல கல்வியறிவும் நற்பண்பும் உள்ளவன் கோபம் வராமல் தன்னைக் காத்துக்கொண்டு இருக்கும் நல்ல நேரத்தையறிந்து அறம் தானே சென்றடையும் என்று கூறுகின்றார். **அறம் பார்க்கும் ஆற்றின் நுழைந்து** (130) என்று அறத்தின் ஆற்றலைக் குறிப்பிட்டதால், அதையே ஆற்றல் உள்ள இறைத் தன்மையானதென்றும் உய்த்துணர வைத்தார். **அறம் நோக்கி யாற்றுங் கொல் வையம்** (189) என்பதையும் நன்கு சிந்தித்தல் வேண்டும்.

'பிறருக்குக் கேடு செய்தலாகிய எண்ணங்களைச் சிந்திக்காதே!' என்று அறிவுறுத்து கின்றார். அப்படி எண்ணுவானேயானால் அது எண்ணுகிறவனுக்குக் கேட்டினை யுண்டாக்கும். இதனை **அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு** (204) என்று அறிவுறுத்துகின்றார். அறம் என்ற ஆற்றல் நுண்ணறிவு படைத்தோரால் ஆய்ந்தறிந்து உணர வேண்டியதாகும். **தன்னெஞ்சே தன்னைச் சுடும்** (293) முதலானவை இங்குச் சிந்திக்கத் தக்கன. **'அஞ்சுவதோரும் அறனே'** (366) என்பதும் கருதற்பாலது. இன்ன பிறவற்றையும் இவ்வாறே தெளிதல் வேண்டும். நுண்ணறிவால் அறத்தின் ஆற்றலும் அது செயல் புரிதலும் அறிந்து கொள்ளப்படும்.

**உலகியல் வழக்கு**

மடி எனும் சோம்பல் குணத்தை எந்த நேரத்திலும் இம்மியளவும் நெருங்க விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். சோம்பலினை நெருங்கவே விடக்கூடாது. சோம்பல் என்கின்ற குணம் வாழ்க்கையையே அழிப்பதாகும். 'மடி' - சோம்பல் - இல்லாதவன் வாழ்க் கையில் உயர்ந்து கொண்டே போவான்; நினைத்ததையெல்லாம் அடைவான்; எல்லோராலும் பாராட்டப் பெறுவான். மனித வாழ்க்கையின் பெரும் புகழை அடைந்தே தீருவான். **மடியின்மை** என்ற அதிகாரத்தை நன்கு கற்றறிதல் வேண்டும்.

சோம்பல் இல்லாதவனின் சிறப்பை மிகமிக உயர்ந்த நிலையில் அமைத்துக் கூறுகின்றார். நாட்டுக் காவலனாகிய மன்னன் முதல் உலக மக்கள் அனைவர்க்கும் இன்றி யமையாதது மடியில்லாக் குணம் என்றும் கூறுகின்றார்.

உலகில் மக்களிடையே பரவிக் கிடக்கும் பழக்கங்களும் எண்ணங்களும் பலவகைப்படும். அவற்றை ஆசிரியர் அப்படியே சுட்டிக்காட்டி அவர்களுக்கு 'உண்மை இதுதான்' என்று புகட்டுகிறார். தவ முனிவர்களின் பண்பு அதுவே.

'எல்லா உலகத்தினையும் ஆண்டவன் தனது அடியாலே அளந்தான்' என்ற எண்ணம் மக்களிடையே உள்ளது. இத்தகையவற்றைக் கருத்திற் கொண்டு ஆசிரியர் **'மடியில்லாத மன்னவன் அனைத்தையும் அடைவான்'** (610) என்கிறார். மடியின்மையை நினைத்துச் செயல் படுவர் என்றும் அறிவுறுத்தினார்.

**உடம்பும் உயிரும்**

பிரிந்த உயிர் திரும்பவும் அவ் உடம்புக்குள் புகாது என்பதும் உடம்போடு ஒன்றிய உயிர், உடலிலிருந்து நீங்காது ஒன்றி இருக்கும் என்பதும் இரண்டு குறட்பாக்களில் காணப் படும் உண்மையாகும்.

'உடம்பொடு உயிரிடை' என்ற ஒரே தொடர் இரண்டு குறட்பாக்களில் (338, 1122) காணப்படுகின்றது. இரண்டு குறட்பாக்களும் நட்பு என்ற சொல்லைக் கொண்டு முடிகின்றன.

ஆசையினை அறவே விட்டொழித்து துறவறத்தை மேற்கொண்ட முனிவர்களுக்கு உலகியலில் 'நிலையாமை' என்ற தன்மையைக் கூறுகின்றார். அப்போது, முட்டையிலிருந்து வெளிவந்த (388) பறவை மீண்டும் அந்த முட்டைக்குள் போகாததுபோல உடம்பை விட்டு வெளிவந்த உயிர் மீண்டும் அந்த உடம்பிற்குள் செல்லாது என்கிறார்.

உடம்பை விட்டு உயிர் பிரிந்த தன்மையைக் கூறிய ஆசிரியர், சேர்ந்திருக்கும் தன்மையையும் கூறுகிறார். உடம்புக்கும் உயிருக்கும் உள்ள நெருக்கமான நட்பு எத்தகையதோ அத்தன்மையதாகத் தனக்கும் தன் காதலிக்கும் இருக்கும் காதல் தொடர்பு பற்றிக் காதலன் ஒருவன் (1122) கூறுகின்றான். இந்த இரண்டு இடங்களிலும் கூறப்பட்ட உடம்பொடு உயிரிடை என்பதும் நட்பு என்பதும் சிந்தித்தறிய வேண்டியவை.

### ஏழு உவமைகள்

திருவள்ளுவர் தாம் எடுத்துரைக்கின்ற உண்மைகளைப் பல முறைகளில் எளிமையாகவும் ஆழமாகவும் பதியுமாறு அமைக்கின்றார். அவர் உவமைகளைக் கூறிக் கருத்துக்களைத் தருதல் தலைசிறந்த முறையாகும். திருக்குறளில் பல இடங்களில் அருமையான உவமைகள் காணப்படுகின்றன.

'உட்பகை' என்பது ஓர் அதிகாரம். இது நாட்டுத் தலைவனான மன்னனுடைய உயிருக்கு உலை வைப்பது பற்றியதாகும். மன்னனுடன் சூழ்ந்திருப்பதைப் போலவே இருந்து, பழகி, வெளியில் உள்ள பகைவர்களுக்கு இடங் கொடுத்துத் தாமும் உள்ளிருந்தே கெடுப்பது உட்பகை எனப்படும். நாடாளும் அரசு முறையில் ''உட்பகை'' என்பது இயல்பானது. வெளிக்கு, உறவினர், சுற்றத்தார், நண்பர் போலக் காட்டிக் கொண்டு கொடிய தீமையினை விளைவிப்பவர் உட்பகைவர்.

தனிப்பட்ட முறையில், சிலர் நண்பர்கள் போலவே பழகிக்கொண்டு தீமை செய்வதற்காகவே காத்துக் கொண்டு இருப்பார்கள். தீமை செய்வதற்கு ஏற்ற காலம் வரும் வரை நண்பர்கள் போலவே நடித்துக் கொண்டும், பழகிக் கொண்டும் இருப்பார்கள். இவர்களைக் 'கூடாநட்பு' என்ற அதிகாரம் குறிப்பிடுகிறது. இந்த அதிகாரமும் ''உட்பகை'' என்ற அதிகாரத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தற்குரியது. வேறு எந்த அதிகாரத்திலும் இல்லாத முறையில் இந்த 'உட்பகை' என்ற அதிகாரத்தில்தான், ஆசிரியர் ஏழு உவமைகளைக் காட்டி உண்மையைக் குறித்தார்.

### மணமாகாத பெண்ணும் மணமானவளும்

இவ்வுலக வாழ்க்கைக்குப் பொருள் எவ்வளவு இன்றியமையாதது என்பதைப் பலரும் அறிவர். நன்முயற்சியில் பொருளீட்டி, நற்பணிகளைப் புரிந்து, ஈகையைச் செய்து, புகழேந்தி வாழ்வதே மக்கட் பிறவிக்குரிய உயர்ந்த முறையாகும். செல்வத்தைப் பொதுவாக இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று அசையும் பொருள்; மற்றொன்று அசையாப் பொருள்.

அசையும் பொருள்களான செல்வம் பலவகைப்படும். இக்காலத்தில் கூறப்படும் பணம் என்பதும் அதற்குள் அடங்கும். அசையாப் பொருள் என்பன நிலம் முதலியவையாகும். முதன்மையாக வைத்துப் பேசப்படும் அசையாப் பொருள் சொத்து என்பது நிலமே. நிலம் விளைச்சல் மூலம் மக்களைக் காக்கும்.

அசையும் பொருளைச் சேர்த்து வைத்திருப்பவர்கள், அப்பொருள்களை முடக்கி வைத்திருக்கக் கூடாது. இல்லாதவர்களுக்குக் கொடுத்து அப்பொருள் பயன்படும்படியாகச் செய்தல் வேண்டும். இது ஆசிரியரின் அறிவுரை. அப்படிச் செய்யாமல், தான் பெற்றிருக்கும் பொருளை யாருக்கும் கொடுக்காமல் பூட்டி வைத்திருப்பவன் பெருந் தவறு செய்பவன் ஆகிறான்.

அழகான பெண்ணைப் பெற்று வைத்திருப்பவன் அவளைத் தக்கவருக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டியது, அவனுடைய தலையாய கடமையாகும். அவ்வாறன்றி அவளைத் தனியாகவே இருக்கச் செய்து கிழவியாக்குவது எவ்வளவு கொடுமையோ அவ்வளவு கொடுமையானது, தான் பெற்றிருக்கும் செல்வத்தை இல்லாதார்க்குக் கொடுக்காமல் (1007) தானே முடக்கி வைத்திருப்பவருடைய செயல் என்று குறிக்கிறார். இக்கருத்தை நன்கு ஆழ்ந்து சிந்தித்து கடமையைச் செய்தல் அறிவுடையோர் செயல். விரிவு படுத்திப் பார்க்குங்கால் இக்குறட்பா (1007) பல உண்மைகளைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

**உழவு** என்ற அதிகாரத்தில் பல உண்மைகளை ஆசிரியர் கூறுகின்றார். அங்கே உழுகின்றவனுடைய நிலத்தை மனைவிக்கு ஒப்பிட்டார். நிலம் ஒரு இடத்திலேயேதான் இருக்கும். அதுவே போல மனைவியும் மணந்த கணவனுடனேதான் இருப்பாள். ஆதலால்தான், மனைவியை நிலத்திற்கு ஒப்பிட்டார். அசையும் பொருள், எந்த இடத்திற்கு எப்போது யாரிடத்திற்குப் போகும் என்று சொல்ல முடியாது. எனவேதான் அசையும் பொருளை மணமாகாத பெண்ணுக்கு உவமையாகக் கூறினார்.

உழுகின்றவனே கணவன் ஆதலால், உழுபவனைக் கணவன் (1039) என்று குறிப்பிட்டார். அவனால் பாதுகாக்கப்பட வேண்டிய - பயன் தரக் கூடிய மனைவியை நிலம் என்றார். உழுகின்றவனே நிலத்திற்கு உரிமை உடையவன் என்பதை உய்த்துணர வைத்தார். இக்குறட்பாக்களின் விரிவான கருத்தினை அறிந்துணர்க!

## முயற்சியும் உழைப்பும்

உலக மக்கள் எல்லாத் துறைகளிலும் முன்னேறுவதற்கு அடிப்படைத் தேவை, தொழில் புரிதலே என்பதைப் பலவகைகளில் தெளிவுபடுத்துகிறார். தொழில் புரிவோரை **வினை செய்வார்** என்று அடிக்கடி குறிப்பிடுகிறார்.

வினைசெய்பவன் மனம் கோணாதிருந்தால் உலகம் தவறிக் கெடாது என்கிறார். அவனுடைய நிலைமை மனம் கோணுதலடைந்து விட்டால் (520) இவ்வுலகமும் கோணுதலடைந்து விடுமாம்.

செயல் புரிவதற்கான ஊக்கம் முதலியவற்றை **ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கண் அழியாமை** முதலிய அதிகாரங்கள் நன்கு விளக்கிக் காட்டுகின்றன. இவ்வதிகாரங்களை நாள்தோறும் படித்து உள்ளத்திற்கு உரம் போடுதல் வேண்டும்.

தொழிலின் அருமை பற்றியும் தொழில் செய்வார்களைப் பற்றியும் **வினைத் தூய்மை, வினைத் திட்பம் வினை செயல் வகை** முதலிய அதிகாரங்கள் நன்கு உணர்த்துகின்றன. மேலும், **தெரிந்து செயல் வகை, தெரிந்து வினையாடல், உழவு** முதலிய அதிகாரங்

களும் தொழில் புரிவதைப் பற்றியே பேசுகின்றன. **மெய் வருத்தக் கூலி தரும்** (619) என்பதே போல உழைப்பு உறுதியாக நல்ல பலனைக் கொடுத்தே தீரும். உழைக்காத மக்கள் நிறைந்த நாடு முன்னேற்ற மடையாது. உழைத்து உழைத்து உயர்க என்பதே மறை மொழியாகும்.

**சிறப்பு**

ஒற்றர்கள் ஒரு நாட்டிற்குக் கண் போன்றவர்கள். அவர்களுக்குச் சிறப்பு செய் வதைப் பற்றிய குறிப்பொன்றைத் தருகின்றார். சிறந்த சேவை செய்பவர்களுக்குச் சிறப் பளித்தல், அரசுக்கு முறையான பணியாகும். போர் வீரர்களுக்குச் சிறப்பு செய்தல் உண்டு. அது நற்பணி புரிந்தவர்களுக்குக் கொடுப்பதாகும். இங்குச் சிறப்பு என்பது பரிசளிப்பது, பட்டமளிப்பது, பதவியளிப்பது முதலியவற்றைக் குறிக்கும்.

இப்படிப்பட்ட சிறப்புகளை ஒற்றர்களுக்குச் செய்யும் போது மிகவும் மறைவாக வைத்துச் செய்ய வேண்டுமென்று கூறுகின்றார். ஏனெனில், ஒற்றர்களை மக்கள் யாருமே தெரிந்து கொள்ளுதல் கூடாது. தெரிந்து கொண்டால் பிறகு ஒற்றர் வேலை பார்க்க முடியாது. பிறரறிய ஒற்றர்களுக்குச் சிறப்பு செய்தால் (590) நாட்டுத் தலைவனே அவர்களை வெளியில் காட்டி விடுவது போலாகும். இதனைச் **சிறப்பு அறிய செய்யாதே** (590) என்று கூறுகின்றார்.

இச் சிறப்புப் பற்றி ஆசிரியர் பிறிதோரிடத்தில் கூறுவதையும் நன்கு சிந்தித்தறிதல் வேண்டும். பட்டம் பதவிகள் எனப்பெறும் இச்சிறப்புகள் இருக்கத் தகாதவர்களிடத்தில் இருந்து விட்டால் அதைவிட நாட்டிற்குத் தீமை வேறு ஒன்றுமில்லை. இக்கருத்தை **'சிறப்புத் தான் சீரல்லவர் கண்படின்'** (977) என்று குறித்துக் காட்டுகிறார். தகுதி படைத்த பெரியவர்களிடத்தில் இருக்க வேண்டிய 'சிறப்பு' எனப்படும் பட்டம், பதவிகள் தாழ்ந்தவர் களிடத்துப் போய் விடுமேயானால், அவர்கள் தருக்கும் செருக்கும் மிகுந்த கொடிய செயல் களைச் செய்வர். இக்கருத்து **'இறப்பே புரிந்த'** (977) என்ற குறட்பாவில் கூறப்படுகின்றது. அவர்கள் சீரல்லவர்கள் ஆனமையால் அது அவர்களை அளவு கடந்த தீச் செயல்களைச் செய்யுமாறு தூண்டிவிடும் என்பது குறிப்பாயிற்று.

**மக்களுக்குத் தொண்டு புரிதல்**

குடிமக்களுக்குத் தொண்டாற்றும் ஒருவன் தான் செய்து முடிக்க வேண்டிய நல்லவற்றை எண்ணி முயற்சி செய்தாலே போதும்! அது தானாகவே முடிந்து விடும் என்கிறார். **தானே முடிவெய்தும்** (1024) என்று குறித்துக் காட்டுகிறார். மக்களுக்குச் சேவை செய்யும் ஒருவன் தன்னிடம் குற்றம் குறை வராமல் மக்களுக்குச் சேவை செய்து வருவானேயானால், உலக மக்கள் தாமே சென்று அவனைச் சூழ்ந்து கொள்வர் என்று தெளிவுபடுத்துகிறார்.

போர்க்களத்தில் பலர் இருந்தாலும் போரினை முன்நின்று நடத்திச் செல்லுதல், திறமை செறிந்தவர்களிடமே இருத்தல் வேண்டும். அது போல, நாட்டில் மக்கள் பலர் இருந் தாலும், மக்களுக்குத் தொண்டாற்றும் தலைமை ஆற்றல் வல்லாரிடமே இருத்தல் வேண்டும்.

மக்கள் தொண்டு ஆற்றுவார்க்கு தெய்வம் (இயற்கை) தானே ஆடையை இறுகக் கட்டி முன்னே வந்து நின்று உதவி புரியும் (1023) என்று கூறுகிறார். குடிமக்களுக்குத்

தொண்டாற்றுபவர் தமது சொந்தப் பெருமையையோ மானத்தையோ கருத்தில் கொள்ளக் கூடாது. காலம் வரட்டும் என்றும் இருக்கக் கூடாது. எக்காலத்திலும், எந்நேரத்திலும் அவர்கள் தொண்டாற்றுவதற்கு ஏற்றவர்களாக இருத்தல் வேண்டும். கடுமையான முயற்சி யும் சிறந்த அறிவுமே மக்களுக்குத் தொண்டு செய்வார்க்கு முதன்மையாக இருத்தல் வேண்டும் (1022).

குடிமக்களுக்காகப் பாடுபடுபவனின் உடம்பு எக்காலத்திலும் துன்பத்திற்கேதான் இடமாக வேண்டுமா? (1029) என்னும் ஓர் உண்மையை ஆசிரியர் குறிப்பிடுகிறார். 'உடம்பு' என்பதால் மக்கள் தொண்டு செய்பவன் அடைய நேரிடும் உடல் துன்பங்களையெல்லாம் உய்த்துணர வைக்கிறார். இன்ன பிற சிறந்த கருத்துக்களை யெல்லாம் **'குடிசெயல்வகை'** என்னும் அதிகாரம் எடுத்துக்காட்டுகிறது.

'குடி' என்பது நாட்டில் வாழும் மக்களைக் குறிக்கும்; கூட்டம், குடும்பம் என்பவற்றையும் குறிக்கும். எனவே குடும்பம் என்பதும் குடிமக்களை உணர்த்துவதாயிற்று.

**படைகுடிகூழ்** (381), **குடியோம்பல்** (390), **வாழும்குடி** (542), **குடிதழீஇ** (544), **குடிபுறம் காத்தோம்பி** (549), **கூழும் குடியும்** (554) என வருவனவற்றால் 'குடி' என்பது நாட்டில் வாழும் மக்களைக் குறித்ததாகும் என்றுணர வேண்டும்.

தன் நாட்டு மக்கள் என்பதைக் குறிக்க வேண்டி, **தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக் கொளல்** (1026) என்கிறார். மக்களுக்குத் தொண்டு புரிகின்ற தன்மையை **நல்லாண்மை' ஆற்றுவார், நல்லாள்** என்றெல்லாம் சிறப்பிக்கிறார் ஆசிரியர்.

**கல்வியும் காமமும்**

கல்வி கற்பதனால் அறிவு வளரும் என்பதனைக் குறிக்கவேண்டி **மணற்கேணி** என்று குறிப்பிட்டார். மேன்மேலும் கற்றுக் கொண்டே இருத்தல் வேண்டும். தோண்டிய அளவுக்குத் தகுந்தபடி மணலில் நீர் சுரந்து வருவதுபோல (396) படித்த அளவிற்குத் தகுந்தபடி அறிவு வளரும். இதனை நன்கு சிந்தித்தல் வேண்டும்.

நாயகன் பிரிந்திருக்கின்ற நேரத்தில் நாயகி மிகவும் வருத்தமுற்றிருக்கின்றாள். அவளுக்குக் காமநோய் வருத்தத்தை உண்டாக்குகிறது. தனக்கு உண்டான காமநோயைப் பிறர் அறியாமல் மறைக்க வேண்டுமென்று நினைக்கின்றாள். பெண்மை நாணமுடைய தல்லவா? அவளால் அதை மறைக்க முடியவில்லை. அவள் அந்த நோயை மறைத்துவைக்க நினைத்து அவ்வாறு செய்தால் அது மேலும் வளர்கிறது. எப்படி? நீர் வேண்டுமென்று இறைப்ப வர்க்கு ஊற்றுநீர் (1161) மிகுந்து மிகுந்து வருவதைப்போல பிரிவுத்துன்பம் மேலோங்குகிறது என்றாள். இதனை ஆழ்ந்து சிந்தனை செய்து ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும்.

கல்வி கற்பவன் நல்ல சொற்களைப் பேசும் ஆற்றல் உள்ளவனாக இருப்பான். கல்வி அந்த ஆற்றலை உண்டாக்கும். கல்வியில்லாதவன் நல்ல சொற்களைச் சொல்வதற்கு ஆசைப் படக்கூடாது. ஏனெனில் அந்த ஆசை பலனளிக்காது; பிறர் பார்த்து நகைப்பதற்கு இடமுண்டாக்கிவிடும். அதுபோலத்தான் காம இச்சையும் சிறிய பெண் காம இச்சை கொள்ளக்கூடாது. அந்த இன்பம் நிறைவேற வேண்டுமானால், அவளுக்குத் தக்க வயது வந்திருக்க வேண்டும். தக்க வயதிற்கு வந்துவிட்டாள் என்பதற்கு அடையாளம், அவள் நகில்களில் திரட்சி தோன்றியிருக்கும். அவை இல்லாதவள் சிறுமி என்பதால் அவளுக்குச் சிற்றின்ப இச்சைகள் வருதல் கூடாது. அப்படி வந்தாலும் (402) அது இன்பம் துய்க்கப் பயனளிக்காது. ஆகவே, கல்வியின் ஆழ்ந்த உண்மையினைக் காம இன்பத்துடன் தொடர்பு படுத்தியதை நன்கு சிந்தித்துப் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

கல்வி யொன்று மட்டுமே, தான் பெற்ற இன்பத்தினைப் பிறரும் பெற்றின்புறுமாறு செய்யும். மற்ற இன்பங்கள், தான்மட்டும் நுகர்ந்து இன்புறச் செய்யும். ஆதலால், கற்றவர்கள் மேலும் மேலும் கற்பதையே விரும்புவார்கள் என்று கூறவந்த ஆசிரியர் **விரும்புவர்** என்ற சொல்லைக் கூறாமல் **காமுறுவர்** (399) என்ற சொல்லை நுணுக்கம் தோன்ற அமைத்தார். காமுறுவர் என்பதற்கு விரும்புவர் என்று பொருளாகும். ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய அச்சொல்லை இங்கு அமைத்திருக்கிறார் ஆசிரியர்.

காதலன் தான் காதலித்த பெண்ணிடம் இன்பம் நுகர்வதையே நாட்டமாகக் கொண்டிருந்தான். இடைவிடாமல் இன்பம் நுகர்ந்துகொண்டே இருப்பதற்கு எண்ணுகிறான். புணர்ச்சி மகிழ்தல் என்பதை இது குறிக்கும்.

'முன்பு நுகர்ந்த இன்பம்தானே! அதனையே மீண்டும் மீண்டும் நாடிச் செல்வது ஏனோ?' என்று வினவுவார்க்கு (1110) அவன் விளக்கம் கூறுகின்றான். 'ஒரு பொருளை நூல் களாலும், நுண்ணிய உணர்வாலும் புதிது புதிதாக அறிய அறிய முன்னைய அறியாமையைக் காணமுடிகிறது. ஒவ்வொரு முறையும் கற்கும்போதெல்லாம், முன்பு இந்த உண்மையை நாம் அறியவில்லையே, என்று கற்பவர்களுக்குத் தோன்றுமாம்; ஏனெனில் அறிவுக்கு எல்லையில்லை. அதுவே போல இப்பெண்ணிடம் (1110) செறியச் செறிய காதல் மிகுந்து கொண்டே வருகிறது என்று காரணம் கூறுகிறான். இவ்வாறே பிற நயங்களையும் கண்டு உணர்தல் வேண்டும்.

**மனம்**

மனத்தில் தீய எண்ணங்கள் வைத்திருப்பவன் நல்லவைபோல் தோன்றும் செயல்களைச் செய்தாலும் அத் தீயவை வெளிப் பகட்டேயாகும். தீயவற்றால், யாதொரு பயனையும் அவன் அடைய முடியாது. எனவே, மனம் தீய குணங்களுக்கு இருப்பிடமாக இருக்கக் கூடாது. மனம் மாசு இல்லாமல் இருத்தல் வேண்டும். பொறாமை, பேராசை, கோபம், பிறர் மனம் நோகும் படித் துன்பமான சொற்களைச் சொல்லுதல் ஆகியவை 'மாசு' என்று கூறப்படும். ஆதலால், **அறம்** என்பது மனம் மாசில்லாமல் இருத்தலேயாம். **மனத்துக்கண் மாசிலன் ஆதல்** (34) என்ற குறட்பாவை நன்கு அறிந்துணர்தல் வேண்டும்.

மனத்தில் மாசில்லாமல் இருக்க வேண்டும் என்று கூறிய ஆசிரியர், மனத்தில் நிறைய 'மாசு' வைத்துக் கொண்டு, வெளித் தோற்றத்தில் நல்லவன்போல் வேடங் காட்டி மக்களை வஞ்சித்து வருபவர் பலர் இருக்கிறார்கள் என்றும் கூறுகிறார். அவர்களைத் தீய மனங்களை மறைத்து வாழும் ஒழுக்கங் கெட்டவர் என்றும் கூறுகிறார். அத்தகைய தீயவர்கள் நன்றாக நீரில் மூழ்கிக் குளித்துத் தூய்மையாக இருப்பது போல வெளித் தோற்றத்திற்குக் காட்டிக் கொள்வார்களாம். இவர்களைப் பற்றி எல்லாம் (278) குறட்பா நன்கு கூறுகிறது. இவ்வாறு செய்பவர்கள் சிலர் என்று கூறாமல் 'பலர்' என்றே குறிப்பிட்டுக் காட்டினார். மனமே அனைத்திற்கும் காரணம் ஆகையால் அதைச் சுட்டிக் காட்டவே **'மனக் கவலை'** என்று உணர்த்தினார்.

மனிதனுக்கு உணர்ச்சி மனத்தின்கண் உண்டாகிறது. உணர்ச்சியில்லாதவன் மனிதன் அல்லன். அதாவது மனிதப் பிறவிக்கு இருக்க வேண்டியது உணர்ச்சி. ஆகவே மனத்தைக் குறிப்பாக வைத்துப் பல அரிய உண்மைகளை உணர்த்தினார். **மனத்தான் ஆம் மாந்தர்க்கு உணர்ச்சி** (453) முதலானவை சிந்தித்து உணரத் தக்கவை. அந்தந்த மனநிலைக்கு ஏற்ப உணர்ச்சி உண்டாகும் என்பது இங்குக் குறிக்கப்பட்டது.

மனம் நன்றாக இருப்பதென்பது அவரவர்கள் செய்கின்ற நற்செயல்களால் தோன்றும். தூய்மையானதும் பயனுள்ளதுமான நற்பணிகளைச் செய்தல் வேண்டும். அதற்கு மனம் நன்றாக இருத்தல் வேண்டும். மனத்தில் அன்பு இல்லாமல் பேசும் முறையால் நண்பர்கள் போலப் பழகுபவர்களும் உண்டு. **'மனத்தின் அமையாத வரை'** (825) முதலான இடங்களால் இக்கருத்தை நன்கு புரிந்து கொள்ளலாம். **'மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது'** (823) என்பதையும் இங்குச் சிந்தித்தறிக. **மனம் போல வேறுபடும்** (822) என்றும் காட்டப்படுகிறது. **மனம் மாணா உட்பகை** (884) என்பது மனத்தின் நன்மையே நன்மை என்பதை உணர்த்துவதாகும். **மனந் தூய்மை** (455) என்பதும், **மனந் தூயார்க்கு** (456) என்பதும் இங்கு அறியத் தக்கவை. எண்ணங்கள், சிந்தனைகள் என்பவை தோன்றுகின்ற இடம் என்பதால் மனத்தையே உள்ளம் என்றும் கூறுகிறோம். இவ்வாறே பிறவற்றையும் கண்டு தெளிதல் வேண்டும்.

**அறிவு**

இறைவன் தூய அறிவு மயமானவன் என்பதை **'வாலறிவன்'** (2) என்று குறிக்கிறார். அவன் மெய்யுணர்வுடையவன்; அவனையே நினைத்தல் வேண்டும், தொழுதல் வேண்டும் என்கிறார். **கடவுள் வாழ்த்து** என்ற பகுதியில் உள்ள **தொழுதல், சேர்தல், புரிதல், நிற்றல், வணங்குதல்** என்பதற்கெல்லாம் எப்போதும் நினைத்தல் என்பதே பொருள்.

அறிவே இறைவன் என்பதை ஆசிரியர் உய்த்துணர வைக்கிறார். உண்மையறிவே வாலறிவு. மெய்யறிவு என்பதைத் 'தத்துவ ஞானம்' என்றும் கூறுவர். நிறைந்த நூல்கள் கற்றதனால் யாது பயன் என்கிறார். கல்விக்கும் அறிவுக்கும் நெருக்கம் இருப்பதையும் குறிக்கின்றார். **கற்றதனால் வாலறிவு** என்பவற்றை நோக்கியறிதல் வேண்டும். **கற்றனைத்து ஊறும் அறிவு** (396) என்பதையும் கருதிக் கொள்க. **கற்றதனால் ஆய பயன்** என்று குறித்துக் காட்டியதால், கல்லாதார் செய்வன வேறு என்பதும் உய்த்துணர வைக்கப் பெற்றது.

'அறிவுடைமை' என்ற அதிகாரம் அறிவின் சிறப்பையெல்லாம் நன்கு சொல்கிறது. **நன்றின்பால் உய்ப்பது அறிவு** (422) என்று அருமையாகக் கூறுகிறார். பிறவற்றையும் சிந்தித்துத் தெளிதல் வேண்டும்.

நிறைந்த நல்லறிவு படைத்திருப்பதனை **அறிவுடைமை** என்ற அதிகாரம் உணர்த்துவது போன்று மிகச் சிறிய அறிவினைப் பெற்று அனைத்தும் தெரிந்ததாக நினைத்துக் கெட்டுப் போகின்றவர்களைப் பற்றிப் **புல்லறிவாண்மை** என்ற அதிகாரம் கூறுகின்றது. **கார் அறிவு** (287) என்பதையும் கருதிப் பார்த்தல் வேண்டும். **உரன்** (24) என்பதும் அறிவையே உணர்த்துகிறது. பிறவும் கண்டு தெளிக. **அறிவுடையார் எல்லாம் உடையார்** (430) என்னும் தொடர் முறையும் சிந்தனைக் குரியது.

அறிவு என்றும் வளரக் கூடியது. எல்லையற்றது; கற்கக் கற்க மிகுந்து கொண்டே போவது. **ஊறும் அறிவு** (396) என்பதும், **அறிதோறு அறியாமை** (1110) என்பதும் அறிவின் சிறப்பை எடுத்துக் காட்டுபவை. இத்தகைய அறிவு தாழ்ந்த இனத்துடன் நெருங்கி இருக்க நேரிட்டால் தாழ்வடையும். இதை **இனத்துளது ஆகும் அறிவு** (454) என்பதனால் உணரலாம்.

**அறிவு அறிந்த மக்கள்** (61) என்பதில் 'அறிவு அறிந்த' என்னும் தொடர் குறிப்பிடத் தக்கது. **அறிவு அறிந்து ஆற்றின்** (123), **அறிவு அறிந்து** (472) **அறிவு அறியார்த் தேறுதல்** (507) **அறிவறிந்து ஆள்வினையின்மை** (618) முதலான இடங்களையும் நுணுகி ஆராய்ந்து பார்த்து நுட்பங்களைக் கண்டு தெளிதல் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| அஃகி அகன்ற அறிவு | 175 | மூத்த அறிவுடையார் | 441 |
| ஆயும் அறிவினார் | 198 | இன்னா அறிவினவர் | 857 |
| அறிவினுள் எல்லாம் தலை | 203 | ஆயும் அறிவினவர் | 914 |
| பேரறிவாளன் | 215 | மாண்ட அறிவினவர் | 915 |
| அளவறிந்தார் | 288 | ஆன்ற அறிவும் | 1022 |
| காண்பது அறிவு | 355, 358 | | |

என்ற இடங்களும் பிறவும் ஆற்றல் நிறைந்த அறிவின் திறத்தைப் பற்பல முறைகளில் எடுத்துக் காட்டுகின்றன. **அறிவிலார் என்னுடையரேனும் இலர்** (430) என்பதும் இங்குக் கருதத் தக்கது.

**கல்லார் அறிவிலாதார்** (140), **அவ்வது உறைவது அறிவு** (426), **இயற்கை அறிந்து செயல்** (637) என்பதெல்லாம் அறிவின் விரிவான தன்மையையும் அறிவு காலத்தால் எல்லை கட்ட முடியாதது என்பதும் பெறப்பட்டன.

அறத்தன்மையினால் மனம் தூய்மையாகும்; அன்பே, மனத் தூய்மைக்கு அடிப்படை; கல்வி அறிவு பெற்றிருந்தாலும் அவை மனந்தூய்மைக்குப் பயன்படாமலும் போகலாம்; இவற்றை, **வெஃகி வெறிய செயின்** (175), **மாணார்க்கு அரிது** (823) **அறிவினான் ஆகுவ துண்டோ?** (315) முதலானவை நன்கு எடுத்துக் காட்டுகின்றன. இவை பற்பல முறை சிந்தித் துணரத்தக்கவை.

**உயர்வும் தாழ்வும்**

நல்ல நாடு என்பதற்குரிய பல நல்ல இயல்புகளை ஆசிரியர் அமைத்துக் காட்டுகிறார். 'நாடு' என்ற அதிகாரம் இவற்றை யெல்லாம் மிக நன்றாக எடுத்துக் காட்டுகிறது. பல வகைப்பட்ட காரணங்களால் மக்கள் கருத்து வேறுபாடு கொண்டு, தனித்தனிக் கும்பலாக (குழு) நிலைத்து வாழ்தல் மிகவும் கேடு பயப்பதாகும். சாதி பற்றியும், மதங்கள் பற்றியும், கடவுள் பற்றியும் இன்னபிற காரணங்களால் வேறுபட்டுப் பிரிந்து பற்பல கூட்டங்கள் ஒரு நாட்டில் இருக்கக் கூடாது என்பதைப் **பல்குழுவும் இல்லது நாடு** (735) என்று குறிப் பிட்டார். ஆட்சித் தலைவனைக் கெடுக்கும் கூட்டத்தினரும் அவர்கள் போன்ற கொடிய வர்களும் இல்லாதிருப்பதே சிறந்த நாட்டிற்கு அடையாளமாகும் என்று குறிப்பிட்டார். மக்களிடையே ஒற்றுமையினைக் கெடுக்கும் அனைத்தும் தீயவைகளேயாகும். இவற்றைச் சிந்திக்க வேண்டும்.

இறை வழிபாட்டில், மக்கள் அனைவரும் ஒன்றே ஒன்றென வழிபடுதல் வேண்டும் என்பதை முதல் அதிகாரத்தில் நன்கு விளக்குகிறார். அதனால் தான், எல்லா உயிர்க்கும் பிறப்பியல்பு ஒக்கும் என்று அறிவுறுத்தினார். **பிறப்பொக்கும்** (972) என்பதை இங்குச் சிந்திக்கவும்! உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று கூற வேண்டுமானால் அவரவர் செய்கின்ற தொழில்கள் தாம் (505) காரணமாக இருத்தல் வேண்டும். அவை மக்கட் பிறவிக்குத் தகுந்த தொழில்களாதல் வேண்டும். மானம் விட்டு, நாணத்தினை அழித்து, எத்தொழில் செய்தேனும் பிழைத்தால் போதும் என்று செய்கின்ற தொழில்களே இழிதொழில்கள். **வினைபடு பாலால் கொளல்** (279) என்பதை இங்கு, நன்கு சிந்தித்தறிய வேண்டும்.

ஒருவரை **மேலானவர்** என்று கருதிப் பாராட்டி போற்றுவதற்கு அவர் பெற்றிருக்கும் கல்வி அறிவே காரணமாக இருத்தல் வேண்டும். கல்வி கற்றவர்கள் நிறைந்த குடும்பத்தில் ஒருவன் பிறந்திருந்தாலும் அவனும் கற்றிருந்தால்தான் அவனுக்குப் பெருமை. இல்லாவிடில் அவன் கீழானவனே. பிறந்திருக்கும் அந்த இடமே அவனை மேலானவனாக இருக்கச் செய்து விடாது. அவனும் கற்றவனாக இருத்தல் வேண்டும் (409). கல்வியறிவு நிரம்பப் பெற்றவர்கள் இல்லாத குடும்பத்தில் ஒருவன் பிறந்திருந்தும், தான் கல்வி அறிவில் சிறந்தவனாக இருந்து விட்டால் அவனை மேன்மையானவனாகக் கருத வேண்டும். மேல், கீழ் என்று குறிக்கப்படுவதற்குக் காரணமாகக் கொள்ள வேண்டியதை அறிவுறுத்துகிறார். 'கல்லாதார்', 'கற்றார்' என்று பிரித்துக் காட்டுகிறார்.

**மேலிருந்தும் மேலல்லார்** (973) என்று கூறப்பட்டிருப்பதும் சிந்திக்கத் தக்கது. செல்வப் பெருக்கத்தினால் சிலர் மேலானவர்களாகக் கருதப்படுவர் இது பொருந்தாது. மேலாகக் கருதுவதற்கு அவரவர் செய்கின்ற பண்பான செயல்களே காரணமாக இருத்தல் வேண்டும் சிலர் வறுமையுற்றவர்களாக இருப்பினும், நற்பண்பு கொண்டு அரிய செயல் களைச் செய்வார்கள் (973). இப்படிப் பட்டவர்களே மேலானவர்களாகக் கருதப்படுதல் வேண்டும் என்பது மறைமொழி. சிறிய புத்தி கொண்டிருப்பவர்கள் செல்வப் பெருக்கத் தினால் மேலானவர்களாகக் கருதப்படுதல் தவறு என்று கூறப்படுகிறது.

பெருந்தன்மை படைத்தவர்கள் பிறந்த குடியில், அற்பர்கள் பிறந்திருந்தால் அக் குடும்பத்தில் பிறந்த காரணத்தினாலேயே அவர்கள் மேலானவர்களாகிவிட முடியாது. நல்லெண்ணமும் நற்செயல்களுமே மேல், கீழ் என்று கருதப்படுவதற்குக் காரணமாக இருத்தல் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| கேடும் பெருக்கமும் இல்லல்ல | 115 | நல்லார் கண்பட்ட வறுமையின் | 408 |
| கெடுவாக வையாது உலகம் | 117 | அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல் | 842 |
| அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் | 169 | இன்மை ஒருவற்கு இழிவன்று | 988 |

என்பன போன்ற குறட்பாக்களையும் பிறவற்றையும் கண்டு தெளிதல் வேண்டும். அறிவற்ற முறையில் உயர்வு தாழ்வு என்பவற்றை மக்களிடையே நிறுத்துதல் தீமை பயக்கும்.

**கள்ளும் காமமும்**

ஒருவகையான மயக்கத்தினைக் கொடுக்கின்ற வகையில் கள்ளும் காமமும் ஒன்று படுத்திக் கூறப்படுகின்றன. இதனைக் காமத்துப்பாலில் ஆசிரியர் எடுத்துக் காட்டி, காம இன்பத்தை விளக்குகிறார். அறம் கூற வந்த ஆசிரியர் பெருமான், தவமுனிவராக வும் ஒழுக்க சீலராகவும் மறை மொழிகளை அளிக்கின்றார். அதுமட்டுமல்ல, தலைசிறந்த பேராசிரியராகவும், பெரும் புலமை நிறைந்தவராகவும், கவிஞராகவும் கருத்துக்களை அமைத்துக் கொடுக்கிறார்.

காமத்துப்பாலில் அரிய உண்மைகள் கூறப்படும் போதெல்லாம் சிறந்த நயமான கற்பனைகள் நிறைய விளக்கப்படுகின்றன.

கற்பனைகள் இல்லையென்றால் காதலர் உலகில் சிறப்பில்லை. காம இன்பத்தின் வளர்ச்சியானது கற்பனை என்னும் சுவையிலும் அமைந்துள்ளது. திருக்குறளில் தனிச் சிறப்பு, வேறுபாடு என்பதைக் குறிப்பாகத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்,

அறத்துப் பால், பொருட் பால், காமத்துப்பால் என்ற மூன்று பகுதிகளில் முதலிரண்டு பகுதிகளிலும் கருத்துக்களைக் கூறும்போது ஆசிரியர் உலக மக்களுக்குத் தாமே எடுத்துச் சொல்லுவதாகக் கருத்துக்கள் அமைக்கப்பட்டுள்ளன. நேருக்கு நேர் பேசுவது போல அமைக்கப்படவில்லை. இது தனிச் சிறப்பாக அமைந்த, சிந்தனைக்குரிய அரிய உண்மை. மறவன் (வீரன்) ஒருவன் நேரில் கூறுவது போலவும், வறுமையாளன் (நல்குரவு), இரப்பவன் (இரவு அச்சம்) என்பன போன்ற ஒன்றிரண்டு இடங்கள் தவிர மற்றைய அனைத்தும் ஆசிரியர் நமக்கு நேரில் கூறுவனவாகும்.

ஆனால், காமத்துப்பால் முழுதுமே காதலர் நேருக்கு நேர் பேசுவது போலவே உண்மைக் கருத்துக்களை அமைத்திருக்கின்றார். இதற்கு விதிவிலக்காக இருப்பவை பெரும் பான்மையில்லை யென்றே கூறலாம். காதலர்களாக இருக்கும் போது காதலர்கள் இருவரும், தலைவியும் தோழியுமாக ஒருவருக் கொருவர் நேரில் பேசுவதாகவே கருத்துக்கள் உணர்த்தப் படுகின்றன. காதல் (களவு) வாழ்க்கை முடிந்து திருமணம் செய்து கொண்டு நாயகன், நாயகியாக வாழும் போதும் தனித்து வருந்திப் பேசுவதாகவும், நேருக்கு நேர் பேசுவதாக வும் கருத்துக்கள் காணப்படுகின்றன. காம இன்பத்தில் கற்பனை மிகுதியாகவும் கொஞ்சம் பொய்யும் கலந்துதான் இருக்கும். ஆதலால் அவர்களையே பேசச் செய்து விட்டார் போலும்! மற்றொரு குறிப்பும் காணப்படுகிறது.

அறத்துப் பாலிலும் பொருட் பாலிலும் **அறம்** என்ற சொல்லினை அடிக்கடி எடுத்துக் காட்டும் ஆசிரியர், காமத்துப் பாலில் இருநூற்றி ஐம்பது குறட்பாக்களிலும் எந்த இடத்திலும் 'அறம்' என்ற சொல்லைச் சொல்லாமல் இருப்பதும் சிந்திக்கத் தக்கது.

காதலர்கள் ஒருவரையொருவர் சிறப்பாகப் பாராட்டிக் கொள்ளுகிறார்கள். அந்தக் கற்பனைப் பாராட்டில் இனிமை காணுகிறார்கள். காம இன்பத்தில் திளைத்து மயக்கம் கொள்ளுகின்றார்கள். பிறகு தெளிவு பெறுகின்றார்கள். ஆதலால் தான் கள்ளினையும் காமத்தினையும் ஒன்று படுத்திக் கூறவேண்டிய நிலைமை உண்டாயிற்று.

| | |
|---|---|
| உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம் போல் | 1090 |
| களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் | 1145 |
| உள்ளினும் தீராப் பெருமகிழ் | 1201 |
| உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் | 1281 |
| இளித்தக்க இன்னா செயினும் | 1288 |

என்பன போன்ற இடங்களில் குறித்துக் காட்டப் படுவனவற்றை மிக நன்றாகச் சிந்தித்து அவற்றின் அருமை அறிதல் வேண்டும்.

## உணவும் ஊடலும்

பஞ்சணையில் நாயகனும் நாயகியும் இருக்கின்றபோது நிகழ்கின்ற நிகழ்ச்சியே ஊடல். **ஊடல்** என்பது சிறு பிணக்கு ஆகும். இது இன்பம் நுகர்வதற்கு முன்பாக நடை பெறுவது. இந்தப் பிணக்கினைச் செய்பவள் நாயகியேயாவாள். நாயகன் பிணங்கிக் கொள்ள மாட்டான்! நாயகிதான் ஊடலுக்குக் காரணமாவாள். இல்லாத தவறு ஒன்றைப் பொய்யாக வேனும் கற்பனை செய்து கொண்டு, **இல்லை தவறு அவர்க்கு ஆயினும்** (1321) நாயகன் மீது நாயகி கோபித்துக் கொள்வாள். நாயகன் அந்தக் கோபத்தைத் தணிப்பான். அவள் தணிவாள். ஊடல் முடியும்; பின்னர் கூடல் நிகழும்.

உண்ணுகின்ற உணவினை உவமையாகக் காட்டி ஆசிரியர் ஊடல் - கூடல் இன்பங்களைக் காட்டுவது மிகவும் சிறப்புடையது. உண்ணும் உணவு 'அறல்' (சிரணித்தல்) வேண்டும். பின்னர், உண்ணுதல் வேண்டும். உண்ண வேண்டிய அளவு, காலம் முதலியவற்றை 'மருந்து' என்ற அதிகாரம் நன்கு குறிக்கின்றது. நோய் வருவதற்குக் காரணமும், அது நீக்கப்பட வேண்டிய முறையும் 'மருந்து' என்ற அதிகாரம் கூறுகின்றது.

காமத்துப்பால் தொடக்கத்திலும் பிறகும் காம நோயைப்பற்றி ஆசிரியர் குறிப்பிடுகின்றார். அது எத்தகைய நோய் என்றும் கூறுகின்றார். **நோய் செய்யும்** (941), **அற்றது போற்றி உணின்** (942), **அற்றது அறிந்து** (944), என்பன போன்ற பாக்கள் முன் உண்ட உணவு அற்ற (சிரணித்த) பிறகே மீண்டும் உண்ணுதல் வேண்டும் என்று கூறுகின்றன. அதுபோன்று காமத்துப்பாலிலும் **'அறல் இனிது'** (1326) என்று குறிக்கப்பட்டது. அதாவது ஊடல் எனும் பிணக்கு தீர்ந்த பிறகு கூடல் இன்பம் தரும் என்பது விளக்கப்பட்டுள்ளது.

**நோய் நோக்கு** (1091) என்று ஒரு நோய் கூறப்படுகிறது; அந்த நோய்க்கு மருந்தும் கூறப்படுகிறது. **நோய் மருந்து** (1091) என்பதும் சிந்தனைக்குரியது. **பிணிக்கு மருந்து பிற, தானே மருந்து** (1102) என்பனவும் காம நோயையும் மருந்தையும் கூறுகின்றன. இவை அனைத்தும் காதலன் கூறுவனவாக அமைந்துள்ளன. நாயகியுடன் இருந்து கலந்து மகிழ்வதை, இல்லறத்தில் இருந்து உணவுண்டு மகிழ்வதைப்போல் இருக்கின்றது என்கிறார். இதையே **அம்மா அறிவை முயக்கு** (1107) என்று கூறுகின்றார். **மருந்து** அதிகாரத்தில் காணப்படுகின்ற உணவு உண்ணல், நோய், மருந்து ஆகியவை **காமத்துப் பாலிலும்** காணப்படுகின்றன. **தீர்ப்பான்** (950) என்று அங்கு குறிப்பிட்டது போல் இங்கும் தீர்க்கும் மருந்து (1275) குறித்துக் காட்டப்பட்டது. **காம நோய் போல** (1159) என்பது போன்று வருகின்ற இடங்கள் சிந்தனைக்குரியனவாகும்.

'நோய்' என்பதாகக் கூறப்படுவதை (1161, 1162) முதலிய குறட்பாக்களும் பிறவும் அறிவிக்கின்றன. அதையே **தண்டா நோய்** (1171) என்றும் தலைவி கூறுகின்றாள். **எவ்வ நோய்** (1241) என்று இந்தக் காம நோயினைக் குறிப்பிட்டு, அதற்கு மருந்து ஒன்று சொல்ல மாட்டாயோ என்று தனது நெஞ்சத்தினைப் பார்த்துக் கேட்கின்றாள். **பைதல் நோய்** (1266) என்றும் கூறுகின்றாள். நாயகனும் தான் அடைகின்ற நோய்க்கு மருந்து காணுகின்றான். காதலர்களாக (களவு ஒழுக்கத்தில்) இருந்த போது 'மருந்து' என்று கூறிய அவன் நாயகியைப் பிரிந்திருந்து வந்து கூடியபோதும் அவளைப் பார்த்து, அவள் பார்வையில், **உறுதுயர் தீர்க்கும் மருந்தொன்றுடைத்து** (1275) என்று கூறுகின்றான். மருந்து இருக்கும் இடத்தை அவன் கண்டு கொண்டான்.

உணவு உண்கின்றபோது சுவைத்து இன்பத்தை அடைகின்றோம். ஆனால் இதைவிட இன்பம் எதுவென்றால் முன்பு உண்ட உணவு செரித்ததேயாகும். அவ்வாறு செரித்திருந்தால் அது பின்னர் உண்ணும் இன்பத்தையும் மிகுதிப்படுத்தும். சிந்தனைக்குரிய அரிய உண்மைகள்; நன்கு அறிந்துணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

**உடைக்கும்**

மனவலிமை, மன உறுதி, மனத்திட்பம் என்பவற்றால் குறிக்கப்படும் சிறந்த கருத்து மிகவும் இன்றியமையாதது. வெற்றி தருகின்ற அனைத்திற்கும் அடிப்படையாக அமைந்திருப்பது மனத்தின் வலிமையேயாகும். இது வெளிப்படையான உண்மை.

மனத்தின் வலிமையும் உடைபடுகின்றது என்கிற உண்மை மிகவும் சிந்திக்கத் தக்கது. ஆசிரியர் காம நோயினைப் பற்றிக் கூறுகின்றபோது சிறந்த மனவலிமையும் **தளர்ந்து விடுகிறது** என்றுகூட அமைக்காமல், **உடைகின்றது** என்பதாகவே அவர் குறிக்கின்றார். பெண்களின் மனஉறுதி மிகவும் கட்டுக் கோப்பாகவும் மிக்க உறுதியாகவும் இருப்பதாக அறிவிக்கப்படும். பல முறைகளிலும் இதைக் காண முடிகிறது. **ஒருமை மகளிரைப் போல்** (974) என்பது போன்றவை இதனை உறுதிப்படுத்தும்.

படை வீரர்களிலே தலைசிறந்த வீரனான அக்காதலன், அப்பெண்ணின் அழகைக் கண்டு நிலை தடுமாறி மயங்குகின்றான். அவளுடைய உறுப்புக்களின் அழகைத் தனிப்பட்ட முறையில் பேசுகின்றான். அப்பெண்ணின் (நுதல்) நெற்றியின் அழகைக் கண்டு "எனது வலிமையெல்லாம் உடைந்ததே' என்று கூறுகின்றான். 'உடைதல்' என்னும் சொல் காம வேகத்தின் வலிமையை உணர்த்துவதாகும். காம வேகம் போர் செய்யும் தன்மையாகவே கூறப்படுவதும் சிந்தனைக்குரியது. பெண் நோக்குவதை, **தானைக் கொண்டன்னது** (1082) என்று கூறுகின்றான். இதில் இன்பத்தின் வேகம் உணர்த்தப்படுகின்றது.

மாலை நேரம் காம இன்பத்தை நினைவுபடுத்துவது. நாயகன் பிரிந்திருக்கும் போது வேதனையைத் தாங்க முடியாமல் வாடுகின்ற அவள் மாலையில் கேட்கப்படுகின்ற ஆயன் குழலோசையினைக் **கொல்லும் படை** (1228) என்கிறாள். இன்ப எண்ணம் தருகின்ற துன்பம் வேறு எதற்கும் சமமானதில்லை என்று கூறினார்; துன்பம் அனைத்துக்கும் மேலான துன்பம் என்பது உணர்த்தப்பட்டது.

பெண்கள் தங்கள் மனத்திலுள்ளதைப் பிறர் அறியாமல் மறைத்து வைக்கும் ஆற்றல் மிகுந்தவர்கள். குறிப்பாகக் காம இன்பத்தை மறைத்தே வைத்திருப்பார்கள். அத்தகைய பெண்ணும், காம இன்ப வேகம் தாக்குவதால் அனைத்தும் உடைகிறது என்று வருந்துகிறாள். **காமக்கணிச்சி உடைக்கும்** (1251) என்று பேசுகின்றாள்.

நாணத்தைக் கொண்டு மனத்தை உறுதிப் படுத்திக் கொண்டிருக்கும் அப்பெண்மைத் தன்மையை அந்த நாயகன் ஏதேதோ - பொய்யும் தாழ்ந்த தன்மையுமான பல சொற்களைப் பேசி உடைத்து விடுகின்றான். **பெண்மை உடைக்கும் படை** (1258) என்கிறாள். புலவி என்பது சிறு பிணக்காகும். அப்பிணக்கிலே அவள் இருந்தாலும் அவன் பேசுகின்ற பலவகையான சொற்கள் அதனை உடைக்கின்றன. **உள்ளம் உடைக்கும் படை** (1324) என்கிறாள். பிறவற்றையும் சிந்தித்து மனோதத்துவ உண்மையை உணர்ந்தறிக.

**பால், தேன், நெய் !**

இவ்வுலக வாழ்க்கை யென்பது பொருளை அடிப்படையாகக் கொண்டது. செல்வம் இல்லாவிட்டால் இவ்வுலக வாழ்க்கை நடைபெறாது. செல்வத்தைப் பெற்றிருப்பவர்கள் செய்ய வேண்டிய மிகமிக இன்றியமையாத கடமையை **நன்றியில் செல்வம்** என்ற அதிகாரமும் பிறவும் தெள்ளத் தெளிய எடுத்துரைக்கின்ற அருமையான செல்வம் ஓரிடத்திலேயே முடங்கிக் கிடப்பது நாட்டின் முன்னேற்றத்திற்குப் பெரிய தடையாகும். அதைப் பலருக்கும் பயன் படும்படியாகச் செய்ய வேண்டும். இதைப்பற்றி ஈகை, ஒப்புரவறிதல் முதலிய அதிகாரங் களும் இன்ன பிறவும் விரிவாகக் கூறுகின்றன.

பொருளாகிய செல்வம் நல்ல முயற்சியால் பெறப்படுவது. கல்வி, அறிவு, ஊக்கம் இவைகளால் செல்வம் பெறுதல் கூடும். எவ்வித முயற்சியும் இல்லாமல் இயற்கையினால் ஒருவனுக்குப் பெருஞ்செல்வம் சேர்ந்து விடுவதும் உண்டு. இதை **ஊழ்** என்ற அதிகாரம் நன்கு எடுத்துக் காட்டுகிறது. பேதைகளிடமும் பெருஞ்செல்வம் வந்து விடுவது உண்டு. அறிவு, பண்பு அற்றவர்களிடமும் பெருஞ்செல்வம் இருப்பதுண்டு. **அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்** (169) என்பது போன்ற பற்பல இடங்கள் இதைக் கூறுகின்றன.

மனிதப் பண்பு அறவே இல்லாதவனிடத்தில் பெருஞ்செல்வம் வந்து விடும்.

பொருள் படைத்திருக்கும் ஆற்றல் இல்லாதவனாகையால் **பெற்ற பெருஞ் செல்வம்** (1000) என்று குறிப்பிட்டுக் காட்டினார். செல்வம் எப்போதும் எல்லாருக்கும் பயன்படும் வகையில் நாட்டில் உள்ள அனைவரும் பணியாற்ற வேண்டும்.

பசுவின்பால் மிகவும் சிறந்தது. உயிர்க்கு இன்றியமையாதது. அதன் பெருமையை உணர்த்தவே அதைச் செல்வத்திற்கு உவமை காட்டி, **நன்பால்** (1000) என்று உணர்த்தினார். வைக்கப்பட்ட பாத்திரத்தின் குற்றத்தினால் ஆவின் பால் திரிந்து கெடுவதைப் போல மக்கட் பண்பு இல்லாதவனிடத்தில் அகப்பட்டுக் கொண்ட பெருஞ் செல்வம், அவனுடைய தீய குணமாகிய குற்றத்தினால் யாருக்கும் பயன்படாமல் கெட்டுப் போகும். ஆகவே, தீயவர்களிடத்தில் பணம் இருக்குமாறு செய்தல் குற்றம் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. **பெருஞ்செல்வம்** என்பது கருதற்பாலது.

'நன்பால்' என்பதால் பால் எவ்வளவு இனிமை பயப்பது என்பதும் நன்மை பயப்பதென்பதும், அருமையானதென்பதும் குறிக்கப்பட்டது. இவ்வளவு அருமையான பாலையும் தேனையும் கலந்து சிறப்பான கருத்தொன்றை ஆசிரியர் கூறுகின்றார். இக்கருத்து காமத்துப் பாலில் காணப்படுகிறது. **பாலொடு தேன் கலந்தற்றே** (1121) என்ற குறட்பாவைக் கண்டுணர்ந்து, சுவை மிகுதியான இன்பம் எதுவென்பதையும், 'இப்படிப்பட்ட சுவைதான்' என்று சொல்ல முடியாதவாறு மேன்மையாக இருக்கும் என்பதையும் உணர்தல் வேண்டும்.

ஆவின்பால் (பசுப்பால்) மிகச் சிறந்தது என்பதால் 'ஆ' (பசு) மிகவும் போற்றக்கூடியதாகக் கருதப்படுகிறது. **ஆபயன் குன்றும்** (1066) என்பதும் இதனை மெய்ப்பிக்கின்றன. பாலும் தேனும் எவ்வளவு பயனுள்ளதாகப் போற்றப் படுகின்றனவோ அத்தகைய சிறப்பு நெய்க்கும் உண்டு. அவற்றைவிடவும் நெய் மேலானதாகக் கருதப்படும். ஆதலால், பால், தேன், நெய் மூன்றும் ஒரு நிலையில் வைத்துக் கருதுவதும் பொருத்தமானதே.

நெய் நெருப்பில் ஊற்றினால் எரிவது மேலும் மேலும் அதிகமாகும். காம வேகத்தினைக் குறிக்கின்றபோது நெய் பேசப்படுகின்றது. இதன் தெளிவான - விரிவான விளக்கத்தை **நெய்யால் எரிநுதுப்பேம்** (1148) என்ற குறட்பாவில் கண்டுணர்க.

உலகில் வாழ்கின்ற மக்கள் பலவகையினர். ஆதலால், அவர்களிடம் பலவித பழக்கங்கள் இருக்கும். அன்றும் இருந்தது, இன்றும் இருக்கும், என்றும் இருக்கும் என்று கூறுவதுகூட மிகையாகாது. அப்பழக்கத்தின் தன்மையை அறிந்து, உண்மை இதுதான் என்று கூறுவதே சான்றோர்களாகிய பேராசிரியத்தன்மை படைத்த தவமுனிவர்களின் கடமையாகும். 'நெய்' என்பதை சிந்திக்கின்ற இடத்தில், நெய் முதலியவற்றைச் சொரிந்து செய்யப்படுகின்ற வேள்வியைக் கருதுதல் மக்களிடையே காணப்படும் பழக்கம். எனவே அது குறிக்கப்பட்டது. நெய் என்பதற்கு '**அவி**' என்ற சொல் காணப்படுகிறது. **அவிசொரிந்து** (259) என்பது சிந்திக்க வேண்டியதாகும். '**ஆயிரம்** வேட்டல்' என்று சுட்டிக் காட்டுவதால் ஆசிரியரின் வெறுப் புணர்ச்சி நயமாகக் காணப்படுகிறது.

இத்தகைய பழக்கங்களை ஆசிரியர் ஏன் சுட்டிக் காட்டினார்? உலகில் மக்களிடையே இருந்து வருகின்ற எண்ணங்களையும் பழக்க வழக்கங்களையும் சுட்டிக் காட்டுவதற்கே என்க. இப்பழக்கம் பேரறிஞர்களுடைய கடமையாகக் கருதுதல் வேண்டும். அவ்வாறு சுட்டிக்காட்டி, உண்மை யாது என்று எடுத்துக் கூறுகின்றார் இதை அறிந்துணர்தல் அறிவுடைமை யாகும். வேட்டல் என்பதில் பல தீய செயல்கள், தகாத செயல்கள் நடைபெறுவதைக் குறிப்பிடுகிறார். ஆதலால், அதனைச் (வேள்வி) செய்வதைவிட உயிர்களைக் கொல்லா திருத்தலே நன்று என்று அறிவுறுத்தினார். அறங்கூற வந்த ஆசிரியர் எவ்வளவு அருமையான முறையில் கருத்தை அமைத்தார் என்பதை அறியவேண்டும்.

செவிச் செல்வம் மிகவும் தலையானது என்று ஆசிரியர் அறிவுறுத்துகின்றார். ஏனெனில், தான் கற்றுணர்ந்திருந்தாலும் பிறர் கூறுவதைக் கேட்டறியும்போது, கற்றவை மேலும் விளக்கம் பெறும். கல்லாதவர்களேயானாலும் கேள்விச் செல்வத்தால் கற்றவர்கள் போலவே மிகுதியும் பயன் பெறுவார்கள் என்பது வெளிப்படையான உண்மை. இங்கேயும், ஆன்றோர் (413) என்று குறிப்பிடுகின்றார். 'அவி உணவின் ஆன்றோர்' என்று அமைக்கிறார். நெய் முதலியவற்றைப் பெய்து வேள்வி செய்து ஆன்றோர்கள் எனப்படும் தேவர்களுக்குக் கொடுப்பதென்பது உலக மக்களிடையே நிலவி வரும் பழக்கமாகும்.

இப் பழக்கத்தைச் சுட்டிக் காட்டி செவி உணவாகிய கேள்வி அறிவு உடையவர்கள் இப் பூமியிலே வாழ்ந்தாலும் அவி உணவு பெறுபவர்களுக்குச் சமம் (ஒப்பர்) என்று அறிவுரை புகல்கிறார், அப்படியானால், உலக மக்கள் செய்ய வேண்டுவன யாது என்பதை வற்புறுத்திக் காட்டுகிறார். நல்லது இன்னது என்பதை மக்கள் உணர வேண்டும் என்பதற்காகவே மக்களிடையே இருந்து வரும் எண்ணங்களை அவ்வப்போது எடுத்துரைக்கின்றார். இவ்வுலக வாழ்க்கையில் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வதே மேலான—உயர்ந்த வாழ்க்கை என்று கூறுகிறவர் பிறவற்றைச் செய்தலும் எண்ணுதலும் கூடாது என்று உய்த்துணர வைக்கின்றார். பேராசிரியர்கள் கூறுகின்ற முறையும் அதுவேயாகும்.

**கருவியும் கருத்தும்**

உலகப் பொது மறையான திருக்குறள் என்றென்றும் நிலைத்து நிற்கின்ற உண்மை களையே போதிப்பதாகும். **அறிவுடைமையின் அடிப்படையில் கருத்துக்கள் அனைத்தும் புரிந்துகொள்ளப்பட வேண்டும்.** காலத்தால் மறையக்கூடிய கருத்துக்களை ஆசிரியர் எடுத் துரைக்கவில்லை. ஏனெனில், அவை மாறுதல் அடையக்கூடியவை; ஆதலால், காலத்திற் கேற்றபடி அறிவின் துணைகொண்டு அறம் நிறைந்த மனத்துடனே நல்லனவற்றை அறிந் துணர்ந்து செயல்பட வேண்டும். 'மருந்து' என்ற வகையில் அவ்வப்போது காலத்தால் மாறு படக்கூடிய முறைகள் பல வந்து இருந்து மறைந்து கொண்டிருக்கும். ஆதலால், பொதுவான வற்றையே கூறுகிறார்.

அதுவே போல படை, போர் என்பவற்றின் விளக்கங்களைக் கூறுகின்றபோது என்றும் நிலைத்து நிற்கின்ற உண்மைகளையே ஆசிரியர் எடுத்துரைக்கின்றார். போர்த் தலைமை, வீரர்கள் இயல்பு, போர் செய்யும் பொதுமுறை ஆகியவற்றையே விளக்குகின்றார். அவ்வப் போது நடைபெறுகின்ற கால வேறுபாடுகளால் மாறுபடக்கூடிய கருவிகள், முறைகள் முதலியன வற்றை அறிவுகொண்டு அவ்வப்போது அறிந்துணர்தல் வேண்டும். மாறுகின்ற தன்மை கொண்டவை திருக்குறளில் கூறப்படவில்லை.

ஒரு கருத்தைக் கூறுகின்றபோது ஆசிரியர் கூறவந்த கருத்தினையே புரிந்து கொள்ள வேண்டும். அதை உணர்த்துவதற்கு அவர் எடுத்துக் காட்டுகின்ற கருவிகள் போன்றவற்றைச் சிந்தித்தல் வேண்டப்படாதவை. ஏனெனில், கருவிகளாகக் கொள்ளப்பட்டவை காலத்தினால் மாறுதல் அடையும். ஆனால், ஆசிரியர் எடுத்துக்காட்டிய கருத்துக்களான உண்மைகள் என்றென்றும் மாறுதலடையாதனவாகும்.

மறவன் ஒருவனின் மிகச் சிறந்த வீர உணர்ச்சியைக் கூறவந்த ஆசிரியர், **வேல் பறியா நகும்** (774) என்று குறிக்கின்றார். இங்கே விளக்கப்பட்ட உண்மை மறவனின் வீர மிகுதியே யாகும். ஆதலால், அதனையே நன்கு புரிந்து கொள்ளுதல் வேண்டும். 'வேல்' இக்காலத்திலும் எக்காலத்திலும் இருக்காதல்லவா என்று எண்ணுதல் கூடாது. ஏனெனில், கருத்தைக் கூறுவ தற்கு 'வேல்' துணையாக நின்றது என்பதே உண்மை

முயலையும், யானையையும், அம்பையும் எடுத்துக்காட்டி வீரனுடைய (772) மனோ நிலை எப்படி இருக்க வேண்டுமென்ற அரிய கருத்தைப் புலப்படுத்துகிறார். எப்போதுமே வீரனுக்கு நோக்கம் மிகவும் உயர்வானதாகவே இருக்க வேண்டும் எனும் உண்மையை நிலை நிறுத்துகிறார். இதை உணர்த்துவதற்குக் கருவிகளாகப் பயன்பட்ட முயல், யானை, அம்பு என்பவை காலத்தினாலும், இடத்தினாலும் மாறுதலடைவனவாகும். ஆகவே, அவை சிந்திக்கப் பட வேண்டுவனவல்ல.

தீய மனம் படைத்த "கூடா ஒழுக்கத்தினரைக்" குறிப்பிடுகின்ற இடத்தில், பெற்றம் (பசு) புலித்தோல், வேட்டுவன், குன்றிமணி முதலியவெல்லாம் கூறப்படுகின்றன. இவையெல்லாம் அற ஒழுக்கம் இன்னது, தீயவை இன்னவை என்னும் கருத்துக்களை உணர்த்துவதற்குப் பயன்படுத்தப்பட்ட கருவிகளேயாகும். கருவிகள் எல்லாக் காலத்திற்கும் இடங்களுக்கும் மாறாமல் இருக்கும் என்று கூறுதல் தவறாகும். அவை மாறும். ஆனால் அவற்றை வைத்துக் கொண்டு ஆசிரியர் கூறுகின்ற உண்மைகள் என்றென்றும் மாறாதவை. இங்ஙனமே திருக்குறளில் ஆசிரியர் அவ்வக் காலத்தில் உண்டான கருவிகளைப் பயன் படுத்தி என்றென்றும் நிலைத்து நிற்கும் உண்மைகளை உரைக்கின்றார். கருத்துக்களைச் சிந்தித்தறிதல் வேண்டும். பயன்படுத்தப்பட்ட கருவிகளில் சிந்தனையை அதிகம் செலுத்துதல் கூடாது.

**முகவுரை**

ஒவ்வொரு நூலுக்கும் நூலாசிரியர் முகவுரை எழுதுதல் வேண்டும். அதற்கு முன்னுரை, முகவுரை, பாயிரம் என்பன போன்ற பெயர்கள் உண்டு. முகவுரையில் அந்த நூலில் கூறப்பட்டுள்ள கருத்துக்களின் அடிப்படையான எண்ணம் சுருக்கமாகக் கூறப்படும். திருக்குறள் உலகப் பொது மறையானதால் ஆசிரியர் பாயிரப் பகுதியில் நூலில் அடங்கி யுள்ள அனைத்துக் கருத்துக்களின் அடிப்படையான உண்மைகளையும், அவையே உலகத்திற்குப் பொதுவான தன்மையன் என்பதையும் நான்கு அதிகாரங்களில் கூறியிருக் கின்றார். 'கடவுள் வாழ்த்து', 'வான் சிறப்பு', 'நீத்தார் பெருமை', 'அறன் வலியுறுத்தல்' என்பவையாகும்.

திருவள்ளுவர் உலகிற்கெல்லாம் ஒப்ப முடிந்த தன்மையில் ஒருவனை முதல்வனாகக் கூறுகிறார். இந்த உலகம் ஒருவனை முதலாக வுடையது என்று கூறப்பட்டிருப்பதே சிந்திக்கத் தக்க சிறப்புடையது. எழுத்துக்களுக்கெல்லாம் 'அ'கரம்; உலகுக்கெல்லாம்

முதல்வன் இறைவன் என்கிறார். இவ்வதிகாரத்தில் காணப்படும் பத்துக் குறட்பாக்களிலும் பொதுத் தன்மையே அடிப்படையாக அமைந்துள்ளது. ஒழுக்கம், மெய்யறிவு, குணம் — இவையே இறைவன், அறம் என்பன போன்ற சொற்களால் பொதுத்தன்மை அறிவுறுத்தப் பட்டது. இறை, இறைவன் என்ற சொற்கள் தலைவனான மன்னனுக்கும் கூறப்படு வதாலும் மன்னனைப் பற்றிக் கூறப்படுகின்ற அதிகாரம் **இறை மாட்சி** என்ற பெயரில் இருப்பதாலும், முதற் பொருளாகிய இறைவனைக் குறிப்பிட வேண்டி, **கடவுள் வாழ்த்து** என்ற பெயர் இடப்பட்டது.

இரண்டாவது அதிகாரம் மழை. மழை என்பது ஒரு நிகழ்ச்சியினைக்குறிப்பது. அதாவது, செயலைக் குறிக்கும். அந்த அதிகாரம் நீர் (தண்ணீர்) என்பதை மட்டும் குறிப்பதல்ல. இவ்வுலகம் நிலம், நீர், தீ, காற்று, விண் ஆகிய ஐந்து இயற்கைப் பிரிவுகளால் ஆக்கப்பட்டிருப்பது. இவ் வுலகிலிருந்து தோன்றிய நம்மிடமும் இந்த ஐந்தும் இருக்கின்றன. இவற்றை ஐம்பூதங்கள் என்று கூறுவது உலக வழக்கு. மேலும் **பூதங்கள் ஐந்தும்** (271) என்பதையும் கண்டு தெளிக.

இந்த ஐந்து இயற்கைப் பிரிவுகளும் எப்போதும் செயல்பட்டுக் கொண்டே இருக்க வேண்டும். செயல்படாமல் ஒரு கண நேரம் இருந்து விட்டால் இந்த உலகமே மறைந்து விடும். அவ்வாறு செயல்பட்டுக் கொண்டிருப்பதை உணர்த்துவதற்கே இரண்டா வதாக 'மழை' என்பதை வைத்தார். நிலம், அதனைச் சார்ந்திருக்க வேண்டிய நீர், (கடல்) நீரினை ஆவியாக மாற்றுகிற தீ, ஆவியினை மேலே கொண்டு போகின்ற காற்று, மழை பொழிய இடமாக உள்ள விண் ஆகிய ஐந்தும் ஒன்று சேர்ந்து நிகழக் கூடிய ஒரே நிகழ்ச்சி மழை. உலகம் இயங்கிக் கொண்டே இருக்க வேண்டும். உலகப் பழக்கத்தில் சமயம், மதம் முதலியவற்றைச் சார்ந்திருப்பவர்கள் சிவன், சக்தி என்று கூறுவார்கள். இறைவனைச் சிவன் என்றும் செயல்படுவதை 'சக்தி' என்றும் கூறுவர். இது உலகப் பழக்கம் என்க; பொதுமறை ஆனபடியால் 'வான் சிறப்பு' இரண்டாவதாக அமைக்கிறார்; ஐந்து இயற்கைப் பிரிவுகளை விரிநீர், புயல், விண், தடிந்து, எழிலி, உழாஅர் உழவர், நெடுங்கடல், விசும்பு, பசும்புல் எனும் சொற்களால் உணர்த்திக் காட்டுகின்றார்.

மூன்றாவது அதிகாரம் உலகத்திற்குப் பொதுவான ஒழுக்கத்தில் நின்ற முனிவர் களை உணர்த்தும். இவர்களே அந்தணர்களாவர். இவர்கள் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுபவர். இவர்கள் நிறைமொழி மாந்தராவர்; இவர்கள் எல்லா நாட்டிற்கும் எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்திற்கும் பொதுவானவர் ஆதலால் "நீத்தார் பெருமை" என்று கூறப்பட்டது.

நான்காவது அதிகாரம், **'அறன் வலியுறுத்தல்'**. இது உலகில் வாழும் மக்களுக்கு அறவோர்கள் வகுத்துக் காட்டும் நல்ல நெறியினைக் கூறுகிறது. இப்பகுதி அனைத்தும் பொது நெறிகளைக் கூறுகிறது. அதனால் 'அறன் வலியுறுத்தல்' என்று பெயர் பெற்றது. இல்லறம், துறவறம் ஆகிய இரண்டு அற வாழ்க்கையிலேயே, உலக மக்கள் அனைவரும் அடங்குவார்கள். அதனால், இந்த இருவகையினர்க்கும் பொதுவாக அமைந்த எல்லாக் கருத்துக்களும் இந்த அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளன.

இல்லறம், துறவறம் என்ற இருவகைகளையும் கொண்ட அறத்துப்பாலைக் 'கடவுள் வாழ்த்து' என்பதன் சாயலாக அமைக்கலாம். இல்லறப் பகுதியிலே காமத்துப்பால் என்பதும் அடங்கும். உலகம் செயல்படும் தன்மையைக் காட்டும் வான் சிறப்பின் நிழலாக 'அரசியல்'

பகுதியை நினைக்கலாம். உலகிற்கு அறம் வகுத்த நீத்தாரின் நிழலாக, நாட்டினைச் செயல் படுத்தும் அமைச்சியல் பகுதியைக் கூறலாம். 'அறம்' கூறும் நான்காவது அதிகாரத்தின் நிழலாக சான்றோர்களைக் கூறும் ஒழிபியலைக் கருதலாம். இக் கருத்துக்கள் மிகுந்த சிந்தனைக்குரியவை.

**ஒக்கலும் விருந்தும்**

'ஒக்கல்' என்பது சுற்றத்தினரைக் குறிக்கும் சொல். உறவினர் என்றும் கொள்ளலாம். இவர்கள் இல்லறத்தில் வாழ்கின்றவனிடம் வந்து போகின்றவர்கள். **விருந்து, ஒக்கல்** (43) என்ற இடத்தில் குறிக்கப்படுகிறது. விருந்து என்பது புதுமை யெனப்படும். புதிதாக நமது வீட்டுக்கு முதன்முறையாக வருபவர் விருந்தினர் ஆவர். இதை விளக்குவது **விருந்தோம்பல்** அதிகாரம்.

இல்லறத்தில் வாழ்பவனிடம், புதிதாக வருபவர்கள் அனைவருமே விருந்தினர் என்ற பெயருக்கு உரியவர்களாகிவிட மாட்டார்கள். புதிதாக வருபவர்களையெல்லாம் போற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்பதும் சரியல்ல; மிகச் சிறந்த மேலானவர்களே விருந்தினர்களா வார்கள். அவர்களைப் போற்றும் இல்லறத்தான் வாழ்க்கையே மிகவும் சிறந்து விளங்கும்.

தலைசிறந்த பண்பாளர்களும் ஒழுக்க சீலர்களும்தாம் விருந்தினர் என்ற சிறப்புக்குரிய வர்கள். இல்லறத்தானுடைய முகம் சிறிது திரிந்து நோக்கினாலும் மனம் குழைந்துவிடும் பண்பாளர்களே விருந்தினர் ஆவர். விதைக்கு வைத்திருப்பதையும் சமைத்துப் போடுகின்ற எண்ணம் இல்லறத்தானுக்கு வரவேண்டும் என்றால், விருந்தினர் மிக உயர்ந்தவராக இருத்தல் வேண்டும் அல்லவா? திருவள்ளுவர் **'நல்விருந்து'** (84) என்று குறித்துக் காட்டுவதையும் சிந்திக்க வேண்டும். வருபவரெல்லாரும் சிறந்தவர்களாயிருக்க முடியாது அல்லவா?

**வருந்தாதவர்கள்**

செல்வம் நிறையப் பெறுவதும் பெற்ற செல்வம் நில்லாது மறைவதும் உலகின் இயல்பு. முயற்சியால் செல்வம் தொடர்ந்து இருக்கும் என்பது மறை மொழி. நிலையான ஊக்கம் பெற்றவர்கள் பொருளை இழந்தாராயினும் 'இழந்தோம்' என்று வருத்தப்படமாட்டார்கள். ஏனெனில், அந்த ஊக்கம் என்னும் மனவெழுச்சி இழந்த பொருளை மீண்டும் கொண்டுவந்து சேர்க்கும். எனவே, ஒருவன் ஊக்கத்துடன் செயலாற்றுதல் வேண்டும். **'இழந்தேம் என்று அல்லாவார்'** (593, என்று ஆசிரியர் அறிவுறுத்துவது இதனாலேதான். எந்தச் சூழ்நிலையிலும் மனங்கலங்குதல் கூடவே கூடாது. தனக்குக் கைப்பொருளாக ஊக்கம் எப்போதும் இருக்கும் பொழுது அல்லல்படுவது அர்த்தமற்ற செயல் ஆகும். 'உலகில் யாம் வள்ளல் தன்மை உடையவ ராவோம்' என்று சொல்லும் சிறப்பை அளிப்பது, ஊக்கம். ஊக்கம் இழந்தவர்கள் **'வள்ளல் தன்மை உடையோம்'** (598) என்று கூற முடியாது.

ஊக்கம், மடிமை என்னும் சோம்பலை அகற்றும். மடி மடிந்து கிடக்காதே; அதாவது, மடியின் கண்ணே வீழ்ந்து கிடக்காதே என்பது பொருள். மடியால்—சோம்பலால் இழிவான குற்றங்கள் எல்லாம் வந்து சேரும் எனவே, சிறந்த முயற்சியிலேயே இருத்தல் வேண்டும். **மாண்ட உஞற்று இலவர்க்கு** (604) உண்டாகும் குற்றங்கள் மிகப் பலவாம். 'பொருள் அற்றேம்' என்று அல்லல் படுதல் எந்நாளும் கூடாது. ஊக்கத்தால் இன்பத்துள் இன்பம் வந்துகொண்டே இருக்கும். ஊக்கத்தை வளர்ப்பதன் மூலம், நம் உள்ளத்தில் எப்போதும் மன எழுச்சி என்னும் சுடர் ஒளி விட்டுக்கொண்டே இருக்கவேண்டும்,

**சான்றோர் யார்?**

பல குணங்களும் நிறைந்தவருடைய ஆளும்தன்மையைச் **'சான்றாண்மை'** என்று கூறுவர். 'சாலுதல்' என்பதற்கு **நிறைதல்** என்று பொருள். 'சால்பு' எனும் உயர் குணத்தைச் 'சான்றாண்மை' என்னும் அதிகாரம் நன்கு விளக்குகிறது. 'இது நமக்குத் தகுந்தது' என்று சான்றாண்மையினை மேற்கொள்ளுபவர்களுக்கு நல்லனவாய குணங்களெல்லாம் இயல்பாக இருக்கும்.

'நோன்பு நோற்றல்' என்ற நெறியினை மேற்கொண்டு, தவம் செய்து, ஒழுக்க நெறியிலே நின்று, ஞான நிலையாகிய பேரின்ப நிலை அடைவதைத் துறவறம் என்ற பகுதி கூறுகிறது. உடலை வருத்தி நோன்பு நோற்று, ஆசைகள் அனைத்தையும் அறவே விடுத்த 'நீத்தார்களே' அந்தணர் ஆவர். அவர்களே சான்றோர் எனப்படுவர். இல்லறத்தை மேற்கொண்டு, இல்லறத்தில் (உலகியலில்) வாழ்ந்து, உயர்ந்த மேலான நிலையினைப் பெறுபவர்களே சான்றோர்களாவர். இவர்களும் துறவறத்தில் நின்று பேரின்ப நிலையடைபவர்களும் ஒரு படியில் வைத்துக் கருதப்பட வேண்டியவர்களாவர்.

**''குணநலம் சான்றோர் நலனே''** (982) என்று சான்றோர் இயல்பு கூறப்படுகிறது. **''குணமென்னும் குன்றேறி நின்றார்''** (29) என்று துறவிகளின் சிறப்பு எடுத்துரைக்கப் படுகிறது.

அன்புடைமை, நாணுடைமை, ஒப்புரவறிதல், கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்து பண்புகளும் நிறைந்தவர்களே, சான்றோர்கள் (983). எனவே, இல்லற வாழ்க்கையை மேற்கொண்ட இல்லற ஞானியே சான்றோர் எனப்படுவார்.

புல் பூண்டு ஆகிய ஓரறிவு உயிர் முதல் எவ்வுயிரையும் கொல்லாதிருப்பதே, நோன்பு. அதைக் **'கொல்லா நலத்தது நோன்பு'** (984) என்கிறார். அதே குறட்பா 'பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு' என்று சான்றோர்களின் இயல்பினையும் குறிக்கிறது. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுபவர்கள் (30) முனிவர்களாவர். நிறைந்த பணிவுடைமையும் பண்பாடும் சான்றோர்களிடத்தில் என்றும் காணப்படும் உயர் பண்புகள்.

துன்பம் செய்தார்க்கும் நன்மையே செய்தல் வேண்டும் என்பது முனிவர்களின் பண்பாகும். **''இன்னா செய்தாரை ஒறுத்தல்''** (314) என்னும் குறட்பா இதை உணர்த்துகிறது. சான்றோர்களின் இயல்பைக் கூறும்போது **''இன்னா செய்தார்க்கும் இனியவே''** (987 என்ற குறட்பா இதை மெய்ப்பிக்கிறது.

**'வாய்மையொடு ஐந்து சால்பு ஊன்றிய தூண்'** (983) என்று பொருட்பாலில் சான்றாண்மை எனும் அதிகாரம் கூறுகின்றது. இதற்கு ஒப்ப துறவறப் பகுதியில் **வாய்மை** எனும் அதிகாரத்தில் கூறுகின்றபோது **'சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு'** (299) என்று தவத்தோர்களுடன் சான்றோர்களும் இணைத்துக் கூறப்படுகின்றனர். **ஊழி பெயரினும் தாம் பெயரார்** (989) என்பதும், **'இருநிலந்தான் தாங்காது மன்னோ பொறை'** (990) என்பதும் சான்றோரின் மிக மேலான உயர்ந்த நிலைகளை உணர்த்துவன. **'ஐந்தவித்தான் ஆற்றல்'** (25) என்பதும் **'செயற்கரிய செய்வார் பெரியர்'** (26) என்பதும் துறந்த முனிவர்களின் பெருஞ்சிறப்பினைக் கூறுகின்றன.

'இல்லறவியல்' என்ற பகுதியில் கூறப்பட்டுள்ள அறத் தன்மைகள் எல்லாம், ஒருவனை இல்லறத்தான் என்ற நிலைமையில் அமைத்துக் காட்டி, அவனுக்கு இருக்க வேண்டிய இன்றியமையாக் கடமைகளையெல்லாம் சிறப்பாக விளக்கப்படுகின்றன. நோன்பு நோற்கின்ற தவத்தோனாகிய துறவிக்கு மேலான பண்புகளெல்லாம் கூறப்பட்டதால், எளிய அறங்கள் இல்லறப் பகுதியில் கூறப்பட்டன.

இல்லறத்தான் என்பவனே உலகியலில் வாழ்பவன். அதனால், பொருட்பாலில் கூறப்பட்டவற்றிற்கும் அவனே பொறுப்புள்ளவன் ஆகிறான். இது பொது விதியாகும். தனிப்பட்ட மனிதன் என்ற முறையில் ஒருவன் இல்லறத்தில் இருந்து செய்ய வேண்டியவை அனைத்தும் அப்பகுதியில் கூறப்பட்டனவென்று கொள்ளுதல் வேண்டும்.

தனிப்பட்ட மனிதன் என்ற முறையில் அவனுக்குக் கூற வேண்டியவற்றையும், ஆட்சியாளர் அறிந்து கொள்ள வேண்டியவற்றையும் சேர்த்துப் பொருட்பாலில், அரசியல், அங்கவியல் என்ற பகுதிகளில் கூறப்படுகின்றன.

அவற்றைச் **சிறப்பு, பொது** என்று பாகுபடுத்தி அறிந்து கொள்ளுதல் வேண்டும். அனைவர்க்கும் பொது என்று கருதப்படும் 'கல்வி' முதலியவை. தனிப்பட்ட முறையில் மட்டும் கருதப்படாமல் ஆட்சியின் துணையுடன் வளர்க்கப்படும் என்று குறிப்பால் உணர்த்தப்பட்டுள்ளது. கள், மது, வரைவின் மகளிர் முதலியவை ஆட்சியாளரின் துணை கொண்டே நீக்கப்படுதல் வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்தவே அப்பகுதியில் கூறப்பட்டது. பிறவும் இங்ஙனமே கண்டு தெளிதல் வேண்டும்.

இவை அல்லாமல் தனிப்பட்ட நிலையில் அமைத்துக் காட்டப்பட வேண்டியவற்றை 'ஒழிபியல்' பகுதியில் காண்கிறோம். 'சான்றாண்மை' என்பதும் அங்கே காணப்படுகிறது. எனவே, சிறப்பு, பொது என்ற நோக்கத்தில் ஆசிரியர் கூறுவனவற்றை நாம் அறிதல் வேண்டும்.

### பொது, சிறப்பு

திருவள்ளுவர் அறமாக வகுத்துக் கூறியுள்ள நற்குணங்கள் அனைத்தும், மக்கள் அனைவர்க்கும் பொதுவானவையாகும். 'நோன்பு நோற்றல்' என்னும் துறவறப் பகுதியில் கூறப்பட்டுள்ளவை, பொதுவும் சிறப்பும் கொண்டவை என்பதை உணர்தல் வேண்டும். பொதுவாக எண்ணப்பட வேண்டிய உண்மைகள் என்றாலும், "நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவா அறுத்தல்" முதலிய அதிகாரங்களின் அடிப்படைக் கருத்துக்கள் துறவிகட்கே சிறப்பாகப் பொருந்தும்.

'தவம்' என்ற அதிகாரம் சிறப்பாகக் கூறுங்கால் இல்லறத்தை மேற்கொண்டவர்கட்குப் பொருந்தாது. நோன்பு நோற்றலாகிய இத்துறவறப் பகுதியில் கூறப்பட்டனயாவும் இல்லறத்தினை மேற்கொண்டு உலகியலில் வாழ்பவர்கட்கு என்றென்றும் பின்பற்ற முடியாதவையாகும். அவற்றை எக்காலத்திலும், எல்லா இடத்திலும் சிறிதும் தவறாமல் பின்பற்றி வாழ்பவனே 'அருளாளன்' என்கின்ற துறவியாவான்.

இல்லறப் பகுதியில் காணப்படுகின்ற இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு, விருந்தோம்பல், ஒப்புரவறிதல், ஈகை முதலியவை உலகியலில் வாழ்பவர்களாகிய இல்லறத்தார்க்கே உரியவை என்று சிறப்பாகக் கொள்ள வேண்டும். நோன்பு நோற்கின்ற பற்றற்ற துறவிகளுக்கு இவை இயலாதவை. 'புகழ்' என்ற அதிகாரமும் இங்ஙனமே கருதத்தக்கது. காமத்துப்பால் இல்லற வாழ்வினருக்கே சிறப்பாக அமைந்தது என்பதை அறிதல் வேண்டும்.

அரசியல் பகுதிகளிலும் அங்கவியல் பகுதிகளிலும் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் பொதுவாக அனைவர்க்கும் பொருந்தும்; ஆட்சியாளர்களுக்குச் சிறப்பாகப் பொருந்தும் என்பதை உய்த்து உணர வேண்டும். இறைமாட்சி, குற்றங்கடிதல் , பெரியாரைத் துணைக்

கோடல், தெரிந்து செயல்வகை, தெரிந்து தெளிதல் முதலிய அதிகாரங்கள் சிறப்பாக ஆட்சி யாளருக்குரிய கருத்துக்களையே கொண்டுள்ளன. வலியறிதல், இடமறிதல், காலமறிதல் என்பன போன்ற அதிகாரங்கள் படை எடுத்துப் போர் புரியச் செல்பவனுக்குச் சிறப்பான கருத்துக்களை உரைக்கின்றன. தன்மீது வந்து தாக்குபவனிடமிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய முறைகளைச் சிறப்பாக **அரண்** என்ற அதிகாரம் எடுத்துக் காட்டுகிறது. **ஒற்றாடல், தூது** முதலிய அதிகாரங்கள் சிறப்பாக ஆட்சி செய்வோருக்கே உரியவை. அவ்வாறே **படைமாட்சி, படைச் செருக்கு, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை** முதலிய அதிகாரங்களும் குறிப்பாக ஆட்சியாளர்களுக்கு வேண்டிய கருத்துக்களையே கூறுகின்றன. உலகியலில் பொதுப்பட அறிந்துணர வேண்டிய உண்மைகளும் இதில் காணப்படுகின்றன.

**உழவு** என்ற அதிகாரம், உழவுத் தொழிலின் சிறப்பையும், உழவர்களின் பெருமையை யும், நாட்டிற்கு அத்தொழில் இன்றியமையாததாக இருப்பதையும் கூறுகின்றது.

**அமைச்சு, இகல், பகைமாட்சி, பகைத்திறம் தெரிதல், உட்பகை** முதலிய அதிகாரங்கள் சிறப்பாக **ஆட்சியாளர்களுக்கென்றே** கூறப்பட்டவை. உலக மக்கள் குறிப்பாக சிந்தித்தறிய வேண்டிய கருத்துக்களும் ஆங்காங்கே உள்ளன. கழிபெருங் காமத்தானாய் உள்ளவன், மனைவியின் இன்பத்தினையே கருதி, அவள் ஏவுகின்றபடியெல்லாம் அஞ்சி நடப்பவன் அரசு அதிகாரத்தில் பயனற்றவனாவான்; அத்தகையவன் ஆட்சிக் குழுவினரில் ஒருவனாக இருந்து விட்டால், அவனால் நாட்டிற்கே தீமை சேரும் என்பதைக் குறித்துக் காட்டவே, **அங்கவியல் பகுதியில், பெண்வழிச் சேறல்** எனும் அதிகாரம் வைக்கப்பட்டுள்ளது. இதைச் சிந்தித்து அறிதல் வேண்டும். **எண்சேர்ந்த நெஞ்சத்து** (910) என்பதும் இங்கே கருதத்தக்கது.

பொதுவாக நோக்குமிடத்து, **பெண்வழிச் சேறல்** அதிகாரம் அனைவர்க்கும் கருத்துக்களை உணர்த்துகிறது. மனித வாழ்க்கையில் உள்ள மிக மேலான உயர்ந்த தன்மைகள் எல்லாம் **ஒழிபியல்** பகுதியில் எல்லார்க்கும் பொதுவாகக் கூறப்பட்டுள்ளன. ஆட்சியாளராலேயே தீயவை கண்டிக்கப்படவேண்டும் என்பதைக் **கள், சூது, வரைவின் மகளிர்** ஆகிய பகுதிகள் உணர்த்துகின்றன. அவற்றில் உள்ள கருத்துக்கள் அனைவர்க்கும் உரியவையே.

இறைமாட்சி, குற்றங்கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், காலமறிதல், இடனறிதல், தெரிந்து வினையாடல், சுற்றந் தழால், பொச்சாவாமை, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை, ஒற்றாடல், மடியின்மை முதலிய அதிகாரங்கள், அரசியல் பகுதியிலும், அமைச்சு, வினைத்திட்பம், தூது, மன்னரைச் சேர்ந்தொழுகல், நாடு, அரண், பொருள் செயல்வகை, படைமாட்சி, படைச் செருக்கு, பெரியாரைப் பிழையாமை ஆகிய அதிகாரங்கள் அங்கவியல் பகுதியிலும் காணப்படுகின்றன. இந்த அதிகாரங்களில் காணப்படும் குறட்பாக்களில் ஆட்சியாளர்களான மன்னன், அமைச்சன் என்ற பெயர்களே நேரிடையாகச் சுட்டிக் காட்டப்படுகின்றன. இக்கருத்து குறிப்பாகக் கவனித்துக் கொள்ளப்படுதல் வேண்டும்.

எனவே, அரசியல், அங்கவியல் பகுதிகளில் காணப்படும் அதிகாரங்கள் அனைத்தும் ஆட்சியாளர்கள் சிறப்பாகவும், ஏனையோர் பொதுவாகவும் சிந்தித்து உணர்தல் வேண்டும்.

**இறை மாட்சி**

நாட்டுத் தலைவனான மன்னனுடைய கடமைகளையும், அவனுக்கு இருக்க வேண்டிய உயர்ந்த பண்பாடுகளையும் இறைமாட்சி எனும் அதிகாரம் எடுத்துக் காட்டு கின்றது.

திருக்குறளில் **நாட்டுத் தலைவன்** இறைவன், மன்னன், வேந்தன், அரசன் என்ற சொற்களால் அழைக்கப்படுகின்றான். சிறந்த குணங்கள் பொருந்தியவனே நாட்டுத் தலைவனாவான். பழங்காலத்தில் மன்னன் மகன் மன்னனாவான் என்று கூறப்படுவதைத் திருவள்ளுவர் கூறவில்லை. அக்காலத்தில் அதுவே முடியரசு என்று கூறப்படும்; இது பொது விதி. **சிறந்த ஆற்றல் மிக்கவனே தலைவனாக இருக்க உரிமை பெற்றவனாவான்** என்பதே இங்குக் குறிக்கப்படுகின்றது.

**மீன், ஆமை, முதலை**

நீரில் வாழ்கின்ற மீன், ஆமை, முதலை ஆகியவற்றின் மூலம் மக்கள் அறிய வேண்டிய அரிய உண்மைகளை ஆசிரியர் ஆங்காங்கே புலப்படுத்துகின்றார். நீரில் வாழ்வது மீன். அது போலவே, வானத்தில் காணப்படுவதை '**விண்**மீன்' என்று கூறுவதுண்டு.

சூதாட்டத்தினைக் கூறுகின்ற இடத்தில் **மீன் விழுங்கியற்று** (931) என்று கூறுகின்றார். இரையால் மறைத்திருந்த இரும்பினை மீன் விழுங்கி, தூண்டில் போட்டவனிடத்தில் அகப்பட்டுக் கொண்டது; அது உயிரையும் இழக்க நேர்ந்தது, மிகவும் சிந்திக்க வேண்டிய செய்தி இது. சூதாட்டத்தில் சிறிய வெற்றி பெற்றால் அந்த வெற்றி, 'மீன் விழுங்கியது' போன்று அவனுடைய செல்வத்தையெல்லாம் இழுக்கும் நிலையில் கொண்டு வந்து விட்டுவிடும். அவன் பெற்ற சிறிய வெற்றி அவனை மிகவும் தூண்டிவிட்டு, மேலும் மேலும் சூது விளையாடச் செய்து, அழித்துவிடும். (931) இக்குறட்பாவினை நன்கு ஊன்றிப் படித்து உண்மையை அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

நலம் புனைந்துரைத்தல் என்ற அதிகாரம் காதலர்களின் அன்பு மிகுதியை மிக நன்றாக எடுத்துக் காட்டுகிறது. காதலன் விண்மீன்களைப் பற்றிப் பேசுகின்றான் (1116). தனது காதலியின் முகத்திற்கும் வானத்தில் தோன்றும் மதிக்கும் (நிலவுக்கும்) வேறுபாடு தெரியாமல் எது முகம், எது மதி என்று புரியாமல் விண்மீன்கள் தாம் இருந்த இடத்திலிருந்து கலங்கித் திரிகின்றன என்கிறான். இது நன்கு சிந்திக்க வேண்டிய கருத்தாகும்.

ஆமையிடமிருக்கும் நல்ல குணம் ஒன்றினை நாம் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். ஆமை தனது நான்கு கால்களையும் தலையொன்றையும் அடக்கிக் கொண்டு துன்பம் வராமல் வாழ்கிறது. மனிதன் **அடக்கம்** என்ற இந்த நல்ல குணத்தினைக் கற்று, மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளையும் அடக்கி (126) வாழ்வானே யானால் அவனுக்குத் துன்பம் வராது. அடக்காவிட்டால் துன்பம் வந்து கொண்டே இருக்கும் என்பது குறிப்பு.

நீரில் வாழும் உயிரினங்களில் முதலையும் ஒன்று. அதனுடைய வலிமையெல்லாம் நீரில் இருக்கும்போதுதான்! நீரில் அதனுடைய வலிமை அளவு கடந்தது. அங்கே அதை எளிதில் வெல்ல முடியாது. ஆனால் நீரைவிட்டுத் தரைக்கு அது வந்துவிட்டால் மற்றவை அதனை எளிதில் கொன்றுவிடும். **வெல்லும் முதலை** (495) என்பது சிந்திக்கத்தக்கது. எந்தக் காரியத்தையும் இடமறிந்து செய்தால் வெற்றி உறுதி என்பது இதனால் உணர்த்தப் பட்டது. தமக்குத் தகாத இடத்தில் சென்றுவிட்டால் தமக்கு எவ்வளவு வலிமை யிருந் தாலும் பயனில்லாமல் போகும் என்பது உட்குறிப்பாகும்.

**கொக்கு, காக்கை, கோட்டான்**

கொக்கு மீனைப் பிடிப்பதற்கு இருக்கும்போது மீன் வருமளவும் உயிரில்லாதது போலவே ஆடாமல் அசையாமல் நின்று இருக்கும். மீன் வந்தவுடன் மீன் தப்பிக்காமல் இருப்பதற்காக அதிக விரைவில் குத்தும். தக்க நேரத்தினைக் கண்டு செயல் புரிய வேண்டும் (490) என்பது இதன் மூலம் குறிக்கப்படுகிறது. இக்குறட்பாவினை நன்கு கண்டுணர்க.

காக்கையிடம் காணப்படும் அரிய குணம் தனது இனத்தைத் தழுவி உண்டு வாழ்வதாகும். இதையே **கரைந்து உண்ணும்** (527) என்று கூறப்பட்டது. சுற்றத்தைத் தழுவி வாழும் பண்பு மனிதர்க்கு வேண்டும். அப்படி இருந்து விட்டால் சுற்றத்தாரால் அடையும் பற்பல நன்மைகளும் உண்டாகும். இக்குறட்பாவிலுள்ள சொற்கள் ஆழ்ந்த பொருளுடையவை.

காலமறிந்து செயல் புரிதல் என்பது மிகுந்த அறிவுடைமையாகும். காலத்தை நன்றாகப் புரிந்து கொண்டு உரிய நேரத்தில் செயலாற்றினால் பெரிய செயல்களையும் எளிமையாக முடித்து விடலாம்.

காக்கையும் கோட்டானும் பறவை இனத்தைச் சேர்ந்தவை. கோட்டானைக் கூகை என்று கூறுவதுண்டு. கூகை காக்கையைவிட மிகவும் பலம் பொருந்தியது. ஆனால் அந்தக் கூகைக்குப் பகற்பொழுதில் பார்வை தெரியாது. ஆதலால் அதைவிடப் பலம் குறைந்த காக்கை அந்தக் கூகையைப் பகற் பொழுதில் வென்றுவிடும் (481). இதன் மூலம் காலத்தின் அருமை விளக்கப்படுகிறது. அரசியல் பகுதியில் கூறப்பட்டுள்ள இக்கருத்துக்களை எல்லாரும் பொதுவாகக் கைக்கொள்ள வேண்டும். தக்க காலத்தில் செயல் புரியக் கற்றுக் கொண்டால் வெற்றி உறுதியாகும். இதை உணர்ந்து செயலாற்றுபவர்க்கு வாழ்க்கையில் தோல்வித் துன்பமே வராது.

**புதல்வரைப் பெறுதல்**

இப்பெயரில் திருக்குறளின் ஏழாவது அதிகாரம் அமைந்துள்ளது. தான் பெற்ற பிள்ளைகளைப் பற்றியும், பிள்ளைகளினால் உண்டாகும் இன்பம் முதலியன பற்றியும், கடமைகளைப் பற்றியும் கூறப்பட்டுள்ள இந்த அதிகாரத்திற்கு **மக்கட் பேறு** என்ற பெயரே பொருத்தமுடையது. ஆயினும் **புதல்வரைப் பெறுதல்** என்ற பெயர் வழக்கமாக இருந்து வருகிறது.

திருக்குறளில் அதிகாரப் பெயர்கள் அமைந்துள்ள முறை அறிந்து மகிழத்தக்கது. ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்து குறட்பாக்கள் இருக்கின்றன. அந்தக் குறட்பாக்களில் காணப்படும் சொற்களைக் கொண்டுதான் அந்தந்த அதிகாரத்தின் பெயர்கள் அமைக்கப் பட்டிருக்கின்றன.

ஆனால், இரண்டு அதிகாரங்களின் பெயர்கள் அவ்வாறு அமைக்கப்படவில்லை. ஒன்று **கடவுள் வாழ்த்து**, மற்றொன்று **புதல்வரைப் பெறுதல்**.

'கடவுள் வாழ்த்து' என்பதற்கு விளக்கம் பிற இடங்களில் கூறப்பட்டுள்ளது.

**புதல்வர்** என்ற சொல் குறட்பாக்களில் காணப்படவில்லை. **மக்கள்** என்ற சொல்லே காணப்படுகிறது. அப்படியானால் 'புதல்வரைப் பெறுதல்' என்பது ஏன் பெயராக அமைக்கப்பட்டு வழக்கமாக இருந்து வருகின்றது என்பதை அறிதல் வேண்டும்.

'மக்கள்' என்கின்ற சொல் பொதுவாக நாட்டில் வாழும் அனைவர்க்குமே பொருந்துவதாக இருத்தல் கூடும். **தம்மக்கள்** என்றும் ஆசிரியர் நன்கு குறிக்கின்றார். தான் பெற்ற பிள்ளைகள் என்பதைப் **'புதல்வர்'** என்ற சொல் தெளிவாகக் குறிக்கும் என்பதாக நினைத்து திருவள்ளுவர் சொல்லாத அச்சொல் பழங்காலம் முதல் அந்த அதிகாரத்திற்குத் தலைப்பாக இருந்து வருகின்றது. புதல்வர் என்பது புல் வேறு பொருளுக்கும் இடம் தருவதாகும். எனவே, 'மக்கட்பேறு' என்பதே சிறப்பானதென்று அறிக.

**பேய், பேடி, பாம்பு**

இனிமையான சொற்களைப் பேசுதல் மிகவும் பண்பான செயல். கடுமையான சொற்கள் துன்பம் தருவன. அதுபோல முகத்தினை இனிமையாக வைத்திருப்பதும் நல்ல குணமாகும். இஃது தலைமைப் பதவியில் இருப்பவர்கட்கு மிகவும் இன்றியமையாத குணமாகும். இன்ன பிறவற்றை 565வது குறட்பாவில் கண்டு தெளிதல் வேண்டும்.

நற்குணங்கள் இல்லாமல் கொடிய குணங்கள் இருப்பவனிடத்தில் ஈகை, இரக்கம் என்பவற்றை காண முடியாது. அப்படிப்பட்டவனிடத்தில் இருக்கும் செல்வம் எதற்கும் பயன் படாமல் போகும். மக்களுக்குப் பயன்படாமல் இருக்கும் செல்வத்தை வைத்திருப்பவன் நாட்டிற்குப் பெருந் தீமையை விளைப்பவன் என்பது மட்டுமல்ல, குற்றம் செய்பவனும் ஆவான். இதையெல்லாம் **நன்றியில் செல்வம்** என்ற அதிகாரம் எடுத்துக் காட்டுகிறது.

கடுமையான வெறுக்கத்தக்க குணமுள்ளவனிடத்தில் இருக்கும் செல்வத்தைக் குறிக்கும் போது **பேய் கண்டன்ன துடைத்து** (565) என்று குறித்தார். 'பூதம் காக்கும் பணம்' என்று உலகில் வழக்கமாகப் பேசுவது உண்டு. அதனுடைய பொருள், யாருக்குமே பயன்படாமல் இருக்குமாறு செய்துவிடும் என்பதாம். பேய் பிடித்துக் கொண்டது என்பதற்கு, அது தன் வச மாக்கிக் கொண்டது என்பதே பொருள். இயற்கைத் தன்மையிலிருந்து மாறுபட்ட நிலைமை யுண்டாகும் போது **பேய்** என்று சொல்லிக் கொள்வது வழக்கம்; **பூதங்கள்** என்றும் கூறுவர். அனைத்தும் இயற்கையின் செயல்களே யாகும். **பூதங்கள் ஐந்தும்** (271) என்ற சொல்லும் காணப்படுகின்றது.

உலகியல் பழக்கங்களையும், எண்ணங்களையும் சுட்டிக் காட்டுவது ஆசிரியரின் முறை யாகும். அவ்வாறு சுட்டிக் காட்டி 'உண்மை இது' என்று விளக்கம் தருவார். இக் குணம் உலகத்தில் மக்களிடையே அன்றும் இருந்தது; இன்றும் இல்லாமலில்லை. இயற்கை முறை தவறி விட்டால் பலவித குற்றங்கள், குறைகள் உண்டாகும். அப்போது நிலை தடுமாறும். அப்போது 'பேய்' பிடித்துக் கொண்டது என்று கூறுவார்கள். ஆதலால்தான் **பேய் கண்டன்ன துடைத்து** (565) என்று கூறுகிறார்.

இவ்வுலகம் நிலம், நீர், தீ, காற்று, விண் ஆகிய ஐந்து பிரிவுகளால் (பூதங்கள்) ஆக்கப் பட்டிருப்பது. இந்த ஐந்தும் (271) நம்மிடமும் இருப்பன. ஏனெனில் நாமும் இந்த உலகி லிருந்து தோன்றியவர்களே. நம்முடைய அறிவின் துணையால் அரிய முயற்சி செய்து நம்மிடம் இருக்கும் ஐம்பூதங்களைக் கொண்டு உலகில் நிலவும் ஐம்பூதங்களையும் நாம் வசப்படுத்த முடியும். இதைத்தான் செயற்கரிய செய்கின்ற செயல்கள் என்று பெரியோர் கூறுவர்.

கருத்துக்களைத் தெளிவாக எடுத்துரைப்பதே ஆசிரியரின் பெரு நோக்கம். ஆதலால் 'பேய்' என்று கூறுகிறார்; அது போலவே **அலகை** (850) என்றும் கூறுகிறார். இதுவும் இயற்

கைக்கு மாறாக நடப்பதென்பது குறிக்கப்பட்டது. நம்மால் ஆளப்படுவதோர் பொருள் நம்மைப் பிடித்து ஆட்சி செய்வதென்பதனை உய்த்துணர வைக்கவே, ''பேய், அலகை'' என்பவை கூறப் பட்டன.

'பேடி' என்கின்ற சொல் ஆணும் பெண்ணுமல்லாதவர்களைக் குறிப்பது. பேடிக்குப் பெண்ணுறுப்பு மிகுந்து ஆணுறுப்பு குறைந்திருக்கும். உலகில் தலை சிறந்த பெயரையும் உயர்ச்சியையும் கொடுப்பது முயற்சியே யாகும். 'தாளாண்மை' என்று சிறப்பிப்பதும் அதுவே. ஒவ்வொரு நாளும் 'ஆள்வினையுடைமை' என்ற அதிகாரத்தைப் படித்து மறை மொழிச் சொற்களை மனத்தில் நிறுத்தி வலுப்பெற்றால் நன்மையுண்டு. முயற்சியுள்ளவர்களே பிறர்க்கும் பயனாவார்கள் (614). இந்த இடத்தில் 'பேடி' பிடித்த வாளினைக் கூறினார். இதை நன்கு சிந்தித்தறிதல் வேண்டும். இவ்வாறே 'பேடி'யைப் பற்றிக் குறிப்பிடுகின்ற மற்றொரு இடம் (727) மிக மிக அரிய உண்மையை விளக்குகின்றது. நன்கு தெளிக!

உலகில் எல்லா மக்களும் நற்பண்புகள் உள்ளவர்களாக இருப்பார்கள் என்று எண்ணுவது தவறு.

நாட்டுத் தலைவனாக ஆட்சியில் இருப்பவனுக்கு உட்பகையினர் உண்டாகி விட்டால் ஆட்சிக்குக் கேடு என்பது மட்டுமல்ல, அவன் உயிருக்கும் எந்த நேரத்திலும் முடிவு வரலாம். ஆட்சியாளருக்குக் கூறுகின்ற போது **உட்பகை** என்று கூறப்படுகிறது. இவர்கள் நண்பர்கள், சுற்றத்தார்கள் போன்றிருந்தே தீமை விளைவிப்பார்கள். இவர்களுடன் இருந்து வாழ்வது ஒரு வீட்டினுள்ளே பாம்புடன் சேர்ந்து வாழ்வதுபோல் ஆகும். (890) என்று குறிப்பிடு கின்றார். எந்த நேரத்திலும் இருவரின் உயிர்க்கும் இறுதி வருதல் உறுதி. தனிப்பட்டவர் களுக்குக் கூறும்போது இத்தகையவர்களைக் **'கூடா நட்பு'** என்ற அதிகாரம் விளக்குகிறது.

காதலர்கள் திருமணம் செய்து கொள்ளும்வரை மறைவாக நிகழ்த்திவரும் உறவு நிலையைக் **களவொழுக்கம்** என்று கூறுகிறார். இவர்களுடைய காதல் வாழ்க்கை ஊரார்க்குத் தெரிந்து விடுகிறது. இச்செய்தி ஊரில் மிக விரைவாகப் பரவிவிடுகிறது. இதனை **அலர் அறிவுறுத்தல்** என்ற அதிகாரம் நன்கு எடுத்துக் காட்டுகிறது. எவ்வளவு விரைவில் இந்தச் செய்தி பரவுகிறது என்பதற்கு அரிய உவமை கூறப்படுகிறது. எங்கும் பரவி விட்டது என்பதை ஓர் அழகிய உவமை குறிக்கின்றது.

பூமியினுடைய நிழல் சந்திரன் மீது விழுகின்றபோது கருமைநிறம் தோன்றும். சந்திரனில் பூமியின் நிழல் விழுவதால் வரும் இருள் நிறத்தினைப் பாம்பு என்று உலகமக்கள் கூறுவர். உலகியல் பழக்கத்தினையும் எண்ணத்தினையும் காட்டி உண்மையுரைக்கும் ஆசிரியர் **பாம்பு கொண்டற்று** (1146) என்று கூறினார். **சுவைமிக்க குறள்** இது.

**ஆயன், குயவன், வேடன்**

மாலைக் காலத்தில் ஆயர்கள் குழலூதுவார்கள். அந்த ஓசை தொலை தூரத்திற்குக் கேட்கும்; இனிமையாகவும் இருக்கும். ஆயன் குழலோசை வந்தால் மாலைநேரம் தொடங்கி விட்டது என்று தெரிந்து கொள்ளலாம். ஆடு மாடுகள் மேய்ப்பவர்கள் ஆயர்கள் எனப்படுவர். அவர்கள் குழலோசையினைத் தலைவி ஒருத்தி கேட்டாள். தலைவன் பிரிந்திருக்கின்ற காலம், அவளுடைய மனோ நிலையினை **'அழல்போலும்...'** எனத் தொடங்கும் குறள் (1228) மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. இக்குறளில் பயின்று வரும் **குழல் போலும்** என்னும் சொல், ஆழமான கருத்துடையது.

குயவன் பயன் படுத்துகின்ற கருவிக்கு **மட்பகை** என்று பெயர். மண்ணிலிருந்து பானை முதலியன செய்வதற்கு இக்கருவியே பயன்படும். இக்கருவியின் வேலை கீழறுத்தல் ஆகும். குயவனார் பாத்திரங்களைச் செய்யும்போது இக்கருவி கூடவே இருந்து உதவி செய்து கடைசியில் பாத்திரங்களை அம்மண்ணிலிருந்து பிரித்து எடுக்க உதவும். உட்பகையினருக்கு ஆசிரியர் இக்கருவியை, **உலைவிடத்து மட்பகை** என்று (883) உவமை காட்டுவது பன்முறையும் சிந்தித்து அறியத்தக்கது.

வேட்டையாடும் வேடனுடைய செயல் மிகமிகக் கொடுமையானது. மிருகங்களையும் பறவைகளையும் பிடித்தலும் கொல்லுதலும் இந்த வேடனின் தொழில். தவத்திற்குரிய (சாமியார்) வேடங்களைப் போட்டுக் கொண்டு, சிற்றின்ப இச்சையை நிறைவேற்றுவதான வேலைகளைச் செய்கின்ற கொடியவர்களை - வேட்டையாடுகின்ற (274) **வேடன்** என்கிறார் ஆசிரியர்; மேலும் இக் குறட்பாவைக் **கண்டு தெளிதல்** நல்லது.

**அச்சு, ஆணி, அச்சாணி, தேர்**

அச்சு என்பது வண்டியின் இரு பக்கச் சக்கரங்களையும் இணைக்கும் அடி மரம். இதன் வலிமையால்தான் வண்டி செயல் படும். ஆனாலும் அளவுக்கு மீறிய சுமை ஏற்றினால் வண்டிக்குத் தீங்கு விளையும். மயிலிறகு இலேசானது. அதுவும் அளவுக்கு மீறி வண்டியில் ஏற்றப்பட்டால் சுமை அதிகமாகி **அச்சு முறியும்** (475) என்று கூறப்படுகிறது. பற்பல அரிய உண்மைகளை இக் குறட்பாவினால் சிந்தித்தறிந்து கொள்ள வேண்டும்.

உலகில் காலத்தினால் மாறுதலடையாமல், என்றும் நிலைத்து நிற்கின்ற உயர்வான தொழில் உழவுத் தொழிலேயாகும். அதுவே எல்லாத் தொழிலுக்கும் தலைமையான தொழில். அத்துடன் மக்கள் உயிர் வாழக் காப்பாற்றும் அடிப்படையான தொழிலுமாகும். உலக மக்களாகிய தேர்க்கு அச்சாணி போன்றவரே உழவர். மரத்தினை நிலைக்கச் செய்வது ஆணிவேர். உழவுத் தொழிலின் தன்மையும் அவ்வளவு உயர்வானது; அடிப்படையானது **உழுவார் உலகத்தார்க்கு ஆணி** (1032) என்பது பல உண்மைகளை மெய்ப்பிக்கிறது.

தேர் மிகவும் பெரியதாக இருந்தாலும் அதனைத் தாங்கிச் செல்லுகின்ற அச்சாணி மிகவும் சிறியதாக இருக்கும். அச்சு என்பது உருளைகளைக் கோத்த மரம்.

உலகில் திட்பமான - நுண்ணியதான செயல்களைச் செய்யும் திண்மையான மனிதர்கள் பலர் இருக்கின்றனர். அவர்கள் தோற்றம்கூட அவ்வளவு கவர்ச்சியாக இருக்காது. ஆனால் தொழில் புரிவதிலே பெருஞ்சிறப்பாளராக இருப்பர். ஆதலால் தொழில் புரியும் நுட்ப மதியினரை அவர்களுடைய செயல்களைக் கொண்டே அளவிடுதல் வேண்டும். அவர்களை யெல்லாம் உருவத்தைக் கொண்டு மதிப்பிடுதல் கூடாது. **அச்சாணி அன்னார் (667)** என்னும் தொடர், உருவத்தால் சிறுத்துச் செயலால் உயர்ந்து வாழ்வோரைக் குறிக்கும்.

உயர்ந்த தேரை **நெடுந்தேர்** (496) எனக் கூறுகிறார். பெரிய தேர்கள் ஆயினும் தரையில்தான் ஓடும். தண்ணீரில் ஓடாது. ‘இடனறிதல்’ என்ற அதிகாரம் அரிய பல உண்மைகளைத் தருகின்றன என்பதைப் படித்துத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். மிகச் சிறப்பு வாய்ந்தவர்களும் தக்க இடமாகக் கிடைக்காவிட்டால் செயல்பட முடியாது. இப்படிப் பட்ட உண்மைகள் தனிப்பட்டவர்கட்கும் பயனுள்ளவைதாம் என்றாலும், ஆட்சியாளருக்கு மிகமிகத் தேவையானவையாகும்.

போர் நிகழ்த்துதல், நாடாளுபவர்களுக்கு இயல்பானது. ஆதலால் நாடுகளில் படைகள் எப்போதும் இருக்கும். படை நடத்துவோர் 'குறிப்பாக 'இடனறிந்து செயல்படுவதில் நன்கு சிந்தனையைச் செலுத்த வேண்டும்' என்று ஆசிரியர் அறிவுறுத்துகின்றார். **காவாயும் ஓடாநிலத்து** (496) என்று கூறி, தேர் என்பதையும் காட்டி விளக்கம் தருகின்ற பேருண்மை, நுட்பமான திறனாற்றலை உய்த்துணர வைக்கும்.

**தினை, பனை, புனை, புணை**

சிறுமைக்கும் பெருமைக்கும் எடுத்துக் காட்டப்படுவனவாக, தினை அரிசி, பனை மரம் என்று தவறாகக் கூறுவர். அரிசியும், மரமும் ஒப்பிடுதற்குப் பொருத்தமானதல்ல என்பதைச் சிந்தித்தல் வேண்டும். ஏனெனில் தினையை, அரிசியை சிறுமைக்குக் கூறி அதற்குப் பெரிதாக இருக்கும் ஒன்றையும் அளவோடு கூறினால்தான் சிறப்பாக இருக்கும். பனைமரம் கருத முடியாத அளவு கடந்து பெரிதாக இருக்கும். ஆதலால் தினை, பனை என்பவற்றை அளவைகளாகக் கொள்ளுதல் வேண்டும். குறிப்பாக மருந்து விற்பனை செய்பவர்கள் மருந்துக்கான பொருள்களை நிறுத்திக் காட்டும் போது தினை எடை, பனை எடை என்று கூறுவது உண்டு. ஆதலால், அவ்வாறு கொள்ளுவதே பொருந்தும்.

மிக மேலானவர்களின் மனப்பான்மையைக் குறிக்கின்றபோது பிறர் செய்த உதவியை அந்த உதவியின் பயனைத் தெரிந்தவர்கள் எவ்வாறு கொள்வார்கள் என்பதைப் **பனைத்துணையாக கொள்வர் பயன் தெரிவார்** (104) என்று மிக நயமாக எடுத்துரைத்தார். பயனறியாத கீழான மனம் படைத்தவர்கள், ஒருவர் செய்த உதவியின் அருமையைப் புரிந்து கொள்ள மாட்டார்கள்.

தன்னை எவ்வளவு பெரிய மனிதனாகக் கருதிக் கொண்டிருந்தால்தான் என்ன என்று வினா அமைத்துக் குறட்பா (144) கூறப்படுகின்றது. **தினையளவு** கூடத் தனது குற்றத்தினை உணர மாட்டானா என்று கேட்கப்படுகிறது. கொஞ்சமாவது சிந்தித்துப் பார்த்துத் தனது பெரிய குற்றத்தை உணர வேண்டுமென்று கூறுகின்றார். காம மயக்கத்தால் பிறனுடைய மனைவியை இச்சித்து அவன் வீட்டிற்குள் செல்கிறவன் அடைகின்ற பழிகளுக்கு அளவே இல்லை. அவனுக்குப் புத்தி புகட்டும் போது 'தினை' என்ற சிறு அளவினைக் குறிக்கின்றார்.

பழி பாவங்கட்கு நாணமுற்று வாழ்பவனே மக்கள் கூட்டத்தில் வைத்து எண்ணப்படுவான். 'பழி வந்துவிடக் கூடாதே' என்று எண்ணி வாழ்வதே மனிதக் கடமை யாகும். அதைக் கருதாது வாழ்பவர்கள் நிறைந்திருக்கின்ற சமுதாயம் சீர் கெட்டுப் போகும். பெரிய மனிதர்கள் மிகச் சிறிய குற்றம் வந்தாலும் பெரிதாகக் கருதுவார்கள் என்பதைத் தினை, பனை என்று காட்டி விளக்குகிறார் ஆசிரியர்.

இன்பம் நுகரும் தலைவன் தலைவியரிடையே ஆசிரியர் அரிய கருத்தொன்றினை வெளிப்படுத்துகின்றார். இன்பம் நுகருவதற்கு முன்னதாக நாயகனிடத்தில் பொய்யாகக் கற்பனைக் காரணம் காட்டி நாயகி பிணங்கிக் கொள்வாள். இதற்கு ஊடல் என்று பெயர். நாயகன் பற்பல சொற்களைச் சொல்லி அவளுடைய ஊடலைத் தீர்த்து வைப்பான். காம உணர்ச்சி மிகவும் நிறைத்து விட்டால் அவள் ஊடல் செய்யவே கூடாது (1282) என்று அவளுக்கு அறிவுரை கூறப்பட்டது. இவ்வாறு பெண்களின் நிலைமை உணர்த்தப்பட்டது. இது இருபாலாருக்கும் பொருந்தும் என்று கொண்டாலும் பெண்களுக்குக் குறிப்பாக அறிவிக்கப் பட்டது. **புணர்ச்சி விதும்பல்** என்ற அதிகாரத்தில் இதனைத் தெளிவாகக் கண்டுணர்தல் வேண்டும்.

கல்வியழகே மக்கட்கு அழகு என்பதை அறிந்து வாழ்தல் வேண்டும். கல்வியழகில்லாதவன் தன்னை அழகுபடுத்திக் கொண்டு வருவது மிகமிக இழிவாகும்; ஆழ்ந்த கல்வியறிவில்லாதவன் தன்னை அழகுபடுத்திக் கொள்வது மண்ணால் செய்யப்பட்ட **பாவை** (407) அழகு செய்யப்பட்டதை ஒத்ததாகும் என்கிறார் ஆசிரியர். இதனைப் **புனை பாவை** என்று இடித்துக் கூறி அறிவுறுத்துகிறார். பிற இடங்களையும் இவ்வாறே கண்டு தெளிக.

தனக்குத் தெரியாத ஒன்றையும், தன்னால் முடிக்க முடியாத வேலைகளையும் எடுத்துக் கொண்டு செய்பவனுக்குப் **பேதை** என்று பெயர். **பேதைமை** என்ற அதிகாரம் இதை நன்கு உணர்த்துகிறது. அறிவே இல்லாதவர் இடத்திலும் இயற்கையின் காரணத்தால் பெருஞ் செல்வம் இருக்கும். இவர்கள் சில நேரங்களில் செய்யத் தகாத காரியங்களைச் செய்வது **புனை பூணும் கையறியாப் பேதை** (836) என்று கூறுகின்றார். அதாவது, தன்னைக் கெடுத்துக் கொண்டு விலங்கினைப் பூணுகின்ற நிலைமையும் உண்டாகி விடும் என்று அச்சுறுத்துகின்றார். 'பேதைமை', 'புல்லறிவாண்மை' என்ற அதிகாரங்களால் உலகில் வாழ்கின்ற பலதிறப்பட்ட மக்களைப் புரிந்து கொள்ளுதல் நல்லது.

மனிதனுக்குக் கேடு பயக்கும் கொடிய குணங்களில் கோபத்தைப் போன்றது வேறொன்றும் இல்லை. உலகில் மனைவி மக்களுடன் பலவகைப் பணிகளை மேற்கொண்டு வாழ்கின்றபோது அறவே கோபக் குறிகள் இல்லாது வாழ்தல் இயலாது. தன்னையும் கொல்லுகின்ற அளவுக்குக் கோபம் குடி கொள்ளுமே யானால், அப்படிப்பட்ட தன்மை **அவனை** மட்டும் அழிக்காது; அவனுக்குப் பாதுகாப்பாக இருப்பவர்களையும் கொல்லும் (306) என்கின்றார். சினத்திற்கு, **சேர்ந்தாரைக் கொல்லி** என்ற பெயர் ஆழ்ந்த பொருளுடன் இடப்பட்டது. பாதுகாவலாக இருக்கும் இனத்தை **'ஏமப்புணை'** என்று அழைத்தார். **புணரின் வெகுளாமை நன்று** (308) என்று உரைப்பதும் அரிய சிந்தனைக் கருத்தாகும்.

'புணை' என்னும் சொல் தெப்பம் என்பதைக் குறிக்கும். காமத்துப்பாலில் இதனை நன்கு எடுத்துக் காட்டுகின்றார். சிறந்த ஆண்மையும் நாணமும் காதலனுக்குத் துணையாக இருப்பனவாம். காதலியின்பால் இன்பம் நுகர்ந்திருந்த அவன், தடைப்படுத்தப் பட்டதால் மிகவும் வருந்தி, எவ்வாறேனும் மடலேறியாவது தன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள முடிவு செய்தான். மடலேறுதல் என்பது நாணத்தை விட்டுவிடச் செய்வதாகும். காமவெள்ளம் புணையினை அடித்துக் கொண்டு போகின்றதே (1134) என்று கூறுகின்ற உள்ளத்தின் தன்மை இவ்வாறு கூறப்படுதல் இங்குச் சிந்திக்கத் தக்கதாகும்.

தலைவன் பிரிவினால் **தலைவி** அடையும் துன்பத்திற்கு அளவில்லை. காமக் கடலினுள் அவள் துன்பப்பட்டுத் தவித்துக் கொண்டிருக்கின்றாள். அக்கடலைத் தாண்ட வேண்டுமல்லவா? கடலைக் கடப்பதற்குப் பாதுகாவலான தெப்பம் வேண்டுமென்பதையும், அது அவளிடம் இல்லையென்பதையும் **ஏமப்புணை மன்னும் இல்** (1164) எனும் குறள் காட்டுகிறது. இவ்வாறு நயமாக அமைந்த குறட்பாக்கள் போற்றத்தக்கவை.

**பொருளினால் எல்லாம்**

'பொருள் ஒன்று மட்டும் இருந்தால் போதும்; உலகில் எல்லாம் நடந்து விடும்' என்று சொல்லிக் கொண்டு அதையே குறியாகக் கொண்டு வாழ்ந்து சிலர் பொருளைச் சேர்க்கின்றார்கள். சிலருக்கு நிறைய பொருள் சேர்ந்து விடுகிறது. இயற்கை என்கின்ற ஊழ்வகையாலும் சிலருக்குப் பெருஞ்செல்வம் உண்டாகி விடுகிறது.

அவ்வாறு பொருள் படைத்தவன் எல்லாம் 'பொருளினால் தான்' என்று எண்ணிக் கொண்டும் சொல்லிக் கொண்டும் பிறர்க்கு ஈகை செய்யாமல் வாழ்ந்து மடிவானேயானால், அவனைவிட இழிவானவன் வேறு எவனுமில்லை என்றே சொல்லலாம். பொருளானாம் எல்லாம் (1002) என்பதைச் சிந்தியுங்கள். அப்படிப்பட்டவனுக்குப் 'பேய்ப்பிறப்பு உண்டாம்' என்று வருந்திக் கூறுகின்றார். பிறர் பசி கண்டும் ஈகை என்பதையே அறியாத பாவி அவன்.

மக்கள் நிறைந்த சமுதாயம் ஒவ்வொருவருடைய நற்செயலினால் தான் முன்னேற முடியும். ஒவ்வொருவரும் நற்பண்பு உடையவராக இருந்து பலருக்கும் உதவுகின்ற முறையில், தாம் பெற்ற செல்வத்தைச் சிறிதளவாவது பிறர்க்குக் கொடுத்தால் உலகமும் நன்மையடையும்; தானும் புகழடைவான். அதுவே மனித வாழ்க்கையின் சிறந்த குறிக்கோள்.

'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரம், பெற்ற செல்வம் எவ்வாறு பயன்பட வேண்டு மென்பதைச் சிறப்பாக எடுத்துக் கூறுகிறது. தான் மட்டும் உண்டு, உடுத்து, இருந்து மறைவது விலங்கினங்களின் வாழ்க்கையாகும். ஏனெனில், அவை மற்றவற்றைப் பற்றி நினைக்கும் அறிவு பெறவில்லை.

உலக மக்கள் இன்புற்று உயர வேண்டுமானால் ஒவ்வொருவரும் சிறிதளவேனும் ஈகையைச் செய்யப் பழகுதல் வேண்டும்.

திருக்குறளில் முதல் அதிகாரத்தில் அறம் என்று குறித்து 'இறைவன் அறக் கடலானவன்' என்கிறார் ஆசிரியர். மனத் தூய்மையே அறமாகும். அதுவே, உலகில் அறச் செயல்கள் புரியத் துணை நிற்கும். இறை நெறியில் நிற்பதும் அதுவே ஆகும்.

'வான் சிறப்பு' என்ற அதிகாரத்தில் தானம், தவம் என்று குறிப்பிட்டார். தான மென்பது உலகியலில் வாழ்கின்ற இல்லறத்தார்க்கும், தவம் என்பது துறவறத்தார்க்கும் கூறப் பட்டது. பிறர்க்குக் கொடுத்தல் என்கின்ற குணம் எப்போதும் இருத்தல் வேண்டும். அதுவே தானம் (19) எனப்பட்டது. தானம் செய்வது மனிதப் பிறவிக்கு அடையாளமாகும். உலகில் 'பொருளாதாரம் சீர்படுத்தல்' என்பதற்கு ஒவ்வொருவரின் நற்குணமே அடிப்படையாக இருத்தல் வேண்டும் என்பது கருதற்பாலது.

எல்லா உயிர்களும் நன்றாக இருக்க வேண்டும் என்று உள்ளத்தில் என்றென்றும் நினைத்துக் கொண்டிருப்பவர்களே 'அறவோர்' எனப்படும் அந்தணர் (30, ஆவர் என்று குறிப்பிடுகிறார்.

அறத்தை முடிந்த வழிகளிலெல்லாம் செய்துகொண்டே இருக்க வேண்டும் என்றும் அதனால் வருவதே உண்மையான இன்பம் என்றும் குறள் கூறுகிறது. அது 'அறன் வலி யுறுத்தல்' என்ற அதிகாரமாகும். மற்றவர்களுக்குச் செய்கின்ற உயர்ந்த பண்பாடே அறமெனப் படுவதாகும் என்பது குறிப்பு. அது, உலகம் துன்பத்திலிருந்து விடுபடக் கூறப்படும் அரிய முறை யாகும். ஒவ்வொருவரும் அந்த எண்ணத்துடனே வாழ்ந்து வருதல் வேண்டும்.

இல்லறத்தில் வாழ்பவன், தானும் தனது குடும்பமும் இன்புற்று வாழ்ந்திருந்தால் மட்டும் போதும் என்று எண்ணுதல் கூடாது. இயன்றவரை அவன் மற்றவர்களுக்குத் துணையாக இருக்க வேண்டும். இதை 'நின்ற துணை என்று கூறுகின்றார்; 'என்பான் துணை' என்கின்றார். 'ஓம்பல் தலை', 'பகுத்துண்ணுதல்', 'அன்பும் அறனும்', 'அறத்தாற்றின்',

'அறன் இழுக்காது', 'அறன் எனப்பட்டதே' என்றெல்லாம் **இல்வாழ்க்கை** என்ற அதிகாரம் அறம் பற்றிக் கூறுகின்றது. இப்படியெல்லாம் உலகில் தனது கடமையைச் செய்து வாழ்பவனை 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்வான்' என்று குறிப்பிடுகிறார். 'அனைவரும் அனைவர்க்குமாக வாழ வேண்டும்' என்ற குறிப்பு மனிதர்தம் உள்ளத்தில் இருந்தாக வேண்டும். அதுவே அறச் செயலின் அடிப்படை எண்ணமாகும்.

உலகில் பெருஞ் சிறப்புடையவனாகவும் இல்லற ஞானியாகவும் கருதப்பட வேண்டியவன் சான்றோன் ஆவான். அவனையே 'சான்றாண்மை' என்ற அதிகாரம் கூறுகின்றது. உலகத்திற்குப் பயன்படுபவனே, சான்றோன். **சான்றோன் எனக் கேட்டதாய்** (6 ) என்றே கூறுகிறார். பொருளாதாரத்தில் அனைவரும் நன்றாக இருத்தல் வேண்டும் என்பதற்காகவே ஒவ்வொருவரும் அறச் சிந்தனையுடன் வாழ வேண்டும்; அதுவே உயர்ந்த மானிடப் பிறவிக்கு இலக்கணம் என்றும் கூறுகிறார்.

தக்கவர்களைப் போற்ற வேண்டும்; நல்லவர்களுக்கு ஆதரவு தந்து துணையாக இருக்க வேண்டும் என்ற விளக்கங்களை **விருந்தோம்பல்** என்ற அதிகாரம் கூறுகிறது. 'பற்றற்றேம் என்பர்', 'உடைமையுள் இன்மை' என்றெல்லாம் விருந்தோம்பல் அதிகாரத்தில் காணப்படுபவற்றை நன்கு புரிந்துகொள்ள வேண்டும். செல்வம் பெற்றிருப்பவர்களின் கடமை இங்குத் தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது தனித்த எண்ணத்துடனும், தான் மட்டும் வாழ்தல் என்ற நினைப்புடனும் வாழ்தல் மனிதப் பிறவியாகாது என்பது இதன் மூலம் உணர்த்தப்படுகிறது.

மிக மிக அருமையான மனித இயல்புகளை யெல்லாம் 'அன்புடைமை' என்ற அதிகாரம் விளக்குகிறது. 'எல்லாம் எனக்குத்தான்; நான் மட்டும் இன்புற்று வாழ்ந்தால் போதும்' என்ற கீழ்ப் பிறவிக் குணத்திலிருந்து மனிதப் பிறவிக்குக் கொண்டு வருவது **அன்புடைமை** என்ற அதிகாரம். 'எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டும்; அதற்கேற்ப வாழ்தல் வேண்டும்' என்கின்ற எண்ணத்தை வேரூன்றச் செய்வது இவ்வதிகாரம். பகிர்ந்தளித்தல், அனைவரும் இன்புற்றிருக்கச் செய்தல், வறுமை ஒழிப்பு ஆகிய அனைத்தையும் மனிதப் பண்பாட்டினாலே செய்தல் வேண்டுமென்று உணர்த்துவதும் 'அன்புடைமை'யே யாகும்.

துன்பத்தைக் கொடுக்கின்ற வறுமை இல்லாமல் போகும் (94) என்று குறிப்புக் காட்டி, பல நல்ல கருத்துகளை **இனியவை கூறல்** என்ற அதிகாரம் குறிக்கிறது. வறுமையைப் போக்க ஒவ்வொருவரும் மனிதப் பண்பாட்டோடு வாழ வேண்டும் என்பதே ஆசிரியரின் அடிப்படைக் கருத்து.

மற்றவர்களுக்கு உதவுதல் வேண்டும், பிறர் உதவி செய்ததை மறத்தல் கூடாது என்பதை யெல்லாம் **செய்ந்நன்றியறிதல்** என்ற அதிகாரம் கூறுகிறது. 'தனித்து வாழ்ந்து மறையாதே; அது மனித வாழ்க்கையாகாது; ஒருவருக்கொருவர் உதவுவதே மனித வாழ்க்கையாகும்' என்கிறார். மனித சமுதாயம் முன்னேற்றமடைய ஒவ்வொரு தனி மனிதனும் மனித இயல்புடன் வாழ வேண்டுமென்பது நன்கு எடுத்துக் காட்டப்படுகிறது.

செல்வப் பெருக்கமும் அது இல்லாமையும் இயற்கை என்னும் ஊழ்வினை யாகும். என்று (115) குறட்பா குறிப்புக் காட்டுகிறது. பிறர் பொருளும் தமது பொருளும் ஒரே தன்மையதாக நடத்தப் படுதல் வேண்டும், கருதப் படுதல் வேண்டும் என்பதை **நடுவு நிலைமை** என்ற அதிகாரம் தெளிவாக உணர்த்துகிறது.

'அடக்கமுடைமை' என்ற அதிகாரத்தில் **செல்வர்க்கே செல்வம் தகைத்து** (125) என்று குறித்துக் காட்டி, செல்வம் படைத்தவர்கள் சமூக மக்களிடையே எவ்வாறு பழகிப் பய னுடையவர்களாக இருக்க வேண்டுமென்றும் ஆசிரியர் அறிவுரை கூறுகிறார்.

மக்களாகப் பிறந்தவர்கள் ஒழுக்கம் கெட்டுவிடக் கூடாது என்பதையும், அவர்கள் உலக மக்களோடு ஒழுகக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதையும், இன்ன பிறவற்றையும் அழகுற ஆணித்தரமாக **ஒழுக்கமுடைமை** என்ற அதிகாரம் கூறுகின்றது.

**கொடுப்பது அழுக்கறுப்பான்** (166) என்பதும் இவை போன்ற ஈகைச் செய்வதே மனித இயல்பின் முதன்மையாக இருக்க வேண்டும் என்ற குறிப்பெல்லாமும் **அழுக்காறாமை** என்ற அதிகாரத்தில் கண்டு தெளிக.

அறம் கூற வந்த ஆசிரியர் நூல் முழுதும் தம்மால் இயன்ற வரை பிறர்க்கு ஈகையைச் செய்தல் வேண்டும் என்று ஒவ்வொருவருக்கும் அறிவுறுத்துகின்றார். நாட்டின் பொருளாதாரத்தில் உயர்வு தாழ்வு போகவும், வறுமை நீங்கவும், மக்களிடையே துன்பம் நீங்கவும் அடிப்படையாக இருப்பது மனிதப் பண்பாடே என்றும், அந்த மனிதப் பண் பாட்டை அனைவரும் பெறுதல் வேண்டும் என்றும் உலகம் உய்ய ஆசிரியர் உயர்ந்த வழிகளை வகுத்துள்ளார்.

**உப்பு, செப்பு, நட்பு**

உப்பு என்பதற்கு இனிமை என்பது பொருளாகும். உண்ணும் உணவுக்கு இனிமை தருவது உப்பு. உப்பினை அளவோடு பயன்படுத்த வேண்டும். நீண்ட நாட்களாகப் பழகுகிற நண்பர்களின் தன்மைகளை யெல்லாம் **பழைமை** என்ற அதிகாரம் நன்கு எடுத்துக் காட்டுகிறது.

அந்த அதிகாரத்தில் சொல்லப்படும் '**கெழுதகைமை**' என்ற சொல்லின் பொருளை நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். உரிமையுள்ள நண்பர்கள் மனம் வருந்தும்படியாகச் செய்தாலும் அதற்குத் தாமும் '**உப்பு ஆதல்**' (802) வேண்டும் என்கிறார். இக்குறட்பாவைக் கண்டு உணர்க!

உப்பு என்பதை ஆசிரியர் நயமான இடங்களில் அமைத்துக் காட்டுவது அருமையாக உள்ளது. வறுமையின் கொடுமைகளையெல்லாம் **நல்குரவு** என்னும் அதிகாரம் கூறுகிறது. நுகர்வதற்கு ஏதும் இல்லாதவர்களே நல்குரவினர் ஆவர். அவர்கள் யாசித்துப் பிழைப்பதனை மேற்கொள்வார்கள். யாசிப்பதை ஆசிரியர் முற்றிலும் வெறுக்கிறார். ஒன்றுமே இல்லாத வர்கள் யாசித்து மானத்தை விடுவதைவிட, முற்றிலும் ஆசையைவிட்டுத் துறத்தலே நல்லது என்றும் அறிவுரை கூறுகின்றார். இல்லாவிட்டால் பிறர் வீட்டிலிருக்கும் உப்புக்கும், புளித்த கஞ்சிக்கும் (1050) அவர்கள் கூற்றுவனாவார் என்று எடுத்துக் காட்டுகின்றார். 'துறவாமை' என்று குறிப்பிட்டதால் அப்படிப்பட்டவர்கள் நுகர்வதற்கு ஏதும் இல்லாததால் ஆசைகள் விட்டவர்களாகி, துறந்தார்களாகலாமே என்று கருதுதலும் கூடும். '**தவமும் தவமுடையார்க்கு**' (262) என்பதையும் இங்குச் சிந்தித்தல் வேண்டும்.

'**துறப்பார்மன் துப்புரவில்லார்**' என்ற குறட்பாவையும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். இந்தக் குறட்பாவை '**துப்புர வில்லார்**' (1050) என்ற குறட்பாவுடன் ஒப்பிட்டு அறிந்துணர்தல்

இன்பம் நல்கும். பொருளில்லாத வறுமையாளர்கள் இயற்கையின் அமைப்பால், ஊழ்வினையால் வறுமையுற்றுத் துன்பத்தில் உழலவேண்டியதிருக்குமானால், துறவறத்தை மேற்கொள்ளுதல் இயலாது. எனவே இவ்விரண்டு குறட்பாக்களும் தெளிந்த இயல்பான உண்மைகளை வெளிப்படுத்துவனவாகும்.

தலைவன், தலைவி ஆகிய இருவர்க்கிடையே கூடலுக்குமுன் ஊடல் நிகழ்வதுண்டு. இதனைச் சிறு பிணக்கு என்று கூறுவர். இந்த ஊடல் அளவு கடந்து போகக் கூடாது என்பதை குறிக்க 'உப்பு' (1302) என்று குறிப்பது நயமாக அமைந்துள்ளது. இக்குறட்பாவின் சொற்கள் இனிமையாக உள்ளன.

கூடலில் தோன்றிய இனிமையை தலைவன் 'உப்பு' என்று கூறுகின்றான். (1328) இந்த இனிமையினை மீண்டும் பெறுவேனோ என்று குறிப்பிடும்போது 'நுதல் வெயர்ப்ப' என்பது ஆழ்ந்த கருத்துடையதாகும்.

'செப்பு' என்பது சிமிழ். செப்பு மூடியோடு சேர்ந்திருக்கும்போது சேர்ந்த இடம் தெரிந்து கொள்ள முடியாதபடி இருக்கும். பிரிந்திருக்கும் இரண்டும் நன்றாக இருப்பதாகவே தோன்றும். உட்பகை என்பது நாட்டுத் தலைவனுக்கு என்றும் தீமை பயப்பதாகும். உட்பகையான எண்ணங்கொண்டவர்கள் எவ்வளவுதான் நெருக்கமான நாட்டுத் தலைவனான மன்னனுடன் சேர்ந்திருந்தாலும் உள்ளத்தால் கூடாதிருந்து தீமையைச்செய்தே தீருவர் (887). வெளிக்குத் தெரியாமல் ஒன்று சேர்ந்திருப்பதற்கு **செப்பு** எனும் சொல்லால் உணர்த்தியிருப்பது அருமையிலும் அருமை.

உலகில் நல்ல நண்பர்களைப் பெற்றிடாதவன் வாழ்க்கை இருண்ட வாழ்க்கையாகும். பொருட்பாவில் கூறப்படும் **நட்பின் வகைகள்** ஆட்சியாளருக்கும் பொதுமக்களுக்கும்கூட கூறப்பட்டதென்று கொள்ளுதல் நல்லது. பழகுகிறவர்களெல்லாம் நண்பர்களாகிவிட மாட்டார்கள். நண்பர்களுக்கென்று கூறப்பட்டுள்ள அதிகாரங்கள் சீரிய உண்மைகளை உரைக்கின்றன. நட்பு, நட்பாராய்தல், பழைமை, தீநட்பு, கூடாநட்பு ஆகிய அதிகாரங்கள் பழகுகின்ற நண்பர்களைப் பற்றி நன்கு விளக்கம் தருவன.

'கூடா நட்பு' என்பது பகைவர்களைப்பற்றிக் கூறப்படுவது. இவர்கள் தீமை செய்யும் காலம் வரை நண்பர்கள் போலப் பழகிக் கொண்டிருக்கும் கொடியவர்கள். 'தீ நட்பு' என்பது தீமையான எண்ணங்களும் பழக்க வழக்கங்களும் கொண்டவர்களுடைய நட்பாகும். இவர்களால் நமக்கு இழிவு உண்டாகும். இத்தகைய புல்லர்களின் நட்பும் விலக்கப்பட வேண்டும்.

**உண்ணுதல், மகிழ்தல், நோய் தீர்த்தல்**

உலக மக்கள் அனைவரும் இன்புற்றிருக்க இப் பொதுமறை அறநெறிகளைக் கூறுகிறது. இவ்வுலகம் செல்வத்தை முதன்மையாகக் கொண்டிருக்கிறது. இல்லாதார்க்கு இருப்பவர்கள் ஈதல் வேண்டும்; உதவுதல் வேண்டும் என்கின்ற மனப்பான்மையை ஆசிரியர் நூல் முழுதும் வற்புறுத்துகிறார். அதுவே, மனிதப் பண்பாடாகும். பொருளாதாரச் சீர்திருத்தத்தை, மனிதப் பண்பாட்டினாலேயே அமைக்க வேண்டும் என்பது ஆசிரியரின் குறிக்கோள். நற்பொருள் பெற்றிருப்பவர்களைப் பேரறிவாளன், நயனுடையான், பெருந்தகையான் என்று குறித்துக் காட்டுகின்றார்.

பேரறிவாளனிடம் செல்வம் நிறைந்திருப்பது (215) ஊர் மக்கள் நீர் அருந்தும் குளம் நிறைந்திருப்பது போன்றதாகும் என்கிறார். நீரும் உணவானதால் உண்ணுதல் என்றார். **துப்பாயதூஉம்** (12) என்பதையும் இங்கு ஒப்பக் கருதலாம். அனைவரும் தாமாகவே கொண்டு சென்று உண்ணுகின்றவாறு அவன் செல்வம் பயன்படுவதால் அதனைப் 'பேரறிவாளன் திரு' என்று கூறுகிறார். **அறிவினான் ஆகுவதுண்டோ** (315) என்பதையும் இங்குச் சிந்தித்தல் நல்லது. செல்வம் படைத்தவர்கள் நடந்துகொள்ளும் முறையையும் விளக்கிக் கூறுகிறார். அவர் செல்வத்தை **ஊருணி** (215) என்றும் குறிக்கின்றார்.

எல்லாரும் மகிழுமாறு இன்பம் தருவது இனிமையும் சுவையும் நிறைந்த பழங்களாகும். ஊரில் உள்ள மரம் உண்ணத்தக்கப் பழங்களைப் பழுத்திருந்தால் மக்கள் எவ்வளவோ மகிழ்ச்சியடைவார்கள். அதுபோல் **நயனுடையான் செல்வம்** (216) பெற்றிருந்தால் மக்கள் எல்லாரும் மகிழ்வார்கள். ஏனெனில், எல்லாருக்கும் அந்தச் செல்வம் பயன்படும். இயற்கையான ஊழால் பெருஞ்செல்வம் இருக்கும் என்பதைப் **படின்** (216) எனும் சொல் உணர்த்துகிறது.

நோய் தீர்த்தல் மிகவும் இன்றியமையாதது. நோயற்ற நிலையில்தான், இன்ப வாழ்க்கை வாழ முடியும். பெருந்தகையாளனிடம் (217) செல்வம் இருந்துவிட்டால், அது மருந்தாகும் மரம் போன்றது என்கிறார். செல்வம் மக்கள் அனைவர்க்கும் பயன்படுமாறு செய்தல் வேண்டும் என்பது இதன் குறிப்பாயிற்று.

### தாழ்ப்பாள், கதவு, இருட்டறை

அன்பு என்பதே இறைவன், அன்புதான் எல்லாம்; அன்பு நிறைந்திருப்பதே உயிர் வாழ்க்கை - என்பதெல்லாம் முன்பே கண்டறிந்தோம். பிறரிடத்தில் காட்டக்கூடியது அன்பு அன்பு என்பது தனிப்பட்ட முறையில் காணக்கூடிய பொருளன்று. மற்றவர்களிடத்தில் காட்டக் கூடிய விருப்பமே அன்பு என்பதை உணர்த்தும். பிறர்பால் அன்பு செலுத்துவதும், அவரது துன்பம் கண்டபோது இரக்கம் காட்டி ஆவன செய்வதும் அன்பேயாகும்.

தானே தனித்து வாழ்வதும், பிறரோடு கலந்து வாழாததும், "தனக்குத்தான் எல்லாம் இருக்க வேண்டும்" என்பதும், பிறரை நெருங்கவிடாமல் இருப்பதும் மனித வாழ்க்கையாகாது. இறைவன் வழியில் நிற்பதென்பதும் அன்பேயாகும். அன்பு என்பதுதான் அருள் என்னும் குழந்தையினை (757) பெற்றுத் தரும். **அன்புடைமை** என்ற அதிகாரத்தை நன்கு கற்றல் வேண்டும். உள்ளத்தில் அன்பு இருந்தால் அது எப்படியும் வெளிப்பட்டே தீரும். அதை அடைத்து வைக்கின்ற தாழ்ப்பாள் இருக்கின்றதோ (71) என்ற அரிய கருத்து கூறப்படுகின்றது. சிந்தித்தறிக.

கதவும் தாழ்ப்பாளும் ஒன்று சேர அமைந்த அழகிய குறட்பா ஒன்று (1251) காணப் படுகிறது. காம வேட்கையின் வேகம் மிகமிக வலுவுடையதாகும். நாணம் என்பது தாழ்ப் பாளாகவும் நிறைகுணம் என்பது கதவாகவும் கூறப்படுகின்றன. ஆசை - வேட்கை மிகுதியால் நாணம் அனைத்தும் உடைபட்டுப் போகிறது என்று தலைவி கூறுகின்றாள். குறட்பாவைக் கண்டு கருத்தறிதல் இன்பம் பயக்கும்.

இருட்டறை அச்சம் தரும். அங்குப் போவதென்பது அவ்வளவு விரும்பப்படுவதல்ல. இருட்டறையில் முன்னர் அறிந்திராத பிணத்தை யாரேனும் போய்த் தழுவுவார்களா? இந்த உண்மையைப் (913) பன்முறையும் சிந்திக்க வேண்டும். மணந்து கொண்ட இல்லறத் துணை

வியைவிடச் சிறந்தவர்கள் யாரே உண்டு என்றும் சிந்திக்காமல், **வரைவின் மகளிரிடம்** விரும்பிச் செல்வது நற்பண்பாளர்கட்குச் சிறிதும் ஒவ்வாது.

வரைவு இலாத மகளிர், பொருளையே நோக்குபவர், பண்பு இலாத மகளிர், பொருட் பெண்டிர். பொது நலத்தார், பிற நெஞ்சில் பேணிப் புணர்பவர், மாயமகளிர் என்றெல்லாம் சொல்லப்படுகின்ற அம் மகளிர் எண்ணத்தை நீக்கி வாழ்தலே நல்ல வாழ்வாகும்.

**கொடிறு, வெளிறு, களிறு**

'கொடிறு' என்றால் கதுப்பு என்பது பொருள். அதாவது, கன்னம்! **கொடிறு உடைப் பவர்களுக்குத் தான் பொருள் கொடுப்பார்கள் (1077)** என்று குறிக்கின்றார். இங்கு, கீழ்மக்கள் தன்மை கூறப்பட்டது. தம்மாலியன்றவரை ஈகை செய்வதே மக்களுக்குச் சிறப்பாகும். பிறர்க்கு எதுவுமே உதவாதவர்கள் அடித்து நொறுக்குபவர்களுக்குத்தான் கொடுப்பார்களாம். சமுதாயம் நன்றாக இருப்பதற்கு மக்கள் பண்பையே வளர்த்தல் வேண்டும். எல்லாரும் இன்புற்றிருக்க எல்லாரும் அன்பு என்ற மனிதத் தன்மையோடு வாழ்தல் வேண்டும்.

'வெளிறு' என்பதற்கு அறியாமை என்பது பொருள். பகுத்தறிவு எவ்வளவு இன்றி யமையாதது என்பதை ஆசிரியர் பல இடங்களில் சிறப்பாக எடுத்துக் காட்டுகிறார். அருமை யான நூல்களைக் கற்று அறிவாராய்ச்சியில் சிறந்திருப்பவர்கள், எல்லாம் அறிந்த அறிஞராகத் தான் இருப்பார்கள் என்று நாம் நினைப்போம். அப்படி நினைத்தல் கூடாது என்கிறார் திருவள்ளுவர். ஆராய்ந்து பார்த்தால் (503) அவர்களிடம் கூட **அறியாமை** இருக்கும். ஆகவே, எதையும், யாரையும் பகுத்தறிவால் சிந்தித்தறிய வேண்டும். **தெரிந்து தெளிதல்** என்ற அதிகாரம் இது போன்ற மிக உயர்ந்த கருத்துக்கள் நிறைந்ததாகும்.

பொருட்பாலில், குறிப்பாக அரசியல், அங்கவியல் பகுதிகளில் கூறப்பட்டவை சிறப் பாக ஆட்சியாளருக்கும் பொதுவாக அனைவர்க்குமே கூறப்பட்டதாகக் கொள்ளல் வேண்டும். எண்ணற்ற அரிய காரியங்களை, காலத்தை முதன்மையாகக் கொண்டுதான் செய்தல் வேண்டும். காலத்தையறிந்து நடந்து கொண்டால் தனது ஆக்கத்திற்குக் கேடு வராது என்று குறிப்பிடு கின்றார். காலத்தின் அருமையை மிகவும் உயர்த்திச் சிறப்பிக்க வேண்டி, அதுவே தனது செல் வத்தைப் பிறர் கொண்டு செல்லாதவாறு தன்னிடத்திலேயே பிணித்து வைத்திருக்கும் கயிறு (482) என்று கூறுகின்றார். பகை மேற் செல்லும் நாட்டுத் தலைவனுக்குச் சிறப்பாகவும் மற்ற வர்க்குப் பொதுவாகவும் கூறப்பட்ட உண்மை இது.

**எலும்பும் - தோலும், நாளும் - வாளும்!**

மக்களிடையே அன்பு கொண்டு வாழாவிட்டால் இந்த உடம்பு எடுத்தும் பயனில்லை. பிறரிடம் விருப்பம் - அன்பு கொள்ள வேண்டும். நல்லவர்களிடம் நட்பு கொள்ளுதல் வேண்டும். இனிய சொற்களையே சொல்ல வேண்டும். எல்லாரும் இன்புற்றிருக்க நினைக்க வேண்டும். மக்களிடையே பிறப்பினால் உயர்வு தாழ்வு கூடாது இயன்றவரை பிறர்க்கு உதவ வேண்டும். பிறருடைய துன்பம் கண்டால் மனம் வருந்துதல் வேண்டும்; அவர்க்கு ஆவன புரிய வேண்டும். இத்தகைய பண்புகளே அன்பு என்பதை உணர்த்துவன. அதுவே, மனித வாழ்க்கையுமாகும். அத்தகைய தன்மைகள் கொண்டவனிடத்தில் நின்ற உடம்புதான் **உயிர் நின்ற உடம்பு** ஆகும். அப்படி இல்லாவிட்டால் அந்த உடம்பு எலும்பினைத் தோலால் போர்த்துக் கொண்ட (80) உடம்பாகும். நன்கு சிந்தித்து உண்மையறிந்து வாழ்தல் வேண்டும்.

நேரம், காலம் ஆகியவற்றை நாம் எவ்வளவு அருமையாகக் கருதவேண்டும்! வாழ் நாட்களில் ஒவ்வொரு நாளும் குறைந்து கொண்டு போகின்றதென்பதை நன்கு புரிந்து கொள்ளுதல் வேண்டும். ஆதலால், செய்ய வேண்டிய நற்பணிகளை மனித வாழ்விற்கேற்ப அவ்வப்போதே செய்து முடித்தல் வேண்டும்.

அறுக்கும் தொழில் செய்வதை வாள் என்று கூறுகின்றோம். வாள் ஒரு பொருளை அறுக்கும். நாள் ஆயுளை அறுக்கும். காலத்துக்கு வசப்பட்டு இருப்பதுதான் உயிருடம் பின் வாழ்க்கையாகும். நாள் என்று ஒரு கால வரம்பினைப் போலத் தன்னைக் காட்டிக் கொண்டு (334) அறுத்துச் செல்லுகின்ற வாளின் வாயிடைப்பட்டது இவ்வுயிர். இதை யறிந்து மனிதன் செயல்பட்டுக் கொண்டே இருத்தல் வேண்டும்.

**அரும்பு, கரும்பு, கருக்காய்!**

'பொழுது கண்டு இரங்கல்' என்பது காமத்துப்பாலில் காணப்படும் ஓர் அதிகாரம். இது நாயகியின் உளப்பாட்டினை நயம்பட எடுத்துரைக்கின்றது. காமத்துப்பால் முழுதுமே மனோதத்துவ உண்மைகளை எடுத்துரைப்பதாகும். இது உண்மை; மிகையாகாது. தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்திருக்கின்ற காலத்தில் தலைவியின் பிரிவுத் துன்பம் அதிகமாகிறது. **பனி அரும்பி, துனி அரும்பி** (1223) என்று தலைவி அந்த மாலைப் பொழுதைப் பற்றிக் கூறுகின்றாள். அரும்புதல் என்பது தொடக்கத்தினைக் குறிக்கும். ஆதலின் **பனி, துனி** என்று சொல்கின்றாள். இது சிந்தனைக்குரியதாகும். காம நோய்க்கு கால முறைகளைக் கூறுகின்றபோது இக்காம நோய் காலை நேரத்தில் (1227) **அரும்பாக** இருக்கும் என்கிறார். பிறவற்றையும் இவ்வாறே கண்டு அறிந்து தெளிய வேண்டும்.

ஒரு வார்த்தை சொன்னவுடனே நல்லவை அறிந்து பயன்பட வேண்டியது மக்கள் பண்பாகும். இயன்றவரை பிறர்க்குக் கொடுப்பதும், உதவுவதும், வாழ்வதுமே அறிவுள்ள வர்களின் செயல்களாகும். கயவர்கள் அப்படிச் செய்ய மாட்டார்களாம். கயமை கொண்ட வர்களை எப்படி நடத்த வேண்டும் என்பதையும் ஆசிரியர் அறிவுறுத்துகின்றார். கீழ் மக்கள், தங்களை வலியார் நெருக்கும்போதுதான் இருப்பதைக் கொடுப்பார்கள் என்கிறார். **கரும்பினை** (1078) நன்றாக நசுக்கிப் பிழிந்தால்தான் பயன்படும். ஆதலால் தான் **கரும்பு போல் கொல்லப் பயன்படும் கீழ்** என்று கூறுகின்றார்.

'கருக்காய்' என்றால் பசுமையான காய்களைக் குறிக்கும். இளங்காய் என்றும் கூறப்படும். காம இன்பத்தில் நுணுக்கமான செய்தியொன்றைக் கூறும்போது ஆசிரியர் கனியையும் கருக்காயையும் காட்டுகின்றார். இங்குப் பன்முறையும் எண்ணிப் பார்த்து நுணுக்கத்தினை அறிந்து கொள்ள வேண்டும் **புலவி** என்ற அதிகாரமே அத்தகைய உண்மைகள் பலவற்றைக் கூறுகிறது.

ஊடல் என்பது நாயகனிடத்தில் நாயகி இன்பச் சேர்க்கைக்கு முன்பு உண்டாக்கிக் கொள்ளும் பிணக்காகும். கூடல் சிறப்படைய இந்த ஊடல் துணையாக இருக்கும். பிணக்கு, முதிர்ந்த பிணக்காகச் செல்லும்போது **துனி** எனப்படும். மிகவும் காயளவு போன்றிருந்தால் **கருக்காய்** எனப்படும். எனவே, இனிமை செய்யும் முதிர்ந்த ஊடல் (துனி) இல்லையானால், காமம், பக்குவத்திற்கு மேலாகிவிட்ட, பழுத்த கனியைப் போன்று இன்பம் தராமல் போகும். அளவுக்கு மிஞ்சிப் பழுத்த பழம் இனிமை தராது. அது போலவே, இன்பம் தருகின்ற புலவி இல்லாமற் போனால், அந்தக் காமம் நுகருகின்ற பக்குவம் இல்லாததாகி,

**கருக்காய் போல** (1306) இன்பம் தாராமல் போகக் கூடும் என்கிறார். காம இன்பத்தின் நுட்பங்கள் மிகப் பல என்பதற்கு இது ஓர் எடுத்துக் காட்டாகும்.

**கள்ளாமை, வெஃகாமை!**

பிறர் பொருளை அவரறியாமல் கள்ளத்தனமாய்க் கொண்டு போவது **களவு** எனப் படும். இதை உலகியல் நடை முறையில் 'திருடுதல்' என்று கூறுவர். இத்தொழில் அழிவுக்குக் காரணமாகும். உலகியல் என்று கூறப்படுகின்ற இல்லற நிலையில் வாழ்பவர்கள், **விளை யாட்டிற்காகவேனும்** களவு செய்தலும் கூடும். துறவறத்தார்க்கு இந்த எண்ணம் எக்காலத் திலும் எந்த அளவும் மனத்தில் தோன்றுதலே கூடாது என்றார். 'நோன்பு நோற்று' அரிய குணங்களை எக்காலத்திலும் கொண்டு ஒழுக வேண்டிய துறவறப் பகுதியில் இதை ஆசிரியர் அமைத்தார். இந்த அமைப்பு முறையினை நன்கு உணர்தல் வேண்டும். **கள்ளாமை** என்ற அதிகாரத்தால் **உள்ளத்தால் உள்ளலும் தீதே** (282) என்று குறித்துக் காட்டப்படுவது ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

**வெஃகாமை** என்றொரு அதிகாரம் உண்டு. உலகில் வாழ்கின்ற மக்கள் அறிந்துணர வேண்டிய அரிய உண்மைகள் கொண்டது இது. அதாவது, பிறருக்கு உரிமையாக உள்ள பொருளினை வஞ்சித்துக் கொள்ள எண்ணாதிருத்தலாகும். பிறர் பொருளை ஏமாற்றித் திருடிக் கொள்ளாது இருத்தலே வெஃகாமை எனப்படும். இன்னும் உலக நடையில் பிறர் சொத்தை வஞ்சித்துக் கொள்ள முயற்சியாதிருத்தலாகும். 'வெஃகுதல்' செய்வதனால்தான் இக் காலத்தில் வழக்கு மன்றங்கள் மிகுதியாகப் பணியாற்ற வேண்டியிருக்கின்றது. அறிவு படைத்தவர்களும் நன்றாக ஆராய்ந்து 'வெஃகுதல்' என்ற தீய காரியத்தைச் செய்கிறார்கள். இதைக் குறிக்க வேண்டியே **அஃகி அகன்ற அறிவு என் ஆம்** (175) என்று அமைத்தார்.

இன்றைய உலக நடைமுறையில் வழக்கு மன்றங்களைக் குறிப்பிட்டு விளக்க வேண்டு மானால், ஆங்கிலத்தில் சொல்கிறபடி பொதுப்பட களவு செய்வதைக் 'கிரிமினல்' வழக்கு மன்றங்களும், 'வெஃகுதல்' செய்வதை, 'சிவில்' வழக்கு மன்றங்களும் மேற்கொள்ளுகின்றன. 'வெஃகாமை' என்ற அதிகாரக் கருத்துக்களின் அடிப்படையில் காணப்படும் அறிகுறிகளை ஆவணப்பதிவு நிலையங்களிலும் சிறப்பாகக் கண்டுணர முடியும். நடுவுநிலைமை என்ற எண்ணம் அற்றவர்கள்தாம் இவ்வாறு செய்வர். இதனை உணர்த்தவே இந்த வெஃகாமை எனும் அதிகாரம் **நடுஇன்றி** என்று தொடங்குகின்றது.

**காமம், நாணம், நிலம், திரு முதலியன**

காமம் என்பது ஓர் உணர்ச்சியாகும். அதுவும் ஒரு **குணம்** என்று கூறப்படும். அந்தக் குணத்தை ஆசிரியர் **காமன்** (1197) என்று உருவகப்படுத்திக் கூறுகின்றார். **நாணம்** என்பது ஒரு குணம். அதை **நல்லாள்** (924) என்று உருவகப்படுத்தினார். நிலத்தை **நல்லாள்** (1040) என்று குறிப்பிடுகின்றார். **மடி** என்பது சோம்பல் குணம். அது மிகவும் கொடுமையானது. அதை **மாமுகடி** (மூதேவி) (617) என்று குறிப்புக் காட்டி உணர்த்துகிறார். **அருள்** என்பது உயர்ந்த மேலான பண்பு. அதைக் **குழவி** (757) என்று குறிக்கின்றார். பொருள் என்பதும் செல்வம் என்பதும் ஒன்றேயாகும். செல்வத்தைச் **செவிலித்தாய்** (757) என்று காட்டுகின்றார். **திரு** என்பது செல்வத்தைக் குறிப்பதேயாகும். இதனைத் **திருமகள்** என்று உருவகப் படுத்து கிறார். அதை **ஆங்கேதிரு** (179) **நீங்கும்திரு** (519) **திருநீக்கப்பட்டார்** (920) என்பன போன்று வருகின்ற இடங்களிலெல்லாம் கண்டுணர்தல் வேண்டும். பிறவற்றையும் கண்டு ஆராய்ந்து தெளிக.

பண்பு எனப்படும் குணத்தை உருவகப்படுத்திக் கூறுதல் ஆசிரியர்களின் மரபாகும். அது தொன்றுதொட்டு வருகின்ற பழக்கமும் முறைமையுமாகும். ஆதலால், பண்புகளில் நின்று ஒழுகுவதை விட்டு உருவகங்களில் நாட்டம் செலுத்துவது அறிவுடைமையாகாது. அச்செயல் பயனற்றதுமாகும். வாலறிவன், அறவாழி அந்தணன், ஐந்தவித்தான், எண் குணத்தான் என்று இறைப் பகுதியான முதல் அதிகாரத்தில் கூறப்பட்டவைகளையும் சிந்தித்துக் கற்றதானா லாய பயனுடன் ஒழுகுதல் வேண்டும்.

### திருவள்ளுவரும் பிறரும்

உலக மக்கள் அனைவர்க்கும் நல்வழி காட்டி அறம் போதித்தவர் திருவள்ளுவர். மக்கள் அனைவரும் அவரவர் மேற்கொண்ட நல்வாழ்க்கையில் நின்று, நல்லது யாதென்று உணர்ந்து, செய்ய வேண்டுவனவற்றைச் செய்து வாழ்தல் வேண்டுமென்பதே அவர் அருளிய பொதுமறையின் தனிச் சிறப்பாகும்.

திருவள்ளுவருக்கு முன்பும் அறம் போதித்த அடியார்கள் பலர் இருந்திருக்கிறார்கள். திருவள்ளுவர் காலத்திற்குப் பின்னரும் பல அடியார்கள் இருந்திருக்கிறார்கள். சித்தர்கள், பக்தர்கள், முக்தர்கள், முனிவர்கள், ஞானியர், நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்று இன்ன பிற பெயர்களால் கூறப்படுகின்ற அனைவருமே அடியார்கள் என்ற பொதுவான பெயருக்கு உரியவராவர். இவர்களெல்லாம் அருளாளர்களாவர். இவர்கள் உலக மக்களுக்குச் செம்மையான நெறியை உணர்த்தியவர்கள், பேரின்ப நிலையை உணர்ந்தவர்கள், இறைவனோடு ஒன்றுபட்ட பேரின்ப நிலையில் வாழ்ந்தவர்கள்.

இவர்கள் ஆசை அனைத்தையும் விட்டவர்கள். ஓடும் பொன்னும் ஒன்றென எண்ணியவர்கள். பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை என்று உலகியலில் போற்றிக் கூறப்படும் எல்லாவற்றையும் வெறுத்து நீக்கியவர்கள். உலக மக்களிடத்து கருணையுள்ளம் வெள்ளமென மிகுந்து நல்வழி காட்டியவர்கள். இவர்கள் உலக மக்கள் அனைவரையும் பார்த்து 'யாம் பெற்ற இன்பம் நீங்கள் அனைவரும் பெற வேண்டும்' என்று அழைத்தவர்கள். தங்கள் மனோநிலையில் கண்ட பேரின்பக் காட்சிகளை யெல்லாம் மக்களுக்கு உணர்த்தியவர்கள். இவர்கள் மக்கள் அனைவரையுமே தாங்கள் சென்ற அருள் நெறியில் நிற்க வேண்டும் என்று அறவுரை புகட்டியவர்கள்.

திருவள்ளுவர் வகுத்த அறநெறி முறையையும் கண்டு தெளிதல் வேண்டும். உலகில் வாழும் மக்களை, இல்லற வாழ்வான உலக நெறியில் ஆசைகொண்டு வாழ்பவர்களென்றும், நோன்பு நோற்று, தவமேற்கொண்டு, ஆசையினை அறவே வெறுத்த அருளாளர்கள் என்றும் பகுத்துக் கூறுகிறார் அவர்.

அவரவர் மேற்கொண்ட வாழ்க்கையிலேயே அவர்கள் இருந்து கொண்டு, அவ்வாழ்க்கை யில் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்தால் அதுவே உலக வாழ்க்கையின் பயனாகும் என்று உணர்த்துகிறார். 'தவமும் தவமுடையார்க்காகும்' என்பது அருளாளர்க்கு உரியதாகும். 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்தல்' என்பது உலகியலில் வாழ்பவர்களுக்கென்று கூறப்பட்ட தாகும். அவரவர்களுக்குரிய கடமைகளை அறிவுறுத்துவதே திருவள்ளுவரின் தனிச்சிறப்பாகும்.

### வளி

வளி என்பது காற்று. இது உலகமெங்கும் என்றும் இருந்து வருவது. உலகில் உயிரினங்கள் அனைத்தும் நிலைபெற்று இருந்து வருவதற்குக் காரணம் காற்றேயாகும். எல்லா

உயிர்களுக்கும் எக்காலத்திற்கும் வாழ்வளிப்பது காற்று. அதுபோலவே எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுபவர்கள் அருளாளராவர். **நோயின்மை வேண்டுபவர்** (320) என்பதற்கு இவர்களே இலக்கணமாவார்கள். **எல்லா உயிரும் தொழும்** (260) என்பது அருளாளர்களைச் சிறப்பித்ததேயாகும். ஆதலால்தான், **அல்லல் அருளாள்வார்க்கு இல்லை** (245) என்றார். அக் குறட்பாவில் வரும் **வளி** என்பது உலக மக்கள் அனைவரையும் குறிக்கும்.

நிலம், நீர், தீ, காற்று, விண் என உலக இயற்கைப் பிரிவுகளில் காற்று இன்றேல் சிறிதளவும் உயிர் வாழ்தல் இயலாது. பிறவற்றின் துணை சிறிது நேரம் இல்லையென்றாலும் உயிர் வாழ்வதற்குத் தடையாக இருக்காது. ஆதலால், '**வளி வழங்கு**' என்று சிறப்பித்தார்.

வளி என்பதை மருத்துவமுறையில் **வாதம்** என்று கூறுவர். வாதம் என்பதற்குக் காற்று (வாயு) என்பது குறிப்பாகும். வாதப்பகுதி பித்தப்பகுதி, ஈரப்பகுதி என்று கூறப்படும். இம்மூன்றும் நோய்கள் அனைத்திற்கும் அடிப்படையான காரணங்கள். **வளிமுதலா எண்ணிய மூன்று** (941) என்பதை அறிந்துணர்ந்து விளக்கமாகத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

காமத்துப்பாலில் வளி என்பது குறிக்கப்படுகிறது. காதலர் எனப்படும் நாயகன் நாயகி இருவரும் **முயங்குதல்** என்கின்ற தழுவும் நிலையில் காற்று இல்லாதபடி இருத்தல் வேண்டும் என்று கூறப்படுகிறது. அதாவது, தழுவுதல் என்பதற்கு இலக்கணம் வகுக்கப் படுகிறது. குறட்பாக்களை ஊன்றிப் படித்தல் நயமறிய உதவும். **வளிஇடை போழப்படா** (1108), **முயக்கிடைத் தண்வளிபோழ** (1239) என்பன நுணுக்கமான சிறப்புக்களை உணர்த்துகின்றன.

**புள், எள், முள்**

'புள்' என்பது பறவை. **புள்** என்ற பெயரிலேயே தனிப்பட்ட பறவையுண்டு என்றும் கூறப்படும். இச்சொல் இரக்கத்திற்குரிய, ஒன்றுமறியாத பறவைகள் என்பதனைக் குறிப்பது மாகும். பறவையைக் கொடிய வேடன் மறைந்து நின்று பிடித்துக் கொள்ளுகின்றான். தவசிகள் போன்று வேடத்தை போட்டுக் கொண்டு, அவனுடைய சிற்றின்ப இச்சையை முடித்துக் கொள்பவனைப் **புள்சிமிழ்த்தற்று** (274) என்று கூறுகின்றார்.

பேரின்ப நிலைநாடி தவம்செய்து ஞானியர்களாவோர், உலகில் தோன்றுவன அனைத்தும் அழியும் என்ற நிலையையறிந்து ஆசைகள் அனைத்தையும் அறுத்துவிடுதல் வேண்டும். 'நிலையாமை' என்பதை உணர்த்த வேண்டி உடம்பைவிட்டு உயிர் பிரிந்து போகும் தன்மையைக் கூறவந்த ஆசிரியர் முட்டையை விட்டுப் புள்பறந்து போனது போன்றதாகும் என்கிறார்; ஆழ்ந்த அரிய மறைப் பொருள்களை யெல்லாம் இக்குறட்பா உணர்த்து கிறது. **புள் பறந்தற்றே**(338) என்று அமைக்கிறார். இதைச் சிந்தித்தறிதல் வேண்டும்

'பகைத்திறம் தெரிதல்' என்ற அதிகாரம் குறிப்பாகவும் சிறப்பாகவும் ஆட்சியாளர் களுக்கே உரிய உண்மைகளைக் கூறுவதாகும். பொதுப்படையான உண்மைகளும் உள்ளன. ஆட்சித் தலைவன் தனது பகைவர்களை விட்டு வைக்கக் கூடாது என்கிறார். தொடக்கத் திலேயே அவர்களைக் கிள்ளி எறிந்துவிட வேண்டும் என்கிறார். பகைவர்களை '**முள்**' மரம் என்று குறிக்கிறார். முள், குத்திப் புண்படுத்தும் என்பது கருதத்தக்கது. எனவே அதனை வளரவிடக்கூடாது; வளர்ந்தால் பெருந்தீமை செய்யும் என்பதையெல்லாம் கருதிப் பார்க்கச் செய்து, கொல்க (879) என்று குறிப்பிட்டு உண்மை உணர்த்தினார்.

எள் என்பது மிகமிகச் சிறியது. அதுவும் பிளக்கப்படாததாக இருந்தால் அளவு மிகச் சிறிதாக இருக்கும்; ஆகையால் அது சிறுமைக்குக் கூறப்பட்டது. ஆட்சியாளருக்கு, குறிப்பாகத் தலைவனுக்கு பெருந்தீமை விளைவிப்பது 'உட்பகை' என்பதேயாகும். இப்பெயரில் தனி அதிகாரம் ஒன்று உண்டு. உட்பகை மிகச் சிறிதேயானாலும் பெரும் தீமையைத் தருவதாகும். **எள்பகவு (889)** என்பதைச் சிந்தித்தறிந்து கொள்ளவேண்டும்.

**வெருவந்த செய்யாமை**

இப்பெயரில் உள்ள அதிகாரம் ஆட்சி செய்ய வேண்டிய முறைகளைக் கூறுகின்ற வகையில் உள்ளது. சிறந்த முறையில் ஆட்சி செய்வதைச் **செங்கோன்மை** என்ற அதிகாரம் கூறுகிறது. கொடுமையாக ஆட்சி செய்து மக்களை அழும்படியாகச் செய்வதும், கருணையின்றி ஆட்சி செய்வதும், அதனால் வரும் தீமைகளையும் **கொடுங்கோன்மை** என்ற அதிகாரம் குறிப்பிடுகின்றது. 'வெருவந்த செய்யாமை' என்ற வேறொரு அதிகாரமும் உண்டு. இது கொடுங்கோன்மை என்பதைவிடக் கொடிய முறையில் ஆட்சி நடத்துவதைக் குறிப்பதாகும்.

அதாவது குடிமக்கள் அஞ்சி நடுங்கும்படியாகச் செய்தலாகும். ஆட்சி செய்பவனே அஞ்சுகின்றவற்றையும் செய்வ தென்பது குறிப்பு. மனம் போனபடி - நினைத்ததையெல்லாம் கொடுமையாகச் செய்வதென்பதே இவ்வதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது. 'கொடுங்கோன்மை' என்பதற்கும் இந்த அதிகாரத்திற்கும் உள்ள வேறுபாட்டை நன்கு புரிந்து கொள்ளுதல் வேண்டும். குற்றம் செய்பவர்களுக்கு, அளவுக்கு மீறி தண்டனை கொடுப்பதும் அறமான முறையில் மக்களுக்கு நாட்டின் செல்வத்தைப் பயன் படுத்தாமல் இருப்பதும், கல்வியறிவு இல்லாதவனைத் தனக்குத் துணையாக வைத்துக் கொண்டு செயல் புரிவதும், மக்கள் அனைவரும் 'கொடிய ஆட்சி' என்று மனம் நொந்து பேசும்படியான நிலையினை உண்டாக்குவதும் போன்றவற்றை 'வெருவந்த செய்யாமை' என்ற அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளன. 'கொடுங் கோன்மை'யினை விட இது கொடிது என்று அறிந்துணர்தல் வேண்டும்.

**சொற்கள்**

பேசப்படுகின்ற சொற்கள் மனித வாழ்க்கையில் உயர்வினையும் தாழ்வினையும் கொடுப்பவையென்பது மிகையாகாது. அடக்கம் என்பதில் சிறந்தது நாவடக்கம் என்பது அனைவரும் அறிந்து போற்றக் கூடியதாகும். சொற்களின் ஆற்றல் சிறந்தது. 'நாவன்மை' என்பதும் கருதற்பாலது.

ஒரு நிலத்தின் தன்மையை அந்த நிலத்தில் முளைத்த முளை காட்டும் (959). அதுவே போல ஒருவன் பேசும் சொற்கள் அவன் பிறந்த குலத்தின் தன்மையை எடுத்துக் காட்டும். ஆதலால், இனிய சொற்கள், கடுமையான சொற்கள் என்று இன்ன பிற சொற்களைப் பற்றியே கூறுகின்ற அதிகாரங்களை ஆசிரியர் தனிப் பெயர்களில் அமைத்திருக்கின்றார். அவற்றையும் ஆங்காங்கே பிற இடங்களிலும் குறிப்பாகக் கூறப்படுகின்றவற்றையும் கண்டு தெளிதல் வேண்டும்.

அறத்துப்பாலில் இல்லறவியல் பகுதியில் **இனியவை கூறல், புறங் கூறாமை, பயனில சொல்லாமை** முதலிய அதிகாரங்களையும், துறவறவியல் பகுதியில் வாய்மை எனும் அதிகாரத்தையும், பொருட்பாலில் அங்கவியல் பகுதியில் சொல் வன்மை, அவையறிதல், அவையஞ்சாமை முதலிய அதிகாரங்களையும் அமைத்துப் பலவாறு விளக்கியிருப்பதை நன்கு உணரலாம். பிற அதிகாரங்களிலும் சொல்லின் தன்மைகள் - சிறப்புகள் குறிப்பாக உணர்த்தப்படுகின்றன.

காமத்துப் பால் முழுவதுமே பெரும்பாலும் காதலன், காதலி, தோழி, ஆகியவர்கள் பேசுகின்ற முறையிலேயே அனைத்துக் கருத்துக்களும் கூறப்பட்டுள்ளன. அவர்கள் பேசுகின்ற பேச்சுக்களில் நயம், கற்பனை, ஆழ்ந்த கருத்து, இன்பம் முதலியன காணப்படுகின்றன.

காமத்துப் பாலில் **உரைத்தல்** என்று முடிகின்ற அதிகாரங்கள் உள்ளன. அவை நலம் புனைந்துரைத்தல், காதற் சிறப்புரைத்தல், நாணுத் துறவுரைத்தல், கனவு நிலையுரைத்தல் என்பனவாம். **சொல்லுதல்** என்பதையே **உரைத்தல்** என்று ஆசிரியர் குறிக்கின்றார்.

**செயல்**

சொற்கள் என்ற வகையில் குறித்தது போலவே செயல் புரிதல் என்பதைக் குறிப்பாக உணர்த்த வேண்டியே **செயல்** என்பதும் சில அதிகாரங்களில் காணப்படுகிறது. அதையும் சிந்தித்துக் குறிப்பாகக் கொள்ளுதல் வேண்டும். செயல் பற்றி வருவன: **தெரிந்து செயல் வகை, வினை செயல் வகை, பொருள் செயல் வகை, குடி செயல் வகை** முதலியனவாம். இத்தகைய அதிகாரங்களின் பெயர்களை நன்கு புரிந்து கொள்ளுதல் பயனுடையதாகும். செய்யாமை என்ற சொல் 'இன்னா செய்யாமை', 'வெருவந்த செய்யாமை' என்ற இரண்டு அதிகாரப் பெயர்களில் இணைந்து முடிகின்றன.

**உலகம் தழுவியவர்**

உலக மக்களுக்கு அறம் கூறிய திருவள்ளுவர் அருளிய அரிய முறைகள் பலவாகும். திருவள்ளுவர் பேரருள் நிறைந்த தவமுனிவர்; ஒழுக்கத்தின் குன்றேறி நின்றவர்; அரிய அறிவு படைத்த நுண்ணறிவாளர். அத்தகைய பேராசிரியர் குறட்பாக்களை அமைக்கும்போது உலகத்தின் பேரறிவாளர்கள் கூறிய நல்லனவற்றைக் குறிப்பிடுகின்றார். உயர்ந்தோரும் பேரறிவாளரும் கூறியவற்றைச் சொல்லுகின்றார்; உலக நடைமுறையில் நல்லன இவை யென்று அறிவுறுத்துகின்றார். தாமே நிறைந்த பேராற்றல் பெற்றவராக இருந்தும் உலக நூல்களையும் பிறபெரியோர்களின் கருத்துக்களையும் எடுத்துக் கூறி, என்றும் நிலைத்து நிற்கின்ற நூலைச் செய்தார் என்பது அறிதற்குரிய அரிய உண்மையாகும். முனிவர்களின் சிறப்புக்களைக் கூற வருகிற அரிய நூல்கள் இவ்வாறு கூறுகின்றன என்று குறிப்பிட வேண்டி அவர் **பனுவல் துணிவு** (21) என்று அமைத்தார். இவ்வாறு பல இடங்களில் அவர் கூறுகின்றார். சிலவற்றைக் கண்டு தெளிதல் போதுமானது. உயர்ந்தோர், மேலோர், அறிந்தோர், கூறுவார்கள் என்று குறிப்பிட வேண்டி, **என்ப** என்று ஆங்காங்கு எடுத்துரைக் கின்றார்.

| | | | |
|---|---|---|---|
| மங்கலம் என்ப, நன்கலன் என்ப | 60 | தலை என்ப | 203 |
| தம் பொருள் என்ப | 63 | உரைப்பார் உரைப்பவை எல்லாம் | 232 |
| இயைந்த வழக்கு என்ப | 73 | வசைஎன்ப | 238 |
| அமர்ந்த வழக்கு என்ப | 75 | | |

என்பவற்றை யெல்லாம் கருதிப் பார்த்தல் வேண்டும். 'அருளுடைமை' என்ற அதிகாரத்தில் பல நல்ல நெறிகளைக் கூறும் அனைத்தையும் ஆராய்ந்து பார்த்து அறவுரை அளிக்கின்றார்.

| | | | |
|---|---|---|---|
| ஆள்வாற்கு இல் என்ப | 244 | அவாஎன்ப | 361 |
| பொச்சாந்தார் என்பர் | 246 | எண்என்ப, எழுத்து என்ப, | |
| நீக்கியார் என்ப | 330 | கண் என்ப | 392 |

என்பன போன்றவற்றையும் சிந்தித்தறிதல் வேண்டும். நூல்கள் பலவற்றின் கருத்தும் **இதுதான்** என்று குறிக்க வந்த இடத்தில் **நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை** (322) என்று சுட்டிக் காட்டுகிறார். உலகில் எவ்வகைப்பட்ட நூலுடையார்க்கும் ஒப்ப முடிந்த கருத்து இதுவே யாகும். இம்முறையில் கூறுகின்ற அருமை பன்முறையும் சிந்திக்கத் தக்கதாகும். இதை **உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிவு** (533) என்று அவரால் கூறப்பட்டுள்ள இடம் நன்கு தெளிவு படுத்தும். பிறவும் கண்டு தெளிதல் வேண்டும்.

நல்ல நூல்கள் பலவற்றை ஆராய்ந்தறிந்த பேராசிரியர்களின் கருத்துக்களைத் தழுவி. ஆசிரியர் கூறுகின்றபோது **ஆறு என்பர் ஆய்ந்தவர்கோள்** (662) என்று குறிப்பிடுகின்றார் **மாமுகடி என்ப** (617), **கடை என்ப** (729), **நாடு என்ப** (736, 739), **அணி என்ப** (738) என்பவற்றையெல்லாம் கருதிப் பார்த்தல் வேண்டும். 'அரண்' என்ற அதிகாரத்தில் குறிப்பிடும்போது **என்று உரைக்கும் நூல்** (743) என்று கூறுகின்றார். உலகப் பொதுமறையாகிய திருக்குறளைச் செய்வதற்காக எத்தகைய அரிய முறைகளை ஆசிரியர் வகுத்துக் கொண்டார் என ஆழ்ந்து நோக்கும்போது அறியக் கிடக்கின்ற உண்மை பலவாகும். **பேராண்மை என்ப** (773), **உண்டு என்ப** (850), **இகல் என்ப** (851) என்பன போன்றவையும் இவைபோன்று பற்பல இடங்களில் காணப்படுபவையும் நன்கு அறிந்துணரத் தக்கவை. இம் முறைகளுடன் **உலகத்தோடு ஒட்ட ஒழுகல்** (140), **உலகந்தோடு அவ்வது உறைவது** (426), **உலகத்து இயற்கை அறிந்து செயல்** (637) என்ற அமைப்பு முறைகளும் ஒருங்கு வைத்து எண்ணப்பட வேண்டுவனவாம்.

உலகத்தில் உயர்ந்த மேலான வாழ்க்கை என்பது ஆராய்ந்த அறிவினை அடிப்படையாகக் கொண்டது என்பதும், உலகில் அறிவிலும் ஒழுக்கத்திலும் மேலானவர்களையே பின்பற்றி வாழ வேண்டுமென்பதும், பற்பல மேலோர்களான பேராசிரியர் நூல்களின் வழியினைப் பின்பற்றி னால் நல்லது என்பதும் ஆசிரியர் திருவள்ளுவர் தாம் வகுத்துக் கொண்டுள்ள முறைகளிலிருந்து நாம் அறிய வேண்டுவனவாம்.

**பொருளும் போரும்**

நாயகனைப் பிரிந்திருக்கும் நாயகி பற்பல எண்ணங்களில் தனது மிகுந்த வருத்தத்தை வெளிப்படுத்திப் பேசுகின்றாள். நாயகன் பிரிந்து வெளியூருக்குச் சென்றிருக்கின்றான். வெளி நாடுகளுக்கும் செல்வது வழக்கம். அவ்வாறு சென்றிருக்கும் நாயகனை ஒருமுறை அவள் **பொருள் மாலையாளர்** (1230) என்று கூறுகின்றாள். பொருளையே தனக்கு இயல்பாகக் கொண்டு உள்ளவர் என்று அவள் குறிப்பிடுகின்றாள். பொருள் தேடும் பொருட்டுப் பிரிந்திருக் கின்றான் என்பது குறிப்பாயிற்று. பொருள் தேடுதல் எவ்வளவு இன்றியமையாதது என்பதும் குறிப்பிடப்படுகிறது. வெளியிடங்கட்குச் சென்று பொருளீட்டுதல் வேண்டும் என்பதும் உய்த் துணர வைக்கப்படுகிறது. குறித்த நாளில் நாயகன் திரும்பி வரவில்லை. ஆதலால், அவன் குறித்த அளவு பொருள் சேகரிக்கவில்லையாதலால், இன்னும் வராமலிருக்கின்றான் என்பதை நாயகியும் குறிக்கின்றாள்.

'பொருள் மாலையாளர்' என்று குறிப்பிட்டதால், மேலும் மேலும் பொருளீட்டுவதி லேயே முனைந்திருக்கின்றான் என்பது தெளிவாக்கப்பட்டது. முயற்சியின் சிறப்பு உணர்த்தப் பட்டது. ஆடவர்களின் நோக்கம் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதும் குறிப்பாயிற்று. பொருளின் அருமையும் எடுத்துக் காட்டப்பட்டது. **பொருள் செயல் வகை** என்ற அதிகாரம் சிந்தனைக்குரியதாகும்.

நாயகன் நாயகியைப் பிரிந்து செல்லுதல் போரினைக் கருதியும் உண்டு. இதை அந்த நாயகியும் குறித்துக் காட்டுகின்றாள். வெற்றி பெறுதலையே விரும்பிச் சென்றான் தலைவன் என்பதை **வரல் நசை** (1263) என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். போரில் வெற்றி பெறுதற்கு அடிப்படைக் காரணம் ஊக்கம் என்கின்ற மனவெழுச்சியே; ஆதலால் **உள்ளம் துணையாகச் சென்றார்** (1263) என்றும் தெளிவுபடுத்திக் கூறுகின்றாள் தலைவி.

பொருளுக்காகப் பிரிந்து செல்வதும் போருக்காகச் செல்வதுமே நாயகியை நாயகன் பிரிந்து செல்வதற்குத் தலையான காரணங்களாகக் கூறப்பட்டன. பிரிந்திருக்கின்ற நாயகன் நாயகி ஆகிய இருவருமே ஒருவரையொருவர் விரைவில் சந்திக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கின்றனர். இந்நிலைமையை **அவர்வயின் விதும்பல்** என்ற அதிகாரம் நன்கு விளங்கச் செய்கின்றது.

போருக்குச் சென்ற தலைமகன் தனது வேந்தன் வெற்றி பெற்று வருவதைக் குறிக்கின்றான். போர் செய்தலின் சிறப்பும் குறிக்கப்பட்டது. வெற்றி பெற்று வீடு சென்று விருந்துண்டு மகிழ்வதையும் குறிப்பால் உணர்த்தினான். (1268) வெற்றி பெற்றவர்களுக்குப் பாராட்டுகள் நடைபெறுவதும், விருந்து நிகழ்ச்சிகள் நடைபெறுவதும் இங்குக் குறிப்பால் உணர்த்தப்பட்டன.

### இருவர் உள்ளம்

பிரிந்திருக்கின்ற நாயகனும் நாயகியும் ஒன்று சேருவதற்குத் துடித்துக் கொண்டிருக்கின்ற நிலையை **விதுப்பு** என்று கூறுவதுண்டு. இன்பத்திற்கு விரைந்து விரும்புதல் என்பது அதன் பொருளாகக் கொள்ளப்படும். **புணர்ச்சி விதும்பல், அவர் வயின் விதும்பல்** என்ற இரண்டு அதிகாரங்களும் அதை விளக்குவனவாம்

குறித்த நாளில் நாயகன் வருவான் என்று காலத்தை அறிந்து நாயகன் வரவை நினைத்து அவள் இன்ப வேகத்தில் திளைக்கின்றாள். குறித்த வேலையும் முடிந்து விட்டபடியால், திரும்பி வீடு செல்ல இருக்கின்ற நாயகனும் இன்பத்தில் திளைக்கின்றான். அந்நேரத்தில் அவர்கள் உள்ளத்தில் எழுகின்ற எண்ணங்கள் மிகவும் நயமாக எடுத்துக் காட்டப்படுகின்றன. இந்த இடத்தில் நாயகியின் உள்ளம் இருக்கின்ற முறையில் நாயகனுடைய உள்ளம் இல்லை.

நாயகன் நாயகியைப் பற்றி, மிகவும் கவலைப்படுகின்ற முறையில் நினைக்கின்றான். அவள் பிரிவின் வேதனை தாங்காமல் இறக்கும் நிலை அடைந்திருப்பாளே என்று எண்ணி அவன் துன்பக் குரலில் பலப்பல பேசுகின்றான். **பெறின் என் பெற்றக்கால் என், உறின் என்** (1270) என்றெல்லாம் பேசுகின்றான். குறட்பாவை நன்கு புரிந்துணர்தல் வேண்டும். ஆனால், நாயகியோ நாயகன் வந்தபின் தான் பெறவிருக்கும் இன்பத்தை எண்ணியவளாய் **புலப்பேன், புல்லுவேன், கலப்பேன்** (1267) என்று களிப்பூட்டும் வார்த்தைகளைப் பேசுகின்றாள். ஆனால் அங்கே ஆண் மகனோ கலங்கி இருக்கின்றான். இந்த இரண்டு குறட்பாக்களையும் ஒப்ப நோக்கி அரிய உண்மைகளை அறிந்துணர்தல் வேண்டும்.

### வித்தகர்

செல்வமும் உடம்பும் நிலையில்லாதவை. புகழ் ஒன்றே உலகில் நிலையாக இருப்பது. நிலையில்லாத செல்வத்தையும் உடம்பையும் வைத்துக் கொண்டு நிலையான புகழை உண்

டாக்குவதற்கு ஆற்றல் மிகுதியாக இருக்க வேண்டும். ஆதலால், அவ்வாறு செய்பவர்களை **வித்தகர்** (235) என்று அழைக்கிறார் ஆசிரியர். புகழுடம்பிற்கு ஆக்கமாக இருப்பதால் 'நத்தம் போல் கேடு' என்று குறட்பா கூறுகிறது. **கேடு** என்பது இறத்தல் ஆகும். புகழுடம்பு நிலைத்து நிற்கும்போதே இப்பூத உடம்பு மறைவதால் 'உளதாகும் சாக்காடு' என்று குறித்தார். நிகழக்கூடிய இச்செயல் அரிதான ஒன்றாக இருப்பதால் 'வித்தகர்க் கல்லால் அரிது' (235) என்று கூறப்பட்டது.

**ஆட்டுக் கடா**

ஆட்டுக் கடாவுக்குத் **தகர்** என்ற பெயருமுண்டு. ஆட்டுக்கடா சண்டை பார்ப்பதற்கு உணர்ச்சியுண்டாக்கும். ஒன்றையொன்று வேகமாகத் தாக்கும். குறிபார்த்து மோதுவது என்பதுதான் ஆட்டுக்கடா (தகர்) சண்டையில் மிக மிக நுணுக்கமானது.

உலக வாழ்க்கையில் நாம் அறிந்து கொள்ள வேண்டிய அருமையான உண்மையொன்று இந்த ஆட்டுக்கடாக்களின் சண்டையில் இருக்கின்றது. ஆகவேதான் ஆசிரியர் திருவள்ளுவர் இந்தச் சண்டையினை எடுத்துக் காட்டினார்.

சண்டை நடக்கும் போதே ஆட்டுக்கடாக்கள் பின்னாலேயே நகர்ந்து நகர்ந்து போகும். அப்படிப் பின்னால் போகின்ற போக்கில் நாம் கண்டு கொள்ள வேண்டியது ஒன்றுண்டு. பின்னால் மெது மெதுவாக நகர்ந்து போவது அஞ்சி ஓடிப் போவதற்காக அல்ல; பின்னால் நகரும் போதே எதிர்த்து நிற்கும் ஆட்டுக் கடாவை மிக வலுவாகத் தாக்குவதற்குக் குறி பார்த்துக் கொண்டே நகரும். கொஞ்சம் பின் வாங்கிப் பிறகு தாக்கினால் தாக்கும் வேகம் மிக அதிகமாக இருக்கும். சிந்திக்க வேண்டும்.

ஊக்கமும் அறிவும் ஆற்றலும் நிறைந்த சிலர் சில நேரங்களில் ஒடுங்கி (486) இருப்பது போலத் தோன்றும். அதனால், சோர்ந்து விட்டார்கள் என்பது அல்ல; அடுத்த தாக்குதலில் பகைவன் எழுந்திருக்க முடியாத நிலைக்குத் திட்டம் வகுக்கிறார்கள் என்று பொருள்.

**யானைப் போர்**

தொழில் செய்வதில் எக்காலத்திலும் குறியாக இருக்கும் மக்கள் நிறைந்த நாடு விரைவில் முன்னேறும். தொழில் முறைகளைப் பல வகைகளில் கூறுகின்ற ஆசிரியர் ஒரு குறிப்புத் தருகின்றார். குன்றின் மீது ஏறி நின்று கொண்ட ஒருவன், யானைகள் சண்டை போடுவதைப் பார்க்கிறான். அதை ஆசிரியர் **யானைப்போர்** (758) என்றே குறிப்பிடுகின்றார். யானைகள் சண்டையிடும்போது எவ்வளவு தொலைவாக இருந்தாலும் தரையிலிருந்து பார்க்க முடியாது. ஏன்? போர் தெரியாது என்பதல்ல, அச்சமே காரணமாகும். யானைகள் ஓடி வந்து நம்மைத் தாக்கினாலும் தாக்கும். அல்லது வேறு பக்கங்களிலிருந்து ஓடி வருதலும் உண்டு. கொஞ்சமும் மன அமைதியுடன் பார்க்க முடியாது. **மலைக்குன்றின் மீது** (758) நின்று கொண்டால் நன்றாக, அமைதியாகப் பார்த்து முடிக்கலாம்.

பெருந் தொழில்களைச் செய்து முடிப்பதென்பது சாதாரண செயலல்ல. ஆதலால் தன் கையில் பொருள் வைத்துக் கொண்டுதான் தொழில் செய்தல் வேண்டும். இக்குறட்பாவினை ஊன்றிப் படித்து அருமை யறிதல் நல்லது.

**யானை பிடித்தல்**

தொழில் புரிதல் என்பது மிகவும் ஆற்றல் நிறைந்த செயல். தொழில் செய்தல் ஒரு யானையைப் பிடித்துக் கட்டுதல் போன்றது. இது மிகையல்ல. மதங் கொண்ட யானைகள் என்று கூறப்படுவதால் யானைகளைப் பிடிப்பது அரிய செயல் என்பது புலப்படுகின்றது. தொழில் செய்கின்றபோது செய்யப்படுகின்ற ஒரு தொழிலாலே மற்றுமொரு தொழிலையும் முடித்துக் கொள்ளுகின்ற ஆற்றல் மிகவும் போற்றக்கூடியதாகும். அப்படிப்பட்ட ஆற்றல் பெற்றவர்களே வினைசெயல் வகையை அறிந்தவர்களாவர்.

யானையைக் கொண்டே யானையைப் பிடிப்பது எவ்வளவு அருமையான செயலோ அது போன்றது ஒரு தொழில் செய்யும்போதே மற்றொன்றையும் செய்து முடித்தல் ஆகும். பல முறையும் சிந்திக்கும் தன்மையில் இக் குறட்பா (678) அமைந்துள்ளது.

**துணிவு வேண்டும்**

ஆண்மையும், கலங்காமையும், உறுதிப்பாடும், அஞ்சாமையும் எனப்படும் இன்ன பிறவும் கொண்ட மனமே துணிவுள்ள மனமாகும். உள்ளத்தில் துணிவு நிறைந்திருக்க வேண்டும் என்கின்றார் ஆசிரியர். செயல்களை எளிதில் செய்து முடிப்பதற்கு உறுதுணையாக இருப்பது துணிவேயாகும். துணிவு வெற்றியை அளித்தே தீரும் என்பது உறுதி.

துணிவான எண்ணத்தை மனத்தில் வைத்துச் செயலைத் தொடங்குக என்கிறார் ஆசிரியர். **துணிக** (467) என்பதைக் கருதிப் பார்த்தல் வேண்டும். தொடங்குக என்னும் பொருளிலேயே 'துணிக' என்று கூறுகிறார். ஏனெனில், துணிவு என்பது இயல்பாகவே இருக்க வேண்டும் என்பதைக் கருதியே **துணிவு எய்தல், அத்துணிவு** (671) என்று பிறிதோர் இடத்திலேயும் சுட்டிக் காட்டுகிறார். இவ்வகையில் தொடங்கிச் செயல்பட்டால் வெற்றி உறுதி என்ற முடிவும் துணிவும் உண்டாகிவிடுதல் வேண்டும்.

**துணிவாற்றிச் செய்க** (669) என்றும் அறிவுறுத்துகிறார். தொழில் செய்கின்ற போது துன்பங்கள் வருதல் கூடும். அதற்காக மனங் கலங்கவே கூடாது. முடிவில் இன்பம் கொடுக்கும் வினையாக அது இருக்கும். 'செய்க' என்று ஊக்கம் அளித்து வற்புறுத்துகின்றார். ஆட்சித் தலைவனுக்கு இருக்க வேண்டிய அரிய பண்புகளில் ஒன்று **துணிவுடைமை** (383) யாகும். இவ்வாறு குறித்துக் காட்டுவது மிகுந்த எழுச்சியினை உண்டாக்குகிறது. இது சிறந்த மானிடப் பிறவிக்கு உரித்தான அரிய பண்பாடாகும். பிற நாடுகட்குத் தூது செல்பவனுக்கு அறிவுரைகள் கூறுகின்ற இடத்தில், **துணிவுடைமை** (688) என்று அமைக்கின்றார் ஆசிரியர். எனவேதான், துணிவு என்பது பற்றியே பல இடங்களிலும் பேசப்படுகின்றது. குறட்பாக்களின் சொற்களை நன்கு கற்றுணர்ந்து பின்பற்றிச் செயல்படுதல் வேண்டும்.

**பெண் வழி**

'பெண் வழிச் சேறல்' என்றொரு அதிகாரம் உண்டு. திருக்குறளில் காமத்துப்பால் முழுதும் கற்புள்ள வாழ்க்கைத் துணைவியின் சிறப்பியல்புகள் கூறப்படுகின்றன. தூய்மையான உள்ளம் கொண்ட காதலர்களின் இயல்புகளை முதன்மையாக வைத்துக் **களவியல்** பகுதியும் **கற்பியல்** பகுதியும் பேசுகின்றன; ஆடவனின் ஆண்மையையும், பெண்களின் பெண்மைக் குணமும் நன்கு எடுத்துக் காட்டப்படுகின்றன. உள நூல் என்பது மனத்தின் இயல்புகளையும் மறைப்பொருள் உண்மைகளையும் கூறுவதாகும். இதையே மனோதத்துவம் என்று கூறுவர். குறிப்பாகக் கூறும்போது பெண்களைப் பற்றிக் கூறுகின்ற இடங்களிலெல்லாம் மனோநிலை என்கின்ற அரிய உண்மைகளை ஆசிரியர் புலப்படுத்துகின்றார்.

அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் பெண்களைப் பற்றியும் அவர்கள் தொடர்பாகவும் நான்கு அதிகாரங்கள் காணப்படுகின்றன. அறத்துப்பாலில் **வாழ்க்கைத் துணைநலம், பிறனில் விழையாமை** என்ற அதிகாரங்களும், பொருட்பாலில் **பெண்வழிச் சேறல், வரைவின் மகளிர்** ஆகிய அதிகாரங்களும் காணப்படுகின்றன. இல்லறத்தில் சிறந்த வாழ்க்கைத் துணைவியான மனைவியின் சிறப்பை **வாழ்க்கைத் துணைநலம்** என்ற அதிகாரம் விளக்குகின்றது. காம மயக்கத்தால் பிறனுடைய மனைவியை இச்சித்தல் கூடாது என்பதைப் **பிறனில் விழையாமை** என்ற அதிகாரம் கூறுகிறது. இத்துடன் **கூடா ஒழுக்கம்** என்ற அதிகாரத்தையும் சிந்தித்துப் பார்த்தல் நல்லது.

**வரைவின் மகளிர்** என்ற அதிகாரம் பொது மகளிரைப் பற்றியது. விலை கொடுப்பார் யாவர்க்கும் இசைந்து கொடுக்கும் பொருட் பெண்டிர்களைப் பற்றிக் கூறும் அதிகாரம் இது. அளவு கடந்த காமத்தால் வருகின்ற குற்றத்தின் காரணமாக அந்த வரிசையில் வைத்துப் பேசப் படுவது 'பெண்வழிச் சேறல்' என்ற அதிகாரம். 'பெண்' என்பது, தான் மணந்து கொண்ட மனைவியைக் குறிக்கும். சிற்றின்பத்திற்கே அடிமையானவர்கள் தம் மனைவிக்கும் அடிமையாக வாழ்வதில் சிறுமையறிய மாட்டார்கள் என்கிறது. ஆண்மை நிறைந்த கணவன் அவ்வாறு நடந்து கொண்டால் அதனால் வரும் தீமைகள் மிகப் பலவாம்.

கல்வியறிவு நிறைந்த மனைவியின் நற்கருத்துக்களைக் கணவன் கேட்டல் கூடாது என்று இந்த அதிகாரத்தில் எங்கும் காணப்படவில்லை. மனைவியைப் பற்றி மிகவும் சிறப்பாகக் கூறுவது **வாழ்க்கைத் துணைநலம்** என்ற அதிகாரம். ஆடவன் வழியில், நல்ல நெறியில் நின்று ஒழுகுதல் வேண்டும் என்பது குறிப்பிடப்பட்டது.

அறிவின் துணையின்றி மனம் போன போக்கில் நடந்து கொள்ளுகின்ற எவரும் துன்பத்திற்கே ஆளாகி நிற்கின்றார்கள். ஆடவன் மனம் போன போக்கில் நடந்து கொண்டால், தீமைகள் உண்டாகும். பெண்கள் மனம் போன போக்கில் நடந்து கொண்டால் அழிவே உண்டாகும். ஆகவே, கணவனின் கட்டுப்பாட்டில் மனைவி இருந்தாக வேண்டும். இதை இயற்கையின் விதியாகக் கொள்ள வேண்டும். மனைவியை அடிமையாக நடத்துதல் என்பது வேறு; அது அறிவுடைமையாகாது.

'பெண்வழிச் சேறல்' என்ற அதிகாரத்தில் அவள் வழியிலேயே நடந்து கொள்ளும் கணவனை **இன்பம் காரணமாகவே** அவ்வாறு நடந்து கொள்ளுகிறான் என்கின்றார் ஆசிரியர். அளவு கடந்த இன்பம் காரணமாக என்றும் குறிக்கின்றார்.

| | |
|---|---|
| மனைவிழைவார் | பேணாது பெண் விழைவான் |
| இல்லாள்கண் தாழ்ந்த | மனையாளை அஞ்சும் |
| இல்லாளை அஞ்சுவான் | இல்லாள் தோள் அஞ்சுபவர் |
| ஏவல் செய்து ஒழுகும் | பெட்டாங்கு ஒழுகுபவர் |
| பெண் ஏவல் செய்வார் | பெண் சேர்ந்தாம் பேதைமை |

என்றெல்லாம் 'பெண்வழிச் சேறல்' என்ற அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளன.

ஆண்மை நிறைந்த கணவனைத்தான் மனைவியும் போற்றிப் புகழ்ந்து மகிழ்ச்சியாகக் கொள்வாள். பெண்ணின் உள்ளம் நன்கு புரிந்து கொள்ளப்பட வேண்டும் என்பதை இந்த அதிகாரம் நன்கு எடுத்துக் காட்டுகிறது. மனைவிக்கு அஞ்சி நடந்து ஏவல் செய்பவன் பெண்ணின்பத்தையும் நன்கு நுகர முடியாது என்பதைப் **பிறவினையும்** (909) என்று உணர்த்துகிறார். இக்குறட்பாக்களை நன்கு கற்றுணர்ந்து அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

**தாயும் தந்தையும்**

தாயைப் பற்றிக் கூறும் போதெல்லாம் ஆசிரியர் திருவள்ளுவர் 'ஈன்ற' என்ற சொல் அமைத்தே கூறுகின்றார் என்ற உண்மையைப் புரிந்து பாராட்டுதல் வேண்டும். பெற்றெடுத்தல் என்னும் அருமையான செயல் இங்குக் குறிப்பால் உணர்த்தப்பட்டது.

| | | | |
|---|---|---|---|
| ஈன்ற தாய் | 69 | ஈன்ற தாயானும் | 1047 |
| ஈன்றாள் முகத்தேயும் | 923 | | |

என்பன போன்ற குறட்பாக்களை உணர்ந்தறிக.

தாய் தன் மகனைப் பற்றி என்ன நினைப்பாள் என்பது குறிக்கப்பட்டது. கல்வி, அறிவு, செல்வம் இவைகளில் சிறந்தவன் என்று கூறுகின்ற முறையில் மட்டும் அமைக்காமல், **சான்றோன் எனக் கேட்ட தாய்** (69) என்று கூறுகின்றார். நற்குணங்கள் அனைத்தும் நிரம்பப், பெற்றவனாகவும், ஒழுக்கச் சீலனாகவும், மக்கள் அனைவர்க்கும் பயன்படுபவனாகவும் இருக்க வேண்டும் என்று தாய் தன் மகனைப் பற்றி நினைக்கின்றாள். **நற்குணங்கள் இயல்பாகவே அமையப் பெற்றவர்கள் பெண்களே** என்பது இதன் குறிப்பாகும். 'சான்றாண்மை' என்ற அதிகாரம் இங்குக் கருதத் தக்கது.

மகன் சிறந்த அறிவுடையவனாக இருப்பதைப் பெரிதும் முதன்மையாகக் கொள்பவன் தந்தை என்று குறிப்பாக உணர்த்தப்பட்டது. **தம்மின் தம்மக்கள்** (68) என்பது கருதத்தக்கது. தந்தை மகனுக்குச் செய்யவேண்டிய கடமைபற்றிக் குறிப்பிடும்போது கல்வி, அறிவுடைமை களில் சிறந்தவனாகச் செய்தல் என்பது பொதுப்படக் கூறப்பட்டது. **தந்தை மகற்காற்றும்** (67) என்பது சிந்திக்கத்தக்கது.

**மகன் தந்தைக் காற்றும் உதவி** (70) என்பதும் சிந்திக்கத்தக்கது. சிறப்பானவற்றை அடைவதற்கு நோன்பு நோற்றல் வேண்டும் என்பதை உணர்த்தவே **என் நோற்றான்** (70) என்றும் அமைக்கப்பட்டது. தாய் தந்தையர் செய்து வைக்கும் மிகப் பெரும் நன்மைக்கு அளவே இல்லை. **செய்ந்நன்றியறிதல்** என்ற அதிகாரத்தில் கடைசிக் குறட்பாவாகக் காணப் படுவதில் **மகற்கு** என்பது பொதுப்பட அனைவர்க்கும் பொருந்துவதே ஆனாலும் **பெற்ற மகன்** என்ற கருத்தையும் எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

தன்னுடைய மகளைப் பற்றித் தாய்க்குத்தான் நன்றாகத் தெரியும் என்பது ஒரு வகையில் பொருத்தமாகும். தன் மகள் ஆடவன் ஒருவனைக் காதலிக்கின்றாள் என்பது தெரிந்து விட்டது. ஆதலால், தாய் அவளைக் கட்டுப்படுத்த முற்படுகிறாள். தன் மகளுக்கு இடித் துரைத்துப் புத்தி சொல்லுகிறாள். தாயும் இளமைக் காலத்தின் செயல்களை அறிந்தவளாகத் தான் இருப்பாள். பெண்களைக் கட்டிப் பாதுகாக்க வேண்டிய செயல் தந்தையைவிட தாய்க்கே உரியது என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. **அன்னை சொல் நீராக** (1147) என்பது இங்குச் சிந்தித்து அறிய வேண்டிய ஒன்று. **பெற்றெடுத்தல்** (ஈனுதல்) மிகவும் அரிய செயல். பிற கருத்துக்களின் அருமையைக் குறிக்க வேண்டிய மற்ற இடங்களிலும் இச் சொல்லைக் காண முடிகிறது.

| | | | |
|---|---|---|---|
| சிறப்பு ஈனும், செல்வமும் ஈனும் | 31 | கேடு ஈன்பது | 165 |
| அன்பு ஈனும், அது ஈனும் | 74 | சிறப்பு ஈனும் | 311 |
| நயன் ஈன்று, பயன் ஈன்று | 97 | பிறப்பு ஈனும் | 361 |
| இனிது ஈன்றல் | 99 | அறன் ஈனும் இன்பமும் ஈனும் | 754 |
| இறல் ஈனும், விறல் ஈனும் | 180 | அன்பு ஈன்குழவி | 757 |

என்பன போன்றவற்றை அறிந்துணர்தல் நல்லது.

**பட்டடை**

பொற்கொல்லர்கள் 'பட்டடை' என்னும் கருவியை வைத்திருப்பார்கள். பொன் முதலியவற்றை வைத்து அடித்து நசுக்குவதற்கும் வெட்டுவதற்கும் ஆதரவாக இருப்பது இக் கருவி. தினமும் காலையில் இக் கருவியினைத் தேய்த்து நன்றாகத் தூய்மைப் படுத்துவார்கள். அதன் மீது பொன்னை வைப்பார்கள்; அது அப் பொன்னைத் தாங்கிக் கொண்டிருக்கும். பிறகு நசுக்குவதோ, வெட்டுவதோ நடைபெறும். அதாவது பொன் வெட்டப்படுவதற்கென்றே, அழிக்கப்படுவதற்கென்றே அம்மேடை – கருவி உள்ளதாம்!

சில பகைவர்கள் தீமை செய்வதற்காகவே நண்பர்கள் போலப் பழகிக் கொண்டிருப் பார்கள். அதாவது, அவர்கள் கெடுதி செய்யும் காலம் கிடைக்கும் வரையில் 'பட்டடை' (821) தாங்குவது போலத் துணையாகக் காட்சியளிப்பார்கள்! பலவிதமான கருத்துக்களைச் சிந்தித்து இக் குறட்பாவினையும் உவமையையும் புரிந்து கொள்ளுதல் வேண்டும் உலக மக்களிடையே வாழ்பவர்கள் தெரிந்துகொள்ள வேண்டிய நல்ல கருத்து இது.

**மனையும் மன்றமும்**

ஒரு சிலருடைய தீய குணங்கள் மிகவும் வியப்பிற்கும் வெறுப்பிற்கும் உரியனவாகவே இருக்கின்றன. தீய குணங்களைக் கொண்டவர்கள் நண்பர்களாகவே இருந்து வருவார்கள். அவர்களைச் சிறிதளவுகூட நம்மை நெருங்கும்படி விடவேகூடாது என்று திருவள்ளுவர் அறிவுறுத்துகின்றார். அத்தகையவர்கள் நம்முடைய வீட்டில் நம்முடன் பழகும்போது அன்புடன் பழகுவார்களாம். நம்மைப்பற்றிப் பெருமையாகக் கூடப் பேசி மகிழ்வார்களாம். அவர்களே பிறகு பலரும் கூடி இருக்கும் மன்றத்தில் – பலரும் அறியுமாறு நம்மைப் பழிப் பார்கள். அவர்கள் எத்தகைய அற்பர்கள், தீயவர்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? **மனைக் கெழீஇ மன்றில் பழிப்பார் (820)** என்று இவர்களை அடையாளம் காட்டுகிறார் இத்தகையவர்களை எப்பொழுதும் அணுகவே விடக்கூடாது.

**கீழ்நீர்**

மனத்தையும் அறிவையும் இன்ன பிறவற்றையும் களவு செய்து கொண்டு போகின்ற பொருளாக இருப்பதால், அப்பொருள் 'கள்' என்று கூறப்பட்டது. எனவே, 'கள் குடித்தல்' என்பதற்குக் 'கள்ளைக் குடித்தல்' என்று மட்டும் பொருள் கொள்ளக் கூடாது. அவ்வகையில் சேர்ந்த அனைத்தையும் உணர்த்தவே **கள்ளுண்ணாமை** என்ற அதிகாரம் வைக்கப் பட்டது.

'கள் குடித்தல்' கொடிய தீமையான பழக்கம். தீமையான பழக்கங்கள் ஒருவருக்கு வந்து விட்டால், அவற்றை எளிதில் கைவிட முடியாது. ஏனையோர் முயன்றாலும், அவர் களைக் கைவிடச் செய்யவும் முடியாது. சிறுகச் சிறுகச் சிந்தனை செய்ய வைத்தால்தான் தீய பழக்கங்கள் நீங்கும்.

சான்றோர், குடித்தவர்களை மக்களாகக் கருத மாட்டார்கள் என்கிறார் ஆசிரியர்.

குடித்துவிட்டு மயங்கி இருப்பவர்களுக்கு யாராலும் அறிவுரை கூற முடியாது. அவ்வாறு அறிவுரை கூறுவது, தண்ணீருக்குள் மூழ்கி இருப்பவனை விளக்கைக் கொண்டு தேடுவது போன்றதாகும் என்கிறார். அதை விளக்கு என்று சொல்லாமல் 'தீப்பந்தம்' என்றது மிக்க நயமாகும்.

மதுமயக்கத்தில் இருப்பவன், தண்ணீருள் மூழ்கியிருப்பவனுக்கு ஒப்பாவான். அவனுக்குச் சொல்லும் அறிவுரை, நீருள் மூழ்கும் தீப்பந்தம் அழிவதைப் போன்று வீணாகி விடும் என்பது இதன் கருத்து.

இங்கே '**கீழ்நீர்**' குளித்தான் என்பது 'தண்ணீருள் மூழ்கியவன்' என்ற பொருளைத் தரும். ஆயினும், கள் குடித்தவனைப் பார்த்து, இவன் 'தண்ணீர் குடித்திருக்கிறான்' என்றும், கள் குடித்து மயங்கிக் கிடப்பவனைப் பார்த்து, 'இவன் தண்ணீரில் மூழ்கியிருக்கிறான்' என்றும், கூறுவது உலக வழக்கு. இதனால், 'கள்', 'நீர்' என்று வழக்கின்கீழ் குறிப்பிடப்பட்டு வந்துள்ளது என்பதும் புலனாகிறது.

கீழ்நீர் (929) களித்தான் என்றும் கொண்டு கூட்டி, **கீழ்மையான நீரை**—களித்தவன் என்று சிந்திப்பதற்கும் பொருளாயிற்று என்பது அறிக.

கீழ்நீர் என்பது கிழான நீர் — தாழ்மையான நீர் என்று கருதப்படும்.

**ஆழப் பதித்தல்**

உயர்ந்த உண்மைகளைக் கூறுதல் என்பதோடல்லாமல் அவ்வுண்மைகள் மக்கள் உள்ளத்தில் ஆழப் பதிந்து விடுமாறு செய்தலே பேராசிரியர்களிடத்தில் காணப்படும் தலை சிறந்த ஆற்றலாகும். இவ்வகையில் ஆசிரியர் திருவள்ளுவனார் உலக அரங்கத்தில் முதன்மை யானவரும் தலைமையானவருமாவார் என்பது வெள்ளிடைமலை. தாம் கூறுகின்ற அற உண்மை கள் மனத்தில் ஆழப் பதிவதற்காக அவர் அரிய உவமைகளைக் கூறுகின்றார்.

உலகப் பழக்கத்தில் மக்களிடையே பேசப்படும் பொருளைச் சுட்டிக்காட்டி, 'உண்மை இதுதான்' என்று அறநெறியைக் கூறுகின்றார். கவிஞர்கள் கூறும் கற்பனை போன்று மிகைப் படுத்திக் கூறி உண்மையை உள்ளத்தில் பதிய வைக்கின்றார். எந்தெந்த நல்ல முறைகளை யெல்லாம் அமைத்து அறிவிக்க வேண்டுமோ அந்தந்த முறைகளையெல்லாம் அவர் தழுவிக் கொள்ளுகின்றார். சிற்சில நேரங்களில் மிகைப்படுத்திக் கூறுவது போலத் தோன்றினாலும் அவை கற்பனையென்று கொள்ளுதல் கூடாது. சொல்ல வந்த கருத்துக்களை மக்கள் உள்ளத்தில் ஆழப் பதிய வைக்கின்ற அரிய முறையென்று அதனை அறிதல் வேண்டும். உலகியல் மரபும் உண்மையும் அதுவே ஆகும்.

உண்ணப்படும் நீரை **அமிழ்தம்** என்று கூறுகின்றார். நீரின்றி வாழ முடியாது. உயிர் வாழ்வதற்கு நீர் இன்றியமையாதது என்பதனை உணர்த்த வேண்டியே அது **அமிழ்தம் என்று உணரற்பாற்று** (11) என்றார். அமிழ்தம் என்பது உலக மக்களிடையே பேசப்படுகின்ற ஒரு சொல்லாகும். அதை உண்டால் நெடுநாள் வாழ்வார்கள்; அல்லது இறக்காமல் இருப்பார்கள். இது சிறப்பிற்காகக் கூறப்படுவது.

சாகாதவர்கள் உலகில் யாருமே இல்லை. கண்கூடாகக் காணப்படுவது தண்ணீர்தான். அது இல்லாவிட்டால் இறக்கவும் நேரிடும். ஆதலால், இதையே அமிழ்தமாகக் கொள்ள வேண்டுமென்றார். நீரின் சிறப்பே சிறப்பென்று உய்த்துணர வைத்தார். மக்களிடைக் காணப் படும் எண்ணங்களையும், பழக்கங்களையும் எடுத்துக் காட்டி உண்மை எது என்று கூறுவதுதான் பேராசிரியர்களின் சிறந்த முறையாகும்.

'அமிழ்தம்' தேவர்கள் உண்பதென்பது உலகியல் நம்பிக்கை. அத்தகைய உயர்வான அமிழ்தத்தைச் சுட்டிக் காட்டுகிறார் ஆசிரியர்.

குழந்தைகளின் இன்பம் தலைசிறந்த இன்பம். தமது பிள்ளைகள் சிறிய கைகளால் தொட்டுப் பிசைந்த உணவு பெற்றோர்களுக்கு **அமிழ்தத்தை விடவும்** (64) மிக இனிமையாக இருக்கும் என்கிறார். மிகுந்த இனிமை எது என்பதை இங்கே உணர்த்துகிறார். எதை மனத்தில் கொள்ளுதல் வேண்டும் என்பதை ஆங்காங்குக் குறிப்பாக உணர்த்துவது ஆசிரியரின் நன்னெறியாகும்.

பிறிதோர் இடத்தில் **சாவா மருந்து** (82) என்கிறார். அமிழ்தம் எனப்படுவதையே இவ்வாறு குறிக்கின்றார் என்று கொள்ளலாம். இல்லாவிட்டாலும் **சாவைத் தராத மருந்தாகவும் கொள்ளலாம்**. அப்படிப்பட்ட மருந்து இவ்வுலகில் இல்லை. மேலோர், உயர்ந்தோர் எனப் படும் விருந்தினர்களின் அருமையினைக் கூறவே இவ்வாறு மிகைப்படுத்துகிறார் என்று அறிதல் வேண்டும். மனத்தில் ஆழப் பதித்துக் கொள்ள வேண்டியது விருந்தின் பெருஞ் சிறப்பேயாகும்.

நல்ல கருத்துக்களைச் சொல்கிறவர்கள் நல்லோர் இருக்கும் அவையில்தான் சொல்ல வேண்டும்; கீழானவர்கள் இருக்கும் சபையில் சொல்லக் கூடாது. அப்படிக் கூறினால், அது **அமிழ்தத்தைத் தூய்மையில்லாத சேற்றில் ஊற்றியது** (720) போன்றது என்கிறார். கழிவு நீரில் அமிழ்தம் ஊற்றப்பட்டது போன்றதாம். உயர்ந்த கருத்துக்களை யாரிடம் கூறவேண்டு மென்பதே கொள்ளப்பட வேண்டியது. **உக்க அமிழ்தற்றால்** (720) என்பது குறட்பாவில் காணப்படுகிறது.

காதலியின் சிறப்பினைக் காதலன் சிறப்பாகக் கூற ஆசைப்பட்டான். **அப்பெண்ணின் தோள்கள் அமிழ்தத்தினால்** (1106) செய்யப்பட்டிருக்க வேண்டுமென்று இன்பவேகத்தில் கற்பனைகளை அமைக்கின்றான். ஆசிரியர் தாம் கூறும் கருத்துக்களை எவ்வாறு பதிய வைக்கின்றார் என்பதுதான் இங்குச் சிந்திக்கத் தக்கது. அவரால் பயன்படுத்தப்படும் கருவி களில் நாம் அதிக நாட்டம் செலுத்த வேண்டியதில்லை.

முனிவர்கள் எனப்படும் செயற்கரிய செய்யும் நீத்தார்களின் பெருமையைக் கூற வரும் போது, 'அவர் பெருமையின் அளவைக் கூற வேண்டுமானால் இதுவரை உலகில் பிறந்து இறந்தவர்களை எண்ணிக் கணக்கிடுவது போன்றதாகும்' (22) என்கிறார். இது யாராலும் செய்ய முடியாத செயல். மிகைப்படுத்துவதுபோல் இருந்தாலும் முனிவர்களின் சிறப்பு நன்கு எடுத்துக் காட்டப்பட்டது.

விதைப்பதற்கு வைத்திருக்கின்ற விதைநெல்லை உழவர் உயிர் போன்று பாதுகாத்து வைப்பார்கள். ஏனெனில், அது போனால் கிடைக்காது என்றும் கூறலாம். அப்படி விதைக்கு வைத்திருப்பதையும் விருந்தினர்களுக்கு சமைத்துப் போட்டு **விதைக்காமலும்** இருப்பான் (85) என்று கூறுகின்றார். இயல்பாக யாரும் அவ்வாறு செய்யத் துணியமாட்டார். எனினும், **'நல்விருந்து'** எனப்படும் பெரியோர்களை எவ்வாறு போற்ற வேண்டுமென்பதை வற்புறுத்த வேண்டியே இவ்வாறு அதிகப்படுத்திக் கூறினார். கருத்துக்கள் உள்ளத்தில் ஆழ்ந்து பதிய இவ்வாறான முறைகளே சிறந்தவை.

இனிமையான சொற்களைப் பேசுவது நல்லறமாகும். இனிமையாகப் பேசுவது கடினமானது அல்ல; எளிமையானதே. அதனால் பலருக்கு எவ்வளவோ இன்பமும் உண்டாகும்.

ஈகை செய்ய வேண்டுமென்றால் கையில் பொருள் இருக்க வேண்டும். ஆனால், இனிய சொற்கள் பேசுவதற்கு ஒன்றுமே வேண்டாம். நல்ல மனமும் பழக்கமும் இருந்தாலே போதும்.

அப்படியிருக்க இனியவை பேசாமல் இருக்கலாமா? இனியவை கூறல் என்பதை வற்புறுத்தவே **'ஈதலின் நன்றே'** (92) என்றார். ஈகை செய்வதைக் குறைவாகக் கூறினார் என்பதல்ல; எளிமையானவற்றையும் செய்யாதிருக்கின்றார்களே என்பதை வற்புறுத்தவே அவ்வாறு கூறினார்.

பிறர் உதவி செய்வதைப் பெருமை படுத்திக் கூறுகின்றார். பிறர்க்கு இயன்றவரை உதவுவதே மனிதப் பண்பாட்டின் சிறந்த தன்மை. அப்படிக் கூறும்போது **செய்யாமல் செய்த உதவிக்கு** (101) பதிலாக மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் ஈடாகக் காட்ட முடியாது என்கின்றார். விண்ணுலகம் என்று கூறுவது உலகியல் வழக்கமாகும். இவ்வாறு கூறுதல் மிகைப் படுத்துதலே ஆகும். கற்பவர்களுக்கு இவ்வளவு சிறந்த செயலா என்று எண்ணத் தோன்றும்.

உதவி செய்தால் அது மக்கள் சமுதாயத்தை எவ்வளவு மேம்பாட்டிற்குக் கொண்டு வந்துவிடும் என்பதைக் கருதியும் ஒவ்வொருவரும் இவ்வழக்கத்தைப் பின்பற்றுதல் வேண்டும் என்பதை எடுத்துக் காட்டவும் அவ்வாறு அமைத்தார் எனலாம்.

**ஞாலத்தின் மாணப் பெரிது** (102), **கடலிற் பெரிது** (103), **பனைத்துணையாக் கொள்வர்** (104) என்பனவெல்லாம் ஆசிரியர் தாம் கூறவந்த உண்மைகளை எவ்வளவு சிறப்பாக நினைக்க வைத்துப் பின்பற்றச் செய்கிறார் என்பதை நாம் புரிந்து கொள்ள உதவுகின்றன.

கொலை செய்வது போன்ற துன்பத்தை ஒருவன் செய்தானேயானாலும் அவன் முன்பு ஒருமுறை தனக்குச் செய்த நன்மையை நினைத்துப் பார்த்தால், கொலை போன்ற இத்துன்பம் மறக்கப்பட்டுவிடும் என்கின்றார். முன்பு அவன் செய்த உதவி மிகச் சிறியதாகக் கூட இருக்கலாம். எப்படியாயினும், நம்முடைய பெருந்தன்மையினால் அறிவற்றவன் செய்த தீமையினை மறக்க வேண்டும் என்கின்ற நன்முறையை வகுத்துக் காட்டியுள்ளார்.

செய்யவேண்டிய அறத்தினைக் கடைப்பிடிக்காமல் தீமைகள் செய்தாலும் **பிறன் மனையை இச்சிக்கும்** (150) தீமையைச் செய்யாதிருத்தல் மிகவும் நல்லதென்றார். அறமல்லாத தீமைகள் செய்தல், யாருக்கும் எப்போதுமே கூடாது என்பதுதான் முறை. என்றாலும் பிறன்மனை இச்சித்தல் கூடவே கூடாது என்பதை உள்ளத்தில் ஆழப் பதிய வைக்கவே அவ்வாறு கூறினார்.

அறத்தை **மறத்தலினூங்கில்லை கேடு** (32) என்பது முடிந்த முடிபாகும். ஆற்றலால் சொல்ல வேண்டிய ஒவ்வொரு அறமும் நன்முறையில் கூறப்படுகின்றன. அவற்றைக் கொள்ளுதலே அறிவுடைமை.

**அறங்கூறான் அல்ல செயினும்** (181), **அறன் அழீஇ அல்லவை செய்தலின்** (182), **கண்ணின்று கண்ணறச் சொல்லினும்** (184) என்பவையெல்லாம் 'புறங்கூறாமை' என்ற அதிகாரத்தில் காணப்படுவன. ஒருவர் இல்லாதபோது, அவரைப்பற்றித் தீமை பேசுகின்ற கொடிய பழக்கம் அறவே நீக்கப்படுதல் வேண்டும். அத்தகைய கொடிய பழக்கத்தை எவ்வளவு அதிகமாக வற்புறுத்திக் கூறவேண்டுமோ அவ்வளவு அதிகமாக வற்புறுத்துகிறார். சமுதாய வளர்ச்சிக்கு இப்பழக்கம் கொடிய பகையாகும். ஆதலால், அறமல்லாத பிற எல்லாத் தீமையையும்விட புறங்கூறல் அழிவுக்குக் காரணமானதொரு தீமையாகும்.

எனவே, வேறு எந்த அறச் செயலையும் மறந்து அல்லாதவற்றைச் செய்தாலும் இதனைச் செய்யாதே என்று இடித்துக் கூறுகிறார். அறமல்லாதவற்றைச் செய்யக்கூடாது

என்பது பொது விதியாகும். இதனால் புறங்கூறுதலின் தீமை எடுத்துக் காட்டப்பட்டது. சான்றாண்மைக்குரிய பல நல்ல இயல்புகளிலே **பிறர் தீமை சொல்லாத நலத்தது சால்பு** (984) என்பதும் கருதத்தக்கது.

இனிமையும், நயமும் இல்லாத வார்த்தைகளைச் சொன்னாலும் பரவாயில்லை. **நயனில சொல்லினும் சொல்லுக** (197). ஆனால், யாதொரு பயனுமில்லாத சொற்களைச் சொல்லிக் கொண்டிருக்காதே என்று கூறுகின்றார். சான்றோர் என்று குறித்துக் காட்டி, பயனில்லாத சொற்களையே பேசிக் கொண்டிருந்தால், மக்கள் வாழ்க்கை பாழ்பட்டுவிடும் என்பதற்கு இவ்வாறு எடுத்துக் காட்டினார். 'சொல்லினும் சொல்லுக' என்பதால் அதனையும் **சொல்லக் கூடாது** என்பதே உணர்த்தப்பட்டது.

தவம் செய்வதால் உண்டாகும் மிகப் பெரிய ஆற்றலைக் குறிப்பிடும்போது, **கூற்றம் குதித்தலும் கை கூடும்** (269) என்று கூறுகின்றார். கற்றவன் யாரையும் விடவே மாட்டான். காலம் வந்து விட்டால் கூற்றுவன் கொண்டு போய்விடுவான். என்றாலும், கடுமையான நோன்பு நோற்று தவம் செய்பவர்கள் பெறுகின்ற தவ வலிமையாகிய ஆற்றலைச் சிறப்பிப்பதற்காகவே இங்ஙனம் அமைத்துக் காட்டினார்.

படை வீரர்களின் வீரத்தைக் கூறவந்த ஆசிரியர், **கூற்று உடன்று மேல் வரினும் கூடி எதிர் நிற்கும்** (765) என்கிறார். கூற்றுவன் வந்தான் என்றால் இறந்து விடுவர் என்பது உலகியல் உண்மையாகும். கூற்றுவர்களே கூட்டமாக வந்தாலும் எதிர்த்து நின்று போர் புரிவதே படையாகும் என்கிறார். இது மிகைப்படுத்துவது போன்றும், கவிஞர் கற்பனை போலவும் தோன்றும். ஆயினும் படையின் பேராற்றலினை இவ்வாறு மிகத் தெளிவாகக் கூறுகின்றார் என்பது கருதுக. இம்முறையில் எண்ணங்கள் உள்ளத்தில் பதிய வைக்கப்பட்டால் என்றென்றும் சுவை நீங்காது.

இஃதே போன்று **செல்லாது உயிர் உண்ணும் கூற்று** (326) என்கிறார். கூற்றுவன் அனைவரையும் காலம் வந்தபோது பிடிப்பவனாவான். **கொல்லாமை** என்ற அறத்தின் மேன்மையை இங்கே உயர்த்திக் கூறினார். சிறப்பித்துக் கூறும் முறைகள் இவ்வாறெல்லாம் இருப்பது மரபாகும்.

இயற்கையின் தன்மையினை **'ஊழ்'** என்ற அதிகாரம் விளக்குகிறது. ஊழ்வினை, முன்வினை, பழவினை, தலைவிதி என்பவை எல்லாம் **'இயற்கை'** என்பதிலே அடக்கப்படும். **உலகத்து இயற்கை** (374) என்றும் இவ்வாறே பல இடங்களிலும் ஆசிரியர் உணர்த்துகிறார்.

எவ்வளவுதான் பொருள் சேர்த்து வைத்திருந்தாலும் அதனால் இன்பம் நுகர்ந்து வாழ வேண்டுமென்றால், அதற்கு ஊழ் துணைபுரிய வேண்டும். **பெருஞ்செல்வம் படைத்திருந்தாலும்** (373) என்பதைக் கூற வந்தவர் **'கோடி தொகுத்தார்க்கும்'** (377) என்று குறிக்கின்றார். ஆசிரியர் இயல்பாகவே கோடி தொகுத்து வைத்திருப்பவர்கள் பலர் இலர் என்பது உண்மையேயானாலும், நுகருவதற்கு முடியாமல் இருப்பதற்குக் காரணம் உண்டு என்பதை வற்புறுத்தி எடுத்துக் காட்டவே அவ்வாறு சொல்கின்றார்.

ஆட்சி செய்யும் தலைவன் காலங் கருதி நல்ல முறையில் செயல்படுவானேயானால் இந்த உலகத்தையே பெற விரும்பினாலும் கைகூடும் என்கிறார். **ஞாலம் கருதினும் கைகூடும்** (484), **கலங்காது ஞாலம் கருதுபவர்** (485) என்பன போன்றவை கருதத் தக்கன.

இந்த உலகம் முழுவதையும் ஒருவனே தனது ஆட்சியின்கீழ் கொண்டு ஆளுதல் என்பது எக்காலத்திலும் யாராலும், இயலாதது என்றாலும் 'காலம் அறிந்து செயல்' என்பது குறிப்பாக ஆட்சித் தலைவனுக்கு மிகமிக இன்றியமையாதது என்பதை உள்ளத்தில் நன்கு பதிய வைப்பதற்காகவே இவ்வாறு கூறினார். மிகைப் படுத்துவதாகத் தோன்றினாலும் கருத்து இங்கு நன்கு விளக்கப்பட்டது. சோம்பல் இல்லாத மன்னன் உலக முழுவதையும் அடைவான் என்பது சொல்ல வந்த கருத்தின் வன்மையை வலியுறுத்துவதற்கேயாகும் (610).

**'கண்ணோட்டம்'** என்ற அதிகாரம் மனிதத் தன்மைக்குரிய நல்ல பல உண்மை களைப் பேசுகிறது. நெருக்கமாகப் பழகிய பண்புள்ள நண்பர்களின் பழக்க வழக்கங்களை ஆசிரியர் விளக்குகின்றார். அந்தச் சிறப்பான இயல்புகளைக் கூறும் போது, **'நஞ்சு உண்டு அமைவர்'** (580) என்று 'சொல்லுகின்றார். நஞ்சை ஊற்றிக் கொடுப்பவர் இருக்க முடியாது; பழகியதற்கு அது தன்மையாகாது. அவ்வாறு தந்தால் அதையும் உண்டு அமைவர். உயர்ந்த உளப்பாட்டினைப் புரிந்து கொள்வதற்கு இத்தகைய காட்சிகளை எடுத்துக் காட்டுகிறார். இவை போன்றவையே மிகையானவை போலத்தான் தோன்றும். என்றாலும், உணர்த்த வேண்டிய உயர்ந்த கருத்துக்கு இதுவே முறையாகும் என்க.

ஆட்சித் தலைவனான மன்னனுக்குப் பக்கத்தில் இருந்து கொண்டே தீமை செய்பவர்களைக் காட்டிலும் **எழுபது கோடி பகைவர்** (639) இருப்பது நல்லது என்றார். எண்ணிக்கையில் மிக மிக அதிகப் படுத்துகிறார். ஏனெனில், அப்படி உடனிருந்தே தீமை செய்பவன் செயல் அழிவினைத் தந்தே விடும் என்பதால் மிகைப்படுத்தினார் என்பது தோன்றினாலும் கருத்து உள்ளத்தில் ஊன்றப்பட்டு விட்டது.

அருமையான கற்பனை நிறைந்த நிகழ்ச்சி யொன்றைக் காட்டுகிறார் ஆசிரியர். சிலர் கூற்றுவனைக் கைகாட்டிக் கூப்பிடுகின்றார்கள் என்று அறிவிக்கிறார் (894). அப்படி யாரும் கூப்பிட மாட்டார்கள். அப்படிக் கூப்பிடுவதற்குக் **கூற்றுவன்** என்று ஒருவன் இல்லை, உடம்பிலிருந்து உயிர் பிரிகின்ற செயலினை உருவகப் படுத்திக் கூற்றுவன் என்பது மரபு. அதாவது தானே அழிவதற்கான செயல்களைச் சிலர் செய்து கொள்கின்றார்கள் என்பதைத் தெளிவு படுத்தவே இந்தக் கற்பனையைக் கூறி உணரச் செய்தார்.

நாட்டின் குடிமக்களுக்காக, அவர்கள் உயர்வுக்காக உழைக்கும் ஒருவனுக்குத் தெய்வம் தனது ஆடையை இறுக்கிக் கட்டிக் கொண்டு தானே முன்வந்து உதவும் (1023) என்கிறார். நிலம், நீர், தீ, காற்று, விண் ஆகிய இயற்கைப் பிரிவுகளைத் தெய்வங்கள் என்று கூறுவது தொன்று தொட்டு வருகின்ற வழக்கம். மனிதன் செய்வது செயற்கை; இயல்பாக நடை பெறுவது இயற்கை. **இயற்கையும் உதவி செய்யும்** (1023) என்பதைக் கற்பனை யழகுடன் கூறினார். கருத்து மிகமிக உயர்ந்ததாகும். மக்களுக்குத் தொண்டு புரிதல் எத்தகைய சிறப்பு வாய்ந்தது என்பதைக் கூறவே இவ்வாறு நயம்படக் கூறுகிறார்.

உலகமே அழியும் காலம் வந்தாலும் (989) சால்புடையவர்கள் தங்கள் சான்றாண்மையிலிருந்து மாறமாட்டார்கள். சான்றாண்மையின் பெருஞ் சிறப்பினை இதைவிட மேலாக யாரும் கூற முடியாது. சான்றோர்கள் 'இல்லற ஞானிகள்' என்று உலக வழக்கில் கூறப்படுவார்கள்.

தவத்தினை மேற்கொண்டு நோன்பு நோற்று ஆற்றல் பலவும் பெற்று, அவை அனைத்தையும் துறந்து, பற்றற்ற முறையில் ஆசைகளைவிட்ட துறவிகளுக்கு எந்த இடம் கூறப்படுகின்றதோ (பேரா இயற்கை 370) அதே போன்று இல்லறத்தில் வாழ்ந்து உயர்ந்த இடம் பெறுகின்றவர்களே சான்றோர் எனப்படுவர்.

**அடுக்கிய கோடி பெறினும்** (954), **கோடி உண்டாயினும்** (1005), **இரவாமை** (1061) என்பவற்றையும் பிறவற்றையும் இவ்வாறே கண்டு தெளிதல் வேண்டும். இவை போன்று பல இடங்களிலும் கருத்தை ஆழ்ந்து பதியச் செய்ய ஆசிரியர் இவ்வாறு அமைத்துள்ளார். கற்பனை நிறைந்த உண்மைகளைக் கூறுவதே காமத்துப்பால். ஆசிரியர் பேராற்றல் முறைகளுக்கு இவை சில எடுத்துக்காட்டுகளாகும்.

**நா, மா, ஆ, கா**

திருக்குறளில் காணப்படும் அழகான அமைப்புகளில் ஓர் எழுத்தே ஒரு மொழியாக நின்று பொருள் தரும் நிலைகள் குறிப்பிடத்தக்கன 'நா' என்பது நாக்கு. இந்த எழுத்து ஒரு சொல்லாக அமைந்து சிறப்பான கருத்தினை அளிக்கின்றது. **கா காக்க** (127), **காச் செற்று** (335), **கா நலம்** (641) முதலிய குறட்பாக்களையும் பிற வற்றையும் கண்டு தெளிதல் வேண்டும்.

'ஆ' என்கிற எழுத்து ஒரு சொல்லாக நின்று பசு என்பதைக் குறிக்கிறது. **ஆ பயன் குன்றும்** (560), **ஆவிற்கு நீர் என்று** (1066) என்பன போன்ற குறட்பாக்களைச் சிந்தித்தறிதல் வேண்டும். 'பெற்றம்' என்பதும் பசுவைக் குறிப்பதாகும். **பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று** (273) என்பது இதைக் காட்டுகிறது.

காமத்துப்பாலில் காவடித் தண்டு, காவடிச் சுமை என்பன போன்ற கருத்துக்கள் கூறப்படுகின்றன. இன்பச் சுவையில் பேசப்படுகின்ற நயம் மிகவும் சிந்தித்தறிய வேண்டுவன. அவள் தனது துன்பத்தைக் கூறுகின்றபோது உயிர் காவடித் தண்டாக இருக்கின்றது என்று கூறுகின்றாள். 'உயிர்' **'கா'வாத் தூங்கும்** (1163) என்று கூறுகின்றான். காவடிச் சுமையாக இருக்கின்றது என்று கூற வரும்போது **'கா'ப்போல இருதலையானும் இனிது** (1196) என்று குறிக்கப் படுகிறது.

'மா' என்பது விலங்கு. இங்கு 'மா' என்பது கவரி மானையும் குறிக்கிறது; குதிரையையும் குறிக்கிறது. **கல்லா மா அன்னார்** (814) என்பது குறிப்பு. குதிரை, போர்க் களத்திற்குச் செல்லும்போது மிகவும் பயன்படும். அதுவேயன்றி, வேறு பல நிகழ்ச்சி களுக்கும் குதிரைகள் பயன்படுகின்றன. வேகம் நிறைந்த ஆற்றல் குதிரைகளுக்குத் தனிச்சிறப்பு. குதிரைகளுக்கென்று தனிப்பட்ட கல்வியும் உண்டு. அந்த முறைகளைக் குதிரைகளுக்குச் சொல்லி வைத்திருப்பார்கள். எந்தெந்த நேரங்களில் எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்று குதிரைகளுக்குத் தெரியும். அவ்வாறு தெரிந்திராத குதிரையைத்தான் **கல்லா மா அன்னார்** (814) என்று கூறினார். அவ்வாறே கவரிமானும் குறிப்பிடப் படுகிறது. இது உலகில் மிகச் சிறந்த அரிய குணமுள்ளது. **கவரிமா அன்னார்** (969) என்ற குறட்பாவினையும் கண்டறிதல் நல்லது.

**உணவும் உடையும்**

மனிதத் தன்மையும் செயலுமே மனிதனை மனிதனாகச் செய்யும். மக்கள் நிறைந்த சமுதாயம், ஒவ்வொருவரும் மனித குணத்தைப் பெற்று விட்டால் சிறந்து

விளங்கும் என்பதே ஆசிரியர் வள்ளுவனாரின் அடிப்படைக் கருத்து. பிறர்க்குச் சிறிதளவேனும் ஈகை செய்வதையே எண்ணாமல், தானே தனித்து உண்டு வாழ்கின்றானே, அச்செயல் பிச்சை எடுத்து (இரத்தல்) வாழ்வதை விடவும் இழிவானது (229) என்கின்றார். மனிதத் தன்மையின் கடமையறியாதவர்களை வேறு எவ்வாறு குறிக்க முடியும்? பிறர்க்குக் கொடுத்து மகிழும் இன்பத்தைப் புரிந்து மகிழ்தல் வேண்டும். **ஈத்து உவக்கும் இன்பம் அறியார்கொல்** (228) என்று நயமாகவும் சொல்லிக் காட்டுகிறார்.

மனிதத் தன்மையின் அருமைகளில் பிறர்க்குக் கொடுத்து மகிழ்வதும் தானும் நுகர்வதுமான செயல்கள் குறிப்பிடத்தக்கவை. இப் பண்பு மனிதனுக்கு இருக்க வேண்டிய இலக்கணமுமாகும்.

தம்மாலியன்ற அளவுக்குக் கொடுத்து உதவுவதுதான் மனிதப் பிறவியின் கடமை என்பதையறிந்து விட்டால் இவ்வுலகில் துன்பம் என்பதே வராதல்லவா? மக்கள் அனைவரும் இந்நிலைமை நாட்டில் நிலவுமாறு செய்தல் வேண்டுமல்லவா? கொடுப்பதும், நுகர்வதும் இல்லாதவர்கட்குக் கோடி கோடியாக பொருள் இருந்தும் (1005) ஒன்றுமில்லை என்பதாகவே கருதப்படும்.

உலகில் மனிதப் பண்பாடுகள் அனைத்தும் நிறைந்திருப்பவர்களைக் காண்பது அரிதாகும். அவ்வாறு மனித குணங்கள் அனைத்தும் நிறைந்தவர்களுக்குச் **சான்றோர்கள்** என்று பெயர். **குணநலம் சான்றோர் நலனே** (982) என்கிறார். **சான்றாண்மை** என்ற அதிகாரத்தை நன்கு அறிதல் வேண்டும். வடிவத்தில் மட்டும் மனிதத் தோற்றம் கொண்டு மனிதத் தன்மை என்பது அறவே இல்லாதவர்களை **மக்களே போல்வர்** (1071) என்று கூறுகிறார். 'கயமை' அதிகாரத்தைக் கண்டு தெளிக. கயமைக் குணங்களில் ஒன்று 'பொறாமை'. பொறாமை என்பதைப் பற்றி 'அழுக்காறாமை' என்ற அதிகாரம் தெளிவுபடுத்துகிறது.

மற்றவர்கள் நல்லபடியாக உடுத்திக் கொண்டும், உணவுண்டும் இருப்பார்களேயானால் இக் கயவர்கள் அதைப் பார்த்து மனம் தாங்க மாட்டார்கள். அவர்கள் மீது குறைகளை கற்பனை செய்து சொல்லிக்கொண்டு திரிவார்கள். **உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின்** (1079) என்ற குறட்பா கயவர்களின் இழி குணங்களில் ஒன்றினைக் குறிக்கின்றது. **அழுக்காறாமை** என்ற அதிகாரம் பொறாமை என்பதன் தீமையைக் குறித்துக் காட்டும்போது, பிறர்க்குக் கொடுப்பதைப் பார்த்துப் பொறாமைப் படுபவன் உறவும் சுற்றத்தார்களும் உண்பதற்கும் உடுப்பதற்கும் எதுவுமின்றிக் கெடுவார்கள் என்று கூறப்படுகிறது. **உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக் கெடும்** (166). பொறாமைக் குணம் அவ்வளவு கொடிய தீமை தருவதாம். பொறாமைப் படுகிறவனுடைய குடும்பமும் சுற்றமும் இருக்கும் இடம் தெரியாது பூண்டோடு அழியுமாம். பொறாமையில் இருப்பவனின் தீய குணம் அவனைச் சார்ந்தவர்கள் அனைவரையும் அழிக்கும் என்று உணர்த்தப்படுகிறது.

**எலி**

எலியும் நாகமும் ஒரு குறட்பாவில் குறிக்கப்படுகின்றன. ஆட்சியாளர்களுக்கென்றே கூறப்படுகின்ற பகுதியும் இதில் காண்கின்றோம். படை என்பது ஆட்சியாளர்களுக்கு முதன்மையான உறுப்பு. நாட்டைப் பாதுகாப்பதும் அதுவேயாம்.

படை என்பது எண்ணிக்கையில் அதிகமாக இருப்பதால் சிறப்பாகி விடாது. வீர மிகுதியில் தலைசிறந்து விளங்க வேண்டும். வீரமில்லாதார் கூட்டம் 'கும்பல்' என்றுதான் சொல்லப்படுமே யல்லாமல் 'படை' என்ற பெருமைக்குரியதாகாது. உவமை கூறும் ஆசிரியர் எலிகளின் கூட்டத்தைக் காட்டுகிறார் (763). ஒரு நாகம் **உயிர்ப்ப** மூச்சு விட்டாலே கடல் (உவரி) போன்ற எலிப்பகை அழிந்தோடும் என்கிறார். இக் குறட்பா மிக நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டிய பல உண்மைகளைக் கொண்டிருக்கிறது.

நாகம் உயிர்ப்ப என்று இக் குறட்பாவில் கூறியதை நினைவிற்கொண்டு, **உயிர்ப்ப உளர் அல்லர்** (880) என்ற குறட்பாவையும் சிந்தித்தறிதல் வேண்டும். படையினது தன்மையை யும் பகைவரை நடத்தும் முறையையும், இன்ன பிறவற்றையும் அறிந்துணர்தல் வேண்டும்.

படை, பகைமை முதலியவற்றைப் பற்றி ஆசிரியர் மிகப் பெரிய நுட்பமான மறைப் பொருள்களைச் சுருக்கமாக உணர்த்துகிறார்.

### இகல்

**இகல்** எனும் அதிகாரம் மனத்தின் தன்மையைக் கூறுவது. இப் பகுதியில் கூறப் பட்டுள்ளவை பெரும்பாலும் ஆட்சி செய்யும் தலைவனுக்கே வேண்டியவை. பொதுப்பட அனைவர்க்கும் ஏற்புடைத்து என்றும் கொள்ளுதல் வேண்டும்.

பகைமை உண்டாவதற்கு முதற் காரணமாக இருப்பதற்குத்தான் 'இகல்' என்று பெயர். வெளிப்படையாகத் தோன்றாத பகைமையுள்ளம் என்பதே **இகல்** என்பதன் பொருள். ஆதலால், மனத்தில் 'இகல்' உண்டாகாதபடிப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்து கிறார். மன மாறுபாடு அல்லது வேறுபாடு என்றும் இதைக் கொள்ளலாம்.

மனத்தில் 'இகல்' இருந்துவிட்டால் மற்றவர்களுடன் சேர்ந்து வாழ்தல் என்ற எண்ணமே ஒருவனுக்கு உண்டாகாது. இகல் என்பது ஒரு கொடிய நோய் போன்றது. இகல் மனத்தில் முற்றிப் பகையை வளர்த்து மற்றவர்களுக்குப் பகைவனாக்கிவிடும். ஆகவே, மனத்தில் அனைவரோடும் ஒன்றுபட்டு இருக்க வேண்டும். எண்ணத்தைக் கெடுக்கும் 'இகல்' என்பது தோன்றாமல் மனத்தைப் பாதுகாக்க வேண்டும்.

### காதலரைக் குறித்து

காதலியின் உள்ளத்தில் தோன்றுகின்ற இன்பங்கள் மிகப் பல. காதலி என்றென்றும் தனது அருமைக் காதலரை உள்ளத்திலேயே கொண்டவளாகின்றாள். நாயகன் தன்னுடன் இருக்கும்போது இன்பத்தில் மகிழ்ச்சியுடன் அவனைக் குறிப்பிடுகின்றாள். துன்பத்தில் கொடியவர் என்று கூறுகின்றாள். எனினும், எந்நாளும் காதலரைப் பற்றிப் பெருமையாகவும் இனிமையாகவும் பேசுகின்றாள். காதலரைப் பற்றிக் குறிக்கின்ற சில சொற்கள் அவளுடைய பல விதமான இன்ப நிலைகளைக் கூறுகின்றன. சிலவற்றைக் கருதிப் பார்த்தாலும் நாயகியின் சிறப்பு விளங்கும்.

என்பன போன்ற குறிப்புகள் காதலியின் அன்பு உள்ளத்தைக் காட்டுவனவாம். அளவு கடந்த அன்பினைக் கொண்டிருப்பதும், நாயகன் பிரிந்திருந்தபோது வெறுப்பது போலப் பேசுவதும், அந்த நேரத்திலேயே நாயகன் திறத்தினைப் புகழ்ந்து பேசுவதும், ஊடலின்போது அவன் மீது பொய்க் கோபம் காட்டி அவனைச் சிறிது நேரம் இன்பங் கலந்த துன்பத்தில் ஆழ்த்துவதுமான இன்ன பிறவெல்லாம் கற்பு நிறைந்த நாயகியின் மன நிலையைக் கூறுவனவாம்.

**சேற்றில் நரி**

மிகவும் வியப்பான செய்தி ஒன்றை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். மிகப் பெரிய யானையை மிகச் சிறிய நரியொன்று கொன்றுவிடும் என்று கூறுகின்றார். வலிமை நிறைந்த யானையை நோக்கும்போது நரி எவ்வளவோ சிறுமையுடையது. மிகவும் வலிமை நிறைந்து போரிலே பகைவர்களைக் கொன்ற யானை என்ற பெருமையைக் கூறவேண்டியே, **வேல் ஆள் முகத்த களிறு** (500) என்று குறிக்கின்றார். அப்படிப்பட்ட யானை கால் புதைகின்ற அளவுள்ள சேற்றில் அகப்பட்டுக் கொண்டால் நரியால் அது கொல்லப்படும் என்கிறார்.

சேற்றில் நரி நன்றாக ஓடும். யானை அகப்பட்டுக் கொண்டால் நகரமுடியாமல் தவிக்கும். ஆதலால், இடமறிந்து செயல் புரிய வேண்டும். தப்பான இடத்தில் அகப்பட்டுக் கொண்டால் மிகப் பெரியவர்களும் தீமையுற்று அழியவும் நேரிடும்.

**நெருப்பு**

நெருப்பின் மீது உறங்குதல் என்பது நினைக்க முடியாததாகும். மருந்தின் வன்மையினாலும் மற்ற ஒருவகைப்பட்ட பயிற்சிகளாலும் நெருப்பின் மீதுகூட ஒருவேளை உறங்க முடியும் என்று கூறலாம். ஆனால், எவ்விதத்திலும் தூங்கவே முடியாத நிலைமை ஒன்று உண்டு. அதுதான் **கொடுமையான வறுமை. வறுமையில் ஒருவரும் அமைதி காண முடியாது** என்பது அழுத்தமாக உணர வைக்கப்பட்டது. இந்த வறுமையின் கொடுமையை அவ்வளவு துன்பம் தருவதாகக் குறிப்பிடுகிறார். சிந்தித்து அறிதல் வேண்டும். **நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்** (1049) என்று வருகின்ற குறட்பா சிந்திக்கத் தக்கது. வறுமையுற்றவர்களுக்கு ஆதரவு தருதல் மனிதத் தன்மையாகும். நெருப்பை **'எரி'** என்று கூறுவதும் உண்டு.

ஒருவன் மற்றவர்களுக்குச் செய்யும் துன்பத்திற்கு 'எரி'யினை உவமையாகக் காட்டி அறவுரை கூறுகின்றார். எக்காலத்திலும் எக்காரணம் கொண்டும், கோபமே வராதிருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டியது, நோன்பு நோற்றல் என்கின்ற தவம் செய்பவர்களான அருளாளர்களின் நீங்காக் கடமையாகும். உலகியலில் பல துறைப்பட்ட முறைகளில் வாழ்கின்ற இல்லறக் கடமையாளர்களுக்கு இக்குணம் எக்காலத்திலும் இருத்தல் இயலாது. ஆகவே, **வெகுளாமை** என்கிற நோன்பு துறவறப்பகுதியில் கூறப்படுகிறது. கூடியவரை அனைவரும் வெகுளிக்கு (கோபத்திற்கு) இரையாகாமல் இருப்பது மிகவும் நல்லது.

துன்பத்தின் கொடுமையனைத்தையும் பொறுத்துக் கொள்ளுதல் என்பது தவம் செய்பவர்களுக்கு இன்றியமையாதது. இதை **உற்ற நோய் நோன்றல்** (261) என்று குறித்துக் காட்டுகிறார். நெருப்பினை 'எரி' என்று கூறிய ஆசிரியர், **இணர் எரிதோய்வன்ன** (308) என்கிறார். குறட்பாவை நன்கு அறிதல் வேண்டும். அறிவு நிறைந்தவர்களின் ஆற்றல்களில் ஒன்று, பின்னர் வருவதையும் அறிந்து கொள்ளுதலாகும். **அறிவுடையார் ஆவதறிவார்** (427) என்பதனைக் கண்டு தெளிக.

வருவதற்கு முன்பேயே காத்துக் கொள்ளாதவன் வாழ்க்கை வைக்கோல் குவியலில் பட்ட நெருப்பு (எரி) போல ஆகும் என்கின்றார். பிறகு காத்துக் கொள்ள முடியாமல் போகும் என்று விளக்கப்படுகிறது. ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய உண்மையை **'எரிமுன்னர் வைத்தூறு'** (435) என்றுவரும் குறட்பா பகர்கின்றது. குறட்பாவில் காணப்படும் ஒவ்வொரு சொல்லும் நன்கு கருதிப் பார்த்தற்கு உரியதாகும்.

பெரியவர்களுக்குத் தீமை செய்தல் தனக்கே உறுதியாக தீமையைச் செய்து கொள்ளுவதாக முடியும். தவம் செய்து முனிவர்களாக இருக்கும் பெரியார்களுக்குத் தீமை செய்பவன் தானே அழிவான். அப்படிப்பட்டவர்களுக்குத் தீமை செய்தவன் தப்பிக்கவே முடியாது என்பதறிக. இவ்வுண்மையைக் கூறவரும்போது **எரியால் சுடப் படினும்** (896) என்று எடுத்துக் காட்டு ஒன்றை அருமையாகக் கூறுகிறார்.

நோன்பு நோற்றுத் தவநிலை யடைந்த பெரியார்களிடம் நடந்து கொள்ள வேண்டிய முறை (896) நன்கு புரிந்து கொள்ளுமாறு செய்யப்பட்டது. 'எரி' என்பது பல கருத்துக்களை உணர வைப்பதென்பது சிந்தனைக்குரியதாகும். நெய்யை ஊற்றி எரியை அவித்துவிட முடியுமா? நிகழ்கின்ற நிகழ்ச்சி யொன்றினைக் குறித்து எரியினை இவ்வாறு அவித்துவிட முடியாது என்று கூறப்படுகிறது. இக்குறட்பா (1148) காமத்துப்பாலில் காணப்படுகிறது. நயமான கருத்து ஆழ்ந்த பொருளைக் கொண்டு அமைந்துள்ளது.

நெருப்பு, எரி என்ற பொருளிலே 'தீ' என்பதும் கூறப்படுகிறது. 'தீ' என்பது பல அரிய கருத்துக்களைச் சொல்கின்ற குறட்பாக்களில் காணப்படுகிறது.

நாவினால் தீய சொற்களைக் கூறுவது மிகவும் தீமை பயக்கும். ஒருமுறை கூறப் பட்டாலும் அது எப்போதும் மனத்தில் ஆறாமல் நினைவு படுத்திக் கொண்டே இருக்கும். **நாவினால் சுட்ட புண்** (129) என்று கூறப்படுகிறது. தீயினால் சுடப்பட்டால் அது ஆறிவிடும். மிக மிகச் சிந்தித்தே பேசுதல் மனிதத் தன்மைக்கு அடையாளமாகும்.

தீ என்பது குறிப்பிட்ட இடத்தைத்தான் அழிக்கும். ஆனால், தீமையான செயல்கள் நினைக்க முடியாத பற்பல தீமைகளை யெல்லாம் உண்டாக்கிவிடும். இக்குறட்பாவில் (202) ஒவ்வொரு சொல்லும் நினைக்க நினைக்க அச்சுறுத்துவனவாக இருக்கின்றன.

எந்தத் தொழிலையும் முற்றிலும் முடித்து விடவேண்டும். அது போல பகைவர் ஆட்சியை முற்றிலுமாக ஒழிக்க வேண்டும். இதில் மீதியாக விட்டு வைத்தால், மீதியாக வைக்கப்பட்ட நெருப்பு (தீ) பெருகி வளர்ந்து (674) கெடுப்பது போல் ஆகிவிடும் என்று அறிவிக்கின்றார் தீ சிறிதாக இருந்தாலும் சிறிது நேரத்தில் பெரிதாகிவிடும் என்பது குறிப்பு.

தீயினிடத்தில் குளிர் காய்வது பழக்கமாகும். குளிர் காய்வது போல் பெரியவர்களிடம் பழக வேண்டும். 'மன்னரைச் சேர்ந்தொழுகல்' என்ற அதிகாரத்தில் ஒரு குறட்பா அழகாகக் கூறுகிறது. **தீக் காய்வார் போல்க** (691) என்ற குறட்பா கண்டு தெளிதற்குரியது.

தீ என்பதற்குப் பசி என்றும் குறிப்பாக உணர்த்தப்படுகிறது. அதாவது ஒருவன் பசித் தீயின் அளவு கண்டு உண்ணுதல் வேண்டும். **தீ அளவு** (947) என்று குறட்பா கூறுகின்றது. அளவு என்பது நன்கு சிந்திக்கத் தக்கது. காமத்துப் பாலில் 'தீ' என்பது நயமான இடங்களில் குறிப்பிடப்படுகின்றது.

**தீயாண்டுப் பெற்றான் இவள்** (1104), **காமநோய்போல் விடில் சுடல் ஆற்றுமோ தீ** (1159) என்ற குறட்பாக்கள் கற்றுணர்ந்து அறியத் தக்கன. **'தீத்துரீஇயற்று'** (929) என்ற குறட்பாவும் சிந்தனைக் குரியது. **கள்ளுண்ணாமை** என்ற அதிகாரத்தில் இது காணப்படுகின்றது. தீப்பந்தம், என்று இது கூறப்படும் தீயினைக் கொண்டே தீமை நீங்கும் வழிகளைக் கூறுகிறார் ஆசிரியர்.

நாயகி தன்னுடைய மனத்தின் தன்மையை அழகாகவும் நயமாகவும் கூறுகிறாள். 'தீ'யைப் பயன்படுத்திக் குறட்பா (1260) நன்கு அமைந்துள்ளது. நாயகனிடம் ஊடல் செய்து கொண்டு, அந்த ஊடலிலே (சிறு பிணக்கு) நிலைத்து நிற்கின்ற மனஉறுதி தனக்கு இல்லை என்கிறாள். அவளுடைய நெஞ்சம் அவ்வளவு இளகிய தன்மை உடையதாம். ''நிணம்'' என்பதற்குக் கொழுப்பு என்பது பொருள். நிணத்தைத் தீயில் போட்டால் அது என்னவாகும் என்பது நன்றாகத் தெரியும். இதையே நாயகிசொல்கின்றாள். **நிணம் தீயிலிட்டன்ன நெஞ்சினார்** (1260) என்று உருகுகின்ற தன்மை தீயினைக் காட்டி உணர்த்தப்பட்டது இச் சொற்றொடர்.

**அன்னப் பறவை**

காதலன் காதலியை மிகவும் சிறப்பாகக் குறித்துப் பேசுகின்றான். பொதுவாக அன்னத்தின் நடை பெண்களின் நடைக்கு உவமையாகக் கூறுவதுண்டு. 'அன்னநடை' என்பது உலக வழக்கு. காதலன் தன்னுடைய காதலியின் அடி (பாதம்) மிகமிக மென்மையானது என்று கூறுகின்றான். இங்குக் கற்பனை மிக அதிகமாகத் தென்படுகின்றது.

அன்னப் பறவை மிகவும் மென்மையான பறவை. அதனுடைய இறகு (தூவி) மிகமிக மென்மையானது. அனிச்ச மலரும் மென்மைத் தன்மைக்கே பேசப்படுவதாகும். அன்னப் பறவையின் சிறகும் அனிச்ச மலரும் அவளுடைய அடிகளுக்கு (பாதங்களுக்கு) நெருஞ்சிப் பழம் போலத் துன்பம் செய்யும் என்றால், அவளுடைய அடிகள் எத்தகைய மென்மைத் தன்மை உடையவையாக இருக்குமென்பதை நாம் உணர்தல் வேண்டும்.

'மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம் (1120) என்பது இக்கருத்தினை மிகவும் அழகுற எடுத்துக் காட்டுகின்றது. அனிச்ச மலரைப் பற்றி ஆசிரியர் பற்பல இடங்களில் கூறி விளக்கம் செய்கின்றார்.

**அனிச்சப்பூ கால் களையாள் பெய்தாள்** (1115), **மோப்பக் குழையும் அனிச்சம்** (90) **நன்னீரை வாழி அனிச்சமே** (1111) முதலியவை அனிச்சப் பூவினைக் குறிக்கின்ற குறட்பாக்கள். அனிச்சம் என்பது மிகவும் மென்மைத் தன்மையான மலரினைக் குறிக்கும். அதாவது மலர்ந்து சிறிது நேரம்கூட இருக்க முடியாத மலராகும். சிறிது காற்றுப் பட்டாலும் உடனே வாடிவிடும் மென்மையுடைய மலர் இது.

**பதடிகள்.**

ஊக்கமும் முயற்சியும் உண்டாகுமாறு பயனுள்ள சொற்களைப் பேசுவதில் நாட்டமில்லாதவர்களையே **பதடிகள்** என்று கூறுகின்றார். பதர்கள் என்றும் கூறப்படுபவர். நெல்லில் பதர் இருப்பது போலவே, இவர்கள் மக்களிடையே இருக்கும் பதர்களாவர். இவர்கள் பயனற்ற பேச்சுகள் பேசுவதில் மிகவும் விருப்புற்று இருப்பார்கள். இவர்கள் நல்ல பயனுள்ள சொற்களைப் பேசுதற்கே தெரியாதவர்கள்.

ஆசிரியர் திருவள்ளுவனார் பயனில்லாத சொற்களைப் பேசும் பழக்கம் கொண்டவர்களை மிகவும் கண்டித்துக் கூறுகின்றார். சிலர் பொன்னான காலத்தைப் பயனில்லாத வார்த்தைகளைப் பேசியே கழிப்பார்கள்.

ஆராய்ந்தறிந்த அறிவு படைத்தவர்கள் இவ்வாறு பேச மாட்டார்கள். பயனில்லாத கருத்துக்களைப் பேசுவதோடு அல்லாமல் அதையே விரிவாகப் பல முறைகளில் பேசிக் கொண்டிருப்பார்கள். மனிதத் தன்மைக்குப் புறம்பான இப்பழக்கம் உள்ளவர்கள் நிறைந் திருக்கும் சமுதாயம் முன்னேற்றமடைவது கடினமாகும். அப்படிப்பட்டவர்களை மக்கள் என்று கூறாது, **மக்களுள் பதடி எனல்** (196) என்று கூறுகின்றார். **'நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்'** (648) என்பதனை நன்கு சிந்தித்தல் வேண்டும்.

பயனில்லாத வார்த்தைகளையே பேசிக் கொண்டிருப்பவன் மக்களால் ஏளனமாகப் பேசப்படுவான் என்று அறிவுறுத்துகின்றார். பண்பு நிறைந்த மக்கள் பயனில்லாத சொற்களைப் பேசவே மாட்டார்கள். பயனில்லாத சொற்களைப் பேசிப் பழகுகின்றவன் மடியுடையவனாவான். **'மடியின்மை'** என்ற அதிகாரம் சிந்தனைக்குரிய ஒன்று.

**'சொல்லுக சொல்லில் பயனுடைய'** (200) என்று குறித்துக் காட்டுகிறார். பயனுடைய சொற்களைப் பேசுகின்றவன் தனக்கும் நாட்டிற்கும் பயனுடையவனாவான். **பயனுடையார் பண்பு பாராட்டும் உலகு** (998) என்கின்ற மறைமொழிகள் பன்முறையும் சிந்திக்கத்தக்கன. நன்மைக்குப் பகையானவன் என்பதைப் பயனில்லாத அவனுடைய சொற்களே காட்டிவிடும். **நயனிலன் என்பது சொல்லும்** (193) என்பது கருதத் தக்கது. **'காட்டும் குலத்திற் பிறந்தார் வாய்ச் சொல்'** (959) என்பது சிறப்பான உண்மையை வெளிப்படுத்தும்.

எண்ணத்தை வெளிப்படுத்துகின்ற சொற்கள் செயலுக்கும் முதற் காரணமாக உள்ள தென்பது தெளிந்த உண்மை. ஆதலால்தான் மனிதப் பிறவியெடுத்தும் மக்கள் என்ற பெயருக்கு உரிமையில்லாதனைப் 'பதடி' என்று கூறுகிறார். **பயனில சொல்லாமை** என்ற அதி காரம் பயனற்ற மக்களாக வாழ்பவர்களின் வீணான பேச்சு முறைகளை எடுத்துக் காட்டுகிறது. **சொல்லுக சொல்லிற் பயனுடைய** (200) என்ற குறட்பாவும் **சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல்** (645) என்ற குறட்பாவும் ஒப்பிட்டு அறிதற்கு உரியனவாம்.

சொல்லுகின்ற சொற்கள் பயன்படுபவையாக இருக்க வேண்டும் என்று மிகுதியும் வற்புறுத்திக் கூறுகிறார். ஆறறிவு படைத்தவன் பயனுள்ளவற்றையே சொல்லுதலும் செய்தலும் வேண்டும்; அதுவே மனிதத் தன்மையுடையவன் என்பதையும் காட்டும் என்று— திருவள்ளுவர் தெளிவாகக் குறித்துக் காட்டியுள்ளார்.

## பாயிர இயல்

### 1. கடவுள் வாழ்த்து

[இறைவனது பண்புகள், வழிபாடு, பயன் முதலியவற்றைக் கூறுதல்.]

உலகில் வழங்கிவரும் எழுத்துக்கள் எல்லாம் ஒலிவடிவான 'அகர'மாகிய முதலை உடையன; அதுபோல, உலகம் ஆதிபகவன் ஆகிய முதலை உடையது.

அகரம் முதல எழுத்து எல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு.

**1 அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு.** 1

எழுத்தெல்லாம் — உலகில் வழங்கிவரும் எழுத்துக்களெல்லாம், அகரம் — ஒலிவடிவமான அகர மாகிய, முதல — முதலை உடையனவாகும்; [அதுபோல] உலகு — உலகம், ஆதிபகவன் — ஆதிபகவனாகிய, முதற்று — முதலை உடையதாகும்.

'அ' என்றது, ஒலிவடிவான எழுத்தினை என்க.

எல்லா நூல்களையும் கற்றவனுக்கு அக்கல்வி அறிவால் உண்டான பயன் என்ன வென்றால், தூய அறிவினன் — மெய்யுணர்வினன் — ஆகிய இறைவனுடைய நல்ல அடிகளைத் தொழுதல் ஆகும்.

கற்றதனால் ஆய பயன் என்கொல் வால்அறிவன் நல்தாள் தொழார் எனின்.

**2 கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்** 2

வால்அறிவன் — மெய்யுணர்வினை உடையவனது, நல்தாள் — நல்ல அடிகளை, தொழாஅர் — தொழவில்லை, எனின் — என்றால்; கற்றதனால் — நூல்கள் பல கற்றதனால், ஆய — உண்டான, பயன் — பயனாவது, என் — யாது?

உள்ளக்கமலத்தில் — மனத்தில் சென்றிருப்பவனான இறைவனது மாட்சிமைப்பட்ட அடிகளை எப்போதும் நினைப்பவர்கள், உலகில் அழிவின்றி வாழ்வார்கள்.

மலர்மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார் நிலமிசை நீடு வாழ்வார்.

**3 மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார்.** 3

மலர்மிசை — நெஞ்சமாகிய மலரில், ஏகினான் — சென்றவனது, மாண் — சிறப்பான, அடி — அடிகளை, சேர்ந்தார் — இடைவிடாது நினைப்பவர்கள், நிலமிசை — உலகத்தில், நீடு — நிலைத்த பெருமையுடன், வாழ்வார் — வாழ்வார்கள்.

விருப்பும் வெறுப்பும் இல்லாதவனான இறைவனின் அடிகளை நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு, எக்காலத்திலும் துன்பமே உண்டாகாது.

வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல.

**4 வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல.** 4

வேண்டுதல் — விரும்புதலும், வேண்டாமை — வெறுத்தலும், இலான்அடி — இல்லாதவனுடைய அடிகளை, சேர்ந்தார்க்கு — எப்போதும் நினைப்பவர்களுக்கு, யாண்டும் — எக்காலத்திலும், இடும்பை — துன்பங்கள், இல் — இல்லாமற் போகும்.

அஞ்ஞானத்தினால் வருகின்ற நல்வினை தீவினையாகிய இரண்டும், இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழினை விரும்பினவர் இடத்தில் ஏற்படுவதில்லை.

இருள் சேர் இரு வினையும் சேரா இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு.

**5 இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.** 5

இறைவன் — இறைவனது, பொருள்சேர் — மெய்ம்மை சேர்ந்த, புகழ் — புகழினை, புரிந்தார் மாட்டு — விரும்பினவரிடத்து; இருள் — அஞ்ஞானம்பற்றி, சேர் — வருகின்ற, இருவினையும் — நல்வினை தீவினையாகிய இரண்டும், சேரா — சேர்வதில்லை.

**மெய்**, வாய், கண், மூக்கு, செவியாகிய ஐந்து பொறிகளின் வழியாக வரும் ஆசைகளை அறுத்தவனுடைய மெய்யான ஒழுக்க வழியில் நின்றவர்கள், எக்காலத்திலும் ஒரு தன்மையராய் வாழ்வார்கள்.

பொறி வாயில் ஐந்து அவித்தான் பொய் தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடு வாழ்வார்.

**6 பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ் வார்.** 6

பொறி — மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய பொறிகள் ஐந்தின், வாயில் — வழியாக உடைய, ஐந்து — ஐந்து ஆசைகளையும், அவித்தான் — அறுத்தவனுடைய, பொய்தீர் — பொய்யில்லாத [மெய்யான], ஒழுக்க — ஒழுக்கமான, நெறி — வழியில், நின்றார் — வழுவாது நின்றவர்கள், நீடு — எக்காலத்திலும் ஒரு தன்மையராய், வாழ்வார் — வாழ்வார்கள்.

**தனக்கு** ஈடாக எதனையும் ஒப்பிட்டுக் கூற முடியாதவனுடைய தாள்களை நினைப்பவர்களுக்கு அல்லாமல், மற்றவர்களால் மனத்தில் உண்டாகும் துன்பங்களை நீக்க முடியாது.

தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்
[மனக் கவலை மாற்றல் அரிது.

**7 தனக்குஉவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்**
**மனக்கவலை மாற்றல் அரிது.** 7

தனக்கு — தனக்கு, உவமை — ஒப்பு, இல்லாதவன் — இல்லாதவனுடைய, தாள் — அடிகளை, சேர்ந்தார்க்கு — நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு, அல்லால் — அல்லாமல் [பிறருக்கு] மனக்கவலை — மனக்கவலைகளை, மாற்றல் அரிது — நீக்குதல் முடியாது.

அறக்கடலாகிய இறைவனது அடிகளாகிய தெப்பத்தினைச் சார்ந்தவர்க்கு அல்லாமல், மற்றவர்களுக்குப் பொருள், இன்பம் ஆகிய கடல்களை நீந்திக் கடத்தல் முடியாததாகும்.

அற ஆழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் பிற ஆழி நீந்தல் அரிது.

**8 அறஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்**
**பிறஆழி நீந்தல் அரிது.** 8

அறஆழி — அறக்கடல் ஆகிய, அந்தணன் — இறைவனது, தாள்சேர்ந்தார்க்கு — அடிகளை நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு, அல்லால் — அல்லாமல், [மற்றவர்களுக்கு] பிறஆழி — ஏனைய பொருள், இன்பம் என்னும் கடல்களை, நீந்தல் அரிது — நீந்திக் கடத்தல் முடியாது.

தத்தமக்குரிய புலன்களைக் கொள்ளுதல் இல்லாத மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளைப் போல அறிந்துணர்வதற்குரிய எளிமையான குணங்களையுடைய இறைவனது தாள்களை வணங்காத் தலைகளும் பயன் படுதலுடையன அல்லவாம்;

கோள்இல் பொறியின் குணம் இலவே எண் குணத்தான் தாளை வணங்கா தலை.

9 கோள்இல் பொறியின் குணம்இலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. 9

கோள் — கொள்ளுதல், இல் இல்லாத, பொறியின் — ஐம்பொறிகள் போல, குணம் இலவே — பயன்படுவன அல்ல, [எவையென்றால்] எண்குணத்தான் — சிந்தித்து உணர்தற்கு எளிமையான குணங்களையுடையவனது, தாள் — அடிகளை, வணங்காத் தலை — வணங்காத தலைகள்.

இறைவன் அடிகள் என்னும் தெப்பத்தைச் சேர்ந்தவர்கள், பிறவியாகிய கடலை நீந்திக் கடப்பர். அவ்வாறு சேராதவர்கள் [நினைத்திருக்காதவர்கள்] நீந்த மாட்டார்கள்; அதனுள் அழுந்துவார்கள்.

பிறவி பெரும்கடல் நீந்துவர் நீந்தார் இறைவன் அடி சேராதார்.

10 பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். 10

இறைவன் — இறைவனுடைய, அடி — அடிகளை, [நினைத்துக் கொண்டிருப்பவர்கள்] பிறவி — இப்பிறவியாகிய, பெரும் — பெரிய, கடல் — கடலினை, நீந்துவர் — நீந்திக் கடப்பார்கள். சேராதார் — நினைக்காதவர்கள், நீந்தார் — கடக்க மாட்டார்கள்.

## 2. வான் சிறப்பு

[மழையினது அருமை, பெருமை, பயன் முதலின.]

மழை இடைவிடாமல் பெய்வதால் உலகிலுள்ள உயிர்கள் நிலைபெற்று வருகின்றன. ஆதலால், அம்மழையே அமிழ்தம் என்று அறியப்படும் தன்மை உடையதாகும்.

வான் நின்று உலகம் வழங்கி வருதலான் தான் அமிழ்தம் என்று உணர்தல் பாற்று.

1 வான்நின்று உலகம் வழங்கி வருதலான்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று. 11

வான்நின்று — மழையானது நீங்காமல் பெய்து வருவதால், உலகம் — உலகிலுள்ள உயிர்கள், வழங்கி வருதலான் — நிலைபெற்று இருந்து வருகின்றன, [ஆதலால்] தான் அமிழ்தம் — அம்மழைதான் அமிழ்தமாகும், என்று — என்பதாக, உணரல் — தெரிந்து கொள்ளவேண்டிய, பாற்று — தன்மையினை உடையதாகும்.

உண்பவர்களுக்கு நல்ல உணவுகளை உண்டாக்கிக் கொடுப்பதும், தானும் உண்பவர் களுக்கு உணவாக இருப்பதும் மழையே யாகும்.

துப்பார்க்கு துப்பு ஆய துப்பு ஆக்கி துப்பார்க்கு துப்பு ஆயதும் மழை.

**2 துப்பார்க்குத் துப்புஆய துப்புஆக்கித் துப்பார்க்குத்**
**துப்புஆய தூஉம் மழை. 12**

துப்பார்க்கு — உணவு உண்பவர்களுக்கு, துப்பு ஆய — நல்லதான, துப்பு — உணவுகளை, ஆக்கி — உண்டாக்கி, துப்பார்க்கு — [உணவுகளை] உண்பவர்களுக்கு, துப்பு — தானும் உணவு, ஆய தூஉம் — ஆவதும், மழை — மழையே யாகும்.

மழையானது வேண்டுங் காலத்தில் பெய்யாமல் இருந்துவிட்டால் கடலால் சூழப்பட்ட இவ் வுலகில் பசியானது நிலைத்துநின்று எல்லா உயிர்களையும் துன்புறுத்தும்.

விண் இன்று பொய்ப்பின் விரி நீர் வியன் உலகத்துள் நின்று உடற்றும் பசி.

**3 விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்(து)**
**உள்நின்று உடற்றும் பசி. 13**

விண் — மழை, இன்று — பெய்யாதபடி, பொய்ப்பின் — பொய்த்துவிடுமானால், விரிநீர் — கடலால் சூழப்பட்ட, வியன் — அகன்ற, உலகத்துள் — உலகத்தினுள், பசிநின்று — பசி நிலையாக நின்று, உடற்றும் — எல்லா உயிர்களையும் துன்புறுத்தும்.

மழை யென்கின்ற வருவாய் தன்னுடைய பயனைத் தராவிட்டால் உழவர்கள் ஏரினால் உழமாட்டார்கள்.

ஏரின் உழார் உழவர் புயல் என்னும் வாரி வளம் குன்றிக்கால்.

**4 ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்**
**வாரி வளம்குன்றிக் கால். 14**

உழவர் — உழவர்கள், ஏரின் — ஏரினால், உழாஅர் — உழவுத் தொழிலினைச் செய்ய மாட்டார்கள், [எப்போதென்றால்] புயல் — மழை, என்னும் — எனப்படும், வாரி — வருவாய், வளம் — தனது வளமாகிய பயன், குன்றிக்கால் — குறைந்து விட்டால்;

பெய்யாமல் மக்களைக் கெடுப்பதும், கெட்டார்க்குத் துணையாய் நின்று, பெய்து காப்பாற்றுவதும் ஆகிய எல்லாம் மழையேயாகும்.

கெடுப்பதும் கெட்டார்க்கு சார்வாய் மற்று ஆங்கே எடுப்பதும் எல்லாம் மழை.

5 கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை. 15

கெடுப்பதூஉம் — பெய்யாமல் மக்களைக் கெடுப்பதும், கெட்டார்க்கு — [அதனால்] கெட்ட மக்களுக்கு, சார்வாய் — துணையாக நின்று பெய்து, எடுப்பதூஉம் — காப்பாற்றி உயர்த்துவதும், எல்லாம் — ஆகிய எல்லாம் [செய்யவல்லது], மழை — மழையேயாகும்.

மேகத்திலிருந்து மழைத்துளிகள் வீழாவிட்டால் பசும்புல்லினது தலையையும் காணுதல் அரிதாகிவிடும்.

விசும்பின் துளி வீழின் அல்லால் மற்று ஆங்கே பசும்புல் தலை காண்பு அரிது.

6 விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது. 16

விசும்பின் — மேகத்திலிருந்து, துளி — மழைத் துளிகள், வீழின் அல்லால் — வீழாமற்போனால், மற்று ஆங்கே — அப்பொழுதே, பசும் — பசுமையான, புல் — புல்லினது, தலை — தலையையும், காண்புஅரிது — பார்த்தல் முடியாததாகி விடும்.

மேகம் கடல்நீரைக் குறைத்து மீண்டும் அக்கடலில் மழை பெய்யாவிட்டால் பெரிய கடலும் தன்னுடைய தன்மையில் குறைந்துவிடும்.

நெடும் கடலும் தன் நீர்மை குன்றும் தடிந்து எழிலி தான் நல்காது ஆகி விடின்.

7 நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்துஎழிலி
தான்நல்காது ஆகி விடின். 17

நெடும் — நீண்ட பெரிய, கடலும் — கடலும், தன் — தன்னுடைய, நீர்மை — தன்மையில், குன்றும் — குறைந்துவிடும், எழிலிதான் — மேகம்தான், தடிந்து — அக்கடல் நீரைக் குறைத்து, நல்காதாகிவிடின் — அதனிடத்தில் மழை பெய்யாமல் இருந்து விட்டால்;

மழை பெய்யாவிட்டால் வானவர்களுக்கும் இவ்வுலகில் நடைபெறுகின்ற சிறப்பான திருவிழா வோடு கூடிய பூசையும் நடக்காது.

சிறப்பொடு பூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

**8 சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.** 18

வானோர்க்கும் — வானவர்களுக்கும், ஈண்டு — இவ்வுலகத்தில், சிறப்பொடு — சிறப்பான திருவிழாக்களுடனே கூடிய, பூசனை — பூசை, செல்லாது — நடக்காது, [எப்போதென்றால்] வானம் — மழையானது, வறக்குமேல் — பெய்யாவிட்டால்;

மழை பெய்யாவிட்டால் அகன்ற இவ்வுலகில் தானம் செய்வதும் தவம் செய்வதும் ஆகிய இரண்டு அறமும் நடைபெறாது.

தானம் தவம் இரண்டும் தங்கா வியன் உலகம் வானம் வழங்காது எனின்.

**9 தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்**
**வானம் வழங்காது எனின்.** 19

வியன் — அகன்ற, உலகம் — இவ்வுலகத்தில், தானம் — தானம் செய்வதும், தவம் — தவம் செய்வதும், இரண்டும் — ஆகிய இரண்டும், தங்கா — நடைபெறாது, [எப்போதென்றால்] வானம் — மழையானது, வழங்காது — பெய்யாது, எனின் — என்றால்;

எப்படிப்பட்ட மேலானவர்களுக்கும் நீரில்லாமல் உலகியல் நடைபெறாது. மழையில்லாமல் அந்நீர் இடைவிடாமல் ஒழுகும் ஒழுக்கும் அமையாது.

நீர் இன்று அமையாது உலகு எனின் யார் யார்க்கும் வான் இன்று
[அமையாது ஒழுக்கு.

**10 நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்**
**வான்இன்று அமையாது ஒழுக்கு.** 20

யார் யார்க்கும் — எவ்வகைப்பட்ட மக்களுக்கும், நீர் இன்று — நீரில்லாமல், உலகு — உலக வாழ்க்கையானது, அமையாது எனின் — நடைபெறாது ஆயின், [அது போல] ஒழுக்கு — மழை நீர் இடைவிடாமல் ஒழுகும் ஒழுக்கும், வான் இன்று — மழையானது இல்லாவிட்டால், அமையாது — நடைபெறாது.

## 3. நீத்தார் பெருமை

**[முற்றுந்துறந்த முனிவரது பண்பு, ஆற்றல், சிறப்பு முதலியன]**

சீரிய ஒழுக்கத்தில் நின்று துறந்தவர்களது பெருமையினை மேலான பொருள்கள் எல்லாவற்றுள்ளும் மேலானதென்று விரும்புவது நூல்களினுடைய துணிபாகும்.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து வேண்டும் பனுவல் துணிபு.

**1 ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவல் துணிபு. 21**

ஒழுக்கத்து — சீரிய ஒழுக்கத்திலே நிலைத்து, நீத்தார் — துறந்தவரது, பெருமை — பெருமையினை, விழுப்பத்து — உயர்வான பொருள்கள் எல்லாவற்றுள்ளும், [உயர்ந்ததென்று] வேண்டும் — விரும்புவதாகும், பனுவல் — நூல்களது, துணிபு — துணிவான உறுதிப்பாடு என்பதாம்.

முனிவர்களது பெருமையினை எண்ணிப் பார்த்து இவ்வளவென்று கூறப்புகுந்தால் அச்செயல் இவ்வுலகில் இதுவரை இறந்தவர்களை எண்ணியறிய முயற்சித்தது போன்றதாகும்.

துறந்தார் பெருமை துணைக் கூறின் வையத்து இறந்தாரை எண்ணிக்கொண்டு அற்று.

**2 துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று. 22**

துறந்தார் — ஆசைகளையெல்லாம் விட்ட முனிவரது, பெருமை — பெருமையினை, துணைக் கூறின் — எண்ணிக் கணக்கிட்டு இவ்வளவென்று சொல்லப் போனால், வையத்து — இந்த உலகில், இறந்தாரை — இதுவரை இறந்தவர்களை, எண்ணிக்கொண்டு — எண்ணிக் கணக்கிட்டுக் கொண்டது, அற்று — போன்றதாகும்.

பிறப்பு, வீடு என்னும் இரண்டினது வகைகளை அறிந்து துறவறத்தினை மேற் கொண்ட முனிவர்களின் பெருமையே உலகத்தில் சிறந்ததாகும்.

இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார் பெருமை பிறங்கிற்று உலகு.

**3 இருமை வகைதெரிந்து ஈண்டறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற்று உலகு. 23**

இருமை — பிறப்பு, வீடு என்னும் இரண்டு, வகை — இன்பதுன்ப வகைகளை, தெரிந்து — அறிந்து தெரிந்து, ஈண்டு — இப்பிறப்பில் அறம் பூண்டார் — துறவறத்தினை மேற் கொண்டவரது, பெருமை — பெருமையே, உலகு — உலகத்தில், பிறங்கிற்று — சிறந்ததாகும்.

அறிவு என்னும் அங்குசத்தினால் பொறிகளாகிய ஐந்து யானைகளையும் ஆசைகளில் செல்லாமல் காப்பவன் எல்லாவற்றினும் மேலான வீடு என்னும் பேரின்ப நிலத்திற்கு ஒரு வித்து ஆவான்.

உரன் என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான் வரன் என்னும்
[வைப்பிற்கு ஓர் வித்து.

**4 உரன்என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரன்என்னும் வைப்பிற்குஓர் வித்து.** 24

உரன் — திண்மையான அறிவு, என்னும் — என்கின்ற, தோட்டியான் — அங்குசத்தினால், ஓர் ஐந்தும் — பொறிகளாகிய ஐந்து யானைகளையும், காப்பான் — அடக்கிக் காப்பவன், வரன் என்னும் — எல்லாவற்றினும் மேலானதென்று கூறப்படும், வைப்புக்கு — பேரின்ப நிலத்திற்கு, ஓர் வித்து — ஒரு விதையாவான்,

புலன்களில் செல்லுகின்ற ஐந்து ஆசைகளையும் அடக்கியவனுடைய ஆற்றலுக்கு அகன்ற வானத்தில் உள்ளவர்களின் தலைவனான இந்திரனே சான்றாவான் [சாட்சியாவான்].

ஐந்து அவித்தான் ஆற்றல் அகல் விசும்பு உளார் கோமான் இந்திரனே சாலும் கரி.

**5 ஐந்துஅவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்**
**இந்திரனே சாலும் கரி.** 25

ஐந்து — மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தின் வழியில் வரும் ஐந்து ஆசைகளையும், அவித்தான் — அடக்கியவனது, ஆற்றல் — வலிமைக்கு, அகல் — அகன்ற, விசும்புளார் — வானத்திலுள்ளவர்களுடைய, கோமான் — தலைவனான, இந்திரனே — இந்திரனே, சாலும் — அமைந்து உணர்த்தும், கரி — சாட்சி [சான்று] ஆகும்.

செய்தற்கு அருமையான செயல்களைச் செய்பவர்கள் பெரியோர்கள் ஆவார்கள். செய்வதற்கு அரிய செயல்களைச் செய்ய மாட்டாமல் எளியவற்றைச் செய்பவர்கள் சிறியோர்களாவார்கள்.

செயற்கு அரிய செய்வார் பெரியர் சிறியர் செயற்கு அரிய செய்கலாதார்.

**6 செயற்குஅரிய செய்வார் பெரியர் சிறியர்**
**செயற்குஅரிய செய்கலா தார்.** 26

செயற்கு அரிய — செய்வதற்கு அருமையானவற்றை, செய்வார் — செய்பவர்கள், பெரியர் — பெரியோர்கள் ஆவார்கள், செயற்கு — செய்வதற்கு, அரிய — அருமையான செயல்களை, செய்கலாதார் — செய்ய முடியாதவர்கள், சிறியர் — சிறியோர்களாவார்கள்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், என்ற ஐந்தின் கூறுபாட்டினை ஆராய்பவனின் [முனிவரின்] அறிவினிடத்தே உள்ளதாம் உலகம்.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின் வகை தெரிவான்கட்டே உலகு.

**7 சுவைஒளிஊறு ஓசை நாற்றம் என்றைந்தின்**
**வகைதெரிவான் கட்டே உலகு. 27**

சுவை — சுவைத்தலும், ஒளி — ஒளியும், ஊறு — தீண்டுதலும், ஓசை — ஓசையும், நாற்றம் — மணமும், என்று — என்று வரையறுக்கப்பட்ட, ஐந்தின் வகை — ஐந்தினது வகைகளை, தெரிவான்கட்டே — தெரிந்துணர்பவன் அறிவின்கண்ணதே, உலகு — உலகம் உள்ளதாம்.

பயன் நிறைந்த மறைமொழி எனப்படும் சொற்களைச் சொல்லும் முனிவர்களுடைய பெருமையினை அவர்கள் ஆணையாகச் சொல்லும் அச்சொற்களே [மறைமொழி] காட்டிவிடும்.

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டிவிடும்.

**8 நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும். 28**

நிறை — பொருளும் பயனும் நிறைந்த, மொழி — மொழிகளையுடைய, மாந்தர் பெருமை — முனிவர்களுடைய பெருமையினை, நிலத்து — உலகில், மறைமொழி — அவர்கள் ஆணையாகச் சொல்லும் சொற்களே, காட்டிவிடும் — கண் கூடாகக் காட்டும்.

உயர்ந்த குணமென்னும் குன்றின் மேல் நின்ற முனிவர்களுடைய கோபம், இருப்பது கண நேரமேயானாலும் கோபிக்கப்பட்டவர்களால் அக்கோபம் தடுப்பதற்கு முடியாததாகும்.

குணம் என்னும் குன்று ஏறி நின்றார் வெகுளி கணம் ஏயும் காத்தல் அரிது.

**9 குணம்என்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது. 29**

குணம் — மெய்யுணர்வான சீரிய குணம், என்னும் — என்று சொல்லப்பட்ட, குன்று — குன்றின் மீது, ஏறி — ஏறி, நின்றார் — நின்ற முனிவர்களுடைய, வெகுளி — சினம் [கோபம்], கணமேயும் — தான் உள்ள அளவு கண நேரமேயானாலும், காத்தல் — வெகுளப்பட்டவரால் அதனைத் தடுத்தல், அரிது — முடியாததாகும்.

எல்லா உயிர்களிடத்திலும் அருளுடன் நடந்து கொள்ளுவதால் அந்தணர் என்று சொல்லப்படுபவர்கள் அறவோர்களாகிய முனிவர்களே யாவார்கள்.

அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்.

**10 அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுக லான். 30**

எவ்வுயிர்க்கும் — எல்லா உயிர்களிடத்தும், செந்தண்மை — அருளுடைமையினை, பூண்டு — கடமையாக மேற்கொண்டு, ஒழுகலான் — நடந்து கொள்ளுவதனாலே, அந்தணர் — அந்தணர், என்போர் — என்று கூறப்படுவோர், அறவோர் — ஆசைகளை அறுத்து அறநெறியிலே நின்ற முனிவர்களே யாவார்கள்.

## 4 அறன் வலியுறுத்தல்

**[அறம் இன்னதென்பதும் அதனால் வரும் பயன்களும் பற்றி வற்புறுத்தல்]**

பெருஞ் சிறப்பினையும் செல்வத்தினையும் அளிக்கின்ற அறத்தினைவிட மக்களுயிர்க்கு மேம்பட்ட செல்வம் வேறு என்ன இருக்கின்றது?

சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் அறத்தின் ஊங்கு ஆக்கம் எவனோ உயிர்க்கு.

**1 சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு. 31**

சிறப்பு ஈனும் — பெருஞ்சிறப்பினையும் தரும், செல்வமும் — மேலான செல்வத்தினையும், ஈனும் — தருவதாகும், [ஆகையினால்] உயிர்க்கு — மக்களுயிர்க்கு, அறத்தின் — அறத்தினை விட, ஊங்கு — மேம்பட்ட, ஆக்கம் — செல்வம், எவன் — வேறு என்ன இருக்கின்றது?

அறம் செய்வதனைவிட மேம்பட்ட செல்வமும் இல்லை; அந்த அறத்தினை அஞ்ஞானத்தால் மறப்பதைவிடப் பெரிய தீமையும் இல்லை.

அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை அதனை மறத்தலின் ஊங்கு இல்லை உயிர்க்கு.

**2 அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை**
**மறத்தலின் ஊங்குஇல்லை கேடு. 32**

அறத்தின் — அறத்தினைவிட, ஊங்கு — மேலான, ஆக்கமும் — செல்வமும், இல்லை — இல்லையாகும், அதனை — அந்த அறத்தினை, மறத்தலின் — மறப்பதைவிட, ஊங்கு — பெரிய, கேடு இல்லை — தீங்கும் இல்லையாகும்,

தம்மால் முடியக் கூடிய வழிகளால் இடைவிடாமல் செல்லக் கூடிய இடங்களில் எல்லாம் அறத்தினைச் செய்தல் வேண்டும்.

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாய் எல்லாம் செயல்.

3 ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல். 33

ஒல்லும் — தம்மால் முடியக் கூடிய, வகையான் — வழிகளில் எல்லாம், அறவினை — அறமான செயல்களை, ஓவாதே — எப்போதும் (நிறுத்தாமல்), செல்லும் — செல்லக்கூடிய, வாய் — இடங்களில், எல்லாம் — எல்லாம், செயல் — செய்தல் வேண்டும்.

மனத்தில் குற்றமில்லாமல் இருத்தல் வேண்டும். அறம் என்பது அதுவேயாகும். அறம் அவ்வளவேதான்; அதுவல்லாமல் செய்யப்படுவன யாவும் ஆரவாரம் என்னும் தன்மையுடையனவாகும்.

மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன் ஆகுல நீர பிற.

4 மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. 34

மனத்துக்கண் — மனத்தில், மாசு — குற்றம், (அழுக்கு) இலனாதல் — இல்லாதவனாக இருக்க வேண்டும், அறம் — அறம் என்பது, அனைத்து — அவ்வளவேயாகும், பிற — அதுவல்லாமல் செய்யப்படுவன யாவும், ஆகுல — ஆரவாரம் என்னும், நீர — தன்மையுடையனவாகும்.

பொறாமையும், பேராசையும், கோபமும், கடுஞ் சொல்லும் ஆகிய நான்கும் விலக்கப்பட்டு நடைபெறுவதே அறமாகும்.

அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்.

5 அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம். 35

அழுக்காறு — பொறாமைக்குணமும், அவா — ஆசையும், வெகுளி — சினமும், இன்னா — கடுமையான, சொல் — சொல்லும், [ஆகிய] நான்கும் — நான்கும், இழுக்கா — விலக்கப்பட்டு, இயன்றது அறம் — நடைபெறுவதே அறம் என்பதாகும்.

கடைசிக் காலத்தில் அறம் செய்வோம் என்று இருக்காமல் நாள்தோறும் அறம் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்தல் இறக்குங் காலத்தில், உயிருக்கு அழியாத துணையாக இருக்கும்.

அன்று அறிவாம் என்னாது அறம் செய்க மற்று அது பொன்றுங்கால் பொன்றா துணை.

6 அன்றுஅறிவாம் என்னாது அறம்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. 36

அன்று — இறந்து போகின்ற காலத்தில், அறிவாம் என்னாது — அறிந்து செய்பவராவோம் என்று இருக்காமல், அறம் செய்க — இப்போதே அறத்தினைச் செய்வாயாக, அது — அப்படிச் செய்வதானது, பொன்றுங்கால் — இறக்குங் காலத்தில், பொன்றா — அழியாத, துணை — துணையாக இருக்கும்.

அறத்தின் வழி [பயன்] இதுதான் என்று கேட்டறிய வேண்டுவதில்லை; பல்லக்கினைத் தூக்கிக்கொண்டு போகின்றவனையும் உள்ளே உட்கார்ந்துகொண்டு போகின்றவனையும் பார்க்கும் காட்சியளவினாலேயே உணர்ந்து கொள்ளப்படும்.

அறத்து ஆறு இது என வேண்டா சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை.

7 அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தா னிடை. 37

அறத்து — அறத்தினது, ஆறு — பயனும் வழியும், இது — இதுதான், என — என்று, வேண்டா — எடுத்துக் கூறல் வேண்டுவதில்லையாகும், [ஏனெனில்] சிவிகை — பல்லக்கினை, பொறுத்தானோடு — சுமந்து தூக்கிச் செல்பவனோடு, ஊர்ந்தான் இடை — அமர்ந்திருப்பவன், [ஆகிய இருவரிடையே] காட்சியளவினாலேயே உணரப்பட்டுவிடும்.

அறம் செய்யாத நாளே இல்லாமல் ஒருவன் நடந்து கொள்ளுவானானால் அது அவன் மீண்டும் உடம்போடு பிறத்தல் என்னும் வழியை வாராமல் அடைக்கும் கல்லாகும்.

வீழ் நாள் படாமை நன்று ஆற்றின் அஃது ஒருவன் வாழ்நாள் வழி அடைக்கும் கல்.

8 வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதுஒருவன்
வாழ்நாள் வழிஅடைக்குங் கல். 38

வீழ்நாள் — அறம் செய்யாமல் வீணாகும் நாள், படா அமை — உண்டாகிவிடாமல், நன்று ஆற்றின் — அறத்தினைச் செய்வானானால், அஃது — அவ்வாறு செய்வதானது, ஒருவன் — ஒருவன், வாழ்நாள் — மீண்டும் உயிரோடு கூடிவாழும் நாளின், வழி அடைக்கும் — வழியினை அடைக்கின்ற, கல் — கல்லாகும்.

அறச் செயல்களினால் வருவதுதான் உண்மையான இன்பமாகும். மற்ற முறைகளில் வருவனவெல்லாம் இன்பமும் அல்ல; புகழுடையனவும் ஆகாது.

அறத்தான் வருவதே இன்பம் மற்று எல்லாம் புறத்த புகழும் இல.

**9 அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்**
**புறத்த புகழும் இல.** 39

அறத்தான் — அறவழிகளினாலே, வருவதே இன்பம் — வருவதான இன்பமே மெய்யான இன்பமாகும், மற்றெல்லாம் — வேறு முறைகளில் வருவனவெல்லாம், புறத்த — இன்பமல்லாமல் துன்பம் தருவனவேயாகும், புகழும் இல — புகழினையும் உடையவை அல்ல.

ஒருவற்குச் செய்யும் தன்மையுடையது அறச் செயல்களேயாகும். நீக்க வேண்டிய தன்மையுடையது தீயவைகளான செயல்களேயாகும்.

செயற்பாலது ஓரும் அறனே ஒருவற்கு உயற் பாலது ஓரும் பழி.

**10 செயற்பாலது ஓரும் அறனே ஒருவற்கு**
**உயற்பாலது ஓரும் பழி.** 40

ஒருவற்கு — ஒருவனுக்கு, செயற்பாலது — செய்ய வேண்டிய தன்மையுடையது, அறனே — அறச் செயல்களேயாகும், உயல் — நீக்க வேண்டிய, பாலது — தன்மையுடையது, பழி — தீய [பழியான] செயல்களேயாகும்.

## இல்லற இயல்

### 5. இல்வாழ்க்கை

**[இல்லறத்தின் சிறப்பும், இல்வாழ்வானுடைய பண்புகளும், கடமைகளும்]**

இல்லறத்தோடு கூடி வாழ்பவன் என்று சொல்லப்படுபவன் இயல்பாகவே தன்னைச் சார்ந்திருக்கும் பெற்றோர், மனைவி, மக்கள் ஆகிய மூன்று திறத்தார்க்கும் நல்லொழுக்க நெற்றியில் நின்ற சிறந்த துணையாக இருப்பவனாவான்.

இல் வாழ்வான் என்பான் இயல்பு உடைய மூவர்க்கும் நல் ஆற்றின் நின்ற துணை.

**1 இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்**
**நல்ஆற்றின் நின்ற துணை.** 41

இல்வாழ்வான் — இல்லறத்தினை மேற்கொண்டு வாழ்வான், என்பான் — என்று சொல்லப்படுபவன், இயல்புடைய — இயல்பாகவே தன்னைச் சார்ந்திருக்கும், மூவர்க்கும் — பெற்றோர், மனைவி, மக்கள் ஆகிய மூன்று வகையினர்க்கும், நல் — நல்ல, ஆற்றின் — ஒழுக்க வழிகளில், நின்ற துணை — நிலையாக இருக்கும் துணையாவான்.

துறந்தவர்களுக்கும், வறுமையாளர்களுக்கும், யாருமின்றித் தன்னிடம் வந்து இறந்தவர்களுக்கும் இல்வாழ்வான் என்பவன் துணையாக இருக்கக்கடவன்.

துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் இல்வாழ்வான் என்பான் துணை.

2 துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை. 42

துறந்தார்க்கும் — துறவறத்தினை மேற்கொண்ட முனிவர்களுக்கும், துவ்வாதவர்க்கும் — வறியவர்களுக்கும், இறந்தார்க்கும் — யாருமின்றித் தம்மிடம் வந்து இறந்தவர்களுக்கும், இல்வாழ்வான் — இல்லறத்தில் வாழ்பவன், என்பான் — என்பவன், துணை — துணையாகும்.

முன்னோர்கள், தெய்வம், விருந்து, சுற்றம், தான் என்ற ஐந்திடத்தும் செய்ய வேண்டிய நல்வழியினைப் போற்றிக் காத்து வழுவாமல் நடந்து கொள்ளுதல் சிறப்புடைய அறமாகும்.

தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங்கு ஐம்புலத்து
[ஆறு ஓம்பல் தலை.

3 தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான்என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை. 43

தென்புலத்தார் — முன்னோர்கள், தெய்வம் — தெய்வம், விருந்து — விருந்தினர், ஒக்கல் — சுற்றத்தார் [உறவினர்], தான் — தான், என்று — என்பதான, ஐம்புலத்து — ஐந்து இடத்திலும் செய்ய வேண்டிய, ஆறு — வழியினை, ஓம்பல்தலை — போற்றிக் காத்துச் செய்தல் தலையாய அறமாகும்.

மற்றவர்கள் கூறும் பழிக்கு அஞ்சிப் பிறர்க்கும் பகுத்துக் கொடுத்து வாழ்கின்ற இல்லறத்தானுடைய பரம்பரை என்றும் குறைவின்றி இருப்பதாகும்.

பழி அஞ்சி பாத்து ஊண் உடைத்தாயின் வாழ்க்கை வழி எஞ்சல் எஞ்ஞான்றும் இல்.

4 பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல். 44

பழி அஞ்சி — பழிக்கு அச்சப்பட்டு, பாத்து — பலருக்கும் பகுத்துக் கொடுத்து, ஊண் — உண்ணும் முறையினை, வாழ்க்கை — இல்வாழ்க்கையானது, உடைத்தாயின் — பெற்றிருக்குமானால், வழி எஞ்சல் — அவனுடைய பரம்பரை மறைதல், எஞ்ஞான்றும் இல் — எக்காலத்திலும் இல்லையாகும்.

இல்லற வாழ்க்கையானது அன்பினையும் அறத்தினையும் உடையதாக இருக்குமேயானால் அதுவே இல்லறத்தின் பண்பும் பயனுமாகும்.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல் வாழ்க்கை பண்பும் பயனும் அது.

**5 அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது.** 45

இல்வாழ்க்கை — இல்லற வாழ்க்கையானது, அன்பும் அறனும் — அன்புடைமையினையும் அறத்தினையும், உடைத்தாயின் — பெற்றிருக்குமானால், அது — அதுவே [இல் வாழ்க்கைக்கு] பண்பும் பயனும் — சிறந்த குணமும் பயனும் ஆகும்.

அற நெறியில் இல் வாழ்க்கையினை ஒருவன் நடத்துவானேயானால், அப்படிப்பட்டவன் அதற்குப் புறம்பான வேறு வழிகளில் சென்று பெறுவது யாது?

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில் போய்ப் பெறுவது எவன்.

**6 அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்**
**போஒய்ப் பெறுவது எவன்.** 46

இல்வாழ்க்கை — இல்லற வாழ்க்கையினை, அறத்தாற்றின் — அறமான வழியில், ஆற்றின் — நடத்துவானேயானால், புறத்தாற்றின் — புறமான வேறு வழியில், போஒய்ப் பெறுவது — போய் அடைகின்ற பயன், எவன் — யாது இருக்கின்றது?

இல்லறத்திற்குரிய இயல்புகளுடனே இல்வாழ்க்கை நடத்துபவன் ஆசைகளை அடக்கி வாழும் துறவிகள் எல்லோரினும் மேலானவனாவான்.

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பவன் முயல்வாருள் எல்லாம் தலை.

**7 இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாருள் எல்லாம் தலை.** 47

இல்வாழ்க்கை — இல்லற வாழ்க்கையில் இருந்து கொண்டு, இயல்பினான் — இயல்பாகவே பொருத்தமான தன்மைகளுடன், வாழ்பவன் — வாழுகின்றவன், என்பான் — என்பவன், முயல்வாருள் — ஆசைகளை அறுத்து வாழ முயலுகின்ற முனிவர்கள், எல்லாம் — எல்லோரையும் விட, தலை — மிக்கவன் ஆவான்.

தவம் செய்வோரையும் நன்னெறியிலே நடத்திச் சென்று அறத்தினின்றும் நீங்காத இல்லறம், நோன்பு நோற்றுத் தவம் செய்வோரது நிலையையும்விடப், பெருமையினை உடையதாகும்.

ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை நோற்பாரின் நோன்மை உடைத்து.

**8 ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் நோன்மை உடைத்து. 48**

ஆற்றின் — துறவறத்தில் நின்றவர்களையும் நல்வழியில், ஒழுக்கி — ஒழுகச் செய்து, அறன் இழுக்கா — தானும் அறத்தினை விட்டு நீங்காமல் நடத்தும், இல்வாழ்க்கை — இல்லற வாழ்க்கையானது, நோற்பாரின் — நோன்பு நோற்றுத் தவஞ் செய்பவர்களைவிட, நோன்மை யுடைத்து — பொறுமையுடையதாகும்.

அறம் என்று சிறப்பித்துக் கூறப்படுவது இல்லறமேயாகும். மற்றைய துறவறமோ என்றால், அதுவும் பிறனால் டழிப்புக்கு இடமின்றி இருக்குமேயானால் அதுவும் நல்லதாகும்

அறன் எனப்பட்டதே இல் வாழ்க்கை அஃதும் பிறன் பழிப்பது இல்லாயின் நன்று.

**9 அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
**பிறன்பழிப்பது இல்லாயின் நன்று. 49**

அறன் — அறம், எனப்பட்டதே — என்று சொல்லப்படுவது, இல்வாழ்க்கை — இல்லறமேயாகும் அஃதும் — ஏனைய துறவறமும், பிறன் — பிறரால், பழிப்பது — பழிக்கப்படுவது என்பது, இல்லாயின் — இல்லையானால், நன்று — நல்லதாகும்.

இவ்வுலகில் இல்லறத்தினை நடத்தி வாழ வேண்டிய முறையில் வாழ்பவன் வானத்தில் வாழ்கின்ற தெய்வங்களுள் ஒன்றாக வைத்து மதிக்கப்படுவான்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும்.

**10 வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும். 50**

வாழ்வாங்கு — வாழ வேண்டிய முறையில், வையத்துள் — இவ்வுலகில், வாழ்பவன் — வாழ்கின்ற இல்லறத்தான், வான் — வானுலகில், உறையும் — வசிக்கின்ற, தெய்வத்துள் — தெய்வங்களுடனே, [ஒன்றாக] வைக்கப்படும் — வைக்கப்படுவான்.

## 6. வாழ்க்கைத் துணை நலம்

**[இல்லறத்திற்குரிய துணையான மனைவியின் பெருமை, நற்பண்பு, கடமை முதலியன]**

மனையறத்திற்குத் தகுந்த நற்குண நற்செய்கையான சிறப்பினையுடையவளாகித் தன்னைக் கொண்டவனது வரவுக்குத் தகுந்தபடி வாழ்பவளே வாழ்க்கைத் துணைவியாவாள்.

மனை தக்க மாண்பு உடையளாகி தன் கொண்டான் வளத்தக்காள் [வாழ்க்கைத் துணை.

**1 மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.** 51

மனை — மனையறத்திற்கு, தக்க — தகுந்த, மாண்பு — சிறப்பினை, உடையளாகி — உடையவளாக இருந்து, தற்கொண்டான்—தன்னைக் கொண்டவனது, வளம்—வருவாய்க்கு, தக்காள்—தகுந்தபடி வாழ்பவளே, வாழ்க்கைத் துணை — வாழ்க்கைத் துணைவியான மனைவியாவாள்.

இல்லறத்திற்கேற்ற சிறப்பு மனைவியிடம் இல்லாமற் போனால் அவ்வில் வாழ்க்கை செல்வம் முதலிய வேறு வகைகளில் எவ்வளவு சிறப்புடையதாக இருந்தாலும் பயனுடையதில்லையாகும்.

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை எனைமாட்சித்து ஆயினும் இல்.

**2 மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும் இல்.** 52

மனை — இல் வாழ்க்கைக்குரிய, மாட்சி — சிறப்பான நற்பண்புகள், இல்லாள்கண் — இல்லாளிடம், இல்லாயின் — இல்லாவிட்டால், வாழ்க்கை — இல்லற வாழ்க்கையானது, எனை — மற்ற வகைகளில் எவ்வளவு, மாட்சித்து — பெருமையுடையது, ஆயினும் — ஆனாலும் இல் — பயனுடையதில்லையாகும்.

மனைவி சிறப்புடையவளாக இருந்து விட்டால் அவ் இல் வாழ்க்கையில் இல்லாத தொன்றுமில்லை. அவள் மனைக்குரிய சிறப்பு இல்லாதவளாகி விட்டால் இல்லறத்தில் உள்ளது ஒன்றுமில்லை.

இல்லது என் இல்லவள் மாண்பு ஆனால் உள்ளது என் இல்லவள் மாணாக்கடை.

**3 இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை.** 53

இல்லவள் — இல்லாள், மாண்பு — பெருஞ்சிறப்பு நிறைந்தவளாக, ஆனால் — இருந்து விட்டால், இல்லது — மனையில் இல்லாதது, என் — யாது, இல்லவள் — இல்லத்து மனைவி, மாணாக்கடை — நற்பண்பு உடையவளாக இல்லாவிட்டால், உள்ளது என் — மனையில் இருப்பது என்ன? [ஒன்றுமே இல்லையாகும்]

ஒருவன் அறத்தினைத் தனக்கு உரித்தாகச் செய்யாமல் புறம்பான தீமைகளையே செய்பவனானாலும், பிறனுடைய உரிமை எல்லைக்குள் இருப்பவளது பெண்மையை விரும்பாமல் இருப்பது நல்லதாகும்.

அறன் வரையான் அல்ல செயினும் பிறன் வரையாள் பெண்மை நயவாமை நன்று.

10 அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 150

அறன் — அறநெறியினை, வரையான் — தான் விரும்பி மேற்கொள்ளாமல், அல்ல செயினும் — தீமைகளைச் செய்தாலும் கூட, பிறன் — பிறனுடைய, வரையாள் — உரிமைக்குள் இருப்பவளது, பெண்மை — பெண் இன்பத்தினை, நயவாமை — ஆசைப்படாதிருத்தல், நன்று — மிகவும் நல்லதாகும்.

## 16 பொறை உடைமை

[பொறுமை என்னும் நற்பண்பைப் பெற்றிருத்தல்]

தன்னைத் தோண்டுபவர்களையும் கீழே வீழாமல் தாங்கிக் கொண்டிருக்கும் நிலத்தினைப் போலத் தம்மை இகழ்பவர்களையும் பொறுத்துக் கொள்ளுதல் தலையான அறமாகும்.

அகழ்வாரை தாங்கும் நிலம்போல தம்மை இகழ்வார் பொறுத்தல் தலை.

1 அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 151

அகழ்வாரை — தன்னைத் தோண்டுவோரையும், தாங்கும் — தாங்கிக் கொண்டிருக்கும், நிலம்போல — நிலத்தைப் போல, தம்மை இகழ்வார் — தம்மை இகழ்பவர்களையும், பொறுத்தல் — பொறுத்துக் கொள்ளுதல், தலை — தலையான அறம் எனப்படும்.

பிறர் செய்த குற்றத்தினை எப்போதும் பொறுத்துக் கொள்ளுதல் நல்லதாகும். அக்குற்றத்தினை மறந்து விடுதல் அப்பொறுமையினையும்விடச் சிறந்ததாகும்.

பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை மறத்தல் அதனினும் நன்று.

2 பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று. 152

என்றும் — எப்போதும், இறப்பினை — மற்றவன் செய்த குற்றத்தினை, பொறுத்தல் — பொறுத்துக் கொள்ள வேண்டும், அதனை — அக்குற்றத்தினை, மறத்தல் — மறந்து விடுதல், அதனினும் நன்று — அந்தப் பொறுமையினையும்விட மிகவும் நன்மையானதாகும்.

ஒருவனுக்கு வறுமையுள் மிகவும் வறுமையாவது விருந்தினரைப் போற்றாமல் நீக்குதலாகும். அதுபோல வல்லமையுள் மிகவும் வல்லமையாவது அறியாமையால் தீங்கு செய்தவர்களைப் பொறுத்துக் கொள்ளுவதாகும்.

இன்மையுள் இன்மை விருந்து ஒரால் வன்மையுள் வன்மை மடவார் பொறை.

**3 இன்மையுள் இன்மை விருந்துஒரால் வன்மையுள்**
**வன்மை மடவார்ப் பொறை. 153**

இன்மையுள் — ஒருவனுக்கு வறுமை என்பவற்றுள்ளும், இன்மை — வறுமை, [யாதென்றால்] விருந்து — வந்த விருந்தினரை, ஒரால் — விலக்குவதாகும், வன்மையுள் — [அதுபோல] வல்லமைகளில் எல்லாம், வன்மை — வல்லமை என்பது என்னவென்றால், மடவார் — அறிவின்மையால் கெடுதி செய்தவர்களை, பொறை — பொறுத்துக் கொள்ளுவதாகும்.

ஒருவனுக்கு நிறையுடைமை என்கின்ற சான்றாண்மைக் குணம் தன்னிடமிருந்து நீங்காதிருக்க வேண்டுமானால் அதனால் பொறுமை என்கின்ற குணம் அழியாமல் காப்பாற்றப் படவேண்டும்.

நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை போற்றி ஒழுகப்படும்.

**4 நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறைஉடைமை**
**போற்றி ஒழுகப் படும். 154**

நிறையுடைமை — சான்றாண்மை என்னும் உயர்ச்சி, நீங்காமை வேண்டின் — நீங்காதிருக்க விரும்புவானாகில், பொறை உடைமை — பொறுமை என்னும் அரிய பண்பாட்டினை, போற்றி — காப்பாற்றி, ஒழுகப்படும் — நடந்து கொள்ள வேண்டும்.

பிறன் தமக்குத் தீமை செய்தால் பொறுமை இழந்து, தண்டித்தவர்களைப் பெரியோர்கள் ஒரு பொருளாக மனதிற் கொள்ளமாட்டார்கள். பொறுத்துக் கொண்டவர்களை எப்போதும் நினைத்து மனதில் பொன்போல் கொள்ளுவார்கள்.

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர் பொறுத்தாரை பொன்போல் பொதிந்து.

**5 ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து. 155**

ஒறுத்தாரை — [கெடுதி செய்தாரை] தண்டித்தவர்களை, ஒன்றாக வையார் — மதிக்கப்படும் ஒரு பொருளாக உலகப் பெரியோர்கள் மனதில் வைக்கமாட்டார்கள், [ஆனால்] பொறுத்தாரை — பிறர் செய்த தீங்கினைப் பொறுத்தவர்களை, பொன்போல் — பொன்னினைப் போல, பொதிந்து — எப்போதும் நினைத்து, வைப்பர் — மனதில் கொள்ளுவார்கள்.

குற்றம் செய்தவர்களைத் தண்டித்தவர்களுக்கு ஏற்படுவது அந்த ஒரு நாளை இன்பமே யாகும். பொறுத்துக் கொண்டவர்களுக்கு உலகம் அழியும் வரையிலும் பெருமையும் புகழும் உண்டு.

**ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்கு பொன்றும் துணையும் புகழ்.**

**6 ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றுந் துணையும் புகழ்.** 156

*ஒறுத்தார்க்கு — [கெடுதி செய்தாரை] தண்டித்தவர்க்கு ஏற்படுவது, ஒருநாளை — அந்த ஒருநாள், இன்பம் — இன்பமேயாகும், பொறுத்தார்க்கு — பொறுத்துக் கொண்ட பெரியார் களுக்கு, பொன்றுந்துணையும் — உலகம் அழியும் காலம்வரை, புகழ் — புகழ் இருந்து கொண்டே இருக்கும்.*

செய்யத் தகாத செயலினைத் தன்னிடத்தில் மற்றவன் செய்தாலும் அத்துன்பத்திற்காக வருத்தப்பட்டு அறமல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல் ஒருவனுக்கு நல்லது.

**திறன் அல்ல தன் பிறர் செய்யினும் நோ நொந்து அறன் அல்ல செய்யாமை நன்று.**

**7 திறன்அல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து**
**அறன்அல்ல செய்யாமை நன்று.** 157

*திறன் அல்ல — செய்யக் கூடாத கெடுதியை, தன் — தன்னிடத்தில், பிறர் செய்யினும் — மற்றவர்கள் செய்தாலும்கூட, நோ — ஏற்பட்ட துன்பத்திற்காக, நொந்து — வருத்தப்பட்டு, அறன் — அறத்திற்கு, அல்ல — புறம்பானவற்றை, செய்யாமை நன்று — திரும்பச் செய்யா திருத்தல் நல்ல பண்பாகும்.*

மனதில் செருக்குக் கொண்டு தீமையானவைகளைச் செய்தவர்களைத் தாம் தம்முடைய பொறுமையினால் வென்றுவிட வேண்டும்.

**மிகுதியான் மிக்கவை செய்தாரை தாம் தம் தகுதியான் வென்றுவிடல்.**

**8 மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்**
**தகுதியான் வென்று விடல்.** 158

*மிகுதியான் — மதமான செருக்குக் கொண்டு, மிக்கவை — கொடியவைகளை, செய்தாரை — செய்தவர்களை, தாம் தம் — தாம் தம்முடைய, தகுதியால் — பொறுமைப் பண்பினால், வென்றுவிடல் — வென்று விடுதல் வேண்டும்.*

நல் வழியிலிருந்து நீங்கியவர்களுடைய தீய சொற்களைப் பொறுத்துக் கொள்ளுபவர்கள், துறவறம் பூண்ட முனிவர்களைப் போலத் தூய்மையுடையவர்கள் ஆவார்கள்.

துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய் இன்னாச்சொல் நோற்கிற்பவர்.

**9 துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்**
**இன்னாச்சொல் நோற்கிற் பவர்.** 159

இறந்தார் — நன்னெறியில் நீங்கியவரது, வாய் — வாயால் தோன்றும், இன்னா — துன்பமான, சொல் — சொற்களை, நோற்கிற்பவர் — பொறுத்துக் கொண்டு இல்லறத்தில் இருப்பவர்கள், துறந்தாரின் — துறவறம் பூண்ட முனிவர்கள் போல, தூய்மை — தூய்மையான பண்பினை, உடையர் — உடையவர்கள் ஆவார்கள்.

உண்ணாமல் நோன்பு நோற்றுத் தவம் செய்பவர்கள், எல்லோரினும் பெரியவர்களாவார்கள். அவர்கள் பிறர் சொல்லும் துன்பமான சொற்களையும் பொறுத்துக் கொள்ளுபவர் களுக்கு அடுத்தே பெரியவர்களாக மதிக்கப்படுவார்கள்.

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர் சொல்லும் இன்னாச்சொல் நோற்பாரின் பின்.

**10 உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**
**இன்னாச்சொல் நோற்பாரின் பின்.** 160

உண்ணாது — உணவும் கொள்ளாது [தவம் செய்து], நோற்பார் — துன்பங்களைப் பொறுத்து நோன்பு நோற்பவர், பெரியர் — பெரியவர்களாகிய முனிவர்கள் ஆவார்கள், [அவர்கள் பெரியர் ஆவதும்] பிறர் சொல்லும் — மற்றவர் சொல்லுகின்ற, இன்னா — துன்பம் தருகின்ற, சொல் — சொற்களை, நோற்பாரின் — பொறுத்துக் கொள்ளுவோரின், பின் — பின்னேயாகும் என்பதாம்.

## 17. அழுக்காறாமை

[பொறாமை என்னும் தீயகுணம் இல்லாதிருத்தல்]

ஒருவன் தன்னுடைய மனதில் பொறாமை என்னும் குற்றம் இல்லாத தன்மையினைத் தனக்குரிய ஒழுக்க நெறியாகக் கொள்ளுதல் வேண்டும்.

ஒழுக்காறா கொள்க ஒருவன் தன் நெஞ்சத்து அழுக்காறு இலாத இயல்பு.

**1 ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து**
**அழுக்காறு இலாத இயல்பு.** 161

ஒருவன் — ஒருவன், தன் — தன்னுடைய, நெஞ்சத்து — நெஞ்சத்தில், அழுக்காறு இலாத — பொறாமை இல்லாததான, இயல்பு — இயல்பினை [தன்மையினை] ஒழுக்கு — ஒழுக்க முடைய, ஆறா — நெறியாக, கொள்க — கொள்ளுதல் வேண்டும்.

ஒருவன் யாவரிடத்திலும் பொறாமை இல்லாமல் இருப்பதே சிறந்த செல்வமாகும். அவன் பெறுகின்ற சீரிய செல்வங்களுள், அச்செல்வத்திற்குச் சமமானது வேறு எதுவும் இல்லை

**விழுப்பேற்றின் அஃது ஒப்பது இல்லை யார்மாட்டும் அழுக்காற்றின் அன்மை பெறின்.**

**2 விழுப்பேற்றின் அஃதுஒப்பது இல்லையார் மாட்டும்**
**அழுக்காற்றின் அன்மை பெறின். 162**

யார் மாட்டும் — யாவராக இருந்தாலும், [அவரிடம்] அழுக்காற்றின் — பொறாமைக் குணத்திலிருந்து, அன்மை — நீங்குதலை, பெறின் — பெற்றிருப்பானேயாகில், விழுப்பேற்றின் — அவன் அடைகின்ற சீரிய செல்வங்களுள், அஃது ஒப்பது — அச்செல்வத்திற்குச் சமமானது, இல்லை — வேறு எதுவும் இல்லையாகும்.

அறத்தினையும் செல்வத்தினையும் வேண்டாம் என்று சொல்லுகின்றவன் மற்றவன் செல்வத்தைக் கண்டபோது தாளாமல் பொறாமைப் படுவான்.

**அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன் ஆக்கம் பேணாது அழுக்கறுப்பான்.**

**3 அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன்ஆக்கம்**
**பேணாது அழுக்கறுப் பான். 163**

அறன் — அறம் என்பதனையும், ஆக்கம் — செல்வத்தினையும், வேண்டாதான் — வேண்டாதவன், என்பான் — என்பவன், பிறன் — மற்றவனுடைய, ஆக்கம் — செல்வத்தினைக் கண்டு, பேணாது — விரும்பி மகிழ்ச்சியடையாமல், அழுக்கறுப்பான் — பொறாமைப்பட்டுக் கொண்டிருப்பவனாவான்.

பொறாமையினால் தமக்குத் துன்பம் வருவதை அறிந்தவர்கள் பொறாமைக் காரணமாக அறனல்லாத செயல்களைச் செய்ய மாட்டார்கள்.

**அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்கு ஆற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து.**

**4 அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்**
**ஏதம் படுபாக்கு அறிந்து. 164**

இழுக்காற்றின் — அழுக்காறு எனப்படும் அத்தீய நெறிகளால், ஏதம் — குற்றம், படுபாக்கு — வருவதை, அறிந்து — தெரிந்து கொண்டு, அழுக்காற்றின் — பொறாமை கொண்ட தன்மையினாலே, அல்லவை செய்யார் — அறமல்லாத தீய செயல்களைப் பெரியோர்கள் செய்ய மாட்டார்கள்.

அழுக்காறு [பொறாமை] உடையவர்களுக்குப் பகைவர்கள் தீமை செய்ய வேண்டுவதில்லை. ஏனெனில், அப் பொறாமைக் குணமே அவர்களை அழிப்பதற்குப் போதுமானதாகும்.

அழுக்காறு உடையார்க்கு அது சாலும் ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது.

**5 அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்**
**வழுக்கியும் கேடுஈன் பது.** 165

ஒன்னார் — பகைவர்கள், வழுக்கியும் — தீமை செய்யாமல் நீங்கி இருந்தாலும், கேடு ஈன்பது — [பொறாமை] தீமையினைத் தருவதாகும், [ஆனபடியால்] அழுக்காறு — பொறாமையினை, உடையார்க்கு — உடையவர்களுக்கு, அது — அப்பொறாமைக் குணமே, சாலும் — [துன்பம் தருதற்குப்] போதுமானதாகும்.

பிறருக்குக் கொடுப்பதைப் பார்த்துப் பொறாமைப் படுகிறவனுடைய சுற்றம் உடுப்பதும் உண்பதும் இல்லாமல் கெட்டுவிடும்.

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதும் உண்பதும் இன்றி கெடும்.

**6 கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்**
**உண்பதூஉம் இன்றிக் கெடும்.** 166

கொடுப்பது — பிறருக்குக் கொடுப்பதைப் பார்த்து, அழுக்கறுப்பான் — பொறாமைப்படுகின்றவனுடைய, சுற்றம் — உறவினர் என்னும் சுற்றமானது, உடுப்பதூஉம் — உடுப்பதற்கு ஆடைகளும், உண்பதூஉம் — உண்பதற்கு உணவும், இன்றிக்கெடும் — இல்லாமல் கெட்டுவிடும்.

பிறருடைய செல்வம் கண்டபோது பொறாமைப் படுகின்றவனைப் பார்த்துத் திருமகள் தானும் பொறாம தனக்கு மூத்தவளைக் காட்டி அவனிடம் சென்று இருக்குமாறு செய்வாள்.

அவ்வித்து அழுக்காறு உடையானை செய்யவள் தவ்வையை, காட்டிவிடும்.

**7 அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்**
**தவ்வையைக் காட்டி விடும்.** 167

அழுக்காறு — பொறாமையென்பதனை, உடையானை — கொண்டிருப்பவனை, செய்யவள் — திருமகள், அவ்வித்து — பொறாமைப்பட்டு, தவ்வையை — மூத்தவளை [தமக்கையை], காட்டிவிடும் — அவனிடம் போகச் செய்துவிட்டுத் தான் விலகிவிடுவாள்.

பொறாமை என்று சொல்லப்படுகின்ற ஒருபாவி தன்னையுடையானுடைய செல்வத்தைக் கெடுத்துத் தீய நிலைக்குள் தள்ளிவிடுவான்.

அழுக்காறு என ஒருபாவி திரு செற்று தீயுழி உய்த்துவிடும்.

**8 அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.** 168

அழுக்காறு — பொறாமை, என — என்னும், ஒருபாவி — ஒரு பாவியானவன், திருச்செற்று — ஒருவனுடைய செல்வத்தையழித்து, தீ — தீய, உழி — இடத்திற்கு [உலகிற்கு], உய்த்து விடும் — கொண்டு தள்ளிவிடுவான்.

பொறாமையினைக் கொண்ட மனத்தானுடைய செல்வப் பெருக்கமும், நல்ல மனமுடையவனுடைய வறுமையும், இருக்குமேயானால், ஆராய்ந்து அறிந்து கொள்ளப்படும்.

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான் கேடும் நினைக்கப்படும்.

**9 அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.** 169

அவ்விய — பொறாமையினைக் கொண்ட, நெஞ்சத்தான் — நெஞ்சினையுடையவனது, ஆக்கமும் — செல்வப் பெருக்கமும், செவ்வியான் — நல்ல உள்ளம் படைத்தவனது, கேடும் — கெடுதியென்னும் வறுமையும் [இருக்குமானால்], நினைக்கப்படும் — அதனை ஆராய்ந்து அறிந்து கொள்ளப்படும்.

பொறாமையினைக் கொண்டு பெரியார்களாயினாரும் இல்லை. அத்தீச் செயல் இல்லாதார் பெருக்கத்திலிருந்து நீக்கப்பட்டவராகவும் இல்லை.

அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃது இல்லார் பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்.

**10 அழுக்காற்று அகன்றாரும் இல்லை அஃதுஇல்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்.** 17`

அழுக்கற்று — பொறாமையினைக் கொண்டு, அகன்றாரும் — பெருக்கம் அடைந்தவர்களும், இல்லை — இல்லையாகும், அஃது — அத்தீக்குணம், இல்லார் — இல்லாதவர்கள், பெருக்கம் — பெருக்கம் பெறாமல், தீர்ந்தாரும்இல் — நீக்கப்பட்டவராகவும் இல்லையாகும்.

## 18. வெஃகாமை

**[பிறருடைய பொருளை வஞ்சித்துக் கவர்ந்து கொள்ள நினையாதிருத்தல்]**

நடுவு நிலைமையில் இல்லாமல் பிறர்க்குரிய பொருளை வஞ்சித்துக் கொள்ள எண்ணினால் அந்த இச்சை அவனுடைய குடியைக் கெடுத்துக் குற்றத்தினையும் அப்போதே கொடுக்கும்.

**நடுவு இன்றி நன்பொருள் வெஃகின் குடி பொன்றி குற்றமும் ஆங்கே தரும்.**

**1 நடுவுஇன்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்**
**குற்றமும் ஆங்கே தரும்.** 171

நடுவு — நடுவு நிலைமை, இன்றி — இல்லாமல், நன் — பிறருடைய நல்ல, பொருள் — பொருளை, வெஃகின் — வஞ்சித்து அடைய நினைத்தால் [அந்த எண்ணம்] குடி — அவனுடைய குடியை, பொன்றி — அழித்து, குற்றம் — குற்றத்தினையும், ஆங்கே தரும் — அந்த நேரத்திலேயே தந்துவிடும்.

நடுவு நிலைமை இல்லாதிருப்பதற்கு அஞ்சுபவர்கள் பின்னர் வரும் பயனை விரும்பிப் பழிக்கு ஆளாகக் கூடிய செயல்களைச் செய்யமாட்டார்கள்.

**படு பயன் வெஃகி பழிப்படுவ செய்யார் நடுவு அன்மை நாணுபவர்.**

**2 படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்**
**நடுவுஅன்மை நாணு பவர்.** 172

நடுவு — நடுவு நிலைமை, அன்மை — இல்லாமைக்கு, நாணுபவர் — வெட்கி அஞ்சுபவர்கள்; படு — பிறர் பொருளைக் கவர்வதனால் வருகின்ற, பயன் — பயனை, வெஃகி — விரும்பி, பழிப்படுவ — பழிக்கப்படும் செயல்களை, செய்யார் — செய்ய மாட்டார்கள்.

அறத்தான் வரக் கூடிய நிலையான இன்பத்தினை விரும்புகிறவர்கள் பிறருடைய பொருளை வஞ்சித்து அடையும் சிறிய இன்பத்திற்கு ஆசைப்பட்டுத் தீய செயல்களைச் செய்ய மாட்டார்கள்.

**சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல செய்யாரே மற்று இன்பம் வேண்டுபவர்.**

**3 சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே**
**மற்றின்பம் வேண்டு பவர்.** 173

மற்று இன்பம் — அறத்தான் வரும் நிலையுடைய மற்ற இன்பத்தினை, வேண்டுபவர் — காதலிப்பவர், சிற்றின்பம் — பிறர் உடைமையினை வஞ்சித்தடையும் சிறிய இன்பத்தினை, வெஃகி — ஆசைப்பட்டு, அறன் — அறத்திற்கு, அல்ல — புறம்பான செயல்களை, செய்யார் — செய்ய மாட்டார்கள்.

ஐம்புலன்களையும் வென்று குற்றம் இல்லாத அறிவினையுடைய பெரியோர்கள் "யாம் வறுமை யுற்றோம்" என்று கருதிப் பிறர்பொருளைக் கவர்ந்து கொள்ள நினைக்க மாட்டார்கள்.

**இலம் என்று வெஃகுதல் செய்யார் புலம் வென்ற புன்மை இல் காட்சியவர்.**

**4 இலம்என்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற**
**புன்மைஇல் காட்சி யவர். 174**

புலம் வென்ற — புலன்கள் ஐந்தினையும் அடக்கி வெற்றி பெற்ற, புன்மை — குற்றம், இல் — இல்லாத, காட்சியவர் — உணரும் அறிவு பெற்றவர்கள், இலம் — பொருளின்றி வறுமை யுற்றோம், என்று — என்று எண்ணி, வெஃகுதல் — மற்றவர் பொருளை வஞ்சித்துக் கொள்ளுவதை, செய்யார் — செய்ய மாட்டார்கள்.

பொருளை விரும்பி யாவரிடத்திலும் அறத்துடன் பொருந்தாத செயல்களை அறிவுடையோர் செய்வாராயின், நுணுக்கமான பல நூல்களிலும் சென்ற அவர்களுடைய அறிவு என்ன பயன் உடையதாகும் ?

**அஃகி அகன்ற அறிவு என்னாம் யார்மாட்டும் வெஃகி வெறிய செயின்.**

**5 அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்**
**வெஃகி வெறிய செயின். 175**

வெஃகி — பிறர் பொருளை வஞ்சிக்கக் கருதி, யார் மாட்டும் — எல்லோரிடத்திலும், வெறிய — அறிவுக்குப் புறம்பான தீயவற்றை, செயின் — செய்வார்களேயானால்; அஃகி — நுண்ணிய தான, அகன்ற — பற்பல நூல்களையும் ஆராய்ந்த, அறிவு என்னாம் — அறிவுடைமையானது என்ன பயனைத் தருவதாகும்.

அருளாகிய அறம் என்பதனை விரும்பி நன்னெறியில் நின்றவன் பிறன் பொருளினை விரும்பித் தீமையான வழிகளை நினைப்பானாகில் கெட்டுவிடுவான்.

**அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள் வெஃகி பொல்லாத சூழக் கெடும்.**

**6 அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகி**
**பொல்லாத சூழக் கெடும். 176**

அருள் — அருள் என்பதனை, வெஃகி — அடைய வேண்டி, ஆற்றின் கண் நின்றான் — நன்னெறியிலே நின்றவன், பொருள் — மற்றவனுடைய உடைமையினை, வெஃகி — விரும்பி, பொல்லாத — தீமையான வழிகளை, சூழக் கெடும் — நினைக்கக் கெட்டுவிடுவான்.

பிறர் பொருளைக் கவர்வதால் வரும் ஆக்கத்தினை விரும்பாதிருப்பார்களாக; அப்படிக் கவர்ந்தால் அனுபவிக்கும் போது அதன் பயன் நன்மையுடையதாக இருக்காது.

**வேண்டற்க வெஃகி ஆம் ஆக்கம் விளைவயின் மாண்டற்கு அரிது ஆம் பயன்.**

**7 வேண்டற்க வெஃகிஆம் ஆக்கம் விளைவயின்
மாண்டற்கு அரிதாம் பயன்.** 177

வெஃகி — அயலார் பொருளின்மேல் ஆசை கொண்டு, ஆம் ஆக்கம் — அதனால் வரும் செல்வத்தினை, — வேண்டற்க விரும்பாதிருப்பாயாக, விளைவயின் — அப்படி அதனை நுகரும் போது, பயன் — உண்டான்ற பயன் என்பது, மாண்டற்கரிதாம் — நன்மையான தன்மை யுடை யதாகவே இருக்காது.

செல்வமானது குறைந்து போகாமல் இருப்பதற்குக் காரணம் யாதென்று ஆராய்ந்தால், அது மற்றவனுக்கு உரிமையான பொருளினைத்தான் விரும்பாதிருத்தல் வேண்டும் என்பதாகும்.

**அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை வேண்டும் பிறன் கைப்பொருள்.**

**8 அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.** 178

செல்வத்திற்கு—செல்வமானது, அஃகாமை—குறைந்து போகாதிருப்பதற்கு வழி, யாது—எது, எனின் — என்று ஆராய்ந்தால், பிறன் — மற்றவன், வேண்டும் — விரும்பிக் கொள்ளும், கைப்பொருள் — உரிமையான பொருளை, வெஃகாமை — தான் வஞ்சித் தடைய விரும்பா திருத்தல் என்பதாம்.

அறத்தினை அறிந்து பிறர் பொருளினை விரும்பாத அறிவுடையார்களிடம் தான் சேர வேண்டிய இடமென்று அறிந்து செல்வமானது [திருமகள்] அவர்களிடத்திற்குப் போய்ச் சேரும்.

**அறன் அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும் திறன் அறிந்து ஆங்கே திரு.**

**9 அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு.** 179

அறன் — அறத்தினை, அறிந்து — நன்கு அறிந்து, வெஃகா — பிறனுக்குரிய பொருளினை அடைய விரும்பாத, அறிவுடையார் — அறிவுடையவர்களை, திரு — செல்வமானது, திறனறிந்து — தான் சேர வேண்டிய இடமென்று அறிந்து, ஆங்கே சேரும் — அத்தன்மை யால் அவ்விடத்திற்கே போய்ச் சேரும்.

பின்னர் விளைவது அறியாமல் வெஃகுதல் செய்தால் அவனுக்கு முடிவினை உண்டாக்கும்; வேண்டாமை என்கின்ற செல்வத்தன்மையானது வெற்றியினைக் கொடுக்கும்.

இறல் ஈனும் எண்ணாது வெஃகின் விறல் ஈனும் வேண்டாமை என்னும் செருக்கு.

**10 இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்**
**வேண்டாமை என்னும் செருக்கு.** 180

எண்ணாது — பிறகு வரும் தீமையினை நினைத்துப் பார்க்காமல், வெஃகின் — அயலான் பொருளை வஞ்சித்துக் கொள்ளக் கருதுவானாகில், இறல் — அழிவு என்பதனை, ஈனும் — அந்த எண்ணம் கொடுத்துவிடும், வேண்டாமை — அவ்வாறு விரும்பாமை, என்னும் — என்கின்ற, செருக்கு — செல்வத்தன்மையானது, விறல் — வெற்றியினை, ஈனும் — கொடுக்கும்.

## 19. புறங்கூறாமை

**[காணாதபோது பிறரை இகழ்ந்து பேசாமை]**

ஒருவன் அறத்தினைச் செய்யாமல் தீயவைகளைச் செய்தாலும்கூட புறங்கூறாதவன் என்று மக்களால் சொல்லப்படுதல் நல்லதாகும்.

அறம் கூறான் அல்ல செயினும் ஒருவன் புறம் கூறான் என்றல் இனிது.

**1 அறம்கூறான் அல்ல செயினும் ஒருவன்**
**புறங்கூறான் என்றல் இனிது.** 181

ஒருவன் — ஒருவன், அறம் — அறம் எனப்படுவதையும், கூறான் — செய்யாமல், அல்ல செயினும் — அறமல்லாத தீயவைகளைச் செய்வானானாலும், புறங்கூறான் — புறம் பேசாதவன், என்றல் — என்று உலக மக்களால் பேசப்படுதல், நன்று — மிகவும் நல்லதாகும்.

ஒருவனைக் காணாதபோது இகழ்ந்து பேசி, கண்டபோது பொய்யாகச் சிரித்துப் பேசுதல் என்பது, அறம் இல்லையென அழித்துப் பேசித் தீமைகளைச் செய்வதைவிடத் தீமையானதாகும்.

அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீதே புறன் அழீஇ பொய்த்து நகை.

**2 அறன்அழீஇ அல்லவை செய்தலின் தீதே**
**புறன்அழீஇப் பொய்த்து நகை.** 182

அறன் — அறத்தினை, அழீஇ — அழித்துப்பேசி, அல்லவை — அறமல்லாத தீமைகளை, செய்தலின் — செய்வதைக் காட்டிலும், புறனழீஇ — ஒருவனைக் காணாதபோது அவனை இழிவாகப் பேசி, பொய்த்து — கண்டபோது அவனுடன் பொய்யாக, நகை — நகைத்துப் பேசும் செயல், தீதே — தீமையாகும்.

புறம் பேசிப் பொய்ம்மையான வாழ்க்கையில் வாழ்வதைவிட அது செய்யாமல் இறந்து விடுதல் அறநூல்களில் சொல்லப்படுகின்ற நற்பயனை அவனுக்குத் தருவதாகும்.

**புறங்கூறி பொய்த்து உயிர் வாழ்தலின் சாதல் அறம் கூறும் ஆக்கம் தரும்.**

**3 புறங்கூறிப் பொய்த்துஉயிர் வாழ்தலின் சாதல்**
**அறம்கூறும் ஆக்கம் தரும்.** 183

புறங் கூறி — புறம் பேசி, பொய்த்து — கண்டபோது பொய்யாகப் புகழ்ந்து பேசி, உயிர் — உயிருடன், வாழ்தலின் — வாழ்வதைவிட, சாதல் — இறந்துவிடுதல், அறம் கூறும் — அறநூல்கள் விதிக்கின்ற, ஆக்கம் தரும் — நற்பயனை அவனுக்குத் தருவதாகும்.

ஒருவனுக்கு முன்பாக நின்று தாட்சண்யமில்லாத சொற்களைச் சொன்னாலும் சொல்லுக; முன்னே இல்லாதபோது பின்னால்வரும் தீமையினைக் கருதாத சொற்களைச் சொல்லாது இருப்பாயாக.

**கண் நின்று கண் அறச் சொல்லினும் சொல்லற்க முன் இன்று பின்நோக்கா சொல்.**

**4 கண்நின்று கண்அறச் சொல்லினும் சொல்லற்க**
**முன்இன்று பின்நோக்காச் சொல்.** 184

கண் — கண்முன்னே, நின்று — இருந்துகொண்டு, கண் — இரக்கம், அற — இல்லாத [தாட்சண்யமில்லாத] சொல்லினும் — சொற்களைச் சொன்னாலும், முன் இன்று — ஒருவன் முன்னே இல்லாதபோது, பின் நோக்கா — பின்னர் வருவதான தீமையினைக் கருதாத, சொல் — சொற்களை, சொல்லற்க — சொல்லாதிருப்பாயாக!

அறம் நல்லதென்று வாயினால் பேசுகின்றவனுடைய மனத்தில் அறத்தன்மை இல்லாதிருப்பதை அவன் புறங்கூறுவதற்குக் காரணமான புன்மைத் தன்மையினால் கண்டு கொள்ளப்படும்.

**அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம் சொல்லும் புன்மையால் காணப்படும்.**

**5 அறம்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்**
**புன்மையால் காணப் படும்.** 185

அறம் — அறம் என்பது, சொல்லும் — நல்லதென்று சொல்லுகின்ற, நெஞ்சத்தான் — நெஞ்சுடையவன், அன்மை — அந்த அறத்தன்மை அவனுக்கு இல்லையென்பதை, புறம் சொல்லும் — புறம் பேசுகின்ற, புன்மையால் — அவனுடைய குற்றமான தன்மையால், காணப்படும் — மற்றவர்களால் காணப்படும்.

மற்றவனுடைய குற்றங்களைக் கூறுபவன் தன்னுடைய பழிகளுள்ளும் வருத்தும் தன்மை யுடையவைகளை ஆராய்ந்து பிறரால் சொல்லப்படுவதனையும் கேட்டறிய வேண்டும்.

பிறன் பழி கூறுவான் தன்பழியுள்ளும் திறன் தெரிந்து கூறப்படும்.

**6 பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்**
**திறன்தெரிந்து கூறப் படும்.** 186

பிறன் — மற்றவனுடைய, பழி — பழியென்னும் குற்றத்தினை, கூறுவான் — கூறுகின்றவன், தன்பழியுள்ளும் — அவனது பழிகளிலும், திறன் — துன்பப்படும் தன்மையுடையவைகளை, தெரிந்து — தெரிந்துணர்ந்து, கூறப்படும் — மற்றவர்களால் எடுத்துக் கூறப்படுவான்.

இனிய சொற்களைச் சொல்லி அயலாருடன் நட்புச் செய்தலினை அறியாதவர்கள், தம்மை விட்டு நீங்குமாறு புறம் பேசிச் சுற்றத்தார்களையும் பிரியுமாறு செய்வர்.

பக சொல்லி கேளிர் பிரிப்பர் நக சொல்லி நட்பு ஆடல் தேற்றாதவர்.

**7 பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி**
**நட்பாடல் தேற்றா தவர்.** 187

நக — கூடி மகிழுமாறு, சொல்லி — இனியவை பேசி, நட்பாடல் — நட்புச் செய்வதை, தேற்றாதார் — நல்லதென்று உணராதவர்கள். பகச்சொல்லி — கூடியிருப்பதை விட்டுப் பிரியுமாறு புறம்பேசி, கேளிர் — சுற்றமானவர் களையும், பிரிப்பர் — பிரிந்து போகும் படிச் செய்வர்.

தம்முடன் நெருங்கிப் பழகுபவர்களுடைய குற்றத்தினையும் அவரில்லாதபோது தூற்றிப் பேசுபவர்கள் அயலார் மாட்டுச் செய்வது யாதோ?

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார் என்னைகொல் ஏதிலார்மாட்டு.

**8 துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்**
**என்னைகொல் ஏதிலார் மாட்டு.** 188

துன்னியார் — தம்முடன் நெருங்கிப் பழகுபவர்களுடைய, குற்றமும் — குற்றங் குறைகளையும், தூற்றும் மரபினார் — பலரும் அறியத் தூற்றிப் பேசுகின்ற தன்மையுடையவர்கள், ஏதிலார் மாட்டு — தொடர்பில்லாதவர்களைப் பற்றிப் பேசுவது, என்னைகொல் — எப்படிப்பட்டதாக இருக்குமோ?

புறம் பேசுதலான குற்றத்தினைச் செய்து பழிச் சொற்களை உரைப்பவனுடைய உடல் பாரத்தினைத் தாங்குவதுதான் அறம் என நினைத்து இப்பூமி தாங்கிக் கொண்டிருக் கின்றது போலும்!

அறன் நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன் நோக்கி புன்சொல்
[உரைப்பான் பொறை.

**9 அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை.** 189

புறன் நோக்கி — மற்றவன் இல்லாத நேரம் பார்த்து, புன்சொல் — குற்றமும் பழியுமான சொற்களை, உரைப்பான் — உரைப்பவனுடைய, பொறை — உடம்பு பாரத்தினை, வையம் — பூமியானது, அறம் — இதுவே தனக்கு அறம் என்று, நோக்கி — கருதி, ஆற்றுங்கொல் — தாங்கிக் கொண்டிருக்கின்றது போலும்!

மற்றவர்களுடைய குற்றத்தினைக் கண்டு பேசுவது போலத் தன்னுடைய குற்றத்தினையும் காணும் தன்மை உடையவனானால் அவனுடைய நிலைபேறுடைய உயிர்க்கு உண்டாவ தொரு தீமை உண்டோ?

ஏதிலார் குற்றம்போல் தம் குற்றம் காண்கின் பின் தீது உண்டோ மன்னும் உயிர்க்கு.

**10 ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுஉண்டோ மன்னும் உயிர்க்கு.** 190

ஏதிலார் — மற்றவர்களுடைய, குற்றம்போல் — குற்றத்தினைக் கண்டு பேசுவது போல, தன் — தன்னுடைய, குற்றம் — குற்றத்தினையும், காண்கிற்பின் — காணும் தன்மையுடைய வரானால், மன்னும் — நிலைபெற்ற, உயிர்க்கு — அவரது உயிர்க்கு, தீது உண்டோ — உண்டாவதொரு தீமை உண்டோ?

## 20. பயன் இல சொல்லாமை

**[யாருக்கும் பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருத்தலாகும்]**

அறிவுடையார் பலரும் வெறுக்கும்படியாகப் பயனில்லாத சொற்களைப் பேசுகின்ற ஒருவன் எல்லா மக்களாலும் இகழப்படுவான்.

பல்லார் முனிய பயன் இல சொல்லுவான் எல்லாரும் எள்ளப்படும்.

**1 பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.** 191

பல்லார் — நன்மக்களாகிய பலரும், முனிய — வெறுத்துக் கோபம் கொள்ளுமாறு, பயன் — யாதொரு பயனும், இல் — இல்லாத சொற்களை, சொல்லுவான் — பேசுகிறவன், எல்லாரும் — எல்லா மக்களாலும், எள்ளப்படும் — ஏளனஞ் செய்யப்படுவான்.

விரும்பத் தகாத செயல்களை நண்பர்களிடம் செய்வதைவிடப் பயனொன்றும் இல்லாத சொற்களை அறிவுடையார் பலர் முன்னே ஒருவன் சொல்லுதல் தீதானதாகும்.

பயன் இல பல்லார்முன் சொல்லல் நயன் இல நட்டார்கண் செய்தலின் தீது.

2 பயன்இல பல்லார்முன் சொல்லல் நயன்இல
நட்டார்கண் செய்தலின் தீது. 192

பயன் — பயனொன்றும், இல — இல்லாத சொற்களை, பல்லார்முன் — பலருக்கு முன்பாக, சொல்லல் — சொல்லுவதென்பது, நட்டார்கண் — நண்பர்களிடத்தில், நயன்இல — நன்மையற்ற வெறுக்கத்தக்க செயல்களை, செய்தலின்தீது — செய்வதைக் காட்டிலும் தீமையானதாகும்.

பயனொன்றும் இல்லாதவற்றை ஒருவன் விரிவுபடுத்தி உரைக்கின்ற உரையானது அவன் நீதி இல்லாதவன் என்பதனைச் சொல்லிக் காட்டும்.

நயன் இலன் என்பது சொல்லும் பயன் இல பாரித்து உரைக்கும் உரை.

3 நயன்இலன் என்பது சொல்லும் பயன்இல
பாரித்து உரைக்கும் உரை. 193

பயன் — பயனொன்றும், இல — இல்லாதவற்றை, பாரித்து — விரிவுபடுத்தி, உரைக்கும் — சொல்லுகின்ற, உரை — சொல்லானது, நயன் — [இவன்] நீதி, இலன் — இல்லாதவன், என்பது சொல்லும் — என்பதனைச் சொல்லிக் காட்டும்.

நற்பயன் சேராத குணமில்லாத சொற்களைப் பலரிடத்திலும், ஒருவன் சொல்லுவான் ஆனால் அப்படிப்பட்டவனை, அவை நற்குணங்களிலிருந்து நீக்கிவிடும்.

நயன் சாரா நன்மையின் நீக்கும் பயன் சாரா பண்பு இல்சொல் பல்லார் அகத்து.

4 நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லார் அகத்து. 194

பயன்சாரா — நற்பயன் சேராத, பண்பு — குணம், இல் — இல்லாத, சொல் — சொற்களை, பல்லாரகத்து — பலரிடத்திலும் [சொன்னால்] நயன் சாரா — அவை நீதியோடு சேராதவையாகி, நன்மையின் நீக்கும் — நன்மையினின்றும் அப்படிப்பட்டவனை விலக்கிவிடும்.

நற்குணமுடைய இனிய தன்மை வாய்ந்த பெரியோர்கள் பயனில்லாத சொற்களைச் சொன்னால் அவர்களுடைய மேன்மையும் நன்மதிப்பும் நீங்கிவிடும்.

**சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன் இல நீர்மை உடையார் சொலின்.**

**5 சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல**
**நீர்மை யுடையார் சொலின். 195**

பயன் — நற்பயன், இல — இல்லாதவைகளை, நீர்மை — இனிய பண்பு, உடையார் — உடையவர்கள், சொலின் — சொல்லுவார்களேயானால், சீர்மை — அவர்களுடைய உயர்ச்சியானது, சிறப்புடனே — அவர்கள் பெற்றிருக்கும் நன்மதிப்புடனே, நீங்கும் — அவரிடமிருந்து விலகிப் போகும்.

பயனில்லாத சொற்களைப் பலகாலும் பாராட்டிப் பேசுபவனை மனிதன் என்று கூறாதே; மக்களுக்குள்ளே பதர் என்று சொல்லுக.

**பயன் இல் சொல் பாராட்டுவானை மகன் எனல் மக்கள் பதடி எனல்.**

**6 பயன்இல்சொல் பாராட்டு வானை மகன்எனல்**
**மக்கட் பதடி எனல். 196**

பயன் — நற்பயன், இல் — இல்லாத, சொல் — சொற்களை, பாராட்டுவானை — பாராட்டிப் பன்முறை பேசுபவனை, மகன் எனல் — மனிதன் என்று கூறாதே, மக்கள் — மக்களுக்குள்ளே, பதடி — பதர், எனல் — என்று கூறுவாயாக.

சான்றோர்கள், நயமில்லாத சொற்களைச் சொன்னாலும் சொல்லுவார்களாக; பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருத்தல் நல்லதாகும்.

**நயன் இல சொல்லினும் சொல்லுக சான்றோர் பயன் இல சொல்லாமை நன்று.**

**7 நயன்இல சொல்லினும் சொல்லுக சான்றோர்**
**பயன்இல சொல்லாமை நன்று. 197**

நயன் — நீதியோடு, இல — சேராத சொற்களை, சான்றோர் — அறிவு நிறைந்த பெரியோர்கள், சொல்லினும் — சொன்னாலும்கூட, சொல்லுக — சொல்வார்களாக, பயன் — யாதொரு பயனும், இல் — இல்லாத சொற்களை, சொல்லாமை நன்று — சொல்லாதிருத்தல் மிகவும் நல்லதாகும்.

அறிதற்கரிய நற்பயன்களை ஆய்ந்தறியும் அறிவுடையவர்கள், மிக்க பயனில்லாத சொற்களைச் சொல்ல மாட்டார்கள்.

அரும் பயன் ஆயும் அறிவினார் சொல்லார் பெரும் பயன் இல்லாத சொல்.

8 அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல். 198

அரும் — அறிதற்கு அருமையான, பயன் — பயனாக உள்ளவைகளை, ஆயும் — ஆராய்கின்ற, அறிவினார் — அறிவினையுடைய பெரியார்கள், பெரும் — நிறைவான, பயன் — பயன், இல்லாத சொல் — இல்லாத சொற்களை, சொல்லார் — சொல்லவே மாட்டார்கள்.

அஞ்ஞானத்திலிருந்து நீங்கிய தூய அறிவினையுடைய பெரியோர்கள், பயனிலிருந்து நீங்கிய சொற்களை மறந்தும் சொல்லமாட்டார்கள்.

பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள் தீர்ந்த மாசு அறு காட்சியவர்.

9 பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர். 199

மருள்தீர்ந்த — அஞ்ஞானம் நீங்கிய, மாசு — குற்றம், அறு — இல்லாத, காட்சியவர் — அறிவினையுடைய சான்றோர்கள், பொருள்தீர்ந்த — பயன்தரும் பொருளில்லாத சொற்களை, பொச்சாந்தும் — மறந்தும் கூட, சொல்லார் — சொல்லமாட்டார்கள்.

சொற்கள் பலவற்றுள்ளும் பயன்தரக்கூடிய சொற்களைச் சொல்லுவாயாக; சொற்களில் பயனேதும் இல்லாத சொற்களைச் சொல்லாதிருப்பாயாக.

சொல்லுக சொல்லில் பயன் உடைய சொல்லற்க சொல்லில் பயன் இலா சொல்.

10 சொல்லுக சொல்லில் பயன்உடைய சொல்லற்க
சொல்லில் பயன்இலாச் சொல். 200

சொல்லில் — சொற்கள் பலவற்றுள்ளும், பயனுடைய — பயன் தரக்கூடிய சொற்களையே, சொல்லுக — சொல்லுவாயாக, சொல்லில் — சொற்களில், பயன் — நற்பயன், இல — ஏதும் இல்லாத, சொல் — சொற்களை, சொல்லற்க — சொல்லாதிருப்பாயாக.

## 21. தீவினை அச்சம்

**[தீமையான செயல்களைச் செய்தபிற்கு அஞ்சுதலாகும்]**

தீச்செயல் என்னும் செருக்குடைய அறியாமைக்கு தீவினையாளராகிய தீச்செயல் நெஞ்சங் கொண்டவர்கள் அஞ்சமாட்டார்கள். சீரிய சிறப்புடையவர்கள் அச்சப்படுவார்கள்.

தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர் தீவினை என்னும் செருக்கு.

**1 தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்**
**தீவினை என்னும் செருக்கு. 201**

தீவினை — தீச்செயல், என்னும் — எனப்படும், செருக்கு — செருக்குடைய தன்மைக்கு தீவினையார் — தீச்செயல் நெஞ்சங் கொண்டவர்கள் [தீவினையாளர்கள்] அஞ்சார் — அஞ்ச மாட்டார்கள், விழுமியார் — சீரிய சிறப்புடையவர்கள், அஞ்சுவர் – அச்சப்படுவார்கள்.

தீச்செயல்கள் தீமையினையே கொடுப்பதால் தீச்செயல்கள் தீயினைவிடக் கொடுமையென்று அஞ்சப்படும்.

தீயவை தீய பயத்தலான் தீயவை தீயினும் அஞ்சப்படும்.

**2 தீயவை தீய பயத்தலான் தீயவை**
**தீயினும் அஞ்சப் படும். 202**

தீயவை — தீச்செயல்கள், தீய — பின்னே தீமையினை, பயத்தலான் — கொடுப்பதால், தீயவை — தீச்செயல்கள், தீயினும் அஞ்சப்படும் — நெருப்பினைவிடக் கொடுமையானதென்று அஞ்சப்படும்.

தமக்குத் துன்பம் உண்டாக்குபவர்களுக்கும் தீவினைகளைச் செய்யாமல் விடுதல் என்பதை அறிவுகள் எல்லாவற்றிற்கும் தலையாய அறிவு என்று நல்லோர் சொல்லுவர்.

அறிவினுள் எல்லாம் தலை என்ப தீய செறுவார்க்கும் செய்யாவிடல்.

**3 அறிவினுள் எல்லாம் தலைஎன்ப தீய**
**செறுவார்க்கும் செய்யா விடல். 203**

செறுவார்க்கும் — தமக்குத் துன்பம் செய்வார்க்கும், தீய — தீமையான செயல்களை, செய்யாவிடல் — செய்யாதிருப்பதை, அறிவினுள் — அறிவுச் செயல்கள், எல்லாம் — எல்லாவற்றிலும், தலை — தலைமையான அறிவாகும், என்ப — என்று பெரியோர்கள் சொல்லுவார்கள்,

ஒருவன் மறந்தேனும் பிறனுக்குத் தீமைதரும் செயல்களைச் செய்யாதிருப்பானாக; அப்படி நினைப்பானாகில் அவனுக்குத் தீங்கினை அறம் நினைக்கும்.

மறந்தும் பிறன் கேடு சூழற்க சூழின் அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு.

**4 மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்**
**அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு. 204**

பிறன் — மற்றவனுக்கு, கேடு — தீங்கினை, மறந்தும் — மறந்துங்கூட, சூழற்க — நினையாதிருப்பனாக, சூழின் — நினைப்பானாகில், சூழ்ந்தவன் — நினைத்தவனுக்கு, கேடு — தீங்கினை, அறம் சூழும் — அறமானது நினைத்துவிடும்.

நான் வறியவன்' என்று நினைத்து அதனைப் போக்க ஒருவன் தீயசெயல்களைச் செய்யாதிருப்பானாக; அப்படிச் செய்வானானால் மீண்டும் வறியவனாவான்.

இலன் என்று தீயவை செய்யற்க செய்யின் இலன் ஆகும் மற்றும் பெயர்த்து.

**5 இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்**
**இலன்ஆகும் மற்றும் பெயர்த்து. 205**

இலன் — யான் வறியவன், என்று — என்பதாக எண்ணி, [அதனைப் போக்க] தீயவை — தீய செயல்களை, செய்யற்க — செய்யாதிருப்பானாக, செய்யின் — அவ்வாறு செய்வானேயாகில், பெயர்த்து — மீண்டும், இலன் — இல்லாதவன், ஆகும் — ஆவான்.

தமக்குப் பின்பு துன்பங்கள் வந்து வருத்த வேண்டாமென்று நினைப்பவர்கள், பிறர்க்குத் துன்பம் தரும் செயல்களைச் செய்யாதிருப்பார்களாக.

தீப்பால தான் பிறர்கண் செய்யற்க நோய்ப்பால தன்னை அடல் வேண்டாதான்.

**6 தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை அடல்வேண்டா தான். 206**

நோய்ப்பால — துன்பம் தரும் தன்மையுடையவைகள், தன்னை — தன்னிடம் வந்து, அடல் — துன்புறுத்துவதை, வேண்டாதான் — விரும்பாதவன், தீப்பால — தீய தன்மையுடைய செயல்களை, தான் — தான், பிறர்கண் செய்யற்க — மற்றவர்களுக்குச் செய்யாதிருப்பானாக.

எவ்வளவு பெரிய பகையுடையவர்களும் ஒருவாற்றால் ஒருகால் தப்பிவிடுவர். ஆனால் தீச்செயலாகிய பகை நீங்காமல் பின்னேயே போய்க் கொல்லும்.

எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை வீயாது பின் சென்று அடும்.

**7 எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை**
**வீயாது பின்சென்று அடும். 207**

**எனைப்பகை** — எப்படிப்பட்ட பெரிய பகையினை, **உற்றாரும்** — உடையவர்களும், **உய்வர்** — ஒருகால் தப்பித்துக் கொள்வர், **வினைப்பகை** — தீவினையென்னும் பகையானது, **வீயாது** — அவனை விட்டு நீங்காமல், **பின்** — அவன் பின்னே, **சென்று** — போய், **அடும்** — அவனைக் கொன்றுவிடும்.

பிறர்க்குத் தீங்கு செய்பவர்கள் தப்பாமல் கெடுவது எப்படியென்றால், ஒருவனுடைய நிழல் அவனை விடாமல் அடியிலேயே தங்குவது போன்ற தன்மையாகும்.

தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை வீயாது அடி உறைந்தற்று.

**8 தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை**
**வீயாது அடிஉறைந் தற்று. 208**

**தீயவை செய்தார்** — தீமையான செயல்களைச் செய்தவர்கள், **கெடுதல்** — தாம் கெட்டு விடுதல், [எப்படிப்பட்டதென்றால்] **நிழல்** — ஒருவனுடைய நிழலானது, **தன்னை** — அவனை, **வீயாது** — விடாமல் வந்து, **அடி உறைந்தற்று** — கால்களின் அடியிலேயே வந்து தங்கியது போன்றதாகும்.

ஒருவன் தன்னைத் தானே விரும்புவானானால் சிறிதளவும் பிறனுக்குத் தீச்செயல் ஒன்றேயாயினும் செய்யாதிருப்பானாக.

தன்னை தான் காதலன் ஆயின் எனைத்து ஒன்றும் துன்னற்க தீவினைப்பால்.

**9 தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்துஒன்றும்**
**துன்னற்க தீவினைப் பால் 209**

**தன்னைத்தான்** — தன்னையேதான், **காதலனாயின்** — விரும்பி நேசிப்பானாகில், **தீவினைப் பால்** — தீவினையென்னும் தன்மையுடையவைகளுள், **எனைத்தொன்றும்** — எவ்வளவு சிறியதாக இருப்பது ஒன்றினைக்கூட, **துன்னற்க** — மற்றவர்களுக்குச் செய்யாதிருப்பானாக.

ஒருவன் கொடுமையான வழியிலே சென்று தீச்செயல்களைப் பிறருக்குச் செய்யாதிருப்பானா னால் அவன் கெடுதி இல்லாதவன் என்பதனை அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

**அருங்கேடன் என்பது அறிக மருங்கு ஓடி தீவினை செய்யான் எனின்.**

**10 அருங்கேடன் என்பது அறிக மருங்குஓடித்**
**தீவினை செய்யான் எனின்.** 210

மருங்குஓடி — கொடுமையான வழியிலே போய், தீவினை — தீச் செயல்களை, செய்யான் — செய்யாதிருப்பவன், எனின் — என்றால், [அப்படிப்பட்டவன்] அருங்கேடன் — கெடுதி என்பது அணுகாதவன், என்பது அறிக — என்பதனை அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

## 22. ஒப்புரவு அறிதல்

**[உலக நடையினை அறிந்து பிறர்க்குப் பயன்பட்டு வாழ்தலாகும்]**

நமக்கு நீரைத் தருகின்ற மேகங்களுக்கு உயிர்கள் என்ன கைம்மாறு [பதில் உதவி] செய் கின்றன? அதுபோல் மேகங்கள் போன்ற பெரியவர்கள் செய்கின்ற ஒப்புரவுகளும் கைம்மாறு எதிர்பார்ப்பன அல்ல.

**கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு என் ஆற்றும்கொல் உலகு.**

**1 கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு**
**என்ஆற்றும் கொல்லோ உலகு.** 211

மாரிமாட்டு — நீர் தருகின்ற மேகங்களுக்கு, உலகு — உலகிலுள்ள உயிர் வாழ்வன, என் — என்ன கைம்மாறு [பதில் உதவி], ஆற்றும் — செய்கின்றன, [அது போல] கடப்பாடு — மேகங்கள் போன்ற பெரியவர்கள் செய்யும் நன்மைகளும், கைம்மாறு வேண்டா — திரும்பப் பெறும் உதவிகளை வேண்டிச் செய்யப்படுவன அல்ல. [கொல்லோ — அசைநிலை]

தகுதியுடைய பெரியவர்களுக்கு, முயற்சி செய்து ஈட்டிய பொருளெல்லாம் ஒப்புரவு [உதவி] செய்வதற்கேயாகும்.

**தாள் ஆற்றி தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தல் பொருட்டு.**

**2 தாள்ஆற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தற் பொருட்டு.** 212

தக்கார்க்கு — தகுதியுடைய பெரியவர்களுக்கு, தாள் — முயற்சியினை, ஆற்றி — செய்து, தந்த பொருளெல்லாம் — ஈட்டிய பொருள் எல்லாம், வேளாண்மை — ஒப்புரவு [உதவி], செய்தற்பொருட்டு — செய்வதற்கேயாகும்.

புத்தேள் உலகத்திலும் இவ்வுலகத்திலும் ஒப்புரவு போல [பிறர்க்கு உதவி செய்தல் போல] நல்ல பிற செயல்களைப் பெறுதல் அரிதாகும்.

புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிதே ஒப்புரவின் நல்ல பிற.

3 புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே
ஒப்புரவின் நல்ல பிற. 213

புத்தேள் — தேவர்கள் இருக்கும், உலகத்தும் — உலகத்திலும், ஈண்டும் — இந்த உலகத்திலும், ஒப்புரவின் — ஒப்புரவினைப் போல, நல்ல — நல்லதான, பிற — பிறவற்றை, பெறல் அரிது — பெறுதல் என்பது அரிதானதாகும்.

உயிரோடு கூடி வாழ்பவன் என்பவன் உலக நடையினை அறிந்து வாழ்பவனாவான். அவ்வாறு அறிந்து வாழாதவன் செத்தவர்களுள் ஒருவனாக வைத்துக் கருதப்படுவான்.

ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான் மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்.

4 ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 214

உயிர் வாழ்வான் — உயிருடன் வாழ்பவன் என்பவன், ஒத்தது — உலக நடைக்கு ஏற்ப, அறிவான் — அறிந்து ஒத்து வாழ்பவன் ஆவான், மற்றையான் — அவ்வாறு அறிந்து வாழாதவன், செத்தாருள் வைக்கப்படும் — செத்தவர்களுள் ஒருவனாக வைத்துக் கருதப் படுவான்.

உலக நடையினை அறிந்து நடக்கின்ற பேரறிஞனுடைய செல்வமானது ஊரில் வாழ்பவர்கள் தண்ணீர் உண்ணும் குளம் நீர் நிறைந்திருப்பது போன்றதாகும்.

ஊருணி நீர் நிறைந்தற்றே உலகு அவாம் பேர் அறிவாளன் திரு.

5 ஊருணி நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு. 215

உலகு — உலக நடையான ஒப்புரவினை, அவாம் — விரும்பி நடந்து கொள்ளும், பேர் — பெரிய அறிவாளன் — அறிஞனிடம், திரு — செல்வம் நிறைந்திருப்பதானது, ஊருணி — ஊரில் வாழ்பவர்கள் உண்ணுகின்ற குளம், நீர் - தண்ணீரினால் நிறைந்தற்று — நிறைந்திருப்பது போன்றதாகும்.

செல்வமானது ஒப்புரவு செய்பவனிடத்தில் உண்டாகி இருக்குமானால், அது பயன்படுகின்ற மரம் ஊர் நடுவே பழுத்திருப்பது போன்றதாகும்.

பயன் மரம் உள்ளூர் பழுத்தற்றால் செல்வம் நயன் உடையான்கண் படின்.

**6 பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**
**நயன்உடை யான்கண் படின். 216**

செல்வம் — செல்வம், நயன் — உதவி, உடையான்கண் — செய்கின்றவனிடத்தில், படின் — உண்டாகி இருக்குமானால், [அப்படி இருப்பது] உள்ளூர் — ஊர் நடுவில், பயன் — பயனைத் தருகின்ற, மரம் பழுத்தற்று — மரமானது பழம் நிறைந்திருப்பது போன்றதாகும்.

செல்வம் ஒப்புரவு செய்யும் பெருந்தகையாளனிடத்தில் உண்டாகி இருக்குமேயானால் அது, பிணிகட்கு எல்லா உறுப்புக்களினாலும் மருந்தாகித் தப்பாத மரத்தினை ஒப்பதாகும்.

மருந்து ஆகி தப்பா மரத்தற்றால் செல்வம் பெருந்தகையான்கண் படின்.

**7 மருந்துஆகித் தப்பா மரத்தற்றால் செல்வம்**
**பெருந்தகை யான்கண் படின். 217**

செல்வம் — செல்வம், பெருந்தகையான்கண் — ஒப்புரவு செய்யும் சிறந்த பெருந்தகையாளனிடம், படின் — உண்டாகி இருக்குமேயானால், [அச் செல்வம்] மருந்தாகி — எல்லா உறுப்புக்களினாலும் நோய்க்கு மருந்தானதாகி, தப்பா மரத்தற்று — மற்றவர்க்குப் பயன்படுவதிலிருந்து தப்பாத மரத்தினை ஒத்ததாகும்.

தாம் செய்யத் தகுவனவற்றை அறிந்த இயற்கை அறிவுடையவர்கள், செல்வம் சுருங்கிய காலத்திலும் ஒப்புரவு செய்வதற்குத் தளர மாட்டார்கள்.

இடன் இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார் கடன் அறி காட்சியவர்.

**8 இடன்இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்**
**கடன்அறி காட்சி யவர். 218**

கடன் — தாம் செய்யத் தகுந்த கடமைகளை, அறி — அறிந்த, காட்சியவர் — இயற்கையறிவினையுடைய பெரியவர்கள், கடன் — ஒப்புரவு செய்தற் கேற்ற செல்வம், இல் — இல்லாமல் குறைந்த, பருவத்தும் — காலத்திலும், ஒப்புரவிற்கு — மற்றவர்களுக்கு உதவி செய்வதற்கு, ஒல்கார் — மனம் தளர மாட்டார்கள்.

ஒப்புரவு செய்பவனுக்கு வறுமை என்பது யாதென்றால் தவறாமல் செய்கின்ற ஒப்புரவினைச் செய்ய முடியாமல் வருந்தி இருக்கும் நிலைமையே ஆகும்.

நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும் நீர செய்யாது அமைகலா ஆறு.

**9 நயன்உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர**
**செய்யாது அமைகலா ஆறு.** 219

நயனுடையான் — ஒப்புரவு செய்யும் தன்மையாளன், நல்கூர்ந்தான் — வறுமையுடையவன், ஆதல் — ஆனான் என்பது [என்னவென்றால்] செய்யும் — தவறாமல் செய்கின்ற, நீர்மை — தன்மையுடைய ஒப்புரவுகளை, செய்யாது — செய்ய முடியாமல், அமைகலா ஆறு — வருந்து கின்ற நிலைமையேயாகும்.

ஒப்புரவு செய்வதால் கேடுவரும் என்று சொல்லுபவர்கள் இருப்பார்களேயானால், அப்படிப் பட்ட கெடுதி ஒருவன் தன்னை விற்றாயினும் கொள்ளும் தகுதியினை உடையதாகும்.

ஒப்புரவினால் வரும் கேடு எனின் அஃது ஒருவன் விற்று கோள் தக்கது உடைத்து'

**10 ஒப்புரவி னால்வரும் கேடுஎனின் அஃதுஒருவன்**
**விற்றுக்கோள் தக்கது உடைத்து.** 220

ஒப்புரவினால் — உதவி செய்வதால், கேடு — கெடுதி, வரும்— வருவதாகும், எனின் — என்று சொல்லுபவர் உண்டானால், அஃது — அக் கெடுதியானது, ஒருவன் — ஒருவன், விற்று — தன்னை விற்றாகிலும், கோள் தக்கது — அதனைக் கொள்ளும் தகுதியினை, உடைத்து — உடையதாகும் என்க.

## 23. ஈகை

### [வறியவர்களுக்குக் கொடுத்தல் என்பதாம்]

யாதொரு பொருளும் இல்லாதவர்களுக்கு ஒன்றினைக் கொடுப்பதே ஈகையாகும். அப்படிப் பட்டவர்கள் அல்லாதவர்க்குக் கொடுப்பது பின் வரும் பயனைக் கருதிக் கொடுக்கும் தன்மையுடையதாகும்.

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை மற்று எல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து.

**1 வறியார்க்குஒன்று ஈவதே ஈகைமற்று எல்லாம்**
**குறியெதிர்ப்பை நீரது உடைத்து.** 221

வறியார்க்கு — ஒரு பொருளும் இல்லாத வறியவர்களுக்கு, ஒன்று ஈவதே — ஒரு பொருளைக் கொடுப்பதுதான், ஈகை — உதவி செய்வதாகும், மற்றெல்லாம் — மற்ற வகையில் கொடுப்பதெல்லாம், குறியெதிர்ப்பை — குறிப்பாகப் பின்னர் வரக்கூடிய பயனைக் கருதிய, நீரது உடைத்து — தன்மையினை உடையதாகும்.

இரப்பது [யாசிப்பது] நன்னெறியாகும் என்று சொல்லுபவர்கள் இருந்தாலும் அது தீதான செயலாகும். ஈகையினைச் செய்வதால் மேலுலகம் அடைய முடியாதென்று சொன்னாலும் ஈதலே நன்று.

நல் ஆறு எனினும் கொளல் தீது மேல் உலகம் இல் எனினும் ஈதலே நன்று.

**2 நல்ஆறு எனினும் கொளல்தீது மேல்உலகம்**
**இல்எனினும் ஈதலே நன்று. 222**

கொளல் — யாசித்துக் கொள்ளுதல், நல் — நல்ல, ஆறு — நெறி, எனினும் — என்பவர் இருந்தாலும், தீது — அச்செயல் தீமையானதேயாகும், [வறியவர்களுக்குக் கொடுத்தால்] மேல் உலகம் — மேல் உலகம் என்பது, இல் — இல்லை [கிடைக்காது], எனினும் — என்றாலும், ஈதலேநன்று — கொடுப்பதுதான் [ஈகைதான்] நல்லதாகும்.

தான் வறியவன் என்று சொல்லி வந்தவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் கொடுப்பதே நல்ல குடியில் பிறந்தவர்களிடத்தில் காணப்படும் நற்குணமாகும்.

இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல் குலன் உடையான் கண்ணே உள.

**3 இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலன்உடையான் கண்ணே உள. 223**

இலன் — யாம் ஏதுமில்லாமல் வறுமையிலுள்ளோம், என்னும் — என்று கூறும், எவ்வம் — இழிவினை, உரையாமை — யாசிப்பவன் பிறரிடத்தில் போய்ச் சொல்லாதிருக்குமாறு, ஈதல் — நிறைய கொடுக்கும் தன்மை, குலன் — நற்குடியில், உடையான் கண்ணே — பிறப்பினை உடையவனிடத்தில், உள — உண்டாகி இருப்பதாகும்.

யாசிப்பது மட்டும் அல்லாமல் யாசிக்கப்படுவதும் இன்பம் தருவது அல்ல; எது வரைக்கும் என்றால், ஒரு பொருளை யாசிப்பவரது இனிய முகத்தினைக் காணுகின்ற வரைக்கும் என்பதாம்.

இன்னாது இரக்கப்படுதல் இரந்தவர் இன்முகம் காணும் அளவு.

**4 இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்**
**இன்முகம் காணும் அளவு. 224**

இரந்தவர் — யாசித்தவரது, இன்முகம் — [யாசித்துப் பொருள் பெற்றதால் உண்டாகும்] இனிய முகத்தினை, காணுமளவு — பார்க்கின்ற வரை, இரக்கப்படுதல் — யாசிப்பதேயல்லாமல் யாசிக்கப்படுதலும், இன்னாது — இன்பம் தருவது ஆகாது [துன்பமேயாகும்].

தவம் செய்பவர்களுக்கு வல்லமை எதுவென்றால் தமக்கு உண்டாகும் பசியைப் பொறுத்துக் கொள்ளுதலாகும். அந்த வல்லமையும் பொறுத்தற்கரிய அப்பசியைப் போக்குபவரது வல்லமைக்குப்பின் என்று சொல்லப்படும்.

**ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல் அப்பசியை மாற்றுவார் ஆற்றலின் பின்.**

**5 ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின் பின்.** 225

**ஆற்றுவார்** — ஆற்றல் பெற்ற தவத்தோருக்கு, **ஆற்றல்** — வல்லமை யென்னவென்றால் **பசி** — தமக்குண்டான பசியை, **ஆற்றல்** — பொறுத்துக் கொள்ளுதலாகும் [பொறுத்துக் கொள்ளும் வல்லமையாகும்] அதுவும், **அப்பசியை** — அப்படிப்பட்ட பசியை, **மாற்றுவார்** — உணவளித்து நீக்குகின்றவர், **ஆற்றலின்** — பெற்றிருக்கும் வல்லமைக்கு, **பின்** — பின்னே யாகும்.

வறியவர்களது கொடிய பசியை அறம் நோக்கிப் போக்குதல் வேண்டும். அப்படிச் செய்வதாவது, ஒருவன் தான் பெற்றிருக்கும் பொருளினைத் தனக்குப் பயன்படும்படியாக வைக்கும் இடம் என்று கருதப்படும். அந்த அறமே இடமாகும்.

**அற்றார் அழி பசி தீர்த்தல் அஃது ஒருவன் பெற்றான் பொருள் வைப்புழி.**

**6 அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதுஒருவன்**
**பெற்றான் பொருள்வைப் புழி.** 226

**அற்றார்** — ஒன்றுமில்லாதவரது, **அழி** — மிகுந்த, **பசி** — பசியினை, **தீர்த்தல்** — நீக்குதல் வேண்டும், **அஃது** — அப்படிச் செய்வதானது, **பொருள்** — பொருளினை, **பெற்றான்** — பெற்று வைத்திருக்கும், **ஒருவன்** — ஒருவன், **வைப்புழி** — அப்பொருளைத் தனக்குப் பயன்படுமாறு வைக்க வேண்டிய இடம் அதுவேயாகும்.

எப்போதும் பகுத்துப் பிறர்க்குக் கொடுத்து உண்ணப் பழகிய ஒருவனை; பசி என்று சொல்லப்படும் கொடிய நோய் தீண்டுதல் இல்லை.

**பாத்து ஊண் மரீஇயவனை பசி என்னும் தீப்பிணி தீண்டல் அரிது.**

**7 பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்**
**தீப்பிணி தீண்டல் அரிது.** 227

**பாத்து** — பகுத்துக் கொடுத்து, **ஊண்** — பிறரும் தானும் உண்ணுதலை, **மரீஇயவனை** — மேற்கொண்டு பழகிய ஒருவனை, **பசி** — பசி, **என்னும்** — என்று சொல்லப்படும், **தீப்பிணி** — கொடிய நோய், **தீண்டல்** — தீண்டுதல், **அரிது** — இல்லையாகும்.

ஈதலினைச் செய்யாமல் தம்முடைய பொருளினைப் பத்திரமாக வைத்து இழந்து விடுகின்ற இரக்கமற்றவர்கள், வறியவர்களுக்குக் கொடுத்து அவர்கள் மகிழ்வதனால் தமக்கு வரும் இன்பத்தினை அறிய மாட்டார்களோ?

ஈத்து உவக்கும் இன்பம் அறியார்கொல் தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர்

**8 ஈத்துஉவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை**
**வைத்துஇழக்கும் வன்க ணவர். 228**

தாம் — தங்கள், உடைமை — உடைமையாகிய பொருளினை, வைத்திழக்கும் — பத்திரமாக வைத்துப் பிறகு இழந்து விடுகின்ற, வன்கணவர் — இரக்கமில்லாதவர்கள், ஈத்து — வறுமை யாளர்களுக்குக் கொடுத்து, உவக்கும் — அவர் மகிழ்கின்ற மகிழ்ச்சியினால், இன்பம் — தமக்கு வரும் இன்பத்தினை, அறியார்கொல் — அறிய மாட்டார்களோ?

நிறைய சேர்த்து வைத்துத் தாமே உண்டு மகிழ்கின்ற செயல், பிறரிடத்தில் சென்று யாசிப்ப தனைவிடத் துன்பம் தருவதாகும்.

இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய தாமே தமியர் உணல்.

**9 இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய**
**தாமே தமியர் உணல். 229**

நிரப்பிய — நிறைய சேர்த்து வைத்து, தாமே — தாங்கள் மட்டும், தமியர் — தனித்திருந்து, உணல் — உண்ணுகின்ற தன்மையானது, மன்ற — உறுதியாக, இரத்தலின் இன்னாது — பிறரிடம் சென்று யாசிப்பதனைவிடக் கொடுமை பயப்ப தொன்றாகும்.

சாதல் போலத் துன்பம் தருவது வேறு எதுவும் இல்லை. அப்படிப்பட்ட சாதலும், வறியவர்களுக்குக் கொடுக்க முடியாதபோது இன்பம் தருவதாகும்.

சாதலின் இன்னாதது இல்லை இனிது அதூஉம் ஈதல் இயையாக்கடை.

**10 சாதலின் இன்னாதது இல்லை இனிதுஅதூஉம்**
**ஈதல் இயையாக் கடை. 230**

சாதலின் — இறத்தலைப் போல, இன்னாதது இல்லை — துன்பம் தருவது வேறு எதுவும் இல்லையாகும், அதூஉம் — அப்படிப்பட்ட சாவும், ஈதல் — வறியவர்களுக்குக் கொடுத்தல் என்பது, இயையாக்கடை — முடியாமல் இருக்கின்ற போது, இனிது — இன்பம் தருவ தாகும்.

## 24. புகழ்

**[வாழ வேண்டிய முறையில் வாழ்ந்து நிலைத்து நிற்கும் புகழினைப் பெறுதல்]**

வறியவர்களுக்கு ஈதலைச் செய்வாயாக! அதனால் புகழெய்திவாழ்வாயாக; அப்புகழல்லாமல் மக்களுயிர்க்குப் பயன் வேறு எதுவும் இல்லை.

ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு.

**1 ஈதல் இசைபட வாழ்தல் அதுஅல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு. 231**

ஈதல் — ஈகையினைச் செய்து, இசைபட — அதனால் புகழ் உண்டாக, வாழ்தல் — வாழ்தல் வேண்டும், அது — அத்தகைய புகழ், அல்லது — அல்லாமல், உயிர்க்கு — மக்களுயிர்க்கு, ஊதியம் இல்லை — பயனாக இருப்பது வேறு எதுவும் இல்லை.

உலகத்தில் பெருமையாகச் சொல்லுபவர்கள் சொல்லுபவையெல்லாம் வறுமையால் இரப்பவர்களுக்கு [யாசிப்பவர்களுக்கு] ஈதலினைச் செய்வதனால் ஒருவற்கு உண்டாகும் புகழேயாகும்.

உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று ஈவார்மேல் நிற்கும் புகழ்.

**2 உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்குஒன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ். 232**

உரைப்பார் — உலகில் சிறப்பாகச் சொல்லுபவர்கள், உரைப்பவை — சொல்லுபவை, எல்லாம் — எல்லாம், இரப்பார்க்கு — யாசிப்பவர்களுக்கு, ஒன்று — ஒரு பொருளினை, ஈவார்மேல் — ஈதல் செய்பவர்கள்மேல், நிற்கும் புகழ் — நிற்கின்ற புகழேயாகும்.

நிகரில்லாத ஓங்கிய புகழல்லாமல் இந்த உலகத்தில் அழியாமல் நிற்பது வேறு எதுவும் இல்லை.

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால் பொன்றாது நிற்பது ஒன்று இல்.

**3 ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ்அல்லால்**
**பொன்றாது நிற்பதொன்று இல். 233**

ஒன்றா — தனக்கு ஒப்பில்லாத, உயர்ந்த — உயர்வான, புகழ் — புகழ், அல்லால் — அல்லாமல், உலகத்து — இவ்வுலகிலே, பொன்றாது — அழிவில்லாமல், நிற்பது — நிலைத்து நிற்பது, ஒன்று இல் — பிறிதொன்று இல்லை.

ஒருவன் இப்பூமியின் எல்லைக்குள் அழியாத புகழினை உண்டாக்கிக் கொள்ளுவானே யானால், உலகம் அவனையல்லாமல் வருகின்ற புலவர்களைப் பாராட்டாது.

**நிலவரை நீள் புகழ் ஆற்றின் புலவரை போற்றாது புத்தேள் உலகு.**

**4 நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்**
**போற்றாது புத்தேள் உலகு.** 234

நிலவரை — பரந்த இப்பூமியின் எல்லைக்குள், நீள் — அழியாது நிற்கும், புகழ் — புகழினை, ஆற்றின் — ஒருவன் உண்டாக்கிக் கொள்ளுவானாகில், புத்தேள் உலகம் — தேவர்கள் உலகமானது, புலவரை — தன்னிடம் வந்த புலவர்களை, போற்றாது — போற்றிப் பாராட்டாது.

புகழுடம்பிற்குப் பெருக்கமாகும் கெடுதியும், அப்புகழுடம்பு நிலைத்து நிற்பதற்கு இறத்தலும் சிறந்த பல்கலைத் திறமையுடையவர்களுக்கு அல்லாமல் மற்றையோருக்கு முடியாததாகும்.

**நத்தம்போல் கேடும் உளது ஆகும் சாக்காடும் வித்தகர்க்கு அல்லால் அரிது.**

**5 நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்**
**வித்தகர்க்கு அல்லால் அரிது.** 235

நத்தம் [ஆகும்] — புகழுடம்பிற்குப் பெருக்கமாகும், கேடும் — கெடுதியும், உளது — அப்புகழ் உடம்பு நிலைத்து நிற்பதற்கு, ஆகும் — ஆகின்ற, சாக்காடும் — இறத்தலும், வித்தகர்க்கு — சிறந்த ஆற்றல் படைத்தவர்க்கு, அல்லால் — அல்லாமல், அரிது — மற்றையோருக்கு முடியாததாகும். [போல் —அசை நிலை]

மக்களாகப் பிறந்தால் புகழுண்டாவதற்கான குணங்களோடு பிறத்தல் வேண்டும். அக்குணம் இல்லாதவர்கள் மக்களாகப் பிறப்பதைவிடப் பிறவாதிருத்தலே நல்லதாகும்.

**தோன்றின் புகழொடு தோன்றுக அஃது இலார் தோன்றலின் தோன்றாமை நன்று.**

**6 தோன்றின் புகழொடு தோன்றுக அஃதுஇலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று.** 236

தோன்றின் — மக்களாகப் பிறந்தால், புகழொடு — புகழடைவதற்கேற்ற குணங்களுடன், தோன்றுக — பிறத்தல் வேண்டும். அஃது — அவ்வாறு, இலார் — அத்தன்மை இல்லாதவர்கள், தோன்றலின் — மனிதராய்ப் பிறத்தலைவிட, தோன்றாமை நன்று — பிறவாதிருத்தலே நல்லதாகும்- [விலங்காய்ப் பிறத்தல் நன்று.]

தமக்குப் புகழுண்டாகும்படி வாழாதவர்கள் அது பற்றிப் பிறர் இகழும்போது, அவ்வாறு இகழ் பவர்கள் மீது வருத்தப்படுதல் ஏனோ?

புகழ் பட வாழாதார் தம் நோவார் தம்மை இகழ்வாரை நோவது எவன்.

7 புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன். 237

புகழ் — தமக்குப் புகழ், பட — உண்டாகும்படியாக, வாழாதார் — வாழ முயற்சிக்காதவர்கள், தம் நோவார் — தம்மையே நொந்து கொள்ளாமல், தம்மை — தங்களை, இகழ்வாரை — இகழ்பவர்களை, நோவது எவன் — நொந்து கொள்ளுவது எதனைக் கருதி?

இசை [புகழ்] என்று இருக்கக்கூடிய எச்சத்தினைப் பெறாவிட்டால், உலகில் உள்ளவர்களுக் கெல்லாம் அதுவே வசையாகும் என்று உயர்ந்தோர் சொல்லுவார்கள்.

வசை என்ப வையத்தார்க்கு எல்லாம் இசை என்னும் எச்சம் பெறாவிடின்.

8 வசைஎன்ப வையத்தார்க்கு எல்லாம் இசைஎன்னும்
எச்சம் பெறாஅ விடின். 238

இசை — புகழ், என்னும் — என்று கூறப்படுகின்ற, எச்சம் — எஞ்சி நிற்பதாகிய எச்சத்தினை, பெறாவிடின் — அடையாமல் போவாராயின், வையத்தார்க்கு — உலகில் உள்ளோருக்கு, எல்லாம் — எல்லாம், வசை என்ப — அதுவேதான் இகழ்ச்சியாகுமென்று உயர்ந்தோர் உரைப்பர்.

புகழினை அடையாத உடம்பினைத் தாங்கிய நிலத்தில் பழிப்பில்லாத வளப்பமான விளைச்சல் குன்றிவிடும்.

வசை இலா வண் பயன் குன்றும் இசை இலா யாக்கை பொறுத்த நிலம்.

9 வசைஇலா வண்பயன் குன்றும் இசைஇலா
யாக்கை பொறுத்த நிலம். 239

இசை — புகழினை, இலா — அடையாத, யாக்கை — உடம்பினை, பொறுத்த — தாங்கிய, நிலம் — நிலத்தினில், வசை இலா — பழித்தல் இல்லாத, வண் — வளப்பமான, பயன் — விளைச்சல், குன்றும் — குறைந்துவிடும்.

தம்மிடம் இகழ்ச்சியில்லாமல் வாழ்பவர்களே உயிரோடு வாழ்பவராவார்கள். புகழ் உண்டாகாமல் வாழ்பவர்களே வாழாதவர்கள் ஆவார்கள்.

வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர்.

**10 வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசைஒழிய**
**வாழ்வாரே வாழா தவர். 240**

வசை — இகழ்ச்சி, ஒழிய — தம்மிடம் இல்லாதபடி, வாழ்வாரே — வாழ்பவர்களே, வாழ்வார் — உயிருடன் வாழ்பவராவார்கள், இசை — புகழ், ஒழிய — இல்லாமல், வாழ்வாரே — வாழ்பவர்களே, வாழாதவர் — வாழாதவர்கள் ஆவார்கள்.

## 25. அருள் உடைமை

**[உலகில் உள்ள எல்லா உயிர்களிடத்திலும் இரக்கம் கொண்டிருத்தல்]**

செல்வங்களுக்குள் சிறந்த செல்வமாவது அருளால் வரும் செல்வமேயாகும். அது வல்லாமல், பிற செல்வங்கள் பொருளால் வருபவை இழிந்தவர்களிடத்திலும் இருப்பதாகும்.

அருட் செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள.

**1 அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்**
**பூரியார் கண்ணும் உள. 241**

செல்வத்துள் — செல்வங்கள் பலவற்றினும், செல்வம் — மேலான செல்வம் என்பது, அருட் செல்வம் — அருள்ால் வருகின்ற செல்வமேயாகும், பொருட் செல்வம் — பொருளால் வரும் செல்வங்கள் என்பவை, பூரியார்கண்ணும் உள — இழிந்தவர்களிடத்திலும் உண்டு.

பல நெறிகளிலும் நின்று ஆராய்ந்து, அருளினைத் துணையாகக் கொள்ளுவார்களாக; துணையான அறம் அருளேயாகும். பலவகைப்பட்ட நெறிகளில் ஆராய்ந்தாலும் துணையாவது அவ்வருளேயன்றிப் பிறிது இல்லை.

நல் ஆற்றான் நாடி அருள் ஆள்க பல் ஆற்றான் தேரினும் அஃதே துணை.

**2 நல்ஆற்றான் நாடி அருள்ஆள்க பல்ஆற்றான்**
**தேரினும் அஃதே துணை. 242**

நல்லாற்றான் — நல்ல நெறிகளிலே கண்டு, நாடி — ஆராய்ந்து, அருள் — அருளினை, ஆள்க — உடையவர்களாக ஆகுக, பல் — பலவகைப்பட்ட, ஆற்றான் — நெறிகளில், தேரினும் — ஆராய்ந்து பார்த்தாலும், துணை — துணையாக இருப்பது, அஃதே — அந்த அருளேயாகும்.

இருள் நிறைந்த துன்ப உலகத்தில் சென்று புகுதல் என்பது அருள் நிறைந்த நெஞ்சினையுடைய வர்களுக்கு இல்லை.

**அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல்.**

**3 அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த**
**இன்னா உலகம் புகல்.** 243

இருள் சேர்ந்த — இருள் மயமான, இன்னா — துன்பமான, உலகம் — உலகத்தில், புகல் — போய்ச் சேர்தல், அருள் சேர்ந்த — அருளினைக் கொண்ட, நெஞ்சினார்க்கு — நெஞ்சினை யுடைய பெரியார்களுக்கு, இல்லை — இல்லையாகும்.

நிலையான உயிர்களைப் போற்றி அவைகளிடம் அருளுடையவனுக்குத் தன் உயிர் அஞ்சக் கூடிய தீவினைகள் உண்டாகா என்று அறிந்தோர் சொல்லுவர்.

**மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வார்க்கு இல் என்ப தன் உயிர் அஞ்சும் வினை.**

**4 மன்உயிர் ஓம்பி அருள்ஆள்வார்க்கு இல்என்ப**
**தன்உயிர் அஞ்சும் வினை.** 244

மன் — நிலைத்து நிற்பதாகிய, உயிர் — உயிர்களை, ஓம்பி — பாதுகாத்து, அருள் ஆள்வார்க்கு — அருளினை மேற்கொண்டவர்களுக்கு, தன் — தன்னுடைய, உயிர் — உயிர், அஞ்சும் — அஞ்சுவதற்குக் காரணமான, வினை — தீமையான வினைகள், இல் என்ப — உண்டாகாது [சேராது] என்று அறிந்தோர் கூறுவர்.

அருளுடையவர்களுக்குத் துன்பம் உண்டாகாது. காற்று இயங்குகின்ற வளப்பத்தினையுடைய பெரிய ஞாலத்தில் வாழ்கின்ற மக்களே அதற்குச் சான்றாவார்கள்.

**அல்லல் அருள் ஆள்வார்க்கு இல்லை வளி வழங்கும் மல்லல் மா ஞாலம் கரி.**

**5 அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கு**
**மல்லல்மா ஞாலம் கரி.** 245

அருள் ஆள்வார்க்கு — அருளினைக் கொண்ட மேலானவர்களுக்கு, அல்லல் — துன்பமானது, இல்லை — உண்டாவதில்லை, [அந்த உண்மைக்கு] வளி — காற்று, வழங்கும் — உலவுகின்ற, மல்லல் — வளப்பம் நிறைந்த, மாஞாலம் — பெரிய இப் பூமியில் வாழ்பவர்கள், கரி — சான்று ஆவார்கள்.

உயிர்களிடம் காட்டப்படும் அருளிலிருந்து நீங்கிக் கொடுமைகளைச் செய்து நடப்பவர்கள் உறுதிப் பொருளைச் செய்யாமல் தாம் துன்புறுகின்றமையை மறந்தவர்கள் என்று சொல்லப்படுவார்கள்.

பொருள் நீங்கி பொச்சாந்தார் என்ப அருள் நீங்கி அல்லவை செய்து ஒழுகுவார்.

6 பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்ப அருள்நீங்கி
அல்லவை செய்துஒழுகு வார். 246

அருள் — அருளினை, நீங்கி — தவிர்த்து, அல்லவை — தீமையென்னும் கொடுமைகளை, செய்து ஒழுகுவார் — செய்து நடப்பவர்கள், பொருள் நீங்கி — உறுதிப் பொருள்களை விட்டு நீங்கி, பொச்சாந்தார் — தாம் துன்புறுவதை மறந்தவர், என்ப — என்று உயர்ந்தோர் கூறுவர்.

பொருள் இல்லாதவர்களுக்கு இவ்வுலகத்து இன்பம் இல்லையாதலைப் போல உயிர்கள் மீது அருள் இல்லாதவர்களுக்கு அவ்வுலகப் பேரின்பம் இல்லையாகும்.

அருள் இல்லார்க்கு அவ் உலகம் இல்லை பொருள் இல்லார்க்கு இவ் உலகம் [இல்லாகியாங்கு

7 அருள்இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்இல்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. 247

பொருள் — செல்வம் என்னும் பொருள், இல்லார்க்கு — இல்லாதவர்களுக்கு, இவ் உலகம் — இந்த உலகத்து இன்பம், இல்லாகியாங்கு — இல்லை ஆனாற் போல, அருளில்லார்க்கு — அருள் இல்லாதவர்களுக்கு, அவ்வுலகம் — அந்த உலகப் பேரின்பம், இல்லை — இல்லையாகும்.

வறுமையிலிருந்தோர் ஒரு காலத்தில் செல்வத்தில் மிகுந்தோர் ஆவர். அவ்வாறு இல்லாமல் அருள் அற்றவர் அழிந்தோரே யாவர். பின்பு ஒரு காலத்திலும் அருளுடையவர் ஆவது இல்லை.

பொருள் அற்றார் பூப்பர் ஒருகால் அருள் அற்றார் அற்றார் மற்று ஆதல் அரிது.

8 பொருள்அற்றார் பூப்பர் ஒருகால் அருள்அற்றார்
அற்றார்மற்று ஆதல் அரிது. 248

பொருள் — செல்வம், அற்றார் — இல்லாமல் வறியரானவர், ஒரு கால் — மற்றொரு காலத்தில், பூப்பர் — செல்வம் பெற்றுத் திகழ்வர், அருள் — அருள், அற்றார் — [இல்லாமல்] அற்றவர்கள், அற்றார் — அழிந்தவரேயாவர், மற்று — மீண்டும், ஆதல் அரிது — [பிறகு எக்காலத்திலும்] ஆவது இல்லை.

உயிர்களிடத்தில் அருளில்லாதவன் செய்கின்ற அறத்தினை ஆராய்ந்து பார்த்தால், ஞானம் இல்லாதவன் ஒருகால் மெய்ப் பொருளை உணர்ந்தது போன்றதாகும்!

தெருளாதான் மெய்ப் பொருள் கண்டற்றால் தேரின் அருளாதான் செய்யும் அறம்.

**9 தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்**
**அருளாதான் செய்யும் அறம்.** 249

அருளாதான் — அருளில்லாதவன், செய்யும் அறம் — செய்கின்ற அறத்தினை, தேரின் — ஆராய்ந்து பார்த்தால், தெருளாதான் — முனிவர்களுக்குரிய ஞானமில்லாதவன், மெய்ப் பொருள் — மெய்ப் பொருளினை, கண்டற்று — உணர்ந்து கண்டது போன்றதாகும்!

அருளில்லாதவன் தன்னைவிட எளியவர்கள் மீது அவர்களை நலியச் செய்ய தான் செல்லும் போது, தன்னைவிட வலிமையுடையவர்கள் தன்னை நலியச் செய்ய வரும்போது, நாம் அஞ்சி நிற்பதை நினைத்தல் வேண்டும்.

வலியார் முன் தன்னை நினைக்க தான் தன்னின் மெலியார்மேல் செல்லுமிடத்து.

**10 வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்**
**மெலியார்மேல் செல்லும் இடத்து.** 250

தான் — அருளில்லாதவன், தன்னின் — தன்னைவிட, மெலியார் மேல் — எளியவர்கள் மேல், செல்லுமிடத்து — அவர்களை நலியச் செல்லும் போது; வலியார் — தன்னைவிட வலிமை யுடையவர், முன் — முன்னே, தன்னை — தான் பயந்து நிற்கும் தன்மையினை, நினைக்க — நினைத்துப் பார்த்தல் வேண்டும்,

## 26. புலான் மறுத்தல்

**[அருள் உடையவர்களுக்குப் பொருந்தாத செயலாகும். கொலைப் பாவத்திற்குக் காரணமானது.]**

தன்னுடைய உடம்பினை வளர்ப்பதற்காக, தான் மற்றொரு உயிரின் உடம்பினைத் தின்பவன் எவ்வாறு அருளினை நடத்துவான்?

தன் ஊன் பெருக்கற்கு தான் பிறிது ஊன் உண்பான் எங்ஙனம் ஆளும் அருள்.

**1 தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள்.** 251

தன் — தன்னுடைய, ஊன் — உடம்பினை, பெருக்கற்கு — பெரிதாக வளர்ப்பதற்காக, தான் — தான், பிறிது — மற்றொன்றின், ஊன் — உடம்பினை, உண்பான் — உண்பவன், எங்ஙனம் — எவ்வாறு, அருள் ஆளும் — அருளினை நடத்துவான்? [நடத்த மாட்டான்]

பொருளால் பயனடைதல் அதனைக் காப்பாற்றாதவர்களுக்கு இல்லை. அதுபோல அருளால் பயனடைதல் என்பது ஊன் தின்பவர்களுக்கு இல்லை.

பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை அருள் ஆட்சி ஆங்கு இல்லை
[ஊன் தின்பவர்க்கு.

**2 பொருள்ஆட்சி போற்றாதார்க்கு இல்லை அருள்ஆட்சி
ஆங்குஇல்லை ஊன்தின் பவர்க்கு. 252**

பொருள் — வைத்துள்ள பொருளினால், ஆட்சி — பயனடைதல், போற்றாதார்க்கு — அதனைப் போற்றிக் காப்பாற்றாதவர்களுக்கு, இல்லை — இல்லையாகும், ஆங்கு — அதுபோல, அருளாட்சி — அருளினால் பயனடைதல், ஊன் — புலால், தின்பவர்க்கு — உண்பவர்களுக்கு, இல்லை — இல்லையாகும்.

கொலைக் கருவியினைக் கையில் வைத்திருப்பவர் மனம் கொலை செய்வதையே நோக்கும்; அருளினை நோக்காது; அதுபோல. புலாலைச் சுவைபட உண்பவர் மனம் ஊனையே நோக்கும்; அருளினை நோக்காது.

படை கொண்டார் நெஞ்சம் போல் நன்று ஊக்காது ஒன்றன் உடல் சுவை உண்டார்
[மனம்.

**3 படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றுஊக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம். 253**

ஒன்றன் — பிறிதோர் உயிரின், உடல் — உடலினை, சுவையுண்டார் — சுவைபட உண்டவர், மனம் — மனம்; படை — கொலைக்கருவியினை, கொண்டார் — கையில் கொண்டவருடைய, நெஞ்சம்போல் — நெஞ்சத்தினைப் போல, நன்று — அருளினை, ஊக்காது — நினைக்காது.

அருள் யாது என்று கேட்டால் கொல்லாமையேயாகும். அருள் அல்லாதது யாது என்றால் கொலை செய்வதேயாகும். கொன்ற ஊனைத் தின்னுதல் தீமையாகும்.

அருள் அல்லது யாது எனின் கொல்லாமை கோறல் பொருள் அல்லது அவ் வூன்
[தினல்.

**4 அருள்அல்லது யாதுஎனின் கொல்லாமை கோறல்
பொருள்அல்லது அவ்வூன் தினல். 254**

அருள் — அருள் என்பது, யாது — எது, எனின் — என்று கேட்டால், கொல்லாமை — கொலை செய்யாமையேயாகும், அல்லது — அந்த அருள் அல்லாதது யாதென்றால், கோறல் — கொல்லுதலாகும், அவ்வூன்தினல் — அந்த ஊனினைத் தின்னுதல், பொருள் — அறம், அல்லது — அல்லாததாகும்.

ஊன் உண்ணாமை என்கின்ற அறத்தினால்தான் உயிர் உடம்பில் இருக்கின்றது. அவ்வுயிர் நிலைகுலைய, ஒருவன் ஊன் உண்ணுவானேயானால் அவனை விழுங்கிய துன்ப உலகம் மீண்டும் அவனை உமிழாது.

உண்ணாமை உள்ளது உயிர் நிலை ஊன் உண்ண அண்ணாத்தல்
[செய்யாது அளறு.

5 உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு. 255

உயிர் — உயிர்கள், நிலை — உடம்புகளிலே நிற்பதானது, ஊன் — ஊனினை, உண்ணாமை — உண்ணாமையினால், உள்ளது — உள்ளதாகும், [ஆதலால்] உண்ண — அந்த உயிர்களைக் கொன்று ஊனை ஒருவன் உண்ணுவானானால், அளறு — அவனை விழுங்கிய துன்ப உலகம், அண்ணாத்தல் — பிறகு உமிழ்தற்கு வாயினைத் திறத்தல், செய்யாது — செய்யாது என்பதாகும்.

ஊன்தின்னுவதன் காரணமாக உலகம் கொல்லாதாயின் விலைப் பொருட்டால் [பொருள் காரணமாக] ஊன் தருபவர்கள் யாரும் இல்லை. விற்பவர்கள் யாரும் இல்லை.

தினல் பொருட்டால் கொல்லாது உலகு எனின் யாரும் விலைப்பொருட்டால் ஊன்
[தருவார் இல்.

6 தினற்பொருட்டால் கொல்லாது உலகுஎனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல். 256

தினல்பொருட்டால் — தின்பதற்காக வேண்டி, உலகு — உலகத்தார், கொள்ளார் — ஊனைக் கொள்ளவில்லை, எனின் — என்றால், விலைப் பொருட்டால் — விலைப் பொருளுக்காக வேண்டி, ஊன் — ஊனினை, தருவார் — விற்பவர், யாரும்இல் — யாரும் இல்லையாகும்.

புலால் என்பது பிறிதோர் உடம்பின் புண்ணாகும். அது தூய்மையானது அன்று. இதனை அறிவாரைப் பெற்றால் அதனை உலகம் உண்ணாமை வேண்டும்.

உண்ணாமை வேண்டும் புலால் பிறிதொன்றன் புண் அது உணர்வார் பெறின்.

7 உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்அது உணர்வார்ப் பெறின். 257

புலால் — புலாலானது [ஊன்], பிறிது — வேறு, ஒன்றன் — ஒன்றனுடைய, புண் — புண்ணாகும், அது — அந்த உண்மையை, உணர்வார் — உணர்ந்தறிபவரை, பெறின் — உலகம் பெற்றால், உண்ணாமை — ஊனினை உண்ணாதிருத்தல், வேண்டும் — வேண்டப்படுவதாகும்.

அஞ்ஞானமாகிய குற்றத்திலிருந்து நீங்கிய அறிவினையுடையவர்கள் ஓர் உயிரிலிருந்து நீங்கி வந்த ஊனினை உண்ணமாட்டார்கள்.

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார் உயிரின் தலைப்பிரிந்த ஊன்.

**8 செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்**
**உயிரின் தலைப்பிரிந்த ஊன். 258**

செயிரின் — அஞ்ஞானமான குற்றத்தினின்றும், தலைப்பிரிந்த — விட்டுநீங்கிய, காட்சியார் — மெய்யறிவுடையார், உயிரின் — பிற உயிரிலிருந்து, தலைப்பிரிந்த — நீக்கப்பட்டு வந்த, ஊன் உண்ணார் — ஊனினை உண்ண மாட்டார்கள்.

நெய் முதலியனவற்றைச் சொரிந்து ஆயிரம் வேள்விகள் செய்வதைவிட ஒரு விலங்கின் உயிரினைப் போக்கி அதன் ஊனை உண்ணாமை நல்லதாகும்.

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று.

**9 அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத்து உண்ணாமை நன்று. 259**

அவி — நெய் முதலானவைகளை, சொரிந்து — நெருப்பினில் ஊற்றி, ஆயிரம் —ஆயிரம், வேட்டலின் — வேள்வியினை [யாகம்] செய்வதைவிட, ஒன்றன் — ஒருவிலங்கினது, உயிர் — உயிரினை, செகுத்து — போக்கி, உண்ணாமை நன்று — அந்தப் புலாலை உண்ணாதிருத்தல் நல்லதாகும்.

ஓர் உயிரினையும் கொல்லாதவனுமாகிப் புலாலையும் உண்ணாதவனை எல்லா உயிரும் கை கூப்பித் தொழும்.

கொல்லான் புலாலை மறுத்தானை கைகூப்பி எல்லா உயிரும் தொழும்.

**10 கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும். 260**

கொல்லான் — எந்த உயிரையும் கொல்லாதவனாகி, புலாலை — புலால் உண்ணுதலை, மறுத்தானை — மறுத்தவனுமான அருளாளனை, எல்லா — எல்லா, உயிரும் — உயிர்களும், கைகூப்பித் தொழும் — கைகுவித்துத் தொழும்.

## 27. தவம்

[தவம் இன்னதென்பதும், தவசிகளின் சிறப்பும், ஆற்றலும்]

தவத்திற்கு வடிவம் என்னவென்றால், தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுவதும், தாம் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருப்பதுவுமேயாகும்.

**உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே தவத்திற்கு உரு.**

**1 உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை**
**அற்றே தவத்திற்கு உரு.** 261

தவத்திற்கு — தவத்தினுக்கு, உரு — உருவமானது, [என்னவென்றால்] உற்ற — தம் உயிர்க்கு வருகின்ற, நோய் — துன்பங்களை, நோன்றல் — பொறுத்துக் கொள்ளுதலும், உயிர்க்கு — மற்ற உயிர்களுக்கு, உறுகண் — வரும் துன்பத்தினை, செய்யாமை — செய்யாதிருத்தலு மாகும், அற்றே — தவம் என்பது அவ்வளவுதான்.

தவத்தினை மேற்கொள்ளுவதென்பதும் முற்பிறவித் தவத் தன்மையுடையவர்களுக்கேயாகும். அத்தவப்பிறவி இல்லாதவர்கள் தவம் செய்ய முயல்வது பயனற்ற முயற்சியேயாகும்.

**தவமும் தவம் உடையார்க்கு ஆகும் அவம் அதனை அஃது இலார் மேற்கொள்வது.**

**2 தவமும் தவம்உடையார்க்கு ஆகும் அவம்அதனை**
**அஃதுஇலார் மேற்கொள் வது.** 262

தவமும் — தவத்தினைச் செய்வதும், தவமுடையார்க்கு — தவத்தன்மை [முன்தவம்] உடைய வர்களுக்கே, ஆகும் — உண்டாவதாகும், அதனை — அத்தவத்தினை, அஃது — அத்தவப் பிறப்பு, இலார் — இல்லாதவர்கள், மேற்கொள்வது — செய்ய முயற்சிப்பது, அவம் — வீணான செயலாகும்.

இல்லறத்தினை மேற்கொண்டவர்கள் துறவிகளுக்கு உணவு முதலியன கொடுத்து உதவ வேண்டித் தவம் செய்வதை மறந்து விட்டார்கள் போலும்!

**துறந்தார்க்கு துப்புரவு வேண்டி மறந்தார்கொல் மற்றையவர்கள் தவம்.**

**3 துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்**
**மற்றை யவர்கள் தவம்.** 263

மற்றையவர்கள் — இல்லறத்தினை மேற்கொண்டவர்கள், துறந்தார்க்கு — துறவிகளுக்கு, துப்புரவு வேண்டி — உணவு முதலியன கொடுத்துதவ விரும்பி, தவம் — தவம் செய்வதை, மறந்தார் கொல் — மறந்து விட்டார்கள் போலும்!

பகைவரை அழித்தலும் விரும்பினவரை உயரச் செய்தலும் ஆகிய இவ்விரண்டினையும் தவசிகள் நினைத்தால் தவ வலிமையால் அவர்க்கு நடைபெறுவதாகும்.

ஒன்னார் தெறலும் உவந்தாரை ஆக்கலும் எண்ணின் தவத்தான் வரும்.

**4 ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்**
**எண்ணின் தவத்தான் வரும்.** 264

ஒன்னார் — பகைவரை, தெறலும் — அழியச் செய்தலையும், உவந்தார் — தாம் விரும்பினவரை, ஆக்கலும் — மேலாகச் செய்தலையும், எண்ணின் — தவம் செய்வார் மனத்தில் எண்ணுவாரானால், தவத்தான் வரும் — தமது தவ வலிமையால் அவருக்கு அந்த ஆற்றல் வருவதாகும்.

வேண்டிய பயன்களை வேண்டியபடியே பெறலாம் ஆனபடியால் செய்யப்படுவதாகிய தவம் இப்பிறப்பில் முயன்று செய்யப்படும்.

வேண்டிய வேண்டியாங்கு எய்தலான் செய்தவம் ஈண்டு முயலப்படும்.

**5 வேண்டிய வேண்டியாங்கு எய்தலான் செய்தவம்**
**ஈண்டு முயலப் படும்.** 265

வேண்டிய — தாம் அடைவதற்கு விரும்பிய பயன்களை, வேண்டியாங்கு — விரும்பியபடியே, எய்தலால் — பெறக்கூடும் ஆதலால், செய் — செய்யப்படும், தவம் — தவமானது, ஈண்டு — இப்பிறப்பில், முயலப்படும் — முயன்று செய்யப்படுவதாகும்.

தம் கருமம் செய்பவர்கள் யாரென்றால் துறந்து தவத்தினைச் செய்பவர்களே ஆவர். மற்றவர்கள் எல்லாம் ஆசை யென்பதில் அகப்பட்டுத் தமக்குத் துன்பம் செய்பவராவர்.

தவம் செய்வார் தம் கருமம் செய்வார் மற்று அல்லார் அவம் செய்வார் ஆசையுள் பட்டு.

**6 தவம்செய்வார் தம்கருமம் செய்வார்மற்று அல்லார்**
**அவம்செய்வார் ஆசையுட் பட்டு.** 266

தவம் — தவத்தினை மேற்கொண்டு, செய்வார் — செய்பவர்கள், தம் கருமம் — தமக்கு உரித்தான செயலினை, செய்வார் — செய்பவராவார்கள், மற்றல்லார் — மற்றபடி தவம் செய்யாதவர்கள், ஆசையுட்பட்டு — ஆசைகளில் அகப்பட்டுக் கொண்டு, அவம் — தமக்குத் துன்பத்தினை, செய்வார் — செய்து கொள்வார்கள்.

தீயினில் சுடச்சுட பொன்னானது மாசு நீங்கி ஒளி மிகுந்து தோன்றுவது போல தவம் செய்ய வல்லவர்களுக்குத் துன்பம் நீங்கி ஞானம் பிறக்கும்.

சுட சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம் சுட சுட நோற்கிறப்பவர்க்கு.

**7 சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. 267**

சுட — தீயினில் வைத்துச்சுட [புடத்தில்], சுடரும் — ஒளி விடுகின்ற, பொன்போல் — மாசு நீங்கிய பொன்னினைப் போல, நோற்கிற்பவர்க்கு — தவம் செய்யும் தவசிகளுக்கு, துன்பம் — துன்பமானது, சுடச் சுட — தம்மைச் சுடச் சுட [மிக மிகத் துன்புறுத்திக் கொள்ள] ஒளிவிடும் — ஒளியாகிய மெய்யுணர்வு பிறக்கும்.

தன் உயிரைத் தனக்கு உரித்தாகப் பெற்ற தவசியை அவ்வாறு பெறாதனவாகிய மற்ற உயிர்கள் எல்லாம் தொழும்.

தன் உயிர் தான் அற பெற்றானை ஏனைய மன் உயிர் எல்லாம் தொழும்.

**8 தன்உயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்உயிர் எல்லாம் தொழும். 268**

தன் — தன்னுடைய, உயிர் — உயிரினை, தான் — தனக்கு, அறப் பெற்றானை — உரித்தாகப் பெற்ற தவசியை, ஏனைய — அவ்வாறு பெறாமல் இருக்கின்ற மற்ற, மன் உயிர் — நிலைத்திருக்கும் உயிர்கள், எல்லாம் — எல்லாம், தொழும் — தொழுது வணங்கும்.

தவம் என்னும் நோன்பினால் வருவதாகிய ஆற்றலினைப் பெற்றவர்களுக்குக் கூற்றுவனைக் கடத்தலும் இயலும்.

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு.

**9 கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. 269**

நோற்றலின் — தவம் என்னும் நோன்பினால் வருவதாகிய, ஆற்றல் தலைப்பட்டவர்க்கு — வலிமையினைப் பெற்ற தவசிகளுக்கு, கூற்றம் — உயிர்கொள்ளும் கூற்றுவனை, குதித்தலும் — கடத்தலும், கைகூடும் — உண்டாவதாகும்.

உலகத்தில் செல்வந்தர்கள் சிலராகவும் வறுமையாளர்கள் பலராகவும் இருப்பதற்குக் காரணம் யாதென்றால், தவம் செய்வார் சிலராகவும் செய்யாதவர்கள் பலராகவும் இருப்பதே யாகும்.

**இலர் பலர் ஆகிய காரணம் நோற்பார் சிலர் பலர் நோலாதவர்.**

**10 இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்**
**சிலர்பலர் நோலா தவர்.** 270

இலர் — பொருளில்லாத வறுமையாளர், பலர் — பலர், ஆகிய — ஆகி இருப்பதற்கு, காரணம் — காரணம் [என்னவென்றால்], நோற்பார் — நோன்பு நோற்றுத் தவம் செய்வார், சிலர் — சிலராகவும், நோலாதவர் — அதனைச் செய்யாதவர், பலர் — பலராகவும் இருப்பதேயாகும்.

## 28. கூடாவொழுக்கம்

**[தவத்தோடு பொருந்தாத சிற்றின்ப இச்சையால் தீமை புரிதலாம்]**

வஞ்சனை பொருந்திய மனத்தினை உடையவனது மறைவான தீய ஒழுக்கத்தினைக் கண்டு அவனோடு கலந்து நிற்கின்ற ஐந்து பூதங்களும் தம்முள்ளே நகைக்கும்.

**வஞ்ச மனத்தான் படிற்று ஒழுக்கம் பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்.**

**1 வஞ்ச மனத்தான் படிற்றுஒழுக்கம் பூதங்கள்**
**ஐந்தும் அகத்தே நகும்.** 271

வஞ்ச — வஞ்சனை நிறைந்த, மனத்தான் — மனத்தினையுடையவன் செய்யும், படிற்று — மறைந்த, ஒழுக்கம் — தீய ஒழுக்கத்தினை, பூதங்கள் — உடம்பாகவே அவனுடன் இருக்கும் பூதங்கள், ஐந்தும் — ஐந்தும், அகத்தே நகும் — தமக்குள்ளே நகைத்துக் கொள்ளும்.

தான் குற்றம் என்று அறிந்த அதனைச் செய்ய தனது நெஞ்சம் போய்த் தாழ்ந்து விடுமானால் வானம் அளவு உயர்ந்த தவவேடம் என்ன பயனைச் செய்யும்?

**வான் உயர் தோற்றம் எவன் செய்யும் தன் நெஞ்சம் தான் அறி குற்றம் படின்.**

**2 வான்உயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்**
**தான்அறி குற்றப் படின்.** 272

தான் — தான் நன்கு அறிந்த, குற்றம் — குற்றத்தினிடத்தே, தன் — தனது, நெஞ்சம் — நெஞ்சமானது, படின் — தாழ்ந்து விடுமானால், வான் — வானம் அளவு, உயர் — உயர்ந்த, தோற்றம் — சிறப்பான வேடத் தோற்றமானது, எவன் — என்ன பயனை, செய்யும் — செய்ய முடியும்?

மனவலிமை இல்லாதவர்கள் வலிமையுடையார் போலத் தவ வேடங் கொண்டு ஒழுக்கக் கேட்டினைச் செய்தல் எப்படிப்பட்டதென்றால், பசுவானது புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு அயலானது பயிரை மேய்ந்தது போன்றதாகும்.

**வலி இல் நிலைமையான் வல்உருவம் பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று.**

**3 வலிஇல் நிலைமையான் வல்உருவம் பெற்றம்**
**புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.** 273

வலி — மனத்தினை அடக்கும் வலிமை, இல் — பெற்றிராத, நிலைமையான் — தன்மையினை யுடையவன், வல் — வலிமையுடையார், உருவம் — தவ வேடத்தினைத் தாங்கி [தவறு செய்தல்], பெற்றம் — பசுவானது, புலியின் — புலியினுடைய, தோல் போர்த்து — தோலினைப் போர்த்திக் கொண்டு, மேய்ந்தற்று — அயலான் பயிரினை மேய்ந்த செயல் போன்றதாகும்.

மனவலிமை இல்லாதவன் தவவேடத்திலே மறைந்து கொண்டு தவத்திற்குப் புறம்பானவற்றைச் செய்தல், வேட்டுவன் புதரிலே மறைந்து கொண்டு, பறவைகளைப் பிணித்தது போன்றதாகும்.

**தவம் மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து வேட்டுவன் புள் சிமிழ்த்தற்று.**

**4 தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து**
**வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.** 274

தவம் — தவசிகள் வேடத்திலேயே, மறைந்து — தன்னை மறைத்துக் கொண்டு, அல்லவை — தவமல்லாத தீய செயல்களை, செய்தல் — செய்தல் என்பது, வேட்டுவன் — வேட்டையாடும் வேடன், புதல்மறைந்து — புதரிலே தன்னை மறைத்துக் கொண்டு, புள் — பறவைகளை, சிமிழ்த்தற்று — அகப்படுத்தியது போன்றதாகும்.

''யாம் ஆசைகளை விட்டோம்'' என்று சொல்லுபவர்களது மறைவான தீய ஒழுக்கம் பின்பு 'ஏன் செய்தோம்', 'ஏன் செய்தோம்' என்று தாமே வருந்துமாறு அவர்கட்குப் பல துன்பங்களையும் தந்துவிடும்.

**பற்று அற்றேம் என்பார் படிற்று ஒழுக்கம் எற்று எற்று என்று ஏதம் பலவும் தரும்.**

**5 பற்றுஅற்றேம் என்பார் படிற்றுஒழுக்கம் எற்றுஎற்றுஎன்று**
**ஏதம் பலவும் தரும்.** 275

பற்று — ஆசைகள், அற்றேம் — விட்டு விட்டோம், என்பார் — என்று சொல்லுபவர்களது, படிற்று — மறைந்த, ஒழுக்கம் — தீய ஒழுக்கமானது, எற்றுஎற்றுஎன்று — ஏன் செய்தோம், ஏன் செய்தோம் என்று தாமே வருந்தும்படியாக, ஏதம் — துன்பங்கள், பலவும் — பலவற்றையும், தரும் — தந்துவிடும்.

மனதில் ஆசைகள் நீங்காமல் வைத்துக் கொண்டு ஆசை இல்லாதவர்கள் போல வஞ்சித்து வாழ்கின்ற கொடிய தன்மையுடையவர்களைப் போலக் கொடியவர்கள் உலகில் இல்லை.

நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணார் இல்.

**6 நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து**
**வாழ்வாரின் வன்கணார் இல். 276**

நெஞ்சின் — நெஞ்சிலே, துறவார் — ஆசைகளை விடாதவராகி, துறந்தார் போல் — ஆசை விட்ட துறவிகள் போல, வஞ்சித்து வாழ்வாரின் — மக்களை வஞ்சனையால் ஏமாற்றி வாழ்பவர்களைப் போல, வன்கணார் — இரக்கமில்லாத கொடியவர், இல் — வேறுயாரும் இல்லை.

குன்றிமணியின் புறத்தில் காணப்படும் நிறம் போல வேடத்தில் செம்மையுடையவர்களாகக் காணப்பட்டாலும், அக்குன்றிமணியின் மூக்கினைப்போல மனம் இருண்டு இருப்பவரை உடையது இவ்வுலகம்.

புறம் குன்றி கண்டு அனையரேனும் அகம் குன்றி மூக்கின் கரியார் உடைத்து.

**7 புறம்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி**
**மூக்கிற் கரியார் உடைத்து. 277**

குன்றி — குன்றிமணியின், புறம் — மேற்புறத்திலே, கண்டனையரேனும் — காணப்படுவதைப் போல வெளித் தோற்றத்தில் காணப்பட்டாலும், அகம் — மனதிற்குள்ளே, குன்றி — அக்குன்றிமணியின், மூக்கின் — மூக்கினைப் போல, கரியார் — கருத்திருப்பவரை, உடைத்து — இவ்வுலகம் பெற்றிருப்பதாகும்.

அழுக்காகிய குற்றம் தனது மனதில் இருக்க மாட்சிமையுடையவராக நீரில் மூழ்கிக் காட்டித் தாம் அந்தத் தோற்றத்தில் மறைந்து வாழும் மாந்தர் உலகில் பலராவர்.

மனத்தது மாசு ஆக மாண்டார் நீர் ஆடி மறைந்து ஒழுகும் மாந்தர் பலர்.

**8 மனத்தது மாசுஆக மாண்டார்நீர் ஆடி**
**மறைந்துஒழுகும் மாந்தர் பலர். 278**

மாசு — குற்றமானது [அழுக்கு], மனத்தது — மனத்தின்கண், ஆக — இருக்க, மாண்டார் — சிறந்த தூய்மையுடையவர்கள்போல், நீர் — நீரில், ஆடி — மூழ்கிக்காட்டி, மறைந்து — அச்செயலில் மறைந்து, ஒழுகும் — தீயநெறியில் நடந்து கொள்ளுகின்ற, மாந்தர்பலர் — மக்கள் உலகத்தில் பலருண்டு.

அம்பு, வடிவத்தில் நேராக இருந்தாலும் செயலால் கொடியதாகும். யாழ், வளைவுள்ளதாக இருந்தாலும் செயலால் நல்லதாகும். அதுபோல, மக்களைத் தோற்றத்தால் அறிந்து கொள்ளாமல் செயலினால் அறிந்து கொள்ளல் வேண்டும்.

**கணை கொடிது யாழ் கோடு செவ்விது ஆங்கு அன்ன வினைபடு பாலால் கொளல்.**

**9 கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங்கு அன்ன**
**வினைபடு பாலால் கொளல்.** 279

கணை — அம்பானது [நேராக இருந்தாலும்] கொடிது — செய்கையில் கொடுமை செய்வதாகும், யாழ் — யாழானது, கோடு — கோணலாக வளைந்து இருந்தாலும், செவ்விது — செயலினால் நன்மை செய்வதாகும், ஆங்கு அன்ன — அவ்வகையினைப் போல, வினைபடு பாலால் — அவரவரது செயல்களின் வேறுபாடுகளினால், கொளல் — அவரை அறிந்து புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

தவம் செய்பவர்களுக்குத் தலைமயிரை மழித்தலும் அல்லது சடையாக்கலும் ஆகிய வேடம் 'தவம் செய்வதற்கு என்று' தேவையில்லை. தவத்திற்கு ஆகாதது என்ற தீமையான ஒழுக்கத்தினை நீக்கி விட்டாலே போதுமானதாகும்.

**மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழித்து விடின்.**

**10 மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**
**பழித்தது ஒழித்து விடின்.** 280

உலகம் — உலகத்து உயர்ந்தோரால், பழித்தது — குற்றமாகக் கூறப்பட்ட தீய ஒழுக்கத்தினை, ஒழித்துவிடின் — ஒழித்து விடுவார்களேயானால்; [அதுவே போதும்.] மழித்தலும் — அவர்கள் [தவத்திற் கென்று] தலைமயிரை மழித்துக் கொள்ளுதலும், நீட்டலும் — சடையாக்கி வளர்த்துக் கொள்ளுதலும் [ஆகிய வேடம்], வேண்டா — வேண்டுவன அல்லவாம்.

## 29. கள்ளாமை

[பிறருடைய பொருளைக் களவு செய்தற்கு நினையாமை]

பிறரால் இகழப்படாமல் இருக்க வேண்டும் என்று எண்ணுபவன் யாதொரு பொருளினையும் கள்ளத்தனத்தினால் அடையக்கூடிய எண்ணம் புகாதபடி தனது நெஞ்சினைக் காத்துக் கொள்ளுதல் வேண்டும்.

**எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்து ஒன்றும் கள்ளாமை காக்க தன் நெஞ்சு.**

**1 எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்துஒன்றும்**
**கள்ளாமை காக்கதன் நெஞ்சு.** 281

எள்ளாமை — பிறரால் இகழாதிருப்பதனை, வேண்டுவான் — விரும்புகின்றவன், என்பான்— என்பவன், எனைத்தொன்றும் — எந்தவொரு பொருளினையும், கள்ளாமை — கவர்ந்து கொள்ள எண்ணாதிருக்குபடியாக, தன் — தனது, நெஞ்சு — நெஞ்சத்தினை, காக்க — காத்துக் கொள்ளுவானாக!

குற்றங்களைத் தனது நெஞ்சம் நினைப்பதுவும் துறந்தார்க்குத் தீமையாகும். ஆதலால், பிறன் பொருளை அவன் அறியாதபடி கள்ளத்தனத்தால் கவர்ந்து கொண்டு விடுவோம் என்று நினையாதிருப்பாயாக!

**உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன் பொருளை கள்ளத்தால் கள்வேம் எனல்.**

**2 உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்.** 282

பிறன் — பிறனுக்குரிய, பொருளை — பொருளினை, கள்ளத்தால் — கள்ளத்தனத்தால், கள்வேம் எனல் — திருடிக் கொள்ளுவோம் என்று கருதுதல், உள்ளத்தால் — தமது உள்ளத்தினால் கூட, உள்ளலும் — எண்ணுவதும், தீதே — தீமையானதேயாகும்.

களவினால் உண்டாகின்ற பொருள் வளர்வது போலத் தோன்றி அளவினைக் கடந்து அழியும். மேலும் அது பற்பல துன்பங்களையும் கொடுத்து அறத்தினையும் கொண்டு போகும்.

**களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து ஆவதுபோல கெடும்.**

**3 களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து**
**ஆவது போலக் கெடும்.** 283

களவினால் — கள்ளச் செய்கையால், ஆகிய ஆக்கம் — உண்டாவதான செல்வமானது, ஆவது போல — அதிகமாவது போலக் காட்டி, அளவு — அந்த அளவினையும், இறந்து — கடந்து, கெடும் — கெட்டு மறையும்.

களவு என்பதில் இருக்கும் வேட்கை அப்போது இனிது போலத் தோன்றிப் பயன் தரும்போது என்றும் நீங்காத துன்பத்தினைத் தந்துவிடும்.

**களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண் வீயா விழுமம் தரும்.**

**4 களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்**
**வீயா விழுமம் தரும்.** 284

களவின் கண் — களவு செய்வதில், கன்றிய — மிகுந்திருக்கும், காதல் — விருப்பமானது, விளைவின் கண் — பயனைத் தரும்போது, வீயா — தொலைக்க முடியாத, விழுமம் தரும் — துன்பத்தினைத் தந்து விடுவதாகும்.

அருளினைப் பெறக் கருதி அதன்மீது அன்பு கொண்டிருப்பவராக நடந்து கொள்ளுதல் என்பது, பிறன் பொருளினைக் களவினால் எடுத்துக் கொள்ளுவோம் என்பவரிடம் உண்டாகாது.

அருள் கருதி அன்பு உடையர் ஆதல் பொருள் கருதி பொச்சாப்பு பார்ப்பார்கண் இல்.

**5 அருள்கருதி அன்புடையர் ஆதல் பொருள்கருதிப்**
**பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல். 285**

அருள் — அருள் என்பதன் பெருமையினை, கருதி — அறிந்துணர்ந்து, அன்பு — அதன்மேல் அன்பு, உடையராதல் — கொண்டு நடப்பதென்பது, பொருள் — மற்றவருடைய பொருளினை, கருதி — திருடுவதற்குக் கருதி, பொச்சாப்பு — அவருடைய சோர்வினை, பார்ப்பார்கண் — பார்த்துக் கொண்டிருப்பவர்களிடத்தில், இல் — இல்லையாகும்.

உயிர் முதலியவற்றை அளக்கும் சீரிய செந்நெறிக்கண் நின்று அதற்குத் தகுந்தபடி ஒழுக முடியாதவர்கள் யாரென்றால், களவு செய்வதிலேயே மிகுந்த விருப்பம் உடையவர்கள் என்பதாகும்.

அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார் களவின்கண் கன்றிய காதல் அவர்.

**6 அளவின்கண் நின்றுஒழுகல் ஆற்றார் களவின்கண்**
**கன்றிய காதல் அவர். 286**

களவின் கண் — களவு செய்வதிலே, கன்றிய — அதிகமான, காதலவர் — ஆசையினையுடையவர்களே, அளவின்கண் — உயிர் முதலியவற்றை அளந்தறியும் மெய்ந்நெறியில், நின்று — நிலையாக நின்று, ஒழுகல் — நடந்து கொள்ள, ஆற்றார் — வலிமையில்லாதவர்கள்.

களவு என்று சொல்லப்படுகின்ற மயக்கமான அறிவானது, உயிர் முதலியவற்றை அளத்தல் ஆகிய தவம் என்னும் பெருமையினை விரும்பினவர்களிடத்தில் இல்லை.

களவு என்னும் கார் அறிவு ஆண்மை அளவு என்னும் ஆற்றல் புரிந்தார்கண் இல்.

**7 களவென்னும் கார்அறிவு ஆண்மை அளவென்னும்**
**ஆற்றல் புரிந்தார்கண் இல். 287**

களவு — களவு, என்னும் — என்று சொல்லப்படுகின்ற, கார் — அஞ்ஞானத்தால் இருண்ட, அறிவாண்மை — அறிவினையுடையவர்களாக இருத்தல் என்பது, அளவு — உயிர் முதலியவற்றை அளத்தல், என்னும் — என்கின்ற, ஆற்றல் — ஆற்றலாகிய தவச் சிறப்பினை, புரிந்தார் கண் — விரும்பிச் செய்கின்ற துறவிகளிடத்தில், இல் — இல்லையாகும்.

உயிர் முதலானவற்றை அளக்கும் தவத்தினைப் பயின்றவர்கள் நெஞ்சத்தில் அறம் நிலை பெற்று நிற்கும். களவினையே பயின்றவர் நெஞ்சத்தில் வஞ்சனை நிலைபெற்று நிற்கும்.

அளவு அறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும் களவு அறிந்தார் நெஞ்சில் கரவு.

**8 அளவறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்**
**களவறிந்தார் நெஞ்சில் கரவு.** 288

களவு — களவு செய்வதனை, அறிந்தார் — அறிந்தவரது, நெஞ்சில் — நெஞ்சத்தில், கரவு — வஞ்சனையுடைய எண்ணம், அளவறிந்தார் — அளவினையறிந்த துறவிகளையுடைய, நெஞ்சத்து — நெஞ்சினில், அறம் போல — அறம் நிலைத்து நிற்பது போல, நிற்கும் — நிலை பெற்று நிற்பதாகும்.

கள்ளத்தனம் அல்லாத பிறவற்றை அறியாதவர்கள் அளவற்ற தீய நினைவுகளைச் செயலாற்ற நினைத்து அந்தப் பொழுதே கெட்டு விடுவார்கள்.

அளவு அல்ல செய்தாங்கே வீவர் களவு அல்ல மற்றைய தேற்றாதவர்.

**9 அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல**
**மற்றைய தேற்றா தவர்.** 289

களவு — களவு, அல்ல — அல்லாத, மற்றைய — பிறவற்றை, தேற்றாதவர் — அறிந்திராத கள்வர்கள், அளவல்ல — அளவு கடந்த தீய எண்ணங்களை, செய்து — எண்ணி, ஆங்கே — அந்தப் பொழுதே, வீவர் — கெட்டுவிடுவார்கள்.

களவினைச் செய்வோர்க்கு உயிர் நிற்பதான உடம்பும் தவறும். களவினை எண்ணாதவர்க்குத் தேவர்கள் உலகமும் தள்ளாமல் ஏற்கும்.

கள்வார்க்கு தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்கு தள்ளாது புத்தேள் உலகு.

**10 கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்**
**தள்ளாது புத்தேள் உலகு.** 290

கள்வார்க்கு — களவினையே செய்துகொண்டிருப்போர்க்கு, உயிர்நிலை — உயிர் நிற்கின்ற உடம்பும், தள்ளும் — தவறி விடுவதாகும், கள்ளார்க்கு — களவினை எண்ணாதவர்க்கு, புத்தேள் — தேவர், உலகு — உலகமும், தள்ளாது — தள்ளாமல் ஏற்கும்.

## 30. வாய்மை

**[வாய்மையினது தன்மையும் விளக்கமும்]**

வாய்மை என்று சொல்லப்படுவது யாது என்றால், அது மற்ற உயிர்களுக்குத் தீங்கினைச் சிறிதும் உண்டாக்காத சொற்களைச் சொல்லுதலாகும்.

வாய்மை எனப்படுவது யாது எனின் யாதொன்றும் தீமை இலாத சொலல்.

**1 வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல்.** 291

வாய்மை — வாய்மை, எனப்படுவது — என்று பெருமையாகப் பேசப்படுவது, யாது — எது, எனின் — என்று கேட்டால், யாதொன்றும் — சிறிதளவேனும், தீமை — தீமையினை, இலாத — உண்டாக்காத சொற்களை, சொலல் — சொல்லுதல் என்பதாம்.

பிறர்க்குக் குற்றம் நீங்கிய நன்மையினைத் தருமானால் பொய்ம்மைச் சொற்களும் மெய்ம்மைச் சொற்களின் இடத்தில் வைத்துக் கருதப்படும்.

பொய்ம்மையும் வாய்மை இடத்த புரை தீர்ந்த நன்மை பயக்கும் எனின்.

**2 பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்.** 292

புரை — குற்றம், தீர்ந்த — அற்ற, நன்மை — நன்மையினை, பயக்கும் — கொடுக்கும், எனின் — என்றால், பொய்ம்மையும் — பொய்யான சொற்களும், வாய்மை இடத்த — மெய்ம்மையான சொற்களின் இடத்தில் வைத்துக் கருதப்படுவனவாகும்.

ஒருவன் தனது நெஞ்சு அறிந்த பொய்யினைச் சொல்லாதிருப்பானாக; அவ்வாறு பொய்த்துப் பேசினால் அவனுடைய நெஞ்சமே அவனைத் துன்பத்தில் அடைவிக்கும்.

தன் நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னை சுடும்.

**3 தன்நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**தன்நெஞ்சே தன்னைச் சுடும்.** 293

தன் — தன்னுடைய, நெஞ்சு — நெஞ்சத்தினால், அறிவது — அறிந்து கொண்டிருப்பதனை, பொய்யற்க — மற்றவர் அறியாரென்று எண்ணினாலும் பொய் பேசாதிருத்தல் வேண்டும், பொய்த்த பின் — அப்படி பொய்யாகச் சொல்லுவானேயானால், தன் — தன்னுடைய, நெஞ்சு — நெஞ்சமே, தன்னைச் சுடும் — தனக்குத் துன்பத்தினைக் கொடுத்துவிடும்.

ஒருவன் தனது மனதறிய பொய் கூறாமல் நடந்து கொள்ளுவானானால் அவன் உயர்ந்தோர் உள்ளங்களில் எல்லாம் உள்ளவனாவான்.

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்.

4 உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன். 294

உள்ளத்தால் — ஒருவன் தனது மனதறிய, பொய்யாது — பொய் கூறாமல், ஒழுகின் — நடந்து வருவானாகில், உலகத்தார் — உலகத்து சிரிய மக்கள், உள்ளத்துள் — உள்ளங்களில், எல்லாம் — எல்லாம், உளன் — உள்ளவனாவான் [இருப்பவனாவான்].

ஒருவன் தனது மனத்தொடு பொருந்த வாய்மையினைச் சொல்லுவானானால், அவன் தானமும் தவமும் ஒருங்கே செய்பவரைவிட மேலானவனாவான்.

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு தானம் செய்வாரின் தலை.

5 மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை. 295

மனத்தொடு — மனத்தோடு சேர்ந்து, வாய்மை — உண்மையினை, மொழியின் — சொல்லுவானானால், [அப்படிப்பட்டவன்] தவத்தொடு — தவம் செய்வதோடு, தானம் — தானத்தையும், செய்வாரின்தலை — சேர்த்து செய்வாரைவிட மேன்மையானவனாவான்.

பொய்யாமையினைப் போன்று புகழுக்குக் காரணமான வேறு எதுவும் இல்லை. வருத்தமின்றி எல்லா அறங்களையும் அதுவே கொடுப்பதாகும்.

பொய்யாமை அன்ன புகழ் இல்லை எய்யாமை எல்லா அறமும் தரும்.

6 பொய்யாமை அன்ன புகழ்இல்லை எய்யாமை
எல்லா அறமும் தரும். 296

பொய்யாமை — பொய் சொல்லாமை, அன்ன — போன்ற, புகழ் — புகழுக்கு அடிப்படையாவது, இல்லை — வேறு எதுவும் இல்லை, [ஏனெனில்] எய்யாமை — மெய் வருத்தாமலேயே, எல்லா — எல்லா, அறம் — அறத்தினையும், தரும் — அதுவே கொடுத்து விடும்.

ஒருவன் பொய்யாமையையே பொய்யாமையையே செய்யும் ஆற்றல் பெற்று விட்டால், அவன் பிற அறங்களைச் செய்யாமையே செய்யாமையே நல்லதாகும்.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம் பிற செய்யாமை செய்யாமை நன்று.

**7 பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று. 297**

பொய்யாமை — பொய் பேசாதிருந்தலையே, பொய்யாமை — பொய் பேசாதிருத்தலையே, ஆற்றின் — செய்யும் ஆற்றல் பெற்றுவிட்டால், பிற — மற்றைய, அறம் — அறச்செயல்களை, செய்யாமை — செய்யாமையே, செய்யாமை — செய்யாமையே, நன்று — நல்லதென்ப தாகும்.

ஒருவனுக்கு உடம்பு தூய்மையாவது நீராலேயே அமையும். மனம் தூய்மையாக இருப்ப தென்பது வாய்மையால் உண்டாகிக் காணப்படும்.

புறம் தூய்மை நீரான் அமையும் அகம் தூய்மை வாய்மையான் காணப்படும்.

**8 புறம்தூய்மை நீரான் அமையும் அகம்தூய்மை**
**வாய்மையான் காணப்படும். 298**

புறம் — உடம்பின் புறத்தில், தூய்மை — தூய்மையாவது, நீரான் அமையும் — நீரினால் அமைவதாகும், [அதுபோல] அகம்தூய்மை — மனமானது தூய்மையாவது, வாய்மையான் — வாய்மையால், காணப்படும் — உண்டாக்கப்படுவதாகும்.

புறத்தில் இருளினைப் போக்கும் விளக்குகள் எல்லாம் விளக்குகள் ஆகாவாம். துறவறத் தன்மையால் நிறைந்த சான்றோர்க்கு விளக்காவது பொய்யாமையாகிய விளக்கேயாகும்.

எல்லா விளக்கும் விளக்கு அல்ல சான்றோர்க்கு பொய்யா விளக்கே விளக்கு.

**9 எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு. 299**

எல்லா விளக்கும் — புறத்திருளைப் போக்குகின்ற விளக்குகள் எல்லாம், விளக்கு — விளக்குகள் , அல்ல — ஆகாவாம், சான்றோர்க்கு — துறவு நிலைபெற்ற பெரியோர்களுக்கு, விளக்கு — விளக்கென்பது, பொய்யா விளக்கே — பொய் பேசாமை என்கின்ற விளக்கேயாகும்.

யாம் மெய்ந்நூல்களாகக் கண்டவற்றுள் எத்தன்மையாலும் வாய்மையினைவிட மேலானதாகக் கூறப்படும் அறமே இல்லை என்பதாகும்.

யாம் மெய்யா கண்டவற்றுள் இல்லை எனைத்து ஒன்றும் வாய்மையின் நல்ல பிற.

**10 யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்துஒன்றும்**
**வாய்மையின் நல்ல பிற. 300**

யாம் — யாம், மெய்யா — மெய்ம்மையினைக் கூறும் நூல்களாக, கண்டவற்றுள் — கண்டறிந்த நூல்களுள், எனைத்து — யாதொரு, ஒன்றும் — தன்மையாலும், வாய்மையின் — வாய்மையினைவிட, நல்லபிற — சிறந்ததான நல்ல பிறஅறங்கள் என்புவை, இல்லை — கூறப்படவில்லை.

## 31 வெகுளாமை

### [கோபத்தினால் வரும் தீமைகளும் அதனை நீக்குதலும்]

சினம் பலிக்குமிடத்தில் அதனை வராமல் காப்பவனே அருளால் காப்பவனாவான். அது பலிக்காத இடத்தில் அதனைத் தடுத்தால் என்ன? தடுக்காமல் இருந்தால்தான் என்ன?

செல் இடத்து காப்பான் சினம் காப்பான் அல் இடத்து காக்கின் என் காவாக்கால் என்.

**1 செல்லிடத்துக் காப்பான் சினம்காப்பான் அல்லிடத்துக்**
**காக்கின்என் காவாக்கால் என். 301**

சினம் — சினம் [கோபம்] என்பதனை, செல் — சென்று பலிக்கும், இடத்து — இடத்தில், காப்பான் — வாராமல் காப்பவனே, காப்பான் — தன்னைக் காப்பவனாவான், அல்லிடத்து — மற்றபடி கோபம் பலியாதவிடத்தில், காக்கில்என் — வராமல் தடுத்தால்தான் என்னபயன்? காவாக்கால்என் — தடுக்காவிட்டால்தான் என்ன பயன்?

கோபம் தன்னைவிட வலியவர்கள் மேல் உண்டாகுமானால் தனக்கே தீமையாகும். மற்ற எளியவர்கள் மீது சென்றால் அதனைவிடத் தீமையானது பிற இல்லையாகும்.

செல்லா இடத்து சினம் தீது செல் இடத்தும் இல் அதனின் தீய பிற.

**2 செல்லா இடத்துச் சினம்தீது செல்லிடத்தும்**
**இல்அதனின் தீய பிற. 302**

சினம் — சினமானது, செல்லா — பலிக்காத, இடத்து — தன்னைவிட வலியவர் மீது சென்றால், தீது — தனக்கே தீமையாக முடியும், செல்லிடத்து — தன்னின் மெலியவர் மீது செல்லும் போது, அதனின் — அந்தக் கோபத்தினைவிட, தீய — தீமையினைத் தருவது, பிறஇல் — வேறு எதுவும் இல்லை.

யாவரிடத்தும் கோபத்தினை மறந்து விடுதல் வேண்டும். ஒருவற்குத் தீமைகள் எல்லாம் அதனாலேயே வரும்.

மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய பிறத்தல் அதனால் வரும்.

**3 மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய**
**பிறத்தல் அதனான் வரும். 303**

யார் மாட்டும் — எத்தகையவரானவரிடத்தும், வெகுளியை — சினத்தினை, மறத்தல் — மறத்தல் வேண்டும், தீய பிறத்தல் — தீமையானவைகள் எல்லாம் பிறப்பது, அதனான் வரும் — அந்தக் கோபத்தினாலேயே வந்து விடுவதாகும்.

முகத்தின்கண் தோன்றும் மலர்ச்சியான நகைப்பினையும் மனத்தில் தோன்றும் மகிழ்ச்சியினையும் கொன்று விடுகின்ற கோபத்தினை விட வேறு பகையும் உண்டோ?

நகையும் உவகையும் கொல்லும் சினத்தின் பகையும் உளவோ பிற.

**4 நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்**
**பகையும் உளவோ பிற. 304**

நகையும் — முக மலர்ச்சியினையும், உவகையும் — அகக் களிப்பினையும், கொல்லும் சினத்தின் — கொல்லுகின்ற கோபத்தினைவிட, பிற பகையும் — வேறு பகைகளும் உளவோ — இருக்கின்றனவோ?

தனக்குத் துன்பம் வராமல் காத்துக் கொள்ள நினைப்பானானால், தன் மனத்தில் கோபம் வராமல் காத்தல் வேண்டும். அப்படிக் காப்பாற்றாவிடில் தன்னையே அக்கோபம் கெடுத்துவிடும்.

தன்னை தான் காக்கின் சினம் காக்க காவாக்கால் தன்னையே கொல்லும் சினம்.

**5 தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லும் சினம். 305**

தன்னைத்தான் — தன்னைத்தானே, காக்கின் — துன்பத்திலிருந்து காப்பாற்ற விரும்புவானாகில், சினம் காக்க — சினம் வராதபடி காத்துக் கொள்ள வேண்டும், காவாக்கால் — அவ்வாறு காப்பாற்றானாகில், சினம் — அச்சினமானது, தன்னையே கொல்லும் — தன்னையே கெடுத்து விடும்.

சினம் என்னும் நெருப்பு தன்னை உண்டாக்கியவரையே யல்லாமல் அவருக்கு இனம் என்னும் பாதுகாப்பாகிய மரக்கலத்தினையும் சுடும்.

சினம் என்னும் சேர்ந்தாரை கொல்லி இனம் என்னும் ஏமப்புணையை சுடும்.

**6 சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்**
**ஏமப் புணையைச் சுடும். 306**

சினம் — சினம் [கோபம்], என்னும் — என்று கூறப்படும், சேர்ந்தாரைக் கொல்லி — நெருப்பு, இனம் — இனம், என்னும் — எனப்படும், ஏமப் புணையை — தனக்கு நல்லன வற்றைச் செய்கின்ற பாதுகாப்பான மரக்கலத்தினையும், சுடும் — சுட்டுவிடும்.

நிலத்தினை அறைந்தவனுடைய கையானது அந்த நிலத்தினையடைதல் தப்பாதவாறு போல சினத்தையே தனக்குக் குணமாகக் கொண்டிருப்பவன் கெடுவது உறுதி.

சினத்தை பொருள் என்று கொண்டவன் கேடு நிலத்து அறைந்தான் கை பிழையாதற்று.

**7 சினத்தைப் பொருள்என்று கொண்டவன் கேடு**
**நிலத்துஅறைந்தான் கைபிழையா தற்று. 307**

சினத்தை — சினத்தினை, பொருள் — தனக்கு ஏற்ற குணம், என்று — என்பதாக, கொண்டவன் — கொண்டிருப்பவனுடைய, கேடு — அழிவானது, நிலத்து அறைந்தான் — நிலத்தில் அறைந்தவனுடைய, கை — கையானது, பிழையாதற்று — தப்பி விடாதது போன்றதாகும்.

பல சுடர்களையுடைய பெரிய எரி [நெருப்பு] எல்லாம் வந்து ஒன்றாகச் சேர்ந்தது போன்ற துன்பத்தினை ஒருவன் செய்தாலும், கூடுமானால் அவன்மீது கோபிக்காதிருத்தல் நல்லது.

இணர் எரி தோய்வு அன்ன இன்னா செயினும் புணரின் வெகுளாமை நன்று.

**8 இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்**
**புணரின் வெகுளாமை நன்று. 308**

இணர் — பலவாகச் சேர்ந்த சுடர்களைக் கொண்ட, எரி — பெரிய நெருப்பானது, தோய் வன்ன — தழுவிக் கொண்டதைப் போன்ற, இன்னா செயினும் — துன்பத்தினை ஒருவன் செய்தானேயானாலும், வெகுளாமை — அவன்மீது கோபம் கொள்ளாதிருத்தல், புணரின் நன்று — கூடுமானால் நல்லதாகும்.

துறவியானவன் தன்மனத்தால் கோபத்தினை ஒருபோதும் நினைக்காமல் இருப்பானானால் அவன் கருதிய செல்வங்கள் எல்லாவற்றினையும் ஒருங்கே பெறுவான்.

**உள்ளியது எல்லாம் உடன் எய்தும் உள்ளத்தால் உள்ளான் வெகுளி எனின்.**

**9 உள்ளியது எல்லாம் உடன்எய்தும் உள்ளத்தால்**
**உள்ளான் வெகுளி எனின்.** 309

உள்ளத்தால் — தவத்தோன் மனத்தினால், வெகுளி — சினத்தினை, உள்ளான் — நினைக்க மாட்டான், எனின் — என்றால், உள்ளியது — அவனால் மனத்தில் நினைக்கப்பட்டவை, எல்லாம் — எல்லாம், உடன் எய்தும் — ஒன்று சேர அடைவான்.

சினத்தில் மிகுந்து இருப்பவர்கள் உயிரோடிருப்பவர்களேயானாலும் செத்தவருக்கு ஒப்பாவர். அந்தச் சினத்தினை விட்டவர்கள், உடம்பால் சாதல் தன்மையரேயானாலும் இறவாத வர்களுக்குச் சமமாவார்கள்.

**இறந்தார் இறந்தார் அனையர் சினத்தை துறந்தார் துறந்தார் துணை.**

**10 இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை.** 310

இறந்தார் — மிகுந்த சினத்திலே இருப்பவர், இறந்தார் — இறந்தவரோடு, அனையர் — ஒப்பாவார், சினத்தை — அந்தச் சினத்தினை, துறந்தார் — விட்டு நீக்கினவர், துறந்தார் துணை — [சாதல் தன்மையரேனும்] இறவாதவர்களுக்கு ஒப்பாவார்.

## 32. இன்னா செய்யாமை

**[பிற உயிர்களுக்குத் துன்பம் தருவனவற்றைச் செய்யாமை.]**

பிறர்க்குத் துன்பம் செய்து தவமாகிய சிறப்புத் தரும் செல்வங்களைப் பெறலாம் என்றாலும், அதனைச் செய்யாதிருப்பதே மனம் மாசற்றவரது துணிபாகும்.

**சிறப்பு ஈனும் செல்வம் பெறினும் பிறர்க்கு இன்னா செய்யாமை மாசு அற்றார் கோள்.**

**1 சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்.** 311

சிறப்பு — தவமாகிய சிறப்பினாலே, ஈனும் — அடையப்படுவனவாகிய, செல்வம் பெறினும் — செல்வங்களைப் பெறலாம் என்றாலும், பிறர்க்கு — மற்றவர்களுக்கு, இன்னா — துன்பம் உண்டாக்குபவைகளை, செய்யாமை — செய்யாதிருத்தல், மாசு — குற்றம், அற்றார் — இல்லாதவரது, கோள் — துணிவு என்பதாகும்.

தன்மேல் கோபம் கொண்டு ஒருவன் துன்பம் தருபவைகளைச் செய்தான் என்றாலும் மீண்டும் தாம் அவனுக்குத் துன்பம் செய்யாமை மாசற்ற தவசிகளின் துணிபாகும்.

கறுத்து இன்னா செய்த அக்கண்ணும் மறுத்து இன்னா செய்யாமை மாசு அற்றார் [கோள்.

**2 கறுத்துஇன்னா செய்தஅக் கண்ணும் மறுத்துஇன்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்.** 312

கறுத்து — தம்மீது கோபங்கொண்டு, இன்னா — துன்பத்தினை, செய்த அக்கண்ணும் — செய்த போதும், மறுத்து — மீண்டும், இன்னா செய்யாமை — துன்பம் தருவனவற்றைத் தாம் திரும்பச் செய்யாதிருத்தல், மாசற்றார் — மனத்தில் குற்ற மற்றவரது, கோள் — குறிக்கோளும் துணிவுமாகும்.

தான் முன்பு ஒரு தீமையும் செய்யாதிருக்கத் தன்மேல் கோபம் கொண்டவர்க்குத் துன்பத்தினை முனிவன் செய்வானானால் அச்செயல் அவனுக்குக் கடக்க முடியாத துன்பத்தினைத் தரும்.

செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின் உய்யா விழுமம் தரும்.

**3 செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்**
**உய்யா விழுமம் தரும்.** 313

செய்யாமல் — தான் முன்பு துன்பத்தினைச் செய்யாதிருந்தும், செற்றார்க்கும் — தன்மீது [பிறகு] கொண்டவர்க்கும், இன்னாத — துன்பத்தினை, செய்தபின் — தவசி செய்வானாகில், கோபம் உய்யாவிழுமம் — தப்பிக்க முடியாத துன்பத்தினை, தரும் — அவனுக்குத் தந்து விடும்.

தமக்குத் துன்பம் செய்தவர்களைத் துறந்தவர்கள் தண்டித்தல் என்பதானது, அத்துன்பம் செய்தவர்கள் தாமே நாணம் அடையும்படி அவர்கட்கு இனிமையானவைகளைச் செய்து அவ்விரண்டினையும் மறந்து விடுதலாகும்.

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நல் நயம் செய்து விடல்.

**4 இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயம் செய்து விடல்.** 314

இன்னா — துன்பத்தினை, செய்தாரை — தமக்குச் செய்தவரை, ஒறுத்தல் — துறந்தார் தண்டித்தல் என்பது, அவர் — அத்துன்பம் செய்தவர், நாண — தாமே நாணம் அடையும் படியாக, நன்னயம் — இனிமையான நன்மைகளை, செய்துவிடல் — செய்து, அவ்விரண் டினையும் அப்போதே மறந்து விடுதலாகும்.

மற்ற உயிர்க்கு வரும் துன்பத்தினைத் தனக்கு வந்தது போல நினைத்துக் காப்பாற்றாவிடில் உயிர் முதலானவற்றை உள்ளவாறு அறிந்த துறவிகளுக்கு, அறிவினால் ஆவதொரு பயன் உண்டோ? இல்லை என்பதாம்.

அறிவினால் ஆகுவது உண்டோ பிறிதின் நோய் தம் நோய்போல் போற்றாக்கடை.

**5 அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்**
**தன்நோய்போல் போற்றாக் கடை.** 315

பிறிதின் — மற்றவோர் உயிர்க்கு வந்த, நோய் — துன்பத்தினை, தன் — தனக்கு வந்த, நோய்போல் — துன்பத்தினைப் போல, போற்றாக்கடை — காப்பாற்றாதபோது, அறிவினான் — துறவிகள் தாம் பெற்ற அறிவினால், ஆகுவது — ஆவதொரு பயன் உண்டாகுமோ? [உண்டாகாது என்பதாம்]

''இவை மக்களுக்குத் துன்பம் தருபவை'' என அறிந்தவற்றைத் துறவியானவன் பிறரிடத்தில் செய்வதைக் கருத்தில் கொள்ளாதிருத்தல் வேண்டும்.

இன்னா என தான் உணர்ந்தவை துன்னாமை வேண்டும் பிறன்கண் செயல்.

**6 இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை**
**வேண்டும் பிறன்கண் செயல்.** 316

இன்னா — மக்களுக்குத் துன்பம் கொடுப்பவை, என — என்று, தான் — தான், உணர்ந்தவை — அறிந்தவைகளை, பிறன்கண் — மற்றவர்களிடத்திலே, செயல் — செய்வதை, துன்னாமை — கைக் கொள்ளாதிருத்தல், வேண்டும் — வேண்டப்படுவதாகும்.

மனத்தோடு பொருந்திய துன்பம் தரும் செயல்களை எக்காலத்திலும், யார்க்கும் சிறிதேயாயினும் செய்யாதிருத்தல் தலையான அறமாகும்.

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தான் ஆம் மாணா செய்யாமை தலை.

**7 எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தான்ஆம்**
**மாணாசெய் யாமை தலை.** 317

மனத்தானாம் — மனத்தோடு பொருந்த, மாணா — துன்பச் செயல்களை, எஞ்ஞான்றும் — எக்காலத்திலும், யார்க்கும் — யாருக்கும், எனைத்தானும் — எவ்வளவு சிறிதளவேயானாலும், செய்யாமைதலை — செய்யாதிருந்தல் முதன்மையான அறமாகும்.

பிறர் செய்யும் துன்பம் தன் உயிர்க்குத் துன்பம் தருவதை அனுபவித்து அறிந்தவன் நிலைபேறுடைய பிற உயிர்க்குத் துன்பம் செய்வது என்ன காரணத்தால்?

தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான் என்கொலோ மன் உயிர்க்கு இன்னா [செயல்.

**8 தன்உயிர்க்கு இன்னாமை தான்அறிவான் என்கொலோ**
**மன்உயிர்க்கு இன்னா செயல்.** 318

தன் — தன்னுடைய, உயிர்க்கு — உயிருக்கு, இன்னாமை — துன்பம் தரும் என்பதனை, அறிவான் — அறிந்தவன், மன்னுயிர்க்கு — நிலையான பிற உயிர்களுக்கு, இன்னா — துன்பத்தினை, தான்செயல் — தான்செய்வது, என்கொல் — என்ன நினைப்பினால்?

பிறர்க்குத் துன்பத்தினை முற்பகல் செய்வானேயானால், தமக்குத் துன்பங்கள் பிற்பகலில் அவர் செய்யாமல் தாமே வரும்.

பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்கு இன்னா பிற்பகல் தாமே வரும்.

**9 பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்.** 319

பிறர்க்கு — மற்றவர்களுக்கு, இன்னா — துன்பத்தினை, முற்பகல் செய்யின் — முற்பகலிலே செய்வானாகில், தமக்கு — அப்படி செய்த தமக்கு, இன்னா — துன்பங்கள், பிற்பகல் — பிற்பகலிலே, தாமே — அவர் செய்யாமலேயே, வரும் — வந்துவிடும்.

துன்பமெல்லாம், பிறிதோர் உயிர்க்குத் துன்பம் செய்தவர் மேலதேயாகும். ஆதலால் தம் உயிர்க்குத் துன்பம் வேண்டாதவர்கள் பிறிதோர் உயிர்க்குத் துன்பம் செய்ய மாட்டார்கள்.

நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார் நோய் இன்மை [வேண்டுபவர்.

**10 நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்**
**நோய்இன்மை வேண்டு பவர்.** 320

நோய் — துன்பம், எல்லாம் — எல்லாம், நோய் செய்தார் — பிற உயிர்களுக்குத் துன்பம் செய்தவர், மேலவாம் — மேலதேயாகும், [ஆதலால்] நோய் — துன்பம், இன்மை — இல்லாமையை, வேண்டுபவர் — விரும்புவர், நோய் — துன்பங்களை, செய்யார் — மற்ற உயிர்களுக்குச் செய்யமாட்டார்கள்.

## 33, கொல்லாமை

[எவ்வுயிரினையும் கொல்லாதிருத்தலாகும்]

அறம் ஆகிய செய்கை யாது என்று கேட்டால் அஃது ஓர் உயிரையும் கொல்லாமையே யாகும். அவ்வாறு கொல்லுதல் தீமையான செயல்கள் பலவற்றையும் கொடுக்கும்.

அறவினை யாது எனின் கொல்லாமை கோறல் பிறவினை எல்லாம் தரும்.

1 அறவினை யாதுஎனின் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாம் தரும். 321

அறவினை — அறமான செயல், யாது — எது, எனின் — என்று கேட்டால், கொல்லாமை — கொல்லாமையேயாகும், கோறல் — அப்படிக் கொல்லுதல் என்பது, பிறவினை எல்லாம் — தீமையான எல்லாவற்றையும், தரும் — அஃதொன்றே தந்துவிடும்.

உண்பதனைப் பலருக்கும் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்டு எல்லா உயிர்களையும் காப்பாற்றுதல், அறநூலுடையோர்கள் துறந்தார்க்குத் தொகுத்துக் கூறிய எல்லா அறங்களிலும் முதன்மையான அறமென்று சொல்லப்படும்.

பகுத்து உண்டு பல் உயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

2 பகுத்துஉண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை. 322

பகுத்து — பலருக்கும் கொடுத்து, உண்டு — தானும் உண்டு, பல் — பல, உயிர் — உயிர்களையும், ஓம்புதல் — காப்பாற்றுதல், நூலோர் — அறநூலுடையோர், தொகுத்த வற்றுள் — தொகுத்துக் கூறிய, எல்லாம் — எல்லா அறங்களிலும், தலை — மேலான அறமாகும்.

தன்னோடு இணைப்பின்றித் தானேயாக ஒரே ஓர் அறமாக இருக்க நல்லது கொல்லாமையே யாகும். அதன் பின்னே நிற்க பொய்யாமை என்கின்ற அறம் நல்லதாகும்.

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன் பின்சார பொய்யாமை நன்று.

3 ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றுஅதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. 323

ஒன்றாக — ஒன்றே ஒன்று என்பதாக இருக்க, கொல்லாமை — கொலை செய்யாமை என்ற ஓர் அறமே, நல்லது — நல்லதாகும், பொய்யாமை — பொய் சொல்லாமை என்னும் அறம், அதன் — அந்தக் கொல்லாமை யென்பதற்கு, பின் — பின்னே, சார — இருக்க, நன்று — நல்லதாகும்.

நல்ல நெறி என்று சொல்லப்படுவது யாது என்றால், அது யாதோர் உயிரையும் கொல்லாமையாகிய அறத்தினைக் காக்கும் நெறியேயாகும்.

**நல் ஆறு எனப்படுவது யாது எனின் யாது ஒன்றும் கொல்லாமை சூழும் நெறி.**

**4 நல்ஆறு எனப்படுவது யாதெனின் யாதுஒன்றும்**
**கொல்லாமை சூழும் நெறி. 324**

நல் — நல்ல, ஆறு — நெறி, எனப்படுவது — என்று சொல்லப்படுவது, யாது — எது, எனின் — என்று கேட்டால், யாதொன்றும் — எந்த உயிரினையும், கொல்லாமை — கொலை செய்யாமை என்னும் அறத்தினை, சூழும் — பாதுகாக்க நினைக்கும், நெறி — நெறியேயாகும்.

பிறப்பு என்ற நிலையினை அஞ்சி ஆசையெல்லாம் விட்ட நீத்தார்களுள் எல்லாம் கொலைத் தீமையினை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தினை மறவாதவன் உயர்ந்தவனாவான்.

**நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலை அஞ்சி கொல்லாமை சூழ்வான் தலை.**

**5 நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்**
**கொல்லாமை சூழ்வான் தலை. 325**

நிலை — இப்பிறவியின் நிலையினை, அஞ்சி — அச்சப்பட்டு, [மீண்டும் பிறவாமை கருதி] நீத்தாருள் — துறவறத்தினை மேற்கொண்டவர்கள், எல்லாம் — எல்லாருள்ளும், கொலை அஞ்சி — கொலைத் தீமையினை அஞ்சி, கொல்லாமை — கொல்லாமை என்கின்ற அறத்தினை, சூழ்வான் — மறவாதவன், தலை — மிகவும் சிறந்தவனாவான்.

கொல்லாமையினை நோன்பாகக் கொண்டு ஒழுகுவானது வாழ்நாள்மேல் உயிரினை உண்ணுகின்ற கூற்றுவன் செல்லமாட்டான்.

**கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல் செல்லாது உயிர் உண்ணும் [கூற்று.**

**6 கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்**
**செல்லாது உயிர்உண்ணும் கூற்று. 326**

கொல்லாமை — கொலை செய்யாமை என்பதனை, மேற்கொண்டு—நோன்பாக மேற்கொண்டு, ஒழுகுவான் — நடந்து கொள்ளுபவனது, வாழ்நாள்மேல் — வாழுகின்ற நாளில் அவனுடைய ஆயுளின் மீது, உயிர் உண்ணும் — உயிரினைக் கொண்டு செல்லும், கூற்று — கூற்றுவன், செல்லாது — செல்லமாட்டான்.

ஒருவன் தன்னுடைய உயிர் நீங்கிப் போகுமேயானாலும், தான் பிறிதோர் இன்னுயிரை அதன் உடம்பினின்றும் நீக்கும் தொழிலினைச் செய்யாதிருப்பானாக.

தன் உயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறிது இன் உயிர் நீக்கும் வினை.

**7 தன்உயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**
**இன்உயிர் நீக்கும் வினை.** 327

தன் — தன்னுடைய, உயிர் — உயிரானது, நீப்பினும் — நீங்கிப் போவதேயானாலும், செய்யற்க — செய்யாதிருப்பானாக, [எதனை] தான் — தான், பிறிது — பிற ஒன்றினது, இன் — இனிமையான, உயிர் — உயிரினை, நீக்கும்வினை — நீக்குதலாகிய தொழிலினை என்பதாம்.

கொலை செய்வதால் நன்மையாக ஆகின்ற செல்வம் பெரிதுதான் என்று கூறப்பட்டாலும், துறவால் அமைந்த சான்றோர்களுக்கு உயிரைக் கொல்லுவதனால் வரும் செல்வம் இழிவானதாகும்.

நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும் சான்றோர்க்கு கொன்று ஆகும் ஆக்கம் கடை.

**8 நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்**
**கொன்றாகும் ஆக்கம் கடை.** 328

நன்று — நல்லபடியாக, ஆகும் — ஆகின்ற, ஆக்கம் — செல்வமானது, பெரிது எனினும் — பெரிதாக இருக்கும் என்று சொல்லப்பட்டாலும், சான்றோர்க்கு — துறவறத்தால் சிறந்த பெரியோர்களுக்கு, கொன்று — கொலை செய்து, ஆகும் ஆக்கம் — ஆவதாகிய செல்வமானது, கடை — இழிவானதேயாகும்.

கொலைத் தொழிலினையுடையவராகிய மக்கள் அத்தொழிலின் கீழ்மையை அறிந்தவர் நெஞ்சத்தில் அவர் புலைத் தொழிலினராகக் கருதப்படுவர்.

கொலை வினையர் ஆகிய மாக்கள் புலை வினையர் புன்மை தெரிவார் அகத்து.

**9 கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மை தெரிவார் அகத்து.** 329

கொலை — கொலை செய்வதனை, வினையர் ஆகிய — தொழிலாகக் கொண்ட, மாக்கள் — மாந்தர், புன்மை — அத்தொழிலின் இழிவினை, தெரிவார் — அறிந்த பெரியோர்களின், அகத்து — நெஞ்சத்தில், புலைவினையர் — புலைத் தொழிலினைச் செய்புவராகக் கருதப் படுவர்.

பார்க்கக் கூடாத நோயுடம்புடனே வறுமையுள்ள வாழ்க்கையினையுடையவர்களை, முற்பிறப்பில் உயிர்களை உடம்பினின்றும் நீக்கியவர்கள் என்று அறிந்தோர் கூறுவார்கள்.

உயிர் உடம்பின் நீக்கியார் என்ப செயிர் உடம்பின் செல்லா தீ வாழ்க்கையவர்.

**10 உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்**
**செல்லாத்தீ வாழ்க்கை யவர். 330**

செயிர் உடம்பின் — காணக் கூடாத நோய் உடம்புடனே, செல்லாத் தீ — வறுமையுள்ள இழிதொழில், வாழ்க்கையவர் — வாழ்க்கையுடையவர்களை, [அவர்கள்] உயிர் — உயிர்களை, உடம்பின் — [முன்னர்] உடம்புகளிலிருந்து, நீக்கியார் என்ப — நீக்கியவர்கள் என்று அறிந்தோர் கூறுவார்கள்.

## ஞானம்

## 34. நிலையாமை

**[தோற்றமுடையன யாவும் நிலைபெறாதவைகளாகும்]**

நிலையில்லாத பொருள்களை நிலையானவைகள் என்று கருதுகின்ற புன்மையான அறிவு துறந்தார்க்கு இழிவாகும்.

நில்லாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவு ஆண்மை கடை.

**1 நில்லா தவற்றை நிலையின என்றுணரும்**
**புல்லறிவு ஆண்மை கடை. 331**

நில்லாதவற்றை — நிலையில்லாதவைகளை எல்லாம், நிலையின — நிலைத்து நிற்பன, என்று — என்பதாக, உணரும் — உணருகின்ற, புல்லறிவாண்மை — புன்மையான அறிவினை உடையவராக இருத்தல், கடை — இழிவானதாகும்.

ஒருவனுக்குப் பெரிய செல்வம் வருதல் கூத்தாட்டத்தினைப் பார்க்க வந்த கூட்டம் போன்றதாகும். அச் செல்வம் அவனை விட்டுப் போவது கூத்து முடிந்தவுடன் அக்கூட்டம் போவது போன்றதாகும்.

கூத்தாட்டு அவை குழாத்தற்றே பெருஞ் செல்வம் போக்கும் அது விளிந்தற்று.

**2 கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்**
**போக்கும் அதுவிளிந் தற்று. 332**

பெரும் — பெரிய, செல்வம் — செல்வம், [ஒருவனுக்கு வருதல்] கூத்தாட்டு — கூத்தாடுகின்ற, அவை — களத்திற்கு, குழாத்தற்று — பார்ப்போர் கூட்டம் வருவது போன்றதாகும், போக்கும் — செல்வம் அவனை விட்டுப் போவதும், அது — அந்த மக்கள் கூட்டமானது, விளிந்தற்று — கூத்து முடிந்தவுடன் போவதைப் போன்றதாகும்.

நிலைத்து நில்லாத தன்மையினையுடையது செல்வமாகும். அதனைப் பெற்றால் செய்யப்பட வேண்டிய அறங்களை அப்பொழுதே செய்தல் வேண்டும்.

அற்கா இயல்பிற்று செல்வம் அது பெற்றால் அல்குப ஆங்கே செயல்.

**3 அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். 333**

அற்கா — நிலைத்து நிற்காத, இயல்பிற்று — தன்மையுடையதாகும், செல்வம் — செல்வம், [ஆதலால்] அது — அத்தன்மையதான செல்வத்தை, பெற்றால் — பெற்றால், அற்குப — செய்யப்பட வேண்டிய செயல்களை, ஆங்கே செயல் — பெற்ற அப்போதே செய்வாயாக!

நாள், அறுக்கப்படுவதொரு காலத்தின் அளவுபோல் தன்னைக் காட்டிக் கொண்டு, அதனை உணர்வாரைப் பெற்றால் அறுத்துச் செல்லுகின்ற வாளினது வால் இருக்கும் உயிர் ஆகும் என்பதாம்.

நாள் என ஒன்றுபோல் காட்டி உயிர் ஈரும் வாளது உணர்வார் பெறின்.

**4 நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள்அது உணர்வார்ப் பெறின். 334**

நாள் — நாள், என — என்று சொல்லப்படுவது, ஒன்று போல் — ஒரு காலத்தின் அளவு போல், காட்டி — தன்னைக் காட்டிக் கொண்டு, ஈரும் — அறுத்துச் செல்லும், வாளது — வாளினது வாயது, உயிர் — உயிராகும், உணர்வார் — இந்த உண்மையினை அறிந்துணர்பவர்களை, பெறின் — பெற்றிருந்தால் என்பதாம்.

பேச முடியாதபடி நாவினை அடக்கி விக்குள் எழுவதற்கு முன்னமேயே அறச் செயலானது விரைவாகச் செய்யப்படுதல் வேண்டும்.

நா செற்று விக்குள் மேல் வாராமுன் நல்வினை மேற்சென்று செய்யப்படும்.

**5 நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். 335**

நாச்செற்று — பேச முடியாதபடி நாவைத் தடுத்து, விக்குள் — விக்குளானது, மேல்வாராமுன் — எழுவதற்கு முன்பதாகவே, நல் — அறமான, வினை — செயலினை, மேற்சென்று — விரைவாக, செய்யப்படும் — செய்யப்படுதல் வேண்டும்.

ஒருவன் நேற்றைய தினம் இருந்தான்; இன்றைய தினம் இல்லாமற் போனான் என்று கூறப்படும் நிலையாமை மிகுதியினை உடையதாகும் இவ்வுலகு.

நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை என்னும் பெருமை உடைத்து இவ் உலகு.

**6 நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்துஇவ் உலகு.** 336

ஒருவன் — ஒருவன், நெருநல் — நேற்றைய தினம், உளன் — இருந்தான், இன்று இல்லை — இன்றைய தினம் இல்லாமற் போனான், என்னும் — என்று கூறப்படும், பெருமை — நிலையாமை மிகுதியினை, உடைத்து — உடையதாகும், இவ்வுலகு — இந்த உலகம்.

ஒரு பொழுதளவும் தமது உயிரும் உடம்பும் சேர்ந்து வாழ்வதனை அறிய மாட்டாதவர்கள் கோடியளவும் அல்லாமல் அதனினும் பலவாய நினைவுகளை நினைக்கின்றனர்.

ஒரு பொழுதும் வாழ்வது அறியார் கருதுப கோடியும் அல்ல பல.

**7 ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப**
**கோடியும் அல்ல பல.** 337

ஒரு பொழுதும் — ஒரு பொழுதளவு கூட, வாழ்வது—உயிரும் உடம்பும் சேர்ந்து வாழ்வதனை, அறியார் — அறிந்து கொள்ள முடியாதவர்கள், கோடியும் — கோடி அளவும், அல்ல — அல்லாமல், பல கருதுப — அதனைவிட எண்ணிறந்த எண்ணங்களை எண்ணுவார்கள்.

முட்டையானது தனித்துக் கிடப்ப. அதனுள்ளே இருந்த பறவை பருவம் வந்தவுடன் பறந்து போன தன்மையதாகும். எதுவென்றால், உடம்புக்கும், உயிருக்கும் உள்ள நட்பு என்பதாம்.

குடம்பை தனித்து ஒழிய புள் பறந்தற்றே உடம்போடு உயிரிடை நட்பு.

**8 குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே**
**உடம்போ டுயிரிடை நட்பு.** 338

உடம்போடு — உடம்பினோடு, உயிரிடை — உயிருக்கு உண்டாகிய, நட்பு — நட்பானது, [எதுபோன்றது என்றால்] குடம்பை — முட்டையானது, தனித்து — தனியாக, ஒழிய — நீங்க, புள் — உள்ளே இருந்த பறவையானது, பறந்தற்று — பறந்து போனது போன்றதாகும்.

ஒருவனுக்குச் சாக்காடு வருவது, உறக்கம் வருவதற்கு ஒப்பாகும். அதன்பின் பிறப்பு வருதல், உறங்கியபின் விழித்தல் வருதலோடு ஒப்பாகும்.

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு.

**9 உறங்குவது போலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு.** 339

சாக்காடு — இறப்பு வருதல், உறங்குவது போலும் — உறக்கம் வருவதனை ஒக்கும், பிறப்பு — பிறப்பு வருதல், உறங்கி விழிப்பது போலும் — உறங்கியபின் விழிப்பு வருவதனை ஒக்கும்.

உடம்புகளுள் ஒதுக்கமாகவே இருந்து வந்த உயிர்க்கு, எப்போதும் நிலையாக இருப்பதோர் இல்லம் இதுவரை அமைந்ததில்லை போலும்!

புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு.

**10 புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்**
**துச்சில் இருந்த உயிர்க்கு.** 340

உடம்பினுள் — உடம்புகளுக்குள், துச்சில் — ஒதுக்கமாகவே, இருந்த — இருந்து வந்த, உயிர்க்கு — உயிருக்கு, புக்கில் — எப்போதும் நிலையாக இருக்கும் இல்லம், அமைந்தின்று கொல் — இதுவரை அமைந்திருக்கவில்லை போலும்!

## 35. துறவு

**[செல்வங்களிடத்தும் உடம்பினிடத்தும் பற்றினை விடுதலாகும்]**

ஒருவன் யாதொரு பொருளின் யாதொரு பொருளின் பற்றற்று நீங்கினானோ அவன் அந்தந்தப் பொருளால் வரும் துன்பத்தினையடைதல் இல்லையாவான்.

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் அதனின் அதனின் இலன்.

**1 யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்.** 341

யாதனின் யாதனின் — யாதொரு பொருளின் யாதொரு பொருளின், நீங்கியான் — ஆசை விட்டு நீங்கியவன், அதனின் அதனின் — அந்தந்தப் பொருளினாலே வருகின்ற, நோதல் இலன் — துன்பம் அடைதல் இல்லாதவனாவான்.

எல்லாப் பொருள்களையும் துறந்துவிட்டால் ஒருவனுக்கு உண்டாகும் இன்பங்கள் பலவாகும். அவ்வின்பங்களை விரும்பினால் அவற்றைக் காலமறிந்து துறத்தல் வேண்டும்.

வேண்டின் உண்டாக துறக்க துறந்தபின் ஈண்டு இயற்பால பல.

**2 வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்**
**ஈண்டியற் பால பல.** 342

துறந்த — பொருள்களின் மீது ஆசைகளை விட்ட, பின் — பிறகு, ஈண்டு — இப்பிறப்பினில், இயற்பால — உண்டாகக் கூடிய, பல — இன்பங்கள் பலவாகும், வேண்டின் — அந்த இன்பங்களை விரும்பினால், உண்டாக — தக்க காலத்தில், துறக்க — அந்தப் பொருள்களைத் துறந்து விடுதல் வேண்டும்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து பொறிகளுக்கு உரியனவாகிய ஐந்து புலன்களையும் அடக்கிக் கெடுத்தல் வேண்டும். அப்படிக் கெடுக்கும்போது தாம் நுகர்வதற்குப் படைத்த பொருள் முழுவதையும் ஒருங்கே விடுதல் வேண்டும்.

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு.

**3 அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்**
**வேண்டிய எல்லாம் ஒருங்கு.** 343

ஐந்தன் — ஐந்து பொறிகளுக்குரியவையான, புலத்தை — ஐந்து புலன்களையும், அடல் வேண்டும் — அடக்குதல் வேண்டும், [அவ்வாறு செய்யும்போது] வேண்டிய — நுகர்வதற்கு உண்டாக்கப்பட்டுள்ளதை, எல்லாம் — எல்லாம், ஒருங்கு — ஒன்று சேர, விடல் வேண்டும் — விட்டு விடுதல் வேண்டும்.

தவத்தினை நோற்பவர்களுக்குப் பற்று வைத்திருப்பதான பொருள் எதுவுமே இல்லாதிருத்தல் இயல்பாகும். அப்படிக்கின்றி ஒன்றின் மேலாவது பற்று இருந்து விட்டால் அத்தவத்தினைப் போக்கி மீண்டும் மயங்குவதற்குக் காரணமாகிவிடும்

இயல்பு ஆகும் நோன்பிற்கு ஒன்று இன்மை உடைமை மயல் ஆகும் மற்றும் பெயர்த்து.

**4 இயல்பாகும் நோன்பிற்கு ஒன்றுஇன்மை உடைமை**
**மயல்ஆகும் மற்றும் பெயர்த்து.** 344

ஒன்று — பற்று வைத்திருப்பதான ஒரு பொருளும், இன்மை — இல்லாதிருப்பது, நோன்பிற்கு இயல்பாகும் — தவத்தினை நோற்பவர்களுக்கு இயல்பான தன்மையாகும், உடைமை — ஒன்றிலேனும் பற்று இருந்து விட்டால், பெயர்த்து — அப்பற்று அத்தவத்தினைப் போக்குதலால், மற்றும் — மறுபடியும், மயலாகும் — அஞ்ஞானமாகிய மயக்கத்திற்குக் காரணமாக முடியும்.

பிறப்பு அறுத்தலை மேற்கொண்டவர்களுக்கு உடம்பும் மிகையானதாகும். அப்படியிருக்க, அதற்கு மேலேயும் சில பொருள்களின் மீது தொடர்ப்பாடு உண்டாதல் என்னாகும்?

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை.

**5 மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்**
**உற்றார்க்கு உடம்பும் மிகை. 345**

பிறப்பு — மீண்டும் பிறத்தலை, அறுக்கல் — நீக்கும் முயற்சியினை, உற்றார்க்கு — மேற்கொண்ட தவசிகளுக்கு, உடம்பு — இந்த உடம்பும், மிகை — அதிகமாகும், [அப்படியிருக்க] மற்றும் — அதற்குப் பின்னும், தொடர்ப்பாடு — பொருள்களின் மீது பற்று வைத்தல், எவன் — எதற்கு?

யான் என்றும் எனது என்றும் பற்றுச் செய்வதற்குக் காரணமான அஞ்ஞானத்தினைக் கெடுப்பவன், வானோர்க்கும் அடைய முடியாத அரிய பேரின்பம் என்னும் வீட்டுலகத்தினை அடைவான்.

யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்.

**6 யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும். 346**

யான் — நான் [என்றும்], எனது என்னும் — என்னுடையது என்றும் [கூறுகின்ற], செருக்கு — அஞ்ஞானத்தினை, அறுப்பான் — கெடுப்பான், வானோர்க்கும் — வானுலகத்தினர்க்கும், உயர்ந்த — அடைய முடியாத, உலகம் புகும் — பேரின்ப வீட்டுலகத்தில் புகுவான்.

பற்றுக்களை இறுகப் பிடித்துக்கொண்டு விடாதவர்களைப் பிறவித் துன்பங்கள் இறுகப் பற்றிக் கொண்டு விடாமல் இருக்கும்.

பற்றி விடா இடும்பைகள் பற்றினை பற்றி விடாதவர்க்கு.

**7 பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்**
**பற்றி விடாஅ தவர்க்கு. 347**

பற்றினை — பற்றுக்களை, பற்றி — இறுகப் பற்றிக் கொண்டு, விடாதவர்க்கு — விடாதவர்களை, இடும்பைகள் — துன்பங்கள், பற்றி விடா — இறுகப் பற்றிக் கொண்டு விடாமல் இருக்கும்.

முற்றத் துறந்தவர்கள் பேரின்பம் என்னும் வீட்டினை அடைந்தவராவர். அப்படித் துறவாத வர்கள் அஞ்ஞானத்தால் பிறப்பாகிய வலையிலே அகப்பட்டவராவர்.

தலைப்பட்டார் தீர துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்.

**8 தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர். 348**

*தீரத் துறந்தார் — முழுதுந்துறந்த முனிவர்கள், தலைப்பட்டார் — பேரின்ப வீட்டினை யடைந்தவர்கள் ஆவர்; மற்றையவர் — அப்படித் துறவாதவர்கள், மயங்கி வலைப்பட்டார் — அஞ்ஞானத்தில் மயங்கிப் பிறப்பென்னும் வலையில் அகப்பட்டவராவர்.*

பற்றுக்களை யெல்லாம் விட்ட அப்பொழுதே அப்பற்றற்ற நிலை பிறப்பினை அறுக்கும். அவை அறாதபோது [அறுக்கப்படாத போது] அவற்றால் பிறந்து இறந்து வருகின்ற நிலையாமை காணப்படும்.

பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும் மற்று நிலையாமை காணப்படும்.

**9 பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று**
**நிலையாமை காணப் படும். 349**

*பற்று — ஆசைகள், அற்ற கண்ணே — நீங்கிய பொழுதே [அத் தன்மை], பிறப்பு — பிறவியை அறுக்கும் — மீண்டும் பிறவாதபடி ஒழிக்கும்; மற்று — ஆசைகள் அறாத போது, நிலை யாமை — பிறப்பு இறப்பு என்னும் நிலையாமையானது, காணப்படும் — கண்டு கொள்ளப் படும்.*

எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன் உணர்த்திய வீட்டு நெறியை மனத் துள் கொள்க. அதனை மனத்துட் கொண்டு ஞான முறைகளைச் செய்க; விடாது வந்த பற்று விட்டுப் போவதற்காக என்பதாம்.

பற்றுக பற்று அற்றான் பற்றினை அப்பற்றை பற்றுக பற்று விடற்கு.

**10 பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு. 350**

*பற்று அற்றான் — பற்றில்லாத இறைவனின், பற்றினை — பற்றினை, பற்றுக — மனத்தில் பற்றிக் கொள்க, அப்பற்றை — அப்பற்றினை, பற்றுக — மனத்திலே கொள்ளுதல் வேண்டும், [ஏனெனில்] பற்று விடற்கு — தொடர்ந்து வந்த பற்று விட்டுப் போவதற்காம்,*

## 36. மெய்யுணர்தல்

**[பிறப்பு, வீடு என்பவைகளின் காரணங்களை ஐயமின்றி உண்மையாக உணர்தல்]**

மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய்ப்பொருள் என்று உணரும் விபரீத உணர்வினால் துன்பம் நிறைந்த பிறப்பு உண்டாவதாகும்.

பொருள் அல்லவற்றை பொருள் என்று உணரும் மருளான் ஆம் மாணாப் பிறப்பு.

**1 பொருள்அல்ல வற்றைப் பொருள்என்று உணரும்
மருளான்ஆம் மாணாப் பிறப்பு.** 351

மாணாப்பிறப்பு — [இன்பம் இல்லாத] துன்பம் நிறைந்த பிறப்பு, பொருள் — மெய்ப் பொருள், அல்லவற்றை — அல்லாதவற்றை, பொருள் — மெய்ப்பொருள், என்று — என்ப தாக, உணரும் — உணருகின்ற, மருளான் — அஞ்ஞானத்தினாலே, ஆம் — உளதாகும்.

அஞ்ஞானமான மயக்கத்திலிருந்து நீங்கிய மெய்யுணர்வுடையார்களுக்கு அம்மெய்யுணர்வு பிறப்பினை நீக்கிப் பேரின்ப வீட்டினைக் கொடுக்கும்.

இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி மாசு அறு காட்சியவர்க்கு.

**2 இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.** 352

மருள் — அஞ்ஞானமான விபரீத அறிவிலிருந்து, நீங்கி — நீங்கியவராகி, மாசு — குற்றம், அறு — இல்லாத, காட்சியவர்க்கு — மெய்ஞ்ஞானம் பெற்றவர்களுக்கு, இருள் — மயக்கமான பிறப்பு, நீங்கி — நீங்கப் பெற்று, இன்பம் பயக்கும் — பேரின்பத்தினை அளிக்கும்.

ஐயங்களினின்று நீங்கி மெய்யுணர்ந்தவர்களுக்கு அடைய வேண்டிய வீட்டுலகம் இவ்வுலகத் தினைவிட அருகில் இருப்பதாகும்.

ஐயத்தின் நீங்கி தெளிந்தார்க்கு வையத்தின் வானம் நணியது உடைத்து.

**3 ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியது உடைத்து.** 353

ஐயத்தின் — ஐயத்திலிருந்து [சந்தேகங்களிலிருந்து] நீங்கி — நீங்கி, தெளிந்தார்க்கு — மெய்யுணர்வு பெற்ற ஞானிகளுக்கு, வையத்தின் — இவ்வுலகத்தினைவிட, வானம் — பேரின்ப உலகம், நணியது உடைத்து — அருகில் இருப்பதாகும்.

மெய்யுணர்வினைப் பெறாதவர்களுக்கு, ஐம்புலன்களின் உணர்வுகள் அடக்கப்பட்டுத் தம் வசம் ஆகிவிட்டாலும், அதனால் பயனில்லையாகும்.

ஐயுணர்வு எய்திய கண்ணும் பயம் இன்றே மெய்யுணர்வு இல்லாதவர்க்கு.

**4 ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம்இன்றே**
**மெய்யுணர்வு இல்லா தவர்க்கு. 354**

மெய்யுணர்வு — மெய்ப்பொருள் அறிதலினை, இல்லாதவர்க்கு — இல்லாதவர்ளுக்கு, ஐ உணர்வு — ஐம்புலன்களில் செல்லுகின்ற உணர்வு, எய்தியக்கண்ணும் — தமக்கு வசமாக ஆகிவிட்டபோதும், பயம் இன்று — பயனில்லையாகும்.

யாதொரு பொருள் யாதொரு தன்மை உடையதாகத் தோன்றினாலும் அத்தோற்றத்தின் படியே கண்டறியாமல் அப்பொருளினுள் நின்று மெய்ம்மையாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாகும்.

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு.

**5 எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு. 355**

எப்பொருள் — யாதானுமொரு பொருள், எத்தன்மைத்தாயினும் — எப்படிப்பட்ட வகையில் தோன்றினாலும், அப்பொருள் — அப்பொருளினுள்ள, மெய்ப்பொருள் — மெய்யாகிய பொருளினை, காண்பது அறிவு — கண்டறிவதுதான் மெய்யுணர்வாகும்.

மக்கட்பிறவியில் குருமார்களாகிய ஞானிகளிடம் கேட்டறிந்து மெய்ப்பொருளினை உணர்ந்தவர் மீண்டும் இப்பிறப்பில் வாராத நெறியினை அடைவர்.

கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்று ஈண்டு வாரா நெறி.

**6 கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
**மற்றுஈண்டு வாரா நெறி. 356**

ஈண்டு — இப்பிறப்பிலே, கற்று — குருமார்களிடத்தில் கற்று, மெய்ப்பொருள் — மெய்யான பொருளினை, கண்டார் — கண்டுணர்ந்தவர்கள், மற்று — மீண்டும், ஈண்டு — இப்பிறப்பில், வாராநெறி — வாராத வழியினை, தலைப்படுவர் — அடைந்துவிடுவர்.

கேட்டுணர்ந்த உபதேச மொழியால் ஒருவன் உள்ளம் நல்வழியில் தெளிய ஆராய்ந்து மெய்ப்பொருளினை உணர்ந்தால் அவனுக்கு மாறிப் பிறப்புள்ளதாக நினைக்க வேண்டாம்.

ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையா பேர்த்து உள்ள வேண்டா பிறப்பு.

**7 ஓர்த்துள்ளம் உள்ளத்து உணரின் ஒருதலையாப்**
**பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. 357**

உள்ளம் — மனமானது, ஒருதலையா — உறுதியாக, ஓர்த்து — கேட்டுணர்ந்த உபதேசங்களை ஆராய்ந்தறிந்து, உள்ளது — உளதான முதற்பொருளை, உணரின் — உணருமானால், பிறப்பு — மீண்டும் பிறப்பு [பிறவி] உள்ளதாக, பேர்த்து — மாறி, உள்ள — உள்ளத்தில் எண்ண, வேண்டா — வேண்டாவாம்.

பிறப்பிற்கு முதற்காரணமான அஞ்ஞானம் நீங்க ,பேரின்ப வீட்டுலகத்திற்குக் காரணமான பொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய்யுணர்வு என்பதாகும்.

பிறப்பு என்னும் பேதைமை நீங்க சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு.

**8 பிறப்புஎன்னும் பேதைமை நீங்கச் சிறப்புஎன்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு. 358**

பிறப்பு — பிறவி, என்னும் — எனப்படுகின்ற, பேதைமை — அஞ்ஞானமானது, நீங்க — நீங்க, சிறப்பு — பேரின்பம், என்னும் — எனப்படும், செம்பொருள் — செம்மையான பொருளினை, காண்பது அறிவு — காண்பதே மெய்யுணர்வாகும்.

ஒருவன் எல்லாப் பொருள்களுக்கும் சார்பான அச்செம்பொருளினை உணர்ந்து பற்று நீங்க ஒழுகினால் அவனை முன்பு சாரக் கடவனவாக இருந்த துன்பங்கள் அவ்வுணர்வினை அழித்துப் பின் சாரமாட்டாவாம்.

சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின் மற்று அழித்து சார்தரா சார்தரும் நோய்.

**9 சார்புஉணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றுஅழித்துச்**
**சார்தரா சார்தரு நோய். 359**

சார்பு — பொருள்களுக்கெல்லாம் சார்பாகிய செம்பொருளினை, உணர்ந்து — உணர்ந்து, சார்பு — பற்றுக்கள் எல்லாம், கெட ஒழுகின் — கெட்டுப் போகுமாறு நடந்து கொண்டால், சார்தரும் — அவனைச் சார்ந்து நின்ற, நோய் — துன்பங்கள், அழித்து — உணர்வு ஒழுக்கம் இவைகளை அழித்து, மற்று — பின்பு வந்து, சார்தரா — அவனைச் சேராதவைகளாகும்.

ஞானவுணர்வில் முதிர்ச்சி பெற்றவர்களுக்கு, விருப்பு, வெறுப்பு, அஞ்ஞானம் ஆகிய குற்றங்கள் மூன்றனுடைய பெயர்களும் கூடக் கெடுதலால், அவற்றின் காரியமாகிய வினைப்பயன்களும் உளவாகாவாம்.

காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெட கெடும் நோய்.

**10 காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்**
**நாமம் கெடக்கெடும் நோய்.** 360

காமம் — விருப்பம், வெகுளி — வெறுப்பு, மயக்கம் — அஞ்ஞானம் [என்று கூறப்படுகின்ற], இவை மூன்றன் — இந்த மூன்று குற்றங்களின், நாமம் — பெயர்களும், [ஞான நிலை அடைந்தோர்க்கு) கெட — கெட்டுவிடுவதால், நோய் கெடும் — அவற்றினாலான வினைப் பயன்கள் கெட்டுவிடும்.

## 37. அவா அறுத்தல்

**[மெய்ப்பொருள் உணர்வால் ஆசைகள் அனைத்தையும் அறுத்தல்]**

எல்லா உயிர்கட்கும் எக்காலத்தும் கெடாமல் வருகின்ற பிறப்பினை உண்டாக்கும் வித்து அவா [ஆசை] என்று நூலோர் சொல்லுவர்.

அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவா பிறப்பு ஈனும் வித்து.

**1 அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்**
**தவாஅப் பிறப்புஈனும் வித்து.** 361

எல்லா — எல்லா, உயிர்க்கும் — உயிர்களுக்கும், எஞ்ஞான்றும் — எல்லாக் காலத்திலும், தவா — கெடாமல் வருகின்ற, பிறப்பு — பிறப்பினை, ஈனும் — உண்டாக்குவதாகிய, வித்து — விதை, அவா என்ப — ஆசையாகும் என்று உயர்ந்தோர் கூறுவர்.

பிறப்புத் துன்பத்தினை உணர்ந்தவன் ஒன்றினை விரும்பினால், அவன் பிறவாமை என்பதனையே விரும்புதல் வேண்டும். அவன் ஆசை இல்லாமையை விரும்ப, அவனுக்கு அப்பிறவாமை உண்டாகும்.

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்று அது வேண்டாமை வேண்ட வரும்.

**2 வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது**
**வேண்டாமை வேண்ட வரும்.** 362

வேண்டுங்கால் — ஒன்றினை விரும்பினால், பிறவாமை — பிறவாதிருப்பதையே, வேண்டும் — விரும்ப வேண்டும், அது — அப்பிறவாமை என்பது, வேண்டாமை — தான் எப்பொருளையும் விரும்பாமையினை, வேண்டவரும் — விரும்ப உண்டாவதாகும்.

'எப்பொருளையும் விரும்பாமை' என்பதனை ஒக்கும் சிறந்த செல்வம் இவ்வுலகின்கண் இல்லை. அதுவேயன்றி எவ்வுலகிலும் அதனை ஒப்பது இல்லை.

வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டு இல்லை யாண்டும் அஃது [ஒப்பது இல்.

**3 வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை**
**யாண்டும் அஃதொப்ப தில். 363**

வேண்டாமை — எப்பொருளையும் விரும்பாமை [என்பதை], அன்ன — ஒப்பதான, விழு — சிறப்புமிக்க, செல்வம் — செல்வமானது, ஈண்டு — இவ்வுலகத்தில், இல்லை — இல்லையாகும், [அது மட்டுமன்றி] யாண்டும் — எவ்வுலகத்திலும், அஃது — அதனை, ஒப்பதுஇல் — ஒத்திருப்பது இல்லையாகும்.

ஒருவருக்குப் பேரின்பவீடு என்று சொல்லப்படுவது அவா இல்லாமையேயாகும். அது மெய்ம்மையை விரும்ப தானே உண்டாவதாகும்.

தூய்மை என்பது அவா இன்மை மற்று அது வாய்மை வேண்ட வரும்.

**4 தூஉய்மை என்பது அவாஇன்மை மற்றது**
**வாஅய்மை வேண்ட வரும். 364**

தூஉய்மை — பேரின்பவீடு, என்பது — என்று சொல்லப்படுவது, அவா — ஆசை, இன்மை — இல்லாதிருத்தலேயாகும், அது — அந்த ஆசை இன்மை, வாஅய்மை — மெய்ம்மையை, வேண்ட — விரும்ப, வரும் — வருவதாகும்.

பிறவியற்றவர்கள் என்று சொல்லப்படுபவர்கள் அதற்கு நேர்க் காரணமான அவா அற்றவர் களாவர். மற்ற எல்லாம் நீங்கி அது ஒன்று மட்டும் நீங்காதவர்கள் சில துன்பங்கள் அற்றவர்களே யல்லாமல் பிறவி அற்றவர்களாகார்.

அற்றவர் என்பார் அவா அற்றார் மற்றையார் அற்றாக அற்றது இலர்.

**5 அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்**
**அற்றாக அற்றது இலர். 365**

அற்றவர் — பிறவி அற்றவர்கள், என்பார் — எனப்படுவோர், அவா — ஆசைகள், அற்றார் — முழுதும் அற்றவரேயாவார், மற்றையார் — பிறரெல்லாம், அற்றாக — சில துன்பங்கள் அற்றவரே யல்லாமல், அற்றது இலர் — பிறவி அற்றவராகார்.

மெய்யுணர்தல் முதலியன எல்லாம் எய்தி அவற்றால் வீடு எய்தற்குரிய ஒருவனை வஞ்சனையால் புகுந்து வீழ்த்தவல்லது ஆசையே யாகும். ஆதலால், அந்த அவாவினை அஞ்சிக் காப்பதே துறவறமாகும்.

அஞ்சுவது ஓரும் அறனே ஒருவனை வஞ்சிப்பது ஓரும் அவா.

**6 அஞ்சுவது ஒரும் அறனே ஒருவனை**
**வஞ்சிப்பது ஓரும் அவா. 366**

ஒருவனை — [வீடு பேறு அடைவதற்குரிய] ஒருவனை, வஞ்சிப்பது அவா — வஞ்சித்துக் கெடுக்க வல்லது ஆசையேயாகும், [ஆதலால்] அஞ்சுவது — அஞ்சிக் காப்பாற்றப்பட வேண்டியது, அறன் — துறவறமேயாகும். [ஓரும் — அசைநிலை]

ஒருவன் அவாவுக்கு அஞ்சி அதனை முழுதும் கெடுக்க வல்லவனானால், அவனுக்குக் கெடாமைக்குக் காரணமான வினை, தான் விரும்பும் நெறியாலே உண்டாவதாகும்.

அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை தான் வேண்டும் ஆற்றான் வரும்.

**7 அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை**
**தான்வேண்டும் ஆற்றான் வரும். 367**

அவாவினை — ஆசையினை, ஆற்ற — முழுதும், அறுப்பின் — அறுக்க வல்லவனுக்கு, தவா — கெடாமைக்குக் காரணமான, வினை — செயல், தான் வேண்டும் — தான் விரும்பிய, ஆற்றான் — நெறியானே, வரும் — வருவதாகும்.

அவா இல்லாதவர்களுக்கு வருவதொரு துன்பம் இல்லை. அந்த ஒன்றும் இருந்து விட்டால் எல்லாத் துன்பங்களும் இடைவிடாமல் வரும்.

அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃது உண்டேல் தவாது மேன்மேல் வரும்.

**8 அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃதுஉண்டேல்**
**தவாஅது மேன்மேல் வரும். 368**

அவா — ஆசை, இல்லார்க்கு — அற்றவர்களுக்கு, துன்பம் — துன்பங்கள், இல்லாகும் — இல்லையாகும், அஃது — அந்த ஆசை ஒன்று, உண்டேல் — இருந்து விட்டால், [துன்பங்கள்] தவாஅது — முடிவின்றி, மேன்மேல் — இடைவிடாமல் மேலும் மேலும், வரும் — வந்து கொண்டே இருக்கும்.

அவா என்று கூறப்படுகின்ற மிகுதியான துன்பம் ஒருவனுக்குக் கெடுமானால், அவனுக்குப் பேரின்ப வீடு பெற்ற வழியேயன்றி உடம்போடு நின்ற வழியும் இன்பம் இடையீடின்றி வந்து கொண்டே இருக்கும்.

இன்பம் இடையறாது ஈண்டும் அவா என்னும் துன்பத்துள் துன்பம் கெடின்.

**9 இன்பம் இடையறாது ஈண்டும் அவாஎன்னும்**
**துன்பத்துள் துன்பம் கெடின். 369**

அவா — ஆசை, என்னும் — எனப்படும், துன்பத்துள்துன்பம் — துன்பங்களுக்குள்ளே பெரிய துன்பமானது, கெடின் — கெட்டுவிட்டால், [பேரின்ப உலகில் மட்டுமன்றி] ஈண்டும் — உடம்போடு நின்றவழி இங்கேயும், இன்பம் — இன்பமானது, இடையறாது — இடைவிடாமல் வரும்.

ஒருபோதும் நிறைவு பெறாத தன்மையுடைய ஆசையினை ஒருவன் நீக்கிவிட்டால், நீக்கிய அச்செயல் அவனுக்கு அப்போதே எக்காலத்திலும் ஒரு நிலையில் நிலைத்திருக்கும் தன்மையைத் தரும்.

ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே பேரா இயற்கை தரும்.

**10 ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே**
**பேரா இயற்கை தரும். 370**

ஆரா — ஒருபோதும் நிறைவு பெறாத, இயற்கை — தன்மையுடைய, அவா — ஆசையினை நீப்பின் — நீக்குவானானால், அந்நிலையே — அப்போதே அந்த நிலைமை, பேரா — எப்போதும் [நீங்காத] ஒரே நிலையான, இயற்கை — தன்மையினை, தரும் — கொடுக்கும்.

## 38. ஊழ்

**[ஊழின் தன்மை, வன்மை முதலியன கூறல்]**

ஒருவருக்குக் கைப்பொருள் ஆவதற்குக் காரணமான ஊழினால் முயற்சியானது தோன்றும். பொருள் அழிவதற்குக் காரணமான ஊழினால் சோம்பல் தோன்றும்.

ஆகு ஊழால் தோன்றும் அசைவுஇன்மை கைப்பொருள் போகு ஊழால் தோன்றும் மடி.

**1 ஆகுஊழால் தோன்றும் அசைவுஇன்மை கைப்பொருள்**
**போகுஊழால் தோன்றும் மடி. 371**

கைப்பொருள் — ஒருவற்குக் கையிலுள்ள பொருள், ஆகு — ஆவதற்குக் காரணமான, ஊழ் — ஊழினாலே, அசைவு இன்மை — முயற்சியானது, தோன்றும் — உண்டாவதாகும், போகு ஊழால் — பொருள் போவதற்குக் காரணமான ஊழினாலே, மடி தோன்றும் — சோம்பல் உண்டாகும்.

ஒருவனுக்கு எல்லா அறிவும் இருந்தாலும் கைப்பொருள் போவதற்குக் காரணமான ஊழ் வந்தபோது, அது அந்த அறிவினைப் பேதையாக்கும். இனி, அவன் அறிவு சுருங்கி இருந்தாலும் கைப்பொருள் ஆவதற்குக் காரணமான ஊழ் வந்தபோது அது அவ்வறிவினை விரிக்கும்.

பேதை படுக்கும் இழவு ஊழ் அறிவு அகற்றும் ஆகல் ஊழ் உற்றக்கடை.

2 பேதைப் படுக்கும் இழவூஊழ் அறிவகற்றும்
ஆகலூஊழ் உற்றக் கடை. 372

இழவு — கைப்பொருளினை இழப்பதற்குக் காரணமான, ஊழ் — ஊழ் உண்டானபோது, அறிவு — ஒருவனுக்கு எல்லா அறிவும் இருந்தாலும், பேதை — அந்த அறிவினை அறியாமையாக, படுக்கும் — ஆக்கிவிடும், ஆகல் — பொருள் உண்டாவதற்கான, ஊழ் — ஊழானது, உற்றக்கடை — வந்துற்ற போது அகற்றும் — அந்த அறிவினை நன்கு விரிவு படுத்தும்.

ஒருவன் நுண்ணிய பொருள்களை உணர்த்தும் நூல் பலவற்றைக் கற்றிருந்தாலும், அவனுக்குப் பின்னும் தன் ஊழாலாகிய பேதைமை [அறியாமை] அறவே மேற்பட்டு நிற்கும்.

நுண்ணிய நூல் பல கற்பினும் மற்றும் தன் உண்மை அறிவே மிகும்.

3 நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும். 373

நுண்ணிய — நுட்பமான, நூல் பல கற்பினும் — பற்பல நூல்களையும் ஒருவன் கற்றானாயினும், மற்றும் — அவனுக்குப் பின்னும், தன் — தனது, உண்மை — ஊழினாலாகிய, அறிவே — பேதை அறிவே, மிகும் — மிகுந்து நிற்கும்.

உலகத்தில் ஊழினாலாகிய இயற்கை இரண்டு வகைப்படும். இரண்டு வேறுபட்ட தன்மையதாக இருக்கும். ஆதலால், செல்வம் உடையராதலும் வேறு; அறிவுடைய ராதலும் [தெள்ளியராதலும்] வேறு.

இரு வேறு உலகத்து இயற்கை திரு வேறு தெள்ளியர் ஆதலும் வேறு.

4 இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. 374

உலகத்து — உலகத்தினுடைய, இயற்கை — ஊழென்னும் இயற்கையானது, இரு — இரண்டு, வேறு — வேறுபட்ட தன்மையாக இருக்கின்றது, திரு — செல்வம் உண்டாவதும், வேறு — வேறு, தெள்ளியராதலும் — அறிவுடையராதலும், வேறு — வேறு ஆகும்.

செல்வத்தை ஆக்குவதற்கு நல்லவையெல்லாம் தீயனவாய் அழிக்கும். அதுவேயன்றித் தீயவை யெல்லாம் நல்லனவாய் ஆக்கும்; இவை ஊழினால் நடப்பதாகும்.

நல்லவை எல்லாம் தீயவாம் தீயவும் நல்லவாம் செல்வம் செயற்கு.

5 நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு. 375

செல்வம் — செல்வத்தினை, செயற்கு — செய்து ஈட்டுவதற்கு, நல்லவை — நன்மையானவை, எல்லாம் — எல்லாம், தீயவாம் — தீயவைகளாக முடியும், தீயவும் — தீமையானவைகள், நல்லவாம் — நல்லவைகளாகச் செய்யும்.

ஊழினால் தம்மிடம் இருக்கக் கூடாத பொருள்கள், வருந்திக் காப்பாற்றினாலும் தம்மிடத்து நில்லாமல் போகும். ஊழினால் தம்மிடம் இருக்க வேண்டிய பொருள்கள் புறத்தே கொண்டு போய்த் தள்ளினாலும் தம்மை விட்டுப் போகாவாம்.

பரியினும் ஆகாவாம் பால் அல்ல உய்த்து சொரியினும் போகா தம.

6 பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம. 376

பால் — ஊழ்வகையால், அல்ல — தம்முடன் இருக்க முடியாத பொருள்கள், பரியினும் — காப்பாற்றி வைக்கப்பட்டிருந்தாலும், ஆகாவாம் — நில்லாமற் போய்விடும், தம் — தம்மிடம் இருந்தே ஆக வேண்டிய பொருள்கள், உய்த்து — தாமே வெளியில் கொண்டு போய், சொரி யினும் போகா — எறிந்தாலும் போகாவாம்.

ஐம்பொறிகளால் நுகரப்படும் பொருள்கள் கோடி அளவில் சேர்த்து வைத்திருந்தாலும் இயற் கையாகிய ஊழ் வகுத்த வகையால் அல்லது நுகர்தல் [அனுபவித்தல்] முடியாதாகும்.

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

7 வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது. 377

கோடி — செல்வத்தினைக் கோடி அளவில், தொகுத்தார்க்கும் — முயன்று சேர்த்தவர்களுக்கும், வகுத்தான் — ஊழால் வகுத்தவன், வகுத்த — வகுத்து வைக்கப்பட்ட, வகை — வகையின் படி, அல்லாமல் — அல்லாமல், துய்த்தல் — நுகர்தல், அரிது — முடியாதாகும்.

ஊழ்வினைகள் அடைவிக்க வேண்டிய துன்பங்களை அடையும்படிச் செய்யாமல் நீங்குமே யானால், வறுமையினால் நுகர்தல் இல்லாதவர்கள் துறக்கும் கருத்துடையராவார்கள்.

துறப்பார் மன் துப்புரவு இல்லார் உறற்பால ஊட்டா கழியும் எனின்.

8 துறப்பார்மன் துப்புரவு இல்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின். 378

உறற்பால — ஊழ் உண்டாக்கும் துன்பங்களை, ஊட்டா — உண்டாக்காமல், கழியும் — நீங்கும், எனின் — என்றால், துப்புரவு — நுகர்தற்கு ஏதும், இல்லார் — இல்லாதவர்கள், துறப்பார் — துறவியாகும் எண்ணமுடையவராவர்.

நல்வினை விளையுங்கால் இன்பம் என்று அனுபவிப்பவர்கள், மற்ற தீவினை விளையும்போது துன்பங்களை அனுபவிக்காமல் வருந்துவது ஏனோ?

நன்று ஆங்கால் நல்லவா காண்பவர் அன்று ஆங்கால் அல்லற்படுவது எவன்.

9 நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவது எவன். 379

நன்று — நல்வினைகள், ஆங்கால் — நன்மையினைத் தரும்போது, நல்லவாக் காண்பவர் — இவை இன்பம் தருபவையென்று கண்டு நுகர்பவர், அன்று — தீவினை, ஆங்கால் — துன்பங்களை உண்டாக்கும் போது, அல்லற்படுவது — [அதனையும் நுகர்ந்திருக்காமல்] துன்பப் படுவது, எவன் — யாது கருதியோ?

தன்னை விலக்குதற் பொருட்டு வேறாகிய வழியினை முயற்சித்தாலும், தான் பிறிதோர் வழியாகவாவது அந்த முயற்சிக்கு முந்தி நிற்கும். அதனால் ஊழினைப் போல மிக்க வலிமையுடையன யாவை உள?

ஊழின் பெருவலி யா உள மற்று ஒன்று சூழினும் தான் முந்துறும்.

10 ஊழின் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும். 380

மற்று — [ஊழினைவிலக்க] மாறான, ஒன்று — ஒரு வழியினை, சூழினும் ஆராய்ந்து செய்தாலும், தான் — ஊழாகியதான், முந்துறும் — வேறு வழியாகவாவது வந்து முந்தியாக நிற்கும், [ஆதலால்] ஊழின் — ஊழினைப்போல, பெரு — மிகப் பெரிய, வலி — வலிமை யானது, யாஉள — எவை உள்ளன?

## அரசியல்

## 39. இறைமாட்சி

**[நாட்டிற்குத் தலைவனான மன்னனைப் பற்றிக் கூறுதல்]**

படையும், குடிமக்களும், பொருளும், அமைச்சும், நட்பும், அரணும் ஆகிய ஆறு உறுப்புக் களையும் உடையவன் அரசர்களுக்குள் ஆண் சிங்கம் போன்றவன் ஆவான்.

படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடையான் அரசருள் ஏறு.

**1 படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு** 381

படை — படையும், குடி — குடிமக்களும், கூழ் — பொருளும், அமைச்சு — அமைச்சும், நட்பு — நட்பும், அரண் — அரணும் [ஆகிய] ஆறும் உடையான் — ஆறு உறுப்புக்களையும் உடையவன், அரசருள் — அரசர்களுக்குள்ளே, ஏறு — ஆண் சிங்கம் போன்றவனாவான்.

வேந்தர்க்கு இயல்பாக இருக்க வேண்டிய பண்புகள் எவையென்றால், அஞ்சாத திண்மை, கொடை, அறிவு, ஊக்கம் ஆகிய நான்கும் இடைவிடாது நிற்றலாகும்.

அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் இந்நான்கும் எஞ்சாமை வேந்தற்கு இயல்பு.

**2 அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் இந்நான்கும்**
**எஞ்சாமை வேந்தற்கு இயல்பு.** 382

வேந்தற்கு — வேந்தனுக்கு, இயல்பாவது — இயல்பான குணமாவது, அஞ்சாமை — அஞ்சாத தன்மையும், ஈகை — ஈகைத் தன்மையும், அறிவு — அறிவும், ஊக்கம் — ஊக்கமும், இந் நான்கும் — ஆகிய இந்த நான்கு பண்புகளும், எஞ்சாமை — எப்போதும் நீங்காமல் இருத்த லாகும்.

பூமியை ஆட்சி புரியும் திருவுடையார்க்கு, செயல்களில் விரைவு உடைமையும், தக்க கல்வியும், ஆண்மையுடைமையும் ஆகிய இம் மூன்று குணங்களும் எப்போதும் நீங்காதிருப் பனவாகும்.

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும் நீங்கா நிலன் ஆள்பவர்க்கு.

**3 தூங்காமை கல்வி துணிவுஉடைமை இம்மூன்றும்**
**நீங்கா நிலன்ஆள் பவர்க்கு.** 383

நிலன் — நிலத்தினை, ஆள்பவர்க்கு — ஆளும் மன்னர்க்கு, தூங்காமை — செயல்களில் விரைவு உடைமையும், கல்வி — ஏற்ற கல்வியும், துணிவுடைமை — துணிவென்னும் ஆண்மை யுடைமையுமாகிய, இம் மூன்றும் — இந்த மூன்று தன்மைகளும், நீங்கா — எக் காலத்திலும் நீங்காதிருப்பனவாகும்.

அறத்திலிருந்து வழுவாமல் ஒழுகி, அறமல்லாதவைகளை நிகழவொட்டாமல் கடிந்து வீரத்தில் வழுவாத தாழ்வு இன்மையினை உடையான் அரசனாவான்.

அறன் இழுக்காது அல்லவை நீக்கி மறன் இழுக்கா மானம் உடையது அரசு.

4 அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடையது அரசு. 384

அறன் இழுக்காது — அறத்திலிருந்து தவறாமல், அல்லவை — அறமல்லாதவற்றை, நீக்கி — தன்னிடம் உண்டாகாமல் நீக்கி, மறன் — மறமான வீரத்திலிருந்து, இழுக்கா — தவறாத, மானம் — மானத்தினை [தாழ்வு இன்மையினை], உடையது அரசு — உடையவன் அரசனாவான்.

பொருள்வரும் வழிகளை மேன்மேல் உண்டாக்கலும், வந்தவற்றைத் தொகுத்தலும், காப்பாற்றுதலும், காப்பாற்றியதைத் தக்கபடி வகுத்துச் செலவிடுதலும் ஆகிய இவைகளில் வல்லவனே அரசன்.

'இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த வகுத்தலும் வல்லது அரசு.

5 இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு. 385

இயற்றலும் — பொருள் வரும் வழிகளை மென்மேலும் உண்டாக்கலும், ஈட்டலும் — அவைகளை ஒரு வழித் தொகுத்தலும், காத்தலும் — அவைகளைப் பிறர் கொள்ளாமல் காத்தலும், காத்த வகுத்தலும் — காத்தவற்றை முறையாகச் செலவிடுதலும், வல்லது அரசு — இவைகளில் வல்லவனே அரசனாவான்.

யாவர்க்கும் காணுவதற்கு எளியவனாகவும், யாவர் மாட்டும் கடுஞ்சொல்லன் அல்லனாகவும் இருப்பானேயானால் அம் மன்னனது நிலத்தினை எல்லா நிலங்களிலும் உயர்ந்ததாக உலகம் கூறும்.

காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல் மீக்கூறும் மன்னன் நிலம்.

6 காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம். 386

காட்சிக்கு — யாவரும் காண்பதற்கு, எளியன் — எளியவனாகி, கடும் — கடுமையான, சொல்லன் — சொல்லினன், அல்லனேல் — இல்லாதவனாக இருந்தால், மன்னன் — அம் மன்னனது, நிலம் — பூமியை, உலகம் — உலகமானது, மீக்கூறும் — எல்லாப் பூமிகளிலும் மேலானதென்று உயர்வாகப் பேசும்.

இனிய சொல்லுடனே ஈதலைச் செய்து காப்பாற்ற வல்ல அரசனுக்கு இவ்வுலகம் தனது புகழோடு பொருந்தி அவன் எண்ணிய அளவில் இருக்கும்.

இன்சொலால் ஈத்து அளிக்க வல்லார்க்கு தன் சொல்லால் தான் [கண்டனைத்து இவ்வுலகு.

7 இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்துஇவ் உலகு. 387

இன் — இனிய, சொலால் — சொற்களுடனே, — ஈத்து — ஈதலைச் செய்து, அளிக்க — காப்பாற்ற, வல்லாற்கு — வல்ல மன்னனுக்கு, இவ்வுலகு — இந்த உலகமானது, தன் — தனது, சொலால் — புகழுடன் பொருந்தி, தான் — தான், கண்டனைத்து — கருதின அளவினதாக அமையும்.

அரசனுக்கு ஏற்ற முறைமையைச் செய்து மக்களைத் துன்புறாமல் காப்பாற்றும் மன்னவன் பிறப்பால் மகனேயானாலும் செயலால் மக்களுக்கு இறைவன் என்று வைக்கப்படும்.

முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும்.

8 முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும். 388

முறை — அறநூலும் நீதி நூலும் சொல்லும் நெறியில், செய்து — ஆட்சி செய்து, காப்பாற்றும் — மக்களைக் காப்பாற்றுகிற, மன்னன் — மன்னவன், மக்கட்கு — மக்களுக்கு, இறை — செயலினாலே இறைவன், என்று — என்பதாக, வைக்கப்படும் — வைக்கப்படுவான்.

துணையாக இருப்போர் செவி பொறுத்துக் கொள்ள முடியாத சொற்களைச் சொன்னாலும் அவற்றின் நன்மை கருதிப் பொறுத்துக் கொள்ளும் பண்புடைய வேந்தனது குடை நிழலில் உலகம் தங்கி நிற்கும்.

கசவி கைப்ப சொல் பொறுக்கும் பண்பு உடை வேந்தன் கவிகை கீழ் தங்கும் உலகு.

9 செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு. 389

சொல் — துணை நிற்பவர் சொல்லும் சொற்கள், செவி — காது, கைப்ப — பொறுக்க முடியாததாக இருந்தாலும், பொறுக்கும் — பயன் கருதிப் பொறுத்துக் கொள்ளுகின்ற, பண்பு — நற்குணம், உடைய — உடை, வேந்தன் — வேந்தனது, கவிகைக் கீழ் — குடை நிழலின் கீழ், தங்கும் உலகு — இந்த உலகமானது தங்கி இருக்கும்.

கொடுத்தலும், முகமலர்ந்து பேசுதலும், முறை செய்தலும், குடிகளைக் காத்தலும் ஆகிய இந்நான்கும் உடையவன் வேந்தர்களுக்கெல்லாம் விளக்காவான்.

கொடை அளி செங்கோல் குடி ஓம்பல் நான்கும் உடையான் ஆம் வேந்தர்க்கு ஒளி.

10 கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி. 390

கொடை — ஈகைத் தன்மையால் கொடுத்தலும், அளி — முகமலர்ந்து இன்சொல் கூறலும், செங்கோல் — முறை செய்தலும், குடி — குடிமக்களை, ஓம்பல் — பேணிக் காத்தலும், [ஆகிய] நான்கும் — இந்த நான்கும், உடையான் — உடையவன், வேந்தர்க்கு ஒளி — வேந்தர்களுக்கெல்லாம் ஒளி தரும் விளக்கு போன்றவன் ஆவான்.

## 40. கல்வி

[கற்க வேண்டியவைகளும், சிறப்பும், பயனும்.]

ஒருவன் கற்றதற்குரிய நூல்களைப் பழுதறக் கற்றல் வேண்டும். அப்படிக் கற்ற பிறகு அக் கல்விக்கேற்ப தக்கபடி ஒழுகுதல் வேண்டும்.

கற்க கசடு அற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

1 கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. 391

கற்பவை — படிப்பதற்குரிய நூல்களை, கசடு — பழுது, அற — இல்லாமல், கற்க — கற்றல் வேண்டும், கற்ற — அப்படிக் கற்ற, பின் — பிறகு, அதற்கு — அக்கல்விக்கு, தக — தக்கபடி, நிற்க — நின்று ஒழுகுதல் வேண்டும்.

எண் என்று சொல்லப்படுவதும், எழுத்து என்று சொல்லப்படுவதும் ஆகிய இரண்டினையும் அறிந்தோர், சிறப்புடைய மக்களுயிர்கட்குக் கண் என்று சொல்லுவார்கள்.

எண் என்ப எழுத்து என்ப இவ்விரண்டும் கண் என்ப வாழும் உயிர்க்கு.

2 எண்என்ப ஏனை எழுத்துஎன்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு. 392

எண் — எண், என்ப — என்று சொல்லப்படுபவைகளையும், ஏனை — மற்றை, எழுத்து — எழுத்து, என்ப — என்று சொல்லப்படுபவைகளையும், இவ்விரண்டும் — ஆக இந்த இரண்டினையும், வாழும் — வாழ்தற்குரிய, உயிர்க்கு — மக்களுக்கு, கண் என்ப — கண்களாகும் என்று அறிந்தோர் கூறுவர்.

கண்ணுடையவர்கள் என்று உயர்த்திச் சொல்லப்படுபவர்கள் கற்றவர்களே ஆவார்கள். கல்லாதவர்கள் முகத்தில் இரண்டு புண்ணுடையவர்கள் ஆவார்கள்.

கண் உடையர் என்பவர் கற்றோர் முகத்து இரண்டு புண் உடையர் கல்லாதவர்.

**3 கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்துஇரண்டு**
**புண்ணுடையர் கல்லா தவர்.** 393

**கண்** — கண்கள், **உடையர்** — உடையவர்கள், **என்பவர்** — என்று சிறப்பாகச் சொல்லப்படுபவர்கள், **கற்றோர்** — கற்றவர்களே, ஆவார்கள். **கல்லாதவர்** — கற்காதவர்கள், **முகத்து** — முகத்தில், **இரண்டு** — இரண்டு, **புண்** — புண்களை, **உடையர்** — உடையவர்களாவார்கள்.

யாவரும் மகிழுமாறு அவர்களுடன் சேர்ந்து பழகி, 'இனி அவரை எப்போது காண்போம்' என நினைத்துப் பிரிகின்ற தன்மையுடையதே கற்றவர்களின் தொழிலாகும்.

உவப்ப தலைக்கூடி உள்ள பிரிதல் அனைத்தே புலவர் தொழில்.

**4 உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்**
**அனைத்தே புலவர் தொழில்.** 394

**உவப்ப** — பிறர் மகிழுமாறு, **தலைக்கூடி** — அவருடன் கலந்து, **உள்ள** — இனி எப்போது அவரைக் காண்போம் என்று நினைக்கும்படியாக, **பிரிதல்** — பிரிவதாகிய, **அனைத்து** — அத்தன்மையினை — **உடையதே**, **புலவர்** — கற்றறிந்தவர்களது, **தொழில்** — செயலாகும்.

செல்வர்கள் முன்னே வறியவர்கள் நிற்றல் போல தம்முடைய ஆசிரியர் முன்னே நின்று கல்வி கற்றவர்களே உயர்ந்தோராவர். அவ்வாறு கற்பதற்கு நாணமுற்றுக் கல்லாதவர்கள் இழிந்தோரேயாவர்.

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார் கடையரே கல்லாதவர்.

**5 உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்**
**கடையரே கல்லா தவர்.** 395

**உடையார்** — செல்வந்தர், **முன்** — முன்னே, **இல்லார்போல்** — பொருளில்லாதவறிஞர்போல, **ஏக்கற்றும்** — தாழ்ந்து நின்று, **கற்றார்** — கற்றவர்களே சிறந்தோராவார், **கல்லாதார்** — அவ்வாறு கல்லாதவர்கள், **கடையரே** — தாழ்ந்தவரேயாவார்.

மணலின்கண் இருக்கும் கேணியானது தோண்டிய அளவுதான் நீரினைச் சுரக்கும். மக்களுக்குக் கற்ற அளவுதான் அறிவு சுரக்கும்.

தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்கு கற்றனைத்து ஊறும் அறிவு.

6 தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு. 396

மணற்கேணி — மணலின்கண்ணேயுள்ள கேணியானது, தொட்டனைத்து — தோண்டிய அளவுதான், ஊறும் — நீரானது சுரக்கும், [அதுபோல] மாந்தர்க்கு — மக்களுக்கு, அறிவு — அறிவானது, கற்றனைத்து — கற்ற அளவுதான், ஊறும் — சுரக்கும்.

கற்றவனுக்குத் தனது நாடும் ஊருமே அல்லாமல் எந்த ஊரும் நாடும் தன்னுடைய ஊராகும்; நாடாகும். அப்படியிருக்க, ஒருவன் தான் இறக்குமளவும் கல்லாமல் காலம் கழிப்பது என்ன நினைத்தோ?

யாதானும் நாடு ஆம்ஆல் ஊர்ஆம் ஆல் என் ஒருவன் சாம்துணையும் கல்லாதவாறு.

7 யாதானும் நாடுஆமால் ஊர்ஆமால் என்ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு. 397

யாதானும் — கற்றவனுக்கு எந்த ஒரு நாடும், நாடாம் — தன்னுடைய நாடாகும், ஊராம் — தன்னுடைய ஊராகும், [அப்படியிருக்க] சாந்துணையும் — இறப்பு வரும் வரையிலும், ஒருவன் கல்லாதவாறு — ஒருவன் கல்லாமல் காலம் கழிப்பது, என் — என்ன கருதி?

ஒருவனுக்குத் தான் பிறப்பிலே கற்ற கல்வியானது எழுகின்ற பல பிறப்புக்களிலும் பாதுகாப்பாக உதவுதலை உடையதாகும்.

ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு எழுமையும் ஏமாப்பு உடைத்து.

8 ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து. 398

ஒருவற்கு — ஒருவனுக்கு, தான் — தான், ஒருமைக்கண் — ஒரு பிறப்பிலே, கற்ற — கற்ற, கல்வி — கல்வியானது, எழுமையும் — எழுகின்ற பல பிறப்புக்களிலும், ஏமாப்பு — பாதுகாப்பாக, உடைத்து — உதவுதலை உடையதாகும்,

தாங்கள் இன்பமடைவதற்குக் காரணமான கல்விக்கு உலகமானது இன்பமடைவதைக் கண்டறிந்து கற்றறிந்தவர் பின்னும் அக்கல்வியினையே பெரிதும் விரும்புவர்.

தாம் இன்புறுவது உலகு இன்புற கண்டு காமுறுவர் கற்றறிந்தார்.

9 தாம்இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 399

தாம் இன்புறுவது — தாம் இன்புறுவதற்குக் காரணமான கல்விக்கு, உலகு — உலகமானது, இன்புறக் கண்டு — இன்பமடைவதைக் கண்டறிந்து, கற்றறிந்தார் — கற்றறிந்த பெரியோர்கள், காமுறுவர் — பின்னும் அக்கல்வியினையே பெரிதும் விரும்புவார்கள்.

ஒருவனுக்கு அழியாத சீரிய செல்வமானது கல்வியேயாகும். அஃது அல்லாமல் மற்றைய செல்வங்கள் எல்லாம் பெருமையானவை அல்ல.

கேடு இல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு மாடு அல்ல மற்றையவை.

10 கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடுஅல்ல மற்றை யவை. 400

ஒருவற்கு — ஒருவனுக்கு, கேடு — அழிவு, இல் — இல்லாத, விழுச்செல்வம் — சீர்மை நிறைந்த செல்வமானது, கல்வி — கல்வியாகும், மற்றையவை — மற்ற செல்வங்கள், மாடு — பெருமையுடையவை, அல்ல — அல்ல.

## 41. கல்லாமை

### [கல்வி இல்லாமையின் இழிவு]

தனக்கு அறிவு நிரம்புதற்குக் காரணமான நூல்களைக் கல்லாத ஒருவன், சபையில் ஒன்றனைச் சொல்லுதல், ஆடுகின்ற அரங்கினை அமைக்காமல் உண்டை [பகடைக்காய்] உருட்டியது போன்றதாகும்.

அரங்கு இன்றி வட்டு ஆடியற்றே நிரம்பிய நூல் இன்றி கோட்டி கொளல்.

1 அரங்குஇன்றி வட்டாடி அற்றே நிரம்பிய
நூல்இன்றிக் கோட்டி கொளல். 401

நிரம்பிய — தன் அறிவு நிரம்புவதற்குக் காரணமான, நூல் இன்றி — நூல்களைக் கற்றறியாமல், கோட்டி கொளல் — அவையில் ஒன்றினைச் சொல்லுதல், அரங்கு இன்றி — ஆடுகின்ற அரங்கில்லாமல், வட்டாடியற்றே — உண்டை [பகடைக்காய்] உருட்டியது போன்றதாகும்.

கல்வி இல்லாத ஒருவன் அவையில் ஒன்றைச் சொல்ல ஆசைப்படுதல் முலை இரண்டும் இல்லாத [முகிழ்த்தல் இல்லாத] பெண்ணான ஒருத்தி பெண்ணின்பத்தை விரும்பியது போலாகும்.

கல்லாதான் சொல் காமுறுதல் முலை இரண்டும் இல்லாதாள் பெண் காமுற்று அற்று.

2 கல்லாதான் சொல்கா முறுதல் முலைஇரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று. 402

கல்லாதான் — கல்வி இல்லாதவன், சொல் காமுறுதல் — அவையில் [சபையில்] ஒன்றைச் சொல்ல ஆசைப்படுதல், முலை இரண்டும் — இரண்டு முலைகளும், இல்லாதாள் — இல்லாத ஒருத்தி, பெண் — பெண் தன்மையினை [இன்பத்தினை], காமுற்றற்று — ஆசைப்பட்டது போன்றதாகும்.

தாமே தம்மையுணர்ந்து கொண்டு கற்றார் இருக்கும் அவையின்கண் ஒன்றனையும் சொல் லாதிருந்தால், கல்லாதவர்களும் மிகவும் நல்லவர்கள் ஆவார்கள்.

கல்லாதவரும் நனி நல்லர் கற்றார் முன் சொல்லாது இருக்க பெறின்.

3 கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின். 403

கற்றார் முன் — கற்றறிந்தவர்கள் இருக்கும் அவையில், சொல்லாது — யாதொன்றையும் சொல்லாமல், இருக்க — இருக்கும் தன்மையினை, பெறின் — பெற்றிருப்பார்களேயானால், கல்லாதவரும் — கல்வி இல்லாதவர்களும், நனி — மிகவும், நல்லர் — நல்லவர்களாவார்கள்.

கல்லாதவனுடைய அறிவுடைமை ஒரு நேரத்தில் மிக நன்றாக இருந்தாலும் அறிவுடையவர்கள் அதனை அறிவாகக் கொள்ள மாட்டார்கள்.

கல்லாதான் ஒட்பம் கழிய நன்று ஆயினும் கொள்ளார் அறிவுடையார்.

4 கல்லாதான் ஒட்பம் கழியநன்று ஆயினும்
கொள்ளார் அறிவுடை யார். 404

கல்லாதான் — கல்லாதவனுடைய, ஒட்பம் — அறிவுடைமையானது, கழிய — மிகவும், நன்றாயினும் — ஒரோ வழி நன்றாக இருந்தாலும் கூட, அறிவுடையார் — அறிவுள்ளவர்கள், கொள்ளார் — அதனை அறிவுடைமையாகக் கொள்ள மாட்டார்கள்.

நூல்களைக் கல்லாத ஒருவன், தான் கற்றவனென்று தன்னை மதித்துக் கொள்ளும் மதிப்பு அவற்றைக் கற்றவன் கண்டு உரையாட கெட்டுவிடும்.

கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து சொல்லாட சோர்வுபடும்.

5 கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 405

கல்லா — கல்வியறிவில்லாத, ஒருவன் — ஒருவன், தகைமை — கற்றவனென்று தன்னை மதிக்கும் மதிப்பு, தலைப்பெய்து — கற்றவனைக் கண்டு, சொல்லாட — உரையாட, சோர்வு படும் — கெட்டு விடும்.

கல்லாதவர்கள் உயிருடன் இருக்கின்றார்கள் என்று சொல்லப்படும் அளவினர் ஆவதேயல்லாமல் தமக்கும் பிறர்க்கும் பயன் படாமையால் அவர்கள் விளையாத களர் நிலத்தினை ஒப்பாராவர்.

உளர் என்னும் மாத்திரையர் அல்லால் பயவா களர் அனையர் கல்லாதவர்.

6 உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களர்அனையர் கல்லா தவர். 406

கல்லாதவர் — கல்லாதவர்கள், உளர் — இருக்கின்றார்கள், என்னும் — என்று சொல்லப்படும், மாத்திரையர் அல்லால் — அளவினர் ஆவதேயல்லாமல், பயவா — விளையாத, களர் — பயனில்லாத களர் நிலத்தினை, அனையர் — போன்றவர்கள் ஆவார்கள்.

நுண்ணியதாகப் பெருமையுடையதாகிப் பல நூல்களினும், சென்ற அறிவு இல்லாதவனுடைய எழுச்சியும், அழகும் மண் சாந்தினால் செய்யப்பட்ட பாவையினுடைய எழுச்சியும் அழகும் போன்றதாகும்.

நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம் மண் மாண் புனை பாவை அற்று.

7 நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை அற்று. 407

நுண் — நுட்பமாகிய, மாண் — மாட்சிமையுடையதாகி, நுழைபுலம் — நூல்களில் சென்ற அறிவினை, இல்லான் — இல்லாதவனுடைய, எழில்நலம் — எழுச்சியும் நல்ல அழகும், மண் — மண் சாந்தினாலே, மாண் — மாட்சிமையாக, புனை — அலங்காரம் செய்து புனையப்பட்ட, பாவை — பாவை அழகையும் எழுச்சியையும் கொண்டிருப்பதை, அற்று — போன்றதாகும்.

கல்லாதவர்களிடத்தில் உண்டாகிய செல்வமானது கற்றவரிடத்தில் உண்டாகிய வறுமையினை விடவும் துன்பம் செய்வதாகும்.

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே கல்லார்கண் பட்டதிரு.

8 நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு. 408

கல்லார்கண் — கல்லாதவரிடத்தில், பட்ட திரு — இருக்கின்ற செல்வம், நல்லார்கண் — நன்கு கற்றவரிடத்தில், பட்ட வறுமையின் — உண்டாகியுள்ள வறுமையினைக் காட்டிலும், இன்னாதே — துன்பம் தருவதாகும்.

கல்லாதவர்கள், மேலானவர்கள் பிறந்த குடும்பத்தில் பிறந்தவர்களாக இருந்தாலும், கீழானவர்கள் குடும்பத்தில் பிறந்து, கற்றவர்களாக இருப்பவரது பெருமையினைப் பெறாதவர்களாவார்கள்.

மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும் கற்றார் அனைத்துஇலர் பாடு.

9 மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்துஇலர் பாடு. 409

கல்லாதார் — கல்வியறிவில்லாதவர்கள், மேற் பிறந்தார் — மேலான குடும்பத்தில் பிறந்தவர்கள், ஆயினும் — ஆனாலும், கீழ்ப்பிறந்தும் — கீழான குடும்பத்தில் பிறந்திருந்தும், கற்றாரனைத்து — கற்றவரடையும் அளவு, பாடுஇலர் — சிறப்பு இல்லாதவராவார்கள்.

விளக்கம் நிறைந்த நூல்களைக் கற்றவருடன் நோக்கக் கல்லாதவர்கள் — மிருகங்களோடு ஒப்பிட்டுப் பார்க்க மக்களாய்ப் பிறந்தவர்கள் எவ்வளவு நல்லவர்களோ — அவ்வளவு தீமையுடையவர்களாவார்கள்.

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல் கற்றாரோடு ஏனையவர்.

10 விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர். 410

இலங்கு — விளங்கிய, நூல் — நூலினை, கற்றாரோடு — கற்றவர்களோடு நோக்க, ஏனையவர் — கல்லாதவர்கள், விலங்கொடு — விலங்குகளோடு [ஒப்பிட்டுப் பார்க்க] மக்களனையர் — மக்கள் எவ்வளவு நன்மையுடையவர்களோ அவ்வளவு தீமையுடையவர்களாவார்கள்.

## 42. கேள்வி

### [கற்றறிந்தவர் சொல்வதைக் கேட்டல்]

ஒருவருக்குச் சிறப்புடைய செல்வமானது செவியால் வரும் செல்வமாகும். அச்செல்வம் பிற செல்வங்கள் எல்லாவற்றையும்விடத் தலையாய செல்வமாகும்.

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை.

**1 செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை. 411**

**செல்வத்துள்** — செல்வங்களுள் எல்லாம், **செல்வம்** — சிறப்பான செல்வமானது, **செவிச் செல்வம்** — செவியால் வரும் செல்வமாகும், **அச் செல்வம்** — அச் செல்வமானது, **செல் வத்துள்** — பிற செல்வங்கள், **எல்லாம்** — எல்லாவற்றினும், **தலை** — தலைமையானதாகும்.

காதுக்கு உணவாகிய கேள்வி இல்லாதபோது வயிற்றுக்கும் சிறிதளவு உணவு இடப்படும்.

செவிக்கு உணவு இல்லாத போழ்து சிறிது வயிற்றுக்கும் ஈயப் படும்.

**2 செவிக்குஉணவு இல்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கும் ஈயப் படும். 412**

**செவிக்கு** — காதுக்கு, **உணவு** — உணவாகிய கேள்வி, **இல்லாத** — இல்லாத, **போழ்து** — நேரத்தில், **வயிற்றுக்கும்** — வயிற்றுக்கும், **சிறிது ஈயப்படும்** — சிறிதளவு உணவு இடப்படும்.

செவி உணவாகிய கேள்வியினையுடையவர்கள், பூமியில் வாழ்பவர்களாக இருந்தாலும் அவி உணவினையுடைய தேவர்களோடு ஒப்பாவார்கள்.

செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின் ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து.

**3 செவியுணவிற் கேள்வி உடையார் அவியுணவின்**
**ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து. 413**

**செவி** — செவிக்கு, **உணவின்** — உணவாகிய, **கேள்வி உடையார்** — கேள்வியினை உடையவர் கள், **நிலத்து** — பூமியில் இருந்தாலும், **அவி** — வேள்வித்தீயில் இடப்படும், **உணவின்** — [அவியாகிய] உணவினையுடைய, **ஆன்றாரோடு** — தேவர்களோடு, **ஒப்பா** — ஒப்பாவார்கள்,

நூல்களை ஒருவன் தான் கற்காவிட்டாலும், கற்றறிந்தார் சொல்லக் கேட்க வேண்டும். அவ்வாறு கேட்பது, ஒருவனுக்குத் தளர்ச்சி வந்த காலத்தில் பற்றுக் கோடாகத் துணை செய்யும்.

**கற்றிலன் ஆயினும் கேட்க அஃது ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் *துணை.**

**4 கற்றிலன் ஆயினும் கேட்க அஃதுஒருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்றாம் துணை. 414**

கற்றிலன் — ஒருவன் தான் கல்லாதவனே, ஆயினும் — ஆனாலும், கேட்க — கற்றார் சொல்லக் கேட்டல் வேண்டும், அஃது — அக்கேள்வியறிவானது, ஒருவற்கு — ஒருவனுக்கு, ஒற்கத்தின் — மனத் தளர்ச்சி வந்த போது, ஊற்றாம் — பற்றுக் கோடான, துணை — துணையாகும்.

வழுக்குதலையுடைய சேற்று நிலத்தில் நடந்து போகின்றவர்களுக்கு ஊன்றுகோல் போல, துன்பம் வந்த காலத்தில் ஒழுக்க முடையவர்களுடைய வாயிலிருந்து வரும் சொற்கள் துணையாக நின்று உதவும்.

**இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்.**

**5 இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே**
**ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். 415**

ஒழுக்கம் — ஒழுக்கம், உடையார் — உடையவர்களின், வாய்ச்சொல் — வாயில் பிறக்கின்ற சொற்கள், இழுக்கல் — வழுக்குதல், உடையுழி — உண்டானபோது, [சேற்று நிலத்தில்] ஊற்றுக்கோல் — ஊன்றுகோல், அற்றே — போன்று உதவும்.

ஒருவன் சிறிதளவாகவேனும் நற்பொருள்களைக் கேட்டாலும், அக் கேள்வியானது அந்த அளவுக்காவது நிறைந்த பெருமையினைத் தரும் என்பதாகும்.

**எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும் ஆன்ற பெருமை தரும்.**

**6 எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்**
**ஆன்ற பெருமை தரும். 416**

எனைத்தானும் — எவ்வளவு சிறிதேயானாலும், நல்லவை கேட்க — நல்ல உறுதிப் பொருள் களைக் கேட்டறிதல் வேண்டும், [அவ்வாறு கேட்டறிவது] அனைத்தானும் — அந்த அளவினாலும், ஆன்ற — நிறைந்த, பெருமை — பெருமையினை, தரும் — தருவதாகும்.

நுட்பமாக ஆராய்ந்து அறிந்து நிறைந்த கேள்வியுடையவர்கள், தவறாக அறிந்த இடத்தும் தமக்குப் பேதைமையினை உண்டாக்கும் சொற்களைச் சொல்ல மாட்டார்கள்.

பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்து உணர்ந்து ஈண்டிய கேள்வியவர்.

**7 பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்து**
**ஈண்டிய கேள்வி அவர். 417**

இழைத்துணர்ந்து — நுண்ணியதாக ஆராய்ந்தறிந்து, ஈண்டிய — நிறைந்த, கேள்வியவர் — கேள்வியினையுடையவர்கள், பிழைத்து — தவறாக, உணர்ந்தும் — உணர்ந்த போதும், பேதைமை — அறியாமையினைப் பயக்கும் சொற்களை, சொல்லார் — சொல்லமாட்டார்கள்.

கேள்வி ஞானத்தாலே துளைக்கப்படாத காதுகள் ஓசையினைக் கேட்பதாக இருந்தாலும் கேளாத — செவிடான தன்மையுடையனவேயாகும்.

கேட்பினும் கேளா தகையவே கேள்வியால் தோட்கப்படாத செவி.

**8 கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்**
**தோட்கப் படாத செவி. 418**

கேள்வியால் — உறுதிப் பொருள்களைக் கேட்டு, தோட்கப்படாத — துளைக்கப்படாத, செவி — காதுகள், கேட்பினும் — ஓசையைக் கேட்பதாக இருந்தாலும், கேளா — கேட்காத, தகையவே — தன்மையானவையே ஆகும்.

நுட்பமான கேள்வி ஞானத்தை உடையவரல்லாதவர்கள் வணக்கத்தினைக் காட்டுகிற சொற்களையுடையவராதல் என்பது முடியாததாகும்.

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய வாயினர் ஆதல் அரிது.

**9 நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**
**வாயின ராதல் அரிது. 419**

நுணங்கிய — நுண்ணியதாகிய, கேள்வியர் — கேள்வியினை யுடையவர், அல்லார் — அல்லாதவர்கள், வணங்கிய — பணிவான வணக்கத்தினையுடைய, வாயினர் — சொல்லினையுடையவர், ஆதல் — ஆகுதல், அரிது — கூடாததாகும்.

செவிகளால் அறியப்படும் சுவைகளை அறியாமல் வாய் உணர்வினை மட்டும் உடைய மாந்தர் இறந்தாலும் வாழ்ந்தாலும் ஆகும் பயன் யாது?

செவியின் சுவை உணரா வாய்உணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் என்.

**10 செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்**
**அவியினும் வாழினும் என்.** 420

செவியின் — செவியால் அறிந்துணரும், சுவை — சுவைகளை, உணரா — அறியாமல், வாயுணர்வின் — வாயின் சுவை உணர்ச்சிகளையுடைய, மாக்கள் — மாந்தர், அவியினும் — இறந்தாலும், வாழினும் — வாழ்ந்தாலும், என் — என்ன பயனாகும்?

## 43. அறிவுடைமை

### [கல்வி கேள்விகளினால் அறிவுடையவனாக இருத்தல்]

அறிவு என்பது இறுதி வாராமல் காப்பாற்றுகின்ற கருவியாகும். பகைவர்களாலும் அழிக்க முடியாத உள்ளிருப்பதாகிய காவலிடமென்னும் கோட்டையாகும்.

அறிவு அற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும் உள் அழிக்கலாகா அரண்.

**1 அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்கல் ஆகா அரண்.** 421

அறிவு — அறிவு என்பது, அற்றம் — இறுதிவராமல், காக்கும் கருவி — காப்பாற்றுகிற படையாகும், செறுவார்க்கும் — பகைவர்களுக்கும், அழிக்கல் — அழிக்க, ஆகா — முடியாத, உள் அரண் — உள்ளிருப்பதாகிய காவலிடமும் ஆகும்.

மனத்தினை அது சென்ற வழியிலே போக விடாமல் தீமையிலிருந்து நீக்கி நல்லவையிடத்தே செலுத்துவது அறிவாகும்.

சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு.

**2 சென்ற இடத்தால் செலவிடா தீதுஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு.** 422

சென்ற — மனத்தினை அது சென்ற, இடத்தால் — எண்ணமாகிய வழியிலே, செலவிடா — போக விடாமல், தீது — தீமையிலிருந்து, ஒரீஇ — நீக்கி, நன்றின்பால் — நல்லவையிடத்து, உய்ப்பது அறிவு — செலுத்துவது அறிவாகும்.

எந்த ஒரு பொருளைப் பற்றியும் யார் யார் சொல்லக் கேட்டாலும் அப்பொருளினுடைய உண்மையான கருத்தின் பயனைக் காணும் வல்லமையுள்ளது அறிவாகும்.

எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு.

3 எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. 423

எப்பொருள் — எந்தவொரு பொருளை, யார் யார் — எவரெவர், வாய்க் கேட்பினும் — சொல்லக் கேட்டாலும், அப்பொருள் — அப் பொருளினுடைய, மெய்ப் பொருள் — உண்மை யான பயனை, காண்பது அறிவு — காணும் வல்லமையுள்ளது அறிவாகும்.

தான், பிறர் அறிந்து கொள்ளுவதற்கு எளிமையாக மனங் கொள்ளும்படியாகச் சொல்லி, பிறர் வாயில் கேட்கும் சொற்களில் நுணுக்கமான பொருள்களைக் கண்டறிய வல்லது அறிவாகும்.

எண்பொருள் ஆக செல சொல்லி தான் பிறர்வாய் நுண் பொருள் காண்பது அறிவு.

4 எண்பொருள் ஆகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்பது அறிவு. 424

தான் — தான், எண் — பிறர் அறிந்து கொள்ள எளிமை, பொருள்ஆக — விளங்கும் பொருளாக, செலச் சொல்லி, மனங் கொள்ளுமாறு சொல்லி, பிறர்வாய் — பிறர் வாயில் கேட்கும் சொற்களில், நுண் — நுணுக்கமான, பொருள் — பொருள்களை, காண்பது அறிவு — கண்டறியவல்லது அறிவாகும்.

உயர்ந்தோர்களை நட்பாக்கிக் கொள்ளுவது ஒருவனுக்கு அறிவுடைமையாகும். உலகத் தினைத் தழுவி நடப்பதும் அதுவேயாகும். அந் நட்பின்கண் முன் மலர்தலும், பின் குவிதலும் இல்லாமல் ஒரே நிலையில் நிற்பது அறிவாகும்.

உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு.

5 உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு. 425

உலகம் — உலகத்தில் உயர்ந்தோரை, தழீஇயது — நட்பாக்கிக் கொள்ளுவது, ஒட்பம் — ஒருவனுக்கு அறிவுடைமையேயாகும், மலர்தலும் — முன் மலர்தலும், கூம்பலும் — பின் குவிதலும், இல்லது அறிவு — இல்லாதது அறிவாகும்.

உலகமானது எந்த முறையில் நடந்து வருகின்றதோ அவ்வுலகத்துடன் பொருந்தித் தானும் அந்த முறையில் நடந்து கொள்ளுவது அறிவுடைமையாகும்.

எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு.

6 எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு. 426

உலகம் — உலகமானது, எவ்வது — எந்த முறையினால், உறைவது — நடந்து வருகின்றதோ, உலகத்தோடு — அவ்வாறு உலகத்துடன் பொருந்தி, அவ்வது — தானும் அந்த முறையினால், உறைவதும் அறிவு — நடந்து கொள்ளுவது அறிவுடைமையாகும்.

அறிவுடையார் பின்னர் வர இருப்பதனை முன்னேயே அறியவல்லவராவர். அறிவில்லாதவர்கள் அவ்வாறு பின்னர் வரஇருப்பதனை முன்னே அறிந்து கொள்ள முடியாதவர்கள் ஆவார்கள்.

அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார் அஃது அறிகல்லா தவர்.

7 அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்
அஃதுஅறி கல்லா தவர். 427

அறிவு — அறிவினை, உடையார் — உடையவர்கள், ஆவது — பின்னர் வர இருப்பதை, அறிவார் — முன்பாகவே அறிய வல்லவராவார்கள், அறிவு — அறிவு, இலார் — இல்லாதவர்கள், அஃது — அவ்வாறு பின்னர் வர இருப்பதனை, அறிகல்லாதவர் — முன்னே அறிந்து கொள்ள முடியாதவர்கள் ஆவார்கள்.

அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாதிருத்தல் அறியாமையாகும். அஞ்ச வேண்டியதற்கு அஞ்சுதல் அறிவுடையோர்களது தொழிலாகும்.

அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்.

8 அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில். 428

அஞ்சுவது — அஞ்சவேண்டியதற்கு, அஞ்சாமை — அஞ்சாதிருத்தல், பேதைமை — அறிவில்லாமையாகும், அஞ்சுவது — அஞ்சவேண்டியதற்கு, அஞ்சல் — அஞ்சுதல், அறிவார் — அறிவுடையோர்களது, தொழில் — செயலாகும்.

இனி வரக்கூடியதனை முன்னமேயே அறிந்து காத்துக் கொள்ளும் அறிவுடையோர்க்கு நடுங்கும்படியாக வருவதொரு துன்பம் இல்லை.

எதிரதா காக்கும் அறிவினார்க்கு இல்லை அதிரவருவது ஓர் நோய்.

**9 எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை**
**அதிர வருவதோர் நோய்.** 429

எதிரதா — பின் வருவதனை முன்னறிந்து, காக்கும் — காத்துக் கொள்ளும், அறிவினார்க்கு — அறிவுடையோர்க்கு, அதிர — நடுங்கும்படியாக, வருவதோர் — வருவதொரு, நோய் இல்லை — துன்பம் இல்லை.

அறிவுடையவர்கள், வேறு பொருள்கள் எதுவும் இல்லாதிருந்தாலும், எல்லாம் உடையவர் களேயாவார்கள். அறிவில்லாதவர்கள் எல்லாப் பொருள்களும் உடையவர்களாகவே இருந்தாலும் ஒன்றும் இல்லாதவர்களே யாவார்கள்.

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார் என் உடையரேனும் இலர்.

**10 அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்.** 430

அறிவுடையார் — அறிவுடையவர்கள், எல்லாம் — வேறெதுவும் இல்லாதிருந்தாலும், உடையார் — எல்லாம் உடையவரேயாவார்கள், அறிவிலார் — அறிவில்லாதவர்கள், என் — எல்லாம், உடையரேனும் — உடையவராக இருந்தாலும், இலர் — ஒன்றும் இல்லாதவரே ஆவார்கள.

## 44. குற்றங்கடிதல்

**[குற்றங்கள் யாவை என்பதும் வாராமல் காத்தலும்]**

செருக்கும் [மதமும்], கோபமும், காமமும் ஆகிய குற்றங்கள் இல்லாதவருடைய செல்வம் மேம்பாடான தன்மையினை உடையதாகும்.

செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார் பெருக்கம் பெருமித நீர்த்து.

**1 செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்**
**பெருக்கம் பெருமித நீர்த்து.** 431

செருக்கும் – மதம் என்பதும், சினமும் — கோபமும், சிறுமை — காமமும் [ஆகிய குற்றங்கள்], இல்லார் — இல்லாதவருடைய, பெருக்கம் — செல்வமானது, பெருமித — மேம்பாடான, நீர்த்து — தன்மையினையுடையதாகும்,

கொடுக்க வேண்டியவற்றிற்குப் பொருள் கொடாதிருத்தலும், நன்மையில் நீங்கிய மானமும், அளவு கடந்த உவகையும் அரசனுக்குக் குற்றங்களாகும்.

இவறலும் மாண்பு இறந்த மானமும் மாணா உவகையும் ஏதம் இறைக்கு.

2 இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு. 432

இவறலும் — கொடுக்க வேண்டியதற்குப் பொருள் கொடாதிருத்தலும், மாண்பு — நன்மையின், இறந்த — நீங்கிய, மானமும் — மானமும், மாணா — அளவு கடந்த, உவகையும் — களிப்பும், இறைக்கு — மன்னனுக்கு, ஏதம் — குற்றங்கள் எனப்படும்.

பழிக்கு நாணமுற்று அஞ்சுபவர்கள் தினையளவு சிறிதான குற்றமானது தம்மிடத்தில் உண்டானாலும் அதனைப் பனையளவு பெரிதாகக் கருதுவார்கள்.

தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையா கொள்வர் பழி நாணுவார்.

3 தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். 433

பழி — பழிக்கு, நாணுவார் — நாணமுற்று அஞ்சுபவர்கள், தினைத்துணையாம் — தினையளவு சிறிதான, குற்றம் — குற்றமானது, வரினும் — தம்மிடத்தில் உண்டானாலும், [அதனை] பனைத்துணையா — பனையினளவு பெரிதாக, கொள்வர் — கருதுவார்கள்.

முடிவினைத் தருவதாகிய பகை குற்றமேயாகும். ஆதலால் அக்குற்றம் தனக்கு வாராதிருப்பதனையே பயனாகக் கொண்டு காத்தல் வேண்டும்.

குற்றமே காக்க பொருளாக குற்றமே அற்றம் தரும் பகை.

4 குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை. 434

அற்றம் — முடிவினை, தரூஉம் — தருவதான, பகை — பகை, குற்றமே — குற்றமேயாகும், [ஆதலால்] குற்றமே — அக்குற்றமானது வாராமல், பொருளாக — கருத்தாகக் கொண்டு, காக்க — தன்னைக் காத்துக் கொள்ளுதல் வேண்டும்.

குற்றம் வருவதற்கு முன்பாகவே தன்னைக் காத்துக் கொள்ளாதவனுடைய வாழ்க்கை அக்குற்றம் வந்தால், நெருப்பின் முன்னே இருக்கும் வைக்கோலினைப் போல அழிந்து விடும்.

வருமுன்னர் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் வைத்தூறு போல கெடும்.

**5 வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும். 435**

வருமுன்னர் — குற்றமானது வருவதற்கு முன்னதாகவே, காவாதான் — தன்னைக் காத்துக் கொள்ளாதவனுடைய, வாழ்க்கை — வாழ்க்கையானது, எரி — நெருப்பின், முன்னர் — முன்னே இருக்கும், வைத்தூறு — வைக்கோல் குவியலை, போல — போன்று, கெடும் — கெட்டுவிடும்.

தன்னுடைய குற்றத்தினை முன்னதாகவே கண்டு கொண்டு அதனை நீக்கிப் பின்னர், பிறர் குற்றத்தினைக் காணவல்லவராக இருந்தால் தலைவனுக்கு நேரக்கூடிய குற்றம் யாது?

தன் குற்றம் நீக்கி பிறர் குற்றம் காண்கில் பின் என் குற்றம் ஆகும் இறைக்கு.

**6 தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்**
**என்குற்றம் ஆகும் இறைக்கு. 436**

தன் — தன்னுடைய, குற்றம் — குற்றத்தினை, நீக்கி — முன்னே நீக்கிவிட்டு, பிறர் — மற்றவருடைய, குற்றம் — குற்றத்தினைப், பின் காண்கின் — பின்னே காண வல்லவனானால், இறைக்கு — தலைவனுக்கு, ஆகும் — உண்டாகக் கூடிய, குற்றம் என் — குற்றம் யாதாக இருக்க முடியும்?

செல்வத்தினால் தனக்குச் செய்து கொள்ள வேண்டியவைகளைச் செய்து கொள்ளாமல் உலோபியாக அதனிடம் மிகுந்த பற்று வைத்திருப்பவனுடைய செல்வம், பின்னர் இல்லாததாகிக் கெட்டுவிடும்.

செயற்பால செய்யாது இவறியான் செல்வம் உயற்பாலது அன்றி கெடும்.

**7 செயற்பால செய்யாது இவறியான் செல்வம்**
**உயற்பால தன்றிக் கெடும். 437**

செயற்பால — பொருளால் தனக்குச் செய்யப்பட வேண்டியவைகளை, செய்யாது — செய்து கொள்ளாமல், இவறியான் — உலோபம் செய்தவனுடைய, செல்வம் — செல்வம், உயல் — பின்பு இருப்பதாகிய, பாலது — தன்மை, அன்றி — இல்லாமல், கெடும் — பயனின்றிக் கெட்டுவிடும்.

செய்ய வேண்டிய ஈகைச் செயல்களைச் செய்யாமல் கருமித் தனத்தால் பற்றுதலை வைத்திருக்கும் அத்தன்மை, குற்றமான தன்மைகளுள் ஒன்றாக வைத்து எண்ணப்படுவ தொன்று அன்று; அது மிகுந்த குற்றமாகும்.

பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்று அன்று.

8 பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன்று அன்று. 438

பற்று — பொருளினை விடாமல் பற்றிக் கொண்டிருக்கும், உள்ளம் — மனப்பான்மை, என்னும் — என்கின்ற, இவறன்மை — உலோபத் தன்மையானது, எற்றுள்ளும் — எல்லாக் குற்றத் தன்மைகளுள்ளும், எண்ணப்படுவது — வைத்து எண்ணப்படுவது, ஒன்று — ஒன்று, அன்று — அல்ல என்பதாம். [எல்லாவற்றினும் மிகுதியான குற்றமாகும்.]

செருக்கினால் எப்போதும் தன்னைத் தானே மதித்துக் கொள்ளாதிருப்பாயாக; தனக்கு நன்மையினை உண்டாக்காத தொழில்களை மனத்தால் விரும்பாதிருப்பாயாக.

வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க நன்றி பயவா வினை.

9 வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. 439

எஞ்ஞான்றும் — தான் மிக உயர்ந்திருக்கும் காலத்திலும், தன்னை — தன்னை, வியவற்க — செருக்கினால் மதியாதிருப்பானாக; நன்றி பயவா — நன்மையினை உண்டாக்காத, வினை — செயல்களை, நயவற்க — மனதில் விரும்பாதிருப்பானாக.

தான் விரும்பிய [காதலித்த] பொருள்கள் யாவையென்று தமது விருப்பத்தினைப் பகைவர் அறிந்து கொள்ளாதபடி அனுபவிக்க வல்லவனானால், அப்பகைவர் தன்னை வஞ்சிக்க எண்ணும் எண்ணம் பழுதாகிவிடும்.

காதல காதல் அறியாமை உய்க்கிற்பின் ஏதில ஏதிலார் நூல்.

10 காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல். 440

காதல — தான் காதலிக்கின்ற பொருள்களை, காதல் அறியாமை — அவ்விருப்பத்தினை [காதலினை]ப் பகைவர் அறிந்து கொள்ளாமல், உய்க்கிற்பின் — நுகர்வதற்கு வல்லவனாகிய பிறகு, ஏதிலார் — பகைவர், நூல் — தன்னை வஞ்சிக்க எண்ணும் எண்ணம், ஏதில — பழுதாகிவிடும்.

மறதி இல்லாத மனத்தாலே எண்ணிச் செய்யப்பட்டால் 'இவை செய்வதற்கு அருமையானவை' என்று சொல்லப்படும் முடியாத செயல்கள் எதுவுமே இல்லை.

அரிய என்று ஆகாத இல்லை பொச்சாவா கருவியான் போற்றி செயின்.

7 அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்
கருவியான் போற்றிச் செயின். 537

பொச்சாவா — மறதியில்லாத, கருவியால் — மனத்தினாலே, போற்றிச்செயின் — எண்ணிச் செய்தால், அரிய—செய்து முடிக்க அருமையானது, என்று — என்று சொல்லப்படும், ஆகாத இல்லை — ஒருவற்கு முடியாத காரியங்கள் எதுவும் இல்லை.

நீதி நூலுடையார் இவை மன்னர்க்கு உரியன என்று கூறியவைகளைக் கடைப்பிடித்துச் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யாமல் மறந்தவர்களுக்கு எழுமையிலும் நன்மை இல்லை.

புகழ்ந்தவை போற்றி செயல் வேண்டும் செய்யாது இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.

8 புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல். 538

புகழ்ந்தவை — நீதிநூலுடையார் உயர்த்திச் சொல்லியவைகளை, போற்றி — கடைப்பிடித்து, செயல் — செய்தல், வேண்டும் — வேண்டும், செய்யாது — அவ்வாறு செய்யாமல் இகழ்ந்தார்க்கு — மறந்தவர்களுக்கு, எழுமையும்இல் — எழுமையிலும் நன்மை இல்லை.

மன்னர்கள் தமது செருக்கில் களிப்புற்றிருக்கும்போது, முற்காலத்தில் அப்படிப்பட்ட குணத்தினால் உண்டான மறதியால் கெட்டவர்களை நினைத்துப் பார்க்கவேண்டும்.

இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம் தம் மகிழ்ச்சியின் மைந்து உறும் போழ்து.

9 இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. 539

தம் — தமக்குண்டான, மகிழ்ச்சியில் — களிப்பில், தாம் — தாங்கள், மைந்துஉறும் போழ்து — செருக்கடையும்போது, இகழ்ச்சியின் — முன்பு அப்படிப்பட்ட மறதியினாலே, கெட்டாரை — கெட்டவர்களை, உள்ளுக — நினைத்துப் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

தான் அடைய நினைத்த பொருள்கள் அத்தனையையும் ஒருவன் அடைதல் எளிதாக முடியும். எப்போது என்றால், பின்னும் தான் அதனையே நினைத்திருப்பானேயானால், என்பதாம்.

உள்ளியது எய்தல் எளிது மன் மற்றும் தான் உள்ளியது உள்ள பெறின்.

10 உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான்
உள்ளியது உள்ளப் பெறின். 540

தான் — தான், உள்ளியது — அடைய நினைத்த பொருளினை, எய்தல் — அடைதல், எளிதுமன் — எளிதானதாகும், மற்றும் — பின்னும், [அவன்] உள்ளியது — நினைத்த அப் பொருளினையே, உள்ள — நினைத்துக் கொண்டிருக்க, பெறின் — தன்மை பெற்றால்.

## 55. செங்கோன்மை

### [அரசன் ஆட்சியின் சிறப்புத் தன்மை]

குடிமக்கள் குற்றம் செய்தால் அக்குற்றத்தினை நாடி அறிந்து யாவரிடத்தும் கண்ணோட்டம் இல்லாமல் நடுவு நிலைமையாக அமைந்து, குற்றத்திற்குச் சொல்லப்பட்ட தண்டனையை ஆராய்ந்து செய்வதே முறையாகும்.

ஓர்ந்து கண்ணோடாது இறை புரிந்து யார்மாட்டும் தேர்ந்து செய்வஃதே முறை.

1 ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை. 541

ஓர்ந்து — குற்றத்தினை யறிந்து, யார்மாட்டும் — யாவரிடத்தும், கண்ணோடாமல் — முகம் கொடாமல் [தாட்சண்யமின்றி] இறை — நடுவு நிலைமை, புரிந்து — பொருந்துமாறு, தேர்ந்து — குற்றத்திற்குரிய தண்டனையை ஆராய்ந்து, செய்வஃதே — அந்த அளவில் செய்வதே, முறை — செங்கோன்மை என்பதாகும்.

உலகத்திலுள்ள உயிர்கள் எல்லாம் மழையை நோக்கி வாழும். குடிமக்கள் அரசனுடைய செங்கோலினை நோக்கி வாழ்வார்கள்.

வான் நோக்கி வாழும் உலகு எல்லாம் மன்னவன் கோல்நோக்கி வாழும் குடி.

2 வான்நோக்கி வாழும் உலகுஎல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி. 542

உலகு — உலகத்திலுள்ள, எல்லாம் — உயிர்கள் எல்லாம், வான்நோக்கி — மழை உண்டானால், வாழும் — வாழ்வனவாகும், குடி — குடிமக்கள், மன்னவன் — மன்னவனுடைய, கோல் — செங்கோன்மையினை, நோக்கி — பார்த்து, வாழும் — வாழ்வார்கள்,

அந்தணர்களுடைய மறையாகிய நூலுக்கும் அறத்திற்கும் முதற் காரணமாக நிலைபெற்றது எதுவென்றால் அரசனால் செலுத்தப்படும் செங்கோலாகும்.

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல்.

3 அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல். 543

அந்தணர் — அந்தணர்களுடைய, நூற்கும் — மறையாகிய நூலுக்கும், அறத்திற்கும் — அறம் என்பதற்கும், ஆதியாய் — முதற்காரணமாகி, நின்றது — நிலை பெற்றிருப்பது, [எதுவென்றால்] மன்னவன் — மன்னவனால் செலுத்தப்படும், கோல் — செங்கோலாகும்.

தனது குடிமக்களை அணைத்துச் செங்கோல் செலுத்தும் பெருநில மன்னனது அடியைப் பொருந்தி உலகத்தோர் விடாது நிற்பர்.

குடிதழீஇ கோல் ஓச்சும் மாநில மன்னன் அடிதழீஇ நிற்கும் உலகு.

4 குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. 544

குடி — தன் குடிமக்களையும், தழீஇ — அணைத்து, கோல் — செங்கோல், ஓச்சும் — செலுத்தும், மாநில — பெருநில, மன்னன் — மன்னனது, அடி — அடியை, தழீஇ — பொருந்தியிருந்து, நிற்கும் உலகு — விடாமல் உலக மக்கள் இருப்பார்கள்.

நூல்கள் சொல்லிய இயல்பால் செங்கோலினைச் செலுத்தும் மன்னனது நாட்டில் பருவ மழையும் குன்றாத விளைச்சலும் ஒருங்கே சேர்ந்து இருப்பனவாகும்.

இயல்புளி கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட பெயலும் விளையுளும் தொக்கு.

5 இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு. 545

பெயலும் — பருவகாலத்து மழையும், விளையுளும் — குன்றாத விளைச்சலும், தொக்கு — ஒன்று கூடி, இயல்புளி — நூல்களில் கூறப்பட்ட இயல்பினாலே, கோல் — செங்கோலினை, ஓச்சும் — செலுத்தும், மன்னவன் — மன்னனது, நாட்ட — நாட்டில் இருப்பனவாகும்.

மன்னனுக்குப் போரில் வெற்றியினைக் கொடுப்பது அவன் எறியும் வேல் அல்ல; செங்கோலேயாகும். அக்கோலும் கோணாது இருக்குமானால் என்பதாம்.

**வேல் அன்று வென்றி தருவது மன்னவன் கோல் அதூஉம் கோடாது எனின்.**

**6 வேல்அன்று வென்றி தருவது மன்னவன்**
**கோல்அதூஉம் கோடாது எனின்.** 546

மன்னவன் — மன்னவனுக்கு, வென்றி — போரில் வெற்றியினை, தருவது — கொடுப்பது, வேல் — வேற்படை, அன்று — அல்ல, கோல் — அவனுடைய செங்கோலாகும், அதூஉம் — அக்கோலும், கோடாது — தான் கோணாமல், எனின் — இருக்குமானால்.

வையகத்தை யெல்லாம் அரசன் காப்பாற்றுவான்; அந்த அரசனை அவனுடைய செங்கோல் காப்பாற்றும்; அதனை அவன் முட்டாமல் செலுத்துவானானால் என்பதாம்.

**இறை காக்கும் வையகம் எல்லாம் அவனை முறை காக்கும் முட்டா செயின்.**

**7 இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை**
**முறைகாக்கும் முட்டாச் செயின்.** 547

வையகம் — பூமி, எல்லாம் — முழுவதையும், இறைகாக்கும் — மன்னவன் காப்பாற்றுவான். அவனை — அம்மன்னனை, முறை — அவனுடைய செங்கோலானது, காக்கும் — காப்பாற்றும், [எப்போது?] முட்டாச்செயின் — செங்கோலினை முட்டாமல் செலுத்துவானானால்.

எல்லோரும் எளிமையாகக் காண முடிகின்றவனாகி ஆராய்ந்து முறை செய்யாத மன்னவன், தாழ்ந்த பாவமும் பழியும் அடைந்து கெடுவான்.

**எண்பதத்தான் ஓராமுறை செய்யா மன்னவன் தண்பதத்தான் தானே கெடும்.**

**8 எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்**
**தண்பதத்தான் தானே கெடும்.** 548

எண்பதத்தான் — குடிமக்கள் எளிமையாகக் காண்பவனாகி, ஓரா — ஆராய்ந்து, முறை — நீதி, செய்யா — வழங்காத, மன்னவன் — மன்னவன், தண்பதத்தால் — தாழ்ந்த பழி பாவத்திலே நின்று, தானே — தானே, கெடும் — கெடுவான்.

குடிமக்களைப் பிறர் துன்புறுத்தாமல் பேணிக் காத்துக் குற்றம் செய்தால் தண்டனையளிப்பது வேந்தனுக்குப் பழியாகாது, அவனுடைய தொழிலேயாகும்.

குடி புறங்காத்து ஓம்பி குற்றம் கடிதல் வடு அன்று வேந்தன் தொழில்.

**9 குடிபுறங் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்**
**வடுஅன்று வேந்தன் தொழில்.** 549

குடி — குடிமக்களை, புறங்காத்து — பிறர் துன்புறுத்தாமல் காப்பாற்றி, ஓம்பி — தானும் நலியாது பேணி, குற்றம் — அவர்களிடம் குற்றம் உண்டானால், கடிதல் — தண்டித்தல், வேந்தன் — வேந்தனுக்கு, வடு — பழி, அன்று — அல்ல, தொழில் — அவனுடைய தொழிலாகும்.

வேந்தனானவன் கொடியவர்களைக் கொலையினால் தண்டித்துத் தக்கோரைக் காப்பாற்றுதல், உழவன் களையைக் களைந்து பசுமையான பயிரைக் காப்பாற்றுவதோடு ஒக்கும்.

கொலையின் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களை கட்டதனோடு நேர்.

**10 கொலையின் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்**
**களைகட் டதனோடு நேர்.** 550

வேந்து — வேந்தனானவன், கொடியாரை — கொடியவர்களை, கொலையின் — கொலையினாலே, ஒறுத்தல் — தண்டித்தல் [தக்கோரைக் காத்தல்] பைங்கூழ் — உழவன் பசுமையான பயிரை, களைகட்டு — களையைக் களைந்து காத்தலாகிய, அதனோடு — அந்தச் செயலோடு, நேர் — ஒக்கும்.

## 56. கொடுங்கோன்மை

**[அரசன் முறைசெய்தலில் கோணாதிருத்தல்]**

பொருளைக் கருதி நீதியற்ற முறையில் குடிமக்களிடம் அல்லாதவைகளைச் செய்தொழுகும் வேந்தன், கொலை செய்யும் தொழிலை மேற்கொண்டவர்களை விடவும் கொடியவனாவான்.

கொலை மேற்கொண்டாரின் கொடிதே அலைமேற்கொண்டு அல்லவை செய்து ஒழுகும் [வேந்து.

**1 கொலைமேற்கொண் டாரின் கொடிதே அலைமேற்கொண்டு**
**அல்லவை செய்துஒழுகும் வேந்து.** 551

அலை — பொருளுக்காக குடி மக்களை அலைத்தல் செய்வதை, மேற்கொண்டு — தன்மேற்கொண்டு, அல்லவை — முறை அல்லாதவற்றை, செய்து ஒழுகும் — செய்து நடக்கும், வேந்து — மன்னவன், கொலை — பகைமையால் கொல்லுதல் தொழிலை, மேற்கொண்டாரின் — மேற்கொண்டு நடப்பவர்களைவிட, கொடிதே — கொடியவன் எனப்படுவான்,

தண்டிக்கும் தொழிலோடு நின்ற அரசன் குடிமக்களிடம் பொருள் வேண்டிக் கேட்டல், வேற் படைகளுடனே தனியே நின்ற கள்வன் வழிப்போக்கனை நோக்கிக் கைப்பொருளினைத் 'தா' என்பதனோடு ஒக்கும்.

வேலோடு நின்றான் இடு என்றது போலும் கோலொடு நின்றான் இரவு.

2 வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. 552

கோலொடு — தண்டிக்கும் தொழிலோடு, நின்றான் — நின்ற அரசன், இரவு — குடிமக்களிடம் பொருள் வேண்டுதல், வேலொடு — வேலினைக் கையில் கொண்டு, நின்றான் — வழியில் தனியே நின்ற கள்வன், இடு — வழிப்போக்கனை நோக்கி உன் கைப்பொருளைத் தா என்றது போலும் — என்று சொல்லியது போலும்.

தனது நாட்டில் நிகழ்பவைகளை நாள்தோறும் ஆராய்ந்து அதற்குத் தக்க முறைகளைச் செய்யாத மன்னன் நாள்தோறும் நாட்டினை இழப்பான்.

நாள்தொறும் நாடி முறை செய்யா மன்னவன் நாள்தொறும் நாடு கெடும்.

3 நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் நாடு கெடும். 553

நாள்தொறும் — நாள்தோறும், நாடி — நாட்டின் தீமைகளை ஆராய்ந்து, முறைசெய்யா — அதற்குத்தக்க முறையில் முறைமையை ஏற்றபடி செய்யாத, மன்னவன் — மன்னனுடைய, நாடு — நாடு, நாடொறும் — நாள்தோறும், கெடும் — கெட்டு விடுவதாகும்.

பின்னர் விளைவதனையறியாமல் முறை தப்பச் செய்யும் அரசன், அச்செயலால் முன்பு ஈட்டிய பொருளையும் பின்பு ஈட்டுவதற்கு ஏதுவாகிய குடிமக்களையும் இழப்பான்.

கூழும் குடியும் ஒருங்கு இழக்கும் கோல் கோடி சூழாது செய்யும் அரசு.

4 கூழும் குடியும் ஒருங்குஇழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு. 554

சூழாது — பின் விளைவதனை நினைக்காமல், கோல் — செங்கோல், கோடி — தப்ப, செய்யும் — செய்கின்ற, அரசு — அரசன், கூழும் — பொருளையும், குடியும் — குடிமக்களையும், ஒருங்கு இழக்கும் — ஒன்று சேர இழப்பான்.

குடிமக்கள் அரசனால் துன்பப்பட்டு அதனைப் பொறுக்க முடியாமல் அழுத கண்ணீரல்லவா அவனுடைய செல்வத்தினைக் குறைக்கும் கருவியாகும்.

அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே செல்வத்தை தேய்க்கும் படை.

5 அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீர்அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 555

அல்லல்பட்டு — [அரசனால்] குடிமக்கள் துன்பப்பட்டு, ஆற்றாது — அதனைப் பொறுக்க முடியாமல், அழுத — அழுத, கண்ணீரன்றே — கண்ணீரல்லவா, செல்வத்தை — அவனுடைய செல்வத்தினை, தேய்க்கும் — குறைக்கின்ற, படை — படைக் கருவியாகும்.

மன்னர்கள் புகழுடன் நிலை பெற்றிருத்தல் என்பது செங்கோன்மையினாலேயாகும். அச்செங்கோன்மை இல்லாவிட்டால் அப்புகழ் உளவாகாது.

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃது இன்றேல் மன்னாவாம் மன்னர்க்கு ஒளி.

6 மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதுஇன்றேல்
மன்னாவாம் மன்னர்க்கு ஒளி. 556

மன்னர்க்கு — மன்னர்களுக்கு, மன்னுதல் — புகழ்நிலை பெறுதல், செங்கோன்மை — செங்கோன்மையினாலாகும், அஃது இன்றேல் — அவ்வாறான செங்கோன்மை இல்லையானால், மன்னர்க்கு — மன்னர்க்கு, ஒளி — அப்புகழானது, மன்னாவாம் — நிலை பெற்றிருக்காது.

மழை இல்லாமையானது உலகில் வாழும் உயிர்களுக்கு எவ்வகைத் துன்பத்தினை உண்டாக்குமோ அவ்வகைத் துன்பம் அருளில்லாத வேந்தன் நாட்டில் வாழும் மக்களுக்கு உண்டாகும்.

துளி இன்மை ஞாலத்திற்கு எற்று அற்றே வேந்தன் அளிஇன்மை வாழும் உயிர்க்கு.

7 துளிஇன்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே வேந்தன்
அளிஇன்மை வாழும் உயிர்க்கு. 557

வேந்தன் — வேந்தனுடைய, அளி — அருள், இன்மை — இல்லாமையானது, வாழும் உயிர்க்கு— அவன் நாட்டில் வாழும் மக்களுக்கு, துளி — மழைத்துளியானது, இன்மை — இல்லாமற் போனால், ஞாலத்திற்கு — பூமியில் வாழும் உயிர்களுக்கு, எற்று — எவ்வளவு துன்பம் தருமோ, அற்றே —அத்தகைய துன்பத்தினைத் தரும்.

செங்கோல் முறையினைச் செய்யாத, மன்னவனது கொடுங்கோலின் கீழ் வாழ்ந்தால் யாவர்க்கும் பொருள் வைத்திருப்பதானது பொருள் இல்லாமையினைக் காட்டிலும் அதிகமான துன்பத்தினைச் செய்வதாகும்.

இன்மையின் இன்னாது உடைமை முறை செய்யா மன்னவன் கோற்கீழ் படின்.

**8 இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா**
**மன்னவன் கோற்கீழ்ப் படின்.** 558

முறை — செங்கோல் முறையை, செய்யா — செய்யாத, மன்னவன் — மன்னன், கோற்கீழ் — கொடுங்கோலின் கீழ், படின் — வாழ்ந்தால் [யாவர்க்கும்], உடைமை — பொருள் வைத்திருப்ப தானது, இன்மையின் — பொருள் இல்லாமையினைக் காட்டிலும், இன்னாது — அதிகத் துன்பத்தினைச் செய்வதாகும்.

மன்னவன் தான் செய்யும் பொருளை முறை தப்பச் செய்வானானால் அவன் நாட்டில் பருவமழை இல்லாமற் போகும்படி மேகம் மழை பொழிதலைச் செய்யாது.

முறை கோடி மன்னவன் செய்யின் உறைகோடி ஒல்லாது வானம் பெயல்.

**9 முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
**ஒல்லாது வானம் பெயல்.** 559

மன்னவன் — மன்னன், முறைகோடி — செங்கோல் முறை தப்பி, செய்யின் — பொருளினைச் சேர்ப்பானேயானால், உறை — பருவமழை, கோடி — இல்லாமற் போகும்படியாக, வானம் — மேகம், பெயல் — மழை பொழிவதை, ஒல்லாது — செய்தல் பொருந்தாது.

காத்தற்குரிய காவலனாக அரசன் உயிர்களைக் காப்பாற்றானாகில் அறம் இல்லாத அவன் நாட்டுப் பசுக்கள் பால் தருவது குறைந்து விடும். ஆறு வகைப்பட்ட தொழிலாளர்கள் தாங்கள் நூல் கற்பதை மறந்து விடுவார்கள். தொழில்கள் நசித்துவிடும்.

ஆ பயன் குன்றும் அறுதொழிலோர் நூல் மறப்பர் காவலன் காவான் எனின்.

**10 ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
**காவலன் காவான் எனின்.** 560

காவலன் — காத்தற்குரிய அரசன், காவான் — உயிர்களைக் காப்பாற்றாதவன், எனின் — என்றால், ஆ — பசுக்கள் தருகின்ற, பயன் — பயனாகிய பால், குன்றும் — சுருங்கி விடும், அறுதொழிலோர் — ஆறுவகைப்பட்ட தொழிலைச் செய்பவர்கள், நூல் மறப்பர் — தாங்கள் கற்கும் நூல்களை, மறப்பர் — மறந்து விடுவார்கள்.

['இயல்புடைய மூவர்' (41) என்று குறிப்பால் கூறியது போல, இங்கும் 'அறுதொழிலோர்' என்றார். உலகனைத்திற்கும், 'பால்' இன்றியமையாததாகவும் பொதுவாகவும் உள்ளதால் 'ஆ' என்றாரென்றறிக. உலகத் தொழில்கள் பொதுத் தன்மையில் உழவர், வாணிகர், ஆசிரியர், கம்மியர், கலைஞர், மருத்துவர் என்பனவற்றுள் அடங்குவதாகும்.]

## 57. வெருவந்த செய்யாமை

[குடிமக்கள் அஞ்சி நடுங்கக் கூடியவைகளைச் செய்யாதிருத்தல்]

தக்க முறையில் நடுவாக நின்று ஆராய்ந்து குற்றம் செய்தவன் பின்னும் அதனைச் செய்யாமல் இருக்கும்பொருட்டு அக் குற்றத்திற்குத் தகுந்தபடி தண்டிப்பவனே வேந்தனாவான்.

தக்காங்கு நாடி தலை செல்லா வண்ணத்தால் ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.

**1 தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்**
**ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.** 561

தக்காங்கு — குற்றத்தினை நடுவாக நின்று, நாடி — நல்லபடியாக ஆராய்ந்து, தலைச்செல்லா வண்ணத்தால் — மீண்டும் அப்படிப்பட்ட குற்றத்தினை அவன் செய்யாமற் பொருட்டு, ஒத்தாங்கு — குற்றத்திற்குத் தகுந்தபடி, ஒறுப்பது வேந்து — தண்டிப்பவனே வேந்தனாவான்.

செல்வம் தன்னைவிட்டு நெடுங்காலம் நீங்காமல் நிற்பதை வேண்டுபவர்கள் தண்டிக்கும்போது அளவு கடந்து செய்வதுபோலத் தொடங்கி, செய்யும்போது அளவு கடவாமல் செய்தல் வேண்டும்.

கடிது ஓச்சி மெல்ல எறிக நெடிது ஆக்கம் நீங்காமை வேண்டுபவர்.

**2 கடிதுஓச்சி மெல்ல எறிக நெடிதுஆக்கம்**
**நீங்காமை வேண்டு பவர்.** 562

ஆக்கம் — தமது செல்வம், நெடிது — நீண்ட காலம், நீங்காமை — நீங்காதிருக்க வேண்டுமென்று, வேண்டுபவர் — விரும்பி வேண்டி இருப்பவர்கள், கடிது — தொடங்கும்போது அளவு கடந்து செய்வதுபோல், ஓச்சி — தொடங்கி, மெல்ல — செய்யும் போது அளவு மீறாமல், எறிக — செய்தல் வேண்டும்.

குடிகள் மிகவும் அஞ்சுகின்ற செயல்களைச் செய்து நடக்கும் வெங்கோலனாகிவிடில் அவ்வரசன் உறுதியாகக் கடிதில் கெடுவான்.

வெருவந்த செய்து ஒழுகும் வெங்கோலன் ஆயின் ஒருவந்தம் ஒல்லை கெடும்.

**3 வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ஆயின்**
**ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.** 563

வெருவந்த — குடிமக்கள் மிகவும் அஞ்சுகின்ற தொழில்களை, செய்து ஒழுகும் — செய்து நடக்கின்ற, வெங்கோலன் — கொடுங்கோலன், ஆயின் — ஆனால், ஒருவந்தம் — உறுதியாகவே, ஒல்லை — விரைவில், கெடும் — அழிவான்.

குடி மக்களால் 'தமது தலைவன் கொடுமையானவன்' என்று சொல்லப்படும் துன்பமான சொல்லினை யுடைய வேந்தன் ஆயுளும் குறைந்து செல்வமும் விரைவில் இழப்பான்.

இறை கடியன் என்று உரைக்கும் இன்னாச் சொல் வேந்தன் உறை கடுகி ஒல்லைக் [கெடும்.

4 இறைகடியன் என்றுஉரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும். 564

இறை — வேந்தன், கடியன் — கொடியன், என்று உரைக்கும் — என்று மக்களாலே சொல்லப் படுகின்ற, இன்னாச் சொல் — துன்பமான சொல்லையுடைய, வேந்தன் — வேந்தன், உறை கடுகி — தனது ஆயுளும் குறைந்து, ஒல்லை — விரைவில் [செல்வத்தையும்], கெடும் — இழந்து விடுவான்.

தன்னைக் காண வருவோர்க்கு எளிதில் காண முடியாதவனாயும், கண்டால் கடிய முகத்தை யுடையவனாகவும் இருக்கின்ற மன்னனுடைய செல்வம் பேயால் காணப்பட்டதொரு குற்றத்தினை உடையதாகும்.

அருஞ்செவ்வி இன்னாமுகத்தான் பெரும் செல்வம் பேய் கண்டன்னது உடைத்து.

5 அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண்டு அன்னது உடைத்து. 565

அருஞ்செவ்வி — தன்னைக் காண வருவோர்க்கு காண முடியாதபடி அரிதாகவும், இன்னா — இனிமையில்லாத, முகத்தான் — முகத்தையுடையவனாகவும், [இருக்கின்றவனது] பெரும் — பெரிய, செல்வம் — செல்வமானது, பேஎய் — பேயால், கண்டன்னது — காணப்பட்டாற் போன்றதொரு குற்றத்தினை, உடைத்து — பெற்றதாகும்.

அரசன் கடிய சொல்லினையுடையவனாகவும், கண்ணோட்டம் [இரக்கம்] இல்லாதவனாகவும் இருந்தால், அவனுடைய பெரிய செல்வம் நீடுதலில்லாமல் அப்பொழுதே கெடும்.

கடுஞ் சொல்லன் கண் இலன் ஆயின் நெடும் செல்வம் நீடு இன்றி ஆங்கே கெடும்.

6 கடுஞ்சொல்லன் கண்இலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடுஇன்றி ஆங்கே கெடும். 566

கடும் — கடுமையான, சொல்லன் — சொல்லினையுடையவனும், கண்ணிலன் — கண்ணோட்டம் [இரக்கம்] இல்லாதவனும், ஆயின் — ஆனால், நெடும் — பெரிய, செல்வம் — செல்வமானது, நீடு — நீடுதல், இன்றி — இல்லாமல், கெடும் — கெட்டுவிடும்.

கடுமையான சொல்லும் குற்றத்திற்கு மேம்பட்ட தண்டனையும் ஆன இரண்டும் அரசனது வெல்லுதற்கேற்ற மாறுபாடு என்னும் இரும்பினைத் தேய்க்கின்ற அரமாகும்.

கடு மொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன் அடு முரண் தேய்க்கும் அரம்.

**7 கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்**
**அடுமுரண் தேய்க்கும் அரம்.** 567

கடு — கடுமையான, மொழியும் — சொல்லும், கையிகந்த — குற்றத்தின் மிக்க, தண்டமும் — தண்டனையும், வேந்தன் — வேந்தனது, அடும் — பகையினை வெல்லுதற் கேற்ற, முரண் — மாறுபாடு என்னும் இரும்பினை, தேய்க்கும் அரம் — தேய்க்கின்ற அரமாகும்.

தன் அமைச்சர்களோடு தானும் சிந்தனை செய்து செயல்படாத வேந்தன் அக்குற்றத்தினால் தனது செயல் பழுதுபட்டபோது பிறர்மேல் கோபம் கொள்ளுவானாகில் அவனுடைய செல்வம் நாள்தோறும் சுருங்கும்.

இனத்து ஆற்றி எண்ணாத வேந்தன் சினத்து ஆற்றி சீறின் சிறுகும் திரு.

**8 இனத்துஆற்றி எண்ணாத வேந்தன் சினத்துஆற்றிச்**
**சீறின் சிறுகும் திரு.** 568

இனத்து — தனது இனமாகிய அமைச்சர்களுடன், ஆற்றி — பொருந்த அமைந்து, எண்ணாத — கலந்து எண்ணிச் செய்யாத, வேந்தன் — வேந்தன் [தனது செயல் பழுதுபட்ட போது] சினத்தாறறி — தன்னைச் சினமாகிய குற்றத்திலே செலுத்தி, சீறின் — அவர்களைச் சினந்து கொண்டால், திரு — அவனுடைய செல்வம், சிறுகும் — நாள்தோறும் சுருங்கும்.

பகைவர் வருவதற்கு முன்பாகவே தனக்குப் புகலிட மானதோர் அரண் செய்து கொள்ளாத அரசன் போர் வந்த காலத்தில், பாதுகாப்பு இல்லாததால் விரைவில் கெடுவான்.

செரு வந்த போழ்தின் சிறை செய்யா வேந்தன் வெருவந்து வெய்து கெடும்.

**9 செருவந்த போழ்தின் சிறைசெய்யா வேந்தன்**
**வெருவந்து வெய்து கெடும்.** 569

சிறை — முன்னரே அரண், செய்யா — செய்து கொள்ளாத, வேந்தன் — வேந்தனானவன், செருவந்த — பகை [போர்] வந்த, போழ்து — காலத்தில், வெருவந்து — பாதுகாப்பு இல்லாததால் பயந்து, வெய்து கெடும் — விரைவில் கெடுவான்.

கடுங்கோலனாகிய அரசன் நீதி நூல் முதலியனவற்றைக் கல்லாதாரைத் தனக்கு அங்கங்களாக வைத்துக் கொள்ளுவான். அக்கூட்டத்தினரைவிடப் பூமிக்கு அதிகமான பாரம் வேறு இல்லை.

கல்லார் பிணிக்கும் கடுங்கோல் அது அல்லது இல்லை நிலக்கு பொறை.

**10 கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுஅல்லது**
**இல்லை நிலக்குப் பொறை.** 570

கடுங்கோல் — கடுங்கோலனாகிய வேந்தன், கல்லார் — நீதி நூற்களைக் கல்லாதவர்களை, பிணிக்கும் — தனது ஆட்சிக்கு உறுப்புக்களாகக் கூட்டி வைத்துக் கொள்ளுவான், அது — அந்தக் கூட்டம், அல்லது — அல்லாமல், நிலக்கு — பூமிக்கு, பொறை இல்லை — மிகையான பாரம் வேறு எதுவும் இல்லை.

## 58. கண்ணோட்டம்

**[தன்னுடன் பழகியவரைக் கண்டால் அவர் கூறியதை மறுக்க முடியாமை]**

கண்ணோட்டம் [பழகியவர் மீது அன்புடைமை] என்னும் சிறப்புடைய அழகு இருந்து வருவதால்தான் இந்தவுலகம் இருந்து வருகின்றது.

கண்ணோட்டம் என்னும் கழி பெருங் காரிகை உண்மையான் உண்டு இவ்வுலகு.

**1 கண்ணோட்டம் என்னும் கழி பெருங் காரிகை**
**உண்மையான் உண்டுஇவ் வுலகு.** 571

கண்ணோட்டம் — கண்ணோட்டம் [அன்பால் இரக்கப்படுதல்] என்னும் — என்று சொல்லப் படுகின்ற, கழி — மிகவும், பெரும் — பெரிய, காரிகை — அழகானது, உண்மையால் — இருப்பதால்தான், இவ்வுலகு — இவ்வுலகமானது, உண்டு — உண்டாகி இருந்து வருகின்றது.

உலக நடைமுறை யென்பது கண்ணோட்டத்தினால் நிகழ்வதாகும். ஆதலால் கண்ணோட்டம் இல்லாதவர்கள் இருப்பது இந்நிலத்திற்குப் பாரமாகும்.

கண்ணோட்டத்து உள்ளது உலகியல் அஃது இலார் உண்மை நிலக்குப் பொறை.

**2 கண்ணோட்டத்து உள்ளது உலகியல் அஃதிலார்**
**உண்மை நிலக்குப் பொறை.** 572

உலகியல் — உலக நடைமுறையானது, கண்ணோட்டத்து — கண்ணோட்டம் இருப்பதால் தான், உள்ளது — அன்றாடம் நிகழ்ந்து வருவதாகும், அஃது — அக்கண்ணோட்டம், இலார் — இல்லாதவர்கள், உண்மை — இருப்பது, நிலக்குப் பொறை — பூமிக்குப் பாரமேயாகும்.

பாடுவதற்குப் பொருத்தமில்லாமற் போனால் பண் என்ன பயனையுடையதாகும். அது போலவே கண்ணோட்டமில்லாத கண் என்ன பயனையுடையதாகும்?

பண் என்னாம் பாடற்கு இயைபு இன்றேல் கண் என்னாம் கண்ணோட்டம் இல்லாத [கண்.

**3 பண்என்னாம் பாடற்கு இயைபுஇன்றேல் கண்என்னாம்**
**கண்ணோட்டம் இல்லாத கண். 573**

பண் — இசையானது, என்ஆம் — என்ன பயனைச் செய்வதாகும், [எப்போது] பாடற்கு — பாடல் தொழிலோடு, இயைபு — பொருத்தம், இன்றேல் — இல்லையானால், கண் — கண்ணானது, என்ஆம் — என்ன பயனைச் செய்வதாகும்? [அதுபோல] கண்ணோட்டம் — கண்ணோட்டம், இல்லாத கண் — இல்லாத கண்கள்.

அளவு மீறாத கண்ணோட்டம் [தாட்சண்யம்] இல்லாத கண்கள், பார்ப்பதற்கு — பார்ப்பவர்களுக்கு — இருப்பதுபோலத் தோன்றுமே யல்லாமல் என்ன பயனைச் செய்யும்?

உளபோல் முகத்து எவன் செய்யும் அளவினால் கண்ணோட்டம் இல்லாத கண்.

**4 உளபோல் முகத்துஎவன் செய்யும் அளவினால்**
**கண்ணோட்டம் இல்லாத கண். 574**

அளவினால் — தக்க அளவோடு, கண்ணோட்டம் — கண்ணோட்டம் என்பது, இல்லாத — இல்லாத, கண் — கண்கள், முகத்து — முகத்தினில், உளபோல் — இருப்பதுபோல் தோற்றம் தருவதன்றி, எவன் — வேறு என்ன பயனை, செய்யும் — செய்வன என்று கூறமுடியும்.

ஒருவனுடைய கண்ணிற்கு அணியும் ஆபரணம் கண்ணோட்டமே யாகும். அந்த ஆபரணம் இல்லையானால், அது அறிவுடையோரால் புண் என்று உணரப்படும்.

கண்ணிற்கு அணி கலம் கண்ணோட்டம் அஃது இன்றேல் புண் என்று உணரப்படும்.

**5 கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதுஇன்றேல்**
**புண்என்று உணரப் படும். 575**

கண்ணிற்கு — கண்களுக்கு, அணி — அணியப்படுகின்ற, கலம் — ஆபரணமானது, கண்ணோட்டம் — கண்ணோட்டமாகும், அஃது — அந்த அணிகலம், இன்றேல் — இல்லையானால், [கண்கள்] புண் — புண்கள், என்று — என்பதாக, உணரப்படும் — தெரிந்துணரப் படும்.

கண்ணோட்டம் இருக்க வேண்டிய கண்களோடு பொருந்தி, அதற்குரிய கண்ணோட்டம் இல்லாதவர்கள் மண்ணோடு பொருந்தி இருக்கின்ற மரத்தினை ஒப்பர்.

மண்ணொடு இயைந்த மரத்து அனையர் கண்ணோடு இயைந்து கண்ணோடாதவர்.

6 மண்ணொடு இயைந்த மரத்துஅனையர் கண்ணொடு
இயைந்துகண் ணோடா தவர். 576

கண்ணொடு — கண்ணோட்டத்திற்குரிய கண்களோடு, இயைந்து — பொருந்தி வைத்தும், கண்ணோடாதவர் — கண்ணோட்டமில்லாதவர்கள், மண்ணொடு — மண்ணோடு, இயைந்த — பொருந்தி நிற்கும், மரத்து — மரத்தினை, அனையர் — ஒப்பர்.

கண்ணோட்டம் இல்லாதவர்கள் கண்ணுடையவரும் அல்லர்; கண்ணுடையவர்கள் கண்ணோட்டம் இல்லாதிருப்பதும் இல்லை.

கண்ணோட்டம் இல்லவர் கண் இலர் கண் உடையார் கண்ணோட்டம் இன்மையும் [இல்.

7 கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல். 577

கண்ணோட்டம் — கண்ணோட்டம், இல்லவர் — இல்லாதவர்கள், கண் — கண் உடையவரும், இலர் — அல்லர், கண்ணுடையார் — கண்ணுள்ளவர்கள், கண்ணோட்டம் — கண்ணோட்டம், இன்மையும் — இல்லாதவராதலும், இல் — இல்லையாகும்.

முறை செய்தலாகிய தனது தொழில் கெடாமல் கண்ணோட்டம் செலுத்த வல்லவர்களுக்கு இவ்வுலகம் உரியதாகிய தன்மையுடையது.

கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு உரிமை உடைத்து இவ்வுலகு.

8 கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்துஇவ் வுலகு. 578

கருமம் — முறை செய்தலாகிய தன்னுடைய செயல், சிதையாமல் — கெடாமல், கண்ணோட — கண்ணோட்டம் செய்ய, வல்லார்க்கு — வல்லவர்களுக்கு, இவ்வுலகு — இந்த உலகம், உரிமை — உரியதாகின்ற தன்மையினை, உடைத்து — உடையது.

தமக்குத் துன்பம் கொடுக்கும் தன்மையுடையவரிடத்திலும், கண்ணோட்டம் உடையவராகிக் குற்றத்தினைப் பொறுத்துக் கொள்ளும் இயல்பு தலையான பண்பாகும்.

**ஒறுத்து ஆற்றும் பண்பினார்கண்ணும் கண்ணோடி பொறுத்து ஆற்றும் பண்பே தலை.**

**9 ஒறுத்துஆற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்**
**பொறுத்துஆற்றும் பண்பே தலை.** 579

ஒறுத்துஆற்றும் — தம்மைத் தண்டித்து வருத்துகின்ற, பண்பினார்கண்ணும் — குணமுடையவரிடத்தும், கண்ணோடி — கண்ணோட்டமுடையவராகி, பொறுத்தாற்றும் — குற்றத்தினைப் பொறுத்துக் கொள்ளும், பண்பே தலை — பண்புடைமையே தலையாய தன்மையாகும்.

பழகியவர்கள் தமக்கு நஞ்சிடுவதைக் கண்டும் மறுக்க முடியாமல் அதனையும் உண்டு பின்பு அவருடன் பொருந்தி இருப்பர்; யாரென்றால், யாவராலும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை விரும்புகிறவர்கள் என்பதாம்.

**பெய கண்டும் நஞ்சு உண்டு அமைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்.**

**10 பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்.** 580

நஞ்சு — நஞ்சினை, பெயக்கண்டும் — பழகியவர்கள் இடக் கண்டும், உண்டு — மறுக்க முடியாமல் அதனை உட்கொண்டு, அமைவர் — பின்னும் அவருடன் பழகிச் சேர்ந்து இருப்பர், [யாரெனில்] நயத்தக்க — யாவராலும் விரும்பப்படுகின்ற, நாகரிகம் வேண்டுபவர் — கண்ணோட்டத்தினை விரும்பி வேண்டுப்வர்கள்.

## 59. ஒற்றாடல்

**[ஒற்றர்களின் ஆற்றல். கடமை முதலியன]**

ஒற்றர்கள் புகழ் வாய்ந்த நீதி நூல்கள் ஆகிய இரண்டினையும் மன்னன் தனது இரண்டு கண்களாகக் கொள்ளுதல் வேண்டும்.

**ஒற்றும் உரை சான்ற நூலும் இவை இரண்டும் தெற்றென்க மன்னவன் கண்.**

**1 ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்**
**தெற்றென்க மன்னவன் கண்.** 581

ஒற்றும் — ஒற்றனும், உரைசான்ற — புகழ் நிறைந்த, நூலும் — நீதிநூலும்ஆகிய, இவை — இவை, இரண்டு — இரண்டினையும், மன்னவன் — மன்னன், கண் — [இரண்டு] கண்களாக, தெற்றென்க — தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

எல்லாரிடத்திலும் நிகழ்கின்ற எல்லாவற்றையும் நாள்தோறும் ஒற்றனால் விரைவில் அறிந்து கொள்ளுதல் வேந்தனுக்கு உரிய தொழிலாகும்.

**எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும் வல் அறிதல் வேந்தன் தொழில்.**

**2 எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்**
**வல்அறிதல் வேந்தன் தொழில். 582**

எல்லார்க்கும் — எல்லாரிடத்திலும், நிகழ்பவை — நடப்பவை, எல்லாம் — எல்லாவற்றையும், எஞ்ஞான்றும் —எப்போதும், வல்லறிதல் — ஒற்றர்களால் விரைவில் அறிதல், வேந்தன் — வேந்தனுக்கு, தொழில் — உரிய தொழிலாகும்.

ஒற்றராலே எல்லாரிடத்திலும் நிகழ்ந்தவற்றை அறிந்து வருமாறு செய்து அதனால் அடையும் பயனை ஆராயாத மன்னவன், வெற்றியடைவதற்குரிய வழி இல்லை.

**ஒற்றினான் ஒற்றி பொருள் தெரியா மன்னவன் கொற்றம் கொள கிடந்தது இல்.**

**3 ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்**
**கொற்றம் கொளக்கிடந்தது இல். 583**

ஒற்றினான் — ஒற்றர்களாலே, ஒற்றி — எல்லாரிடத்தும் நிகழ்வதை அறிந்து கொண்டு, பொருள் — அதனால் அடையும் பயனை, தெரியா மன்னன் — ஆராய்ந்தறியாத மன்னன், கொற்றம் — வெற்றி, கொளக்கிடந்தது — அடையக் கிடந்தது, இல் — பிறிது ஒரு நெறி இல்லையாகும்.

தம்முடைய தொழில் செய்பவர்கள், சுற்றத்தார், பகைவர் என்று சொல்லப்பட்ட அனைவரையும் சொல் செயல்களால் ஆராய்பவனே ஒற்றனாவான்.

**வினை செய்வார் தம் சுற்றம் வேண்டாதார் என்றாங்கு அனைவரையும் ஆராய்வது ஒற்று.**

**4 வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு**
**அனைவரையும் ஆராய்வது ஒற்று. 584**

தம் — தம்முடைய, வினை — தொழிலினை, செய்வார் — செய்பவர்கள், சுற்றம் — சுற்றத்தார், வேண்டாதார் — பகைவர், என்றாங்கு — என்று சொல்லப்பட்ட, அனைவரையும் — எல்லோரையும், ஆராய்வது ஒற்று — ஆராய்பவனே ஒற்றனாவான்.

அறிதற்குச் செல்லும் ஒற்றன் மற்றவர்களால் சந்தேகிக்கப்படாத உருவத்தோடு பொருந்தி, அவர்கள் சந்தேகித்து அறியத் தொடங்கினால் அஞ்சாமல் நின்று, பகைவர் என்ன செய்தாலும் மனத்தில் இருப்பதைச் சொல்லாதவனே ஒற்றனாவான்.

கடா உருவொடு கண் அஞ்சாது யாண்டும் உகாமை வல்லதே ஒற்று.

5 கடாஅ உருவொடு கண்அஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று. 585

கடாஅ — பிறரால் சந்தேகிக்க முடியாத, உருவொடு — வடிவத்தோடு அமைந்து, கண்ணஞ்சாது — பிறர் தெரிந்து கொண்டு எதிர்த்து நோக்கினால் அஞ்சாமல், யாண்டும் — எவ்வித முறைகளை அவர்கள் செய்தாலும், உகாமை — மனத்தில் உள்ளதை வெளிப்படுத்தாதிருக்க, வல்லதே ஒற்று — வல்லவனே ஒற்றனாவான்.

முற்றும் துறந்தவராயும், விரத ஒழுக்கினராயும் தோற்றமளித்து அரிய இடங்களில் எல்லாம் புகுந்து ஆய்ந்து, சந்தேகப்பட்டுப் பிடித்து எத்துன்பம் செய்தாலும் தன்னை வெளிப் படுத்தாதவனே ஒற்றனாவான்.

துறந்தார் படிவத்தர் ஆகி இறந்து ஆராய்ந்து என் செயினும் சோர்வு இலது ஒற்று.

6 துறந்தார் படிவத்தர் ஆகி இறந்துஆராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று. 586

துறந்தார் — முற்றுந்துறந்த துறவியும், படிவத்தர் — விரதவொழுக்கினரும், ஆகி — ஆகிய தோற்றத்தினராகி, இறந்து — போவதற்கரிய இடங்களுக்கெல்லாம் சென்று, ஆராய்ந்து — அனைத்தையும் ஆராய்ந்து, என் — [ஐயுற்றுப் பிடித்து] எத்துன்பத்தினை, செயினும் — செய்தாலும், சோர்விலது — தன்னை வெளிப்படுத்தாதவனே, ஒற்று — ஒற்றன் என்பவனாவான்.

அறியப்பட வேண்டியவர்கள், மறைவாகச் செய்த செயல்களை அவர்க்கு உள்ளாயினரால் கேட்கவல்லவனாகி, கேட்டறிந்த செயல்களிலே பிறகு சந்தேகம் இல்லாதபடி துணிய வல்லவனே ஒற்றனாவான்.

மறைந்தவை கேட்க வற்று ஆகி அறிந்தவை ஐயப்பாடு இல்லதே ஒற்று.

7 மறைந்தவை கேட்கவற்று ஆகி அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே ஒற்று 587

மறைந்தவை — மறைவாகச் செய்த செயல்களை, கேட்க — கேட்டறிவதில், வற்று — வல்லது, ஆகி — ஆகி, அறிந்தவை — அவ்வாறு உள்ளவரால் கேட்டறிந்தவைகளிலே, ஐயப்பாடு — சந்தேகம், இல்லதே — இல்லாமல் துணிபவனே, ஒற்று — ஒற்றனாவான்.

ஓர் ஒற்றன் தெரிந்து வந்து அறிவித்த காரியத்தையும் மற்றொரு ஒற்றன் கொண்டு வந்த செய்தியுடன் ஒப்புமை கண்டு எடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

ஒற்று ஒற்றித் தந்த பொருளையும் மற்றும் ஓர் ஒற்றினால் ஒற்றிக் கொளல்.

8 ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் மற்றும்ஓர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல். 588

ஒற்று — ஓர் ஒற்றனாலே, ஒற்றி — மறைவாக அறிந்து வந்து, தந்த பொருளினையும் — அறிவித்த செய்தியினையும், மற்றுமோர் — பின்னும் வேறொரு, ஒற்றினால் — ஒற்றனால், ஒற்றி — அறிந்து கொண்டு, கொளல் — ஒத்திருப்பதை உணர்ந்து அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

ஒற்றர்களை ஆளும் பொழுது ஒருவரை ஒருவர் அறியாதபடி ஆளுதல் வேண்டும். அவ்வாறுள்ள ஒற்றர்கள், மூவரை வேறு வேறாக ஒரு பொருளினை அறியச் செலுத்தி அம்மூவர் தருவதும் ஒத்திருந்தால் அது மெய் என்று தெரியப்படும்.

ஒற்று ஒற்று உணராமை ஆள்க உடன் மூவர் சொல்தொக்க தேறப்படும்.

9 ஒற்றுஒற்று உணராமை ஆள்க உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும். 589

ஒற்று — ஓர் ஒற்றன், ஒற்று — மற்றொரு ஒற்றனை [ஒருவனையொருவன்] உணராமை ஆள்க — அறியாதிருக்குமாறு நடத்துதல் வேண்டும், உடன்மூவர் — ஒரு பொருள் பற்றி வெவ்வேறாக அனுப்பப்பட்ட மூவர், சொல் — சொற்களும், தொக்க — ஒத்திருக்குமானால், தேறப்படும் — அது உண்மையென்று அறியப்படுவதாகும்.

மறைவாகச் செய்தவைகளை அறிந்து கூறிய ஒற்றனுக்குச் செய்யும் சிறப்பினைப் பிறர் அறியுமாறு செய்யாதிருக்க வேண்டும். அப்படிச் செய்வானானால் மறைத்து வைக்கப்பட வேண்டியதைத் தானே வெளிப்படுத்திவிட்டான் என்பதாகும்.

சிறப்பு அறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின் புறப்படுத்தான் ஆகும் மறை.

10 சிறப்புஅறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
புறப்படுத்தான் ஆகும் மறை. 590

ஒற்றின் கண் — ஒற்றனிடத்துச் செய்யும், சிறப்பு அறிய — சிறப்பினைப் பிறர் அறிந்து கொள்ளுமாறு, செய்யற்க — செய்யாதிருத்தல் வேண்டும், செய்யின் — பிறர் அறியச் செய்தால், மறை — மறைவாக அடக்கி வைக்கப்பட வேண்டியதை, புறப்படுத்தான் — தானே வெளிப்படுத்தினவன், ஆகும் — ஆகிவிடும்,

## 60. ஊக்கம் உடைமை

[மனம் தளர்ச்சியின்றி எழுச்சியுடன் செயல் புரிதல்]

ஒருவரை 'உடையவர்' என்று சொல்லச் சிறந்தது ஊக்கமேயாகும். அந்த ஊக்கம் இல்லாதார் வேறு யாது உடையவராயினும் உடையவர் ஆவரோ? ஆகார் என்பதாம்.

உடையர் எனப்படுவது ஊக்கம் அஃது இல்லார் உடையது உடையரோ மற்று.

1 உடையர் எனப்படுவது ஊக்கம் அஃதுஇல்லார்
உடையது உடையரோ மற்று. 591

உடையர் — ஒருவரை உடையவர், எனப்படுவது — என்று சொல்லச் சிறந்தது, ஊக்கம் — ஊக்கம் என்னும் மன உணர்ச்சியேயாகும், அஃது — அத்தகைய ஊக்கம், இல்லார் — இல்லாதவர்கள், மற்று — வேறு, உடையது — உடையரேயாயினும், உடையரோ — உடையவர்கள் ஆவார்களோ? [ஆக மாட்டார் என்பதாம்.]

ஊக்கம் உடையவராக இருப்பதே ஒருவர்க்கு நிலையான உடைமையாகும். மற்றபடி பொருள் உடைமை யென்பது நிலையாக நில்லாமல் நீங்கிவிடும்.

உள்ளம் உடைமை உடைமை பொருள் உடைமை நில்லாது நீங்கிவிடும்.

2 உள்ளம் உடைமை உடைமை பொருள்உடைமை
நில்லாது நீங்கி விடும். 592

உள்ளம் — ஊக்கம், உடைமை — உடைமையே, உடைமை — நிலை பெற்ற உடைமையாகும், பொருள் — செல்வம், உடைமை — பெற்றிருப்பதானது, நில்லாது — நிலைத்திருக்காமல், நீங்கிவிடும் — அகன்று போய்விடும்.

நிலைபெற்ற ஊக்கத்தினைக் கைப்பொருளாகக் கொண்டவர்கள் இழந்தாராயினும், கைப் பொருளை இழந்தோம் என்று மனம் வருந்த மாட்டார்கள்.

ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் ஊக்கம் ஒருவந்தம் கைத்து உடையார்.

3 ஆக்கம் இழந்தேம்என்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார். 593

ஒருவந்தம் — நிலைத்திருப்பதாகிய, ஊக்கம் — ஊக்கத்தினை, கைத்து உடையார் — தமது கைப்பொருளாக உடையவர்கள், ஆக்கம் — கைப்பொருளை [செல்வம்], இழந்தேம் — இழந்து விட்டோம், என்று — என்று நினைத்து, அல்லாவார் — மனம் துன்புற மாட்டார்கள்,

அசைவில்லாத ஊக்கத்தினை உடையவன் இருக்கும் இடத்திற்குப் பொருள் தானே வழி தேடிக் கொண்டு போகும்.

**ஆக்கம் அதர்வினாய் செல்லும் அசைவு இலா ஊக்கம் உடையான் உழை.**

**4 ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவுஇலா
ஊக்கம் உடையான் உழை.** 594

அசைவு — தளர்ச்சி என்பது, இலா — இல்லாமல், ஊக்கம் — ஊக்கத்தினை, உடையான் — உடைய ஒருவன், உழை — இருக்கும் இடத்திற்கு, ஆக்கம் — செல்வமானது, அதர்வினாய் — தானே வழி கேட்டுக்கொண்டு, செல்லும் — போய்ச் சேரும்.

நீர்ப் பூக்களின் தாளினது நீளமானது நின்ற நீரினது அளவினதாக இருக்கும். அதுபோல மக்களுடைய ஊக்கத்தின் அளவினதேயாகும். அவர்களுடைய உயர்ச்சி.

**வெள்ளத்து அனைய மலர் நீட்டம் மாந்தர்தம் உள்ளத்து அனையது உயர்வு.**

**5 வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு.** 595

மலர்நீட்டம் — நீர்ப்பூக்களுடைய தண்டுகளின் நீளம், வெள்ளத்தனைய — இருக்கின்ற நீரினது அளவேயாகும், [அதுபோல] மாந்தர் — மக்களுடைய, உள்ளத்தனையது — அவர்கள் கொண்டுள்ள ஊக்கத்தின் அளவினதேயாகும், [எதுவென்றால்] உயர்வு — அவர்களுடைய உயர்ச்சியான சிறப்பு.

தாங்கள் கருதுவதெல்லாம் தங்களின் உயர்ச்சியினையே கருதுதல் வேண்டும். அவ்வுயர்ச்சி கூடி வரவில்லையென்றாலும், அக்கருத்துத் தள்ளாத தன்மையினை உடையதாகும்.

**உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல் மற்று அது தள்ளினும் தள்ளாமை நீர்த்து.**

**6 உள்ளுவது எல்லாம் உயர்வுஉள்ளல் மற்றுஅது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.** 596

உள்ளுவது — நினைப்பது, எல்லாம் — எல்லாம், உயர்வு — உயர்ச்சியினையே, உள்ளல் — நினைத்தல் வேண்டும், அது — அவ்வாறு நினைத்த உயர்ச்சியானது, தள்ளினும் — கைகூடாமல் போனாலும், தள்ளாமை — தள்ளாமையான, நீர்த்து — தன்மையினை உடையதாகும்.

யானையானது புதையாகிய அம்பினால் புண்பட்ட போதும், தளராமல் நின்று தனது பெருமையினை நிலை நிறுத்தும். அதுபோல ஊக்கம் உடையவர்கள், தாம் கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்தபோதும் மனம் தளர மாட்டார்கள். தமது பெருமையினை நிலை நிறுத்துவார்கள்.

சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதை அம்பின் பட்டுப் பாடு ஊன்றும் களிறு.

**7 சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதைஅம்பின்**
**பட்டுப்பாடு ஊன்றும் களிறு.** 597

களிறு — யானையானது, புதை — கட்டாக இருக்கும், அம்பின் — அம்புகளினாலே, பட்டு — புண்பட்ட போதும், பாடு — தளராமல் தனது பெருமையினை, ஊன்றும் — நிலைநிறுத்தும், [அதுவே போல] உரவோர் — ஊக்கம் உடையவர்கள், சிதைவிடத்து — தாம் கருதிய உயர்ச்சிக்கு சிதைவு வந்தபோதும், ஒல்கார் — தளராது தமது பெருமையினை நிலைநிறுத்துபவர் ஆவார்கள்.

ஊக்கம் இல்லாதவர்கள் இவ்வுலகத்தாருள் 'யாம் வண்மையுடையேம்' என்று தம்மைத் தாமே மதிக்கும் பெருமையினைப் பெறமாட்டார்கள்.

உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து வள்ளியம் என்னும் செருக்கு.

**8 உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து**
**வள்ளியம் என்னும் செருக்கு** 598

உள்ளம் — ஊக்கம், இலாதவர் — இல்லாதவர்கள், உலகத்து — உலகத்தாருள், வள்ளியம் — வண்மையுடையேம் [ஈகைக்குணம் உடையேம்] என்னும் — என்கின்ற, செருக்கு — தன்மைத் தாமே மதித்தலை, எய்தார் — அடையப்பெற மாட்டார்கள்.

எல்லா விலங்கினங்களிலும் தானே பெரிய உடம்பினையுடையது. அதுவேயன்றி கூரிய கொம்புகளையும் [தந்தங்களையும்] உடையது. என்றாலும், அப்படிப்பட்ட யானை யானது, ஊக்கம் நிறைந்த சிறிய உருவங்கொண்ட புலி தனக்கு எதிர்ப்பட்டால் அதற்கு அஞ்சும்.

பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை வெரூம் புலி தாக்குறின்.

**9 பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை**
**வெரூஉம் புலிதாக் குறின்.** 599

பரியது — மற்ற மிருகங்களைவிட பெரிய உடம்பினை உடையது, கூர் — கூர்மையான, கோட்டது — கொம்புக்களையும் உடையது, ஆயினும் — என்றாலும், யானை — அந்த யானை, புலி — புலியானது, தாக்குறின் — தன்னை எதிர்த்து வந்தால், வெரூஉம் — பயப்படும்.

ஒருவர்க்குத் திண்ணிய அறிவாவது ஊக்கம் மிகுந்திருப்பதேயாகும். அந்த ஊக்கம் இல்லாதவர்கள் மக்களாக மாட்டார்கள்; மரங்களாவார். இயற்கையாக உள்ள மரங்களுக்கும் இவர்களுக்கும் உள்ள வேறுபாடு என்னவென்றால், மக்கள் தோற்றமே யாகும்.

உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை அஃது இல்லார் மரம் மக்களாதலே வேறு.

10 உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கைஅஃது இல்லார்
மரமக்கள் ஆதலே வேறு. 600

ஒருவற்கு — ஒருவருக்கு, உரம் — திண்மையான அறிவென்பது, உள்ள — ஊக்கம், வெறுக்கை — நிறைந்திருப்பதேயாகும், அஃது — அந்த ஊக்கம், இல்லார் — இல்லாதவர்கள், மரம் — மரங்களாவர் [மக்களாகார்] வேறு — [இயற்கை மரங்களுக்கும் இந்த மரங்களுக்கும்] வேறுபாடு என்னவென்றால், மக்களாதலே — மக்களுக்குள்ள வடிவத்தில் இவர்களும் இருப்பதேயாகும்.

## 61. மடியின்மை

[சோம்பல் இல்லாத தன்மை]

தான் பிறந்த குடியென்னும் அணையா விளக்கு ஒருவனுடைய சோம்பல் என்னும் மடியாகிய இருள் அடர மழுங்கிக் கெடுவதாகும்.

குடி என்னும் குன்றா விளக்கம் மடி என்னும் மாசு ஊர மாய்ந்து கெடும்.

1 குடிஎன்னும் குன்றா விளக்கம் மடிஎன்னும்
மாசுஊர மாய்ந்து கெடும். 601

குடி — தான் பிறந்தகுடி, என்னும் — எனப்படுகின்ற, குன்றா — அணையாத, விளக்கம் — விளக்கானது, மடி — சோம்பல், என்னும் — என்கின்ற, மாசு — இருளானது, ஊர — அடர்ந்து நெருங்க, மாய்ந்து — மழுங்கி, கெடும் — கெட்டுப் போகும்.

தாம் பிறந்த குடியை மேன்மேலும் உயர்ந்த குடியாகச் செய்ய வேண்டுவோர் சோம்பலினைச் சோம்பலாகவே நினைத்து முயற்சியுடன் ஒழுகுதல் வேண்டும்.

மடியை மடியா ஒழுகல் குடியை குடியாக வேண்டுபவர்.

2 மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். 602

குடியை — தனது குடியினை, குடியா வேண்டுபவர் — உயர்ந்த நற்குடியாக இருக்க விரும்புகிறவர்கள், மடியை — சோம்பல் தன்மையினை, மடியா — சோம்பலாகவே கருதி, ஒழுகல் — முயற்சியுடன் ஒழுகுவார்களாக.

விடவேண்டிய சோம்பலினைத் தன்னுள்ளே வைத்து நடக்கின்ற அறிவில்லாதவன் பிறந்துள்ள குடியானது அவனுடைய காலம் முடிவதற்குள் அழிந்துவிடும்.

மடி மடிக்கொண்டு ஒழுகும் பேதை பிறந்த குடி மடியும் தன்னினும் முந்து.

**3 மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த**
**குடிமடியும் தன்னினும் முந்து.** 603

மடி — விட்டுவிட வேண்டிய, மடிகொண்டு — சோம்பலினைத் தன்னுள்ளே இருக்க வைத்து, ஒழுகும் பேதை — நடந்து கொள்ளும் அறிவற்றவன், பிறந்தகுடி — பிறந்துள்ள குடியானது, தன்னினும் — அவன் காலம் முடிவதற்குள், முந்து — முன்னமேயே, மடியும் — கெட்டுப் போகும்.

சோம்பலிலேயே வீழ்ந்தமிழ்ந்து சிறந்த முயற்சி இல்லாதவர்களுக்குத் தனது குடியும் அழிந்து குற்றமும் பெருகிவிடும்.

குடி மடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து மாண்ட உஞற்று இலவர்க்கு.

**4 குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து**
**மாண்ட உஞற்றுஇ லவர்க்கு.** 604

மடி — சோம்பலிலேயே, மடிந்து — வீழ்ந்தமிழ்ந்து, மாண்ட — சிறந்த, உஞற்றிலவர்க்கு — முயற்சி இல்லாதவர்களுக்கு, குடிமடிந்து — தனது குடியும் அழிந்து, குற்றம் பெருகும் — குற்றமும் பெருகிவிடும்.

சோம்பலும், விரைந்து செய்ய வேண்டியதை நீட்டித்துச் செய்யும் இயல்பும், மறதியும், தூக்கமும் ஆகிய இந்நான்கும் கெட்டுப் போகும் தன்மையுடையவர்கள் விரும்பி ஏறும் மரக் கலங்களாகும்.

நெடுநீர் மறவி மடி துயில் நான்கும் கெடும் நீரார் காம கலன்.

**5 நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்**
**கெடுநீரார் காமக் கலன்.** 605

மடி — மடிமைத் தன்மையும், நெடுநீர் — விரைவில் செய்ய வேண்டியதைத் தாமதமாகச் செய்யும் குணமும், மறவி — மறதியும், துயில் — தூக்கமும், நான்கும் — இந்த நான்கும், கெடு — கெட்டழியும், நீரார் — தன்மையினர், காமக் கலன் — விரும்பி ஏறிச் செல்லும் மரக் கலங்களாகும்.

நிலம் முழுவதனையும் ஆண்டவரது செல்வம் தானே வந்து சேர்ந்த போதும், சோம்பல் கொண்டவர்கள் அதனால் சிறந்த பயனை அடைவதில்லையாகும்.

படி உடையார் பற்று அமைந்த கண்ணும் மடி உடையார் மாண் பயன் எய்தல் அரிது.

**6 படிஉடையார் பற்றுஅமைந்தக் கண்ணும் மடியுடையார்**
**மாண்பயன் எய்தல் அரிது.** 606

படிஉடையார் — நிலம் முழுதும் ஆண்டவரது, பற்று — செல்வம், அமைந்தக் கண்ணும் — தானாகவே வந்து அடைந்த போதும், மடி — மடிமைத்தனம், உடையார் — உள்ளவர்கள், மாண் — சிறப்பான, பயன் — பயனை, எய்தல் — அடைதல், அரிது — முடியாததாகும்.

சோம்பலினை விரும்பி சிறந்த முயற்சியினை மேற்கொள்ளாதவர்கள், நண்பர்களும் பிறரும் கண்டித்துப் பேசி இகழும் சொல்லினைக் கேட்பவராவர்.

இடி புரிந்து எள்ளும் சொல் கேட்பர் மடி புரிந்து மாண்ட உஞற்று இலவர்.

**7 இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து**
**மாண்ட உஞற்றுஇ லவர்.** 607

மடி — சோம்பலினை, புரிந்து — விரும்பி மேற்கொண்டு, மாண்ட — சிறப்பு மிக்க, உஞற்றிலவர் — முயற்சியினைக் கொள்ளாதவர்கள், இடிபுரிந்து — பிறர் கண்டித்துப் பேசி, எள்ளும் — இழிவாகப் பேசும், சொல் — சொற்களை, கேட்பார் — கேட்பவர்கள் ஆவார்கள்.

மடியானது நற்குடியில் பிறந்தவனிடத்தில் இருந்து விடுமானால், அது அவனைத் தன்னுடைய பகைவர்களுக்கு அடிமையாகும் தன்மையினை உண்டாக்கிவிடும்.

மடிமை குடிமைக்கண் தங்கின் தன் ஒன்னார்க்கு அடிமை புகுத்திவிடும்.

**8 மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு**
**அடிமை புகுத்தி விடும்.** 608

மடிமை — மடிமைக் குணம், குடிமைக்கண் — நற்குடியாளனிடம், தங்கின் — இருந்து விடுமேயானால், [அவனை] தன் — தன்னுடைய, ஒன்னார்க்கு — பகைவர்களுக்கு, அடிமை — அடிமையாக்கும் நிலைமையினை, புகுத்திவிடும் — உண்டாக்கிவிடும்,

ஒருவன் தன்னிடமிருந்து மடியென்னும் சோம்பலினை ஒழித்துவிட்டால் அவனுடைய குடியுள்ளும் ஆண்மையுள்ளும் வந்த குற்றங்கள் நீங்கிவிடும்.

குடி ஆண்மையுள் வந்த குற்றம் ஒருவன் மடி ஆண்மை மாற்ற கெடும்.

9 குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடியாண்மை மாற்றக் கெடும். 609

ஒருவன் — ஒருவன், மடி — மடியினை, ஆண்மை — ஆளும் தன்மையினை, மாற்ற — நீக்கி விட்டால், குடி — அவனுடைய குடிக்குள்ளும், ஆண்மையுள் — ஆண்மையினுள்ளும், வந்த — வந்த, குற்றம் கெடும் — குற்றங்கள் கெட்டோடும்.

தன் அடியளவினாலே எல்லா உலகையும் அளந்தவனுடைய பரப்பு முழுவதையும் மடியில்லாத [சோம்பலில்லாத] மன்னன் ஒரே காலத்தில் ஒருங்கே அடைவான்.

மடிஇலா மன்னவன் எய்தும் அடி அளந்தான் தாயது எல்லாம் ஒருங்கு.

10 மடிஇலா மன்னவன் எய்தும் அடிஅளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு. 610

அடி — தனது அடி அளவினாலே, அளந்தான் — எல்லா உலகத்தினையும் அளந்தவன் த்தாயது — கடந்த பரப்பு, எல்லாம் — முழுவதையும், மடி — சோம்பல்தன்மை, இலா — இல்லாத, மன்னவன் — மன்னன், ஒருங்கு — ஒரே காலத்தில் ஒன்று சேர, எய்தும் — அடைந்து விடுவான்.

## 62. ஆள்வினை உடைமை

[இடைவிடாத மெய்ம்முயற்சி உடையவனாதல்]

'இத்தொழில் செய்து முடிக்க அருமையானது' என்று எண்ணி மனம் தளராதிருத்தல் வேண்டும்; அதனை முடித்தற்கேற்ற பெருமையினைத் தனக்கு முயற்சி உண்டாக்குவதாகும்.

அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும் பெருமை முயற்சி தரும்.

1 அருமை யுடைத்துஎன்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். 611

அருமை — இச்செயல் முடிப்பதற்கு அருமைத் தன்மையினை, உடைத்து — உடையதாக இருக்கின்றது, என்று — என்று கருதி, அசாவாமை — மனம் தளராமை, வேண்டும் — வேண்டியதாகும், பெருமை — அத்தொழிலினைச் செய்து முடிக்கும் பெருமையினை, முயற்சி — முயற்சியானது, தரும் — உண்டாக்கித் தருவதாகும்.

தொழில் செய்தல் என்னும் குறைபாட்டினைச் செய்யாது விட்டவரை உலகம் விட்டு விட்டது. ஆதலால் செய்யப்படும் தொழிலில் செயலற்று இருப்பதை நீக்குதல் வேண்டும்.

வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.

**2 வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை**
**தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.** 612

வினை — தொழிலாகிய, குறை — குறைபாட்டினை, தீர்ந்தாரின் — செய்யாது விட்டவரை, உலகு — உலகம், தீர்ந்தன்று — விட்டுவிட்டது, [ஆகையால்] வினைக்கண் — செய்யத்தகும் தொழிலினிடம், வினைகெடல் — செய்யாமல் செயலற்று இருப்பதை, ஓம்பல் — நீக்குதல் வேண்டும்.

எல்லோருக்கும் உபகாரம் செய்தல் என்னும் மேம்பாடு, முயற்சி என்று சொல்லப்பட்ட உயர்ந்த குணத்தினிடத்தில் நிலை பெற்றிருப்பதாகும்.

தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே வேளாண்மை என்னும் செருக்கு.

**3 தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே**
**வேளாண்மை என்னும் செருக்கு.** 613

வேளாண்மை — எல்லோருக்கும் உபகாரம் செய்தல், என்னும் — எனப்படுகின்ற, செருக்கு — மேம்பாடு, தாளாண்மை — முயற்சி, என்னும் — என்று கூறப்படும், தகைமைக்கண் — உயர்ந்த குணத்தினிடம், தங்கிற்றே — நிலைபெற்றிருப்பதேயாகும்.

முயற்சி இல்லாதவன் உபகாரியாக இருக்கும் தன்மையென்பது, படையினைக் கண்டால் அஞ்சுகின்ற பேடி தனது கையில் வாளினை வைத்திருக்கும் தன்மை போல இல்லையாக முடியும்.

தாளாண்மை இல்லாதவன் வேளாண்மை பேடி கை வாள் ஆண்மை போல கெடும்.

**4 தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை**
**வாளாண்மை போலக் கெடும்.** 614

தாளாண்மை — முயற்சியுடைமை, இல்லாதான் — இல்லாதவன், வேளாண்மை — உபகாரியாக இருக்கும் தன்மையானது, பேடி — படையினைக் கண்டால் அஞ்சுகின்ற பேடியானவன், கை — தனது கையில், வாளாண்மை போல — வாளினை ஆளும் தன்மைபோல, கெடும் — இல்லையாக முடியும்.

தனக்கு இன்பத்தினை விரும்பாதவனாகி தொழில் முடிப்பதையே விரும்புகிறவன் தனது சுற்றத்தாரின் துன்பத்தினை நீக்கிச் சுற்றத்தாராகிய பாரத்தினைத் தாங்கும் தூணாகவும் ஆவான்.

இன்பம் விழையான் வினை விழைவான் தன் கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண்.

5 இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்துஊன்றும் தூண். 615

இன்பம் — தனக்கு இன்பத்தினை, விழையான் — விரும்பாதவனாகி, வினை — தொழில் முடிப்பதையே, விழைவான் — விரும்புவான், தன் — தன்னுடைய, கேளிர் — சுற்றத்தார், நண்பர்களுடைய, துன்பம் — துன்பத்தினை, துடைத்து — நீக்கி, ஊன்றும்தூண் — அதனைத் தாங்கும் தூணாகும்.

முயற்சியானது செல்வத்தினை வளர்க்கும். அம்முயற்சி இல்லாதிருப்பதானது வறுமையில் கொண்டுபோய் விட்டுவிடும்.

முயற்சி திருவினை ஆக்கும் முயற்று இன்மை இன்மை புகுத்திவிடும்.

6 முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 616

முயற்சி — முயற்சியானது, திருவினை — செல்வத்தினை, ஆக்கும் — வளர்க்கும், முயற்று — அம்முயற்சி, இன்மை — இல்லாமையானது, இன்மை — வறுமையினை, புகுத்திவிடும் — சேர்த்துவிடும்.

கரிய சேட்டையானது ஒருவனுடைய சோம்பலினிடத்திலே வாசம் செய்யும். திருமகள் மடியில்லாதவனுடைய முயற்சியினிடத்தே தங்கி இருப்பாள் என்று அறிந்தோர் சொல்லுவர்.

மடி உளாள் மா முகடி என்ப மடி இலான் தாள் உளாள் தாமரையினாள்.

7 மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள். 617

மாமுகடி — கரியசேட்டையானவள், மடிஉளாள் — ஒருவனுடைய சோம்பலின் கண்ணே இருப்பவளாவாள், தாமரையினாள் — தாமரையினாள் என்னும் திருமகள், மடி — சோம்பல், இலான் — இல்லாதவனுடைய, தாள் — முயற்சியினிடத்தில், உளாள் என்ப — இருப்பாள் என்று அறிந்தோர் சொல்லுவர்.

பயனைத் தருவதாகிய விதி இல்லாமை ஒருவற்குப் பழி ஆகாது. அறிய வேண்டியவற்றை அறிந்து முயன்று தொழில் செய்யாமையே பழியாகும்.

பொறி இன்மை யார்க்கும் பழியன்று அறிவு அறிந்து ஆள்வினை இன்மை பழி.

8 பொறிஇன்மை யார்க்கும் பழிஅன்று அறிவுஅறிந்து
ஆள்வினை இன்மை பழி. 618

பொறி — பயனைத்தரும் விதி, இன்மை — இல்லாமையானது, யார்க்கும் — எவர்க்கும் பழி — பழி, அன்று — அல்ல, அறிவு — அறிய வேண்டுவனவற்றை, அறிந்து — அறிந்து தெரிந்து, ஆள்வினை — முயன்று தொழில் செய்தல், இன்மை — இல்லாதிருப்பதே, பழி — ஒருவருக்குப் பழியாகும்.

முயன்ற தொழில் ஊழ்வினையால் கருதிய பயனைத் தராமல் போனாலும், வருந்திய வருத்தத்தின் கூலி அளவு பயனைத் தரும்; வீண் போகாது.

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சி தன் மெய் வருத்த கூலி தரும்.

9 தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 619

தெய்வத்தான் — ஊழ்வகையான், ஆகாது — கருதிய பயனைத் தாராதாயினும், முயற்சி — முயற்சியானது, தன் — தனக்கு இடமாகிய, மெய் — உடம்பு, வருத்த — வருந்திய வருத்தத்தின், கூலி — கூலி அளவு, தரும் — பயனைத் தருவதாகும் [வீண் போகாது].

ஊழ்வினைச் செயலுக்கு இளைக்காமல் தொழிலில் தாழ்வில்லாமல் முயற்சி செய்பவர்கள், பயனை விலக்குவதாகிய ஊழினையும் புறங் காண்பர்.

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவு இன்றி தாழாது உஞற்றுபவர்.

10 ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்
தாழாது உஞற்று பவர். 620

உலைவு — தளர்ச்சி, இன்றி — இல்லாமல், தாழாது — தாழ்வு இல்லாமல், உஞற்றுபவர் — தொழிலில் முயற்சி செய்வோர், ஊழையும் — பயனை விலக்குகின்ற ஊழையும், உப்பக்கம் — புறமாகிய பின்பக்கம், காண்பர் — காண்பார்கள்.

## 63. இடுக்கண் அழியாமை

**[தனக்குத் துன்பம் வந்தபோது கலங்காமை]**

ஒருவன் தனக்கு இடுக்கண் [துன்பம்] வந்தபோது அதற்கு அழியாமல் உள்மகிழ்தல் வேண்டும். அத்துன்பத்தினை மேன்மேலும் நெருக்க வல்லது, அம்மகிழ்ச்சி போன்றது வேறு எதுவும் இல்லை.

இடுக்கண் வருங்கால் நகுக அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல்.

**1 இடுக்கண் வருங்கால் நகுக அதனை**
**அடுத்தூர்வது அஃதொப்பது இல்.** 621

இடுக்கண் வருங்கால் — துன்பமானது வந்தபோது, நகுக — மனம் கலங்காமல் உள்மகிழ்தல் வேண்டும், அதனை — அத்துன்பத்தினை, அடுத்து — தொடர்ந்து மேன்மேலும், ஊர்வது — மனவெழுச்சியால் போக்கக் கூடிய, அஃது — அம்மகிழ்ச்சியினை, ஒப்பது — போன்றது, இல் — வேறு எதுவும் இல்லையாகும்.

வெள்ளம் போலக் கரையில்லாத துன்பங்கள் [இடும்பைகள்] எல்லாம், அறிவுடையவன் தனது உள்ளத்தினாலே ஒன்றனை நினைத்துப் பார்க்க அப்பொழுதே கெடும்.

வெள்ளத்து அனைய இடும்பை அறிவுடையான் உள்ளத்தின் உள்ள கெடும்.

**2 வெள்ளத்து அனைய இடும்பை அறிவுடையான்**
**உள்ளத்தின் உள்ளக் கெடும்.** 622

வெள்ளம் — வெள்ளத்தினை, அனைய — போன்ற, இடும்பை — [கரையில்லாத] துன்பம் எல்லாம், அறிவுடையான் — அறிவுள்ளவன், உள்ளத்தின் — தனது மனத்தினில், உள்ள — ஒன்றனை நினைக்க, கெடும் — அப்போதே கெட்டுவிடும்.

தொழில் செய்யும்போது இடையில் வந்த துன்பங்களுக்குத் துன்பப்படாதவர்கள், வந்த அத் துன்பங்களுக்குத் துன்பத்தினை உண்டாக்கி விடுவர்.

இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு இடும்பை படாதவர்.

**3 இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு**
**இடும்பை படாஅ தவர்.** 623

இடும்பைக்கு — துன்பத்திற்கு, இடும்பை — துன்பம், படாஅதவர் — அனுபவிக்காதவர், இடும்பைக்கு — வந்த அந்தத் துன்பத்திற்கு, இடும்பை படுப்பர் — துன்பத்தினை உண்டாக்கி விடுவர்,

விலக்கிய இடங்களில் எல்லாம் வண்டியினைப் பெருமுயற்சியுடன் இழுத்துச் செல்லுகின்ற மாட்டினைப் போல, தொழிலினை முயன்று செய்து கொண்டு போகின்றவனைத் துன்புறுத்தும் துன்பம், தானே துன்பப்படும்.

மடுத்த வாய் எல்லாம் பகடு அன்னான் உற்ற இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.

4 மடுத்தவாய் எல்லாம் பகடுஅன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து. 624

மடுத்த — விலக்கித் தடுத்த, வாய் எல்லாம் — வழியான இடங்களில் எல்லாம், பகடு — [வண்டியினை இழுத்துச் செல்லும்] மாடு, அன்னான் — போன்றவனை, உற்ற — வந்தடைந்த, இடுக்கண் — துன்பமானது, இடர்ப்பாடு — தானே துன்பப்படுவதை, உடைத்து — உடையதாகும்.

இடைவிடாமல் துன்பங்கள் மேன்மேல் வந்தாலும், தன் மனத்தில் உள்ள கோட்பாட்டினை விடாதவனிடம் வந்த துன்பங்கள் தாமே துன்பப்படும்.

அடுக்கி வரினும் அழிவு இலான் உற்ற இடுக்கண் இடுக்கண்படும்.

5 அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கண் படும். 625

அடுக்கி — இடைவிடாமல் மேன்மேல், வரின் — வந்து கொண்டிருந்தாலும், அழிவு — தனது உள்ளக் கோட்பாடு கெடுதல், இலான் — இல்லாதவனை, உற்ற — வந்தடைந்த, இடுக்கண் — துன்பமானது, இடுக்கண்படும் — துன்பப்பட்டு மறையும்.

செல்வம் பெற்றிருந்த காலத்தில் உலோபியாக இருப்பதை அறியாதவர்கள், வறுமையுற்ற காலத்தில் மனத்தினாலே துன்பப்படுவார்களோ? படமாட்டார்கள்.

அற்றேம் என்று அல்லற்படுபவோ பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றாதவர்.

6 அற்றேம்என்று அல்லற் படுபவோ பெற்றேம்என்று
ஓம்புதல் தேற்றா தவர். 626

பெற்றேம் — செல்வம் பெற்றுள்ளோம், என்று — என்பதை நினைத்து, ஓம்புதல் — [செல்வக் காலத்தில்] உலோபத்தன்மையினை, அறியாதார் — அறியாதவர்கள் [ஈகைத் தன்மையில் இருந்தவர்கள்], அற்றேம் — பொருளின்றி வறியரானோம், என்று — என்று நினைத்து, அல்லல் — மனத்தால் துன்பம், படுபவோ — அடைவார்களோ! [அடையமாட்டார்கள்.]

உடம்பானது துன்பம் என்பதற்கு இலக்கு என்பதைத் தெரிந்துணர்ந்து தமக்கு வந்த துன்பத்தினைத் துன்பமாகக் கொள்ளமாட்டார்கள் அறிவுடையார் என்பதாம்.

இலக்கம் உடம்பு இடும்பைக்கு என்று கலக்கத்தை கையாறா கொள்ளாதாம் மேல்.

7 இலக்கம் உடம்புஇடும்பைக்கு என்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல். 627

உடம்பு — இந்த உடம்பானது, இடும்பைக்கு — துன்பத்திற்கு, இலக்கம் — வருகிற குறியிடம், என்று — என்பதனைத் தெளிந்து, கலக்கத்தை — தமக்கு வந்த துன்பத்தினை, கையாறா — துன்பம் என்பதாக, கொள்ளாதாம் — கொள்ளமாட்டார்கள், மேல் — அறிவு நிறைந்தவர்கள்.

தனக்கு இன்பமானவற்றை விரும்பாமல், துன்பம் வந்தால் இயற்கையென்று உணர்ந்திருப்பவன் தனது முயற்சியால் துன்பம் அடையமாட்டான்.

இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான் துன்பம் உறுதல் இலன்.

8 இன்பம் விழையான் இடும்பை இயல்புஎன்பான்
துன்பம் உறுதல் இலன். 628

இன்பம் — இன்பமானவற்றை, விழையான் — விரும்பாமல், இடும்பை — துன்பம் வந்தால், இயல்பு — இது இயற்கை, என்பான் — என்று சொல்லுபவன், துன்பம் — எந்நாளும் துன்பம், உறுதல் — அடைதல், இலன் — இல்லையாவான்.

தனக்கு இன்பம் வந்தபோது அதனை அனுபவித்து மனத்தால் விரும்பாதவன், துன்பம் வந்தபோதும் அதனை அனுபவித்து மனத்தால் வருந்தமாட்டான்.

இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் துன்பம் உறுதல் இலன்.

9 இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன். 629

இன்பத்துள் — இன்பம் வந்தபோது, இன்பம் — அந்த இன்பத்தினை, விழையாதான் — மனத்தால் விரும்பாதவன், துன்பத்துள் — துன்பம் வந்தபோதும், துன்பம் — அத்துன்பத்தினை, உறுதல் — மனத்தால் அடைதல், இலன் — இல்லையாகும்,

ஒருவன் தனக்கு வந்த துன்பத்தினையே இன்பமாகக் கற்பித்துக் கொண்டு இருக்கின்ற தன்மையுடையவனானால், அத்தன்மை தனது பகைவர்களும் நன்கு மதிக்கும் உயர்ச்சியினை அவனுக்கு உண்டாக்கும்.

இன்னாமை இன்பம் என கொளின் ஆகும் தன் ஒன்னார் விழையும் சிறப்பு.

**10 இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்**
**ஒன்னார் விழையும் சிறப்பு.** 630

இன்னாமை — வந்த துன்பத்தினையே, இன்பம் — இன்பமாகும், என — என்று, கொளின் — கற்பித்துக் கொள்ளுவானானால், தன் — தன்னுடைய, ஒன்னார் — பகைவர், விழையும் — நன்கு மதிப்பதற்குக் காரணமான, சிறப்பு — சிறப்பானது, ஆகும் — அவனுக்கு உண்டாம்.

## அங்க இயல்

## 64. அமைச்சு

**[அமைச்சர்களுடைய கடமைகள், ஆற்றல்கள் முதலியன]**

தொழில் செய்யும்போது அதற்கு வேண்டிய கருவிகளும், அதற்கு ஏற்ற காலமும், செய்யும் வகையும், செய்யப்படும் அரிய தொழிலும் ஆகியவற்றை நன்கு எண்ணவல்லவனே அமைச்சனாவான்.

கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் மாண்டது அமைச்சு.

**1 கருவியும் காலமும் செய்கையும் செய்யும்**
**அருவினையும் மாண்டது அமைச்சு.** 631

கருவியும் — தொழில் முடிக்கும் கருவிகளும், காலமும் — ஏற்ற காலமும், செய்கையும் — செய்யும் வழிமுறையும், செய்யும் — அவற்றினால் செய்யப்படும, அரு — அரியதான, வினையும் — தொழிலும், மாண்டது — ஆகியவற்றை நன்கு பொருத்தமாக எண்ண வல்லவனே, அமைச்சு — அமைச்சனாவான்.

தொழில் செய்யுங்கால் மனம் தளராமையும், குடிகளைக் காத்தலும், நீதி நூல்களைக் கற்று நல்லன தீயனவற்றை அறிதலும், முயற்சியும் ஆகிய இந்த ஐந்தும் சிறப்பாக உடையவனே அமைச்சனாவான்.

வன்கண் குடி காத்தல் கற்று அறிதல் ஆள்வினையோடு ஐந்துடன் மாண்டது அமைச்சு.

**2 வன்கண் குடிகாத்தல் கற்றுஅறிதல் ஆள்வினையோடு**
**ஐந்துடன் மாண்டது அமைச்சு.** 632

வன்கண் — கலங்காத கண்மையும், குடி — குடிமக்களை, காத்தல் — காப்பாற்றுதலும், கற்று — நீதி நூல்களைக் கற்று, அறிதல் — நன்கு அறிதலும், ஆள்வினை — முயற்சியும், ஐந்துடன் — இந்த ஐந்து பண்புகளுடனே, மாண்டது — சிறப்புடன் திருத்தமாக அமையப் பெற்றிருப்பவனே, அமைச்சு — அமைச்சனாவான்.

செய்யும் செயல் வேறாகவும் சொல்லும் சொல் வேறாகவும் இருப்பவர்களுடைய நட்பானது கனவில்கூடத் துன்பத்தினைத் தருவதாகும்.

கனவினும் இன்னாது மன்னோ வினை வேறு சொல் வேறு பட்டார் தொடர்பு.

9 கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 819

வினை — செய்யும் செயல், வேறு — வேறாகவும், சொல் — பேசும் சொல், வேறு — வேறாக வும், பட்டார் — இருப்பவருடைய, தொடர்பு — நட்பானது, கனவினும் — கனவிலும் கூட, இன்னாது — துன்பத்தினைத் தருவதாகும்.

தனித்து வீட்டிலிருக்கும்போது நெருங்கிய நட்புடன் பழகி, பலர் கூடியிருக்கும் மன்றத்தில் பழித்துப் பேசுவோர் நட்புச் சிறிதளவேனும் தம்மைச் சாராமல் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ மன்றில் பழிப்பார் தொடர்பு.

10 எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு. 820

மனை — மனையில் இருக்கும்போது, கெழீஇ — நெருங்கிப் பழகி, மன்றில் பழிப்பார் — பலர் இருக்கும் மன்றத்தில் பழித்துப் பேசுபவருடைய, தொடர்பு — நட்பினை, எனைத்தும் — எவ்வளவு சிறிதேயானாலும், குறுகுதல் — தம்முடன் நெருங்குவதை, ஓம்பல் — விலக்குதல் வேண்டும்.

## 83. கூடாநட்பு

[மனத்தால் கூடாமல்இருக்கும் பகைவர் நட்பு]

மனத்தால் கூடாதிருந்து தீமையினைச் செய்வதற்குத் தக்க நேரம் வரும் வரையில் நட்பினர் போலப் பழகும் நட்பு, வாய்க்குமிடம் கண்டால் நன்றாக எறிதற்குத் துணையான பட்டடை போன்றதாகும்.

சீர் இடம் காணின் எறிதற்கு பட்டடை நேரா நிரந்தவர் நட்பு.

1 சீர்இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. 821

நேரா — மனத்தால் கூடாதிருந்தே, நிரந்தவர் — [தீமை செய்ய வாய்ப்புக் கிட்டும் வரையில்] புறத்தே நண்பர்கள் போல இருப்பவரது, நட்பு — நட்பு, சீரிடம் காணின் — [கெடுதி செய்ய] வாய்க்குமிடத்தினைக் கண்டதும், எறிதற்கு — எறிதற்கு [நசுக்குவதற்கு]த் துணையான, பட்டடை — பட்டடை என்பதாகும்.

உற்றார் போன்று காட்டித் தமக்கு இனமல்லாதவர்களுடைய நட்பு இடம் பெற்றால் பெண்பாலாருடைய மனம்போல வேறுபடும்.

இனம் போன்று இனம் அல்லார் கேண்மை மகளிர் மனம்போல வேறுபடும்.

2 இனம்போன்று இனமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். 822

இனம் — நமக்கு உற்ற இனத்தவர், போன்று — போல, இனம் — நமக்கு உற்றவர், அல்லார் — அல்லாதவருடைய, கேண்மை — நட்பு, [இடம் பெற்றால்] மகளிர் — பெண் பாலாருடைய, மனம்போல — மனத்தினைப் போல, வேறுபடும் — வேறுபட்டு விடுவதாகும்.

நல்லனவாகிய பலநூல்களைக் கற்றிருந்த போதும், பகைமை உள்ளம் படைத்தவர்களுக்கு அவைகளினால் மனம் திருந்தி நட்பாதல் இல்லை.

பல நல்ல கற்ற கடைத்தும் மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது.

3 பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது. 823

நல்லபல — நல்லனவாகிய பற்பல நூல்களை, கற்றக் கடைத்தும் — கற்றிருந்தாலும், மனம் — மனம், நல்லர் — திருந்தி நல்லவர், ஆகுதல் — ஆகுதல், மாணார்க்கு — பகைவர்க்கு, அரிது — முடியாததாகும்.

கண்ட பொழுது முகத்தால் இனிதாகச் சிரித்து எப்போதும் மனத்தால் தீயவர்களான வஞ்சகர்களைப் பார்த்து நாம் அஞ்சுதல் வேண்டும்.

முகத்தின் இனிய நகா அகத்து இன்னா வஞ்சரை அஞ்சப்படும்.

3 முகத்தின் இனிய நகாஅ அகத்துஇன்னா
வஞ்சரை அஞ்சப் படும். 824

முகத்தின் — முகத்தினால் மட்டும், இனிய — இனிமையாக, நகாஅ — நகைத்த, அகத்து — நெஞ்சினில், இன்னா — பகைமை கொண்ட, வஞ்சரை அஞ்சப்படும் — வஞ்சகர்களைக் கண்டு பயப்படுதல் வேண்டும்.

மனத்தினால் தம்முடன் பொருந்துதல் இல்லாதவர்களை எவ்விதமான செயலிலும் சொல்லினால் தெரிந்து கொள்ளும் முறையானது கூடாது என்பதாம்.

**மனத்தின் அமையாதவரை எனைத்து ஒன்றும் சொல்லினால் தேறல்பாற்று அன்று.**

**5 மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்**
**சொல்லினால் தேறல்பாற் றன்று.** 825

மனத்தின் அமையாதவரை — மனத்தினால் தம்முடன் பொருந்துதல் இல்லாதவர்களை, எனைத்தொன்றும் — எந்தவிதமான செயலிலும், சொல்லால் — சொற்களினால், தேறல் பாற்று — தெரிந்து புரிந்து கொள்ளும் முறையானது, அன்று — கூடாததாகும்.

நண்பர்கள்போல நன்மை பயக்கும் சொற்களைச் சொன்னாலும் பகைவர்களுடைய சொற்கள் சொல்லிய அப்பொழுதே அறிந்து கொள்ளப்படும்.

**நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும்.**

**6 நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்**
**ஒல்லை உணரப் படும்.** 826

நட்டார்போல் — நண்பர்களைப் போல, நல்லவை சொல்லினும் — நன்மை பயக்கும் சொற்களையே சொன்னாரேயானாலும், ஒட்டார் — பகைவர்களுடைய, சொல் — சொற்கள், ஒல்லை — விரைவில், உணரப்படும் — அறிந்து தெரிந்து கொள்ளப்படும்.

வில் வளைகின்ற வணக்கமானது தீமை செய்தலைக் குறித்தமையால் பகைவர்களிடம் உண்டாகின்ற சொற்களின் வணக்கத்தினையும் தீமையுண்டாக்குவதாகவே கொள்ளுதல் வேண்டும்.

**சொல் வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம் தீங்கு குறித்தமையான்.**

**7 சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்**
**தீங்கு குறித்தமை யான்.** 827

வில் — வில்லினது, வணக்கம் — வளையும் தன்மையானது, தீமை — தீமையுண்டாக்குவதை, குறித்தமையான் — குறிப்பதானபடியால், ஒன்னார்கண் — பகைவரிடத்தில், [காணப்படும்] சொல் — சொற்களையுடைய, வணக்கம் — வணக்கத்தினையும், கொள்ளற்க — நல்லதென்று கொள்ளாதிருத்தல் வேண்டும்.

பகைவர்கள் தொழுதகையினுள்ளும் படைக்கலம் மறைந்திருக்கும். அப்பகைவர் அழுத கண்ணீரும் அவ்வாறே அது மறைந்திருப்பதற்கு இடமானதாகும்.

தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் ஒன்னார் அழுத கண்ணீரும் அனைத்து.

8 தொழுதகை யுள்ளும் படைஒடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. 828

ஒன்னார் — பகைவர்கள், தொழுத — தொழுது வணங்குகின்ற, கையுள்ளும் — கையினுள்ளும், படை — படைக்கருவி, ஒடுங்கும் — மறைந்திருப்பதாகும், அழுத — அவர்கள் அழுத, கண்ணீரும் — கண்ணீரும், அனைத்து — அவ்வாறு அது மறைந்திருப்பதற்கு இடமானதாகும்.

பகைமையுள்ள மனம் தெரியாதபடி வெளிப்புறத்திலே நட்பினை மிகுதியாகச் செய்து காட்டி, உள்ளத்தில் தம்மை இகழும் பகைவரை, தாமும் அவர் போலவே நட்பினைச் செய்து அந்நட்பு சாகுமாறு செய்தல் வேண்டும்.

மிக செய்து தம் எள்ளுவாரை நக செய்து நட்பினுள் சா புல்லற்பாற்று.

9 மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று. 829

மிக — புறத்தில் மட்டும் நட்பினை மிகுதியாக, செய்து — செய்துகாட்டி, தம் எள்ளுவாரை — உள்ளத்தில் தம்மை இகழ்கின்ற பகைவர்களை, நட்பினுள் — நாமும் அவர் போலவே நட்புறவில் இருந்து, நக — புறத்தில் அவர் மகிழுமாறு, செய்து — செய்து, சாப்புல்லற் பாற்று — உள்ளுக்குள் அந்த நட்பு சாகும்படிச் செய்தல் வேண்டும்.

பகைவர்கள் தம்மிடம் நண்பராக நடந்து கொள்ளுகின்ற காலம் வந்தபோது அவர்களுடன் முகத்தினால் மட்டும் நட்பினைச் செய்து மனத்தினால் அவர்கள் நட்பினைத் தவிர்த்தல் வேண்டும்.

பகை நட்பாம் காலம் வருங்கால் முகம் நட்டு அகம் நட்பு ஒரீஇ விடல்.

10 பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு
அகநட்பு ஒரீஇ விடல். 830

பகை — பகைவர்கள், நட்பு — தம்மிடம் நண்பராக, ஆம் — நடந்து கொள்ளுகின்ற, காலம் — காலம், வருங்கால் — வந்தபோது, முகம் நட்டு — அவர்களுடன் முகத்தினால் மட்டும் நட்பினைச் செய்து, அகம் — மனத்தினால், நட்பு — அவர்கள் நட்பினை, ஒரீஇ — நீக்கி, விடல் — முற்றிலும் விட்டுவிடுதல் வேண்டும்.

## 84. பேதைமை

### [அறிலிகளின் அறியாமைக் குணம்]

பேதைமை என்று சொல்லப்படுவது எல்லாக் குற்றங்களிலும் மிக்கதாகும். அது யாதென்று கேட்டால், தமக்குக் கெடுதி உண்டாக்குவதைக் கைக்கொண்டு ஆக்கம் தருவதை விட்டுவிடுவதாகும்.

**பேதைமை என்பது ஒன்று யாது எனின் ஏதம் கொண்டு ஊதியம் போக விடல்.**

**1 பேதைமை என்பதுஒன்று யாதெனின் ஏதங்கொண்டு**
**ஊதியம் போக விடல். 831**

பேதைமை — அறியாத்தன்மை, என்பது — என்பது, ஒன்று — ஏனைய குற்றங்களைவிட மிக்கது ஒன்று, யாது — அது எது, எனின் — என்று கேட்டால், ஏதங்கொண்டு — தமக்குத் தீங்கு உண்டாக்குவதை மேற்கொண்டு, ஊதியம் — ஆக்கம் தருகின்றவைகளை, போகவிடல்— விட்டுவிடுவதாகும்.

பேதைமைகளுக்கெல்லாம் மிகுந்த பேதைமை என்னவென்றால், தன்னால் முடியாத செயல்களில் மிக்க விருப்பத்தினைக் கொண்டு செய்தலாகும்.

**பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை கையல்லதன்கண் செயல்.**

**2 பேதைமை யுள்எல்லாம் பேதைமை காதன்மை**
**கையல்ல தன்கண் செயல் 832**

பேதைமையுள் — பேதைமைகளுக்குள், எல்லாம் — எல்லாம், பேதைமை — மிக்கதான பேதைமை என்னவென்றால், கையல்லதன்கண் — தன்னால் முடியாத பணிகளில், காதன்மை — மிக்க விருப்பத்தினை, செயல் — கொண்டு செய்தலாகும்.

நாணவேண்டுவனவற்றிற்கு நாணம் கொள்ளாமையும், நாட வேண்டுவனவற்றை நாடாமையும், யாவரிடத்தும் அன்பில்லாமையும், விரும்ப வேண்டுவனவற்றை விரும்பாமையும் பேதையினுடைய தொழில்களாகும்.

**நாணாமை நாடாமை நார் இன்மை யாதொன்றும் பேணாமை பேதை தொழில்.**

**3 நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்**
**பேணாமை பேதை தொழில். 833**

நாணாமை — எதற்கும் வெட்கப்படாமையும், நாடாமை — விரும்ப வேண்டியவற்றை விரும்பாமையும், நார் — அன்பு, இன்மை — இல்லாமையும், யாதொன்றும் — நல்லன எதையும், பேணாமை — பேணிப் போற்றாமையும், பேதை — பேதை எனப்படும் மூடனது, தொழில் — தொழில்களாகும்.

நல்ல நூல்களைக் கற்றிருந்தும் அதன் பொருளினை உணர்ந்திருந்தும் மற்றவர்களுக்கு எடுத்துக் கூறியும் தான் அடங்கி நடக்காத பேதையைப்போல பேதையார் உலகத்தில் இல்லை.

ஓதி உணர்ந்தும் பிறர்க்கு உரைத்தும் தான் அடங்கா பேதையின் பேதையார் இல்.

4 ஓதி உணர்ந்தும் பிறர்க்குஉரைத்தும் தான்அடங்காப்
பேதையின் பேதையார் இல். 834

ஓதி — நல்ல நூல்களைக் கற்றும், உணர்ந்தும் — அவைகளின் பயன்களை உணர்ந்தும், பிறர்க்கு உரைத்தும் — மற்றவர்களுக்கு எடுத்துக் கூறியும், தான் — தான் மட்டும், அடங்கா — முறையாக அடங்கி ஒழுகாத, பேதையின் — பேதையினைப் போல, பேதையார் இல் — அறிவிலிகள் இல்லையாம்.

பேதையானவன் வருகின்ற பிறவிகளில் எல்லாம் தான் புகுந்து துய்க்கின்ற துன்பத்தினை இந்த ஒரு பிறவியிலேயே செய்து கொள்ளுவான்.

ஒருமை செயல் ஆற்றும் பேதை எழுமையும் தான் புக்கு அழுந்தும் அளறு.

5 ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு. 835

பேதை — அறிவற்ற பேதை, எழுமையும் — வருகின்ற எல்லாப் பிறவிகளிலும், தான் புக்கு — தான் புகுந்து, அழுந்தும் — துய்க்கின்றவற்றிற்கு இடமான, அளறு — துன்பம் என்னும் நரகத்தினை, ஒருமை — இந்த ஒரு பிறவியிலேயே, செயலாற்றும் — செய்து கொள்ளுகின்றவனாவான்.

செய்யும் முறையறியாத பேதை ஒரு காரியத்தை மேற்கொண்டால் அக்காரியமும் கெடும்; அவனும் தானே தளை பூணுகின்ற நிலைமையினையும் அடைவான்.

பொய்படும் ஒன்றோ புனை பூணும் கை அறியா பேதை வினைமேற் கொளின்.

6 பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். 836

கையறியா — செயலினைச் செய்யும் முறை தெரியாத, பேதை — பேதையானவன், வினை — தொழிலொன்றினை, மேற்கொளின் — மேற்கொண்டால், பொய்படும் — அத்தொழிலும் கெட்டுவிடும், ஒன்றோ — அதுமட்டுமல்ல, புனை — தளையினை, பூணும் — பூணுகின்ற நிலையும் அடைவான்.

பேதையானவன் பெரிய செல்வத்தினைப் பெற்றுவிட்டால் தன்னோடு யாதொரு தொடர்பும் இல்லாதவர்கள் பயனடைவார்கள். எல்லாத் தொடர்பும் கொண்ட சுற்றத்தார் பசித்திருப்பர்.

ஏதிலார் ஆர தமர் பசிப்பர் பேதை பெரும் செல்வம் உற்றக்கடை.

**7 ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை**
**பெருஞ்செல்வம் உற்றக் கடை.** 837

பேதை — பேதையானவன், பெரும் — மிகுந்த, செல்வம் — செல்வத்தினை, உற்றக்கடை — பெற்றிருப்பானானால், ஏதிலார் — எவ்வித தொடர்பும் இல்லாதவர்கள், ஆர — பயன் நிறையப் பெற, தமர் பசிப்பர் — தொடர்புள்ள சுற்றத்தார் பசித்திருப்பார்கள்.

தன்னிடம் ஒன்றை உடையவனாகப் பெற்றிருக்கும் பேதையானவன் மயக்கம் அடைவது எப்படிப்பட்டதென்றால், முன்னேயே பித்துப் பிடித்தவன் மதுவுண்டு மயங்குவது போன்றதாகும்.

மையல் ஒருவன் களித்தற்றால் பேதை தன் கை ஒன்று உடைமை பெறின்.

**8 மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்**
**கைஒன்று உடைமை பெறின்.** 838

பேதை — அறிவில்லாத பேதை, தன்கை — தனது கையில், ஒன்று — ஒன்றினை, உடைமை — உடைமையாக, பெறின் — பெற்றால், [அது] மையல் — பித்துப் பிடித்த, ஒருவன் — ஒருவன், களித்தற்று — மதுவினை உண்டது போன்றதாகும்.

பிரிந்து போகின்ற காலம் வரும்போது துன்பம் தருவது ஒன்றும் இல்லையாதலால் பேதையானவர்களுடன் நட்புக் கொள்ளுதல் மிகவும் இனிமையானதாகும்.

பெரிது இனிது பேதையார் கேண்மை பிரிவின்கண் பீழை தருவது ஒன்று இல்.

**9 பெரிதுஇனிது பேதையார் கேண்மை பிரிவின்கண்**
**பீழை தருவதுஒன்று இல்.** 839

பிரிவின்கண் — பிரியும் நேரம் வந்தபோது, தருவது — உண்டாவதாகிய, பீழை — துன்பம், ஒன்று — என்பதொன்று, இல் — இல்லையாதலினால், பேதையார் — அம்மூடரது, கேண்மை — நட்பு, பெரிது — மிகவும், இனிது — இனிமையானதாகும்.

சான்றோர்கள் நிறைந்திருக்கும் அவையில் பேதையானவன் நுழைதல், இன்பம் தரும் அமளிக்கண் தூய்மை அல்லாதவற்றை மிதித்த காலினை வைத்தது போன்றதாகும்.

கழாக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர் குழாத்து பேதை புகல்.

**10 கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்**
**குழாஅத்துப் பேதை புகல். 840**

சான்றோர் — மேலான சான்றோர்கள் இருக்கும், குழாஅத்து — அவையில், பேதைபுகல் — பேதையானவன் நுழைதல், கழாஅக்கால் — கழுவாத காலினை, பள்ளியில் — இன்பம் சுவைக்கும் அமளியின் மேல், வைத்தற்று — வைத்தது போன்றதாகும். [ஆல் — அசை].

## 85. புல்லறிவாண்மை

[அற்ப அறிவுள்ளவன் தன்னைச் சிறந்த அறிஞனாக எண்ணி நடத்தல்]

ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் மிக்க இல்லாமை அறிவில்லாமையேயாகும். மற்றைப் பொருளில்லாமையோ யென்றால் அதனை இல்லாமையாக உலகத்தார் கொள்ள மாட்டார்கள்.

அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிது இன்மை இன்மையா வையாது உலகு.

**1 அறிவுஇன்மை இன்மையுள் இன்மை பிறிதுஇன்மை**
**இன்மையா வையாது உலகு. 841**

இன்மையுள் — இல்லாமை பலவற்றிலும், இன்மை — இல்லாமையென்பது என்னவென்றால், அறிவு — அறிவு, இன்மை — இல்லாமையே யாகும், பிறிது — மற்றவை, இன்மை — இல்லாமையினை, இன்மையா — அவ்வாறு இல்லாமையாக, உலகு — உலகத்தார், வையாது — கருத மாட்டார்கள்.

புல்லறிவாளனானவன் ஒருவனுக்கு மனமுவந்து ஒன்று கொடுப்பானேயானால் அதற்குக் காரணம் பெறுகின்றவனுடைய நல்வினையே யல்லாமல் வேறொன்றுமில்லையாகும்.

அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல் பிறிது யாதும் இல்லை பெறுவான் தவம்.

**2 அறிவிலான் நெஞ்சுஉவந்து ஈதல் பிறிதுயாதும்**
**இல்லை பெறுவான் தவம். 842**

அறிவிலான் — புல்லறிவாளன், நெஞ்சு — மனம், உவந்து — களித்து, ஈதல் — பிறர்க்குக் கொடுப்பானேயானால், [அவ்வாறு கொடுப்பதற்குக் காரணம்] பெறுவான் — அதனைப் பெறுகின்றவனுடைய, தவம் — நல்வினையேயாகும், பிறிது — வேறு, யாதும் — எந்தக் காரணமும், இல்லை — இல்லையென்பதாம்.

புல்லறிவுடையவர்கள் தமக்குத் தாமே உண்டாக்கிக் கொள்ளும் துன்பம், அவர்களுடைய பகைவர்களும் அவர்களுக்குச் செய்ய முடியாததாகும்.

அறிவிலார் தாம் தம்மை பீழிக்கும் பீழை செறுவார்க்கும் செய்தல் அரிது.

3 அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது. 843

அறிவிலார் — சிற்றறிவாளர்கள், தாம் — தமக்குத்தாமே, தம்மை — தங்களை, பீழிக்கும் — துன்புறுத்திக் கொள்ளும், பீழை — துன்பமானது, செறுவார்க்கும் — அவர்களின் பகைவர்க்கும், செய்தல் அரிது — செய்வதற்கு முடியாததாகும்.

புல்லறிவுடைமை என்பது யாது என்று கேட்டால், அது தம்மைத்தாமே "யாம் நல்லறிவுடையோம்" என்று நன்கு மதித்துக் கொள்ளும் மயக்கமேயாகும்.

வெண்மை எனப்படுவது யாது எனின் ஒண்மை உடையம் யாம் என்னும் செருக்கு.

4 வெண்மை எனப்படுவது யாதுஎனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு. 844

வெண்மை — புல்லறிவுடைமை, எனப்படுவது — என்று சொல்லப்படுவது, யாது — எது, எனின் — என்று கேட்டால், ஒண்மை — நல்லறிவு, உடையம் யாம் — யாம் உடையோம் என்னும் — என்று தம்மைத் தாமே மதித்துக் கொள்ளும், செருக்கு — மயக்கமான எண்ணமாகும்.

புல்லறிவுடையவர்கள் தாம் கற்றறியாத நூல்களையும் கற்றவர்களாகச் சொல்லிக் கொண்டு நடத்தல், அவர்கள் குற்றமறக் கற்றதொரு நூலுண்டாயின், அதனிடத்தும் மற்றவர்களுக்கு ஐயத்தினை உண்டாக்கும்.

கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடு அற வல்லதும் ஐயம் தரும்.

5 கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடுஅற
வல்லதூஉம் ஐயம் தரும். 845

கல்லாத — தாம் கல்லாதவற்றையும், மேற்கொண்டு — கற்றவராக மேற்கொண்டு, ஒழுகல் — நடந்து கொள்ளுதல், கசடு — குற்றம், அற — நீங்க, வல்லதூஉம் — கற்றிருக்கும் நூலிருக்குமேயானால், [அதைப் பற்றியும்] ஐயம் தரும் — சந்தேகத்தினை மற்றவர்களுக்கு உண்டாக்கிவிடும்.

புல்லறிவாளர்கள் தம்மிடத்தில் நிகழும் குற்றங்களை நீக்காவிட்டால், ஆடைகளினால் மறைக்க வேண்டிய உறுப்புக்களை மறைத்தலும் அற்ப அறிவேயாகும்.

அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம் வயின் குற்றம் மறையாவழி.

6 அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி. 846

தம்வயின் — தம்மிடத்திலிருக்கும், குற்றம் — குற்றங் குறைகளை, மறையா வழி — நீக்காவிட்டால், அற்றம் — மறைக்க வேண்டிய உறுப்புக்களை, மறைத்தலோ — உடைகளினால் மறைத்து விட்டதாக எண்ணுவதும், புல் — கீழ்மையான, அறிவு — அறிவேயாகும்.

பெறுதற்கரிய மறை மொழிப் பொருள்களைக் கற்றாலும் அதனை மனத்திற் கொள்ளாமல் போக்கும் புல்லறிவாளன், அறியாமையால் தனக்குத்தானே மிகுந்த வருத்தத்தினை செய்து கொள்ளுவான்.

அருமறை சோரும் அறிவிலான் செய்யும் பெருமிறை தானே தனக்கு.

7 அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 847

அரு — அரிய, மறை — மறை மொழிப் பொருளை, சோரும் — மனத்திற் கொள்ளாமல் விட்டு விடுகின்ற, அறிவிலான் — புல்லறிவாளன், தானே தனக்கு — அவனே தனக்கு, பெரும் — மிகுந்த, இறை — துன்பத்தினை, செய்யும் — செய்து கொள்ளுவான்.

புல்லறிவாளன் அறிவுடையவர்கள் சொல்லியபடியும் செய்யமாட்டான். தானாகவும் செய்வனவற்றை அறியான். அவன் உயிர் நீங்கும்வரை இது அவனுக்கு ஒரு நோயாகும்.

ஏவவும் செய்கலான் தான் தேறான் அவ் உயிர் போம் அளவும் ஓர் நோய்.

8 ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவும்ஓர் நோய். 848

ஏவவும் — அறிவுடையார் நல்லன சொன்னாலும், செய்கலான் — செய்யமாட்டான், தான் தேறான் — தானாகவும் அறியமாட்டான், அவ்வுயிர் — அவனுடைய அந்த உயிர், போமளவும் — அவனை விட்டு நீங்கும்வரை, ஓர் — ஒரு, நோய் — பெரிய நோயாகும்.

தன்னை எல்லாம் அறிந்தவனாக மதித்தலால் பிறர் அவனுக்கு அறிவிக்கப் புகுந்தால் அவனால் பழிக்கப்படுவதுடன் அப்படிச் சொல்லப் போனவன் ஒன்றும் அறியாதவனாக முடிவான். இனி அறியும் தன்மை இல்லாத அவன் தான் அறிந்தபடியே அறிந்தவனாகச் செய்து கொள்ளுவான்.

**காணாதான் காட்டுவான் தான் காணாதான் கண்டானாம் தான் கண்டவாறு.**

**9 காணாதாற் காட்டுவான் தான்காணான் காணாதான்**
**கண்டானாம் தான்கண்ட வாறு. 849**

*காணாதான்* — புல்லறிவால் அறியமாட்டாதவனுக்கு, காட்டுவான் — அறிவிக்கச் செல்லும் ஒருவன், தான் — அறிந்த தான், காணான் — அறியாதவனாக முடிய நேரும், காணாதான் — அறியும் தன்மையில்லாத புல்லறிவாளன், தான் — அவன், கண்டவாறு — கண்டறிந்த படியே, கண்டானாம் — அறிந்தவனென்று முடியும்.

உலகில் அறிந்தோர் பலரும் உண்டு என்பதைப் புல்லறிவாளன் இல்லையென்று சொல்லுவான். அவன் மகன் என்று கருதப்படான். உலகில் சொல்லப்படுவதோர் பேய் என்று கருதப்படுவான்.

**உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் வையத்து அலகையா வைக்கப்படும்.**

**10 உலகத்தார் உண்டுஎன்பது இல்என்பான் வையத்து**
**அலகையா வைக்கப் படும். 850**

*உலகத்தார்* — உலகத்தில் உயர்ந்த பெரியோர், உண்டு — உண்டு, என்பது — என்று சொல்லப்படுகின்ற ஒன்றினை, இல் — இல்லை, என்பான் — என்று சொல்லுகின்ற ஒருவன், வையத்து — இந்த உலகில், அலகையா — ஒரு பேயாக, வைக்கப்படும் — கருதப்படுவான்.

## 86. இகல்

### [பகைமை உள்ளத்தால் உண்டாகும் மனவேறுபாடு]

எல்லா உயிர்களுக்கும், மற்ற உயிர்களோடு சேராமை என்கின்ற தீக்குணத்தினை வளர்க்கின்ற குற்றத்தினை இகல் என்று சொல்லுவர் நூலோர்.

**இகல் என்ப எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பு இன்மை பாரிக்கும் நோய்.**

**1 இகல்என்ப எல்லா உயிர்க்கும் பகல்என்னும்**
**பண்புஇன்மை பாரிக்கும் நோய். 851**

*எல்லா* — எல்லா, உயிர்க்கும் — உயிர்களுக்கும், பகல் — பிற உயிர்களோடு சேராமை, என்னும் — என்கின்ற, பண்பின்மை — தீமையான குணத்தினை, பாரிக்கும் — வளர்க்கின்ற, நோய் — குற்றமானது, இகல் — மாறுபாடு, என்ப — என்று நூல்வல்லார் கூறுவர்.

தம்முடன் கூடாமை கருதி ஒருவன் வெறுப்பன செய்தாலும், அவனுடன் மாறுபடுதலைக் கருதித் தாம் அவனுக்குத் துன்பம் செய்யாதிருத்தல் உயர்ந்த பண்பாகும்.

பகல் கருதி பற்றா செயினும் இகல் கருதி இன்னா செய்யாமை தலை.

2 பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை. 852

பகல் — ஒன்று பட்டுக் கூடாமை, கருதி — நினைத்து, பற்றா — வெறுப்பான செயல்களை, செயினும் — செய்தான் என்றாலும், இகல் — மாறுபாட்டினை, கருதி — நினைத்து, இன்னா — துன்பம் தரும் தீமையினை, [மற்றவனுக்கு] செய்யாமைதலை — செய்யாதிருத்தல் சிறந்ததாகும்.

மாறுபாடு என்கின்ற துன்பம் செய்யும் நோயினை ஒருவன் நீக்கி விடுவானாகில், அவனுக்கு அது எப்போதும் இருப்பதற்குக் காரணமான புகழினைக் கொடுக்கும்.

இகல் என்னும் எவ்வநோய் நீக்கின் தவல் இல்லா தாஇல் விளக்கம் தரும்.

3 இகல்என்னும் எவ்வநோய் நீக்கின் தவல்இல்லாத்
தாவில் விளக்கம் தரும். 853

இகல் — மாறுபாடு, என்னும் — எனப்படுகின்ற, எவ்வம் — துன்பம் உண்டாக்கும், நோய் — நோயினை, நீக்கின் —விலக்கி விடுவானாகில், தவல் — அழிவு, எல்லா — இல்லாததற்குக் காரணமான, தாவில் — கெடுதலில்லாத, விளக்கம் தரும் — புகழினைத் தருவதாகும்.

மாறுபாடு எனப்படுகின்ற துன்பங்களுக்கெல்லாம் துன்பமான ஒன்று இல்லை யென்றால் அது அவனுக்கு இன்பங்கள் எல்லாவற்றிலும் மிக்க இன்பத்தினைக் கொடுக்கும்.

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின்.

4 இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல்என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். 854

இகல் — மாறுபாடு, என்னும் — எனக் கூறப்படும், துன்பத்துள் — துன்பங்கள் எல்லாவற்றிலும், துன்பம் — மிக்க துன்பமானது, கெடின் — இல்லை யென்றால், இன்பத்துள் — இன்பங்கள் எல்லாவற்றினும், இன்பம் பயக்கும் — சிறந்த இன்பத்தினைத் தருவதாகும்.

மனதில் மாறுபாடு தோன்றிய போது அதனை எதிர்த்து நடந்து கொள்ளும் வல்லவர்களை வெல்லக் கருதும் தன்மையுடையவர்கள் யாவர்?

**இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை யாரே மிகல் ஊக்கும் தன்மையவர்.**

**5 இகல்எதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே**
**மிகல்ஊக்கும் தன்மை யவர்.** 855

இகல் — மாறுபாடு மனத்தில் உண்டான போது, எதிர் சாய்ந்து — அதனை ஏற்காமல் எதிர்த்து, ஒழுக வல்லாரை — நடந்து கொள்ளும் வல்லவர்களை, மிகல் ஊக்கும் — வெல்வதற்கு எண்ணும், தன்மையவர் — இயல்புடையவர்கள், யாரே — யாவர் உண்டு.

பிறருடன் மாறுபாடு கொள்வதில் தனக்கு இனிமையென்று கருதி அதனைச் செய்வானது உயிர் வாழ்க்கை துன்பப்படுதலும் கெடுதலும் சிறிது பொழுதில் நடப்பனவாகும்.

**இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை தவலும் கெடலும் நணித்து.**

**6 இகலின் மிகல்இனிது என்பவன் வாழ்க்கை**
**தவலும் கெடலும் நணித்து.** 856

இகலின் — மாறுபாடு கொள்ளுவதில், மிகல் — மிகுந்திருத்தலை, இனிது — இனிமை. என்பவன் — என்று நடப்பவனுடைய, வாழ்க்கை — உயிர் வாழ்க்கையானது, தவலும் — துன்பப்படுதலும், கெடலும் — கெட்டு விடுதலும், நணித்து — சிறிது நேரத்தில் உண்டாகி விடும்.

இகலோடு சேர்ந்து ஒழுகுகின்ற துன்பமான அறிவினையுடையார் வெற்றியினைத் தருகின்ற நீதி நூற்பொருள்களை அறிந்துகொள்ள மாட்டார்கள்.

**மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார் இகல் மேவல் இன்னா அறிவினவர்.**

**7 மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்**
**இன்னா அறிவி னவர்.** 857

இகல் — மாறுபாடு என்பதோடு, மேவல் — ஒன்றுபட்டு, இன்னா — துன்பத்தினை உண்டாக்கும், அறிவினவர் — அறிவினையுடையவர், மிகல் மேவல் — வெற்றி தரக்கூடிய, மெய்ப்பொருள் — நீதிநூற் கருத்துக்களை, காணார் — அறிந்துகொள்ள மாட்டார்கள்.

மனத்தில் மாறுபாடு தோன்றியபோது அதனை நீக்குதல் ஒருவனுக்கு ஆக்கம் தரும். அதனைச் செய்யாமல் அதனை மேற்கொள்ளுவானானால் கேடும் தனக்கு வந்து சேரும்.

**இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம் அதனை மிகல் ஊக்கின் ஊக்குமாம் கேடு.**

**8 இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை**
**மிகல்ஊக்கின் ஊக்குமாம் கேடு.** 858

இகலிற்கு — மனத்தின்கண் மாறுபாடு தோன்றியபோது, எதிர் சாய்தல் — அதனை எதிர்த்து நீக்குதல், ஆக்கம் — ஒருவனுக்கு ஆக்கத்தினைத் தரும், அதனை — அந்த மாறுபாடு என்பதனை, மிகல் ஊக்கின் — மிகுதியாக்குவதை மேற்கொண்டு நடப்பானாகில், கேடு — தீமையும், ஊக்குமாம் — அவனிடம் வருவதை மேற்கொள்ளுமாம்.

தனக்கு ஆக்கம் உண்டான காலத்தில் இகல் என்பதனை நினையாதான், தனக்குக் கேடு செய்வதற்கு இகலின்கண் மிகுந்து நிற்பான்.

**இகல் காணான் ஆக்கம் வருங்கால் அதனை மிகல் ஊக்கின் ஊக்குமாம் கேடு.**

**9 இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை**
**மிகல்காணும் கேடு தரற்கு** 859

ஆக்கம் — தனக்குச் செல்வம், வருங்கால் — வருவதாகின்ற போது, இகல் — மாறுபாடு என்பதனை, காணான் — நினைக்க மாட்டான், கேடுதரற்கு — கெடுதி செய்து கொள்வதற்கு, அதனை — அந்த இகலினிடத்தில், மிகல்காணும் — மிகுந்திருத்தலை நினைத்திருப்பவன் ஆவான்.

ஒருவனுக்கு மாறுபாடு என்னும் இகல் ஒன்றினாலே துன்பமானவைகள் எல்லாம் உண்டாகும். நட்பு என்ற ஒன்றினாலேயே நல்ல நீதி என்ற பெருஞ்செல்வம் உண்டாகும்.

**இகலான் ஆம் இன்னாத எல்லாம் நகலான் ஆம் நன்னயம் என்னும் செருக்கு.**

**10 இகலான்ஆம் இன்னாத எல்லாம் நகலான்ஆம்**
**நன்னயம் என்னும் செருக்கு.** 860

இகலான் — மாறுபாடு என்ற ஒன்றினாலேயே, இன்னாத — துன்பம் தருவன, எல்லாம் — எல்லாம், ஆம் — உண்டாவதாகும், நகலான் — நட்பு ஒன்றினாலேயே, நன்னயம் — நல்ல நீதி, என்னும் — எனப்படுகின்ற, செருக்குஆம் — பெரிய செல்வம் உண்டாவதாகும்.

## 87, படைமாட்சி

[அறிவின்மையால் பகையினை மாட்சிமைப்படுத்துதல்]

தம்மைவிட வலிமையுடையவர்களிடத்தில் பகையாய் இருப்பதை நீக்குதல் வேண்டும். தம்மைவிட மெலியார்களுக்குப் பகையாய் இருப்பதை ஒழியாமல் விரும்புதல் வேண்டும்.

வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக ஓம்பா மெலியார்மேல் மேக பகை.

1 வலியார்க்கு மாறுஏற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை. 861

வலியார்க்கு — தம்மைவிட வலிமை உள்ளவர்களுக்கு, மாறு — பகைமையாய், ஏற்றல் — நின்று எதிர்ப்பதை, ஓம்புக — நீக்குதல் வேண்டும், மெலியார்மேல் — மற்ற மெலியவர்கள் மேல், பகை — பகையாக இருப்பதை, ஓம்பா — நீக்காமல், மேக — விரும்புதல் வேண்டும்.

ஒருவன், தனது சுற்றத்தின் மீது அன்பில்லாமலும், வலிமையான துணையில்லாமலும், தானும் வலிமையில்லாமலும் இருப்பானானால் தன்மீது வந்த பகைவன் வலியினை எவ்வாறு தொலைப்பான்?

அன்பு இலன் ஆன்ற துணை இலன் தான் துவ்வான் என் பரியும் [ஏதிலான் துப்பு.

2 அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு 862

அன்பு — சுற்றத்தாரிடம் அன்பு, இலன் — இல்லாதவனாகவும், ஆன்ற — வலிமையான, துணையிலன் — துணையில்லாதவனாகவும், தான் — தானும், துவ்வான் — வலிமை இல்லாதவனாகவும், [இருக்கும் ஒருவன்] ஏதிலான் — பகைவனுடைய, துப்பு — வலிமையினை, என் — எவ்வாறு, பரியும் — தொலைப்பவனாவான்?

ஒருவன் அஞ்ச வேண்டாததற்கு அஞ்சுபவனாகவும், அறிய வேண்டுவனவற்றை அறியாதனாகவும், பிறரோடு பொருந்துதல் இல்லாதவனாகவும், யாரிடத்தும் ஈகைத் தன்மை இல்லாதவனாகவும் இருப்பானேயானால், அவன் பகைவர்க்கு மிகவும் எளிமையானவன் ஆவான்.

அஞ்சும் அறியான் அமைவு இலன் ஈகலான் தஞ்சம் எளியன் பகைக்கு.

3 அஞ்சும் அறியான் அமைவுஇலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு. 863

அஞ்சும் — அஞ்ச வேண்டாதபோது அஞ்சுபவன், அறியான் — அறியாமையுள்ளவன், அமைவு — மற்றவரோடு பொருந்துதல், இலன் — இல்லாதவன், ஈகலான் — ஈகைக் குணம் இல்லாதவன், பகைக்கு — பகைவர்களுக்கு, தஞ்சம் — மிகவும், எளியன் — எளிமையானவனாகி விடுவான்.

ஒருவன் கோபத்தினின்று நீங்காதவனாயும், நிறைகுணம் இல்லாதவனாயும், இருப்பானானால் அவன்மேல் பகை செல்லுதல் எக்காலத்தும் எவ்விடத்தும் எளிமையானதாகும்.

நீங்கான் வெகுளி நிறை இலன் எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது.

4 நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது. 864

வெகுளி — கோபம் கொள்ளுவதிலிருந்து, நீங்கான் — நீங்காதவனாயும், நிறை — நிறைகுணம், இலன் — இல்லாதவனாயும், [இருந்தால்] எஞ்ஞான்றும் — எக்காலத்தும், யாங்கணும் — எந்த இடத்திலும், யார்க்கும் — எவர்க்கும், எளிது — அவன் எளியவனாகிவிடுவான்.

ஒருவன் நீதி நூல்களைக் கற்காமலும், அவை விதித்த நெறிமுறைகளைச் செய்யாமலும் தனக்கு வரும் பழிகளைப் பாராமலும் தான் பண்புடையவன் அல்லாமலும் இருந்தால் அவனுடைய பகைவர்க்கு அவனது பகைமை இனிதாகும்.

வழி நோக்கான் வாய்ப்பன செய்யான் பழி நோக்கான் பண்புஇலன் [பற்றார்க்கு இனிது.

5 வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது. 865

வழி — நீதி நூல் வழிகளை, நோக்கான் — கற்கமாட்டான், வாய்ப்பன — நூல்களில் விதிக்கப்பட்ட செயல்களை, செய்யான் — செய்யமாட்டான், பழி — தனக்கு வரும் பழிகளை, நோக்கான் — கருதமாட்டான், பண்பு — நற்குணம், இலன் — உடையவனல்லன், [அப்படிப்பட்டவன்] பற்றார்க்கு — பகையாயினோர்க்கு, இனிது — இன்பமானவனாவான்.

தன்னையும் பிறனையும் அறிந்துகொள்ள முடியாத பெருங்கோபத்தினைக் கொண்டவனும் மிகுந்து வளரும் காமத்தினையும் உடையவன் எவனோ அவனுடைய பகைமையினைப் பகைவர்கள் விரும்பிக் கொள்ளுவார்கள்.

காணா சினத்தான் கழிபெரும் காமத்தான் பேணாமை பேணப்படும்.

6 காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். 866

காணா — அறியாமைக்குக் காரணமான, சினத்தான் — மிகுந்த கோபமுடையவன், கழி பெரும் — மிகுந்து வளருகின்ற, காமத்தான் — காமத்தினையுடையவன் யாவனோ, [அவனுடைய] பேணாமை — பகைமை, பேணப்படும் — விரும்பிக் கொள்ளப்படும்,

தொழிலினைத் தொடங்கியபின் அதற்குப் பொருந்தாதனவற்றைச் செய்பவனுடைய பகைமையைச் சில பொருள் கொடுத்தாயினும் கொள்ளுதல் ஒருதலையாக வேண்டும்.

கொடுத்தும் கொளல் வேண்டும் மன்ற அடுத்து இருந்து மாணாத [செய்வான் பகை.

7 கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்துஇருந்து
மாணாத செய்வான் பகை 867

அடுத்து இருந்து — ஒரு தொழிலினைத் தொடங்கிய பின், மாணாத — அதற்குப் பொருந்தாவைகளை, செய்வான்பகை — செய்கின்றவனுடைய பகைமையினை, கொடுத்தும் — பொருள் கொடுத்தாகிலும், மன்ற — உறுதியாக, கொளல் — கொள்ளுதல், வேண்டும் — வேண்டப்படுவதாகும்.

ஒருவன் நற்குணம் ஒன்றும் இல்லாதவனாகி குற்றங்கள் பலவாகியபோது அவன் யாதொரு துணையும் இல்லாதவனாவான். அதனால் அவன் பகைவர்க்கு எளியவனாவான்.

குணம் இலனாய் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு இனன் இலனாம் ஏமாப்பு உடைத்து.

8 குணன்இலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு
இனன்இலனாம் ஏமாப்பு உடைத்து. 868

குணம் — நற்குணம் ஏதும், இலனாய் — இல்லாதவனாகி, குற்றம் — குற்றங்கள், பலவாயின் — பலவாகியபோது, இனன் — துணை, இலனாம் — இல்லாதவனாவான், [ஆதலால்] மாற்றார்க்கு — பகைவர்களுக்கு, ஏமாப்பு — துணையாதலை, உடைத்து — உடையதென்பதாம்.

நீதியை அறிந்திராத அஞ்சுகிற பகைவரைப் பெற்றால் அவரை வெல்லுபவர்களுக்கு உயர்வான இன்பங்கள் நீங்காமல் இருக்குமாம்.

செறுவார்க்கு சேண் இகவா இன்பம் அறிவு இலா அஞ்சும் பகைவர் பெறின்.

9 செறுவார்க்குச் சேண்இகவா இன்பம் அறிவுஇலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். 869

அறிவு — நூல்களை அறிதல், இலா — இல்லாதவனாகவும், அஞ்சும் — அஞ்சுகின்ற தன்மையும் உடைய, பகைவர்ப் பெறின் — பகைவர்களைப் பெற்று விட்டால், செறுவார்க்கு— அவரை வெல்லுபவர்களுக்கு, சேண் — மேலான, இன்பம் — இன்பம், இகவா — நீங்காவாம்.

நீதி நூல்களைக் கல்லாதவனோடு பகைத்தலால் வருகின்ற எளிய பொருள்களை மேற்கொள்ளாதவனை எக்காலத்திலும் புகழ் வந்து சேராது.

கல்லான் வெகுளும் சிறு பொருள் எஞ்ஞான்றும் ஒல்லானை ஒல்லாது ஒளி.

**10 கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்**
**ஒல்லானை ஒல்லாது ஒளி.** 870

கல்லான் — அறநூல்களைக் கல்லாதவனுடன், வெகுளும் — பகைத்தலால் வருகின்ற, சிறு — எளிமையான, பொருள் — பொருள்களை, ஒல்லானை — அடைந்து கொள்ளாதவனை, எஞ்ஞான்றும் — எக்காலத்தும், ஒளி ஒல்லாது — புகழ் அடையாது.

## 88. பகைத்திறம் தெரிதல்

**[பகைவர்களை ஆராய்ந்தறிந்து நடந்து கொள்ளுதல்]**

பகையென்று சொல்லப்படும் தீமை பயப்பது ஒருவன் விளையாட்டிற்காகவும்கூட விரும்புகின்ற தன்மையுடையதன்று.

பகை என்னும் பண்பு இலதனை ஒருவன் நகையேயும் வேண்டற்பாற்று அன்று.

**1 பகைஎன்னும் பண்பி லதனை ஒருவன்**
**நகையேயும் வேண்டற்பாற் றன்று.** 871

பகை — பகை, என்னும் — என்று கூறப்படுகின்ற, பண்பு — பண்பு, இலதனை — இல்லாமல் தீங்கு உண்டாக்குவதனை, ஒருவன் — ஒருவன், நகையேயும் — விளையாட்டிற்காகவேனும், வேண்டல் — விரும்புகின்ற, பாற்று — தன்மை, அன்று — அல்லாததாகும்.

ஒருவன், வில்லினை ஏராகவுடைய உழவரோடு பகை கொண்டானாயினும், சொல்லினை ஏராக வுடைய உழவரோடு பகை கொள்ளாதிருத்தல் வேண்டும்.

வில் ஏர் உழவர் பகை கொளினும் கொள்ளற்க சொல் ஏர் உழவர் பகை.

**2 வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க**
**சொல்லேர் உழவர் பகை.** 872

வில் — வில்லினை, ஏர் — ஏராகவுடைய, உழவர் — உழவருடன், பகை — பகைமை, கொளினும் — கொண்டாலும், சொல் — சொல்லினை, ஏர் — ஏராகவுடைய, உழவர் — உழவரோடு, பகை கொள்ளற்க — பகைமையினைக் கொள்ளாதிருப்பானாக.

தான் தனியனாக இருந்து பலருடன் பகை கொள்ளுபவன் பித்துப் பிடித்தவர்களைவிட அறிவில்லாதவனாவான்.

ஏமுற்றவரினும் ஏழை தமியனாய் பல்லார் பகை கொள்பவன்.

3 ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். 873

தமியனாய் — தன்னந் தனியனாக இருந்து, பல்லார் — பலரிடமும், பகை — பகையினை, கொள்பவன் — கொள்ளுபவன், ஏமுற்றவரினும் — பித்துக் கொண்டவர்களைவிட, ஏழை — அறிவில்லாதவனாவான்.

வேண்டியபோது பகையினையும் நட்பாகவே கொண்டு நடந்து கொள்ளுகின்ற தன்மையுடைய மன்னனது சிறப்பினுள்ளே உலகமானது அடங்கி இருப்பதாகும்.

பகை நட்பா கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகைமைக்கண் தங்கிற்று உலகு.

4 பகைநட்பாக் கொண்டுஒழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு. 874

பகை — பகையினையும், நட்பா — நட்பாகவே, கொண்டு — செய்து கொண்டு, ஒழுகும் — நடந்து ஒழுகுகின்ற, பண்புடையாளன் — தன்மையுடைய மன்னனது, தகைமைக்கண் — சிறப்பினுள்ளே, உலகு தங்கிற்று — உலகமானது அடங்கி இருப்பதாகும்.

தனக்கு உதவியாக இருக்கும் துணை இல்லாமல், துன்பம் கொடுக்கும் பகை இரண்டாக இருந்தால் ஒருவனாக இருக்கும் தான் அப்பகை இரண்டினுள் பொருத்தமான ஒன்றினை அப்போதைக்கு இனிய துணையாகச் செய்து கொள்ளவேண்டும்.

தன் துணை இன்றால் பகை இரண்டால் தான் ஒருவன் இன் துணையா கொள்க [அவற்றின் ஒன்று.

5 தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்
இன்துணையாக் கொள்கஅவற்றின் ஒன்று. 875

தன் — தனக்கு உதவி செய்கின்ற, துணை — துணை, இன்றால் — இல்லாமல், பகை இரண்டு — பகைமை இரண்டாக இருந்தால், தானொருவன் — ஒருவனாக இருக்கும் தான், அவற்றின் — அப்பகைகளுள், இன்துணையா — ஒன்றினை அந்த நேரத்திற்குத் தனக்குத் துணையாக, கொள்க — கொள்ளுதல் வேண்டும்.

பகைவனை முன்பு தெளிந்து அறிந்து இருந்தாலும் அல்லது தெளிந்து அறியாமல் இருந்தாலும் தனக்கு அழிவு வந்துற்றபோது அப்பகைவனைக் கூடாமலும் நீக்கி வைக்காமலும் இடையே விட்டு வைக்க வேண்டும்.

தேறினும் தேறாவிடினும் அழிவின்கண் தேறான் பகான் விடல்.

6 தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல். 876

தேறினும் — பகைவன் முன்பு தெளியப்பட்டவனானாலும், தேறாவிடினும் — தெளியப் படாதவனானாலும், அழிவின்கண் — தனக்குத் தாழ்வு வந்துற்றபோது, தேறான் — அவனுடன் கூடாதவனாயும், பகாஅன்விடல் — பகைத்து நீங்காமலும் நடுவாக விட்டு வைத்திருத்தல் வேண்டும்.

தான் நொந்திருப்பதனைத் தாமாக அறியாதவர்களுக்குச் சொல்லாதிருத்தல் வேண்டும். தனது வலிமையினைப் பார்த்திருக்கும் பகைவரிடத்தில் மேலிட்டுக் கொள்ளாதிருத்தல் வேண்டும்.

நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க மென்மை பகைவர் அகத்து.

7 நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவர் அகத்து. 877

நொந்தது அறியார்க்கு — தான் நொந்து இருப்பதனை அறிந்திராதவர்களுக்கு, நோவற்க — தனது துன்பத்தினைச் சொல்லாதிருத்தல் வேண்டும், மென்மை — வலிமையில்லாத் தன்மையினை, பகைவர் அகத்து — அதனை எதிர் நோக்கி யிருக்கும் பகைவரிடத்தில், மேவற்க — மேலிட்டுத் தெரியப் படுத்தாதிருத்தல் வேண்டும்.

தான் தொழில் செய்யும் வகையினை அறிந்து அது முடித்தற் கேற்றபடி தன்னைப் பெருக்கிக் காத்துக் கொண்டால் தனது பகைவரிடத்தில் உள்ள செருக்கு கெட்டுவிடும்.

வகை அறிந்து தன்செய்து தன்காப்ப மாயும் பகைவர்கண் பட்ட செருக்கு.

8 வகைஅறிந்து தன்செய்து தன்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு. 878

வகை — தொழிலினைச் செய்யும் வகையினை, அறிந்து — அறிந்து தெரிந்து, தன்செய்து — தன்னைப் பெருக்கிக் கொண்டு, தன் காப்ப — தன்னைக் காத்துக் கொண்டால், பகைவர் கண் — தனது பகைவரிடத்தில், பட்ட செருக்கு — உண்டான செருக்கு, மாயும் — அழிந்து விடும்.

களைய வேண்டிய முள் மரத்தினை இளையதாக இருக்கும் போதே களைந்து விடுதல் வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் முதிர்ந்தபோது களைபவர் கையினை அதுதானே கெடுக்கும்.

இளைதாக முள் மரம் கொல்க களையுநர் கை கொல்லும் காழ்த்த இடத்து.

9 இளைதாக முள்மரங் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து. 879

முள் — முள்ளாகிய, மரம் — மரத்தினை, இளைதாக — இளையதாக இருக்கும்போதே, கொல்க — களைதல் வேண்டும், காழ்த்தவிடத்து — முதிர்ந்துவிட்டபோது, களையுநர் — களைபவருடைய, கை கொல்லும் — கையினைக் கெடுக்கும்.

தம்முடன் பகைப்பவரது தருக்கினைக் கெடுக்கக் கூடியவராய் இருந்து, இகழ்ச்சியால் அது செய்யாத அரசர், பிறகு மூச்சுவிடும் அளவிற்கும் உயிருடன் இருப்பவராக மாட்டார்.

உயிர்ப்ப உளர் அல்லர் மன்ற செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார்.

10 உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். 880

செயிர்ப்பவர் — தம்முடன் பகைக்கும் பகைவருடைய, செம்மல் — தருக்கினை, [அழிக்கும் நிலையில் இருந்தும்] சிதைக்கலாதார் — இகழ்ச்சியால் அழிக்காத வேந்தர், உயிர்ப்ப — மூச்சு விடுகின்ற அளவிற்கும், மன்ற — உறுதியாக, உளர் — இருப்பவர், அல்லர் — அல்லர் என்பதாகும்.

## 89. உட்பகை

### [உடனிருந்துகொண்டே தீமை செய்யும் பகைவர்கள்]

நிழலும் நீரும் முன்னர் இனியவைபோல் இருந்தாலும் பின்னர் நோய் செய்வனவாகும். அதுபோல உட்பகையினர் முன்னர் இனியவரே யானாலும் பின்னர் தீங்கு பயப்பவரா வார்கள்.

நிழல் நீரும் இன்னாத இன்னா தமர் நீரும் இன்னாவாம் இன்னா செயின்.

1 நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின். 881

நிழலும் — நுகரப்படுவனவாகிய நிழலும், நீரும் — நீரும், இன்னாத — பின்பு நோய் செய்யுமாம், இன்னா — இனிமையானவையல்ல, தமர் — தம்மவர் [உட்பகையாயினோர்], நீரும் — தன்மைகளும், இன்னாசெயின் — முன்னர் இன்பம் செய்தாலும் பின்னர் துன்பம் தருபவையாகும் [ஆதலால்], இன்னாவாம் — இனிமையானவை யல்ல.

வாள் போல வெளிப்பட்டு நிற்கும் பகைவர்களுடைய பகைமைக்கு அஞ்சாதிருத்தல் வேண்டும். உறவு போலவே மறைந்து நிற்கும் பகைவர்களின் நட்பினை அஞ்சுதல் வேண்டும்.

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக கேள்போல் பகைவர் தொடர்பு.

2 வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 882

வாள் — வெட்டுகின்ற வாளினை, போல — போன்று வெளிப்பட்டிருக்கும், பகைவரை — பகைவர்களுக்கு, அஞ்சற்க — அஞ்சாதிருக்க வேண்டும், கேள்போல் — உறவினர்கள் போல் காட்டி [பகைமையினை மறைத்து வைத்திருக்கும்], பகைவர் — பகைவருடைய [உட்பகை], தொடர்பு அஞ்சுக — நட்பினை அஞ்சியிருத்தல் வேண்டும்.

உட்பகைக்கு அஞ்சித் தன்னைக் காத்துக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு செய்யா விட்டால், குயவன் மடகலத்தினை அறுக்கும் கருவிபோல மறைவாக இருந்தே கெடுத்து விடுவர்.

உட்பகை அஞ்சி தற்காக்க உலைவிடத்து மட்பகையின் மாண தெறும்.

3 உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். 883

உட்பகை — உட்பகைக்கு, அஞ்சி — அச்சப்பட்டு, தற்காக்க — தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும், [அப்படி நடக்காவிட்டால்] உலைவிடத்து — தமக்கு ஒரு சோர்வு வந்தபோது, மட்பகையின் — குயவன் மட்கலத்தினை அறுக்கின்ற கருவிபோல, மாண — தப்பாமல், தெறும் — உட்பகையினர் கெடுத்துவிடுவர்.

புறத்தில் திருந்தியதுபோல இருந்து உள்ளுக்குள்ளே திருந்தாத உட்பகை உண்டாகி விட்டால் அது அவனுக்குத் தனது சுற்றத்தார் தனது வசப்படாமைக்குக் காரணமான குற்றம் பலவற்றையும் கொடுக்கும்.

மனம் மாணா உட்பகை தோன்றின் இனம் மாணா ஏதம் பலவும் தரும்.

4 மனம்மாணா உட்பகை தோன்றின் இனம்மாணா
ஏதம் பலவும் தரும். 884

மனம் — மனம், மாணா — திருந்தாத, உட்பகை — உள்ளுக்குள்ளான பகை, தோன்றின் — உண்டாகிவிட்டால், இனம் — சுற்றம், மாணா — தனது வசம் இல்லாமைக்குக் காரணமான, ஏதம் — குற்றம், பலவும் — பலவற்றையும், தரும் — தந்துவிடும்.

புறத்தில் உறவு முறைத் தன்மையோடு கூடிய உட்பகை வேந்தனுக்கு உண்டாகி விட்டால் அது அவனுக்கு இறத்தல் முதலிய குற்றங்களையெல்லாம் தந்துவிடும்.

உறல் முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான் ஏதம் பலவும் தரும்.

5 உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்
ஏதம் பலவும் தரும். 885

உறல் — உறவின், முறையான் — முறையினர் இயல்போடு சேர்ந்த, உட்பகை — உட்பகையானது, தோன்றின் — தோன்றிவிட்டால், இறல் — இறத்தல், முறையான் — தன்மையோடு கூடிய, ஏதம் — குற்றங்கள், பலவும் — பலவற்றையும், தரும் — தந்துவிடும்.

பகைமை தனக்கு உள்ளாயினாரிடத்திலேயே உண்டாகி விடுமானால் அரசனுக்கு இறவாமை என்பது முடியாததாகிவிடும்.

ஒன்றாமை ஒன்றியார்கண் படின் எஞ்ஞான்றும் பொன்றாமை ஒன்றல் அரிது.

6 ஒன்றாமை ஒன்றியார் கண்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது. 886

ஒன்றாமை — பகை என்பது, ஒன்றியார் கண்படின் — உள்ளுக்குள்ளே இருப்பவரிடத்தில் உண்டாகிவிடுமானால், பொன்றாமை — இறவாதிருத்தல், ஒன்றல் — முடியும் என்பது, எஞ்ஞான்றும் அரிது — எந்த நாளிலும் அருமையானதாகும். [முடியாததாகும்.]

செப்பு ஒன்றுகூடி இருப்பதுபோலப் புறத்தில் வேற்றுமை தெரியாமல் கூடினாராயினும் உட்பகை உண்டான குடியிலுள்ளவர்கள் மனத்தால் தம்முள் கூட மாட்டார்கள்.

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே உட்பகை உற்ற குடி.

7 செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி. 887

செப்பின் — செப்பினுடைய, புணர்ச்சி போல் — சேர்ந்திருக்கும் தன்மை போல், கூடினும் — [வெளித் தோற்றத்திற்குக்] கூடிக் காணப்பட்டாலும், உட்பகை — உள்ளாகிய பகை, உற்றகுடி — உண்டாகியிருக்கும் குடியிலுள்ளவர்கள், கூடாதே — மனத்தால் கூடமாட்டார்கள்.

உட்பகை உண்டாகியிருக்கும் குடியானது அரத்தினால் தேய்க்கப்பட்ட இரும்பினைப் போலத் தேய்க்கப்பட்டுத் தனது வலிமை தேய்ந்துவிடுவதாகும்.

அரம் பொருத பொன் போல தேயும் உரம் பொருது உட்பகை உற்றகுடி.

8 அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி. 888

உட்பகை — உட்பகையானது, உற்ற — உண்டாகியிருக்கும், குடி — குடியானது, அரம் — அரத்தினால், பொருத — தேய்க்கப்பட்ட, பொன் போல் — இரும்பினைப் போல, பொருது— தேய்க்கப்பட்டு, உரம் தேயும் — தனது வலிமை தேய்ந்துவிடும்.

உட்பகை எள்ளின் அளவுபோன்று சிறுமையுடையதே ஆனாலும், பெருமையெல்லாம் அழிக்கக் கூடிய கேடு அதனுள்ளே இருப்பதாகும்.

எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும் உட்பகை உள்ளதாம் கேடு.

9 எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு. 889

உட்பகை — உட்பகையானது, எட்பகவு — எள்ளினது பிளவினை, அன்ன — ஒத்திருக்கும், சிறுமைத்தே — சிறுமையுடையதே, ஆயினும் — ஆனாலும், கேடு உள்ளதாம் — அதனால் வரும் கெடுதி அதனுள்ளே இருப்பதாகும்.

உள்ளத்தில் பொருத்தம் இல்லாதவரோடு கூடிவாழும் வாழ்க்கை ஒரு குடிசையினுள்ளே பாம்புடன் கூடிவாழ்வதைப் போன்றதாகும்.

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள் பாம்போடு உடன் உறைந்தற்று.

10 உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடன்உறைந் தற்று 890

உடம்பாடு — மனப் பொருத்தம், இலாதவர் — இல்லாதவருடன், வாழ்க்கை — கூடி வாழ்கின்ற வாழ்க்கையானது, குடங்கருள் — ஒரு குடிசையினுள், பாம்போடு — பாம்புடன் உடன் — சேர்ந்து, உறைந்தற்று — வாழ்வதைப் போன்றதாகும்.

## 90. பெரியாரைப் பிழையாமை

**[ஆற்றல்களினால் பெரியாராயினோரை அவமதித்து நடக்காதிருத்தல்]**

எடுத்ததை முடிக்கும் ஆற்றல் படைத்தவர்களுடைய வல்லமைகளை அவமதியாது நடந்து கொள்ளுதல் என்பது, தமக்குத் தீங்கு வராமல் செய்யும் காவல்கள் எல்லாவற்றிலும் மிக்கதாகும்.

**ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை.**

**1 ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்**
**போற்றலுள் எல்லாம் தலை.** 891

ஆற்றுவார் — நந்த ஆற்றல் மிக்கவர்களின், ஆற்றல் இகழாமை — வல்லமைகளை இகழாதிருந்தல், போற்றுவார் — தமக்குத் தீமை வராமல் காப்பவருடைய, போற்றலுள் — போற்றிக் காக்கும் காவல்கள், எல்லாம் தலை — எல்லாவற்றினும் சிறந்ததாகும்.

ஆற்றல்களினால் பெரியாராயினோரைப் போற்றாமல் அவமதித்து நடப்பானானால் அப் பெரியாரால் எக்காலத்திலும் அவனுக்கு நீங்காத துன்பங்கள் உண்டாகும்.

**பெரியாரை பேணாது ஒழுகின் பெரியாரால் பேரா இடும்பை தரும்.**

**2 பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்**
**பேரா இடும்பை தரும்.** 892

பெரியாரை — ஆற்றல்களினால் பெரியார்கள் ஆனவர்களை, பேணாது — நன்கு போற்றி மதியாமல், ஒழுகின் — நடப்பாராகில், பெரியாரால் — அப்பெரியார்களால், பேரா — நீங்காத, இடும்பை — துன்பங்கள், தரும் — உண்டாவதாகும்.

பிறரை அழிக்க வேண்டியபோது அதனை அப்பொழுதே செய்யவல்ல ஆற்றல் படைத்தவர் களிடத்தில், தான் கெட்டுவிட விரும்பினால் நீதி நூல்களையும் கடந்து குற்றங்களைச் செய்வானாக.

**கெடல் வேண்டின் கேளாது செய்க அடல் வேண்டின் ஆற்று பவர்கண் இழுக்கு.**

**3 கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்**
**ஆற்று பவர்கண் இழுக்கு.** 893

அடல் — மாற்றாரைக் கொல்ல, வேண்டின் — வேண்டியபோது, ஆற்றுபவர்கண் — அதனைச் செய்யவல்ல மன்னரிடத்தில், இழுக்கு — குற்றத்தினை, கெடல் — தான் கெட்டுப் போக, வேண்டின் — விரும்பினால், கேளாது — நீதி நூல்களில் கூறியவற்றையும் கேளாமல், செய்க — செய்வானாக.

ஆற்றல் மிக்கவர்களுக்கு அவ்வாற்றல் இல்லாதார் தாம் முற்பட்டுத் துன்பத்தினைச் செய்தல், தானே வரக்கூடிய கூற்றுவனை அதற்கு முன்னதாகவே கையால் அழைத்தது போன்றதாகும்.

கூற்றத்தை கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல்.

**4 கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு**
**ஆற்றாதார் இன்னா செயல்.** 894

ஆற்றுவார்க்கு — ஆற்றல் மிக்கவர்களுக்கு, ஆற்றாதார் — ஆற்றல் இல்லாதார், இன்னா செயல் — துன்பங்களைச் செய்தல், கூற்றத்தை — உயிர் கொள்ளும் கூற்றுவனை, கையால் விளித்தற்று — கையினைக் காட்டி அழைத்ததற்குச் சமமாகும்.

வலிமை மிகுந்த வேந்தனால் கோபிக்கப்பட்டவர்கள் அவனிடமிருந்து தப்பி எங்கே சென்றாலும் உயிர் வாழமாட்டார்கள்.

யாண்டு சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர்.

**5 யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்**
**வேந்து செறப்பட் டவர்.** 895

வெந்துப்பின் — மிக்க வல்லமை நிறைந்த, வேந்து — வேந்தனால், செறப்பட்டவர் — கோபிக்கப்பட்டவர்கள், யாண்டு — அவனிடமிருந்து தப்பி எங்கே, சென்று — போய் இருப்பவர், யாண்டும் — எந்த இடத்திலும், உளர் — இருப்பவர், ஆகார் — ஆகமாட்டார்கள்.

தீயாற் சுடப்பட்டாலும் ஒரு வழியில் உயிர்த் தப்புதல் முடியும். பேராற்றல் கொண்ட பெரியோர்களுக்குக் குற்றம் செய்து நடந்து கொள்பவர்கள் எவ்விதத்திலும் உயிர் தப்புதல் முடியாததாகும்.

எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம் உய்யார் பெரியார் பிழைத்து ஒழுகுவார்.

**6 எரியாற் சுடப்படினும் உய்வுஉண்டாம் உய்யார்**
**பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.** 896

எரியால் — [காட்டிற்குச் சென்றவன்] அவ்விடத்தில் நெருப்பினால், சுடப்படினும் — சுடப்பட்டாலும், உய்வு உண்டாம் — ஒரு வழியில் உயிர் தப்புதல் உண்டாகும். பெரியார் — ஆற்றல் மிக்க பெரியார்களுக்கு, பிழை — குற்றம் செய்து, ஒழுகுவார் — நடப்பவர்கள், உய்யார் — எவ்வழியிலும் உயிர் தப்பிக்க மாட்டார்கள்.

மாட்சிமைப்பட்டுப் பெருமை நிறைந்தவர்கள், அருந்தவத்தோர் கோபிப்பாராயின் மிகச் சிறப்பான அவர்களுடைய வாழ்வும் பெரும் பொருளும் என்னவாகும்?

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம் தகைமாண்ட தக்கார் செறின்.

7 வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்
தகைமாண்ட தக்கார் செறின். 897

தகைமாண்ட — ஆற்றல் மிக்க பெருமையால் சிறப்படைந்த, தக்கார் — அருந்தவத்தோர், செறின் — சினம் கொள்ளுவாரானால், வகைமாண்ட — பலவகை உறுப்புக்களால் பெருமைப் பட்ட, வாழ்க்கையும் — உயர்ந்த அரச வாழ்க்கையும், வான் — ஈட்டி வைத்த மிகப் பெரிய, பொருளும் — பொருளும், என்னாம் — என்னவாகும்?

குன்றினையொத்த அருந்தவத்தோர் கெட்டுப் போகுமாறு நினைப்பாராயின் அப்போதே இப்பூமியில் நிலைபெற்றுள்ள செல்வந்தர் தம் குடியோடும் அழிவர்.

குன்று அன்னார் குன்ற மதிப்பின் குடியொடு நின்று அன்னார் மாய்வர் நிலத்து.

8 குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. 898

குன்று — மலைக்குன்றினை, அன்னார் — ஒத்த அருந்தவப் பெரியார்கள், குன்ற மதிப்பின் — ஒருவன் கெட்டுவிட நினைப்பாரானால், நிலத்து — பூமியில், நின்றன்னார் — நிலைத்து இருப்பதைப் போன்ற செல்வந்தர், குடியொடு மாய்வர் — தமது குடியுடன் அப்போதே மடிந்துவிடுவர்.

காத்தற்கு அருமையான உயர்ந்த நோன்புகளையுடையார் கோபிப்பாராயின் அவர் ஆற்றலால் வேந்தனும் தனது நிலைகெட்டு அழிவான்.

ஏந்திய கொள்கையார் சீறின் இடை முரிந்து வேந்தனும் வேந்து கெடும்.

9 ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். 899

ஏந்திய — உயர்ந்த, கொள்கையார் — நோன்பு கொண்ட கொள்கையாளர்கள், சீறின் — சினம் கொள்ளுவாரானால், இடை — நடுவே, வேந்து முரிந்து — தனது ஆட்சி நிலைகெட்டு, வேந்தனும் கெடும் — சிறந்த அரசன் தானும் கெட்டுப் போவான்.

மிக்க தவத்தினையுடையார் கோபிப்பாராயின் அவரால் கோபிக்கப்பட்டவர் மிகப் பெரிய படைபலம் முதலியன உடையவராயினும் தப்பிக்க மாட்டார்.

இறந்து அமைந்த சார்பு உடையர் ஆயினும் உய்யார் சிறந்து அமைந்த சீரார் செறின்.

10 இறந்துஅமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்துஅமைந்த சீரார் செறின். 900

சிறந்து — மிகவும் சிறப்பாக, அமைந்த — அமைந்த, சீரார் — தவஆற்றல் பெற்றவர், செறின் — சினம் கொண்டுவிட்டால், இறந்து — மிகவும் பெரியதாக, அமைந்த — அமைந்த, சார்புடையர் — சார்பாகிய துணைகள் பலவும் உடையவர்கள், ஆயினும் உய்யார் — தப்பித்துவிட மாட்டார்கள்.

## 91. பெண்வழிச் சேறல்

[மிகுந்த காமத்தால் மனைவிக்கு ஏவல் செய்து அவள் வழி நடத்தல்]

மிகுந்த பெண்ணின்பம் காரணமாக மனையாளை விரும்பி அவள் தன்மையராக நடப்பவர்கள், தமக்குத் துணையான அறத்தினை அடையமாட்டார்கள். பொருள் சம்பாதிக்க முயல்வோரை அப்பொருளில் செல்லவொட்டாமல் தடுப்பதும் அவ்வின்பமேயாகும்.

மனை விழைவார் மாண் பயன் எய்தார் வினை விழைவார் [வேண்டாப்பொருளும் அது.

1 மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது. 901

மனை — இன்பம் காரணமாக மனையாளை, விழைவார் — விரும்பி அவள் வழி நடப்பவர், மாண் — மாட்சிமைப்பட்ட, பயன் — அறமாகிய பயனை, எய்தார் — அடையமாட்டார்கள். வினை விழைவார் — பொருள் ஈட்ட முயல்பவர்கள், வேண்டா — தடையானதென்று இகழும், பொருளும் — பொருளும், அது — அவ்வின்பமேயாகும்.

தனது ஆண்மையினை விட்டு மனையாளது பெண்மையினை விரும்புவான் எய்தி நின்ற செல்வம் இவ்வுலகத்து ஆண்பாலர்க்கெல்லாம் நாணுதலைக் கொடுக்கும்.

பேணாது பெண் விழைவான் ஆக்கம் பெரியது ஓர் நாண் ஆக நாணும் தரும்.

2 பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். 902

பேணாது — தனது ஆண் தன்மையினைப் போற்றி விரும்பாமல், பெண் — மனையாளது பெண் தன்மையினை, விழைவான் — விரும்பி இருப்பவன், ஆக்கம் — பெற்ற செல்வம் பெரியதோர் — பெரிதானதொரு, நாண் ஆக — ஆடவர்களுக்கெல்லாம் நாணம் உண்டாக்கி, நாணுத்தரும் — தனக்கும் நாணத்தினைக் கொடுக்கும்.

ஒருவன் தனது இல்லாளிடத்தில் தாழ்ந்திருப்பதற்குக் காரணமான அச்சம், அது இல்லாதவராகிய நல்லாரிடம் செல்லுங்கால் நாணுதலை எக்காலத்திலும் அவனுக்குக் கொடுக்கும்.

இல்லாள்கண் தாழ்ந்த இயல்பு இன்மை எஞ்ஞான்றும் நல்லாருள் நாணு தரும்.

**3 இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்**
**நல்லாருள் நாணுத் தரும். 903**

இல்லாள்கண் — மனைவியினிடத்தில், தாழ்ந்த — தாழ்ந்து பயந்து கிடக்கும், இயல்பின்மை — இயல்பல்லாத தன்மை, நல்லாருள் — நல்லவரிடத்தில் [செல்லும் போது] நாணு — நாணம் அடைதலை, எஞ்ஞான்றும் தரும் — எக்காலத்திலும் அவனுக்குத் தருவதாகும்.

மனையாளை அஞ்சும் [அஞ்சி நடக்கும்] மறுமைப் பயன் இல்லாதவனுக்குத் தொழிலை ஆளும் தன்மை உண்டான போதும் நல்லோரால் பாராட்டப்படமாட்டாது.

மனையாளை அஞ்சும் மறுமை இலாளன் வினை ஆண்மை வீறு எய்தல் இன்று.

**4 மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்**
**வினையாண்மை வீறுஎய்தல் இன்று. 904**

மனையாளை — தனது மனைவிக்கு, அஞ்சும் -- பயந்து ஒழுகுகின்ற, மறுமை — மறுமைப் பயன், இலாளன் — இல்லாதவனுக்கு, வினை — தொழிலில், ஆண்மை — ஆளும் தன்மை [இருந்த போதும்], வீறு — நல்லோரால் கொண்டாடப்படுதலை, எய்தல் — பெறுதல், இன்று — இல்லையாகும்.

தனது மனையாளுக்கு அஞ்சி நடப்பவன் தான் தேடிய பொருளேயானாலும் நல்லவர்களுக்கு எப்போதும் நல்லன செய்தற்கு அஞ்சி இருப்பவனாவான்.

இல்லாளை அஞ்சுவான் அஞ்சும் மற்று எஞ்ஞான்றும் நல்லார்க்கு நல்ல செயல்.

**5 இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற்று எஞ்ஞான்றும்**
**நல்லார்க்கு நல்ல செயல். 905**

இல்லாளை — மனைவிக்கு, அஞ்சுவான் — அஞ்சுகின்றவன், நல்லார்க்கு — நல்லவர்களுக்கு, நல்ல — நல்லனவற்றை, செயல் — செய்தற்கு, எஞ்ஞான்றும் அஞ்சும் — எந்நாளிலும் அஞ்சுபவனாவான்.

தம் இல்லாளுடைய வேய் போன்ற தோள்களுக்கு அஞ்சி நடப்பவர் இமையவர்கள் போல இவ்வுலகில் வாழ்ந்தாலும் ஆண்மை இல்லாதவராவார்.

இமையாரின் வாழினும் பாடு இலரே இல்லாள் அமை ஆர்தோள் அஞ்சுபவர்.

6 இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்
அமைஆர்தோள் அஞ்சு பவர். 906

இல்லாள் — இல்லாளுடைய, அமையார் — மூங்கில் போன்ற, தோள் — தோள்களுக்கு, அஞ்சுபவர் — அஞ்சுகிறவர்கள், இமையாரின் வாழினும் — இமையவர்களைப் போல வாழ்ந்தாலும், பாடு — பெருமை, இலரே — இல்லாதவர்களேயாவார்கள்.

நாணம் இல்லாமல் இல்லாளுக்கு ஏவல் தொழில் செய்து திரிகின்றவனுடைய ஆண் தன்மையினைவிட நாணமுடைய பெண்தன்மையே பெருமையுடையதாகும்.

பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின் நாண் உடை பெண்ணே [பெருமை உடைத்து.

7 பெண்ஏவல் செய்தொழுகும் ஆண்மையின் நாண்உடைப்
பெண்ணே பெருமை உடைத்து. 907

பெண் — மனைவிக்கு, ஏவல் செய்து — அவள் கட்டளையிட்ட தொழிலினைச் செய்து கொண்டு, ஒழுகும் — நடக்கின்ற, ஆண்மையின் — ஆண்தன்மையினைக் காட்டிலும், நாண் — நாணத்தினை, உடை — உடைய, பெண்ணே — பெண்தன்மையே, பெருமை உடைத்து — பெருமையினை உடையதாகும்.

தன் விருப்பப்படி அல்லாமல் தனது மனையாள் வேண்டியவாறு நடப்பவர் தம்முடன் நட்பு கொண்டவர் குறையினை முடிக்க மாட்டார். நல்ல அறச் செயலையும் செய்ய மாட்டார்.

நட்டார் குறை முடியார் நன்று ஆற்றார் நல் நுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர்.

8 நட்டார் குறைமுடியார் நன்றுஆற்றார் நல்நுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர். 908

நல் — அழகுள்ள, நுதலாள் — நெற்றியினையுடைய இல்லாள், பெட்டாங்கு — வேண்டியபடி, ஒழுகுபவர் — நடப்பவர்கள், நட்டார் — நண்பர்களது, குறை முடியார் — குறைபாட்டினைச் செய்து முடிக்க மாட்டார்கள், நன்று ஆற்றார் — நல்ல அறத்தினையும் செய்து முடிக்க மாட்டார்கள்.

அறச் செயலும், அது முடித்தற்குக் காரணமான பொருட் செயலும், இவ்விரண்டிற்கும் வேறான இன்பச் செயலும் தனது மனையாளுக்கு ஏவல் செய்பவரிடத்தில் உண்டாகா.

அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும் பெண் ஏவல் செய்வார்கண் இல்.

**9 அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்**
**பெண்ஏவல் செய்வார்கண் இல். 909**

அறவினையும் — அறமான செயலும், ஆன்ற பொருளும் — அது முடித்தற்கான பொருட் செயலும், பிற — மற்ற, வினையும் — இன்பச் செயல்களும், பெண் — மனையாளுக்கு, ஏவல் — ஏவல் தொழில், செய்வார்கண் — செய்பவர்களிடத்தில், இல் — உண்டாவதில்லையாம்.

தொழிலினிடத்தில் ஆலோசனையுள்ள நெஞ்சத்தினையும் அதனாலாய செல்வத்தினையும் உடைய வேந்தர்க்கு மனையாளைச் சேர்தலால் விளையும் பேதைமை எக்காலத்திலும் உண்டாகாது.

எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு எஞ்ஞான்றும் பெண்சேர்ந்துஆம் [பேதைமை இல்.

**10 எண்சேர்ந்த நெஞ்சத்து இடன்உடையார்க்கு எஞ்ஞான்றும்**
**பெண்சேர்ந்தாம் பேதைமை இல். 910**

எண் — செயல் சிந்தனையில், சேர்ந்த — சென்ற, நெஞ்சத்து — நெஞ்சத்தினையும், இடன் உடையார்க்கு — அதனாலான செல்வத்தினையும் உடையவர்களுக்கு, பெண் — மனையாளை, சேர்ந்தாம் — சார்ந்தே நடப்பதால் உண்டாகும், பேதைமை — அறியாமை, எஞ்ஞான்றும் இல் — எக்காலத்திலும் உண்டாகாது.

## 92. வரைவின் மகளிர்

[ஆவார், ஆகாதார் என்ற வரையில்லாத பொதுமகளிர்]

ஒருவனை அன்புபற்றி விரும்பாமல் பொருள்பற்றி விரும்புகிற மகளிருடைய இனிய சொற்கள் துன்பத்தினைக் கொடுக்கும்.

அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய் தொடியார் இன்சொல் இழுக்கு தரும்.

**1 அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்**
**இன்சொல் இழுக்குத் தரும். 911**

அன்பின் — யாரையும் மனத்தில் அன்பு கொண்டு, விழையார் — விரும்பாமல், பொருள் — பொருளைக் கருதியே, விழையும் — விரும்புகின்ற, ஆய் தொடியார் — ஆய்ந்தவளையல் களையுடைய வரைவின் மகளிர், இன் — இனிய, சொல் — சொற்கள், இழுக்குத் தரும் — துன்பத்தினைக் கொடுப்பதாகும்.

ஒருவனுக்கு உள்ள பொருளை அளந்தறிந்து அதனை அடையும் வரையில் பண்புடைமை பேசும் பண்பில்லாத மகளிரது நடத்தையினை ஆராய்ந்தறிந்து அவர்களைப் பொருந்தாது விடுதல் வேண்டும்.

பயன் தூக்கி பண்பு உரைக்கும் பண்பு இல் மகளிர் நயன் தூக்கி நள்ளா விடல்.

**2 பயன்தூக்கிப் பண்புஉரைக்கும் பண்புஇல் மகளிர்**
**நயன்தூக்கி நள்ளா விடல். 912**

பயன் — தமக்கு வரும் பொருளை, தூக்கி — அளந்தறிந்து, பண்பு — தமது பண்புடைமையினை, உரைக்கும் — சொல்லும், பண்புஇல் — நற்குணம் இல்லாத, மகளிர் — பொது மகளிரது, நயன் — நடத்தையினை, தூக்கி — ஆராய்ந்தறிந்து, நள்ளாவிடல் — அவர்களைப் பொருந்தாமல் விட்டுவிடுதல் வேண்டும்.

பொருளையே விரும்பும் பொது மகளிரது பொய்ம்மையுடைய முயக்கம் பிணம் தூக்குவோர் இருட்டறையொன்றில் முன்னறியாத பிணத்தினைத் தழுவினது போன்றதாகும்.

பொருள் பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டு அறையில் ஏதில் பிணம் தழீஇ அற்று.

**3 பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
**ஏதில் பிணந்தழீஇ யற்று. 913**

பொருட் பெண்டிர் — கொடுப்பவர்களை இச்சிக்காமல் பொருளையே விரும்பும் பொது மகளிரது, பொய்ம்மை — பொய்ம்மையுடைய, முயக்கம் — தழுவுதல் என்பது, இருட்டு — இருண்ட, அறையில் — அறையில், ஏதில் — அறிந்திராத, பிணம் தழீஇ யற்று — பிணத்தினைத் தழுவியது போன்றதாகும்.

அருளோடு கூடிய பொருளை ஆராயும் அறிவினையுடையார் இன்பமாகிய பொருளை இழந்து பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது அற்ப இன்பத்தினைத் தீண்டமாட்டார்கள்.

பொருள் பொருளார் புல்நலம் தோயார் அருள் பொருள் ஆயும் அறிவினவர்.

**4 பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்**
**ஆயும் அறிவி னவர். 914**

பொருட் பொருளார் — பொருளையே பொருளாக விரும்பி இன்பத்தினை விரும்பாத மகளிரது, புன்னலம் — புல்லிய அற்பமான இன்பத்தினை, அருள் — அருளுடன் பொருந்திய, பொருள் — மெய்ப் பொருளினை, ஆயும் — ஆராய்ந்து சேர்க்கும், அறிவினவர் தோயார் — அறிவினையுடையவர்கள் தீண்டமாட்டார்கள்.

ஈகைத் தன்மை இல்லாததால் ஒருவராலும் விரும்பப்படாத ஒருவன் செல்வம் பெற்றிருத்தலானது, ஊரின் நடுவில் இருக்கும் நச்சுமரம் பழுத்ததைப் போன்றதாகும்.

நச்சப்படாதவன் செல்வம் நடு ஊருள் நச்சுமரம் பழுத்த அற்று.

8 நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று. 1008

நச்சப்படாதவன் — ஈகைக் குணமே இல்லாததால் பிறரால் சிறிதும் விரும்பப்படாதவன், செல்வம் — செல்வம் பெற்றிருத்தல், நடுஊருள் — ஊர் நடுவில் இருக்கும், நச்சு — நஞ்சாகிய, மரம் — நச்சுமரம், பழுத்தற்று — பழுத்திருப்பது போன்றதாகும்.

நண்பர்கள் சுற்றத்தார் முதலியவர்களிடம் அன்பில்லாமல் வேண்டியவற்றை நுகராமல் தன்னையும் வருத்திக் கொண்டு வறியார்க்கு ஈதல் முதலிய அறத்தினையும் செய்ய நினையாமல் சேர்த்த சிறந்த பொருளினைப் பிறர் கொண்டுபோய்ப் பயன் அடைவார்கள்.

அன்பு ஒரீஇ தன்செற்று அறம் நோக்காது ஈட்டிய ஒண் பொருள் கொள்வார் பிறர்.

9 அன்புஒரீஇத் தற்செற்று அறம்நோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர். 1009

அன்பு — அன்பு செய்வதனை, ஒரீஇ — ஒழித்து, தற்செற்று — நுகராமல் தன்னையும் வருத்தி, அறம் நோக்காது — அறம் செய்தவனையும் நினைக்காமல், ஈட்டிய — சேகரித்த ஒண் — சிறப்பானதாகிய, பொருள் — பொருளினை, பிறர் — மற்றவர், கொள்வார் — எடுத்துக் கொண்டு போய்ப் பயன் பெறுவர்.

புகழினை உடைத்தாகிய செல்வத்தினைப் பெற்றவரது சிறிதுகால வறுமை, உலகத்தினைக் காப்பாற்றுகிற மேகம் வறுமை மிகுந்தது போல்வதோர் தன்மையினை உடையது.

சீர் உடை செல்வர் சிறு துனி மாரி வறம் கூர்ந்த அனையது உடைத்து.

10 சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனையது உடைத்து. 1010

சீர் — புகழுடையதான, உடைச்செல்வர் — செல்வத்தினையுடையவரது, சிறு — சிறிது காலமே நிற்கின்ற, துனி — வறுமையானது, மாரி — மேகம், வறங்கூர்ந்த அனையது — வறுமை மிகுந்தது போன்றதோர் தன்மையினை, உடைத்து — உடையதாகும்.

## 102. நாண் உடைமை

**[இழி செயல்களைச் செய்ய நாணுதல்]**

நன்மக்களுடைய நாணம் என்பதாவது இழிந்த செயல்கள் செய்ய நாணுதலாகும். அப்படி இன்றி மனம் மொழி மெய்கள் ஆகின்ற பிற அடக்கத்தினால் வருகின்ற நாணம் என்றால் அது அழகிய நுதலினையுடைய குலமகளிர் நாண வேண்டிய தன்மைகள் ஆகும்.

கருமத்தான் நாணுதல் நாணு திரு நுதல் நல்லவர் நாணு பிற.

**1 கருமத்தான் நாணுதல் நாணுத் திருநுதல்**
**நல்லவர் நாணுப் பிற. 1011**

நாணு — நன்மக்களின் நாணம் என்பது என்னவென்றால், கருமத்தால் — இழிவான செயல்கள் செய்வதற்கு, நாணுதல் — நாணம் அடைதலாகும், பிற — அவ்வாறல்லாமல், [மனம், மொழி, மெய்களால் வரும் நாணங்கள்] திரு — அழகிய, நுதல் — நுதலினையுடைய, நல்லவர் — நல்ல குலமகளிர், நாணு — நாணங்கள் என்பதாகும்.

உணவும் உடையும் மற்றவைகளும் எல்லா உயிர்களுக்கும் பொதுவேயாகும். நன்மக்களுக்குச் சிறப்பாவது நாணமுடைமையேயாகும்; மற்றவை யல்ல என்பதாம்.

ஊண் உடை எச்சம் உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல நாண் உடைமை மாந்தர் சிறப்பு.

**2 ஊண்உடை எச்சம் உயிர்க்குஎல்லாம் வேறல்ல**
**நாண்உடைமை மாந்தர் சிறப்பு. 1012**

ஊண் — உண்ணும் உணவும், உடையும் — உடையும், எச்சம் — மற்றவைகளும், உயிர்க்கெல்லாம் — எல்லா உயிரினங்களுக்கும், வேறு — வேறானதாக, அல்ல — அல்லவாம் [பொதுவாக அமைந்திருப்பனவாகும்], மாந்தர் — நன்மக்களுக்கு, சிறப்பு — சிறப்பாக இருக்க வேண்டியது [ என்னவென்றால் ], நாணுடைமை — நாணம் உடைமை என்பதேயாகும்.

எல்லா உயிர்களும் உடம்பினைத் தமக்கு நிலைக்களனாகக் கொண்டு அதை விடாதிருப்பன வாகும். அதுபோல சால்பு என்ற உயர்ந்த தன்மை நாணம் என்பதனை நிலைக்களனாகக் கொண்டு அதனை விடாது.

ஊனை குறித்த உயிர் எல்லாம் நாண் என்னும் நன்மை குறித்தது சால்பு.

**3 ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்**
**நன்மை குறித்தது சால்பு. 1013**

உயிர் — உயிரினங்கள், எல்லாம் — எல்லாம், ஊனைக் குறித்த — உடம்பினை இருப்பிடமாகக் கொண்டு அதனைவிடாமல் இருக்கின்றன, சால்பு — நிறைகுணம் என்னும் சான்றாண்மை, நாண் — நாணம், என்னும் — என்கின்ற, நன்மை — நற்குணத்தினை, குறித்தது — தனக்கு இருப்பிடமாகக் கொண்டிருப்பதாகும்.

சான்றோர்களுக்கு நாணுடைமை என்பது ஆபரணமாகும். அந்த ஆபரணம் இல்லையானால், அவருடைய பெருந்தன்மையான நடை கண்டார்க்குப் பிணியாவதொன்றாம்.

அணி அன்றோ நாண் உடைமை சான்றோர்க்கு அஃது இன்றேல் பிணி அன்றோ [பீடு நடை.

**4 அணியன்றோ நாண்உடைமை சான்றோர்க்கு அஃதுஇன்றேல்**
**பிணியன்றோ பீடு நடை.** 1014

*சான்றோர்க்கு — சான்றாண்மை நிறைந்த பெரியோர்களுக்கு, நாண் — நாணம் என்கின்ற குணம், உடைமை — உடைமையாய் இருப்பது, அணி — அணிகலன், அன்றோ — அல்லவோ? அஃது — அந்த அணிகலன், இன்றேல் — இல்லையென்றால், [அவர்களுடைய] பீடு — பெருமிதமான, நடை — நடத்தல் என்பது, பிணி — கண்டார்க்கு நோய், அன்றோ — அல்லவா?*

பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியையும் ஒரு சமமாக மதித்து நாணுவாரை, உலகத்தார் நாணம் என்பதற்கு உறைவிடம் என்று கூறுவர்.

பிறர் பழியும் தம் பழியும் நாணுவார் நாணுக்கு உறைபதி என்னும் உலகு.

**5 பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு**
**உறைபதி என்னும் உலகு.** 1015

*பிறர் — மற்றவர்களுக்கு உண்டாகும், பழியும் — பழியினையும், தம் — தமக்கு வரும், பழியும் — பழியினையும், நாணுவார் — ஒப்ப மதித்து நாணுகின்றவரை, உலகு — உலகத்தார், நாணுக்கு — நாணம் என்பதற்கு, உறைபதி — இருப்பிடம், என்னும் — என்று கூறுவர்.*

உயர்ந்த மக்கள் தமக்குப் பாதுகாப்பாக நாணத்தினைக் கொள்ளுவதல்லாமல் அகன்ற ஞாலத்தினைக் கொள்ள விரும்பமாட்டார்கள்.

நாண் வேலி கொள்ளாது மன்னோ வியன் ஞாலம் பேணலர் மேலாயவர்.

**6 நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்**
**பேணலர் மேலா யவர்.** 1016

*மேலாயவர் — பண்பு நிறைந்த பெரியோர், வேலி — தமக்குப் பாதுகாப்பாக, நாண் கொள்ளாது — நாணம் என்பதனைக் கொள்ளுவதன்றி, வியன் — அகன்ற, ஞாலம் — இந்தப் பூமியினை, பேணலர் — [பாதுகாப்பாகக் கொள்ள] விரும்பமாட்டார்கள் [மன்,ஓ — அசை நிலை]*

நாணத்தினது சிறப்பினை அறிந்து அதன்வழி நிற்பவர்கள் அந்த நாணமும் உயிரும் தம்முள் மாறுபட்டபோது நாணத்தினைக் காக்க உயிரை விடுவார்களே தவிர, உயிரைக் காப்பாற்ற நாணத்தினை விட்டுவிட மாட்டார்கள்.

நாணால் உயிரை துறப்பர் உயிர்ப்பொருட்டால் நாண் துறவார் நாண் ஆள்பவர்.

**7 நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்**
**நாண்துறவார் நாண்ஆள் பவர். 1017**

நாண் — நாணத்தினை, ஆள்பவர் — விடாமல் காப்பவர்கள், நாணால் — நாணத்தினைக் காப்பாற்ற வேண்டி, உயிர் துறப்பர் — உயிரினையும் விடுவார்கள், உயிர்ப் பொருட்டால் — உயிரைக் காக்கக் கருதி, நாண் துறவார் — நாணத்தினை விட்டுவிட மாட்டார்கள்.

பிறர் நாணமடையக் கூடிய பழியை ஒருவன் நாணமின்றிச் செய்வானாயின் அச்செயல் அவனைவிட்டு அறம் நீங்கிவிடுகின்ற குற்றத்தினை உடையதாகும்.

பிறர் நாணத்தக்கது தான் நாணான் ஆயின் அறம் நாணத்தக்கது உடைத்து.

**8 பிறர்நாணத் தக்கது தான்நாணான் ஆயின்**
**அறம்நாணத் தக்கது உடைத்து. 1018**

பிறர் — மற்றவர்கள், நாண — நாணமுற, தக்கது — காரணமான பழியினை, தான் — தான் ஒருவன், நாணான் — செய்ய நாணப்படாதவன், ஆயின் — ஆனால், [அச்செயல்] அறம் — அறமானது, நாணத்தக்கது — அவனைவிட்டு நீங்கும்படியான குற்றத்தினை, உடைத்து — உடையதாகும்.

ஒருவனுக்கு ஒழுக்கம் கெடுமாயின் அப்படிக் கெடுதல் அவனுடைய குடிப்பிறப்பொன்றினை மட்டுமே கெடுக்கும். அவன் நாணமின்றி இருப்பானானால், அது அவன் நலம் — நன்மைகள் — யாவற்றையும் கெடுக்கும்.

குலம் சுடும் கொள்கை பிழைப்பின் நலம் சுடும் நாணின்மை நின்றக்கடை.

**9 குலம்சுடும் கொள்கை பிழைப்பின் நலம்சுடும்**
**நாண்இன்மை நின்றக் கடை. 1019**

கொள்கை — ஒருவனுடைய ஒழுக்கம், பிழைப்பின் — கெட்டு விட்டால், [அது] குலம் சுடும் — குலப்பிறப்பினைக் கெடுப்பதாகும், நாண் — நாணம் என்பது, இன்மை — இல்லாமை, நின்றக்கடை — அவனிடம் இருந்துவிட்டால், [அது] நலன் — நன்மை யாவை யினையும், சுடும் — அழித்து விடுவதாகும்.

மனத்தில் நாணமில்லாதவர்கள் உயிருடையார் போன்று வாழ்ந்து வருவது, மரத்தால் செய்யப்பட்ட மரப்பாவை இயந்திரக் கயிற்றினால் உயிருடையது போல இயங்கிக் கொண்டு இருத்தல் போன்றதாகும்.

நாண் அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை நாணால் உயிர் மருட்டி யற்று.

**10 நாண்அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை**
**நாணால் உயிர்மருட்டி யற்று.** 1020

அகத்து — மனத்தின்கண், நாண்இல்லார் — நாணம் இல்லாதவர்கள், இயக்கம் — உயிருள்ளவர்கள்போல வாழ்கின்ற வாழ்க்கை, மரப்பாவை — மரத்தினால் செய்யப்பட்ட பாவையானது, நாணால் — இயந்திரக் கயிற்றின் ஆட்டத்தினால், உயிர் மருட்டியற்று — உயிருள்ளதுபோல மயக்கியது போன்றதாகும்.

## 103. குடிசெயல் வகை

### [குடிமக்களை உயரச் செய்யும் திறம்]

தன் குடி உயர எண்ணிய செயல் செய்தற்குத் தான் தொடங்கிய பணியினைக் கைவிட மாட்டேன் என்று கூறும் முயற்சிப் பெருமையினைப் போல ஒருவனுக்குச் சிறந்த பெருமை பிறிதொன்றும் இல்லை.

கருமம் செய ஒருவன் கைதூவேன் என்னும் பெருமையின் பீடு உடையது இல்.

**1 கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்**
**பெருமையின் பீடுடையது இல்.** 1021

கருமம் — குடிமக்கள் உயரும் செயல், செய — புரிவதென்பதனை, கைதூவேன் — கைவிடமாட்டேன், என்னும் — என்கின்ற, பெருமையின் — முயற்சி செய்கின்ற பெருமையினைப் போல, பீடு — மேம்பாடு, உடையது — உடையதென்பது, ஒருவன் — ஒருவனுக்கு, இல் — பிறிதொன்றும் இல்லை.

முயற்சியும் நிறைந்த அறிவும் என்ற இரண்டினையும் கொண்டு ஓய்வின்றிச் செய்கின்ற செயலால் ஒருவனுடைய குடி உயரும்.

ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையால் நீளும் குடி.

**2 ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்**
**நீள்வினையான் நீளும் குடி.** 1022

ஆள்வினையும் — முயற்சியும், ஆன்ற — நிறைந்த, அறிவும் — அறிவும், என — என்ற, இரண்டின் — இரண்டினையும் கொண்ட, நீள்வினையால் — ஓய்வின்றிச் செய்கின்ற செயலால், குடி நீளும் — ஒருவனுடைய குடி உயரும்.

'என் குடியினை உயரச் செய்வேன்' என்று முயன்று செயல்புரியும் ஒருவனுக்குத் தெய்வம் ஆடையை இறுகக் கட்டிக் கொண்டு தான் முன் நின்று துணை செய்யும்.

குடி செய்வல் என்னும் ஒருவற்கு தெய்வம் மடிதற்று தான் முந்துறும்.

**3 குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும். 1023**

குடிசெய்வல் — குடிமக்களை உயரச் செய்வேன், என்னும் — என்று முயன்று செயல் புரியும், ஒருவற்கு — ஒருவனுக்கு, தெய்வம் — தெய்வமானது, மடிதற்று — ஆடையினை இறுகக் கட்டிக் கொண்டு, தான் முந்துறும் — தான் துணை புரிய முன் வந்து நிற்கும்.

தம் குடிமக்கள் உயரும் செயல்களைக் காலம் தாழ்ந்தாமல் விரைந்து முயல்கின்றவர்களுக்கு, செயலினை முடிக்க ஆலோசிக்காமலேயே அத்தொழில் தானாகவே முடிவுறும் என்பதாம்.

சூழாமல் தானே முடிவு எய்தும் தம் குடியை தாழாது உஞற்றுபவர்க்கு.

**4 சூழாமல் தானே முடிவுஎய்தும் தம்குடியைத்**
**தாழாது உஞற்று பவர்க்கு. 1024**

தம் — தம்முடைய, குடியை — குடிமக்கள் உயரும் செயல்களை, தாழாது — காலம் தாழ்த்தாமல் விரைந்து, உஞற்றுபவர்க்கு — முயல்கின்றவர்களுக்கு, சூழாமல் — செயலினை முடிக்க சிந்திக்காமலேயே, தானே — அத்தொழில் தானாகவே, முடிவு — முடிவுறுதலை, எய்தும் — அடைதலாகும்.

குற்றம் யாதும் செய்யாமல் தன் குடியை உயரச் செய்து ஒழுகுவானை உலகத்தார் தாமே சென்று சூழ்ந்து கொள்வார்கள்.

குற்றம் இலனாய் குடி செய்து வாழ்வானை சுற்றமா சுற்றும் உலகு.

**5 குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்**
**சுற்றமாச் சுற்றும் உலகு. 1025**

குற்றம் — குற்றம் யாதும், இலனாய் — இல்லாதவனாகி, குடி — தனது குடிமக்களை, செய்து — உயரச் செய்து, வாழ்வானை — வாழ்கின்றவனை, சுற்றமாய் — அப்படிப்பட்டவனுக்குச் சுற்றமாக இருக்க வேண்டி, உலகு சுற்றும் — உலகத்தார் தாமே சென்று சூழ்ந்து கொள்வார்கள்.

ஒருவனுக்கு நல்ல ஆண்மை என்று உயர்த்திச் சொல்லப்படுவது எது வென்றால் தான் பிறந்த குடியிலுள்ள மக்களைத் தன்வயப்படுத்தி ஆளும் தன்மையினைத் தனக்கு உள்ளதாக்கிக் கொள்ளுதலாகும்.

நல்லாண்மை என்பது ஒருவற்கு தான் பிறந்த இல்லாண்மை ஆக்கி கொளல்.

6 நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல். 1026

ஒருவற்கு — ஒருவனுக்கு, நல் — நல்ல, ஆண்மை — ஆண்மைத் தன்மை, என்பது — என்று உயர்த்திச் சொல்லப்படுவது, [எதுவென்றால்] தான் — தான், பிறந்த — பிறந்துள்ள, இல்லாண்மை — குடிமக்களைத் தன் வசப்படுத்தி ஆளும் தன்மையினை, ஆக்கிக் கொளல் — தனக்கு உள்ளதாக ஆக்கிக் கொள்ளுதலாகும்.

போர்க் களத்திற்குச் சென்றவர்களில் போரைத்தாங்கும் தன்மை, மிகுந்த வீரம் செறிந்தவர் மேலாகுதல் போலக் குடியில் பிறந்தார் பலராயினும் அதன் பாரதம் தாங்குதல் வல்லவர் மேலதாம்.

அமரகத்து வன்கண்ணர் போல தமரகத்தும் ஆற்றுவார் மேற்றே பொறை.

7 அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. 1027

அமரகத்து — போர்க்களத்தில் [போரினைத் தாங்கி நடத்துதல்], வன்கண்ணர்போல — வீரம் மிகுந்தவர் மேல்ஆகுதல் போல, தமரகத்தும் — குடியின்கண்ணும், பொறை — அதனைத் தாங்குதல், [பலருள்ளும்] ஆற்றுவார் — தாங்கி நடத்தவல்லவர், மேற்றே — மேலதேயாகும்

தம் குடிமக்களை உயரச் செய்வார் காலத்தினைக் கருதிக்கொண்டு மானத்தைப் பற்றியும் நினைத்துக்கொண்டு இருப்பாரானால் குடிகெட்டுவிடும். ஆதலால் அவர்களுக்குக் காலக் கட்டுப்பாடும், மனத்தினை நினைத்துக் கொண்டிருப்பதும் இல்லையாகும்.

குடி செய்வார்க்கு இல்லை பருவம் மடி செய்து மானம் கருத கெடும்.

8 குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும். 1028

மடி — சோம்பலினை, செய்து — செய்து கொண்டு, மானம் — மானத்தினையும், கருத — நினைத்துக் கொண்டு, [இருப்பாரானால்] கெடும் — குடிகெட்டு விடும், [ஆதலால்] குடி செய்வார்க்கு — குடிமக்களை உயரச் செய்வார்க்கு, பருவம் இல்லை — காலக் கட்டுப்பாடு இல்லை என்பதாம்.

தன் குடிமக்களுக்குத் துன்பம் வராமல் குற்றத்தினை மறைக்க முயற்சிப்பவனுடைய உடம்பு துன்பத்திற்கே இடமாக இருக்குமோ? இன்பத்திற்கு ஆதல் இல்லையோ?

இடும்பைக்கே கொள்கலங்கொல்லோ குடும்பத்தை குற்றம் மறைப்பான் உடம்பு.

**9 இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு.** 1029

குடும்பத்தை — தனது குடிமக்களை, குற்றம் — துன்பம் வராமல், மறைப்பான் — காப்பாற்ற முயற்சிப்பவனது, உடம்பு — உடம்பானது, இடும்பைக்கே — துன்பத்திற்கே, கொள்கலம் கொல்லோ — கொண்டிருக்கும் இடமாகுமோ?

துன்பம் உற்றபோது தக்க காலத்தில் பற்றுக்கோடு கொடுத்துத் தாங்கவல்ல ஆண்மகன் பிறவாத குடியாகிய மரம், துன்பமாகிய கோடரி வெட்டிச் சாய்க்க பற்றின்றி விழுந்து விடும்.

இடுக்கண் கால் கொன்றிட வீழும் அடுத்து ஊன்றும் நல்லாள் இலாத குடி.

**10 இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்துஊன்றும்
நல்லாள் இலாத குடி.** 1030

அடுத்து — தாங்குவதைக் கொடுத்து, ஊன்றும் — தாங்குவதற்குவல்ல, நல் — நல்ல, ஆள் — ஆண்மகன், இலாதகுடி — பிறக்காத குடி, இடுக்கண் — துன்பமாகிய ஒன்று, கால் — அடிப்படையான முதலினை [ மரம் ], கொன்றிட — வெட்டிச்சாய்க்கின்றபோது, வீழும் — வீழ்ந்துவிடும்.

## 104. உழவு

### [உழவுத் தொழிலின் சிறப்பு]

பிற தொழில்களைச் செய்து திரிந்தும் முடிவில் ஏருடையார் வழியாயிற்று இந்த உலகம். ஆதலால் எல்லா வருத்தமுற்றாலும் தலைமையான தொழில் உழவேயாகும்.

சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால் உழந்தும் உழவே தலை.

**1 சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை.** 1031

சுழன்றும் — பிற தொழில்களைச் செய்து திரிந்தும், ஏர் — ஏரின் [உழவர்], பின்னது — வழியில் நிற்பது, உலகம் — உலகமானது, அதனால் — ஆகையினால், உழந்தும் — எல்லா வருத்தம் அடைந்தும், உழவே தலை — உழவே முதன்மையான தொழில் ஆகும்.

உழவுத் தொழிலினை மேற்கொள்ளாமல் பிற தொழில்களை மேற்கொண்டுள்ள எல்லோரையும் தாங்கிக் கொண்டிருப்பதால், உழவர்கள் உலக மக்களாகிய தேருக்கு அச்சாணி எனப்படுவார்கள்.

உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து.

2 உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃது ஆற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து. 1032

அஃது — அந்த உழவுத் தொழிலினை, ஆற்றாது — செய்யாமல், எழுவாரை — பிற தொழில்களை மேற்கொண்டுள்ள, எல்லாம் — எல்லோரையும், பொறுத்து — தாங்கிக் கொண்டிருப்பதால், உழுவார் — உழவர்கள், உலகத்தார்க்கு — உலக மக்களாகிய தேருக்கு ஆணி — அச்சாணி எனப்படுவார்கள்.

உழுதலைச் செய்து தாமும் உண்டு பிறரையும் வாழவைத்து வாழ்பவர்களே தமக்கு உரியராய் வாழ்பவராவார். மற்றவரெல்லாரும் பிறரைத் தொழுது தாம் உண்டு அவருக்குப் பின் செல்லுகின்றவராவார்.

உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுது உண்டு பின் செல்பவர்.

3 உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற்று எல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 1033

உழுது — உழவுத் தொழிலினைச் செய்து, உண்டு — உண்டு, வாழ்வாரே — வாழ்பவர்களே, வாழ்வார் — தமக்கு உரியவராய் வாழ்பவராவார், மற்றெல்லாம் — மற்றவர்கள் எல்லாரும், தொழுதுஉண்டு — பிறரைத் தொழுது தாம் உண்டு, பின் — அவர்களுக்குப் பின்னே, செல்பவர் — செல்லுபவர்கள் ஆவார்கள்.

உழவுத் தொழிலால் நெல்லினை உடையவராகி ஈகைத் தன்மையுடையார் பல மன்னர்களின் குடை நிழலாகிய பூமி முழுவதையும் தமது மன்னர் குடைக்கீழ் காண்பவராவார்.

பல குடை நீழலும் தம் குடைக் கீழ் காண்பர் அலகு உடை நீழலவர்.

4 பலகுடை நீழலும் தங்குடைக்கீழ் காண்பர்
அலகுஉடை நீழ லவர். 1034

அலகு — நெற்கதிரினை, உடை — உழவுத் தொழிலால் உடையராகி, நீழலவர் — ஈகைத் தன்மையுடையோர், பலகுடை நீழலும் — பல மன்னர்களது குடை நிழலாகிய பூமி முழுதும், தம் — தமது, குடைக்கீழ் — வேந்தனுடைய குடையின்கீழ், காண்பர் — காண்பாகள்.

தம் கையால் உழுது உண்ணுதலை இயல்பாக உடையவர்கள் பிறரிடம் போய் யாசிக்க மாட்டார்கள். தம்மிடம் வந்து யாசிப்போர்க்கு வேண்டியதை மறைக்காமல் கொடுப்பார்கள்.

இரவார் இரப்பார்க்கு ஒன்று ஈவர் கரவாது கை செய்து ஊண் மாலையவர்.

5 இரவார் இரப்பார்க்கு ஒன்றுஈவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். 1035

கைசெய்து — தம் கையால் உழுதலைச் செய்து, ஊண் — உண்ணுவதை, மாலையவர் — இயல்பாக உடைய உழவர்கள், இரவார் — பிறரிடம் போய் யாசிக்க மாட்டார்கள், இரப்பார்க்கு — தம்மிடம் வந்து யாசிப்பவர்களுக்கு, ஒன்று — அவர் விரும்பியதொன்றினை, கரவாது ஈவர் — மறைக்காமல் தருவார்கள்.

உழவர்களின் கை உழுதல் தொழிலைச் செய்யாது மடங்குமானால் யாவரும் விரும்பும் உணவையும் [யாம் துறந்தோம்] என்பார்க்கு அவ்வறத்திலேயே நிற்றலும் உளவாகா தாம்.

உழவினார் கை மடங்கின் இல்லை விழைவதும் விட்டேம் என்பார்க்கு நிலை.

6 உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம் என்பார்க்கு நிலை. 1036

உழவினார் — உழுதலை உடையார், கை — கையானது, மடங்கின் — உழவினைச் செய்யாமல் மடங்குமானால், விழைவதூஉம் — மக்கள் விரும்பும் உணவையும், விட்டேம் — துறந்து விட்டோம், என்பார்க்கு — என்பவர்களுக்கு, நிலை — தம் நிலையில் நிற்றலும், இல்லை — இல்லாமற் போகும்.

உழுபவன், நிலத்தின் ஒரு பலப்புழுதி காற்பலம் ஆகுமாறு அதனை உழுது காய விடுவா னாகில் அந்நிலத்தில் விளையும் பயிர் ஒரு பிடி எருவும் இடவேண்டாமல் தழைத்து விளையும்.

தொடிப் புழுதி கஃசா உணக்கின் பிடித்து எருவும் வேண்டாது சாலப்படும்.

7 தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். 1037

தொடிப்புழுதி — அளவில் ஒரு பலப்புழுதி, கஃசா — காற்பலம் ஆகுமாறு, உணக்கின் — உழுது காய விடுவானானால், பிடித்து — ஒருபிடி அளவாகிய, எரு — எருவும், வேண்டாது — போட வேண்டியதின்றி, சாலப்படும் — பயிர் தழைத்து வளரும்.

பயிர்க்கு உழுதலைவிட எருப் போடுதல் நல்லதாகும்; களை எடுத்த பிறகு அப்பயிரினைக் காப்பாற்றுதல் நீர்ப்பாய்ச்சுதலைவிட நல்லதாகும்.

ஏரினும் நன்றால் எரு இடுதல் கட்டபின் நீரினும் நன்று அதன் காப்பு.

**8 ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றுஅதன் காப்பு.** 1038

ஏரினும் — உழுதலைவிட, எரு — எருவினை, இடுதல் — போடுதல், நன்று — நல்லதாகும், கட்டபின் — களை எடுத்தபின், அதன் — அப்பயிரினை, காப்பு — காப்பாற்றுதல், நீரினும் — நீர்ப்பாய்ச்சுவதைவிட, நன்று — நல்லதாகும்.

நிலத்திற்கு உரியவன் நாள்தோறும் சென்று நிலத்தினைப் பார்த்துத் தக்கவை செய்யாதிருப்பானானால், அந்த நிலம் தனது மனைவியைப்போலத் தன்னுள்ளே வெறுத்து அவனுடன் பிணங்கிவிடும்.

செல்லான் கிழவன் இருப்பின் நிலம் புலந்து இல்லாளின் ஊடிவிடும்.

**9 செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும்.** 1039

கிழவன் — நிலத்திற்கு உரியவன், செல்லான் இருப்பின் — நாள்தோறும் சென்று நேரில் பார்க்காமலும் தக்கவை செய்யாமலும் சோம்பலாக இருந்துவிட்டால், நிலம் — அவனுடைய நிலம், இல்லாளின் — மனைவியைப் போல, புலந்து — தன்னுள்ளே சினந்து வெறுத்து, ஊடிவிடும் — அவனுடன் பிணங்கிக் கொள்ளும்.

'ஒன்றுமில்லாத வறியரானோம்' என்று சொல்லிக்கொண்டு சோம்பலாக இருப்பவர்களைக் கண்டால் நிலமடந்தை என்று சொல்லப்படுகின்ற நல்ல பெண்ணானவள் தனக்குள்ளே சிரிப்பாள்.

இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின் நிலம் என்னும் நல்லாள் நகும்.

**10 இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்**
**நிலம்என்னும் நல்லாள் நகும்.** 1040

இலம் — ஒன்றுமில்லாமல் வறியவரானோம், என்று — என்று சொல்லிக் கொண்டு, அசைஇ — சோம்பலாக, இருப்பாரை — இருப்பவர்களை, காணின் — பார்த்தால், நிலம் — நிலமடந்தை, என்னும் — என்று சொல்லப்படுகின்ற, நல்லாள் — நல்ல பெண்ணானவள், நகும் — தனக்குள்ளே சிரிப்பாள்.

## 105. நல்குரவு

[அனுபவிக்கப்படும் எதுவும் இல்லாமை]

ஒருவனுக்கு வறுமையினைப் போல் துன்பம் தருவது யாது என்று வினவினால், வறுமை போலத் துன்பம் தருவது வறுமையேயாகும். பிறிது யாதும் இல்லை எனலாம்.

இன்மையின் இன்னாதது யாது எனின் இன்மையின் இன்மையே இன்னாதது.

1 இன்மையின் இன்னாதது யாதுஎனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. 1041

இன்மையின் — வறுமையினைப் போல, இன்னாதது — துன்பத்தினைத் தருவது, யாது — எது, எனின் — என்று வினவின், இன்மையின் — வறுமையினைப் போல, இன்னாதது — துன்பத்தினைத் தருவது, இன்மையே — வறுமையேயாகும்.

ஒருவனுக்கு வறுமையென்று சொல்லப்படுகின்ற பாவி வந்தபோது அவனுக்கு இம்மை மறுமை இன்பங்கள் இல்லாதவாறு வரும்.

இன்மை என ஒரு பாவி மறுமையும் இம்மையும் இன்றி வரும்.

2 இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். 1042

இன்மை — வறுமை, என — எனப்படுகின்ற, ஒருபாவி — ஒருபாவியானவன், மறுமையும் — மறுமை இன்பமும், இம்மையும் — இம்மை இன்பமும், இன்றிவரும் — அவனுக்கு இல்லையாகும்படி வருவான்.

வறுமை என்று சொல்லப்படுகின்ற ஆசையானது பழங்குடிப் பெருமையினையும் அதற்கேற்ற சொல்லினையும் ஒரு சேரக் கெடுக்கும்.

தொல் வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக நல்குரவு என்னும் நசை.

3 தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குரவு என்னும் நசை. 1043

நல்குரவு — வறுமை, என்னும் — என்று சொல்லப்படுகின்ற, நசை — ஆசையானது, தொல்— பழங்குடியின், வரவும் — சிறப்பினையும், தோலும் — சொற்களையும், தொகையாக — ஒருங்கே, கெடுக்கும் — அழித்துவிடும்.

நற்குடிப் பிறந்தாரிடத்திலேயும் வறுமையானது இழிவான சொற்கள் பிறப்பதற்குக் காரண மான சோர்வினை உண்டாக்கும்.

இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த சொற்பிறக்கும் சோர்வு தரும்.

4 இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும். 1044

இற்பிறந்தார் கண்ணேயும் — உயர்ந்த நற்குடியில் பிறந்தோரிடத்திலும், இன்மை — வறுமை யானது, இளிவந்த — இழிவான, சொல் — சொற்கள், பிறக்கும் — உண்டாவதற்குக் காரண மான, சோர்வுதரும் — தளர்ச்சியினை உண்டாக்கிவிடும்.

வறுமை என்று சொல்லப்படுகின்ற துன்பம் ஒன்றனுள் பலவாகிய துன்பங்கள் எல்லாம் வந்து சேர்ந்து விளையும்.

நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரை துன்பங்கள் சென்று படும்.

5 நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். 1045

நல்குரவு — வறுமை, என்னும் — என்று சொல்லப்படுகின்ற, இடும்பையுள் — துன்பம் ஒன்றுக் குள்ளே, பல்குரை — பல திறப்பட்ட, துன்பங்கள் — துன்பங்கள் எல்லாம், சென்று படும் — வந்து சேர்ந்து விளையும்.

நல்ல நூல்களின் பொருள்களை நன்கு அறிந்துணர்ந்து சொன்னாலும் வறுமையில் இருப்ப வரது சொல்லானது பொருள் இல்லாது பயனின்றிப் போகும்.

நற்பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார் சொல் பொருள்சோர்வு படும்.

6 நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். 1046

நற்பொருள் — நல்ல நூல்களின் பொருளினை, நன்கு — தெளிவாக, உணர்ந்து — அறிந்து ணர்ந்து, சொல்லினும் — சொன்னாலும், நல்கூர்ந்தார் — வறுமையில் இருப்பவரது, சொல் சொல்லானது, பொருள் சோர்வுபடும் — பொருள் இல்லாத் தன்மையாகிப் பயனில்லாது போகும்.

அறத்தொடு பொருந்தாத வறுமையினையுடையவன் தன்னைப் பெற்றெடுத்த தாயாராலும் யாரோ ஒருவனைப் போல நோக்கப்படுவான்.

அறம் சாரா நல்குரவு ஈன்ற தாயானும் பிறன் போல நோக்கப்படும்.

**7 அறம்சாரா நல்குரவு ஈன்றதா யானும்**
**பிறன்போல நோக்கப் படும்.** 1047

அறம் — அறத்தொடு, சாரா — பொருந்தாத, நல்குரவு — வறுமையினையுடையவன், ஈன்ற — தன்னைப் பெற்றெடுத்த, தாயானும் — தாயாராலும், பிறன் போல — யாரோ ஒருவனைப் போல, நோக்கப்படும் — நோக்கப்படுவான்.

நேற்றும் கொன்றதைப் போன்று துன்பத்தினைச் செய்த நல்குரவு இன்றும் என்பால் வருகின்றதோ? வந்தால் யாது செய்வேன்?

இன்றும் வருவது கொல்லோ நெருநலும் கொன்றது போலும் நிரப்பு.

**8 இன்றும் வருவது கொல்லோ நெருநலும்**
**கொன்றது போலும் நிரப்பு.** 1048

நெருநலும் — நேற்றைய தினமும், கொன்றது — கொன்றதை, போலும் — போன்று எனக்குத் துன்பத்தினைச் செய்த, நிரப்பு — வறுமை, இன்றும் வருவதுகொல்லோ — இன்றைய தினமும் என்னிடம் வருவதாகுமோ?

ஒருவனுக்கு நெருப்பின் மேல் படுத்துத் தூங்குதலும் முடியும்; வறுமை வந்துவிட்டபோது யாதொன்றினாலும் தூங்குதல் முடியாததாகும்.

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது.

**9 நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்**
**யாதொன்றும் கண்பாடு அரிது.** 1049

நெருப்பினுள் — நெருப்பின்மேல் படுத்து, துஞ்சலும் — தூங்குதலும், ஆகும் — மருந்து வகைகளினால் முடியக் கூடும், நிரப்பினுள் — வறுமை வந்துற்ற போது, யாதொன்றும் — எந்த வகையிலும், கண்பாடு அரிது — தூங்குதல் முடியாததாகும்.

நுகரப்படும் பொருள்கள் எதுவும் இல்லாதவர்கள் செய்ய வேண்டியது முற்றத் துறத்தலே யாகும். அவ்வாறு செய்யாதிருத்தல், பிறர் வீட்டிலிருக்கும் உப்பிற்கும் காடிக்கும் கூற்றுவனாக முடியும்.

துப்புரவு இல்லார் துவர துறவாமை உப்பிற்கும் காடிக்கும் கூற்று.

**10 துப்புரவு இல்லார் துவரத் துறவாமை**
**உப்பிற்கும் காடிக்கும் கூற்று.** 1050

துப்புரவு — அனுபவிக்கப்படும் பொருள்கள், இல்லார் — இல்லாதவர்கள், துவர — முழுது மாக, துறவாமை — துறந்து விடாதிருத்தல், உப்பிற்கும் — பிறர் வீட்டிலுள்ள உப்பிற்கும், காடிக்கும் — புளித்த கஞ்சிக்கும், கூற்று — கூற்றுவனாவான்.

## 106. இரவு

### [வறுமையால் பிறரிடம் சென்று யாசித்தல்]

வறுமையுற்றவர்கள் யாசிப்பதற்குப் பொருத்தமானவர்களைக் கண்டால், அவர்களிடம் யாசித்தல் வேண்டும். அவர்கள் கொடுக்காமல் மறைத்தாரானால், அது அவர்களுக்குப் பழியாகுமே தவிர யாசிப்பவருக்குப் பழியாகாது.

இரக்க இரத்தக்கார் காணின் கரப்பின் அவர்பழி தம் பழி அன்று.

**1 இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்**
**அவர்பழி தம்பழி அன்று.** 1051

இரத்தக்கார் — யாசித்துக் கேட்பதற்குப் பொருத்தமானவரை, காணின் — கண்டால், இரக்க — யாசித்தல் வேண்டும், கரப்பின் — அவர் கொடாமல் மறைத்தாரானால், [அப்படிச் செய்வது] அவர் — அவருக்கு, பழி — பழியாகும், தம் — யாசித்தவருக்கு, பழி அன்று — பழியாகாது.

யாசிக்கப்பட்ட பொருள்கள் தான் துன்புறாமல் வருமானால், ஒருவனுக்கு யாசித்தல்கூட இன்பம் தருவதாகும்.

இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை துன்பம் உறா வரின்.

**2 இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை**
**துன்பம் உறாஅ வரின்.** 1052

இரந்தவை — யாசித்த பொருள்கள், துன்பம் — தான் துன்பம், உறாஅ — அடையாமல், வரின் — வருமேயானால், ஒருவற்கு — ஒருவனுக்கு, இரத்தல் — யாசித்தலும், இன்பம் — இன்பம் தருவதாக இருக்கும்.

மறைத்தல் அறியாத நெஞ்சினையுடையவராகி, கடமை உணர்வுடையார் முன் நின்று யாசித்தலும், வறுமையாளர்களுக்கு ஓர் அழகினை உடையதாகும்.

கரப்பிலா நெஞ்சின் கடன் அறிவார் முன் நின்று இரப்பும் ஓர் ஏஎர் உடைத்து.

3 கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்நின்று
இரப்புமோர் ஏஎர் உடைத்து. 1053

கரப்பிலா — மறைத்தலில்லாத, நெஞ்சின் — மனத்தினையுடையராகி, கடன் — கடமையினையும், அறிவார்முன் — உணர்வார் முன்னே, நின்று — நின்று, இரப்பும் — இரத்தலும் [யாசித்தலும் யாசிப்பவர்க்கு], ஓர் — ஓர், ஏஎர் — அழகினை, உடைத்து — உடையதாகும்.

தம்மிடம் இருப்பதைக் கனவிலும் மறைத்தலை அறியாதாரிடம் சென்று ஒன்றனை யாசித்தல், வறியவர்க்கு ஈதலே போன்றதாகும்.

இரத்தலும் ஈதலே போலும் கரத்தல் கனவிலும் தேற்றாதார் மாட்டு.

4 இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு. 1054

கரத்தல் — மறைத்தல் என்பதனை, கனவிலும் — கனவிலும்கூட, தேற்றாதார்மாட்டு — அறியாதவரிடத்தில் சென்று, இரத்தலும் — இரத்தலும், ஈதலே — வறியவர்க்கு ஈகையினைச் செய்வதே, போலும் — போன்றதாகும்.

உள்ளதை மறைக்காமல் கொடுப்பவர்கள் சிலர் உலகத்தில் இருந்து வருவதால்தான், முன்னின்ற மாத்திரத்தில் யாசிப்பவர் உயிர் காத்தற் பொருட்டு இரத்தலை மேற் கொண்டுள்ளார்கள்.

கரப்பு இலார் வையகத்து உண்மையான் கண் நின்று இரப்பவர் மேற்கொள்வது.

5 கரப்பிலார் வையகத்து உண்மையான் கண்ணின்று
இரப்பவர் மேற்கொள் வது. 1055

கண் — [கொடுப்பவர்] கண்முன்னே, நின்று — நின்று, இரப்பவர் — யாசிப்பவர்கள் [உயிரினைப் பாதுகாக்க], மேற்கொள்வது — யாசிப்பதை மேற் கொள்ளுவதற்குக் காரணம் என்னவென்றால், கரப்புஇலார் — மறைக்காமல் கொடுப்பவர்கள், வையகத்து — உலகத்தில், உண்மையான் — சிலர் இருப்பதனால்தான் என்க.

உள்ளது மறைத்தலாகிய நோய் இல்லாதவர்களைக் கண்டால், மானம் விடாமல் இரப்பார்க்கு வறுமையால் வரும் துன்பங்கள் எல்லாம் ஒரு சேரக் கெடும்.

கரப்பு இடும்பை இல்லாரை காணின் நிரப்பு இடும்பை எல்லாம் ஒருங்கு கெடும்.

**6 கரப்புஇடும்பை இல்லாரைக் காணின் நிரப்புஇடும்பை**
**எல்லாம் ஒருங்கு கெடும்.** 1056

கரப்பு — மறைத்தல் என்கின்ற, இடும்பை — துன்பமான நோய், இல்லாரை — இல்லாதவர்களை, காணின் — கண்டால், நிரப்பு — வறுமையாய்வரும், இடும்பை — துன்பங்கள், எல்லாம் — எல்லாம், ஒருங்கு — ஒருசேர, கெடும் — அழிந்து போகும்.

தம்மை அவமதித்துப் பேசாமல் பொருள் கொடுப்பாரைக் கண்டால், இரப்பவரது உள்ளம் மகிழ்ந்து உள்ளுக்குள்ளே உவக்கும் தன்மை உடையதாகும்.

இகழ்ந்து எள்ளாது ஈவாரை காணின் மகிழ்ந்து உள்ளம் உள்ளுள் உவப்பது உடைத்து.

**7 இகழந்துஎள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்**
**உள்ளுள் உவப்பது உடைத்து.** 1057

இகழ்ந்து — இழிவாகப்பேசி, எள்ளாது — ஏளனம் செய்யாமல், ஈவாரைக் காணின் — கொடுப்பவரைக் கண்டால், உள்ளம் — இரப்பவர் மனம், மகிழ்ந்து — மகிழ்ச்சியடைந்து, உள்ளுள் — உள்ளுக்குள்ளே, உவப்பது உடைத்து — உவகை கொள்ளும் தன்மை உடையதாகும்.

வறுமையுற்று இரப்பார் இல்லையானால் குளிர்ந்த இடத்தினையுடைய பெரிய ஞாலத்துள்ளார்களின் வாழ்க்கை, உயிரில்லாத மரப்பாவை இயந்திரக் கயிற்றினால் சென்று வந்தது போன்றதாகும்.

இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண் மா ஞாலம் மரப்பாவை சென்று வந்தற்று.

**8 இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்**
**மரப்பாவை சென்றுவந் தற்று.** 1058

இரப்பார் — யாசிக்கும் வறுமையாளர்கள், இல்லாயின் — இல்லாமற்போனால், ஈர்ங்கண் — குளிர்ந்த, மா — பெரிய, ஞாலம் — பூமி [பூமியில் உள்ளவர்கள் வாழ்க்கை], மரப்பாவை — உயிரற்ற மரப்பாவை, [இயந்திரக் கயிற்றல்] சென்று வந்தற்று — செல்லுவதும் வருவதும் போன்றதாகும்.

வறுமையாளர்கள் சென்று ஒன்றனை யாசித்துக் கொள்ள விரும்புதல் இல்லாதபோது, கொடுப்பவரிடத்தில் என்ன புகழுண்டாகும்? ஒன்றும் இல்லை.

ஈவார்கண் என் உண்டாம் தோற்றம் இரந்துகோள் மேவார் இலாக்கடை.

**9 ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை. 1059**

இரந்து — யாசித்து, கோள் — வாங்கிக் கொள்ளுதலை, மேவார்—விரும்புவார், இலாக்கடை— இல்லாமற்போனால், ஈவார்கண் — கொடுப்பவரிடத்தில், என்தோற்றம் — என்ன புகழ், உண்டாம் — உண்டாகக்கூடும் ?

வறுமையால் இரப்பவன் கோபிக்காதிருத்தல் வேண்டும். ஏனெனில் அவன் இரத்தல் தொழில் செய்வதற்குக் காரணம் அக்கோபமே என்பது சான்றாக அமையும்.

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பு இடும்பை தானேயும் சாலும் கரி.

**10 இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்புஇடும்பை
தானேயும் சாலும் கரி. 1060**

இரப்பான் — இரப்பவன் [யாசிப்பவன்], வெகுளாமை — கோபங்கொள்ளாதிருத்தல், வேண்டும் — வேண்டுவதாகும், [கோபத்தினால் வந்த இந்த நிலைமையினை] நிரப்பு — வறுமையால் வந்த, இடும்பை — துன்பம், தானேயும் — தானாகவே, கரி — சான்றாக இருத்தலை, சாலும் — போதுமானதாகக் காட்டும்.

## 107. இரவு அச்சம்

**[இரத்தற்கு — யாசிப்பதற்கு — அஞ்சுதல் வேண்டும்]**

தமக்கு உள்ளதை மறைக்காமல் கொடுக்கும் கண்போன்று சிறந்தவரிடத்தும் வறுமையால் இரவாதிருத்தல், கோடிமடங்கு நல்லதாகும்.

கரவாது உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும் இரவாமை கோடி உறும்.

**1 கரவாது உவந்துஈயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும். 1061**

கரவாது — மறைக்காமல், உவந்து — மனமகிழ்ந்து, ஈயும் — ஈதல் செய்கின்ற, கண் — கண்கள், அன்னார் கண்ணும் — போன்ற சிறந்தவரிடத்திலும், இரவாமை — யாசிக்காமல் இருப்பது, கோடி — கோடிமடங்கு, உறும் — நல்லதாகும்.

உலகத்தினை உண்டாக்கியவன் வாழ்வார்க்கு முயற்சி செய்து வாழ்வதல்லாமல் யாசித்தும் உயிர் வாழ்தலை விரும்பி விதித்தானாயின் அக்கொடியோன் தானும் அவரைப் போன்று எங்கும் திரிந்து கெடக்கடவன்.

இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து கெடுக உலகு இயற்றியான்.

2 இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகுஇயற்றி யான். 1062

உலகு — உலகத்தினை, இயற்றியான் — உண்டாக்கியவன் என்பான், இரந்தும் — [உலகில் வாழ்வோர்] யாசித்தும், உயிர் — உயிரினைக் காத்து, வாழ்தல் — வாழ்வதை, வேண்டின் — விரும்பி விதித்திருப்பானாகில், பரந்து — தானும் அவர்களைப் போல எங்கும் திரிந்து, கெடுக — அழியக் கடவானாக.

வறுமையால் வரும் துன்பத்தினை முயற்சியால் நீக்கக் கருதாமல், யாசித்தே நீக்குவோம் என்று நினைக்கும் முரட்டுத் தன்மை போல, வன்மையுடையது பிறிதொன்றும் இல்லை.

இன்மை இடும்பை இரந்து தீர்வாம் என்னும் வன்மையின் வன்பாட்டது இல்.

3 இன்மை இடும்பை இரந்துதீர் வாம்என்னும்
வன்மையின் வன்பாட்டது இல். 1063

இன்மை — வறுமையால் உண்டாகும், இடும்பை — துன்பத்தினை [முயன்று நீக்க எண்ணாமல்], இரந்து — யாசித்தே, தீர்வாம் — நீக்குவோம், என்னும் — என்று எண்ணும், வன்மையின் — முரட்டுத் தன்மையைப் போன்ற, வன்பாட்டது — வலிமையினையுடையது, இல் — வேறு எதுவும் இல்லை.

நுகர வேண்டுவன இல்லாமல் வறுமையுற்ற போதும் பிறரிடம் சென்று இரத்தலுக்கு உடன்படாத பெருந்தன்மை, எல்லா உலகும் ஒருங்கு சேர்ந்தாலும் கொள்ளாத பெருமை உடைத்து.

இடம் எல்லாம் கொள்ளா தகைத்தே இடம் இல்லாக்காலும் இரவு ஒல்லா சால்பு.

4 இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடம்இல்லாக்
காலும் இரவுஒல்லாச் சால்பு. 1064

இடம் — அனுபவிக்க வேண்டியவை, இல்லாக்காலும் — இல்லாமல் வறுமைப்பட்ட காலத்திலும், இரவு — யாசிப்பதனை, ஒல்லா — மேற்கொள்ளாத, சால்பு — நிறைகுணம், இடமெல்லாம் — உலகமெல்லாம் ஒன்று சேர்ந்தாலும், கொள்ளா — கொள்ளாத, தகைத்தே — சிறப்பினையுடையதாகும்,

முயற்சி கொண்டுவந்து தந்தது தெளிந்த நீர் போன்ற கூழேயாயினும் அதனை உண்பதைவிட இன்பம் தருவது வேறு எதுவும் இல்லை.

தெள் நீர் அடு புற்கை ஆயினும் தாள் தந்தது உண்ணலின் ஊங்கு இனியது இல்.

5 தெண்ணீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்குஇனியது இல். 1065

தாள் — தனது முயற்சியானது, தந்தது — கொண்டு வந்து கொடுத்தது, தெள் — தெளிந்த, நீர் — நீரினைப் போன்ற, அடுபுற்கை — சமைத்த கூழே, ஆயினும் — ஆனாலும், உண்ணலின் ஊங்கு — அதனை உண்பதை விட, இனியது இல் — இனியதாக இருப்பது வேறு எதுவும் இல்லை.

தண்ணீரின்றித் தவிக்கும் பசுவிற்குத் தண்ணீர் தரல் வேண்டும் என்று இரந்து கேட்கும் போதும், அவ்வாறு யாசிப்பது போல ஒருவன் நாவிற்கு இழிவினைத் தருவது வேறில்லையாம்.

ஆவிற்கு நீர் என்று இரப்பினும் நாவிற்கு இரவின் இளி வந்தது இல்.

6 ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல். 1066

ஆவிற்கு — பசுவுக்கு, நீர் — தாகம் நீக்க நீர் வேண்டும், என்று — என்று கேட்டு, இரப்பினும் — யாசித்துக் கேட்கும் போதும், இரவின் — அவ்வாறு இரத்தலினைப் போல, நாவிற்கு — நாவினுக்கு, இளி — இழிவு, வந்ததுஇல் — தருவது வேறு எதுவும் இல்லை.

'நீங்கள் யாசிக்க வேண்டுமென்றால், உள்ளது மறைப்பவர்களிடம் யாசிக்காதிருங்கள்' என்று சொல்லி, யாசிப்பவர்களிடமெல்லாம் யான் சென்று யாசிப்பேன்.

இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின் கரப்பார் இரவன்மின் என்று.

7 இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பிற்
கரப்பார் இரவன்மின் என்று. 1067

இரப்பின் — யாசிக்க வேண்டுமானால், கரப்பார் — வைத்திருப்பதை மறைப்பவரிடம், இரவன்மின் என்று — இரவாதிருப்பீர்களாக என்று, இரப்பாரை — யாசிப்பவர்கள், எல்லாம் — எல்லோரிடமும், இரப்பன் — இரந்து கேட்டுக் கொள்வேன்.

இரத்தல் என்னும் பாதுகாப்பில்லாத தோணி, மறைத்தல் என்னும் வன்னிலத்தில் தாக்குமாயின் பிளந்து போகும்.

இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி கரவு என்னும் பார்தாக்க பக்குவிடும்.

8 இரவுஎன்னும் ஏமாப்புஇல் தோணி கரவுஎன்னும்
பார்தாக்கப் பக்கு விடும். 1068

இரவு — யாசித்தல், என்னும் — எனப்படும், ஏமாப்பு — பாதுகாப்பு, இல் — இல்லாத, தோணி — மரக்கலம், கரவு — மறைத்தல், என்னும்— எனப்படும், பார்தாக்க — வன்னிலத்துடன் தாக்கிவிடுமானால், பக்குவிடும் — பிளந்து போவதாகும்.

உடையவர்களின் முன் வறியவர்கள் நின்று யாசிக்கும் கொடுமையினை நினைத்தால், உள்ளம் கரைந்து உருகுகின்றது. உடையவர் இல்லையென்னும் கொடுமையினை நினைத்தால், உருகிய அளவும் இல்லாமல் அழிந்துவிடும்.

இரவு உள்ள உள்ளம் உருகும் கரவு உள்ள உள்ளதும் இன்றி கெடும்.

9 இரவுஉள்ள உள்ளம் உருகும் கரவுஉள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும். 1069

இரவு — இரந்து கேட்கின்ற கொடுமையினை, உள்ள — நினைக்கும்போது, உள்ளம் உருகும் — மனம் கரைந்து உருகுகின்றது, கரவு — மறைத்துவைத்து 'இல்லை' என்பதனை, உள்ள — நினைக்க, உள்ளதூஉம் — உருகுகின்ற அந்தஅளவும், இன்றிக் கெடும் — இல்லாமல் அழிந்து போவதாகும்.

உள்ளதை மறைத்துவைத்து இல்லை யென்றபோதே இரப்பார்க்கு உயிர்போகும் நிலையாகின்றது. இனி உள்ளதை மறைத்து இல்லை என்பவர்க்கு உயிர் போகாதிருத்தலால், அது எங்குச் சென்று மறைந்திருக்குமோ?

கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்கும் கொல்லோ இரப்பவர் சொல்லாட போம் உயிர்.

10 கரப்பவர்க்கு யாங்குஒளிக்கும் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர். 1070

சொல்லாட — இரப்பவர்க்கு இல்லையென்று சொல்லியவுடனே, இரப்பவர் — யாசிப்பவருக்கு, உயிர்போஒம் — உயிரானது, போகின்றது [அவ்வாறாயின்] கரப்பவர்க்கு — மறைத்து வைத்து இல்லையென்பார்க்கு உயிர் பின்னும் இருத்தலால், யாங்கு — அவர் உயிர் எங்குப் புகுந்து, ஒளிக்குங்கொல்லோ — மறைந்திருக்குமோ?

## 108. கயமை

### [மனிதத்தன்மை எதுவுமே இல்லாத கீழோர் இயல்பு]

கீழ்மக்கள் வடிவத்தால் முழுதும் மக்களைப்போலவே இருப்பர். அவர்களைப்போல ஒப்பு நாம் வேறு எங்கும் கண்டது இல்லை.

மக்களே போல்வர் கயவர் அவர் அன்ன ஒப்பாரி யாம் கண்டது இல்.

**1 மக்களே போல்வர் கயவர் அவரன்ன**
**ஒப்பாரி யாம்கண்டது இல். 1071**

கயவர் — கீழ்மக்கள், மக்களே போல்வர் — தோற்றத்தால் முழுதும் மக்களைப் போலவே இருப்பர், அவர் — அவர்களை, அன்ன — போல, ஒப்பாரி — ஒப்பு, யாம்கண்டது — நாம் வேறெங்கும் கண்டது, இல் — இல்லை.

நல்லவைகளை அறிந்திருப்பவர்களைவிட அதனை அறியாத கீழ்மக்களாகிய கயவர்கள், அவை காரணமாகத் தம் நெஞ்சத்தில் கவலை இல்லாதவர்களாதலால் நன்மையுடையவராவர்.

நன்று அறிவாரின் கயவர் திரு உடையர் நெஞ்சத்து அவலம் இலர்.

**2 நன்றுஅறி வாரின் கயவர் திருவுடையர்**
**நெஞ்சத்து அவலம் இலர். 1072**

நன்று அறிவாரின் — தமக்கு இருக்க வேண்டிய நல்லவைகளை அறிந்திருப்பவர்களைவிட, கயவர் — கீழ்மக்கள், நெஞ்சத்து — நெஞ்சத்தில், அவலம் — [நல்லவைகளை நினைத்து] கவலை, இலர் — இல்லாதவர்கள் ஆனபடியால், திருவுடையர் — [அவர்கள்] நன்மை யுடையவர்களாவார்கள்.

கயவரும் தாம் விரும்பியவாறு தேவரைப் போலத் தம்மை நியமிப்பாரின்றி விரும்பிய வற்றைச் செய்வதால், கயவரும் தேவரும் ஒரு தன்மையராவர்.

தேவர் அனையர் கயவர் அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான்.

**3 தேவர் அனையர் கயவர் அவரும்தாம்**
**மேவன செய்தொழுக லான். 1073**

அவரும் — அக்கயவரும், [தேவர்களைப் போலத் தம்மை நியமிப்பாரின்றி] தாம் — தாம், மேவன — விரும்புனவற்றை, செய்து — செய்து, ஒழுகலான் — நடந்து கொள்ளுவதனால், கயவர் — கயவரும், தேவர் — தேவரும், அனையர் — ஒரு தன்மையர் ஆவர்.

கீழ்மகன் தன்னிற் சுருங்கிய பட்டியாய் நடப்பவரைக் கண்டால் அப்படிப்பட்ட நடத்தையில் அவரைவிட மேம்பட்டு தன் மிகுதியினைக் காட்டி இறுமாப்படைவான்.

அகப்பட்டி ஆவாரை காணின் அவரின் மிகப்பட்டு செம்மாக்கும் கீழ்.

4 அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ். 1074

கீழ் — கீழ்மகனான கயவன், அகப்பட்டி — தன்னை விடச் சுருங்கிய பட்டியாய், ஆவாரை — நடப்பவரை, காணின் — கண்டானானால், அவரின் மிகப்பட்டு — அவரைவிடத் தான் மேம் பாடு காட்டி, செம்மாக்கும் — இறுமாப்புக் கொள்ளுவான்.

கயவர்களிடம் ஆசாரம் இருக்கக் கண்டால் அதற்குக் காரணம் மேலாக உள்ளவரால் துன்பம் வருமென்ற அச்சமேயாகும். அதுவேயன்றித் தம்மால் விரும்பப்படும் பொருள் கிடைக்குமென்றாலும் ஆசாரம் காட்டுபவனாவான்.

அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம் அவா உண்டேல் உண்டாம் சிறிது.

5 அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது. 1075

கீழ்களது — கீழ்மக்களது, ஆசாரம் — ஆசாரத்திற்குக் காரணம், அச்சமே — துன்பம் வருமென்ற அச்சமேயாகும், எச்சம் — அந்தக் காரணம் இல்லையானால், அவா — விரும்பிய பொருள், உண்டேல் — அதனால் வருமேயானால், சிறிது உண்டாம் — அப்போதும் சிறிது ஆசாரம் உண்டாகும்.

கயவர் தாம் கேட்டறிந்த மறை பொருள்களைப் போகும் இடமெல்லாம் தாங்கிக் கொண்டு போய் மற்றவர்களுக்குச் சொல்லுதலால், அக்கயவர் அடிக்கப்படுகின்ற பறையினை ஒப்பவராவார்.

அறை பறை அன்னர் கயவர் தாம் கேட்ட மறை பிறர்க்கு உய்த்து உரைக்கலான்.

6 அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான். 1076

தாம் — கயவர் தாம், கேட்ட — கேட்டறிந்த, மறை — மறைபொருள்களை, உய்த்து — போகுமிடமெல்லாம் தாங்கிக் கொண்டு போய், பிறர்க்கு — மற்றவர்களுக்கு, உரைக்கலான் — சொல்லுதலால், கயவர் — கயவர், அறை — அடிக்கப்படுகின்ற, பறை — பறையினை, அன்னர் — ஒப்பவராவர்.

முறுக்கிய கையினால் தமது கன்னத்தினை நெரிப்பவர்க்கு அல்லாமல் கீழ்மக்கள் தாம் உணவு உண்டு பூசிய ஈரக் கையினையும் யாசிப்பவர்களுக்குத் தெறிக்க மாட்டார்கள்.

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறு உடைக்கும் கூன் கையர் அல்லாதவர்க்கு.

**7 ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுஉடைக்கும்**
**கூன்கையர் அல்லா தவர்க்கு.** 1077

கயவர் — கயவர்கள், கொடிறு — கன்னத்தினை, உடைக்கும் — உடைக்கின்ற, கூன் — வளைத்து முறுக்கிய, கையர் அல்லாதவர்க்கு — கையினையுடையவர் அல்லாதவர்க்கு, ஈர்ங்கை— உணவு சாப்பிட்டுப் பூசிய ஈரக் கையினையும், விதிரார் — தெறிக்க மாட்டார்கள்.

மெலியார் தமது குறையினைச் சொல்லியவுடனேயே சான்றோர் பயன்படுவர். மற்றைய கயவர் கரும்பு போல நைய நெருக்கியபோதுதான் பயன்படுவர்.

சொல்ல பயன்படுவர் சான்றோர் கரும்புபோல் கொல்ல பயன்படும் கீழ்.

**8 சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்**
**கொல்லப் பயன்படும் கீழ்.** 1078

சொல்ல — சொல்லிய அளவிலேயே, சான்றோர் — மேலான சான்றோர், பயன்படுவர் — பிறர்க்குப் பயன்படுவார்கள், கீழ் — கயவர்கள், கரும்பு போல் — கரும்பினை நசுக்குவது போல, கொல்லப் பயன்படும் — நைய நெருக்கிய போதுதான் பயன்படுவார்கள்.

மற்றவர்கள் செல்வத்தால் நன்கு உடுத்திக் கொள்ளுவதையும் உண்ணுவதையும் கயவன் கண்டு விட்டால், அவற்றைப் பொறாமல் அவர்மீது குற்றம் இல்லையென்றாலும் உண்டாக்கிச் சொல்லுவதில் வல்லவனாவான்.

உடுப்பதும் உண்பதும் காணின் பிறர் மேல் வடு காண வற்றாகும் கீழ்.

**9 உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்**
**வடுக்காண வற்றாகுங் கீழ்.** 1079

உடுப்பதூஉம் — பிறர் நன்கு உடுத்திக் கொள்ளுவதையும், உண்பதூஉம் — உண்ணுவதையும், கீழ் — கயவன், காணின் — காண்பானானால், [மனம் பொறாமல்] பிறர் மேல் — அத்தகைய மற்றவர்கள் மீது, [குற்றம் இல்லையென்றாலும்] வடு — குற்றத்தினை, காண — தானே உண்டாக்கிக் காட்டுவதில், வற்றாகும் — வல்லவனாவான்.

கயவர் தமக்கு யாதானுமொரு துன்பம் வந்தபோது தம்மைப் பிறர்க்கு விரைவாக விற்றற்கு உரியர்; அதுவன்றி வேறு எத்தொழிலுக்கு உரியர்?

எற்றிற்கு உரியர் கயவர் ஒன்று உற்றக்கால் விற்றற்கு உரியர் விரைந்து.

10 எற்றிற்கு உரியர் கயவர்ஒன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து. 1080

கயவர் — கீழ்மக்கள், ஒன்று உற்றக்கால் — யாதானுமொரு துன்பம் தமக்கு வந்துவிட்டால், விரைந்து — விரைவாகச் சென்று, விற்றற்கு — தம்மைப் பிறரிடம் விற்பதற்கு, உரியர் — உரியவராவர், [அதனையன்றி] எற்றிற்கு — வேறு எத்தொழிலுக்கு, உரியர் — உரியவராவர்?

## களவு இயல்

### 109. தகை அணங்கு உறுத்தல்

**[பெண்ணின் அழகு தலைவனை வருத்துதல்]**

**பொருந்திய** குழையினையுடைய இப்பெண் ஒரு தெய்வமகளோ? அல்லது தனிச்சிறப்புடைய ஒரு மயிலோ? அல்லது மாதுதானோ? இன்னவள் என்று துணிய முடியாமல் எனது நெஞ்சு மயங்குகின்றது.

அணங்குகொல் ஆய் மயில்கொல் ஓ கனம் குழை மாதர்கொல் மாலும் என் நெஞ்சு.

**1 அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு. 1081**

**கனம்** — கனத்த, குழை — காதணிகளையுடைய இப்பெண், **அணங்குகொல்** — ஒரு தெய்வ மகளோ, **ஆய்** — தனிச் சிறப்புப் பெற்ற, மயில்கொல் — ஒரு மயிலோ, **மாதர்கொல்** — அல்லது மாதுதானோ என்று, **என்** — எனது, **நெஞ்சு** — நெஞ்சம், **மாலும்** — மயங்கு கின்றது. [ஓ — அசைநிலை]

**இப்பெண் எனது** பார்வைக்கு எதிராகப் பார்த்தல், தானே வருத்துகின்ற இப்பெண், சேனையையும் கொண்டு வந்த தன்மையினை உடைத்து.

நோக்கினாள் நோக்கு எதிர் நோக்குதல் தாக்கு அணங்கு தானை கொண்டு அன்னது உடைத்து.

**2 நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு**
**தானைக்கொண் டன்னது உடைத்து. 1082**

**நோக்கினாள்** — இத்தகைய வனப்பினையுடைய இப்பெண், **நோக்கு** — எனது நோக்கிற்கு, **எதிர்** — எதிரில், நோக்குதல் — பார்த்தல், தாக்கு — தானே தாக்கி வருத்துகின்ற, **அணங்கு** — தெய்வமகள், **தானை** — சேனையையும், கொண்டு — கொண்டு வந்த, **அன்னது** — **தன்மை யினை**, **உடைத்து** — உடையதாகும்.

**கூற்றுவன்** என்று கூறப்படுவதனை முன்பெல்லாம் கண்டு அறியேன். இப்போது கண்டறிந் தேன். அது பெண் தன்மையுடனே பெரியனவாகப் போர் செய்யும் கண்களை உடைய தாகும்.

பண்டு அறியேன் கூற்று என்பதனை இனி அறிந்தேன் பெண்தகையான் பேர் [அமர் கட்டு.

**3 பண்டுஅறியேன் கூற்றுஎன் பதனை இனியறிந்தேன்**
**பெண்தகையான் பேரமர்க் கட்டு. 1083**

**கூற்று** — கூற்றுவன், என்பதனை — என்று கூறப்படுவதனை, பண்டு — முன்பெல்லாம், **அறியேன்** — கண்டறியேன், இனி — இப்போது, அறிந்தேன் — அறிந்து கொண்டேன், **[அது]** பெண் — பெண்மைக்குரிய, **தகையான்** — தன்மைகளுடனே, **பேர்** — பெரியதான, **அமர்க்கட்டு** — போர் செய்கின்ற கண்களை உடையது.

பெண் தன்மையுடன் கூடிய இப்பேதைக்கு இருக்கும் கண்கள் தம்மைக் கண்டவர் உயிரை உண்ணுகிற தோற்றத்துடனே கூடி பெண் தன்மைக்கு மாறுபட்டிருந்தன.

கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தான் பெண்தகை பேதைக்கு அமர்த்தன கண்.

**4 கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தான் பெண்தகை**
**பேதைக்கு அமர்த்தன கண். 1084**

பெண்தகை — பெண் தன்மையுடனே கூடிய, பேதைக்கு — இப்பேதைப் பெண்ணுக்கு, [இருக்கின்ற] கண் — கண்கள், கண்டார் — பார்த்தவரது, உயிர் — உயிரினை, உண்ணும் — உண்ணுகின்ற, தோற்றத்தான் — தோற்றத்துடனே பொருந்தி, அமர்த்தன — பெண் தன்மைக்கு மாறுபட்டனவாய் இருந்தன.

கூற்றுவன்தானோ? பெண்ணின் கண்கள் தானோ? மானோ? யாதென்று அறிய முடியாதவனானேன். இப்பெண்ணின் கண்களின் நோக்கம் இம்மூன்று தன்மையினையும் உடையதாக இருக்கின்றது.

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல் நோக்கம் இம்மூன்றும் உடைத்து.

**5 கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்**
**நோக்கம்இம் மூன்றும் உடைத்து. 1085**

கூற்றமோ — கூற்றுவன்தானோ? கண்ணோ — கண்களோ, பிணையோ — பெண்மானோ, மடவரல் — இப்பெண்ணின், நோக்கம் — நோக்கமானது, இம் மூன்றும் — இந்த மூன்று தன்மைகளையும், உடைத்து — கொண்டதாக இருக்கின்றது.

கொடுமையான புருவங்கள் வளையாமல் செம்மையாயிருந்து விலக்குமானால் இப்பெண்ணின் கண்கள் நடுங்குவதற்குக் காரணமான துன்பத்தினைச் செய்யாதிருக்கும்.

கொடும் புருவம் கோடா மறைப்பின் நடுங்கு அஞர் செய்யல மன் இவள் கண்.

**6 கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்குஅஞர்**
**செய்யல மன்இவள் கண். 1086**

கொடும் — கொடுமையான, புருவம் — இப்பெண்ணின் புருவங்கள், கோடா — வளையாமல் நேராக இருந்து, மறைப்பின் — விலக்கினால், இவள் — இப்பெண்ணின், கண் — கண்கள், நடுங்கு — நடுக்கத்தினை உண்டாக்குகிற, அஞர் — துன்பத்தினை செய்யல — செய்யுமாட்டா. [மன் — ஒழியிசை]

இம்மாதினுடைய சாய்தலில்லாத முலைகளின் மேலிட்ட துணியானது கொல்லுவதாகிய மதயானையின் மேலிட்ட முகபடாத்தினை ஒத்திருக்கின்றது.

கடா களிற்றின் மேல் கட்படாம் மாதர் படா முலை மேல் துகில்.

**7 கடாஅக் களிற்றின் மேல் கட்படாம் மாதர்**
**படாஅ முலைமேல் துகில். 1087**

மாதர் — இப்பெண்ணினுடைய, படாஅ — சாயாதிருக்கும், முலை — முலைகளின், மேல் — மேலே அணியப்பட்ட, துகில் — துகிலானது [துணியானது], கடாஅ — கொல்லக்கூடிய, களிற்றின்மேல் — மதயானையின் மேலே போடப்பட்ட, கட்படாம் — முகபடாம் என்னும் துணியினை ஒத்திருக்கின்றது.

போர்க்களத்திற்கு வந்து எதிர்க்காத பகைவர்களும் எதிர்த்தவர் சொல்லியதைக் கேட்டு அஞ்சுவதற்குக் காரணமான எனது வலிமை இம்மாதின் ஒளி பொருந்திய நுதல் ஒன்றற்கே அழிந்துவிட்டது.

ஒள் நுதற்கோ உடைந்ததே ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு.

**8 ஒண்ணுதற்கு ஓஒ உடைந்ததே ஞாட்பினுள்**
**நண்ணாரும் உட்கும்என் பீடு. 1088**

ஞாட்பினுள் — போர்க்களத்தினில், நண்ணாரும் — வந்து நேரில் எதிர்க்காதவர்களும், உட்கும் — அஞ்சுகின்ற, என் — எனது, பீடு — வலிமையெல்லாம், [இப்பெண்ணின்] ஒள் — ஒளி பொருந்திய, நுதற்கு ஓஒ — நெற்றியின் அழகு ஒன்றற்கே, உடைந்ததே — உடைந்து அழிந்து விட்டதே.

மானைப்போன்ற மடநோக்கினையும் நாணத்தினையும் உடைய இவளுக்கு வேறு அணிகலன்களை அணிதல் என்ன பயனுடைத்து?

பிணை ஏர் மட நோக்கும் நாணும் உடையாட்கு அணி எவனோ ஏதில தந்து.

**9 பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு**
**அணிஎவனோ ஏதில தந்து. 1089**

பிணை — பெண்மானை, ஏர் — ஒத்த, மட — மடமையுள்ள, நோக்கும் — நோக்கினையும், நாணும் — நாணத்தினையும், உடையாட்கு — உடையவளாகிய இப்பெண்ணிற்கு, ஏதில — வேற்றுமையான [அணிகலன்களை], தந்து — படைத்து, அணி — அணிந்திருக்கச் செய்தல், எவன் — என்ன பயனைத் தருவதாகும்? [ஓ — அசைநிலை]

காய்ச்சப்பட்ட மதுவானது தன்னை உண்டார்களிடத்தில்தான் மகிழ்ச்சியினைச் செய்வதாகும். காமத்தினைப்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியினைச் செய்தல் உடைத்தன்று.

உண்டார்கண் அல்லது அடு நறா காமம் போல் கண்டார் மகிழ் செய்தல் இன்று.

10 உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று. 1090

அடு — காய்ச்சி எடுக்கப்பட்ட, நறா — மதுவானது, உண்டார்கண் — உண்டவர்களிடத்தில், அல்லது — அல்லாமல், காமம்போல் — காமத்தினைப்போல, கண்டார் — பார்த்தவர் களிடத்தில், மகிழ் — மகிழ்ச்சியினை, செய்தல் இன்று — செய்தல் இல்லை.

## 110. குறிப்பு அறிதல்

### [ஒருவர் குறிப்பினை ஒருவர் அறிந்துகொள்ளுதல்]

இவளுடைய நோக்கு இதுபோது என்மேல் இரண்டு நோக்காயிற்று. அவற்றுள் ஒரு நோக்கு எனக்கு நோய் செய்யும் நோக்கு. மற்றையது அந்நோய்க்கு மருந்தான நோக்காகும்.

இரு நோக்கு இவள் உண்கண் உள்ளது ஒரு நோக்கு நோய் நோக்கு ஒன்று [அந்நோய் மருந்து.

1 இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து. 1091

இவள் — இப்பெண்ணினுடைய, உண்கண் — மையுண்ட கண்களில், உள்ளது — இருக்கும் நோக்கானது, இரு — இரண்டு, நோக்கு — நோக்காயிற்று, [அவைகளில்] ஒரு நோக்கு — ஒரு நோக்கானது, நோய் — நோயினைச் செய்யும், நோக்கு — நோக்காகும், ஒன்று — பிறிதொரு நோக்கானது, அந்நோய் — அந்த நோய்க்கு, மருந்து — மருந்தாகும்.

இவள் கண்கள் யான் காணாமல் என்மேல் நோக்குகின்ற சிறிய நோக்கம் மெய்யுறு புணர்ச்சியின் ஒத்த பாதியன்று! அதனினும் மிகும்.

கண் களவு கொள்ளும் சிறு நோக்கம் காமத்தின் செம்பாகம் அன்று பெரிது.

2 கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தின்
செம்பாகம் அன்று பெரிது. 1092

கண் — இப்பெண்ணினுடைய கண்கள், களவு — களவுத்தன்மையில் யான் காணாமல், கொள்ளும் — என்மேல் நோக்குகின்ற, சிறு — சிறிய, நோக்கம் — நோக்கானது, காமத்தின் — மெய்யுறு புணர்ச்சியின், செம்பாகம் — ஒத்த பாதியளவு, அன்று — அல்ல, பெரிது — அதனைவிடப் பெரிதாகும்,

யான் நோக்காதிருக்கும்போது அவள் என்னை அன்போடு நோக்கினாள். நோக்கி ஒன்றனை மனதிற் கொண்டு நாணத்துடன் தலை குனிந்தாள். அக்குறிப்பு எங்களிடம் உண்டான அன்பாகிய பயிர் வளர நீர் வார்த்தது போலாயிற்று.

நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃது அவள் யாப்பினுள் அட்டிய நீர்.

3 நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதுஅவள்
யாப்பினுள் அட்டிய நீர் 1093

நோக்கினாள் — யான் காணாதபோது என்னை நோக்கியவள், நோக்கி — என்னை நோக்கி இறைஞ்சினாள் — மனதில் ஒன்றை நினைத்து நாணத்துடன் குனிந்தாள், அஃது — அச்செயலின் குறிப்பு, யாப்பினுள் — எங்களிடையே தோன்றிய காதற்பயிர் வளர அதற்கு, அவள் — அப்பெண், அட்டிய — ஊற்றிய, நீர் — நீராக இருந்தது.

யான் அவளைப் பார்க்கும்போது அவள் நிலத்தினை நோக்கி நின்றாள். நான் நோக்காத போது என்னை நோக்கித் தன்னுள்ளே மகிழ்கின்றாள்.

யான் நோக்கும் காலை நிலன் நோக்கும் நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்.

4 யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். 1094

யான் — நான், நோக்குங்காலை — அவளை நோக்கும்போது, நிலன் — அவள் குனிந்து நிலத்தினை, நோக்கும் — நோக்குகின்றாள், நோக்காக்கால் — நான் நோக்காத போது, தான் — அவள், நோக்கி — என்னை நோக்கி, மெல்ல — மெதுவாக வெளிப்படாமல், நகும் — மகிழ்ச்சி கொள்ளுவாள்.

நேராகக் குறிக்கொண்டு நோக்குவதுபோல் அல்லாமல் ஒரு கண்ணைச் சுருக்கினவள் போல என்னை நோக்கிப் பின் தனக்குள்ளே மகிழ்கின்றாள்.

குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண் சிறக்கணித்தாள் போல நகும்.

5 குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும். 1095

குறிக்கொண்டு — நேராக ஒரு குறிப்பினைக் கொண்டு, நோக்காமை — நோக்காதது, அல்லால் — அல்லாது, ஒருகண் — ஒருகண்ணை, சிறக்கணித்தாள் — சுருக்கிக் கொண்டவள், போல — போன்று, நகும் — என்னை நோக்கி உள்ளுக்குள் மகிழ்வாள்.

வெளிப் பார்வைக்கு அயலார் போலக் கடுஞ்சொல் சொன்னாலும் மனத்தில் பகைமை யில்லாதவருடைய சொல் விரைவில் அறிந்து கொள்ளப்படும்.

உறாதவர் போல் சொலினும் செறார் சொல் ஒல்லை உணரப்படும்.

6 உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும். 1096

உறாஅதவர்போல் — வெளிப்பார்வைக்கு அயலார் போல, சொலினும் — கடுமையான சொற்களைச் சொன்னாலும், செறாஅர் — உள்ளத்தில் பகையில்லாதவர், சொல் — சொற்கள், ஒல்லை — விரைவில், உணரப்படும் — உணர்ந்து தெரிந்து கொள்ளப்படும்.

பின்னர் இனிதாகவும் முன்னர் இனிமை இல்லாததுமான சொல்லும், மனத்தில் கோபியா திருந்து புறத்தே கோபித்தார் போன்ற வெகுளி நோக்கும் அயலார் போன்றிருந்து நட்பாயினார்க்கு ஒரு குறிப்புப் பற்றி வருவனவாகும்.

செறா சிறு சொல்லும் செற்றார்போல் நோக்கும் உறார் போன்று உற்றார் குறிப்பு.

7 செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன்று உற்றார் குறிப்பு. 1097

செறாஅ — பின்னே இனிதாகவும் முன்னே துன்பமாகவும் இருக்கின்ற, சிறு — சிறிய, சொல்லும் — சொல்லும், செற்றார் போல் — உள்ளத்தில் பகையாதிருந்து வெளித் தோற்றத் திற்குப் பகைத்தவர் போன்ற, நோக்கும் — சினங்கொண்ட நோக்கும், உறாஅர்போன்று — அயலார் போல இருந்து காட்டி, உற்றார் — காதல் நட்பு கொண்டவர்களுக்கு, குறிப்பு — ஒரு குறிப்பினைக் கருதி உண்டாவதாகும்.

என்னை விலக்குகின்ற சொற்களுக்குப் பொறுக்காமல் யான் யாசிப்பது போல நோக்கிய போது அதையறிந்து மனம் நெகிழ்ந்து உள்ளே மகிழ்ந்து நின்றாள். அதனால், அசைந்த சாயலுடைய அவள் காட்டிய அந்த நகைப்பினிடத்தே ஒரு நன்மைக் குறிப்பு உண்டு.

அசையியற்கு உண்டு ஆண்டு ஓர் ஏஎர் யான் நோக்க பசையினள் பைய நகும்.

8 அசையியற்கு உண்டுஆண்டுஓர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும். 1098

யான் — நான், நோக்க — கடிய சொல்லுக்கு வருந்தி இரந்து பார்த்தபோது, பசையினள் — அன்பும் இரக்கமும் கொண்டவளாகி, பைய — மெல்லி, நகும் — நகைத்து நின்றாள், [ஆகையினால்] அசை — துவளுகின்ற, இயற்கு — தன்மையுடைய இப்பெண்ணிற்கு, ஆண்டு — அந்த நகைப்பினில் [தோன்றுகின்ற], ஓர் — ஒரு, ஏஎர் — நன்மைக் குறிப்பு, உண்டு — இருக்கின்றது.

முன்னறியாதவர்போல ஒருவரையொருவர் பொது நோக்கினால் பார்த்துக் கொள்ளுதல் காதல் உடையாரிடத்து இருப்பதாகும்.

ஏதிலார் போல பொது நோக்கு நோக்குதல் காதலார் கண்ணே உள.

**9 ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்**
**காதலார் கண்ணே உள.** 1099

ஏதிலார் — முன்பெல்லாம் அறிந்திராதவர்கள், போல — போல, பொது — பொதுத் தன்மையான, நோக்கு — நோக்கினில், நோக்குதல் — ஒருவரையொருவர் நோக்கிக் கொள்ளுதல், காதலார்கண்ணே — காதலர் இருவரிடத்தும், உள — இருப்பதாகின்றது.

காதலர் இருவருடைய கண்கள், ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் நோக்கால் ஒக்குமாயின் அவர்கள் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒருபயனும் உடையன அல்லவாம்.

கண்ணொடு கண் இணை நோக்கு ஒக்கின் வாய் சொற்கள் என்ன பயனும் இல.

**10 கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல.** 1100

கண்ணொடு — ஒருவர் கண்களோடு, கண்இணை — மற்றவர் கண்களும், [ஒன்று சேர்ந்து] நோக்கு — நோக்கினால், ஒக்கின் — ஒத்துவிட்டால், வாய்ச் சொற்கள் — அவர்கள் பேசுகின்ற வாய்ச் சொற்கள், என்ன பயனும் இல — எந்தப் பயனும் உடையன அல்லவாம்.

## 111. புணர்ச்சி மகிழ்தல்

**[தலைமகன் இன்பம் நுகர்ந்ததை மகிழ்ந்து கூறல்]**

கண்ணால் கண்டும், செவியால் கேட்டும், நாவால் உண்டும், மூக்கால் மோந்தும், மெய்யால் தீண்டியும் அனுபவிக்கப்படும் ஐம்புலனும் ஒளி பொருந்திய வளையல்களை யுடைய இப்பெண்ணினிடத்தே இருக்கின்றன.

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் ஒண் தொடி கண்ணே உள.

**1 கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள.** 1101

கண்டு — கண்டும், கேட்டு — கேட்டும், உண்டு — உண்டும், உயிர்த்து — மோந்தும், உற்று — தொட்டும், அறியும் — நுகரப்படுகின்ற, ஐம்புலனும் — ஐந்து புலன்களும், ஒண் — ஒளிபொருந்திய, தொடிகண்ணே — வளையல்களையுடைய இப்பெண்ணினிடத்தே, உள — இருக்கின்றன.

பிணிக்கு மருந்தாவன அவற்றிற்கு மாறான தன்மையினையுடையனவாகும். அவ்வாறின்றி ஆபரணங்களையுடைய இம்மாது தன்னாலுண்டான பிணிக்குத் தானே மருந்தும் ஆயினாள்.

பிணிக்கு மருந்து பிறமன் அணி யிழை தன் நோய்க்கு தானே மருந்து.

2 பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து. 1102

பிணிக்கு — நோய்களுக்கு, மருந்து — மருந்து எனப்படுவன, பிற — மாறான குணத்தினையுடையனவாகும், அணியிழை — அணிகலன்களையணிந்த இம்மாது, தன் — தன்னாலுண்டான, நோய்க்கு — நோய்க்கு, தானே — அப்பெண்ணே, மருந்து — மருந்து ஆனாள். [மன் — ஒழியிசை].

தாம் விரும்பிய மகளிரது மெல்லிய தோள்களின் மீது துயிலும் துயில்போலத் தாமரைக் கண்ணான் உலகம் இனிமையுடையதோ ?

தாம் விழ்வார் மென் தோள் துயிலின் இனிதுகொல் தாமரைக்கண்ணான் உலகு.

3 தாம்விழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. 1103

தாம் — தம்மால், வீழ்வார் — விரும்பப்படும் பெண்ணினது, மென் — மெல்லிய, தோள் — தோள்களின்மேல், துயிலின் தூங்குவதைப்போல, தாமரைக்கண்ணான் — தாமரைக்கண்ணனுடைய, உலகம் — உலகம், இனிதுகொல் — இன்பமுடையது ஆகுமோ?

தன்னை விட்டு நீங்கினால் சுடுகின்றது; அணுகினால் குளிர்ச்சியாக இருக்கின்றது. இத் தன்மைத்தான தீயினை இப்பெண் எவ்வுலகில் பெற்றாள்?

நீங்கின் தெறூம் குறுகுங்கால் தண் என்னும் தீ யாண்டு பெற்றாள் இவள்.

4 நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள். 1104

நீங்கின் — அம்மாதை விட்டு நீங்கியபோது, தெறூஉம் — சுடும், குறுகுங்கால் — அவளிடம் நெருங்கிச் சென்றபோது, தண் என்னும் — குளிர்ச்சியாக இருக்கும், தீ — இத்தகைய நெருப்பினை, இவள் — இம்மாது, யாண்டு — எந்த உலகத்தில், பெற்றாள் — பெற்றாள்?

எப்போது புணர்ந்தாலும் பூவினையணிந்த தழைத்த கூந்தலினையுடைய இவளுடைய தோள்கள் விரும்பிய பொருள்கள் எல்லாம் விரும்பியபோது தாமே வந்து இன்பம் செய்வன போல இன்பம் செய்கின்றன.

வேட்ட பொழுதின் அவை அவை போலுமே தோட்டார் கதுப்பினாள் தோள்.

**5 வேட்ட பொழுதின் அவையவை போலுமே**
**தோட்டார் கதுப்பினாள் தோள். 1105**

தோட்டார் — பூவினையணிந்த, கதுப்பினாள் — கூந்தலினையுடையவளின், தோள் — தோள்கள், வேட்ட — இனிமையானவற்றை விரும்பிய, பொழுதின் — நேரத்தில், அவையவை — விரும்பிய அவை தாமே வந்து இன்பத்தினைச் செய்வன, போலுமே — போலவே இருக்கின்றன.

எனது உயிர் அவளைப் பெற்று அனுபவிக்குந்தோறும் தளிர்க்கும் வகையில் தீண்டுதலால் இப்பேதைப் பெண்ணுக்குத் தோள்கள் அமிழ்தத்தினால் செய்யப்பட்டனவாகும்.

உறுதோறு உயிர் தளிர்ப்ப தீண்டலால் பேதைக்கு அமிழ்தின் இயன்றன தோள்.

**6 உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு**
**அமிழ்தின் இயன்றன தோள். 1106**

உயிர் — உயிரானது, உறுதோறு — பெற்று அனுபவிக்கும் பொழுதெல்லாம், தளிர்ப்ப — தளிர்க்கும் வகையில், தீண்டலால் — தொடுவதாலே, பேதைக்கு — இப்பேதைப் பெண்ணுக்கு, தோள் — தோள்கள், அமிழ்தின் — அமிழ்தத்தினாலே, இயன்றன — செய்யப்பட்டிருப்பனவாகும்.

அழகிய மாமை நிறத்தினையுடைய இப்பெண்ணினைத் தழுவும்போது தமது மனையிலிருந்து தமக்கு வந்த பொருளைப் பிறர்க்கும் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்டு மகிழ்வது போலிருக்கின்றது.

தம் இல் இருந்து தமது பாத்து உண்டற்றால் அம்மா அரிவை முயக்கு.

**7 தம்இல் இருந்து தமதுபாத்து உண்டற்றால்**
**அம்மா அரிவை முயக்கு. 1107**

அம் — அழகிய, மா — மாமைநிறமுடைய, அரிவை — இப்பெண்ணின், முயக்கு — தழுவுதல் என்பது [இன்பம் தருவதால்], தம் — தமக்குரிய, இல் — மனையில், இருந்து — இருந்துகொண்டு, தமது — தாம் வைத்துள்ள பொருளை, பாத்து — மற்றவர்களுக்கும் பகுத்துக் கொடுத்து, உண்டற்று — உண்பதுபோல மகிழ்ச்சியாக இருக்கின்றது. [ஆல் — அசைநிலை]

ஒரு பொழுதும் நெகிழாமையால் காற்று இடையில் புகாமல் தழுவுதல் ஒருவரை யொருவர் விரும்புகின்ற இருவர்க்கும் இன்பம் தருவதாகும்.

வீழும் இருவர்க்கு இனிதே வளி இடை போழப்படா முயக்கு.

**8 வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை**
**போழப் படாஅ முயக்கு.** 1108

**வளி** — காற்று, இடை — இருவர்க்கும் இடையில், போழப்படாஅ — போக முடியாதபடி இருக்கின்ற, முயக்கு — தழுவிப் புணர்தலானது, வீழும் — காதல் கொண்ட, இருவர்க்கு — காதல் இருவர்க்கும், இனிதே — இனிமை தருவதாகும்.

புணர்ச்சி இனிமையாதற் பொருட்டு வேண்டுவதாய ஊடலும், அதனை அளவறிந்து நீங்குதலும், பிறகு புணர்தலும் ஆகிய இவைதாம் திருமணம் செய்துகொண்டு காமத்தை இடைவிடாமல் எய்தியவர் பெற்ற பயன்களாகும்.

ஊடல் உணர்தல் புணர்தல் இவை காமம் கூடியார் பெற்ற பயன்.

**9 ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்**
**கூடியார் பெற்ற பயன்.** 1109

**ஊடல்** — ஊடிக் கொள்ளுதலும், உணர்தல் — அதனை அளவோடு நீக்கிக் கொள்ளுதலும், புணர்தல் — புணர்தலும், இவை — எனப்படும் இவைதாம், காமம் கூடியார் — மணந்து கொண்டு வாழ்ந்தார், பெற்ற — அடைந்த, பயன் — பயன்களாகும்.

நூற்பொருள்களைக் கற்குந்தோறும் முன்னை அறியாமையினைக் கண்டாற்போல, சிவந்த இழையினையுடையாளை இடைவிடாது செறியச் செறிய இவளிடம் புதுமை காணப் படுகிறது.

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம் செறிதோறும் சேயிழை மாட்டு.

**10 அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்**
**செறிதோறும் சேயிழை மாட்டு.** 1110

**சேயிழை மாட்டு** — சிவந்த அணிகலன்களையுடைய இம்மாதிடத்தில், செறிதோறும் — இன்பம் நுகருந்தோறும், காமம் — [இவள் மாட்டுக்] காதல், அறிதோறு — நூற்பொருள் களைக் கற்று அறிய அறிய, அறியாமை — முன்னர் அறியாதிருந்தவைகளை, கண்டற்று — புதிதாகக் கண்டறிந்ததுபோல இருக்கின்றது. [ஆல் — அசைநிலை].

குவளை மலர்களுக்குக் காணுகின்ற தன்மை இருக்குமானால் சிறந்த இழையினையுடைய இப் பெண்ணின் கண்களுக்கு ஒப்ப மாட்டோம் என்று எண்ணிக் கவிழ்ந்து நிலத்தினைப் பார்க்கும்.

காணின் குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும் மாண் இழை கண் ஒவ்வேம் என்று.

**4 காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்**
**மாண்இழை கண்ஒவ்வேம் என்று.** 1114

குவளை — குவளைப் பூக்களும், காணின் — காணுகின்ற தன்மையைப் பெற்றிருந்தால், மாண் — மாட்சிமையுடைய, இழை — அணிகலன்களை அணிந்த, [இப் பெண்ணின்] கண் — கண்களை, ஒவ்வேம் — ஒத்திருக்க மாட்டோம், என்று — என்று, கவிழ்ந்து — கவிழ்ந்து, நிலன் — பூமியை, நோக்கும் — நோக்கியிருக்கும்.

இவள் தனது மென்மைத் தன்மையினைக் கருதாமல் அனிச்சப் பூவினைக் காம்பு களையாமல் சூடிக் கொண்டாள். இனி இவள் இடைக்கு நல்ல பறைகள் ஒலிக்கா!

அனிச்சப்பூ கால் களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு நல்ல படா பறை.

**5 அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு**
**நல்ல படாஅ பறை.** 1115

அனிச்சப்பூ — அனிச்சப்பூக்களை, கால் — காம்பு, களையாள் — களையாமல் [நீக்காமல்], பெய்தாள் — தலையில் வைத்துக் கொண்டாள், நுசுப்பிற்கு — இவளுடைய இடுப்பிற்கு, நல்ல — நல்லவற்றிற்கு ஒலிக்கும், பறை — பறைகள், படாஅ — இனி ஒலிக்கா [இடை முரியும்].

விண் மீன்கள், சந்திரனுக்கும் எம்மடந்தைக்கும் வேறுபாட்டினை அறிய முடியாமல் தம் இடத்திலிருந்து கலங்கித் திரிகின்றன.

மதியும் மடந்தை முகனும் அறியா பதியின் கலங்கிய மீன்.

**6 மதியும் மடந்தை முகனும் அறியா**
**பதியின் கலங்கிய மீன்.** 1116

மீன் — விண் மீன்கள், மதியும் — சந்திரனுக்கும், மடந்தை — இப்பெண்ணின், முகனும் — முகத்திற்கும், அறியா — வேறுபாடு தெரியாமல், பதியின் — தமது இடத்தினின்றும், கலங்கிய — கலக்கமுற்றுத் திரிந்து கொண்டிருக்கின்றன.

இடம் குறைந்து பின்பு நிரம்பி விளங்கும் சந்திரனைப் போல இம்மாதின் முகத்தில் மறுவுண்டோ?

அறுவாய் நிறைந்த அவிர் மதிக்கு போல மறு உண்டோ மாதர் முகத்து.

**7 அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல**
**மறுவுண்டோ மாதர் முகத்து.** 1117

அறுவாய் — முன்பு குறைந்திருந்த இடமானது, நிறைந்த — பின்பு நிறையப் பெற்று, அவிர் — ஒளிவிடுகின்ற, மதிக்குப்போல — சந்திரனிடத்தில் இருப்பதைப் போல, மாதர் — இப்பெண்ணின், முகத்து — முகத்தில், மறு உண்டோ — களங்கமானது இருக்கின்றதோ?

மதியே! நீ வாழ்வாயாக! இம்மாதர் முகம் போல் யாம் மகிழும் வகையில் ஒளி வீசவல்லை யாயின் நீயும் என்னுடைய காதலினைப் பெறுவாய்!

மாதர் முகம் போல் ஒளி விட வல்லையேல் காதலை வாழி மதி.

**8 மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்**
**காதலை வாழி மதி.** 1118

மதி — மதியே! வாழி — நீ வாழ்வாயாக! மாதர் — மாதர்களின், முகம் போல் — முகத்தினைப் போல, ஒளிவிட — ஒளிவிடுதற்கு, வல்லையேல் — வல்லமை பெற்றிருந்தால், காதலை — நீயும் என்னால் காதலிக்கப்படுகின்ற சிறப்பினைப் பெறுவாய்.

மதியே! மலர் போன்ற கண்ணினையுடைய இப்பெண்ணின் முகத்தினை நீ ஒத்திருக்க விரும்புவாயானால் யான் மட்டும் காணத் தோன்றுவாயாக; பலரும் காணுமாறு தோன்றா திருப்பாயாக.

மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்திபாயின் பலர் காண தோன்றல் மதி.

**9 மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி யாயின்**
**பலர்காணத் தோன்றல் மதி.** 1119

மதி — மதியே! மலர் — மலரினை, அன்ன — போன்ற, கண்ணாள் — கண்களையுடைய, இப்பெண்ணினுடைய, முகம் — முகத்தினை, ஒத்தியாயின் — ஒத்திருக்க விரும்புவாயானால், பலர் — பலரும், காண — காணும்படி, தோன்றல் — தோன்றாதிருப்பாயாக.

மென்மையான அனிச்சப்பூவும் அன்னப் பறவையின் சிறகும் ஆகிய இரண்டும் மாதர் அடிகளுக்கு நெருஞ்சிப் பழத்தினைப் போல வருத்தம் செய்யும்.

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழம்.

10 அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். 1120

அனிச்சமும் — மென்மைத் தன்மை நிறைந்த அனிச்சப்பூவும், அன்னத்தின் — அன்னப் பறவையினுடைய, தூவியும் — மெல்லிய இறகும், மாதர் — பெண்களின், அடிக்கு — பாதங்கட்கு, நெருஞ்சிப்பழம் — முள் நிறைந்த நெருஞ்சிப்பழம் போலத் துன்பம் செய்யும்.

## 113. காதற் சிறப்பு உரைத்தல்

[தலைமகனும் தலைமகளும் காதல் மிகுதியினைக் கூறல்]

மெல்லிய சொல்லினையுடையாளது வெண்மையான பற்களில் ஊறிய நீர் பாலொடு தேனைக் கலந்த கலவை போன்றதாகும்.

பாலொடு தேன் கலந்தற்றே பணி மொழி வால் எயிறு ஊறிய நீர்.

1 பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வால்எயிறு ஊறிய நீர் 1121

பணி — மென்மையான, மொழி — சொல்லினையுடைய இப்பெண்ணினது, வால் — வெண்மையான, எயிறு — பற்களில், ஊறிய நீர் — ஊறிவரும் நீரானது, பாலொடு — பாலோடு, தேன் — தேன், கலந்தற்றே — கலந்த சுவை போன்று இனிமையானதாகும்.

இப்பெண்ணுடன் எமக்கு உண்டான நட்பு, உடம்போடு உயிரிடை உண்டான நட்பு எத்தன்மையானதோ அத்தன்மையுடையதாகும்.

உடம்பொடு உயிரிடை என்ன மற்று அன்ன மடந்தையொடு எம்மிடை நட்பு.

2 உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு. 1122

மடந்தையொடு — இப்பெண்ணுடன், எம்மிடை — எம்மிடத்தில், [உண்டான] நட்பு — நட்பு, உடம்போடு — உடம்புடன், உயிரிடை — உயிருக்குள்ள தொடர்பு, என்ன — எவ்வாறு உள்ளதோ, அன்ன — அத்தன்மை கொண்டதாகும்.

கண்களில் இருக்கும் கருமணிகளில் உள்ள பாவையே! நீ அங்கிருந்து போவாயாக; போகா திருந்தால் எம்மால் காதலிக்கப்பட்ட அழகிய நுதலினையுடைய பெண்ணுக்கு இருக்க இடமில்லாமற் போகும்.

கருமணியில் பாவாய் நீ போதாய் யாம் வீழும் திரு நுதற்கு இல்லை இடம்.

3 கருமணியிற் பாவாய்நீ போதாய்யாம் வீழும்
திருநுதற்கு இல்லை இடம். 1123

யாம் — எம்மால், வீழும் — காதலிக்கப்பட்ட, திரு — அழகிய, நுதற்கு — நெற்றியினையுடைய காதலி வந்து இருக்க, இடம் இல்லை — வேறு இடம் இல்லையாதலால், கரு — கருமையான, மணியில் — கண்ணின் மணிகளில் உள்ள, பாவாய் — பாவையே, நீ போதாய் — நீ அந்த இடத்தைவிட்டுச் செல்லுவாயாக!

ஆராய்ந்து அணியப் பெற்ற ஆபரணங்களையுடைய பெண், புணரும்போது உயிர் உடம்புடன் கூடி வாழ்தல்போல் இருக்கின்றாள். பிரியும்போது அந்த உயிர் அவ்வுடம்பிலிருந்து விலகிப் போவதுபோல் ஆகிவிடுகின்றாள்.

வாழ்தல் உயிர்க்கு அன்னள் ஆயிழை சாதல் அதற்கு அன்னள் நீங்குமிடத்து.

4 வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை சாதல்
அதற்குஅன்னள் நீங்கு மிடத்து. 1124

ஆயிழை — ஆராய்ந்தணியப் பெற்ற அணிகலன்களையுடைய இப்பெண் [புணரும்போது], உயிர்க்கு — உயிருக்கு, வாழ்தல் — உடம்போடு சேர்ந்து வாழ்வது, அன்னள் — போல இருக்கின்றாள், நீங்குமிடத்து — விட்டு நீங்கும்போது, அதற்கு — அந்த உயிர்க்கு, சாதல் — உடம்பிலிருந்து அவ்வுயிர் நீங்கிப் போவது, அன்னள் — போல ஆகிவிடுகின்றாள்.

ஒளி பொருந்தியதாய்ப் போர் செய்யும் கண்ணினையுடையாள் குணங்களை யான் மறப்பேனானால் நினைப்பேன். [ஆனால் நான்] ஒருபோதும் மறத்தலை யறியேன். ஆதலால் நினைத்தலையும் அறியேன்.

உள்ளுவன் மன் யான் மறப்பின் மறப்பு அறியேன் ஒள் அமர்க்கண்ணாள் குணம்.

5 உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பு அறியேன்
ஒள்அமர்க் கண்ணாள் குணம். 1125

ஒள் — ஒளி பொருந்தி, அமர் — போரினைச் செய்கின்ற, கண்ணாள் — கண்களையுடைய இம்மாதின், குணம் — சிறப்பான குணங்களை, யான் — நான், மறப்பின் — மறந்திருந்தால், உள்ளுவன் — மீண்டும் நினைப்பவனாவேன், மறப்பு — எக்காலத்திலும் மறப்பதை, அறியேன் — அறியமாட்டேன். [மன் — ஒழியிசை]

எமது காதலர் எமது கண்ணுள்ளிருந்து போக மாட்டார். அறியாமல் இமைத்தேனானாலும் அதனால் வருத்தப்படமாட்டார். ஆகையால் நுட்பமான தன்மையுடையவராவார்.

**கண்** உள்ளில் போகார் இமைப்பின் பருவரார் நுண்ணியர் எம் காதலவர்.

**6 கண்ணுள்ளில் போகார் இமைப்பின் பருவரார்**
**நுண்ணியர்எம் காத லவர்.** 1126

எம் — எம்முடைய, காதலவர் — காதலர், கண் — கண்களின், உள்ளில் — உள்ளேயிருந்தும், போகார் — போகமாட்டார், இமைப்பின் — நான் இமைப்பேனாகில், பருவரார் — வருத்தப் படமாட்டார், நுண்ணியர் — காணமுடியாத அப்படிப்பட்ட நுண்ணிய தன்மையுடையவ ராவார்.

காதலர் எப்போதும் எம் கண்ணில் உள்ளார். ஆதலால் எழுதுகின்ற அத்துணைக் காலமும் அவர் மறைவதனை அறிந்து, கண்ணினை மையினால் எழுதுவதும் செய்யமாட்டோம்.

**கண்** உள்ளார் காதலவராக கண்ணும் எழுதேம் கரப்பாக்கு அறிந்து.

**7 கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்**
**எழுதேம் கரப்பாக் கறிந்து.** 1127

காதலவர் — எனது அருமையான காதலர், கண் — கண்களில், உள்ளாராக — இருக்கின்றார் ஆனபடியால், கரப்பாக்கு — அத்துணை நேரமும் அவர் மறைந்திருப்பார், அறிந்து — என் பதைத் தெரிந்து, கண்ணும் — கண்களினை, எழுதேம் — மையினால் எழுதுவதையும் செய்யமாட்டோம்.

எம் காதலர் எமது நெஞ்சிலேயே இருக்கின்றார்; எனவே சூடான உணவை உண்டால் அவர் சூடுபட நேரும் என்றறிந்து சூடான உணவை உண்ண அஞ்சுகிறேன்.

**நெஞ்சத்தார்** காதலவராக வெய்து உண்டல் அஞ்சுதும் வேபாக்கு அறிந்து.

**8 நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்**
**அஞ்சுதும் வேபாக்கு அறிந்து.** 1128

காதலவர் — எம்முடைய காதலர், நெஞ்சத்தார் ஆக — நெஞ்சத்தினுள்ளேயே இருக்கின்றார் ஆனபடியால், வேபாக்கு — அவர் அச்சூட்டினாலே சுடப்பட்டு விடுவார் என்பதனை, அறிந்து — அறிந்து கொண்டு, வெய்து — சூடாக இருக்கும் உணவினை, உண்டல் — உண்ணு தற்கு, அஞ்சுதும் — அஞ்சுகின்றேன்.

எனது கண்கள் இமைக்குமாயின் உள்ளிருக்கின்ற என் காதலர் மறைதலையறிந்து இமைக்காமல் இருப்பேன். இமையாதிருப்பதைக் கண்ட இவ்வூர் மக்கள் அவரைத் தூங்காத நோய் செய்தார் என்று கூறுகிறார்கள்.

இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர்.

**9 இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே**
**ஏதிலர் என்னும்இவ் வூர். 1129**

இமைப்பின் — எனது கண்கள் இமைக்குமானால், கரப்பாக்கு — கண்ணுள்ளே இருக்கும் காதலர் மறைவார் என்பதை, அறிவல் — நான் அறிவேன், [ஆதலால் இமையாதிருக்கின்றேன்] அனைத்திற்கே — அந்தத் தன்மைக்கே, இவ்வூர் — இந்த ஊர், ஏதிலர் — [காதலர் துயிலாத நோய் செய்த] அன்பில்லாதவர், என்னும் — என்று கூறும்.

காதலர் எக்காலத்திலும் என் உள்ளத்துள்ளே மனமகிழ்ந்து தங்கியிருக்கின்றார். அதனை அறியாமல் அவர் பிரிந்திருக்கின்றார் — அன்பில்லாதவர் — என்று இவ்வூர் சொல்லும்.

உவந்து உறைவர் உள்ளத்துள் என்றும் இகந்து உறைவர் ஏதிலர் என்னும் இவ் ஊர்.

**10 உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துறைவர்**
**ஏதிலர் என்னும்இவ் வூர். 1130**

என்றும் — எந்த நேரத்திலும், உள்ளத்துள் — எனது உள்ளத்தினுள் [காதலர்], உவந்து — மகிழ்ச்சியுடன், உறைவர் — இருந்து கொண்டிருக்கின்றார், [அப்படி இருப்பது தெரியாமல்] இவ்வூர் — இந்த ஊர், இகந்து — காதலர் பிரிந்து, உறைவர் — வசிக்கின்றார், ஏதிலர் — காதலர் அன்பில்வாதவர், என்னும் — என்று கூறும்.

## 114. நாணுத்துறவு உரைத்தல்

**[சந்திப்பு இல்லாமல் தடுக்கப்பட்டிருத்தலும் நாணம் இழத்தலும்]**

தம் காதலியோடு காமத்தினை அனுபவித்துப் பின்பு அது பெறாமல் இருக்கும் ஆடவர்க்கு பழங்காலந்தொட்டு வருகின்ற பாதுகாப்பு, மடல் அல்லாமல் வேறு எதுவுமில்லை.

காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம் மடல் அல்லது இல்லை வலி,

**1 காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்**
**மடல்அல்லது இல்லை வலி. 1131**

காமம் — காம இன்பத்தினை, உழந்து — நுகர்ந்து, [பின்னர் அந்த இன்பம் இல்லாமல்] வருந்தினார்க்கு — வருந்துகின்ற ஆண்களுக்கு, ஏமம் — பண்டுதொட்டு வருகின்ற பாதுகாப்பு, மடல் — மடல்மா ஏறுதல், அல்லது — அல்லாமல், வலி இல்லை — வலியாவது பிறிதொன்றுமில்லை.

வருத்தத்தினைப் பொறுத்துக் கொள்ள முடியாத உடம்பும் உயிரும் நாணத்தினை அகற்றி விட்டு வருத்தத்திற்குப் பாதுகாப்பான மடல்மாவினை ஊர்ந்து செல்லக் கருதுகின்றன.

**நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும் நாணினை நீக்கி நிறுத்து.**

**2 நோனா உடம்பும் உயிரும் மடல்ஏறும்**
**நாணினை நீக்கி நிறுத்து. 1132**

**நோனா** — வருத்தத்தினைத் தாங்க முடியாமல், **உடம்பும்** — எனது உடம்பும், **உயிரும்** — உயிரும், **நாணினை** — நாணத்தினை, **நீக்கி** — நீக்கி, **நிறுத்து** — அகற்றிவிட்டு, **மடல்** — மடல்மா, **ஏறும்** — ஏறுவதற்கு எண்ணுகின்றன.

நாணத்தினையும் மிக்க ஆண்தன்மையினையும் யான் பண்டு கொண்டிருந்தேன். அவை காமத்தால் நீக்கப்பட்டுவிட்டதால், இன்று காமுற்றார் ஏறுகின்ற மடலினை உடையவனானேன்.

**நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன் இன்று உடையேன் காமுற்றார் ஏறும் மடல்.**

**3 நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்**
**காமுற்றார் ஏறும் மடல். 1133**

**நாணொடு** — நாணத்தோடு, **நல்** — நல்ல, **ஆண்மை** — சிறந்த ஆண்மையினையும், **பண்டு** — முன்பெல்லாம், **உடையேன்** — பெற்றிருந்தேன், [அவை காம வேகத்தால் நீக்கப்பட்டுவிட்ட படியால்] **காமுற்றார்** — காமம் நிறைந்தவர், **ஏறும்** — ஏறுகின்ற, **மடல்** — மடல்மாவினை, **இன்று** — இந்த நேரத்தில், **உடையேன்** — உடையவனாக இருக்கின்றேன்.

காமத்தினைக் கடப்பதற்காக நான் கொண்டிருந்த நாணம், நல்லாண்மையாகிய புணைகளை என்னிடமிருந்து பிரித்துக் கொண்டு காமமாகிய கடுமையான புனல் கொண்டுபோய் விட்டது.

**காம கடும் புனல் உய்க்குமே நாணொடு நல்லாண்மை என்னும் புணை.**

**4 காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு**
**நல்லாண்மை என்னும் புணை. 1134**

**நாணொடு** — நாணத்துடன், **நல்** — நல்ல, **ஆண்மை** — ஆண்தன்மை, **என்னும்** — எனப்படுகின்ற, **புணை** — [பாதுகாப்பான] புணைகளை, **காமக் கடும்புனல்** — காமமாகிய கடுமையான வெள்ளம், **உய்க்குமே** — அடித்துக் கொண்டு போய்விடுகின்றது.

மாலைப் பொழுதில் அனுபவிக்கும் துயரத்தினையும் அதற்கு மருந்தான மடலினையும் முன்பு அறியேன். இப்போது மாலை போலத் தொடர்ந்து சிறு வளையல்களையுடைய இப்பெண் அவைகளைத் தந்தாள்.

தொடலை குறுந்தொடி தந்தாள் மடலொடு மாலை உழக்கும் துயர்.

**5 தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு**
**மாலை உழக்கும் துயர்.** 1135

மாலை — மாலைப்பொழுதில், உழக்கும் — வருந்தி அனுபவிக்கின்ற, துயர் — துயரத்தினையும், மடலொடு — மடல் மாவுடன், தொடலை — அணியும் மாலையினைப் போலத் தொடர்ந்திருக்கும், குறுந்தொடி — சிறுவளையல்களையுடைய இப்பெண், தந்தாள் — எனக்குக் கொடுத்துவிட்டாள்.

என்னுடைய கண்கள் இப்பெண்ணின் காரணமாக ஒருபோதும் துயில் கொள்ளாமல் இருக்கின்றன. ஆகையினால் யாவரும் தூங்குகின்ற பாதி இரவிலும் யான் விழித்துக் கொண்டு மடலூர்தலையே நினைத்துக் கொண்டிருப்பேன்.

மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற படல் ஒல்லா பேதைக்கு என் கண்.

**6 மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற**
**படல்ஒல்லா பேதைக்குஎன் கண்.** 1136

பேதைக்கு — பேதையாகிய இப்பெண்ணின் காரணமாக, என் — என்னுடைய, கண் — கண்கள், படல் — தூங்குதல், ஒல்லா — பொருந்தா வண்ணம் இருக்கின்றன, [ஆதலால்] யாமத்தும் — யாவரும் உறங்குகிற பாதி இரவிலும், மன்ற மடலூர்தல் — மடல்மா ஏறுவதையே, உள்ளுவன் — உள்ளத்தில் எண்ணிக் கொண்டிருப்பேன்.

கடல்போல மிகுந்து வருகின்ற காமநோயினை அனுபவித்தும் மடலூர்தலைச் செய்யாமல் பொறுத்திருக்கும் பெண் பிறப்புப் போல மிக்க சிறப்புடைய பிறப்பு வேறு எதுவும் இல்லை.

கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறா பெண்ணின் பெருந்தக்கது இல்.

**7 கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்**
**பெண்ணிற் பெருந்தக்கது இல்.** 1137

கடல் — கடலினை, அன்ன — போன்று அளவின்றி மிகுந்துவரும், காமம் — காமநோயினை, உழந்தும் — அனுபவித்துக் கொண்டிருந்தும், மடல் — மடல் மாவினை, ஏற — ஏற நினையாமல் பொறுமை கொண்டிருக்கும், பெண்ணின் — பெண் பிறப்புப்போல, பெருந்தக்கது — சிறந்த பெருமையுடைய பிறப்பு, இல் — வேறு எதுவும் இல்லையாகும்.

'இவர் நிறை குணத்தினால் நாம் செல்வதற்கு அருமையானவர்' என்று அஞ்சுதல் செய்யாமல் அன்பு காட்டத் தக்கவர் என்று இரக்கமும் கொள்ளாமல் மகளிர் காமம் அவர் மறைத்து வைத்திருப்பதையும் கடந்து பலர் அறிய மன்றத்தில் வெளிப்பட்டுவிடுகின்றது.

நிறை அரியர் மன் அளியர் என்னாது காமம் மறை இறந்து மன்று படும்.

**8 நிறைஅரியர் மன்அளியர் என்னாது காமம்**
**மறைஇறந்து மன்று படும்.** 1138

நிறை — நிறை குணத்தினால், அரியர் — அருமையானவர், மன்அளியர் — மிகுந்த அன்பு காட்டத்தக்கவர், என்னாது — என்று இரக்கம் கொள்ளாமல், காமம் — மாதர்களுடைய காமம், மறை — அவர்கள் மறைத்திருப்பதை, இறந்து — கடந்து, மன்று — பிறர் அறியுமாறு மன்றத்தில், படும் — வெளிப்பட்டுவிடும்.

'யான் முன்பு அடங்கி இருந்ததால் எல்லாரும் என்னை அறியவில்லை'. இனி அவ்வாறன்றி யானே வெளிப்பட்டு அறிவிப்பேன் என்று கருதி என் காமம் இவ்வூர் வீதியின்கண்ணே மயங்கிச் சுழல்கின்றது.

அறிகிலார் எல்லாரும் என்றே என் காமம் மறுகில் மறுகும் மருண்டு.

**9 அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்**
**மறுகின் மறுகும் மருண்டு.** 1139

எல்லாரும் — எல்லா மக்களும், அறிகிலார் — என்னை அறிந்து கொள்ளவில்லை, என்றே — என்று கருதி, என் — என்னுடைய, காமம் — காமம், மறுகில் — இந்த ஊரின் தெருக்களில், மருண்டு மறுகும் — மயங்கிச் சுழன்றுகொண்டிருக்கின்றது.

யாம் அடைந்த நோய்களை அறிவில்லாதவர்கள் அடையாமையினால், யாம் கண்ணாற் காணுமாறு எம்மைப் பார்த்து அவர்கள் நகைக்கின்றார்கள்.

யாம் கண்ணில் காண நகுப அறிவில்லார் யாம்பட்ட தாம் படாவாறு.

**10 யாம்கண்ணிற் காண நகுப அறிவில்லார்**
**யாம்பட்ட தாம்படா வாறு.** 1140

யாம் — யாம், பட்ட — அடைந்த காமநோய்களை, தாம் — அவர்களும், படாவாறு — அடைந்து அனுபவிக்காததாலேயே, யாம் கண்ணில் — யாம் கண்ணால், காண — பார்க்கும்படியாக, அறிவில்லார் — அறிவில்லாத அவர்கள், நகுப — நகைக்கின்றார்கள்.

## 115. அலர் அறிவுறுத்தல்

### [ஊரார் தூற்றிப் பேசுதல்]

இப்பெண்ணுடன் எமக்குக் காதல் உண்டானதை இவ்வூரார் பேசுவதால் அவளைப் பெறாமல் வருந்தும் என் அரிய உயிர், பெற்றது போன்ற நிலையுறும். இதனை என்னையன்றி, எனது பாக்கியத்தால் இவ்வூரார் பலரும் அறியவில்லை.

அலர் எழ ஆர் உயிர் நிற்கும் அதனை பலர் அறியார் பாக்கியத்தால்.

**1 அலர்எழ ஆர்உயிர் நிற்கும் அதனைப்**
**பலர்அறியார் பாக்கியத் தால். 1141**

அலர் — ஊரார் தூற்றிப் பேசுகின்ற பேச்சு, எழ — உண்டாவதால், ஆர் — அரிய, உயிர் — எனது உயிரானது, நிற்கும் — நிலைத்து நிற்கும், அதனை — இவ்வுண்மையினை, பாக்கியத்தால் — என்னுடைய நல்வாய்ப்பினால், பலர் அறியார் — தூற்றுகின்ற பலரும் தெரிந்து கொள்ளாதவர்களாக இருக்கின்றார்கள்.

மலர்போன்ற கண்ணினையுடைய இப்பெண்ணின் அருமையினை அறிந்து கொள்ளாமல் இவ்வூர் அப்பெண்ணை எளியவளாகக் கருதி அலர் கூறுவதைச் செய்தது.

மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது அலர் எமக்கு ஈந்தது இவ் ஊர்.

**2 மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது**
**அலர்எமக்கு ஈந்ததுஇவ் வூர். 1142**

மலர் — மலரினை, அன்ன — போன்ற, கண்ணாள் — கண்களையுடைய இப்பெண்ணின், அருமை அறியாது — அருமையினை அறிந்து கொள்ளாமல், இவ்வூர் — இவ்வூர், அலர் — தூற்றிப் பேசுவதை, எமக்கு ஈந்தது — எமக்கு ஈந்தது.

எங்கள் காதல் உண்மையினை இவ்வூர் அறிதலால் உண்டான அலர் எனக்குத் தேவைப் பட்டதேயாகும். அது கேட்ட என் மனம் அவளுடன் கூடுவதைப் பெறாதிருந்தும் பெற்றது போன்ற தன்மையை அடைகின்றது.

உறாதோ ஊர் அறிந்த கௌவை அதனை பெறாது பெற்றன்ன நீர்த்து.

**3 உறாஅதோ ஊர்அறிந்த கௌவை அதனைப்**
**பெறாஅது பெற்றன்ன நீர்த்து. 1143**

ஊர் — இவ்வூரார், அறிந்த — அறிந்து கொண்டதால் உண்டான, கௌவை — அலர், உறாஅதோ — எனக்கு வேண்டிய தொன்றுதான், [அலர் கேட்பதால் எனது நெஞ்சம்] அதனைப் பெறாஅது — அந்த இன்பம் பெறாமல் இருந்தும், பெற்றன்ன — பெற்றது போன்ற, நீர்த்து — தன்மையுடையதாகும்.

என்னுடைய காமம் இவ்வூரார் எடுக்கின்ற அலரினாலே அலர்தலையுடையதாக இருக்கின்றது. அந்த அலர் இல்லாவிட்டால் காமம் தனது இயல்பு குறைந்து சுருங்கிவிடும்.

**கவ்வையால் கவ்விது காமம் அது இன்றேல் தவ்வென்னும் தன்மை இழந்து.**

**4 கவ்வையால் கவ்விது காமம் அதுஇன்றேல்**
**தவ்வென்னும் தன்மை இழந்து.** 1144

காமம் — காமமானது, கவ்வையால் — ஊர்மக்கள் தூற்றிப் பேசுவதால், கவ்விது — அலர்கின்ற தன்மையுடையதாகின்றது, அது — அந்த அலர் என்பது, இன்றேல் — இல்லையென்றால், தன்மை — காமம் தனது இயல்பினை, இழந்து — இழந்து, தவ்வென்னும் — சுருங்கிவிடுவதாகும்.

கள் உண்பவர்களுக்குக் களிக்கும் போதெல்லாம் கள்ளுண்டல் இனிதாவதைப்போல எனக்குக் காமம் அலரால் வெளிப்படும்போதெல்லாம் இனிமையானதாக இருக்கின்றது.

**களித்தொறும் கள் உண்டல் வேட்டற்றால் காமம் வெளிப்படுந்தோறும் இனிது.**

**5 களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்**
**வெளிப்படுந் தோறும் இனிது.** 1145

களித்தொறும் — களிப்படையும் போதெல்லாம், கள் — கள்ளினை, உண்டல் — உட்கொள்ளுதல், வேட்டற்று — இனிமையாவதைப் போல, காமம் — காம இன்பமானது, வெளிப்படுந்தோறும் — அலர் தூற்றிப் பேசுவதால் வெளிப்படும்போதெல்லாம், இனிது — இனிமையாகவே இருக்கின்றது. [ஆல் — அசை நிலை]

யான் காதலரைக் கண்டது ஒரு நாளேயாகும். அதனால் உண்டாகிவிட்ட அலர் அந்த அளவின்றித் திங்களைப் பாம்பு கொண்ட அலர்போன்று எங்கும் பரவி விட்டது.

**கண்டது மன்னும் ஒருநாள் அலர் மன்னும் திங்களை பாம்பு கொண்டு அற்று.**

**6 கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்**
**திங்களைப் பாம்புகொண் டற்று.** 1146

கண்டது — காதலனை யான் கண்டது, ஒருநாள் — ஒரு நாளேயாகும், அலர் — அதனால் உண்டாக்கப்பட்டுவிட்ட அலரானது, திங்களை — சந்திரனை, பாம்பு — இராகுவென்னும் பாம்பு, கொண்டு — கொண்டு மறைத்தது, அற்று — போன்று எங்கும் பரவிவிட்டது.
[மன், உம் — அசைநிலை]

இந்தக் காம நோயாகிய பயிரானது இவ்வூரின் மகளிர் எடுக்கின்ற அலர் எருவாகவும் அது கேட்ட அன்னை சொல்லும் கடுஞ்சொல் நீராக ,ம் கொண்டு வளர்கின்றது.

ஊரவர் கௌவை எரு ஆக அன்னை சொல் நீராக நீளும் இந்நோய்.

7 ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய். 1147

இந்நோய் — இந்தக்காம நோயானது, ஊரவர் — ஊர்மக்கள் உண்டாக்குகின்ற, கௌவை — அலரினை, எருவாக — எருவாகவும், அன்னை — அன்னை, சொல் — சொல்லுகின்ற கோபச் சொல், நீராக — தண்ணீராகவும், [கொண்டு] நீளும் — நீண்டு வளர்கின்றது.

ஊர்மக்கள் எடுக்கின்ற அலரால் காமத்தினை அவித்துவிடுவோம் என்று எண்ணுதல் நெய்யால் எரியை அவித்துவிடுவோம் என்று எண்ணுதற்குச் சமமாகும்.

நெய்யால் எரி நுதுப்பேம் என்றற்றால் கௌவையால் காமம் நுதுப்பேம் எனல்.

8 நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல். 1148

கௌவையால் — ஊரார் தூற்றிப் பேசுதல் என்னும் அலரால், காமம் — காமத்தினை, நுதுப்பேம் — அவித்து விடுவோம், எனல் — என்று எண்ணுதல், நெய்யால் — நெய் யினைப் பெய்து, எரி — தீயினை, நுதுப்பேம் — அவித்து விடுவோம், என்றற்றால் — என்று எண்ணுவதைப் போன்றதாகும்.

எம்மைக் கண்டபோது 'உம்மைப் பிரியேன் அஞ்சாதே' என்று கூறியவர், தாமே இன்று கண்டார் பலரும் நாணும் வகையில் பிரிந்திருப்பாராயின், நாம் அயலார் கூறும் அலருக்கு நாணுதல் கூடுமோ?

அலர் நாண ஒல்வதோ அஞ்சல் ஓம்பு என்றார் பலர் நாண நீத்தக்கடை

9 அலர்நாண ஒல்வதோ அஞ்சல்ஓம்பு என்றார்
பலர்நாண நீத்தக் கடை. 1149

அஞ்சல் — அஞ்சுவதை, ஓம்பு — நீக்கிவிடு, என்றார் — என்று கூறிய அவரே [காதலரே], பலர் — இன்று பலரும், நாண — நாணமுறும்படியாக, நீத்தக்கடை — நம்மை விட்டுப் போனபிறகு, அலர் — மற்றவர்கள் தூற்றிப் பேசும் அலருக்கு, நாண — நாணம் அடைதல், ஒல்வதோ — முடியுமோ?

உடன் போவதற்குக் காரணமாக அலரை இவ்வூர்தானே எடுக்கின்றது. இனிக் காதலர் தாமும் யாம் விரும்பியபடியே செய்வர்; அதனால் இந்த அலர் நமக்கு நன்மையாய் வந்தது.

தாம் வேண்டின் நல்குவர் காதலர் யாம் வேண்டும் கௌவை எடுக்கும் இவ் ஊர்.

10 தாம்வேண் டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை எடுக்கும்இவ் வூர். 1150

யாம் வேண்டும் — [அவருடன் செல்லுவதற்கு] யாம் விரும்பிய, கௌவை — அலரினை, இவ்வூர் எடுக்கும் — இந்த ஊர் உண்டாக்குகின்றது, [ஆதலால்] காதலர் — எமது காதலர், வேண்டின் — யாம் வேண்டி விரும்பினால், தாம் நல்குவர் — தாமும் விரும்பி உடன்பட்டு விடுவார்.

# கற்பு இயல்

## 116. பிரிவு ஆற்றாமை

[நாயகன் பிரிவும் நாயகியின் துயரமும்]

தாங்கள் எம்மைவிட்டுப் பிரியாதிருப்பதென்றால் அதனை எனக்குச் சொல்லுங்கள். பிரிந்து போய் 'விரைவில் வருவேன்' என்பீராயின் அதனைத் தாங்கள் திரும்பி வரும்போது உயிர் வாழ்கின்றவர்களுக்குச் சொல்லுங்கள்.

செல்லாமை உண்டேல் எனக்கு உரை மற்று நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை.

1 செல்லாமை உண்டேல் எனக்குஉரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை. 1151

செல்லாமை — நீங்கள் எம்மை விட்டுப் பிரியாதிருப்பது, உண்டேல் — இருக்குமானால், எனக்குரை — என்னிடம் சொல்லுங்கள், மற்று — அதுவல்லாமல், [பிரிந்து சென்று] நின் — உம்முடைய, வல் — விரைவான, வரவு — வருகையினை, வாழ்வார்க்கு — [நீங்கள் வரும் போது] உயிருடன் வாழ்கின்றவர்க்கு, உரை — சொல்லுங்கள்.

அவருடைய பார்வை மட்டும் நமக்கு இன்பம் தருவதாக இருக்கின்றது. அவர்பால் புணர்ச்சி நிகழ, அது அவர் பிரிவார் என்ற அச்சத்தினை உடையதாக இருந்தது.

இன்கண் உடைத்து அவர் பார்வல் பிரிவு அஞ்சும் புன்கண் உடைத்தால் புணர்வு.

2 இன்கண் உடைத்துஅவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு. 1152

அவர் — அவருடைய, பார்வல் — பார்வையானது, இன்கண் — இனிய தன்மையினை, உடைத்து — உடையதாயிற்று, புணர்ச்சி — நிகழ்ந்த புணர்ச்சியின் தன்மை, பிரிவு — பிரிவார் என்று, அஞ்சும் — அஞ்சுகின்ற, புன்கண் உடைத்து — துன்பத்தினை உடையதாக இருந்தது. [ஆல் — அசைநிலை]

'பிரியேன்' என்று தான் சொன்னதையும் நமது பிரிவாற்றாமையினையும் அறிந்த காதல ரிடத்தும் ஒரோவழி பிரிவு நிகழ்வதால் அவர் அன்புடையவர் என்று தெளிவது அரிதாக இருக்கின்றது.

அரிதரோ தேற்றம் அறிவு உடையார் கண்ணும் பிரிவு ஓர் இடத்து உண்மையான்.

3 அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவுஓர் இடத்துஉண்மை யான். 1153

அறிவு — பிரிதல் துன்பத்தினை அறிந்து, உடையார் கண்ணும் — உணரவல்ல நாயகரிடத் திலும், ஓரிடத்து — ஒரோவழி, பிரிவு — பிரிந்து செல்லுதல், உண்மையான் — நிகழ்வதால், தேற்றம் — அவர் நம்மீது அன்புடையார் என்று உறுதி செய்தல், அரிது — முடியாததாக இருக்கின்றது. [அரோ — அசைநிலை]

'உன்னை விட்டுப் பிரியேன், அஞ்சாதே' என்ற தலைவர், தாமே பிரிந்து செல்லுவாராயின் அவர் தெளிவித்த சொல்லை நம்பியவர்மேல் தவறு உண்டோ?

அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்த சொல் தேறியார்க்கு உண்டோ தவறு.

4 அளித்துஅஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு. 1154

அளித்து — அன்பினைப் பெய்து, அஞ்சல் — பிரியமாட்டேன் அஞ்சாதே, என்றவர் — என்று சொல்லியவரே, நீப்பின் — பிரிந்து செல்லுபவரானால், தெளித்த — அவர் அன்புடன் சொல்லிய, சொல் — சொல்லினை, தேறியார்க்கு — உண்மையென்று நம்பியவர்மேல், தவறு உண்டோ — குற்றம் உண்டோ?

எனது உயிர் போகாமல் காப்பாற்ற வேண்டுமானால் அதற்குரிய தலைவர் பிரிந்து செல்லா மல் நிறுத்துவாயாக; நிறுத்துவாரின்றி அவர் சென்றுவிட்டால் என் உயிரும் செல்லும். பின்பு அவரைக் கூடுதல் முடியாததாகும்.

ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல் மற்று அவர் நீங்கின் அரிதால் புணர்வு.

5 ஓம்பின் அமைந்தார் பிரிவுஓம்பல் மற்றுஅவர்
நீங்கின் அரிதால் புணர்வு. 1155

ஓம்பின் — எனது உயிரைக் காப்பாற்ற வேண்டுமானால், அமைந்தார் — அதற்கு உரியவரான தலைவர், பிரிவு — பிரிந்து போவதை, ஓம்பல் — நீக்குவாயாக, மற்று — அவ்வாறு பிரிவதை நிறுத்தாமல், அவர் நீங்கின் — தலைவர் நீங்கிச் சென்றால், புணர்வு அரிது — பிறகு அவரைக் கூடுதல் என்பது முடியாததாகும். [ஆல் — அசைநிலை].

தலைவர் முன்னின்று தம் பிரிவினை உணர்த்தும் வன்கண்மை உடையவராயின் அத் தன்மையர் பிறகு வந்து கூடி அன்பு செய்வார் என்று இருக்கும் ஆசை விடப்பட வேண்டியதாகும்.

பிரிவு உரைக்கும் வன் கண்ணர் ஆயின் அரிது அவர் நல்குவர் என்னும் நசை.

6 பிரிவுஉரைக்கும் வன்கண்ண ராயின் அரிதுஅவர்
நல்குவர் என்னும் நசை. 1156

அவர் — நமது தலைவர், பிரிவு — பிரிந்து போவதனை, உரைக்கும் — சொல்லுகின்ற, வன்கண்ணர் — அன்பில்லாத கொடியவராக, ஆயின் — ஆனால், நல்குவர் — திரும்பி வந்து அன்பு செய்வர், என்னும் — என்று நினைக்கின்ற, நசை — ஆசை, அரிது — முடியாததாகும்.

தலைவர் என்னைப் பிரிந்து செல்லுகின்றார் என்பதனை அவர் உணர்த்தாமலேயே தாமே உணர்ந்து என் முன்கையினின்றும் கழலுகின்ற வளையல்கள் அறிவியாவோ?

துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன் கை இறை இறவா நின்ற வளை.

7 துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை. 1157

துறைவன் — தலைவனாகிய நாயகன், துறந்தமை — என்னைப் பிரிந்து செல்லுவதை, முன்கை — எனது முன்கையிலிருக்கும், இறை — இறையினையும் [கோடுகளையும்], இறவா நின்ற — கடந்து கழலுகின்ற, வளை — வளையல்கள், தூற்றா கொல் — தூற்றுவது போலத் தெரியாவோ?

பெண்களுக்குத் தம் குறிப்பு அறியும் துணையான தோழியர் இல்லாத வேற்றூரில் வாழ்வது துன்பம் செய்வதாகும். அதனைவிடத் தம் காதலரைப் பிரிதல் மேலும் துன்பத்தினைச் செய்வதாகும்.

இன்னாது இனன் இல் ஊர் வாழ்தல் அதனினும் இன்னாது இனியார் பிரிவு.

8 இன்னாது இனன்இல்லூர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு. 1158

இனன் — [பெண்களுக்குத் தம்] தோழியர் இனம், இல் ஊர் — இல்லாத ஊரில், வாழ்தல் — வாழ்தல் என்பது, இன்னாது — துன்பமானதாகும், இனியார் — தம் இனிய காதலரை, பிரிவு — பிரிதல், அதனினும் — அப்படி வாழ்வதை விடவும், இன்னாது — மிகுந்த துன்புமானதாகும்.

தீயானது தன்னைத் தொட்டவரைத்தான் சுடும். காமமாகிய நோய்போலத் தன்னை விட்டு நீங்கினால் சுடுகின்ற தன்மை உடையதோ?

தொடின் சுடின் அல்லது காம நோய் போல விடின் சுடல் ஆற்றுமோ தீ.

9 தொடின்சுடின் அல்லது காமநோய் போல
விடின்சுடல் ஆற்றுமோ தீ. 1159

தீ — தீயானது, தொடின் — தொட்டால்தான், சுடின் — சுடும், அல்லது — அல்லாமல், காமநோய் — காமமாகிய நோயினை, போல — போன்று, விடின் சுடல் — விட்டு நீங்கினால் சுடுதல், ஆற்றுமோ — செய்யவல்லதோ?

பிரிவினைச் சொல்லுங்கால் அதற்கு உடன்பட்டுப் பிரியுங்கால் உண்டாகும் துன்பத்தினையும் தாங்கிக் கொண்டு, பிரிந்த பின்னர் பொறுத்திருந்து உயிர் வாழும் மகளிர் உலகத்தில் பலருண்டு.

அரிது ஆற்றி அல்லல் நோய் நீக்கி பிரிவு ஆற்றி பின் இருந்து வாழ்வார் பலர்.

10 அரிதுஆற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவுஆற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர். 1160

அரிது — அரிய பிரிவினைக் கூறியபோது, ஆற்றி — அதற்கும் உடன்பட்டு, அல்லல் — துன்பம் தருகின்ற, நோய் — காமநோயினையும், நீக்கி — நீக்கி, பிரிவு — பிரிவினையும், ஆற்றி — பொறுத்து, பின் — அதற்குப் பிறகும், இருந்து — உயிருடன் இருந்து, வாழ்வார் — வாழ்கின்ற பெண்கள், பலர் — உலகில் பலருண்டு.

## 117. படர்மெலிந்து இரங்கல்

### [தலைவன் பிரிவால் தலைவி மெலிதலும் இரங்கலும்]

இந்நோயினைப் பிறர் அறியாமல் இருக்கும்பொருட்டு நான் மறைக்க முயல்கின்றேன். ஆனால் இந்த நோய் இறைப்பவர்க்கு ஊற்று நீர் மிகுந்து வருவதுபோல மிகுந்து வருகின்றது.

மறைப்பேன் மன் யான் இஃதோ நோயை இறைப்பவர்க்கு ஊற்று நீர் போல மிகும்

1 மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும். 1161

நோயை — இக்காம நோயினை, யான்மறைப்பேன் — நான் பிறர்க்குத் தெரியாமல் மறைத்து வைக்கின்றேன், இஃதோ — இந்தக் காமநோயோ, இறைப்பவர்க்கு — தண்ணீர் இறைப்பவர்களுக்கு, ஊற்று — ஊற்றிலிருந்து மிகுந்து வரும், நீர்போல — நீரினைப் போல, மிகும் — அதிகமாகின்றது. [மன் — அசைநிலை].

இந்த நோயினை மறைக்க முடியாதவளாகின்றேன்; நோயினை உண்டாக்கினவர்க்கு எடுத்துக் கூறலாமென்றாலோ, நாணமாக இருக்கின்றது. என் செய்வேன்?

கரத்தலும் ஆற்றேன் இந்நோயை நோய் செய்தார்க்கு உரைத்தலும் நாணு தரும்.

2 கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும். 1162

இந்நோயை — இந்தக் காமநோயினை, கரத்தலும் — மறைப்பதற்கும், ஆற்றேன் — முடியாதவளாக இருக்கின்றேன், நோய் — இந்த நோயினை, செய்தார்க்கு — உண்டாக்கிய காதலர்க்கு உரைத்தலும் — உரைப்பதும், நாணு — நாணத்தினை, தரும் — கொடுப்பதாகும்.

காமமாகிய நோயும் நாணமும் தம்மைத் தாங்க முடியாத உடம்பின்கண்ணே உயிரைக் காவடித் தண்டாக வைத்து அதன் இரு முனைகளிலும் தொங்குகின்றன.

காமமும் நாணும் உயிர் காவா தூங்கும் என் நோனா உடம்பின் அகத்து.

3 காமமும் நாணும் உயிர்காவாத் தூங்குமென்
நோனா உடம்பின் அகத்து. 1163

காமமும் நாணும் — காமநோயும் நாணமும், நோனா — தம்மைத் தாங்க முடியாத, என் — எனது, உடம்பினகத்து — உடம்பினிலே, உயிர் — உயிரினை, காவா — காவடித்தண்டாக, [வைத்து], தூங்கும் — இருமுனைகளிலும் தொங்கிக் கொண்டிருக்கின்றன.

காமமாகிய கடலே என்னிடம் உண்டாகின்றது. அந்தக் கடலினை நீந்திக் கடக்கின்ற பாதுகாப்பாகிய புணை இல்லாமல் இருக்கின்றேன்.

காம கடல் மன்னும் உண்டுஏ அது நீந்தும் ஏமப்புணை மன்னும் இல்.

4 காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல். 1164

காமக்கடலே — காமமாகிய கடலே, உண்டு — என்னிடம் உண்டாகி இருக்கின்றது, அது — அந்தக் கடலினை, நீந்தும் — நீந்திச் செல்லுகின்ற, ஏமப்புணை — பாதுகாப்பாகிய புணை [தெப்பம்], இல் — என்னிடம் இல்லையாகும். [மன், உம் — அசைநிலை]

இன்பத்தினைச் செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்பத்தினைச் செய்பவர், துன்பம் செய்வதற்கான பகைமையின்கண்ணே என்ன செய்வாரோ?

**துப்பின் எவனாவர் மன் கொல் துயர் வரவு நட்பினுள் ஆற்றுபவர்.**

**5 துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு**
**நட்பினுள் ஆற்று பவர். 1165**

நட்பினுள் — நட்பின்கண்ணே, துயர் — துன்பத்தின், வரவு — வரவினை, ஆற்றுபவர் — உண்டாக்கும் தலைவர், துப்பின் — பகைமையில், எவனாவர் — எப்படிப்பட்டவராக இருப்பாரோ? [மன், கொல் — அசை]

காமம் இன்பம் செய்கின்றபோது அந்த இன்பம் கடல்போலப் பெரிதாக இருக்கின்றது. அந்தக் காமம் பிரிவினால் துன்பம் செய்யுங்கால் அத்துன்பம் கடலினைவிடப் பெரிதாக இருக்கின்றது.

**இன்பம் கடல் மற்று காமம் அஃது அடுங்கால் துன்பம் அதனில் பெரிது.**

**6 இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதுஅடுங்கால்**
**துன்பம் அதனிற் பெரிது. 1166**

காமம் — காமமானது, இன்பம் — இன்பம் தரும்போது, கடல் — கடல்போலப் பெரிதாக இருக்கின்றது, மற்று — பிறகு, அஃது — அக்காமமும், அடுங்கால் — தலைவன் பிரிவினால் துன்பம் உண்டாகும்போது, துன்பம் — அந்தத் துன்பமானது, அதனில் — அந்தக் கடலினையும்விட, பெரிது — பெரிதாக இருக்கின்றது.

காமமாகிய கடலைக் கடந்து கரையினைக் காண முடியாதவளானேன். பாதி இரவிலும் யானே துணையின்றி இருக்கின்றேன்; இறவாதிருக்கின்றேன்.

**காமம் கடும் புனல் நீந்தி கரை காணேன் யாமத்தும் யானே உளேன்.**

**7 காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்**
**யாமத்தும் யானே உளேன். 1167**

காமம் — காமமாகிய, கடும் — கொடிய, புனல் — வெள்ளத்தினை, நீந்தி — நீந்தியும், கரை — அதன் கரையினை, காணேன் — காணமுடியவில்லை, யாமத்தும் — யாவரும் உறங்கும் பாதி இரவிலும், யானே உளேன் — யானே தனித்து இருக்கின்றேன்.

இந்த இரவுப் பொழுது எல்லா உயிர்களையும் துயிலச் செய்வதால் துயிலாதிருக்கின்ற என்னையல்லாமல் வேறு துணையில்லாமல் இருக்கின்றது.

மன் உயிர் எல்லாம் துயிற்றி அளித்து இரா என் அல்லது இல்லை துணை.

8 மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்துஇரா
என்னலல்லது இல்லை துணை. 1168

இரா — இந்த இரவுப்பொழுது, அளித்து — அன்புடையதாக உள்ளது, மன் — நிலைபெற்ற, உயிர் எல்லாம் — உயிர்களையெல்லாம், துயிற்றி — தூங்கச் செய்து விட்டபடியால், என் — என்னை, அல்லது — அல்லாமல், துணை இல்லை — வேறு எந்தத் துணையும் இல்லாமல் இருக்கின்றது.

தலைவன் பிரிந்திருக்கும் இந்நாட்களில் இரவுப் பொழுதுகள் நெடியவாய்க் கழிகின்றன; தலைவன் செய்கின்ற கொடுமைகளைவிடக் கொடுமை செய்கின்றன.

கொடியார் கொடுமையின் தாம் கொடிய இந்நாள் நெடிய கழியும் இரா.

9 கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா. 1169

இந்நாள் — தலைவனைப் பிரிந்திருக்கும் இப்போது இந்த நாட்கள், நெடிய கழியும் — நீண்ட நேரம் உடையனவாகக் கழிகின்றன, இரா — இரவுப் பொழுதுகள், கொடியார் — கொடிய தலைவர் செய்கின்ற, கொடுமையின் — கொடுமையினைவிட, தாம் கொடிய — [இரவுகள்] தாம் கொடியவையாகக் கொடுமை செய்வனவாகும்.

மனம்போலக் காதலருள்ள இடத்திற்குக் கடிதிற் செல்ல வல்லவையானால் என் கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய நீரை நீந்தாதிருக்கும்.

உள்ளம் போன்று உள் வழி செல்கிற்பின் வெள்ள நீர் நீந்தல மன்னோ என் கண்.

10 உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண். 1170

உள்ளம் — உள்ளத்தினை, போன்று — போல ஒத்து, உள்வழி — நாயகன் இருக்கின்ற இடத்திற்கு, செல்கிற்பின் — விரைவில் செல்லுமானால், என் — என்னுடைய, கண் — கண்கள், வெள்ளநீர் நீந்தல — வெள்ளமாகிய நீரை நீந்தா. [மன், ஓ — அசைநிலை.]

## 118. கண்விதுப்பு அழிதல்

[கண்கள் நாயகனைக் காண விரும்பி வருந்துதல்]

இக்கண்கள் காதலரை எமக்குக் காட்டியதாலன்றோ இத்தணியா நோய் உண்டாயிற்று. அவ்வாறு செய்த கண்கள் இன்று அத்தலைவரை எம்மைக் காட்டச் சொல்லி அழுவது என் கருதி ?

**கண் தாம் கலுழ்வது எவன்கொலோ தண்டா நோய் தாம் காட்ட யாம் கண்டது.**

**1 கண்தாம் கலுழ்வது எவன்கொலோ தண்டாநோய்**
**தாம்காட்ட யாம்கண் டது. 1171**

தண்டா — தணியாத, நோய் — இக்காம நோயினை, யாம் கண்டது — யான் அறிந்து கொண்டது, தாம் காட்ட — கண்கள் எமக்குக் காட்டியதால் அன்றோ? கண் — அவ்வாறு காட்டிய கண்கள், தாம் — தாமே, கலுழ்வது — இப்போது அழுவது, எவன்கொல் — எதனைக் கருதியோ? [ஓ — அசைநிலை]

பின்னே விளைவதனை ஆராய்ந்தறியாமல் அன்று காதலரை நோக்கிய கண்கள் 'இத்துன்பம் நம்மால்தானே வந்தது என்று பொறுத்திருப்பதை அறியாமல் வருத்தமுறுவது எதனைக் கருதி?

**தெரிந்து உணரா நோக்கிய உண்கண் பரிந்து உணரா பைதல் உழப்பது எவன்.**

**2 தெரிந்துஉணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்**
**பைதல் உழப்பது எவன். 1172**

தெரிந்து — நன்கு ஆராய்ந்து, உணரா — உணராமல், நோக்கிய — தலைவரை நோக்கிய உண்கண் — மை தீட்டப்பெற்ற கண்கள், பரிந்து — நம்மால்தானே வந்தது என்று, உணரா — சிந்தித்து அறிய முடியாமல், பைதல் — வருத்தத்தினை, உழப்பது எவன் — மேற்கொண்டு அனுபவித்தல் எதனைக் கருதி?

இக்கண்கள் அன்று காதலரைத்தாமே விரைந்து நோக்கி இன்று தாமே அழுகின்ற தன்மை நம்மால் சிரிக்கத் தக்கதாக இருக்கின்றது.

**கதும் என தாம் நோக்கி தாமே கலுழும் இது நக தக்கது உடைத்து.**

**3 கதுமெனத் தாம்நோக்கி தாமே கலுழும்**
**இதுநகத் தக்கது உடைத்து. 1173**

தாம் — கண்கள்தாம், கதுமென — காதலரை விரைந்து சென்று, நோக்கி — பார்த்து, தாமே — அவை தாமே, கலுழும் — அழுகின்றன, இது — கண்களின் இந்தச் செய்கை, நக — நகைப்பிற்கு, தக்கது — தகுதியுள்ளதாக, உடைத்து — இருப்பதாகும்.

மையுண்ட கண்கள் நீக்க முடியாத காம நோயினை என்னிடம் நிறுத்தித் தாமும் அழ முடியாத படி நீர்வற்றி இருக்கின்றன.

பெயல் ஆற்றா நீர் உலந்த உண் கண் உயல் ஆற்றா உய்வு இல் நோய் என் கண் [நிறுத்து.

4 பெயல்ஆற்றா நீர்உலந்த உண்கண் உயல்ஆற்றா
உய்வில்நோ யென்கண் நிறுத்து. 1174

உண்கண் — மை தீட்டப்பட்ட கண்கள், உயல் — தப்பித்தல், ஆற்றா — முடியாததற்குக் காரணமான, உய்வு — நீக்கிவிட, இல் — முடியாத, நோய் — நோயினை, என்கண் — என்னிடத்தில், நிறுத்து — இருத்தி வைத்து, பெயல் — நீருடன்அழ, ஆற்றா — முடியாதபடி, நீர் — கண்ணீரும், உலந்த — வற்றிப் போய்விட்டன.

கடலும் சிறிதாகி விடுமாறு பெரிதாகிய காம நோயினைச் செய்துவிட்ட என்து கண்கள் அத்தீமையான செயலால் தூக்கம் வராமல் துன்பத்தில் உழலுகின்றன.

படல் ஆற்றா பைதல் உழக்கும் கடல் ஆற்றா காம நோய் செய்த என் கண்.

5 படல்ஆற்றா பைதல் உழக்கும் கடல்ஆற்றாக்
காமநோய் செய்தஎன் கண். 1175

கடல் — கடலும், ஆற்றா — இணையின்றிச் சிறிதாகும்படி, காமநோய் — இப் பெரிய காம நோயினை, செய்த — செய்துவிட்ட, என் — எனது, கண் — கண்கள், படல் — துயிலுதல், ஆற்றா — இல்லாதவையாகி, பைதல் — துன்பத்தினை, உழக்கும் — அனுபவித்துக் கொண்டு இருப்பனவாகும்.

எமக்கு இந்தக் காம நோயினை உண்டாக்கிய கண்கள் தாமும் துயில் கொள்ளாமல் அழுது கொண்டிருக்கின்றன. இது மிகவும் இனிமையாக இருப்பதாயிற்று!

ஓஒ இனிதே எமக்கு இந்நோய் செய்த கண் தாம் இதன் பட்டது.

6 ஓஒ இனிதே எமக்குஇந்நோய் செய்தகண்
தாஅம் இதன்பட் டது. 1176

எமக்கு இந்நோய் — எமக்கு இந்தக் காம நோயினை, செய்த கண் — உண்டாக்கிய கண்கள், தாஅம் இதன்பட்டது — தாமும் தூங்காமல் அழுது கொண்டு இருப்பது, ஓஒ இனிதே — எனக்கு மிகவும் இனிமையாக இருக்கின்றது.

மிகவும் விரும்பி மனம் நெகிழ்ந்துவிடாமல் அவரைக் கண்ட கண்கள் இன்று துயிலாமல் துன்பத்தில் உழன்று உழன்று உள்ளுக்குள் நீர் இன்றிப் போகட்டும்.

உழந்து உழந்து உள் நீர் அறுக விழைந்து இழைந்து வேண்டி அவர் கண்ட கண்.

**7 உழந்துழந்து உண்ணீர் அறுக விழைந்திழைந்து**
**வேண்டி அவர்க்கண்ட கண். 1177**

விழைந்து — மிகவும் விருப்பப்பட்டு, இழைந்து — மனம் நெகிழ்ந்து, வேண்டி — விரும்பி, அவர் — காதலரை, கண்ட — கண்ட, கண் — கண்கள், உழந்து உழந்து — தூங்காமல் துன்பத்தினில் உழன்று, உள் — தம் அகத்துள் இருக்கின்ற, நீர் — நீர், அறுக — அற்றுப் போகட்டும்.

உள்ளத்தால் விரும்பாமல் வார்த்தைகளினால் மட்டும் விரும்பிய தலைவர் இவ்விடத்திலேயே இருக்கின்றார். அந்த உண்மையால் பயன் யாது? அவரைக் காணாமல் கண்களால் இருக்க முடியவில்லையே!

பேணாது பெட்டார் உளர் மன்னோ மற்று அவர் காணாது அமைவில கண்.

**8 பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்**
**காணாது அமைவில கண். 1178**

பேணாது — உள்ளத்தால் என்னை விரும்பாமல், பெட்டார் — வார்த்தைகளினால் மட்டும் காதலித்த தலைவர், உளர்மன் — இங்கேயே இருக்கின்றார் [இருந்தும் ஆவதென்ன], கண் — எனது கண்கள், மற்று அவர் — மற்றும் அவ்வரை, காணாது — காண முடியாமல், அமைவில — பொறுத்து அமைந்திருக்க முடியவில்லை. [ஓ —அசைநிலை]

காதலர் வராதபோது அவர் வரவு பார்த்துக் கண்கள் துயிலவில்லை; வந்தபோது பிரிவாரோ என்று அஞ்சித் துயிலவில்லை; ஆதலால் இருநேரங்களிலும் கண்கள் தூங்கமுடியாமல் துன்பத்தினை அடைந்தன.

வாராக்கால் துஞ்சா வரின் துஞ்சா ஆயிடை ஆர் அஞர் உற்றன கண்.

**9 வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை**
**ஆரஞர் உற்றன கண். 1179**

கண் — கண்கள், வாராக்கால் துஞ்சா — தலைவர் வராத போதும் [வருகையினை நோக்கி] தூங்காதிருக்கின்றன, வரின் — தலைவர் வந்தபோதும், துஞ்சா — [பிரிந்து விடுவாரோ என்று நினைத்து] தூங்காமல் இருக்கின்றன, ஆயிடை — ஆக இரு வகையிலும், ஆர் — மிகுந்த, அஞர் — துன்பத்தினை, உற்றன — அடைந்தன,

எம்மைப் போலும் அறைபறையாகிய கண்களை யுடையார் தம் மனத்தில் மறைத்து வைத்துள்ளதை இவ்வூரில் உள்ளார் அறிந்து கொள்ளுதல் எளிதாகும்.

மறை பெறல் ஊரார்க்கு அரிது அன்றால் எம்போல் அறைபறை கண்ணார் [அகத்து.

**10 மறைபெறல் ஊரார்க்கு அரிதன்றால் எம்போல்**
**அறைபறை கண்ணா ரகத்து. 1180**

**எம்** — எமக்கு இருப்பதை, போல் — போன்ற, **அறைபறை** — அடிக்கின்ற பறை போன்ற, **கண்ணார்** — கண்ணைப் பெற்றிருப்பவர்கள், அகத்து — மனத்திற்குள், மறை — மறைத்து **வைத்திருப்பதை,** பெறல் — தெரிந்து கொள்ளுதல், ஊரார்க்கு — இந்த ஊரில் உள்ள **மக்களுக்கு,** அரிது — அருமையானது, அன்று — அல்லவாம். [ஆல் — அசை நிலை]

## 119. பசப்புறு பருவரல்

**[பிரிவுத் துன்பத்தால் உடம்பில் உண்டான நிற வேறுபாடு]**

என்னிடம் நயந்து பேசிய தலைவர்க்குப் பிரிவை உடன்பட்டேன். அப்பிரிவினைப் பொறுக்காமல் இப்போது பசந்த எனது நிலையினை யார்க்குச் சொல்லுவேன்?

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்த என் பண்பு யார்க்கு உரைக்கோ [பிற.

**1 நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தஎன்**
**பண்புயார்க்கு உரைக்கோ பிற. 1181**

**நயந்தவர்க்கு** — என்னிடம் அன்புடன் கேட்ட தலைவர்க்கு, நல்காமை — பிரிந்து செல்லுவதை, **நேர்ந்தேன்** — உடன்பட்டு இசைந்தேன், [அதனால்] **பசந்த** — உடம்பில் பசப்பு நிறம் வந்து **விட்ட,** என் — எனது, பண்பு — இத்தன்மையினை, யார்க்கு **உரைக்கோ** — எவரிடம் **போய் உரைப்பேன்?** [பிற — அசை நிலை]

இந்தப் பசப்பு நிறம், அவர் உண்டாக்கினார் என்கின்ற பெருமிதத்தால் என் உடம்பின்மீது ஊர்ந்து செல்லுகின்றது.

அவர் தந்தார் என்னும் தகையால் இவர் தந்து என் மேனி மேல் ஊரும் பசப்பு.

**2 அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்துஎன்**
**மேனிமேல் ஊரும் பசப்பு. 1182**

**பசப்பு** — இந்தப் பசப்பு நிறமானது, அவர் தந்தார் — தலைவர் **உண்டாக்கினார்,** என்னும் — என்கின்ற, தகையால் — பெருமிதத்தினால், என் — என்னுடைய, **மேனிமேல்** — உடம்பின் மீது, **இவர்தந்து** — ஏறிக் கொண்டு, ஊரும் — ஊர்ந்து செல்லுகின்றது.

எனது தலைவர் பிரிந்தபோது காம நோயினையும் பசலை நிறத்தினையும் எனக்குத் தந்து விட்டு எனது உடம்பின் அழகினையும் நாணத்தினையும் அவர் கொண்டு சென்றார்.

சாயலும் நாணும் அவர் கொண்டார் கைம்மாறா நோயும் பசலையும் தந்து.

**3 சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா**
**நோயும் பசலையும் தந்து.** 1183

நோயும் — காம நோயினையும், பசலையும் — பசலை நிறத்தினையும், தந்து — எனக்குக் கொடுத்துவிட்டு, கைம்மாறா — அதற்கு மாறாக, சாயலும் — அழகினையும், நாணும் — நாணத்தினையும், அவர் கொண்டார் — காதலராகிய அவர் கொண்டு சென்றார்.

அவர் சொன்ன வார்த்தைகளை நான் மனத்தால் நினைத்துக்கொண்டு இருப்பேன். வாயால் பேசுவதும் அவர் சிறப்பினையேயாகும். அப்படியிருக்க இப்பசப்பு வந்தது வஞ்சனையாக அல்லவோ இருக்கின்றது?

உள்ளுவன் மன் யான் உரைப்பது அவர் திறமால் கள்ளம் பிறவோ பசப்பு.

**4 உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்**
**கள்ளம் பிறவோ பசப்பு.** 1184

யான் உள்ளுவன் — நான் அவரையே உள்ளத்தில் நினைத்துக் கொண்டிருக்கின்றேன், உரைப்பது — பேசுவதும், அவர் — அவருடைய, திறம் — நற்குண நற்செயலேயாகும், [அப்படியிருக்க] பசப்பு — இந்தப் பசப்பு நிறம் வந்து விட்டது, கள்ளம் — வஞ்சனையாகத் தான் இருக்கின்றது. [மன், ஆல், பிற, ஓ — அசைநிலை]

அந்தக் காலத்தில் எமது காதலர் பிரிந்து சென்றார். என் மேனி பசப்பு நிறம் அடைவது இங்கேயன்றோ?

உவக்காண் எம் காதலர் செல்வார் இவக்காண் என் மேனி பசப்பு ஊர்வது.

**5 உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்**
**மேனி பசப்புஊர் வது.** 1185

எம் — எம்முடைய, காதலர் — தலைவர், உவக்காண் — முந்திய காலத்தில், செல்வார் — எம்மை விட்டுச் செல்வாராக [காதலர் பிரிந்து சென்றார்], என் — எனது, மேனி — உடம்பு, பசப்பு — பசப்பு நிறம், ஊர்வது — அடைந்திருப்பது, இவக்காண் — இங்கே அல்லவா?

விளக்கினுடைய மெலிவு பார்த்து நெருங்கி வருகின்ற இருட்டினைப் போன்று தலைவரது முயக்கத்தின் தளர்ச்சியினைப் பார்த்து இப்பசப்பு நிறம் நெருங்கி வருவதாயிற்று.

விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன் முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பு.

**6 விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்**
**முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு.** 1186

விளக்கு அற்றம் — விளக்கினது ஒளியின் மெலிவு நேரத்தினை, பார்க்கும் — பார்த்து நெருங்கி வருகின்ற, இருளே போல் — இருட்டினைப் போல, பசப்பு — இந்தப் பசப்பு நிறமானது, கொண்கன் — எனது தலைவரது, முயக்கு — புணர்ச்சியின், அற்றம் — மெலிவினை, பார்க்கும் — பார்த்து நெருங்கி வந்துவிடும்.

முன்னர் ஒருபோது காதலரைத் தழுவிக் கிடந்தேன். அறியாமல் சிறிது விலகிவிட்டேன். விலகிய அந்தப் பொழுதிலேயே பசப்பு நிறம் அள்ளிக் கொள்ளப்படுகின்ற பொருளினைப் போல வந்து நிறைந்துவிட்டது.

புல்லிக்கிடந்தேன் புடை பெயர்ந்தேன் அவ்வளவில் அள்ளி கொள்வற்றே பசப்பு.

**7 புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்**
**அள்ளிக்கொள் வற்றே பசப்பு.** 1187

புல்லி — தலைவரைத் தழுவிக்கொண்டு, கிடந்தேன் — இருந்தேன், புடை — ஒரு பக்கமாக, பெயர்ந்தேன் — சிறிது விலகிவிட்டேன், அவ்வளவில் — விலகிவிட்ட அந்தப் பொழுதே, பசப்பு — இந்தப் பசலை நிறமானது, அள்ளிக் கொள்வற்றே — அள்ளிக் கொள்வதொரு பொருளினைப் போல வந்து குவிந்துவிட்டது.

இவள் பொறுத்திருக்க முடியாமல் பசப்பு நிறம் அடைந்து விட்டாள் என்று என்னைப் பழி கூறுவதல்லாமல், இந்த நாயகியை அவர் விட்டுப் போய்விட்டார் என்று அவரைக் குறை கூறுவார் ஒருவரும் இல்லை.

பசந்தாள் இவள் என்பது அல்லால் இவளை துறந்தார் அவர் என்பார் இல்.

**8 பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்**
**துறந்தார் அவர்என்பார் இல்.** 1188

இவள் பசந்தாள் — இந்தத் தலைவி பசலை நிறம் அடைந்துவிட்டாள், என்பது — என்று சொல்லுவது, அல்லால் — அல்லாமல், இவளை — இந்தத் தலைவியை, அவர் துறந்தார் — அந்தத் தலைவர் விட்டுப் போய்விட்டார், என்பார் இல் — என்று அவரைப் பழி கூறுபவர் யாரும் இல்லை.

இந்தப் பிரிவை நான் உடன்படும் முறையில் சொன்ன தலைவர் நல்ல நிலையில் இருந்து வருவாரானால் என் உடம்பு பசப்பு நிறம் அடைந்தே இருக்கட்டும் !

பசக்க மன் பட்டாங்கு என் மேனி நயப்பித்தார் நன்னிலையர் ஆவர் எனின்.

**9 பசக்கமன் பட்டாங்குஎன் மேனி நயப்பித்தார்**
**நன்னிலையர் ஆவர் எனின். 1189**

*நயப்பித்தார் — பிரிந்துபோவதை நான் ஒத்துக்கொள்ளும்படியாகச் சொல்லிய கணவர், நன்னிலையர் — நல்லபடியாக, ஆவர் எனின் — இருப்பாரேயானால், என் — எனது, மேனி — உடம்பு, பட்டாங்கு — முன்னர் பசந்ததுபோல, பசக்க — பசப்பதாகுக. [மன் — ஒழியிசை]*

அன்று அன்புடன் கூடிய தலைவரை அன்பில்லாதவரென்று பிறர் தூற்றாமல் இருப்பார்களேயானால் பசப்பு அடைந்துவிட்டாள் என்ற பெயரினைப் பெறுதல் எனக்கு நல்லதேயாகும்.

பசப்பு என பேர் பெறுதல் நன்றே நயப்பித்தார் நல்காமை தூற்றார் எனின்.

**10 பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்**
**நல்காமை தூற்றார் எனின். 1190**

*நயப்பித்தார் — மகிழ்வித்துக் கூடிய காதலரை, நல்காமை — இப்போது அன்பில்லாதவரென்று, தூற்றார் — பிறர் தூற்றாமல் இருப்பார்கள், எனின் — என்றால், பசப்புஎன — பசப்பினைப் பெற்று விட்டாள் இவள் என்று, பேர் — பெயரினை, பெறுதல் நன்றே — யான் பெறுதல் நல்லதேயாகும்.*

## 120. தனிப்படர் மிகுதி

**[பிரிவுத் துன்பத்தால் தலைவி மிகவும் துன்புறுதல்]**

தம்மால் விரும்பிக் காதலிக்கப்பட்ட தலைவரால் விரும்பப்பட்ட தலைவியர் காம அனுபவம் எனப்படும் வித்தில்லாத கனியினைப் பெற்றவராவர்.

தாம் வீழ்வார் தம் வீழ பெற்றவர் பெற்றாரே காமத்து காழ் இல் கனி.

**1 தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே**
**காமத்துக் காழ்இல் கனி. 1191**

*தாம் — தம்மால் [தலைவியால்], வீழ்வார் — காதலிக்கப் பெற்ற தலைவர், தம் — தம்மை, வீழ — விரும்பிக் காதலிக்க, பெற்றவர் — பெற்ற தலைவிமார், காமத்து — காமம் என்கின்ற இன்பத்தால் உண்டாகிய, காழ் — விதை, இல் — இல்லாத, கனி பெற்றாரே — கனியினைப் பெற்றவராவர்.*

பிரிந்திருக்கும் கணவர் காலமறிந்து வந்து காட்டும் பேரன்பு மகளிர்க்கு, தன்னையே நம்பி உயிர் வாழுகின்ற மக்களுக்குக் காலமறிந்து மழை அளவுடன் பெய்தது போன்றதாகும்.

வாழ்வார்க்கு வானம் பயந்த அற்றால் வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி.

2 வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. 1192

வீழ்வார்க்கு — காதல் நிறைந்த தலைவிக்கு, வீழ்வார் — அன்பு நிறையப்பட்ட தலைவர், அளிக்கும் — காலமறிந்து வந்து காட்டுகின்ற, அளி — பேரன்பு, வாழ்வார்க்கு — உலகில் உயிர் வாழ்கின்ற மக்களுக்கு, வானம் — மழையானது, பயந்தற்று — காலம் அறிந்துவந்து பெய்து இன்பமளித்தது போன்றதாகும். [ஆல் — அசை நிலை]

தாம் காதலிக்கும் தலைவரால் காதலிக்கப்படும் மகளிர்க்குப் பொருத்தமானது என்ன வென்றால் காதலர் பிரிந்திருந்தாராயினும் நம்மை நினைத்து விரைவில் வருவார்; வந்தால் நாம் இன்புற்று வாழ்வோம் என்று இருக்கின்ற செருக்காகும்.

வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமே வாழுநம் என்னும் செருக்கு.

3 வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே
வாழுநம் என்னும் செருக்கு. 1193

வீழுநர் — காதலிக்கப்படுகின்ற தலைவரால், வீழப்படுவார்க்கு — விரும்பிக் காதலிக்கப் படுகின்ற தலைவியர்க்கு, வாழுநம் — தலைவர் வந்ததும் இன்பமிக வாழ்வோம், என்னும் — என்கின்ற, செருக்கு — பெருமிதம், அமையுமே — பொருத்தமானதாகும்.

கற்பு நிறைந்த பெண்களால் நன்கு மதிக்கப்படும் தலைவியரும் தாம் விரும்பும் கணவரால் நன்கு விரும்பப்படாவிட்டால் தீவினையுடையவர்களே ஆவார்கள். நன்மதிப்பைப் பெற்றிருந்தும் பயனடையாதவர்களே ஆவார்கள்.

வீழப்படுவார் கெழீஇயிலர் தாம் வீழ்வார் வீழப்படார் எனின்.

4 வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின். 1194

வீழப்படுவார் — நன்கு மதிக்கப்படும் தலைவியரும், தாம் — தம்மால், வீழ்வார் — காதலிக் கப்படுகின்ற தலைவரால், வீழப்படாஅர் — விரும்பப்படாதவர்கள், எனின் — என்றாகி விட்டால், கெழீஇயிலர் — நல்வினையில்லாதவர்களாவார்கள்.

காதலர் தாமும் நம்மிடத்தில் காதல் கொள்ளாமற் போனால் நம்முடைய காதலினைக் கொண்டுள்ள காதலர் நமக்கு என்ன இன்பத்தினைச் செய்து விடுவார்.

நாம் காதல் கொண்டார் நமக்கு எவன் செய்பவோ தாம் காதல் கொள்ளாக் [கடை.

5 நாம்காதல் கொண்டார் நமக்குஎவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை. 1195

தாம் — காதலர் தாமும், காதல் — நம்மிடத்தில் காதல், கொள்ளாக்கடை — கொள்ளாமற் போனால், நாம் — நம்மால் [நம்முடைய], காதல் — அன்பினை, கொண்டார் — கொண்டுள்ள காதலர், நமக்கு எவன் — நமக்கு என்ன இன்பத்தினை, செய்ப — செய்து விடுவார்? [ஓ — அசைநிலை]

காதலர் இருவரிடமும் இருக்க வேண்டிய காம வேட்கை ஒருவரிடம் மட்டும் உண்டானால் அது துன்பமானதாகும். காவடித் தண்டின் பாரம் போல இரு பக்கமும் ஒத்திருந்தால் அது இனிமையானதாகும்.

ஒருதலையான் இன்னாது காமம் கா போல இருதலையானும் இனிது.

6 ஒருதலையான் இன்னாது காமம்காப் போல
இருதலை யானும் இனிது. 1196

காமம் — காம வேட்கை, ஒருதலையான் — ஒருவரிடத்தில் மட்டும் உண்டானால், இன்னாது — அது துன்பம் தருவதாகும், கா — காவடித் தண்டின் சுமை, போல — போன்று, இருதலை யானும் — இரண்டு பக்கங்களிலும் ஒத்திருந்தால், இனிது — அக்காமம் இனிமையானதாகும்.

இன்பம் நுகர்வதற்குள்ள ஆண் பெண் இரு பாலரிடத்தும் சமமாக நிற்காமல், ஒருவரிடத்தில் மட்டும் நின்று துன்பம் செய்கின்ற காமன் என்னுடைய நோயினையும் மிகுந்த துன்பத்தினையும் அறியமாட்டானோ?

பருவரலும் பைதலும் காணான் கொல் காமன் ஒருவர்கண் நின்று ஒழுகுவான்.

7 பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான். 1197

ஒருவர் கண் — ஒருவரிடத்தில் மட்டும், நின்று — இருந்து, ஒழுகுவான் — துன்பம் செய்கின்ற, காமன் — காமன், பருவரலும் பைதலும் — எனது நோயினையும் மிகுந்த துன்பத்தினையும் காணான்கொல் — கண்டறிய மாட்டானோ?

தம்மால் காதலிக்கப்படும் தலைவரிடமிருந்து ஓர் இனிய சொல்லையும் பெறாமல் இருந்து பிரிவினையைப் பொறுத்துக் கொண்டு வாழ்கின்ற பெண்கள் போல, வன் கண்மை யுடையார் இவ்வுலகில் இல்லை.

**வீழ்வாரின் இன்சொல் பெறாது உலகத்து வாழ்வாரின் வன்கணார் இல்.**

**8 வீழ்வாரின் இன்சொற் பெறாஅது உலகத்து**
**வாழ்வாரின் வன்கணார் இல்.** 1198

**வீழ்வாரின்** — தம்மால் காதலிக்கப்படும் தலைவருடைய, **இன்** — ஓர் இனிய, **சொல்** — சொல்லைக் கூட, **பெறாஅது** — பெறாமல், **வாழ்வாரின்** — வாழுகின்ற பெண்கள் போல, **வன்கணார்** — வன்மையுடையவர்கள், **உலகத்து இல்** — உலகத்தில் இல்லை.

என்னால் விரும்பிக் காதலிக்கப்பட்ட காதலர் என்னிடம் அன்பில்லாதவரேயானாலும் அவரிடமிருந்து வருகின்ற எந்த ஒரு சொல்லும் எனது செவிக்கு இனிமை தருவதாகும்.

**நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு இசையும் இனிய செவிக்கு.**

**9 நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு**
**இசையும் இனிய செவிக்கு.** 1199

**நசைஇயார்** — என்னால் காதலிக்கப்பட்ட தலைவர், **நல்கார்** — என்னிடம் காதலன்பு செய்ய மாட்டார், **எனினும்** — என்றாலும், **அவர்மாட்டு** — அவரிடமிருந்து, **இசையும்** — வருகின்ற எந்த ஒரு சொல்லும், **செவிக்கு இனிய** — எனது செவிகளுக்கு இன்பம் தருவதாகும்.

உன்னுடன் பொருந்தாத தலைவர்க்கு உனது மிகுந்த நோயினைச் சொல்ல முயற்சிக்கின்ற நெஞ்சமே! அது முடியாத செயலாகும். முடியாத அச்செயலை விட்டு, உனக்குத் துன்பம் செய்கின்ற கடலினைத் தூர்க்க முயற்சிப்பாயாக; அது எளிமையானதாகும்.

**உறாார்க்கு உறு நோய் உரைப்பாய் கடலை செறாய் வாழிய நெஞ்சு.**

**10 உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்**
**செறாஅஅய் வாழிய நெஞ்சு.** 1200

**உறாஅர்க்கு** — உன்னுடன் பொருந்தாத காதலர்க்கு, **உறு** — மிகுதியாக உனக்கு உண்டான, **நோய்** — காமநோயினை, **உரைப்பாய்** — எடுத்துரைக்கின்ற, **நெஞ்சு** — மனமே, [முடியாத அச்செயலை விட்டு] **கடலை** — துன்பம் உண்டாக்குகின்ற கடலினை, **செறாஅஅய்** — தூர்க்க முயல்வாயாக!. [அது எளிது.] [வாழிய — அசைநிலை]

## 121. நினைந்தவர் புலம்பல்

### [பிரிவுக் காலத்தில் இன்பத்தினை நினைத்து வருந்துதல்]

பிரிந்திருக்கும்போது முன்பு கூடிய இன்பத்தினை நினைத்தாலும் அது அப்போது பெற்றது போல இருக்கின்றது. ஆதலால் நினைத்தாலும் மகிழ்ச்சியைத் தரும் காமம், உண்டால் அல்லாமல் மகிழ்ச்சி செய்யாத கள்ளினைவிட இன்பம் கொடுப்பதாகும்.

உள்ளினும் தீரா பெரு மகிழ் செய்தலால் கள்ளினும் காமம் இனிது.

1 உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது. 1201

உள்ளினும் — முந்திய நாட்களில் நுகர்ந்த இன்பத்தினை நினைத்தாலும், தீரா — நீங்காத, பெரு — மிக்க, மகிழ் — பெற்றது போன்ற மகிழ்ச்சியினை, செய்தலால் — உண்டாக்குவதால், கள்ளினும் — உண்டால் மட்டும் மகிழ்ச்சி தரும் கள்ளினைவிட, காமம் இனிது — காமமானது இன்பம் கொடுப்பதாகும்.

தன்னுடைய அன்புக்குரிய காதலரை பிரிந்திருக்கும்போது நினைத்துக் கொண்டிருந்தால் நினைவார்க்குப் பிரிவினால் துன்பம் வருவது இல்லையாகும்.

எனைத்து ஒன்று இனிதேகாண் காமம் தாம் வீழ்வார் நினைப்ப வருவது ஒன்று இல்.

2 எனைத்துஒன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதுஒன்று இல். 1202

தாம் — தம்மால், வீழ்வார் — காதலிக்கப்படும் தலைவரை, நினைப்ப — நினைத்துக் கொண்டிருந்தால், வருவது — வருகின்ற, ஒன்று — பிரிவுத் துன்பம், இல் — இல்லையாகும், [அக்காரணத்தால்] காமம் — காமமானது, எனைத்து — எந்த அளவுடையதாக இருந்தாலும், இனிதேகாண் — இன்பத்தினைக் கொடுப்பது, ஒன்று — ஒன்றேயாகும்.

எனக்குத் தும்மலானது வருவது போலிருந்து வராமல் போகின்றது. அதனால் காதலர் என்னை நினைப்பார்போல இருந்து நினைக்க மாட்டாரோ?

நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல் சினைப்பது போன்று கெடும்.

3 நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும். 1203

தும்மல் — தும்மலானது, சினைப்பது — வருவது, போன்று — போலக் காட்டி, கெடும் — வராமல் கெட்டுவிடுகின்றது, [காரணம்] நினைப்பவர் — காதலர் என்னை நினைப்பது, போன்று — போல இருந்து, நினையார்கொல் — நினைக்க மாட்டாரோ?

எம்முடைய நெஞ்சத்தில் காதலர் எப்போதும் இருந்துகொண்டே இருக்கின்றார். அது போலவே அவருடைய நெஞ்சத்தில் நாமும் இருந்துகொண்டு இருக்கிறோமா?

யாமும் உளேங்கொல் அவர் நெஞ்சத்து எம் நெஞ்சத்து ஓ உளரே அவர்.

4 யாமும் உளேங்கொல் அவர்நெஞ்சத்து எம்நெஞ்சத்து
ஓஒ உளரே அவர். 1204

எம் — எம்முடைய, நெஞ்சத்து — மனத்தில், அவர் — நம்முடைய காதலர், ஓஒ உளரே — எந்த நேரமும் இருந்து கொண்டே இருக்கின்றார், [அவ்வாறே] அவர் — அவருடைய, நெஞ்சத்து — மனத்திலும், யாமும் உளேங்கொல் — நாமும் இருக்கின்றோமா?

காதலராகிய அவருடைய மனதில் யாம் இருக்கக் கூடாதென்று காவல் செய்கின்ற அவர் எம்முடைய நெஞ்சத்திற்குத் தவறாமல் வருதற்கு வெட்கப்பட மாட்டாரோ?

தம் நெஞ்சத்து எம்மை கடிகொண்டார் நாணார்கொல் எம் நெஞ்சத்து ஓவா வரல்.

5 தம்நெஞ்சத்து எம்மைக் கடி கொண்டார் நாணார்கொல்
எம்நெஞ்சத்து ஓவா வரல். 1205

தம் — தம்முடைய, நெஞ்சத்து — மனதிற்குள், எம்மை — எம்மை, கடி — வராமல் காவல், கொண்டார் — புரியும் காதலர், எம் — எம்முடைய, நெஞ்சத்து — மனதிற்குள், ஓவா — நீங்காமல், வரல் — வருவதற்கு, நாணார்கொல் — வெட்கம் அடையாரோ?

நான் அவருடன் இன்பம் நுகர்ந்த நாளினை நினைப்பதால் இத்துன்பக் காலத்திலும் உயிர் வாழ்கின்றேன். அவ்வாறு இல்லாமற் போனால் வேறு எப்படி உயிர் வாழ்ந்திருப்பேன்?

மற்று யான் என்னுளேன் மன்னோ அவரொடு யான் உற்ற நாள் உள்ள உளேன்.

6 மற்றுயான் என்னுளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன். 1206

யான் அவரொடு — நான் காதலராகிய அவரோடு, உற்ற — இன்புற்றிருந்த, நாள் — நாளினை, உள்ள உளேன் — எண்ணிக் கொண்டிருப்பதால் உயிரோடு இருக்கின்றேன், மற்று — அப்படி இல்லையென்றால், யான் என்னுளேன் — நான் எதனால் உயிர் வாழ்ந்துகொண்டிருப்பேன்? [மன் — ஒழியிசை, ஓ — அசைநிலை]

முன்பு நுகர்ந்த இன்பத்தினை மறக்காமல் நினைத்துக் கொண்டிருந்தாலும் பிரிவுத் துன்பம் எனது உள்ளத்தினைச் சுட்டு விடுகின்றது; அவ்வாறு இருக்க, அதனை மறந்தால் எவ்வாறு உயிர் வாழ்வேன்?

மறப்பின் எவனாவன் மன் கொல் மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும்.

7 மறப்பின் எவனாவன் மற்கொல் மறப்புஅறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும். 1207

மறப்பு — அனுபவித்த இன்பத்தினை மறத்தலை, அறியேன் — அறிந்தேனில்லை, உள்ளினும் — அதனை இப்போது நினைத்தாலும், [பிரிவானது] உள்ளம் சுடும் — உள்ளத்தினைச் சுடுகின்றது, [அப்படியிருக்க] மறப்பின் எவனாவன் — மறந்தே இருப்பேனாகில் எவ்வாறு உயிர் வாழ்வேன்? [மன் — ஒழியிசை, கொல் — அசைநிலை].

தலைவரை யான் எத்துணை அதிகமாக நினைத்தாலும் அதற்கு அவர் கோபிக்கமாட்டார். அதனால் காதலர் எனக்குச் செய்யும் சிறப்பான இன்பம் அத்தகையதல்லவா?

எனைத்து நினைப்பினும் காயார் அனைத்து அன்றோ காதலர் செய்யும் சிறப்பு.

8 எனைத்து நினைப்பினும் காயார் அனைத்துஅன்றோ
காதலர் செய்யும் சிறப்பு. 1208

காதலர் — எனது காதலர், எனைத்து நினைப்பினும் — எவ்வளவு அதிகமாக நான் அவரை நினைத்தாலும், காயார் — அதற்காகச் சினங் கொள்ளமாட்டார், செய்யும் — காதலர் எனக்குச் செய்து தருகின்ற, சிறப்பு — இன்பமானது, அனைத்து — அத்தகையது, அன்றோ — அல்லவா?

'நாம் இருவரும் வேறல்ல' என்று சொன்ன காதலருடைய அன்பில்லாத தன்மையினை நினைத்து எனது இனிய உயிர் கழிந்து சென்றுகொண்டிருக்கின்றது.

விளியும் என் இன் உயிர் வேறு அல்லம் என்பார் அளி இன்மை ஆற்ற நினைந்து.

9 விளியும்என் இன்உயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து. 1209

வேறு — நாம் வேறு வேறு, அல்லம் — அல்ல, என்பார் — என்று சொல்லும் காதலரது, அளி — காதலன்பு, இன்மை — இல்லாத தன்மையினை, ஆற்ற — மிகுதியாகவே, நினைந்து — எண்ணி, என் — என்னுடைய, இன் — இனிமையான, உயிர் — உயிர், விளியும் — கழிந்து சென்றுகொண்டிருக்கின்றது.

மதியே! எனது நெஞ்சத்தில் எப்போதும் இருந்துவிட்டுப் போன காதலரை யான் என் கண்ணினாலேனும் காணுகின்ற வரையில் நீ மறையாமல் இருப்பாயாக; நீ வாழ்வாயாக.

விடாது சென்றாரை கண்ணினால் காணப்படாதி வாழி மதி.

10 விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி. 1210

மதி — மதியே, விடாஅது சென்றாரை — எனது மனதில் என்றும் இருந்தவராகி விட்டுப் போனவரை, கண்ணினால் — எனது கண்களினால், காண — காணுகின்ற முறையில், படாஅதி — மறைந்து போகாமல் இருப்பாயாக, வாழி! — நீ வாழ்வாயாக!

## 122. கனவுநிலை உரைத்தல்

### [தலைவி தனது கனவினைப்பற்றிக் கூறுதல்]

காதலர் அனுப்பிய தூதினைக் கொண்டு என்னிடம் வந்த கனவினுக்கு யான் விருந்தாக யாதினைச் செய்வேன்?

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு யாது செய்வேன்கொல் விருந்து.

1 காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து. 1211

காதலர் — எனது காதலருடைய, தூதொடு வந்த — தூதினைக் கொண்டு வந்த, கனவினுக்கு — கனவுக்கு, விருந்து யாது செய்வேன் — நான் விருந்தாக எதனைச் செய்வேன்? கொல் — அசைநிலை]

கயல்போன்ற எனது மையுண்ட கண்கள் தூங்குமானால் கனவில் காதலரைக் காண்பேன்; கண்டால் அவருக்கு யான் பொறுத்துக்கொண்டிருக்கும் நிலைமையினைக் கூறுவேன்.

கயல் உண்கண் யான் இரப்ப துஞ்சின் கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன் மன்.

2 கயலுண்கண் யான்இரப்பத் துஞ்சின் கலந்தார்க்கு
உயலுண்மை சாற்றுவேன் மன். 1212

கயல் — கயல் மீனைப் போல உள்ள, உண்கண் — மை தீட்டப்பட்ட எனது கண்கள், யான் இரப்ப — யான் கெஞ்சிக் கேட்பதற்காக, துஞ்சின் — துயில் கொள்ளுமானால், கலந்தார்க்கு — கனவில் வரும் காதலர்க்கு, உயல் — நான் பொறுத்துக் கொண்டிருக்கும், உண்மை — நிலைமையினை, சாற்றுவேன் — எடுத்துரைப்பேன். [மன் — ஒழியிசை].

நனவில் வந்து அன்பு செய்யாதிருக்கும் கணவரை யான் கனவில் கண்ட காட்சியாலே என்னுடைய உயிர் இருந்து வருகின்றது.

நனவினான் நல்காதவரை கனவினான் காண்டலின் உண்டு என் உயிர்.

3 நனவினான் நல்கா தவரைக் கனவினான்
காண்டலின் உண்டுஎன் உயிர். 1213

நனவினான் — நனவுக் காலத்தில் வந்து, நல்காதவரை — அன்பு காட்டாத தலைவரை, கனவினான் — கனவுக் காலத்தில், காண்டலின் — காணுவதால், என் — என்னுடைய, உயிர் உண்டு — உயிர் போகாமல் இருக்கின்றது.

நனவுக் காலத்தில் வந்து அன்பு காட்டாத எனது தலைவரை அவர் சென்ற இடத்திலிருந்து இங்குக் கொணர்ந்து காட்டுவதால் கனவில் காமமானது உண்டாகின்றது.

கனவினான் உண்டாகும் காமம் நனவினான் நல்காரை நாடி தரற்கு.

4 கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. 1214

நனவினான் — நனவுக் காலத்தில் என்னிடம் வந்து, நல்காரை — அன்பினைப் பெய்யாத தலைவரை, நாடி — அறிந்து கொண்டுவந்து, தரற்கு — தருவதால், கனவினான் — அக் கனவின் கண்ணே, காமம் உண்டாகும் — இன்பம் எனக்கு உண்டாகின்றது.

நனவுப் பொழுதில் அவரைக் கண்டு நுகர்ந்த காம இன்பம் தானும் அப்போது இனிதாக இருந்தது. இப்போது நான் கனவில் கண்டு நுகர்ந்த இன்பமும் அது கண்டபோதே இனிதாகத்தான் இருந்தது எனக்கு இரண்டும் ஒத்திருந்தன.

நனவினான் கண்டதும் ஆங்கே கனவும் தான் கண்ட பொழுதே இனிது.

5 நனவினான் கண்டதூஉம் ஆங்கே கனவும்தான்
கண்ட பொழுதே இனிது. 1215

நனவினான் — பிரியாத முன்பு நனவின்கண், கண்டதூஉம் — காதலரைக் கண்டு நுகர்ந்த இன்பம் தானும், ஆங்கே — கண்ட அப்போதே இனிதாக இருந்தது, கனவும் தான் — இன்று கனவினில் காதலரைக்கண்டு நுகர்ந்த இன்பமும், கண்ட பொழுதே இனிது — கண்ட அப்போதே இனிதாக இருந்தது.

நனவு என்று சொல்லப்படுகின்ற ஒருபாவி இல்லையாயின் கனவிலே வந்து கூடிய காதலர் என்னைப் பிரியார்.

நனவு என ஒன்று இல்லை ஆயின் கனவினால் காதலர் நீங்கலர் மன்.

6 நனவுஎன ஒன்றுஇல்லை ஆயின் கனவினால்
காதலர் நீங்கலர் மன். 1216

நனவு — நனவு [நினைப்பு], என — என்று சொல்லப்படுகின்ற, ஒன்று — ஒன்றானது, இல்லையாயின் — இல்லாது போனால், கனவினால் — கனவினில் வந்து என்னுடன் கலந்த, காதலர் — காதலர், நீங்கலர் — பிரியமாட்டார். [மன் — ஒழியிசை]

ஒருபொழுதும் நனவிலே வந்து அன்பு செய்யாத கொடிய காதலர் நாள்தோறும் கனவில் வந்து நம்மை வருத்துவது எந்தப் பொருத்தம் பற்றியோ ?

நனவினான் நல்கா கொடியார் கனவினான் என் எம்மை பீழிப்பது.

7 நனவினான் நல்காக் கொடியார் கனவினான்
என்எம்மைப் பீழிப் பது. 1217

நனவினான் — நனவுக் காலத்தில் வந்து, நல்கா — அன்பு காட்டாத, கொடியார் — கொடுமை யான காதலர், கனவினான் — கனவினில் வந்து வந்து, எம்மைப் பீழிப்பது — நம்மைத் துன்புறச் செய்வது, என் — ஏனோ?

எனது நெஞ்சில் விடாமல் இருக்கும் காதலர் யான் தூங்கும்போது வந்து என் தோள் மேலராய் இருக்கின்றார். பிறகு நான் விழித்துக் கொள்ளும்போது விரைந்து எனது பழைய நெஞ்சினிடத்துச் சென்றுவிடுகின்றார்.

துஞ்சுங்கால் தோள் மேலராகி விழிக்குங்கால் நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.

8 துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து. 1218

துஞ்சுங்கால் — நான் தூங்குகின்றபோது வந்து, தோள் — தோள்களின், மேலராகி — மேல் இருக்கின்றவராய், விழிக்குங்கால் — நான் விழிக்கும்போது, விரைந்து நெஞ்சத்தர் — விரைந்து நெஞ்சினிடத்துச் செல்பவர், ஆவர் — ஆகிவிடுகின்றார்.

தமக்கு ஒரு காதலர் இல்லாமையால், அவரைக் கனவில் கண்டறியாத மகளிர், தாம் அறிய நனவில் வந்து அன்பு செய்யாத காதலரை அன்பிலர் என்று நொந்து கொள்ளுகின்றனர்

நனவினான் நல்காரை நோவர் கனவினான் காதலர் காணாதவர்.

**9 நனவினான் நல்காரை நோவர் கனவினான்**
**காதலர்க் காணா தவர்.** 1219

கனவினான் — கனவில், காதலர் — காதலரை, காணாதவர் — கண்டறியாத பெண்கள் நனவினான் — நனவு நேரத்தில் வந்து, நல்காரை — அன்புகாட்டாத காதலரை, நோவர் — அன்பில்லாதவரென்று நொந்து பேசுவர்.

இவ்வூர் மகளிர் நனவிலே நம்மைவிட்டுப் போனார் என்று நம் காதலரைக் கொடுமை கூறுகின்றார்கள். அவர் கனவில் நீங்காது வருவதனைக் கண்டறியாரோ?

நனவினால் நம் நீத்தார் என்பர் கனவினான் காணார்கொல் இவ்வூரவர்.

**10 நனவினான் நம்நீத்தார் என்பர் கனவினான்**
**காணார்கொல் இவ்வூ ரவர்.** 1220

இவ்வூரவர் — இந்த ஊரிலுள்ள பெண்கள், நனவினால் — நனவினில், நம் — நம்மை, நீத்தார் — நம் காதலர் நீங்கிவிட்டார், என்பர் — என்று கூறுவர், கனவினான் — எப்போதும் கனவில் வருவதை, காணார்கொல் — காணமாட்டாரோ?

## 123. பொழுது கண்டு இரங்கல்

### [மாலைப் பொழுது வந்தபோது தலைமகள் இரந்து வருந்தல்]

மாலைப் பொழுதே! நீ முந்தைய நாட்களில் வந்த மாலைப்பொழுது அல்ல; அந்த நாளில் காதலரை மணந்த மகளிர் உயிரை உண்ணும் முடிவுக் காலமாய் இப்போது இருக்கின்றாய்.

மாலையோ அல்லை மணந்தார் உயிர் உண்ணும் வேலை நீ வாழி பொழுது

**1 மாலையோ அல்லை மணந்தார் உயிர்உண்ணும்**
**வேலைநீ வாழி பொழுது** 1221

பொழுது — மாலைப் பொழுதே! நீ மாலையோ — நீ முன்னாளில் வந்த மாலைப்பொழுதோ, அல்லை — அல்ல; மணந்தார் — காதலரை மணந்த பெண்களது, உயிர் — உயிரை, உண்ணும் — உண்ணுகின்ற, வேலை — இறுதிக்காலமாக இருக்கிறாய், வாழி — நீ வாழ்வாயாக!

மயங்கிய மாலைப் பொழுதே! நீயும் எம்மைப் போல ஒளியிழந்த கண்களையுடையதாக இருக்கின்றாய்; உன் துணையும் எம்முடைய துணையேபோல் வன்கண்மை யுடையதோ? இரக்கமற்றதோ?

புன்கண்ணை வாழி மருள் மாலை எம் கேள் போல் வன்கண்ணதோ நின் துணை.

**2 புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள்போல்**
**வன்கண்ண தோநின் துணை.** 1222

மருள் — மயங்கிய, மாலை — மாலைப் பொழுதே, புன்கண்ணை — ஒளியிழந்து இருக்கின்றாய், வாழி — வாழ்க! நின் — உனது, துணை — துணையும், எம் — எம்முடைய, கேள்போல் — துணைவரைப் போல, வன்கண்ணதோ — அன்பின்றிக் கொடுமையான தன்மையுடையதோ?

காதலர் கூடிய நாளெல்லாம் என்முன் நடுக்கமுற்று பசந்து வந்த மாலைப் பொழுது இந்நாள் எனக்கு உயிர் வாழ்வதில் வெறுப்புண்டாக்கித் துன்பம் ஒருகாலைக் கொருகால் மிகுதி யாகுமாறு வருகின்றது.

பனி அரும்பி பைதல் கொள் மாலை துனி அரும்பி துன்பம் வளர வரும்.

**3 பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்**
**துன்பம் வளர வரும்.** 1223

பனிஅரும்பி — நாயகருடன் இருந்த நாளில் நடுக்கம் கொண்டு, பைதல் கொள் — முன்பு பசந்து வந்த, மாலை — மாலைப் பொழுதானது, துனி அரும்பி — உயிர் வாழவும் முடியாதபடி என்னைச் செய்து, துன்பம் வளர — துன்பமானது ஒருகாலைக் கொருகால் மிகுதியாகுமாறு, வரும் — வருகின்றது.

காதலர் இருந்தபோதெல்லாம் எனது உயிர் தழைக்கும்படியாக வந்த மாலைப் பொழுது அவர் இல்லாத இப்போது கொலை செய்கின்ற களத்திற்கு வருகின்ற கொலைஞர்களைப் போல வருகின்றது.

காதலர் இல் வழி மாலை கொலை களத்து ஏதிலர் போல வரும்.

**4 காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து**
**ஏதிலர் போல வரும்.** 1224

மாலை — முன்பு இன்பம் தந்து வந்த மாலைப் பொழுது, காதலர் — எமது காதலர், இல்வழி — என்னுடன் இல்லாத போது, கொலை — கொலை செய்கின்ற, களத்து — களரியில், ஏதிலர் — கொலைஞர்கள், போலவரும் — வருவது போல வருகின்றது.

காலையும் மாலையும் எம் காதலர் கூடியிருந்தபோது வந்தன போலல்லாமல் வேறுபட்டு வருகின்றன. யான், காலைக்குச் செய்த நன்மை என்ன? மாலைக்குச் செய்த தீமை என்ன?

காலைக்கு செய்த நன்று என்கொல் எவன்கொல் யான் மாலைக்கு செய்த [பகை.

5 காலைக்குச் செய்த நன்றுஎன்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. 1225

யான் — நான், காலைக்கு — காலைப் பொழுதிற்கு, செய்த நன்று என் — செய்த நன்மை என்ன? மாலைக்கு — மாலைப் பொழுதிற்கு, செய்த — யான் செய்த, பகை எவன் — தீமை என்ன? [கொல் — அசைநிலை].

முன்பெல்லாம் எனக்கு நட்பாக இருந்து இன்பம் செய்த மாலைப்பொழுது பகையாய்த் துன்பம் செய்தலைக் காதலர் பிரிதற்கு முன்னே அறிந்தேனில்லை !

மாலை நோய் செய்தல் மணந்தார் அகலாத காலை அறிந்தது இலேன்.

6 மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்தது இலேன். 1226

மாலை — மாலைப் பொழுது, [இப்போது] நோய் — துன்பம், செய்தல் — செய்வதனை, மணந்தார் — என்னை மணந்த காதலர், அகலாத — பிரிந்து போவதற்கு, காலை — [காலத்தில்] முன்னே, அறிந்தது இலேன் — அறியவில்லை.

இக்காமமாகிய பூ காலைப் பொழுதில் அரும்பி, பகற்பொழுதெல்லாம் பேர்அரும்பாய் முதிர்ந்து மாலைப் பொழுதினிலே மலரும்.

காலை அரும்பி பகல் எல்லாம் போது ஆகி மாலை மலரும் இந்நோய்.

7 காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய். 1227

இந்நோய் — காமநோய் என்னும் இம்மலர், காலை — காலை நேரத்தில், அரும்பி — அரும்பாக இருந்து, பகலெல்லாம் — பகற் பொழுதெல்லாம், போதாகி — பெரிய அரும்பாக முதிர்ந்து, மாலை — மாலைப்பொழுதில், மலரும் — மலர்ந்து விடுகின்றது.

முன்பெல்லாம் இனியதாய் வந்த ஆயன்குழல் இப்போது அழல்போலச் சுடுவதாயும், மாலைக்கு தூதுமாகி, அம்மாலை வந்து என்னைக் கொல்லுகிறபோது அதற்குத் துணையாகக் கொலை செய்யும் கருவியுமாயிற்று.

அழல் போலும் மாலைக்கு தூது ஆகி ஆயன் குழல் போலும் கொல்லும் படை.

8 அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை. 1228

ஆயன் — ஆயனது [இடையன்], குழல் — முன்பு இன்பத்தினையுண்டாக்கிய குழல், அழல் போலும் — இப்போது தீயினைப் போலச் சுடுவதாகியும், மாலைக்கு — மாலைப் பொழுதிற்கு, தூது ஆகி — தூதும் ஆகி, கொல்லும் — அம்மாலைப் பொழுது என்னைக் கொலை செய்யும் போது, படை — அதற்குப் படைக்கருவியும் ஆயிற்று [போலும் — உரையசை].

முன்பெல்லாம் யான் மட்டும் மதி மயங்கி இருந்தேன். இப்போது கண்டவர்களும் மதி மருளும் வகையில் மாலைக் காலம் வரும்போது, இவ்வூரெல்லாம் மயங்கி நோயினை அனுபவிக்கும்.

பதி மருண்டு பைதல் உழக்கும் மதி மருண்டு மாலை படர் தரும் போழ்து.

9 பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. 1229

மதிமருண்டு — கண்டாரும் மதி மயக்கம் அடையும் வகையில், மாலை — மாலைப் பொழுது, படர் — துன்பத்தினை, தரும் போழ்து — தந்து வரும்போது, பதி — இந்த நகரமெல்லாம், மருண்டு — மயக்க முற்று, பைதல் — துன்பத்தினை, உழக்கும் — மேற்கொண்டு வருந்தும்.

காதலர் பிரிவைப் பொறுத்து இறந்து போகாதிருந்த எனது உயிர், இன்று பொருளீட்டு வதனையே தமக்கு இயல்பாக உடைய கணவரை நினைத்து மயங்குகின்ற இம்மாலைப் பொழுதில் மாய்கின்றது.

பொருள் மாலையாளரை உள்ளி மருள் மாலை மாயும் என் மாயா உயிர்.

10 பொருண்மாலை யாளரை உள்ளி மருண்மாலை
மாயும்என் மாயா உயிர். 1230

மாயா — பிரிவினால் இதுவரை போகாதிருந்த, என் — என்னுடைய, உயிர் — உயிரானது, பொருள் — பொருள் ஈட்டும், மாலையாளரை — தன்மை கொண்ட தலைவரை, உள்ளி — எண்ணி, மருள் — மயங்குகின்ற, மாலை — இந்த மாலையிலே, மாயும் — இறந்து விடுகின்றது.

## 124. உறுப்பு நலன் அழிதல்

**[பிரிவுத் துன்பத்தினால் தலைவியின் உறுப்புக்கள் அழகிழத்தல்]**

பிரிவினால் பொறுத்திருக்க முடியாத துன்பத்தினை நமக்கு உண்டாக்கி நெடுந்தூரம் சென்ற காதலரை நினைத்து அழுவதால் கண்கள் ஒளியிழந்து முன்பு தமக்கு நாணமுற்ற மலர்களுக்கு இன்று தாம் நாணிவிட்டன.

சிறுமை நமக்கு ஒழிய சேண் சென்றார் உள்ளி நறு மலர் நாணின கண்.

**1 சிறுமை நமக்கொழியச் சேண்சென்றார் உள்ளி**
**நறுமலர் நாணின கண். 1231**

சிறுமை — பிரிவுத்துன்பத்தினை, நமக்கு — நம்மிடம், ஒழிய — இருக்கச் செய்துவிட்டு, சேண் — நெடுந்தூரம், சென்றார் — சென்றிருக்கும் காதலரை, உள்ளி — உள்ளத்தில் எண்ணி அழுவதால், கண் — கண்கள், நறுமலர் நாணின — முன்பு தனக்கு நாணிய அழகிய மலர்களுக்கு இப்போது நாணிவிட்டன.

பசப்பு நிறமடைந்து நீர் பொழிகின்ற கண்கள் தம்மால் அன்பு செய்யப்பட்டவரது அன்பில்லாத் தன்மையினைப் பிறர்க்குச் சொல்லுவனபோல் இருக்கின்றன.

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும் பசந்து பனி வாரும் கண்.

**2 நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்**
**பசந்து பனிவாரும் கண். 1232**

பசந்து — பசப்பு நிறமடைந்து, பனி — நீரினை, வாரும் — பொழிகின்ற, கண் — கண்கள், நயந்தவர் — நம்மால் காதலிக்கப்பட்டவர், நல்காமை — அன்பு செய்யாதிருப்பதை, சொல்லுவ — பிறர்க்கு எடுத்துச் சொல்லுவன, போலும் — போன்று இருக்கின்றன.

காதலர் மணந்தபோது இன்பமிகுதியால் பூரித்த தோள்கள் இன்று அவர் பிரிந்தமையினை விளங்க உணர்த்துவது போன்று மெலிந்துவிட்டன.

தணந்தமை சால அறிவிப்ப போலும் மணந்த நாள் வீங்கிய தோள்.

**3 தணந்தமை சால அறிவிப்ப போலும்**
**மணந்தநாள் வீங்கிய தோள். 1233**

மணந்த — மணந்து கலந்த, நாள் — நாட்களில், வீங்கிய — இன்பத்தால் பூரிப்படைந்த, தோள் — தோள்கள், தணந்தமை — தலைவன் பிரிந்தமையை, சால — மிகவும் விளங்க, அறிவிப்ப — பிறர்க்குத் தெரிவிப்பது, போலும் — போன்று மெலிந்தன.

துணைவர் நீங்கியதால் அவரால் பெற்ற செயற்கையே யன்றி இயற்கையழகும் இழந்த தோள்கள், இன்று அதற்கு மேலே தம் பெருமை இழந்து வளையல்கள் கழல நிற்கின்றன.

பணை நீங்கி பைந்தொடி சோரும் துணை நீங்கி தொல் கவின் வாடிய தோள்.

**4 பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்**
**தொல்கவின் வாடிய தோள். 1234**

**துணை** — தமது துணைவர், நீங்கி — நீங்கியதால், தொல் — பழைய, கவின் — இயற்கை அழகினை, வாடிய — இழந்து வாடிய, தோள் — தோள்கள், பணை — தமது பெருமை யினையும், நீங்கி — இழந்துவிட்டு, பைந்தொடி சோரும் — பசுமையான வளையல்கள் கழல நிற்கின்றன.

வளையல்களும் கழன்று, பழைய இயற்கையழகும் இழந்த இத்தோள்கள், கொடிய தலைவரது கொடுமையினைத் தாமே எடுத்துக் கூறுகின்றன.

கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு தொல் கவின் வாடிய தோள்.

**5 கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு**
**தொல்கவின் வாடிய தோள். 1235**

தொடியொடு — வளையல்களும் கழல, தொல் — பழைய, கவின் — இயற்கையழகினையும், [இழந்து] வாடிய — வாடியுள்ள, தோள் — தோள்கள், கொடியார் — பிரிந்திருக்கும் கொடுமை யான தலைவரின், கொடுமை — கொடுந்தன்மையினை, உரைக்கும் — சொல்லுகின்றன.

வளையல்கள் கழலுமாறு தோள்கள் மெலிந்ததால் அவரைப் பிறர் கொடியர் எனக் கூறுதலைப் பொறுக்க முடியாமல் யான் என்னுள்ளே நொந்து நிற்கின்றேன்.

தொடியொடு தோள் நெகிழ நோவல் அவரை கொடியர் என கூறல் நொந்து.

**6 தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்**
**கொடியர் எனக்கூறல் நொந்து. 1236**

தொடியொடு — வளையல்கள் கழலும் நிலையில், தோள் — தோள்கள், நெகிழ — மெலிய, அவரை — காதலரை, கொடியர் — கொடுமையானவர், என — என்று, கூறல் — பிறர் கூறுவதை, நொந்து — பொறுக்க முடியாமல், நோவல் — வருந்தித் துன்புறுகின்றேன்.

நெஞ்சே! இவர் கொடியவர் என்று சொல்லப்படுகின்ற காதலரிடம் சென்று, என் மெலிந்த தோள்கள் செய்யும் ஆரவாரத்தினைக் கூறி ஒரு மேம்பாடு அடையமாட்டேயோ? அப்படிச் செய்தால் சிறந்ததாகும்.

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கு என் வாடு தோள் பூசல் உரைத்து.

**7 பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்குஎன்**
**வாடுதோள் பூசல் உரைத்து. 1237**

நெஞ்சே — நெஞ்சமே! கொடியார்க்கு — கொடிய தலைவர்க்கு, என் — என்னுடைய, வாடு — வாடிய, தோள் — தோள்கள் உண்டாக்குகின்ற, பூசல் — ஆரவாரத்தினை, உரைத்து—எடுத்துக் கூறி, பாடு — ஒரு மேம்பாட்டினை, பெறுதியோ — அடையமாட்டாயோ?

தன்னை இறுகத் தழுவிய கைகளை இவளுக்கு நோகும் என்று கருதி ஒருபோது நான் தளர்த்தினேன். அதனையும்கூடப் பொறுக்க முடியாமல் பசிய வளையல்களையணிந்த இப்பேதையினுடைய நுதல் பசலை நிறம் அடைந்தது.

முயங்கிய கைகளை ஊக்க பசந்தது பைந்தொடி பேதை நுதல்.

**8 முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது**
**பைந்தொடிப் பேதை நுதல். 1238**

முயங்கிய — இறுகத் தழுவிய, கைகளை — கைகளை, ஊக்க — தளர்த்திேனனாக, பைந்தொடி — பசுமையான வளையல்களை யணிந்த, பேதை — இப்பெண்ணின், நுதல் — நெற்றியானது, பசந்தது — பசப்பு நிறம் அடைந்துவிட்டது. [அப்படி இருக்க இப்பிரிவினை எவ்வாறு தாங்குவேன்.]

இறுகத் தழுவிய கைகளைத் தளர்த்தியதால் இருவருக்குமிடையே சிறுகாற்று நுழைந்தது. அந்தச் சிறிய இடைவெளியினையும் பொறுக்க முடியாமல் இப்பேதையினுடைய குளிர்ச்சி பொருந்திய கண்கள் பசப்பு நிறம் அடைந்தன.

முயக்கு இடை தண் வளி போழ பசப்பு உற்ற பேதை பெரு மழை கண்.

**9 முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற**
**பேதை பெருமழைக் கண். 1239**

முயக்கு — தழுவிக் கொண்டிருந்ததற்கு, இடை — இடையே [நடுவில்], தண் — குளிர்ந்த சிறிய, வளி — காற்று, போழ — நுழைய, பேதை — இப்பேதைப் பெண்ணினுடைய, பெரு — பெரிய, மழை — குளிர்ந்த, கண் — கண்கள், பசப்புற்ற — பசலை நிறத்தினை அடைந்துவிட்டன,

தனக்கு அருகில் இருக்கும் ஒளி பொருந்திய நெற்றியடைந்த பசப்பு நிறத்தினைக் கண்டு, கண்களின் பசப்பு நிறம் துன்பத்தினை அடைந்துவிட்டது.

கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே ஒள் நுதல் செய்தது கண்டு.

10 கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. 1240

ஒள் — ஒளி பொருந்திய [அருகிலுள்ள], நுதல் — நுதல் [நெற்றி], செய்தது கண்டு — விளைவித்த பசப்பினைக் கண்டு, கண்ணின் — கண்களினுடைய, பசப்போ — பசப்பு நிறம், பருவரல் — துன்பத்தினை, எய்தின்று — அடைந்துவிட்டது. [ஏ — அசைநிலை].

## 115. நெஞ்சொடு கிளத்தல்

[தலைவி இன்னது செய்வதென்று அறியாமல் நெஞ்சொடு பேசுதல்]

நெஞ்சமே! தீராத இக்காமநோயினைத் தீர்க்கும் மருந்தாவதொன்றினை யான் அறியுமாறு யாதானுமொன்றனை நினைத்துச் சொல்லுவாயாக.

நினைத்து ஒன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்து ஒன்றும் எவ்வ நோய் தீர்க்கும் [மருந்து.

1 நினைத்துஒன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து. 1241

நெஞ்சே — நெஞ்சமே! எவ்வ — ஒன்றாலும் தீராத, நோய் — இந்நோயினை, தீர்க்கும் — தீர்க்கக் கூடிய, மருந்து — மருந்து, ஒன்று — ஒன்றினை, எனைத்தொன்றும் — எத்தன்மை யானதொன்றாயினும், நினைத்து — நினைத்துப் பார்த்து, சொல்லாயோ — எனக்குச் சொல்ல மாட்டாயோ?

என்னுடைய நெஞ்சமே! நம்முடைய கணவர் நம்மிடத்தில் காதல் கொள்ளாமல் இருக்கின்றார். நீ அவர் வரவு நோக்கி வருந்துகின்றாய்; இது உன்னுடைய பேதைமையேயாகும்.

காதல் அவர் இலராக நீ நோவது பேதைமை வாழி என் நெஞ்சு.

2 காதல் அவர்இல ராகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு. 1242

என் — என்னுடைய, நெஞ்சு — நெஞ்சமே! வாழி — நீ வாழ்வாயாக, அவர் — நமது தலைவர், காதல் — நம்மீது காதல், இலராக — இல்லாதவராக இருக்க, நீ — நீ மட்டும், நோவது — அவரை நினைத்து வருந்துவது, பேதைமை — அறியாத் தன்மையேயாகும்.

இத்துன்ப நோயினைச் செய்தவரிடத்தில் நம்மிடம் இரக்கங் காட்டி வருகின்ற எண்ணம் இல்லையே! நெஞ்சமே! நீ அவர் இருக்கும் இடத்திற்குப் போகாமல் இங்கேயே இருந்து கொண்டு அவர் வரவு நோக்கி வருந்துவது ஏன்?

இருந்து உள்ளி என் பரிதல் நெஞ்சே பரிந்து உள்ளல் பைதல் நோய் செய்தார்கண் [இல்.

3 இருந்துஉள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துஉள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல். 1243

பைதல் — மிகவும் துன்பமான, நோய் — இந்நோயினை, செய்தார்கண் — செய்த காதலரிடத்தில், பரிந்து — நம்மீது இரக்கப்பட்டு, உள்ளல் இல் — நம்மிடம் வரவேண்டும் என்று நினைத்தல் இல்லையே; நெஞ்சே — நெஞ்சமே, இருந்து — இங்கேயே இருந்து கொண்டு, உள்ளி — காதலரை நினைத்து, பரிதல் என் — வருந்துவது ஏன்?

தலைவரைக் காணவேண்டுமென்று கண்கள் என்னைத் தின்பன போன்று வருத்தி நிற்கின்றன. நெஞ்சே! நீ அவரிடம் செல்லும்போது இக்கண்களையும் உடன் கொண்டு செல்லுவாயாக.

கண்ணும் கொள சேறி நெஞ்சே இவை என்னை தின்னும் அவர் காணல் உற்று.

4 கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவைஎன்னைத்
தின்னும் அவர்க்காணல் உற்று. 1244

இவை — இந்தக் கண்கள், அவர் — தலைவரை, காணல் உற்று — காணுதல் வேண்டி, என்னைத் தின்னும் — என்னைத் தின்பன போன்று துன்பம் செய்கின்றன [ஆதலால்], நெஞ்சே — நெஞ்சமே! கண்ணும் — கண்களையும், கொள — அவரிடம் கொண்டு, சேறி — செல்லுவாயாக.

நெஞ்சமே! நாம் அன்பு கொண்டு அவரைக் காதலித்திருக்க, நம்பால் காதல் கொள்ளாதிருக்கும் அவரை வெறுத்தார் என்று கருதிப் புலந்து கைவிட்டிருக்கும் வலிமை நமக்கு உண்டோ?

செற்றார் என கை விடல் உண்டோ நெஞ்சே யாம் உற்றால் உறாதவர்.

5 செற்றார் எனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர். 1245

நெஞ்சே — நெஞ்சமே! யாம் உற்றால் — யாம் அவரிடம் அன்பு கொண்டிருக்க, உறாஅதவர் — நம்மிடம் காதல் கொள்ளாதவரை, செற்றார் — வெறுத்து விட்டார், என — என்று நினைத்து, கைவிடல் உண்டோ — கைவிட்டிருக்கும் வலிமை நமக்கு இருக்கின்றதோ?

என் நெஞ்சமே! நாம் பிணங்கிக்கொண்டு புலந்திருந்தால் கலவியினாலே நீக்க வல்ல காதலரைக் கண்டால் பொய்யாகவேனும் புலந்து பின் நீங்காத நீ இப்போது பொய் யாகக் கோபித்துக் கொண்டிருக்கின்றாய்.

கலந்து உணர்த்தும் காதலர் கண்டால் புலந்து உணராய் பொய் காய்வு காய்தி [என் நெஞ்சு.

**6 கலந்துஉணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துஉணராய்**
**பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு.** 1246

என் — என்னுடைய, நெஞ்சு — மனமே, கலந்து — புணர்ச்சியால், உணர்த்தும் — நமது பிணக்கினை நீக்கவல்ல, காதலர் — காதலரை, கண்டால் — கண்டுவிட்டால், புலந்து — பொய்யாக வேனும் கோபித்து, உணராய் — பிறகு புலப்பதை நீக்கி விடுதல் செய்யாத நீ, பொய் — பொய்யான, காய்வு — கோபத்தில், காய்தி — கோபித்துக் கொண்டிருக்கின்றாய்.

நல்ல நெஞ்சமே! நாணத்தினை விட முடியவில்லை யென்றால் ஒன்று காமத்தினை விடு; அல்லது நாணத்தினை விட்டுவிடு; இல்லையாயின் இரண்டினையும் தாங்கும் வலிமை எனக்கு இல்லை.

காமம் விடு ஒன்றோ நாண் விடு நல் நெஞ்சே யானோ பொறேன் இவ் விரண்டு.

**7 காமம் விடுஒன்றோ நாண்விடு நல்நெஞ்சே**
**யானோ பொறேன்இவ் விரண்டு.** 1247

நல் — நல்ல, நெஞ்சே — நெஞ்சமே!, ஒன்று காமம் — ஒன்று காம இன்பத்தினை, விடு — விட்டு விடு, [முடியவில்லை யென்றால்] நாண்விடு — நாணத்தினையாவது விட்டுவிடு, இவ்விரண்டு — இந்த இரண்டினையும், யானோ பொறேன் — ஒன்றாகத் தாங்கும் வலிமை எனக்கு இல்லையாகும். [ஒ — அசை நிலை]

எனது நெஞ்சமே! தலைவர் பொறுத்திருக்க முடியாத நமது தன்மையினை அறியாததால் மனம் நொந்து வந்து அன்பு செய்யாமல் இருக்கின்றார்; அப்படி நினைத்து ஏங்கிப் பிரிந்திருக்கும் அவர் பின்னே ஏங்கிச் செல்ல நினைக்கின்ற நீ எதையும் தெரிந்து கொள்ளமாட்டாய்.

பரிந்து அவர் நல்கார் என்று ஏங்கி பிரிந்தவர் பின் செல்வாய் பேதை என் நெஞ்சு.

**8 பரிந்தவர் நல்கார்என்று ஏங்கிப் பிரிந்தவர்**
**பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு.** 1248

என் — என்னுடைய, நெஞ்சு — மனமே, அவர் — நமது தலைவர், பரிந்து — வருந்தி நம்மிடம் வந்து, நல்கார் — அன்பு செய்யமாட்டார், என்று — என்று எண்ணி, [நமது நிலைமையினைக் கூறுவதற்காக] பிரிந்தவர் — பிரிந்து போயிருக்கின்றவர், பின் — பின்னே, ஏங்கிச் செல்வாய் — ஏக்கத்துடன் செல்லுகின்றாய், பேதை — பேதையாகிய நீ யாதும் அறியாய்.

என் நெஞ்சமே! காதலர் உள்ளத்திலேயே இருக்கின்றார். இப்போது வெளியில் போய்த் தேடி யாரிடம் செல்கின்றாய்?

**உள்ளத்தார் காதலவர் ஆக உள்ளி நீ யாருழை சேறி என் நெஞ்சு.**

**9 உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ**
**யாருழைச் சேறிஎன் நெஞ்சு. 1249**

என் — என்னுடைய, நெஞ்சு — நெஞ்சே, காதலவர் — காதல் தலைவர், உள்ளத்தார் ஆக — மனத்திலேயே தங்கி இருப்பவராக, நீ உள்ளி — நீ இப்போது வெளியில் தேட நினைத்து, யாருழைச் சேறி — யாரிடத்தில் போகின்றாய்?

நம்மைக் கூடாவண்ணம் விட்டுப்போன தலைவரை, நாம் நம் மனத்திலேயே வைத்திருப்பதால் முன்பு இழந்த புறத்து அழகேயன்றி மனத்து அழகினையும் இழப்போம்.

**துன்னா துறந்தாரை நெஞ்சத்து உடையேமா இன்னும் இழத்தும் கவின்.**

**10 துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா**
**இன்னும் இழத்தும் கவின். 1250**

துன்னா — நம்மைக் கூடாதபடி, துறந்தாரை — பிரிந்து [துறந்து] போனவரை, நெஞ்சத்து— மனத்திலேயே, உடையேமா — நினைத்துக் கொண்டிருப்பதால், இன்னும் — முன்பு இழந்த புறத்து அழகே அன்றி மேலும், கவின்இழத்தும் — மனத்து அழகினையும் இழப்போம்.

## 126. நிறை அழிதல்

**[மனத்தில் மறைத்து வைத்திருப்பதை வேட்கை மிகுதியால் வெளிப்பட வைத்தல்]**

நான் என்னும் தாழ்ப்பாளினைக் கோத்த நிறை யென்னும் கதவினைக் காமவேட்கையாகிய கணிச்சி முறிக்கின்றது. அதனை நிறுத்தித் தடுக்க முடியவில்லை.

**காம கணிச்சி உடைக்கும் நிறை என்னும் நாணுத்தாள் வீழ்த்த கதவு.**

**1 காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்**
**நாணுத்தாள் வீழ்த்த கதவு. 1251**

நாணு — நாணம் என்கின்ற, தாள் — தாழ்ப்பாளினை, வீழ்த்த — கோத்த, நிறை — நிறை குணம், என்னும் — எனப்படும், கதவு — கதவினை, காமக்கணிச்சி — காமவேட்கையாகிய குந்தாலி, உடைக்கும் — முறித்து விடுகின்றது.

எல்லோரும் தூங்குகின்ற பாதி இரவிலும் எனது நெஞ்சத்தினைத் தொழிற்படுத்தி ஆட்சி செய்கின்றது; ஆதலால் காமம் என்று சொல்லப்படுகின்ற ஒன்று இரக்கமில்லாததாக இருக்கின்றது.

காமம் என ஒன்றுஓ கண் இன்று என் நெஞ்சத்தை யாமத்தும் ஆளும் தொழில்.

**2 காமம் எனஒன்றோ கண்ணின்றுஎன் நெஞ்சத்தை**
**யாமத்தும் ஆளும் தொழில். 1252**

யாமத்தும் — நள்ளிரவிலும், என் — எனது, நெஞ்சத்தை — நெஞ்சத்தினை, தொழில் ஆளும் — செயல்படுத்தி ஆட்சி புரிகின்றது, [ஆகையினால்] காமம் — காமம், என — என்று சொல்லப்படுகின்ற, ஒன்று — ஒன்றானது, கண் — கண்ணோட்டம் என்கின்ற இரக்கம், இன்று — இல்லாததாக இருக்கின்றது, ஓ! — அந்தோ!

இக்காமத்தை நான் என்னுள்ளே மறைக்கக் கருதுகின்றேன். ஆனால் இஃது என் கருத்திற்குள் அடங்காமல் தும்மல்போல் வெளிப்பட்டு விடுகின்றது.

மறைப்பேன் மன் காமத்தை யானோ குறிப்பு இன்றி தும்மல்போல் தோன்றிவிடும்.

**3 மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்புஇன்றித்**
**தும்மல்போல் தோன்றி விடும் 1253**

காமத்தை — காமத்தினை, யான் மறைப்பேன் — நான் மறைத்துக் கொள்ளக் கருதுவேன், குறிப்பின்றி — எனது கருத்தின்படி வாராமல், தும்மல் — தும்மலினை, போல் — போன்று, தோன்றிவிடும் — வெளிப்பட்டுத் தோன்றி விடுகின்றது. ஓ — அந்தோ! [மன் — ஒழியிசை].

யான் முன்பெல்லாம் என்னை நிறையுடையேன் என்று நினைத்திருந்தேன். இன்று என் காமம் மறைத்து வைத்திருந்ததையும் கடந்து மன்றத்தில் பலரும் அறிய வெளிப்படுகின்றது.

நிறையுடையேன் என்பேன் மன் யான்ஓ என் காமம் மறை இறந்து மன்று படும்.

**4 நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்**
**மறைஇறந்து மன்று படும். 1254**

யான் நிறையுடையேன் — நான் நிறைகுணம் உடையேன், என்பேன் — என்று கருதி இருந்தேன், என் — என்னுடைய, காமம் — காமமானது, மறை — மறைத்து வைத்ததை, இறந்து — கடந்து வந்து, மன்று — பலரும் அறிய மன்றத்தில், படும் — வெளிப்பட்டு விடுகின்றது; ஓ — அந்தோ! [மன் — அசைநிலை]

தம்மைவிட்டுச் சென்றவர் பின்னேசெல்லாமல் தாமும் அகன்று நிற்கும் பெருந்தகைமை காமநோயினை உணர்ந்தவர்கள் அறிவது ஒன்று அன்று.

**செற்றார்பின் செல்லா பெருந்தகைமை காம நோய் உற்றார் அறிவது ஒன்று அன்று.**

**5 செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன்று அன்று.** 1255

செற்றார் — தம்மைவிட்டு நீங்கிப் போனவர், பின் — பின்னே, செல்லா — தொடர்ந்து செல்லாத, பெருந்தகைமை — பெருந்தன்மையான நிறைகுணமானது, காமநோய் — காம நோயினை, உற்றார் — அடைந்தவர்கள், அறிவது — அறிந்து கொள்ளக் கூடிய, ஒன்று — ஒன்று, அன்று — இல்லை.

என்னை விட்டுப் பிரிந்தவர் பின்னே யான் செல்லுவதை விரும்புவதால், எனக்கு உற்ற துயர் எத்தன்மையானது? மிகவும் நல்லதேயாகும்.

**செற்றவர் பின் சேறல் வேண்டி அளித்து அரோ எற்று என்னை உற்ற துயர்**

**6 செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ
எற்றுஎன்னை உற்ற துயர்.** 1256

செற்றவர் — நம்மை விட்டு நீங்கிச் சென்ற காதலர், பின் — பின்னே, சேறல் — செல்லுவதை, வேண்டி — விரும்புவதால், என்னை — என்னை, உற்ற — வந்து சேர்ந்த, துயர் — இக்காமத் துன்பமாவது, எற்று — எத்தன்மையானதாகும், அளித்து — மிக்க நல்லதேயாகும். [அரோ— அசைநிலை].

நம்மால் விரும்பப்பட்ட தலைவர் திரும்ப வந்து காமத்தால் நாம் விரும்பியவற்றைச் செய்யுங் கால் நாணம் என்ற ஒன்றினையும் அறிய முடியாதவராக இருந்தோம்.

**நாண் என ஒன்றோ அறியலம் காமத்தால் பேணியார் பெட்ப செயின்.**

**7 நாண்என ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின்.** 1257

பேணியார் — நம்மால் விரும்பப்பட்ட காதலர், காமத்தால் — காமவேட்கையால், பெட்ப செயின் — நாம் விரும்பியவற்றைச் செய்யும்போது, நாண் — நாணம், என — என்கின்ற, ஒன்றோ — ஒன்றினையும், அறியலம் — அறிய முடியாதபடி இருந்தோம்.

பல பொய்களையும் சொல்ல வல்ல கள்வனுடைய தாழ்ந்த சொற்களல்லவா நம்முடைய நிறை குணமாகிய கோட்டையினை அழிக்கின்ற படையாகும்.

பல் மாய கள்வன் பணி மொழி யன்றோ நம் பெண்மை உடைக்கும் படை.

8 பல்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை. 1258

பல்மாய — பல பொய்களையும் பேசவல்ல, கள்வன் — கள்வனுடைய, பணிமொழி — தாழ்ந்த சொற்கள், அன்றோ — அல்லவா, நம் — நம்முடைய, பெண்மை — நிறையாகிய குணத்தினை, உடைக்கும் — உடைக்கின்ற, படை — படைக் கருவி ஆகும்.

அவர் வந்தபோது பிணங்க வேண்டும் என்று எண்ணி முன்னே நிற்காமல் பிறிதோர் இடத்திற்குச் சென்றேன். எனது நெஞ்சம் நிறைகுணத்தில் நிற்காமல் அவரோடு கலத்தல் தொடங்குவதை யறிந்து புல்லினேன்.

புலப்பல் என சென்றேன் புல்லினேன் நெஞ்சம் கலத்தில் உறுவது கண்டு.

9 புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு. 1259

புலப்பல் — பிணங்கிக் கொள்ள வேண்டும், என — என்று எண்ணி, சென்றேன் — காதலர் முன்நிற்காமல் பிறிதோர் இடத்திற்குச் சென்றேன், நெஞ்சம் — எனது மனமானது, கலத்தல் — அவருடன் கலந்துகொள்ள, உறுவது கண்டு — மேற்கொண்டுள்ளதைக் கண்டு, புல்லினேன் — தழுவிக் கொண்டேன்.

தீயிலிடப்பட்ட கொழுப்பானது எவ்வாறு உருகுமோ அது போன்ற நெஞ்சினையுடைய மகளிர்க்கு அவர் புணர, யாம் ஊடிப் பின்பு புணராது அந்நிலைமையிலேயே நிற்கக் கடவேம் என்று கருதுதல் உண்டாகுமோ? உண்டாகாது.

நிணம் தீயில் இட்ட அன்ன நெஞ்சினார்க்கு உண்டோ புணர்ந்து ஊடி நிற்பேம் [எனல்.

10 நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்துஊடி நிற்பேம் எனல். 1260

நிணம் — கொழுப்பினை, தீயில் — தீயினில், இட்டன்ன — இட்டால் அது எப்படி உருகுமோ அது போன்ற, நெஞ்சினார்க்கு — நெஞ்சினையுடைய பெண்களுக்கு, ஊடி — புலத்தல் செய்து, புணர்ந்து — அதன் பிறகு புணர்ந்து, நிற்பேம் — அந்நிலையிலேயே உறுதியாக இருப்போம், எனல் உண்டோ — என்று எண்ணுதல் உண்டாகுமோ?

## 127. அவர்வயின் விதும்பல்

**[பிரிந்திருக்கும் இருவரும் வேட்கை மிகுதியால் ஒருவரையொருவர் காண விழைதல்]**

அவர் நம்மைப் பிரிந்து சென்ற நாட்களைச் சுவரில் இழைத்து வைத்து அவைகளைத் தொட்டு எண்ணுவதால் என் விரல்கள் தேய்ந்தன. அவர் வருகின்ற வழி பார்த்து எனது கண்களும் ஒளியிழந்து போயின.

வாள் அற்று புற்கென்ற கண்ணும் அவர் சென்ற நாள் ஒற்றி தேய்ந்த விரல்.

**1 வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற**
**நாள்ஒற்றித் தேய்ந்த விரல். 1261**

அவர் — தலைவர், சென்ற — பிரிந்து போன, நாள் — நாட்களை, ஒற்றி — சுவரில் இழைத்துத் தொட்டு எண்ணியெண்ணி, விரல் — எனது விரல்கள், தேய்ந்த — தேய்ந்து போயின, கண்ணும் — கண்களும், [அவர் வருகையினைப் பார்த்து] வாள் — ஒளி, அற்று — இழந்து, புற்கென்ற — புல்லிய தன்மை கொண்டன.

விளங்குகின்ற அணிகலன்களையுடையவளே! இன்று காதலரை யான் மறப்பேனாயின் மேலும் அழகு என்னை விட்டு நீங்க என் தோள் வளையல்கள் கழலும்.

இலங்கு இழாய் இன்று மறப்பின் என் தோள் மேல் கலம் கழியும் காரிகை நீத்து.

**2 இலங்கிழாய் இன்று மறப்பின்என் தோள்மேல்**
**கலங்கழியும் காரிகை நீத்து. 1262**

இலங்கு — ஒளிவீசுகின்ற, இழாய் — அணிகலன்களையுடையவளே! இன்று — இந்த நாட்களில், மறப்பின் — கணவரை மறந்துவிட்டால், மேல் — மேன்மேலும், காரிகை நீத்து — அழகானது என்னைவிட்டு நீங்கி, என் — என்னுடைய, தோள் — தோள்கள், கலம் — வளையல்கள், கழியும் — கழலும் நிலைமையை அடையும்.

இன்பம் நுகர்தலை விரும்பாமல் வேறு ஒன்றனை விரும்பித் தமது மனவெழுச்சியாகிய ஊக்கமே துணையாகச் சென்றவர் அவற்றை இகழ்ந்து இங்கு வருதலை விரும்புவதால் யாம் இன்னும் உயிரோடிருக்கின்றோம்.

உரன் நசைஇ உள்ளம் துணையாக சென்றார் வரல் நசைஇ இன்னும் உளேன்.

**3 உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்**
**வரன்நசைஇ இன்னும் உளேன். 1263**

உரனசைஇ — வெல்லுதலைக் கருதி, உள்ளம் — தமது ஊக்க மிகுதியே, துணையாக — துணையாகக்கொண்டு, சென்றார் — சென்ற தலைவர், வரல்நசைஇ — அவர் திரும்பி வருவதையே விரும்பி, இன்னும் உளேன் — இந்நாள் வரையிலும் உயிர் வாழ்கின்றேன்.

நம்மைப் பிரிந்து போனவர் காமத்துடனே நம்மிடம் வருதல் நினைத்து எனது நெஞ்சம் வருத்தம் நீங்கி மேன்மேலும் பணைத்து எழுகின்றது.

கூடிய காமம் பிரிந்தார் வரவு உள்ளி கோடு கொடு ஏறும் என் நெஞ்சு.

4 கூடிய காமம் பிரிந்தார் வரவுஉள்ளிக்
கோடுகொடு ஏறும்என் நெஞ்சு. 1264

பிரிந்தார் — பிரிந்துபோன தலைவர், கூடிய காமம் — கலந்தின்புறும் காமத்துடனே, வரவு — நம்மிடம் வர இருப்பதை, உள்ளி — நினைத்துக் கொண்டிருப்பதால், என் — என்னுடைய, நெஞ்சு — நெஞ்சமானது, கோடுகொடு — மேன்மேல் பணைத்து, ஏறும் — எழுகின்றது.

எனது கண்களின் ஆவல் தீரும் வகையில் எனது கொண்கனைக் காண்பேனாக; அங்ஙனம் கண்டபின் என் மெல்லிய தோளிலே உள்ள பசப்பு தானாகவே நீங்கும்.

காண்க மன் கொண்கனை கண் ஆர கண்டபின் நீங்கும் என் மென்தோள் பசப்பு.

5 காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்கும்என் மென்தோள் பசப்பு. 1265

கண் — எனது கண்கள், ஆர — ஆவல் தீரும் வகையில், கொண்கனை — எனது தலைவனை, காண்க — நான் கண்டு மகிழ்வேனாக, கண்ட பின் — அப்படிக்கண்ட பின்பு, என் — என்னுடைய, மென் — மெல்லிய, தோள் — தோள்களின், பசப்பு நீங்கும் — பசலை நிறம் நீங்கிவிடும். [மன் — ஒழியிசை].

இத்தனை நாட்களாக வாராத தலைவன் ஒருநாள் என்னிடம் வருவானாக; வந்தால் துன்பம் செய்கின்ற இந்த நோயெல்லாம் கெட அந்த அமிழ்தத்தினைப் பருகுவேன்.

வருக மன் கொண்கன் ஒருநாள் பருகுவன் பைதல் நோய் எல்லாம் கெட.

6 வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட. 1266

கொண்கன் — நாயகன், ஒருநாள் — ஒருநாள், வருக — வந்து சேருவானாக [வந்ததும்], பைதல் — துன்பம் செய்கின்ற, நோய் — இக்காமநோய், எல்லாம் — எல்லாம், கெட — கெடும்படி [நீங்குமாறு], பருகுவன் — இன்பத்தினைப் பருகுவேன். [மன் — ஒழியிசை].

கண்போல் சிறந்த தலைவர் வருவாராயின் அவர் நீண்ட நாட்களாக வாராமையினைக் கருதிப் புலந்து கொள்ளுவேனோ? அல்லது பொறுக்க முடியாமையினை எண்ணிப் புலக்கக் கடவேனோ? அவ்விரண்டினையும் செய்யக் கடவேனோ? யாது நான் செய்யக் கடவேன்?

**புலப்பேன்கொல் புல்லுவேன்கொல்லோ கலப்பேன்கொல் கண் அன்ன கேளிர் வரின்.**

**7 புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்**
**கண்ணன்ன கேளிர் வரின். 1267**

*கண் — கண்களை, அன்ன — போன்ற, கேளிர்வரின் — தலைவர் வருவாரானால், புலப்பேன் கொல் — அவரிடம் பிணங்கிக் கொள்ளுவேனோ? புல்லுவேன்கொல் — தழுவிக் கொள்ளுவேனோ? [அல்லது] கலப்பேன்கொல் — இவ்விரண்டினையும் செய்வேனோ?*
*[ஓ — அசைநிலை].*

வேந்தன் போர் புரிந்து வெல்வானாக; யாமும் மனைவியைச் சென்று கூடி மாலைப் பொழுதில் விருந்துண்டு மகிழ்வோம்.

**வினை கலந்து வென்று ஈக வேந்தன் மனை கலந்து மாலை அயர்கம் விருந்து.**

**8 வினைகலந்து வென்றுஈக வேந்தன் மனைகலந்து**
**மாலை அயர்கம் விருந்து. 1268**

*வேந்தன் — வேந்தன், வினைகலந்து — மேற்கொண்ட வினைமேற்சென்று, வென்று ஈக — வெற்றியுறுவானாக, மனை — மனைவியிடம் சென்று, கலந்து — கூடி, மாலை — மாலைப் பொழுதிற்கு, விருந்து அயர்கம் — விருந்துண்டு இருப்போமாக.*

தூர தேயத்திற்குச் சென்றிருக்கும் காதலரை எண்ணி வருந்தி யிருக்கும் மகளிர்க்கு ஒருநாள் பலநாட்களாக நெடிதாகக் கழியும்.

**ஒருநாள் எழு நாள் போல் செல்லும் சேண் சென்றார் வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு.**

**9 ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேண் சென்றார்**
**வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு. 1269**

*சேண் — தூரதேசத்திற்கு, சென்றார் — சென்ற காதலர், வருநாள் — திரும்பி வரக் குறித்த நாளினை, வைத்து — மனதில் நினைத்துப் பார்த்து, ஏங்குபவர்க்கு — வருந்துகின்ற தலைவியர்க்கு, ஒருநாள் — ஒரு நாளானது, எழுநாள் — பலநாட்கள், போல் — போன்று, செல்லும் — நெடிதாகக் கழியும்.*

காதலி நம் பிரிவினைப் பொறுக்க முடியாமல் இறந்துவிட்டால் நம்மைப் பெற்றால் என்ன? அதுவன்றி நம்மைப் பெற்றதனால்தான் என்ன? மேலும் மெய்யுறக் கலந்தால்தான் என்ன? இவை யொன்றினாலும் பயனில்லை.

பெறின் என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின் என்னாம் உள்ளம் உடைந்து [உக்கக்கால்.

10 பெறின்என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின்என்னாம்
உள்ளம் உடைந்துஉக்கக் கால். 1270

உள்ளம் — [காதலியானவள் பிரிவினைத் தாங்காமல்] மனம், உடைந்து — துன்பத்தால் உடைந்து, உக்கக்கால் — இறந்த பிறகு, பெறின் என்னாம் — நம்மைப் பெற்றால்தான் என்ன, பெற்றக்கால் என்னாம் — அன்றிப் பெற்றதனால்தான் என்ன? உறின் என்னாம் — மெய்யுறக் கலந்தால்தான் என்ன? இவையொன்றாலும் பயனில்லை.

## 128. குறிப்பு அறிவுறுத்தல்

[தலைவன், தலைவி, தோழி இவர்கள் ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுத்தல்]

நீ சொல்லாமல் மறைத்தாயானாலும் அதனைக் கடந்து உன்னுடைய மையுண்ட கண்கள் எமக்குச் சொல்லும் செய்தி யொன்று இருக்கின்றது. இனி அதனை நீயே தெளிவாகச் சொல்லுவாயாக.

கரப்பினும் கை இகந்து ஒல்லா நின் உண்கண் உரைக்கல் உறுவது ஒன்று உண்டு.

1 கரப்பினும் கைஇகந்து ஒல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதொன்று உண்டு. 1271

கரப்பினும் — நீ மறைத்து வைத்தாயானாலும், ஒல்லா — அதற்கு உடன்படாதே, கையிகந்து — மறைத்தலைக் கடந்து, நின் — உன்னுடைய, உண்கண் — மைதீட்டப் பெற்ற கண்கள், உரைக்கல் — எமக்குச் சொல்ல, உறுவது — விரும்புவது, ஒன்று உண்டு — ஒரு செய்தி இருக்கின்றது.

என்னுடைய கண்கள் நிறைந்த அழகினையும் மூங்கிலையொத்த தோளினையும் உடைய பேதைக்கு, பெண்களுக்கு இயல்பாக இருக்கும் மடமைக்குணம் அளவு கடந்து இருக்கின்றது.

கண் நிறைந்த காரிகை காம்பு ஏர் தோள் பேதைக்கு பெண் நிறைந்த நீர்மை பெரிது.

2 கண்நிறைந்த காரிகைக் காம்புஏர்தோள் பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது. 1272

கண் — எனது கண்கள், நிறைந்த — நிறையப் பெற்ற, காரிகை — அழகினையும், காம்பு ஏர் — மூங்கிலை ஒத்த, தோள் — தோள்களையும் உடைய, பேதைக்கு — இப்பெண்ணிற்கு, பெண் நிறைந்த — பெண்களுக்கு இயல்பாக இருக்கும், நீர்மை — மடமைக்குணம், பெரிது — மிகுதியாகவே உள்ளது.

கோக்கப்பட்ட பளிங்கு மணிக்குள் கிடந்து வெளியில் புலப்படுகின்ற நூல்போல் இப்பெண்ணின் அழகினுக்குள்ளிருந்து வெளியில் புலப்படுவதொரு குறிப்பு இருக்கின்றது.

மணியில் திகழ் தரு நூல் போல் மடந்தை அணியில் திகழ்வது ஒன்று உண்டு.

3 மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன்று உண்டு. 1273

மணியில் — கோக்கப்பட்ட பளிங்கு மணிகளுக்குள்ளே, திகழ் தரு — விளங்கிக் காணப் படுகின்ற, நூல் போல் — நூலினைப் போல, மடந்தை — இப்பெண்ணினது, அணியில் திகழ்வது — அழகினுக்குள்ளிருந்து புறத்தே புலனாகின்ற, ஒன்று உண்டு — ஒரு குறிப்பு இருக்கின்றது.

மலராத மொட்டுக்குள்ளிருந்து வெளியே புலப்படாத மணத்தினைப்போல இப்பெண் என்னுடன் நகைக்கக் கருதும் முகிழ்ப்பினுள் ஒரு குறிப்பு உண்டு.

முகை மொக்குள் உள்ளது நாற்றம் போல் பேதை நகை மொக்குள் உள்ளது [ஒன்று உண்டு.

4 முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு. 1274

முகை — மலராத அரும்பினது, மொக்குள் — முகிழ்ப்பினுள், உள்ளது — புறத்தில் தெரியாமல் இருக்கின்ற, நாற்றம் போல் — நறுமணத்தினைப் போல, பேதை — இப்பெண், நகை — நகைக்கக் கருதும், மொக்குள் — முகிழ்ப்பினுள், உள்ளது — வெளியில் தோன்றாமல் இருக்கின்ற, ஒன்று உண்டு — ஒரு குறிப்பு இருக்கின்றது.

நெருங்கிய வளையல்களையுடைய இப்பெண்ணின் மனதிற்கொண்டு எனக்கு மறைத்து வைத்திருக்கின்ற குறிப்பு, எனது மிகுதியான துன்பத்தினைத் தீர்க்கின்ற மருந்தொன்றினை யுடையது.

செறி தொடி செய்து இறந்த கள்ளம் உறு துயர் தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து.

5 செறிதொடி செய்துஇறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கும் மருந்தொன்று உடைத்து. 1275

செறிதொடி — நெருங்கிய வளையல்களையுடைய இப்பெண், செய்து — மனதில் ஒன்றனை உட்கொண்டு, இறந்த — மறைத்து வைத்த, கள்ளம் — குறிப்பு, உறு — என்னுடைய மிகுதி யான, துயர் — துயரத்தினை, தீர்க்கும் — நீக்குகின்ற, மருந்து — மருந்தாவது, ஒன்று — ஒன்றினை, உடைத்து — உடையதாகின்றது.

நம் பிரிவினால் உண்டான துன்பத்தினைப் பொறுத்திருந்து பிறகு மகிழும் வண்ணம் கணவர் திரும்பி வந்து கலக்கின்ற கலவி மேலும் அத்துன்பத்தினைப் பொறுத்திருந்து அவரது அன்பில்லாத் தன்மையினை நினைக்கும் தன்மையுடையது.

**பெரிது ஆற்றி பெட்ப கலத்தல் அரிதுஆற்றி அன்பு இன்மை சூழ்வது உடைத்து.**

**6 பெரிதுஆற்றிப் பெட்பக் கலத்தல் அரிதுஆற்றி**
**அன்பின்மை சூழ்வது உடைத்து.** 1276

பெரிது — [பிரிவுத் துன்பத்தினை] மிகவும், ஆற்றி — பொறுத்திருந்து, பெட்ப — நாம் மகிழுமாறு, கலத்தல் — கலக்கின்ற புணர்ச்சி, அரிது ஆற்றி — மேலும் அத்துன்பத்தினைப் பொறுத்திருந்து, அன்பு — தலைவரது அன்பு, இன்மை — இல்லாத் தன்மையினை, சூழ்வது — நினைக்கும் தன்மையினை, உடைத்து — உடையது.

குளிர்ந்த நீர்த் துறையினையுடைய தலைவன் மெய்யாற் கூடியிருந்து மனத்தினால் நம்மைப் பிரிந்தமையினை நம்மைக் காட்டிலும் நம்முடைய வளையல்கள் முன்பாகவே அறிந்து கொண்டன.

**தண்ணம் துறைவன் தணந்தமை நம்மினும் முன்னம் உணர்ந்த வளை.**

**7 தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்**
**முன்னம் உணர்ந்த வளை.** 1277

தண்ணம் — குளிர்ந்த, துறைவன் — நீர்த் துறையினையுடைய தலைவன், தணந்தமை — [உடம்பால் கூடியிருந்து] உள்ளத்தில் பிரிந்ததை, நம்மினும் — நம்மைவிட, முன்னம் — முன்னதாகவே, வளை — நம் வளையல்கள், உணர்ந்த — உணர்ந்து கொண்டன.

எம் காதலர் நேற்றுதான் பிரிந்து போனார். அப்பிரிவினால் யாமும் மேனி பசந்து பலநாட்கள் உடையேம் ஆனோம்.

**நெருநற்று சென்றார் எம் காதலர் யாமும் எழு நாளேம் மேனி பசந்து.**

**8 நெருநற்றுச் சென்றாரெம் காதலர் யாமும்**
**எழுநாளேம் மேனி பசந்து.** 1278

எம் — எம்முடைய, காதலர் — காதலர், நெருநற்று — நேற்றுதான், சென்றார் — பிரிந்து சென்றார், யாமும் — நாமும், மேனி — உடம்பு, பசந்து — பசப்பு நிறம் அடைந்து, எழு நாளேம் — பல நாட்கள் உடையேம் ஆனோம்,

தன் தோள் வளையல்களை நோக்கி, மெல்லிய தோள்களையும் நோக்கி, தனது அடிகளையும் நோக்கி அவ்வாறு அப்போது அவள் செய்தாள். அவள் செய்தது அவ்வளவேயாகும்.

தொடி நோக்கி மென் தோளும் நோக்கி அடிநோக்கி அஃது ஆண்டு அவள் செய்தது.

9 தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதுஆண்டு அவள்செய் தது. 1279

தொடி — தோள் வளையல்களை, நோக்கி — நோக்கி, மென் — மெல்லிய, தோளும் — தோள்களையும், நோக்கி — நோக்கி, அடி — பாதங்களையும், நோக்கி — நோக்கி, ஆண்டு — அந்த இடத்தில், அவள் — அப்பெண், செய்தது — செய்தது, அஃது — [உடன்போக்கு] குறிப்பாக இருந்தது.

தமது காம நோயினைக் கண்ணினாற் சொல்லிக் காதலரிடம் இரந்து நிற்கும் தன்மை, இயல்பாகவே பெண் தன்மையுடைய இப்பெண்ணுக்கு மேலும் ஒரு பெண்மையுடையது என்பர்.

பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப கண்ணினால் காமநோய் சொல்லி இரவு.

10 பெண்ணினால் பெண்மை உடைத்துஎன்ப கண்ணினால்
காமநோய் சொல்லி இரவு. 1280

காமநோய் — தமது காம நோயினை, கண்ணினால் — கண்களினால், சொல்லி — கூறி, இரவு — உடன் போவதற்கு இரந்து நிற்கும் தன்மை, பெண்ணினால் — இயல்பாகிய பெண்மைத் தன்மையுடன், பெண்மை — மேலும் ஒரு பெண் தன்மையினை, உடைத்து — உடையது, என்ப — என்று அறிந்தோர் சொல்லுவர்.

## 129. புணர்ச்சி விதும்பல்

### [இருவரும் புணர்ச்சிக்கண்ணே விரைதல்]

நினைத்த பொழுதே களிப்படைதலும் கண்டவுடனே மகிழ்ச்சியுறுதலும் கள்ளுண்பார்க்கு இல்லை; காமம் உடையார்க்கு உண்டு.

உள்ள களித்தலும் காண மகிழ்தலும் கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு.

1 உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு. 1281

உள்ள — நினைத்த மாத்திரத்தில், களித்தலும் — களிப்பெய்தலும், காண — கண்ட பொழுதே, மகிழ்தலும் — மகிழ்ச்சியடைதலும், கள்ளுக்கு இல் — கள் உண்பவர்களுக்கு இல்லை, காமத்திற்கு உண்டு — காம இன்பம் உடையவர்களுக்கு உண்டு.

மகளிர்க்குக் காமம் பனையளவினைவிட மிகுதியாக உண்டாகிவிடுமானால் அவரால் தம் காதலரோடு தினையளவும் ஊடுதல் செய்யாமை வேண்டப்படுவதாகும்.

தினை துணையும் ஊடாமை வேண்டும் பனை துணையும் காமம் நிறைய வரின்.

**2 தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்**
**காமம் நிறைய வரின். 1282**

காமம் — மகளிர்க்குக் காமமானது, பனைத்துணையும் — பனையளவினும், நிறைய — மிகுதியாக, வரின் — வந்துவிட்டால், தினை — தினையின், துணை — அளவும், ஊடாமை — பிணங்கிக் கொள்ளாமை, வேண்டும் — வேண்டப்படுவதாகும்.

நம்மை விரும்பாது அவமதித்துத் தாம் விரும்பியவற்றையே செய்தாலும் தலைவனை எனது கண்கள் பார்க்காமல் இருக்கமாட்டா.

பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனை காணாது அமையல கண்.

**3 பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்**
**காணாது அமையல கண். 1283**

பேணாது — நம்மை விரும்பாமல் விலக்கி, பெட்பவே — தாம் விரும்பியவற்றையே, செய்யினும் — தலைவர் செய்வாரானாலும், கொண்கனை — தலைவனை, கண் — எனது கண்கள், காணாது அமையல — காணாமல் இருக்க மாட்டா.

தோழீ! காதலரிடம் பிணங்கிக் கொள்வதற்காகச் சென்றேன். காதலரைக் கண்டதும் எனது நெஞ்சம் ஊடலினை மறந்துவிட்டு அவருடன் கூடுவதற்குச் சென்றுவிட்டது.

ஊடற்கண் சென்றேன் மன் தோழி அது மறந்து கூடற்கண் சென்றது என் நெஞ்சு.

**4 ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து**
**கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு. 1284**

தோழி — தோழியே! ஊடற்கண் — காதலரிடம் பிணங்கிக் கொள்ள, சென்றேன் — போனேன், என் — எனது, நெஞ்சு — நெஞ்சம், [காதலரைக் கண்டதும்] அது — அந்த ஊடலினை, மறந்து — மறந்துவிட்டு, கூடற்கண் — அவருடன் கூடுவதற்கு, சென்றது — சென்றுவிட்டது. [மன் — ஒழியிசை]

கண்களுக்கு மையெழுதும்போது அஞ்சனக் கோலின் இயல்பினைக் காண முடியாத கண்ணே போல, கணவனை நேரில் கண்டபோது அவரது தவறுகளைக் காணமாட்டேன்.

எழுதுங்கால் கோல் காணா கண்ணேபோல் கொண்கன் பழி காணேன் கண்ட இடத்து.

**5 எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்**
**பழிகாணேன் கண்ட விடத்து. 1285**

எழுதுங்கால் — கண்களுக்கு மை எழுதுகிறபோது, கோல் — அஞ்சனக்கோலின் தன்மையினை, காணாக் கண்ணேபோல் — காணமுடியாத கண்களைப்போல, கொண்கன் — கணவருடைய, பழி — குற்றங்களை, கண்டவிடத்து — அவரைப் பார்த்தபோது, காணேன் — காண முடியாதவளாகின்றேன்.

காதலரைக் காணுகின்றபோது அவரது தவறுகளைக் காண முடியாதவளாகின்றேன். அவரைக் காணாதபோது தவறுகள் அல்லாமல் பிறவற்றைக் காண்கின்றிலேன்.

காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால் காணேன் தவறு அல்லவை.

**6 காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்**
**காணேன் தவறல் லவை. 1286**

காணுங்கால் — தலைவரை நேரில் பார்க்கும்போது, தவறாய — அவருடைய தவறுகளை, காணேன் — காணமுடியாதவளாகின்றேன், காணாக்கால் — அவரைப் பார்க்காத நேரத்தில், தவறு — [அவர் மீது] தவறு, அல்லவை — அல்லாதவைகளை, காணேன் — காணமுடியாத வளாகின்றேன்.

தம்மை இழுத்துக்கொண்டு போவதை யறிந்தும் தண்ணீரில் பாய்பவர்போலப் பிணங்குவதில் பயனில்லை என்பதை அறிந்திருந்தும் கணவரோடு பிணங்கிப் பெறுவது என்ன?

உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரே போல் பொய்த்தல் அறிந்து என் புலந்து.

**7 உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்**
**பொய்த்தல் அறிந்துஎன் புலந்து. 1287**

உய்த்தல் — இழுத்துக்கொண்டு போவதை, அறிந்து — அறிந்திருந்தும், புனல் — நீரில், பாய்பவரேபோல் — பாய்பவர்களைப்போல, பொய்த்தல் — பிணக்குப் பயனளிக்காது என்பது, அறிந்து — தெரிந்திருந்தும், புலந்துஎன் — புலந்து [ஊடல் செய்து] பெறுவது என்ன?

வஞ்சகா! தன்னை உண்டு களித்தார்க்கு அவமானப்படத்தக்க துன்பத்தினைச் செய்தாலும், அவரால் மேன்மேலும் விரும்பப்படுகின்ற கள்ளினைப்போல எங்கட்கு நினது மார்பு உள்ளது.

இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்கு கள் அற்றே கள்வ நின் மார்பு.

8 இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்அற்றே கள்வநின் மார்பு. 1288

கள்வ — வஞ்சகா! நின் — உன்னுடைய, மார்பு — மார்பு, களித்தார்க்கு — உண்டு களிப்புற்றவர்களுக்கு, இளித்தக்க — இழிவினை உண்டாக்கக் கூடிய, இன்னா — துன்பத்தினை, செயினும் — செய்தாலும், [அவராலே மேன் மேலும் விரும்பப்படுகின்ற] கள் — கள்ளினை, அற்றே — போன்றதாகும்.

காமஇன்பம் மலரைவிட மெல்லியதாக இருக்கும். அவ்வாறு அந்த மென்மைத் தன்மையின் பக்குவத்தினை யறிந்து அதனைப் பெறுபவர் உலகத்தில் சிலரேயாவர்.

மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன் செவ்வி தலைப்படுவார்.

9 மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார். 1289

காமம் — காமஇன்பமானது, மலரினும் மெல்லிது — மலரையும் விட மென்மைத்தன்மையானதாகும், அதன் — அதனுடைய, செவ்வி — நுகரும் இயல்பினை, தலைப்படுவார் — அறிந்து பெறுவோர், சிலர் — உலகத்தில் சிலரேயாவர்.

காதலி முன்னொருமுறை கண்ணினால் மட்டும் ஊடுதல் செய்து தழுவுதலில் என்னைவிட விருப்பங்கொண்டு அந்த ஊடலினையும் மறந்து அப்போதே கூடிவிட்டாள்.

கண்ணில் துனித்தே கலங்கினாள் புல்லுதல் என்னினும் தான் விதுப்புற்று.

10 கண்ணில் துனித்தே கலங்கினள் புல்லுதல்
என்னினும் தான்விதுப்பு உற்று. 1290

கண்ணில் — கண்ணினால் மட்டும், துனித்தே — பிணங்கியவளாகி, புல்லுதல் — புணர்ந்து தழுவுதலிலே, என்னினும் — என்னைவிட, தான் — தான் [அவள்], விதுப்புற்று — விரைந்து விரும்பி, கலங்கினாள் — ஊடலையும் மறந்து அப்போதே கலந்துவிட்டாள்.

## 130. நெஞ்சொடு புலத்தல்

**[புணர்ச்சி விரும்புகின்ற நெஞ்சுடனே இருவரும் புலத்தல் என்பதாகும்]**

நெஞ்சமே! அவருடைய நெஞ்சு நம்மை நினைக்காமல் அவருக்காகவே இருப்பதைக் கண்டும் நீ எமக்காக இருக்காமல் அவரை நினைத்தற்குக் காரணம் யாது?

அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும் எவன் நெஞ்சே நீ எமக்கு ஆகாதது.

**1 அவர்நெஞ்சு அவர்க்குஆதல் கண்டும் எவன்நெஞ்சே**
**நீஎமக்கு ஆகா தது. 1291**

நெஞ்சே — நெஞ்சமே! அவர் — அவருடைய [கணவருடைய], நெஞ்சு — நெஞ்சம், அவர்க்கு— அவருக்காக, ஆதல் — இருப்பதை, கண்டும் — கண்டும், நீ — நீ, எமக்கு — எமக்காக, ஆகாதது — இருக்காமல், [அவரை நினைப்பது] எவன் — என்ன காரணம்?

என் நெஞ்சே! நம்மிடம் அன்புடையவர் ஆகாதவரை உள்ளவாறு அறிந்திருந்தும் நாம் சென்றால் அவர் கோபிக்கமாட்டார் என்று கருதி அவரிடம் செல்லுகின்றாய்! என்னே அறியாமை!

உறாதவர் கண்ட கண்ணும் அவரை செறார் என சேறி என் நெஞ்சு.

**2 உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்**
**செறாஅர்எனச் சேறிஎன் நெஞ்சு. 1292**

என் — என்னுடைய, நெஞ்சு — நெஞ்சமே! உறாஅதவர் — நம்மிடம் அன்பில்லாதவரென்று, கண்ட கண்ணும் — அறிந்திருந்தும், செறாஅர் — சினங்கொள்ள மாட்டார், என — என்று தெரிந்து, அவரை — அவரிடம், சேறி — செல்லலுற்றாய். [உனது அறியாமைதான் என்னே!]

நெஞ்சமே! நீ விரும்பியவாறே அவரிடம் செல்லுவதற்குக் காரணம் கெட்டவர்களுக்கு நட்புற்றவர்கள் உலகத்தில் இல்லை என்கின்ற நினைப்போ?

கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ நெஞ்சே நீ பெட்டாங்கு அவர் பின் [செலல்.

**3 கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ**
**பெட்டாங்கு அவர்பின் செலல். 1293**

நெஞ்சே — நெஞ்சமே! நீ — நீ, பெட்டாங்கு — விரும்பியவாறே, அவர்பின் — அவர் பின்னே, செலல் — போவது ஏனெனில், கெட்டார்க்கு — கெட்டுப் போனவர்களுக்கு, நட்டார் — நட்புற்றவர்கள், இல் — உலகில் இல்லை, என்பதோ — என்ற நினைப்போ?

நெஞ்சமே! நீ அவரைக் கண்டபோது இன்பம் நுகரக் கருதுவதல்லது அவரைக் கண்டதும் புலவியை உண்டாக்கிப் பின் நுகரக் கருதாய்; அப்படிப்பட்ட உன்னுடன் இனி எண்ணுவார் யார்? யான் அது செய்யேன்?

இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார் நெஞ்சே துனி செய்து துவ்வாய் காண் [மற்று.

**4 இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே**
**துனிசெய்து துவ்வாய்காண் மற்று. 1294**

நெஞ்சே — நெஞ்சமே! துனி — காதலருடன் பிணங்குதல், செய்து — செய்து, மற்று — பிறகு, துவ்வாய் — இன்பம் நுகரக் கருதாய், இனி — இனிமேல், அன்ன — அப்படிப்பட்ட, நின்னொடு — உன்னுடனே, சூழ்வார்யார் — சிந்தனைக்கு எண்ணுபவர் யார்?
[காண் — உரையசை]

காதலரைப் பெறாதபோது அவ்வாறு பெறாதிருப்பதற்கு அஞ்சுகின்றது. அவரைப் பெற்றால் பிரிவாரோ என்பதை நினைத்து அஞ்சுகின்றது. ஆதலால் எனது நெஞ்சம் எப்போதும் நீங்காத துன்பத்தினை உடையதாக இருக்கின்றது.

பெறாமை அஞ்சும் பெறின் பிரிவு அஞ்சும் அறா இடும்பைத்து என் நெஞ்சு.

**5 பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்**
**அறாஅ இடும்பைத்துஎன் நெஞ்சு. 1295**

பெறாஅமை — காதலரைப் பெறாதிருப்பதை நினைத்து, அஞ்சும் — அஞ்சி இருக்கும், பெறின் — காதலரைப் பெற்றபோதும், பிரிவு — அவர் பிரிவாரோ என்று நினைத்து, அஞ்சும் — அஞ்சி நிற்கும், என் — எனது, நெஞ்சு — நெஞ்சமானது, அறாது — எப்போதும் நீங்காத, இடும்பைத்து — துன்பத்தினை உடையதாக இருக்கின்றது.

எனது மனமானது இங்கே இருந்துகொண்டு காதலரைப் பிரிந்து அவரது கொடுமைகளைத் தன்னுடன் சேர்ந்து நினைக்கும்போது என்னைத் தின்பது போன்ற துன்பத்தைச் செய்வதாகின்றது.

தனியே இருந்து நினைத்தக்கால் என்னை தினிய இருந்தது என் நெஞ்சு.

**6 தனியே யிருந்து நினைத்தக்கால் என்னைத்**
**தினிய இருந்ததுஎன் நெஞ்சு. 1296**

என் — எனது, நெஞ்சு — நெஞ்சமானது, இருந்தது — இங்கே இருந்து கொண்டிருக்கின்றது, தனியே — காதலரைப் பிரிந்து தனியாக, இருந்து — இருந்து கொண்டிருக்கும் நான், நினைத் தக்கால் — அவர் கொடுமைகளைத் தன்னுடன் நினைக்கும்போது, என்னை — என்னை, தினிய — தின்னுவது போன்று துன்பத்தினைச் செய்கின்றது.

தன்னை மறந்த காதலரைத் தான் மறக்கமுடியாத எனது மாட்சிமையில்லாத மட நெஞ்சுடனே கூடி, என் உயிரினும் சிறந்த நாணத்தினையும் மறந்துவிட்டேன்.

நாணும் மறந்தேன் அவர் மறக்கல்லா என் மாணா மட நெஞ்சில் பட்டு.

7 நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்
மாணா மடநெஞ்சில் பட்டு. 1297

அவர் — அவர் [காதலரை], மறக்கல்லா — மறக்கமாட்டாத, மாணா — மாட்சிமையில்லாத, என் — என்னுடைய, மட — மடமையான, நெஞ்சில்பட்டு — நெஞ்சுடன் கூடி, நாணும் மறந்தேன் — நாணத்தினையும் மறந்து விட்டேன்.

உயிரின்மீது காதலையுடைய எனது நெஞ்சு நம்மை ஏளனம் செய்து சென்றார் என்று நாமும் ஏளனம் செய்வோமாயின், பின் நமக்கே இழிவாகும் என்று எண்ணி அவர் திறத்தினையே நினைத்துக் கொண்டிருக்கின்றது.

எள்ளின் இளிவு ஆம் என்று எண்ணி அவர் திறம் உள்ளும் உயிர் காதல் நெஞ்சு.

8 எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு. 1298

உயிர் — உயிரின்மீது, காதல் — காதல் கொண்ட, நெஞ்சு — எனது நெஞ்சமானது, எள்ளின் — காதலரை நாமும் ஏளனமாக இகழ்ந்தோமானால், இளிவாம் — பிறகு நமக்கே இழிவானதாகும், என்று — என்பதாக, எண்ணி — எண்ணி, அவர் திறம் — அவருடைய பெருமையினையே, உள்ளும் — மனதில் நினைத்துக் கொண்டிருக்கின்றது.

ஒருவருக்குத் துன்பம் வந்தபோது அதனை நீக்குவதற்கு உரிமையான தமது நெஞ்சமே துணையாகாதபோது வேறு துணையாவார் ஒருவரும் இல்லை.

துன்பத்திற்கு யாரே துணை ஆவார் தாம் உடைய நெஞ்சம் துணை அல்வழி.

9 துன்பத்திற்கு யாரே துணையாவார் தாம்உடைய
நெஞ்சம் துணைஅல் வழி. 1299

துன்பத்திற்கு — துன்பம் வந்தபோது, தாம் உடைய — தமக்கு உரிமையான, நெஞ்சம் — நெஞ்சமானது, துணை — துணையாக, அல்வழி — இல்லாதிருந்தால், துணையாவார் துணையாக இருப்பவர், யாரே — வேறு யார் உள்ளார்!

ஒருவருக்குத் துன்பம் வந்துற்றபோது உரித்தாகப் பெற்ற நெஞ்சம் தம்மவராகாதிருந்தால், அயலார் தம்மவராகாதிருத்தலைச் சொல்ல வேண்டுமோ?

தஞ்சம் தமர் அல்லர் ஏதிலார் தாம் உடைய நெஞ்சம் தமர் அல்வழி.

10 தஞ்சம் தமர்அல்லர் ஏதிலார் தாம்உடைய
நெஞ்சம் தமர்அல் வழி. 1300

தாம் உடைய — தமக்கு உரிமையாகக் கொண்டுள்ள, நெஞ்சம் — நெஞ்சமானது, தமர் — தம்மவராக, அல்வழி — இல்லாதபோது, ஏதிலார் — அயலானவர், தமர் — தம்மவர், அல்லர் — அல்லாதவராக இருத்தலை, தஞ்சம் — சொல்ல வேண்டுமோ?

## 131. புலவி

[ஒருவரோடு ஒருவர் பிணங்கிக் கொள்ளுதல்]

புலந்து கொண்டிருந்தால் காதலர் அடையும் வேதனையைச் சிறிது காண முடியும். ஆதலால் நீ விரைந்து சென்று அவரைத் தழுவாமல் புலந்து [பிணங்கிக்] கொண்டிருப்பாயாக.

புல்லாது இரா புலத்தை அவர் உறும் அல்லல் நோய் காண்கம் சிறிது.

1 புல்லாது இராஅப் புலத்தை அவர்உறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது. 1301

அவர் — காதலர், உறும் — அடைகின்ற, அல்லல் — துன்பமான, நோய் — நோயினை, சிறிது — சிறிது நேரம், காண்கம் — நாம் பார்ப்போமாக, [ஆதலால்] புல்லாது — நீ விரைந்து சென்று தழுவாமல், இராஅ — இப்படியே இருக்கும் செயலில் இருந்து கொண்டு, புலத்தை — புலப்பாயாக.

கலவியின்பத்திற்கு புலவியானது உண்ணும் பண்டங்களுக்குச் சுவை தரும் உப்பின் அளவு போன்றதாகும். இனி அதனை அளவின்றிச் சிறிது மிக விடுதல் உப்பு அளவின் மிகுந்து விட்டது போன்றதாகும்.

உப்பு அமைந்தற்றால் புலவி அது சிறிது மிக்கற்றால் நீள விடல்.

2 உப்புஅமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். 1302

புலவி — புலவி என்னும் சிறு பிணக்கு, உப்பு — அளவுடன் போடப்படும் உப்பினைப் போல, அமைந்தற்று — கலவி இன்பத்திற்கு முன்பு இருக்க வேண்டியதாகும், நீளவிடல் — இனி அப்புலவியினை அதிகமாக்கிவிடல், அது — அந்த உப்பின் அளவு, மிக்கற்று — அளவில் சிறிது மிகுந்து விட்டது போன்றதாகும். [ஆல் — அசைநிலை]

தம்மைப் பெறாமல் புலந்துகொண்டிருக்கும் மகளிரை, அப்புலவி நீக்கி ஆடவர் கலவாதிருத்தல் முன்னமேயே துன்புற்று அலந்தாரை மேலும் துன்பத்திற்கு உள்ளாக்கினது போன்றதாகும்.

அலந்தாரை அல்லல் நோய் செய்தற்றால் தம்மை புலந்தாரை புல்லா விடல்.

**3 அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்**
**புலந்தாரைப் புல்லா விடல்.** 1303

தம்மை — காதலரைப் பெறாமல், புலந்தாரை — பிணங்கிக் கொண்டிருக்கும் மகளிரை, புல்லாவிடல் — புலவி நீக்கிப் புணராது விடுதல், அலந்தாரை — முன்னரே துன்பமடைந்து நொந்தவரை, [மேலும்] அல்லல் — அதிகத் துன்பமான, நோய் — நோயினை, செய்தற்று — செய்தது போன்றதாகும். [ஆல் — அசைநிலை]

தம்முடன் ஊடிய மகளிரை ஊடல் நீக்கிக் கூடாதிருத்தல் முன்னமேயே நீரின்றி வாடிய கொடியை அடியிலே அறுத்தது போன்றதாகும்.

ஊடியவரை உணராமை வாடிய வள்ளி முதல் அரிந்தற்று.

**4 ஊடி யவரை உணராமை வாடிய**
**வள்ளி முதல்அரிந் தற்று.** 1304

ஊடியவரை — பிணங்கிக் கொண்ட மகளிரை, உணராமை — பிணக்குத் தீர்த்துப் புணராமல் விடுதல், வாடிய வள்ளி — முன்பே நீர் இல்லாமல் வாடியிருக்கும் கொடியினை, முதல் — அடியில், அரிந்தற்று — அறுத்தது போன்றதாகும்.

நற்குணங்களால் தகுதியுடையவரான தலைவர்க்கு அழகாவது என்னவென்றால், பூப்போன்ற கண்ணினையுடைய மகளிரின் நெஞ்சில் நிகழும் புலவி மிகுதியேயாகும்.

நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை பூ அன்ன கண்ணார் அகத்து.

**5 நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை**
**பூவன்ன கண்ணார் அகத்து.** 1305

நலத்தகை — நற்குணங்களினாலே பொருத்தமான, நல்லவர்க்கு — நல்ல தலைவர்க்கு, ஏஎர் — அழகு என்பது, [யாதென்றால்] பூவன்ன — பூப்போன்ற, கண்ணார் — கண்களையுடைய மகளிரின், அகத்து — நெஞ்சில் நிகழுகின்ற, புலத்தகை — பிணக்கின் மிகுதியல்லவா?

முதிர்ந்த பிணக்காகிய துனியும் இளைய பிணக்காகிய புலவியும் இல்லையானால், காமம் அதிக மாகப் பழுத்துவிட்ட கனியும் இளங்காயும் போன்றதாகும்.

துனியும் புலவியும் இல்லாயின் காமம் கனியும் கருக்காயும் அற்று.

6 துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று. 1306

துனியும் — முதிர்ந்த பிணக்கும், புலவியும் — சிறிதான பிணக்கும், இல்லாயின் — இல்லா விட்டால், காமம் — காம இன்பமானது, கனியும் — முதிர்ந்துபோன கனியும், கருக்காயும் — இளமையான காயும், அற்று — போன்றதாகும்.

புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ என்று எண்ணுவதால் இன்பத்திற்கு இன்றியமையாத ஊடலினும் உண்டாவதொரு துன்பம் இருக்கின்றது.

ஊடலின் உண்டு ஆங்கு ஓர் துன்பம் புணர்வது நீடுவது அன்றுகொல் என்று.

7 ஊடலின் உண்டுஆங்குஓர் துன்பம் புணர்வது
நீடுவது அன்றுகொல் என்று. 1307

புணர்வது — புணர்ச்சியானது, நீடுவது [கொல்] — கால அளவு நீட்டிக்குமோ, அன்றுகொல் — அல்லாமல் நீட்டியாமல்போமோ, என்று — என்ற நினைவு உண்டாவதால், ஊடலின் — ஊடல் செய்வதிலும், ஓர் — ஒரு, துன்பம் — துன்பம், உண்டு — நிகழ்கின்றது.

நம்பொருட்டு வேதனையுற்றார் என்று அந்த வேதனையினை அறியும் அன்பில்லாத காதலரைப் பெறாதபோது, ஒருவர் நொந்து கொள்ளுவதால் பயன் என்ன ?

நோதல் எவன் மற்று நொந்தார் என்று அஃது அறியும் காதலர் இல்லா வழி.

8 நோதல் எவன்மற்று நொந்தார்என்று அஃதுஅறியும்
காதலர் இல்லா வழி. 1308

நொந்தார் — தலைவி நம்மால் நொந்தார், என்று — என்று கண்டு, அஃது — அந்த நோயினை, அறியும் — அறிந்துணரும், காதலர் — காதல் தலைவரை, இல்லா வழி — நாம் பெற்றிராதபோது, நோதல் — நொந்து கொள்ளுவதால், மற்று எவன் — என்ன பயன் உண்டாகும்?

உயிருக்கு இன்றியமையாத நீரும் நிழலினிடத்தே இனிதாகும். வெயிலில் இனிதாகாது. அதுபோலப் புணர்ச்சிக்கு இன்றியமையாத புலவியும் அன்புடையவரிடத்தில்தான் இனிதாகும்.

நீரும் நிழலது இனிதே புலவியும் வீழுநர் கண்ணே இனிது.

9 நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது. 1309

நீரும் — நீரும், நிழலது — நிழலில் இருக்கும்போது, இனிது — இனிமையானதாக இருக்கும், [அது போன்று] புலவியும் — புலவியென்னும் பிணக்கும், வீழுநர்கண்ணே — அன்பு நிறைந்து விரும்பும் காதலரிடத்தே, இனிது — இனிமையானதாகும்.

தான் ஊடலினால் மெலிந்து நிற்கவும் விட்டிருக்கவல்லவரான காதலருடன் கூடக்கடவேம் என்று எனது நெஞ்சம் முயலுதற்குக் காரணம் தனது ஆசையேயாகும்.

ஊடல் உணங்க விடுவாரோடு என் நெஞ்சம் கூடுவேம் என்பது அவா.

10 ஊடல் உணங்க விடுவாரோடு என்னெஞ்சம்
கூடுவேம் என்பது அவா. 1310

ஊடல் — பிணங்குதல் செய்து, உணங்க — நான் வருந்தி மெலிந்து இருக்கவும், விடுவாரோடு— அதனை நீக்காமல் விட்டிருக்கும் காதலருடன், என் — என்னுடைய, நெஞ்சம் — நெஞ்சம், கூடுவேம் — கூடுவோம், என்பது — என்று நினைப்பதற்குக் காரணம், அவா — தான் கொண்டுள்ள ஆசையேயாகும்.

## 132. புலவி நுணுக்கம்

### [பஞ்சணையில் வீற்றிருந்து பேசும் நுணுக்கம்]

பரத்தமையுடையவனே! பெண் தன்மையுடையார் அனைவரும் உன்னைக் கண்ணால் பொதுவாக உண்பர். ஆதலால் உன்னுடைய மார்பினைப் பொருந்தேன்.

பெண் இயலார் எல்லாரும் கண்ணின் பொது உண்பர் நண்ணேன் பரத்த நின் மார்பு.

1 பெண்இயலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. 1311

பரத்த — பரத்தையரிடம் செல்லுபவனே! பெண் — பெண்மை, இயலார் — தன்மையுடைய, எல்லாரும் — எல்லோரும், கண்ணின் — தமது கண்களினால், பொது — பொதுவாக, உண்பர் — உன்னைச் சுவைப்பார்கள், [ஆகையினால்] நின் — உன்னுடைய, மார்பு — மார்பினை, நண்ணேன் — நான் விரும்பிப் பொருந்தமாட்டேன்.

யாம் காதலரோடு ஊடுதல் செய்து உரையாடிக் கொண்டிருந்தபோது அது நீக்கித் தம்மை நீடுவாழ்க வென்று கூறுவோம் எனக் கருதி காதலர் தும்மினார்.

ஊடி இருந்தோமா தும்மினார் யாம் தம்மை நீடு வாழ்க என்பாக்கு அறிந்து.

**2 ஊடி இருந்தோமாத் தும்மினார் யாம்தம்மை**
**நீடுவாழ்க என்பாக்கு அறிந்து. 1312**

ஊடி — காதலரோடு புலந்து, இருந்தோமா — பேசாதிருந்தோம், [அப்போது அவர்] யாம் தம்மை — யாம் காதலரை, நீடு வாழ்க — பல்லாண்டு வாழ்க, என்பாக்கு அறிந்து — என்று சொல்லுவோம் என்பதாகக் கருதி, தும்மினார் — தும்மினார்.

வளைவாகிய பூமாலையைச் சூடிக் கொண்டிருந்தேனாயினும் உம்மால் காதலிக்கப்பட்டாள் ஒருத்திக்குக் காட்டவேண்டியே சூடினீர் என்று தலைவி கோபித்துக் கொள்ளுவாள்.

கோட்டு பூ சூடினும் காயும் ஒருத்தியை காட்டிய சூடினீர் என்று.

**3 கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்**
**காட்டிய சூடினீர் என்று. 1313**

கோட்டு — வளைவான, பூ — பூமாலையினை, சூடினும் — சூடியிருந்தேனானாலும், ஒருத்தியை — வேறு காதலிக்கு, காட்டிய — காட்டுவதற்கு விரும்பியே, சூடினீர் — சூடிக் கொண்டீர், என்று — என்று சொல்லி, காயும் — தலைவி கோபித்துக் கொள்ளுவாள்.

காமம் அனுபவித்தற்குரிய இருவருள்ளும் 'யாம் மிக்க காதலுடையோம்' எனக் கருதி, 'யாரினும் காதலம்' என்று கூறினேன். அப்படி நினைக்காமல், 'என்னால் காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நின்கண் அதிகக் காதலுடையேம்' என்று கூறினேன் என்பதாகக் கருதி அவள் ஊடிக் கொண்டாள்.

யாரினும் காதலம் என்றேனா ஊடினாள் யாரினும் யாரினும் என்று.

**4 யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்**
**யாரினும் யாரினும் என்று. 1314**

யாரினும் — காதலர்களாக இருப்பவர்கள் எல்லோருடைய காதலையும்விட, காதலம் — யாம் சிறந்த காதலுடையவர்களாவோம், என்றேனா — என்று யான் கூறினேன், யாரினும் யாரினும் — உம்மால் காதலிக்கப்படும் மகளிர் பலருள்ளும், [உன்னிடம் மிக்க காதலுடையேன்] என்று — என்று கூறியதாகக் கருதி, ஊடினாள் — ஊடிக் கொண்டாள்.

காதல் மிகுதியால் இப்பிறப்பில் பிரியேன் என்று கூறினேன். அதனால் மறுபிறப்பில் பிரிவேன் என்று குறித்ததாகக் கருதி, தன்னுடைய கண்களில் நிறைந்த நீரினைக் கொண்டாள்.

இம்மை பிறப்பில் பிரியலம் என்றேனா கண் நிறை நீர் கொண்டனள்.

5 இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்நிறை நீர்கொண்ட னள். 1315

இம்மை — இம்மையாகிய, பிறப்பில் — இப்பிறப்பில், பிரியலம் — நாம் பிரியோம், என்றேனா — என்று சொன்னேன், [அப்படியானால் மறுபிறப்பில் பிரிந்து விடுவீர்களோ. என்று கருதி] கண் — கண்களில், நிறை — நிறைந்த, நீர் — நீரினை, கொண்டனள் — கொண்டவளானாள்.

பிரிந்திருந்தபோது உன்னையே இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருந்தேன் என்னும் கருத்தால் 'உள்ளினேன்' என்று கூறினேன். அதற்கு, 'மறந்திருந்துதானே நினைத்தீர்' என்று கூறித் தழுவுவதற்கு இருந்தவள் பிணங்கிக் கொண்டாள்.

உள்ளினேன் என்றேன் மற்று என் மறந்தீர் என்று என்னை புல்லாள் [புலத்தக்கனள்.

6 உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றுஎன்னைப்
புல்லாள் புலத்தக் கனள். 1316

உள்ளினேன் — உன்னையே நினைத்தேன், என்றேன் — என்று கூறினேன், மற்று என் மறந்தீர் — [மறந்தால்தானே நினைக்கமுடியும்] ஏன் மறந்திருந்தீர், என்று — என்று கூறி, என்னைப் புல்லாள் — என்னைத் தழுவாதவளாகி, புலத்தக்கனள் — பிணங்கிக்கொண்டாள்.

கூடி இருந்தவள் நான் தும்மினபோது இயல்பாக வாழ்த்தினாள். வாழ்த்திய வுடனே 'உம்மை நினைத்து வருந்துகின்ற பெண்களுள் யாவர் நினைத்தலால் தும்மினீர்' என்று புலந்து அழுதாள்.

வழுத்தினாள் தும்மினேனாக அழித்து அழுதாள் யார் உள்ளி தும்மினீர் என்று.

7 வழுத்தினாள் தும்மினே னாக அழித்துஅழுதாள்
யார்உள்ளித் தும்மினீர் என்று. 1317

தும்மினேனாக — எனக்குத் தும்மல் வந்த போது, வழுத்தினாள் — எப்போதும் போல வாழ்த்தினாள், அழித்து — [உடனே வாழ்த்தியதை] நீக்கி, யார் — எந்தக் காதலி, உள்ளி — நினைத்ததால், தும்மினீர் — தும்மினீர், என்று — என்று கூறி, அழுதாள் — பிணங்கிக் கொண்டு அழுதாள்.

எனக்குத் தும்மல் வந்தபோது அதனை யான் அடக்கினேன். அவள், 'உன்னுடைய காதலியர் உம்மை நினைப்பதை யான் அறியாதபடி மறைக்கின்றீரோ' என்று சொல்லிப் புலந்து அழுதாள்.

தும்மு செறுப்ப அழுதாள் நுமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று.

8 தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்திரோ என்று. 1318

தும்மு — எனக்குத் தும்மல் வந்த போது, செறுப்ப — யான் அடக்க, நுமர் — உம்மைச் சேர்ந்த பிற பெண்கள், உள்ளல் — உங்களை நினைப்பதை, எம்மை — எமக்குத் தெரியாதிருக்க வேண்டுமென்று, மறைத்திரோ என்று — மறைத்து விட்டீரோ என்று கூறி, அழுதாள் — புலந்து அழுதாள்.

இவ்வாறு ஊடுதல் செய்கின்றாளே என்று யான் பணிந்து என்னை உணர்த்தினேன். அப்போதும், பிற பெண்கள் ஊடுதல் செய்யும் போதும் இப்படித்தான் பணிதல் தன்மையுடையவரோ என்று சொல்லிக் கோபித்துக்கொண்டாள்.

தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்கு நீர் இந்நீரர் ஆகுதிர் என்று.

9 தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று. 1319

தன்னை — புலந்து கொண்டிருக்கும் காதலியை, உணர்த்தினும் — பணிந்து நான் புலத்தலைத் தீர்க்கும்போதும், பிறர்க்கு — மற்ற பெண்களுக்கும், நீர் — நீவிர், இந்நீரர் — இவ்வாறு பணியும் தன்மை, ஆகுதிர் — உடையவர் ஆவீரோ, என்று — என்று சொல்லி, காயும் — சினங்கொள்ளுவாள்.

என் சொற்களுக்கும் செயல்களுக்கும் அவள் கோபிப்பதால் நான் பேசாமல், அவளுடைய உறுப்புக்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன். என்னுடைய உறுப்புக்களை வேறு பெண்களின் உறுப்புக்களுடன் ஒப்பிட்டு நோக்கினீர் என்று கூறிக் கோபித்துக் கொண்டாள்.

நினைத்து இருந்து நோக்கினும் காயும் அனைத்தும் நீர் யார் உள்ளி நோக்கினீர் என்று.

10 நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யார்உள்ளி நோக்கினீர் என்று. 1320

நினைத்து — அவளையே பார்த்து நினைத்துக்கொண்டு, இருந்து நோக்கினும் — பேசாமல் இருந்து அவளையே பார்த்திருந்தாலும், அனைத்து — என்னுடைய அவயவங்களெல்லாம், நீர் — நீவிர், யார் — வேறு எந்தப் பெண்ணின் அவயவங்களுடன், உள்ளி — ஒப்பிட்டு நினைத்து, நோக்கினீர் — பார்த்தீர், என்று — என்று சொல்லி, காயும் — அப்போதும் கோபித்துக் கொள்ளுவாள்.

## 133. ஊடல் உவகை

**[ஊடலினை இருவரும் உவந்து பேசுதல்]**

காதலரிடத்தில் தவறு ஒன்றும் இல்லையென்றாலும் அவர் நம்மீது பேரன்பினை அளிக்கும் தன்மை அவருடன் பிணக்கினை உண்டாக்கிக் கொள்ள வல்லமையுடையதாகின்றது.

இல்லை தவறு அவர்க்கு ஆயினும் ஊடுதல் வல்லது அவர் அளிக்குமாறு.

**1 இல்லை தவறுஅவர்க்கு ஆயினும் ஊடுதல்**
**வல்லது அவர்அளிக்கு மாறு. 1321**

அவர்க்கு — காதலரிடத்தில், தவறு — குற்றங்கள், இல்லை — இல்லை, ஆயினும் — ஆனாலும், அவர் — காதலர், அளிக்குமாறு — நமக்குப் பேரன்பினை அளிக்கும் தன்மை, ஊடுதல் — அவருடன் ஊடலினை உண்டாக்கிக் கொள்ள, வல்லது — வல்லமையுடைய தாகின்றது.

ஊடல் காரணமாகத் தம்மிடம் தோன்றுகின்ற சிறிய பிணக்கினால் காதலர் செய்யும் நல்லன்பு வாடுமாயினும் அது பெருமையினையே பெறுவதாகும்.

ஊடலின் தோன்றும் சிறு துனி நல்லளி வாடினும் பாடு பெறும்.

**2 ஊடலின் தோன்றும் சிறுதுனி நல்லளி**
**வாடினும் பாடு பெறும். 1322**

ஊடலின் — ஊடுதல் என்னும் பிணக்குச் செய்வதில், தோன்றும் — தோன்றுவதான, சிறு — சிறிய, துனி — துன்பத்தினால், நல்லளி — தலைவர் காட்டுகின்ற பேரன்பு, வாடினும் — வாட்டமடையுமேயானாலும், பாடுபெறும் — பெருமையினைப் பெறுவதாகும்.

நிலத்துடன் நீர் கலந்ததைப் போன்ற ஒற்றுமையுடைய காதலரிடத்தில் புலந்து கொள்ளுவதைப் போல நமக்கு இன்பம் தருவதொரு புத்தேள் நாடு உண்டோ?

புலத்தலின் புத்தேள் நாடு உண்டோ நிலத்தொடு நீர் இயைந்து அன்னார் அகத்து.

**3 புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு**
**நீர்இயைந்து அன்னார் அகத்து. 1323**

நிலத்தொடு — நிலத்து மண்ணுடன், நீர் — தண்ணீரானது, இயைந்து — கலந்துவிட்டது, அன்னார் — போன்ற, அகத்து — ஒற்றுமையுடைய உள்ளங்கொண்ட காதலரிடத்தில், புலத்தலின் — புலப்பதைப்போல, [இன்பம் தருகின்ற] புத்தேள் நாடு — புத்தேளிர் நாடு, உண்டோ — இருக்கின்றதோ?

என் உள்ளத்தினைக் கெடுக்கும் படைக்கலம், காதலரைத் தழுவிக்கொண்டு பின்னர் விடாமைக்குக் காரணமான அப்புலவியின்கண் உண்டாவதாகும்.

புல்லி விடா புலவியுள் தோன்றும் என் உள்ளம் உடைக்கும் படை.

4 புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்என்
உள்ளம் உடைக்கும் படை. 1324

என் — எனது, உள்ளம் — உள்ளத்தினை, உடைக்கும் — கெடுக்கின்ற, படை — படைக்கலம், புல்லி — காதலரைத் தழுவிக் கொண்டு, விடாஅ — விடாதிருப்பதற்குக் காரணமான, புலவியுள் — புலவியினிடத்தே, தோன்றும் — உண்டாவதாகும்.

ஆடவரிடத்தில் தவறு இல்லையென்றாலும் இருப்பதுபோல ஊடுதல் செய்கின்ற [தாம் விரும்பிய], மகளிரது மெல்லிய தோள்களைக் கூடப்பெறாதபோது காதலர்க்கு அப்படிப் பட்டதோர் இன்பம் தரும் தன்மையுடையதாம்.

தவறு இலர் ஆயினும் தாம் வீழ்வார் மென்தோள் அகறலின் ஆங்கு ஒன்று உடைத்து.

5 தவறுஇலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்தோள்
அகறலின் ஆங்கொன்று உடைத்து. 1325

தவறு — காதலர் தவறு [குற்றம்], இலர் ஆயினும் — இல்லாதவரானாலும், [இருப்பதுபோல் பிணங்கி] தாம் — தம்மால், வீழ்வார் — விரும்பப்படும் பெண்களது, மென் — மெல்லிய, தோள் — தோள்களை, அகறலின் — சேரப்பெறாதபோது, ஆங்கு — [அது] அவர்க்கு அத்தன்மையான, ஒன்று — ஓர் இன்பம், உடைத்து — தருவதாக உடையது.

உண்ணுகின்றபோது உண்டாகின்ற இன்பத்தினைவிட உண்டது சீரணிக்கின்றதால் உண்டாகும் இன்பம் சிறந்ததாகும். அதுபோலக் காமத்திற்குப் புணர்தலைவிட ஊடலின்பம் சிறந்ததாகும்.

உணலினும் உண்டது அறல் இனிது காமம் புணர்தலின் ஊடல் இனிது.

6 உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது. 1326

உணலினும் — உண்ணும்பொழுதைவிட, உண்டது — முன்னர் உண்ட உணவு, அறல் இனிது — செரித்தல் இன்பம் தருவதாகும், [அதுபோல] காமம் — காமஇன்பத்திற்கு, புணர்தலின் — புணர்ச்சியில் உள்ளதைவிட, ஊடல் இனிது — ஊடல் நிகழ்தல் இன்பம் தருவதாகும்.

காமம் நுகர்வதற்குரிய இருவருள் ஊடலின்கண்ணே தோற்றவர் வென்றவராவார். அது அப்போது அறியப்படாததே யாயினும், பின்னர் புணர்ச்சியின்போது அவரால் அறியப் படும்.

ஊடலில் தோற்றவர் வென்றார் அது மன்னும் கூடலில் காணப்படும்.

**7 ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்**
**கூடலில் காணப் படும். 1327**

ஊடலில் — ஊடல் நிகழ்ச்சியில், தோற்றவர் — தோல்வியடைந்தவர், வென்றார் — கூடலில் வென்றவராவார், அது — அந்த வெற்றி, [அப்போது அறியப்படாததாக இருந்தாலும்] கூடலில் — புணர்ச்சியான நிகழ்ச்சியில், காணப்படும் — அவரால் அறியப்படும்.

இப்பெண்ணின் நுதல் வெயர்க்கும் வகையில் புணர்ச்சியின்கண்ணே உளதாகிய இனிமையை இன்னும் ஒருமுறை இவள் ஊடி யாம் பெறுவோமோ?

ஊடி பெறுகுவம் கொல்லோ நுதல் வெயர்ப்ப கூடலில் தோன்றிய உப்பு.

**8 ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்**
**கூடலில் தோன்றிய உப்பு. 1328**

நுதல் — இப்பெண்ணின் நெற்றி, வெயர்ப்ப — வெயர்க்கும் நிலையில், கூடலில் — கூடிக் கலத்தலில், தோன்றிய — உண்டான, உப்பு — இன்பத்தினை, ஊடி — [மீண்டும் இவள்] ஊடுதல் செய்து, பெறுகுவம் கொல்லோ — யாம் பெறுகின்ற வாய்ப்பு கிடைக்குமோ?

ஒளி பொருந்திய அணிகலன்களைக் கொண்ட இப்பெண் எம்முடன் ஊடுதல் செய்வாளாக; அவ்வாறு இவள் ஊடிக் கொள்ளவும் யான் வேண்டி நிற்பதற்கும் காலம் பெறும் வகையில் இரவு நீட்டித்தல் வேண்டும்.

ஊடுக மன் ஓ ஒளி இழை யாம் இரப்ப நீடுக மன் ஓ இரா.

**9 ஊடுக மன்னோ ஒளிஇழை யாம்இரப்ப**
**நீடுக மன்னோ இரா. 1329**

ஒளி — ஒளி தருகின்ற, இழை — அணிகலன்களையுடைய இவள், ஊடுகமன் — எம்முடன் ஊடுதல் செய்து கொண்டிருப்பாளாக, [அப்பிணக்கினை நீக்குவதற்காக] யாம் இரப்ப — யாம் வேண்டிக் கொண்டிருக்கும் வரையில், இரா — இந்த இரவுப் பொழுது, நீடுகமன் — நீண்டு கொண்டிருப்பதாகுக. [ஓகாரங்கள் — அசைநிலை]

காம நுகர்ச்சிக்குத் தமக்குள் ஊடல் செய்வது இன்பமாகும்; அந்த ஊடலுக்கு இன்பமாவது காதலர் சேர்ந்து தழுவிக் கொள்ளுதலாகும்.

ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம் கூடி முயங்க பெறின்.

**10 ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்குஇன்பம்**
**கூடி முயங்கப் பெறின்.** 1330

காமத்திற்கு — காமமாகிய இன்ப நுகர்ச்சிக்கு, இன்பம் — இன்பமாக இருப்பது, ஊடுதல் — ஊடலாகும், கூடி — [ஊடலினை அளவுடன் நீக்கி] இருவரும் சேர்ந்து, முயங்கப் பெறின் — தழுவிக் கொள்ளுதல் கூடுமானால், அதற்கு — அந்த ஊடலுக்கு, இன்பம் — அதுவே இன்பம் தருவதாகும்.

**1 அறத்துப்பால் 1 பாயிர இயல்**

## 1 கடவுள் வாழ்த்து

**1 அகர முதல எழுத்தெல்லாம்...**

அகரம் என்பது அ என்னும் ஒலி எழுத்தினைக் குறிப்பதாகும். அது எழுதப்படுகின்ற வரிஎழுத்தினைக் குறிப்பதாகாது. வாயினைத் திறந்த உடனேயே அ என்னும் ஒலி (எழுத்து) உண்டாகிறது. இது இயல்பாகவே உண்டாகிறது. இதற்கென்று முயற்சி தேவையில்லை. இந்த எழுத்து நாத மாத்திரையால் பிறப்பதாகும். உலகில் வழங்கும் எந்த எழுத்தினைக் கூற வேண்டும் என்றாலும் முதலில் வாயைத் திறந்தாக வேண்டும். திறந்த உடனேயே அ என்னும் ஒலியெழுத்து உண்டாகிறது.

எனவே, அ முதன்மையான எழுத்தாயிற்று; தலைமையானதாயிற்று. அதுபோல இறைவனாகிய ஆதி பகவனுக்குத் தலைமை - அதாவது முதன்மை கூறப்பட்டது. ஆதி பகவன் என்ற சொல் பொதுவான ஒரு பெயராகும். எந்தக் குறிப்பிட்ட காரணத்தையும் கொண்டதன்று; முதன்மையும், பொதுத் தன்மையும், நிறைந்த இயற்கை உணர்வினனாக இறைவனைக் குறிப்பிட்டார் திருவள்ளுவர். இவர் அருளியது பொது மறையன்றோ!

இந்த உலகம் ஒருவனை முதன்மையாக உடையது என்ற முறையில் குறிப்பிட்டுக் கூறிய தன்மை சிந்திக்கத் தக்கதாகும். 'ஆதி பகவன் உலகத்தைப் படைத்தான்' என்று கூறப்படாத முறை உய்த்துணர வேண்டியதாகும். உலகம் ஆதி பகவனாகிய முதலை உடையது என்றே கூறினார்.

ஆதிபகவன் முதற்றே என்று உலகின்மேல் வைத்துக் கூறினார். முதற்றே — ஏகாரம் உறுதிப்பாட்டினைக் குறித்துக் காட்டிற்று. உலகில் வழங்கி வரும் மொழிகளில் அடங்கியுள்ள எழுத்துக்கள் அனைத்தையும் குறிக்க வேண்டியே எழுத்தெல்லாம்

என்றார். எந்த ஓர் எழுத்தையும் சொல்வதற்கு முன்பாக வாயினைத் திறக்க வேண்டி இருப்பதாலும், திறந்த உடனேயே 'அ' என்ற ஒலி முதன்மையாகவும் இயல்பாகவும் தோன்றிவிடுவதாலும், எல்லா எழுத்துக்களுக்கும் அடிப்படையாக இருப்பதாலும், 'அகர முதல எழுத்தெல்லாம்' என்று கூறினார். இந்த முதற் குறட்பா, 'அ' என்ற எழுத்தில் தொடங்கப் பெற்றிருப்பதும், இறுதியான, 1330—ஆவது குறட்பா 'ன்' என்ற எழுத்தில் முடிந்திருப்பதும், உலகப் பொது மறையைத் தந்த தமிழ் மொழியின் சிறப்பை உணர்த்திற்று என்றும் கொள்ளலாம்.

முதற் குறட்பா உயிரெழுத்தில் தொடங்கப் பெற்றிருப்பதும், தொடர்ந்து வருகின்ற மூன்று குறட்பாக்களும் முறையே வல்லினம், மெல்லினம், இடையினம் ஆகிய இன எழுத்துக்களில் தொடங்கப் பெற்றிருப்பதும் சிந்தனைக்குரியதாகும்.

உண்மையில் மக்களாகப் பிறந்தவர்கள் மட்டுமன்றி உயிரினங்கள் அனைத்துமே ஒலிப்பதற்கு முதலில் வாயைத் திறந்தாக வேண்டும். வாய் திறந்து பேசப்படும் எழுத்துக்கள் அனைத்திலும் 'அகரம்' முதலாக இருப்பதாகும். அகரம் இல்லாவிட்டால் ஒலியே பிறக்காது. பிற ஒலிகள் பிறப்பதற்கும் அகரம் உடனின்று ஒலிக்கும்.

'அ' என்பது எல்லா எழுத்துக்களுக்கும் மூலமாயும் இன்றியமையாத் துணையாயும் இருப்பதை எடுத்துக்காட்டி இறைவனை 'ஆதி பகவன்' என்று கூறினார். "இந்த உலகம் ஒருவனை முதலாக உடையது" என்று உலகின்மேல் வைத்துக் கூறிய முறை சிந்திக்கத் தக்கதாகும். அகரம் பிற ஒலிகளுடன் இணைந்து ஒலிக்குமேயல்லாமல், அது பிற ஒலிகளாக மாறுவதில்லை. இதில் இறைவன் இலக்கணம் உணர்த்தப்பட்டது.

முதல் குறட்பாவிலேயே 'உலகு' என்ற சொல்லும் காணப்படுகிறது.

'அ'கரத்தைப் போலவே இறைவன் தனக்குத்தானே முதல்வன் ஆவதன்றித் தனக்கு வேறொரு முதன்மை வேண்டுவதில்லை என்பதனை உணர்த்த வேண்டியே, 'பகவன் முதற்றே உலகு' என்று கூறாமல், 'ஆதி பகவன்' என்று குறிப்பிட்டார்.

'இறை', 'இறைவன்' என்ற சொற்கள் நாட்டுத் தலைவனான — மன்னனைக் குறிப்பதாலும், அவ்வாறே பல குறட்பாக்களில் காணப்படுவதாலும், 'இறை மாட்சி' என்ற பெயரில் அதிகாரமொன்று இருப்பதாலும், இந்த அதிகாரம் 'கடவுள் வாழ்த்து' என்ற பெயரில் வைக்கப்பட்டது.

குறட்பாக்களில் காணப்படும் பெயர்களே அதிகாரங்களின் பெயர்களாக அமைக்கப் பட்டுள்ளன என்றாலும், சில அதிகாரங்களின் பெயர்கள் அவ்வாறு அமைக்கப்படவில்லை.

'முதல் இலார்க்கு ஊதியம் இல்லை' (449), 'முதல் இழக்கும் செய்வினை' (463), 'வளி முதலா எண்ணிய மூன்று' (941), 'நோய் முதல் நாடி' (948), 'வள்ளி முதல் அரிந்தற்று' (1304) என்பன போன்ற குறட்பாக்களில் காணப்படும் 'முதல்' என்ற சொல்லின் பரந்த பொருளினைச் சிந்தித்து ஒப்பிட்டுப் பார்த்தல் நன்மை பயக்கும்.

**2 கற்றதனால் ஆய பயன்...**

தூய அறிவினன், மெய்யுணர்வினன் என்பதை, 'வால் அறிவன்' என்பது விளக்கிற்று. தூய அறிவினனையே வணங்க வேண்டும் என்பதை வலியுறுத்தவே 'கற்றதனால் ஆய பயன்' என்ற தொடர் அமைக்கப்பட்டது. கல்லாதவர்கள் அதனை யறியமாட்டார்கள் என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது. விளங்கிய அறிவினன் என்பதும் அதுவேயாகும். 'அறிவு' உருவானவனே இறைவன் என்று உருவகப்படுத்தப்பட்டதால் 'தாள்' என்று கூறப்பட்டது. காம உணர்ச்சியினைக் 'காமன்' என்று ஆசிரியர் குறிப்பிடுவதும், உயிரைப் பிரிப்பதனைக் 'கூற்றுவன்' என்று குறிப்பதும், நிலத்தினை 'நிலமடந்தை' என்று கூறுவதும், 'நாண் என்னும் நல்லாள்' என்று குறிப்பதும், இன்னும் இவைபோன்ற பிற இடங்களையும் கண்டுணர்தல் வேண்டும். உருவகப்படுத்திக் காட்டுதல் மரபாகும்.

முதற் குறட்பாவில் 'அ' என்ற எழுத்து குறிக்கப்பட்டிருப்பதும், இக்குறட்பாவில் கல்வி, அறிவு என்பவை சுட்டிக் காட்டப்பட்டிருப்பதும் உய்த்துணரப்பட வேண்டியவையாகும். வினாக்கள் எழுப்பி விடை கூறும் முறையில் அமைக்கப்பட்டிருக்கும் குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். முதற் குறட்பாவில் அவனது தன்மை எடுத்துக்காட்டப்பட்டது. 'அறிவன்' என்றதனால் 'நற்றாள்' என்றும் கூறினார்.

'கல்வி', 'அறிவுடைமை' முதலிய அதிகாரங்களை இக்குறட்பா நினைவு படுத்துகின்றது. 'கல்லாமை', 'புல்லறிவாண்மை' என்ற அதிகாரங்களையும் நினைவு கூர்தல் நல்லது.

முதற்குறட்பாவில் உண்மை (தத்துவம்) கூறப்பட்டது. இக்குறட்பாவில் இறைவன் தன்மையும் பிறவும் எடுத்துக்காட்டப்பட்டன. இறைவனைத் தூய அறிவினன் என்றார். 'எண் குணத்தான்' என்றும் கூறினார். இறைக்குணம் உருவகப்படுத்தப்பட்டது.

**3 மலர்மிசை ஏகினான் மாணடி...**

இறைவன் இருக்கும் இடம் தூய்மையான மனம் என்பது உணர்த்தப்பட்டது. 'மனத்துக்கண் மாசு இலன்' (34) என்ற குறட்பாவினை நினைவு கூர்தல் வேண்டும்.

தூய மனத்தில் இறைவன் இருப்பான் என்பதை உணர்த்தவே 'ஏகினான்' என்று கூறினார். இறைவன் இருக்கும் இடம் 'நெஞ்சம்' (மனம், உள்ளம்) என்பது குறிக்கப்பட்டது. அன்பால் நினைப்பவரது உள்ளத்தில் இருப்பான். நிலம் என்று பொதுப்படக் கூறியதால் இவ்வுலகின்கண்ணும் பேரின்ப உலகின்கண்ணும் என்பது உணர்த்தப்பட்டது. முந்திய குறட்பாவில், 'நற்றாள்' என்றார். இக்குறட்பாவில் 'மாணடி' என்றார்; இறைவன் 'மலர்மிசை' இருப்பவனாவான்; நாம் 'நிலமிசை' வாழ்பவர்களாவோம்; 'மலர்' மென்மைத் தன்மையினையும் குறித்ததாகும்.

**4 வேண்டுதல் வேண்டாமை இலான்...**

'கடவுள் வாழ்த்து' என்ற இந்த அதிகாரத்தைப் படிக்கும்போது, தவம், நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் முதலிய அதிகாரங்களில் காணப்படும் குறட்பாக்களையும் ஒப்பிட்டுப் பார்த்தல் நல்லது.

'பற்றுக பற்றற்றான் பற்றினை' (350) என்பது சிந்தனைக்குரியது. பிறவும் காண்க. இக்குறட்பாவில் காணப்படும் 'இடும்பை' என்ற சொல் பெரிதும் பயிலப்படுவது 'இடுக்கண் அழியாமை' என்ற அதிகாரத்தில்தான் என அறிக.

இறைவனின் தன்மை இக்குறட்பாவில் மேலும் விளக்கப்பட்டது. துன்பத்திற்குக் காரணம் விரும்புதலும் வெறுத்தலுமேயாகும். அவ்விரண்டும் இல்லாத இறைவனை நினைப்பவர்களுக்குத் துன்பங்கள் இல்லையாம்; இறைவனை வணங்குதற்கு முதற்காரண மாகக் கொள்ளப்படுவது, துன்பமின்றி வாழ்வதற்கேயாம் என்பதை குறிப்பதே, 'யாண்டும் இடும்பை இல' என்பதாகும். இறைவன் எத்தன்மையினன் என்ற வினாவுக்கு நேராகவும் எளிதாகவும் இக்குறட்பா விடை பகர்கின்றது.

### 5 இருள்சேர் இருவினையும் சேரா...

'புகழ்' என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உண்டு. 'இருள் நீங்கி இன்பம்' (352) என்றொரு குறட்பா உண்டு. 'இறைவன்'—ஆதி பகவனைக் குறித்தது. 'இறையென்று வைக்கப் படும்' (388), 'ஏதம் இறைக்கு' (432), 'என் குற்றமாகும் இறைக்கு' (436), 'இறை புரிந்து' (541), 'இறை காக்கும்' (547), 'இறை கடியன்' (564), 'இறைவற்கு உறுதி' (690), 'இறைவற்கு இறை' (733), 'மறவர் இறைவன்' (778), 'பெருமிறைதானே' (847), 'இறை இறவா' (1157) என்ற குறட்பாக்களில் காணப்படும் சொற்களைச் சிந்தித்து ஒப்பிட்டுப் பார்த்தல் பயன்பெறத் தக்கதாகும்.

முந்திய குறட்பா 'இடும்பை இல' என்று கூறியதுபோல, இக்குறட்பா 'இருவினையும் சேரா' என்று கூறுகின்றது. இறைத்தன்மை யில்லாதவனைப் புகழ்தல் அறியாமையாகும். 'இருள் சேர் புகழ்' என்பது இறைமைக் குணங்கள் இல்லாதவனைப் புகழ்தல் அறியாமை என்பதைக் குறித்தது. 'பொருள் சேர் புகழ்' என்பது இறைமைக் குணங்கள் உள்ளவனைப் புகழ்தலைக் குறித்தது. 'சேர்', 'சேரா' என்ற சொற்கள் சிந்தித்தறிய வேண்டுவனவற்றைக் குறித்தன.

'இறைவன்' என்ற சொல் நாட்டுத் தலைவனான மன்னனையும் (778) குறிப்பதாகும். இறை, இறைவன் என்பன வருமிடங்களைக் கண்டு சிந்தித்தல் வேண்டும். பொதுப்பட 'இறைவன்' என்பது தலைவனையும் குறிக்கும். ஆதலால், ஆதிபகவனாகிய இறைவனைக் குறித்து இங்கு விளக்கம் தரப்பட்டது.

### 6 பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர்...

'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரம் நினைவு கூர்தற்கு உரியது. 'கூடாவொழுக்கம்' என்றோர் அதிகாரமும் உண்டு. 'ஓர் ஐந்தும் காப்பான்' (24), 'ஐந்து அவித்தான்' (25), 'ஐந்தின் வகை தெரிவான்' (27), 'அடல் வேண்டும் ஐந்தன்' (343), 'ஐயுணர்வு எய்திய' (354) என்பன போன்ற பல குறட்பாக்களையும் சிந்தித்தல் விளக்கம் பெறுதற்கு உதவும்.

'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்ற கருத்தினையொட்டி, இக்குறட்பா இறை வனின் இயல்பினைத் தெளிவுபடுத்துகிறது. ஆசைகளை அறுத்தவன் நெறியே, ஒழுக்கமான நெறியாகும். முனிவர்களைக் குறிக்கும் போதும் 'ஐந்தவித்தான்' என்ற உண்மை கூறப்படு

கிறது. பிற இடங்களிலும் இதைக் கண்டு தெளிக. மூன்றாம் குறட்பாவில் 'நீடு வாழ்வார்' என்று கூறப்பட்டதுபோல இங்கும் கூறப்பட்டது. முந்திய குறட்பாவில் கூறப்பட்ட 'பொருள் சேர் புகழ்' என்பதும், 'பொய்தீர் ஒழுக்க நெறி' என்று இக்குறட்பாவில் கூறப் பட்டிருப்பதும், இறைவன் தன்மைகளைக் குறிப்பனவாகும் 'தொழுபவர்', 'சேர்பவர்', 'புரிபவர்', 'நிற்பவர்' என்பன வழிபடும் தன்மைகளை உணர்த்தின; இவை இடைவிடாமல் சிந்தித்தல் என்ற பொருளைத் தந்தன.

**7 தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு ...**

நான்காம் குறட்பாவில் கூறப்பட்ட 'இலான் அடி' என்பது போல, இக்குறட்பாவில் 'இல்லாதான் தாள்' என்பது கூறப்பட்டது. 'இடும்பை இல' என்று கூறப்பட்ட கருத்து 'மனக்கவலை மாற்றல்' என்பதனோடு ஒப்பிட்டுப் பார்த்தற்குரியதாகும். இறைவனடி சேர்ந்தார்க்கு, காமம், வெகுளி முதலிய மயக்கங்கள் இல்லையானபடியால் மனக்கவலையும் வாரா என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. இறைமைக் குணங்கள் உள்ளவன் இறைவன் ஒருவனேயாகையால் அவன் உவமை இல்லாதவனானான். முந்திய குறட்பாக்களில் காணப் படும் 'தாள்', 'சேர்தல்' என்னும் சொற்கள் இக்குறட்பாவிலும் காணப்படுகின்றன.

இந்த அதிகாரத்தில் காணப்படும் பத்துக் குறட்பாக்களிலும் 'தெய்வம்' என்ற சொல் காணப்படவில்லை. 'தெய்வம்' என்பது 'இறைவன்' எனப்படும் இறைத் தன்மையினைக் குறிப்பதன்று. இயற்கை ஆற்றலாகியதையும், அஃது இயல்பான மனித ஆற்றலுக்கு மேற்பட்டதையும் குறிப்பதாகும். 'தெய்வத்தோடு ஒப்பக்கொளல்' (702) என்று வருவன போன்றவற்றைக் கண்டு தெளிக. இறைவன் ஒப்பில்லாதவன். 'கடவுள் வாழ்த்து' என்பதன் தெளிவு அதிகார விளக்கப்பகுதியில் கூறப்பட்டுள்ளது.

'கடவுள் வாழ்த்து' என்ற இவ்வதிகாரத்தில் தெய்வம் என்ற சொல் சொல்லப் படவில்லை. இறைவன் (ஆதிபகவன்) வேறு; தெய்வம் வேறு; இறைவன் தனக்கு உவமை இல்லாதவன். 'தெய்வம்' என்பது, இயல்பான மனித ஆற்றலுக்குச் சற்று மேம்பட்டதைக் குறிக்கும்; இயற்கையினையும் குறிக்கும், அவ்வளவேதான்; அதற்கு உவமை உண்டு. 'தெய்வத்தோடு ஒப்பக்கொளல்' (702) என்ற குறட்பாவினைக் கருதுக. நூலில், ஆறு இடங் களில் 'தெய்வம்' என்ற சொல் காணப்படுகிறது.

**8 அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு ...**

முந்திய குறட்பாவில் 'சேர்ந்தார்க்கு அல்லால்' என்று கூறியதைப் போலவே, இங்கும் கூறினார். அங்கு 'மாற்றல் அரிது' என்றார்; இங்கே 'நீந்தல் அரிது' என்றார். 'அறம்' என்பது, 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரத்தினைச் சுட்டிக் காட்டுகிறது. 'மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன்' (34) என்ற குறட்பாவினையும், 'அந்தணர் என்போர் அறவோர்'(30) என்ற குறட்பாவினையும், இக்குறட்பாவுடன் இணைத்துக் காண்க; 'அந்தணன்' என்ற சொல் காணப்படும் பிற குறட்பாக்களும் உண்டு. அவையும் சிந்திக்கத் தக்கன.

முந்திய குறட்பாவில் காணப்படும் தாள், சேர்ந்தார், அல்லால், அரிது என்ற சொற்கள் இக்குறட்பாவிலும் கூறப்பட்டுள்ளன. 'பிற' என்று குறிக்கப்பட்டதால் பொருள்

இன்பம் என்பவை கூறப்பட்டன என்றாலும், முந்திய குறட்பாக்களில் கூறப்படும் 'இடும்பை', 'இருவினை','மனக்கவலை' என்பவைகளையும் சிந்தித்தல் வேண்டும். 'அறம்'என்பதே இறைவன் என்பது சுட்டிக்காட்டப்பட்டது. 'கவலை' என்று முந்திய குறட்பாவில் கூறியதால், 'மாற்றல் அரிது' என்றார். இக்குறட்பாவில் 'ஆழி' (கடல்) என்று கூறியதால் 'நீந்தல் அரிது' என்றார். 'கடல்' என்று கூறியதால் 'தாள்' தெப்பமாயிற்று. 'அந்தணன்' என்ற சொல் முனிவர்களைக் குறிப்பதாகப் பிற இடங்களில் கூறப்பட்டாலும், இறைவனைக் குறிக்க வேண்டி 'அற ஆழி அந்தணன்' என்றார்.

'அறம்' என்பது மனம் மாசற்று (குற்றமின்றி) இருப்பதனைக் குறிப்பது ஆகும். ஆகையால், 'மலர் மிசை ஏகினான்' என்பதனோடு சிந்தித்துணர்தல் வேண்டும். 'ஆழி' என்பது இரண்டு முறை கூறப்பட்டுள்ளது. இறைவனை 'அறக்கடல் ஆகிய அந்தணன்' என்றார். மற்றவை நீந்தப்பட வேண்டியனவாகும்.

## 9 கோளில் பொறியில் குணம்இலவே...

எளிமையும், அருமையும் நிறைந்த தன்மையினையும் சிந்திப்பதற்குரியதையும் உணர்த்தவே 'எண் குணத்தான்' என்றார். 'எண்' என்ற சொல் காணப்படுகின்ற குறட்பாக்கள் சிந்திக்கத்தக்கவனவாகும். 'குணம் என்னும் குன்றேறி' என்ற குறட்பாவினையும் கருதுக. சீரிய குணங்களின் முழுத்தன்மையே இறைமை ஆகும். 'எண் பொருளவாக', 'எண்பதத்தான் ஓரா', 'எண் பொருள்' என்பன போன்றவை சிந்தித்து அறிய வேண்டுவனவாம்.

'பொறிவாயில் ஐந்து' (6) என்று கூறினார். இங்கே 'கோள் இல் பொறியின்' என்றார். பொறிகள் கடமைகளைச் செய்ய வேண்டும் என்பதனை உணர்த்தினார். 'அவித்தான்' (6) என்பது அடக்கிக் காத்தல் என்பதனை உணர்த்திற்று; அழித்தல் என்பது பொருளாகாது.

பொறிகள் பயன்படவேண்டுவனவாகும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'தொழுதல்' என்று இரண்டாம் குறட்பாவில் உணர்த்தியது போல, 'வணங்குதல்' என்பது இதில் கூறப்பட்டது. வணங்க வேண்டியதன் இன்றியமையாத் தன்மையும், எப்படிப் பட்டவனை வணங்க வேண்டும் என்பதும் விளக்கப்பட்டது. இறைவனை 'குணத்தான்' என்றார். அவ்வாறு நிறுத்தாமல் 'எண் குணத்தான்' என்றதால் இறைத்தன்மையின் சிறப்பு விளக்கப்பட்டது. இறைவனுக்குரிய குணங்கள் நிறைந்திருப்பவன் 'எண்குணத்தான்' எனப் பட்டான். 'பயன் என்கொல்' என்று உணர்த்தியது போல, 'குணம் இலவே' என்று கூறப் பட்டது. 'எண் பொருளவாக' (424), 'எண்பதத்தான் ஓரா' (548), 'ஒண் பொருள் காழ்ப்ப' (760), 'எண் சேர்ந்த நெஞ்சத்து' (910), 'எண்பதத்தால் எய்தல்' (991) என்பன போன்ற இடங்களில் காணப்படும் 'எண்' என்கின்ற சொல் சிந்தனைக்குரியதாகும். இக்குறட்பாவில் 'குணம்', 'குணத்தான்' என்று கூறப்பட்டுள்ளன. வணங்குதல் என்பது தலை தாழ்ந்து நிகழும் நிகழ்ச்சியானபடியால், 'வணங்காத் தலை' என்று கூறினார். வணங்குதல் என்பது, ஒழுக்க நெறிகளினாலே, மனம் தூய்மையாதலினாலே என்பதும் உய்த்துணர வைக்கப்பட்டது சீரிய குணங்களின் முழுத் தன்மையே இறைவனாவான். தத்தமக்குரிய

செயல்களைச் செய்யாத பொறிகளையுடையவன் இருந்தும் பயனில்லை என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

**10 பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் ...**

'பிற ஆழி' என்று கூறியதைப் போலவே 'பெருங்கடல்' என்று குறிப்பிட்டார். 'பிறப்பு அறுக்கும்' (349), 'வாரா நெறி' (356), 'வேண்டா பிறப்பு' (357), 'பிறப்பு என்னும் பேதைமை' (358) என்பன போன்ற குறட்பாக்கள் உடன்வைத்துக் கருதப்பட வேண்டியன.

இக் குறட்பாவில் காணப்படும் கடல், நீந்துதல், இறைவன், அடி, சேராதார் முதலியவற்றைக் கூறும் சொற்கள் முந்தைய குறட்பாக்களில் காணப்படுவனவாகும். ஏழாம் பாடலில் 'மாற்றல் அரிது' என்றும், எட்டாம் பாடலில் 'நீந்தல் அரிது' என்றும் கூறினார். இப்பாடலில் **நீந்தார்** என்றே கூறிவிட்டார். நீந்துபவர் யார்? நீந்தாதார் யார்? என்பது தெளிவு படுத்தப்பட்டது. இறைவனையே நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்குப் பிறவித் துன்பம் நீங்குமென்றும், பிறருக்கு நீங்காதென்பதும் உணர்த்தப்பட்டது. 'பிறவி' என்பது பெருங்கடலாகக் கூறப்பட்டதால், இறைவன் அடி தெப்பம் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

## 2 வான் சிறப்பு

**11 வான் நின்று உலகம் வழங்கி...**

அமிழ்தம் உண்பவர் என்றென்றும் நிலைத்து நின்று வாழ்வார் என்பது மக்களிடையே இருந்து வரும் கருத்தாகும். அமிழ்தமே மழை (நீர்) என்று உணர்த்தினார். 'சாவா மருந்து' (82) என்பதும் சிந்திக்கத்தக்கதாகும். 'அமிழ்தம்', 'அணங்கு' என்பன போன்ற சொற்கள் காணப்படும் குறட்பாக்களைக் கண்டு தெளிக. மக்களிடையே தொன்று தொட்டு நிலவி வரும் கருத்தினைத் தொட்டுக் காட்டி, 'உண்மை இதுதான்' என்று குறிப்பால் உணர்த்தி உய்த்துணர வைத்து விளக்கமாகக் கூறுவது ஆசிரியரின் முறையாகும். பிற இடங்களையும் இவ்வாறே அறிதல் வேண்டும்.

உலகிலுள்ள உயிர்களை நிலைத்து நிற்கச் செய்வதால் மழை 'அமிழ்தம்' என்று கூறப்பட்டது. மழையினையே 'அமிழ்தம்' என்று கருதுதல் வேண்டும். அமிழ்தம் உண்டவர் என்றென்றும் நிலைத்து வாழ்வார்கள் என்பதும், 'சாவா மருந்து' அமிழ்தமாகும் என்பதும் உலக மக்களிடையே நிலவி வரும் எண்ணங்களாகும். அந்த அமிழ்தமே மழையென்று குறிப்பிட்டார். 'தான் அமிழ்தம்' என்று கூறினார். இயற்கையின் சிறப்பு இக் குறட்பாவினால் எடுத்துக் காட்டப்பட்டது.

**12 துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் ...**

நீரின் இரண்டு குணங்கள் குறிக்கப்பட்டன. தலைவனுக்கு மகிழ்ச்சியை அளிப்பதுடன் ஒழுக்கத்தையும் காப்பாற்றும் துணையாக இருப்பவள் வாழ்க்கைத் துணைவியாவாள். இரு நோக்கு' (1091), என்பது போன்ற குறட்பாக்கள் கவனத்திற்குரியன.

தானும் உணவாக இருப்பதென்பது தண்ணீராக உண்ணப்படுதலாகும். உணவுக்கு முதற் காரணம் மழையாயிற்று. 'துப்பு' என்கின்ற சொல் மூன்று முறையும், 'துப்பார்' என்பது இரண்டு முறையும் கூறப்பட்டன. ஆக்குவதும் ஆவதும் மழையே. முந்திய குறட் பாவில் 'வான்' என்றும், இக்குறட்பாவில் 'மழை' என்றும், அடுத்த குறட்பாவில் 'விண்' என்றும் கூறுகின்றார்; அனைத்தும் ஒரு பொருளையே குறிக்கின்றன.

## 13 விண்இன்று பொய்ப்பின் விரிநீர்...

உலகம், 'விரிநீர் வியன் உலகம்' என்று கூறப்பட்டது. பெரிய கடலினை யுடையதே என்றாலும், மழை யில்லையேல் அக்கடலினால் பயனில்லை என்பார், 'விரி நீர் வியன் உலகம்' என்று சுட்டிக் காட்டினார். 'பசி' என்று பொதுவாகக் கூறப் பட்டதால், எல்லா உயிரினங்களுக்கும் பொதுவாயிற்று. 'நின்று உடற்றும்' என்றதால், பசி நிலைத்து நின்று வருத்தும் என்பதாம். கடலினை 'விரி நீர்' என்றும் உலகத்தினை 'வியன் உலகம்' என்றும் பிரித்துக் காட்டினார்.

பெரிய கடல் இருந்தாலும் அதனால் பயனில்லை; மழை வேண்டும்; மழைதான் பசிப்பிணைப் போக்கும் என்றார்.

## 14 ஏரின் உழாஅர் உழவர்...

'உழவு' என்ற அதிகாரம் சிந்திக்கத்தக்கது. உழவுத் தொழிலினைச் சிறப்பித்தார். கால வேறுபாடுகளினால் மறையக் கூடிய தொழில்களை ஆசிரியர் குறித்துக் காட்டு வதில்லை. அத்தன்மையான தொழில்களை (வினைகளை) 'வினை செயல்வகை', 'வினைத் தூய்மை', 'வினைத்திட்பம்' என்பன போன்ற அதிகாரங்களினால் கூறுவார்.

உழவுத்தொழிலின் இன்றியமையாத் தன்மை விளக்கப்படுகின்றது. 'உழவு' என்றொரு தனி அதிகாரம், உழவுத்தொழிலின் மேம்பாட்டினைக் கூறுகின்றது. மழை 'புயல்' என்று கூறப்பட்டது. உலகிற்கு மழை வருவாயாகும் என்பதை 'வாரி' என்பதனால் உணர்த்தினார். உலகில் என்றென்றும், எங்கெங்கும் நிலைத்திருக்கக் கூடிய தொழில் 'உழவு' ஆகையால், அதனைத் தெளிவுபடுத்தினார். 'ஏரின் உழாஅர்' என்பதனால் நிலத்தில் 'ஈரம்' இருத்தல் இன்றியமையாதது என்பது குறிக்கப்பட்டது.

## 15 கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்...

கேடும் ஆக்கமும் பெறுவதற்கு உரியவர்கள் மக்கள் ஆதலின் 'கெட்டார்க்கு' என்று கூறினார். இதில் மழையினது ஆற்றல் கூறப்பட்டது. 'கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ' (1293) என்று தலைவி கூறுவது ஏனோ!

மக்களின் முயற்சி வேறுபாடுகளால் கெடுத்தல், எடுத்தல் என்பன பலவாதல் நோக்கி, 'எல்லாம்' என்றார். கெடுப்பதற்குக் காரணமாக இருக்கும் ஒன்றே உயர்த்து வதற்கும் காரணமாக நின்றதென்பது குறிக்கப்பட்டது. பெய்யாமல் கெடுப்பது என்பது உணர்த்தப்பட்டது. கெட்டுப் போனவர்களும் உயர்த்தப்படுவார்கள் என்பது குறிப்பால்

காட்டப்பட்டது. 'வான் நோக்கி வாழும்' (542), 'துளியின்மை ஞாலத்திற்கு' (557), 'வாழ்வார்க்கு வானம்' (1192) என்பன போன்ற இடங்களையும் சிந்தித்தறிதல் வேண்டும்.

**16 விசும்பின் துளிவீழின் அல்லால்...**

மழையின் அருமை நோக்கிப் பசும்புல்லுக்கும் 'தலை' என்று கூறினார். 'துளி வீழின்' என்றார். 'துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே' (557), 'வான்நோக்கி வாழும்' (542), 'வாழ்வார்க்கு வானம்' (1192) என்பன போன்ற குறட்பாக்களைக் கருதுக.

மழையில்லையென்றால், ஓரறிவு உயிரும் இல்லை யென்பதைக் குறிக்கவே 'புல்' என்றார். விசும்பு என்பது வானம். இது வானத்திலிருக்கும் மேகத்தினைக் குறித்தது' 'துளி' என்பதும் 'தலை' என்பதும் மழையின் சிறப்பினைச் சுட்டிக் காட்டின. 'பசும் புல் தலை' என்பதால், மழையின்றேல் புல்லும் முளைக்காது என்பது உணர்த்தப்பட்டது. 'தலை காட்ட முடியாது' என்பது இன்றும் வழக்கில் பேசப்பட்டு வருகிறது. உயிர்களுக்கு கீழ்நீர், மேல்நீர் ஆகிய இரண்டும் தேவை என்பது குறிப்பாகும்.

**17 நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும்...**

பெரிதான கடலிலும் மணி, முத்து முதலியன உண்டாகா. ஆதலால் 'நீர்மை குன்றும்' என்றார். நீர்வாழ் உயிர்கள் பிறக்கா; பிறக்க மழை வேண்டும். மழைக்கு முதற்காரணமான கடலுக்கும் மழை வேண்டும்.

'விரிநீர்' என்று கூறியதுபோல, கடலினை இக்குறட்பாவில் 'நெடுங்கடல்' என்று குறித்தார். 'நீர்மை' என்றது, நீர் வாழ் உயிர்கள் பிறவாமையும், மணி முதலியன தோன்றாமையும் ஆகும். மழை பெய்யாவிட்டால், பெரிய கடலில் சங்கு, முத்து, பவளம் முதலியன பிறவா. மழைக்கு முதற் காரணமான கடலுக்கும், மழை வேண்டுவதாயிற்று. கடலில் நீரைக் குறைக்கின்ற மேகம் (எழிலி) அக்கடலிலே நீரைப் பெய்கின்றது.

**18 சிறப்பொடு பூசனை செல்லாது...**

'செல்லாது' என்ற ஒரு சொல் சிந்தனைக்குரியது! அது நாட்டு நடப்பினைக் குறித்த சொல். 'வானம் வறக்குமேல் வானோர்க்கும்' - இத்தொடர் கருதற்பாலது. நாட்டு நடப்பும் அதைவிட இன்றியமையாத தொன்றும் எடுத்துக் காட்டப்பட்டது.

உலகில் நடைபெறும் வழக்கு பற்றிப் 'பூசனை' என்றார். 'சிறப்பொடு பூசனை' என்றதால், திருவிழாக்களுடனே பூசை என்பது சுட்டிக்காட்டப்பட்டது. வானவர்களுக்குச் செய்யப்படுகின்ற வழக்கு எடுத்துரைக்கப்பட்டது. மழையின்றேல் அதுவும் நடை பெறாது. இதனைச் 'செல்லாது' என்று குறித்துக் காட்டினார். மழை, 'வானம்' என்று கூறப்பட்டது. 'வானம்', 'வானோர்' என்பன அடுத்தடுத்து வந்த முறை சிந்தனைக்குரியது. வானம் (மழை) வறண்டு போனால், வானவர்கட்கும் பூசை நடக்காது என்பது குறிக்கப்பட்டது. உலகியலில் காணப்படும் பழக்கம் உரைக்கப்பட்டது. வானவர்களுக்கு இங்கே பழக்கமாக நடைபெறுகின் றென்பதனை 'ஈண்டு' என்று கூறினார். உய்த்துணர வைக்கும்முறை ஆசிரியரின் தனிச் சிறப்பாகும்.

**19 தானம் தவம்இரண்டும் தங்கா...**

தானம் இல்லறத்தாரையும் தவம் துறவறத்தாரையும் குறித்தன. தவமாவது, மனம் பொறிகளின் வழியே போகாமல் நிற்கும் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கல் முதலியனவாகும். 'ஈகை', 'தவம்' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. 'ஒப்புரவு அறிதல்' போன்ற அதிகாரங்களும் சிந்தனைக்குரியனவே.

உலகினை 'வியன் உலகம்' என்றார். 'விரி நீர் வியனுலகம்' என்று முன்னரும் கூறினார். பொதுவாக நோக்குமிடத்து, தானம் என்பது துறவறத்தினை மேற்கொண்டவர்களையும் குறிப்பதாகும். 'தவத்தொடு தானம் செய்வாரின்' (295) என்பன போன்றவையும் சிந்தனைக்குரியன. வான், விண், புயல், துளி, வானம் முதலிய சொற்களால் 'மழை' குறித்துக் காட்டப்படும். முந்திய குறட்பாவில் 'செல்லாது' என்றார்; இக்குறட்பாவில் 'தங்கா' என்றார்.

**20 நீர்இன்று அமையாது உலகு...**

நீர் 'ஒழுக்கு' என்று கொள்வதோடு, நீரின் 'ஒழுக்கம்' என்றும், மக்களுக்கு ஒழுக்கம் என்றும் கொள்ளலாம். 'ஒழுக்கம் உடைமை' என்ற அதிகாரம் சிந்தனைக்குரியது.

உலகு என்றது உலகியல் என்பதாகும். உலகியல் என்பது பொருள், இன்பம் முதலானவையாகும். முந்திய குறட்பாக்களில் செல்லாது, தங்காது என்றார். இங்கே 'அமையாது' என்று கூறினார். நீர் இல்லையென்றால், அமையாது உலகு, என்பது வெளிப்படையான உண்மையாகும். அதுபோல, நீர் ஒழுக்கம் — ஒழுகுதலும் — மழையின்றி நடக்காது என்பதாம். 'யார் யார்க்கும்' (94), 'யார் மாட்டும்' (162), 'யார் யார் வாய்' (423) என்பன சிந்தனைக் குரியன.

## 3 நீத்தார் பெருமை

**21 ஒழுக்கத்து நீத்தார் பெருமை...**

சிறந்த நூல்களின் கருத்துக்களையும் சான்றோர்களின் முடிவுகளையும் மனத்திற் கொண்டு விளக்கம் தருவது ஆசிரியரின் கொள்கையாகும். 'பனுவல் துணிவு' என்று குறிப்பிட்டார். இக்குறட்பா, 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்துகிறது. 'பெருமை' என்ற சொல் 'பெருமை' என்ற அதிகாரத்தையும் குறிப்பிடுவதாகும். 'அவாவறுத்தல்' என்ற அதிகாரம் குறிப்பிடப்படுகிறது. துறவற இயலில் — ஞானம் — என்ற பகுதியில் அடக்கப்படும், நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் முதலிய அதிகாரங்கள், இந்த அதிகாரக் கருத்துக்களுடன் கருதப்படவேண்டும். 'பனுவல்' என்று பொதுப்படக் கூறியதால், பற்பல மாறுபாடுகள் கொண்ட மதங்களுக்கும், சமயங்களுக்கும், இக்குறட்பா கருத்து ஒத்ததாகும் என்பது பெறப்பட்டது.

ஒழுக்கத்தின் இன்றியமையாத் தன்மை கூறப்பட்டது. ஒழுக்கம் இல்லையென்றால் அறம் இல்லை என்பதாகும். ஒழுக்கத்தின்கண்ணே நின்று துறந்தவராதல் வேண்டும்.

ஐம்புலன்களையும் அடக்கின ஒழுக்கத்தினோர்க்குப் பெருமையெங்கேயெனில், தாங்கள் கற்ற மறை நூல்களின் பெருமையினால்வரும் என்பதாம். ஒழுக்கத்தில் நின்றாரது துணிவு, பனுவல் (நூல்) மேல் ஏற்றப்பட்டது. மேலோர்கள் எழுதிய நூல்களின் உண்மைகளை எடுத்துக் காட்டுதல் ஆசிரியரின் நன்னெறியாகும். 'நூலோர்' தொகுத்தவற்றுள் (322), 'எப்பால் நூலோர்க்கும்' (533) என்பன போன்று வருகின்ற இடங்கள் சிந்தனைக்குரியனவாகும்.

முற்றத்துறந்த முனிவர் 'நீத்தார்' எனப்பட்டார். எனினும், 'ஒழுக்கத்து நீத்தார், என்று நெறிப்படுத்திக் கூறினார். 'ஒழுக்கம்' என்பது மக்கள் அனைவர்க்கும் பொதுப்பட எவ்விதப் பாகுபாடுமின்றிக் கூறப்பட்டது. எனவே துறவறத்திற்கும் ஒழுக்கம் இன்றியமை யாததாயிற்று.

**22 துறந்தார் பெருமை துணைக்கூறின்...**

துறந்தார் பெருமை 'துறவற இயலில்' சுட்டிக்காட்டப் பட்டது; எண்ணிப் பார்க்க முடியாது என்பதாகும்.

துறந்தார்களின் பெருமையினை எடுத்துரைக்க முடியாது என்பதாயிற்று. இந்த அதிகாரத்தின் பெயர் 'நீத்தார் பெருமை' என்பது குறிப்பிடத்தக்கது. குறட்பாக்களில் காணப்படும், 'நீத்தார் பெருமை', 'துறந்தார் பெருமை' 'அறம் பூண்டார் பெருமை'' 'நிறை மொழி மாந்தர் பெருமை' என்பன அதிகாரத்தின் பெயரினை வற்புறுத்துவனவாம். 'துறவு' என்ற அதிகாரக் கருத்துக்களும் ஒப்பிட்டுச் சிந்திக்கத்தக்கன.

**23 இருமை வகைதெரிந்து ஈண்டறம்....**

பெருமை என்ற அதிகாரத்தையும் நினைவு படுத்த இக்குறட்பா உதவுகிறது. 'வகை தெரிவான்கட்டே உலகு' (27) என்றும் கூறினார். 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரத்தினைக் கருதுக. இக்குறட்பாவில், 'தெரிந்தது' என்ற சொல்லைப் படிக்கும்போது நல்ல பயிற்சியாக 'தெரிந்து தெளிதல்', 'தெரிந்து வினையாடல்', 'தெரிந்து செயல்வகை, என்ற அதிகாரங்களை நினைத்தல் வேண்டும். 'அறம் பூண்டார்' என்பது, 'செந்தண்மை பூண்டு ஒழுகுதல்' (30) என்பதை நினைவுபடுத்துகிறது.

வகை தெரிதல் என்பது பிறப்பு, வீடு இவைகளின் இன்ப துன்பக் கூறுபாடுகளை ஆராய்தல் என்பதாகும். 'அறம் பூண்டார்' என்பதுபோல, 'செந்தண்மை பூண்டொழுகல் என்று பத்தாம் பாடலில் கூறினார். 'வகை தெரிந்து' என்பதைச் சிறப்பித்து, ஏழாம் பாடலில் 'வகை தெரிவான்' என்று கூறினார். 'இருமை வகை', 'ஐந்தின் வகை' என்பன ஆழ்ந்து சிந்திக்கத் தக்கனவாகும்.

**24 உரன்என்னும் தோட்டியான் ஓர்ஐந்தும் ...**

பிறத்தல், பிறவிஅறுக்கப்பட்ட பேரின்ப நிலை 'வரன் என்னும் வைப்பு' என்று குறிக்கப்பட்டது. 'பேரா இயற்கை தரும்' (370) என்பது கருதற்பாலது. அதுபோன்றது தான், 'மற்றீண்டு வாரா நெறி' (356) என்பதும். அது 'வானோர்க்கு உயர்ந்த உலகம்' (346)' என்றும் கூறப்பட்டது.

வீட்டு நிலத்திற்கு வித்து ஆகின்றவன் ஆகையால், ஈண்டு பிறந்து இறந்து வரும் மகன் அல்லன் என்பதாகும். அறிவு தோட்டியாகவும், பொறிகள் யானைகளாகவும் கூறப்பட்டன. 'ஐந்து அவித்தான்' (6), 'ஐந்தடக்கல்' (126), 'ஐந்தன் புலத்தை' (343) 'ஐயுணர்வு' (354) என்பன போன்று வருமிடங்களைச் சிந்தித்துணர்தல் வேண்டும். நிலத்திற்சென்று முளைத்தலின் 'வித்து' என்றார். 'ஐந்தும் காப்பான்' என்று கூறாமல்' 'ஓர் ஐந்தும்' என்று குறித்துக் காட்டினமையால் காப்பாற்றுகின்ற அருமை உணர்த்தப்பட்டது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன ஐந்து பொறிகளாகும். வித்து என்று கூறப்பட்டதால் முதற்காரணம் என்பது உணர்த்தப்பட்டது.

## 25 ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு...

ஆற்றல் நிறைந்த முனிவரது சிறப்பு எடுத்துக் கூறப்பட்டது. 'இந்திரனை' கோமான் என்றார். அவன் அடைந்த இழிவு நிலை காட்டப்பட்டது. மக்களிடையே 'நிலவி வரும்' கருத்துக்களையும், எண்ணங்களையும் வைத்தே, ஆசிரியர் உண்மை இன்னதென்று தமது சீரிய அறத்தினைப் போதிப்பார். வானவர்களின் தலைவன் இந்திரன்; அவன் அழிந்தான். மனம் போன போக்கில் நடப்பவர்கள் வானவர் எனப்படும் தேவர்கள்! 'தேவர் அனையர் கயவர்' (1071) என்பதைக் கருதுக; பிற இடங்களிலும் காண்க. 'கடவுள் வாழ்த்து', 'நீத்தார் பெருமை' இந்த இரண்டு அதிகாரங்களிலும் 'ஐந்து அவித்தான்' என்று கூறப்பட்டிருப்பதனைக் கவனித்து அறிதல் வேண்டும்.

உலக மக்களிடையே வழங்கி வரும் வரலாற்றினை ஆசிரியர் சுட்டிக்காட்டி நீத்தார் பெருமையினை உணர்த்தினார். உலகில் வழங்கும் வரலாறுகள் பற்பல வகைப்படும். அவைகளில் சரித்திர உண்மைகளும் உண்டு; உண்மையில்லாத செய்திகளும் உண்டு. என்றாலும், மக்கள் அறிந்துள்ள செய்தி என்பது மறுக்க முடியாததாகும். எத்தகைய பெரியவர்களாக இருந்தாலும் முனிவர்களின் ஆற்றலால் அழிவர் என்ற உண்மையே நாம் புரிந்து கொள்ள வேண்டியதாகும்.

நூலிலேயே 'கோமான்' என்ற சொல் ஒருமுறைதான் வந்துள்ளது. 'அகல் விசும்பு' என்பதால் கோமானின் உயர்ச்சி எடுத்துக்காட்டப்பட்டது 'இந்திரன்' என்பது நூலில் ஒருமுறைதான் காணப்படுகிறது. 899-வது குறட்பாவும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்குரியதாகும். விசும்பில் உள்ளவர்கள் தேவர்கள் என்று பேசப்படும் செய்தி கூறப்பட்டு, அவர்களுடைய தலைவனே இழிசெயல் புரிந்தான் என்பதும் உணர்த்தப்பட்டது. 1073-வது குறட்பா சிந்திக்கத் தக்கதாகும். தேவர்கள் மக்களினும் தாழ்ந்தவர்கள் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது 'சாலும் கரி' (25, 1060) 'ஞாலம் கரி' (245) என்பன ஒரு தன்மையினவாகும். விசும்புளார், வானவர், தேவர், புத்தேளிர் போன்றவற்றின் விளக்கங்களைப் பிற இடங்களில் கண்டு தெளிக. 'பொறிவாயில் ஐந்து அவித்தான்' (6) என்ற குறட்பாவினையும் ஒப்பு நோக்குக; ஆசிரியர் கூறவந்த கருத்தினையறிதலே சிறப்பாகும். கருத்தையுணர்த்த வந்த கருவியினைக் காலங் கருதிப் புரிந்து கொள்ளுதல் வேண்டும். பிற இடங்களில் வருவனவற்றையும் இவ்வாறே புரிந்தறிதல் வேண்டும்.

## 26 செயற்குஅரிய செய்வார் பெரியர்...

முனிவர்கள் செய்யும் அரிய செயல்களை மற்றவர்கள் செய்ய இயலாது; பெரியவர் என்று கூறப்பட்டதெல்லாம், தவமேற்கொண்ட முனிவர்களைக் குறிப்பதாகும். 'சிற்றினஞ்

சேராமை' என்ற அதிகாரத்தில் கூறப்படுகின்ற சிறியார்களையும், 'பெரியாரைத் துணைக் கோடல்', 'பெரியாரைப் பிழையாமை' என்பன போன்ற அதிகாரங்களில் கூறப்படுகின்ற வற்றையும் சிந்தித்தறிக. செயற்கு எளிமையானவை: மனம் வேண்டியவாறே அதனைப் பொறி வழிகளால் புலன்களிற் செலுத்தலும், வெஃகலும், வெகுடலும் முதலியன. இந்த அதிகாரம் 'நீத்தார் பெருமை'யாகும். செயற்கரியவாவன இயமம், நியமம் முதலான யோக முறைகள். துறந்த மாத்திரத்தானே பெரியரென்று கொள்ளப்படார் என்பதும், செயற்கரியன செய்வாரே பெரியர் என்று கொள்ளப்படுவர் என்பதும் உணர்த்தப்பட்டன. 'பெரியர்' என்று இங்குக் கூறப்பட்டது, முனிவர்களான நீத்தாரையேயாகும். 'பெரியாரைத் துணைக்கோடல்', 'பெரியாரைப் பிழையாமை' என்ற அதிகாரங்களின் கருத்துக்களையும் சிந்தித்தறிதல் வேண்டும். முனிவர்கள் செய்வனவற்றைச் செய்ய முடியாதவர்கள், முனிவர்களோடு ஒப்பு நோக்கச் சிறியராவர் என்பதாகும். சிறியர் என்பதற்குச் செய்யும் தொழிலாகிய இல்லறமும் செய்ய அறியார் என்றும் கூறப்படும். 'செய்கலாதார்' என்று கூறப்பட்டதால் செய்து முடிக்கும் திறன் இல்லாதவர்கள் என்பது தெளிவுபடுத்தப்பட்டது. 'பெருமை' என்ற அதிகாரத்தில் காணப்படும் கருத்துக்களும் உலகியல் முறையில் சிந்திக்கத்தக்கனவாகும்.

## 27 சுவைஒளி ஊறுஓசை நாற்றம்...

இக்குறட்பாவில் நுணுக்கமான பல உண்மைகள் அடக்கி வைக்கப்பட்டுள்ளன. முனிவர்களே உலகத் தத்துவங்கள் என்று கூறப்படும் பலவற்றையும் தெரிந்தவர்கள் ஆவார்கள். அத்தகைய அறிஞர்களாகிய முனிவர்களே அனைத்தும் அறிந்தவர்களாவார்கள். 'மெய் யுணர்தல்' என்ற அதிகாரத்தில் கூறப்படும் மாசறுகாட்சி, தெளிந்தார், மெய்யுணர்வு, காண்பதறிவு, கண்டார், உள்ளம் உள்ளது உணரின், செம்பொருள் காண்பது—என்பவைகளை யெல்லாம் சிந்திக்க வேண்டும். இக்குறட்பாவின் ஆழம் மிகப் பெரிதாகும்.

சுவை முதலான இந்த ஐந்தும் தன்மாத்திரைகள் என்று கூறப்படும், 'மெய்யுணர்தல்' என்ற உண்மை (தத்துவம்) குறிக்கப்படுகின்றது. 'மெய்யுணர்தல்' என்ற பெயரில், தனியாக ஓர் அதிகாரம் கூறப்பட்டுள்ளது. இந்த ஐந்தின் கூறுபாடுகளை (வகைகளை) 'ஆராய்பவன் அறிவின் கண்ணதே' உலகம் என்று கூறப்பட்டதால், யோகப் பயிற்சியும் தத்துவவுணர்வும் குறிக்கப்பட்டனவாம். பிறபகுதிகளில் இதன் விளக்கம் காண்க. தத்துவங்களை உணர்ந்த பின்னர், உலகு எனப் பிறிதொன்றில்லை என்று உலகினது உண்மை அறிதலால் அஃது அவன் அறிவின் கண்ணதாயிற்று.

## 28 நிறைமொழி மாந்தர் பெருமை...

'பெருமை' என்ற இச்சொல், 'பெருமை' என்ற அதிகாரத்தையும் நினைவுபடுத்துகிறது. 'நிறைமொழி' என்பது அருளிக் கூறினும், வெகுண்டுக் கூறினும், அவ்வப்போதே அவ்வப்பயன் களைக் கொடுத்துவிடுவதாகும். 'ஒழுக்கமுடையார் வாய்ச் சொல்' (415) என்பது போன்ற இடங்களைக் கண்டு தெளிக.

மாந்தர் என்றது, முனிவர்களாகிய துறவிகளாவர். 'மறைமொழி'களையே 'மந்திரங்கள்' என்று கூறுவர். 'நிறைமொழி' என்பது, அருளிக் கூறினும், வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைக் தொடுத்துவிடும் மொழியாகும். 'காட்டிவிடும்' என்று கூறியதும்

அதனாலேயாகும். நிறைந்த பொருளையும் பயனையும் கொண்டுள்ளதால் 'மறைமொழி' எனப்பட்டது.

## 29 குணம்என்னும் குன்றேறி நின்றார்...

குணம் என்ற சொல் 'பண்புடைமை' என்ற அதிகாரத்தைச் சிந்திக்க வைக்கின்றது. முனிவர்கட்கும் ஒரோவழி சினம் தோன்றும்; உடனே அவர்கள் அதனைப் போக்குவர். நின்ற நேரம் சிறிது பொழுதேயாயினும் அதன் விளைவு கடுமையானதாகும். 'வெகுளாமை' என்ற அதிகாரம் ஒன்றும் இருக்கிறது. இக்குறட்பாவில் காணப்படும் 'காத்தல்' என்ற சொல் 'பொறையுடைமை' என்ற அதிகாரத்தை நினைவுபடுத்துகிறது. 'குன்று' என்ற சொல், நூலில் பல இடங்களில் காணப்படுகின்றது.

குணம் என்றது துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலிய நற்குணங்களாகும். சலியாமையும் பெருமையும் பற்றிக் குணங்களைக் குன்றாக உருவகஞ் செய்தார். தொன்றுதொட்டு வருவது பற்றி ஒரோவழி வெகுளி (கோபம்) தோன்றியபொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்கும். ஆதலின், 'கணமேயும்' என்று கூறினார். நிறைமொழி மாந்தர் ஆதலின் 'காத்தலரிது' என்று கூறினார். 'புணரின் வெகுளாமை என்று காணப்படுகின்ற 308-ஆவது குறட்பா சிந்திக்கத்தக்கதாகும். பொதுப்பட நற்குணங்களை உலக மக்களுக்குப் 'பண்புடைமை' என்ற அதிகாரம் கூறுகின்றது. 'எண் குணத்தான்' என்று கூறப்பட்டதும் (9) சிந்தனைக்குரியதாகும்.

## 30 அந்தணர் என்போர் அறவோர்...

முனிவர்களே அந்தணராவர்; அந்தணன் என்ற சொல் வருகின்ற குறட்பாக்களைச் சிந்திக்க வேண்டும். அறவோர் என்பது, அறன் வலியுறுத்தல் என்ற அதிகாரத்தை, செந் தண்மை, ஒழுகுதல் என்பவை முறையே 'அருளுடைமை', 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரங் களையும் குறிப்பிட்டுக் காட்டுவனவாகும்.

அந்தணர்கள் என்று சொல்லப்படுபவர்கள் துறவறத்தில் நின்ற முனிவர்களே யாவார்கள். அந்தணர் என்ற சொல் காரணப்பெயராக விளக்கப்பட்டது. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுதலென்பது பிற மக்களுக்கு இயலாது என்பது குறிக்கப்பட்டது. 'அறவாழி அந்தணன்' (8), 'அந்தணர் என்போர்' (30), 'அந்தணர் நூற்கும்' (543) என்ற குறட்பாக்கள் சிந்தனைக் குரியனவாகும். 'அறுதொழிலோர் நூல் மறப்பர்' (560) என்று காணப்படுகின்ற குறட்பாவும் ஒப்பு நோக்குதற்குரியதாகும். 'அறவோர்' என்று குறிக்கப் பட்டதால் அடுத்து வருகின்ற 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரம் உணர்த்தப்பட்டது. 'ஒழுகலான்' என்ற சொல் 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரத்தை நினைவுபடுத்துகின்றது. 'கூடாவொழுக்கம்' என்றொரு அதிகாரம் உண்டு. 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' (322) என்பது போன்ற குறட்பாக்களைச் சிந்தித்தறிதல் வேண்டும். கடமையாகக் கொண்டவர்கள் என்பதைப் 'பூண்டு' என்பது உணர்த்திற்று.

## 4 அறன் வலியுறுத்தல்

### 31 சிறப்புஈனும் செல்வமும் ஈனும்...

'அன்பு ஈனும்', 'அது ஈனும்' (74) என்று கூறுகின்ற முறையில் இக்குறட்பாவிலும் 'ஈனும்' என்ற சொல் இருமுறை கூறப்பட்டது. அறத்தினை மக்கள் பின்பற்றி நடப்பது எளிதான தொன்று அன்று என்பதைச் சுட்டிக்காட்டவே, இந்த அதிகாரம் 'வலியுறுத்தல் என்று அமைக்கப்பட்டது.

அறம் சிறப்பான நிலையினைத் தருவதால், சிறப்பு என்றார். ஆக்கம் தருவதனை ஆக்கம் என்றார். ஆக்கம் என்றது மேன்மேல் உயர்தல்; உயிர் என்றது மக்களுயிரை; பொருளால் ஆக்கம் உண்டு என்பாரை மறுத்து 'அறம்' வலிமையுடையது என்பது வற்புறுத்தப்பட்டது. பேரின்பத்தினைச் சிறப்பு என்பது குறிப்பதாகும். மறுமைக்குச் சிறப்பான பேரின்பமும், இம்மைக்குச் சிறப்பான செல்வமும் பெறுதல் கூடும் என்பதாயிற்று. 'ஈனும்' என்று குறிப்பிட்டிருப்பது சிந்திக்கத் தக்கதாகும். 'அன்பு ஈனும்' என்று வருகின்ற (74) குறட்பா சிந்திப்பதற்குரியதாகும். சிறப்பு என்றும், செல்வம் என்றும், ஆக்கம் என்றும் கூறப்பட்ட சொற்கள் கருதற்பாலனவாகும். 'வினா' முறையில் காணப்படும் குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும்.

### 32 அறத்தின்ஊங்கு ஆக்கமும் இல்லை...

முந்திய குறட்பாவில், 'அறத்தினூஉங்கு ஆக்கம் எவனோ?' என்ற வினாவுக்கு இக்குறட்பாவில் விடை கூறப்பட்டது. 'மறத்தல்' என்ற சொல் 'பொச்சாவமை' என்ற அதிகாரத்தின் சிந்தனையை உணர்த்துவதாகும்.

அறமானது இம்மை, மறுமை இன்பங்களுக்குக் காரணமாதலால் அதன் சிறப்பு வற்புறுத்தப்பட்டது. அறம் செய்யாக்கால் கேடுவரும் என்பதாயிற்று. இருவகையிலும் 'ஊங்கு' என்றார். 'ஆக்கமும் இல்லை', 'இல்லைகேடு' என்றும் குறித்தார்.

### 33 ஒல்லும் வகையான் அறவினை...

நற்சிந்தை, நற்சொல், நற்செயல் என்பதனை உணர்த்தவே, 'ஒல்லும் (இயலும்) வழிகளில் எல்லாம் அறம் செய்க' என்றார்; இல்லறம் துறவறம் இரண்டிற்கும் பொது வாகக் கூறப்பட்டதாகும்.

'ஒல்லும் வகையான்' — என்பது. இல்லறம் பொருள் அளவிற்கு ஏற்பவும், துறவறம் யாக்கை நிலைக்கு ஏற்பவும் செய்தலாகும். இடைவிடாமல் செய்வதை 'ஓவாதே' என்றார். செல்லும்வாய் என்பது, மனம், வாக்கு, உடல் என்பனவாகும். அவற்றால் செய்யும் அறங்களாவன: முறையே நற்சிந்தையும், நற்சொல்லும், நற்செயலும் என இவையாகும். 'ஒல்லும் என்றதால் அவரவர் நிலைமைக்கு ஏற்ப என்பது குறிக்கப்பட்டது. வகையான் என்பது சிந்தித்தறிய வேண்டியதாகும். 'வினை' என்பது செய்தலாகும். 'வினை' என்று கூறியதால் 'செயல்' என்பது கூறப்பட்டது. எல்லா இடத்திலும், எல்லாக் காலத்திலும் செய்தல் வேண்டும் என்பது தெளிவு படுத்தப்பட்டது.

**34 மனத்துக்கண் மாசுஇலன் ஆதல்...**

'மனத்தது மாசு ஆக' (278) என்பதனைக் கருதிப் பார்க்கவும்; பிறவும் காண்க; 'மாசு' என்பது, தீயவை சிந்தித்தலாகும். மனம் தூய்மையில்லாமல், பிறர் அறிய வேண்டிச் செய்தலால், 'ஆகுல நீர' என்றார். மனத்தில் தீய எண்ணங்கள் வைத்துக்கொண்டு, மொழி, மெய்களால் செய்வன பயனற்றவைகளாகும்! இங்கே, 'கூடாவொழுக்கம்' என்ற அதிகாரம் சிந்திக்கத்தக்கது. 'மனத்தின் அமையாதவரை' (825) 'மனநல்லர் ஆகுதல்' (823) என்பன போன்ற குறட்பாக்களைச் சிந்திக்கவும், ''சிற்றினம் சேராமை'' என்ற அதிகாரத்தில் ஏழு குறட்பாக்கள் 'மனம்' என்ற சொல்லினை வைத்தே தொடங்குகின்றன.

மனதில் மாசு (குற்றம்) உடையனாய வழி, அதன் வழியாகிய மொழி, மெய்களால் செய்வன பயனிலவாகும் என்பது பெறப்பட்டது. மனம் தூய்மையில்லாமல், சொல்லுகின்ற சொல்லும், வேடமும் அறமெனப்படாவாம், 'ஆரவாரம்' என்கின்ற தன்மையினவேயாகும். 'மனத்தது மாசாக' (278) என்பது போன்ற குறட்பாக்கள் ஆராய்வதற்குரியன. மனத்தின்கண் குற்றம் இல்லாதிருத்தலே எல்லா அறமுமாகும். 'அனைத்து அறன்' என்பது உறுதிப்பாட்டினை உணர்த்திற்று. 'மலர்மிசை ஏகினான்' (3), மனக்கவலை மாற்றல், (7) என்ற குறட்பாக்களை நினைவில் கொள்ளுதல் வேண்டும். 'மனம்' என்றதால் நினைத்தற்கிடமாயிற்று. தீயவற்றை நினைத்தலே குற்றமாம்.

**35 அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் ...**

மர்சுள்ள மனத்தினை வைத்துக்கொண்டு செய்யப்படுபவை அறமாகாது என்று தெளிவு படுத்தப்பட்டது. இக்குறட்பாவினால் பல அதிகாரங்கள் நினைவுபடுத்தப்படுகின்றன. 'அழக்காறாமை', 'அவாவறுத்தல்', 'வெகுளாமை', 'இனியவை கூறல்' முதலிய அதிகாரங்களைக் கருதிப் பார்த்தல் நலம். மேலும், சொற்களைப்பற்றி விளக்கம் தருகின்ற புறங்கூறுதல், பயனில சொல்லாமை, சொல்வன்மை, அவையறிதல், அவையஞ்சாமை முதலான அதிகாரங்களும் சிந்தனைக்குரியன. தீயவை பலவற்றிற்கும் எடுத்துக்காட்டுகளாக இவை குறிக்கப்பட்டன.

பிறர் செல்வப் பெருக்கத்தைக் கண்டு பொறாமைப்படுதலே, அழக்காறாகும்; புலன்களின் மீது செல்லுவது அவாவாகும். நான்கினையும் நீக்கிய பிறகு நடத்துவதே அறமாகும். இந்த நான்கு குற்றங்களுடன் கலந்து நடைபெறுவது அறம் எனப்படாது. இந்த நான்கு குற்றங்களையும் கொண்டு நடந்து செய்யப்பட்டதோர் அறம் ஐயப்படத்தகும் என்றவாறு 'அழக்காறாமை', 'அவாவறுத்தல்', 'வெகுளாமை', 'இனியவை கூறல்' முதலியன சிந்தனைக்குரிய அதிகாரங்கள். 'பயனில சொல்லாமை' 'புறங்கூறாமை' முதலிய அதிகாரங் களும் சிந்தனைக்குரியனவாகும். இல்லறவியலில் காணப்படும் அழுக்காறாமை, இனியவை கூறல் புறங்கூறாமை என்பன போன்ற அதிகாரங்களும், துறவறவியலில் காணப்படும் அவாவறுத்தல், வெகுளாமை என்ற அதிகாரங்களும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. இல்லறத்தான், துறவி ஆகிய இருசாரார்க்கும் உணர்த்தப்பட்டதென்பது குறிப்பாகும்.

**36 அன்றுஅறிவாம் என்னாது அறம் செய்க ...**

உடம்பு அழியவும், அது உயிருடன் ஒன்றி நின்று ஏனைப் பிறவிகளுடன் சேர்தலின் 'பொன்றாத்துணை' என்றார்.

"யாம் இதுபோது இளையம் ஆதலின் இறக்கும்போது செய்துமெனக் கருதாது" அறத்தினை நாள்தோறும் செய்தல் வேண்டும். அப்படிச் செய்யப்பட்ட அறம், இவ்வுடம்பி னின்றும் உயிர் போங்காலத்தில் அதற்கு அழிவு இல்லாத துணையாம் என்றவாறு, 'மற்று' என்பது அசைநிலை; 'பொன்றாத்துணை'—அறத்தினைச் செய்தவுடம்பு அழியவும், உயிரோடு பொருந்தி மற்றைய உடம்பிலும் சேறலின், என்பதாம். இத்தன்மையான அறத்தினை, நிலையாத யாக்கை, நிலைத்து நின்றபோதே செய்க என்று கூறப்பட்டது. எதனையுந் 'ஒத்திப்போடுதல்' என்ற நினைப்பு தீமை என்பது குறிக்கப்பட்டது. பொன்றுவது எது—பொன்றாதது எது, என்பது சிந்திக்கத்தக்கதாகும். அழியாத துணை எது—என்ற வினாவுக்கு விடை கூறப்பட்டது. அறம் செய்வதற்கு 'இதுதான் காலம்' என்பது இல்லை; பின்னர் செய்வோம் என்று இருக்காமல் முன்னதாகவே செய்க என்றார்.

## 37 அறத்தாறு இதுஎன வேண்டா...

அறத்தின் பயன், சொற்களால் எடுத்துக் கூறப்படாமலேயே கண்ட காட்சி யள வினாலேயே உணரப்பட்டுவிடும் என்பதாகும். 'ஆறு' என்பது பயன் என்பதைக் குறித்தது. 'பொறுத்தானோடு ஊர்ந்தானிடை' என்பதனால் காட்சியளவு உணர்த்தப்பட்டது, தூய நெஞ்சம் கொண்டவர்கள் முனிவர்களென்றும், அந்தணர் என்றும், பெரியார்கள் என்றும் கொள்ளப்படுவார்கள். அவர்களே அறநிலையில் வாழ்பவர்களாவார்கள்.

இன்றும், உலக வழக்கில் சான்றோர்கள், உலகப் பெரியார்கள், மக்களுக்காக வாழ்ப வர்கள், அறநெறி சார்ந்தவர்கள் என்று கருதப்படுகிற பெரியோர்களைப் பல்லக்கில் வைத்துத் தூக்கி மக்கள் சிறப்புச் செய்வதையும், தேரில் வைத்து இழுத்து மகிழ்வதையும் காண்கிறோம். மேலோர்கள் — அறநெறியாளர்கள் — சிறப்பிக்கப்படுவர் என்பதே கருத்தாகும். 'சுகம்' அனுபவிக்க ஒருவன் பல்லக்கில் உட்கார்ந்து கொண்டு, அடிமைப் படுத்தும் கருத்துடன் மற்றவர்களைத் தூக்கச் செய்து கொடுமைப் படுத்துவது என்பது இக்குறட்பாவின் பொருளன்று; அறம் என்பது எத்தகைய பெருமையினை இயல்பாகவே உண்டாக்கவல்ல தென்பதனைக் காட்சியளவினால் காணச் செய்து, அறத்தின் பெருமையினை உணர்த்தினார், எக்காலத்திற்கும் சிறப்புற்றிருக்கும் அறத்தின் பெருமையினை அக்காலக் கருவியான பல்லக் கினால் உணர்த்தினார். இது சிந்திக்கத்தக்கது. கருத்தேயன்றி — கருவியல்ல! புதிய பொருள்களைப் பழைய செய்தித்தாள்களில் மடித்துக் கொடுத்தல் வழக்கமன்றோ! காண்கின்ற காட்சியே, கருத்தினை எளிமையாகப் புரிய வைக்கும், ஆகையால், எடுத்துச் சொல்ல வேண்டாம் என்பதற்காக, 'இது என வேண்டா' என்று கூறினார். 'சிறப்பீனும் செல்வமும் ஈனும்' (31), என்ற குறட்பா சிந்திக்கத்தக்கதாகும். சிவிகையினை (பல்லக்கினைச்) சுமப்பவர்கள் பலராக இருந்தாலும், அமர்ந்திருப்பவன் (ஊர்ந்தான்) ஒருவனே ஆனபடியால் சுமப்பவர்களில் ஒருவனைக் காட்டி 'அவனும் இவனும்' என்று உணர்த்த வேண்டியே 'பொறுத்தான்' என்று ஒருமையால் கூறினார்.

மக்களிடையே உயர்ந்த மேலோராகக் கருதப்படும் சான்றோர்கள் — முனிவர்கள் — என்பவர்கள் மக்களால் பாராட்டப்படுவார்கள் என்பதற்கு இக்காட்சி எடுத்துக்காட்டாகும். இன்றும் நடைமுறையில் அறநெறியில் வாழ்பவர்களை இவ்வாறு சிறப்பிப்பதைக் காண் கின்றோம். பணம் படைத்தவன் உட்கார்ந்து கொண்டு, ஏழ்மையாளனைச் சுமக்கச்

செய்கின்றான் என்ற எண்ணத்தில் இக்குறட்பா அமைக்கப்பட்டதன்று. அறிவிலும் ஆற்றலிலும் சேவையிலும் மக்களிடையே பெரியார்களானவர்கள் வாகனங்களில் அமர்த்தப்பட்டுச் சிறப்பிக்கப் படுவதை இன்றும் காண்கின்றோம். 'ஆறு' என்பது பயனைக் குறித்துக் காட்டிற்று.

**38 வீழ்நாள் படாஅமை நன்றுஆற்றின்...**

'வீழ்நாள் படாஅமை' என்பது 'அறவினை ஓவாதே — செயல்' (33) என்பதனை விளக்கிக் காட்டுவதாகும். 'பிறவிப் பெருங்கடல்' (10), 'பிறப்பென்னும் பேதைமை' (358), 'பிறப்பு ஈனும் வித்து' (361) என்பன போன்றவற்றையும் ஆராய்ந்துணர்க!

உயிர் யாக்கையோடு கூடி நின்று வினைப் பயன்களை நுகருமாதலின், அந்நாள் முழுவதும் — காலம் முழுவதும் — 'வாழ்நாள்' எனப்பட்டது. நல்வினை, தீவினை என்பன இரண்டு வகை வினைகள் எனப்படும். இவ்வினையின் பயன்கள் ஐவகைக் குற்றங்களினால் வருவனவாகும். ஐவகைக் குற்றங்களாவன அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு என்பனவாகும். அறம் என்பதும் பேரின்பம் எனப்படும் வீடும் குறிக்கப்பட்டன. ஆசை என்பதே பிறவிக்கு வித்தாகும். மனம் தூய்மையாகி ஆசை நீங்கினால் பேரின்ப நிலை உண்டாகும். அதனால் பிறவித்துன்பம் அடைக்கப்பட்டுவிடும் என்பதாம். 'வாழ்நாள்', - 'வீழ்நாள்'- சிந்திக்கத்தக்கனவாகும். 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' (10), 'பிறப்பறுக்கும்' (349), 'மற்றீண்டு வாரா நெறி' (356), 'வேண்டா பிறப்பு' (357), 'பிறப்பென்னும் பேதைமை' (358) என்பன போன்ற குறட்பாக்கள் எண்ணிப் பார்ப்பதற்குரியன. பிறப்பும் இறப்பும் துன்பமானதாகும். பிறவாதிருப்பதே பேரின்பம்; இதனைப் 'பேரா இயற்கை' (370) என்று கூறுவர். 'அடைக்கும் தாழ்' (71) என்பதுபோல 'அடைக்கும் கல்' என்று கூறினார். 'நன்று' என்பது அறத்தைக் குறித்தது; அதனையே 'அஃது' என்றார்.

**39 அறத்தான் வருவதே இன்பம்...**

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' (49) என்ற முறையினைச் சிந்திக்கவும்; 'புகழ்' என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உண்டு.

'அறத்தான் வருவதே' என்று குறிப்பிட்டதால், நிலையான — மெய்யான இன்பம் கூறப்பட்டது. 'பொருள் சேர் புகழ்' (5) என்பது சிந்திக்கத்தக்கதாகும். அறத்துடன் பொருந்தாமல் வருவதெல்லாம் இன்பமாகத் தோன்றினாலும், துன்பத்திற்கே காரணமாகும். அத்துடன் நிலையான புகழையும் தராது, தீய வழிகளிலும் இன்பம் நுகர்வதுண்டு; ஆனால் அது மெய்யான இன்பமாகாது; 'புறத்த' என்பதால் துன்பமேயாகும் என்பதாயிற்று; புகழ் என்பது இவ்வுலகப்புகழ் என்பதுமாகும். 'இல்லறஇயலில்' இறுதியாகக் கூறப்படும் அதிகாரம் 'புகழ்' என்பதாகும். உலகில், அறநெறியில் வாழ்வதானது இல்லறம், துறவறம் என்ற இருவகைகளில் அடங்கி விடுவதாகும். இல்லறத்தில் வாழ்பவர்களின் விரிவும், விளக்கமுமே 'பொருட்பால்', 'காமத்துப்பால்' என்ற பெரும்பகுதிகளில் கூறப்படுவனவாகும். 'அறத்தான் வருவதே' என்பது இருதிறத்தார்க்கும் பொதுவாயிற்று. எது மெய்யான இன்பம் என்ற வினாவிற்கு விடை கூறப்பட்டது. 'வருவதே' என்பதில் காணப்படும் 'ஏ'காரம் உறுதிப்பாட்டினை உணர்த்திற்று. 'எல்லாம்' என்றதால் அறமல்லாத வழியில் இன்பமெனக் கருதி நுகரப்படுவன புவவகை எனக் குறிக்கப்பட்டது.

**40 செயற்பாலது ஒரும் அறனே...**

தீய செயல்கள் பழிக்கப்படுவன ஆனபடியால், பழிக்கப்படுபவைகளைப் பழி என்றார்.

'ஒரும்' என்பன இரண்டும் அசை நிலை; அறனே — 'ஏ'காரம் உறுதிப்பாட்டினை உணர்த்திற்று. பழிக்கப்படுவதனைப் பழி என்றார். முன்னர், அறம் செய்யப் பிறப்பு அற்று விடும் என்றார், அதனோடு அறமல்லாத 'பாவம்' செய்தால் பிறப்பு அறாது என்பதற்கு இதைக் கூறினார். மனம், மொழி, மெய் ஆகியவற்றால் செய்யப்படுவன யாவும் அறமே யாகும். செயற்பாலது எது — உயற்பாலது எது — என்பன தெளிவுபடுத்தப்பட்டன. 'அறத்ினூஉங்கு ஆக்கமும் இல்லை' (32) என்ற குறட்பா சிந்திக்கத்தக்கதாகும்.

'கடவுள் வாழ்த்து' என்ற முதல் அதிகாரத்தில் காணப்படும், 'கடல்', 'ஆழி' என்பன, 'வான் சிறப்பு' என்ற அதிகாரத்தையும், 'பொய்தீர் ஒழுக்கம்' என்பது, 'ஒழுக்கத்து நீத்தார்' என்று காணப்படுவன 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்தையும் குறிக்கின்றன. மேலும் 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரத்தையும் குறிப்பதாகும். 'இல்லறம்', 'துறவறம்' ஆகிய இருவகை உலக வாழ்க்கையினருக்கும், பொதுப்படக் கூறப்பட்ட 'முதல் நான்கு' அதிகாரங் களும் நூலுக்குப் 'பாயிரம்' எனப்பட்டவையாகும். முதல் அதிகாரம் 'வாழ்த்து' என்பதனாலும் இரண்டாம் அதிகாரச் 'சிறப்பு' என்பதனாலும் மூன்றாம் அதிகாரம் 'பெருமை' என்பதாலும், நான்காம் அதிகாரம் 'வலியுறுத்தல்' என்பதனாலும் விளக்கப்பட்டனவாகும்.

---

**1 அறத்துப்பால்** **2 இல்லற இயல்**

---

## 5 இல்வாழ்க்கை

**41 இல்வாழ்வான் என்பான் இயல்புடைய...**

இல்வாழ்க்கை — வாழ்க்கைத் துணைநலம் என்ற இந்த இரண்டு அதிகாரங்களில் தான், வாழ்க்கை என்ற சொல் காணப்படுகின்றது. 'அறு தொழிலோர்' (560) என்று கூறியது போல, 'மூவர்க்கும்' என்று கூறினார். 'இயல்புடைய' என்ற சொல்லினால், ஒவ்வொருவருக்கும் இயற்கையில் இயல்பாக உடனிருந்து பாதுகாக்கப்பட வேண்டிய பெற்றோர், மனைவி, மக்கள் குறிக்கப்பட்டார்கள். 'இயல்பினான் இல் வாழ்க்கை' (47) என்பது போன்றவை ஆய்வதற் குரியவை.

இல்லறத்தோடு கூடி வாழ்பவன் இல்வாழ்வான் எனப்பட்டான். இயல்புடைய மூவர்க்கும் 'நிலைபெற்ற துணையாவான்' என்பதனை 'நல்லாற்றின் நின்ற துணை' என்பது விளக்கிற்று. இயல்புடைய மூவர் என்றதால் இல்லறத்தானுடனேயே இருப்பவர்கள் என்பது பெற்றாம். 'தற்கொண்டான்' (51, 56), தன் மகனை, (69), இவன் தந்தை (70) என்பன

போன்ற குறட்பாக்கள் சிந்தித்தறிய வேண்டுவனவாம். மனைவியை 'வாழ்க்கைத் துணை' என்று கூறியது போல, இல்வாழ்வான் 'மூவர்க்கும் துணை' என்று குறிக்கப்பட்டான். 'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன்' (47) என்பதும் கருதற்பாலதாகும். 'நன்றாற்றின்' (38) என்று கூறியதுபோல், 'நல்லாற்றின்' என்று விளக்கம் தந்து கூறினார்.

**42 துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும்...**

'துறவற இயல்' குறிக்கப்பட்டது. 'இறந்தார்' என்பது, ஆதரவற்றுத் தம்மிடம் வந்து இறந்து போனவர்களாவர். அனைத்தும் செய்ய வேண்டியது இல்லறத்தான் என்க; நல்குரவு, இரவு, இரவச்சம் என்ற அதிகாரங்களையும் சிந்திக்கவும்.

துறவிகளுக்கும் வறுமையுற்றோர்களுக்கும் இல்லறத்தானே துணையாதல் வேண்டும். மேலும், ஒருவருமின்றித் தன்பால் வந்து இறந்தவர்களுக்கும் இல்லறத்தானே துணையாக நிற்றல் வேண்டும். செத்தார்க்கு இல்வாழ்வான் செய்ய வேண்டுவன புறங்காட்டுய்த்தல் முதலியனவாகும். துறந்தார் தவம் செய்தற்குரியர் ஆனபடியால், அந்நிலை இடையூறின்றி நடைபெறத் துணை வேண்டுவதாயிற்று. 'துவ்வாதவர்'—வறுமையுற்றோர்; 'துவ்வாமை' (94) என்பதும் அதுவேயாகும். முந்திய குறட்பாவில் இல்லறத்துடன் கூடிய மூவரைக் கூறினார். இக்குறட்பாவில் புறத்தோரான மூவரைக் கூறினார். இப்பாடலில் இல்வாழ்வான் கடமை உணர்த்தப்பட்டது.

**43 தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல்...**

எல்லோரையும் போற்றிக் காக்க வேண்டியது இல்லறத்தான் கடமையாகும். 'தென்புலத்தார்' என்பது முன்னோர்களையும் மேலோர்களையும் குறிக்கும். மேலான ஆற்றல் பெற்றவையும் இயற்கையும் 'தெய்வம்' என்று குறிக்கப்பட்டன; பிற இடங்களிலும் கண்டு தெளிக. 'விருந்தோம்பல்', 'சுற்றம் தழால்' என்ற அதிகாரங்கள் நினைவு படுத்தப்பட்டன.

ஐந்திடத்தும் செய்யும் அறநெறியை வழுவாமல் செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறம் என்பதனை 'ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை' என்று கூறினார். ஐவகையும் அறம் செய்வதற்கு இடம் ஆதலின் 'ஐம்புலம்' என்றார். புலம் — இடம்; 'தென்புலத்தார்' என்பது முன்னோர்கள் — பரம்பரையினர் — என்பதாகும். 'தெய்வம்' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. தெய்வம் என்பது இயற்கை யாற்றலினையும், இயல்பான மனித ஆற்றலுக்கு மேம்பட்ட ஆற்றல் படைத்தவர்களையும் குறித்ததாகும். 'தெய்வம்' என்ற சொல், 43, 50, 55, 619, 702, 1023 முதலிய ஆறு குறட்பாக்களில் சொல்லப்பட்டுள்ளது. விருந்து — புதியதாய் வந்தோர்; ஒக்கல் — சுற்றத்தார்; தான் — தன்னையும்; 'சுற்றம் தழால்' என்ற அதிகாரம் உறவினர், சூழ்ந்திருப்பவர்கள் என்ற இருசாராரையும் குறிப்பதாகும். 'புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும்' (538) என்பது சிந்தனைக்குரியதாகும். இல்வாழ்வான், தன்னையும் போற்றிக் காத்துக் கொள்ளுதலினை வற்புறுத்தவே 'தான்' என்றும் கூறினார். துறவிகளுக்கு 'உடம்பும் மிகை' (345) என்பது கருதற்பாலதாகும். 'விருந்தினர்' வேறு 'ஒக்கல்' வேறு, என்பது தெளிவுப்படுத்தப்பட்டது.

### 44 பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின்....

பாவத்தால் வந்த பொருளினைப் பகுத்துண்ணுதல் குற்றமுடையது ஆகையால், 'பழி அஞ்சி' என்றார். 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' (322), 'தம் இல் இருந்து தமது பாத்து உண்டற்றால்' (1107) என்பன போன்றவை எண்ணிப் பார்த்தற்குரியவை.

பொருள் சேர்க்கும்போது பழி, பாவத்திற்கு அஞ்சிச் சேர்த்தல் வேண்டும். மாறாக நடப்பவன் பரம்பரை, மறைந்தொழியும் என்பதாம். 'பகுத்துண்ணுதல்' இல்வாழ்வானுக்குத் தலையான கடமையாகும். துறவறப் பகுதியில் கூறும்போதும் 'பகுத்துண்டு பல்லுயிர்' (322) என்று கூறினார். இவ்வாறே பிற இடங்களையும் காணுதல் வேண்டும். 'ஈகை' என்ற அதிகாரம் இக்கருத்தினைச் சிறப்பிப்பதாகும். பகுத்துண்ணுங்கால், பழியோடு வாராத பொருளைப் பகுக்க வேண்டும் என்று குறிப்பிட்டார். ஆதலால் 'பழியஞ்சிப் பாத்தூண்' என்று கூறினார். 'தாமே தமியர் உணல்' (229) என்ற குறட்பாவும் 'எச்சத்திற்கு ஏமாப்பு' (112) என்ற குறட்பாவும் சிந்தனைக்குரியன.

### 45 அன்பும் அறனும் உடைத்தாயின்...

அன்பு பண்பாயிற்று; அறம் பயனாயிற்று. அன்புடைமை, அறன் வலியுறுத்தல், பண்புடைமை முதலிய அதிகாரங்களால் உணர்த்தப்பட்டன.

நல்ல மனம் உடைமையினை அன்பும், நற்செயல் புரிவதை அறமும் குறிப்பால் உணர்த்தின. இல்வாழ்க்கையென்பது தானும் தன் குடும்பமும் உண்டு துய்த்துப் பிள்ளைகள் பெற்று வாழ்ந்து மறைவது என்று கருதுவது மிகத்தவறு என்பதும், இல்வாழ்க்கையின் பண்பும், பயனும் யாவை என்பதும் விளக்கப்பட்டது. 'அன்பும் அறனும்' என்பதும், 'பண்பும் பயனும்' என்பதும் சேர்த்து எண்ணப்படுதல் வேண்டும். முந்திய குறட்பாவில் கூறியது போலவே இக்குறட்பாவிலும் 'உடைத்தாயின்' என்று கூறியது, கூறப்பட்ட கருத்தின் அருமையினைக் குறிப்பிட்டதாகும்.

### 46 அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின்...

பழி அஞ்சிப் பகுத்து உண்ணுவதை 'அறத்தின் ஆறு' என்றார். துறவறத்தினைப் புறத்தாறு என்றார். இயல்பான இல்லறத்தினை விட்டுவிட்டுப் 'போகின்றானே' என்பதை வலியுறுத்தவே "போஒய்ப் பெறுவது எவன்" என்று அமைத்துக் காட்டினார்.

இல்லறத்தில் இருப்பவன் அதனை நடத்த வேண்டிய முறையில் நடத்துவதே போதுமானதாகும் என்பது வலியுறுத்தப்பட்டது. துறவறத்தைப் பற்றி அவன் சிந்திக்க வேண்டாம். 'போஒய்ப் பெறுவது எவன்' என்று கூறியதால் நோன்பு நோற்றல் (விரதம்) என்பதனை மேற்கொள்ள வேண்டிய துறவறத்திற்குப் போக வேண்டியதில்லை என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. இதில் வினா எழுப்பி விடை கூறப்படுகின்றது. நன்முறையில் நடத்தப் பெறுகின்ற இல்லறமே போதும் என்பதாகும். அவரவர்கள் மேற்கொண்டுள்ள வாழ்க்கையிலேயே கடமை செய்து வாழ்தல் வேண்டும். 'புறத்தாற்றின்' என்பதால் இல்லறத்திற்குப் புறம்பான துறவறம் குறிக்கப்பட்டது. பற்றுடன் வாழவேண்டிய இல்லறத்தான் பற்றற்ற வாழ்க்கையான துறவறத்தினை நினைப்பது கூடவே கூடாதென்ப

தாகும். 'ஆற்றின்' என்பது மும்முறை கூறப்பட்டது. இயல்பான இல்லறத்தினை விட்டுத் தவமேற்கொண்டு வாழும் வாழ்க்கையைப் 'போஒய்' பெறுவது, என்று கூறினார். இல்லறத்திற்கு மாறுபட்ட வாழ்க்கை அனைத்தையும் 'புறத்தாற்றின்' என்பது பொதுப்படக் குறித்தது. 'போய்ப் பெறுவது எவன்', 'முயல்வாருள் எல்லாம் தலை' (4 ), 'நோற்பாரின் நோன்மையுடைத்து' (48), 'அஃதும்' (49), 'வாழ்வாங்கு வாழ்பவன்' (50) என்பன போன்று வருவன அனைத்தும், மேற்கொண்ட இல்லற நெறியில் ஒழுங்குபட வாழ்தலே மிக்க சிறப்புடையதென்பதனை வற்புறுத் னவாகும். மனைவி மக்களுடன் வாழ்கின்ற இல்லறத்தான், அவ்வழியில் விலகித் 'துறவியாகச் செல்லலாமே' என்று நினைத்தலும் உண்டு என்பதனைச் சுட்டிக்காட்டி அவ்வாறு நினைத்தல் குற்றம் என்பது உணர்த்தப்பட்டது.

### 47 இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன்...

முயல்வார் என்றது ஆசைகளைவிட்டுத் துறவறத்தில் நிற்க முயற்சி செய்பவர்களைக் குறித்தது. தவம் செய்வோர் முயன்று ஆசைகளை விடுதல் வேண்டும். அவ்வாறு முயலாது, இயல்பாகவே இல்லறத்தில் நற்பயன் பெறுதலால் 'தலை' என்றார். தவம் செய்பவர்கள் உணவு, உறக்கம் முதலியன விட்டு உடம்பினை ஒறுத்து நோன்பு நோற்பவர்கள் ஆவார்கள். இல்லறத்தானோ எனின், உடம்பை வருத்தாமல் இல்லறம் நடத்திச் சிறப்படைபவனான படியால் 'தலை' என்றார். இல்லறத் தன்மையுடைய மூவரை 'இயல்புடைய மூவர்க்கும்' (41) என்று கூறியது போல இக்குறட்பாவிலும் 'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன்' என்று சிறப்பித்தார். 'முயல்வாருள்' என்பதனை 'ஈண்டு முயலப்படும்' (265) என்பது விளக்குவதாயிற்று.

### 48 ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா...

இல்வாழ்க்கையினை, 'அறன் இழக்கா இல் வாழ்க்கை' என்று அழைத்தார். கட்டுப்பாடுடன் நோன்பு நோற்கின்ற வாழ்க்கையே துறவறமாகும். துறவறப் பகுதியில், அருளுடைமை' அதிகாரம் முதற்கொண்டு, 'கொல்லாமை' அதிகாரம்வரை 'நோன்பு' என்ற பெயரில் அடங்கும். நிலையாமை முதலாக நான்கு அதிகாரங்களும் 'ஞானம்' என்ற பெயரில் அடங்கும்.

தானும் அறத்தினின்று வழுவாமல் நின்று, துறவறத்தில் நின்றவருக்கும் ஆதரவாக இருப்பதால் இல்லற வாழ்க்கை 'நோற்பாரின் நோன்மை உடைத்து' என்று சிறப்பிக்கப்பட்டது. தவம் செய்பவர்கள் 'நோற்பார்' எனப்பட்டனர். 'உற்ற நோய் நோன்றல்' (261), 'நோற்கிற்பவர்க்கு' (267), 'நோற்றலின் ஆற்றல்' (269), 'நோற்பார் சிலர்' (270) என்பன போன்று வருபவை நோன்பு நோற்கின்ற தவசிகளைக் குறித்தனவாகும். 'இழுக்கா இயன்றது அறம்' (35) என்று கூறியது போல இக்குறட்பாவில் 'அறன் இழக்கா இல்வாழ்க்கை' என்று குறிப்பிட்டார். 'இல்லறத்தார்', 'துறவறத்தார்' என்பவர்களின் வாழ்க்கையில் உயர்வு தாழ்வு என்று பேசப்படுவதாகாது என்பதும், அவரவர்கள் தாம் தாம் மேற்கொண்ட வாழ்க்கையில் ஒழுங்குற நடப்பார்களேயானால் பெருஞ் சிறப்பிற்கு உரியராவர் என்பதும் வற்புறுத்தப்பட்டது.

### 49 அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை...

'பிறன் பழிப்பது' என்று கூறியது கூடாவொழுக்கத்தினையே. 'கூடாவொழுக்கம்' என்பதாகத் தனி அதிகாரம் இருக்கின்றது. மனத்தையும் பொறிகளையும் அடக்கி நடத்த வேண்டியது துறவறமாகும். அஃது அருமையானது. ஆதலால் 'பழிப்பது இல்லாயின்' என்று கூறினார். 'எனப்பட்டதே' என்பதில் உள்ள 'ஏ'காரம் பிரித்துக் காட்டுவதை உணர்த்திற்று. இல்லறத்தின் சிறப்பு அத்தகையதாகும். 'அஃதும் நன்று' என்றார். அதாவது துறவறமும் நன்று என்றார். எப்போது? பிறன் பழிப்பது இல்லாமலிருக்கும்போது என்பதாகும். துறவறம்—ஆசையற்ற அறம்—எவ்வளவு கடினம் என்பது குறிப்பால் உணர்த்தப் பட்டது.

### 50 வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்...

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுலகத்தில் தேவருள் ஒருவனாக வைத்து மதிக்கப்படுவான் என்பது குறிக்கப்பட்டது. இவ்வுலக இல்லறத்தில் வாழவேண்டிய முறையில் வாழ்தலே போதும் என்பது உணர்த்தப்பட்டது. வானுலகம் — தேவருலகத்திற்கென்று வாழ வேண்டிய முறையென்பதொன்றுண்டு என்பது இல்லையாகும். இல்லறக் கடமை செய்து வாழ்தல் வற்புறுத்தப்பட்டது. வானத்தில் உறையும் 'தெய்வங்கள் உலகம்' என்ற வழக்கு மக்களிடையே நிலவுவதான கருத்தாகும். ஆதலால், இல்லறத்தில் வாழவேண்டிய முறைகளை மறந்தும், செய்ய வேண்டிய கடமைகளை மறந்தும் இருக்கின்ற மக்கள் உண்டு என்பதைச் சுட்டிக்காட்டி உண்மை போதித்தார். வானுலகத்தில் வாழ்தற்கென்று வேறு செயல்களோ கடமைகளோ இல்லை என்பதையும், இல்லறத்தில் வாழவேண்டிய முறையில் வாழ்வதே போதுமானதாகும் என்பதையும் எடுத்துக் காட்டினார். அனைத்திற்கும் மேலானது, இல்லறத்தில் முறையுடன் வாழ்வதேயாகும் என்பது விளக்கப்பட்டது. மக்களிடையே இருந்து வரும் கருத்துக்களை அப்படியே அமைத்துக்காட்டி, உண்மையினைப் போதித்தல் ஆசிரியரின் முறையாகும். வானுலகம், மிக்கதோர் மேலான இன்பம் பயக்கும் உலகம், என்பதோர் வழக்கு மக்களிடையே உண்டானபடியால் அந்த உலகமும் இவ்வுலகில், இல்லறத்தில் நன்முறையில் வாழ்பவனுக்கு உண்டு என்பது குறிக்கப்பட்டது. வானுலகத்தினைப் பற்றிச் சிந்திக்காமலேயே இருந்து, வையத்துள் வாழ்வாங்கு வாழ்தலே அமையும் என்பதும் குறிக்கப்பட்டதாகும். ஆகவே இல்லறக் கடமைகளையே செய்க என்பதாம்.

## 6 வாழ்க்கைத் துணை நலம்

### 51 மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற்...

'தக்க', 'தக்காள்' என்ற சொற்கள் பன்முறையும் சிந்திக்கத்தக்கன. இல்வாழ்க்கைக்கு ஏற்றவளாக இருத்தல் வேண்டும். 'ஆகு ஆறு அளவு' (478) என்பது போன்ற குறட்பாக்களையும் எண்ணிப் பார்த்தல் நல்லது. 'அளவறிந்து வாழாதான்' (479) சிந்திக்கத்தக்கது. இல்வாழ்வானுடைய கடமையினை வற்புறுத்திக் கூறிய முந்திய 'இல்வாழ்க்கை' அதிகாரத்தில் சொல்லப்படாத மாண்பு, மாட்சி, புகழ் என்கின்ற நற்குணச் சிறப்பினைக் கூறும் சொற்களெல்லாம் மனைவியைப் பற்றிக் கூறப்படும் இந்த அதிகாரத்திலேயே சிறப்பாகவும் குறிப்பாகவும் காணப்படுகின்றன. அவளே எல்லாம் என்பது குறிப்பு.

மாண்பு நற்குணங்கள்; அவையாவன: துறந்தார்ப் பேணலும், விருந்தயர்தலும், வறியார்மாட்டு அருளுடைமையும் முதலியன. 'வளத்தக்காள்' என்பது முதலை (வருவாய்) அறிந்து அதற்கேற்ப செலவிடுதலாகும். 'தக்க' என்று குறிப்பிட்டதால் மனைவாழ்க்கைக்குத் தகாத குணமுடையவர்களும் உண்டு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'தக்க மாண்புடையள்', 'வளத்தக்காள்' என்பன சிந்தனைக்குரியன. வருவாய்க்குத் தக்க வாழ்க்கையை உடையவளாக இருத்தல் வேண்டும் என்பது சிறப்பான கருத்தாகும். அதனாலேயே அவள் வாழ்க்கைத் துணை எனப்பட்டாள். இல்வாழ்வானை 'நின்ற துணை' (41) என்றார். மனைவியை 'வாழ்க்கைத்துணை' என்றார். அவளுடைய சிறப்பு (மாண்பு) மனைத்தக்க மாண்பாக இருத்தல் வேண்டும். அதுவல்லாமல், வேறு மாண்புகள் அவளுக்கு இருந்தாலும் பயனில்லை என்பதாயிற்று.

## 52 மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின்...

மனைவியை, இல்லாள் என்றார்; அவன் இல்வாழ்வான் என்று கூறப்பட்டான்.

'எனை மாட்சி' என்பது வேறு பல செல்வங்களால் எத்துணை மாட்சியுடைத் தாயினும்—என்பதனைக் குறித்தது. இல்லற வாழ்க்கையின் மாட்சி (சிறப்பு), மனையாளின் மாட்சியினையே முதலாகக் கொண்டிருக்கின்ற உண்மை புலப்படுத்தப்பட்டது. இல் (இல்லை) என்று கூறியதால் பயன் படாததாகும் என்பது உணர்த்தப்பட்டது. 'மாட்சி' என்பது நற்குண நற்செயல்களை முதன்மையாகக் கொண்டு நிற்பதாகும்.

## 53 இல்லதென் இல்லவள் மாண்பானால்...

முன்னர்க் கூறப்பட்டதும் இக்குறட்பாவும் பெரிதும் மனைவிக்கு நற்குண நற்செயல் களே மிகமிகத் தேவை என்று கூறுகின்றனவாகும். இவ்விரண்டு பாக்களாலும் இல்லறத்திற்கு முதன்மையாக வேண்டப்படுவது, அவளுடைய மாண்புகளேயல்லாமல் பிறிதல்ல என்பது உணர்த்தப்பட்டது.

இல்லறத் துணைவியின் நற்குண நற்செயல்கள் பிற குறைபாடுகள் அனைத்தையும் நிறைவுபடுத்துவதாகும் என்பதும் குறிக்கப்பட்டது. 'வினாக்கள்' முறையில் காணப்படும் குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். இல்லது என்—உள்ளது என்—என்பன கருத்தினைத் தெளிவுபடுத்துவனவாகும். முந்திய குறட்பாக்களில், 'வாழ்க்கைத் துணை', 'இல்லாள்' என்று கூறினார். இக்குறட்பாவில் 'இல்லாள்' என்று இரண்டுமுறை அமைத்தார். 'மாணா செய்யாமை' (317), 'மாணாப் பிறப்பு'(351), 'மாணா உவகை' (432), 'மாணார்க்கு அரிது'(823), 'மாணாத செய்வான்' (867), 'மாணாப் பிறப்பு' (1002), 'மாணா மடநெஞ்சு' (1297) என்பன போன்று வருகின்ற இடங்கள் சிந்தனைக்குரியனவாகும். இவை 'மாணா' என்பதனைத் தெளிவு படுத்துவனவாகும். 'இயையாக்கடை' (230), 'போற்றாக்கடை' (315), 'உற்றக்கடை' (372), 'அகலாக்கடை' (478), 'அமையாக்கடை' (803), 'உற்றக் கடை' (837), 'இழிந்தக்கடை' (964), 'ஆதல் கடை' (998), 'நின்றக்கடை' (1019), 'இலாக்கடை'(1059), 'நீத்தக் கடை' (1149), 'கொள்ளாக்கடை' (1195) என்பன போன்று வருகின்ற இடங்களிலெல்லாம் அமைப்பு முறையினைக் கண்டறிதல் சிறப்பானதாகும். இக்குறட்பாவில், 'மாணாக்கடை' என்று கூறினார். என் — என்ற வினா இருமுற்றை காணப்படுவதால் இக்குறட்பாவின் தனிச் சிறப்பு விளங்குகிறது.

**54 பெண்ணின் பெருந்தக்க யாவுள...**

இக்குறட்பாவுக்கு விடை தருவதாக 'கடலன்ன காமம்' (1137) என்ற குறட்பா அமைந்துள்ளது. கற்பு என்பதனை விளக்க வேண்டியே 'கற்பு இயல்' என்ற பகுதி அமைக்கப் பட்டுள்ளது. 'ஒருமை மகளிரே போல' (974) என்ற குறட்பாவும், இது போன்றவையும் கருதுதற்குரியன.

கற்புடைய மனைவியைப் போல, அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றற்கும் காரணமாகப் பிற இல்லாததால் 'யாவுள' என்றார். 'பெறின்' என்பது அருமையினை உணர்த்திற்று. 'வினா' முறையில் அமைந்துள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். 'பெண்ணில் பெருந்தக்கது இல்' (1137) என்று முடிகின்ற குறட்பா, ஒப்பிட்டுப் பார்த்தற் குரியதாகும். 'கற்பியல்' என்ற பெயரில் பதினெட்டு அதிகாரங்களைக் கொண்ட பகுதி இந்நூலில் அமைந்துள்ளது. 'புயல் என்னும் வாரி' (14), 'உரன் என்னும் தோட்டியான்' (24) என்பன போன்று அமைத்துக் காட்டும் முறையில், 'கற்பு என்னும் திண்மை' என்று இக்குறட்பாவில் அமைத்தார். தக்க, தக்காள் (51) என்றதனை வலியுறுத்தியே 'பெருந்தக்க' என்று கூறினார். திண்மை என்பது மனங்கலங்கா நிலைமை என்பதாகும். 'உண்டாகப் பெறின்' என்ற அமைப்பு பன்முறையும் சிந்திக்கத் தக்கதாகும். 'செயற்கரிய யாவுள' (781) என்பது போன்ற முறையில் இக்குறட்பாவும் அமைந்துள்ளது. பிறப்பு வகைகளில் பெண் பிறப்புப்போல மேம்பட்டது வேறு இல்லை என்பது எடுத்துக்காட்டப்பட்டது.

**55 தெய்வந் தொழாஅள் கொழுநன் ...**

முந்தைய குறட்பா கற்பின் சிறப்பைக் கூறிற்று. இக்குறட்பா அத்துடன் மட்டும் நில்லாமல், உலகில் சொல்லப்படுகின்ற பற்பல தெய்வங்களை அக்கற்புடைய பெண் தொழக் கூடாது என்று கூறுகின்றது. 'கடவுள் வாழ்த்து' என்ற பகுதியில் கூறியவாறு ஓர் இறைவனை வணங்குவதும், நாயகனை (தலைவனை) வணங்கிப் போற்றுவதுமே அப்பெண்ணுக்குச் சிறப்பாக இருக்க வேண்டியவையாகும். இப்படிப்பட்ட நோன்பு நோற்கின்றவர்கட்கு ஐம்பூதங்களும் வசப்படும் என்பதாகும். ஒருமனப்பட்ட மனத்தினால் எண்ணியவை நடக்கும். விளக்கம் பிறிதோர் இடத்தில் கண்டு தெளிக. மழை பெய்யும், பெய்யாது என்ற கருத்தினைக் கூறுகின்ற இயல்புளி கோலோச்சும் (545), 'முறை கோடி மன்னவன்' (559) என்ற குறட் பாக்களையும் சிந்திக்க வேண்டும். 'செங்கோன்மை', 'கொடுங்கோன்மை' என்ற அதிகாரங்கள் ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு குறட்பாக்கள் மழையைக் குறித்துள்ளதைச் சிந்திக்கவும். தெய்வம் (இயற்கை) ஏவல் செய்யும் என்பதாம்.

தெய்வங்கள் என்று கூறப்படுவனவற்றைத் தொழமாட்டாள் என்பதாகும். 'தெய்வம்' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. 'தொழுவதற்கு மனந்தெளிவது துயிலெழுங்காலத்தாதலின் 'தொழுது எழுவாள்' என்றார்; தெய்வம் ஏவல் செய்யும் என்றார். 'தெய்வம் மடிதற்று' (1023) என்று வருகின்ற குறட்பாவினைச் சிந்தித்தறிதல் வேண்டும். 'எழுதல்' என்பது உறங்கி எழுதல் என்பதாகும். முந்தியக் குறட்பாவில் கற்பின் சிறப்பினைக் கூறிய ஆசிரியர், இக்குறட் பாவில் தொழ வேண்டாததையும் கூறினார். 43-ஆவது குறட்பா விளக்கத்தைக் காண்க. ஒருமனப்பட்ட உறுதியினால் இயற்கையான நிலம், நீர், தீ, காற்று, விண் இவற்றை வயப்படுத்த

முடியும் என்பது கருத்து. விஞ்ஞான அறிவால் மேற்கூறிய இயற்கைப் பிரிவுகளை மனிதன் தன்வயப்படுத்திப் பயன்படுத்துகிறான் என்பது சிந்தித்தறியவேண்டிய உண்மையாகும். 'சபலம்' என்று வழக்கத்தில் கூறப்படுகின்ற கருத்துப்படி மகளிர் கவலையும் துன்பமும் அடைகின்ற காலத்திலும் அல்லது ஆசை மேலிட்ட காலத்திலும் பற்பலவற்றைத் தொழுகின்ற எண்ணம் மிகுந்திருத்தல் காணப்படும் என்பதும் சித்திக்கத்தக்கதாகும். கணவன் மீது பற்று ஒருகால் குறைந்து இருப்பதும் கூடும். அவளின் தேவைக்கெல்லாம், அவள் எதிர்பார்த்திருக்க வேண்டியவன் அவன் ஒருவனே என்பது குறிக்கப்பட்டது. இறைவன் வேறு — தெய்வம் எனப்படுவதும் வேறுஎன்பதாகும். தெய்வீகத் தன்மையுள்ளவை மக்கள் உள்ளத்தினைக் கவர்ந்திழுத்தல் கூடும் என்பதாகும். ஒருமனப்படுதல் என்பது தவத்தோர் தன்மையினை உணர்த்துவதாகும். கணவனைப் போற்றிப் பணியாத மனைவி பிறவற்றைத் தொழுதல் தவறு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. பெண்கள், உலகப் பழக்கத்தில் தெய்வங்கள் எனப்படுபவைகளைத் தொழாமல் இருப்பது எளிதல்ல என்கின்ற உண்மையும் குறிக்கப் பட்டது. பொதுப்படக் கூறப்பட்ட 'நற்றாள் தொழாஅர் எனின்' (2) என்றதற்கும் அதையடுத்த பிறவற்றிற்கும் இக்குறட்பா மாறுபட்டதாகும். 'கற்பு என்னும் திண்மை' (54) என்று கூறப்பட்ட குறட்பாவுக்கும், இக்குறட்பாவுக்கும் உள்ள வேறுபாட்டை அறிதல் வேண்டும். கற்புடைய பெண்களாக இருப்பவர்கள் வேறு தெய்வத்தினைத் தொழுபவர் களாகவும் இருக்கலாம்! ஆதலால், இக்குறட்பாவில் வேறு தெய்வத்தினைத் தொழ மாட்டாள் என்று குறிப்பிட்டதால், கற்பு நிறைந்த சிறப்பிற்கு மேலான பண்பு ஒன்றும் கூறப் பட்டதென்று அறிதல் வேண்டும். அதுவே, தனது கொழுநனைத் தவிர பிறவற்றைத் தொழாதிருத்தலாகும்.

### 56 தற்காத்து தற்கொண்டான் பேணி...

தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும் என்பதன் குறிப்பு தன்னுடைய கற்பினைத் தான். தன் ஒருத்தியால்தான் காப்பாற்றிக் கொள்ள முடியும் என்பது இங்கு உணர்த்தப் பட்டது. 'சொல்' என்பது 'புகழ் புரிந்த இல்' (59) என்பதனை விளக்குவதாகும்.

புகழால் பெருமையை உண்டாக்குகின்ற பொறுப்பு மனைவிக்கே உரியது என்பது இதனால் குறிக்கப்பட்டது. பெண் தன்னுடைய கற்பினைத் தானேதான் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பது குறிப்பால் உணர்த்த வேண்டியே, **'தற்காத்து'** என்று கூறினார். அவளுடைய கற்பைக் காப்பாற்ற பிறர் உதவ முடியாது என்பது சிந்திக்கத்தக்கது. தன்னைக் கற்பில் நிறுத்திக் காப்பாற்றிக் கொள்ளுதல், கணவனைக் காப்பாற்றிப் போற்றுதல், இல்லறத் திற்குப் புகழுண்டாக வாழ்தல், ஆக மூன்றினையும் மனைவியின் பொறுப்பாக வைத்தார் வள்ளுவனார்.

பெண்ணிற்குப் புகழ் தேடித் தருவது கற்பு ஒன்றே என்பது குறிக்கப்பட்டது. 'காத்து' என்ற சொல் இருமுறை அமைக்கப்பட்டிருப்பதால், பெண்ணின் கடமை வற்புறுத்தப்பட்டது. 'சோர்வு இலாள்' என்பது 'கற்பு என்னும் திண்மை' என்பதனை எடுத்துக் காட்டுகிறது. 'பேணி' என்பது தனது கணவனை ஒழுக்கத்தில் தவறாமல் காப்பாற்ற வேண்டும் என்பது **சிறப்பாகக்** குறிக்கப்பட்டது. 'புகழ்' என்பது, 'தகை சான்ற சொல்' என்பதால் விளக்கப் பட்டது. **'பேணி'** என்று கூறியதால் கணவனுடைய உடல் நலத்தினையும் போற்றிக்

காப்பாற்றுதல் மனைவியினுடைய இன்றியமையாக் கடமை என உணர்த்தப்பட்டது. 'கொண்டாள்' என்பது சிறப்பாக அமைக்கப்பட்டது. தன்னை வாழ்க்கைத் துணைவியாகக் கொண்ட கணவன் என்பதாகும். அவன் வேறு யாரையும் கொண்டவனில்லை என்பது குறிப்பு. 'எனைமாட்சித் தாயினும் இல்' (52), 'இல்லதென்—உள்ளதென்' (53), 'யாவுள' (54) எனவரும் குறட்பாக்களில் உணர்த்தப்பட்ட உண்மைகளை இக்குறட்பாவில் கூறப்பட்ட **'தகை சான்ற சொல்'** நன்கு மேம்படுத்தும்.

**57 சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும்...**

நெஞ்சினைக் கற்புநெறியில் நிறுத்துவதற்கு 'நிறை' என்று பெயர். 'நிறையழிதல்' என்றொரு அதிகாரமும் உண்டு. இக்குறட்பாவில் காணப்படும் மகளிர் என்ற சொல், 'ஒருமை மகளிரே போல' (974) என்ற குறட்பாவினை நினைவுபடுத்தும்.

மதிலும் வாயில் காவலும் முதலானவற்றைச் **'சிறை'** என்பது குறித்தது. மேற் கூறப் படும் காவல்கள், நிறையென்னும் காவல் அல்லாதபோது பயனில்லை என்பதைக் குறிக்கவே, 'நிறை காக்கும் காப்பே தலை' என்றார். **காப்பே** என்பதில் காணப்படும் 'ஏ'காரம் பிரித்துக் காட்டிக் கற்பின்— காவலின் சிறப்பை உணர்த்திற்று. வினா முறையில் கருத்தை கூறும் குறட்பாக்களில் இதுவும் ஒன்று.

**'சிறை'**, **'நிறை'** என்ற சொற்கள் சிந்தனைக்குரியன. **காக்கும், காப்பு** என்ற சொற்கள் இரண்டிரண்டு முறை கூறப்பட்டுள்ளன. 'ஒருமை மகளிரே போல' (974) என்ற குறட்பா இதற்கு விளக்கம் தருவதாகும். 'மகளிர் மனம் போல' (822) என்ற குறளில் காணப்படும் **மகளிர்** என்ற சொல், 'வரைவின் மகளிர்' என்ற அதிகாரத்தில் காணப்படும் மகளிரைக் குறிப்பதாகும். 'சிறை' உடம்பினைக் காப்பாற்றும்; 'நிறை' மனத்திறனைக் காப்பாற்றும் என்பன குறிப்புகளாகும்.

**58 பெற்றான் பெறின் பெறுவர்...**

உலக வழக்கில், மேலுலகில் வாழ்பவர்கள் சிறப்பான நிலையுடையவர்கள் என்றும் அதற்குப் புத்தேள் உலகம் என்ற பெயரும் உண்டு என்றும் பேசப்படும். அப்படிப்பட்ட மேலான உலகமும், தாம் கொண்ட கணவனைப் போற்றி வணங்கும் பெண்டிரைப் போற்றும் என்றார். உலகில் மக்களிடையே நிலவி வரும் கருத்துக்களை அமைத்துக் காட்டி, வாழ வேண்டிய முறையை எடுத்துச் சொல்லுதல் ஆசிரியரின் முறையாகும். 'வாழ்க்கைத் துணை நலம்' என்ற அதிகாரத்தில் கூறப்பட்டதற்கு மாறான முறையில் இருப்பவைகளை, 'பெண்வழிச் சேறல்' என்ற அதிகாரம் கூறுகிறது.

இல்லறத்தானுக்குக் கூறப்பட்ட 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்' (50) என்று கூறப்பட்டது போல, இல்லற மனைவிக்குச் சிறப்பு நிறைந்திருப்பதாகும் என்பதை இக்குறட்பா எடுத்துக் காட்டுகின்றது. **புத்தேளிர் உலகு, தேவர்கள்** என்ற தலைப்புகளில் விளக்கம் காண்க.

இல்லறக் கடமையில் சிறந்த மனைவியே எல்லாவற்றிற்கும் மேலானவள் என்பது உணர்த்தப்பட்டது. 'பெற்றான் பெறின்' என்பது, 55வது குறட்பாவின் கருத்தினை

வலியுறுத்தும். 'கொண்டான்' (56) என்ற சொல்லின் சிறப்பு 'பெற்றான்' என்ற இக்குறட்பா கருத்தினால் விளக்கப்பட்டது. தம்மை மண மகளிராகப் பெற்ற கணவரையே தாமும் கணவராகப் பெறுவாராயின்—என்ற விளக்கம் குறிக்கப்பட்டது. மனைவி தனது கடமையாகக் கொண்டிருக்க வேண்டியது தனது கணவனை வழிபடுதலேயாகும் என்பதும், புத்தேளிர்—தேவர் உலகம் — மேலுலகம்— என்பன அவள் உள்ளத்தில் நினைக்க வேண்டிய கடமையல்ல என்பதும் குறிப்பால் உணர்த்தப் பெற்றன. என்றாலும், கணவனுக்குக் கடமை செய்தவளையே அந்தப் புத்தேளிர் உலகத்துத் தேவர்கள் போற்றுவார்கள் என்பதும், அத்தேவர்களைப் போற்றுபவர்களைதேவர்களே போற்றார் என்பதும் சிந்தனைக்குரியவையாகும்.

உலக நடைமுறையில் மக்களிடையே இருந்துவரும் — நிலவிவரும் — கருத்துக்களை அப்படியே வைத்துக்காட்டி — ஆனால் — உண்மை 'இதுதான்' என்று எடுத்துக்காட்டுவது ஆசிரியரின் உயர்வான முறையாகும். 'உண்டாகப் பெறின்' (54) என்று குறித்ததைப் போல், 'பெற்றான் பெறின்' என்று இக்குறட்பாவில் குறித்தது அருமையினைச் சிந்திப்பதற்காகும். இல்லறத்தில் சிறந்து வாழ்கின்ற மகளிரைப் புத்தேளிர் உலகத்தில் இருப்பவர்கள் 'வழிபடுவார்கள்' என்பது அறியப்பட வேண்டியதாகும். புத்தேளிர் வாழும் உலகு என்பதை விடச் சிறந்தது எதுவென்ற வினாவிற்கு இங்கே விடை உய்த்துணர வைக்கப்பட்டது.

**59 புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை...**

புகழ் என்ற அதிகாரம் ஒன்று உண்டு. பெருமிதத்துடன் நடப்பவனைச் சிங்க ஏறு நடையான் என்று கூறுவார்கள். நூலில், 'ஏறு' என்ற சொல் இரண்டு இடங்களில் வருகின்றது. அரசருள் ஏறு' (381) என்பது மற்றொன்றாகும்.

பெருமிதம் உடையானுக்குச் 'சிங்க ஏறு' நடையான் உவமம் ஆகலின் 'ஏறு போல்' என்றார். புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் இல்லறத்தில் மனைவியே முதற் காரணமாகின்றாள் என்பது குறிக்கப்பட்டது. இகழ்ந்துரைப்பவர்கள், பகைவர்கள் என்றாயிற்று. பகைவர்கள் இகழ்ந்துரைப்பதற்குக் காரணமும் கூறப்பட்டது. புகழ் என்பது 'தகை சான்ற சொல்' (56) என்பதனையும் குறிக்கும்.

இக்குறட்பாவில் காணப்படும் 'புகழ்' என்ற சொல், 'புகழ்' என்று காணப்படும் தனி அதிகாரத்தையும் நினைவுபடுத்தும். ஒருவனுக்கு 'ஏறு' (ஆண் சிங்கம்) போல நடப்பதுதான் பெருமை. மாடு போல் திரிவது சிறுமை. 'அரசருள் ஏறு' (381) என்பதும் சிந்திக்கத்தக்கதாகும். 'நலம் புரிந்த' (511), 'நன்றி புரிந்த' (994), 'இறப்பே புரிந்த' (977) என்ற குறட்பாக்களில் காணப்படும் புரிந்த என்ற சொல் இக் குறளில் உள்ள புரிந்த என்பதுடன் சிந்திக்கத் தக்கது. 'அணியன்றோ' (1014) என்ற குறட்பாவில் காணப்படும் 'பீடு நடை' என்பதும் சிந்தனைக் குரியதாகும்.

**60 மங்கலம் என்ப மனைமாட்சி...**

'மக்கட்பேறு' என்று அடுத்த அதிகாரம் குறிக்கப்பட்டது. 'நன் மக்கட்பேறு' என்பது சிந்திக்கத்தக்கது. நன்மக்களை அணிகலன் என்றார். 'அணிகலன்கள்' இல்லாமலும் இருப்பவர்களுண்டு!

நற்குண நற்செயல்களான நன்மைக்கு, **நன்மக்கள்** என்பது ஆபரணம் ஆயிற்று. 'மற்று' அசைநிலை; நன் மக்கள் என்பது சான்றோர்களால் மதிக்கப்பட்ட அறிவினையுடைய மக்கள் என்பதாகும். 'என்ப' என்று குறிப்பிட்டதால் அறிந்தோர் கூறுவர் என்பதாயிற்று. மாட்சி என்ற சொல் 'இறை மாட்சி', 'பகை மாட்சி', 'படை மாட்சி' முதலிய அதிகாரப் பெயர்களில் காணப்படுகிறது. 'அறிவறிந்த' (61), 'பழிபிறங்கா' (62), 'தம் மக்கள்' (68), 'சான்றோன்' (69) ஆகிய குறட்பாக்கள் மேலும் விளக்கம் தருவனவாகும்.

## 7. மக்கட்பேறு

### 61 பெறுமவற்றுள் யாமறிவது இல்லை ...

'அறிவுடைமை' என்ற அதிகாரத்தில் குறிப்பு காணப்பட்டது. இன்பம் துய்ப்பதற்குரிய பேறுகள் (செல்வங்கள்) பலவுண்டு என்பது, 'பெறுமவற்றுள்' என்பதால் சொல்லப்பட்டது. முன்னர் 'நன் மக்கள்' என்றார்; இங்கு 'அறிவறிந்த' மக்கள் என்றார்.

ஒருவன் பெறுகின்ற பேறுகள் பல வகையாகும் என்பது குறிப்பிடத் தக்கது. அவைகளுள் சிறந்த பேறு இதுவெனப்பட்டது. 'யாமெய்யாக் கண்டவற்றுள்' (300)' 'யாம் கண்டது இல்' (1071) என்று கூறுகின்ற முறையில், இக்குறட்பாவில் 'யாமறிவதில்லை' என்று குறிப்பிட்டார்; 'அறிவறிந்த' என்பது 'அறிவுடைமை' என்ற அதிகாரத்தினை நினைவு படுத்தும். பயனற்ற மக்களைப் பெறுதல் தீமையென்பது உய்த்துணர வைக்கப்பட்டது. 'மக்கள்' என்பது ஆண், பெண் இருபாலார்க்கும் பொதுப்பட நின்றதாகும். மக்களைப் பெற்றிருத்தல் மட்டும் 'பேறு' என்பதாகி விடாது என்பதனை உணர்த்த வேண்டியே, **'அறிவறிந்த மக்கள்'** என்று விளக்கம் தந்தார். அறிவுடைய மக்கள் என்று மட்டும் கூறி நிறுத்தாமல் அறிய வேண்டியவற்றை அறியக் கூடிய மக்கள் என்று சிறப்பிக்க வேண்டியே **'அறிவறிந்த'** என்று கூறினார்.

இல்லறத்தை மேற்கொண்டவர்க்குரிய பேறு (செல்வம்) அறிவிக்கப்பட்டது. 'தம் மக்கள் அறிவுடைமை' (68) என்பது, இக்குறட்பாவுக்கு விளக்கம் தருவதாகும். **'அவற்றுள்,** என்பது 'பிற' என்பதனால் குறித்துணர்த்தப்பட்டது.

### 62. எழுபிறப்பும் தீயவை தீண்டா ...

பழி பிறங்காப் பண்புடை மக்களைப் பெறுதல் அருமையானபடியால், 'பெறின்' என்றார். பிற இடங்களையும் சிந்திக்க வேண்டும். 'முயங்கப் பெறின்' (1330) உண்டாகப் பெறின்' (54) என்றார். இவ்வாறே பிற இடங்களையும் கண்டு தெளிக. எழுகின்ற பல பிறவிகளிலும் என்பது தெளிவுபடுத்தப்பட்டது. எழுமை, எழுபிறப்பு, எழுநாள் என்பவைகளின் விளக்கங்களைக் கண்டு தெளிக. 'ஒரு நாள் எழுநாள் போல் செல்லும்' (1269) என்றும் ஒரு குறட்பா கூறுகிறது.

எழுகின்ற பிறவிகள் பலவற்றுள்ளும் என்பது குறிக்கப்பட்டது. 'எழு பிறப்பு' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. வினைவயத்தான் பிறக்கும் பிறப்பு ஏழின் கண்ணும் என்ற கருத்தும் உணர்த்தப்பட்டது. ஏழு பிறப்பிலும் துன்பங்கள் வாரா என்பதாம். அருமை

தோன்றப் 'பெறின்' என்றார். 'பண்புடை' என்பது 'பண்புடைமை' என்ற அதிகாரத்தினை நினைபடுத்துவதாகும். 'எழு பிறப்பு' என்பது தொடர்ந்து வருகின்ற 'பல' பிறவிகளிலும் என்பதை உணர்த்தும். 'தீயவை' என்பது குறிப்பாகத் 'தீவினை அச்சம்' என்ற அதிகாரத்தை நினைவுபடுத்துவதாகும். 'மக்கட் பேறு' (புதல்வரைப் பெறுதல்) என்ற இந்த அதிகாரத்தில் காணப்படும் பத்துக் குறட்பாக்களில், எட்டுக் குறட்பாக்களை மக்கள் என்று பொதுப்பட ஆண், பெண் இருபாலரையும் குறிக்குமாறு அமைத்தார். 'தந்தை மகற்கு' (67), 'தன் மகனை' (69) என்ற குறட்பாக்கள் மட்டும் மகன் என்று சுட்டிக்காட்டுவனவாகும். தந்தைக்கும் மக்களுக்குமுள்ள பிறவித் தொடர்பு நன்கு எடுத்துக்காட்டப்பட்டது.

**63. தம்பொருள் என்ப தம்மக்கள் ...**

'எச்சத்தால் காணப்படும்' (114), 'எச்சம் நன்றாகும்' (456) என்பன போன்ற குறட்பாக்களைச் சிந்தித்துப் பார்த்தல் நல்லது.

தம்முடைய மக்கள்—தம்முடைய பொருள்களாகும். அந்தப் பொருள்கள்—தம்முடைய வினையின் காரணமாக வரும். தமக்கு அழியாத உடைமை என்று சிறப்பிக்கப்படுபவர் மக்களாவர். அந்த மக்கள் என்னும் பேறு தாம்தாம் செய்த வினையின் காரணமாக வரும். 'ஊழ்வினை' என்ற தலைப்பினைக் காண்க. தம் மக்களாகிய பொருள் தம்முடைய வினையோடு கூட வருவதால், 'அவ்வப்போது' எனக் குறித்தார். 'தம்பொருள்', 'அவர் பொருள்' என்பன மக்கட் செல்வத்தின் சிறப்பினை உணர்த்தியவைகளாகும். 'பொருள்' என்ற சொல் 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்துவதாகும். 'தம் பொருள்', 'தம் மக்கள்' என்பன சிந்தனைக்குரியனவாகும். இருமுறை கூறியது போலவே, 'தம்தம் வினை' என்று குறிப்பிட்டார். 'இருள் சேர் இருவினை' (5) என்பதனை இக்குறட்பாவில் காணப்படும் 'வினையான்' என்பது நினைவாகச் சுட்டிக்காட்டுகிறது.

**64. அமிழ்தினும் ஆற்ற இனிதே...**

அமிழ்தம் உயர்ந்த பொருளாகப் பேசப்படுவது உலகியல் வழக்கமாகும். தேவருலகில் உண்ணப்படுவ தென்பது உலகில் பேசப்படுவதொன்று; அதனையும் விடச் சிறந்ததென்றார். 'அமிழ்தம்' என்ற சொல் பிற இடங்களிலும் சொல்லப்படுகிறது.

அமிழ்தத்தினை விடவும் மிகச் சிறந்ததென்று கூறப்பட்டது. 'அமிழ்தம்' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. 'சிறு கை' என்று கூறியதால் குழந்தைகள் என்பது குறிக்கப்பட்டது. 'தம் மக்கள்' என்பது சிறப்பினைக் குறித்ததாகும். 'கூழ்' என்பது சோறு என்பதைக் குறித்தது. 'கூழ்' என்பது உண்ணப்படுவதானபடியால் உண்டு மகிழ்வதான 'அமிழ்தத்தை'க் கூறினார். குழந்தைகளால் நுகரப்படும் இன்பத்தின் சிறப்பு உணர்த்தப் பட்டது. இதுவே அமிழ்தத்தினும் இனிது என்றார்.

**65. மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் ...**

மக்களுடைய மழலைச் சொற்களே இனிமை தரும் என்பது மட்டுமல்லாமல், அவர்கள் கற்றறிவுடையவராய்ச் சொல்லுகின்ற சொற்களும் இனிமை தரும் என்பதற்காகப் பொதுப்பட 'சொல்' என்றார்.

'மற்று' வினை மாற்றில் வந்தது. 'தீண்டல்', 'கேட்டல்' என்பன காரணப் பெயர்களாகும். அவை காரணங்களின்மேல் வந்தன. 'சொற் கேட்டல்' என்பதனை, 'அவையத்து முந்தி' (67) என்ற குறட்பாவுடன் சிந்தித்தறிதல் வேண்டும். 'சொல்' என்பது, 'சொல்வன்மை' 'பயனில சொல்லாமை', 'இனியவை கூறல்', 'அவையறிதல்', 'அவையஞ்சாமை' முதலிய அதிகாரங்களை நினைவு படுத்துவதாகும். 'இன்பம்' இருமுறை கூறப்பட்டது. 'செவிக்கு' என்பது 'கேள்வி' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்துவதாகும். 'மக்கள்' என்பது குழந்தைகளைக் குறித்து நின்றது. 'அவர் சொல் கேட்டல்' என்பது மழலைச் சொற்களையும் அறிஞராகிப் பேசும் சொற்களையும் குறித்ததாகும். உடலுக்கு இன்பம் தருவதென்பது உணர்த்தப்பட்டது. 'தீண்டல்' என்பது மென்மையாகத் தொடுதல் என்பதனைக் குறிப்பாக உணர்த்திற்று.

**66. குழல்இனிது யாழ்இனிது என்ப ...**

உலகில் இசைக்கப்படும் இசைக்கருவிகளைப் பொதுவாக இருவகைப்படுத்திக் கூறலாம். ஒன்று, கையினால் வாசிக்கப்படுவது; மற்றொன்று வாயினால் வாசிக்கப்படுவது. குழல், வாயினால் வாசிக்கப்படும் அனைத்தையும் குறித்தது எனக் கொள்ளலாம்; யாழ், கையினால் வாசிப்பதனைத்தையும் குறித்தது.

ஆதலால், குழல், யாழ் என்பவை உலகில் வழங்கிவரும் அனைத்துக் கருவிகளையும் உய்த்துணர வைத்தன. மழலைச் சொற்கள் என்பது பருவத்தைக் காட்டிற்று. 'ழ' கரம் மும்முறைக் காணப்படுவது சிறப்பாகும். 'தம் மக்கள் மழலை' சிந்திக்கத்தக்கதாகும். முந்தைய குறட்பாவில், 'இன்பம் செவிக்கு' என்று கூறியதை விளக்கமாக்கிக் கூறினார். 'என்ப' என்றதால் அறியாதவர்கள் என்பதாயிற்று; 'குழல், யாழ்' தலைப்பினைக் காண்க.

**67. தந்தை மகற்குஆற்றும் நன்றி....**

'அவையறிதல்', 'அவையஞ்சாமை என்ற அதிகாரங்கள் நினைவுப்படுத்தப்பட்டன. தந்தை மக்களுக்குச் செய்ய வேண்டிய நன்மைகள் உண்டு; அவை கடமை எனப்படும்; நன்றி—நன்மை என்பதாகும்.

கற்றாரவையின்கண் அவரினும் மிக்கிருக்குமாறு கல்வியுடையவனாக்குதல் என்பதாம். பொருளுடையவனாக்குதல் முதலியன துன்பம் பயத்தலின் நன்மையாகாதென்பது கருத்து. தந்தை மகற்கு ஆற்றுவதனை இக்குறட்பாவில் நன்றி என்றும், மகன் தந்தைக்குச் செய்ய வேண்டுவதனை, 'உதவி' (70) என்றும் குறிப்பிட்டார். 'அவையத்து' என்பது 'அவையறிதல்', 'அவையஞ்சாமை' என்ற அதிகாரங்களை நினைவு படுத்துவதாகும். கல்வி, அறிவு, பண்பு அனைத்தையும் ஒரு சேர விளக்குவது 'அவையத்து' என்பதாகும். தந்தையானவன் செய்து வைக்க வேண்டும் என்பதனை வற்புறுத்துவதற்காக 'செயல்' என்றார். நன்றி என்ற சொல், 'செய்நன்றி அறிதல்' என்ற அதிகாரத்தை நினைவுபடுத்துவதாகும். தந்தை செய்கின்ற நன்மை அதுவேயாகும். பிறவற்றைச் செய்து வைப்பது, இதுபோன்று நன்மை செய்தலென்பதாகாது. 'முந்தி இருப்ப'—பன்முறையும் சிந்தித்தறிய வேண்டியதாகும்.

**68. தம்மின்தம் மக்கள் அறிவுடைமை ...**

'அறிவுடைமை' என்ற அதிகாரத்தின் பெயர் இக்குறட்பாவில் காணப்படுகிறது. அறிவு என்று கூறப்பட்டது, இயல்பான அறிவோடுகூடிய கல்வி அறிவினையே.

'மன்னுயிர்' என்பது இங்கு அறிவுடையார்மேல் நின்றதாகும். ஏனெனில், அறிவுடைமையினைக் கண்டு இன்புறும் தகுதிக்கு உரியர் அவரேயாகலின் என்பதாம். தம் மக்கள் அறிவுடைமையின் மிகுதியைக் கண்டு தாம் இன்புறுவதல்லாமல், மாநிலத்து மன்னுயிர் எல்லாம் இன்புறத்தக்க இனிமையைக் கொடுக்கும் என்பதாம். 64, 65, 66 குறட்பாக்கள் தாம் மட்டும் நுகரும் இன்பத்தினைக் குறித்தன என்று அறிதல் வேண்டும். 'அறிவுடைமை' என்ற அதிகாரத்தின் பெயர் இக்குறட்பாவில் காணப்படுகிறது. தந்தையினைவிட மக்கள் அறிவிற் சிறந்திருப்பது உலகிற்கு இனிமையாகும்.

**69 ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் ...**

'சான்றாண்மை' என்ற அதிகாரம் சுட்டிக்காட்டப்பட்டது. இருமுறை தந்தை என்ற சொல் குறட்பாக்களில் காணப்படுகின்றது. தாய் என்ற கருத்து வரும்போதெல்லாம் 'ஈன்ற' என்ற சொல்லினை ஆசிரியர் அமைத்துக்காட்டுவது அருமையென்பதனை உணர்த்துகிறது. 'அன்னை' என்ற சொல்லும் சொல்லப்பட்டுள்ளது. தாயின் மகிழ்ச்சி அளவு கடந்தது என்பதாகும். தம் மக்களைப் பற்றிப் பிறர் பெருமையாகப் பேசுவதைக் கேட்பதுதான் தாய்க்கு இன்பம் பயக்கும். ஆதலால்தான் 'கேட்டதாய்' என்றார்.

தாய் உவகைக்கு அளவு இன்மையின் அஃது இக்குறட்பாவில் பிரித்துக் கூறப் பட்டது. தந்தை என்று குறிப்பிடுகின்ற ஆசிரியர், ஈன்றவள் தாய் ஆனபடியால் 'ஈன்ற பொழுது' என்றார். 'சான்றோன்' என்பது, கவானின் கண்ட பொதுவான உவகையினை விட சால்புடையன் எனக் கேட்ட சிறப்புஉவகை பெரிதாகலின் 'பெரிதுவக்கும்' என்று கூறினார். (கவானின் — மடிமீது); ஈன்ற பொழுதில், அவனுடைய பிற்காலச் சிறப்பு அவளுக்குத் தெரியாதாகையால், அதனைத் தெரிந்தபோது மகிழ்ச்சி மிகவும் பெரிதான வகையால் 'பெரிதுவக்கும்' என்றார். 'சான்றோன்' என்று தானே உணர்ந்து மகிழும் மகிழ்ச்சியினைவிட, அறிஞர் பலரும் சொல்ல அதனைக் கேட்கும் மகிழ்ச்சி மிகவும் பெரிதாகையால் 'கேட்ட தாய்' என்றார். 'ஈன்ற பொழுது' அவள் பெற்ற மகிழ்ச்சி அவளுக்கே தெரியும் என்பதாகும். 'சான்றோன்' என்பது பலருக்கும் தெரிவதாயிற்று. 'தன் மகள்' தன்னுடன் இருப்பதில்லை என்பது உலக இயல்பு ஆனபடியால், 'தன் மகன்' என்று சிறப்பித்துக் கூறினாள் என்பது குறிப்பாயிற்று. 'ஆண்' என்பதன் சிறப்பும் குறிக்கப் பட்டது. 'பிள்ளை பெறுதல்' என்பது அருமையானதொரு நிகழ்ச்சி — செயல் — என்பதனை 'ஈன்றபொழுது' என்பது உணர்த்தியது.

**70 மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி ...**

'ஆற்றும் நன்றி' (67) என்றார். இங்கே 'ஆற்றும் உதவி' என்றார். 'நன்றி' என்ற அந்தச் சிறப்பிற்கு 'உதவி' பொருந்தாது. முதலில் மகன் பெற்ற நன்மையான படியால் நன்றி சிறப்பாயிற்று. பலரும் புகழ்ந்து பேசுமாறு மகன் வாழவேண்டும் என்பதாகும்.

நல்ல பிள்ளைகள் பெறுதற்கு நோன்பு நோற்க வேண்டும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'நன் மக்கட்பேறு' அவ்வளவு சிறப்பானதாகும். 'கொல்' அசை நிலை. பிறர் சொல்லுமாறு அவன் நடந்து கொள்ளுதல் வேண்டும் என்பதாகும். நற்பிள்ளைகள் தோன்றுதல் அரிது என்பது உணர்த்தப்பட்டது. உலகத்தார் வியந்து — ஆச்சரியப்பட்டுக் கூறுவதாக இருக்க வேண்டுமென்பதனை 'என்னோற்றான் கொல்' என்பது காட்டுவதாகும்

மக்களுக்குப் பயனுள்ளவகையில் வாழ்பவனையே உலகம் புகழும் என்பது குறிப்பால் அறிய வேண்டுவதாகும். 'மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி' என்ற இக்குறட்பாவின் கருத்தினையும், 'தந்தை மகற்காற்றும் நன்றி' என்ற குறட்பா கருத்தினையும், 'செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (110) என்று வருகின்ற கருத்தினையும் ஒன்று சேர அமைத்துப் பார்த்தல் வேண்டும். மகற்கு (110) என்று கூறப்பட்டது, பொதுப்பட நின்றதாகவும் கொள்ளப் படுவதாகும். மகனுக்கும் தந்தைக்குமுள்ள தொடர்பின் சிறப்பு எடுத்துக்காட்டப்பட்டது. தந்தை மகனைப் போற்றிக் காத்து வளர்த்து உயர்த்துதல் மிகவும் சிறப்புடையது ஆன படியால், அதனை 'நன்றி' (61) என்றும், தந்தையிடம் இணையில்லா நன்மையைப் பெற்ற பிறகு, மகன் தந்தைக்குச் செய்வது, தன் தந்தை செய்ததற்குள்ள பெருமைக்கு உரியதாகாது என்பதனைக் குறிக்கவே, இக்குறட்பாவில் உதவி என்று அமைத்தார்.

## 8 அன்புடைமை

### 71 அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ...

கண்களில் நீர் தோன்றுவதும் அதன் காரணமும் கூறப்பட்டன. தாழ் (தாழ்ப்பாள்) என்பது நூலில் இரண்டு இடங்களில் காணப்படுகிறது. மற்றொன்று 'காமக்கணிச்சி' (1251) குறட்பாவாகும்.

அன்பின் அருமையினை விளக்கவே 'தாழ்' என்றார். அன்பினை எல்லோரும் அறியுமாறு செய்வது எதுவென்று குறிக்கப்பட்டது. 'அன்பிற்கும்' என்பதில் காணப்படும் 'உம்'மை அதன் சிறப்பினை உணர்த்திற்று. ஆர்வலரது புன்மை, கண்ணீர்மேல் ஏற்றப்பட்டது. பூசல் என்பது சிறப்பினையும், 'புன்கண்' என்பது அன்பினையும், கண்ணீர் என்பது பெருமை யினையும் குறித்தன. வினா முறையில் அமைக்கப்பட்டுள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். அன்பு வெளிப்படும் காலம் நண்பருடைய துன்பங்கண்டபோது — என்று கூறியது சிந்திக்கத்தக்கதாகும். 'ஆர்வலர்' என்று குறிப்பிட்டது — அன்பின் வழியென்பதனை; 'ஆர்வம்' (74) என்ற குறட்பா விளக்குவதாகும். துன்பத்தில் கண்ணீர் வருவது இயல்பு என்கின்ற உண்மை கூறப்பட்டது. மனத்தில் இருக்கும் அன்பினை வெளிப்படுத்துவது யாது என்பது குறிக்கப்பட்டதாகும்.

### 72. அன்பிலார் எல்லாம் தமக்குரியர் ...

ஒரு பறவைக்காகத் தன் உயிரையும் கொடுத்த சிபிச் சக்ரவர்த்தியின் கதை கூறப் படுவதுண்டு. அன்பின் சிறப்பு அவ்வளவு பெரிது என்பதற்காகக் கூறுவார்.

அன்பில்லாதவர்கள் பிறர்க்குப் பயன்படமாட்டார்கள்; அன்பில்லாதவர்கள் அறஞ் செய்தல் முடியாததாகும். அன்புடையவர்கள் தமது பொருளெல்லாம் பிறர்க்குக் கொடுப்பது மல்லாமல், பிற உயிர்க்கு ஓர் இடுக்கண் வரின் தமது உடம்பினையும் ஈந்து புகழினைப் பெறுவர் என்பதாகும். 'தம்க்கு உரியர்', 'என்பும் உரியர்' என்பதனால் வேறுபாடு உணர்த்தப்பட்டது. 'எல்லாம் தமக்கே இருக்க வேண்டும்' என்பவர்களே அன்பு இல்லாதவர்களாவார்கள். அவர்கள் மனிதப்பிறவிக்குரிய குணம் இல்லாதவர்கள். 'இலார்', 'உடையார்' என்பதனால் வேறுபாடு

பிரித்துக் காட்டப்பட்டதாகும். 'எல்லாம்' என்பதனால் அன்பில்லாதவர்களின் பேராசையும் சிறு புத்தியும் உணர்த்தப்பட்டன.

**73 அன்போடு இயைந்த வழக்கென்ப...**

உலகில் பெரிய அறிஞர்களின் கருத்தினைத் தாம் சிறப்பாகக் கொண்டு போற்றுகிறார் என்பதற்கு இக்குறட்பாவும் ஓர் எடுத்துக்காட்டு; ஆதலால் 'என்ப' என்றார்.

பிறப்பினது அருமை பிறந்த உயிர் மேல் ஏற்றப்பட்டது. உடம்போடு பொருந்தாமல் அன்பு செய்ய இயலாதாகையால் அது செய்தற் பொருட்டு இத்தொடர்ச்சி உளதாயிற்று என்பதாகும். ஆகவே தொடர்ச்சிக்குப் பயன் எடுத்துக்காட்டப்பட்டது. மக்களுயிரானது எலும்புடைய உடம்போடு பொருந்தியதாக வந்ததன் பயனே அன்புடன் இருத்தல் வேண்டும் என்பதாகும். அருமையான உயிர் என்பதால் 'ஆர் உயிர்' என்றார். 'என்ப' என்றதால் அறிந்தோர் கூறுவது உணர்த்தப்பட்டது. 'இயைந்த' என்பது இருமுறை கூறப்பட்டது. உடம்புக்கும் உயிர்க்குமுள்ள நட்பான தொடர்பு கூறப்பட்டது. 'உடம்பொடு உயிரிடையன்ன' (1122) என்பன போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியனவாகும். 'என்பு' என்றது எலும்புடைய உடம்போடு என்பதாகும். எலும்பில்லாத உயிர்களும் உண்டு (77) என்பதும் கூறப்பட்டது.

**74 அன்புஈனும் ஆர்வம் உடைமை ...**

'நட்பு', 'நட்பாராய்தல்' முதலிய அதிகாரங்களை நினைவில் கொள்ளுதல் வேண்டும். அன்புள்ளவர்கள் அனைத்தும் அடைவார்கள் என்பது தோன்ற 'நாடாச் சிறப்பு' என்று கூறினார்.

யாவரும் நண்பராவதால் எல்லாப்பொருளும் பெறுதற்கு காரணமாதலால், அதனை 'நாடாச்சிறப்பு' என்று கூறினார். அன்பினால் பெறுவது நட்பு என்றாயிற்று. நட்பு, என்றும் தேடுதற்கரிய சிறப்பினைத் தரும்; அப்படிப்பட்டவர்களுக்கு யாவரும் நண்பர்களாகவே இருப்பர் என்பதாகும். அன்பு ஆர்வத்தினை உண்டாக்கும்; அந்த ஆர்வம் நட்பினை உண்டாக்கும். 'ஈனும்' என்று இரு முறை கூறப்பட்டது சிந்திக்கத் தக்கதாகும். அன்பும் ஆர்வமும் ஆர அமர இருந்துதான் உண்டாவதாகும் என்பது 'ஈனும்' என்பதால் குறித்துணரப் பட்டது. 'அது' என்பது ஆர்வத்தினைக் குறித்துக் காட்டியது. நட்பின் சிறப்பு, பயன், முதலியனவெல்லாம், 'நட்பு', 'நட்பாராய்தல்', 'பழைமை', 'தீ நட்பு', 'கூடா நட்பு' முதலிய அதிகாரங்களில் விளக்கமாகக் கூறப்படுவனவாகும். 'நட்பு' என்று மட்டும் கூறி அமையாது அதனைச் சிறப்பிக்க வேண்டியே 'நாடாச் சிறப்பு' என்று விளக்கிக் கூறினார். 'உரன் என்னும் தோட்டியான்' (24), 'கற்பு என்னும் திண்மை' (54) என்று வருவன போன்று, இக்குறட்பாவில் 'நட்பு என்னும் நாடாச்சிறப்பு' என்றார். 'என்னும்' என்றதால் தெளிவு பெறப்பட்டது.

**75 அன்புற்று அமர்ந்த வழக்கென்ப...**

தவத்தினால் நோன்பு நோற்றுத் துன்புற்று பெறுகின்ற பேரின்பத்தினை, இங்கே இன்புற்று அடைதல் அன்பினால் இயலும் என்று கூறினார். உலகப் பேரறிஞர்கள் கொண்ட கருத்தினைத் தழுவியே பேசுவது ஆசிரியர் மரபு; ஆதலால் 'என்பு' என்று கூறினார்.

இன்பத்திற்கு முதற்காரணம் அன்பு என்று கூறப்பட்டது. மனைவி மக்களுடன் இன்பமுற்று வாழ்வதற்குக் காரணம் அன்பேயாயிற்று. 'வழக்கென்ப' (73) என்று கூறியது போல இங்கும் கூறினார்: இன்புற்றார் என்றதால், 'போகம் துய்ப்பர்' என்பது உணர்த்தப் பட்டது. 'எய்தும் சிறப்பு' என்பது அடைகின்ற நிலை பெற்ற பேரின்ப நிலை என்றும் கூறப்படுவதாகும். 'உற்று', 'உற்றார்' என்பவை சிந்தித்தறிய வேண்டிய உண்மைகளை உணர்த்தினவாகும். இது உலகியலில் அறிந்தோர், உயர்ந்தோர் கருத்துக்களைத் 'தழுவிய உண்மை' என்பது, 'என்ப' என்றதால் குறிக்கப்பட்டது. இவ்வாறு கூறுகின்ற முறை குறட் பாக்களில் பல இடங்களில் காண முடிகின்றது.

### 76 அறத்திற்கே அன்புசார்பு என்ப...

'அறன் வலியுறுத்தல்' அதிகாரம் நினைவில் கொள்க; 'மறத்திற்கும் அஃதே துணை' என்பதனைத் 'துன்பத்திற்கு யாரே துணையாவார்' (1299) என்பது போலக் கருதுக; 'மறம்' என்பது 'தீ நெறி' என்றும் பொருள்படும்; வீரம் என்றும் கொள்ளலாம்; தீய எண்ணம் கொண்டவனையும் மாற்றலாம்; பகைமையைக் களைவதற்கு 'வீரம்' மேற்கொள்ளுதலும் தம்மக்கள் மீது கொண்டுள்ள அன்பினால் அன்றோ? 'படைச் செருக்கு' முதலிய அதிகாரங்களைக் கருதலாம்; மறவர்—வீரர்கள்.

ஒருவன் செய்த பகைமை பற்றி உள்ளத்தில் மறம் (பகைமை) நிகழ்ந்ததால், அவனை நட்பாகக் கருதி அவன்மேல் அன்பு செய்ய அது நீங்குமாதலின், மறத்தை நீக்குதற்கும் துணையாம் என்பர்; "மறத்திற்கும் அஃதே துணை" என்றார். அறம், மறம் என்ற இரண்டிற்கும் அன்பே துணையாயிற்று. 'அறம்' என்பது 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்துவதாகும். 'துன்பத்திற்கு யாரே துணையாவார்' (1299) என்ற குறட்பா ஒப்பிட்டுச் சிந்தித்தற்குரியதாகும். 'மறம்' என்பது வீரம். பகைவர்மேல் செல்லும் தன்மையினை உணர்த்திற்று. 'பேராண்மை என்ப' (773) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியனவாகும். 'சார்பு', 'துணை' என்ற சொற்கள் விளக்கம் தருவனவாகும். அறிவில்லார் செய்யும் மறத்தையும் அன்பு வெல்லும் என்பது குறிக்கப்பட்டது.

### 77 என்பி லதனை வெயில்போல ...

வெயில் எங்கும் ஒரே தன்மையதுபோல அறமும் ஆகும் என்பதாகும். அறத் தன்மையே இறைத்தன்மையாகக் கூறப்பட்டது. 'அறம் சூழும்' (204), அறம் நோக்கி (189), அறம்பார்க்கும் (130) இவ்வாறே பிற இடங்களையும் கண்டு தெளிக.

'என்பிலது' என்பதால் உடம்பு என்பதும், 'அன்பிலது' என்பதால் உயிர் என்பதும் கூறப்பட்டனவாகும். வெறுப்பின்றி எங்கும் ஒரு தன்மைத்தாகிய வெயிலின்முன் என்பில்லாத உயிர்கள் தாம் இயல்பாய் சென்று கெடுமாறு போல, அத்தன்மைத்தாகிய அறத்தின்முன் அன்பில்லாத மக்கள் இயல்பால் கெடுவர் என்பதாகும். வெயில் அறத்திற்கு உவமையாகக் கூறப் பட்டது. வெயில் காய்வது எவ்வாறு உறுதியோ, அவ்வாறே அறம் தண்டிப்பது உறுதி யாயிற்று. 'அறம் காயும்' என்று இக்குறட்பாவில் காணப்படுவது போன்று வருகின்ற இடங் களில் எல்லாம் அறம் தண்டிக்கும் என்றே குறித்துக் காட்டப்படும். 'அறம்' என்ற தலைப்பில்

விளக்கம் காண்க. அருமையான உவமையினை இக்குறட்பாவில் காணுகின்றோம். என்பில்லாதவை — புழுக்கள் முதலியனவாகும்.

**78 அன்பகத்து இல்லா உயிர்வாழ்க்கை...**

வன்பால்—வலிய நிலம்; மரம் தளிர்க்காத நிலம்; அன்பில்லாமல் இல்லறம் என்ற வாழ்க்கை நடவாது.

'வன்பால்' என்பது வன்நிலமாகும். தளிர்த்தற்குக் காரணம் இல்லாததால், தளிராது என்பதாகும். அன்பில்லாத உயிர் வாழ்க்கை எந்தப் பயனையும் அளிக்காது என்பதாகும். வன்னிலம் (பாறை நிலம்) என்பதும், வற்றல் மரம் என்பதும் சிந்திக்கத்தக்கன. அதுபோல, அன்பு மனத்தில் இல்லாத உயிரும், அப்படிப்பட்ட உயிர் வாழ்க்கையும் சிந்தனைக்குரியனவாகும். அப்படிப்பட்ட வாழ்க்கை உயிர் வாழ்க்கையே ஆகாது என்பதாம். 'மரம் போல்வர்' (997), 'மர மக்கள்' (600) முதலிய குறட்பாக்களைச் சிந்தித்தல் வேண்டும். 'மரம்' என்ற தலைப்பினைக் கண்டு தெளிக.

**79 புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் ...**

இடமும் பொருளும் ஏவல் செய்வாரும் முதலியவை புறத்துறுப்புக்கள் எனப்பட்டன. யாக்கையில், கண் முதலிய உறுப்புகள் யாவும் என்ன பயனைச் செய்யும் என்றும் கூறலாம்.

மனத்தின்கண் நின்று உறுப்பாக இருப்பது அன்பேயாகும். புறத்துறுப்புக்களாவன; இடனும் பொருளும் ஏவல் செய்வாரும் முதலியன. அன்போடு கூடாதபோது அவற்றால் பயன் இல்லாத காரணத்தால், 'எவன் செய்யும்' என்றார். வினா முறையில் அமைந்த குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். 'உறுப்பு' போன்றிருப்பதால் 'உறுப்பு' எனப்பட்டது. 'எவன் செய்யும்' (57) என்று குறித்ததுபோல இங்கும் கூறப்பட்டது. இம்முறைகளில் அமைத்துக் காட்டுதல் ஆசிரியரின் இயல்பாகும். புறத்துறுப்புக்கள் என்பதால் மெய், வாய், கண், மூக்கு, செவி யாகியவற்றையும் குறித்தது. அன்பே எல்லாவற்றிற்கும் அடிப்படையாகும்.

**80 அன்பின் வழியது உயிர்நிலை ...**

'அன்போடியைந்த வழக்கு' (73), 'அன்புற்றமர்ந்த வழக்கு' (75) என்பவைகளைச் சிறப்பிக்கவே, இக்குறட்பாவில் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்றார்.

அன்பில்லாதவை, உயிர் நின்ற உடம்புகள் என்று சொல்லுவதற்கில்லை என்பதாம். அவைகளால் யாதொரு பயனும் இல்லை என்பதாகும். அப்படிப்பட்டவர்கள் அச்சப்பட வேண்டியவர்கள் என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'தசை' என்று கூறாமல் 'தோல்' என்றதால் அத்தகைய பிறவியின் 'இழி நிலை' காட்டப்பட்டது. 'போர்த்த' சிந்திக்கத் தக்கது!

## 9 விருந்து ஓம்பல்

### 81 இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் ...

வேளாண்மை என்னும் செருக்கு (613) 'இல்லாதான் வேளாண்மை' (614) முதலியன வேளாண்மையின் சிறப்பினை உணர்த்தின. 'இல்வாழ்க்கை', 'வாழ்க்கைத்துணை நலம்' முதலிய அதிகாரங்களைச் சிந்திக்க வேண்டும். வேளாண்மை, என்ற பண்பு இல்லையென்றால், இல்வாழ்க்கை தேவையில்லை.

'விருந்தினர்', 'ஒக்கல்' என்பதன் வேறுபாடு, 43ஆவது குறட்பாவில் காணப்படுகிறது. 'விருந்து' என்பது புதிது என்பதனைக் குறிப்பதாகும். விருந்தினரைப் பேணாவிடில், இல்லறத்தில் இருத்தலும் பொருள் செய்தலும் அவற்றின் காரணமாக வரும் இன்பங்களும் பயனில்லை. 'ஓம்பி' இருமுறை கூறப்பட்டது. 'எல்லாம்' என்பது சிறப்பினை உணர்த்திற்று. 'தக்கார்க்கு வேளாண்மை' (212) போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன. இக்குறட்பாவில் காணப்படும் 'வேளாண்மை' என்ற சொல் 'ஒப்புரவறிதல்', 'ஈகை' முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்துவதாகும்.

### 82 விருந்து புறத்ததாத் தான்உண்டல்...

உலகில் 'இறத்தல்' என்பது இயல்பேயாயினும், சிறப்பு நோக்கி இவ்வாறு கூறினார் என்க.

விருந்து இன்றியே ஒருகால் தான் உண்டலைச் 'சாவா மருந்து' என்பர். உளராயினும் அதனை 'ஒழிக' என்று கூறினும் பொருந்தும் என்பதாம். 'அமிழ்தம்' என்ற தலைப்பினைக் காண்க; 'தாமே தமியர் உணல்' (229) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்திக்கத்தக்கன.

### 83 வருவிருந்து வைகலும் ஓம்புவான்...

நாள்தோறும் விருந்தோம்புவானுக்குப் பொருள் தொலையாது; மேன்மேல் கிளைக்கும் என்பதாம். விருந்து—புதிது. (முதன் முறையாகப் புதிதாக வருபவர்கள்) குறிப்பாக மிக மேலான சான்றோர்கள், அறவோர்கள் என்பதைக் குறிக்கும். தவத்தோர் முதலானவர்கட்கு அன்பு காட்டி நடந்து கொள்வது நன்மையினையே தரும். அச்சிறப்பு நோக்கி, வறுமை வராது என்றார். அவன் குடும்பம் கெடாது; 'விருந்து' என்பது வந்தவர்களுக்கெல்லாம் உணவளிப்பதாகிய விருந்து என்று கூறும் இக்காலப் பொருள் அன்று.

விருந்தினர்களின் பெருஞ்சிறப்பு விளக்கப்பட்டது. புதிதாகவும்—முதன் முதலாகவும் வருபவர் விருந்தினராவர். அது மிகப் பெரியவர்களையும் குறிப்பதாகும். விருந்தினர்களையே போற்றி உபசரித்துக் கொண்டிருந்தால் வறுமை வந்துவிடுமே என்று கூறுபவர்கட்கு இங்கே விடை அளிக்கப்பட்டது. வழி எஞ்சல் (44) என்ற குறள் சிந்திக்கத்தக்கது. இவை போன்ற பிறவற்றையும் காண்க.

## 84 அகனமர்ந்து செய்யாள் உறையும் ...

தக்க விருந்தினர்களால் நன்மை பெறுவான்; 'நல்விருந்து' என்பதனைச் சிந்திக்க வேண்டும். திருமகள் — இலக்குமி என்னும் பெயர்கள், உலக வழக்கில் செல்வம் என்பதற்குக் கூறப்படுவதுண்டு. அதனையே 'செய்யாள்' என்றார். உலக வழக்கில் உள்ளதை எடுத்துக் காட்டியே உண்மை எடுத்தோதுவார் ஆசிரியர். பெரியார்கள் வீட்டிற்கு வருதலே நன்மை பயக்கும்.

மனம் மகிழ்தற்குக் காரணம் தன் செல்வம் நல் வழிப்படுதல் என்பதாகும். 'கருத்தும் கருவியும்' என்ற தலைப்பினைக் காண்க. 'செய்யாள்' என்பதால் செல்வம் உருவகப்படுத்தப் பட்டது. 'நல்விருந்து' சிந்திக்கத்தக்கதாகும். 'அமர்ந்து' இருமுறை கூறப்பட்டது. விருந்து உபசரிப்பதற்கு முகமலர்ச்சி முதன்மையானதாகும்.

## 85 வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ ...

விதை விதைக்காமல் நிலம் விளையும் என்பதல்ல; விதைப்பதற்கு வைத்திருக்கும் நெல்லையும் சமைத்துப்போடத் தயங்கமாட்டான் என்பது பொருளாகும்; சிறப்பினைக் கருதி இவ்வாறு கூறிவைத்தார். விதைத்து, விளைந்து, அறுத்து, தான் உண்பதைவிட விருந்தினர் உண்பது மேலானதாயிற்று. 'அறம் நோக்கி ஆற்றும் கொல்' (189), 'புக்கில் அமைந்தின்று கொல்லோ' (340) என்பது போன்று வியப்புக்குறியில் இக்குறட்பாவும் அமைக்கப்பட்டது; பிறவும் காண்க.

விதைபோட வைத்திருந்ததையும் விருந்தினர்க்குச் சமைத்து போடுவான் என்ற சிறப்பு உணர்த்தப்பட்டது. மேலானவர்கள் என்னும் விருந்தினர் அருமை விளக்கப்பட்டது. சிறப்பித்துக் கூறும்வகையில், நிலத்திற்கு விதை போடுவதையும் கருத மாட்டான் என்றார். 'மிச்சில் மிசைவான்' என்றதால் சான்றோர்களும் பெரியார்களுமாகிய விருந்தினர்கள் உணர்த்தப்பட்டனர். உழவுத் தொழில் செய்யும் இல்லறத்தானுக்கு இக்குறட்பா மிகவும் பொருந்தியதாகும். இக் கருத்து பொதுப்பட அனைவர்க்கும் பொருந்தும் என்று கொள்க.

## 86 செல்விருந்து ஓம்பி வருவிருந்து...

முன்பு கூறியது போலவே 'நல்விருந்து' என்றார். வானத்தவர்கள், தேவர்கள், மேலோர்கள் என்பது உலகியல் வழக்கு. அப்படிப்பட்டவர்களும், உலகில் கடமையினைச் செய்பவனையே பாராட்டுவர். விருந்தோம்புகின்ற இவனே விருந்தினனாவான் என்று நயம் தோன்றக் கூறப்பட்டது. வானவர்கட்கு, தேவர்கட்கு என்பதாகச் 'சிறப்பொடு பூசனை' (18) செய்வதுண்டு என்கின்ற உலகியல் நடபினைக் காட்டி, அவர்களாலேயே போற்றுகின்றவன் யாரென்றால், இவ்வுலகில் கடமைகளைச் செய்பவனே யாவான் என்றார். 'இங்கே செய்கின்ற கடமைகளே சாலும்' என்பதாயிற்று. 'மேல் உலகம் இல்லெனினும்' (222) என்பதும் 'புத்தேள் உலகத்தும்' (213) என்பதும் கருதற்பாலன.

'நல் விருந்து' என்பது பெறுதற்கரிய விருந்தாகும். செல்விருந்து, வருவிருந்து, நல் விருந்து முதலியன சிந்திக்கத்தக்கன. மும்முறை 'விருந்து' என்ற சொல் காணப்படுகிறது. கடமை செய்பவன் வானத்தவர்களாலேயே போற்றப்படுவான் என்பதால், இல்லறக் கடமையே

மேலானது — போதுமானது என்பது பெறப்பட்டது. 'தேவர்கள்' என்ற தலைப்பினைக் காண்க. 'வானகமும்', 'ஆற்றல்' (101) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன.

**87 இனைத்துணைத்து என்பதொன்று இல்லை ...**

வேள்வியென்பது யாது என்று கூறப்பட்டது. பிறிதோர் இடத்தில் 'வேள்வி' என்ற தலைப்பினைக் காண்க. 'வேள்வி தலைப்படாதார்' (88), 'அவிசொரிந்து' (259) என்பன போன்ற குறட்பாக்கள் சிந்திப்பதற்குரியன. விருந்தோம்பலே வேள்வி எனப்பட்டது. 'இனைத் துணைத்து', 'துணைத்துணை' என்பன அளவினை எடுத்துக் காட்டின. 'தினைத்துணை, பனைத்துணை' (104) என்பதையும் எண்ணிப் பார்க்க. இப்பாடல் 'உதவி வரைத்தன்று உதவி' (105) என்ற முறையில் அமைந்துள்ளதையும் காண்க.

**88 பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் ...**

விருந்தாகிய வேள்விப் பயனின் சிறப்பு கூறப்பட்டது. உடம்பினை மட்டும் 'போற்றிக் கொண்டிருக்காதே' என்பது குறிப்பாகும். 'வைத்திழக்கும் வன்கணவர்' (228) என்பதும் 'ஒண் பொருள் கொள்வார் பிறர்' (1009) என்பதும் சிந்தனைக்குரியன. 'ஓம்பி' இருமுறை கூறப்பட்டது. 'பரிந்தோம்பி' என்றதால் காத்தலின் அருமை காட்டப்பட்டது.

**89 உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ...**

கணவனும் மனைவியும் ஒரு மனமாகச் செய்வது விருந்தாகும். அவ்வாறன்றி இருத்தல் பயனில்லை. மடமையுடையவர்கள் (பெண்கள்) மடவார் எனப்பட்டனர். விருந்து செய்தற்கு முதற்காரணமாக இருப்பவர்கள் பெண்கள் என்றும், அக்குணம் இல்லையென்றால் குற்றம் என்பதனையும் குறிப்பால் உணர்த்தவே மடவார் என்றார். 'இன்மையின் இன்னாதது' (1041), 'இன்மையெனவொரு பாவி' (1042) என்பன போன்ற குறட்பாக்கள், இக்குறட்பாவில் காணப் படும் 'இன்மை' என்பதற்கு விளக்கம் தருவனவாகும்.

**90 மோப்பக் குழையும் அனிச்சம் ...**

அனிச்சமலர் மூக்கின் அருகில் வைத்து மோந்தபோதுதான் வாடும்; ஆனால் விருந்ினரோ கடுமையாக தூரத்திலிருந்து பார்த்தாலே வாடுவார்; மூக்கின் காற்றைவிட பார்வை மென்மையானது!

விருந்து ஓம்புவார்க்கு இன்முகம் வேண்டும். மோந்தால்தான் — தீண்டினால்தான் அனிச்சமலர் வாடும். ஆனால் விருந்தினர்கள் தூரத்தில் கடுத்த முகத்துடன் பார்த்தாலே வாடிவிடுவர். ஆதலால் அனிச்சப் பூவினும் மெல்லிய தன்மையுடையவர், விருந்தினர் என்பதாவர். 'அனிச்சம்' என்ற தலைப்பினைக் காண்க. எல்லா மலரினும் மெல்லியது அனிச்ச மலராகும். 'மோப்ப' என்பதும், 'நோக்க' என்பதும் சிந்தனைக்குரியன. இருவகை யிலும் 'குழையும்' என்று அழைத்தார். 'திரிந்து' என்று கூறியதால், இயல்பாகவே மனிதப் பிறவிக்கு இருக்கும் நல்ல முக நோக்கினால் பார்க்காமல் வேறு மாதிரிப் பார்ப்பதென்பதாம். 'பார்வை — நோக்கம்' என்பதன் சிறப்பினையெல்லாம் பொருட்பாலில் காணப்படும்

'குறிப்பறிதல்' என்ற அதிகாரத்திலும், காமத்துப்பாலில் காணப்படும் 'குறிப்பறிதல்', 'குறிப்பு அறிவுறுத்தல்' முதலிய அதிகாரங்களிலும் கண்டறிதல் வேண்டும்.

## 10. இனியவை கூறல்

### 91 இன்சொலால் ஈரம் அளைஇ ...

'படிற்று ஒழுக்கம்' (271) என்பது போன்றவற்றைப் 'படிறு' நினைவுபடுத்துகிறது. 'செம்பொருள் காண்பதறிவு' (358) — செம்பொருளின் சிறப்பு அறிக; இங்கே 'செம்பொருள் கண்டார்' என்றார்; 'செம்பொருள்' காண்பது அறிவு என்றார்; அவர்கள் தீயவை சொல்ல மாட்டார்கள்.

மெய்யுணர்ந்தார் நெஞ்சுக்கு எல்லாம் செம்மையுடைத்தாய்த் தோன்றலின் 'செம்பொருள்' எனப்பட்டது 'வாய்' என்றது, தீய சொல் பயிலா என்பதை அறிவித்தது. இனிய சொற்களுக்கு விளக்கம் தரப்பட்டது. அன்பு குளிர்ச்சியினை அளிக்கும்; மன மகிழ்ச்சியினைக் கொடுக்கும். அன்பினை 'ஈரம்' என்று கூறினார். 'ஈர்ங்கண் மாஞாலம்' (1058) என்று கூறியதையும் காண்க. 'ஈர்ங்கை விதிரார்' (1077) என்றும் குறிப்பிட்டார். 'ஈரம்' குளிர்ச்சியாயிற்று; குளிர்ச்சி மகிழ்ச்சியினைத் தரும். எனவே அன்பு என்றும் குறிக்கப்பட்டது. 'அன்புடைமை' என்ற அதிகாரம் குறிப்பால் நினைவு படுத்தப்பட்டது.

### 92 அகனமர்ந்து ஈதலின் நன்றே ...

'ஈகை' அதிகாரம் நினைவிற் கொள்ளத்தக்கது. சிறப்பினை வற்புறுத்திக் கூறுவான் வேண்டி மிகுதிப்படுத்திக் கூறினார்.

இன் சொற்களின் சிறப்பினை மிகுதிப்படுத்திக் காட்டவே 'ஈதலின் நன்றே' என்றார். 'பெறின்' என்ற சொல் அருமையினை உணர்த்தியதாகும். இன்முகத்துடன் கூடிய இன்சொல், ஈதல் போலப் பொருள் உய்த்ததன்றித் தன் வயத்தது ஆயினும், அற நெஞ்சு உடையார்க்கு அல்லது இயல்பாக இன்மையின், அரிது என்னும் கருத்தால், 'இன் சொலனாகப் பெறின்' என்று கூறினார். 'அமர்ந்து' இருமுறை கூறப்பட்டது. 84ஆவது குறட்பாவிலும் இரு ,றை கூறப்பட்டது. ஈகைக்கு அகமும், இன்சொல்லுக்கு முகமும் முதற்காரணமாகக் கூறப்பட்டன.

### 93 முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி ...

அறம் சிறப்பிக்கப்பட்டது; முகமும் அகமும் செய்வன செய்ய வேண்டும். 'அக நக நட்பது' (786) போன்றவற்றைக் கருதுக.

'இன் சொற்கள்' மனத்துடனே பொருந்தியவைகளாக இருத்தல் வேண்டும் என்ற உண்மை சிறப்பிக்கப்பட்டது. 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'செல்லும் வாயெல்லாம்' (33) என்ற குறட்பாவும், 'மனத்துக் கண்' (34) என்ற குறட்பாவும் சிந்தனைக்குரியன.

**94 துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் ...**

'துவ்வாதவர்க்கும்' (42) என்ற பொருளிலே துவ்வாமை என்பது வந்தது. நா முதலிய பொறிகள், சுவை முதலிய புலன்களை நுகராமையால் 'துவ்வாமை' என்றார்.

துவ்வாமை — நல்குரவு; யாவரிடத்திலும் இனிய சொற்கள் சொல்லுவதால் அவருக்குப் பகையே இருக்காதென்பதாம்; எனவே துன்பமும் வறுமையும் உளதாகா என்பதாகும். எல்லாச் செல்வமும் அவர்கள் பெறுவார்கள்.

**95 பணிவுடையன் இன்சொலன் ஆதல் ...**

பிற அணிகலன்களும் உண்டு ஆனபடியால், 'பிற' என்றார். ஆனால் இவைபோலப் பேரழகு செய்யாமையின் 'அல்ல' எனவும் கூறினார்.

இன்சொல்லுக்கு இனமாதலால் பணிவுடைமையும் கூறப்பட்டது. 'மற்று' அசை நிலை; 'பணிவு' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. 'பிற' அழகெல்லாம் அழகென்ப் படாவாம்.

**96 அல்லவை தேய அறம்பெருகும் ...**

அறம் வளர்க்கப்படும் நெறி கூறப்பட்டது. 'செயற்பால தோரும் அறனே' (40), 'செல்லும் வாய் எல்லாம்' (33) இவை போன்றவை சிந்திக்கத்தக்கன.

நல்லவை சொல்லுகின்ற போதும் கடுமையான சொற்களால் சொன்னால் அறமாகாது என்பதாம். 'அறம்' நினைவு படுத்தப்பட்டது. தேய்வது எது, பெருகுவது எது என்பது கூறப்பட்டது. 'அல்லவை', 'நல்லவை' என்பன வேறுபாட்டினை உணர்த்தின. ஆராய்ந்து சொல்லல் வேண்டும் என்பதற்காக 'நாடி' என்றார்.

**97 நயன்ஈன்று நன்றி பயக்கும் ...**

'பண்பு' — பண்புடைமை என்ற அதிகாரம் சிந்திக்கத்தக்கது. இனிமையான பண்பு இதுவென்று கூறப்பட்டது. நீதி என்பது உலகத்தோடு பொருந்துதல் என்பதாகும். 'ஈன்று' என்பது இருமுறை கூறப்பட்டது. 'கொடுத்தல்' என்ற சொல்லினைவிடச் சிறந்த எண்ணத்தினை 'ஈன்று' என்ற சொல் உண்டாக்குவதாகும். 'ஈன்றாள்' என்ற சொல்லினையும் கருதுக. நயன், நன்றி, பயன், பண்பு முதலிய சொற்கள் சிந்தித்தறிய வேண்டுவனவாகும். 'நயனொடு நன்றி புரிந்த' (994) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக் குரியனவாகும்.

**98 சிறுமையுள் நீங்கிய இன்சொல் ...**

இம்மை, மறுமை என்பவைகளை நூலில் பல இடங்களிலும் கூறுகின்றார். மறுமையின்பம் பெரிதென்று கூறப்படும்; அதனையும் இதுவே தரும்; இவற்றின் தெளிவைப் பிற இடங்களில் காண்க.

சிறுமையுடைய சொற்கள் மற்றவர்களுக்குத் துன்பத்தினைக் கொடுக்கும் என்பதாம். இருவகை இன்பங்களைப்பற்றி 'இம்மை, மறுமை' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. 'இன் சொல்' என்றதால் 'இன்பம் தரும்' என்பதாயிற்று.

**99 இன்சொல் இனிதீன்றல் காண்பான் ...**

வினாக்கள் கேட்டு விடையளிக்கும் முறையில் அமைக்கப்பட்டிருக்கும் பல குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும்.

'கொல்' என்பது அசை நிலை. இன்சொல் இன்பத்தினைக் கொடுக்கும் என்றதால், வன்சொல் துன்பத்தினைக் கொடுக்கும் என்பதாம். 'சொல்' இருமுறை கூறப்பட்டதால், வேறுபாட்டினைக் குறித்தது.

**100 இனிய உளவாக இன்னாத ...**

கடுஞ்சொற்கள் கூறுதல் முடிவில் தனக்கே துன்பத்தினைக் கொடுக்கும் என்பது உவமையால் பெற்றாம். நம்மிடத்தில் உள்ளதை 'உளவாக' என்றார். புறத்தில் இருப்பதை 'இருப்ப' என்றார்.

இனிய சொற்கள் தன்னிடத்திலே இருக்க அவைகளைச் சொல்லுதல் எளிது என்பதாகும். இன்பம் தருவதால் 'கனிகள்' என்று கூறினார். துன்பம் தருவனவற்றைக் காய்கள் என்றார். 'உளவாக' என்று சிறப்பாக அமைத்தார். 'கவர்ந்தற்று' என்றதால் துன்பம் தரும் சொற்களைக் கூறும் தீமை உணர்த்தப்பட்டது. 'இனிய' என்பதற்கு மாறாக, 'இன்னாத' என்பதும், கனி என்பதற்கு மாறாக காயும் காட்டப்பட்டன. இனிய சொற்களைச் சொல்ல முயற்சி வேண்டாம் என்பதனை உணர்த்தவே 'உளவாக' என்று கூறினார்; அவை இயல்பாகவே நம்மிடம் இருப்பனவாகும்.

## 11 செய்ந்நன்றி அறிதல்

**101 செய்யாமல் செய்த உதவிக்கு ...**

கைம்மாறுகள் எல்லாம் காரணங்கொண்டுள்ளமையால், காரணமின்றிச் செய்யப்பட்ட உதவிக்கு இணையாகா என்பதாயிற்று; உலக வழக்கு நோக்கி மண்ணுலகம், விண்ணுலகம் என்றார்.

'சிறப்பித்தல்' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. 'கைம்மாறு வேண்டா' (211) என்பது சிந்தனைக்குரியதாகும். 'புத்தேளிர் உலகு' என்ற தலைப்பினைக் காண்க. 'உதவி' என்பது பிறர் செய்த நன்மையினைக் குறித்ததாகும். 'செய்யாமற் செய்தல்' மிகுந்த சிறப்புடையதாகும்.

**102 காலத்தி னால்செய்த நன்றி ...**

'காலமறிதல்' என்ற அதிகாரத்தினையும் சிந்திக்கலாம். இக்குறட்பாவில் காலம், ஞாலம் என்பவைகளைக் கருத்திற் கொண்டு, 'ஞாலம் கருதினும்' (484), 'காலம் கருதி இருப்பர்' (485) என்பவற்றையும் சிந்திக்கலாம்; செய்ந்நன்றியறிதல் அவ்வளவு பெரிது என்று கருத வேண்டும். ஆதலால்தான் ஞாலம், கடல், வையகம், வானகம் என்பவைகளைக் காட்டி மிகுதிப்படுத்தி அமைக்கின்றார்.

நன்றியினைச் செய்த 'காலத்தினை' நோக்க வேண்டுமேயல்லாமல் பொருளினை நோக்கலாகாது என்பதாகும். காலம் தப்பாமல் செய்த உதவி மிகப் பெரிதாகும். செய்ந்நன்றியறிவார்க்குப் பெரிதாகவே தோன்றும். இடர்ப்படும் காலத்தில் செய்த உதவி என்பதும் சிந்திக்கத்தக்கதாகும். 'செய்த நன்றி' என்றார். 'செய்ந்நன்றி' என்பது அதிகாரத்தின் பெயராகும். 'காலமறிதல்' என்றொரு தனி அதிகாரமும் உண்டு; ஞாலத்தின் பெரிது என்று மட்டும் கூறாமல், 'ஞாலத்தின் மாணப் பெரிது' என்றார். அதனால் காலத்தின் அருமை காட்டப்பட்டது.

**103 பயன்தூக்கார் செய்த உதவி....**

'பயன்தூக்கி' (912) பழுகுகிறவர்கள், வரைவின் மகளிரும் அவர்கள் போன்றவர் களுமாவார் காரணம் இன்றிச் செய்தல், காலத்தினால் செய்தல், பயன் தூக்காமல் செய்தல் மூன்றும் முறையே கூறப்பட்டன.

'இவர்க்கு இன்னது செய்தால் இன்னது பயக்கும்' என்று செய்கின்றவர்கள் பயன் தூக்கிச் செய்பவர்கள் ஆவார்கள். பயன் தூக்கார் என்பது பயனைக் கருதாது செய்பவர்களின் சிறப்பு கூறப்பட்டது. 'தூக்கார்', 'தூக்கின்' என்பன சிந்திக்கத்தக்கனவாகும். 'நயன்' என்பது சிறந்த உள்ளத்தினைக் காட்டியது. 'கைம்மாறு வேண்டா கடப்பாடு' (211) என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

**104 தினைத்துணை நன்றி செயினும்...**

தினை—பனை என்பது அளவை; தினை எடை, பனை எடை என்று கூறுவார்; தினை அரிசி, பனைமரம் என்பதல்ல! சிறுமை, பெருமை உணர்த்தப்பட்டன.

'சிறிதெனினும்' (102) என்று கூறப்பட்ட கருத்து மேலும் விளக்கப்பட்டதாகும்.

'பயன் தெரிவார்' — பண்பாடு எடுத்துக்காட்டப்பட்டது. 'செய்யாமற் செய்த உதவி' காலத்தினால் செய்த நன்றி, 'பயன் தூக்கார் செய்த உதவி', 'தினைத்துணை நன்றி' ஆகிய நான்கு முறையாகக் கூறப்பட்டன.

**105. உதவி வரைத்தன்று உதவி...**

'சால்பு' என்பது 'சான்றாண்மை' என்ற அதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ளது.

உதவியினைப் பெற்றுக் கொள்பவரும் நல்லவராக இருத்தல் வேண்டும் என்பதாம். ஆதலால்தான் 'சால்பு' என்று கூறினார். சால்பு எவ்வளவு பெரிதோ உதவியும் அவ்வளவு

பெரிதாம். ஆதலால் 'சால்பின் வரைத்து' என்றார். சிறுமதி படைத்தோர்க்கு உதவி செய்தால் அவர்கள் சிறிதாகவே கருதுவார்கள் என்பது குறிப்பு. 'உதவி' மும்முறை கூறப் பட்டுள்ளது 'வரைத்து'—இருமுறை கூறப்பட்டது.

**106 மறவற்க மாசற்றார் கேண்மை ...**

இக்குறட்பாவிலும் வருகின்ற குறட்பாவிலும் 'நட்பின்' சிறப்பு விளக்கப்படுகிறது. நட்பு, நட்பாராய்தல், தீ நட்பு, கூடா நட்பு போன்ற தொடர்பான அதிகாரங்களைக் காண்க; கேண்மை—கேள் ஆம் தன்மை; 'மாசு' (34) ஆம் குறட்பாவில் குறிக்கப்பட்டது. 35 ஆம் குறட்பாவையும் கருதுக; மாசற்றார் நட்பினைக் கூறினார்; 'இடுக்கண் களைவதாம் நட்பு' (788). கெடுங்காலைக் கைவிடுவார்' (799) சிந்திக்கவும்; மருவுக மாசற்றார் கேண்மை' (800) என்றும் கூறினார். பிற இடங்களையும் காணுதல் வேண்டும்.

'மறவற்க', 'துறவற்க' என்பவை சிந்தனைக்குரியன. மாசற்றார் என்பது 'மனத்துக் கண் மாசிலன்' (34) என்பதன் விளக்கம். 'துப்பாயார்' என்பது 'பற்றுக் கோடாயினோர்' உதவி செய்தோர் என்பதாகும். 'துப்பு' என்பது உணவு என்னும் சிறப்பான பொருளினைத் தருவதாகும். 12–ஆவது குறட்பா இதனைக் கூறுகின்றது. 'மருவுக மாசற்றார் கேண்மை' (800), 'நீரவர் கேண்மை' (782), கொள்ளாதான் கேண்மை' (792) என்பன போன்ற குறட் பாக்களில் வரும் 'கேண்மை' இக்குறட்பாவின் கருத்தினை விளக்குவதாகும்.

**107 எழுமை எழுபிறப்பும் உள்ளுவர்...**

வினைப்பயன் பல பிறவிகளிலும் தொடர்ந்து வரும் என்பதாயிற்று. துன்பம் துடைப்பதே நட்பிற்கு இலக்கணம் எனப்பட்டது. 'எழுமையும் ஏமாப்பு உடைத்து' (398, 126) என்று வருவன போன்ற இடங்களைக் கவனிக்கவும்.

எழுமையென்பது தொடர்ந்து வருகின்ற பிறப்புகளாகும். 'எழு பிறவி' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. வினைப்பயன் தொடரும் பிறவிகள் என்று கூறப்படுவதும் அதுவேயாகும். துடைத்தவர் என்பது உதவியவர் என்பதாம். 'ஒருமைக்கண் தான் கற்ற' (398), 'ஒருமையுள் ஆமைபோல்' (126) என்பன போன்று வருகின்ற குறட்பாக்களில் எழுமை, எழுபிறப்பு முதலியனவற்றைக் கண்டு தெளிதல் வேண்டும். 'எழு பிறப்பும் தீயவை தீண்டா' (62) என்பதும் சிந்திக்கத் தக்கது. 'நட்பு' அதிகாரங்களின் வகைகள் நினைவு படுத்தப்படுகின்றன.

**108 நன்றி மறப்பது நன்றன்று ...**

ஒருவனே இரண்டும் செய்திருக்கக் கூடும்; அப்போது மறக்க வேண்டியதையும் மறக் வேண்டாததையும் கூறினார்.

'அன்றே' என்று கூறியதால் தீமையானதை மனதில் கொள்ளாதே என்பது குறிக்கப் பட்டது. மும்முறை 'நன்று' என்றார். 'மறப்பது நன்றன்று', 'மறப்பது நன்று' என்று

கூறியதால் சிறப்பான உண்மை விளக்கப்பட்டது. 'கடனென்ப நல்லவையெல்லாம்' (981) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியவையாகும்.

**109 கொன்றன்ன இன்னா செயினும் ...**

சிறப்பு நோக்கி 'கொன்றன்ன இன்னா' என்றார். மேலே சொன்ன கருத்து தெளிவு படுத்தப்பட்டது. 'உள்ளத்தின் உள்ளக் கெடும்' (622) என்றதுபோல இங்கும் அமைத்தார். 'இன்னா செயினும்' என்பது 'இன்னா செய்யாமை' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்து கிறது. 'தீவினை அச்சம்' என்ற அதிகாரமும் சிந்திக்கத்தக்கதே; 'கொல்லாமை' என்றொரு அதிகாரமும் உண்டு.

ஒருவர் செய்த தீமையினை மறப்பதற்கு வழி கூறப்பட்டது. தீமையின் மிகுதியினைக் குறிக்க 'கொன்றன்ன' என்றார். இது செய்ந்நன்றி அறிவார்க்குக் கூறப்பட்டது. தினைத் துணை - பனைத் துணையாகக் கொள்ளப்படுதலின் அந்த 'ஒன்றினை' நினைத்தாலே, அது அவர் செய்த தீமையினைக் கெடுக்கும் என்பதாகும்; 'கொல்லாமை' என்ற அதிகாரம் நினைவு படுத்துவதற்குரியது. 'செய்த ஒன்று' என்பது சிந்தனைக்குரியதாகும். 'நன்றி மறப்பது நன்றன்று' என்பதன் விளக்கமும் இக்குறட்பாவில் காணப்படுகின்றது.

**110 எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் ...**

'எந்நன்றி' என்பது ஒவ்வொருவரும் தாம் கடமையாகக் கருதி — செய்ய வேண்டிய நன்மை — நற்செயலினைக் குறித்தது; 'மகற்கு ஆற்றலும் நன்றி' என்பது போல அவைகளைச் செய்யாவிட்டாலும் தப்பிக்கலாம்; ஆனால் உனக்கு ஒருவன் செய்த நன்மையினை மறவாது நடக்க வேண்டும். செய்ந்நன்றி மறவாதே; 'மகற்கு' என்ற சொல் 'தந்தை மகற்கு', 'மகன் தந்தைக்கு' என்பவற்றைச் சிந்திக்க வைக்கின்றது. நன்றி — நன்மை; செய்ந்நன்றி — (பிறர்) செய்த நன்மை.

நன்றி — நன்மை — என்பது மக்கட் பிறவி யெடுத்த ஒருவன் செய்யவேண்டிய இன்றியமையாத கடமையாகும். அதைச் சிதைத்தலாகாது; பெற்றோர், மக்கள், மனைவி போன்ற — தான் கடமைப்பட்டவர்களுக்குச் செய்தல் கடமையாதலால் 'நன்றி' என்றார். இவை போன்ற பிறவும் கடமைகளாக உண்டு. அப்படிப்பட்ட கடமைகளைச் செய்யத் தவறினாலும் தப்பிக்கும் வழி உண்டு. ஆனால், ஒருவன் நமக்குச் செய்த நன்றியினை மறக்கவே கூடாது என்று வற்புறுத்தினார். 'மகற்கு' (மகனுக்கு) என்பதனைச் சிறப்பாகவும் பொதுவாகவும் கொண்டு சிந்தித்தறிதல் வேண்டும். 'செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்பதும், 'தந்தை மகற்கு ஆற்றும் நன்றி' (67) என்பதும் ஒப்பிட்டுப் பார்க்கத் தக்கனவாகும். தான் செய்ய வேண்டிய — கடமையானவைகள் (நன்றி) பலவுண்டு ஆனபடியால், 'எந்நன்றி' என்று கூறப்பட்டது. 'கொன்றார்க்கும்' என்று காணப்படுவது, 'கொல்லாமை' என்ற அதிகாரத்தினை நினைவு படுத்துகிறது. 'எந்நன்றி', 'செய்ந்நன்றி' என்ற இரண்டையும், 'உய்வுண்டாம்', 'உய்வில்லை' என்ற இரண்டையும் நன்கு சிந்தித்துப் பார்க்க; உண்மை விளங்கும்.

## 12 நடுவு நிலைமை

### 111 தகுதி எனஒன்று நன்றே ...

'அறம் பிற செய்யாமை செய்யாமை நன்று' (297), 'ஒன்றாக நல்லது கொல்லாமை' (323) என்பவை போல இங்கும் 'தகுதி என ஒன்று நன்றே' (111) என்று அமைத்தார். அறங்கள் அனைத்தும் ஒரே தன்மையானவை. ஓர் ஒப்பற்ற அறப்பண்பு ஒருவரிடம் இருந்து விடுமானால், மற்ற அறங்கள் இயல்பாகவே அவரிடம் அமைந்துவிடும் எனலாம். ஆதலால்தான் ஒவ்வொன்றும் சிறப்பித்துக் கூறப்படுகிறது. 'பெறின்' என்பது அருமை தோன்ற நின்றது.

பகை, நொதுமல், நண்பு என்னும் வகையினரை பகுதி என்றார். நடுவு நிலைமை என்பது ஒரு தலைச்சார்பாக நில்லாமையாகும். 'ஒன்று நன்றே' என்பது நடுவு நிலைமையின் பெருஞ்சிறப்பினைக் குறித்தது. 'ஒழுகப் பெறின்' என்பது 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்துகின்றது. சிறந்த அறமாகக் கூறப்படுகின்ற ஒன்று இருந்தால் பிற அறங்களும் அதனைச் சார்ந்து அவனிடம் இருக்கும் என்பது உணர்த்தப்பட்டது.

### 112 செப்பம் உடையவன் ஆக்கம் ...

எச்சம் என்பது ஒருவன் இறந்த பிறகு எஞ்சி நின்ற நற்பெயர் — தீயபெயர் என்பவையாகும். 'எச்சம்' என்கின்ற சொல் பல இடங்களில் கூறப்படுகின்றது. ஒருவனுடைய பரம்பரையினைக் குறிக்கும் 'வாழ்க்கை வழியெஞ்சல்' (44) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்திக்கப்பட வேண்டியன.

தான் இறந்த பிறகும் எஞ்சி நிற்பதால், 'எச்சம்' என்று கூறப்பட்டது. விளக்கம் 'எச்சம்' என்ற தலைப்பில் காண்க. 'நடுவு நிலைமை' என்ற அறம் பெருத்த நன்மையினைக் கொடுக்கும் என்பது உணர்த்தப்பட்டது. 'சிதைவு இன்றி', 'ஏமாப்பு உடைத்து' என்பன சிந்தனைக்குரியவை.

### 113 நன்றே தரினும் நடுஇகந்தாம் ....

நன்மை கொடுக்காது என்பது தெரிய வேண்டியே, 'நன்றே தரினும்' என்றார். 'உம்'மையினைக் கருதுக.

நன்மை பயவாது ஆதலால் 'உம்'மை கொடுத்து 'நன்றே தரினும்' என்று கூறினார். 'அன்றே மறப்பது' (108) என்று கூறியது போல இங்கும், 'அன்றே ஒழிய' என்றார். 'நடுவு நிலைமை' இல்லாமல் சேர்த்த பொருள் தீமையினைத் தந்தே தீரும் என்பது குறிக்கப்பட்டது.

### 114 தக்கார் தகவிலர் என்பது ...

'எச்சம்' என்பது எஞ்சி நிற்பது. எச்சம் என்பதற்கு 'மக்கள்' என்று மட்டும் பொருள் கூறலாகாது. சிலர் மக்கள் இல்லாமலும் இருக்கலாம். 'அவர் பொருள் தம்தம் வினையான் வரும்' (63) என்பது போல, 'அவரவர் எச்சத்தால் காணப்படும்' என்றார்.

'எச்சம்' என்று பொதுப்படக் கூறியதால், எஞ்சி நிற்பது மக்கள், பரம்பரை பிற— என்பவைகளைக் குறிப்பதாயிற்று. 'எச்சம்' என்ற தலைப்பினைக் காண்க. 'நடுவு நிலைமை' என்பதனை தற்காலத்தில் கூறப்படும் 'மனசாட்சி' என்பதோடு பொருத்திப் பார்த்தலும் உண்டு. 'எச்சம் என்று என் எண்ணுங் கொல்லோ' (1004) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன.

## 115 கேடும் பெருக்கமும் இல்அல்ல ...

சான்றாண்மை என்னும் அதிகாரம் சிந்திக்கத்தக்கது. கேடும் பெருக்கமும் அனைவர்க்கும் இயல்பேயாகும்; பிறவியிலேயே அமைந்துகிடப்பதுமுண்டு. அதனை நினைத்து நடுவு நிலைமை தவறி வாழக் கருதுதல் குற்றம்; அவ்வாறு சான்றோர்கள் செய்யமாட்டார்கள்.

தீவினையால் கேடும் நல்வினையால் பெருக்கமும் யாவர்க்கும் முன்னே அமைந்து கிடந்தனவாகும். அவை காரணமாகக் கோடுதலாவது, அவை இப்போது வருவனவாகக் கருதிக் கேடு வாராமையைக் குறித்தும், பெருக்கம் வருதலைக் குறித்தும் ஒருதலைக்கண் நிற்றல் என்பதாம். 'நெஞ்சத்து' என்றதால், சொற்களால் காட்டுதல் பயனற்றது என்பது விளங்கும். மனதில் கோட்டம் இல்லாதிருப்பதே சான்றோர்க்கு அழகாயிற்று. 'இல்லல்ல' என்பதும் சிந்தனைக்குரியது.

## 116 கெடுவல்யான் என்பது அறிகதன் ...

நினைத்தலும் செய்தலோடு ஒக்குமாதலால் 'செயின்' என்றார். தான் யாருக்குத் தீமை செய்தானோ அவர் கெடுவதன்றி, 'யானே கெடுவன்' என்பதனை முதலில் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். 'அறிக' என்பது 'அறிவுடைமை' என்ற அதிகாரத்தினை நினைவு படுத்தும். 'நெஞ்சம்' என்ற சொல்லினைக் கொண்டு, காமத்துப்பாலில் காணப்படும் 'நெஞ்சொடு புலத்தல்', 'நெஞ்சொடு கிளத்தல்' முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும். 'தன் நெஞ்சு அறிவது' (293) போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன.

## 117 கெடுவாக வையாது உலகம் ...

வறுமை, செல்வம் என்பது உலக இயற்கை என்பது உணர்த்தப்பட்டது. நேர்மையாக வாழ்பவனுக்கு உலகம் என்றும் சிறப்பளிக்கும்.

நடுவு நிலைமையில் நின்று வாழ்பவர்களுக்கும் இயற்கையில் வறுமையான வாழ்க்கை வருவது உண்டு என்பது கூறப்பட்டது. வறுமையுற்றிருந்தாலும் உலகோர் அவர்களைச் சிறப்பாகவே கருதுவர். 'திருக்குறள்' உலகப் பொதுமறையானபடியால், ஆசிரியர் பற்பல இடங்களிலும் உலகோர், உலகம், உலக அறிஞர்கள், உலக நூல்கள் என்ற குறிப்பினை உணர்த்தியே கருத்துக்களை அமைத்துக் காட்டுவார்.

## 118 சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் ...

'சான்றோர்க்கு அணி' (115) என்பதனை இங்கும் கூறினார்.

துலாக் கோலானது முதலில் சமமாக நிற்கும். பிறகு தன்னிடம் வைத்த பாரத்தை வரையறுத்துக் காட்டும். சான்றோர்களும் அவ்வாறே பிறரிடம் நடந்து கொள்ளுவார்கள். 'சான்றாண்மை' என்னும் அதிகாரம் நினைவு படுத்தப்படுகின்றது.

**119 சொற்கோட்டம் இல்லது செப்பம் ...**

சொல்லும் மனமும் இணைந்து செயல்படுவதே நடுவுநிலைமையாகும். 'பெறின்' என்பது அருமை தோன்ற நின்றது.

'சொற்கோட்டம்', 'உட்கோட்டம்' என்பன சிந்தனைக்குரியன. மனத்துடன் கூடாமல் சொல்லும் சொற்கள், நடுவு நிலைமையாகா என்றார். மனக்கோட்டம் இல்லா திருத்தலே முதற்கண் வேண்டப்படுமென்பது தெளிவாக்கப்பட்டது. 'இல்லது' என்பதும், இன்மை பெறின்' என்பதும் கருத்துக்களைச் சிறப்பாக உணர்த்துகின்றன.

**120 வாணிகம் செய்வார்க்கு வாணிகம் ...**

கொள்வது மிகையும் கொடுப்பது குறையும் ஆகாமல் ஒப்ப நாடிச் செய்வதனையே, 'பிறவும் தமபோல் செயின்' என்று குறித்தார். 118வது குறட்பாவில் சீர்தூக்கும் கோலினைக் கூறி இக்குறட்பாவில் வாணிபத்தினைக் கூறியது சிந்திக்கத்தக்கது. 'நடுவு நிலைமை'யின் சிறப்பு நன்கு கூறப்பட்டது. 'பிறிதின் நோய் தன் நோய் போல்' (315) என்பது போன்ற குறட்பாக்களையும் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.

## 13 அடக்கம் உடைமை

**121 அடக்கம் அமரருள் உய்க்கும் ...**

உலக வழக்கில், இன்பம் நுகர்வதை **தேவருலகம்** என்றும், துன்பம் அடைவதை **நரகம்** என்றும் சொல்வதுண்டு.

**அமரர் உலகம்** என்பதும் **ஆர் இருள்** என்பதும் உலக வழக்கு. மக்களுக்கு இருக்க வேண்டிய அடக்கமுடைமையின் சிறப்பினை நன்கு தெளிவு படுத்தினார். இவ்வுலக வாழ்க்கையில் மக்களின் நற் பண்பினையே எல்லாவற்றிற்கும் மேலாகக் கூறி, அதனையே வற்புறுத்த வேண்டி, மக்களிடையே மேலானதென்று நினைக்கப்பட்டுவரும் — தேவருலகத் தினைச் சுட்டிக் காட்டுகிறார். மக்களிடையே நிலவிவரும் எண்ணத்தினை மறுத்துக்கூறி உண்மையினை உணர்த்துவது ஆசிரியரின் முறையன்று; மக்கள் உள்ளத்தில் இருக்கும் எண்ணத்தினைச் சுட்டிக் காட்டி, 'எது' உண்மை'' என்று எடுத்துக் கூறுவதே ஆசிரியர் கையாண்டு வரும் முறை. 'உய்க்கும்', 'உய்த்துவிடும்' என்பன சிந்தனைக்குரியன. 'தேவர்கள்' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. 'அடக்கம்', 'அடங்காமை' என்பன மாறுபட்ட பயன்களைக் குறித்தன. 'தான் அடங்காப் பேதை' (834) என்பதும் கருதுக.

**122 காக்க பொருளா அடக்கத்தை ...**

'உயிர்' மக்கள் உயிர்மேல் நின்றது. அடக்கத்தினை **ஆக்கம்** என்றே குறிப்பிட்டார். காப்பாற்ற வேண்டும் என்பதனைச் சுட்டிக் காட்டவே, 'காக்க' என்றார். உலகியலில் செல்வத்தினைக் காப்பதுபோல் அடக்கம் என்பதனையும் செல்வமாகக் கருதிக் காத்தல் வேண்டும் என்றார்.

**123 செறிவறிந்து சீர்மை பயக்கும் ...**

அடங்குதலே, நமக்கு அறிவாகும்; இதை அறியவேண்டும் என்பதற்காகவே, 'அறிவறிந்து' என்றார், 'அறிவறிந்த' மக்கள் என்பதுபோல.

அறியப்படுவனவும் அறிந்து அடக்கப் படுவனவும் அறிந்து, நெறியினானே அடங்கப் பெறின், அவ்வடக்கம் நன்மை பயக்கும் என்றவாறு அறியப்படுவன. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனும் புலன்கள் அடக்கப்படுவன; மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் பொறிகளுடன் அறிவும் அடக்கமும் ஒரு சேர சிறப்பிக்கப்பட்டன. அடக்கத்தின் முறை கூறப்பட்டது. 'அறிவுடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகிறது. 'செறிவு', 'அறிவு' இரண்டும் சிந்திக்கத் தக்கன.

**124 நிலையின் திரியாது அடங்கியான்...**

திரியாது அடங்குதல் — பொறிகளால் புலன்களை நுகர்ந்து நின்று அடங்குதலாகும். இவன் பெருமை அளவுபடாதது என்பதாகும். தோற்றத்தில் மலையினைவிடப் பெரிது இல்லையாதலால், அடக்கமுடைமையின் சிறப்பு மிகுத்துக் கூறப்பட்டது. 'சிறப்பித்தல்' என்ற தலைப்பினைக் காண்க. 'தோற்றம்' சிந்திக்கத்தக்கது. 'ஆடவர் தோற்றம்' (1003) என்பதைச் சிந்தித்தல் வேண்டும். உவமையால் சிறப்பின் அருமை கூறப்பட்டது.

**125 எல்லார்க்கும் நன்றாம் பணிதல் ...**

செல்வத்தைப் பற்றியும் செல்வர்களைப் பற்றியும் பேசும் 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரம் சிந்திக்கத் தக்கது.

பெருமிதத்தினைச் செய்யும் கல்வியும் குடிப்பிறப்பும் உடையார் அஃதின்றி அவை தம்மானே அடங்கிய வழி அந்த அடக்கம் சிறந்து காட்டாதாகலின், 'செல்வர்க்கே செல்வம் தகைத்து' என்றார். 'பணிவு' என்னும் தலைப்பினைக் காண்க. 'பணியுமாம் என்றும் பெருமை' (978), 'பெருக்கத்து வேண்டும் பணிதல்' (963) போன்ற குறட்பாக்களைச் சிந்திக்க வேண்டும்.

**126 ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ...**

ஒருமைக்கண் செய்த வினைப்பயன் எழுமையும் தொடரும் என்னும் இயற்கையின் நியதி குறிக்கப்பட்டது. 'எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து' (112) என்று கூறியதுபோல, இங்கு

'எழுமையும் ஏமாப்பு உடைத்து' என்றார். 'ஆற்றின்' என்றதால், அடக்கத்தின் அருமை குறிக்கப்பட்டது. எழுமை 'பரம்பரை' என்பதனையும் குறிக்கும். ஒருமை, ஐந்து, எழுமை, (ஒன்று, ஐந்து, ஏழு) என்பன இக்குறட்பாவின் சிறப்பினைக் காட்டுகின்றன. 'எழுமை' என்பதனைத் தொடர்ந்து வருகின்ற பல பிறவிகள் என்றலும் கூடும். 'எழு பிறப்பு' என்ற தனித் தலைப்பினைக் காண்க.

**127 யாகாவார் ஆயினும் நாகாக்க ...**

நாவின் அருமையெல்லாம் 'சொல்வன்மை' என்ற அதிகாரத்திலும் பிற இடங்களிலும் காண்க. அல்லாப்பர், செம்மாப்பர் என்பனபோல் **சோகாப்பர்** என்பது ஒரு சொல்.

வாக்கும் மனமும் காயமும் அடங்காதபோது, வாக்கினையாகிலும் பாதுகாக்க வேண்டும்; இல்லாவிட்டால் துன்பம் வரும். 'இனியவை கூறல்', 'பயனில சொல்லாமை', 'சொல்வன்மை', 'அவை அறிதல்', 'அவை அஞ்சாமை' முதலிய அதிகாரங்கள் நினைவு படுத்தப்படுகின்றன. 'காக்க', 'காவாக்கால்' என்பன கருத்தினைத் தெளிவுபடுத்துவன.

**128 ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் ...**

தீய சொற்களாவன : தீங்கு பயக்கும் பொய், குறளை, கடுஞ்சொல் முதலியன. 'தீச்சொல் பொருட் பயன்' என்பதன் கடுமை 'ஒன்றானும்' என்பதால் குறிக்கப்பட்டது முன்னர் உண்டான நன்மையும் இவற்றால் தீதாய்விடும்.

**129 தீயினால் சுட்டபுண் உள்ஆறும் ...**

ஆறிப் போவதால் தீயினால் சுட்டதைப் **புண்** என்றார்; ஆறாததால் நாவினால் சுட்டதை வடு என்றார். புண் உடம்பின் மீது இருந்தாலும் மனத்தில் அப்போதே ஆறிவிடும். தீயும் கொடிய சொல்லும் சுடுதல் தொழிலால் ஒத்திருந்தாலும், ஆறாமையால் தீயினும் கொடியது எனப்பட்டது. நாக்கு எப்போதும் நீர்த்தன்மையில் — ஈரத்தில் இருப்பது. அப்படியிருந்தும் சுடும் என்றது சிந்தனைக்குரியதாகும். 'சுட்ட புண்', 'சுட்ட வடு', 'ஆறும்', 'ஆறாதே' என்பன சிந்தனையைத் தூண்டுவன. நாவின் தன்மைகளையெல்லாம் 'சொல்வன்மை' என்ற அதிகாரத்திலும், சொற்களைப் பற்றிப் பேசுகின்ற பிற அதிகாரங் களிலும் கண்டறிதல் வேண்டும்.

**130 கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் ...**

அறம் 'தானாகவே' அவனிடம் வந்து சேரும் என்று சிறப்பித்தார். நற்குணங்களே இறைத்தன்மை எனப்படும். 'அறம்' என்பது நன்கு தெளிவுபடுத்தப்பட்டது; 'கதம் காத்து' என்றார். கோபம் (வெகுளி) அடக்கப்பட வேண்டும். 'வெகுளாமை' என்ற அதிகாரம் சிந்திக்கப்பட வேண்டியது. கற்று — அடங்கல் என்றார்; கற்று அடங்குவது சிறந்த குணம்; 'தான் அடங்காப் பேதை' (834) என்பது சிந்தனைக்குரியது.

'அன்பிலதனை அறம்' (77), 'அறம் சூழும்' (204) என்ற குறட்பாக்களையும் இக்குறட்பாவில் கூறப்படும் 'அறம் பார்க்கும்' என்பதனோடு சிந்தித்துப் பார்த்து உண்மை அறிதல் வேண்டும். 'கதம்' என்பதால் 'வெகுளாமை' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்படுகிறது. செவ்வி என்பது தன் குறை கூறுவதற்கு ஏற்ற மனம், மொழி, முகங்கள் இனியனவாகும் காலத்தில் இத்தன்மையுடையவனை அறம் தானேசென்று அடையும் என்றார். 'அருஞ்செவ்வி' (564) என்பது போன்ற குறட்பாக்களைக் கண்டு 'செவ்வி' என்பதன் கருத்தினை அறிதல் வேண்டும். 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்படுகிறது. 'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும்' (594) என்றதுபோல இங்கும் 'அறம் பார்க்கும்' என்றார். வெகுளி தோன்றாமை, கல்வியுடைமை, அடக்கம், ஆகிய மூன்றும் உடையவன் என்பது குறிக்கப் பட்டது. கல்வி என்ற அதிகாரம் நினைவு படுத்தப்படுகிறது.

## 14 ஒழுக்கம் உடைமை

### 131 ஒழுக்கம் விழுப்பம் தரலான் ...

எல்லா மக்களுக்கும் ஒழுக்கம் இன்றியமையாதது; எனவே பொதுப்படக் கூறினார். ஒழுக்கமுடைமை என்பதுடன் கூடாவொழுக்கம்என்றொரு அதிகாரமும் உண்டு.

வாழ்க்கையில் உயர்ந்தார்க்கும் தாழ்ந்தார்க்கும் ஒப்ப விழுப்பம் தருவதால் பொதுப் படக் கூறினார். 'உயிரினும் ஓம்பப்படும்' என்பது சிந்தனைக்குரியது. 'ஒழுக்கம்' இருமுறை கூறப்பட்டது. ஒழுக்கத்தினால் பெறப்படுவது எது என்ற வினாவுக்கு இக்குறட்பா விடை பகர்கின்றது. ஒழுக்கம், விழுப்பம், உயிர், ஓம்புதல் முதலிய சொற்கள் கருதற்பாலன.

### 132 பரிந்துஓம்பிக் காக்க ஒழுக்கம் ...

மேலே, உயிரினைவிடச் சிறந்தது என்று கூறி, இக்குறட்பாவில் அதனைச் சிறந்த துணை என்றார்.

வருந்திப் போற்றி ஒழுக்கத்தினைக் காக்க வேண்டும் என்பது கருத்தாம். உலகியல் முறைகளையும், மேலோர் கருத்துக்களையும், அறிந்தோர் எண்ணங்களையும், நூலோர் கூறியவைகளையும் நன்கு அறிந்துணர்ந்து தமது முடிவான கருத்தினை ஆசிரியர் எடுத்துக் கூறுவது வழக்கம். ஆதலால்தான் 'தெரிந்து ஓம்பித் தேரினும்' என்றார். ஓம்பி இருமுறை கூறப்பட்டது. 'தெரிந்து', 'தேரினும்' என்பன சிந்திக்கத்தக்கன. தெரிந்து என்ற சொல்லினால், 'தெரிந்து செயல்வகை', 'தெரிந்து தெளிதல்', 'தெரிந்து வினையாடல்' என்பன போன்ற அதிகாரங்களை நினைவுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும். ஒழுக்கத்தினைக் காப்பாற்ற வேண்டும். காப்பாற்றுதல் எளிதானதல்ல என்பதனைக் கூறவே பரிந்து என்றார்.

### 133 ஒழுக்கம் உடைமை குடிமை ...

'குடிமை' என்ற தனி அதிகாரத்தையும் நினைவிற் கொள்க. ஒழுக்கமில்லாதவர்கள் விலங்கு இனங்களாகக் கருதப்படுவார்கள். ஒழுக்கம் அவர்களுக்கு இல்லாததால் இழிவான பிறப்பாகக் கருதப்படுவார்கள்.

நற்குலப் பண்பு என்று கூறப்படுவதற்கு 'ஒழுக்கமே' முதற் காரணமாகும். ஒழுக்கத்தில் தவறினால் இழிவான பிறப்பாய்விடும். மக்கட் பிறவிக்கேற்ப ஒழுகுதல் வேண்டும். 'அரம் போலும்' (997) என்பது போன்ற குறட்பாக்களை நினைவுபடுத்திக் கொள்ளலாம். உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணம் ஒழுக்கமேயாகும். 'உயர்குலம்' என்பது நற்பண்பு, நற்செயல் என்பவற்றைக் குறித்ததாகும். அவற்றிற்கு மாறாக நடப்பவர்களே இழிகுலத்தோர் ஆவர். உயர் குலத்தில் வந்தவனேயானாலும் ஒழுக்கங் கெடின் இழிந்த பிறப்பாய்விடும். உயர்ந்தோர் குலத்தில் பிறந்த குலப்பெருமை காரணமாக நில்லாமல், ஒழுக்கமே காரணமாயிற்று. இதனை அறிந்துணர்தல் வேண்டும். 'குடிமை' என்ற சொல், 'குடிமை' என்ற அதிகாரத்தினை நினைவு படுத்துகின்றது. 'குடி செயல் வகை' என்று வேறு ஓர் அதிகாரமும் உண்டு. 'ஒழுக்கமும் வாய்மையும்' (952) என்பது போன்ற குறட்பாக்களையெல்லாம் சிந்தித்தல் வேண்டும். உடைமையாத ஒழுக்கத்தினைக் கொள்ளுதல் வேண்டும் என்பது சிறப்பு.

**134 மறப்பினும் ஒத்து கொளலாகும் ...**

ஒத்து = வேதம், மறைநூல்; ஓதிக் கொளல் ஆகும். மறந்தது — மறப்பது பெரும் குற்றமாகாது என்பதனைக் குறிக்கவே 'மறப்பினும்' என்றார். மறை (வேதம்) என்று சொல்லப்படுகின்ற ஒத்தினைப் படித்துக் கொண்டிருப்பதாலேயே 'உயர்ந்த ஒழுக்கத்தினன்' என்று கருதுதல் தவறு என்பது உணர்த்தப்பட்டது. அப்படிக் கருதுவார் சிலர் உண்டு என்பதனால் 'அப்படிக் கருதாதே' என்று கூறினார். 'ஒத்து' கற்கப்பட வேண்டியது என்பதும் உணர்த்தப்பட்டது. ஒழுக்கம் கெட்டால் பிறகு தப்பிக்கும் வழியே இல்லை. ஆனால் மறந்தாலும் மறையைப் பிறகு ஓதிக் கொள்ளலாம். 'கெடும்' என்று கூறியது சிந்திக்கத்தக்கது. வேதத்தினைப் படிப்பவன், பார்த்துக் கொண்டிருப்பவன் — 'பார்ப்பான்' என்று அழைக்கப் பட்டான். பார்ப்பவர் பார்ப்பார் என்று அறிதல் வேண்டும். 'பொச்சாப்புப் பார்ப்பார் கண்' (285) என்பதைக் கருதுக. 'ஒத்து' என்பது நூலில் ஒருமுறைதான் காணப்படுகின்றது. ஒத்தினை ஓதுதல் என்று கூறுதல் வழக்கம். ஓதி உணர்ந்தும்' (834) என்பன காணவும். அறம் வகுப்பவர்கள் அந்தணர்கள் எனப்படுவர். அவர்கள் செந்தண்மை பூண்டு ஒழுகுபவர்கள். 'அந்தணர்' என்ற தலைப்பில் தெளிவு காண்க. 'ஒத்து', 'பார்ப்பான்', 'பிறப்பு ஒழுக்கம்' முதலியனவற்றுடன் 'பிறப்பொக்கும்' (972) என்ற குறட்பாவினையும் சிந்தித்தறிய வேண்டும்.

**135 அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று ...**

இக்குறளில், 'அழுக்காறாமை என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. உயர்வுக்குக் காரணம் ஒழுக்கம் என்பது உணர்த்தப்பட்டது. 'உடையான்', 'இலான்' என்பன இருவகை உண்மைகளை எடுத்துக்காட்டின. 'கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம்' (166) என்ற குறட்பா சிந்திக்கத்தக்கது.

**136 ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் ...**

ஒழுக்கமுடைமையினை உறுதியாகக் கொண்டு வாழ்பவர் அது செய்தற்கு அருமை என்பதனால் உரவோர் என்று கூறினார். கொண்ட நோன்பு விடாதார் என்பதால் அவ்வாறு கூறினார். 'உரவோர்' என்பது உரன் என்னும் தோட்டியான்' (24) என்னும் குறட்பாவினை நினைவு படுத்துகிறது. 'அறிந்து' என்பது 'அறிவுடைமை' என்ற அதிகாரத்தினை நினைவு படுத்துகிறது.

**137 ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை ...**

மனிதப்பிறவி அடையக் கூடாத பழியினை அடைவர் என்பதனால் 'எய்தாப் பழி' என்றார்.

அளவறிந்த பழி என்பதும் அமையும். 'மேன்மை எய்துவர்', 'பழி எய்துவர்' என்று இரு வழியிலும் எய்துவது கூறப்பட்டது. ஒழுக்கம், இழுக்கம் — அவைகளுக்குக் காரணமாக நின்றன. 'எய்துவர்' என்ற சொல் இருமுறை கூறப்பட்டது.

**138 நன்றிக்கு வித்தாகும் நல்ஒழுக்கம் ...**

'நன்றிக்கு வித்தாகும்' என்றதனால் தீயொழுக்கம் பாவத்திற்கு — துன்பத்திற்குக் காரணமாயிற்று. 'கூடாவொழுக்கம்' என்ற அதிகாரத்தையும் காண்க.

உலகில் கூறப்படும் எல்லா வகையான அறச்செயல்களுக்கும் முதற்காரணமாக இருப்பது 'ஒழுக்கமே' ஆகையால் அதனை 'வித்து' என்றார். நல்லொழுக்கம் இல்லையெனில் பிற எதுவும் வளராது. 'வைப்பிற்கோர் வித்து' (24) என்றதுபோல் 'நன்றிக்கு வித்து' என்றார். பிறவும் காண்க. 'என்றும் இடும்பை தரும்' என்பது சிந்தனைக்குரியது.

**139 ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே ...**

வழுக்கியும் — மறந்தும். 'பொச்சாவாமை' என்ற அதிகாரத்தைக் கருதுக. 'மறந்தும் பிறன் கேடு சூழற்க' (204) என்பதைச் சிந்திக்க வேண்டும்.

ஒழுக்கமுள்ளவர்கள் வழுக்கியும் சொல்லமாட்டார்கள் என்று கூறியதால் ஒழுக்கமுள்ளவர்களின் தனிச்சிறப்பு விளக்கப்பட்டது. தமது வாய் நல்ல சொற்களையே சொல்லிப் பழக்கப்பட்டதால் தீயன தவறியும் வாரா என்பதனைச் சுட்டிக்காட்டவே 'வாயால் சொலல்' என்று கூறினார்.

**140 உலகத்தோடு ஒட்ட ஒழுகல் ...**

கல்விக்குப் பயன் அறிவும், அறிவுக்குப் பயன் ஒழுக்கமுமாம். 'உலகத்து இயற்கை அறிந்து செயல்' (637) 'அவ்வது உறைவது அறிவு' (426), 'மாணார்க்கு அரிது' (823) என்பன போன்றவற்றை யெல்லாம் கருதிப் பார்க்கவேண்டும்.

உலகத்தோடு பொருந்த ஒழுகலாவது, உயர்ந்தோர் பலரும் ஒழுகியவாறு என்பதாம். நீதி (சட்ட) நூல்கள் சொல்லியவற்றுள் இக்காலத்திற்கு ஏலாதன ஒழித்து, ஏற்பன கொண்டு நடத்தல் வேண்டும் என்பதற்காக 'உலகத்தோடு ஒட்ட' என்றார்.

அறிவிலாதார் பல நூல்களைக் கற்றாலும் உயர்ந்தாரோடு — உலகத்தோடு — பொருந்த ஒழுகுதலை அறியார் என்றார். பல்வகைக் கல்வியைக் கற்றும் ஒழுகுதலைக் கல்லார் அறிவிலார்க்கு நிகராவர். பல நூல்களைக் கற்றிருந்தும் நன்கு ஒழுக வேண்டுமென்பதை மேற்கொள்ளாதவர்கள் இருக்கின்றார்கள் என்பது குறிக்கப்பட்டது. 'கல்வி', 'கல்லாமை',

'அறிவுடைமை', 'புல்லறிவாண்மை' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப் படுகின்றன. 'எவ்வது உறைவது உலகம்' (426), 'செயற்கையறிந்தக் கடைத்தும்' (637) என்பன போன்ற குறள்கள் சிந்தனைக்குரியன. பல கற்றும் என்பது 'பல நல்ல கற்ற' (823) என்பதை நினைவு படுத்துகிறது. 'ஒட்ட ஒழுகல்' என்பதன் சிறப்பும் அருமையும் குறிக்கப்பட்டது.

## 15 பிறன்இல் விழையாமை

### 141 பிறன்பொருளாள் பெட்டுஒழுகும் பேதைமை !...

'பேதைமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. 'கூடாவொழுக்கம்' சுட்டப்பட்டது. பேதைமை உடையவர்களிடம் அறமும் பொருளும் இல்லை யென்பதாம்.

தான் மட்டும் நுகர்தற்கு உரிமை பெற்றவனுக்கு உரியவள் என்பதனைக் குறித்துக் காட்டவே 'பொருளாள்' என்றார். 'ஒழுக்கமுடைமை', 'பேதைமை', 'அறன் வலியுறுத்தல்' முதலிய அதிகாரங்கள் நினைவு படுத்தப்படுகின்றன. 'பிறன் பொருளான்', 'தம் பொருள் என்ப தம் மக்கள்' (63) என்பனவற்றைக் காண்க. 'பொருள்' என்பது இருமுறை குறிக்கப் படுகின்றது.

### 142 அறன்கடை நின்றாருள் எல்லாம் ...

இக்குறளில், அறத்தின் நீக்கப்பட்டமையின் 'அறன் கடை' என்றார். 'அறன் கடை' நின்ற பெண்வழிச் செல்வாரும், வரைவின் மகளிரோடும் இழிகுல மகளிரோடும் கூடி இன்பம் நுகர்வாரும், அறமும் பொருளும் இழப்பார்கள். 'பிறன் கடை' நின்றார், அச்சத்தால் தாம் கருதிய இன்பமும் இழக்கின்றார். ஆதலின் 'பேதையார் இல்' என்றார். எனவே இன்பமும் இல்லை என்றவாறு 'பேதைமை' அதிகாரம் நினைவு படுத்தப்படுகின்றது. 'அறத்தின்' சிறப்பு வலியுறுத்தப்பட்டது.

### 143 விளிந்தாரின் வேறல்லர் மன்ற ...

'துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்' (926) என்பது போல இக்குறட்பாவும் அமைந்தது. அறம் பொருள் இன்பங்கள் ஆகிய பயன் உயிர் எய்தாமையின், 'விளிந்தாரின் வேறல்லர்' என்றார்.

'தெளிந்தார் இல்' சிந்தித்துணர வேண்டியதாகும். அறம் பொருள் இன்பம் எய்தாமையின் பிணத்தோடு ஒப்பர் என்றார் ஆசிரியர். 'ஒழுக்கமுடைமை', 'கூடாவொழுக்கம்' முதலிய அதிகாரங்கள் நினைவு படுத்தற்குரியன.

### 144 எனைத்துணையர் ஆயினும் என்னாம் ...

'இந்திரனே சாலும் கரி' (25) என்பதுபோல அனைத்துச் சிறப்பும் அழிவதாகும் என்பதாம். 'அஃகி அகன்ற அறிவு என்னாம்' (175) 'அறிவினான் ஆகுவது உண்டோ? (315) என்பன போன்றவைகளைச் சிந்திக்கவும்.

வினாமுறையில் அமைக்கப்பட்டுள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். தீமை புரிகின்றவன் அடைகின்ற இழ்நிலையினைக் குறிக்க வேண்டியே, 'என்னாம்' என்றார். சிறிதளவு கூட நினைத்துப் பார்க்காமல் தீமை புரிகின்றானே என்பதைக் காட்டவே, 'தினைத்துணையும் தேரான்' என்றார். 'தேரான்' என்கின்ற சொல், 'தேரான் பிறனை' (508), 'தேராது' (509), 'தேரான் தெளிவும்' (510) முதலியன போன்ற குறட்பாக்களை நினைவு படுத்துவனவாகும். அவற்றின் பொருள் நுட்பங்களைத் தெரிந்துணர்தல் வேண்டும்.

### 145 எளிதென இல்இறப்பான் எய்தும் ...

இல்லின்கண் இறத்தல் என்பது பிறன் இல்லாளிடம் நெறி கடந்து சேறல் என்பதாகும். நெறி கடந்து செல்லுகின்றான் ஆதலின் 'இறப்பான்' என்றார். 'எளிது' என நினைக்கின்றான் என்பது இதனில் குறித்துக்காட்டப்பட்டது. 'எல்லா நாளும் அழியாது நிற்கும் பழியைப் பெறுவான்' என்பதற்காகவே 'எஞ்ஞான்றும்' என்றார். 'நிற்கும் பழி' என்பது ஆராய்வதற்குரியது.

### 146 பகைபாவம் அச்சம் பழிஎன ...

முந்தைய குறட்பாவில் 'இல் இறப்பான்' என்றதுபோல இங்கும் கூறினார். முந்தைய குறட்பாவில் 'பழி என்று கூறி, அத்துடன் மூன்று குற்றங்களைச் சேர்த்தார்.

'இன்பம் என்ன; என்ன இன்பம் கொண்டான்' என்று பலராலும் இகழப்படுவான் என்பதாம். 'பாவம்' என்பது துன்பமுறுவான் என்பதனைக் குறித்ததாகும். 'இல் இறப்பான்' என்று பல குறட்பாக்களிலும் குறிக்கப்படுவது சிந்தனைக்குரியதாகும்.

### 147 அறன் இயலான் இல்வாழ்வான் என்பான் ...

'இல்வாழ்க்கை' என்ற அதிகாரத்தில் கூறப்பட்டதுபோல, 'இல்வாழ்வான் என்பான்' என்று கூறி வைத்தார்.

அறத்தன்மையில் வாழுகின்ற இல்வாழ்க்கையின் பண்பு கூறப்பட்டது. 'பிறன் இயலாள் பெண்மை' என்பது இந்த அதிகாரத்தினை உய்த்துணர வைக்கின்றது. 'இயலான்', 'இயலாள்' என்பவை சிந்தனைக்குரியவை. இதில் அறத்தன்மை எடுத்துக்காட்டப்பட்டது.

### 148 பிறன்மனை நோக்காத பேராண்மை ...

புறப் பகைகளை அடக்கும் ஆண்மை உடையார்க்கும் உட்பகையாகிய காமத்தை அடக்கும் ஆண்மையைப் 'பேராண்மை' என்றார்.

'சான்றோர்', 'ஒழுக்கு' முதலிய சொற்கள் சான்றாண்மை, ஒழுக்கமுடைமை முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்துவனவாகும். இதில் 'அறம்' கூறப்பட்டது. உட்பகையாகிய காமத்தினை அடக்குவதை 'பேராண்மை' என்றார், அறத்தினையும் ஒழுக்கத்தினையும் இணைத்துக் கூறினார். ஆண்மைத் தன்மை எதுவென உணர்த்தப்பட்டது. 'புகல்', 'இறப்பான்', 'நயவாதவன்' என்று இதுகாறும் கூறிய ஆசிரியர், 'நோக்காத' என்று கூறியதால்

அத்தன்மையினை 'பேராண்மை' என்று சிறப்பித்தார். அருமை தோன்ற 'பேராண்மை' என்றார்.

**149 நலக்குரியார் யார்எனின் நாமநீர் ...**

அகலம், ஆழம், பொருளுடைமை முதலியவற்றால் அளவிடப்படாமையின், 'நாம நீர்' என்றார். 'வாய்மை எனப்படுவது யாது எனின்' (291) என்பது போன்ற வினா முறையில் அமைக்கப்பட்ட குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும்.

'உரியார்', 'உரியாள்' என்பன நன்கு சிந்தித்தறிய வேண்டுவனவாகும். நினைத்ததைத் தருகின்ற நீர் சூழ்ந்த உலகம் என்று கூறினும் அமையும்; 'தோயாதார்' சிந்திக்கத்தக்கது.

**150 அறன்வரையான் அல்ல செயினும் ...**

கருத்தின் இன்றியமையாத் தன்மையினை, 'செய்யினும்' என்றார். அதுவும் செய்யக் கூடாதது தான். 'அறங்கூறான் அல்ல செயினும்' (181) என்பது போல பல இடங்களிலும் ஆசிரியர் இம்முறையில் கருத்துக்களை அமைத்துள்ளார்.

'வரையான்', 'வரையாள்' சிந்திக்கத்தக்கனவாகும். இந்த அரிய குணம் மேம்பட்டுத் தோன்றும் என்பதாம். 'அறன் வரையான் அல்ல செயினும்' (150), 'அறங்கூறான் அல்ல செயினும்' (181), 'நயனில சொல்லினும்' (197) என்பன போன்ற முறைகளில் கருத்துக்களை அமைத்துச் சிறப்பித்துக் காட்டுதல் ஆசிரியரின் இயல்பாகும். 'வரையாள்' என்பதால் பிறனுக்கு உரியவள் என்பதன் கருத்து விளக்கமாகத் தெளிவுபடுத்தப்பட்டது.

## 16 பொறை உடைமை

**151 அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல ...**

'இகழ்தல்' என்பது மிகையாயின செய்தலையும் சொல்லுதலையும் குறித்தது. நிலமே அவனைத் தாங்குகிறது. அதன்மேல் நின்று கொண்டு அதற்குத் துன்பம் செய்கிறானே! ஒருவருடைய ஆதரவிலேயே ஒருவன் வாழ்ந்துகொண்டு அவரை இகழ்ந்து பேசுவானாம்!

அருமையான உவமை இக்குறட்பாவில் காணப்படுகின்றது. நம்முடைய ஆதரவிலேயே இருந்து கொண்டு நமக்குத் துன்பம் தருபவர்களைத் 'தாங்கும் நிலம் போல' என்பதனால் குறித்துக் காட்டினார். 'அகழ்வார்', 'இகழ்வார்' — கருதற்பாலனவாகும். அவ்வாறு பொறுத்தல் அருமையான அறச்செயல் ஆனபடியால் அதைத் 'தலை' - முதன்மை என்று கூறினார்.

**152 பொறுத்தல் இறப்பினை என்றும் ...**

'நன்றல்லது அன்றே மறப்பது நன்று' (108) என்பதனைச் சிந்தித்துப் பார்க்கவும். பொறுத்தலும் மறத்தலும் கூறப்பட்டன.

பொறுத்தல் வேண்டும், மறத்தல் வேண்டும் என்ற அரிய தன்மைகள் கூறப்பட்டன. 'அன்றே மறப்பது நன்று' (108) என்பது போல இங்கும் கூறினார். பொறுத்தாலும் அது மனத்தில் இருந்து கொண்டிருக்கும் ஆகையால், 'மறத்தல்' என்பதை எடுத்துக் காட்டினார் என்பது சிந்திக்கத் தக்கதாகும். 'பொறுத்தல்' என்பது சிறந்த குணமேயாகும். அவ்வாறு 'யாம் பொறுத்துக் கொண்டோம்' என்று எண்ணுவதையும் மறத்தல் வேண்டும் என்றார். ஆதலால்தான் அந்த அரிய குணத்தினை 'அதனை' என்ற சொல்லினால் சுட்டிக் காட்டினார்.

**153 இன்மையுள் இன்மை விருந்துஒரால் ...**

'விருந்தோம்பல்' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. வலிமைகளுக்கெல்லாம் மேலான வலிமை யாதென்றால் அறியாமையால் பிறர் செய்த தீமைகளைப் பொறுத்தலாகும்.

'இன்மையுள் இன்மை' என்றதால் 'நல்குரவு' என்ற அதிகாரமும் 'விருந்தோம்பல்' என்ற அதிகாரமும் நினைவுபடுத்தப்பட்டன. வலிமை என்பது எது என்ற வினாவுக்கு விடை கூறப்பட்டது. 'வன்மையுள் வன்மை' என்று சிறப்பித்தார்.

**154 நிறையுடைமை நீங்காமை வேண்டின் ...**

'நிறையழிதல்' என்றோர் அதிகாரம் காமத்துப்பாலில் இருக்கிறது. பொறையுடைமை உள்ளவர்களிடத்தில்தான் 'சான்றாண்மை' இருக்கும் என்பதாயிற்று.

'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'நிறை' யென்பது காக்க வேண்டியவற்றைக் காப்பாற்றுதலும் கடிந்து நீக்க வேண்டியனவற்றை நீக்குதலுமாம். 'நிறைஉடைமை', 'பொறைஉடைமை', 'நிறை அழிதல்' என்பவை சிந்தனைக்குரியவை.

**155 ஒறுத்தாரை ஒன்றாக வையாரே ...**

தண்டித்தவரும் அத்தீங்கு செய்தவரோடு ஒத்தலின் 'ஒன்றாக வையாரே' என்றார். 'பொதிந்து' என்பதனால் இடைவிடாமல் நினைக்கப்படுவர் என்பதாம்.

'வையாரே', 'வைப்பர்', 'ஒறுத்தார்', 'பொறுத்தார்', என்பன சிந்தனைக்குரியன வாகும். பொன்னினைப் பத்திரமாகக் காத்தல் உலக இயல்பு.

**156 ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் ...**

அங்கே, 'பொன்றுங்கால் பொன்றாத்துணை' (36) என்றார். இங்கே, 'பொன்றும் துணையும் புகழ்' என்றார். புகழ் என்ற அதிகாரமும் இருக்கின்றது. உலகம் அழியும் அளவும் புகழ் நிலைத்திருக்கும் என்பதைப் 'பொன்றுந் துணையும்' என்று குறிப்பிட்டுள்ளார்.

'ஒரு நாளை இன்பம்', 'புகழ்' என்பன கருதற்பாலன. ஒரு நாளை இன்பம் என்பது 'கருதியது முடித்தோம்' என்று செருக்குடன் இருக்கும் பொய்யின்பமாகும். 'துணை' என்பது, இவ்வுலகைச் சூழ்ந்திருக்கும் கடல் வெள்ளம் வந்து பெருகுமளவும் புகழானது அழியாமல் நிற்கும் என்பதாம்.

**157 திறன்அல்ல தற்பிறர் செய்யினும் ...**

இது 'கறுத்தின்னா செய்தவக் கண்ணும்' (312) என்ற பாடல் போல அமைந்துள்ளது. 'இன்னா செய்தாரை' (314) என்பதையும் சிந்திக்கலாம்.

செய்யினும் என்பதில் காணப்படும் 'உம்'மை சிறப்பும்மையாகும். 'செய்யாமை நன்று' என்பதால் அக்குணத்தின் சிறப்பு எடுத்துக்காட்டப்பட்டது. 'திறன் அல்ல' என்பதும் 'அறன் அல்ல' என்பதும் விளக்கத்தினைத் தருவனவாகும். மனம் நொந்து பதிலுக்குப் பதில் செய்தல் இயல்பு ஆனபடியால் 'செய்யாமை நன்று' என்றார்.

**158 மிகுதியான் மிக்கவை செய்தாரை ...**

தாமும் அவர்களைப் போலத் தீயவற்றைச் செய்து தோல்வியுறாமல் பொறையால் அவரினும் மேம்பட்டு வெல்க என்பதாம்.

'வென்றுவிடல்' என்பது, தாம் அவரைவிட மேம்பட்டிருத்தல் என்பதனைக் குறிக்கும். பொறுத்தல் என்பது தோல்வியாகிவிடாது; அதுவே வெற்றியாகும். தமக்குத் தகுதியென்பது பொறையுடைமையாகும். சிலர் மனச் செருக்கினால் தீங்கினைச் செய்வர் என்பது உணர்த்தப் பட்டது. 'தாம்-தம்' என்பன சிந்திக்கத்தக்கவை. 'செய்து விடல்' (314) என்பது போல இங்கு 'வென்று விடல்' என்றார்.

**159 துறந்தாரின் தூய்மை உடையர் ...**

துறந்தாரின் பெருமையினை 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்திலும் துறவற வியலிலும் கண்டுகொள்க; 'இன்னாத கூறல்' (100) என்று அங்கே கூறினார். பிறர் சொல்லும் தீய சொற்களைப் பொறுத்தல் அருமையானதால் 'நோற்கிற்பவர்' என்றார்.

உலக வாழ்க்கையினை ஆசிரியர் இல்லறம், துறவறம் என்று இரண்டாகப் பிரித்தார். அவரவர் மேற்கொண்ட அறவாழ்க்கையில் கடமையறிந்து நடந்து கொள்ள வேண்டும் என்று கூறினார். அவ்வாறு நடந்து கொண்டால் இரண்டும் சமமேயாகும். ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வு இல்லை. எனவேதான் துறவிகளுக்குச் சமம் என்று கூறினார். அத்தன்மையும் நோன்பு நோற்றல் என்பதனைக் குறிக்கவே பொறையுடைமையுடையவர்களை 'நோற்கிற்பவர்' என்று கூறினார். குறிப்பாக 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகிறது. பொதுப்பட 'துறவறம்' கூறப்பட்டது. 'இன்னாச்சொல்' என்பது அதற்கு மாறான 'இனியவை கூறல்' என்ற அதிகாரத்தை நினைவுபடுத்துகிறது. துறந்தார், இறந்தார், நோற்கிற்பவர் என்பன சிந்தித்தறிவதற்கு உரியன.

**160 உண்ணாது நோற்பார் பெரியர் ...**

இல்லறம், துறவறம் எனும் இரண்டும் முறையாக நடத்தப்பட்டால் சிறப் புடையனவே. **உண்ணாது நோற்பார், இன்னாச்சொல் நோற்பார்** எனும் மொழிகள் ஆராயத் தக்கவை.

துறவிகள் துன்பத்தினைப் பொறுத்துக் கொள்ளுதல் எளிதாக இருக்கலாம். ஆனால் உலகியலில் கலந்து வாழும் இல்லறத்தான் பொறுத்துக் கொள்ளுதல் எளிதானதல்ல

என்பதனைக் குறிக்கவே அவனைப் பெருமையாகப் பேசி, **நோற்பாரின் பின்** என்றார். தவத்தை மேற்கொண்ட துறவிகள் நோன்பு நோற்க வேண்டும் என்பதை **நோற்பார்** என்பதால் குறித்தார். அவர்கள் உண்ணாமலும் நோன்பு நோற்றல் வேண்டும். இல்லறத்தானால் அது முடியாது. **பெரியர்** என்பது, 'செயற்கரிய செய்வார்' (26) என்பதை நினைவுபடுத்தும். பிறவற்றையும் இவ்வாறே கருதிப் பார்த்தல் வேண்டும். **தவம்** செய்வாரினும் **பெரியர்** என்று சிறப்பித்துக் கூறினார். **பிறர்** என்பது அறிவில்லாதவர்களைச் சுட்டுகிறது. 'நோற்பார்', 'நோற்பாரின் பின்' என்பன சிந்தித்தறிய வேண்டுவனவாம். 'இன்னா' என்பது 'இன்னா செய்யாமை' என்ற அதிகாரத்தையும் நினைவுபடுத்தும்.

## 17 அழுக்காறாமை

### 161 ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் ...

**இயல்பு** என்பது அறிவோடு கூடிய தன்மை. பொறாமை இல்லாத தன்மையை ஒழுக்கமாகக் கொள்ளுதல் வேண்டும். 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப் பட்டது. **நெஞ்சத்து** என்பது சிந்திக்கத்தக்கதாகும். கடைப்பிடிக்க வேண்டும் என்பதைக் குறிக்கவே **கொள்க** என்றார்.

### 162 விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லை ...

அழுக்காறு பகைவரிடத்தும் வேண்டாம் என்பதற்காக, **யார் மாட்டும்** என்றார். **பெறின்** என்பது அருமையை உணர்த்திற்று.

'ஒப்பது இல்லை' என்பது சிறப்பினை வற்புறுத்தியதாகும்.

### 163 அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் ...

அழுக்கறுத்தல் எனினும் அழுக்காறு எனினும் ஒக்கும். அழுக்காறு செய்யின் தனக்கே தீமையாக முடியும் என்பதாகும்.

அழுக்கறு என்பது அழுக்காறு என நீண்டது. 'அறம்' நினைவுபடுத்தப்பட்டது. 'ஆக்கம்' இருமுறை கூறப்பட்டது. 'வேண்டாதவன்—அழுக்கறுப்பான்' என்பதாகும். பிறன் **ஆக்கத்தை** அவன் பேணுதல் வேண்டும் என்பது குறிப்பு.

### 164 அழுக்காற்றின் அல்லவை செய்யார் ...

அறன் அல்லவையாவன: செல்வம், கல்வி முதலியன உடையவர்களிடம் தீங்கு நினைத்தலும், சொல்லுதலும், செய்தலும் ஆம். பொறாமை **அழுக்கு** எனப்பட்டது. 'அழுக்காற்றின்', 'இழுக்காற்றின்' என்பன சிந்திக்க வேண்டியன. ஏதம் 'படுபாக்கறிந்து' (136) என்று முன்பு கூறியது போல இங்கும் கூறினார். தீய காரியங்களைச் செய்வதற்கு **அழுக்காறு** காரணமாக இருக்கும் என்பது குறிக்கப்பட்டது.

**165 அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ...**

'சாலும் கரி' (25, 1060) என்பவை போல இங்கும் 'சாலும்' என்றார் போலும். இதனால் உயிர்க்குக் கேடு வரும் என்பது குறிக்கப்பட்டது. வழுக்கியும் என்ற 'உம்'மையால் 'மறந்தும்' என்பதாயிற்று. பகைவர்கள் செய்யவேண்டிய தீங்கை அழுக்காறு செய்துவிடும். அழுக்காறு, ஒன்னார், கேடு – என்பன ஒரே வரிசையில் வைத்துச் சிந்திக்க வேண்டியன. பகைவர் தவறினாலும் தவறுவர்; ஆனால் அழுக்காறு கேடு செய்யத் தவறவே தவறாது.

**166 கொடுப்பது அழுக்குஅறுப்பான் சுற்றம் ...**

'சுற்றம் கெடும்' என்றதால் அவன் கெடுவது சொல்லாமலேயே விளங்கும். அழுக்காற்றின் கொடுமை இங்கு விளக்கப்பட்டது. சுற்றம் என்பார் அவனைச் சார்ந்திருப்பவர் ஆவர். சுற்றம் தழால் என்றோர் (53) அதிகாரம் உண்டு. உடுப்பதூஉம் உண்பதூஉம் (1079) என்பது போன்று வருகின்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியவை.

'கொடுப்பது' என்ற சொல் 'ஒப்புரவறிதல்', 'ஈகை' முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்தும். பொருள் வைத்திருக்கும் ஒருவனைக் கண்டு பொறாமைப்படுவதல்லாமல், கொடுப்பதைக் பெறுகின்றவனைக் கண்டும் பொறாமைப்படுகின்ற கொடியவன் தானும் கெடுவான்; அவன் சுற்றத்தாரும் கெடுவர்.

**167 அவ்வித்து அழுக்காறு உடையானை ...**

தவ்வை — மூத்தவள்; 'செய்யாள் உறையும்' (84) என்று கூறினார். இங்கு மூத்தவளைப் காட்டிவிடும் என்றார். உலகில் மக்களிடையே இருந்து வரும் கருத்துக்களை அமைத்தே உண்மை கூறுகிறார். செல்வத்தைச் செய்பவள் — திருமகள் என்று உருவகப் படுத்துவதும், தீயவற்றை 'மூதேவி' என்று உருவகப்படுத்துவதும் உலகியல் வழக்கம். 'நல்குரவு' (வறுமை) இங்கு மூதேவி என்று கூறப்பட்டது. அதுவே 'தவ்வை'யெனப்பட்டது. 'தவ்வையைக் காட்டிவிடும்' என்பது நயம்படக் கூறிய முறை. 'சூது என்னும் முகடி' (936), மாமுகடி (617), 'நாண் என்னும் நல்லாள்' (924), 'நிலமென்னும் நல்லாள்' (1040) என்பன வற்றை நன்கு சிந்தித்து அறிதல் வேண்டும். 'செய்யவள்' நீங்கி விடுவாள் என்று மட்டும் கூறி நிறுத்தாமல், தவ்வையைக் காட்டிவிடும் என்றதால் வறுமை வரும் என்றும் உணர்த்துகிறார்.

**168 அழுக்காறு என ஒரு பாவி ...**

கொடியவனைப் பாவி என்று சொல்வது உலக வழக்கு; அழுக்காறு உடையவன் செல்வமிழந்து கொடிய துன்பநிலைக்குத் தள்ளப்படுவான்.

அழுக்காறு உடையவன் இருமையிலும் கெடுத்தலால் 'பாவி' என்றார். 'இன்மை யென ஒரு பாவி' (1042) என்பதையும் கருதுக. ஒரு பாவி என்பது நிகரில்லாத பாவி என்பதாகும். 'அழுக்காறு உய்த்துவிடும்' என்ற நுட்பம் அறியத்தக்கது.

**169 அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் ...**

ஆக்கமும் கேடும் உலகினில் காணப்படுவதுண்டு; இதற்குக் காரணம்; இயற்கை யென்னும் 'ஊழ்' வினையாகும். 'ஊழ்' என்ற அதிகாரமும் உண்டு. ஆராய்ந்தறிதல் வேண்டும். 'இரு வேறு உலகத்துஇயற்கை' (374) என்ற குறள் சிந்தனைக்குரியது.

இப்படி இருப்பதற்குக் காரணம் யாது என்று பழவினை ஆராயப்படும் என்கிறார். 'அவ்விய நெஞ்சத்தான்', 'செவ்வியான்'— இரு வகையினராவர்; 'ஆக்கமும்', 'கேடும்' இருதன்மைகளாகும். இவை இயற்கைக்கு மாறாக அமைந்துள்ளன. ஆதலால் சிந்தித்துப் பார்க்கப்படும். உலக நடையில் இவ்வாறு இருத்தலும் உண்டு! நினைத்துப் பார்த்து உலகியல் நிலைமை புரிந்து கொள்ளப்படும்.

**170 அழுக்கற்று அகன்றாரும் இல்லை ...**

உலக வாழ்க்கையில் பெறுகின்ற நன்மை தீமைகள் வறபுறுத்திக் கூறப்பட்டன, முந்தைய குறட்பாவில் இயற்கையின் தன்மை சொல்லப்பட்டது.

'அகன்றார்', 'தீர்ந்தார்' என்பவை இரு உண்மைகளை உணர்த்தினவாகும். பொறாமை எக்காலத்திலும் மேலோங்கி விடாது என்பது உறுதியாகக் கூறப்பட்டது. அழுக்காறு இல்லாதவர் செல்வப் பெருக்கம் அடைவர் என்பது விளக்கப்பட்டது.

## 18 வெஃகாமை

**171 நடுவுஇன்றி நன்பொருள் வெஃகின் ...**

'குடிமை', 'குடிசெயல்வகை', 'குற்றங்கடிதல்', 'நடுவு நிலைமை' என்ற அதிகாரங் களும் சிந்திக்கத் தக்கவை.

'நன் பொருள்' என்பது சிந்திக்கத் தக்கதாகும். குடியை வளரச் செய்து, பல நன்மையும் பயக்கும் இயல்புப் பற்றி 'நன்பொருள்' என்றார். 'நடுவு நிலைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகிறது. 'குடி' என்பது 'குடிமை', 'குடி செயல்வகை' முதலிய அதிகாரங்களையும் நினைவுபடுத்துகிறது.

**172 படுபயன் வெஃகிப் பழிப்படுவ ...**

'நாணுடைமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. ஒருவன் பொருளுக்குப் பிறன் உரியன் அல்லன் என்பது நடுவு. 'நடுவு நிலைமை' என்ற அதிகாரமும் 'நாணுடைமை' என்ற அதிகார்மும் இதை நினைவுபடுத்துகின்றன. காமத்துப்பாலில் 'நாணுத் துறவுரைத்தல்' என்றோர் அதிகாரம் உண்டு.

தீயன செய்ய நல்லவர்கள் நாணமடைவார்கள். 'நடு' என்பது 'நடுவு'.

**173 சிற்றின்பம் வெஃகி அறனல்ல ...**

நிலையில்லா இன்பத்தைச் சிற்றின்பம் என்றார். இது பொதுப்படக் கூறியதாகும். இதில் 'அறம்' கூறப்பட்டது; அறன் வலியுறுத்தல் அதிகாரத்தையும் கருதுக.

பாவச் செய்கையால் வரும் பொருள் அப்பொழுதே அழியும் ஆதலின் 'சிற்றின்பம்' என்றார். 'மற்றைய இன்பம்' மற்றின்பம் எனப்பட்டது. அறத்தான் வரும் இன்பம் மற்றின்பம்; 'அறம்' நினைவுபடுத்தப்பட்டது. 'வேண்டுபவர் செய்யாரே' என்பதாகும். 'சிற்றின்பம்', 'மற்றின்பம்' என்பவை சிந்திக்கத்தக்கவை.

**174 இலமென்று வெஃகுதல் செய்யார் ...**

புலம் வென்ற புன்மையில் காட்சியவர்க்கு வறுமையில்லை; எனவே வெஃகுதலுக்கு இடமில்லை.

பொருள்களைத் திரிபின்றி உணர்தல் புன்மையில் காட்சியாகும். ஐம்புலன்களையும் வென்றவரே, 'புன்மையில் காட்சியர்' ஆவர். ஆசைகளை வென்றவர்கள் என்பது குறிப்பு.

**175 அஃகி அகன்ற அறிவுஎன்னாம் ...**

'அறிவுடைமை' என்ற அதிகாரமும் குறிக்கப்பட்டது. 'யார் மாட்டும்' என்பது தக்கார், தகாதார் மாட்டும் என்பதைக் காட்டிற்று; பயனில்லாத அறிவு என்பதாம். வினாமுறையில் அமைக்கப்பட்டுள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்று. 'அறிவினான் ஆகுவதுண்டோ' (315) என்பது போன்ற முறையில் இக்குறட்பாவும் அமைக்கப்பட்டுள்ளது. 'அறிவுடைமை', 'புல்லறிவாண்மை' என்ற அதிகாரங்கள் சிந்திக்கத்தக்கவை. தக்கார் மாட்டும், தகாதார் மாட்டும், இழிந்தனவும் கடியனவும் முதலியன செய்தலால், 'யார் மாட்டும் வெஃகி வெறிய' என்று கூறினார். அறிவின் கூர்மையினைப் புலப்படுத்த 'அஃகி அகன்ற' என்றார். நுண்ணிய அறிவு படைத்தவர்களும், பிறர் பொருளை வஞ்சித்துக் கவர நினைக்கலாம் என்ற குறிப்பு தரப்பட்டது.

**176 அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் ..**

எண்ணத்தினாலே கெடுவான் என்பது தோன்றச் 'சூழக்கெடும்' என்றார். செய்தால் — கெடுதல் சொல்லாமலேயே பெறப்பட்டது.

'அருளுடைமை' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்படுகிறது. 'அருள்வெஃகி', 'பொருள் வெஃகி' என்பன சிந்திக்கத்தக்கன. பொருள் மீது ஆசைவைத்து வஞ்சிக்க நினைத்தால், பொல்லாதவற்றையெல்லாம் செய்வான் என்பது குறிப்பு. இல்லற நெறியில் நின்று பேரின்பம் பெற வாழ்பவன் என்பது அறிக.

**177 வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் ...**

'வேண்டற்க வென்றிடினும் சூதினை' (931) என்பது போன்று, 'வேண்டற்க வெஃகிஆம் ஆக்கம்' என்றார்.

ஆக்கம் — செல்வம் நுகர்வதற்கே சேர்க்கப்படுவதாகும். நுகர்தல், இன்பம் பெறுவதற்கே என்பதாம். வெஃகிவந்த ஆக்கம் துன்பத்தையே தரும்.

**178 அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் ...**

'அருள் அல்லது யாதெனின்' (254) என்பது போன்று இக்குறட்பாவும் அமைந்தது; பிறவும் காண்க.

வெஃகாதான் செல்வம் அஃகாது என்பது அறிக. செல்வம் சுருங்காதிருப்பதற்கு வழி சொல்லப்பட்டது. வினா — விடைமுறையில் இக் குறட்பா அமைந்துள்ளது. ஒருவனுக்கு உரிய பொருள் என்பதை 'கைப்பொருள்' என்று விளக்கினார். 'குன்றேறி' (758) என்கின்ற குறட்பாவில் 'கைத்து ஒன்று' என்பது கைப்பொருள் சிறப்பினைக் காட்டிற்று. 'செல்வம்', 'கைப்பொருள்' என்பவற்றைச் சிந்தித்தறிய வேண்டும்.

**179 அறன்அறிந்து வெஃகா அறிவுடையார் ...**

'அறிவுடைமை' அதிகாரத்தையும் காண்க ; 'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும்' (594) என்பதுபோல இப்பாடல் அமைந்துள்ளது.

'அறம்', 'அறிவுடைமை' நினைவுபடுத்தப்பட்டன. செல்வம் தானே போய்ச் சேரும் என்று சிறப்பித்தார். 'அதர்வினாய்ச் செல்லும்' (594) என்று கூறியது போல இங்கும் கூறினார். 'அறன் அறிதல்' என்பது விரும்பாமையாகும். திருமகள் — காலமும் இடனும் செவ்வியும் அறிந்து போய்ச் சேருவாள். 'வெஃகா அறிவுடையார்' என்பது சிந்திக்க வேண்டியதாகும்.

**180 இறல்ஈனும் எண்ணாது வெஃகின் ...**

பகையும் பாவமும் பெருக்கலின், 'இறல் ஈனும்' என்றார். அப்பொருளை வேண்டி உழல்வோர் யாவரையும் கீழ்ப்படுத்தலினால், 'விறல் ஈனும்' என்றார்.

பிறன் பொருளைக் கவர நினைப்பது அவனுக்கு முடிவினை உண்டாக்கும்; உயிர்க்குக் கேடு தரும். இறல், விறல், செருக்கு முதலியன சிந்திப்பதற்குரியன.

## 19 புறங் கூறாமை

**181 அறங்கூறான் அல்ல செயினும் ...**

அறத்தினையும் சொல்லாமல், அல்லவையான தீமைகளை ஒருவன் செய்யவே கூடாது; 'செயினும்' என்று கூறியது, 'புறங்கூறுதல்' என்ற கொடுமையினை வற்புறுத்துவதற்கே.

புறம் பேசாதவன் என்று உலகத்தோரால் கூறப்படுதல் நல்லது. 'புறங்கூறாமை' என்பதனைச் சிறப்பித்து வற்புறுத்தவே, 'அறங்கூறான் அல்ல செயினும்' என்றார். என்றல் இனிது என்பது சிந்திக்கத்தக்கது

**182 அறன்அழீஇ அல்லவை செய்தலின் ...**

மேலே சொன்னவாறு கொள்க. 'அல்ல செயினும்' என்றார் அங்கே. இங்கே, 'அல்லவை செய்தலின்' என்றார். இச் செய்கை பாவங்களுள் பெரும் பாவம் எனப்பட்டது. இங்கு 'அறம்' கூறப்பட்டது. காணாதவழி செய்வதும், கண்டபோது பொய்த்து நகைப்பதும் மிகக்கொடிது என்பதை வற்புறுத்த வேண்டியே, 'அல்லவை செய்தலின் தீதே' என்றார். இரு வகையும் கொடிய தீமைகளே ஆகும்.

**183 புறங்கூறிப் பொய்த்து உயிர்வாழ்தலின் ...**

இறந்தபிறகு புறங்கூறுகின்ற பாவம் ஒழிதலால் 'சாதல் ஆக்கம் தரும்' என்றார். முந்தைய குறட்பாவில் 'பொய்த்து நகை' என்றார். இங்கே 'பொய்த்து உயிர் வாழ்தல்' என்றார்.

இனிமேல் புறங்கூறிப் பொய்த்தல் இல்லாதபடியால் சாதல் ஆக்கம் தரும் என்றார். 'உயிர் வாழ்தல்' வேண்டாம் என்றார். 'இனிது அதூஉம்' (230) என்பது போன்று வருகின்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன. அப்படிச் செய்து வயிறு வளர்க்காதே; உயிர் வாழ்வதற்கென்று ஒரு முறையுண்டு என்பது எடுத்துக்காட்டப்பட்டது.

**184 கண்ணின்று கண்அறச் சொல்லினும் ...**

'கண்அறச் சொல்லினும்' என்பது 'கண்ணோட்டம்' என்னும் அதிகாரத்தை நினைவுபடுத்தும்.

முன்னர்க் கூறியதைவிடப் பின்னர்க் கூறியது கொடிய தீமை என்பது விளக்கப் பட்டது. 'சொல்லினும் சொல்லற்க' என்பதைச் சிந்திக்க வேண்டும். 'சொல்' என்பது சொற்களைப் பற்றிக் கூறுகின்ற அதிகாரங்களையெல்லாம் நினைவுபடுத்தும். 'பின்நோக்காச் சொல்' பெருந்தீமையை உண்டாக்கிவிடும்.

**185 அறம்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை ...**

மனம் தீயதாக இருப்பதால் அவன் சொல்லும் சொல் கொள்ளப்படாததாயிற்று. இவ்வாறு சொல்லுகிறவர்கள் அறம் அறியார்கள் என்பதாம். அறம் நல்லதென்று பேசிக் கொண்டே புறம் பேசுபவர்கள் உண்டு என்கிறார். அறம் பற்றி வற்புறுத்தப்பட்டது. 'தன் நெஞ்சறிவது' (293) என்பது போன்றவை சிந்திக்கப்படவேண்டும். ஒருவன் மனம் அவன் சொற்களினால் அறியப்படும் என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

**186 பிறன்பழி கூறுவான் தன்பழி ...**

புறங்கூறுபவனைக் கேட்ட ஒருவன், அப்படிச் சொன்னவனைப் பற்றி மிகமிகக் கடுமையான பழிகளை அவன் எதிரே கூறுவான் என்பது தோன்ற 'திறன் தெரிந்து கூறப்படும்' என்றார்.

புறங்கூறுகின்றவன் தான்மட்டும் தப்பித்துக் கொள்ள முடியாது என்பது உணர்த்தப்பட்டது. 'பிறன் பழி', 'தன் பழி' — சிந்தித்தறிய வேண்டுவன; 'கூறுவான்', 'கூறப்படு..' என்பது விளங்கும்.

**187 பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் ...**

புறங்கூறித் திரிபவர்கட்கு யாவரும் பகைவராவர் என்பது உணர்த்தப் பெறுகிறது.

'நட்பு' பற்றிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப் படுகின்றன. 'பகச்சொல்லி', 'நகச்சொல்லி' என்பன இரு வேறுபட்ட தன்மைகளைக் குறிப்பிட்டன. புறங்கூறுபவர்கள் நல்லபடியாகச் சேர்ந்திருக்கும் நண்பர்களையும் பிரித்து விடுவார்கள். நகச் சொல்லுதல்; நட்பு ஆடல் என்பன சிறந்த குணங்களாகும்.

**188 துன்னியார் குற்றமும் தூற்றும் ...**

'தூற்றுதல்' — பலரும் அறியப் பரப்புதல்.

அப்படிப்பட்ட செய்கையினைவிடக் கொடியது வேறு இல்லாமையால் **என்னைகொல்** என்றார். யாரிடத்திலும் பற்றில்லாத புல்லர்கள் என்பது கருத்து.

**மரபினார்** என்பது இதையே பழக்கமாகக் கொண்டவர்கள் என்பதையும் குறிக்கும், 'கொல்' அசை; 'துன்னியார்', 'ஏதிலார்' - மாறுபட்ட இருவகையினரைக் குறித்தன. 'அற்றம் மறைக்கும் பெருமை' (980) என்பது போன்றவை சிந்தனைக்குரியன.

**189 அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் ...**

எல்லாவற்றையும் பொறுத்தல் இயல்பாயினும், இது பொறுத்தற்கு அரிது என்னும் கருத்தால் 'அறன் நோக்கி ஆற்றுங்கொல்' என்றார்.

'அறன் வலியுறுத்தல்' அதிகாரம் நினைவுபடுத்தப்படுகிறது. 'பொறையுடைமை' என்ற அதிகாரமும் சிந்திக்கத்தக்கது. 'நிலக்குப் பொறை' (1003) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன. பூமி எல்லாவற்றையும் தாங்குதல் இயல்பேயானாலும் இப்படிப்பட்டவனைத் தாங்குதல் அரிதேயாகும். புறங்கூறுபவர்களுக்குத் துணையாருமில்லை. **நோக்கி** என இருமுறை கூறப்பட்டது. 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்' (151) என்பது சிந்திக்கத்தக்கது. 'பொறை' என்றதால் அவன் உடம்பு பாரத்தைப் பொறுத்துக் கொண்டிருத்தல் கூறப்பட்டது.

**190 ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் ...**

'குற்றம் கடிதல்' அதிகாரம் சிந்தனைக்குரியது. நடுவு நிலையில் நின்று ஒப்பக் காண்பது அருமையென்பது நோக்கி, 'காண்கிற்பின்' என்றார்.

வினா முறையில் அமைந்துள்ளது. 'ஏதிலார் குற்றம்', 'தங் குற்றம்' என்பன சிந்தனைக்குரியன. அப்படி இருந்து விட்டால், எந்தவுயிருக்குமே தீமை இல்லை. தன் குற்றத்தையும் தான் காணுதல் வேண்டும். ஏதிலார் என்போர் அயலார். 'ஏதிலார் ஆர' (837) என்பது சிந்தனைக்குரியது.

## 20 பயன்இல சொல்லாமை

**191 பல்லார் முனியப் பயன்இல ...**

அறிவுடையார் பலரும் வெறுப்பார்கள். மற்றவர்களும் இகழ்வார்கள். ஆதலால், 'எல்லாரும் எள்ளப்படும்' என்றார். வேண்டியவரும் வேண்டாதவரும் இகழ்வர் என்பதனை **எல்லாரும்** எனும் சொல் உணர்த்திற்று. சொற்களின் அருமை நன்கு புலப்படுத்தப் பெற்றது.

**192 பயன்இல பல்லார்முன் சொல்லல் ...**

நண்பர்களைப் பற்றிக் கூறுகின்ற அதிகாரங்களைக் காண்க; பயனுடைய வாழ்க்கை வாழ்தல் வேண்டும். 'பயனுடையார் பண்பு' (994) என்பது போலப் பல இடங்களில் கூறுகிறார். பயனின்றி வாழ்தலின் இகழ்ச்சியை இந்த இரு குறட்பாக்களும் குறித்தன.

பயனில்லாதவற்றைச் சொல்லாதே' என்பதனைச் சிறப்பாக வற்புறுத்த வேண்டியே 'செய்தலின் தீது' என்று குறித்துக் காட்டினார். நண்பர்கள் வெறுக்கத்தக்கவற்றைச் செய்யக் கூடாது என்பது குறிப்பு. 'சொல்லல்', 'செய்தல்' என்பன சிந்தனைக் குரியன. **பல்லார்** என்பது அறிவுடையோர் பலர் என்று குறிக்கப்பட்டது.

**193 நயனிலன் என்பது சொல்லும் ...**

பயனில்லாதவைகளை விரித்து விரித்துப் பேசுவான் என்பது சிந்திக்கத்தக்கது.

அவன் பேசும் உரைகளினால், இவன் நயனிலன் என்பதனை அறிந்து கொள்ள முடியும். பயனில்லாதவற்றை விரிவாகச் சொல்லுவோர் பலருண்டு. 'உரைக்கும் உரை சொல்லும்' என்பதைக் கண்டு தெளிக.

**194 நயன்சாரா நன்மையின் நீக்கும் ...**

'பண்புடைமை' என்ற அதிகாரத்தைக் கருதுக; 'அகத்து' என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

'நயன் சாரா', 'பயன் சாரா' என்பன சிந்திக்க வேண்டியவை. பண்பு என்பது இனிமையும் மெய்ம்மையும் முதலிய நற்குணங்களாகும். அவன் கூறும் சொல்லின் இழிவினைத் தெளிவுபடுத்தவே, 'பயன் சாராப் பண்பு இல்சொல்' என்று அமைத்தார்.

**195 சீர்மை சிறப்பொடு நீங்கும் ...**

இனிய, நல்லவர்கள் பயனில்லாதவைகளைச் சொல்ல மாட்டார்கள் என்பதனைக் குறிப்பால் உணர்த்த 'சொலின்' என்று கூறினார். சீர்மை என்பது ஒழுக்கம்; சிறப்பு என்பது ஆக்கம்; நீர்மை என்பது தண்ணளி; அஃதாவது நீரின் தன்மை ஆகும். இதன் கருத்து சீர்மையும் நீங்கும்; சிறப்பும் நீங்கும் என்பதாம்.

**196 பயனில்சொல் பாராட்டு வானை ...**

அறிவு என்னும் உள்ளீடு இல்லாததால் 'மக்கட் பதடி' என்றார். மக்களுள்ளே வெறுக்கப்பட வேண்டிய வகையினரில் 'பதர்களும்' சேர்வர்.

மக்கட் பண்பிலன் என்பது கருத்தாகும். பயனில்லாத சொல்லை நல்லோர் முன் பாராட்டுபவனை மனிதன் என்பது, நெல்லுடன் பிறந்த பதரை நெல் என்பது போலாம். மகன் எனல்' என்ற தொடரில் 'எனல்' என்பது சொல்லாதே என்று எதிர் மறையில் வந்தது. 'பதடி எனல்' என்ற தொடரில் 'எனல்' என்பது 'என்று சொல்' என்று உடன் பாட்டில் வந்தது. மக்கள் பயனுள்ள நெல்லாகக் குறிக்கப்பட்டார்கள். 'இவன்' பதராகக் கருதப்பட்டான். பதர் காற்றில் பறக்கும் தன்மையதாகும். 'எனல்' என்று இரண்டுமுறை கூறப்பட்டது; அவை மாறுபட்ட பொருளைக் குறித்தன.

**197 நயனில சொல்லினும் சொல்லுக ...**

'சான்றாண்மை' அதிகாரத்தையும் காண்க. 'சொல்லினும்' என்றதால் சொல்லாமை பெறப்பட்டது. நயன் இலவற்றிலும், 'பயன் இல' தீயவாகும்.

'சொல்லினும் சொல்லுக' என்பதால், சான்றோர்கள் சொல்ல மாட்டார்கள் என்பதும்— சொல்லுதல் தவறு என்பதும் வற்புறுத்தப்பட்டது. நயனில்லாத சொற்களை விடப் பயனில்லாத சொற்கள் தீயவை என்பது குறிக்கப்பட்டது. 'நயன்', 'பயன்' என்பன சிந்திக்கத்தக்கன. இதில் பெரியவர்களின் பண்பாடு உணர்த்தப்பட்டது.

**198 அரும்பயன் ஆயும் அறிவினார் ...**

அறிவுடைமை, நீத்தார் பெருமை, பெரியாரைத் துணைக்கோடல் — போன்ற அதிகாரங்களைக் கருதுக.

'அரும் பயன்', 'பெரும் பயன்' என்பன சிந்தனைக்குரியனவாகும். உயர்ந்த மேலோர்கள் 'அரும் பயன் ஆயும் அறிவினார்', என்று குறிக்கப்பட்டார்கள். பயன் என்று கூறி அமையாது 'பெரும் பயன்' என்று கூறியது 'ஆயும் அறிவினார்' பெருமையினைக் காட்டிற்று. 'பயன்' என்பது இருமுறை கூறப்பட்டது. பெரும் பயன் பயக்கும் சொற்களைச்

சொல்லுதலே பெரியோர்களின் கடமை என்பது குறிக்கப்பட்டது. 'ஆயும் அறவினர் அல்லார்' (918) எதையும் பேசுவர்; எதையும் செய்வர் என்பதாம்.

**199 பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் ...**

'பொச்சாவாமை' என்ற அதிகாரத்தையும் சிந்திக்கலாம்; 'மருள் நீங்கி மாசறு காட்சியவர்' (352) என்று கூறியதைப் போலவே இங்கும் கூறினார்.

மருள் தீர்ந்த மாசறு காட்சியவர்களின் சிறப்பினை எடுத்துரைத்தார். முந்தைய குறட்பாக்களில் 'நீர்மை உடையார்', 'சான்றோர்', 'அரும்பயன் ஆயும் அறிவினார்' என்று கூறியது போன்று இங்கும் கூறினார். தெளிவுடையவர்கள் என்பதாகும். 'பொச்சாந்தும்' என்பது, 'பொச்சாவாமை' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்துவதாகும். 'மாசறு காட்சியவர்க்கு' (352) என்பது சிந்திக்கத்தக்கதாகும்; மயக்கம் தீர்ந்த குற்றமற்ற தெளிவினை யுடையவர்கள் என்பதாகும்.

**200 சொல்லுக சொல்லிற் பயனுடைய ...**

'சொல்வன்மை என்ற அதிகாரத்தையும் கருதுக. 'சொல்லுக', 'சொல்லற்க', 'பயனுடைய', 'பயனிலா' என்பவைகளைச் சிந்திக்க வேண்டும். 'சொல்லுக சொல்லை' (645) என்பதையும் கருதுக. 'சொல்' நான்கு சீர்களில் காணப்படுகிறது. சொல்லாதிருத்தலே நல்லது என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. எல்லாச் சொற்களுமே பயனுடையவையாக இருக்கும் என்று கொள்ளுதல் கூடாது என்பது பெற்றாம். 'சொல்லுக', 'சொல்லற்க'— இவற்றைச் சிந்திக்கவும்.

## 21 தீவினை அச்சம்

**201 தீவினையார் அஞ்சார் விழுமியார் ...**

அங்கே 'வேண்டாமை என்னும் செருக்கு' (180) என்றார். இங்கே 'தீவினை என்னும் செருக்கு' என்றார். 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' (428) என்பதைச் சிந்திக்கவும்.

தீவினை என்பது மயக்கம்; அது பிறவிக் காரணமாக இயல்பாக அமைந்திருக்கும். 'அஞ்சார்', 'அஞ்சுவர்' என்பன சிந்திக்கத்தக்கன. தீவினையாளர் மறப்பண்பினர் என்று கூறப் படுவர். 'வினை' என்ற சொல், 'வினைத்தூய்மை', 'வினைத்திட்பம்', 'வினை செயல்வகை', 'தெரிந்து வினையாடல்' என்பன போன்ற அதிகாரங்களை நினைவுபடுத்தும். 'அஞ்சுவது அஞ்சாமை' (428) என்பதையும் சிந்திக்க. தீய காரியங்களைச் செய்வதிலேயே எண்ணங் கொண்டவர்களைப் பற்றிக் கூறப்பட்டது.

**202 தீயவை தீய பயத்தலான் ...**

இக்குறட்பாவில் தீயவை என்ற சொல்லை இருமுறை பயன்படுத்தியுள்ளார். பிறிதொரு காலத்திலும், பிறிதொரு தேசத்திலும், பிறிதோர் உடம்பிலும் சென்று சுடுகின்ற

ஆற்றல் நெருப்புக்கு இல்லாத காரணத்தினால், தீயினும் அஞ்சப்படும் என்று கூறினார். தீயின் தன்மை நன்கு குறிக்கப்பட்டது. தீமையான செயல்களைக் குறிக்க வேண்டியே தீயவை என்று கூறினார். பாவமாகிய துன்பங்கள் தீயினைவிடக் கொடுமையானவை. முந்தைய குறட்பாவில் அஞ்சார், அஞ்சுவர் என்று கூறிய ஆசிரியர், இக்குறட்பாவில் 'அஞ்சப்படும்' என்று கூறி முடித்தார்.

**203 அறிவினுள் எல்லாம் தலைஎன்ப ...**

அறிவுடைமை என்ற அதிகாரமும் பிறவும் நினைவுபடுத்தப்பட்டன. நல் அறிவும் பல்வகையாக இருத்தலால் 'அறிவினுள் எல்லாம்' என்று கூறினார். அறிவு என்பது சிறப்பாக நல்லறிவினை உணர்த்திற்று. 'புல்லறிவாண்மை' என்ற அதிகாரமும் சிந்திக்கத் தக்கதாகும். துன்பம் செய்வோரையும் அழிப்போரையும் குறிக்கவே 'செறுவார்' என்று கூறினார். முதன்மையாகவும் சிறப்பாகவும் நினைத்தல் வேண்டும் என்பதற்காகவே 'தலையென்ப' என்று கூறினார்.

**204 மறந்தும் பிறன்கேடு சூழற்க ...**

'அறம் தண்டிக்கும்' என்ற கருத்து இக்குறட்பாவில் குறிப்பாக உணர்த்தப்பட்டது. சூழற்க, சூழும், சூழ்ந்தவன் என்ற மூன்று சொற்களும் சிந்தனைக்குரியன 'மறந்தும்' என்று கூறப்பட்டதால் நினைப்புடன் செய்கின்ற செயல் மிகமிகக் கொடியது என்ற உண்மை உணர்த்தப்பட்டது. 'பிறிதின்நோய்' (315) என்பது போன்று இங்குப் 'பிறன்கேடு' என்று கூறினார். முந்தைய குறட்பாவில் செறுவார் என்று கூறிய ஆசிரியர் இக்குறட்பாவில் 'பிறன்' என்றார். 'சூழும்' என்ற சொல் நினைத்தல், எண்ணுதல் என்னும் பொருள்களைக் குறித்தது. தீயவை என்பதனைக் குறிப்பதற்காகவே இக்குறட்பாவில் 'கேடு' என்று அமைத்தார்.

**205 இலன்என்று தீயவை செய்யற்க ...**

தீய செயல்களைச் செய்வதற்குரிய காரணம் கூறப்பட்டது. வறுமையிலும் தீயவை செய்ய நினைக்காதே என்பது குறிப்பு. 'இலன்' என்ற சொல் செல்வமில்லாதவனைக் குறித்த தாகும். தன்னுடைய வறுமையைப் போக்கிக் கொள்ளுவதற்காக ஒருவன் தீய செயல்கள் பல செய்வானேயானால், அவன் வறுமையும் போகாமல் மேலும் வறுமையிலேயே துன்புறுவான். பல பிறவிகளிலும் துன்பமாகிய வறுமை அவனை விட்டு நீங்காது. முந்திய குறட்பாக்களில் தீமைகளைப் 'பகைவர்க்குச் செய்யாதே— பிறருக்குச் செய்யாதே' என்று கூறிய ஆசிரியர், இக்குறட்பாவில் வறுமையின் காரணமாகவும் தீயவை செய்யாதே என்றார்.

**206 தீப்பால தான்பிறர்கண் செய்யற்க ...**

'தீப்பால', 'நோய்ப்பால' என்பன விளக்கம் தருவதற்குரியன. தனக்கும் தீமை வந்தே தீரும் என்பதாகும். முந்திய குறட்பாவில் கூறியதுபோல் 'செய்யற்க' என்றார். 'பிறர்க்கின்னா' (319), 'நோயெல்லாம்' (320) என்பன போன்ற குறட்பாக்கள் சிந்தனைக் குரியவை. பிறவும் செய்தால் இவனுக்குத் திரும்ப வருவது உறுதி.

### 207 எனைப்பகை உற்றாரும் உய்வர் ...

'பகை' என்ற சொல் இகல், பகைமாட்சி, பகைத்திறம் தெரிதல், உட்பகை முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்தும். எனைப்பகை, வினைப்பகை எனும் சொற்கள் ஆய்வுக் குரியவை. தீவினையாகிய பகை எப்போதும் நீங்காமல் 'பின் சென்று அடும்' என்று உறுதிப் பாட்டினை உணர்த்தினார். இது புறப்பகை அன்று; உடனிருக்கும் பகையேயாகும்.

### 208 தீயவை செய்தார் கெடுதல் ...

முந்தைய குறட்பா மேலும் விளக்கம் செய்யப்பட்டது. கெடுதி செய்தார், கெடுதல் உறுதி; நிழல் தன்னை நீங்காதே தன்னடியின்கீழ் ஒதுங்கினாற் போலும் என்பதாம். 'தம்தம் வினையான் வரும்' (63) என்பது போன்றவை கருதுதற்குரிய. நிழல் விட்டு நீங்காது என்பது 'உறைந்தற்று' என்பதால் குறிக்கப்பட்டது. தனது வினையைத் தானே தாங்க வேண்டும் என்பதும் வேறுபடுத்திக் கொள்வதற்கு யாருமில்லை என்பதும் உணர்த்தப்பட்டன.

முந்தைய குறட்பாவின் கருத்து இங்கே உவமையால் தெளிவுபடுத்தப்பட்டது.

### 209 தன்னைத்தான் காதலன் ஆயின் ...

'நல்வினை', 'தீவினை' என வினை இருவகைப்படுவதால், 'தீவினைப்பால்' என்று குறிப்பிட்டார். பிறர் மாட்டுச் செய்த தீவினை தன்மாட்டுத் துன்பம் பயத்தலை விளக்கினார். ஆதலின் 'தன்னைத்தான் காதலனாயின்' என்றார். தான் செய்த துன்பம் தன்னையே வருத்தும்; 'காதலன்' என்று அமைத்துச் சிந்திக்க வைத்தார்.

'தன்னைத்தான் காக்கின் சினங்காக்க' (305) என்பது போல அமைத்து விளக்கினார். 'இருள்சேர் இருவினை' (5) என்பதனையும் சிந்தித்துப் பார்க்கலாம்.

### 210 அருங்கேடன் என்ப தறிக ...

கேடு, ஒருவனுக்கு வாராது என்பதற்காக, 'அருங்கேடன்' என்றார். தீவினை செய்யாதவன் 'கேடிலன்' ஆவான். தீவினை செய்யானாயின் கேடு வாராதென்று தானே 'அறிக' என்று கூறினார். வாக்காலும், உடலாலும் மனத்தாலும் தீயவை அறியாதவன் என்பதாகும். 'மருங்கு ஓடி' என்றார். கொடிய வழியில் சென்று செய்யான் 'ஓடி செய்யான்' என்பது குறிப்பு.

தீவினை செய்யாதவனைக் 'கேடிலன்' என்றார்; 'அருங்கேடன்' என்று கூறி அவனுக்குக் கேடில்லை என்பதை உணர்த்தினார்.

## 22 ஒப்புரவு அறிதல்

### 211 கைம்மாறு வேண்டா கடப்பாடு ...

வினாமுறையில் குறட்பா அமைக்கப்பட்டுள்ளது. என்ன கைம்மாறு செய்யும் என்ற வினா, கைம்மாறு ஒன்றும் செய்ய முடியாது என்பதனை உணர்த்திற்று. உதவி செய்பவர்கள் எதிர்பார்த்துச் செய்யவில்லை என்பதாகும். 'வான் சிறப்பு' அதிகாரம் நினைவுபடுத்தப் பட்டது. ஒப்புரவென்பது கைம்மாறு கருதாத கொடை என்பதாயிற்று. 'பயன் தூக்கார் செய்த உதவி' (103) என்பது போன்றவற்றைச் சிந்திக்க வேண்டும். இவ்வுலகத்தினைக் காப்பாற்றுகின்ற மழை சிறப்பாக எடுத்துக் கூறப்பெற்றது.

'என் ஆற்றும்' என்ற வினா யாதும் ஆற்றாது என்பதைக் குறிக்கும்.

### 212 தாளாற்றித் தந்த பொருளெல்லாம் ...

'வேளாண்மை என்னும் செருக்கு' (613) என்பது போன்ற குறட்பாக்களையும் சிந்திக்க வேண்டும். 'தாளாற்றி' என்பது, 'ஆள் வினையுடைமை' அதிகாரத்தை நினைவு படுத்துகிறது.

'தக்கார்க்கு' எனும் சொல் சிந்தனைக்குரியது. பொருளெல்லாம் என்பது 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தை நினைவு படுத்துகிறது. இத்துடன் 'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரத்தையும் கருதிப் பார்த்தல் வேண்டும். 'தக்கார்க்கு வேளாண்மை செய்தல்' என்று இப்பாடல் விளக்கம் தருகின்றது.

'விருந்தோம்பல்' என்ற அதிகாரத்தைச் சிந்திக்கவும். தாமே உண்டற் பொருட்டும்' உண்ணாது வைத்து இழத்தற் பொருட்டும் பொருள் சேர்க்கக் கூடாது.

### 213 புத்தேள் உலகத்தும் ஈண்டும் ...

இவ்வுலக வாழ்க்கைக்குச் சிறப்பு, 'கடமை செய்து வாழ்தலே'. அது சிறப்பனைத் தையும்—பயன் அனைத்தையும் தரும். இவ்வுலகில் 'ஒப்புரவு செய்தல்' மிகச் சிறப்பான தென்பதையும் வற்புறுத்திக் காட்டவே 'பெறலரிதே' என்றார்.

'வானுலகம்', 'புத்தேளிர் உலகு' — தலைப்புப் பகுதியில் விளக்கம் கண்டு தெளிக.

இவ்வுலக வாழ்க்கையில் ஆற்ற வேண்டிய கடமைகளை மறந்து விட்டு, மேலுலக இன்பம் என்பதையே நினைத்து மயங்குகின்ற மக்களுக்கு அறிவுரையைப் புகட்ட வேண்டியே ஆசிரியர், ஆங்காங்கு இவ்வுலக வாழ்க்கையும் கடமையுமே போதுமானது என்று இடித்துக் கூறுகின்றார். 'வையத்துள் வாழ்வாங்கு' (50) என்பது போன்று வருகின்ற குறட்பாக்கள் எல்லாம் இவ்வுலகக் கடமையை வற்புறுத்துவன.

தாம் எடுத்துக் கொண்ட சீரிய கருத்தினை, மக்கள் உள்ளத்தில் பதியவைப்பதே ஆசிரியரின் முதன்மையான கருத்தாகும். அதற்காக, அக்காலத்து நிலைமைகளை எடுத்துக் காட்டிக் கூறினார். 'புத்தேள் உலகம்' என்பதைவிடச் சிறப்பு வாய்ந்தது 'ஒப்புரவு அறிதல்' என்கிறார்!

**214 ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் ...**

உயிரின் அறிவும் செயலும் காண முடியாதவை. அதனால், 'செத்தாருள் வைக்கப் படும்' என்றார். பிணத்தோடு ஒப்பர் என்பது பொருள். மனிதத் தன்மையும், கடமையும், பண்பாடும் அறிந்து நடவாதவன் பிணத்திற்குச் சமமாகக் கருதப்பட வேண்டும். 'இறந்தார் இறந்தார் அனையர்' (310), 'துஞ்சினார் செத்தார்' (936), 'செத்தான்'(1001) என்பன போன்று வருகின்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியவை. 'அறிவான்' என்பதற்கு மாறாக, 'மற்றையான் என்றார். நடைப்பிணங்கள் என்பவர்கள் அவர்களே! 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' (140) சிந்திக்கவும். பிணத்திற்குச் சமம் என்று வேறு பல இடங்களிலும் கூறியுள்ளார்.

**215 ஊருணி, நீர்நிறைந் தற்றே ...**

'பேரறிவாளன்', 'திரு' என்பன 'அறிவுடைமை', 'பொருள் செயல்வகை' முதலிய அதிகாரங்களை நினைவு படுத்துவன. எப்போதும் யாவர்க்கும் பயன்படும் என்பதாயிற்று. 'பேரறிவாளன்' என்பதற்கு மாறாகப் புல்லறிவாளனின் தன்மைகளைப் 'புல்லறிவாண்மை' என்ற அதிகாரம் கூறுகின்றது.

'திரு' பாழ் போகாமல் நெடிது நின்று எல்லார்க்கும் வேண்டுவனவற்றைத் தவறாமல் உதவும். நூலிலேயே 'பேரறிவாளன்' என்று இந்த ஓரிடத்தில்தான் சிறப்பாகக் கூறியுள்ளார்.

**216 பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் ...**

ஒப்புரவின் சிறப்பினைக் குறிக்க வேண்டியே 'நயன்' என்று கூறினார். எல்லார்க்கும் எளிதில் பயன்படும்; வேண்டாதார்க்கும் பயன்படும் என்பது இதன் குறிப்பு. பயன் படுகின்ற மரம் பழுத்தது என்பது சிந்திக்கத் தக்கது. நச்சுமரம் பழுத்துப் பயனில்லை. 'நச்சப் படாதவன்' (1008) என்பது போன்ற குறட்பாக்களைச் சிந்திக்க வேண்டும். உள்ளூர் என்றது சிந்தனைக்குரியது;

**217 மருந்தாகித் தப்பா மரத்தற்றால் ...**

'மருந்து' என்ற அதிகாரம் நினைவு படுத்தப் படுகின்றது. 'தப்பா' என்னும் சொல், கொள்ளுதற்கரிய இடத்தில் இருப்பது என்றும், மறைவான இடத்தில் இருப்பது என்றும், காலத்தால் வேறுபடுவது என்றும், பயன்படாதது என்றும் பலபடக்குறிக்கிறது. 'மருந்தாவதும்', 'மறைந்திராமல் இருப்பதும்' சிறப்பாகக் கூறப்பட்டன. 'குடிமை', 'பண்புடைமை', 'சான்றாண்மை' போன்ற அதிகாரங்கள் பெருந்தகையாளன் தன்மைகளைக் கூறுவன.

இத்துடன் மூன்று குறட்பாக்களும் செல்வத்தைக் குறித்தே கூறப்பட்டன. எளிமையில் கிட்டும்; தன்குறை நோக்காது — எல்லா வருத்தமும் தீர்க்கும்.

**218 இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ...**

செல்வம், விரிவாக இல்லாத காலத்திலும் ஒப்புரவு செய்வர் என்பதாகும். 'காட்சி' என்பது அறிவு. ஒப்புரவு செய்பவர்களின் உயர்ந்த பண்பாடு கூறப்பட்டது. 'பருவத்து'

என்பது காலத்தினைக் குறிக்கும். 'காலமறிதல்' என்றோர் அதிகாரமும் உண்டு. 'கடன் என்ப' (981) என்ற குறட்பா சிந்தனைக்குரியது.

'வழங்குவது உள் வீழ்ந்தக்கண்ணும்' (955) என்பதுபோல இங்கும் கூறினார். 'கடன் அறிகாட்சியவர்' என்றது இயற்கை அறிவுடையார் என்பதாகும். 'உளவரை தூக்காத ஒப்புரவாண்மை' (480) என்பதையும் இத்துடன் ஒப்பிட்டு அறிக.

**219 நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல் ...**

செல்வம் குறைபடினும் ஒப்புரவு செய்வர் என்பது புலனாயிற்று. வறுமையுற்றாலும் ஒப்புரவு செய்வதிலிருந்து தவற மாட்டார்கள் என்பது கருத்து. 'நல்கூர்ந்தான்' என்பது 'நல்குரவு' என்கின்ற அதிகாரத்தினை நினைவு படுத்தும். 'உளவரை தூக்காத' (480) என்பது சிந்தனைக்குரியது. 'நயன்' என்ற சொல்லின் கருத்தும் சிறப்பிக்கப்பட்டது. நயனுடையன், மிகச் சிறப்புக்கு உரியவன் ஆவான்.

தான் நுகருதல் இல்லாமையால் ஒப்புரவு நிற்காது.

**220 ஒப்புரவி னால்வரும் கேடுஎனின் ...**

ஒப்புரவினால் கேடு வாராது என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. ஒப்புரவினால் கெடுவது கேடு அன்று. அதனால் கெட்டானேயாயினும் அதனை ஆக்கமாகக் கொள்ளுதல் வேண்டும். விற்றுக் கொள்ளப்படுவதொரு பொருள் இல்லை; ஒப்புரவின் சிறப்பு நோக்கி அதுவும் செய்யப்படும் என்ற திருவள்ளுவரின் கருத்து மேன்மேலும் சிந்தனைக்குரியது.

விற்பது என்பது தகாததுதான்; என்றாலும் ஒப்புரவின் சிறப்பை மேம்படுத்திக் கூறினார். 'விற்றற்குரியர் (1080) என்பது போன்ற இடங்களையும் கருதலாம்.

## 23 ஈகை

**221 வறியார்க்குஒன்று ஈவதே ஈகை ...**

வறுமையில்லாதவர்களுக்குக் கொடுப்பது ஈகையாகாது. 'ஈவதே' என்பதில், 'ஏ'காரம் உறுதிப்பாட்டினை உணர்த்தும். வறியார்க்குக் கொடுப்பதே 'ஈகை'. மற்றவர்கட்குக் கொடுப்பதை ஈகை (தருமம்) என்று எண்ணுவது தவறு.

'ஆகுல நீர பிற' (34) என்பதைக் கருதுக; வறியவர்களைப் பற்றிக் கூறுவது 'நல்குரவு' என்னும் அதிகாரம்.

**222 நல்லாறு எனினும் கொளல்தீது ...**

'எனினும்' என்பது அவ்வாறு கூறுபவர்கள் இல்லை என்பதை உணர்த்துகின்றது. 'ஈதலே' என்பதன் 'ஏ'காரம் பிறப்பினைக் காட்டிற்று. இக் குறட்பாவில் நல்லது தீயது ஆகிய இரண்டையும் குறித்துக் காட்டினார்.

மேலுலகம் இல்லையென்றாலும் — சிந்திக்கத்தக்கது. இவ்வுலகக் கடமையே மிகமிகத் தேவையானது என்பது வற்புறுத்தப்பட்டது. 'மேலுலகத்திற்குச் செல்லுவதற்காகச் செய்ய வேண்டும்' என்று மயக்கமுற்ற மக்கள் எண்ணிக்கொண்டு, இவ்வுலகில் செய்ய வேண்டுவன வற்றைச் செய்யாதிருப்பது அறியாமை என்பதை உணர்த்தினார். மேலுலகத்திற்கென்று செய்வன யாதுமில்லை என்பதைக் குறித்துக் காட்டினார். 'வையத்துள்' (50) என்பது போன்ற குறட்பாக்களைச் சிந்தித்தறிதல் நல்லது. 'கொளல்தீது' என்றார். வறுமையில்லாதோர் கொள்ளுதல் தீது என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'ஈகை பெற்றே வாழ்வோம்' என்று எண்ணிக் கொண்டிருக்காதே என்பது உள்ளுறை.

மேலுலகம் என்பதுபற்றிக் கருத வேண்டியதே இல்லை என்ற குறிப்பினை இதன்மூலம் உணர்த்தினார். உலகில் நடைமுறையில் கூறப்படுவதையும் சுட்டிக் காட்டினார். நல்லது கூறியவர், தீயதும் உடன் கூறினார். 'நல் ஆறு எனப்படுவது' (324) என்பது போலக் கூறினார்.

**223 இலன் என்னும் எவ்வம் உரையாமை ...**

தனது வறுமையை ஒருவன் நம்மிடம் சொல்லுவதற்கு முன்பாகவே அவன் குறிப்பறிந்து கொடுத்தல் வேண்டும் என்பதற்காகவே 'இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்' என்று கூறினார்.

பிறரிடத்தில் மீண்டும் அவன் சென்று வறுமையைக் கூறாதிருக்குமாறு கொடுத்தல் என்பதும் அமையும். 'எவ்வம்' என்பதன் பொருள் துயரம்; 'குலம்' என்பது 'குடிமை' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்தும்.

நற்குணம் கொண்ட சான்றோரின் வழியில் வந்தவர் என்பதைக் குறிக்க வேண்டி 'குலனுடையான்' என்றார். 'குடிமை' என்ற அதிகாரம் இவர்களைப்பற்றி நன்கு கூறும். பிற இடங்களிலும் காண்க.

**224 இன்னாது இரக்கப் படுதல் ...**

பிறர்க்குக் கொடுக்குங்கால் தாழாது கொடுக்க வேண்டும் என்பது கருத்து. யாசிப்பவனுடைய நகைமுகம் கண்டால் துயரம் கெடும் என்பதாம். 'இன்னா' என்பது 'இன்னா செய்யாமை' என்ற அதிகாரத்தை நினைவு படுத்துகிறது.

'இரவு', 'இரவச்சம்' முதலிய அதிகாரங்களைக் கண்டு தெளிக; இரப்பவர் (யாசிப்பவர்) பொருள் பெற்றால் 'இன்முகம்' காட்டுவர். அதைக் காண்பதும் இன்பம் பயக்கும்.

**225 ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் ...**

பசியாற்றல் என்பது 'உண்ணாது நோற்பார்' (160), 'உற்றநோய்' (261) முதலியன வற்றை விளக்குவதாகும். 'ஆற்றலின்பின்' என்பது 'துறந்தாரின் தூய்மை உடையர்' (159) என்பது போன்றவற்றை நினைவு படுத்துகின்றது.

இல்லறத்தில் இருப்பவர்கள் இல்லறத்திலே கடமையாற்றி நின்றால் பேரின்ப நிலையடைவர் என்ற கருத்தை வலியுறுத்தினார். ஒருகால் மயக்கமுற்று இல்லறத்தில் இருப்பவர்கள் துறவறத்திற்குச் செல்லலாம் என்று எண்ணுவது கூடாது என்பதையும் வற்புறுத்தவே இல்லறத்தைச் சிறப்பாக எடுத்துக் காட்டினார். அந்தந்த வாழ்க்கையில் வாழ்பவர்கள் கடமையாற்றினால் அதுவே தலைசிறந்த அறமாகும் என்பது இதன் பொருள். 'அது பெரிதா', 'இது பெரிதா' என்று பேசுவது அறியாமை என்று குறிக்கப்பட்டது. 'பாத்தூண்' (44) என்பது போன்ற குறட்பாக்கள் கருதற்பாலன. 'பசியாற்றல்' என்பதைவிட அப்பசியை மாற்றுவார் சிறந்தவராவர் என்பது சிந்திக்கத்தக்கது.

தவத்தோர் தமக்குண்டான பசியைப் பொறுத்துக் கொள்ளுவர்; அது நோன்பு நோற்றலாகும்; பிறர் பசியையும் போக்கும் இல்லறத்தானே மேம்பட்டவன் என்று கூறினார்.

## 226 அற்றார் அழிபசி தீர்த்தல் ...

கொடிய பசியானது எல்லா நன்மைகளையும் அழித்துவிடும். அதனால் 'அழிபசி' என்றார். வறியவர்களுடைய பசியைப் போக்கினால், 'பசி தீர்த்த பொருள்' தனக்கே வந்து சேரும் என்பதாயிற்று; பொருளைச் சேர்த்து வைக்கும் வழி, வறுமையைப் போக்குவதேயாகும் என்ற உண்மையை உணர்த்த வேண்டியே 'பொருள் வைப்புழி' என்று கூறினார்.

மனிதப் பிறவியின் மிகமிக உயர்ந்த பண்பாடு பசித்தோர் பசியினைப் போக்குவதே யாகும். அழிபசி தீர்த்தலாகிய அறம், இக்குறட்பாவில் வற்புறுத்திக் கூறப்பட்டது. 'அற்றார்க்கு ஒன்று' (1007) என்பது போன்ற குறட்பாக்களைச் சிந்தித்தல் வேண்டும். 'பெற்றான் ஒருவன்' என்பதனை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

## 227 பாத்தூண் மரீஇ யவனை ...

'பாத்தூண்' என்பது பகுத்துண்டு (322) என்ற குறளை நினைவுபடுத்தும். பசியினைப் போக்குகிறவர்களைப் பசிப் பிணி தீண்டாது. பசிக்குத் 'தீப்பிணி' என்று பெயரிட்டார். "ஈந்தால் பொருள் குறையும், அதனாலே பசியுண்டாகும் — என்று நினைக்காதே" என்று விளக்கம் தந்தார்.

'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' என்றும் கூறினார். இவ்வுடம்பில் நின்று ஞான, ஒழுக்கங்களை அழித்து, அதனால் வரும் உடம்பிற்கும் துன்பம் செய்தலின் 'தீப்பிணி' என்றார். தனக்கு மருத்துவன் தானே ஆனதால் பசிப்பிணி அணுகாது என்றார்.

## 228 ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் ...

பிறர்க்கு இடாதவர்கள், பொருள் இழப்பர் என்பது குறிக்கப்பட்டது. 'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரம் நன்கு சிந்திக்கத்தக்கது. வியப்பும் வினாவும் தோன்ற 'அறியார் கொல்' என்றார். இரக்கமில்லாதவர்களை வன்கணவர் என்றார்.

'கொள்வார் பிறர்' (1009) என்று அங்கே கூறினார்; இங்கே 'வைத்திழக்கும் வன்கணவர்' என்றார்.

**229 இரத்தலின் இன்னாது மன்ற ...**

தாமே உண்ண வேண்டும்—தாமே சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும் என்று நினைப்பவர்களை, 'நிரப்பிய' என்னும் சொல் உணர்த்துகிறது. 'தமியர் உணல்' என்பது 'ஒருவரும் காணாதபடி மறைவாகத் தனித்து உண்ணுதல்' என்பதாம்; அஃதாவது தன் வயிற்றை மட்டும் நிரப்பிக் கொள்ளுபவன் என்பதாம்.

'இரவு', 'இரவச்சம்' என்னும் அதிகாரங்களில், இக்குறட்பாவில் காணப்படும் 'இரத்தல்' கூறப்படும். "காக்கை கரவா கரைந்துண்ணும்" (527) என்பதையும் இங்குச் சிந்திக்கலாம்.

**230 சாதலின் இன்னாதது இல்லை ...**

பிறருக்குப் பயன்படாத உடம்பு பாரம் நீங்குதலால் 'இனிது' என்றார். இறந்து போவதைவிட 'ஈதல் செய்யாதிருப்பது' கொடுமையென்பது கருத்து. ஆற்றின் அளவறிந்து (477) என்பது போன்ற குறட்பாக்களைச் சிந்தித்து ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும்.

## 24. புகழ்

**231 ஈதல் இசைபட வாழ்தல் ...**

இசைபட வாழ்வதற்குக் கல்வி, ஆண்மை முதலிய பிற காரணங்களும் உளவேனும், ஈதல் சிறந்தது என்பதை நினைவுபடுத்தவே 'ஈதல்' என்றார். கொடுத்தல் என்பதே நிலைத்து புகழ்பட வாழ்தலாகும். உயிர்க்கு ஊதியம் எது என்பதை அறிந்து வாழவேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்' (50) என்பது சிந்திக்கத்தக்கது.

**232 உரைப்பார் உரைப்பவை எல்லாம் ...**

'உரைப்பார் உரைப்பவை' என்பதும், 'ஈவார்மேல் நிற்கும் புகழ்' என்பதும் நன்கு சிந்திக்கத்தக்கவை. உலகில் எல்லோரும் பேசுவதெல்லாம் ஈகை செய்பவர்களின் புகழையே. ஈகையினால் வரும் புகழ் என்றும் நிலைத்து நிற்கும் என்றார். ஈதல் என்பதே புகழுக்கு முதற் காரணம் என்ற உண்மை விளக்கப்பட்டது. 'எல்லாம்' என்று குறிப்பிட்டதைச் சிந்திக்க வேண்டும்.

புகழ் என்பது பல காரணங்களால் ஒருவருக்கு வருவதாகப் பேசப்பட்டாலும், ஈகை செய்வதனால் உண்டாகின்ற புகழ்தான் நிலையானதும் உண்மையானதும் ஆம் என அறிக.

**233 ஒன்றா உலகத்து உயர்ந்த ...**

'பொன்றுங்கால் பொன்றாத் துணை' (36) என்பது போன்றவை சிந்திக்கத்தக்கவை. கொடுத்தற்கரிய உயிர், உறுப்பு, பொருள்களைக் கொடுத்தமைபற்றி வருதலால்,

தன்னோடொப்பது இன்றித் தானே உயர்கிறோம். அதனால் 'ஒன்றா உலகத்து உயர்ந்த' என்று குறிப்பிட்டார்! புகழ் மற்ற பொருள்கள்போல் அழியாது. நிலையாததாகிய உலகில் நிலைத்து நிற்பதைக் கூறினார். 'அல்லால்' என்பதும், 'இல்' என்பதும் சிந்தனைக்குரிய சொற்களாகும்.

உலகத்தில் அனைத்தும் மறையும்; அழிந்து போகும். ஆனால் உயர்ந்த புகழ் அழியாமல் என்றும் நிலைத்து நிற்கும்.

**234 நிலவரை நீள்புகழ் ஆற்றின் ...**

இவ்வுலகில் கடமையாற்றிப் புகழுடன் வாழ்வதே தலைசிறந்ததென்பது உணர்த்தப் பட்டது. 'புத்தேளிர் உலகு' தலைப்பினைப் பிற இடத்தில் காண்க வானுலகத்தாரும், இவ்வுலகில் சிறந்து வாழ்பவனைத்தான் பாராட்டுவார்கள். 'புலவர்' என்பது தேவரை; அவர்கள் இவ்வுலகில் 'நீள் புகழ்' அடையாதவர்கள், இந்த உலக வாழ்க்கையை 'இவ்வுலகம்' என்றும் பேரின்ப உலக வாழ்க்கையை 'அவ்வுலகம்' (247) என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 'அவ்வுலகம் இவ்வுலகம்' என்னும் தலைப்பினைக் காண்க. இவ்வாறிருக்க 'தேவருலகம்', வானுலகம்', 'புத்தேளிர் உலகம்' என்று கூறப்படுகின்ற எண்ணமும் உலகில் மக்களிடையே இருந்து வருவதால் அதனை வைத்துக் காட்டி, இவ்வுலகக் கடமையே சிறந்ததென்பதனைக் கூறி உண்மையை எடுத்துரைக்கின்றார்.

'யான் எனது' (346) என்ற குறட்பாவில் குறிக்கின்றபோது, பேரின்ப உலகம் வீடுபேறு என்பதிலிருந்து வேறான உலகம் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார். எனவே தேவர்களைப் புத்தேள் உலகம் போற்றாது என்றும் குறித்தார். இவ்வுலகில் ஈகையும் புகழும் கொண்டவனே மேலானவன் என்று காட்டினார்.

'நல் விருந்து வானத்தவர்க்கு' (86), 'அமரருள் உய்க்கும்' (121), 'மேல் உலகம் இல்லெனினும் (222) என்பன போன்ற இடங்களில் கூறியதுபோல, இவ்வுலகில் கடமையைச் செய்பவனே எல்லாவற்றிற்கும் மேலானவன் என்பதை வற்புறுத்தினார். நடைமுறையில் இருக்கும் கருத்தினைக் காட்டி உண்மையை உணர்த்தினார்.

**235 நத்தம்போற் கேடும் உளதாகும் ...**

எல்லோராலும் முடியாது என்பதைக் காட்டவே 'வித்தகர்' என்றார். வல்லவர்கள் என்பது இதன்பொருள். 'போல்' என்பது அசை. நத்தம் - ஆகும் - கேடும், உளதாகும் சாக்காடும் என்று அமைத்துப் பார்த்தல் வேண்டும். 'ஆக்கமாகும் கேடு' என்பது புகழுடம்பு செல்வமெய்த — பெருமை பெற இப்பூத உடம்பு அழிந்து போகும். அதாவது, அழியக்கூடிய இவ்வுடம்பைக் கொண்டு அழியாத புகழை உண்டாக்குதலாகும். இக்கருத்தினைச் சிறப்பித்து 'உளதாகும் சாக்காடு' என்றார்.

இறத்தல் என்பது இப்பூத உடம்பிற்கே. புகழுடம்பிற்கு இறத்தல் கிடையாது. நிலையாதனவற்றை வைத்துக் கொண்டு நிலையுள்ளதை உண்டாக்குபவர்கள் ஆதலால் 'வித்தகர்' என்றார். ஏனையோர்க்கு முடியாது என்பதால் 'அல்லால் அரிது' என்று கூறினார். புகழ் உடம்பு நிற்கப் பூதவுடம்பு அழியும் என்பது இதன் கருத்து.

**236 தோன்றின் புகழொடு தோன்றுக ...**

'தோன்றாமை', 'நன்று' என்று கூறியதால் மக்களாய்ப் பிறந்திருத்தலைவிட விலங்காய்ப் பிறத்தலே நன்று என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'தோற்றம் நிலக்குப் பொறை' (1003) என்பது போன்றவை சிந்திக்கத் தக்கவை. விலங்காய்ப் பிறந்தால் இகழ்பவர் இல்லையாதலால் 'நன்று' என்று கூறினார்.

புகழுக்குக் காரணமான குணங்களுடன் பிறவாதவர்கள் விலங்கினங்களாய்ப் பிறந்திருக்க வேண்டும்.

**237 புகழ்பட வாழாதார் தம்நோவார் ....**

வினாமுறையில் அமைக்கப்பட்டுள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். புகழுடன் வாழாதவரைப் பிறர் இகழ்வர் என்பது குறிப்பாயிற்று, 'தம் நோவார்' என்பதால், புகழுடன் வாழாததால் தம்மைத் தாமே நொந்து கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டது. தம்மை இகழ்வாரை நொந்து கொள்ளக் கூடாது; நொந்து கொள்ளுதல் முறையும் அன்று.

**238 வசையென்ப வையத்தார்க்கு எல்லாம் ...**

செய்தவர் இறந்து போக தான்மட்டும் இறவாது நிற்றலால் புகழ் 'எச்சம்' எனப்பட்டது. 'எச்சம்' தலைப்பினைக் காண்க. 'வசை', 'இசை' என்பன விளக்கத்திற் குரியன. பெற்றிருந்தால் 'இசை'; இன்றேல் 'வசை' என்பதாம். பிறந்தால் புகழுடனே வாழ வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. ஒருவன் பலர் முன்னே தோன்ற வேண்டும் என்று எண்ணினால், அவன் புகழுள்ளவனாக இருத்தல் வேண்டும். இல்லையென்றால் இருக்கும் இடம் தெரியாமல் இருந்து விடுதலே நன்று என்பதும் சிந்திக்கத்தக்க கருத்தாகும். 'வானுயர் தோற்றம்' (272) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன. 'தோன்றின் தோன்றுக', 'தோன்றலின் தோன்றாமை' என்பவை சிந்தித்தறிதற்கு உரியவை.

'இசை என்னும் எச்சம்' சிந்திக்கவும். எச்சம் பல இடங்களில் கூறப்படுகிறது. 'எச்சம் என்று என் எண்ணும்' (1004) இதுபோன்ற பல இடங்களையும் கண்டு தெளிக.

**239 வசையிலா வண்பயன் குன்றும் ...**

புகழில்லாதவன் இருந்த இடம் விளைவு குன்றும் என்பதாம். விளையுள் குன்றுதற்குக் காரணம், பாவ உடம்பைத் தாங்குகின்ற வெறுப்பு! இது இயற்கையின் தன்மை. 'வசையிலா', 'இசையிலா' எனும் சொற்கள் கருதற்பாலன. நிலம் என்றதால் விளைச்சல் என்பதாயிற்று. பாவ யாக்கையைப் பெற்றவனை உடைய நிலத்தில் விளையுள் குன்றும் என்பது கருத்து.

**240 வசையொழிய வாழ்வாரே வாழ்வார் ...**

முந்தைய குறட்பா மேலும் விளக்கம் பெறுகின்றது. 'செத்தாருள் வைக்கப்படும்' (214) என்பது போன்றவை கருதற்பாலன. 'இல்லற இயலில்' கடைசி அதிகாரம் 'புகழ்'. உயிருடன்

வாழ்பவர்கள் எல்லோருமே ''வாழ்பவர்கள்'' என்று கருதிவிடக் கூடாது என்றார். 'வாழ்வாரே வாழ்வார்', 'வாழ்வாரே வாழாதவர்' என்பன சிந்தனைக்குரியன. 'வசையொழிய', 'இசையொழிய' என்பன இரண்டு மாறுபட்ட கருத்தினை உணர்த்தின.

'வாழ்வாரே வாழ்வார்', 'வாழ்வாரே வாழாதவர்' இந்த வேறுபாடுகளின் கருத்தினை அறிதல் வேண்டும்.

---

**1 அறத்துப்பால்** **3 துறவறவியல்**

---

## 25 அருளுடைமை

### 241 அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் ...

செல்வம் என்ற சொல் நான்குமுறை கூறப்பட்டது. அருட்செல்வம் எல்லோரிடத்திலும் இருக்க முடியாது. 'பூரியார்' என்பது கீழ்மக்கள் (919) என்பதை நினைவுபடுத்தும். 'நோன்பு நோற்றல்' என்கின்ற தொடர் விரதத்தை மேற்கொண்ட தவத்தோரைப் பற்றிக் கூறப்படுவதாகும். 'பொருட் செல்வம்', 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தை நினைவுபடுத்துகிறது. அருளால் வரும் செல்வம், உயிர்களைக் காத்து அந்த அறத்தால் மேம்படுவது. உயர்ந்தாரிடத்தில்தான் அது இருக்கும். எனவே அது அருள்நிலை எனக் கூறப்பட்டது. அருட்செல்வம் அழியாச் செல்வம். எனவே, 'செல்வத்துட் செல்வம்' என்றார். 'பூரியார்' என்பது நினைவில் கொள்ளத் தக்கது.

செந்தண்மை பூண்ட மேலான அறவோர்களிடத்தில் மட்டும்தான் அருட்செல்வம் இருக்கும். பூரியார், அற்பர்கள், நீசர் இவர்களிடத்திலும்கூட பொருட் செல்வம் இருக்கும் என்பது குறிப்பு. 'பொருள் செயல் வகை' அதிகாரம் காண்க.

### 242 நல்லாற்றான் நாடி அருள்ஆள்க ...

ஆசிரியர் திருவள்ளுவனார் அறக் கருத்துக்களைக் கூறும்போது, உலகியலில் அறிந்தோரும் மேலோரும் கொண்ட கருத்துகளையும், நூல்கள் பலவற்றிலும் காணக்கூடிய கருத்துகளையும் நன்கு மனத்திற் கொண்டே கூறுகின்றார் என்பதற்கு இது போன்ற குறட்பாக்கள் எடுத்துக்காட்டுக்களாகும். 'பனுவல் துணிவு' (21), 'நூலோர்' (322) அது 'உலகத்து' (533) என்பன போன்று வருகின்ற இடங்களை நினைவு கொள்ளல் வேண்டும். உயிரை விட்டு நீங்காமல் இருமையிலும் உதவுவதால் 'துணை' என்றார். 'ஆற்றான்' என்பது இருமுறை கூறப்பட்டது.

அருள் உயிரைவிட்டு நீங்காமல் என்றென்றும் நிற்கும். உலகில் வழங்கும் நூல்கள் நெறிமுறைகள் அனைத்தையும்உட்கொண்டே ஆசிரியர் தமது நூலை யாத்துள்ளார் என்பது, 'புல் ஆற்றான் தேரினும்' என்பதால் விளங்கும். பிற இடங்களையும் காண்க,

**243 அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை ...**

'துன்பநிலை' அருளாளர்களுக்கு இல்லை என்பார். 'இன்னா உலகம்', 'புகல்', 'இல்லை' என்று கூறினார். துன்புறுகின்ற நிலையினை இன்னா உலகம் என்றார். 'அவ்வுலகம்', 'இவ்வுலகம்' (247) என்பன சிந்தித்தறிய வேண்டுவன. நெஞ்சிலே அருள் பிறக்க வேண்டுமாகையால், அருள் சேர்ந்த 'நெஞ்சம்' என்று கூறினார்.

'ஆரிருள் உய்த்துவிடும்' (121), 'ஆழும் அளறு' (919) என்று கூறுகின்ற முறையில் துன்ப நிலையை விளக்க 'இன்னா உலகம்' என்று இங்கே கூறினார். உலகியல் வழக்கினை அறிக.

**244 மன்னுயிர் ஓம்பி அருள்ஆள்வார்க்கு ...**

தீமை செய்தவர்களுக்கே தீமை சேரும்; அருளாளர்க்குச் சேராது என்றார். உயிர்கள் அழியாதவை. அதனால் 'மன்னுயிர்' என்றார். 'எவ்வுயிர்க்கும்' (30), 'ஓம்புதல்' (322) என்பன சிந்தனைக்குரியன. அருள் ஆள்வார்க்குத் தலையாய பணி மன்னுயிர் ஓம்புதலே யாகும் என்பது உணர்த்தப்பட்டது. இருள் என்பது அஞ்ஞானம்; இது துன்பத்தை உணர்த்திற்று. இருள்சேர் (5) என்பது சிந்திக்கத்தக்கது.

'இருள் நீங்கி' என்பது போன்ற இடங்கள் சிந்தனைக்குரியவை. 'செந்தண்மை பூண்டு' (30) ஒழுகுபவர்கள் அருள் சேர்ந்த நெஞ்சினர் என்று கூறப்பட்டது. அருள் உடையவர் களுக்குத் துன்பமே வாராது என்பது இயற்கையின் இலக்கணமாகும். அருள் சேர்ந்த நெஞ்சத்தைப் படைத்தவர்களே தவசிகளும் முனிவர்களும். அவர்களே உலகிலுள்ள எல்லா உயிர்களிடத்தும் எக்காலத்தும் அருள் கொண்டு நடப்பார்கள். உலகியல் அறிஞர்களின் முடிபுகளையும் சேர்த்தே ஆசிரியர் கூறுவதால் 'என்ப' என்றார்.

**245 அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை ...**

அருள் ஆள்பவர்களுக்கு இப்பிறவியிலும் துன்பம் இல்லை. வளி, மல்லல், மா என்பன இவ்வுலகத்தின் சிறப்பினைக் கூறும் சொற்கள். 'இவ்வுலகம்', 'அவ்வுலகம்' (247) என்ற இரு உலகிலும் அருள் ஆள்வார்க்குத் துன்பமே இல்லையாம். காற்றில்லாமல் ஒருகணம் கூட உயிர்கள் வாழ முடியா. எனவே, உலகைக் குறிக்க 'வளி' என்னும் சொல்லைக் கையாண்டார் ஆசிரியர். அருளாளர்களை உலகத்தார் என்றென்றும் போற்றி வாழ்வார்கள் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

'சாலும்கரி' (25) என்பது போல் இங்கும் கூறினார். பிற இடங்களிலும் கண்டு தெளிக. வளி — காற்று எப்போதும் வழங்கி வருதலால் உலகில் அல்லல் இன்றி வாழ முடிகிறது. அருளினை ஆள்கின்ற முனிவர்களுக்கு அவ்வருள் தன்மையே அல்லலின்றி வாழ வைக்கும் என்பது சிந்தனைக்குரியதாகும்.

அருள் ஆள்வார்க்கு அல்லல் உண்டாகும் என்று ஒரு காலத்தும் ஓரிடத்தும் ஒருவரும் கூற இயலாது. ஆதலால்தான் 'ஞாலம் கரி' என்றார். 'இந்திரனே சாலும் கரி' (25), 'தானேயும் சாலும்கரி' (1060) என்புன போன்றவற்றையும் சிந்திக்கலாம்.

**246 பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்ப ...**

'பொச்சாவாமை' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்படுகிறது. 'அல்லவைதேய' (96) என்பன போன்றவை சிந்தனைக்குரியன. 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. 'கூடாவொழுக்கம்' என்னும் அதிகாரமும் உள்ளது. 'பொருள்' என்பது பேரின்பத்திற்குக் காரணமான உறுதிப் பொருள்களைக் குறித்ததாகும். இவ்வுலக வாழ்விற்குத் தேவையான செல்வத்தைப் 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரம் விளக்குகிறது. 'உயர்ந்தோர் கூறுவர்', 'அறிந்தோர் சொல்லுவர்' என்று கூறுவது ஆசிரியரின் இயல்பாகும். அவ்வாறே 'என்பர்' என்று கூறினார். இருமுறை 'நீங்கி' என்றார்.

'பொச்சாவாமை' என்னும் அதிகாரமும் உள்ளது. 'பொருள்' என்பது அறமாகிய பொருளினைக் குறித்தது.

**247 அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை ...**

பேரின்ப உலகமே 'அவ்வுலகம்' ஆகும். அதனையே வீட்டுலகம் என்று கூறுவர். இவ்வுலக வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரத்தைக் கண்டு தெளிக. அவ்வுலகம் என்பது 'பேரா இயற்கை' (370) என்று உணர்த்தப் பட்டது. பொருளும் அருளும் முயன்றே அடைதல் வேண்டும் என்பது குறிக்கப்பட்டது. 'இல்லார்' இருமுறை கூறப்பட்டது. 'இல்லை', 'இல்லாகி' என்று அழைத்தார். 'உலகம்' இருமுறை காணப்படுகிறது. இருப்பதை இவ்வுலகம் என்றும் பெறவேண்டியதை அவ்வுலகம் என்றும் சுட்டிக் காட்டினார்.

இவ்வுலகம், பொருள் நாடி நுகர்கின்ற சிற்றின்ப உலகம். உலக வழக்கில் பேசப்படும் வானோர் உலகமும் புத்தேளிர் உலகமும் வேறு வேறானவை. 'யான் எனது என்னும் செருக்கு அறுப்பான்' (346) என்பதையும் காண்க.

**248 பொருள்அற்றார் பூப்பர் ஒருகால் ...**

இக்குறட்பாவில் 'ஒருகால்' என்பது சிந்திக்கத்தக்கது. செல்வந்தர்கள் வறுமை அடைவதும், பிறகு செல்வம் அடைவதும் இயல்பு என்பது கூறப்பட்டது. முற்றிலும் மாறாக 'அருள்' என்பது கூறப்பட்டது. அருள் அற்றவர்கள் அழிந்தவர்களே ஆவார்கள். முந்தைய குறட்பாவில் பொருள் இல்லாமையும் அருள் இல்லாமையும் ஒருவகையில் சமமாகக் கூறப் பட்டன. இப்பாட்டில் அக்கருத்தினை மறுத்துக் கூறி அருளற்றவரின் கொடுமை கூறப்பட்டது. பொருள் அற்றாரை இயற்கை என்கின்ற ஊழ்வகையால் வறுமையுற்றோர் என்று விளக்கினார். 'ஆதல்' என்ற சொல் 'பிறகு செல்வ வாழ்க்கை அடைவர்' என்பதைக் குறிக்கிறது. இந்தக் குறட்பாவில் 'அற்றார்' என்ற சொல் சொல்லப்பட்டிருப்பது சிந்திக்கத்தக்கது.

அருளில்லாதவர்கள் பாவத்தால் அழிந்தவர்களே. அவர்களுக்கு வாழ்வில்லை.

**249 தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் ...**

ஞானம் இல்லாதவன் மெய்ப்பொருளைக் காணமுடியாது. அப்படிக் கண்டாலும் அதனை அழித்து விடுவான். அருள் இல்லாதவனால் அறம் செய்ய முடியாது. அப்படிச்

செய்கின்றான் என்று வைத்துக் கொண்டாலும், அருள் இல்லாத காரணத்தினால் அதை அழித்து விடுவான் என்பதாகும்.

இதனால் எல்லா அறங்களுக்கும் அருளுடைமை முதன்மையானது என்பது வற்புறுத்தப் பட்டது. அடுத்து வரும் 'புலால் மறுத்தல்' என்ற அதிகாரத்திற்கு அடிப்படை உய்த்துணர வைக்கப்பட்டது. 'தெருளாதான்', 'அருளாதான்' — இரண்டு சொற்களையும் சிந்தித்து உணர்க.

நெய்யால் நெருப்பினை அணைக்க முயல்வதை 'நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால்' (1148) என்றார். அதுபோல "தெருளாதான் மெய்ப் பொருள் கண்டற்றால்" என்று இங்குக் கூறினார். ஞானம் இல்லாதவன் மெய்ப் பொருளைக் காண முடியாது. அதுபோல அருள் இல்லாதவன் அறம் செய்ய முடியாது. அறம் செய்வதாகக் காணப்பட்டாலும் அது அறமாகாது. உள்ளம் தூய்மையில்லாமல் செய்யப்படுவது அறமாகாது. அடுத்துவரும் 'புலால் மறுத்தல்' அதிகாரத்திற்குக் குறிப்பு உணர்த்தினார்.

**250 வலியார்முன் தன்னை நினைக்க ...**

வலியார், மெலியார் என்ற இரண்டு சொற்களும் சிந்தனைக்குரியன. உயர்திணையில் சொன்னாலும் (மெலியார்) அஃறிணைக்கும் கொள்ளுதல் வேண்டும். வலியார் என்றதனால் தன்னைவிட உடல் வலிமை உடையார் என்பதாயிற்று. 'தன்னை நினைக்க' என்று குறிப் பிட்டதால் தன்னுடைய வலிமைக் குறைவால்தான் அஞ்சி நிற்கும் நிலை என்று உணர்த்தப் பட்டது. இக்குறட்பாவின் முடிவில் உள்ள 'இடத்து' என்ற சொல் காலத்தை உணர்த்தியதாகக் கொள்ளுதல் வேண்டும். அருள் பிறக்க ஒரு வழி சுட்டிக் காட்டினார்.

முற்றும் துறந்த முனிவர்களுக்குக் கூறுவதால் இவ்வாறு கூறினார். பிற இடத்தில் கூறப்படுவதையும் காண்க. 'வலியார்க்கு மாறேற்றல்' (861) என்ற குறட்பாவையும் சிந்திக்க வேண்டும். இடமறிந்து பொருள் கண்டால் தெளிவு உண்டாகும்.

## 26 புலால் மறுத்தல்

**251 தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ...**

ஊன் உண்ணுபவனுக்கு அருள் என்பதே உண்டாகாது. ஏனெனில், அவன் தன்னுடைய உடம்பை வளர்ப்பதே பணியாகக் கொண்டவன் ஆகின்றான். உடம்பைப் பெருக்குபவனுக்கு அருள் உண்டாகாது. உடம்பு பயனில்லாதது என்பதும் சுட்டிக் காட்டினார். 'பெருக்கற்கு' என்றதால் உடம்பை வளர்க்கின்றான் என்பது குறிக்கப்பட்டது.

'ஊன் ஓம்பும் வாழ்க்கை' (968) என்ற குறட்பாவையும் சிந்தித்தறிக. இறைச்சி உண்பவன் என்பதைப் 'பிறிது ஊன்' என்பது குறித்துக் காட்டியது. 'தன்' என்கின்ற சொல்லும் 'பிறிது' என்கின்ற சொல்லும் சிந்திக்கத்தக்கன.

தவமேற்கொண்ட அருளாளர்கள் உண்டியினைச் சுருக்கவேண்டும்; பல நோன்புகளை மேற்கொள்ளவும் வேண்டும்; ஊனைப் பெருக்க ஊன் உண்ணக் கூடாது.

**252 பொருள்ஆட்சி போற்றாதார்க்கு இல்லை ...**

இக்குறட்பாவில் பொருளைப் போற்றிக் காப்பாற்றும் முறையும் கூறப்பட்டது. 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. 'ஆட்சி' என்ற சொல் இருமுறை கூறப்பட்டது. காப்பாற்றாவிட்டால் பொருளை இழப்பான்.

ஊன் தின்பதால் அருட்பயன் இல்லை. ஊன் தின்றாராயினும், 'உயிர்கட்கு ஒரு தீங்கும் நினையாதார்க்கு அருள் ஆள்வதற்குக் குற்றமில்லை' என்பாரை மறுத்து, அஃது உண்டென்பது இவை இரண்டு பாட்டாலும் கூறப்பட்டது.

அருளாட்சி இல்லாதவன் ஊன் தின்னாதிருப்பதும் பயனற்றதாகும் என்பதை அழகாக உணர்த்தினார். இல்லறத்தை மேற்கொண்டவர்களின் கடமையும் துறவறத்தை மேற்கொண்டவர்களின் கடமையும் குறிக்கப்பட்டன. ஊன் உண்ணுவதால் அருள் கெட்டுவிடும் என்பதாம். ஆதலால் தவம் செய்தல் முடியாததாகும். 'அருளுடைமை' அதிகாரம் முதற்கொண்டு 'கொல்லாமை' அதிகாரம் முடிய நோன்பு நோற்றலின் தன்மைகள் கூறப்பட்டன.

ஞானம் அடைகின்ற நிலையினை 'நிலையாமை', 'துறவு', 'மெய்யுணர்தல்', 'அவாவறுத்தல்' ஆகிய நான்கு அதிகாரங்களும் கூறுகின்றன. எல்லா உயிர்களிடத்தும் அருள் உள்ளவனே துறவறத்திற்கு உரியவன். அருள் பிறக்கும் உள்ளத்தான் ஆகையால் புலாலை வெறுப்பவனாவான் என்பது குறிப்பாகும். அருள் உள்ளம் இல்லாதவனாக இருப்பவன், புலால் மறுத்து வாழ்பவனாக இருப்பது பயனற்றது.

'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தைச் சிந்திக்கவும்; 'அளவறிந்து ஈக' (477) என்பதையும் 'ஓம்புதல் தேற்றாதவர்' (626) என்பதையும் கருதுக.

**253 படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றுஊக்காது ...**

அருளுடைமை என்பதற்கு அடிப்படையாக இருக்க வேண்டியது புலால் மறுத்தல். படை என்பது போருக்குச் செல்லும் வீரனைக் குறித்தது. படை கொண்டவனைச் சொல்லுகின்ற பொழுது 'நெஞ்சம்' என்றார். உடற்சுவை சொல்லுகின்ற பொழுது 'மனம்' என்றார். 'கொண்டார்', 'உண்டார்' என்ற சொற்கள் சிந்திக்கத்தக்கவை.

சுவைபட உண்ணுதல் என்பது இனிமையாகச் சமைத்து உண்ணுதல் என்பதை விளக்கிற்று. இதை உவமையால் விளக்குகின்றார்; ஆகையால் 'போர்' என்ற உறவு அமைக்கப்பட்டது. அன்பும் அருளும் நிறைந்திருக்க வேண்டிய மனத்தின் இயல்பு கொலை செய்வதாலும் அதை உண்ணுவதாலும் கெட்டுவிடும் என்பதாம்.

'படைச் செருக்கு' அதிகாரம் விளக்கம்தரும்; பிறவும் காண்க.

**254 அருள்அல்லது யாதெனின் கொல்லாமை ...**

இக்குறட்பாவில் 'கொல்லாமை' என்ற அதிகாரத்தை நினைவு படுத்தினார். 'வாய்மை எனப்படுவது யாது?', பேதைமை என்பது ஒன்று யாது?' என்ற அமைப்பு முறையினை இக் குறட்பாவில் காண்க! இக் குறட்பாவில் அருள் என்பது யாது என்றால் **கொல்லாமை** என்றும், அருள் அல்லாதது யாது என்றால் **கொல்லுதல்** என்றும் உணர்த்தப்பட்டன.

பொருள் என்ற சொல் அறத்தைச் சுட்டிக் காட்டியது. 'அவ்வூன்' என்று கூறியதால் அவ்வாறு கொல்லுதலினால் வந்த ஊன் என்று அறிந்து கொள்ளுதல் வேண்டும். இந்த அதிகாரத்தில் ஊன் உண்பான், ஊன் தின்பவர், உடற்சுவை உண்டார், ஊன் தினல் முதலிய சொற்கள் எல்லாக் குறட்பாக்களிலும் சொல்லப்பட்டிருப்பதைக் கண்டு தெளிதல் வேண்டும்.

**255 உண்ணாமை உள்ளது உயிர்நிலை ...**

உலகியல் வழக்கில் துன்பம் அடைகின்ற ஒன்றினை — துன்பம் தருகின்ற ஒன்றினை 'நரகம்' என்பது வழக்காகும். இக் குறட்பாவில் நரகத்தைக் குறிக்க 'அளறு' என்று சொல்லப்படுகிறது. இக் குறட்பாவில் **உண்ணாமை** என்ற சொல்லும் **உண்ணல்** என்ற சொல்லும் காணப்படுகின்றன. வாய் திறக்காது என்பதை, 'அண்ணாத்தல் செய்யாது' என்ற சொற்கள் உணர்த்தின. (அளறு — சேறு) சேறு நிறைந்துள்ள இடம் போன்ற காரணத்தினால் நரகம், அளறு என்று பெயர் பெற்றது! 'பூரியர்கள் ஆழும் அளறு' (919) என்பதைக் கண்டு தெளிக.

**256 தினல்பொருட்டால் கொல்லாது உலகுஎனின் ...**

'கொல்லாமை' என்ற அதிகாரத்தை நினைவு கொள்வோம். ஊன் தின்னுவதே கொலைக்குக் காரணம்; 'உலகு' என்றது உயிர்களைக் குறித்தது. விலைக்கு வாங்கித் தின்பாரும் கொலைக்குக் காரணமாயினர். பொருளுக்காக வேண்டி ஊன் விற்பவரில்லை என்றும், தின்பவர்கள் இருப்பதனாலேயேதான் ஊன் விற்கப்படுகிறது என்றும் கூறினார். **பொருட்டால்** என்பது இருமுறை கூறப்பட்டது.

தின்னுவது கொலை செய்வதற்குக் காரணமாகாது என்பாரை மறுத்து இவ்வாறு கூறினார்.

**257 உண்ணாமை வேண்டும் புலாஅல் ...**

ஊன் உண்ணாதிருப்பதற்கு வழி கூறப்பட்டது. 'பெறின்' என்றதால் அருமை என்று கூறப்பட்டது. பிற குறட்பாக்கள் சிலவற்றில் காணப்படும் 'பெறின்' சிந்திக்கத் தக்கது. உண்டாகப் பெறின் (54) என்பது போன்ற இடங்களைக் காண்க.

சில உண்மைகளை உணர்ந்து பார்த்தல் சிலருக்கு இயலாது. அந்த அருமை நோக்கி 'வாள் அது உணர்வார்ப் பெறின்' (334) என்றது போல இங்கும் உணர்வார் பெறின் என்றார்.

**258 செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் ...**

துறவறப் பண்பாடு நிறைந்தவர்களைக் 'காட்சியார்' என்று குறிப்பிட்டார். ஊன் உண்ணுபவர்கள் அந்த நிலை எய்த மாட்டார்கள். 'தலைப்பிரிந்த' என்பது இருமுறை கூறப்பட்டது. உயிர் போன உடல் என்றதால் 'பிணம்' என்பது குறிக்கப்பட்டது. 'உண்ணார்' என்று குறிப்பிட்டதன் மூலம் அருளாளர் பெருமையை எடுத்துக் காட்டினார்.

பிணமே என ஊனின் மெய்ம்மையைத் தாமே உணர்தலால் உண்ணார் என்றார்.

**259 அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ...**

நெய் முதவியன ஊற்றி வேட்டல் (யாகம்) செய்யும் பழக்கம் குறிப்பால் மறுக்கப் பட்டது. அவ்வாறு செய்பவர்கள் ஊன் உண்ணுதலும் உண்டு என்பதும் உய்த்துணர வைக்கப்பட்டது. தவறு அல்லது குற்றம் என்று கண்ட கருத்துகளை உய்த்துணர வைத்து மறுப்பது ஆசிரியரின் முறையாகும்.

'வேள்வி' என்பது 'விருந்தோம்பல்' என்ற அதிகாரத்தில் விளக்கப்பட்டது. 'வேள்வி' செய்கின்றோம் என்பவர்கள் 'யாது செய்கின்றார்கள்' என்று கூறிக் கண்டித்தார். 'ஆயிரம் வேட்டல்' — சிந்திக்கத் தக்கது. தவறானவற்றை எடுத்துக் காட்டினார்.

'ஆயிரம் வேட்டலின்' என்று குறிப்பிட்டதால் அவ்வாறு செய்யப்படும் முறை இழிவெனக் கருதப்பட்டது, 'வேள்வி' என்பது யாது என்பதை 'வேள்வி தலைப்படாதார்'(88) என்பன போன்ற குறட்பாக்களில் காணலாம். 'ஒப்பர் நிலத்து' (413) என்று கூறியதால் 'அவி சொரிதல்' என்கின்ற தன்மையின் குறைபாடு உணர்த்தப்பட்டது.

**260 கொல்லான் புலாலை மறுத்தானை ...**

'கொல்லாமை' என்ற அதிகாரத்தை நினைவு கூர்க; மக்களின் பழக்கத்தினின்று நோன்பு நோற்கின்ற அருளாளன் தன்மையைக் குறிக்க வேண்டி மறுத்தானை என்று கூறினார். 'எவ்வுயிர்க்கும் செந்தண்மை' (30) என்ற குறட்பாவின் கருத்தை விளக்கும் வகையில் 'எல்லா உயிரும் தொழும்' என்று இப்பாவில் குறிப்பிட்டார். கொல்லான் புலாலை மறுத்தானை என்பது அருளாளர்களாகிய முனிவர்களைக் குறித்தது. அதனால் தொழும் என்றார். ஓருயிரையும் கொல்லாதவன் அருளாளன்.

கொலையிலிருந்து தப்பிய உயிர்கள் அனைத்தும் வணங்கும் என்பது இயல்பாகக் கூறப்பட்டது, 'மக்கட் பிறவியில்' பிறந்தார்தாம் கைகூப்பித் தொழுவார்கள் என்பது உண்மையென்றாலும், சிறப்பினைக் கூறுவான் வேண்டி 'எல்லா உயிரும் கைகூப்பித் தொழும்' என்றார்.

## 27 தவம்

### 261 உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் ..

தவஞ்செய்வோரின் அரிய பண்பு உணர்த்தப்பட்டது. தவமென்பது 'நோன்பு நோற்றல்', 'நோன்றல்' என்று கூறினார். உலகியலில் வாழ்பவர்களால் பொதுப்பட பின்பற்ற முடியாது என்பது உணர்த்தப்பட்டது. ஆதலால்தான் 'முயல்வாருள் எல்லாம்' (47) என்றார். 'நோற்பாரின்' (48) என்றும் கூறினார். 'அருளுடைமை' அதிகாரம் முதற்கொண்டு 'கொல்லாமை' அதிகாரம் வரை துறவறத்தினை மேற்கொண்டவர்கள் நோற்க வேண்டிய நோன்பினை (விரதத்தினை)ச் சிறப்பாகக் கூறினார்.

நோன்பு நோற்காமல் உலகியலில் வாழ்பவர்களுக்கு இவை பொதுவானவை. நோன்பு நோற்பவர்கள் வாழ்நாள் முழுவதும் அங்ஙனமே வாழுகின்ற அருளாளர்கள். உலகியலில் வாழ்பவர்கள் வாழ்நாள் முழுவதும் அத்தகைய நோன்பினை மேற்கொள்ள இயலாதவர்கள் என்பதும் அத்தகைய தன்மைகளை வாழ்க்கையில் இயன்றவரை பின்பற்றுபவர்களாவார்கள் என்பதும் உணர்த்தப்பட்டன. 'நோன்பு நோற்றல்' (விரதம்) என்ற பகுதிகளில் கூறப்பட்டவை துறவறத்தினை மேற்கொண்டவர்களுக்கு எக்காலத்திலும் வற்புறுத்தப்பட்டவை. அவர்கள் தனிப்பட்ட வாழ்க்கையினை மேற்கொண்டவர்களாவார்கள்.

இக் குறட்பாவில் தவத்தோரின் இலக்கணம் தெளிவுபடுத்தப்பட்டது. தனக்கு வந்த துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதல் இயல்பாகவே அனைவராலும் தாங்கிக் கொள்ள முடியாதாகையால், அவ்வாறு பொறுத்துக் கொள்ளும் தவத் தன்மையினை நோன்றல் என்றார். செய்யாமை என்றதால் உலகியலில் வாழ்பவர்களுக்கு முடியாமையாகும் என்பதும் உய்த்துணர வைக்கப்பட்டது. மற்றவை எல்லாம் இதனுள்ளே அடங்குதலின் அற்றே என்றார்.

### 262 தவமும் தவம்உடையார்க்கு ஆகும் ...

மக்கட் பிறவிகளிலேயே தவத்திற்கென்றே சில பிறவிகள்தாம் உண்டு. தொடர்ந்து வருகின்ற பிறவிகளின் தன்மை இங்கு குறிக்கப்பட்டது. அக்கருத்தினையே தவமுடையார் என்று குறித்தார். 'அஃது இலார்' என்பது சிந்திக்கத் தக்கது. எல்லாருமே தவத்தினை மேற்கொள்ள முடியாது என்ற உண்மை தெரிவிக்கப்பட்டது. அப்படிச் செய்தல் வீணான செயலாகும்.

### 263 துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி ...

தவமல்லாத பிற வாழ்க்கையினை மேற்கொண்டவர்களை 'மற்றையவர்கள்' என்றார்! துறவிகளுக்குப் பிற வாழ்க்கையினர் உதவுதல் வேண்டும்.

இல்லறத்தார் செய்ய வேண்டியது தானம்; துறவறத்தார் செய்ய வேண்டியது தவம்; தானத்தை மேன்மையாகக் கருதி இதனை மறந்தார்களோ!

**264 ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ...**

தவம் செய்பவர்கள் பெறுகின்ற ஆற்றல் இதில் உரைக்கப்பட்டது. 'எண்ணின்' (நினைத்தால்) என்று கூறப்பட்டதால், அவ்வாறு நினைக்க மாட்டார்கள் என்பதும் குறிப்பாயிற்று. தவத்தின் பேராற்றல் மிகப் பெரிது என்றார்.

**265 வேண்டிய வேண்டியாங்கு எய்தலான் ...**

'முயல்வாருள் எல்லாம்' (47) என்ற கருத்து, இக்குறட்பாவில் முயலப்படும் என்ற சொல்லால் விளக்கப்பட்டது. 'வேண்டின் உண்டாக' (342) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன. தவத்தின் பயனை இங்கே கூறினார்.

இல்லறம் என்பது இயல்பான வாழ்க்கை என்பதைக் குறிக்க, தவ வாழ்க்கையினை முயலப்படும் என்றார்.

**266 தவம்செய்வார் தம்கருமம் செய்வார்மற்று ...**

தவம் என்பது ஆசையற்ற வாழ்க்கையென்றும், மற்றவை ஆசை கொண்ட வாழ்க்கை யென்றும் குறிக்கப்பட்டன. பேரின்பத்தைக் கருதாது சிறிய இன்பங்கருதி வாழ்பவர்களை 'அவம் செய்வார்' என்று கூறி வைத்தார்.

இதனால் தவம் செய்பவர்கள் ஆசை அனைத்தையும் விட்டவர்கள் என்பதாயிற்று.

**267 சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் ...**

தவம் செய்பவர்களுக்குத் துன்பம் இயல்பாகவே வரும் என்றார். மிகுதியாகத் துன்பம் வரும் என்பதைக் குறித்துக் காட்டவே, 'சுடச்சுட' என்றார். 'உற்ற நோய் நோன்றல்' (261) என்ற பாவினைக் கருதுக. ஒளி விடுகின்ற பொன் உவமானமாகக் கூறப் பட்டது. பொன்னுக்கு ஒளி உண்டாவது போலத் தவம்செய்பவர்களுக்கு 'ஞானம்' உண்டாகும் என்பது உணர்த்தப்பட்டது.

பொன்னுக்கு ஒளி அதிகமாக, அதிகமாக அதனுடைய குற்றம் நீங்கிவிடுகிறது. அதுபோல தவஞ்செய்வோர்க்கு ஞானம் மிகுந்து கொண்டே போகும்போது 'பாவம்' நீங்கி விடுகின்றது. எல்லாப் பொருளையும் ஒளிபோல் விளக்குவதால் ஞானம் ஒளி எனப்பட்டது.

நோன்பு நோற்கின்ற தவத்தினர் துன்பங்களைத் தாங்கிக் கொள்ள வேண்டும். பிறகு அவர்கள் ஒளியுடையராய்த் திகழ்வார்கள்.

**268 தன்உயிர் தான்அறப் பெற்றானை ...**

தவத்தினைச் செய்பவர்கள் அதற்கு உரியதைப் பெறுகின்ற காரணத்தால் 'பெற்றானை' என்றார். தவம் செய்பவர்கள் தவ ஞானத்தால் ஆன்ம தரிசனம் பெறுகின் றார்கள். அதனால்தான் 'தன்னுயிர் தான் அறப்பெற்றானை' என்பதாகக் கூறினார். உயிர்வாழ்கின்ற அனைத்தும் வணங்குவதால் துறவி சிறப்பிக்கப்பட்டான். 'மன்னுயிர்'

என்பது அழிவில்லாத ஆன்மாக்களைக் குறித்தது என்றும் கொள்ளலாம். 'தொழும்' என்ற குறிப்பு, துறவிகளின் சிறப்பினைச் சுட்டிக் காட்டும்; 264, 265, 269 குறட்பாக்களை உய்த்துணர வைப்பதாகும். சபித்தல், அருளுதல் (அனுக்கிரகம்) செய்தல் முதலிய வல்லமைகளைப் பெற்றிருத்தலால் எல்லா உயிரும் தொழும் என்றார்.

"எல்லா உயிரும் தொழும்" (260) என்பது போல இங்கும் கூறினார்.

**269 கூற்றம் குதித்தலும் கைகூடும் ...**

உலக வழக்கில் பேசப்படுகின்ற 'இயமனை' கூற்றம் என்று குறிப்பிட்டார். இக்குறளில் உயிரையும் உடலையும் கூறுபடுத்திப் பிரிப்பதால் கூற்றம் என்ற பெயர் வந்தது. குதித்தல்—கூற்றத்தின் பிடிக்கு அகப்படாமல் தப்பித்துக் கொள்வர் என்பதாகும். 'குதித்தலும்' என்பதில் உள்ள உம்மை குதித்தல் இயலாது என்ற உண்மையினை வெளிப்படுத்திற்று. இதனால் மிகப் பெரிய ஆற்றல்களை நோன்பு நோற்றுத் தவம் செய்பவர்கள் பெறுவார்கள் என்றார். அந்தத் தவத்தின் ஆற்றலினைப் பெறுதல் அரிதான செயல் ஆகையால் தலைப்பட்டவர்க்கு, என்று கூறினார். நோற்றல் என்றதால் கடுந்தவம் உய்த்துணர வைக்கப்பட்டது.

கூற்றுவனை வெல்லுதல் யாராலும் இயலாது என்றாலும் தவத்தின் சிறப்பு நோக்கி இவ்வாறு கூறினார்.

**270 இலர்பலர் ஆகிய காரணம் ...**

இக்குறட்பாவில் செல்வம் என்பது ஞானத்தையும், வறுமை என்பது அஞ்ஞானத்தையும் குறிப்பாக உணர்த்தின. இந்த உலகிற்கு வேண்டப்படுவது பொருள் செல்வம். பேரின்பம் என்று கூறப்படுகின்ற வீட்டிற்கு வேண்டியது ஞானம். இந்த இரண்டும் தவத்தால் வரும் என்று கூறப்பட்டது. இக் குறட்பாவில் காணப்படுகின்ற இலர், சிலர், பலர் ஆகிய சொற்கள் சிந்தனைக்குரியன. 'பலர்' என்ற சொல் இருமுறை கூறப்பட்டது. தவம் செய்யாதவர்களைத் தவம் செய்பவர்களுடன் ஒப்பிட்டுக் காட்டி, தவம் செய்யாதவர்கள் இம்மை இன்பமும் பெறமாட்டார்கள் என்று குறிப்பால் காட்டியுள்ளார்.

இதனால் செல்வப் பெருக்கத்திற்கும் வறுமைக்கும் காரணம் கூறப்பட்டது.

## 28 கூடா ஒழுக்கம்

**271 வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் ...**

தீய எண்ணங்கொண்டு — காம இச்சையினை மனத்தில் வைத்துக் கொண்டு — அந்த எண்ணம் இல்லாதவனைப் போலப் பிறரிடம் நடந்து கொள்ளுவதால் வஞ்ச மனத்தான் என்றார். மேலும் ஒழுக்கம் உடைமை என்ற அதிகாரத்தையும் நினைவு படுத்திக் கொள்க. உள்ளத்திலே கடுகளவும் உண்மை இல்லாமல் பொய்யாகவே ஒழுகுவதைப் 'படிற்று ஒழுக்கம்' என்றார். மண், நீர், தீ, காற்று, வானம் என்ற ஐந்தும் பஞ்ச பூதங்கள் ஆகும். இந்த உடல்

பஞ்ச பூதங்களின் சேர்க்கை. ஆகையால் அந்த பூதங்கள் அறியாதன ஏதுமில்லை என்பது உணர்த்தப்பட்டது. 'நகும்' என்பதால் இழிவாகக் கருதப்படும் என்பதாயிற்று.

மனம் நல்லபடியாக நடப்பதனை 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரம் கூறுகின்றது. ஆகவே செய்த குற்றம் மறையாது என்பதாம்! 'மனம், அகம்' என்பவற்றைச் சிந்திக்கவும்.

**272 வான்உயர் தோற்றம் எவன்செய்யும் ...**

பார்ப்பதற்கு, அவன் அணிந்திருக்கும் தவவேடம் வியப்பினையும் திகைப்பினையும் உண்டாக்குவதால் அத்தோற்றத்தை வான் உயர் தோற்றம் என்றார். இதனால் **குற்றம் கடிதல்** என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. 'தன் நெஞ்சறிவது' 'பொய்யற்க' (293) என்ற குறட்பாவில் குறிப்பிட்டது போல இங்கும் 'தன் நெஞ்சம்தான் அறி' என்று கூறினார். ஒருவன் தான் அறிந்து செய்த குற்றத்திற்குக் கழுவாய் இல்லை. அது அவனுக்குக் குற்றமுள்ள நெஞ்சமாக ஆகிவிட்டது. ஆசிரியர் வினாக்கள் மூலமும் கருத்துக்களை அமைத்துக் காட்டுகிறார் என்பதற்கு இக் குறட்பாவும் ஓர் எடுத்துக் காட்டு. 'அறிவென்னாம்' (175), 'ஆகுவதுண்டோ' (315) என்பவற்றைச் சிந்தித்தறிக.

வான் உயர் தோற்றம் என்றது பார்ப்பவர்கள் வெகுண்டு அஞ்சுகின்ற தோற்றம் என்பதாயிற்று.

**273 வலியில் நிலைமையான் வல்லுருவம் ...**

ஒருவன் மனம்போன வழியிலே போகின்றான் ஆதலால் அதனைச் சுட்ட 'மேய்தல்' என்பது கூறப்பட்டது. மனத்தை அடக்குகின்ற வலிமை இல்லாதவர்கள் தவவேடம் போட்டுக் கொண்டு சிறிய இச்சைகளை நிறைவேற்றிக் கொள்கிறார்கள் என்பது உணர்த்தப்பட்டது. 'பெற்றம்' என்ற சொல் ஆண், பெண் இரண்டிற்கும் கூறப்படுகின்ற சொல்லாகும். இந்த இடத்தில் பெண்ணாகிய இப் பசு, 'புலித்தோல் போர்த்திய பசு' என்ற பழமொழியினை உணர்த்துகிறது. கூடாத ஒழுக்கத்தினை மேற்கொண்டவன் சிந்திக்காமல் பெரும் தவறுகள் செய்கின்றான் என்பதனை அறிதல் வேண்டும்.

தவவேடம் தாங்கி நினைத்த இன்பத்தினைப் பெற முயலும் சூதர்கள் செய்யும் வஞ்சக வழிகள் இங்குக் கூறப்பட்டன.

**274 தவம்மறைந்து அல்லவை செய்தல் ...**

'மறைந்து' என்பது இருமுறை கூறப்பட்டது. அவனுடைய தவவேடம் 'புதல்' போன்றதாகும். இன்பம் கருதிய அற்பர்கள் தவசிகள் போல வேடம் போட்டுக் கொண்டு இன்ப வேட்டையாடுவர் என்பது உணர்த்தப்பட்டது. 'தவம்' என்பது தவவேடமாகும்-

தவம் மறைந்து — புதல் மறைந்து என்பன பன்முறையும் சிந்திக்கத்தக்கன.

**275 பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் ...**

வஞ்சகர்கள் தப்பித்துக் கொள்ள முடியாது என்பதாகும். 'பலவும்தரும்' என்பது சிந்திக்கத்தக்கதாகும். தவவேடம் தாங்கி இருப்பதொன்றினாலேயே ஆசைகளை விட்டவர்கள்

என்று நினைத்தல் தவறு என்பது உணர்த்தப்பட்டது. என்பார் என்பது அந்த வஞ்சகர்களைக் காட்டிற்று.

'எற்று என்று இரங்குவ செய்யற்க' (655) என்பதனையும் கருதுக.

**276 நெஞ்சின் துறவார் துறந்தார்போல் ...**

நெஞ்சில் ஆசைகளைத் துறவாமல் துறந்தவர்போல் இருப்பவர்களைக் 'கொடிய வஞ்சகர்கள்' என்று இக்குறள் குறிக்கின்றது. தானம் செய்பவர்களை வஞ்சித்து வாழ்பவர்களை வன்கணார் என்று குறிக்கின்றார் வள்ளுவர். நெஞ்சினால் — மனத்தால் துறத்தல்தான் உண்மைத் துறவு என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

அகத் துறவுதான் துறவு எனப்படும். தமக்கு ஆவன செய்தார்க்கு ஆகாதன நினைத்தலின், அவரைப் போன்ற 'வன்கணார் இல்' என்று கூறினார்.

**277 புறங்குன்றி கண்டனைய ரேனும் ...**

உலகில் அத்தகைய வஞ்சகர்கள் உண்டு என்பது கூறப்பட்டது. 'குன்றி' இருமுறை கூறப்பட்டது. 'உடைத்து' என்றதால் உலகியல் காட்டப்பட்டது. வெளிப்பார்வைக்குத் தூய்மையாக இருப்பதனாலேயே இவர்களை நல்லவர்கள் என்று முடிவு செய்துவிடுதல் கூடாது. மிகப் பலர் புறத்தில் தூய்மைத் தோற்றத்துடன் — மனத்தில் அழுக்கு வைத்திருப்பவராக உள்ளனர் என்கிறார் வள்ளுவர்.

செம்மை, கருமை நிறங்கள் புறக்கோலத்தையும், தீய மனத்தையும் உணர்த்தின.

**278 மனத்தது மாசாக மாண்டார் ...**

இதனால் 'மனத்துக்கண் மாசிலன்' (34) என்ற குறட்பா நினைவு படுத்தப்படுகிறது. 'பலர்' என்பது சிந்தனைக்குரியது. நீராடிக் காட்சியளித்து வஞ்சிப்பவர்கள் பலருண்டு என்பது குறிக்கப்பட்டது. நீர் — ஆடிய தன்மையினால் வஞ்சக மனத்தினை தம்முள் மறைக்கின்றார் களென்பது கூறப்பட்டது.

இக்குறளில் நீராடிக் காட்டுபவர்களையும் குறித்தார். 'அச்சமே கீழ்களது ஆசாரம்' (1075) என்பதனையும் ஈங்குச் சிந்திக்கலாம்.

**279 கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங்கு ...**

இக்குறளால் 'பெருமைக்கும் ஏனை' (505) என்பது போன்ற குறட்பாக்கள் நினைத்தற் குரியனவாகும். எதையும் செயலைக் கொண்டே அறிதல் வேண்டும். தோற்றத்தினைக் கொண்டே அறிதல் சரியானதாகாது. கொலை செய்பவர்களும் தோற்றத்தில் நேர்மையானவர் களைப் போல் காட்சியளிப்பார்கள்.

'கருமமே கட்டளைக் கல்' (505), 'வில் வணக்கம்' (827) என்பவை சிந்தனைக்குரியன.

**280 மழித்தலும் நீட்டலும் வேண்டா ...**

தவத்தோர்களுக்குப் புறக்கோலம் தேவையில்லை என்பது உணர்த்தப்பட்டது. தலைமயிரை நீக்கிவிடுதலும் (மழித்தலும்) சடையாகக் கொள்ளுதலும் தவத்திற்கென்று வேண்டியதில்லை. தவத்திற்கும் அச்செயல்களுக்கும் தொடர்பு இல்லை என்பதாகும். விருப்பத்தினாலோ மற்று வேறு காரணங்களினாலோ மழித்தலும் நீட்டலும் செய்து கொள்ளுதல் மறுக்கப்படவில்லை. அத்தகைய செயல்களைத் தவம் செய்வதற்காக என்று கொள்ளுதல் வேண்டுவதில்லை என்பது உணர்த்தப்பட்டது.

தவத்திற்கு என்று கூறி சடை வளர்த்தல், மொட்டையடித்தல் வேண்டாம். தவத்திற்கு மனம் தூய்மை — ஒழுக்கமே தேவை. இப்படிப்பட்டவை தவத்திற்குத் தேவையில்லை' வேறு காரணங்களுக்காக அவ்வாறு செய்து கொள்ளுதல் விலக்கப்படவில்லை.

## 29 கள்ளாமை

**281 எள்ளாமை வேண்டுவான் என்பான் ...**

'மனத் தூய்மை வேண்டும்' என்பதனை அடிப்படையாகக் கொண்டே அறம் வற்புறுத்தப்படுகின்றது. மனத்தினை உறுதியாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பதனைக் குறிக்க வேண்டி, 'காக்க தன் நெஞ்சு' என்று கூறினார். இக்குறட்பாவில் 'எனைத்தொன்றும்' என்பது சிந்திக்கத்தக்கதாகும். தவம் செய்பவனானபடியால் வேண்டுவான் என்பது உய்த்துணர வைக்கப்பட்டதாகும். தவம் செய்பவன் பேரின்ப வீட்டினை எள்ளாது வேண்டுபவனாகின்றான் என்று பொருளறிதல் வேண்டும். 'கள்ளாமை காக்க' என்று கொண்டு பிறர் பொருளை வஞ்சித்துக் களவு செய்ய நினைக்காதே என்பது உணர்த்தப்பட்டது.

'எனைத் தொன்றும்' என்பது சிந்தனைக்குரியது. ஞானத்திற்குக் காரணமான மெய்ந் நூற் பொருளே ஆனாலும் ஆசிரியனை வழிபட்டன்றி, அவனை வஞ்சித்துக் கொள்ளின் அதுவும் களவாகும்.

**282 உள்ளத்தால் உள்ளலும் தீதே ...**

எண்ணங்கள் தோன்றுவது உள்ளத்தில் — மனத்தில் என்பது கூறப்பட்டது. உள்ளம், மனம், நெஞ்சம் என்பவை ஒரே பொருளை உணர்த்தும். உள்ளம் என்பது உடலுள் இருப்பதால் அந்தப் பெயர் பெற்றது. எண்ணுவதற்கு — நினைப்பதற்கு — உள்ளுவதற்கு அடிப்படைக் கருவியாக இருப்பதால் உள்ளம் என்றாயிற்று. பிறர் பொருளைக் களவு செய்வதற்கு மனத்தால் நினைப்பதே குற்றம் என்பதை அறிக.

தவமேற் கொண்டார் உள்ளம் பிறர் உள்ளம் போலாது சிறப்புடையதால் 'உள்ளத்தால் உள்ளலும்' என்றார். உள்ளத்தின் பெருமை பல குறட்பாக்களில் கூறப்படுகிறது. 'உள்ளியது எய்தல் எளிது' (540), 'உள்ளியது எல்லாம் உடனெய்தும்' (309), 'உள்ளம் உடைமை உடைமை' (592) என்பவற்றைக் காண்க.

**283 களவினால் ஆகிய ஆக்கம் ...**

இக்குறட்பாவில் 'ஆவது போலக் கெடும்' என்ற தொடர் பன்முறையும் வருவதை அறிக! கள்ளத்தால் வரும் பொருள் அளவுக்கு மீறி வருவது போலத் தோன்றி அழிந்துவிடும். அக்களவுப் பொருள் அவனை விட்டுப் போகும்போது பாவத்தையும் பழியையும் உண்டாக்கி விட்டுப் போகும். பொருள் ஆக்கப்படுவதால் "ஆக்கம்" எனப்பட்டது.

'உளபோல இல்லாகித் தோன்றாக் கெடும்' (479) என்ற இடத்திலும் இது போன்று வந்துள்ளது.

**284 களவின்கண் கன்றிய காதல் ...**

இக்குறட்பாவில் 'காதல்' என்பது மிகுந்த வேட்கையுடையவன் என்பதைக் காட்டிற்று. களவுத் தொழிலில் மிகப் பெரிய ஆசை கொண்டவனைக் குறிக்கக் கன்றிய காதல் என்றார். களவினால் வரும் துன்பம் எவ்வழியினாலும் போக்க முடியாது. ஆகையால் வீயா விழும் எனப்பட்டது. களவின்கண், விளைவின்கண் என்பன சிந்தனைக்குரியவை. 'விழுமம்' என்ற சொல் கெடுதி என்பதனை உணர்த்திற்று. தப்பிக்க முடியாமல் கெடுதி உண்டாகியே தீரும் என்பதால் வீயாவிழுமம் தரும் என்றார்.

'இழத் தொறூஉம் காதலிக்கும் சூது' (940) என்றார். இங்கே 'கன்றிய காதல்' என்றார். இவை சிந்திக்கத்தக்கன.

**285 அருள்கருதி அன்புடையர் ஆதல் ...**

'பார்ப்பார்' என்பது பார்த்திருப்பவர்கள் என்பதை உணர்த்திற்று. பார்ப்பான் (134) என்பதைச் சிந்தித்தறிதல் வேண்டும். அருள்வேறு, பொருள் வேறு என்பது காட்டப்பட்டது. பொச்சாவாமையும் அன்புடைமையும் எண்ணத்தக்கன. பொருள் செயல் வகை என்ற அதிகாரம் 'பொருள்' என்பதனால் காட்டப்பட்டது. துறவறத்தினை மேற்கொண்டவர்கள் மயக்கநி கருதி தவறு செய்தல் கூடாது என்பது குறிப்பு. 'பார்ப்பார்' என்ற சொல் 'பார்ப்பான்' (134) என்ற விளக்கத்தினைத் தெளிவுபடுத்திற்று.

**286 அளவின்கண் நின்றுஒழுகல் ஆற்றார் ...**

'சுவை ஒளி' (27) என்ற குறட்பாவின் கருத்துக்கள் சிந்திக்கத்தக்கன. தவ நெறியில் நிற்காதவர்கள் குறிக்கப்பட்டார்கள். 'மெய்யுணர்தல்' என்ற அதிகாரம் சிந்திக்கத்தக்கது. 'தத்துவங்கள்' முதலியனவற்றைத் தவத்தினால் அறிதல் என்பதனை 'அளவின்கண்' என்று கூறினார்.

தவமேற்கொண்டு ஞானம் பெற நிற்கும் முனிவர்களை, உயிர் முதலானவற்றை ஆராய்ந்து வரையறுக்கும் ஞானிகள் என்றார்.

**287 களவுஎன்னும் கார்அறிவு ஆண்மை ...**

நல்லறிவு, புல்லறிவு, கார் அறிவு என்பனவற்றுள் இக்குறட்பா காரறிவினைக் கூறுகிறது. அறிவுடைமை, புல்லறிவாண்மை என்ற அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. முன் குறட்பாவில் குறித்ததைப் போலவே 'அளவு' என்றார். களவு, அளவு என்பன சுட்டிக் காட்டப்பட்டன.

'கார் அறிவு' என்பது மயக்க அறிவாகும். களவு செய்வோர், கார் அறிவு உடையவராவர். களவும் துறவும், இருளும் ஒளியும் போலத் தம்முள் மாறுபட்டவை.

**288 அளவறிந்தார் நெஞ்சத்து அறம்போல ...**

இக்குறட்பாவில் இருமுறை 'அறிந்தார்' என்ற சொல்லும், 'நெஞ்சம்' என்ற சொல்லும் வந்துள்ளன. உயிர் முதலானவற்றை அளந்து அறிகின்ற ஆற்றல் பெற்றவர்களாதலால் துறவிகளை 'அளவறிந்தார்' என்றார். 'வகை தெரிவான்' (27) என்பதைச் சிந்திக்கவும். தவத்தினை மேற்கொண்டவர்களிடத்தில் அறம் உறுதியாக நிலைத்து நிற்கும் என்ற உண்மை விளக்கப்பட்டது. வஞ்சனை என்ற கருத்தினைக் குறிப்பிட்டுக் காட்டவே 'கரவு' என்ற சொல்லை அமைத்தார்.

அளவறிந்தார் நெஞ்சமும் களவறிந்தார் நெஞ்சமும் இங்குக் காட்டப்பட்டன. அங்கு 'அறம்' நிற்கும். இங்குக் 'கரவு' நிற்கும்.

**289 அளவுஅல்ல செய்துஆங்கே வீவர் ...**

நல்ல எண்ணங்களை அறியாமல் களவு ஒன்றினையே அறிந்திருப்பவர்களாதலால் 'மற்றைய தேற்றாதவர்' என்றார். முன் குறட்பாவில் சிந்தித்தது போல இங்கும் 'அளவு அல்ல', 'களவு அல்ல' என்பவற்றைக் கருதுக. உடனடியாகவே தீமை உண்டாகும் என்பதை குறித்துக் காட்ட 'ஆங்கே' என்றார். அழிவர் என்ற கருத்தினை 'வீவர்' என்ற சொல் குறித்தது. அறம் அல்லாத தீய எண்ணங்கள் எல்லாவற்றையும் சுட்டிக்காட்ட 'அளவு அல்ல' என்றார்.

நினைத்தலும் செய்தலாகலின் 'செய்து' என்றார். 'மற்றைய' என்றதனால் துறவிகள் கனி, கிழங்கு முதலியன உணவாகக் கொள்ள வேண்டும் என்பதும், இல்லறத்தார் 'தானம்' செய்ய வேண்டும் என்பதும் குறிக்கப்பட்டது.

**290 கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை ...**

'தள்ளும்', 'தள்ளாது' என்ற இரு சொற்களும் கருத்தினைத் தெளிவுபடுத்துவன. 'புத்தேள் உலகு' என்பதன் விளக்கத்தினைப் பிறிதோர் இடத்தில் காண்க. உயிர் நிற்கின்ற உடம்பினைச் சுட்டிக் காட்டவே 'உயிர்நிலை' என்று கூறினார். இதனால், அறநெறியில் நின்ற கள்ளார்க்கு மறுமை இன்பம் வாய்க்கும் என்பதாகும். உலகியல் வழக்கில் கூறப்படுகின்ற புத்தேள் உலகத்தினைச் சுட்டிக் காட்டி — மனத்தூய்மை ஒன்றே அனைத்திற்கும் அடிப்படைக் காரணம் என்ற உண்மையினை உய்த்துணர வைத்தார்.

உலக வழக்கில், சிறப்பித்துப் பேசப்படுகிற **புத்தேள் உலகம்** இங்கு ஒழுக்கம் உள்ளவர்களையே தேடும். 'மற்றது, தள்ளினும் தள்ளாமை நீர்த்து' (596) என்கின்ற ஆழ்ந்த கருத்தினையும் அறிக.

## 30 வாய்மை

**291 வாய்மை எனப்படுவது யாதெனின் ...**

வாயின் தன்மையினை வாய்மையென்று குறிப்பிட்டார். இக் குறளால் உண்மையென்று கருதிச் சொல்லப்பட்ட ஒன்று தீமையினை உண்டாக்குமேயானால் அது வாய்மை என்று கருதப்பட மாட்டாது என்பதாகும். பொய்யே என்று சொல்லப்படுகின்ற ஒன்று மற்றவர்களுக்கு எந்தவிதமான தீமையையும் உண்டாக்காமல் நன்மையையே உண்டாக்கினால், அது 'வாய்மை' என்று சொல்லப்பட வேண்டும். 'யாதெனின்' என்று அமைத்துக் கருத்துக் களைக் கூறும் முறை பிற குறட்பாக்களிலும் காணப்படும்.

ஊர் எனப்படுவது உறையூர் என்றாற்போல, எனப்படுவது என்ற சொல் குறிக்கும் என்றார். இதனால் நிகழ்ந்தது கூறல் என்பது நீக்கப்பட்டது. சொலல் என்பதால் நாம் சொல்லும் சொல் தீமை விளைவிக்குமா—விளைவிக்காதா — என்பதனையே கருதுதல் வேண்டும்.

**292 பொய்ம்மையும் வாய்மை இடத்த ...**

இக் குறட்பாவில் காணப்படும் புரைதீர்ந்த நன்மை என்பது சிந்திக்கத் தக்கது. குற்றம் தீர்ந்த நன்மையினைத்தான் அறம் என்று கூறுவர். 'இடத்த' என்ற சொல் ஆழ்ந்த சிந்தனைக் குரியது. வாய்மை என்று கூறப்படுகின்ற இடத்தில் வைத்துக் கருதப்பட வேண்டும் என்பது குறிப்பாகும். பொய்மையே வாய்மையாகிவிடாது என்றாலும், நன்மை தருவதால் அந்த இடத்தில் வைத்துக் கருதப்பட வேண்டும் என்பதாம். பொய்ம்மை இயல்பாகவே தீமை எனக் கருதப்பட்டாலும் அது நன்மை தருகின்ற பொழுது வாய்மை என்ற பெருமைக்கு உரியதாயிற்று. 'எனின்' என்றசொல் சிந்திக்கத் தக்கது.

பொய் பொய்தான்; வாய்மை ஆகிவிடாது; குற்றமற்ற நன்மையினை அந்த நேரத்தில் செய்வதால், வாய்மை இடத்த என்றார்; இது சிந்திக்க வேண்டியது.

**293 தன்நெஞ்சு அறிவது பொய்யற்க ...**

இக்குறட்பாவின் கருத்து, தன்னுடைய மனமே தனக்குப் பகையாயிருந்து தீமையினை உண்டாக்கும் என்பதாம். உலக வழக்கில் 'மனச்சாட்சி' என்றும் கூறுவதுண்டு. 'நெஞ்சம்' என்ற சொல் இக்குறட்பாவில் இருமுறை சொல்லப்பட்டுள்ளது. பொய் என்று தெரியாமல் ஒருவன் பொய் சொல்லுதல் 'சுடும்' என்பதனால் அறிந்து, பொய் சொல்லாதே என்று குறித்தார். பொய் சொன்னவன் எக்காலத்திலும் தப்பிக்க முடியாது என்ற உண்மை உணர்த்தப்பட்டது. நெருப்பு மிக மிகக் கொடியது. ஆதலால் அதைச் 'சுடும்' என்ற சொல் சுட்டியது. சுட்டவடு (129), 'அகத்தே நகும்' (271) என்பவற்றை ஒப்பிட்டுப் பார்த்தல் நலம்.

**294 உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் ...**

'வாய்மை' என்பதனுடைய அருமையினைத் தெளிவுபடுத்த இக்குறட்பாவில் **'உலகத்தார்'** என்று சொன்னார். உலகத்தார் என்பது உலகத்திலுள்ள உயர்ந்த மக்களைச் சுட்டியது. எல்லா அறத்திற்கும் அடிப்படை உள்ளத் தூய்மையேயாகும். பொய்யேபேசாமல் இவ்வுலகில் வாழ்தல் என்பது எவ்வளவு அரிய செயல் என்ற உண்மை புலப்பட்டது. இத்தகைய வாழ்க்கை வாழ்தல் இயல்பாகத் தவத்தினை மேற்கொண்டவர்களாலேயே முடியும் என்ற முதன்மையான சிறப்பு சொல்லப்பட்டது. மனம், மொழி, மெய் என்பவற்றுள் மனமே அடிப்படையாதலால் **உள்ளத்தால்** என்றார். அருமை நோக்கி 'உலகத்தார் உள்ளத்துள்' என்றார்.

**295 மனத்தொடு வாய்மை மொழியின் ...**

தவமும் தானமும் முறையே துறவிகளுக்கும் இல்லறத்தார்க்கும் கூறப்பட்டன என்று கொள்ளுதல் வேண்டும். 'தானம் தவம் இரண்டும்' (19) என்ற குறட்பாவினைக் கருதிப் பார்க்க. முன் பாவில் 'உள்ளத்தால் பொய்யாது' என்ற ஆசிரியர், இக்குறட்பாவில் 'மனத்தொடு வாய்மை' என்று கூறினார். உண்மை கூறுபவர்களின் உயர்ந்த பெருமையினைச் சொல்ல வேண்டியே இருவகைப்பட்ட நெறியாளர்களைச் சுட்டிக் காட்டினார். 'தவமும் தானமும்' சேர்த்துச் செய்வாரைவிட மேலானவன் என்று கூறினார். அவ்வாறு செய்வோர் அரிது என்பது உணர்த்தப்பட்டது!

**296 பொய்யாமை அன்ன புகழில்லை ...**

இக் குறட்பாவில் வரும் **புகழ்** என்பது 'அறன் வலியுறுத்தல்' அதிகாரத்தை நினைவு படுத்தும். இக் குறட்பாவில் பொய் பேசாது இருப்பது எவ்வளவு அருமையான செயல் என்ற உண்மை வற்புறுத்தப்பட்டது. இக்குறளில் வரும் 'எல்லா அறமும்' என்ற தொடர் சிந்திக்கத் தக்கது. உடல் வருத்தம் தேவையில்லை என்பதை பொய்யாமை என்ற சொல் குறித்தது. இல்லறத்தார் முயற்சித்துப் பொருள் தேட வேண்டும்; தவத்தோர் உண்ணா நோன்பு நோற்று தவம் செய்ய வேண்டும். இவை எதுவுமே இல்லாமல் எல்லா அறமும் வருகின்ற வழி கூறப்பட்டது. வருத்தம் இல்லாமலேயே பயனைத் தரும் என்பதற்காகவே, 'எய்யாமை எல்லா அறமும் தரும்' என்றார்.

**297 பொய்யாமை பொய்யாமை ஆற்றின் ...**

இக்குறட்பாவில் காணப்படும் அடுக்கு மொழிகள் சிந்தனைக்குரியன. முந்தைய குறட்பாவில் 'எல்லா அறமும்' தரும் என்று கூறினார். அதனை வலியுறுத்தி இந்தக் குறட்பாவில், பொய்யாமை என்ற நோன்பினை நோற்பவர்கள் பிற அறங்கள் எதுவுமே செய்ய வேண்டா என்றார். ஓர் அறத்தில் ஒருவன் நிலைத்து நின்றுவிட்டால், ஏனைய பிற அறங்கள் அவன் இடத்தில் இயல்பாகவே இருந்துவிடும் என்ற பெரிய உண்மை இதில் உய்த்துணர வைக்கப்பட்டது.

மேலும் இடைவிடாமல் செய்ய வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. உயர்வான ஓர் அறமே உள்ளத்தில் நிலைத்து நிற்க ஏனைய அறங்கள் இயல்பாகவே இருந்துவிடும் ஆதலால் 'செய்யாமை நன்று' என்றார். மனத்தில் மாசின்றி இருத்தலே அனைத்திற்கும் 'தர்ல் கோள்' என்பதனை அறிக.

**298 புறந்தூய்மை நீரான் அமையும் ...**

இக்குறட்பாவில் இரண்டு முறை 'தூய்மை' என்ற சொல் காணப்படுகிறது. உடலுக்குள் இருக்கின்ற மனத்தினை 'அகம்' என்றார். நாள்தோறும் உடம்பினை நீரால் தூய்மைப்படுத்த வேண்டும் என்ற வெளிப்படையான உண்மை கூறப்பட்டது. உடம்பினை நீரால் தூய்மை செய்வது போல மனத்தினை வாய்மை என்பதால் தூய்மைப்படுத்த வேண்டும் என்று உணர்த்தினார். வாய்மை பேசாதவர்களின் மனத்தில் அழுக்கு நிறைய சேர்ந்துவிடும் என்று அறிதல் வேண்டும்.

'எச்சத்தால் காணப்படும்' (114), 'புக்மையால் காணப்படும்' (185), 'நிலையாமை காணப்படும் (349)' என்பன போன்ற முறைகளில் ஆசிரியர் கருத்துக்களை அமைத்துக் காட்டுவார். அது போன்றே இங்கும் வாய்மையாற் காணப்படும் என்று கூறினார்.

**299 எல்லா விளக்கும் விளக்கல்ல ...**

இருளைப் போக்கி ஒளியைத் தருவது விளக்கல்லவா? ஆகையால் இக் குறட்பாவில் விளக்கு பேசப்பட்டது. 'சான்றாண்மை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. பொய்யா விளக்கே விளக்கு என்று ஏன் கூறினார்? சந்திரன், சூரியன் போன்ற ஒளிவிடும் சக்திகளால் மனத்தில் இருக்கும் அறியாமையாகிய 'அஞ்ஞானம்' போக்க முடியவில்லை. ஆனால் அதனைப் போக்குவது பொய்யா விளக்கே ஆதலால் இந்த விளக்கின் பெருமை கூறப் பட்டது. விளக்கு என்பது 'நான்கு' முறை இக்குறட்பாவில் காணப்படுவதும் சிந்திக்க.

அறியாமை என்கின்ற இருளினைப் போக்குவதால் 'பொய்யா விளக்கு' என்றார். எக்காலத்தும் அணையாத விளக்கு ஆதலால் 'பொய்யா விளக்கு' என்றார் எனினும் அமையும். செல்வத்தைக் குறிப்பிடும்போது 'பொருளென்னும் பொய்யா விளக்கம்' (753) என்றார்.

**300 யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை ...**

யாம் அறிவதில்லை (61) யாம் கண்டதுஇல் (1071) என்று குறட்பாக்களில் அமைந்துள்ள முறையினைப்போல இக்குறட்பாவிலும் 'யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை' என்று தொடங்கினார். 'மெய்யா' என்று ஆசிரியர் கூறுவது பற்பல நூல்களைக் குறித்தல் என்று கொள்ளுதல் வேண்டும். ஆசிரியர் 'கண்டவற்றுள்' என்று கூறியதால், எண்ணிறந்த நூல்களில் நிறைந்த ஆழ்ந்த அறிவும் அனுபவமும் புலமையும் பெற்றவர் என்று அறிதல் வேண்டும். உறுதியைக் காட்டுவதற்காகவே இக்குறட்பாவில் இல்லை என்ற சொல்லை அமைத்தார். பல நூல்களையும் பிறவற்றையும் கண்டறிந்த தன்மையினை 'மெய்யாக் கண்டவற்றுள்' என்றார் ஆசிரியர்,

## 31 வெகுளாமை

### 301 செல்லிடத்துக் காப்பான் சினம்காப்பான் ...

உள்ளது என் — இல்லது என் (53) — என்று கூறப்படுவது போன்று இக்குறட்பாவில் 'காக்கில் என், காவாக்கால் என்' என்று அமைத்தார். கோபம் செல்லுகின்ற இடம், செல்லாத இடம் என்று இரண்டு இடங்களைக் காட்டினார். ஆதலால்தான், 'செல்லிடம், அல்லிடம்' என்ற சொற்கள் அமைக்கப்பட்டன. காப்பான் என்ற சொல் இக்குறட்பாவில் இருமுறை சொல்லப்பட்டுள்ளது. மெலியவர்களிடம் கோபத்தினைச் செலுத்தாதே என்பது குறிப்பு. வெகுளி மெலியார் மேல்செல்லும்; வலியார் மேல் செல்லாது.

### 302 செல்லா இடத்துச் சினந்தீது ...

இக்குறட்பாவிலும் செல்லிடம், செல்லாத இடம் என்பன கூறப்பட்டன. கோபத்தினைத் தீது என்று சொல்லி ஆசிரியர் அடுத்து அதனைவிடத் தீமை பயப்பது வேறு எதுவுமே இல்லை என்று கூறி இருப்பது சிந்தனைக்குரியது. தன்னைவிட வலியவர்களாக இருந்தாலும், மெலியவர்களாக இருந்தாலும் கோபம் இந்த இரண்டு இடத்திற்கும் செல்லக் கூடாது என்பதாம். எங்கே சென்றாலும் கோபம் என்பது அதனை உடையவர்க்குத் துன்பம் தந்தே தீரும் என்பது தெளிவுபடுத்தப்பட்டது. செல்லாத இடத்தில் இவன் கோபம் சென்றால் இவனே துன்புறுவான் என்பதாம்.

### 303 மறத்தல் வெகுளியை யார்மாட்டும் ...

முந்தைய குறட்பாவில் சொன்ன கருத்தினை மேலும் விளக்குவதற்காகவே இக் குறட்பாவில் 'யார்மாட்டும்' என்று கூறினார். தீமை அனைத்தையும் இக்கோபம் ஒன்றே கொடுத்துவிடும். 'யார்மாட்டும்' என்றது வலியார், ஒப்பார், மெலியார் என்ற மூன்று வகைப்பட்ட மக்களையும் உணர்த்திற்று. 'நன்றல்லது அன்றே மறப்பது நன்று' (108) என்பதை நினைவுபடுத்த இக்குறட்பா 'மறத்தல்' என்ற சொல்லினைக் கொண்டே தொடங்கிற்று.

'நன்றி மறப்பது நன்றன்று', 'மறவற்க மாசற்றார் கேண்மை' என்பவற்றை மறக்கவே கூடாது என்று கூறும் ஆசிரியர் இங்கே 'மறந்துவிடுக' என்றார்.

### 304 நகையும் உவகையும் கொல்லும் ...

இப்பாவில் கோபம் என்பது பெரிய பகையாகக் கூறப்பட்டது. முகமலர்ச்சி, மனமகிழ்ச்சி என்ற இரண்டினையும் நகை, உவகை என்ற சொற்கள் குறித்துக் காட்டின. இந்த இரண்டு சிறந்த மனிதப் பண்பாடுகளைக் கோபம் என்பது கொல்லுகின்றபடியால், கோபத்தினைக் கொடிய பகை என்று குறிப்பிட்டார். இந்தக் கோபத்தைவிடக் கொடிய பகை வேறு இல்லை என்ற கருத்தினை ஆசிரியர் நமக்கு உணர்த்தவேண்டியே 'உளவோ பிற' என்று பாவினை முடித்துக் காட்டினார்.

இதில் 'உட்பகை' என்பது உணர்த்தப்பட்டது. சினம், தனக்குள்ளே இருந்து கெடுக்கும் கொடுமையினைக் குறிப்பிடவே 'கொல்லும்' என்றார். 'உட்பகை' என்றொரு தனி அதிகாரமும் உண்டு.

**305 தன்னைத்தான் காக்கின் சினங்காக்க ...**

நாகாக்க (127) என்பது போல இக்குறட்பாவும் அமைந்துள்ளது. காக்கின், காக்க, காவாக்கால் என்பன சிந்திக்கத்தக்கன. முந்தைய குறட்பா போன்று 'கொல்லும்' என்றார். அடுத்த குறட்பாவில் 'கொல்லி' என்றார். தன்னைக் கொல்லப் பிறர் வேண்டாம் என்பதாயிற்று!

**306 சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி ...**

உலகத்து நெருப்பு சுடுவது — தான் சேர்ந்த இடத்தையே. இந் நெருப்பு (சினம்) சேராத இடத்தையும் சுடும். தன்னையும் வீழ்த்தித் துணையாயினோரையும் அகற்றும் என்பதாம். சினம் என்பது 'சிற்றினஞ்சேராமை', 'பெரியாரைத் துணைக்கோடல்' முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்தும். சினத்தினைச் 'சேர்ந்தாரைக் கொல்லி' என்று குறிப்பிட்டார்.

**307 சினத்தைப் பொருள் என்று ...**

சினத்தையுடையவனுக்குக் கேடு வந்தே தீரும் என்பது உறுதிப்படுத்தப்பட்டது. சினத்தைப் பொருளென்று கொள்ளக் கூடாது. 'கைபிழையாதற்று' என்பது சிந்திக்கத்தக்கது. அறைந்தவனும் கொண்டவனும் சமமே.

கையினால் ஒரு பொருளை அடித்தற்கு முனைந்தால், குறி தப்பியோ அல்லது வேறு முன்றயிலோ தவறுதல் உண்டு. ஆனால் நிலத்தில் அறைதல் நடந்தே தீரும்; சினத்தின் கெடுதி வந்தே தீரும்.

**308 இணர்எரி தோய்வன்ன இன்னா ...**

'புணரின்' என்பதைச் சிந்திக்க. 'தோய்வு அன்ன' என்பது கொடுமையினை உணர்த்திற்று. 'இன்னா செய்யாமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'வெகுளாமை' என்பது அதிகாரப் பெயர்.

முனிவர்கட்கும் கோபம் வருதல் இயல்பு என்பது தோன்றப் 'புணரின்' என்றார். 'குணம் என்னும்' (29) பாடலும் சிந்திக்கத்தக்கது.

**309 உள்ளியது எல்லாம் உடன்எய்தும் ...**

இக்குறட்பாவில் 'கோபம்' எனப்படும் வெகுளி ஒருவர் இடத்தில் இல்லை என்றால் அவன் அடைகின்ற பெரும் பயன் நன்றாக விளக்கப்பட்டது. 'உள்ளியது எய்தல் எளிது' (540) என்பதையும் 'எண்ணிய எண்ணியாங்கு' (650) என்பதையும் சிந்தித்து அறிக. இக்குறட்பாவில் 'உடன் எய்தும்' என்று கூறிய அருமை இன்றியமையாததாகும். இம்மையில் அடைய வேண்டிய செல்வம், மறுமையில் அடையும் பேரின்பம் எனப்படுகின்ற அனைத்தும் பெற முடியும் என்பதற்காகவே 'எல்லாம்' என்ற சொல்லை அமைத்தார்.

'உள்ளத்தான், உள்ளான்' என்பதால், அருளாளர்கட்கு உரிய அருள் உள்ளம் குறிக்கப்பட்டது. அவர்கள் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுவார்கள்.

**310 இறந்தார் இறந்தார் அனையர் ...**

இக்குறட்பாவினைச் சிந்திக்கின்றபோது 'துறந்தார் பெருமை' (22) என்ற அமைப்பு முறையை நாம் நினைவுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும். அதிக கோபம் உடையவர்க்கு ஞானம் பிறக்காது. அந்த 'ஞானம்' பெறுவதற்கு உரிய உயிர் இருந்தாலும் இறந்தார் ஆவர். இக்குறட்பாவில் முதலில் வருகின்ற 'இறந்தார்' என்ற சொல் மிகுதியான கோபம் படைத்தவரை யும், இரண்டாவதாக வருகின்ற 'இறந்தார்' என்ற சொல் செத்தவரையும் குறிப்பதாக அமைந்துள்ளது. கோபத்தை விட்டவர்கள் சாதல் தன்மையுடையவர்களே ஆனாலும், அதை ஒழித்தவர்களாகக் கருதப்படுவர்.

மனிதப் பண்பு அற்றவர்களைச் செத்தவர்களுடன் ஒப்பிடுவது போல ஞானத்தை அழிக்கின்ற சினத்தை மேற்கொண்டவர்களையும் இறந்தாரே யாவர் என்றார்.

## 32 இன்னா செய்யாமை

**311 சிறப்புஈனும் செல்வம் பெறினும் ...**

'மனத்துக்கண் மாசு' (34) என்ற குறட்பா சிந்திக்கத்தக்கது. இப்பாவில் 'மாசற்றார் கோள்' என்று கூறினார். தவத்தால் பெறுகின்ற யோக சாதனைகளை 'சித்திகளை' செல்வம் என்று கூறினார். காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்று குற்றங்களும், 'மாசு' என்று கூறப் படும். 'பெறினும்' என்று கூறியதால் அருமை என்ற கருத்தும், பெற முடியாமை என்ற கருத்தும் உய்த்துணர வைக்கப்பட்டன. கொள்கை என்ற கருத்தைத் தெளிவுபடுத்தவே 'கோள்' என்று கூறினார். இதன் மூலம் தவத்தினால் ஆற்றல் பெற்றவர்களைக் குறிக்கின்றார். மாசு அற்றவர்கள் தாம் பெற்ற சித்திகளைக் கொண்டு பிறர்க்குத் துன்பம் செய்தல் கூடாது.

**312 கறுத்தின்னா செய்தவக் கண்ணும் ...**

முந்தைய குறட்பா முடிவுபெற்றது போலவே இக்குறட்பாவும் 'செய்யாமை மாசற்றார் கோள்' என்று முடிந்தது. முந்தைய குறட்பாவில், 'பிறர்க்கின்னா' என்று கூறினார். இக்குறட்பாவில் 'மறுத்துஇன்னா' என்று அமைத்தார். கோபத்தினைக் குறித்துக் காட்டவே 'கறுத்து' என்று கூறினார். 'அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு' என்ற தொடர் 355-குறட்பாவிலும், 423-குறட்பாவிலும் முடிகின்ற முறையினைக் கண்டு தெளிக. இக்குறட்பாவில் காணப்படும் உண்மை, முனிவர்களுக்கே சிறப்பாக அமைந்துள்ளது என்பதனை அறிதல் வேண்டும்.

இங்கு 'மாசற்றார் கோள்' என்றார். இன்னாதவற்றை உட்கொள்ளாது விடுதல் வேண்டும் என்பதாம். 'உற்ற நோய் நோன்றல்' (261) என்பதையும் சிந்திக்க.

**313 செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத ...**

தவசிக்கு இருக்க வேண்டிய உயர்ந்த குணம் பேசப்பட்டது. திரும்பவும் பிறருக்குத் துன்பம் செய்ய முனைந்தால் தவநெறி பழுதுபடும் என்பதாகும். தவம் இழந்து பழியும் பாவமும் எய்தலால் 'உய்யா விழுமம்' என்றார். துறவி மற்றவனுக்குத் துன்பம் செய்வானாயின் தவம் இழந்து, பழியும் பாவமும் அடைவான் என்பதாம்.

### 314 இன்னா செய்தாரை ஒறுத்தல் ...

பற்றற்ற துறவிகள் நடந்து கொள்ள வேண்டிய சிறப்பான முறை கூறப்பட்டது. உலகியல் நடைமுறையில் வாழ்பவர்கள் தண்டிக்கும் (ஒறுத்தல்) முறை வேறாக இருக்கும். உயர்ந்த தவநெறியில் இருப்பவர்கள் தண்டிக்கும் முறை இங்குக் கூறப்பட்டது. துறவறப் பகுதியில் கூறப்படும் அரிய குணங்கள் துறவிகளுக்கென்றே சிறப்பானவையாகவும், உலகியலில் வாழ்பவர்களுக்குப் பொதுவாகவும் கொள்ளுதல் வேண்டும். தவசிகள் நோன்பு நோற்பவர்கள் ஆதலால் அத்தகைய பண்பாடுகளில் மிகச் சிறிய அளவும் வழுவுதல் கூடாது என்பதாகும்.

'நாணுடைமை' என்றோர் அதிகாரம் உண்டு. இது தவத்தினர்க்குஅறிவுரையாயிற்று. 'மறவா விட்டால் பின்னும் வந்து கிளைக்கும்'; 'இன்னா செய்தார்க்கும் இனியவே' (987) என்பவை சிந்திக்கத்தக்கவை. சான்றோர்களும் முனிவர்களும் ஒப்பக் கருதப்பட வேண்டியவர்களாவார்கள்.

### 315 அறிவினான் ஆகுவ துண்டோ ...

வினா முறையில் இக்குறட்பா அமைக்கப்பட்டுள்ளதாகும். 'அறிவுடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. பிறர்க்கு வந்த துன்பத்தினையும் தமக்கு வந்தது போல் கருதுபவர்கள் தூயோர் ஆவர். 'அறிவு' என்பது அருளாளர்களின் 'மெய்யறிவு' என்பதைக் குறிக்கும்.

பிற உயிர்கட்கு வரும் துன்பத்தை உணர்ந்து, காத்தல் என்பதாம். 'அறிவுடையார் ஆவது அறிவார்' (427) என்பதையும் 'பிறிதின் நோய் தம் நோய்' என்பதையும் நன்கு சிந்திக்க. இல்லறத்தானுக்குத் 'தீவினை அச்சம்' கூறியது போலத் துறவறத்தார்க்கு 'இன்னா செய்யாமை' கூறினார்.

### 316 இன்னா எனத்தான் உணர்ந்தவை ...

உணர்தல் அரிதாகையால் 'தான் உணர்ந்தவை' என்றார். கற்றல், அறிதல் என்பதனோடு 'உணர்தல்' என்பதும் 'ஓதி உணர்ந்தும்' (834) என்பதும் சிந்திக்கத்தக்கவை. அறமும் பாவமும் உளவாவது, மனம் உளனாய வழி ஆகலான், உணர்ந்தவை என்றார் பரிமேலழகர்.

### 317 எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் ....

இதில், 'மனமறிய செய்யாதே' என்பது குறிப்பு. எவியார்க்கும் செய்தல் கூடாது என்பதை 'யார்க்கும்' என்றார். மனத்திலும் கருதாதிருத்தல் மிகவும் சிறப்பு என்பதையும் உணர்த்துதலால் 'தலை' என்றார். ஈண்டு மனத்தான் ஆகாத வழி பாவமில்லை என்பது பெற்றாம். எனைத்தானும், எஞ்ஞான்றும், யார்க்கும் என்பவை காலம், எளியவர்கள், அளவு என்பவற்றை உணர்த்தின.

### 318 தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் ...

இக்குறட்பா வினா முறையில் அமைந்துள்ளது. இதில் வரும் 'தன் உயிர்' என்பதும் 'தான் அறிவான்' என்பதும் சிந்திக்கத்தக்கன. தனக்குப் பின்னர் வந்து துன்புறுத்தும் என்பது

இக்குறட்பாவில் உணர்த்தப்பட்டது. 'இன்னாமை', 'இன்னா செயல்' என்பன கருதுதற்குரியன. தனக்குத் துன்பம் வரும் என்பதை மயக்க அறிவால் அறியாமல் போனான் ஆதலால் 'என் கொலோ' என்றார்.

**319 பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் ...**

முற்பகல், பிற்பகல் என்பன விரைவு நோக்கிக் கூறப்பட்டன; தவம் அழிந்துவிடும் என்பதாகும். இதன் பொருள் மற்றொருவன் செய்யாமல், தாமே வரும் என்பதாம். 'தாமே வரும்' சிந்தனைக்குரியது. 'இன்னா' இருமுறை கூறப்பட்டது. செய்த தவம் அழிவதால் அங்ஙனம் கடிதினும் எளிதினும் இன்னா வரும் என்றார்.

**320 நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் ...**

இப்பாவில் நான்குமுறை 'நோய்' என்பது கூறப்பட்டது. 'செய்தார்', 'செய்யார்' என்பன சிந்தனைக்குரியன செய்த வினையை நுகர்ந்தே தீர வேண்டும் என்பது குறிப்பாயிற்று. 'இன்மை வேண்டுபவர்' செய்யார் என்று அறிதல் வேண்டும். 'செய்தார், செய்யார்' ஆகிய இருவகையினரையும் பிரித்துக் காட்டித் தெளிவுபடுத்தினார்.

## 33 கொல்லாமை

**321 அறவினை யாதெனின் கொல்லாமை ...**

செயல்களிலே அறமான செயல் கொல்லாமையாகும். கொல்லுதல் என்பது தீமையெல்லாம் தரும் என்பதாகும். ஆதலால் 'அறவினை' என்றார். 'கொல்லாமை' என்ற அதிகாரம் 'நோன்பு நோற்றல்' என்ற பகுதியில் காணப்படும் ஒன்பது அதிகாரங்களில் இறுதியான அதிகாரமாகும். உலகியலில் வாழ்பவர்கள் பலதிறப்பட்ட பணிகளை மேற்கொண்டு நடப்பவர்களாதலால், இந்த அறம் சிறப்பாக முனிவர்களுக்கென்றும், பொதுவாக உலக மக்களுக்கென்றும் கொள்ளுதல் வேண்டும்.

'அறம்' என்பதைப் பல முறைகளில் விளக்குதல் போல் இங்கும் கூறினார். கொலைப் பாவம் விளைக்கும் தீமையினை, ஏனைய பாவங்கள் எல்லாம் ஒன்றுகூடினும் விளைக்கமாட்டா என்பதாகும்!

**322 பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் ...**

பல நூல்களில் காணப்படுபவற்றையும் எடுத்துக் காட்டிக் கூறுதல் ஆசிரியரின் முறை ஆதலால் இக்குறட்பாவும் அவ்வாறு அமைக்கப்பட்டது. 'எவ்வுயிர்க்கும் செந்தண்மை' (30), 'பாத்தூண் உடைத்தாயின்' (44), 'பாத்தூண் மரீஇ' (227) என்பனவற்றை நாம் சிந்திக்க வேண்டும்.

உலகியலில் வழங்கி வரும் பல நூல்களின் உயர் கருத்துக்களை மனத்திற் கொண்டவர் வள்ளுவர். எல்லா நூல்களிலும் உள்ள நல்லனவற்றை எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் ஆசிரியர் கருத்தாகும். 'அருளுடைமை' அதிகாரம் முதல் 'அவாவறுத்தல்' அதிகாரம் முடிய வருவன துறவறப் பகுதியாகும்.

**323 ஒன்றாக நல்லது கொல்லாமை ...**

'வாய்மை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. ஓர் அறம் நிலைத்து ஒருவன்கண் நிற்குமானால் ஏனைய அறங்களும் இயல்பாகவே அவனிடம் அமைந்திருக்கும் என்பது குறிக்கப்பட்டது. செய்தலின் அருமை நோக்கி 'கொல்லாமை'யும் 'வாய்மை'யும் தலையாய அறங்களெனப்பட்டன.

**324 நல்லாறு எனப்படுவது யாதெனின் ...**

இதில் வரும் 'யாதொன்றும்' என்பது சிந்திக்கத் தக்கது. ஓர் அறிவுயிரையும் கொல்லாதிருத்தல் என்பதாகும். உலகியலில் வாழும் இல்லறத்தாராலும் பிறராலும் இவ்வாறு இருத்தல் நடைமுறையில் இயலாதென்பதனைக் குறிப்பால் உணர்தல் வேண்டும். வினாவிடை என்ற முறையில் அமைந்துள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். 'யாது ஒன்றும்' என்று கூறியதால் ஓர் அறிவு உயிரையும் சேர்த்தல் வேண்டும். அருளாளர்கள் கொள்ள வேண்டிய பண்புகளில் இதுவும் ஒன்றாகும்.

**325 நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் ...**

இதில் வரும், 'நிலை அஞ்சி', 'கொலை அஞ்சி' என்பன நன்கு சிந்தித்து அறிய வேண்டுவன. இதனால் 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. துறவிகளுக்கெல்லாம் தலைமையானவன் என்ற சிறப்பு மிகவும் சிந்திக்கத் தக்கதாகும். இதனால் அஞ்ச வேண்டுவது எது என்பது கூறப்பட்டது. 'அஞ்சுவது அஞ்சாமை' (428) என்பதும் சிந்தனைக்குரியது. துறவு ஒன்றேயாயினும், சமய வேறுபாட்டால் பலவாம் ஆகலின் 'நீத்தாருள் எல்லாம்' என்றார்.

**326 கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் ...**

'கூற்றம் குதித்தலும்' (269) என்பது நினைவுபடுத்தப்பட்டது. வீடுபேறு அடைந்த முனிவர்களுக்குப் பிறவாமை என்பது உரியதாதலால் 'கூற்றுச் செல்லாது' என்று கூறினார். ஆயுள் நீடித்து ஞானம் பிறக்கும் என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'உண்ணும்' என்று குறிக்கப்பட்டது சிந்தனைக்குரியதாகும்.

கூற்றுவன் எல்லோரிடமும் காலம் கருதிச் செல்லுவது இயல்பு என்றாலும், சிறப்பினை வற்புறுத்தவே இவ்வாறு கூறினார். ஆகவே ஆயுட்காலம் நீடிக்கும் என்பதாம்.

**327 தன்னுயிர் நீப்பினும் செய்யற்க ...**

இக்குறட்பா, தவத்தை மேற்கொண்ட முனிவர்கட்குத் தலையாய பண்பை உரைக்கிறது. கொல்லுதல் பாவத்தைத் தந்து தவத்தைக் குலைப்பதாகும். நீப்பினும் செய்யற்க என்பது சிந்தனைக்குரியதாகும். பிறஉயிரை 'இன்னுயிர்' என்று குறிப்பிட்டார். 'உயிர்' என்பது இருமுறை கூறப்பட்டது. 'வினை' என்பது பாவ வினையாகும்.

கொல்லாமை என்பது துறவிகளின் உயர்ந்த பண்பாடுகளில் ஒன்று. 'உயிர் நீப்பினும்' என்றதால் தவசிகளுக்குப் பிறரால் உயிர் போக்கும் நிலைவராது என்பது பெற்றாம்.

**328 நன்றுஆகும் ஆக்கம் பெரிது ...**

இதனால் 'சான்றாண்மை' என்னும் அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'வேள்வி' என்ற பெயரால் கொலை செய்து அதனால் பெருஞ்செல்வமும் இன்பமும் உண்டென்று கருதுவாரைக் குறித்து, 'நன்றாகும் ஆக்கம் பெரிது எனினும்' என்று கூறினார். 'ஆக்கம்' இருமுறை கூறப்பட்டது. 'ஆக்கம் பெரிது' என்று கூறமாட்டார்கள். ஆக்கம் உண்டாகாது என்பது தோன்ற 'எனினும்' என்றார்.

**329 கொலைவினைய ராகிய மாக்கள் ...**

வினையர் என்பது அதனையே தொழிலாகக் கொண்டவர்களைக் குறித்தது. 'வினையர்' இருமுறை கூறப்பட்டது. 'புலைவினையர்' என்பது தொழிலால் வந்ததாகும். மக்கள் என்று கூறாமல் அவரை 'மாக்கள்' என்று கூறினார். கொலை வினையரே புலைவினையர்' எனப்பட்டனர்.

**330 உயிருடம்பின் நீக்கியார் என்ப ...**

'பெருநோய்' எனப்படும் தொழுநோயால் துன்புறுகிறவர்கள், முற்பிறவியில் கொலைத் தொழில் செய்தவர்கள் என்று கூறப்படுவர். அவர்களே 'உயிருடம்பின் நீக்கியார்', 'செல்லாத் தீ வாழ்க்கையவர்' என்பதைக் கருதுக.

'அருளுடைமை' முதல் 'கொல்லாமை' ஈறாகக் கூறப்பட்ட இவற்றுள்ளே சொல்லப் படாத விரதங்களும் நோன்புகளும் அடங்கும். ஆகவே அதனை அறிந்து அடக்கிக் கொள்ளுதல் வேண்டும். உடம்பு இருமுறை கூறப்பட்டது. துறவறப் பகுதியில் முதல் ஒன்பது அதிகாரங்கள் விரதம் (நோன்பு) என்பதில் அடங்கும். ஏனைய நான்கு அதிகாரங்களும் 'ஞானம்' என்பதில் அடங்கும்.

## 34 நிலையாமை

**331 நில்லாத வற்றை நிலையின ...**

துறவறப் பகுதியிலுள்ள 'விரதம்' (நோன்பு நோற்றல்), 'ஞானம்' என்ற இரு பிரிவுகளில், 'ஞானம்' என்ற பிரிவிலுள்ள நான்கு அதிகாரங்களில் முதல் அதிகாரமாக 'நிலையாமை' தொடங்குகின்றது. 'புல்லறிவாண்மை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப் பட்டது. வீடு என்னும் பேரின்ப நிலையினர் கருதவேண்டியவை இதில் கூறப்பட்டது. அதனால் பொருள்களை உள்ளவாறு காணவேண்டும் என்பதாம். தோற்றமுடையன யாவும் மறையும்.

இன்பம் எனக் கருதும் செல்வத்திலும் யாக்கையிலும் துறவி பற்று வைக்கக்கூடாது. இந்த 'அனைத்தும் நிலைக்காது' என்ற எண்ணம் ஞானிக்கு — ஞானத்திற்கு — வழிகாட்டி யாகும். இதனால் பேரின்ப வீட்டுச் செல்வம் நிலைக்கும்.

332 கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே .

'துறக்கச் செல்வம்' (துறக்கம்) என்பது வேறு, வீடு (பேரின்பம்) என்பது வேறு. இக் குறட்பாவில் பெருஞ்செல்வம் என்றதால் துறக்கச் செல்வம் குறிப்பிடப்பட்டது. இதனை மறுமை இன்பம் என்றும் கூறுவர். இந்த இன்பமும் மீண்டும் மீண்டும் பிறந்து வருதற்குக் காரணமாகும். பிறவாமை தருவது வீட்டின்பம் என்க. நல்வினைகள் காரணமாக வருவது துறக்கச் செல்வமாம். அதுவும் போகின்ற தன்மையுடையதே. செல்வம் ஒரே நேரத்தில் வந்து விடாது; பல காலங்களில் வரும்; அது போகும் காலம் வந்தால் ஒரே நேரத்தில் மறையும். 'கூத்து', 'குழாம்', 'அவை', 'விளிந்தற்று' என்பன சிந்தனைக்குரியன.

பல திறத்தான் ஒருவனுக்குச் செல்வம் வருவதைக் காட்டவே, "கூத்து பார்க்கக் கூட்டம் வருவதைப்போல" என்றார். நிலையற்ற செல்வத்தினை அருளாளர் நோக்கில் கூறினார் ஆசிரியர்.

333 அற்கா இயல்பிற்றுச் செல்வம் ..

இதில் 'பெற்றால்' என்பது சிந்தனைக்குரியதாகும். மிகுந்த செல்வம் இயற்கை யென்னும் ஊழினால் வரும் என்பது குறிக்கப்பட்டது. மேலும் செல்வம் நிலையாது; அறம் நிற்கும் என்பதாகும். 'பொன்றாத் துணை' (36), 'அற்கா', 'அற்கும்' என்பன சிந்தனைக் குரியன. ஊழ் இருந்தாலல்லாமல் துறவிகளால் செல்வம் பெறப்படாமையால் 'அது பெற்றால்' என்றார்.

334 நாள்என ஒன்றுபோல் காட்டி ...

'பெறின்' என்பது உணர்தலின் அருமையை உணர்த்திற்று. 'நாள்', 'வாள்' சிந்தனைக் குரியன. 'ஒன்று போல் காட்டி' என்பது சிந்திக்கத்தக்கது. 'ஈரும்' என்பது ஈர்க்கின்ற தன்மை யினை உணர்த்திற்று. மேலே செல்வத்தினைக் கூறி இங்குக் காலத்தின் அருமையைச் சொன்னார்.

335 நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் ...

இறுதிக் காலத்தின் இயல்பு விளக்கப்பட்டது. பேச முடியாத நிலையை 'நாச்செற்று' என்று கூறினார். 'விக்குள்', 'வருமுன்னர்' (335) என்பன சிந்திக்கத்தக்கவை. 'மேல் வாராமுன்', 'மேற்சென்று' என்பன கருத்தினைத் தெளிவுபடுத்துவன. மேல் நோக்கி வந்தபோது, செய்தலேயன்றிச் சொல்லும் ஆகாமையான் 'வாராமுன்' என்று கூறினார்.

336 நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை ...

இத்தகைய நிலையாத தன்மையை அறிந்தே சான்றோர் துறவறம் பூண்டனர் என்பது குறிப்பு. 'நெருநல்', 'இன்று' என்பன சிந்தனைக்குரியன. 'பெருமை' என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உள்ளது. நிலையாமை என்பதே உலகில் மிகுதியாகும். 'இல்லை', 'உடைத்து' என்பன மாறுபட்ட உண்மைகளைக் குறித்தன. பெருமை என்பது நிலையாமையின் மிகுதியைக் குறித்தது. இருபாலர்க்கும் பொதுவேயாயினும் சிறப்புபற்றி ஆண்பாற்கே கூறினார்.

**337 ஒருபொழுதும் வாழ்வது அறியார் ...**

இதில் எண்ணங்கள் தோன்றுவதற்கு அளவில்லை என்பது உணர்த்தப்பட்டது. எத்துணை காலம் வாழ்வோம் என்பது அறிய முடியாததொன்று. 'பொழுதும்' என்பதையும் 'கோடியும்' என்பதையும் நன்கு அறிந்துணர்க.

பொழுது என்பது கணப்பொழுது என்பதைக் குறித்தது; பெரும்பான்மை கருதி 'கோடி' என்றார். இவ்வாறு 'கோடி' என்று பல இடங்களில் கூறுகிறார். 'பத்தடுத்த கோடி' (817), 'கோடி உண்டாயினும் இல்' (1005), 'கோடி தொகுத்தார்க்கும்' (377) என்பன அறியத் தக்கன.

**338 குடம்பை தனித்துஒழியப் புட்பறந்தற்றே ...**

'உடம்பொடு உயிரிடை' (1122) என்ற குறட்பா நினைத்தற்குரியது. உடம்பும் உயிரும் தனித்தனியாகத் தொடர்பு இல்லாததாக இருந்தும்,தொடர்பு உள்ளதாகவே வாழ்ந்திருந்தும் பிரிந்துபோகும் தன்மை உணர்த்தப்பட்டதாம். 'நட்பு' என்று கூறியது சிந்தனைக்குரியது. இத்துடன் 'எம்மிடை நட்பு' (1122) என்ற குறட்பாவையும் அறிக. மேலும் நட்பு வகையில் கூறப்படும் பல அதிகாரங்களைக் காண்க.

**339 உறங்குவது போலும் சாக்காடு ...**

உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்கு இயல்பாய் கடிதின் மாறிமாறி வருகின்றாற் போலச் சாக்காடும் பிறப்பும் இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வரும் என்பது கருத்து. இதில் 'போலும்' என்பது இருமுறை கூறப்பட்டது. 'உறங்குவது', 'விழிப்பது' என்பதும், 'சாக்காடு', 'பிறப்பு' என்பதும் ஒருசேர எண்ணப்பட வேண்டியவை. 'உறங்கி விழிப்பது' என்பது சிந்தனைக்குரியது.

**340 புக்கில் அமைந்தின்று கொல்லோ ...**

எந்த உடம்பிலும் உயிர் எப்போதும் நிலைத்து நிற்பதில்லை என்பது இக்குறளால் உணர்த்தப்பட்டது. உயிர் குடியிருக்கும் வீடுதான் உடம்பு என்பதாகும். உடம்பை 'இல்' என்று கூறினார். 'துச்சில் இருந்த உயிர்' சிந்தனைக்குரியதாகும். இதன் மூலம் உயிரோடு கூடி நிற்பதோர் நிலையான உடம்பு இல்லை என்பதும், உடம்போடு கூடி நிற்பதோர் நிலையான உயிர் இல்லை என்பதும் உணர்த்தப்பட்டன.

## 35 துறவு

**341 யாதனின் யாதனின் நீங்கியான் ...**

இதில், 'யாதனின்', 'யாதனின்' என்பதும் 'அதனின்', 'அதனின்' என்பதும் சிந்தனைக் குரியனவாகும். 'துறவு' என்ற அதிகாரம் தொடங்குகின்றபடியால் முதற்கண் ஆசை அறுத்தலைக் கூறினார், 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரம் இதனால் பெறப்பட்டது.

ஆசையென்பது துன்பத்திற்கே காரணம் என்பது உணர்த்தப்பட்டது. அடுக்குகள் பன்மை குறித்து நின்றன. எல்லாப் பொருளையும் ஒன்றாகவே விட்டு விடுதல் வேண்டும். ஆசை அனைத்தும் விட்டபோதுதான் ஞானம் பிறக்கும்.

**342 வேண்டின் உண்டாகத் துறக்க ...**

இன்பங்கள் பலவாக உண்டாவதற்குக் காரணம் இதில் கூறப்பட்டது. 'உண்டாகத் துறக்க' என்பது சிந்திக்கத்தக்கது. துறந்தபின் வருகின்ற இன்பங்களை 'ஈண்டியற்பால பல' என்றார். இளமைக்கண் துறந்தான் நெடுங்காலம் பேரின்பம் துய்ப்பான் ஆதலால் உண்டாகத் துறக்க என்றார்.

**343 அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை ...**

செய்ய வேண்டிய செயல்களை 'அடல்', 'விடல்' என்பன குறித்துக் காட்டின. 'வேண்டும்' என்பது இருமுறை கூறப்பட்டது. 'புலத்தை' என்பது சிந்தனைக் குரியது. 'ஒருங்கு' என்பதும் அரிய உண்மையை உணர்த்திற்று. 'சென்ற இடத்தால்' (422) என்பதைச் சிந்திக்க! பொறிகளின் வாயிலாக நுகர்தலைப் 'புலம்' என்றார். 'பொறிவாயில் ஐந்து அவித்தான்', 'ஐந்தவித்தான் ஆற்றல்', 'ஐந்தும் காப்பான்', 'ஐந்து அடக்கல் ஆற்றின்' என்பன போன்று வரும் இடங்களைக் கண்டு தெளிக.

**344 இயல்பு ஆகும் நோன்பிற்கு ...**

'இன்மை', 'உடைமை' என்பனவற்றை நன்கு சிந்திக்க. துறவற வாழ்க்கை என்பது நோன்பு நோற்றல் என்ற தனிச் சொல்லைக் கொண்டதென்பது உணர்த்தப்பட்டது. 'ஒன்று இன்மை', 'பெயர்த்து' என்பன கருதற்பாலன. ஓர் ஆசை இருந்தாலும் அதன் வழியாகப் பல வந்து சேரும் என்பது கருத்து.

**345 மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் ...**

வினா முறையில் அமைக்கப்பட்டுள்ள குறட்பாக்களுள் இதுவும் ஒன்றாகும். பிறவாமை என்பது குறிக்கோள். பேரின்பம் அடைந்தவர்களுக்குப் பிறவி இல்லை. அருவுடம்பு என்பது மனம்; உருவுடம்பு என்பது இந்த உடம்பு. இதனால் அகப்பற்று விடுதல் கூறப்பட்டது. இவ்வுடம்பினால் துன்பம் தொடர்ந்து வரும் என்பதாம். 'பிறப்பு அறுக்கல் உற்றார்' என்பது தன்மேற்கொண்டு நோன்பு நோற்று ஞான நிலை அடைபவர்கள்.

**346 யான்எனது என்னுஞ் செருக்கு ...**

முன் பாவில் அறுக்கல் என்றார். இக்குறட்பாவில் அறுப்பான் என்றார். வானோர், வானுலகம், புத்தேளிர் முதலிய விளக்கங்களைப் பிற இடங்களில் கண்டு தெளிக. 'யான்', 'எனது' ஆகிய இரண்டும் கருதற்பாலன; 'வானோர்க்கு உயர்ந்த உலகம்' என்பது சிந்தனைக் குரியது. 'உயர்ந்த உலகம்' என்பது 'வீடு' எனப்படும் பேரின்ப நிலை. 'வானோர் வாழ்க்கை'

என்பது இன்பத்தை மனம் விரும்பியவாறு நுகருகின்ற வாழ்க்கை என்பதாம். வானவர் உலகம், உயர்ந்த உலகம் என்பன சிந்திக்கத்தக்கன. பேரின்ப உலகம் அடைவர் என்பதாம்; அதுவே வீட்டுலகம். அது வானவர்களுக்கும் எட்டாத உலகம்!

**347 பற்றி விடாஅ இடும்பைகள் ...**

வீட்டின்பம் விரும்புவோர் பற்றுக்களை அறவே நீக்குதல் வேண்டும். 'பற்றிவிடா' இரு முறை கூறப்பட்டது. 'பற்றினைப் பற்றி' சிந்திக்கத் தக்கதாகும். ஆசையைப் பற்றிக் கொண்டிருந்தால் துன்பங்கள் பற்றிக் கொண்டே இருக்கும். 'அவாவறுத்தல்' என்ற அதிகாரம் நினைத்தற்குரியது. 'துறந்தார் பெருமை' (22) எனும் குறிப்பு சிந்திக்கத்தக்கது. இருவகைப் பற்றினையும் பற்றிக் கொண்டு இருப்பவர்களுக்குத் துன்பங்கள் போகா; பேரின்பம் கிட்டாது.

**348 தலைப்பட்டார் தீரத் துறந்தார் ...**

தீரத் துறத்தல் என்பது சிந்தனைக்குரியதாகும். ஆகவே 'தீரத் துறந்தார்' என்று அமைத்தார்; **தலைப்பட்டார்** என்பதும் **மயங்கி வலைப்பட்டார்** என்பதும் கருத்தினைத் தெளிவுபடுத்துவன. 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரம் இதன்மூலம் பெறப்பட்டது. பிறப்பு வலையுள் அகப்படுவதால் **அதனை வலைப்பட்டார்** என்றார். பொய் நெறிகளுள் சென்று உழல்வோர் பிறப்பு வலையுள் அகப்படுதல் கருதி **மயங்கி** என்றார்.

**349 பற்றுஅற்ற கண்ணே பிறப்புஅறுக்கும் ...**

காரணம் அற்றபோதே காரியமும் அற்றதாம் என்பதனால் 'பறறற்ற கண்ணே' என்றார். அற்றகண்ணேதான் பிறப்பு அறுக்கும் என்பதாம். இல்லாவிட்டால் அறாது. **நிலையாமை** அதிகாரம் ஈங்கு நினைவுபடுத்தப்பட்டது. இதனால், பிறப்பு எப்போது அறுபடும் என்பதைக் கூறினார்; 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' என்பது போன்றவற்றைக் கருதுக.

**350 பற்றுக பற்றற்றான் பற்றினை ...**

'வேண்டுதல் வேண்டாமை இலான்' (350) என்றதை ஈங்கு நினைத்தல் வேண்டும். **பற்று** என்ற சொல் ஆறு முறை காணப்படுகின்றது. 'பற்றற்றான் பற்று' சிந்திக்கத் தக்கது. பற்று என்பது பற்றப்படுவதனை என்பதாம். இதனால் பற்று விடுவதற்கு வழி கூறப்பட்டது.

'கடவுள் வாழ்த்'தில் பொதுத் தன்மையில் கூறியது போலவே இங்கும் 'பற்றற்றான்' என்றார். அதனைப் பற்றுவதற்கு உபாயம், தியான சமாதிகள் ஆகும்.

## 36 மெய் உணர்தல்

**351 பொருள்அல் லவற்றைப் பொருள்என்று ...**

ஞான நிலையில் இருப்பவர்கள் உண்மைப்பொருள் இதுதான் என்பதை அறிந்துணர்தல் வேண்டும். இதனால் 'மெய்ப் பொருள்' கூறப்பட்டது. மெய்யுணர்தல் என்ற

நிலையில் இருக்கும்போது மயக்கங் காணுதல் கூடாது என்பதாம். மெய்ப்பொருள் அல்லாதவற்றை மயக்க அறிவால் 'மெய்ப்பொருள்' என்று உணர்வது துன்பப் பிறப்பு.

**352 இருள்நீங்கி இன்பம் பயக்கும் ...**

இதில் காணும் இருள், மருள் என்பன சிந்தனைக்குரியவை. 'நீங்கி' இருமுறை கூறப்பட்டது. "மெய்யுணர்தல்" என்பதனால் தோன்றக்கூடிய இன்பம் கூறப்பட்டது. 'மெய்யுணர்தல்' என்ற அதிகாரங்கொண்டு இங்கு விளக்கப்படுபவை ஞானநிலையில் அனுபவிப்பவையாம். இதனால் பேரின்பம் உண்டாகும். 'காட்சி' என்பது அறிவு என்பதனைக் குறித்தது. 'மாசறு காட்சியவர்' பேரின்பத்தை நுகர்வர்; இருள் நீங்கினால், மருள் நீங்கினால் வீட்டின்பம் பெறலாம்.

**353 ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு ...**

'ஐயம்' (சந்தேகங்கள்) நீங்குதல் இன்றியமையாதது. ஐயத்தின் நீங்கித் தெளிந்தவர்களே ஞானிகளாவர். வானம் நணியது என்பது சிந்திக்கத்தக்கது. இதனால் அனுபவ உணர்வு நிறைந்து வரும் என்பதாம். வையம், வானம் இவற்றைச் சிந்தித்தல் வேண்டும். 'அவ்வுலகம்', இவ்வுலகம் (247) என்பனவும் சிந்தனைக்குரியவை. மெய்யுணர்தல் இவ்வதிகாரத்தின் பெயராகும். இதனை வடமொழியில் 'தத்துவ ஞானம்' என்று கூறுவர். ஞானப் பாதையில் செல்லுபவர்கட்கு ஐய உணர்வுகள் உண்டாகும். ஆகவே அவைகளிலிருந்து நாம் விடுபட வேண்டும்.

**354 ஐயுணர்வு எய்தியக் கண்ணும் ...**

மனத்தினை அடக்குதல் முடிந்தாலும் 'மெய்யுணர்வு' பெறுதல் அரிது. ஐந்தாவதாகிய உணர்வு மனம். வீட்டின்பம் பெறுதற்கு 'மெய்யுணர்வு' வேண்டும் என்பது ஈண்டு உணர்த்தப்பட்டது. ஐம்பொறிகளும் அடங்கி, மனம் தம் வசப்பட்டாலும் பயனில்லை; மெய்யுணர்வு பெறுதல் வேண்டும் என்பது இதன் கருத்து.

**355 எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் ...**

ஒரு பொருளின் தோற்றத்தைக் கண்டு முடிவு செய்தல் கூடாது. அப்பொருளின் கண் நின்று மெய்யாகிய பொருளினைக் காணவேண்டும். அதுவே மெய்யுணர்தல் என்பது. 'எப்பொருள்', 'அப்பொருள்', மெய்ப்பொருள்' முதலியன சிந்தனைக்குரியன. இதனால் 'அறிவுடைமை' என்ற அதிகாரம் பெறப்படுகிறது. 'மெய்யுணர்வு' நிலை அடைதற்கு முன்பே, ஒருவற்குப் பற்பல அனுபவங்கள் உண்டாகி, அவற்றாலேயே இதுதான் மெய்யுணர்வு என்ற எண்ணம் வந்துவிடக் கூடும். ஆதலால் அவை யாவற்றையும் கடந்து மெய்ப் பொருளினைக் காணவேண்டும் என்றார்.

**356 கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் ...**

இதன் கருத்து ஞானநிலை அடைந்த குருமார்களிடம் கற்றல் வேண்டும் என்பது. 'ஈண்டு வாரா நெறி' சிந்தனைக்குரியது. ஒருவன் குருமார்களான ஞானிகளிடம் கற்றாலன்றி,

மெய்ப்பொருள் காண முடியாதென்பதாம். வீட்டின்பத்திற்கு நிமித்த காரணமாய முதற் பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று. அவை கேள்வி, விமரிசனம், பாவனை என்பன. அவற்றுள் கேள்வி இதனால் கூறப்பட்டது.

**357 ஓர்த்துஉள்ளம் உள்ளது உணரின் ...**

ஞான நிலையில் நின்று மெய்யுணர்ந்து அனுபவிக்கும் நிலை இதில் கூறப்பட்டது. மறுபிறப்பு அவர்கட்கு இல்லையென்பது குறிப்பு. 'உள்ளம் உள்ளது உணரின்' என்பது சிந்தனைக்குரியது. குருமார்களின் ஞானோபதேச மொழிகளில் நிற்றல் வேண்டும் என்பது குறிப்பு. 'ஒருதலையா ஓர்த்து' என்று இயைத்தல் வேண்டும்; இதனால் 'விமரிசனம்' கூறப்பட்டது.

**358 பிறப்புஎன்னும் பேதைமை நீங்க ...**

'பேதைமை' என்றோர் அதிகாரமும் உண்டு. எல்லாப் பொருளினும் சிறந்ததாகையால் 'வீடு' (பேரின்பம்) சிறப்பு எனப்பட்டது. 'உள்ளது', 'மெய்ப் பொருள்', 'செம் பொருள்' என்பன ஒன்றேயாம். இதனால் ஒன்றுபட்டு நிற்கின்ற நிலை விளக்கப்படுகிறது. இடைவிடாது பாவித்தல் 'சமாதி' எனப்படும். இங்கே பாவனை கூறப்பட்டது.

**359 சார்பு உணர்ந்து சார்புகெட ...**

பற்றுக பற்றற்றான் (350) என்ற குறட்பாவுடன் இக்குறளை ஒப்பிட்டு அறிக. சார்பு இருமுறை கூறப்பட்டது. சாருமிடத்தைச் 'சார்பு' என்று கூறினார். ஒழுகின் என்பது 'மெய்யுணர்தல்'. இதனை யோகநிலை என்றும் கூறுவர். இங்கே பரம்பொருளை உணர்தல் கூறப்பட்டது. மேலே கூறிய மூன்று உபாயங்களாலும் பரம்பொருளை உணரப் பிறப்பு அறும்; அப்போது கிடந்த துன்பங்கள் ஞான யோகங்களில் முதிர்ச்சியடைய உயிரினைச் சார முடியாமல் கெட்டுப் போகின்றன. பின்பு அவை சேரமாட்டா!

**360 காமம் வெகுளி மயக்கம் ...**

இக்குறளில் ஞான யோக முறைகளால் உண்டாகும் பயன் கூறப்பட்டது. இதனால் மெய்யுணர்ந்தார்க்கு நிற்பன, எடுத்தவுடம்பும் அது கொண்ட வினைப் பயன்களுமே என்பது பெற்றாம். 'மெய்யுணர்வு' என்னும் பேருணர்வு வெளிப்படும் என்பது கருத்து.

ஞானிகள் 'வேண்டுதல் வேண்டாமை' இல்லாதவர்கள்; ஆசையற்றவர்கள். ஆதலால் அவர்க்கு வரக்கூடிய துன்பங்கள் வாரா.

## 37 அவா அறுத்தல்

**361 அவாஎன்ப எல்லா உயிர்க்கும் ...**

இதற்கு முன்னர் 'வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து' (24) என்றார். இங்கு 'பிறப்பீனும் வித்து' என்றார். 'வழியடைக்கும் கல்' (38), 'எல்லா உயிர்க்கும்' என்பன சிந்தனைக்

குரியன. இதனை 'அவா ஈனும்' என்பதால் தெளிக. 'என்ப' என்று கூறியதால் அறநெறி நூல்கள் அனைத்திற்கும் இஃது பொருந்தும் என்றார். எல்லாச் சமயங்கட்கும் பொதுவான கருத்து இது. அதனால் என்ப என்றார். ஆசைதான் பிறப்பிற்கு வித்து. அதனை அறுத்தல் வேண்டும்.

**362 வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை ....**

'வேண்டின் உண்டாகத் துறக்க' (342) என்பதுபோல இக்குறட்பாவும் அமைக்கப் பட்டது. இதில் காணும் **வேண்டாமை வேண்ட** என்னும் தொடர் சிந்திக்கத்தக்கது. பிறவாமையின் சிறப்பும் அது வரும் வழியும் இங்குக் கூறப்பட்டன ஆதலால் பிறவாமை என்பதே கருத்தாயிற்று. இக்குறளில் பிறவாமையின் சிறப்பும் அது வரும் வழியும் கூறப்பட்டன.

**363 வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ...**

முந்தைய குறட்பாவில் சொன்ன 'வேண்டாமை' இக்குறட்பாவில் தெளிவுபடுத்தப் பட்டது. ஆதலால் இதனை **விழுச்செல்வம்** என்று சிறப்பித்தார். இவ்வுலகச் செல்வமும், துறக்கச் செல்வமும் இணையில்லையானபடியால் 'விழுச்செல்வம்' என்றார். 'ஈண்டில்லை' என்பதும், 'யாண்டும் அஃதொப்பதில்' என்பதும் சிந்தனைக்கு உரியன. பூரியார் கண்ணும் உள' (241) என்பது நினைக்கத்தக்கது. வேண்டாமை யென்பது பிறவாமைக்கு வழியென்றும் அதுவே விழுச்செல்வம் என்றும் சொல்லப்பட்டது.

**364 தூஉய்மை என்பது அவாஇன்மை ...**

"வாய்மை" என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. இடைவிடாமல் இதைச் சிந்தித்தல் வேண்டும். பொருள்மேல் ஆசையில்லாதார் பொய் கூற மாட்டார்கள். 'துறவு' என்ற அதிகாரத்தில் ஆசைகள் அனைத்தையும் விட்டுவிட வேண்டும் என்று கூறப்பட்டாலும், அவ்வாறு செய்த பிறகும் மறைந்த ஆசை பழவினைகளின் காரணமாக மீண்டும் மீண்டும் வந்து சேர முயற்சிக்கும். ஆதலால், அந்த அவாவினை அறுத்தல் வேண்டும் என்பதற்காகவே இந்த அதிகாரம் எடுத்துக் கூறப்பட்டது. அவா இன்மையினை ஒருவர் வேண்டுதல் வேண்டும். வேண்டுதல் என்பது இடைவிடாது பாவித்தல்.

**365 அற்றவர் என்பார் அவாஅற்றார் ...**

'மற்றையவர்' (348) என்பதில் கூறப்பட்ட கருத்து இக்குறட்பாவால் மேலும் விளக்கப் பட்டது. எனவே, 'மற்றையார்' என்று இங்கும் கூறினார். 'அற்றவர்', 'அற்றார்', 'அற்றாக', அற்றிலர்' என்பன சிந்தித்தறிய வேண்டுவன. இதனால் அவா அறுத்தாரது சிறப்பு விதி முகத்தானும் எதிர்மறை முகத்தானும் சொல்லப்பட்டது.

**366 அஞ்சுவது ஒரும் அறனே ...**

நம்மை அறியாமலேயே, நாம் அறிந்து கொள்ள முடியாதவாறு ஆசை நம்முள் புகுந்து விடும். அதனால் அதனை, 'வஞ்சிப்பது' என்றார். வாய்மை வேண்டலை இடைவிடாமல் பயின்று வருதல் வேண்டும். அறமே அவனைக் காப்பாற்றுவதால் அஞ்சிக் காப்பாற்ற வேண்டியது அறம் என்றார். 'அஞ்சுவது' (428) என்பது சிந்திக்கப்பட வேண்டும். அவா, வஞ்சனையாக ஒரோவழி நுழைந்து விடுமாதலால் அப்படிச் செய்யாமல் காத்துக் கொள்ளுவதே அறம் என்றார்.

**367 அவாவினை ஆற்ற அறுப்பின் ...**

ஆற்ற அறுப்பின் என்பது சிந்தனைக்குரியது அவாவினை முற்ற அறுத்தான் வேறு அறஞ்செய்ய வேண்டா; அவன் செய்தன எல்லாம் அறமாம் என்பது கருத்து. 'அவாவினை' என்பதும், 'தவாவினை' என்பதும் இருவகை வினைகளையும் விளக்க வந்தன. 'ஆற்றான் வரும்' என்பது சிறப்பினை உணர்த்திற்று.

**368 அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம் ...**

'பற்றி விடாஅ' (347) என்ற குறட்பா மேலும் விளக்கம் பெறுகின்றது. 'துறவு', 'அவாவறுத்தல்' என்ற அதிகாரங்களை இதனோடு ஒத்திட்டுப் பார்த்தல் நல்லது. 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரமும், 'இல்லாகும் துன்பம்' என்பதும், 'மேன்மேல் வரும்' என்பதும் சிந்தனைக்குரியன.

இதனால் இல்லார்க்கு இல்லாகும் துன்பம் என்பதும், அவா உடையார்க்கு துன்பம் உண்டாகும் என்பதும் உரைக்கப்பட்டன.

**369 இன்பம் இடையறாது ஈண்டும் ...**

அவா நீங்கிவிட்டால் மனம் தடுமாற்றம் அடையாது; நிறை நிலையில் இருக்கும். ஆதலால் இன்பம் மனத்தில் இடைவிடாது இருக்கும். அவா அறுத்தவர் வீட்டின்பத்தினை இந்த உடம்போடு நின்றே அடைவர். துன்பத்துள் துன்பம் என்பது மிக்க என்பதாம். அவாவை அறுத்தால் இன்பம் வரும்.

**370 ஆரா இயற்கை அவாநீப்பின் ...**

இக்குறளில் 'இயற்கை' என்பது இருமுறை கூறப்பட்டது ஆரா, பேரா என்பன சிந்தனைக்குரியன. 'அந்நிலையே' என்பது வீட்டின்ப நிலையினைக் குறித்தது. என்றும் நிலைத்து நிற்கும் இன்பம் பேரின்பமாயிற்று. அதுவே 'வீடு'. அவா நீங்கிய நிலையே அந்நிலையாயிற்று. முற்றிலும் ஆசை அற்ற இடம் பேரின்ப வீடு எனப்படும். இவனே 'சீவன்முத்தன்' எனப்படுவான்.

1 அறத்துப்பால் 4 ஊழ் இயல்

## 38 ஊழ்

பொருளுக்கும் இன்பத்திற்கும் முதற் காரணம் ஊழ்; இருவினைப் பயன், செய்தவனையே சென்றடையும். நியதி, ஊழ், பாழ், முறை, உண்மை, தெய்வம், விதி, இயற்கை என்பன ஒரே பொருளைக் கொடுப்பன.

**371 ஆகூழால் தோன்றும் அசைவுஇன்மை ....**

இதில் ஊழ், தானே தோற்றுவிக்கும் என்பதுடன் அது இருவகையாகும் என்பதும் கூறப்பட்டது. 'மடியின்மை' என்று தனியாக ஓர் அதிகாரம் உண்டு. 'அசைவின்மை' என்பது 'ஊக்கமுடைமை', 'ஆள்வினையுடைமை' முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்துகின்றது. இதனால் இயற்கையின் செயல் குறிக்கப்பட்டது.

பொருளின் ஆக்கத்திற்கும் அழிவுக்கும் துணைக் காரணமான முயற்சி, சோம்பல் (மடி) இவைகளை ஊழ் தோற்றுவிக்கும். ஆள்வினையுடைமை, மடியின்மை முதலிய அதிகாரங்களைச் சிந்திக்கவும்.

**372 பேதைப் படுக்கும் இழவுஊழ் ...**

'ஊழ்' என்பதன் செயல்கள் மேலும் இங்கு விளக்கப்படுகின்றன. 'பேதைமை', 'அறிவுடைமை' என்ற அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. முந்தைய குறட்பாவில் 'ஆகூழ்' என்றதை இங்கு 'ஆகலூழ்' என்று கூறினார். இது இயற்கையாலான அறிவையும் வேறுபடுத்தும் என்பதாம். வாழ்க்கையில் நிகழ்வனவற்றைச் செயற்கை அல்லது முயற்சியினால் ஆவதென்றும், இயற்கை அல்லது ஊழின் செயலால் நடைபெறுவனவென்றும் அறிதல் வேண்டும். 'உற்றக் கடை' என்பது சிந்தனைக்குரியது. இங்கு ஊழ், இயற்கையினாலாகிய அறிவையும் கெடுக்கும் என்பதுடன் அவ்வூழே அதனை விரிக்கும் என்பதும் ஆகும்.

**373 நுண்ணிய நூல்பல கற்பினும் ...**

இதன் கருத்து நூல்கள் பல கற்றிருக்கும் நல்ல அறிவையும் ஊழின் செயல் பேதையாக்கும்; ஊழின் வலிமை கற்ற அறிவையும் கெடுக்கும் என்றார். 'மிகும்' என்பது சிந்திக்கத் தக்கதாகும். ஊழ், தான் முன்னின்று செயல்படும்; செயற்கையாலான அறிவையும் கீழ்ப்படுத்தும். 'கற்றனைத்து ஊறும் அறிவு' (396) என்கின்ற செயற்கை அறிவை இயற்கையாலான 'பேதையறிவு' கெடுக்கும் என்பதாம்.

'கல்வி', 'அறிவுடைமை' என்ற அதிகாரங்கள் இதனால் பெறப்பட்டன. ஊழ் மேம்பட்டு நிற்கும் என்பதைச் சுட்ட 'மிகும்' என்றார். இது கால வேறுபாடுகளினால் நிகழும். நிலையாக உள்ளதன்று.

## 374 இருவேறு உலகத்து இயற்கை

உலகத்தின் இயற்கையை நாம் நன்கு புரிந்து கொள்ள வேண்டும். அறிவும் செல்வமும் சேர்ந்து ஒன்றாகத்தான் இருத்தல் வேண்டும் என்று நினைப்பது தவறு. அப்படியிருப்பது அரிதிலும் அரிது. உலக இயற்கையின் அமைப்பு எப்படியென்றால், செல்வம் படைத்திருப்பதற்கும் அறிவு நன்முறையில் பெற்றிருப்பதற்கும் தொடர்பு இல்லை என்பதேயாம்.

இக்குறட்பாவில் மூன்று முறை 'வேறு' என்னும் சொல் வந்துள்ளது. அறிவு அமைந்திருப்பதும் செல்வம் அமைந்திருப்பதும் முற்றிலும் வெவ்வேறான முறைகளாகும். அதுதான் இயற்கை. ஆதலால் உலகில் அவ்வாறு இருப்பதைக் கண்டு நாம் வியப்படைதல் கூடாது. அறிவுடையார்க்கும் ஊழுக்கும், செல்வமுடையார்க்கும் ஊழுக்கும் தொடர்பு இல்லையென்பது முடிபாகும். செல்வத்தைப் பெறுதற்கு மனம் தூய்மையும் அறிவுடைமையும் தேவை இல்லை என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. முயற்சியினால் பெறுகின்ற செல்வம் இதனால் மறுக்கப்படவில்லையென்பதும் இயற்கையின் தன்மையும் தெளிவுபடுத்தப்பட்டன.

உலகத்தின் இயற்கை இருவகைப்படும். செல்வம் இருத்தல் வேறு; அறிவு, ஒழுக்கம், இருத்தல் வேறு; இரண்டும் சேர்ந்திருக்க வேண்டும் என்பது நியதி இல்லை; இருந்தாலும் இருக்கலாம்! செல்வம் செய்வதற்கு அறிவாகிய துணைக் காரணமும் வேண்டாவாம்!

## 375 நல்லவை எல்லாஅம் தீயவாம் ...

இது செல்வத்தைப் பற்றிய ஊழினைக் குறிக்கும் குறட்பாவாகும். செல்வம் உண்டாகும் காலம் வந்தபோது நிகழ்பவை கூறப்பட்டன. 'தீயவும் நல்லவாம்' என்பதும், 'பூப்பர் ஒருகால்' (248) என்பதும் சிந்தனைக்குரியன. 'தீயவாம்', 'நல்லவாம்' என்பனவற்றைச் 'செல்வம் செயற்கு' என்பதனோடு சேர்த்துச் சிந்திக்க. அழிக்கும் ஊழ் வந்துவிட்டால் காலம் முதலியன நன்கு அமையினும் அழியும். பிறவும் அன்னவேயாகும்.

## 376 பரியினும் ஆகாவாம் பாலல்ல ...

இதில் ஊழ் வகையால் நடைபெறும் செயல்கள் விளக்கப்படுகின்றன. பரியினும், சொரியினும் என்பன சிந்திக்கத்தக்கன. ஊழினுடைய செயல்கள் முயற்சியையும் கெடுக்கும் என்பது ஈங்குக் குறிக்கப்பட்டது. ஊழ் உண்டானபோது தீமையும் வருவனவாம். ஊழ் வருவது பற்றிய நிலைமை அறிந்து கொள்ள முடியாது. ஆகையால், மனித முயற்சி இருந்து கொண்டே இருக்க வேண்டும் என்பதாம். இயற்கை என்னும் ஊழின் செயலான ஆற்றல் இதில் விளக்கப்பட்டது.

## 377 வகுத்தான் வகுத்த வகையல்லால் ...

இயற்கையின் தன்மை உருவகப்படுத்தப்பட்டு 'வகுத்தான்' என்று கூறப்பட்டது. இதனால் இன்பம் நுகர்வதற்கு ஊழ் இன்றியமையாததென்பது உணர்த்தப்பட்டது. ஆதலால் பொருள் நிறைந்திருந்தும் இன்பம் நுகர முடியாமல் இருப்பதற்குக் காரணம் கூறப்பட்டது.

'துய்த்தல்' என்பது சிந்திக்கத்தக்கது. முயற்சியினால் பொருள் நிறையத் தொகுத்து வைத்தவர்க்கும், ஊழ் உதவவில்லையென்றால் அனுபவிக்க முடியாது.

ஓர் உயிர் செய்த வினையின் பயன் பிறிதோர் உயிரின்கண் செல்லாமல் அவ்வுயிர்க்கே வரும். இஃது இயற்கையின் நியதி. இதனை உயர்திணையின்மேல் வைத்து 'வகுத்தான்' என்றார்.

**378 துறப்பார்மன் துப்புரவு இல்லார் ...**

நுகர்கின்ற பொருள்கள் ஏதுமில்லாதார் துறவறத்தை மேற்கொள்ளலாமே என்று கருதுவார்களேயானால், அதற்கும் ஊழ்வினை வேண்டும். இது 'துப்புரவு' இல்லார் துறவியாதல் எளிது என்பது மறுத்துக் கூறப்பட்டதாகும். நுகர்வதற்கு ஏதும் இல்லாத வறுமையுற்றவர்கள், துறவறம் மேற்கொள்ளுவதும் எளிதன்று.

**379 நன்றுஆங்கால் நல்லவாக் காண்பவர் ...**

இக்குறளால், ஊழினால் துன்பம் வந்தபோது அல்லல்படுதல் கூடாது என்பது உணர்த்தப்பட்டது. வினாமுறையில் அமைந்துள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். 'காண்பவர்' என்பது சிந்தனைக்குரியது. இயற்கையால் உண்டானவற்றிற்குத் துன்பப்படுதல் கூடாது என்பது உணர்த்தப்பட்டது. 'நன்று', 'அன்று' என்பன மாறுபட்ட செயல்களைக் குறித்தன.

இயற்கையென்பதை வினைப்பயன் என்றும், முன்வினைத் தொடர்பு என்றும், தொடர்ந்து முறையாக வருவனவென்றும், 'பிறவிகள்'தோறும் இணைந்து வருவனவென்றும் கூறுவர். இதனை உலகியல் நடைமுறைகளில் காணப்படும் நிகழ்ச்சிகளைக் கண்டு நாம் தெளிதல் வேண்டும். உலக இயற்கையில் இன்பம் வந்தபோது மகிழ்வதுபோல் துன்பம் வந்துற்றபோது வருந்தாதிருக்க வேண்டும்.

**380 ஊழின் பெருவலி யாஉள ...**

இக்குறட்பாவுடன் 'தெய்வத்தான் ஆகாது' (619) என்பதையும் 'ஊழையும் உப்பக்கம்' (620) என்பதையும் ஒப்பிட்டுச் சிந்திக்க வேண்டும். ஊழ் என்கின்ற இயற்கை, வலிமை நிறைந்தது ஆகையால் 'பெருவலி' என்று கூறினார். ஊழினை விலக்குவதற்குப் பல முறைகளைச் செய்தாலும் அது வந்தே தீரும் என்ற உண்மையைத் தெளிவுபடுத்த வேண்டியே 'தான் முந்துறும்' என்று குறிப்பிட்டார். விரிவான விளக்கங்களைப் பிறிதோர் இடத்தில் காண்க. இயற்கை, ஊழ் என்றும், செயற்கை முயற்சி என்றும் கூறப்படும். இப்பிறவியில் அனுபவித்தே தீர வேண்டியவை இக்குறட்பாவால் கூறப்பட்டன. 'நீக்க முடியும்' என்பதை 'ஊழையும் உப்பக்கம்' (620) என்பது கூறுகிறது. பிற விளக்கங்களைப் பிறிதோர் இடத்தில் காண்க.

## 2 பொருட்பால் 1 அரசியல்

### 39 இறைமாட்சி

**381 படைகுடி கூழ்அமைச்சு நட்பு ...**

இல்லறத்தில் சிறந்து விளங்கும் தலைவனை 'ஏறு' என்று குறிப்பிட்டதுபோல 'ஏறுபோல் பீடுநடை' (59) இக்குறட்பாவிலும் 'அரசருள் ஏறு' என்று கூறினார். படைமாட்சி, படைச் செருக்கு, குடிமை, அமைச்சு, பொருள்செயல்வகை, நட்பு, நட்பாராய்தல், அரண், நாடு முதலியன போன்ற அதிகாரங்கள் நினைவுபடுத்தப் பட்டன. 'ஆறும்' என்றதால் அவற்றின் இன்றியமையாத் தன்மை கூறப்பட்டது.

**382 அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் ...**

'அஞ்சாமை' என்பது சிந்திக்கத் தக்கது. ஈகை, ஊக்க முடைமை, அறிவுடைமை முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப் பட்டன. 'அஞ்சாமை' என்பது வீரப்பகுதியை உணர்த்துவதாகும். அரசன் மகன் அரசனாதல் என்கின்ற பழக்கத்தைக் கொள்ளாது நிறைந்த — சிறந்த பண்பாளனே மன்னன் என்று குறிக்கப்பட்டது. அரசன், மன்னன், வேந்தன் என்பன தலைவன் என்ற பொருளிலேயே கூறப்பட்டன. ஆதலால்தான் இறை, இறைவன் என்று பற்பல இடங் களிலும் குறித்தார் ஆசிரியர்.

**383 தூங்காமை கல்வி துணிவுஉடைமை ...**

இக்குறளில் மீண்டும் சிறந்த பண்புகள் கூறப்பட்டன. கல்வி, கல்லாமை, கேள்வி முதலிய அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. ஆள்வினையுடைமை என்ற அதிகாரம் ஈங்கு உணர்த்தப்பட்டது. 'துணிவு' ஆண்மையைக் குறித்தது. 'கல்வி' என்றோர் அதிகாரமும் உண்டு. காரியத்தில் விரைவைக் குறிக்க 'தூங்காமை' என்றார்,

**384 அறன்இழுக்காது அல்லவை நீக்கி ...**

இதனால் 'மானம்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'அறம்', 'வீரம்' முதலியன இக்குறளில் கூறப்பட்டன. 'இழுக்கா' என்பது இருமுறை கூறப்பட்டது; 'மறன் இழுக்கா மானம்' என்பது சிந்தனைக்குரியது. 'அறம்', 'மறம்' இரண்டும் தலைசிறந்த பண்புகள். இதனால் 'அறம்' தலையாயது என்று கூறப்பட்டது. மறம், வீரம் இரண்டும் இன்றியமையாதன.

**385 இயற்றலும் ஈட்டலும் காத்தலும் ...**

'இயற்றல்' என்பது உண்டாக்குதல் என்பது மட்டுமன்று; புதிதாகக் கண்டுபிடித்தல் என்பதுமாகும். 'இயற்றினான்' என்று கூறுவது வழக்கம். இக்குறளில் பல வகைப்பட்ட செயல்கள் சுருக்கமாகக் கூறப்பட்டன. 'வல்லது அரசு' சிந்தனைக்குரியது.

**386 காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் ...**

இதனால் சொற்களின் தன்மை உணர்த்தப்பட்டது. 'எளியன்' என்பது சிந்தனைக் குரியது. மன்னனாகிய தலைவன் மக்கட்கு வேண்டிய போதெல்லாம் காட்சியளிக்க வேண்டும். எளிமையான காட்சியும் இனிமையான சொற்களும் கொண்டிருத்தலை இக்குறள் சுட்டுகிறது.

**387 இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்கு ...**

இக்குறளில் 'இனியவை கூறல்', 'ஈகை' முதலிய அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. 'அளித்தல்' சிந்திக்கத்தக்கது. முந்தைய குறட்பாவில் 'வல்லது' என்று கூறினாற்போல, இங்கும் 'வல்லார்க்கு' என்று கூறினார். 'சொலால்' என்பது 'புகழினைக் காத்து' என்பதாகும். 'சொற்காத்து' (56) என்பது போன்றவை நினைக்கத்தக்கவை. 'தான் கண்டனைத்து இவ்வுலகு' என்பது சிறப்பினைக் குறித்தது. அருமையான இக்குணங்கள் உடையாரை 'வல்லார்' என்றார்.

**388 முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் ..**

இதில், மன்னவன் 'இறையென்று வைக்கப்படும்' என்றார். இக்குறளில் முறை 'செய்தலின்' சிறப்புக் கூறப்பட்டது. 'தெய்வத்துள் வைக்கப்படும்' (50), 'செத்தாருள் வைக்கப் படும்' (214), 'அலகையா வைக்கப்படும்' (850) என்று அமைகின்ற முறையில் இக்குறட்பாவும் கூறப்பட்டது இறை, சிறப்புக் கருதி மக்களில் பிரித்து வைக்கப்படுவான் எனப்பட்டது. முறை என்பது அறநூலும் நீதிநூலும் சொல்லும் நெறிகள். இதனுடன் 'செங்கோன்மை' அதிகாரம் காண்க.

**389 செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை ...**

இக்குறளில் பண்புடை வேந்தன் என்று மன்னனைக் குறிப்பிட்டார். 'பண்புடைமை', 'பொறையுடைமை' என்ற அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. இடிக்கும் துணைவர்களை வைத்திருக்க வேண்டும் என்பது 'செவிகைப்ப' என்பதால் உணர்த்தப்பட்டது. ஆதலால் இடித்திடித்துக் கூறினாலும் பொறுத்துக் கொள்ளவேண்டும் என்பதாகும்.

### 390 கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் ...

இக்குறளில் 'ஈகை', 'அன்புடைமை', 'அருளுடைமை', 'செங்கோன்மை' முதலிய அதிகாரங்களும் 'குடிபுறங்காத் தோம்பி' (549), 'மன்னாவாம் மன்னர்க்கு ஒளி' (556) என்பவையும் சிந்தனைக்குரியன. இந்த அதிகாரம் 'இறைமாட்சி' என்று அமைக்கப்பட்டதால் தலைமைக்குரிய அரிய பண்புகளும் சிறப்பும் கூறப்பட்டன. 'அளி' என்பது முகம் மலர்ந்து கூறல். 'செங்கோன்மை'யைக் கருதுக. 'இறைமாட்சி' அதிகாரம், மன்னன் நற்குணங்கள் அமைந்தனவாக இருக்க வேண்டும் என்று உணர்த்திற்று. இதனால் மன்னர் மகன் மன்னன் என்ற பரம்பரை கூறப்படவில்லை.

## 40 கல்வி

### 391 கற்கக் கசடறக் கற்பவை ...

'கற்பவை' என்பதால் கற்கப்பட வேண்டிய நூல்களைத்தான் கற்க வேண்டும் என்பது குறிக்கப்பட்டது. 'நிற்க' என்பது ஆராய்வதற்குரியது. ஆதலால் 'அதற்குத்தக' என்றார். 'ஓதி உணர்ந்தும்' (834) என்பது சிந்தனைக்குரியது. 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரம் நினைக்கத்தக்கதாகும். 'கற்பவை' என்பது நன்கு சிந்திப்பதிற்குரியது. இதனால் தீமை பயக்கும் நூல்களைக் கற்கக் கூடாது என்பது பொருள். 'இலங்கு நூல்' (41) என்பது இங்கே மிகவும் கருத வேண்டியதாகும்.

### 392 எண்என்ப ஏனை எழுத்துஎன்ப ...

'எண்' கணிதத்தையும், 'எழுத்து' பிறவற்றையும் உணர்த்தினவாகும். இவையிரண்டினையும் கொண்டே உலகில் வழங்கி வரும் நூல்கள் அனைத்தையும் நாம் அறிதல் வேண்டும். ஆதலால் 'கண்' என்றார். நாம் மக்களாக வாழவேண்டும் ஆதலால் நம்மை 'வாழும் உயிர்' என்றார்; 'வாழாதவர்' (240) என்பது சிந்தனைக்குரியது 'வாழும் உலகு' (53), 'வாழும் குடி' (542) என்பதுபோல இங்கே 'வாழும் உயிர்க்கு' என்றார். 'எண்' என்பது கணிதத்தையும், எழுத்து என்பது சொல்லையும் குறித்தது. 'கண்ணோட்டம்', 'கண் விதுப்பழிதல்', 'குறிப்பறிதல்' (பொருட்பால்), 'குறிப்பறிதல்' (காமத்துப்பால்), 'குறிப்பறிவுறுத்தல்' முதலிய அதிகாரங்கள் 'கண்கள்' சம்பந்தப்பட்டவை.

### 393 கண்ணுடையர் என்பவர் கற்றோர் ...

கல்வியினால் அறிவுக் கண் திறக்கப்படுவதால் கற்றவர்கள் உலகில் பலவற்றையும் கண்டறியும் சிறப்புடையவர்கள் ஆவார்கள். கல்லாதவர்கள் அவ்வாறு அறியமாட்டாதவர்களானபடியால் 'புண்' என்று கூறினார். இதனால் 'கல்லாமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. 'உடையர்' என்பது இருமுறை கூறப்பட்டது. கல்வியில்லாதவர்கள் துன்பம் செய்யும் நோயுடைய ஊனக் கண் உடையவர்கள் என்பது கூறப்பட்டது. முன் குறட்பாவில் கூறியதை மேலும் இக்குறளால் விளக்கம் செய்தார். 'கல்விக்கண்', 'அறிவுக்கண்' என்பவை உண்மையான கண்கள் என்ற சிறப்புக்குரியன.

**394 உவப்பத் தலைக்கூடி உள்ள ...**

வள்ளுவர், கற்றறிந்தவர்களைப் புலவர் என்றார். நல்வழி ஒழுகல், நல்லன கூறல் என்பன தொழிலெனக் குறிக்கப்பட்டன. ஆதலால் 'அனைத்தே' என்று கூறினார். இதன் மூலம் கல்வி, அறிவு, பண்பு, ஒழுக்கம் ஆகிய அனைத்தும் உடைய புலவர்களின் செயல் விளக்கப் பட்டது. கூடுகின்ற போதும் பிரிகின்ற போதும் கற்றறிந்தவர்கள் எவ்வாறு நடந்து கொள்ளுவார்கள் என்பது குறிக்கப்பட்டது. 'பெரிதினிது' (839) என்பது போன்ற குறட்பாக்கள் சிந்தனைக்குரியன. 'புலவரைப் போற்றாது' (234) என்ற இடத்திலும், இங்கும் 'புலவர்' என்ற சொல் காணப்படுகிறது.

**395 உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் ...**

'உடையார்', 'இல்லார்' என்பது உலக வழக்காகும். பொய்யாய மானம் நோக்கி, தாழ்ந்து மெய்யாய கல்வியை இழந்தார் பின்பு ஒரு ஞான்றும் அறிவுடையராகாமையின், 'கடையரே' என்று கூறினார். ஆசிரியர்களிடம் மிகவும் பணிந்து தாழ்ந்து கற்பவர்கள் சிறந்த கல்வியைப் பெறுவார்கள் என்பார். 'ஏக்கற்றும்' என்பது சிந்திக்கத் தக்கது. பின்பு ஒரு போதும் பணிவும் ஆர்வமும் இல்லாவிடின் கல்வி வாராது.

**396 தொட்டனைத்து ஊறும் மணற்கேணி ...**

இதில் இரு முறை 'அனைத்து' கூறப்பட்டது மிகுதியும் சிந்தனைக்குரியது. 'ஊறும்' என்பதும் சிந்திக்கத் தக்கது. நீர் எவ்வாறு வருகின்றதென்பது எளிதில் கண்டு கொள்ள முடியாததுபோல, அறிவு எவ்வாறு மிகும் என்று புரிந்துகொள்ள முடியாதபடி மிகுந்து கொண்டே போகும். கல்வி கற்றுக்கொண்டே இருக்க வேண்டும் என்பது குறிப்பால் உணர்த்தினார்.

கேணி என்றது அதனிடம் உள்ள நீரையே. சிறிது கற்ற துணையான் அமையாது மேன் மேல் கற்க வேண்டும் என்பதாம். தோண்டுகின்ற செயலுடைய கேணியை உவமையாகக் கூறியதால் கல்வியென்பது குறிப்பால் ஒரு தொழிலோடு எப்போதும் இணைந்திருக்க வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது.

**397 யாதானும் நாடுஆமால் ஊர்ஆமால் ...**

வினாமுறையில் அமைந்துள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்று. நாடு, ஊர் என்பன பிரித்துக் கூறப்பட்டன. கல்வி உயிரோடு சேர்தலின் 'சாந்துணையும்' என்றார். கல்வி கற்பதற்கு வாழ்நாள் முழுதும் கொள்ளப்படும்; கல்விக்கு அளவு இல்லை. சாகும்வரை கல்வி கற்கவேண்டும் என்றார். நாடு, ஊர் என்று விளக்கம் தந்தார்; 'தேசம்' என்பதை 'எண்ணிய தேயத்து' (753) என்ற குறட்பாவில் சொன்னார்.

**398 ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ...**

இக்குறளில், வினைகள் போல் உயிரின்கண் சேர்ந்து அது புகுந்தபோது புகும் ஆதலால், 'எழுமையும் ஏமாப்புடைத்து' என்றார். ''எழுகின்ற'' பல பிறவிகளிலும் துணையாக நிற்பது மட்டுமின்றிப் பாதுகாப்பாகவும் இருக்கும் என்பது உணர்க. 'ஏழு பிறப்புகளிலும்

என்று கூறுவதும் அமையும்; 'தான்'—சிந்திக்க. கல்வி, பரம்பரைக்கும் பல பிறவிகட்கும் தொடர்ந்து பாதுகாப்பாக இருக்கும் என்றார் 'எழுபிறப்பும் தீயவை' (62) ஐயும் பிற இடங்களையும் நோக்குக.

**399 தாம்இன் புறுவது உலகுஇன்புற ...**

தாம் இன்புறுகின்ற கல்வியொன்றுதான் உலக மக்களையும் இன்புறுமாறு செய்யும் என்பது இதில் கூறப்பட்டது. தாம் இன்பம் அடைவதற்குரிய மற்றவை எல்லாம் பிறர்க்கு இன்பம் தராது என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'இன்புறுவது' இருமுறை கூறப்பட்டது. 'காமுறுவர்' என்பது குறிப்பால் அறிய வேண்டுவதாகும் ஆதலால் மேலும் மேலும் ஆசைப் படுவர் என்பதாம். 'அறிந்தார்' என்பதால் 'அறிவுடைமை' அதிகாரம் குறிக்கப்பட்டது. எதைக் கண்டு 'காமுறுவர்' என்பது உணர்த்தப்பட்டது. இக்குறளில் வரும் 'காமுறுவர்' என்ற சொல்லின் அமைப்பு சிந்திக்கத் தக்கது.

**400 கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ...**

இதனால், பிற செல்வங்கள் அனைத்தும் காலப்போக்கில் அழிவன என்பது உணர்த்தப்பட்டது. பிறசெல்வங்கள் எல்லாம் குறைதலும், அழிதலும் உடையன ஆகையால் 'மாடல்ல' என்று குறித்தார். கல்வியை விழுச்செல்வம் என்றார். 'விழுப்புண்' (776) என்பதனையும் சிந்தித்தறிக. வழிபட்டார்க்கும் கொடுத்துழி குறையாமை கல்வியின் சிறப்பாகும்; களவாட முடியாததுமாகும்.

## 41 கல்லாமை

**401 அரங்குஇன்றி வட்டாடி அற்றே ...**

கோட்டி என்பதால் 'அவையறிதல்', 'அவையஞ்சாமை' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. 'இன்றி' இருமுறை வந்துள்ளது. 'அரங்கும்', 'நிரம்பியநூலும்' சிந்திக்கத்தக்கன. இதன் பொருள் நிரப்பிய நூல்களைக் கற்காமல் வார்த்தைகளைச் சொல்லுதல் கூடாது என்பதாம். ஆடுகின்ற இடம் அரங்கம் என்பதாகும். ஆகவே, 'வட்டு ஆடுதல்' சிந்திக்கத்தக்கதாகும். கல்லாதார் வார்த்தை பிழைபடும் என்பதாம். நிரம்புதல்—அறிய வேண்டுவன எல்லாம் அறிதல்.

**402 கல்லாதான் சொல்கா முறுதல் ...**

'காமுறுதல்' இருமுறை கூறப்பட்டது. 'இல்லாதாள்' என்றதால் மிகவும் சிறுமியாக இருப்பவள் என்பது இங்கே குறிக்கப்பட்டது. பருவம் பெற்ற பிறகே அவளுக்குப் பெண்ணிச்சை உண்டாதல் வேண்டும் என்பது குறிப்பாகும். 'கல்லாதான்', 'இல்லாதாள்' சிந்தனைக்குரியன. கல்லாதான் சொல்லை யாரும் விரும்பமாட்டார்கள் என்பதும் முலை

இரண்டும் இல்லாதாளை யாரும் விரும்ப மாட்டார்கள் என்பதும் குறிப்பால் உணர்த்தப் பட்டன. 'இரண்டும் இல்லாதாள்' என்பது அவை இல்லாதவள் என்பதல்ல! சிறுமி என்பது பொருளாகும்; 'முகிழ்த்தல்' அடையாத சிறுமிக்குக் காமுறுதல் தோன்றாது என்பதாம்.

**403 கல்லா தவரும் நனிநல்லர் ...**

இக்குறளில் அருமை நோக்கிப் 'பெறின்' என்றார். கல்லாதவர்களும் சொல்லுவதற்கு ஆசைப்படுவார்களாம். என்றாலும், கல்லாதவர்கள் கற்றார்முன் ஒன்றும் சொல்லக்கூடாது. ஆனால் அவர்களைப் போன்றவர்களிடம் சொல்லலாம் என்பது குறிப்பு. தம்மைத் தாம் அறியாமையின் அது கூடாது என்பதைக் குறிக்க 'பெறின்' என்றார். 'முந்து கிளவாச் செறிவு' (715) என்பதையும் இங்கே நோக்கவும்.

**404 கல்லாதான் ஒட்பம் கழியநன்று ...**

கல்லாதவனது அறிவுடைமை நிலைத்து நிற்காது. ஆகையால் அதனைக் 'கொள்ளார்' என்று கூறினார். 'யார் யார் வாய்க் கேட்பினும்' (423) என்பது சிந்தனைக்குரியது. 'ஒட்பம்' என்பது புகழ் என்பதனையும் குறிக்கும். இதனால் 'அறிவுடைமை' அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. 'ஒட்பம்' ஒண்மை என்பதாம். அதாவது அறிவுடைமையாகும். 'ஒண்மை உடையம் யாம்' (844) என்பது ஈண்டு கருதத்தக்கது. 'வினைத் திட்பம்' 'மனத்திட்பம்' (661) மதி நுட்பம் — அதி நுட்பம் (636) என்பவற்றைச் சிந்திக்கவும். இதனால் வினைத் திட்பம் என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகிறது. 'ஒட்பம்' என்பதற்கு அறிவுடைமை என்று பொருள் கொண்டால் இக்குறட்பா 'அறிவுடையார்' என்று முடிந் திருப்பதால் மயக்கம் உண்டாக்கும்.

**405 கல்லா ஒருவன் தகைமை ...**

கல்லாதவன் ஒன்றைச் சொன்னவுடன் பிழைபடுமாகையால் இக்குறள் அவ்வாறு கூறப்பட்டது. கல்லாத ஒருவன் தன்னைக் கற்றவன் போல மதித்துக் கொண்டிருப்பது எப்படியும் வெளிப்பட்டு அவன் அறியாமையினை உணர்த்திவிடும். ஆதலால் கல்லாதவனிடம் கற்றவன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாலே அவனது கல்வி இன்மை புரிந்துவிடும். கல்லாதவன் பேசுகின்ற சொற்களே அவன் கல்வி அறிவு இல்லாமல் கற்றவன்போல் நடிக்கின்றான் என்பதைக் காட்டிவிடும்.

**406 உளர்என்னும் மாத்திரையர் அல்லால் ...**

களர், தானும் மதிக்கப்படாததாகி உயிர்கட்கும் உணவு முதலியன தராது. அதுபோல கல்லாதவனும் பிறர்க்குப் பயன்பட மாட்டான். 'அவர்களும் இருக்கின்றார்கள்' என்ற எண்ணிக்கைக்குத்தான் கொள்ளப்படுவர்களேயல்லாமல் வேறு எதற்கும் பயன்பட மாட்டார்கள். 'பயவாக் களர்' என்பது ஈண்டு நினைக்கத்தக்கது.

**407 நுண்மாண் நுழைபுலம் இல்லான் ...**

நூல்களில் சென்ற அறிவை ஒருவன் பெற்றிருக்க வேண்டும் என்பது இதனால் உணர்த்தப்பட்டது. மேலும், வடிவம் மட்டும் அழகாக இருப்பதால் ஒருவற்குப் பயனில்லை.

'மாண்' இருமுறை கூறப்பட்டது. 'எழில் நலம்', 'புனைபாவை' சிந்தித்தறிக. இதன் கருத்து, நூலறிவு இல்லாத ஒருவனுக்கு அவன் வடிவழகால் யாது பயனும் இல்லை என்பதே.

### 408 நல்லார்கண் பட்ட வறுமையின் ...

'வறுமை' என்றதால் 'நல்குரவு' என்ற அதிகாரம் ஈங்கு நினைவு கொள்க. 'திரு' என்பதால் 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரம் உணர்தற்குரியது. 'கல்லார் கண்பட்ட திரு' என்பது 'நன்றியில் செல்வம் என்ற அதிகாரத்தையும் குறிக்கும். 'திரு' கல்லாரைக் கெடுக்கும் என்பதை வலியுறுத்தவே 'பட்ட' இருமுறை கூறப்பட்டது. 'இன்னாதே' என்பதால் செல்வம் பெற்ற கல்லாதார் பிறருக்குத் துன்பம் தருவர் என்பது குறிப்பு. இதன் கருத்து: செல்வம் கல்லாரைக் கெடுக்கும்; வறுமை நல்லாரைக் கெடுக்காது.

### 409 மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் ...

மேன்மையான தன்மைகளும் பண்பாடுகளும் பெற்ற குடும்பத்தில் ஒருவன் பிறந்திருந்தாலும் கல்வியின்மை அவனைத் தாழ்ந்தவனாகவே கருதச் செய்யும். மேல், கீழ் என்பன இயல்பாகவே சான்றோர்கள் பிறந்திருக்கும் குடும்பங்கள் என்பதையும், தகாத செயல்கள் புரியும் கீழோர்கள் பிறந்த குடும்பங்களையும் குறித்தன. 'குடிமை' முதலிய அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. பாடு என்பது பெருமை, சிறப்பு என்பதைக் குறிக்கும். 'பாடு பெறுதியோ' (1237) போன்றவை சிந்திக்கத்தக்கன. மேற்பிறந்தார், கீழ்ப்பிறந்தார் என்பது பண்புகளாலும் ஒழுக்கங்களாலும் சிறந்தவர்களையும், அவை இல்லாதவர்களையும் கொண்ட குடும்பங்களைக் குறித்தன. இத்துடன் குடிமை, மானம், பெருமை என்ற அதிகாரங்களை நினைவிற் கொள்க.

### 410 விலங்கொடு மக்கள் அனையர் ...

இதன் கருத்து மக்கட்பிறப்பு பெற்றிருந்தும் பயனில்லை என்பதே. 'இலங்குநூல்' என்பது பெருமையையும், 'விலங்கொடு' என்பது இழிவினையும் குறித்தன. முதலில் விலங்கினங்களோடு மக்களை ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும்; பின்னர், கல்லாதவர்களைக் கற்றவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும்.

மக்களுடன் விலங்கினங்களை ஒப்பிடுதல்; விலங்கினங்கள் மிக மிகத் தாழ்ந்தவை; அதுபோல இலங்கு நூற்களைக் கற்றவர்களுடன் அவ்வாறு கல்லாதவர்களை ஒப்பிடுதல். இதனை நன்கு சிந்தித்துப் புரிந்து கொள்க. இலங்கு நூலறிவு இல்லாதவர்கள் கற்றவர்கள் என்ற பெருமைக்கு உரியவர்களாக மாட்டார்கள் என்பது குறிப்பு.

## 42 கேள்வி

### 411 செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் ...

கேள்வியால் எல்லாப் பொருள்களையும் ஒருவர் அறிந்து கொள்ள முடியுமாகையால் 'செவிச்செல்வம்' மிகவும் சிறப்பித்துக் கூறப்பட்டது. 'செல்வத்துள்' என்பது இருமுறை கூறப் பட்டது. 'செல்வம்' என்பது மூன்று முறை கூறப்பட்டது. பிற செல்வங்கள் பொருளால்

வருவன ஆகையால் நிலைத்து நிற்காதவையாம். ஆதலால் 'தலை' என்றார். மற்றவை மறைவனவாகும்.

**412 செவிக்குஉணவு இல்லாத போழ்து ...**

செவிக்குக் கொடுப்பதைத்தான் 'உணவு' என்று கூறிச் சிறப்பித்தார் வள்ளுவர். 'ஈயப்படும்' என்பது ஈண்டு சிந்திக்கத்தக்கதாகும். செவிச்செல்வம் நிலைத்து நிற்கும் இன்பத்தைத் தருவதாகும். 'ஈதல்' என்பது வயிற்றினது இழிவு தோன்ற நின்றதாகும். பெரிது உண்ணுதல் காம நுகர்ச்சியைப் பெருக்குதலால் 'சிறிது' என்றார். சுவை மிகுதியும் பிற்பயத்தலும் உடைய கேள்வி உள்ளபோது, வெறுக்கப்படுதலின் 'இல்லாத போழ்து' என்றார். அதிகம் உண்ணுதல் நோயையும் காமத்தையும் பெருக்குதலால் 'சிறிது' என்றார்.

**413 செவியுணவின் கேள்வி உடையார் ...**

முந்தைய குறட்பாவில் கூறியது போல இக்குறளில், செவியால் கேட்கப்படுவதனை உணவு என்றார் ஆசிரியர். அவியென்பது வேள்வித் தீயில் இடப்படுவதாகும். வேள்வியைச் (யாகம்) செய்து அதில் இடப்படும் உணவ வானோர்களுக்கென்பது உலகியல் கருத்தாகும். அத்தகைய உணவினைக் கொள்ளுகின்ற வானோர்களை ஆன்றோர் என்று நம் முன்னோர்கள் குறிப்பிட்டார்கள். கேள்வி உடையார் அவி உணவு கொள்பவர்களுக்குச் சமம் என்றார் வள்ளுவர். இதனால், 'கேள்வியுடையார் ஒப்பர்' என்பதாகும். எனவே, செவியுணவைவிட மேம்பட்டவர், அவி உணவு ஆன்றோர் என்று கொள்ளுதல் கூடாது என்பதாகும். அவ்வாறு உலகில் இருக்கும் பழக்கத்தைச் சுட்டிக்காட்டி அதற்கு உடன்படாமலும் மறுக்காமலும் உய்த்துணர வைத்தார். 'அவிசொரிந்து' (259) என்பது ஈண்டு சிந்திக்கத்தக்கதாகும். எனவே, செவியுணவே போதுமானது என்பது உணர்த்தப்பட்டது. 'செவியுணவு', 'அவியுணவு' இரண்டும் நன்கு சிந்தித்தறிய வேண்டுவன.

உலக வழக்கில் 'தேவர்கட்கு அவியுணவு கொடுத்தல்' என்பார்கள். அதனைச் சுட்டிக் காட்டிச் செவி உணவே உயர்வானதென்று கருதப்படும் என்றார் வள்ளுவர். முந்தைய குறட்பாவிலும், 'செவி உணவு' என்றார். இதனால் 'அவி சொரிந்து ஆயிரம்' (259) நினைக்கத் தக்கது. 'ஆயிரம் வேட்டலின்' என்பதைக் கருதுக.

**414 கற்றிலன் ஆயினும் கேட்க ...**

மனத்தளர்ச்சி வந்தபோது நல்ல துணையாக இருப்பது எதுவென்று இதனால் உணர்த்தப்பட்டது. மேலும், துன்பத்தைப் போக்குதற்கு அரியவழி கூறப்பட்டது. 'ஒற்கத்தின்' என்பது சிந்திக்கத்தக்கதாகும். கேள்வி ஞானம் மிகவும் உதவியாக இருக்கும் என்பதாம். மேலும், கற்றல் வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. வறுமை, அறிவின்மை, இடுக்கண் இவைகளினால் மனம் தளரும்; இதை 'ஊற்றாம் துணை' என்றார்.

**415 இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் ...**

முன் குறட்பாவில் கூறப்பட்ட 'ஊற்றாம் துணை' இக்குறட்பாவில் 'ஊற்றுக்கோல்' என்று சிறப்பிக்கப்பட்டது. இதனால், 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்

பட்டது. 'வாய்' என்று சிறப்பித்ததால் தீமையறியாதது என்றுணர்த்தப்பட்டது. கல்வியுடையரேனும், ஒழுக்கமில்லாதார் அறிவிலர் ஆகலின், அவர் வாய்ச் சொல் கேட்கப்படாது என்பது தோன்ற, ''ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்'' என்றார். ஈங்கு 'சொல்' என்பது கேள்வி ஞானத்தைக் குறித்ததாகும். தளர்ந்த காலத்தில், அத்தளர்ச்சியினை நீக்குவது ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல்; இது சிந்திக்கத்தக்தாகும்.

### 416 எனைத்தானும் நல்லவை கேட்க ...

'பெருமை' என்ற சொல், 'பெருமை' என்ற அதிகாரத்தை நினைவுபடுத்தும். 'நீத்தார் பெருமை' என்றோர் அதிகாரமும் உண்டு. 'எனைத்தானும்', 'அனைத்தானும்' என்பனவ சிந்திக்கத் தக்கன. 'கேள்வி ஞானம்' மழைத்துளி போல் வந்து எல்லா அறிவையும் உண்டாக்குதலால் சிறிது என்று இகழ்தல் கூடாது என்பதாம்.

### 417 பிழைத்து உணர்ந்தும் பேதைமை ...

இக்குறளில், 'பேதைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. மேலும் 'சொல்' விளக்கம் தருகின்ற அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. இதனால் கேட்டார்க்கு வரும் நன்மை தெளிவுபடுத்தப்பட்டது. 'அவையறிதல்', 'அவை அஞ்சாமை', 'இனியவை கூறல்', 'சொல்வன்மை', 'பயனில சொல்லாமை', 'புறங்கூறாமை', வாய்மை முதலிய அதிகாரங்கள் எல்லாம் சொற்களின் தன்மைகளை உணர்த்துவன. இவைபோன்று பிற இடங்களையும் கண்டு தெளிக. 'ஈண்டிய' என்பது, பலவாற்றான் வந்து நிறைதல் என்பதைக் குறித்தது.

### 418 கேட்பினும் கேளாத் தகையவே ...

'தோட்கப் படாத செவி' சிந்திக்கத் தக்கதாகும். நுண் பொருள்களைக் கேட்பது தான் 'கேட்பது' என்பதற்குப் பொருளாகும். இல்லாவிட்டால் கேளாத செவியென்றாகும். ஆதலால் எப்போதும் நல்ல கருத்துக்களைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும் என்பதை உணர்த்தவே ''தோட்கப் படாத'' என்று அமைத்தார். ஓசை மாத்திரத்தான் உறுது எய்தாமையால், 'கேளாத்தகைய' என்றார். மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாகலின் கேள்வியைக் கருவியாக்கிக் கூறினார். பழைய துளை துளையன்று என்பதாம்.

### 419 நுணங்கிய கேள்வியர் அல்லார் ...

பணிவாகப் பேசும் பழக்கம் வருதற்கு வழி கூறப்பட்டது. மேலும் நுண்ணிதாகக் கேட்டறிதல் வேண்டும் என்பது புலப்படுத்தப்பட்டது 'கேள்வியர்', 'வாயினர்' என்பன சிந்தித்தறிய வேண்டுவன. 'நுணங்கிய', 'வணங்கிய' என்பன அருமையை உணர்த்தின. கேளாதார், உணர்வு இன்மையால் தம்மையே வியந்து கூறுவர் என்பதாம்.

### 420 செவியின் சுவையுணரா வாயுணர்வின் ...

வினாமுறையில் அமைக்கப்பட்டுள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும். 'இல்லது என் உள்ளது என்? (53) என்ற அமைப்பு முறையில் இக் குறட்பா காணப்படுகின்றது. மக்கள் என்று கூறாமல், 'மாக்கள்' என்று கூறியது இழி தன்மையினை உணர்த்திற்று. 'கொலை

வினையராகிய மாக்கள்' (329) என்பது சிந்திக்கத் தக்கதாகும். 'செவியிற் சுவை' என்றும், 'வாயுணர்வு' என்றும் கூறியன சிந்தனைக்குரியன. சுவை உணர்வு என்பன வேறுபட்ட கருத்துக்களை உணர்த்துகின்றன. 'மாக்கள்' என்பார்; உலகிற்குப் பயன்படாதவர்களாதலால் அவர்களை 'அவியினும் வாழினும் என்' என்றார்.

## 43 அறிவு உடைமை

### 421 அறிவுஅற்றம் காக்கும் கருவி ...

'அரண்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'செறுவார்க்கும்' என்றதால், 'பகைமாட்சி', 'உட்பகை', 'பகைத்திறந் தெரிதல்' முதலிய அதிகாரங்கள் குறிக்கப்படுகின்றன. உள்ளே புகுந்து அழிக்க முடியாத அரண் ஆனபடியால் 'உள்ளழிக்கலாகா அரண்' என்றார். 'காத்தல்' என்பது முன் அறிந்து காத்தலாகும்.

### 422 சென்ற இடத்தால் செலவிடாது ...

அறிவினுடைய சிறப்பான நற்பணி இக்குறளில் கூறப்பட்டது. மனத்தை அடக்கியாளும் அறிவின் ஆற்றல் புலப்படுத்தப்பட்டது. உய்ப்பது என்பது அறிவின் செயலாகும்; மனம் தீதான இடங்களுக்குச் செல்லும் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. மனத்தைப் புலமறிந்து செலுத்துவது அறிவு என்றார். ஏனெனில் அது உயிர்க்குணமாகும்.

### 423 எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் ...

இதில், அறிவின் வல்லமை கூறப்பட்டது. எப்பொருள், அப்பொருள், மெய்ப்பொருள் என்பன சிந்தனைக்குரியன. மக்களுக்குக் குணங்கள் மாறி மாறி வருதல் இயல்பாதலால், உயர்ந்த பொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தார் வாயினும் தோன்றுதல் கூடும். எனவே 'யார்யார்வாய்' என்று கூறினார். சொல்வாரது தன்மை நோக்காமல் பொருளினது பயன்நோக்குதல் அறிவின்செயல் எனப்பட்டது. மக்களுக்குக் குணங்கள் மாறி மாறி வருவன ஆதலால் உயர்ந்தோர், தாழ்ந்தோர், பகைவர் என்று கருதாது 'யார் யார்' என்றார். 'காண்பது அறிவு' (355) சிந்தித்தறிக.

### 424 எண்பொருள ஆகச் செலச்சொல்லி ...

எளிமையாக விளங்குமாறு சொல்லுதல் வேண்டும் என்பது இதன் கருத்து. 'எண் குணத்தான்' (9) என்பது போன்று, எண்பொருளாக என்று அமைத்தார் ஆசிரியர். 'செலச் சொல்லுதல்' என்பதும் 'நுண் பொருள் காண்பது' என்பதும் சிந்திக்கத்தக்கன. 'சொல் வன்மை', 'அவையறிதல்', 'அவையஞ்சாமை' முதலிய அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. எனவே, சொற்பொருள் காண்டல் அறிவு என்றார். சொல்லுவன வழுவின்றி இனிது விளங்கச் சொல்ல வேண்டும். கேட்பன வழுவுடையதாக விளங்காவாயினும், அதன் பயனைக் கொள்ளுதல் வேண்டும்.

**425 உலகம் தழீஇயது ஒட்பம் ...**

இக்குறளில் 'ஒட்பம்' என்பது விளக்கப்பட்டது. 'கல்லாதான் ஒட்பம்' (404), 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' (140) என்பன சிந்திக்கத்தக்கன. உயர்ந்தோரை நட்பு செய்து கொள்ளுதல் வேண்டும். என்றும் ஒருதன்மையதாகவே இருப்பது அறிவாகும். 'மலர்தலும் கூம்பலும் இல்லது' என்பது ஈங்குக் கருதற்பாலதாகும். ஒட்பம், திட்பம், நுட்பம் என்பன வற்றை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். நல்குரவில் கூம்பலும், செல்வத்தில் மலர்தலும் அறிவுக்கு இல்லை. 'உலகம்' என்பது உயர்ந்தோரைக் குறிக்கும்.

**426 எவ்வது உறைவது உலகம் ...**

'செயற்கை அறிந்த' (631) என்ற குறட்பா இங்கே நினைக்கத்தக்கது. 'எவ்வது அவ்வது' என்பதும், 'உறைவது' என்பதும் இருமுறை கூறப்பட்டன. 'உலகம், உலகத்தோடு' என்பதும் ஆழ்ந்த சிந்தனைக்குரியன. தான் நினைத்தவாறே ஒழுகினால் பாவமும் பழியும் உண்டாகும். அவ்வாறு ஒழுகல் அறிவன்று; 'ஒட்ட ஒழுகல்' (140), 'இயற்கை அறிந்து' (637) முதலியன ஒப்பு நோக்கிற்குரியன.

**427 அறிவுடையார் ஆவது அறிவார் ...**

அறிவின் மிக உயர்ந்த செயல் எடுத்துக் காட்டப்பட்டது. 'அறிவுடையார்', 'அறிவார்' 'அறிவிலார்', 'அறிகல்லாதவர்' என்பன ஈண்டு நினைத்தற்குரியன. 'வருமுன்னர்க் காவாதான்' (435) சிந்திக்கத்தக்கதாகும். தம்மாலானவற்றை அறிபவர்கள் அறிவுடையார் என்றும், அவ்வாறு அறியாதவர்கள் அறிவிலார் என்றும் கூறினார். முன்பாகவே எண்ணி அறிதல் தமக்கு நன்மையுண்டாவதை அறிதல் என்பன உணர்த்தவே 'அஃது அறிவார்' என்றார்.

**428 அஞ்சுவது அஞ்சாமை பேதைமை ...**

'பேதைமை' என்ற அதிகாரம் இக்குறளில் நினைவுபடுத்தப்பட்டது. 'புலவர் தொழில்' (394) என்று கூறியது போல இக்குறட்பாவில் 'அறிவார் தொழில்' என்று குறிப்பிட்டார். 'அஞ்சுவது அஞ்சாமை' என்பதும், 'அஞ்சுவது அஞ்சல்' என்பதும் சிந்தனைக்குரியன. 'அஞ்சாமை' இறைமாட்சியாகக் கூறப்பட்டதால், இங்கு அஞ்ச வேண்டிய இடம் குறிக்கப் பட்டதாகும். பாவமும், பழியும், கேடும் முதலியன அஞ்சப்படுவன; அஞ்சாமை — எண்ணாது செய்து நிற்றல்; அஞ்சுதல் — எண்ணித் தவிர்த்தல்.

**429 எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு ...**

அதிர்ச்சி அடையும்படியாகத் துன்பம் வருவதுண்டு என்பது இதனால் உணர்த்தப் பட்டது. 'காக்கும் அறிவினார்' என்பதும், 'இல்லை' என்பதும் சிந்தனைக்குரியன. 'வெள்ளத்தனைய இடும்பை' (622), 'அடுக்கிவரினும்' (625) என்பன போன்ற குறட்பாக்களை ஒப்பிட்டுப் பார்க்க. காக்க வேண்டிய காலம் உணர்த்தப்பட்டது. அதன் காரணத்தை விலக்குதல் என்பதைக் 'காத்தல்' என்பது உணர்த்திற்று.

**430 அறிவுடையார் எல்லாம் உடையார் ...**

செல்வங்கள் எல்லாம் அறிவால் படைக்கவும் காக்கவும் முடியும் என்பது இக்குறளில் உணர்த்தப்பட்டது; அறிவிலாதார் இயற்கையில் செல்வங்கள் பெற்றிருந்தாலும், அவர் 'காத்தல்' முதலியன இல்லாதவர் ஆதலால் 'என்னுடையரேனும் இலர்' என்று கூறினார் வள்ளுவர். 'புல்லறிவாண்மை', 'பேதைமை' முதலிய அதிகாரங்களை இங்கே நினைக்க. 'செல்வங்கள் அனைத்தும் அறிவால் படைக்கவும் காக்கவும்படுதலின் அவ்வறிவு உடையாரை 'எல்லாம் உடையார்' என்றார் வள்ளுவர்.

## 44 குற்றம் கடிதல்

**431 செருக்கும் சினமும் சிறுமையும் ...**

'குற்றங்கடிதல்' அதிகாரம் ஆதலால் ஆசிரியர் குற்றங்களைக் குறித்துக் காட்டினார். செருக்கு என்பது செல்வக்களிப்பினைக் குறித்தது. 'வெகுளாமை' என்ற அதிகாரம் 'சினம்' என்ற சொல்லால் குறிக்கப்பட்டதாகும். அளவிறந்த காமத்தைச் 'சிறுமை' என்று கூறினார் 'பெருக்கம் பெருமிதம்' என்பது சிந்தனைக் குரியது. மதம் — செல்வக் களிப்பு இது சிறியோர் செயலாகலின் அளவிறந்த காமம் சிறுமை எனப்பட்டது.

**432 இவறலும் மாண்புஇறந்த மானமும் ...**

'மானம்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'மாண்பிறந்த மானம்' சிந்தனைக் குரியது. 'இவறலும்' என்றதால் 'நன்றி'யில் செல்வம்' என்ற அதிகாரமும் குறிக்கப்பட்டது. 'ஈகை' முதலிய அதிகாரங்களும் சிந்தனைக்குரியன. அளவு கடந்த கண்ணோட்டத்தை 'மாணா உவகை' என்று குறித்தார். நாட்டுத் தலைவனாகிய மன்னனை 'இறை' என்றார் வள்ளுவர்.

**433 தினைத்துணையாம் குற்றம் வரினும்...**

'நாணுடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'தினைத்துணை', பனைத்துணை' சிந்தனைக்குரியன. 'தினைத்துணை' (104) என்பது போன்ற குறட்பாக்கள் இங்கே கருதற்பாலன. சிறிதானதையும் பெரிதாகக் கருதி வருந்திப் பின்னர் அது வாராமல் காப்பர் மன்னர் என்பதாம். இஃது 'பழிநாணுவார்' என்பதால் சிந்தித்தறிய வேண்டியதாயிற்று.

**434 குற்றமே காக்க பொருளாக ...**

'குற்றமே காக்க' என்பதனால் அரிய பண்புகளினால் தீமை வாராமல் காத்தல் வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. 'குற்றமே' என்பது இருமுறை கூறப்பட்டது சிந்தனைக் குரியது. வெளிப்புறத்துப் பகைவர்களைவிட இது கொடுமையானதாயிற்று. அற்றம் தந்து விடும் என்பதை உணர்தல் வேண்டும். 'குற்றமே காக்க' என்பது அரிய பண்புகளினால், தீமை வராமல் காக்க என்பதாம்.

**435 வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை ...**

காத்துக் கொள்ள வேண்டிய காலம் குறிக்கப்பட்டது. குற்றம் சிறிதேயாயினும் அதனால் பெரிய செல்வம் அழிந்தேவிடும் என்பது உவமையால் எடுத்துக்காட்டப்பட்டது. எரிமுன்னர் வைத்தூறும், குற்றத்தின் முன்னர் வாழ்க்கையும் புலப்படுத்தப்பட்டன. கெட்டபின்னர் வாராது என்பது உணர்த்தப்பட்டது. வைக்கோலில் நெருப்புப் பட்டால் உள்ளூர விரைவில் சென்று பற்றி எரிந்துவிடும்; அதை அணைப்பதும் எளிதன்று.

**436 தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் ...**

மன்னனை இறையென்று குறிப்பிட்டார். மூன்று முறை 'குற்றம்' என்பது கூறப் பட்டது. 'தன்குற்றம்', 'பிறர் குற்றம்', 'என் குற்றம்' என்பன சிந்தனைக்குரியவை. தன் குற்றத்தை நீக்கியவனே முறை செய்தற்கு உரியவன் என்றார். வினாமுறையில் அமைக்கப் பட்டுள்ள குறட்பாக்களுள் இதுவும் ஒன்று.

**437 செயற்பால செய்யாது இவறியான் ...**

'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தும். அறம் செய்யாமையானும் பொருள் பெருக்காமையானும் 'உயற்பாலதன்றி' என்று கூறினார். மேலும் 'இன்பப்பயன் கொள்ளாமையால் கெடும்' என்றும் கூறினார். 'செயற்பாலது', 'உயற் பாலது' என்பன சிந்தனைக்குரியன. 'வகுத்தலும்' (385) என்பதை நினைவு கூர்க. அறம் செய்யாமையானும் பொருள் பெருக்காமையானும் 'கெடும்' என்றார்.

**438 பற்றுள்ளம் என்னும் இவறன்மை ...**

'இவறன்மை' என்பது மிகப் பெரிய குற்றமாகக் கூறப்பட்டது. 'எற்றுள்ளும்' என்பது சிந்தித்தறிய வேண்டுவது. 'கற்பு என்னும் திண்மை' (54) என்று அமைத்துக் காட்டிய முறையினைப் போல, 'பற்றுள்ளம்' என்னும் 'இவறன்மை' என்று அமைத்தார். மேலே சொன்ன குறட்பாவும் இதுவும் உலோபத் தன்மையின் பெருந் தீமையினைக் கூறின. 'பற்றுள்ளம்' இருத்தல் கூடாது.

**439 வியவற்க எஞ்ஞான்றும் தன்னை ...**

ஒருவன் தன்னைத் தானே வியந்து புகழ்ந்து கொள்ளுவானேயானால் இடமும், காலமும், வலிமையும் அவனால் அறிய முடியாமல் போகும் என்பதாம். 'எஞ்ஞான்றும் வியவற்க' என்பது சிந்தனைக்குரியதாகும். 'வியவற்க', 'நயவற்க' என்பன ஈண்டு கருதுதற் குரியன. 'செய்ந்நன்றியறிதல்', 'வினைத்தூய்மை' முதலிய அதிகாரங்களை ஒப்பிட்டு ஆய்க. பாவமும் பழியும் கேடும் தருவனவற்றை 'நன்றியவாவினை' என்றார்.

**440 காதல காதல் அறியாமை ...**

தான் மிகுதியும் விருப்பங் கொண்டிருக்கும் பொருள்களைப் பற்றிப் பிறர் அறியுமாறு செய்தல் கூடாது. பகைவர்கள் இதனைத் தெரிந்து கொண்டால் அவை வாயிலாகப் புகுந்து வஞ்சிப்பர் என்பதாகும். பெரும்பான்மைத்தாகிய காம இன்பத்தை இது குறிப்பதாகும்.

தான் காதலிக்கின்ற – விரும்பி நேசிக்கின்ற பொருள்களைப் பகைவர்கள் அறியா வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும். ஆதலால், அவை அறியாமல் உய்த்தால் வாயில் இன்மையின் அவன் வஞ்சிக்கப்படான் என்பதாம். 'நூல்' என்பது எண்ணுகிற எண்ணம் என்பதாயிற்று.

## 45 பெரியாரைத் துணைக்கோடல்

**441 அறன்அறிந்து மூத்த அறிவுடையார் ...**

'பெரியாரைத் துணைக்கோடல்' என்பது இவ்வதிகாரம் ஆனபடியால், இக்குறட்பாவில் 'அறன் அறிந்து மூத்த அறிவுடையார்' என்றார். அறத்தின் நுட்பத்தினை நூல் களினாலேயன்றி உய்த்துணர்வானும் அறிய வேண்டுதலின் 'அறன் அறிந்து' என்றார். 'அறன் வலியுறுத்தல்', 'அறிவுடைமை', 'நட்பு', 'தெரிந்து தெளிதல்', 'திறன் அறிந்து தேர்ந்து கொளல்' முதலிய அதிகாரங்கள் சிந்திக்கத்தக்கன. வள்ளுவர் பெரியார்களை மூத்த அறிவுடையார் என்றார். 'தெரிந்து தெளிதல்' பொருட்பாலில் காணப்படும் 'குறிப்பறிதல்' என்ற அதிகாரங்களையும் ஒப்பிட்டு நோக்கலாம். 'பெரியாரைப் பிழையாமை' என்றோர் அதிகாரமும் உண்டு.

**442 உற்றநோய் நீக்கி உறாஅமை ...**

இக்குறளின் கருத்து, இயற்கையினால் வரும் துன்பங்களையும் பெரியார்கள் நீக்குவார்கள் என்பதாகும்; ஆகவே பகைவர்களால் வரும் துன்பங்களையும் நீக்குபவர் களாவார்கள். பெரியார்களின் நற்பணி முற்காத்தலாகும்; பெற்றியாரென்று பொதுப்படக் கூறினமையால் இது அமைச்சர்களையும் கூறிற்றென்பதாகும். இங்கே 'பெரியாரைப் பிழையாமை' என்ற அதிகாரத்தையும் நினைவிற் கொள்ளல் வேண்டும். சிறப்புத் தன்மைகள் பொருந்தியவர்களைப் 'பெற்றியார்' என்றார். மகிழ்வன செய்து துணையாகக் கொள்ள வேண்டும் என்பதற்காகப் 'பேணிக் கொளல்' என்றார்.

**443 அரியவற்றுள் எல்லாம் அரிதே ...**

'அரிதே' என்பது சிந்திக்கத்தக்கதாகும். உலகத்தில் அரியனவெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்குப் பெரியாரைத் துணைக் கொள்ளுதல் சிறந்தது. அதற்குக் காரணம் பெரியாரைத் துணைக் கொள்வதால் அவையெல்லாம் உண்டாகும் என்பதாம். முற்கூறியவாறே 'பேணித் தமராக் கொளல்' என்றார். 'செயற்கு அரிய யாவுள' (781) என்பதுபோல 'அரியவற்றுள் எல்லாம் அரிதே' என்றார்.

**444 தம்மிற் பெரியார் தமரா ...**

பொருள், படை, அரண்களாலாய வலிமையினும் இத் துணைவலி சிறந்ததென்று கூறப்பட்டதற்குக் காரணம், இவர்கள் மேற்சொன்னவற்றால், நீக்கப்படாத இயற்கைத் துன்பம் முதலியனவற்றையும் நீக்குதற்கு உரியவர்கள் என்பதறிக. 'ஒழுகுதல்' என்பது

'ஒழுக்கமுடைமை' அதிகாரத்தினை நினைவுபடுத்தும். 'தலை' என்பது நன்கு சிந்திப்பதற்குரியது.

முன்னர் 'தமராக் கொளல்' என்றார். இங்கு, 'தமரா ஒழுகுதல்' என்றார். பொருள், படை, அரண் முதலிய வலிமைகளினால் நீக்கமுடியாத இயற்கை எனப்படும். தெய்வத் துன்பத்தையும் (ஊழ்) இவர்கள் நீக்குவார்கள் என்க.

**445 சூழ்வார்கண் ணாக ஒழுகலான் ...**

அமைச்சியலுள் கூறப்படும் இலக்கணத்தினர் என்பதனைச் 'சூழ்வாரை' என்றார். தானே எண்ணி முடிக்க வல்லவனாயினும், அளவிறந்த தொழில்களால் பாரம் அதிகமான படியால் பெரியார்களை வைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாயிற்று. 'சூழ்வார்' இருமுறை கூறப்பட்டது. 'கண்ணாக ஒழுகலான்' என்பதும், 'ஆழ்ந்து கொளல்' என்பதும் நன்கு சிந்தித்தறிய வேண்டுவனவாம். அறிதற்கு வேண்டியவர்களைக் 'கண்ணாக' என்று கூறினார். செயலினை நன்கு எண்ணிக் கூறவல்லார்களைக் கண்ணாகக் கொண்டு ஒழுகுவதால் தன்னை சூழ்ச்சியால் கொல்லக் கருதும் பகைவர்களைத் தானும் சூழ்ச்சியால் கொல்லவல்லவனாவான் என்பதாம்.

ஆட்சி செய்யும் பாரம் மிகப் பெரியது. ஆகையால் அமைச்சர், பெரியார்களைக் கண்ணாகக் கொண்டு அவர்களை அருமையாக நடத்தித் துணையாகக் கொள்ள வேண்டும்.

**446 தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக ...**

'சிற்றினம் சேராமை' என்ற அதிகாரம் ஈங்கு நினைவுபடுத்தற்குரியது. அறிவு ஒழுக்கங்களில் தகுதி நிறைந்தவர்களைத் 'தக்கார்' என்று கூறினார் ஆசிரியர். பகைவர்கள் பலவகைப்பட்ட வழிகளில் வஞ்சிக்கக் கருதினாலும் அவர்களால் முடியாது என்பதனைக் குறிக்கவே 'செற்றார் செயக்கிடந்தது இல்' என்றார். தானும் தக்காரும் ஒருதன்மையராகவே ஒழுகுதல் வேண்டும் என்பதாம். அறிவு ஒழுக்கங்களால் தகுதி உடையவர்களைத் 'தக்கார்' என்றார் ஆசிரியர். ஒழுகுதல் என்பது அறநீதிகளின் நெறி வழுவாமல் நடத்தல்.

**447 இடிக்கும் துணையாரை ஆள்வாரை ...**

இது வினா முறையில் அமைக்கப்பட்டுள்ள குறட்பாவாகும். இடித்திடித்துக் கூறுவதில் துணையாயினார் சிறந்தவர்களாக இருத்தல் வேண்டும். இவர்கள் மன்னனிடம் நெருங்கிச் செல்லுபவர்களாவார்கள். 'மன்னரைச் சேர்ந்தொழுகல்' என்ற அதிகாரம் ஈங்கு நினைக்கத் தகும். 'ஆள்வாரை' என்பதும் 'மேற்சென்று இடித்தற் பொருட்டு' (784) என்பதும் நினைவு கூர்தற்குரியன. அமைச்சர்களைவிடவும் உயர்ந்த இடத்தில் வைத்துக் கருதப்பட வேண்டியவர் கள் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது; அவர்களே பெரியார்கள்; இடித்துக் கூறும் உரிமை கொண்டவர்கள்; அவர்களே நெருங்கிச் சொல்லும் தன்மையினர்.

**448 இடிப்பாரை இல்லாத ஏமரா ...**

'ஏமரா மன்னன்' சிந்திக்கத்தக்கதாகும். தானே கெடுதலென்பது பாகனில்லாத யானை போல—நெறியல்லாத நெறிச் சென்று கெடுதலாகும். அதனால் 'கெடுப்பார் இலானும்

கெடும்' என்பது உணர்த்தப்பட்டது. நெறியல்லாத நெறியிற் சென்று தானே கெட்டுவிடுவான் என்பதாம். ஆசிரியர் காவலற்றவனை 'ஏமரா மன்னன்' என்றார்.

**449 முதல்இலார்க்கு ஊதியம் இல்லை ...**

முதலைப் பெற்றே இலாபம் பெறவேண்டுமாறு போலத் தாங்குவாரைப் பெற்றே அரசன் நிலைபெற வேண்டும் என்பது குறிக்கப்பட்டது. ஊதியம் இல்லையென்பதும், 'நிலையில்லை' என்பதும் ஒன்றாயிற்று. 'நிலை' என்பது அரசன்; அவன் பாரத்தோடு சலியாது நிற்றல் என்பது கருத்து.

**450 பல்லார் பகைகொளலின் பத்தடுத்த ...**

'நல்லார் தொடர்' என்பது நட்பு முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்தும். 'கைவிடல்' என்பது சிந்தனைக் குரியது. இதனால் பெரியார்களின் கூட்டுறவு விட்டால் அது எவ்வளவு பெரிய தீமைக்கு உள்ளாக்கிவிடும் என்பது நன்கு புலப்படுத்தப்பட்டது. தான் தனியனாய் இருந்து பலரோடும் பகை கொள்ளுதல் பெருந் தீமையாகும்; தான் உய்வதற்கு வழிகாட்டும் பெரியார்கள் நட்பினை விடுதல் ஆகும்.

## 46 சிற்றினம் சேராமை

**451 சிற்றினம் அஞ்சும் பெருமை ...**

தத்தம் அறிவு திரிவதைக் கண்டும், அதனால் தமக்குவரும் துன்பத்தை நோக்கியும் அறிவுடையார் அஞ்சுவர். 'பெருமை' என்ற அதிகாரம் சிந்தனைக்குரியது. புல்லறிவாண்மை, பேதைமை, கயமை முதலிய அதிகாரங்களைச் 'சிறுமைதான்' என்பது நினைவுபடுத்தும்.

சிறியோர் எனப்படுபவர் அறிவைத் திரித்து இருமையும் கெடுக்கும் இயல்பினர்; இந்த அதிகாரத்தில் ஏழு குறட்பாக்கள் 'மனம்' என்ற சொல்லைக் கொண்டு தொடங்குகின்றன. இது நன்கு சிந்திக்கப்பட வேண்டியதாகும். 'சுற்றம் தழால்' என்ற ஓர் அதிகாரமும் இருக்கிறது.

**452 நிலத்துஇயல்பான் நீர்திரிந்து அற்றாகும் ...**

'சிற்றினம்' ஒருவனை எவ்வாறு கெடுத்து விடும் என்பது இதனால் விளக்கப்பட்டது. 'அறிவுடைமை' என்ற அதிகாரமும் நினைவு படுத்தப்பட்டது. 'இயல்பு' இருமுறை கூறப் பட்டது. 'திரிந்தற்றாகும்' என்பது சிந்தனைக்குரியது. தனியாக இருந்தபோது தனித் தன்மையுடன் இருந்த அறிவு சிற்றினத்தோடு சேர்ந்தபோது திரிந்துவிடுமாம்.

**453 மனத்தான்ஆம் மாந்தர்க்கு உணர்ச்சி ...**

இக்குறளால் நல்லவன், கெட்டவன் என்ற பெயர்கள் இனத்தினாலேதான் வரும் என்பது குறிப்பாயிற்று. 'இன்னான்' எனப்படும் சொல் சிந்தனைக்குரியது. உணர்ச்சி உண்டாகின்ற இடம் குறிக்கப்பட்டது. 'மனத்தானாம்', 'இனத்தானாம்' கருதற்பாலன. நல்லவன்,

தியவன் என நிகழும் சொற்கு இனம் வேண்டுதலின், அதனை 'இனத்தான் ஆம்' என்று கூறினார்.

**454 மனத்துஉளது போலக் காட்டி ...**

இக்குறளால் இனமானது அறிவினையும் கெடுத்துவிடும் என்பது தெளிவுபடுத்தப் பட்டது. உண்மையை உணர்ந்து கொள்ளுதற்கு மனத்தில் உள்ளது போலக் காட்டியும், உண்மையைத் தெரிந்து கொண்ட பிறகு அவன் பயின்ற இனத்து உளதாயும் இருத்தலால் 'காட்டி' என்று இறந்த காலத்தால் கூறினார். 'ஊதுபோல' என்பதும், 'உளதாகும்' என்பதும் சிந்தித்தறிய வேண்டுவன. 'விசேட அறிவுக்கு' மூலம் இனம் என்பது இக்குறட்பாவால் காட்டப்பட்டது.

**455 மனம்தூய்மை செய்வினை தூய்மை ...**

இதனால் 'வினைத்தூய்மை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப் பட்டது. 'தூய்மை' என்ற சொல் மும்முறை கூறப்பட்டுள்ளது. மனமும் செயலும் தூய்மையாக இருப்பது. அவன் பழகும் தூய்மையான இனத்தைப் பொருத்ததாகும். 'தூவாவரும்' என்பது சிந்தனைக்குரியது. இதனால் சொல்லும் செயலும் தூய்மையாக இருக்க வேண்டும் என்பது குறிப்பாயிற்று. 'வினைவேறு சொல்வேறு' (810) என்பவை சிந்தித்தற்குரியன. 'மனம் தூய்மை' என்பது 'விசேட உணர்வு'; 'வினைத்தூய்மை' என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உண்டு.

**456 மனம்தூயார்க்கு எச்சம்நன்று ஆகும் ...**

காரியம் காரணத்தின் வேறுபடாமையின் 'எச்சம் நன்றாகும்' என்றார். நல்லினத்தோடு எண்ணிச் செய்யப்படுதலின், 'எல்லா வினையும் நல்லவாம்' என்றும் கூறினார். 'எச்சம்' விளக்கத்தினைப் பிற இடங்களில் கண்டு தெளிக; 'இசையென்னும் எச்சம்' (238), 'எச்சத்திற்கு ஏமாப்பு' (112), 'எச்சத்தால் காணப்படும்' (114) என்பவற்றைச் சிந்தித்தறிதல் வேண்டும். நல்லினத்தோடு சேர்ந்து செய்தால் எல்லா வினையும் நன்கு முடியும். 'மனம்' தூய்மையாக இருந்தால்தான் 'எச்சம்' நன்றாகும். கல்வி, கேள்வி, அறிவு, ஆற்றல் ஆகிய எல்லாவற்றிற்கும் அடிப்படை மனத் தூய்மை என்றாயிற்று.

**457 மனநலம் மன்உயிர்க்கு ஆக்கம் ...**

இங்கே 'புகழ்' என்ற அதிகாரம் குறிக்கப்படுகிறது. மனம் நன்றாதலே அறமாகலின் அதனை 'ஆக்கம் தரும்' என்றார். ஆசிரியர் புகழ் கொடுத்தற்குரிய நல்லோர் தாமே இனமாகலின், 'இனநலம் எல்லாப்புகழும் தரும்' என்றார். ஆகவே மனமும் இனமும் சிறப்பாகக் குறிக்கப்பட்டன. 'நலம்' இருமுறை கூறப்பட்டது. மனம் தூய்மையாக இருப்பதுதான் அறம்; மேலே சொன்ன குறட்பா இதனால் மேலும் விளக்கம் பெற்றது.

**458 மனநலம் நன்குஉடையர் ஆயினும் ...**

'சான்றாண்மை' என்ற அதிகாரம் உணர்த்தப்பட்டது. இனநலம் மிகுதியும் சிறப்பித்துக் கூறப்பட்டது. 'நலம்' இருமுறை குறிக்கப்பட்டது. ஏமாப்பு உடைத்து என்பது

சிந்தனைக்குரியது. இக் குறட்பாவும் அடுத்து வரும் குறட்பாவும் ஏமாப்பினைத் தெளிவு படுத்துகின்றன; 'ஏமாப்பு உடைத்து' சிந்திக்கத் தக்கது.

**459 மனநலத்தின் ஆகும் மறுமைமற்று ...**

முந்தைய குறட்பாவில் குறிப்பிட்டதுபோல இக்குறட்பாவிலும், 'ஏமாப்பு உடைத்து' என்றார். மறுமை பயப்பது மனநன்மைதானே — பிறிதொன்று அன்று என்னும் கருத்தில் கூறப்பட்டது. ஒருகால் தாமத குணத்தினால் மனம் திரிந்தாலும், நல்லினம் ஒப்ப நிறுத்தி மறுமை பயப்பிக்குமென, நிலைபெறச் செய்யுமாறு கூறப்பட்டது. நல்லினம் ஒருவற்குப் பாதுகாப்பாக இருக்கும்.

**460 நல்லினத்தின் ஊங்கும் துணைஇல்லை ...**

வள்ளுவர் நல்லினத்தைத் துணையென்றும் தீயினத்தைத் துன்பம் தரும் என்றும் காட்டினார்; சேர்ந்து பழகும் இனம் இரண்டே வகைப்படும் என்பது இதனால் உணர்த்தப் பட்டது. தீயினத்தைப் பகைமையாகவே குறித்தார். ஆதலால் துன்பம் உண்டாக்கும் என்பதாயிற்று. நல்லினம் துயர் வராமல் காத்தலால் 'துணை' என்றார். தீயினம் பகைமையைச் சார்ந்தது.

## 47 தெரிந்து செயல்வகை

**461 அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி ...**

அனைத்தையும் முதலிலேயே சிந்தித்துப் பார்த்துச் செயல்புரிய வேண்டும் என்று உணர்த்தினார். 'வழிபயக்கும் ஊதியம்' என்பது சிந்தனைக் குரியது. அழிவு ஏற்பட்டாலும் ஆவதும் ஆகிய ஊதியத்தையும் நாம் கருத வேண்டும். அப்படி அழிவதும் ஆவதும் தம்முன் ஒத்திருந்தாலும் ஊதியம் பெறின் வினை விடற்பாலதன்று.

**462 தெரிந்த இனத்தொடு தேர்ந்துஎண்ணி ...**

இனத்தின் சிறப்பு எடுத்துக் கூறப்பட்டது. அவ்வினம், தான் தெரிந்து புரிந்து கொண்ட இனமாக இருத்தல் வேண்டும். மேலும் அந்த இனத்தோடு ஒருவர் தேர்ந்து எண்ணிச் செய்தால் அரிய பொருள்களை எல்லாம் எளிதில் அடைவர் என்பதாயிற்று. ஆராயப்படுவன எல்லாம் ஆராய்ந்து போந்த இனம் என்றார். தெரிந்த, தேர்ந்து, எண்ணி — என்பன சிந்திக்கத் தக்கன. 'அரிய என்று ஆகாத இல்லை' (537) என்பது போன்றவை எண்ணத்தக்கன.

**463 ஆக்கம் கருதி முதல்இழக்கும் ...**

இக்குறளில் 'அறிவுடைமை' என்ற அதிகாரம் சுட்டப்பட்டது. முதல் என்றதால் 'முதலிலார்க்கு' (449) என்பது கருதத்தக்கது. ஆதலால் ஆக்கமேயன்றி முதலையும் இழக்க நேரிடும் என்பதாம். ஊதியம் இல்லாவிட்டாலும் முதல் இழக்காமல் இருத்தல் வேண்டும் என்பது குறிப்பாயிற்று. அது முன்பு செய்த தொழிலேயாயினும் அதனைச் 'செய்வினை' என்றார்.

'அறிவுடைமை', 'ஊக்கமுடைமை' என்னும் அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. மன்னர்கட்குத் தலையாய கடமை பகைவர்கள் படை எடுத்தால் தன் நாட்டைக் காப்பாற்றுதலும் தான் பிறர்மேல் படை எடுத்தலும் ஆகும். இதனால் ஆக்கமும் வாராமல் முதலும் போவதுண்டு.

**464 தெளிவுஇ லதனைத் தொடங்கார் ...**

அஞ்ச வேண்டுவதற்கு அஞ்சவேண்டும் என்பதை உணர்த்தியது. இதில்வரும் 'இளிவு என்னும் ஏதப்பாடு சிந்தனைக்குரியது. ஆராயாமல் தொடங்கினால் அழிவுவருவதுடன் உலகத்தார், "அறிவும் மானமும் இலர்" என்பர். ஆகையால் அதனை 'இளிவு' என்றார்.

**465 வகைஅறச் சூழாது எழுதல் ...**

பகைவரைப்பற்றிக் கூறப்படும் 'பகைமாட்சி' முதலிய அதிகாரங்கள் இக்குறளால் நினைக்கப்படுவன. 'அறச் சூழாது' என்பது பெரிதும் சிந்திக்கத்தக்கது. வலிமை, காலம், இடம் முதலிய அனைத்தையும் நன்கறிந்த பிறகே தொழில்மேல் செல்லுதல் வேண்டும். இதனால் போர்ச் செயல்கள் குறிக்கப்பட்டன. 'சூழாது எழுதல்' பகைவர்க்கு ஆக்கம் அளிப்பதாக முடியும் என்பதாம். போர் செய்கின்ற கருத்தினையே இத்தகைய அதிகாரங்கள் பெரிதும் உணர்த்துகின்றன. வலியறிதல், காலமறிதல், இடனறிதல் ஆகிய அனைத்தையும் நன்கு சிந்தித்தே பகைவர்மேல் செல்லுதல் வேண்டும்.

**466 செய்தக்க அல்ல செயக்கெடும் ...**

இக்குறள் செய்வன செய்து,ஒழிவன ஒழிக என்பது கூறப்பட்டது. மேலும் செயக்கெடும், செய்யாமையானும் கெடும் என்று பிரித்துக் கூறியது சிந்திக்கத்தக்கது. கெடும் என்பதும் இருமுறை கூறப்பட்டது. **செய்தக்க அல்ல, செய்தக்க** என்று தொழில் முறையினை இரு வகையாகக் குறிப்பிட்டார். 'செயக்கெடும் — செய்யாமையானும் கெடும்' என்பவற்றைப் பொது அறிவு கொண்டு நூலறிவுடன் சிந்தித்துச் செயல்பட வேண்டும்.

**467 எண்ணித் துணிக கருமம் ...**

செயலைச் செய்வதற்குரிய வழிமுறைகள் பற்பல. ஆகையால் அனைத்தையும் அறிவு கொண்டு நன்கு சிந்திக்க வேண்டும் என்பதை உணர்த்தவே 'எண்ணித்துணிக' என்றார். 'துணிந்தபின் எண்ணுவம்' என்பது சிந்தனைக்குரியது. செயலைத் தொடங்கியபின் எண்ணுவது குற்றம் என்பதை 'இழுக்கு' என்றார்.

ஆட்சித் தலைவன் சிந்திக்க வேண்டியன பலவுண்டு; அஃது 'எண்ணி' என்பதில் அடங்கும். பொதுவாக ஒரு காரியத்தை மேற்கொள்ளுவதற்கு முன் பற்பலவற்றையும் எண்ணி முடிவு செய்து தொடங்க வேண்டும்; செயல் புரியத் துணிவு தலையானதாயிற்று.

**468 ஆற்றின் வருந்தா வருத்தம் ...**

'பொத்துப்படும்' என்றதால் கருதிய நன்மையைத் தராது மட்டுமன்றி அவர் கருதாத தீமையையும் தரும் என்றார். 'ஆற்றின்' — நன்கு சிந்திக்க வேண்டியது. இது முயல்

வேண்டிய முறையில் முயல வேண்டும் என்பதாம். பழுதுபட்ட பிறகு பலரும் எடுத்து நிலை நாட்டுகிறோம் என்றாலும் காரியம் முடியாது என்றார். பெரும்பணியை மேற்கொள்ளுவோர் பின்பற்ற வேண்டிய வழிமுறைகள் பலவுண்டு; இது சிறப்பாகக் கூறப்பட்டாலும் பொதுவாகவும் பொருந்தும் என்க.

**469 நன்றுஆற்றல் உள்ளும் தவறுஉண்டு ...**

'பண்புடைமை' என்ற அதிகாரம் இதில் குறிக்கப்படுகிறது. 'தவறுண்டு' என்பது சிந்தனைக்குரியது. நல்லனவற்றை அவற்றிற்கு உரியரல்லாதாரிடம் செய்தல் கூடாது. 'நன்று' என்பதைச் சிந்தித்துச் செய்தல் வேண்டும். 'தவறு' என்பது காரியம் முடியாமல் போதல். பண்பு அறிந்து செய்தலாவது, அவற்றிற்கு உரியர் யாவர் என்று தெரிந்து செய்தல். அறிவுடைமை, பண்புடைமை அதிகாரங்கள் நினைவுபடுத்தப்படுகின்றன. 'நல்லது' என்று நினைத்தால் மட்டும் போதாது; யாருக்குச் செய்கின்றோம் என்பதும் கவனிக்க வேண்டும்.

**470 எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் ...**

ஒருவர் எந்த வழியிலேயானாலும் காரியத்தைச் செய்து முடித்தால் போதும் என்று நினைக்கக்கூடாது. மேலும் அவர் தம் நிலைமையோடு பொருந்தாத செயல்களைச் செய்தல் கூடாது. ஆகையால்தான் வள்ளுவர் 'எண்ணிச் செயல் வேண்டும்' என்றார். ஏனெனில் உலகத்தார் அவரைக் கண்டு இகழ்வர் ஆதலால் 'உலகம் கொள்ளாது' என்றார். முடியுமானாலும் பிறரால் இகழப்படாதவற்றைச் செய்தல் வேண்டும். தம் நிலைமையோடு பொருந்தாத உபாயங்களை ஒருவர் மேற்கொள்ளக் கூடாது. அப்படிச் செய்தால் உலகம் இகழுமாம்.

## 48 வலி அறிதல்

**471 வினைவலியும் தன்வலியும் மாற்றான் ...**

போர் செய்யும் முறைகள் குறிப்பாகக் கூறப்படுவதால் ஆசிரியர் வலிமைகளைத் தெளிவுபடுத்தினார். நாட்டுத் தலைவன் தனது நாட்டைக் காப்பாற்றுதலே இன்றியமையாததாகக் கொள்ள வேண்டியவனாவான். ஆகவே 'தூக்கிச் செயல்' என்றார். இஃது அறிவு கொண்டும் பிறமுறைகளைக் கொண்டும் ஆராய வேண்டும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. இந் நால்வகை வலியுள், வினைவலி அரண்முற்றலும் கோடலும் முதலிய தொழிலாலும் ஏனைய மூவகை ஆற்றலாலும் கூறுபடுத்தித் தூக்கப்படும் என்றார்.

**472 ஒல்வது அறிவது அறிந்துஅதன் ...**

அரசன் மாற்றான் வலிமையை அறிந்திருந்தாலும் அதற்கேற்ப அமைந்து ஒழுக வேண்டும் என்பது இங்கே குறிக்கப்பட்டது. 'அறிவது அறிந்து' என்பதும், 'அதன்கண் தங்கி' என்பதும் சிந்திக்கத்தக்கதாகும். இஃது பெரிதும் போர்ச் செயல்களுக்கே கூறப்பட்டன. 'ஒல்வது' என்று கூறவே வினைவலி முதலாய மூன்றும் அடங்கும். ஈண்டு, 'அறிவது' என்று கூறியது துணைவலியையே. ஆதலால் எல்லாப் பொருளும் அவர் எய்துவர்,

**473 உடைத்தம் வலியார் ஊக்கத்தின் ...**

ஆற்றல் அனைத்தும் பலர் பெற்றிருந்தாலும், அறிவுடையார் சிலரே யாதலின், முறிந்தார் பலர் என்று குறிப்பிட்டார். அதனால் தம் வலியறிந்தே ஒரு செயலைத் தொடங்குக என்பது எஞ்சி நின்றது; 'ஊக்கமுடைமை' அதிகாரம் இதனால் குறிக்கப் பட்டது. மனவெழுச்சியும் அறிவின்மேல் அமைந்திருக்க வேண்டும் என்பதாம்.

**474 அமைந்துஆங்கு ஒழுகான் அளவுஅறியான் ...**

'வியவற்க எஞ்ஞான்றும்' (439) என்பது ஒப்பிடத்தக்கது. 'விரைந்து கெடும்' என்பது சிந்தனைக்குரியது. 'செயத்தக்க அல்ல செயக்கெடும்' (466) என்பதும் உணர்த்தப் பட்டது. இதில் மூன்று குற்றங்கள் குறிக்கப்பட்டன. ஒருவர் வலிமையறிந்து பகைத்துக் கொள்ளுதல் வேண்டும். தான் மெலியனாய் இருந்து வலியார் மேல் பகை கொண்டால் அவன் விரைந்து கெடுவான்.

**475 பீலிபெய் சாகாடும் அச்சுஇறும் ...**

முன்குறட்பாவில் கூறப்பட்ட 'அளவறியான்' என்பது இதில் விளக்கப்பட்டது. எளியர் என்று பலரோடும் பகை கொள்ளுபவன் கெடுவான் என்பதும் காட்டப்பட்டது. எளியர் பலர் ஒன்று சேர்ந்தால், வலிமை மிக்கவனும் அழிவான் என்பது கருத்து. 'சால' என்பது சிந்தனைக்குரியது. எளியர் என்று பலரோடு பகை கொள்ளுபவன் தான் வலியனே ஆனாலும் அவர் தொக்க வழி தன்வலி அழியும் என்னும் பொருள் தோன்ற நின்றது இக்குறள்.

**476 நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ...**

மரக்கொம்பில் அளவிற்கு மேல் ஏறிச் செல்லுபவன் அழிவான் என்பது இதனில் குறிக்கப்பட்டது. மனவெழுச்சியும் அளவுடன் இருக்கவேண்டு மென்பதை 'ஊக்கின்' என்பது உணர்த்திற்று. 'அஃது இறந்து' — என்பது சிந்தனைக்குரியது. முன் குறட்பா போலவே அளவறிந்து நடக்க வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது.

**477 ஆற்றின் அளவறிந்து ஈக ...**

'ஈகை' என்ற அதிகாரம் இங்கே நினைவு படுத்தப்பட்டது. 'பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை' (252) என்பது இதில் குறிக்கப்பட்டது. முதலிற் செலவு சுருங்கின் பொருள் ஒருகாலும் நீங்காது என்பது இதன் கருத்து. அளவறிந்து போற்றி என்பன சிந்தனைக்குரியன. 'பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை' (252) என்பதை நினைவு கூர்க.

**478 ஆகாறு அளவுஇட்டிது ஆயினும் ...**

'இட்டிது', 'அகலாது' என்பவற்றைச் சிந்திக்க. முதலுக்குத் தக்க செலவு செய்ய வேண்டும் என்பதாம். 'ஆகு', 'போகு' என்பன நன்கு கருதற்பாலன. 'ஆறு' இரும்முறை

கூறப்பட்டது; முதலும் செலவும் தம்முள் ஒப்பினும் கேடில்லை என்பது குறிக்கப்பட்டது. 'இட்டிது' எனவும் 'அகலாது' எனவும் வந்த பண்பின் தொழில்கள் பொருள்மேல் நின்றன.

**479 அளவறிந்து வாழாதான் வாழ்க்கை ...**

தொடக்கத்தில் கேடு வெளிப்படாமையின் 'உளபோலத் தோன்றி' என்றார். முதலைவிடச் செலவுமிகுந்தால் வரும் கேடு குற்றம் எனக் கூறப்பட்டது. 'வாழாதான் வாழ்க்கை' — சிந்திக்கத் தக்கது. 'தோன்றாக் கெடும்' என்றது பின்பும் ஆக்கமின்றிப் போகும் என்பதாகும். முதலைவிடச் செலவு மிகுந்தால் வரும் துன்பம் இதனால் கூறப்பட்டது.

**480 உளவரை தூக்காத ஒப்புரவு ...**

இக்குறளால் 'ஒப்புரவறிதல்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'வரை'— சிந்தனைக்குரியது. ஒப்புரவேயானாலும் மிகலாகாது என்று எடுத்துக் காட்டினார்.

## 49 காலம் அறிதல்

**481 பகல்வெல்லும் கூகையைக் காக்கை ...**

'காலமறிதல்' என்பது இவ்வதிகாரமாகையால், பகற்பொழுதையும் இரவுப் பொழுதையும் சுட்டிக் காட்டினார். இது பகைவர்மேல் செல்லும் வேந்தர்க்குக் கூறிய தென்று சிறப்பாகக் கொள்ளுதல் வேண்டும். தக்க காலம் இல்லாவிட்டால் வலிமை மட்டும் பயனளிக்காமல் போகும் என்றார்; பகையை வெல்லும் அரசர்க்குக் காலம் மிகவும் இன்றியமையாதது. வெல்லும் இருமுறை கூறப்பட்டது. 'பொழுது வேந்தர்க்கு வேண்டும்' என்பது சிந்திக்க வேண்டியதாகும். 'குடி செய்வார்க்கு இல்லை பருவம்' (1028) என்பது சிந்தித்தறிய வேண்டும். இது காலம் இல்லா வழி வலிமையால் பயனில்லை என்பதை விளக்கி நின்றது. காலம் வெம்மையும் குளிர்ச்சியும் தம்முள் ஒத்து, தண்ணீரும் உணவும் முதலிய உடைத்தாய்த் தானை வருந்தாது செல்லும் இயல்பினதாக இருத்தல் வேண்டும். காக்கை 'சுற்றம் தழால்' அதிகாரத்திலும் கூறப்படுகிறது.

**482 பருவத்தோடு ஒட்ட ஒழுகல் ...**

'ஒட்ட ஒழுகல்' என்பது காலந் தப்பாமல் செய்தல். 'தீராமை' என்றதால் தீரும், தன்மையது என்பது விளங்கிற்று. 'திரு' என்பது 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரத்தை நினைவுபடுத்துகிறது. 'திருவினையாக்கும்' (616) என்பது சிந்திக்கத்தக்கது. காலம் தப்பாமல் செய்தல் வினை வாய்த்து வருதலால், அதனால் வரும் செல்வம் எக்காலத்தும் நீங்காது என்றார். 'இல்லை பருவம்' (1028) என்பதனையும் இத்துடன் சிந்தித்துப் பார்க்க,

**483 அருவினை என்ப உளவோ ...**

இது வினா முறையில் அமைந்துள்ளது. ஆற்றல்கள் பலவற்றையும் 'கருவியான்' என்பதால் குறித்தார். கருவி யென்பது, 'உபாயம்' (வழி) என்று கூறப்படும். 'வினை' யென்பது இங்குப் பெரிதும் போர் செய்தலையே குறித்ததென்று கொள்ளுதல் வேண்டும். 'செயின்' என்பது செயலின் அருமையைக் குறித்தது. கருவிகளாவன :— மூவகை ஆற்றலும் நால்வகை உபாயங்களுமாம்; அவை உளவாய வழியும் காலம் உதவி செய்ய வேண்டும். 'அரிய என்று ஆகாத இல்லை' (537) என்பதுபோல இதனைக் கூறினார்.

**484 ஞாலம் கருதினும் கைகூடும் ...**

'கூற்றங்குதித்தலும் கை கூடும்' என்ற அமைப்பு முறையில் (269) இக்குறட்பா அமைந்துள்ளது. இதனால் கை கூடாதனவும் கை கூடும் என்றார். 'வலியறிதல்', 'இடனறிதல்' என்ற அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. முன் குறட்பா முடிந்ததுபோல் இக்குறட்பாவும் 'செயின்' என்று முடிந்ததைச் சிந்திக்க. இதுவும் அடுத்த குறட்பாவும் ஞாலம், காலம் என்ற இரு சொற்களைப் பெற்றுச் சிறந்துள்ளன.

**485 காலம் கருதி இருப்பர் ...**

கருதியபடியே அடைதல் என்பது இதன் கருத்து. இதனால் வெற்றி உறுதி என்பது குறிக்கப்பட்டது. காலம் கருதாது சென்றால் தமது பெருமையும் தேய்ந்து வருத்தமும் அடைவர் என்பதால், 'இருப்பர்' என்றார். இருத்தல் என்பது நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரித்தல், கூட்டல் என்னும் அறுவகை முறைகளைச் சுட்டியது.

வலியறிதல், காலமறிதல், இடனறிதல் என்ற அதிகாரங்கள் பகை மேற்செல்லுவானுக்கு உரிய பொதுவிதிகள். 'அரண்' என்ற அதிகாரம் சிறப்பாகத் தம்மிடம் எதிர்த்து வந்து தாக்குகின்றபோது நிகழ வேண்டியதைக் குறிக்கின்றது.

**486 ஊக்கம் உடையான் ஒடுக்கம் ...**

இதனால் 'ஊக்கமுடைமை' அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. உவமைக்கண் 'தாக்கற்கு' என்றதனால், பொருளினும் வென்றி எய்தற் பொருட்டு என்பது கொள்க; காலம் வருமளவும் பொறுத்திருந்தால் வலிமை மிகும் என்பதாம்; இதில் போர் செய்யும் தன்மை குறிக்கப்பட்டது.

**487 பொள்ளென ஆங்கே புறம்வேரார் ...**

பிறர் அறியுமாறு ஒருவர் கோபிப்பாராயின் பகைவர் தம்மைக் காத்துக் கொள்வர். ஆதலால் புறம் வேரார் என்று குறிப்பிட்டார். 'உள்வேர்ப்பர்' என்பது நெஞ்சு புழுங்கி நிற்பர் என்பதாம். 'வேரார், வேர்ப்பர்' சிந்தனைக்குரியன. 'புறம் வேரார்' என்பதற்கிசைய 'உள்வேர்ப்பர்' என்றார். போர்க்கால முறைகளில் இதுவும் ஒன்றாம்.

**488 செறுநரைக் காணின் சுமக்க ...**

'பகைமை ஒழியும் வகை மிகவும் தாழ்க' என்று கூறுவதற்காகச் 'சுமக்க' என்றார். அப்படியிருந்தால், பகைவர்கள் தம்மைக் காத்துக் கொள்ள மாட்டார்கள். ஆதலால், பகைவர் தப்பாமல் கெடுவர் என்பதைக் காட்ட 'தலை கீழாம்' என்று சொன்னால், தலை மேற் கொண்டதொரு பொருளைத் தள்ளுங்கால் அது தலைகீழாக விழுமாதலின் அத்தன்மை கூறப் பட்டது. 'காணின்' இருமுறை கூறியதைச் சிந்திக்க.

**489 எய்தற்கு அரியது இயைந்தக்கால் ...**

காலத்தின் அருமை புலப்படுத்தப்பட்டது. ஆற்றல் முதலியவற்றால் செய்து கொள்ளப்படாமையின் எய்தற்கு அரியது என்றும், அது தானே வந்து எய்தல் அரிதாகலின் 'இயைந்தக்கால்' என்றும், இயைந்தவழியின் நில்லாது ஒழுநதலின் 'அந்நிலையே'யென்றும், அது பெறாத வழிச் செய்யப்படாமையின் 'செய்தற்கரிய' என்றும் கூறினார். இதனால் காலம் வந்தபோது விரைந்து செய்து முடித்தல் வேண்டும் என்பது கூறப்பட்டது. ஆற்றல் முதலிய வற்றால் காலம் செய்து கொள்ளப்படாமையின் 'எய்தற்கு அரியது' என்றார்.

**490 கொக்குஒக்க கூம்பும் பருவத்து ...**

மீன் வாராதபோது கொக்கு உயிரில்லாததுபோல இருக்கும். கொக்கொக்க, குத்தொக்க என்பன சிந்தனைக்குரியன. கூம்பும்பருவம், சீர்த்த இடம் - கருதற்பாலன. கொக்கு நிற்கின்ற தன்மையும் அது குத்துகின்ற தன்மையும் நன்கு புலப்படுத்தப்பட்டன. தன்னுடைய குத்து தப்பாமல் இருக்க வேண்டும் என்பதற்காகவே அது உயிரில்லாதது போன்று இருக்கும். ஆதலால், இருப்பிற்கும் செயலிற்கும் கொக்கு உவமையாயிற்று.

## 50 இடன் அறிதல்

**491 தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க ...**

இதில் முற்றுகையிடுவது கூறப்பட்டது. அரண் பற்றியும் செயல் பற்றியும் அரசன் அறிந்திருத்தல் வேண்டும். 'எள்ளற்க' என்பது சிந்தனைக்குரியது. 'இடனறிதல்' என்ற இப்பகுதி வலியும் காலமும் அறிந்து பகைமேற் செல்லுவான், தான் வெல்லுதற்கேற்ற நிலத்தை அறிதல் கடமையாகும்; அவன் யாரையும் சிறியர் என்று ஏளனமாக நினைக்கக் கூடாது.

**492 முரண்சேர்ந்த மொய்ம்பின் அவர்க்கும் ...**

இதனால் 'அரண்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகின்றது. இவை பகை மேற் செல்லும் அரசர்க்கு இன்றியமையாத குறிப்புக்களாகும். ஆக்கம் என்பது குறிப்பாக

முற்றுகையை உணர்த்திற்று. இதனால் அரசன் பகைவர்களுடைய இடத்தை அறிதலே யன்றித் தமக்கு அமைந்த இடமும் அறிய வேண்டும் என்பதாயிற்று

**493 ஆற்றாரும் ஆற்றி அடுப ...**

'செயின்' என்பது அருமையைக் குறித்தது. வலிமை யில்லாவிட்டாலும் வெல்வர் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டதாகும். 'ஆற்றாரும்' என்பது வருகின்ற பகை வேந்தனோடு நன்கு அறிந்து போர் ஆற்றாதவரும் என்பதாகும். அரசர் தக்க இடத்தை நன்கு அறிந்து போர் செய்வாராயின் இயல்பாகத் தேவைப்பட்ட வலிமை இல்லாமலும் அவர் வெற்றி பெறுவர் என்பதாகும்.

**494 எண்ணியார் எண்ணம் இழப்பர் ...**

'எண்ணம்' என்றது அரசரால் எண்ணப்பட்ட தமது வெற்றியை என்பதாம். 'இழப்பர்' என்றதால் அந்த வெற்றியை என்பதாயிற்று. 'துன்னியார் துன்னி' என்பது சிந்திக்கத்தக்கது. பகைவரிடம் சென்று வெல்லுதலும் — தமது இடத்தில் நின்று வெல்லு தலும் ஆகியவற்றைக் குறட்பாக்கள் மூலம் நன்கு அறிந்து தெளிக.

பகைவர் அரணின் புறத்தே இருப்பர்; அதற்குரிய இடம் அறிதல் கூறப்பட்டது; இதனால் பகைவர் தோற்பர் என்பது உறுதி.

**495 நெடும்புனலுள் வெல்லும் முதலை ...**

இதில் 'புனல்' இருமுறை கூறப்பட்டது. வெற்றிக்குத் தக்க இடம் மிக இன்றியமை யாதது. போர் முறைகளைப் பற்றிய குறட்பாக்கள் ஆகையால் வெல்லுதல், கொல்லுதல் என்பனவற்றைச் சுட்டிக் காட்டினார். எல்லோரும் 'தம் நிலத்தில்' வலியர் என்பது கூறப் பட்டது. நீரிலே வெல்லுகின்ற முதலை நிலத்திலே கொல்லப்படும் என்பதாம். அவரை — பகைவரை — அவர் நிற்றலாற்றா விடத்துச் சென்று வெல்க என்பது கருத்தாகும்.

**496 கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் ...**

'கால்வல் நெடுந்தேர்' என்பது ஓடுதற்கேற்ற காலும் பெருமையும் உடையவரா யினும் என்பது தோன்ற நின்றது. பகைவர் இடங்களை அறிந்து, அவற்றிற்கு ஏற்ற கருவிகளால் வினை செய்க' என்பதாம். நெடுங்கடலும் (17) என்பது நினைக்கத்தக்கது. 'நிலத்து ஓடா', 'கடல் ஓடா' என்பன சிந்தனைக்குரியன.

**497 அஞ்சாமை அல்லால் துணைவேண்டா ...**

'அஞ்சாமை ஈகை' (382) என்பது நினைக்கத்தக்கது. 'செயின்' அருமை தோன்ற நின்றது. திண்ணியராய் நின்று செய்து முடித்தலே வேண்டுவது அல்லது துணை வேண்டா என்றார். ஏனெனில் அவ்வினை தவறுவதற்குக் காரணம் இல்லை என்பதாகும். தக்க இடம் துணையில்லாமலேயே வெற்றியினைத் தந்துவிடும்.

**498 சிறுபடையான் செல்லிடம் சேரின் ...**

'செல்லிடம்' என்பது பகைவன் செல்லுகின்ற இடம். இது போரைக் குறித்ததால் படையென்றார்; தன் படைப் பெருமையை மட்டும் கருதி இடம் நோக்காது செல்லுதல் கூடாது; 'சிறுபடை' என்பது சிந்தித்தறிதல் வேண்டும். புது இடம் ஆதலால் தனது படைக்குப் பயிற்சியின்மையால் அது கெடும்.

படையின் சிறப்பினைக் கூறுகின்ற அதிகாரங்களைக் காண்க; 'ஊக்கமுடைமை' அதிகாரத்தைக் கருதுக. தன் படைப்பெருமையை மட்டும் கருதி இடம் நோக்காது செல்லுதல் தவறு என்றார்.

**499 சிறைநலனும் சீரும் இலரெனினும் ...**

'ஆண்மையுடையவர்களை அவர்களின் சிறுமை நோக்கி அவர்கள் இருப்பிடத்திற்குச் சென்று தாக்கினால், அவர்கள் அது விட்டுப் போவதற்குத் துணிவில்லாமல் சாதற்குத் துணிந்து கடும் போர் செய்வர் என்பது கருத்து. சாதல் துணிவு பிறந்து விடுவதால் பெரும் படையும் உடையும் என்பதாம். 'உறை நிலம்' சிந்திக்கத்தக்கது.

**500 கால்ஆழ் களரின் நரிஅடும் ...**

ஆண்மையும் பெருமையும் உடையவரும் தமக்கு ஏலாத நிலத்திற்குச் சென்றால், அவற்றால் பயனின்றி மிகவும் எளியரால் அழிவர். இக்குறட்பாவில் யானையின் (களிறு) பெரும் பலத்தை மிகவும் சிறப்பாகக் கூறி வைத்தார். கால், களரி, நரி, வேலாள், களிறு இத்தனையும் இக்குறட்பாவில் காணப்படுகின்றன.

## 51 தெரிந்து தெளிதல்

**501 அறம்பொருள் இன்பம் உயிர் ...**

ஒருவனை உயர்ந்த நற்பணிக்கு அமர்த்துவதற்கு முன்பு அவனை எந்தெந்த வகையில் சோதித்தறிய வேண்டும் என்பது குறிக்கப்பட்டது. 'தெரிந்து தெளிதல்' என்னும் இந்த அதிகாரமும், 'திறம் தெரிந்து தேறப்படும்' என்பதும் நன்கு சிந்திக்க வேண்டியன. அமைச்சர் முதலானோரைத் தேர்ந்தெடுக்கும்போது பற்பல முறைகளில் சோதித்துப் பார்க்கவேண்டும் என்பது கருத்தாகும். ஆகவே அவரது மனத்தின் இயல்பினை ஆராய்ந்தறிதல் வேண்டும். பெரும் பதவியில் இருக்க வேண்டியவர்களை நன்கு கவனித்து அமைக்க வேண்டும்.

**502 குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி ...**

குடிமை, குற்றங்கடிதல், நாணுடைமை போன்ற அதிகாரங்கள் நினைவுபடுத்தப் பட்டன. நற்பண்பாளர்கள் பிறந்துள்ள குடியில் பிறந்தார்க்குப் பரம்பரைக் குணம் இயல்பாக இருக்கும் என்பது குறிப்பு. உயர் குடியில் பிறந்தோர் இழிதொழில்கள் செய்ய நாணமடைவர். 'குடிமை', 'குற்றம் கடிதல்' அதிகாரங்களை ஒப்பிட்டு அறிக.

**503 அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் ...**

உலகியலில் அறிந்து கொள்ள வேண்டுவ தொரு பேருண்மை கூறப்பட்டது. 'தெரியுங்கால்' என்பது சிந்திக்கத்தக்கது. 'கல்வி', 'அறிவுடைமை' முதலிய அதிகாரங்கள் இதனால் குறிக்கப்பட்டன. 'அரிய' என்றதால் எப்படிப்பட்டவராக இருந்தாலும் ஆராய்ந் தறிந்துதான் ஆக வேண்டும் என்பதாயிற்று; பிறகுதான் தெளியப்படுவர் என்பதாம். மனத்தின் நிலையாமைத் தன்மையால், ஒரோவழி அறியாமை இருத்தல் இயல்பாகும்; ஆதலால் 'தெரியுங்கால்' என்றார்.

**504 குணம்நாடிக் குற்றமும் நாடி ...**

மிகுதியாக இருப்பவற்றை 'மிகை' என்றார். குணமே உடையார் உலகில் அரியராகலின், இந்த வகையில் தேர்ந்தெடுத்தல் வேண்டும் என்பதாயிற்று; 'பண்புடைமை', 'குற்றங்கடிதல்' முதலிய அதிகாரங்கள் இதில் குறிக்கப்பட்டன. 'மிக்க கொளல்' என்பது கருதப்படவேண்டியது. குணம் மிக்கதாயின் வினைக்கு உரியன் என்றும், குற்றம் மிக்கதாயின் அல்லன் என்றும் அறிதல் வேண்டும்.

**505 பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் ...**

'பெருமை', 'சிற்றினஞ்சேராமை', 'வினைத்தூய்மை' என்ற அதிகாரங்கள் இதனால் குறிக்கப்படுகின்றன. 'கருமமே' என்பதில் காணப்படும் 'ஏ'காரம் உறுதிப்பாட்டினை உணர்த்திற்று. மக்களது பெருமையும் சிறுமையும் தப்பாமல் அறிய வேண்டுபவர்களுக்குப் பிற கருவிகளும் உள்ளதாயினும், தம்தம் கருமமே (செயலே) முடிந்த கருவியென்பது உறுதிப் படுத்தப்பட்டது. 'வினைப்படுபாலால் கொளல்' (279) என்பது சிந்தனைக்குரியது.

**506 அற்றாரைத் தேறுதல் ஓம்புக ...**

நாணுடைமை என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகிறது. சுற்றத்தார் இல்லாத வர்களைத் தேர்ந்தெடுத்தல் தகாது என்பது குறிக்கப்பட்டது. உற்றார், உறவினர், சுற்றத்தார் என்று உலக நடையில் கூறப்படுபவர்கள் - யாருமே இல்லாதவர்கள் பழிபாவத்திற்கு அஞ்சமாட்டார்கள் என்பதாம். 'சுற்றந்தழால்' என்ற அதிகாரம் குறித்துக்காட்டப்பட்டது. உலகத்தார் பழிப்பன ஒழிதற்கும், புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலகநடை இயல்பு சுற்றம் பெற்றிருப்பதாகும்.

**507 காதன்மை கந்தா அறிவுஅறியார் ...**

'அறிவுடைமை', 'பேதைமை' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. நாட்டுத் தலைவனான மன்னன் தன்னுடன் கொண்டுள்ள அன்பு பற்றி அறிவிலாரிடம் தொழில்களை ஒப்படைக்கக் கூடாது என்பதாம். இதனால் தொழில் கெட்டுவிடும் என்பது மட்டுமன்று; தொழிலுக்கு உரியவரைத் தேர்ந்தெடுக்கத் தெரியவில்லை என்பதும் ஆகும்.

**508 தேரான் பிறனைத் தெளிந்தான் ...**

'இடும்பை' என்பது 'இடுக்கணழியாமை' என்ற அதிகாரத்தின் கருத்துக்களை நினைவு படுத்தும். தெளிதல் என்பது அவனிடத்தில் ஒரு தொழிலை ஒப்படைத்தல் என்பதாகும். தகாதவனிடத்தில் ஒப்படைத்தால், வினை கெடுதலால் தன் குலத்துப் பிறந்தாரும் பகைவர் கைப்பட்டுத் தாழ்ந்து கிழாய்விடுவர். ஆதலால் 'வழி முறை' என்று குறிப்பிட்டார். ஒருவரை நன்கு தெரிந்து கொள்ளாமல் அவரிடம் வினையை ஒப்படைத்தல் பெருந் தவறாகும்.

**509 தேறற்க யாரையும் தேராது ...**

'தேறும் பொருள்' என்பதனால் அவரவர் ஆற்றலுக்குத் தகுந்தபடி தொழில்களை ஒப்படைக்க வேண்டும் என்பதாகும். 'தேறுக தேறும் பொருள்' என்பது மிகுதியும் சிந்திக்கத் தக்கது.

**510 தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ...**

ஒரு தொழிலை ஒப்படைத்தபின் ஒரு தவறு கண்டு அவனை ஐயப்பட்டு விட்டால் (சந்தேகங்கொண்டால்) அதனை அவன் அறிந்து, 'இனி இது நில்லாது' என்னும் கருத்தால் அத்தொழிலைத் தளர்த்தி விடுவான்; அதுவன்றிப் பகைவரால் எளிதில் சிரிக்கவும்படுவான். ஆதலால், தெளிந்தான்கண் ஐயுறுதல் ஆகாது என்றார். தெளிவிற்கு எல்லை கூறப்பட்டது. 'தீரா இடும்பை' - நன்கு சிந்திக்கப்பட வேண்டியது. வினையில் வைத்தபின் ஒரு தவறும் காணாதபோது ஐயுறுதல் கூடாது.

## 52 தெரிந்து வினையாடல்

**511 நன்மையும் தீமையும் நாடி ...**

தொழிலில் அமர்த்தப் பட்டவர்களை நடத்தும் முறையை இவ்வதிகாரம் கூறுகிறது. ஒருவனிடத்தில் வினையினை ஒப்படைத்த பிறகு அவ்வினையில் அவனை நடத்தும் முறைமை இதில் கூறப்பட்டது.

**512 வாரி பெருக்கி வளம்படுத்து ...**

தன்னிடம் ஒம்படைக்கப்பட்ட வினைகளை மேற்கொண்டு செய்பவனின் இலக்கணம் இதில் கூறப்பட்டது. 'ஆராய்வான்' என்பதைக் கருதுக. பற்பல ஆற்றல்களும் அவனுக்கு இருத்தல் வேண்டும் என்பது விளக்கப்பட்டது. இறை மாட்சியுள் 385-ஆம் குறட்பாவில் கூறப்பட்டவற்றைச் சிந்திக்கவும்; இதன் குறிப்பு விரியச் செய்தல், பாதுகாத்தல் முதலியன.

**513 அன்புஅறிவு தேற்றம் அவாஇன்மை ...**

'அன்புடைமை', 'அறிவுடைமை' முதலிய அதிகாரங்கள் இக்குறளில் குறிக்கப்பட்டன. 'வினைத்திட்பம்', 'வினைசெயல்வகை' முதலிய அதிகாரங்களும் கருதற்பாலன. துறவிகட்கு 'அவாஅறுத்த'லைக் கூறினார். பொருள் கையில் வந்தபோது ஆசை வைக்கக்கூடாது என்பதற்கு 'அவாவின்மை' யைக் கூறினார். 'நன்குடையான்' என்பதைச் சிந்தித்தறிக.

**514 எனைவகையால் தேறியக் கண்ணும் ...**

உலகியலில் காணப்பட்டு அறிந்து கொள்ள வேண்டிய உண்மைகளில் தெரிந்து வினையாடலும் ஒன்றாகும். நல்லவர்களாக இருந்தவர்களும் ஒரு தொழிலை மேற்கொண்ட பிறகு குணத்தால் மாறுபடுவர் என்பதைக் குறித்து 'வேறாகும் மாந்தர் பலர்' என்றார். வினைமேல் வைப்பதற்கு முன் சிறப்பான நற்குணங்களும் உடையவராயிருந்தவர் வைத்தபின் விகாரப்படுதலும் உண்டு. ஆகவே அறிந்தபின் அவர்களை ஒழிக்க வேண்டும். 'பலர்' என்று கூறியது சிந்தனைக்குரியது.

**515 அறிந்துஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் ...**

'காதன்மை கந்தா' (507) என்ற குறட்பா இதன்மூலம் விளக்கப்படுகிறது. அறிவு ஆற்றல்களினால்தான் தொழில் முடிய வேண்டுமேயல்லாமல் அன்பால் முடியாது என்பது இதனால் கூறப்பட்டது. தொழிலினது இயல்பு நன்கு புலப்படுத்தப்பட்டது.

**516 செய்வானை நாடி வினைநாடி ...**

இந்தக் காலத்தில் இப்படிப்பட்ட தன்மையுடையவன் இத்தொழில் செய்தால் முடியும் என்பதை ஒருவன் அறிந்து கொள்ளுதல் வேண்டும். ஆகவே வினைகளின் மேல் செல்ல வேண்டியவனை அரசன் நன்கு அறிந்திருத்தல் வேண்டும் என்பதாம்.

**517 இதனை இதனால் இவன்முடிக்கும் ...**

'விடல்' என்பது அதனை அவனுக்கு உரியதாகச் செய்தால், அவனை அதற்கு உரியவனாக்குதலாம். 'முடிக்கும்' என்றது சிந்தனைக்குரியது. தேர்ந்தெடுத்தல் என்பதனைக் குறித்துக் காட்டவே, 'இவன்' என்றார். முந்திய குறட்பாவின் கருத்து மேலும் இதில் விளக்கம் பெற்றது.

**518 வினைக்குரிமை நாடிய பின்றை ...**

வினை புரிபவனிடம் முழுப் பொறுப்பினையும் அரசன் ஒப்படைக்க வேண்டும் என்பதாம். 'அதற்கு உரியன' என்பது சிந்திக்கத் தக்கது. அவனைத் தானே செய்து முடிக்கும் ஆற்றல் உடையவனாக அரசன் செய்தல் வேண்டும்; 'உரிமை' என்பதும் 'உரியன' என்பதும் சிந்தனைக் குரியன. உரியவனாகச் செய்யா விட்டாலும் கெடும் என்பதாம்.

**519 வினைக்கண் வினையுடையான் கேண்மை ...**

'கேண்மை' என்பது 'நட்பு' முதலிய அதிகாரங்களை நினைவுபடுத்தும். தொழில் செய்பவனுக்குரிய உரிமை ஈங்குப் புலப்படுத்தப்பட்டது. 'நீங்கும் திரு' என்பதைச் சிந்திக்க. அவனை வேறுபட்டவனாக நினைக்கக்கூடாது என்பதாம்.

தான், பிறன் போல நில்லாது நெருங்கிய உறவு பூண்டவனாக அரசன் நடக்க வேண்டும். அவனை அவமதிப்பதாக நடத்துதல் கூடாது; இதனால் தொழில் மேற் கொண்டானை ஆளும் திறம் கூறப்பட்டது.

**520 நாடோறும் நாடுக மன்னன் ...**

மிக மிகச் சிறந்த அரிய உண்மைகளில் இதுவும் ஒன்று. உலகம் எவருடைய வழியில் உள்ளது என்பது இக்குறளில் உணர்த்தப்பட்டது. 'நாள் தோறும்' சிந்தனைக்குரியது என்பது அரசன் தொழில் செய்பவர்களைப்பற்றி நாள்தோறும் கவனித்துக் கொண்டே இருக்க வேண்டும். 'நாடுக' என்பது கருதற்பாலது. தொழில் செய்பவன் மனம் கோணாதிருத்தல் வேண்டும் என்பது குறிப்பாயிற்று. இத்துடன் வினைத் தொடர்பான அதிகாரங்களை ஒப்பு நோக்குக.

**521 பற்றற்ற கண்ணும் பழைமை ...**

உற்றார், உறவின் முறையினரையும் மன்னனாகிய தலைவனைச் சூழ்ந்திருப்பவர் களையும் 'சுற்றம்' என்று குறித்துக் காட்டும் அதிகாரமாகும் இது. 'பழைமை' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. சுற்றத்தாரின் அருமையான உயர்ந்த குணம் இவ்வதிகாரத்தில் கூறப்பட்டது.

சுற்றத்தின் சிறப்பு இதில் கூறப்பட்டது. பழைமை என்பது பற்றற்றக் காலத்துத் தமக்குச் செய்த உதவியாம். பிறரெல்லாரும் பற்றுள்ளபோதே பற்றுவர். இதனைப் 'பழைமை' என்ற அதிகாரத்துடன் ஒப்பிட்டு நோக்குக.

**522 விருப்புஅறாச் சுற்றம் இயையின் ...**

உட்பகையினின்றும் நீக்குதற்கு 'விருப்பறாச் சுற்றம்' என்றார். தானே வளர்க்கும் செல்வம் ஆதலால் 'அருப்பறா ஆக்கம்' என்று சிறப்பித்தார். பலரும் கூடி வளர்ப்பதால் ஆக்கம் மேன்மேல் கிளைக்கும் என்று கூறினார்.

**523 அளவளாவு இல்லாதான் வாழ்க்கை ...**

சுற்றமில்லாதவன் செல்வங்கள் தாங்குவார் இல்லாததால் புறத்தே போகும் என்பது கூறப்பட்டது. 'அளவளாவு', 'குளவளா' என்பன ஓசைக் குறிப்பால் பொருளை உணர்த்தி நின்றன. கரையில்லாத குளம் என்பது குறிப்பாயிற்று. ஆகவே நீர் நிறைந்திருந்தும் குளம் பயனற்றுப் போகும்; சுற்றத்துடன் கலந்து பழகுதல் வேண்டும் என்பது இதன் குறிப்பாகும்.

சுற்றம் இல்லாதான் செல்வங்கள் தாங்குவோர் இன்மையின் புறத்தே போகும் என்பது கருத்தாகும். தன்னளவும் செல்வத்தின் அளவும் உசாவுதல் சுற்றத்தார் இயல்பு. ஆதலால் 'அளவளாவு' என்றார் ஆசிரியர்.

**524 சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் ...**

'பொருள் செயல்வகை', 'நன்றியில் செல்வம்' என்பவை குறிப்பால் உணர்த்தப்பட்டன. 'பெற்றத்தால் பெற்றபயன்' என்பது சிந்தனைக்குரியது. 'பயனுடையார்' (994) என்பது நினைக்கத்தக்கது.

இவ்வாறு ஒழுகுதல் பகையின்றி ஆட்சி செய்தற்குப் பொருத்தமாதலின் இதனைச் செல்வத்திற்குப் பயன் என்றார்.

**525 கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் ...**

'ஒப்புரவறிதல்', 'ஈகை', 'இனியவை கூறல்' முதலிய அதிகாரங்கள் நினைவு படுத்தற் குரியன. அளவறிந்து செய்தல் அரிது என்பது தோன்ற 'ஆற்றின்' என்றார். 'அடுக்கிய சுற்றம்' என்பது சிறப்பினை உணர்த்திற்று. 'இல்லார்க்கு' (1005) என்பது சிந்தனைக்குரியது.

**526 பெருங்கொடையான் பேணான் வெகுளி ...**

'ஈகை' என்ற அதிகாரம் நினைக்கத்தக்கது. 'வெகுளாமை' குறிப்பால் உணர்த்தப் பட்ட அதிகாரமாகும். 'பேணான் வெகுளி' என்பது உணர்தற்குரியதாகும். இதனால் சுற்றத்தார் பெருகுவதற்கு வழி கூறப்பட்டது. மிக்க கொடை யென்பது வறுமை எய்தாமல் கொடுத்தல். 'வெகுளாமை' என்ற அதிகாரமும் உண்டு.

**527 காக்கை கரவா கரைந்துஉண்ணும் ...**

முதல் மூன்று சீர்களின் முதல் எழுத்துக்களைச் சேர்த்து வாசித்தால் காகத்தை அழைப்பது போன்று காணப்படும். தாம் நுகர்வனவற்றையெல்லாம் தம் சுற்றத்தாரும் நுகருமாறு செய்தல் வேண்டும் என்பதைக் குறித்துக் காட்டவே 'அன்ன நீரார்க்கே உள' என்று கூறினார். கரைதல், பிறகு உண்ணுதல் என்பன காக்கையின் இயல்பாகும்.

**சுற்றத்தைப் பெற்றால் பகையின்மையும் பெருஞ்செல்வமும் உண்டாகும்; தாம் நுகர்வனவெல்லாம் சுற்றமும் நுகருமாறு செய்தல் வேண்டும்.**

**528 பொதுநோக்கான் வேந்தன் வரிசையா ...**

ஒவ்வொருவரையும் அவரவர்களின் தகுதிக்கு ஏற்றவாறு கவனித்தல் வேண்டும் என்பதே குறிப்பாகும். உயர்ந்தோர்கள் நீங்காமல் இருக்க வழி கூறப்பட்டது. 'அது நோக்கி வாழ்வார்' என்பது சிந்திக்கத் தக்கதாகும். எல்லாரும் விடாமல் ஒழுகுதல் வேண்டும் என்பதைக் கருதி வரிசையா நோக்கி என்றார். 'பொது', 'வரிசை' என்பன சிந்தனைக்குரியன. தலைவனான வேந்தனின் பண்பு இதில் விளக்கப்பட்டது.

**529 தமர்ஆகித் தன்துறந்தார் சுற்றம் ...**

'அமராமைக் காரணமின்றி' என்று கூறியதால் முன்பு அக்காரணம் இருந்ததால் விட்டுப் போனார் என்பதாயிற்று. அரசன்பால் அச்சுற்றம் முன்னர் கண்ட முறையை இப்போது காணாததால் 'வரும்' என்று கூறினார்.

**530 உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை ...**

இது பிரிந்தாரைச் சேர்த்துக் கொள்ளுவது பற்றிக் கூறப்பட்டதாகும். 'உழைப் பிரிந்து' என்று கூறியதால் பிரிதற்குக் காரணம் இல்லாததைக் கூறினார்.

வருவதற்குக் காரணத்தைச் செய்யா விட்டால் பின்னும் பிரிந்து போய்ப் பகையோடு கூடுவர். ஆதலால், 'இழைத்திரிந்து' என்றார். அன்பில்லாமல் பிரிந்து போய்ப் பின்னும் காரணத்தான் வந்தமையின் 'எண்ணிக்கொளல்' என்று கூறினார். பிரிந்துபோய சுற்றத் தாருள் — தீமை செய்யப் போய் அதனை ஒழிய வருவானும், அது செய்யாமற் போய்ப் பின் நன்மை செய்ய வருவானும் 'தழுவப்படும்' என்றார்.

## 54 பொச்சாவாமை

**531 இறந்த வெகுளியின் தீதே ...**

சிறந்த வகையென்பது பெருஞ்செல்வம், பேரின்பம், பெருமிதம் என்பவற்றால் வருவது. இறந்த (மிகுந்த) வெகுளி ஒரோவழிப் பகைவரைக் கொல்லும்; தனக்கும் பெரிய தீமையினை உண்டாக்கவும் கூடும். 'மறதி' என்பதன் தீமையைக் கூறுவது இந்த அதிகார மாகும். 'வெகுளாமை' என்ற அதிகாரத்தையும் சிந்திக்க. வெகுளியின் 'உவகை மகிழ்ச்சி' மிகப் பொல்லாததாகும். 'இறந்த வெகுளி' ஒரு நேரத்தில் பகைவரையும் கொல்லும். இது அப்படி யில்லாமல் தன்னையே கொல்லுதலின் அதனினும் தீமையாயிற்று.

**532 பொச்சாப்புக் கொல்லும் புகழை ...**

'புகழ்', 'அறிவுடைமை', 'நல்குரவு' முதலியவை குறித்துக் காட்டப்பட்டன. 'நிச்ச நிரப்பு' சிந்திக்கத் தக்கது. புகழுடையவனிடம் மறதி உண்டாகுமாகில் அவன் தன்னைக் காத்துக் கொள்ள முடியாதவனாகிவிடுவான். 'நிச்ச நிரப்பு' என்பது 'நல்குரவு' அதிகாரத்தைக் குறிக்கும். 'பொச்சாப்பும்', 'நிச்ச நிரப்பும்' கொடியவை என்றுணர்க.

**533 பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை ...**

'உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிவு' என்று கூறுகின்ற முறை இக்குறட்பா வொன்றில்தான் காண முடிகிறது. 'புகழ்' என்ற அதிகாரமும் குறிக்கப்படுகிறது. அற நூலுடையார்க்கு மட்டுமேயன்றி எவ்வகைப்பட்ட நூலோர்க்கும் 'துணிவு' வேண்டும் என்று கூறப்பட்டது. புகழுக்கு அடிப்படைக் காரணம் உணர்த்தப்பட்டது. முன் குறட்பாபோல

இங்கும் 'புகழ்' குறிக்கப்பட்டது. அரசர்க்கேயன்றி அறம் முதலிய நான்கினும் முயல்வார் யாவர்க்கும் அவை கைகூடாமையின் புகழில்லை என்பது தோன்ற 'எப்பால் நூலோர்க்கும் துணிவு' என்றார். 'பனுவல் துணிவு', 'நூலோர் தொகுத்தவற்றுள்' என்று கூறுகின்ற ஆசிரியர், இக்குறட்பாவில்தான் இவ்வாறு அமைத்தார்.

**534 அச்சம் உடையார்க்கு அரண்இல்லை ...**

'அரண்' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. இது நன்மைக்குக் காரணம் ஆகையால் 'நன்கு' என்றார். அச்சமுடையார்க்குப் பாதுகாப்பாய் நின்ற அரண் அழியுமாறு போல மறவியுடையாருடைய செல்வங்களும் அழியும் என்பதாயிற்று. முந்தைய குறட்பாவில் 'இல்லை' என்று கூறியது போல, இங்கும் 'இல்லை' என்று கூறப்பட்டது.

**535 முன்னுறக் காவாது இழுக்கியான் ...**

'வருமுன்னர்' (435) என்ற குறட்பாவின் விளக்கம் இதில் காணப்படுகிறது. காக்கப்படும் துன்பங்கள் என்பன, சோர்வு பார்த்துப் பகைவர் செய்வனவாம். ஆதலால் அவை காக்கப்பட வேண்டும். உற்ற காலத்துக் காக்கலாகாமையின் 'இரங்கி விடும்' என்றார்.

**536 இழுக்காமை யார்மாட்டும் என்றும் ...**

'வாயின்' என்பது அருமை தோன்ற நின்றது. 'யார் மாட்டும்', 'என்றும்' என்பன சிந்தித்தறிய வேண்டுவன. 'வழுக்காமை வாயின்' என்பதை அறிந்து கொள்ளுதல் வேண்டும். வினைசெய்வார், சுற்றத்தார் என்னும் தம்பாலார் ஆகியோரிடம் ஒப்ப வேண்டுதலின் 'யார் மாட்டும்' என்றார். அரியது ஆகையால் 'இடுக்கண் வருங்கால்' (621) என்ற குறட்பா முடிந்தது போல இதை முடித்தார்.

**537 அரியஎன்று ஆகாத இல்லை ...**

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை அந்தக் கரணங்கள் என்று கூறப்படும். அதனால் அவற்றைக் 'கருவி' என்று குறிப்பிட்டார். இடைவிடாது நினைவும் தப்பாத சூழ்ச்சியும் உடையார்க்கு எல்லாம் எளிதில் முடியும் என்பதாம். 'போற்றிச் செயின்' என்பதைப் பன்முறை எண்ணுக.

**538 புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் ...**

செய்ய வேண்டியது யாது என்று கூறினார். செய்யாது இகழ்ந்தார்க்கு உண்டாகும் தீமை யாதென்று குறிப்பிட்டார். நூல்கள் பலவும் கற்று அவ்வழி நிற்றல் இன்றியமையாதென்று இதனால் உணர்த்தப்பட்டது. நீதி நூலுடையார் கூறியவற்றை மன்னன் கடைப்பிடித்து ஒழுகுதல் வேண்டும். இதைச் செய்யத் தவறியவர்களுக்குப் பல பிறவிகளிலும் நன்மை வராது என்பதாம்.

**539 இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக ...**

இகழ்ச்சியும் கேடும் உடன் தோன்றுமாகலின் 'மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து உள்ளுக' என்றார். கெட்டவர்களை நினைத்துப் பார்த்தால் தாமும் அவ்வாறே கெட்டு விடுவோம் என்று அதன்கண் 'மைந்துறார்' என்பது கருத்தாகும்.

**540 உள்ளியது எய்தல் எளிதுமன் ...**

'பெறின்' என்பது அருமை தோன்ற நின்றது. 'உள்ளியது' இருமுறை கூறப்பட்டது, 'திண்ணியராகப் பெறின்' (666) என்பது சிந்தனைக் குரியது. மறவியின்றி அதனையே நினைத்து முயற்சி செய்தல் வேண்டும் என்பதற்காக 'உள்ளியது உள்ளப் பெறின்', 'எண்ணிய எண்ணியாங்கு எய்துப' என்பதைச் சிந்திக்கவும் என்றார்.

## 55 செங்கோன்மை

**541 ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து ...**

'கண்ணோட்டம்' என்னும் அதிகாரம் இக்குறளால் நினைவு படுத்தப்படுகிறது. நடுவு நிற்றல் இறைக்கு இயல்பாகலின் அதனை 'இறை' என்றார். உயிரினும் சிறந்தாரிடத்திலும் என்பதை உணர்த்தவே, 'யார் மாட்டும்' என்று கூறினார். ஓர்ந்து, கண்ணோடாது, இறை புரிந்து, தேர்ந்து என்பன சிந்திக்கத் தக்கன.

**542 வான்நோக்கி வாழும் உலகெல்லாம் ...**

'வான் சிறப்பு' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. நோக்கி வாழ்தல் என்பது இன்றியமையாத் தன்மையினை உணர்த்தியதாகும். 'நோக்கி' இருமுறை கூறப்பட்டது. 'உலகெல்லாம்' என்றதால் மக்கள் மட்டுமன்றி அனைத்தும் என்பதாயிற்று. 'குடி' என்றதால் மக்கள் என்பதாயிற்று. எல்லா உயிரினங்கட்கும் 'வான்' என்றார்; குடிமக்களுக்குக் 'கோல்' என்றார்.

**543 அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ...**

'நீத்தார் பெருமை', 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரங்கள் குறிப்பால் உணர்த்தப் பட்டன. 'ஆதிபகவன்' என்பதிலும், இக்குறட்பாவிலும் 'ஆதி' என்பது காணப்படுகின்றது. இச்சொல் வேறு எங்கும் கூறப்படவில்லை. அரசர், வணிகர் என்னும் ஏனையோர்க்கும் உரித்தாயினும் தலைமை பற்றி 'அந்தணர் நூல்' என்றார். செங்கோல் இல்வழி இவை நடவாது ஆதலின், அதனை அவற்றிற்கு 'ஆதி' என்றார். அறவாழி அந்தணன் (8) 'அந்தணர் என்போர்' (30) என்று வருகின்ற இடங்களிலும் அந்தணர் என்ற சொற்களைக் கண்டறிதல் வேண்டும். 'மறைமொழி' (28) என்பது சிந்திக்கத் தக்கதாகும். அந்தணரால் குறிக்கப்படுவதே மறை நூலாகும்.

முனிவர்கள் வகுக்கும் அறநெறி 'அந்தணர் நூல்' எனப்பட்டது. ஆதி என்றதால் தனக்கு ஆதியாவது பிறிதில்லை என்பதாயிற்று. 'நின்றது' என்பது அக்கருத்தினை உணர்த்திற்று.

**544 குடிதழீஇக் கோலோச்சும் மாநில...**

'குடிசெயல்வகை' என்ற அதிகாரம் காண்க; நிலம் முழுதும் ஆளுவான் என்பதாலும் குடிமக்களைத் தழுவி ஆட்சி நடத்துவதாலும் அரசனை 'மாநில மன்னன்' என்று கூறினார். தான் விரும்பியபடியே மக்கள் நடத்தல் வேண்டும் என்று நினைத்தல் மன்னனுக்குப் பயனளிக்காதென்பதும், மக்களைத் தழுவி நடத்தல் வேண்டும் என்பதே சிறந்ததாகும் என்பதோடு மக்களாட்சி என்ற குறிப்பும் இதனால் உணர்த்தப்பட்டது. தழீஇ செல்லுதல் என்பது இன்சொல் சொல்லுதலும், தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின.

**545 இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் ...**

'வான் சிறப்பு' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'நாடு', 'உழவு' என்ற அதிகாரங்களையும் நினைத்துப் பார்த்தல் வேண்டும். இதனால் இயற்கையின் பயன் நன்கு இருக்கும் என்பதாகும். இயற்கையின் செயல் குறிப்பாக உணர்த்தப்பட்டது. ஆதலால்தான் மக்கள் மனம் மகிழுமாறு வாழும் நாட்டில் இயற்கை ஒத்து நடக்கும் என்பதாகும். 'பெயலும் விளையுளும்' ஒருசேர நடக்க வேண்டியன ஆயின.

'செங்கோன்மை' என்ற இவ்வதிகாரத்தில் இருமுறை மழையைப் பற்றிக் குறிப்பிட்டார் ஆசிரியர். 'கொடுங்கோன்மை' என்ற அதிகாரத்திலும் அவ்வாறே காண்க. 'பெய்யும் மழை' (55) சிந்திக்கவும். மக்கள் உள்ளம் — ஐம்பூத உணர்ச்சி — நல்ல முறையில் இருந்தால், ஐம்பூதங்களும் சேர்ந்து நடைபெறக்கூடிய நிகழ்ச்சியான மழை பெய்யும்.

**546 வேல்அன்று வென்றி தருவது ...**

மன்னனுக்கு வெற்றியினைத் தருவது செங்கோலேயாகும். போர்க்கருவிகட்கும் அதுவே முதன்மையாதலின் 'வேல் அன்று' என்று கூறினார். செங்கோல் கோணுதலுடைமையாயின், அது கொடுங்கோன்மையாகி விடும் என்பதாம்; 'வேல்' என்பது போர்க் கருவியைக் குறிப்பதாகும்; போர்க் கருவிகள் காலத்திற்குக் காலம் மாறுதலடையும். ஆகையால் அந்தந்தக் காலத்தின் கருவிகளைக் கொள்ளுதல் வேண்டும் என்ற கருத்தினை அறிதல் வேண்டும். போரில் வெற்றி பெறுவதற்கு படை பலத்தைவிட, முதற்பலம் செங்கோல் எனப்பட்டது.

**547 இறைகாக்கும் வையகம் எல்லாம் ...**

'இறைமாட்சி' என்ற அதிகாரம் நினைக்கத்தக்கது. இங்கு இறை என்றதுமன்னனைக் குறித்ததாகும். 'காக்கும்' என்பது இரண்டு முறை கூறப்பட்டுள்ளது. முறை செய்யாத மன்னவனுடைய நாடும் கெடும்; அதனால் அவனும் கெடுவான் என்பது குறிப்பாயிற்று.

'அறம்' காக்கும் என்று பல இடங்களில் குறிப்பதனைக் குறிக்கவே, 'முறை காக்கும்' என்றார் ஆசிரியர். இறைக்கு மேலானது முறையென்று உணர்த்தினார். குறட்பா (388) சிந்திக்கவும்.

### 548 எண்பதத்தான் ஓரா முறைசெய்யா ...

'எண் குணத்தான்' (9) என்பது நினைக்கத்தக்கது. பாவமும் பழியும் அடைதலால் 'தண்பதத்தான்' என்று கூறினார். 'தானே கெடும்' என்பது சிந்திக்கத்தக்கது. 'கெடுப்பார் இலானும் கெடும்' (448) என்பது ஒப்பு நோக்குதற்குரியது. 'காட்சிக்கு எளியன்' (386) முறை செய்து காப்பாற்றும் (388) என்பவற்றைச் சிந்திக்கவும். 'இலானும் கெடும்' (448) என்பது போலவே இங்கும் கூறினார்.

### 549 குடிபுறங் காத்துஓம்பிக் குற்றம் ...

'குற்றங்கடிதல்' என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உள்ளது. 'வடு அன்று' என்று கூறியது சிந்தனைக்குரியது. அதனைத் 'தொழில்' என்று கூறினார். 'காத்தல்', 'ஓம்பல்', 'குற்றங்கடிதல்' என்பன மன்னவனின் தொழில்களாகும். 'புலவர் தொழில்' (394) என்று கூறியது போல, இங்கு 'வேந்தன் தொழில்' என்றார். துன்பம் செய்தல், பொருள் கோடல், கோறல் என ஒறுப்பு (தண்டனை) மூன்று; 'வடுவன்று'—'தொழில்' என்பன சிந்திக்க வேண்டியன.

### 550 கொலையின் கொடியாரை வேந்துஒறுத்தல் ...

'உழவு' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'கட்டபின்' (1038) என்பது சிந்தனைக்குரியது. 'கொடியவர்' என்பது பற்பல கொடிய செயல்கள் புரிவோர் என்பதாயிற்று; 'வேந்தலைக்கும் கொல் குறும்பு' (735) என்பது போன்றவை சிந்தனைக்குரியன. இக்குறளால் கொடியவர்களுக்குக் கொலைத் தண்டனை கொடுக்க வேண்டும் என்பதாம். 'கொடியாரை' என்றது தீக்கொளுவார், நஞ்சிடுவார், குருவைக் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறை கொள்வார், பிறனில் விழைவார் முதலியோரைக் குறித்தது.

## 56 கொடுங்கோன்மை

### 551 கொலைமேற்கொண் டாரின் கொடிதே ...

கொலை செய்பவர்களை விடவும் மன்னவன் கொடியவனென்று கூறப்பட்டுவிடுவான் என்பதாம். கொலை செய்பவர் செய்கின்ற துன்பம் ஒரு பொழுதைத் துன்பமாகும். இவன் செய்வது எப்பொழுதும் துன்பமாகும். ஆதலால்தான் கொலைக்காரர்களைவிடக் கொடியவன் என்றார். 'அலை' கொலையினும் கொடியதாயிற்று. 'மேற்கொண்டு' என்பது இருமுறை கூறப்பட்டது. 'கொலை', 'அலை' என்பன சிந்திக்கத்தக்கன. கொலை செய்பவன் உயிர் போகும்படிச் செய்து விடுகின்றான். ஆனால் வேந்தனோ சாகவும் விடாமல் வாழவும் விடாமல் துன்புறுத்துவதால் 'அலை' என்றார். செங்கோன்மைக்கு மாறுபட்டு நடப்பது கொடுங்கோன்மையாகும்.

### 552 வேலொடு நின்றான் இடு ...

'வேல்', 'கோல்' என்பன சிந்தனைக்குரியன. 'வேலொடு நின்றான்' என்பது மற்றவர் களுடன் நில்லாமல் தனித்து நின்றான் என்பதாம். 'இரவு' என்றதனால், அரசாங்கத்திற்கு உரிய இறைப்பொருள் அல்லாமல், வேறு காரணங் காட்டி மக்களிடையே வாங்குகின்ற பொருள் என்பதாயிற்று. 'இரவு', 'இரவச்சம்' என்ற பெயர்களில் அதிகாரங்கள் இருக்கின்றன; 'நின்றான்' இருமுறை கூறப்பட்டது. கேட்பதைக் கொடுக்காவிட்டால் கள்வன் தண்டிப்பான் என்பதாம்.

கொடுங்கோலனும் அப்படியேயாவான் என்று கூறினார். இச்செயல் வேலொடு நின்றான் வேண்டுவது போல இருக்கின்றது என்பதனைச் சுட்டிக் காட்டவே, 'இடு' என்றும் 'இரவு' என்றும் குறிப்பிட்டார். உண்மையில் அவர்கள் கள்வர்களே யாவர்; அத்தகைய வேந்தனும் கள்வர்க்குச் சமம் என்றே கூற வேண்டும். 'அது போலும்' என்பது நன்கு சிந்தித்தறிய வேண்டுவதாகும். கோலொடு நின்றான் 'இரவு' (யாசித்தல்) வேண்டியதில்லை; அப்படிச் செய்வது கொடுங்கோன்மையேயாகும் என்றார்.

'தாராக்கால் ஒறுப்பல்' என்னும் குறிப்பினன் ஆகலின் இரவால் கோடலும் கொடுங் கோன்மை ஆயிற்று.

### 553 நாள்தொறும் நாடி முறைசெய்யா...

'நாடொறும் நாடுக' (520) என்பது நினைவு படுத்தப்படுவதாகும். அரசனுக்கு நாடு உறுப்பு ஆதலின் அதன் வினை அவன்மேல் நின்றது. முறைசெய்யா மன்னவன் நாடு ஒரே நாளில் கெட்டுவிடாது என்றும், நாள்தோறும் நாடு கெடும் என்றும் கூறப்பட்டது. இக்குறளால் 'நாடு' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. நாடுதல், முறை செய்தல் சிந்தனைக்குரியன. அரசனுக்கு நாடு உறுப்பாகலின் அதன் வினை அவன்மேல் கூறப்பட்டது.

### 554 கூழும் குடியும் ஒருங்குஇழக்கும் ...

நாட்டுத் தலைவனுக்குள்ள உறுப்புகள் 'குடி, கூழ்' (381) என்பன. முறை தவறும் அரசன் இவ்விரண்டும் ஒருங்கு இழக்கும்' என்பது சிந்தனைக் குரியது. ஆகவே அவன் பொருளைத்தரும் குடி மக்களையும் இழப்பான் என்பது குறிப்பிடத்தக்கதாகும். 'சூழ்வாரைச் சூழ்ந்து' (445) என்பது போன்றவை கருதற்பாலன. 'படை குடி கூழ்' (381) என்ற குறட்பா சிந்திக்கத்தக்கது. ஆறு உறுப்புக்களில் குடி, கூழ் (பொருள்) ஆகிய இரண்டினை இழக்க நேரிடும். இதனால் கொடுங்கோன்மையின் கொடுமை கூறப்பட்டது.

### 555 அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண்ணீர் ...

கண்ணீரைச் செல்வம் என்கின்ற மரத்தைத் தேய்க்கும் படை என்றார். 'படை' என்பது 'படைச்செருக்கு' முதலிய அதிகாரங்களை நினைவு படுத்தும். அரசன் குடிமக்களை அல்லல் படுத்தியது மிகுந்த பாவமாகும். அதனால் வந்த கண்ணீர் கொடியதாயிற்று. படை, கண்ணீர் என்ற இரண்டும் குறிப்பிட்டுக் காட்டப்படுவன; 828 ஐச் சிந்தித்துப் பார்க்க. முகை

என வேண்டாம் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. பஞ்ச பூதங்கள் நிறைந்த மனித மனத்தின் உணர்ச்சி புற உலகில் செயல்பட்டே தீரும். ஆதலால் இவ்வாறு கூறினார். நன்மை தீமை இரண்டிற்கும் மனத்தின் செயல் காட்டப்படும். மனித உள்ளத்தினுள் இருக்கும் பூதங்கள் ஐந்தும் வெளியுலகில் இருக்கும் ஐந்து பூதங்களையும் வசப்படுத்தும். அந்த நிலை மனத்தில் உறுதிப்படவேண்டும்.

**556 மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை ...**

'ஒளி' என்பதனால், 'புகழ்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. மேலும் முந்தைய அதிகாரம் குறிக்கப்பட்டது. உலகில் ஒருவன் நிலைத்து நிற்பதற்குக் காரணம் புகழ் என்பதாயிற்று. ஆகவே பழிக்கப்பட்டால் ஒளி (புகழ்) நிலைத்திருக்காது என்பதாம். 'மன்னர்க்கு மன்னுதல்', 'மன்னாவாம் மன்னர்க்கு' என்பவை சிந்திக்க வேண்டியன.

பழிக்கப்பட்டால் ஒளி மன்னாவாம்; ஆகவே தாமும் மன்னார் என்பதாயிற்று. வென்றி, கொடை முதலிய ஏதுக்களால் புகழ் பகுதிபடுதலின் பன்மையாய்க் கூறினார் ஆசிரியர்.

**557 துளிஇன்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே ...**

'வானோக்கி வாழும்' (542) என்ற குறட்பாவும், 'வாழ்வார்க்கு வானம்' (1192) என்ற குறட்பாவும் இக்குறட்பாவுடன் ஒப்பிட்டுப் பார்த்தற்குரியன. 'வான் சிறப்பு' அதிகாரம் நினைவுப்படுத்தப்பட்டது. 'உயிர்' என்பது நாட்டில் வாழும் குடிமக்களைக் குறித்து நின்றது. 'ஞாலத்திற்கு' என்பதனால் மழையில்லாமல் பூமி அறவே கெட்டுப் போகும் என்பது குறிக்கப்பட்டது. 'ஞாலம்' உலகில் வாழும் உயிர்கள் அனைத்தையும் குறிப்பால் உணர்த்திற்று. 'அளி' என்பது 'அளிக்குமாறு' (1321) என்பதை நினைவுபடுத்துவதாகும். இவ்வதிகாரத்தில் மழையைப் பற்றி இருமுறை கூறினார். சிறப்புப்பற்றித் துளி என்பது மழைமேல் நின்றது. உயிர் என்பது குடிகள்மேல் நின்றது.

**558 இன்மையின் இன்னாது உடைமை ....**

'இன்மையின் இன்னாதது யாது' (1041) என்றார். இக்குறட்பாவில் 'இன்மையின் இன்னாதது உடைமை' என்றார். தமக்குரிய பொருளோடு நில்லாமல் தண்டம் முதலிய கொடுமையனைத்தும் பொருளுடையவர்களுக்கேயாதலால், பொருளுடைமை அப்படிப் பட்டவன் நாட்டில் வாழும் மக்களுக்கு மிகவும் துன்பமாயிற்று. 'கோல் கீழ்ப்படின்' என்றதால் அகப்பட்டுக் கொண்ட குடிமக்கள் என்பது உணர்த்தப்பட்டது. கொடுங்கோன்மை செய்யும் மன்னன் நாட்டில் பொருளுடையோர் வறியவரைவிட மிகவும் துன்பப்படுவார்களாம்.

**559 முறைகோடி மன்னவன் செய்யின் ...**

'முறைகோடி', 'உறைகோடி' என்பன சிந்தனைக்குரியன. ஈங்கு 545-ஆவது குறட்பாவின் உரை விளக்கத்தினைக் கண்டு தெளிக. 'வான் சிறப்பு' அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'உறை கோடுதல்' என்பது பெய்யுங்காலத்துப் பெய்யாமை என்பதாகும். 'கெடுப்பதூஉம்' (15) என்பது சிந்திக்கத்தக்கது. மக்கள் உள்ளம் நோகும்படி ஆள்பவன்நாட்டில் இயற்கை நன்மை புரியாது என்பதாம். அவன் நாட்டில் மேகம் மழை பொழிதலைச் செய்யாது. அதனால் பருவ மழை இல்லாமல் போகும். இதனை 'இயல்புளி' (545) என்பதனுடன் ஒப்பிடுக்

**560 ஆபயன் குன்றும் அறுதொழிலோர் ...**

'காவலன்' என்பது மிகுதியும் சிந்தித்தறிய வேண்டுவதாகும். 'ஆ'பயன் என்று கூறியதால், முந்தைய குறட்பாவில் குறிப்பிட்டதுபோல மழை பொழியாமல் பூமி கெட்டு நாடும் கெடும் என்ற உண்மை உணர்த்தப்பட்டது. 'பயன்' என்பது, 'பால் தராது' என்று கூறியது மட்டுமன்று; அந்த நாட்டின் நிலைமையை உணர்த்தியதுமாகும். அறத்தினை வரையறுத்துக் கூறுவோர் அந்தணர் ஆவர். 'ஆதியாய் நின்றது' (543) என்பது கருதற்பாலதாகும். 'மறப்பர்' என்பது நூல்களை இழந்து விடுவர் என்பதையும் உணர்த்திற்று. மறப்பது மிகுந்த தீமை பயப்பதாகும் என்பதனைப் 'பொச்சாவாமை' என்று அதிகாரம் விளக்குவதாகும்.

பசுக்களினால் அடையும் பயன் உண்டாகாது. பருவ மழை பெய்தல் இன்றியமையாதது. பசுக்களின் வளர்ச்சி, நாட்டின் மகிழ்ச்சியினை உணர்த்துவதாகும். உலகில் நிகழும் தொழில்களைப் பொதுவாக ஆறு வகைகளில் அடக்குவார் ஆசிரியர். அறுதொழிலோர் உழவர், வணிகர், ஆசிரியர், கம்மியர், கலைஞர், மருத்துவர் என்பவராவர். 'இயல்புடைய மூவர்' (41) என்று கூறியதுபோல, அறு தொழிலோர் என்றார். இக்குறளில் நாட்டின் வளப்பம் பசுவினைக் கொண்டு உணர்த்தப்பட்டது.

## 57 வெருவந்த செய்யாமை

**561 தக்காங்கு நாடித் தலைச்செல்லா ...**

'இன்னா செய்யாமை' என்ற அதிகாரம்போல இந்த அதிகாரம் 'வெருவந்த செய்யாமை' என்று கூறப்பட்டது. அளவுக்கு மீறிய தண்டனை கூடாது என்பதாம். 'தலைச் செல்லா வண்ணம்' என்பது இங்கே கருதற்பாலது. 'தகுதி என ஒன்று நன்றே' (111) என்பதைச் சிந்திக்க! தக்காங்கு நாடாமையும், பிறிதோர் காரணம் பற்றி மிக அதிகமாகத் தண்டித்தலும், குடிமக்கள் அஞ்சுகின்ற நிலைமையினை உண்டாக்கிவிடும் என்பதாகும் மக்கள் அஞ்சுவதும், தான் அஞ்சுவதுமான செயல்களைச் செய்யாமல் குற்றத்திற்கு ஒப்ப தண்டிக்க வேண்டும்.

**562 கடிதுஓச்சி மெல்ல எறிக ...**

'கடிது ஓச்சி' என்பதும் 'மெல்ல எறிக' என்பதும் நன்கு சிந்திக்கத்தக்கன. குற்றம் செய்தோர் அஞ்சும்படி செய்தல் வேண்டும் என்பதும், குடிமக்கள் மிகவும் பயப்படும்படி செய்தலாகாது என்பதும் கூறப்பட்டது. 'ஆக்கம்' நீங்கும் தன்மையுடையதாகும் என்பதாம். 'கடிது ஓச்சல்' குற்றம் செய்வார் அதனை அஞ்சுதற் பொருட்டும், மெல்ல எறிதல் — யாவரும் வெகுளாமை பொருட்டுமாம். தொடங்கின அளவில் குறைதல் பற்றி மென்மை கூறப்பட்டது.

**563 வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ...**

'வெங்கோலன்' என அழைக்கப்படுவான் எனில் மக்கள் அஞ்சத்தக்கனவற்றை எப்போதும் செய்தல் கூடாது; செய்தால் கெட்டுவிடுவான் என்பது உறுதியாகக் கூறப்

பட்டது. 'ஒல்லை உணரப்படும்' (826) என்று கூறியதுபோல, இங்கு ஒல்லைக் கெடும். என்றார். 'ஒல்லை உணரப்படும்' (1096) என்று பிறிதோர் இடத்திலும் கூறினார். கொடுங்கோலனைவிட மிகவும் மோசமானவன் வெங்கோலனாவான்; ஆதலால் இதனை 'வெருவந்த செய்யாமை' என்ற அதிகாரத்தில் உரைத்தார்.

**564 இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் ...**

முந்தைய பாவில் கூறியது போல, இங்கும் 'ஒல்லைக் கெடும்' என்றார். நெஞ்சு நொந்து சொல்லுதலால் 'இன்னாச் சொல்' என்றார். 'உறை' என்பது அரசன் வாழ்நாளைக் குறிப்பதாகும். காக்க வேண்டியவன் ஆகையால் அவனை 'இறை' என்றார். அவனே 'கடியன்' என்று ஆகிவிடுதல் கொடுமையாயிற்று. 'இறை என்று வைக்கப்படும்' (388) என்பதனைச் சிந்திக்க.

**565 அருஞ்செவ்வி இன்னா முகத்தான் ...**

'காட்சிக்கு எளியன்' என்பது நினைவு கொள்ளப்படுகிறது. பார்ப்பதற்கு முகம் நன்றாக இருக்க வேண்டும் என்பது இதனால் குறிக்கப்பட்டது. மேலும் அவனது செல்வம் தனக்கும் பிறர்க்கும் பயன்படாது போகும் என்பது உணர்த்தப்பட்டது. இன்னா முகத்தானை உலகியல் வழக்கில் அமைத்துப் 'பேய்' என்றார். 'பேய்' தாக்கிய உருவம் பார்ப்பதற்கு உருவமாகக் காணப்பட்டாலும், உள்ளே ஒன்றுமில்லாததாகிவிடும். அருஞ்செவ்வி இன்னா முகத்தான் செல்வம், உள்ளது போன்று இருந்து 'உள் உடைந்து விடும்' என்பதாம். ஆசிரியர் குறித்துக் காட்டும் கருத்து இன்றியமையாதது. பயன்படுத்திய கருவி கால வழக்கினால் எடுத்தாளப்பட்டதாகும். 'முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி' (93) என்பது சிந்தனைக் குரியது. 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரமும் 'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரமும் கருதற்பாலன.

உலக வழக்கில் அஞ்சத்தக்கது 'பேய்' என்பர். தனக்கும் பிறர்க்கும் பயன்படாது என்பது பற்றிப் 'பேய்' கண்டன்னது 'உடைத்து' என்றார். 'கொடுங்கோன்மை', 'வெருவந்த செய்யாமை' என்ற அதிகாரங்களைப் படிக்கின்றபோது 'இறைமாட்சி' என்ற அதிகாரத்தினையும் பார்த்தல் வேண்டும்; ஒப்பிடுதல் நல்லது.

**566 கடுஞ்சொல்லன் கண்இலன் ஆயின் ...**

முந்தைய குறட்பாவில் பெருஞ் செல்வம் என்றது போல இங்கு நெடுஞ் செல்வம் என்றார். 'கண்ணோட்டம்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'செய்யின்' (559) என்று கூறியது போல, இங்கு 'ஆயின்' என்று குறிப்பிட்டார். 'கடுஞ் சொல்லன் அல்லனேல்' (386)என்பதனைச் சிந்திக்கவேண்டும். 'இனியவை கூறல்' என்ற அதிகாரமும் சிந்தனைக்குரியது' முன்னர் 'உறைகடுகி ஒல்லைக்கெடும்' (564) என்றார்; இங்கு 'நீடு இன்றி ஆங்கே கெடும்' என்றார்.

**567 கடுமொழியும் கையிகந்த தண்டமும் ...**

செவ்வியின்மை, இன்னா முகமுடைமை, கண்ணோட்டமின்மை, கடுஞ் சொல்லல், கையிகந்த தண்டம் என்பவை குடிமக்கள் அஞ்சி நடுங்கும் செயல்களாகும். 'தேய்க்கும்படை' (555) என்று கூறியது போல இங்கு 'தேய்க்கும் அரம்' என்று குறிப்பிட்டார். 'அரம் பொருத' (888) என்பதையும் நினைக்க வேண்டும். 'முரண் சேர்ந்த' (492) என்பது சிந்தனைக் குரியது. பகைவரை வெல்லும் வலிமையினை 'அடுமுரண்' என்றார். பொருள் வலி, படை வலி, துணை வலி, அரண் வலி, தம் வலி முதலிய அனைத்து வலிமைகளையும் கடுமொழியும் கையிகந்த தண்டமும் தேய்த்து விடும் என்றார்.

**568 இனத்துஆற்றி எண்ணாத வேந்தன் ...**

'பெரியாரைத் துணைக் கோடல்', 'அமைச்சு' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப் பட்டன. 'தக்கார் இனத்தானாய்' (446) என்பது சிந்தனைக்குரியது. 'சினத்தாற்றிச் சீறின்' என்றதால் வேந்தன் தனக்குத் தேடிக் கொள்ளும் பெருந்தீமை குறிக்கப்பட்டது.

**569 செருவந்த போழ்தின் சிறைசெய்யா ...**

'பகை மாட்சி', 'பகைத் திறம் தெரிதல்' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப் பட்டன. தனக்குப் பாதுகாவல் செய்து கொள்ள வேண்டிய இன்றியமையாத தன்மை கூறப் பட்டது. 'ஒல்லைக் கெடும்' (564) என்று அமைத்துக் காட்டுவது போல் இங்கு 'வெய்து கெடும்' என்று கூறினார். 'அரண்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. பகையை வெருவி சேர்ந்தார் நீங்குதலின், தமியனாய்த் தானும் வெருவி அப்பகைவயத்தனாம் என்பதாம். 'ஒல்லைக் கெடும்', 'ஆங்காங்கே கெடும்' என்பது போல 'வெய்து கெடும்' என்று இங்கே குறித்தார்.

**570 கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் ...**

'கல்லாமை' அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. கடுங்கோல் என்பது, 'கொடுங் கோன்மை' அதிகாரத்தினையும் நினைவு படுத்துவதாகும். 'சிற்றினஞ் சேராமை' என்ற அதிகாரமும் நினைத்தற்குரியது. கல்லாதாரை அணைத்து வைத்துக் கொள்ளுவான் என்பதைக் குறிக்கவே 'பிணிக்கும்' என்றார். 'தோற்றம் நிலக்குப் பொறை' (1003) என்பதுபோல இங்கும் 'இல்லை நிலக்குப் பொறை' என்று கூறினார். 'கடுங்கோல் என்பது செய்வான் மேல் நின்றது'; கடுங்கோல் செய்வதற்குத் துணையாய் இருப்பாரைக் 'கல்லார்' என்றார்.

**571 கண்ணோட்டம் என்னும் கழிபெருங் ...**

உடல் அழகினைவிட உயிர் அழகு சிறப்புடையது என்பது தோன்ற 'கழிபெருங் காரிகை' என்று கூறினார். உயிர் அழகிற்கு உறுப்பாதலால் 'உண்மையான்' என்று அதன் நிலைபேற்றினைக் கூறினார். இச்சிறந்த குணத்தினாலேதான் உலக நடைமுறை இருந்து வருவதாகின்றது என்று சிறப்பித்தார். பிறிதோரிடத்தில் 'காரிகை நீர்த்து' (771) என்று கூறினார். 'கலங்கழியும் காரிகை நீத்து' (1262) என்று வருவதும் காண்க. கற்பு என்னும் திண்மை (54) என்பதுபோல, 'கண்ணோட்டம் என்னும்' என்ற முறையில் இதனை அமைத்தார்.

பிறர்பால் இரக்கம், கருணை, அன்பு காட்டலே கண்ணோட்டத்தின்பால் படும். 'நிலம் என்னும் நல்லாள்', 'நாண் என்னும் நல்லாள்' என்று கூறியது போல கண்ணோட்டத்தினைக் 'காரிகை' என்றார்.

**572 கண்ணோட்டத்து உள்ளது உலகியல் ...**

முந்தைய குறட்பாவில் கூறப்பட்ட 'உண்டு இவ்வுலகு' என்பதனை 'உலகியல்' என்று இங்கு எடுத்துக் காட்டினார். 'தோற்றம் நிலக்குப்பொறை' (1003) என்பதுபோல 'உண்மை நிலக்குப் பொறை' என்று கூறினார். ஒப்புரவு செய்தல், புறந்தருதல், பிழைத்தன பொறுத்தல் முதலியனவற்றை 'உலகியல்' என்பதால் உணர்த்தினார். யாருக்கும் பயன்படாதவர்களை 'நிலக்குப் பொறை' என்றார். 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' (140) என்பது சிந்தனைக்குரியது.

உலகியல் இல்லாதார் உண்மை (உளராதலே) இந்தப் பூமிக்குப் பாரமாகும்.

**573 பண்என்னாம் பாடற்கு இயைபுஇன்றேல் ...**

வினாமுறையில் அமைந்துள்ள குறட்பாக்களில் இதுவும் ஒன்று. 'என் ஆம்' என்பது இருமுறை காணப்படுகிறது. 'அகன்ற அறிவு என்னாம்' (175) என்பது போன்ற முறையில் இங்கும் அமைந்து காணப்படுகின்றது. பண் என்பது பாடுதலோடு பொருந்தி இருப்பதாக வேண்டும். அது போன்று கண், கண்ணோட்டத்துடன் பொருந்தி இருக்க வேண்டும். கண்ணோட்டத்துடன் பொருந்தி இல்லாவிட்டால் கண்ணால் பயனில்லை என்பதாம். கண் சென்றவழி நிகழ்தல் பற்றி அதனை இடமாக்கினார்.

**574 உளபோல் முகத்துஎவன் செய்யும் ...**

முந்தைய குறட்பாபோல இக் குறட்பாவும் 'கண்ணோட்டம் இல்லாத கண்' என்று முடிந்துள்ளது. இக்குறட்பா வினா முறையில் அமைந்துள்ளது. 'எவனோ உயிர்க்கு' (31) 'பெறுவது எவன்' (46) 'எவன் செய்யும்' (57) என்பன போன்று பற்பல இடங்களிலும் ஆசிரியர் அமைத்துக் காட்டும் முறையில் இக்குறட்பாவிலும் 'எவன் செய்யும்' என்றார். 'உளபோல்' என்பது, 'உளர் என்னும் மாத்திரையர்' (406) என்பது போன்றவைகளே நினைவு படுத்தும். 'அளவினான்' என்பது நன்கு சிந்திக்கப்பட வேண்டியதாகும். 'ஓர்ந்து கண்ணோடாது' (541) என்பதைக் கருதுக.

'உளர் என்னும் மாத்திரையர் அல்லால்' (406) என்று கூறியதுபோல இங்கும் அமைத்தார். கண்ணோட்டம் என்பது அளவு தாண்டாமல் இருக்க வேண்டும் என்பதாம்.

**575 கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் ...**

வேறு அணிகலன் கண்ணிற்கு இல்லாததால் 'கண்ணிற்கு அணிகலம்' என்று கூறினார். கண்கள் போலத் தோன்றினாலும் நோய்களினாலும் பிறவற்றாலும் துன்பம் செய்தல் கருதி 'புண்' என்று கூறினார்.

'புண்ணுடையர் கல்லாதவர்' (393) என்று அமைத்ததுபோல இங்கும் குறிப்பிட்டார். வேறு அணிகலன் இல்லாததால் கண்ணிற்கு இதுவே அணிகலன் என்றார்.

**576 மண்ணொடு இயைந்த மரத்துஅனையர் ...**

மரத்திற்குச் சமம் என்றும் மரப்பாவையென்றும் கண்ணோடாதவர் கூறப்படுவர். 'ஓடாதவர்' என்ற சொல் இதனை உணர்த்தும். கண்ணினுடைய தொழில் குறிக்கப்பட்டது. 'மண்மாண் புனைபாவை யற்று' (407) என்பதும் சிந்திக்கத்தக்கது. மண்ணோடு பொருந்தி நின்ற மரம் இயங்காது. 'மரம் போல்வர்' (997) என்பது போன்று பிற இடங்களிலும் கூறிய வற்றைக் கண்டு தெளிக.

'வற்றல் மரம்' (78) 'மரம் போல்வர்' (997) 'இல்லார் மரம்' (600) என்பன போன்று இங்கே 'இயைந்த மரம்' என்றார்.

**577 கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் ...**

கண்ணுடையவர்களாக இருந்தால், பார்க்கும்போது அது ஓடும் என்பது பற்றிக் 'கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்' என்று குறித்துக் காட்டினார். அத்தகைய கண்ணுடைய வர்கள் கண்ணோட்டமுடையவர்களாக இருப்பர். கண்களின் தன்மை இயல்பாகவே இரக்க முடைமையைப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதாம்.

கண், காட்சிக் கண்ணாக இருந்தால் சிறப்பில்லை; கண்ணோட்டமுள்ள கண்ணாக இருத்தல் வேண்டும்.

**578 கருமம் சிதையாமல் கண்ணோட ...**

செங்கோல் முறை சிதையும்போல் இருந்தால் கண்ணோடாமையும், சிதையாதபோது கண்ணோடலும் ஒருவற்கு இயல்பாதல் அருமையானபடியால் 'கண்ணோடவல்லார்க்கு' என்று கூறினார். அத்தகைய இயல்பு உடையார்க்கு உலக முழுதும் நெடுங்காலம் சேறலின் 'உரிமை யுடைத்து' என்றும் கூறினார். 'கருமம் சிதையாமல்' என்பது சிந்திக்கதக்கதாகும்.

'தான் கண்டனைத்து இவ்வுலகு' (387) அடிதழீஇ நிற்கும் உலகு' (544) என்பன போன்று இங்கும் உரிமை உடைத்து இவ்வுலகு என்று கூறிக் கண்ணோட்டத்தின் சிறப்பினைக் குறித்தார்.

**579 ஒறுத்துஆற்றும் பண்பினார் கண்ணும்கண் ...**

'பண்புடைமை' என்ற அதிகாரமும் 'பொறையுடைமை' என்ற அதிகாரமும் குறிக்கப் படும். 'ஒறுத்தாரை ஒன்றாக' (155) 'ஒறுத்தார்க்கு ஒரு நாளை' (156) என்பன போன்ற குறட்பாக்கள் சிந்திக்கத்தக்கன. 'பண்பினார்' என்றதனால் அப்படிப்பட்டவர்களுடைய பழக்கம் கூறப்பட்டது. இக்குறளில் குற்றத்தைப் பொறுக்கும் பண்பு கூறப்பட்டது. ஒறுத் தாற்றும் பண்பினாரை, பொறுத்தாற்றும் பண்பாளனாக அரசன் இருக்க வேண்டும் என்று குறிப்பிட்டார்.

**580 பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் ...**

நாகரிகம் என்பது கண்ணோட்டம் என்பதாகும்; அறம், பொருள், இன்பத்தின் கண்ணுள்ள நற்குணங்கள் புலவும் உடைமையாகும், 'பெயக்கண்டும்' என்பது பன்முறையும்

சிந்திக்கத்தக்கது. நேரில் கண்டும் உண்பர் என்பதால், கண்ணோட்டம் என்பதன் உயர்ந்த தன்மை நன்கு விளக்கப்பட்டது. நாகரிகம் என்பது கண்ணோட்டம் பெற்றிருத்தல். கண்ணோட்டத்தில் உயர்ந்த நிலை கூறப்பட்டது. தம்மாட்டுக் குற்றம் செய்த போதும் கண்ணோட வல்லார் என்பதாம்.

## 59 ஒற்றாடல்

### 581 ஒற்றும் உரைசான்ற நூலும் ...

வேந்தனை வேந்து என்று கூறினாற் போல ஒற்றனை ஒற்று என்றார். நாட்டில் நடப்பவைகளைக் கண்டு அறிவிக்கின்றவன் ஆதலால் ஒற்றனைக் 'கண்' என்றார். 'உரைசான்ற நூல்' சிந்திக்கத்தக்கதாகும். அனைத்தையும் அறிவுக் கண்ணால் அறிதற்குத் துணையாக இருப்பதால் அவை கண்கள் எனப்பட்டன. ஒற்றையும் நூலையும் அரசன் ஊனக் கண்ணாகவும், ஞானக் கண்ணாகவும் கொண்டு ஒழுகுதல் வேண்டும்.

### 582 எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை ...

நண்பர், பகைவர், சுற்றத்தார் மற்றும் அனைவரையும் குறித்தலால் 'எல்லார்க்கும்' என்றார். நிகழ்ந்த அப்போதே தக்கவற்றைச் செய்ய வேண்டும். ஆதலால் 'வல்லறிதல்' என்றார். வேந்தனுடைய இன்றியமையாத கடமையை வற்புறுத்தினார். 'எல்லார்க்கும் 'எல்லாம்', 'எஞ்ஞான்றும்' என்பன சிந்தனைக்குரியன. நிகழ்வன எல்லாம் என்றது நல்லன தீயனவுமாகிய சொற்களை—செயல்களை என்பதாம்.

### 583 ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா ...

இது வெற்றியடைவதற்கு முதன்மையான வழி என்று கூறப்பட்டது. அவ்வாறு ஒற்றனால் அறிந்திராவிட்டால் அம்மன்னவன் பகைக்கு எளியவனாகி விடுவான் என்பதாம். ஒற்றினால் பொருளினை நன்கு அறியாதவன். கொள்ளக் கிடந்ததொரு வெற்றி இல்லை என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது. இவ்வாறு நிகழ்ந்தனவற்றையும் பயனையும் அறியாதவன் பகைவர்கட்கு எளியவனாகிவிடுவான். அவன் வெற்றியடைய வேறு வழியே இல்லை.

### 584 வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் ...

எல்லார்க்கும் (582) என்று கூறப்பட்ட குறிப்பு இக்குறட்பாவில் விளக்கம் பெறுகின்றது. சுற்றம் என்று கூறியமையாது 'தம் சுற்றம்' என்றது சிந்தனைக்குரியது. 'சுற்றந்தழால்' என்றோர் அதிகாரம் உண்டு. வினை செய்வார், வினை செயல்வகை, வினைத் தூய்மை, வினைத்திட்பம் போன்ற அதிகாரங்களைச் சிந்திக்க. நன்கு அறிந்து புலப்படுத்த வேண்டுமாதலால் 'ஆராய்வதொற்று' என்றார் ஆசிரியர். பொதுப்படக் கூறுகின்ற போது, அனைவரையும் ஒற்றர் கண்காணித்து வரவேண்டும். குறிப்பும் சிறப்பும் கருதி முத்திறத்தாரும் எடுத்துக் கூறப்பட்டனர். இதில் தொழில் செய்வோரை முதலில் வைத்தமைக்குக் காரணம் நன்கு விளங்கும்.

**585 கடாஅ உருவொடு கண்அஞ்சாது ...**

இக்குறட்பாவில் குறிக்கப்பட்டுள்ள செயல்கள் அனைத்தும் ஆற்றல் படைத்தவர்களால் தான் இயலும். ஆதலால் 'வல்லதே ஒற்று' என்று கூறினார். ஒற்றனது உருவத் தோற்றமும் உள்ளப் பண்பாட்டு வலிமையும் இதில் கூறப்பட்டது. 'கடாஅ உருவொடு', 'உகாமை' என்பன சிந்திக்கத்தக்கன. ஐயுறாத வடிவாவன : பார்ப்பார், வணிகர்.

**586 துறந்தார் படிவத்தர் ஆகி ...**

முந்தைய குறட்பாவில் கூறிய கருத்தினை விளக்கி ஏற்ற வேடத்தினையும் கூறினார். 'என் செயினும்' என்பது மிகவும் சிந்தனைக்குரியது. பிறர் பார்த்தால் சந்தேகிக்க முடியாத தோற்றத்தில் ஒற்றன் செல்லுதல் வேண்டும் என்பதை 'இறந்து ஆராய்ந்து' என்று குறிப்பிட்டார். முன் குறட்பாவில், 'கண்ணஞ்சாது' என்றார். இந்தக் குறட்பாவில், 'சோர்விலது' என்று கூறினார். மேலே கூறிய 'உருவொடு கண் அஞ்சாது' என்பவற்றை விளக்கி 'என் செயினும்' என்று இங்கே கூறினார். முற்றும் துறந்த முனிவர்கள் போலவும், தீர்த்த யாத்திரை செய்யும் விரத ஒழுகினர் போலவும் செல்லலாம். அறவோர்கள் என்றும் ஐயுற மாட்டார்கள்.

**587 மறைந்தவை கேட்கவற்று ஆகி ...**

'கேட்க வற்றாகி' என்பதால் கேட்டறிவதில் வல்லவனாகி என்பதாம். 'வடுக்காண வற்றாகும்' (1079) என்பதும் சிந்திக்கத்தக்கதாகும். கேட்டறிந்தவற்றில் ஐயம் (சந்தேகம்) இருக்கக் கூடாது என்று கூறினார். மறையச் செய்த செயல்களை அவர்களுக்கு உள்ளாயினரால் கேட்டறிவதில் வல்லவனாக இருத்தல் வேண்டும்.

**588 ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் ...**

'ஒற்றிக்கொளல்' என்பது நன்கு சிந்திக்கத்தக்கது. இரண்டு ஒற்றர்கள் கூறிய செய்திகளை ஒத்திட்டுப்பார்த்து உண்மைப் பொருளை உணர்ந்தறிதல் வேண்டும்; மற்றுமோர் ஒற்றினால் என்பதனை நன்கு அறிந்துணரவேண்டும். ஒற்றப்பட்டாரோடு ஒத்து நின்று மாறுபடக் கூறினும் முடிந்தவரை ஒருவன் சொற்களை மட்டும் கேட்டு முடிவுக்கு வருதல் கூடாததாகும்.

**589 ஒற்றுஒற்று உணராமை ஆள்க...**

ஒற்றர்கள் மூவரை வைத்து அறியுமாறு கூறினார். ஒரு செய்தியினை மூவர் வழியாக அறியுங்கால் ஒத்திட்டுப் பார்த்து உண்மையறிதல் எளிது என்பதாகும். ஒருவரையொருவர் தெரிந்து கொள்ளாதபடியும் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். இதனை 'உணராமை ஆள்க' என்றார். இருவர் சொன்னாலும் தெளிதல் ஐயப்பாட்டினை உண்டாக்குதலும் கூடும் என்பதனால், மூவர் சொன்னது தெளிவு என்று குறிக்கப்பட்டது. மூவர் சொல்லும் ஒத்துஇலவாயின் பின்னும் ஆராய்க என்றார்.

**590 சிறப்புஅறிய ஒற்றின்கண் செய்யற்க ...**

ஒற்றர்கள் இருப்பதைப் பிறர் அறியாதவாறு பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். ஒற்றர்களை மக்கள் புரிந்து கொண்டால் ஒற்று வேலை நடக்காது. ஆதலால் அரசன் ஒற்றர் களுக்குச் சிறப்புச் செய்ய விரும்பினால் பிறர் அறியாமல் செய்தல் வேண்டும். பிறர் அறியுமாறு செய்தால் அவனே மறைவானவற்றைப் பிறர் அறியச் செய்தான் என்றாகும். 'செய்யற்க', 'செய்யின்' என்பன அரிய உண்மைகளைப் புலப்படுத்தின. ஒற்றர்களுக்குச் சிறப்புச் செய்ய வேண்டும் என்றார். என்றாலும் அவன் ஒற்றனாக இருப்பதையும் அவன் கூறியதையும் மறைத்தே வைத்திருக்க வேண்டும் என்பதை 'மறை' என்பதன் மூலம் விளக்கினார்.

**591 உடையர் எனப்படுவது ஊக்கம் ...**

வினா முறையில் இக்குறள் அமைந்துள்ளது. 'உடையரோ' என்பது பொருள் உடையரோ என்பதாகும். இதனால் ஊக்கமில்லாவிட்டால் பொருளினையும் இழப்பர் என்றார். ஊக்கம் என்பது மன வெழுச்சி. 'யார் உடையார்' என்பது இங்குக் கருதற்பாலது. 'உடையரோ' என்றதால் முன் எய்தி நின்ற பொருளைக் காக்கும் ஆற்றல் இலாது இழப்பர் என்றார். உடையர், உடையது, உடையரோ — என்பன சிந்திக்க வேண்டியவை.

**592 உள்ளம் உடைமை உடைமை ...**

ஊக்கம் என்பது உள்ளத்தின் பண்பாகும். ஆதலால் அது நிலைத்து நிற்கும் தன்மை யுடையது. ஆனால், பொருள் நிலையில்லாதது. ஆகவே அது உடைமையன்று என்று குறித்தார். 'அற்கா இயல்பிற்று' (333) என்பது போன்றவை சிந்திக்கத்தக்கவை. 'உடைமை, உடைமை' என்பதைக் கருதுக. 'நீங்கும்' தன்மையது செல்வம். ஊக்கம் மனத்தின் தன்மை யாகையால், அதற்கு நிலை நிற்றலும், பொருள், உடலினும் வேறாய் அழிதல் தன்மையது ஆதலால் அதற்கு நிலை நில்லாமையும் கூறினார்.

**593 ஆக்கம் இழந்தேம்என்று அல்லாவார் ...**

தமது உடைமையாகக் கொள்ளப்பட வேண்டியது ஊக்கமே என்றும், அதனைப் பெற்றிருப்பவர்கள் மீண்டும் இழந்த பொருளினைப் பெறுவர் ஆகையால் 'அல்லாவார்' என்றும் கூறினார். கைத்துடையவர்களின் சிறப்பினை உணர்த்தினார். ஒருவன் கைப்பொருளாக, இன்றியமையாத் துணையாக வைத்திருக்க வேண்டியது ஊக்கம் உடைமையே ஆகும்.

**594 ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் ...**

இடுக்கண் வரினும் தளரா திருப்பதனை 'அசைவிலா' என்ற சொல்லால் சுட்டினார். வழிகேட்டுக் கொண்டு செல்லுபவர்கள்போல, ஊக்கம் உடையவனிடம் செல்வம் போய்ச் சேரும் என்று குறிப்பிட 'அதர்வினாய்ச் செல்லும்' என்றார். இதனால் பெற்றிருக்கும் செல்வத்தினைவிட அதற்குக் காரணமான ஊக்கம் சிறந்தது என்றார். ஊக்கத்தினை ஆக்கம் தேடிக் கொண்டு போகும் என்பது கவனிக்கத் தக்கது. 'அசைவு இன்மை' என்பது இடுக்கண் முதலியவற்றால் மனம் தளராமையாகும்.

**595 வெள்ளத்து அனைய மலர்நீட்டம் ...**

'அனைய', 'அனையது' என்பன சிந்தனைக்குரியன. 'நீட்டம்', 'உயர்வு' என்பன ஒருங்கே கருதப்பட வேண்டுவன. மலரின் தண்டு நீருக்குள் இருப்பதுபோல, மனவெழுச்சி என்ற ஊக்கமும் ஒருவனுடைய மனத்திற்குள் இருக்கிறது. நீர் உயர்தலும் குறைதலும் காலத்தின் செயல். மக்களுக்கு ஊக்கமே மிகுந்திருப்பதுமுண்டு; குறைதலும் உண்டு என்பது உவமையால் கூறப்பட்டது. நீரின் உயர்வுக்கு (மட்டத்துக்கு) ஏற்ப மலரின்தாள் நீளும் என்பது தோன்ற 'வெள்ளத்து அனைய' என்றார். ஊக்கம் மிக்க துணையும் மக்கள் உயர்வர் என்பதாயிற்று. பொருள், படைகளால் மிகுதலை 'உயர்தல்' என்றார்.

**596 உள்ளுவது எல்லாம் உயர்வுஉள்ளல் ...**

தள்ளிய வழியும், முயற்சியில் தவறில்லாமல் நல்லோரால் பழிக்கப்படாமையால் தள்ளாத தன்மைத்து என்று கூறினார். 'உள்ளத்தனையது உயர்வு' (595) என்பது விளக்கப்பட்டது. பெரும்பாலும் தள்ளப்படாதவற்றை உணர்த்த வேண்டியே 'தள்ளினும்' என்றார். தள்ளிய வழியும் தாளாண்மையில் தவறின்றி நல்லோரால் பழிக்கப்படாமையின் தள்ளா இயற்கைத்து என்றார்.

**597 சிதைவிடத்து ஒல்கார் உரவோர் ...**

முதலில் தவறுதல் ஏற்பட்டாலும் ஊக்கமுடையவர்கள் எண்ணியதை முடிப்பர் என்பார். ஊக்கமுடையவர்களின் பெருஞ்சிறப்பு இக்குறளில் கூறப்பட்டது. உரவோர் களிறுபோல் தளராமல் பெருமையினை நிலை நாட்டுவர். ஒல்காமை களிற்றுடனும், பாடு ஊன்றுதல் உரவோருடனும் சென்று இயைந்து, தள்ளினும் தவறாது உள்ளியதை (நினைப்பதை) முடிப்பர் என்றார்.

**598 உள்ளம் இலாதவர் எய்தார் ...**

ஊக்கமில்லையாதலால் முயற்சி, பொருள், கொடை, செருக்கு முதலியனவும் அரசர்க்கு இலவாம் என்றதால் 'செருக்கு எய்தார்' என்று கூறினார். ஊக்கமிகுதி இல்லாதார்க்குப் பொருள் வரவு இல்லையாம்; ஆதலால் அவர் பிறர்க்கு ஈயமாட்டார் என்பது குறிப்பாயிற்று. 'ஈகை', 'புகழ்' முதலிய அதிகாரங்கள் இதனால் குறிக்கப்பட்டன.

'நன்னயம் என்னும் செருக்கு' (860), 'பகைவர்கள் பட்ட செருக்கு' (878) என்பன போன்ற இடங்களைச் சிந்திக்கவும். ஊக்கம் இல்லையாகவே முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவை முறையே இல்லை; ஆதலால் செருக்கு எய்தார் என்றார்.

**599 பரியது கூர்ங்கோட்டது ஆயினும் ...**

பெரிய உடல் ஆதலால் யானைக்கு வலி மிகுதி கூறப்பட்டது. சிறிய உருவங் கொண்ட புலியின் ஊக்க மிகுதி சிறப்பிக்கப்பட்டது. பெரும்படையுடையவனேயானாலும், ஊக்கம் நிறைந்த சிறிய படையையுடையவன் தாக்கினால் அஞ்சுவான் என்பதை, 'தாக்குறின்' என்பதால் குறித்தார். பெரிய உடலை உடைய யானையின் வலி மிகுதி கூறப்பட்டது. யானைக்குப் புலியின் மிக்க மெய்வலி உண்டு என்றாலும் யானை ஊக்கம் இன்மையால் அஞ்சும் என்றார்.

**600 உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கைஅஃது ...**

அறிவதால் என்பதனை 'உரம்' என்றார். 'உரன் என்னும் தோட்டியான்' (24) என்பதைச் சிந்திக்க. மக்களுக்குள்ள நல்லறிவும் காரிய முயற்சியும் இல்லாமை பற்றி மரம் என்றார். எனவே மரம் பயன்படுகின்றது. அப்பயனும் இல்லாத மனிதரை 'மக்களாதலே வேறு' என்றார். இதனால் ஊக்கமில்லாதாருடைய இழிவு கூறப்பட்டது. மக்களின் வடிவம் ஒன்றுதான் மரத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டுகிறது. 'உறுப்பு ஒத்தல்' (993) போன்றவை சிந்தனைக்குரியன.

## 61 மடிஇன்மை

**601 குடிஎன்னும் குன்றா விளக்கம் ...**

உலகநடை உள்ள வரையும் இடையறாது தன்னுள் பிறந்தாரை விளக்குதலின் இக்குறளில் குடியை குன்றா விளக்கம் என்றார். மடி (சோம்புதல்) கொடிய வலிமையுடையது. அது தாமத குணத்தால் வருதலால் மடியை மாசு என்றார். அந்த மடி ஏனைய இருள் போலல்லாமல், அந்த விளக்கைத் தான் அடர்ந்து மாய்க்கும் வலிமையுடையது. ஆதலால் 'மாசுஊர மாய்ந்து கெடும்' என்றார். 'குடிமை', 'குடி செயல்வகை' முதலிய அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. குடி என்றது மக்கள் கூட்டத்தினையும் குறிக்கும். 'படை குடி' (381) என்பதும் நினைக்கத்தக்கன.

**602 மடியை மடியா ஒழுகல் ...**

நெருப்பிற் கொடிய்து பிறிதின்மை பற்றி, 'நெருப்பை நெருப்பாகவே கருதுக' என்பது போல மடியைக் கூறினார் ஆசிரியர். ஆதலால் சோம்பலினைச் சோம்பலாகவே கருதி நீக்க வேண்டும். அவ்வாறு நீக்கினவர்தாம் உயர்வர் என்றார். தாம் உயரவே குடியுயரும் என்பதைக் 'குடியைக் குடியாக வேண்டுபவர்' என்றார்.

**603 மடிமடிக் கொண்டொழுகும் பேதை ...**

'பேதைமை' அதிகாரத்தைக் கருதுக. அழிவு தருவதனை அகத்தே கொண்டு ஒழுகுதலின் அதனைப் 'பேதை' என்றார். ஆக்கத்தில் பிற்படினும் அழிவில் முற்படும் என்றார். அவனால் தன்னைக் காப்பாற்ற முடியாமையால் 'தன்னினும் முந்து' அவனது குடி அழியும் எனப்பட்டது. 'மடிமடிக் கொண்டு' சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். அப்படிப்பட்டவன் பிறந்த காரணத்தால் அவன்குடி மடியும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

**604 குடிமடிந்து குற்றம் பெருகும் ...**

'குற்றம் கடிதல்' என்ற அதிகாரம் உணர்த்தப்படுகிறது. 'குற்றம் இலனாய்க் குடி செய்து வாழ்வானை' (1025) சிந்திக்கலாம். 'தாழாது உஞற்றுபவர்' என்று கூறியதைக் காண்க.

முன் குறளில் குடி மடியும் என்றார்; இக்குறட்பாவில் 'குற்றம் பெருகும்' என்றார். ஆகவே சோம்பலிலேயே வீழ்ந்து அத்தீய குணத்திற்கு இரையாயினோரும் உண்டு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

**605 நெடுநீர் மறவி மடிதுயில் ...**

தாமத குணத்தின் இயல்பு விளக்கப்பட்டது. ஒருவர் விரும்பியேறிய சோம்பலாகிய தெப்பம் துன்பக் கடலிடையே வீழ்த்திவிடும். 'காமக்கலன்' என்பதை விரும்பிப் பூணும் ஆபரணம் என்றும் இதனைக் கூறலாம்.

'பொச்சாவாமை' என்ற அதிகாரம் இதனால் குறிப்பிடப்படுகிறது. தீமை பயக்கும் குணங்களிலும் விருப்பமுள்ளவர்கள் உண்டு என்பதைக் குறித்துக் காட்டவே 'காமக்கலன்' என்றார். இந்த நான்கு தீய குணங்களை உடையவர்கள் கெட்டுவிடுவார்கள் என்பது உறுதி.

**606 படிஉடையார் பற்றுஅமைந்தக் கண்ணும் ...**

'அமைந்தக்கண்ணும்' என்பதால் அவ்வாறு பயன் எய்தாமை விளக்கப்பட்டது. ஆதலால் அதனைக் காக்கும் முயற்சி இன்மையின் செல்வம் அழியுமாம். ஒருவற்குச் செல்வம் இயற்கையினால் தானே வந்து அடைதலும் உண்டு என்பது உணர்த்தப்பட்டது. மடிமைக் குணம் அனைத்தையும் கெடுத்துவிடும். 'கண்ணும்' என்பதன் 'உம்'மை அவ்வாறு வந்தடையாது என்பதைக் காட்டிற்று. சோம்பல் உடையவன் எந்தப் பயனும் அடையான்.

**607 இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் ...**

'உஞற்று இலவர்க்கு' (604) என்பதுபோல இங்கும் இதனைக் கூறினார். இடி என்பது நண்பர்களைக் குறித்தது என்க; 'இடிக்கும் துணையாரை' என்பதையும் கருதுக; இதனால் நண்பரே இகழ்வர் என்றால் பிறரைப் பற்றிக் கூறத்தேவையில்லை. இதன் கருத்து மடியுடையானை நண்பரும் இகழ்ந்து பேசுவர்; பிறரும் இகழ்வர் என்பதாம். அவர்கள் கூறுவதற்கெல்லாம் மாறுசொல்லும் ஆற்றல் இல்லாததால், 'கேட்பர்' என்றார். உஞற்று (முயற்சி) என்பது 'மாண்ட' என்பதனால் உயர்த்திப் பேசப்பட்டது. 'புரிந்து' என்பது இருமுறை கூறப்பட்டது.

**608 மடிமை குடிமைக்கண் தங்கின் ...**

'குடிமை' என்ற அதிகாரமும் காண்க; மடியினது தன்மை காரியக்கேடு; குடிமை என்பது குடி செய்தல் தன்மை; 'அடிமை' என்பது தாழ்ந்து நின்று ஏவல் கேட்டல். அடிமையாவதற்குக் காரணம் 'மடி' என்பது உணர்த்தப்பட்டது. நாடு மக்கள் அனைவர்க்கும் குறிக்கப்பட்டது. பகைவர்கள் அத்தகைய நாட்டினையும் மக்களையும் அடிமையாக்குவர் என்பதனைக் குறிக்கவே 'ஒன்னார்' என்றார். மடி (சோம்பலின்) கொடிய தீமையினைப் 'புகுத்திவிடும்' என்பது உணர்த்திற்று. 'குடிமை' என்பது 'குடி செயல் வகை' என்ற அதிகாரத்தையும் நினைவுபடுத்தும். நாட்டுத் தலைவனைக் குறிக்கவே 'தன் ஒன்னார்க்கு' என்று குறித்தார்.

**609 குடியாண்மை யுள்வந்த குற்றம் ...**

மடிமைக் குணத்தால் மட்டுமின்றி, பிற காரணங்களால் வந்த குற்றங்களும் அவர் முயற்சியை மேற்கொண்டபோது நீங்கும். குற்றங்கள் யாவும் 'மடி' என்ற தீய குணத்தினை மாற்றினால் கெட்டோடும் என்பதால் மடிமைக்குணம் மாறிவிடும் தன்மையுடையதென்பது கூறப்பட்டது.

**610 மடியிலா மன்னவன் எய்தும் ...**

எப்போதும் ஒருவன் இடையீடின்றி முயன்றால் அவன் எண்ணியதைப் பெறுவான். 'அடியளந்தான் தாஅயது எல்லாம்' (610) என்பது உலகம் முழுவதும் தனது காலடியால் அளந்தான் திருமால் என்று உலக வழக்கில் பரவி இருப்பதைச் சுட்டிக் காட்டி, அதனை முயற்சியே அடைவிக்கும் என்றார்.

மடியின்மையின் பெருஞ்சிறப்பு எடுத்து விளக்கப்பட்டது. மடியின்றி எப்போதும் முயற்சியுடனே இருத்தலால் 'எய்தும்' என்றார். மடியின்மையின் சிறப்பினை மேலும் உயர்த்த வேண்டி 'எல்லாம் ஒருங்கு' என்றார். 'அடியளந்தான்' என்பது வரலாற்றில் அப்படிச் செய்த இறைவனைக் குறித்தது. அந்த எண்ணத்தை ஆசிரியர் சுட்டிக்காட்டு வதற்காக வேண்டி அந்த 'அடியளந்தான்' அளந்த நிலம் முழுவதையும் சோம்பலில்லாத மன்னன் அடைந்துவிடுவான்; அதுவும் அவன் ஒரு நேரத்திலேயே அடைவான் என்றார். மக்களிடையே பரவியுள்ள எண்ணத்தை அப்படியே வைத்துக் காட்டி, உண்மையை உணர்த்தி விடுவது ஆசிரியரின் முறையாகும். ஆசிரியர் நமக்கு உணர்த்தும் கருத்தையே நாம் கொள்ளுதல்வேண்டும். காலத்திற்கேற்ற கருவியியைக் கொண்டார் என்பதே பொருத்தம். இக்கருத்தை மனத்திற் கொண்டு பயன்படுத்திய கருவியின் உண்மையை அறிஞர் அறிவார்களாக!

## 62 ஆள்வினை உடைமை

**611 அருமை யுடைத்தென்று அசாவாமை ...**

இடைவிடாத முயற்சியை 'ஆள்வினையுடைமை' என்றும் கூறுவார் ஆசிரியர். விடாது முயற்சித்தால் தாம் பெரியவராவர் என்றார். முயற்சியால் அரியனவும் எளிதில் முடியும்! இங்கே 'பெருமை' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்படுகிறது. 'இஃது ஆள்வினையுடைமை' என்ற அதிகாரத்தின் முதற்குறட்பா ஆதலால் 'முயற்சி' என்றார். 'தரும்' என்பது சிந்திக்கத் தக்கது. 'மனைத்து விடுதல்' கூடாது என்பதற்காகவே 'அசாவாமை வேண்டும்' என்றார்.

**612 வினைக்கண் வினைகெடல் ஓம்பல் ...**

'வினை' செய்தல் பற்றிய அதிகாரங்களை நினைவிற் கொள்க; குறை என்பது இன்றியமையாப் பொருள். உலகம் இப்படிப்பட்டவர்களைக் கை விட்டுவிட்டது என்பதனைக் குறித்துக் காட்டினார் ஆசிரியர். 'வினைக்கண்', 'வினைகெடல்', 'வினைக்குறை' என்பன சிந்தனைக்குரியன. 'வினைசெயல்வகை' போன்ற அதிகாரம் இங்கே நினைவு படுத்தப்

பட்டது. செய்யப்பட வேண்டிய செயல்களை முயன்று செய்து கொண்டே இருக்க வேண்டும்; அவ்வாறு செயல் செய்யாது இருப்பவர்களை உலகம் கைவிட்டு விடும்.

### 613 தாளாண்மை என்னும் தகைமைக்கண் ...

பொருள் கை கூடுதலான் உபகரித்தற்கு உரியார் முயற்சி உடையார் என்பார் அவ்வக் குணங்கள்மேல் வைத்தும், அது பிறர்மாட்டு இல்லை யென்பார் 'தங்கிற்றே' என்றும் கூறினார்.

இதனால் 'ஒப்புரவறிதல்', 'ஈகை' என்ற அதிகாரங்கள் நினைவு கொள்ளுதற்குரியன. 'தங்கிற்றே' என்று கூறியதால் தாளாண்மை என்னும் முயற்சியின் பெருஞ்சிறப்புக் கூறப் பட்டது. 'கற்பு என்னும் திண்மை' (54) என்பதுபோல, 'தாளாண்மை என்னும் தகைமை' என்று அமைத்தார். முயற்சியால் பொருள் கைகூடும் ஆனபடியால் வேளாண்மை செய்வர்; அதனால் மேம்பாடும் அடைவர். எனவே 'வேளாண்மை என்னும் செருக்கு' என்று கூறினார்.

### 614 தாளாண்மை இல்லாதான் வேளாண்மை ...

பேடி வாளைப் பயன்படுத்துவதற்கு எண்ணம் உடையானெனினும், அது தன் அச்சத் தால் முடியாது போகுமாம்; தாளாண்மை இல்லாதவன் எண்ணமும் அப்படித்தான். இதனால் முன் குறட்பா மேலும் விளக்கப்பட்டது. 'தாளாண்மை', 'வேளாண்மை', 'வாளாண்மை' என்பன சிந்திக்கத்தக்கவை. 'இல்லாதான்' எண்ணம் நிறைவேறாது என்பதாம்.

### 615 இன்பம் விழையான் வினைவிழைவான் ...

சுற்றத்தார் நட்டாரது வறுமையும் தீர்த்து அவர்க்கு ஏமம் செய்யும் ஆற்றலை உடையனாம். எனவே, தன்னைக் கூற வேண்டாவாயிற்று. 'இன்பம் விழையான்' (628), 'இன்பத்துள் இன்பம் விழையாதான்' (629) என்பது போல இங்கும் இதனைக் கூறினார். 'ஊன்றிய தூண்' (983) என்று கூறுகின்ற முறைகளில் இதனைக் கூறினார். 'கேளிர்' என்பதனால், 'சுற்றந் தழால்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'ஊன்றும் நல்ஆள்' (1030) என்பது போல இங்கும் 'ஊன்றும் தூண்' என்றார். முயற்சியென்பதற்கு அடையாளம் எப்போதும் செயல் புரிந்துகொண்டே இருக்க வேண்டும் என்பதை 'வினை' என்று கூறினார். 'விழையான்', 'விழைவான்' என்பன சிந்தனைக்குரியன.

### 616 முயற்சி திருவினை ஆக்கும் ...

'ஆர் இருள் உய்த்துவிடும்' (121), 'தீயுழி உய்த்துவிடும்' (168) என்பன போன்று இங்குப் 'புகுத்திவிடும்' என்றார். 'முயற்சி', 'முயற்றின்மை' சிந்திக்கத்தக்கன. முயற்சி யுடையார் அடையும் நன்மையும் அது இலாதார் அடையும் தீமையும் கூறப்பட்டது. செல்வத் திற்கும் வறுமைக்கும் அடிப்படைக் காரணம் இதனால் கூறப்பட்டது.

### 617 மடியுளாள் மாமுகடி என்ப ...

உலக வழக்கில் 'மூதேவி—சீதேவி' என்று கூறுவதுண்டு. முயற்சியுடையவன்—சோம்பல் கொண்டவன் ஆகிய இருவரையும் இக்குறளில் கூறிப்பிட்டார். சோம்பல் உள்ளவனிடம் மூதேவி இருப்பாள்; பிறிதும் அப்படியே. அடிப்படையான காரணங்கள் சோம்பலும் முயற்சியுமேயாகும். முன்னர்க் கூறிய கருத்து (614) உலக வழக்கில் இருப்பதை வைத்து விளக்கப்பட்டது. 'தாமரைக் கண்ணான் உலகு' (1103) என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

முயற்சியின் சிறப்பும் முயற்சியின்மையின் இழிவும் கூறப்பட்டது. 'உளாள்' (உள்ளாள்) என்று இருமுறை வந்தது சிந்திக்கத்தக்கது. 'தாமரைக் கண்ணான் உலகு' என்று கூறியது போல இங்கும் 'தாமரையினாள்' என்றார். 'மாமுகடி' என்பது கரிய சேட்டை என்பதாகக் கூறப்படும். உலக வழக்கில் 'மூதேவி' என்று கூறுவர். இஃது மடி என்னும் குணத்தைக் குறிப்பிடும். மடிமைக் 'குணம்தான் 'மூதேவி' என்று கூறவந்த ஆசிரியர் அந்தச் சேட்டை, சோம்பல் உள்ளவனிடத்தில் இருக்கின்றாள் என்றார். அதுவே போன்று செல்வத்தைத் 'திரு' என்றும் 'திருமகள்' என்றும் கூறுவதுண்டு. அந்தத் திருமகள்—தாமரையில் இருப்பவள் என்பதும் உலக வழக்கு. திருமகள் முயற்சியுடையவனிடத்தில்தான் இருப்பாள். எனவே "முயற்சியொன்றே போதும்; அதனையே செய்து கொண்டிரு" என்றார். மக்கள் உள்ளத்தில் உண்மையை நிலை நிறுத்த வேண்டி உலகியல் பழக்கங்களை இக்குறளில் அமைத்துக் காட்டினார். காம உணர்ச்சியைக் 'காமன்' (1197) என்றும்; 'காமக்கணிச்சி' (1251) என்று கூறுவதும் இம்முறைபற்றியே யாகும்.

### 618 பொறியின்மை யார்க்கும் பழிஅன்று ...

தெய்வம் (ஊழ்) துணை இல்லாவிட்டால் ஆள்வினையுடைமையால் (முயற்சி) பயனில்லை என்பாரை நோக்கி, 'உலகம் பழவினைப் பற்றிப் பழியாது; இங்கே குற்றமுடைமை பற்றியே பழிக்கும் என்றார். அதனால் விடாது முயல்க என்றார்.

'அறிவறிந்த மக்கள்' (61) என்று கூறியதைப்போல் இங்கும் அறிவு அறிந்து என்று அமைத்தார். விதி ஆகிய இயற்கை பொருந்தியிராவிட்டால் முயற்சி செய்தாலும் சில நேரங்களில் ஒருவற்கு எடுத்த காரியம் கைகூடாமல் போவதும் உண்டு. என்றாலும் உலகோர் 'விதி' ஒத்து வரவில்லையென்றால் ஒப்ப மாட்டார்கள். முயற்சி செய்யவில்லையென்றால் பழிப்பார்கள். ஆகையால் முயற்சி செய்துகொண்டே இருக்க வேண்டும் என்றார். பழி என்பது குற்றமாகும். எது பழியென்றும் எது பழியாகாது என்றும் குறிப்பிட்டுக் காட்டினார்.

### 619 தெய்வத்தான் ஆகாது எனினும் ...

இக்குறட்பா ஒன்றில்தான் 'கூலி' என்றார். 'தெய்வம்' என்பது பழவினை, இயற்கை என்பவற்றைக் குறிக்கும். இயற்கை துணையாய் நின்றபோது மிக்க பயனைத் தரும். முயற்சியானது தனது பயனைக் கொடுத்தே தீரும். தெய்வத்தின் விளக்கத்தைப் பிறிதோர் இடத்தில் காண்க. தெய்வத்துணை இருந்து விடுமேயானால் முயற்சியானது தனது அளவில்மிக்க பயனைத் தரும் என்பது 'எனினும்' என்ற 'உம்'மையால் குறிக்கப்பட்டது. முயற்சி, உடலுழைப்பினை

அடிப்படையாகக் கொண்டது என்பது மெய்வருத்த என்பதால் உணர்த்தப்பட்டது. கூலி என்ற சொல் ஒரே ஒரு முறைதான் திருக்குறளில் காணப்படுகிறது. தெய்வத்தான் 'ஆவது', 'ஆகாதது' உண்டு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

**620 ஊழையும் உப்பக்கம் காண்பர் ...**

தெய்வத்தான் இடுக்கண் வந்தாலும் முயற்சி விடற்பாலதன்று. ஊழ் ஒரு காலாக, இரு காலாக அல்லது விலக்கல் ஆகாமையின், பலகால் முயல்வார் பயன் எய்துவார் என்பதை உப்பக்கம் காண்பர் என்றார். ஊழ்வினை விதி, தெய்வம், இயற்கை என்பன போன்ற குறிப்பான சொற்களால் கூறப்படுகிறது.

இயற்கையாகிய தெய்வத்தின் வலிமையும், முயற்சியின் வலிமையும் இந்தக் காலத்தில் இவ்வளவு என்று அளந்தறிதல் ஒருவர்க்கும் முடியாததாகும். ஊழ்வினை என்ற விதியின் வலிமை குறைந்து முயற்சியின் வலிமை மிகுந்தபோது முயற்சி வெல்லும் என்றும், முயற்சியின் வலிமை குறைந்து விதி என்னும் ஊழ்வினையின் வலிமை மிகுந்திருந்தால் ஊழ்வினை வெல்லும் என்பதும் குறிக்கப்பட்டது. இயற்கையின் 'வலிமை' மிகவும் பெரிது என்பதனைக் காட்டவே 'ஊழிற் பெருவலி' (380) என்று குறிப்பிட்டார். அக்குறட்பாவிலும், 'சூழினும்' என்று 'உம்'மையினைக் குறித்துச் சிறப்பித்தது போல, இக்குறட்பாவிலும் 'ஊழையும்' என்று 'உம்'மை அமைத்துக் காட்டப்பட்டது. 'உப்பக்கம்', 'காண்பர்' என்று குறிப்பிட்டதால் இயற்கையான ஊழ்வினை முற்றிலும் அகற்றப்பட்டுவிடும் என்று குறிப்பிடாமல், தாழாது முயற்சி செய்பவர்கள் பயனடைந்தே தீருவார்கள் என்ற குறிப்பினையும் உணர்த்தினார்.

## 63 இடுக்கண் அழியாமை

**621 இடுக்கண் வருங்கால் நகுக ...**

வினை இனிது முடியும்போது விளைகின்ற மகிழ்ச்சியை, அதற்கு இடையே இடுக்கண் வந்தபோது அதில் அழிவின்றி மனவெழுச்சியால், அதனைத் தள்ளி, அக்குறை முடிக்கும் ஆற்றல் உடையவனாம். ஆதலின், 'அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல்' என்றார். இவ்வதிகாரம் 'இடுக்கண் அழியாமை' ஆகையால் முதற்குறட்பா 'இடுக்கண்' என்றே தொடங்கியதைத் தெளிக. எடுத்த காரியம் முடிந்த பிறகே மகிழ்தல் இயல்பு. என்றாலும், இடையே இடுக்கண் வந்தபோது 'நகுக' (மகிழ்க) என்று கூறினார். துன்பத்திற்குக் கலங்காத தன்மையினை அது உண்டாக்கும்.

**622 வெள்ளத்து அனைய இடும்பை ...**

உள்ளத்தில் திண்மை இருந்தால், வருகின்ற துன்பமும் கெட்டு ஒழிந்து போகும் என்றார். இதற்கு முன்னர் 'வெள்ளத்து அனைய மலர் நீட்டம்' (595) என்று கூறினார். இடும்பை என்பது உள்ளத்தின் ஒரு கோட்பாடே அன்றிப் பிறிதில்லை. 'அறிவுடைமை' அதிகாரம் இதனை நன்கு விளக்குவதை நினைவு கூர்க.

இடும்பை (துன்பம்) மனதின் ஒரு நிலைமையேயாகும். அதனை அறிவுடையவன் நீக்குதல் முடியும்; துன்பம் தொடர்ந்து மிகுந்து வந்துகொண்டே இருப்பதும் உண்டு என்பதைக்

காட்டவே 'வெள்ளத்தனைய' என்றார். 'அற்றம் காக்கும் கருவி' (421) 'வருவதோர் நோய்' (429) என்பவற்றைச் சிந்தித்துக் காண்க.

**623 இடும்பைக்கு இடும்பை படுப்பர் ...**

'இடும்பை படாதவர்' இளைத்துவிட நினைக்காதவர் என்பதாம். மனத்திட்ப முடையராய் ஒருவர் விடாது முயல்வாராயின் வினை முற்றுப்பெற்றுப் பயன் விளையும். மனத்திட்பம் உடையவர்கள் மனம் தளராமல் முயன்று, வந்த அத்துன்பத்தினை ஓடும்படிச் செய்துவிடுவர் என்பதைக் காட்டவே 'இடும்பை படுப்பர்' என்றார். 'இடும்பை' என்கின்ற சொல் இக்குறளில் 'நான்கு' முறை கூறப்பட்டது சிந்திக்கத்தக்கது.

**624 மடுத்தவாய் எல்லாம் பகடுஅன்னான் ...**

இங்கே 'மடுத்தவாய் எல்லாம்' என்று பொதுப்பட நின்றமையால், சகடத்திற்கு அளற்று நிலம் முதன்மையாகவும், வினைக்கு இடையூறுகளாகவும் கொள்ளவேண்டும். பகடு (மாடு), மருங்கு ஒற்றியும், மூக்கு ஊன்றியும், தாள் தவழ்ந்தும் அரிதின் உய்க்குமாறுபோலத் தன் மெய் வருத்தம் நோக்காது முயன்று உழைப்பவனை 'பகடன்னான்' என்று கூறினார். முன் குறட்பாவில் கூறியதைப் போலவே ஈங்கு 'இடுக்கண் இடர்ப்பாடுடைத்து' என்றார். ஆதலால் துன்பமே துன்பப்பட்டுவிடும் என்தாம். இடையூறு வருவது இயல்பு என்று நினைத்தல் வேண்டும்.

**625 அடுக்கி வரினும் அழிவிலான் ...**

துன்பங்கள் சில நேரங்களில் தொடர்ந்து ஒன்றன்மேல் ஒன்றாக வருவதும் உண்டு. ஒருவர்க்கு ஒரு துன்பமே பலகால் வருதலும், வெவ்வேறு வகையான துன்பங்கள் வருதலும் உண்டு. முந்தைய இரண்டு குறட்பாக்களில், கருத்தினை அமைத்துக் காட்டிய முறையினைப் போல இங்கும், 'இடுக்கண் இடுக்கட்படும்' என்று அமைத்தார். துன்பம் மேலும் மேலும் வந்து கொண்டிருக்கும் தன்மையும் உடையது என்பதை 'அடுக்கி' என்று கூறினார். 'அழிவிலான்' என்பது சிந்தித்தறிய வேண்டுவதாகும்.

**626 அற்றேம்என்று அல்லற் படுபவோ ...**

பொருள் பெற்ற காலத்தில் செய்ய வேண்டிய நற்காரியங்களைச் செய்தோர் வறுமை வந்த காலத்தில் மனத்தால் அவர் வருந்துதல் கூடாது. வினா முறையில் இக்குறட்பா வந்துள்ளது. இதனால் 'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரம் குறிப்பாக உணர்த்தப்பட்டது. 'பற்றற்றேம் என்பர்' (88) என்பது போன்றவை கருதற்பாலன. 'அல்லற்படுவது எவன்' (379), 'பொருளாட்சி' (252) என்பவை சிந்திக்கத்தக்கவை.

**627 இலக்கம் உடம்புஇடும்பைக்கு என்று ...**

'இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ' (1029) இங்கே நினைக்கத்தக்கது. 'கடவுள் வாழ்த்து' என்ற முதல் அதிகாரத்திலேயே இடும்பை கூறப்படுகிறது. 'மேல்' என்பது அறிவு நிறைந்த மேலான மக்கள் என்பதாம். 'மேலிருந்தும்' (973) என்பது போன்றவைகளைச்

சிந்தித்தறிக; துன்பம் வந்து இருந்து போகின்ற இடம் இந்த உடம்பு என்று அறிந்து, கலக்கமடைதல் கூடாது என்பதாம். அது அறிவுடையோரால் அகற்றப்பட்டுவிடும்.

**628 இன்பம் விழையான் இடும்பை ...**

இன்பத்தினை விரும்பினாலும் இடும்பையை இயல்பு என்னாது காக்கக் கருதினும், துன்பம் விளைதலின், இந்த இரண்டும் செய்யாதானைத் 'துன்பம் உறுதல் இலன்' என்று கூறினார். 'இயல்பு' (இயற்கை) என்று எண்ணுதல் வேண்டும். இன்பத்தினையே விரும்பி இருப்பவனுக்குத் துன்பம் உண்டு. ஆதலால் அவ்வாறு இருத்தல் கூடாது என்பதாம். இடும்பையினை இயல்பு என்றும் கருதிக் கொள்ளும் அறிவு வேண்டும். அத்தகைய தன்மையுடையவனைத் துன்பம் ஒன்றும் செய்யாது என்பதாகும்.

**629 இன்பத்துள் இன்பம் விழையாதான் ...**

இன்பத்தினையே மேலும் மேலும் விரும்புகின்ற குணம் துன்பத்தினையே கொடுக்கும் என்பதாகும். ஆதலால் அந்த ஆழ்ந்த மனப்பான்மையினைப் போக்கிவிட்டால் துன்பம் வந்த போதும் அவன் மனத்தால் துன்பம் அடைய மாட்டான். இதனால் இன்பத்தினை அளவுடன் கொள்க என்பது குறிப்பாகும்.

**630 இன்னாமை இன்பம் எனக்கொளின் ...**

துன்பம் தானும் உயிர்க்கு இயல்பன்றிக் கணப்பொழுதே நிற்பதாகவும், மனத்திடை நிகழ்வதோர் கோட்பாடு ஆதலின் அதனை மாறுபடக் கொள்ளவே, அதற்கு அறிவு இன்றி மனமகிழ்ச்சி உடையவனாய், தொடங்கிய வினையை முடித்தேவிடும் ஆற்றல் உடையவனாம் என்பது கருத்து.

பகைவர்களும் பாராட்டுகின்ற சிறப்பினைப் பெறுதற்கு வழி கூறப்பட்டது. துன்பத்தினையே இன்பம் என்று கொள்ள வேண்டும். அத்தகைய மனப்பக்குவம் எளிதில் வாராது என்பதைக் குறித்துக் காட்டவே 'கொளின்' (கொண்டால்) என்றார். அப்படிப் பட்டவன் தொடங்கிய வினையினை முடித்தே தீருவான். அந்த ஆற்றலினைப் பகைவர்களும் பாராட்டி மகிழ்வார்கள்.

## 64 அமைச்சு

### 631 கருவியும் காலமும் செய்கையும் ...

சிறிய முயற்சியால் பெரிய பயன் தருவது என்பதை 'அருவினை' என்றார். அமைச்சர்களைப் பற்றிக் கூறுகிறார் ஆதலால் 'மாண்டது அமைச்சு' என்றார். சிந்திக்க வேண்டிய 'நான்கு' பொருள்கள் கூறப்பட்டன. இக்குறட்பாக்கள் அமைச்சர்களைப் பற்றியனவாகும். மன்னன் இல்லாத இன்றைய உலகில் தலைமையாகக் கொள்ளுதல் 'ஆளுநர்' என்பதும், அல்லது தலைமை அமைச்சர் என்பதும் பொருந்தும். மன்னர் மகன் மன்னனாக வருதல் என்பது ஆசிரியர் கருத்தன்று; ஆதலால்தான் நற்குண நற்செயல்கள் நிறைந்தவனையே அரசன் என்றார். அரசர் என்பது பழங்காலத்துச் சரித்திர அரசர்போல் பரம்பரையினைச் சார்ந்தவன் அல்லன் என்பதற்காக வேண்டியே 'தலைவன்' என்பதைக் குறிக்கின்ற 'இறை', 'இறைவன்' என்ற சொற்களையே பல இடங்களிலும் கூறுகின்றார். அத்தகைய தலைவனுக்கு உறுதுணையாக இருப்பவர்கள் அமைச்சர்கள் ஆவார்கள். சிறிய முயற்சியால் பெரிய பயன் தருவது என்பதைக் குறிக்கவே 'அருவினை' என்று கூறினார். பெரும்பாலும் அரசாங்க வினைகள் போர்த்திறனைப் பற்றியதாகும் என்பதும் சிந்தனைக் குரியதாம். இக்குறட்பாவில் 'காலமறிதல்', 'தெரிந்து செயல்வகை', 'தெரிந்து வினையாடல்' முதலிய அதிகாரங்களும் குறிப்பால் உணர்த்தப் பட்டனவாம்.

### 632 வன்கண் குடிகாத்தல் கற்றுஅறிதல் ...

மேலே சொன்னது போலவே அமைச்சனுடைய இன்றியமையாத் தன்மைகள் இங்கே தரப்பட்டன. 'இறைமாட்சி' என்ற அதிகாரமும் சிந்திக்கத்தக்கது. இக்குறட்பாவில் நினைவு கூரத்தக்க பல அதிகாரங்கள் கூறப்படுகின்றன. 'இறைமாட்சி', 'கல்வி', 'அறிவுடைமை', 'ஆள்வினையுடைமை' முதலிய அதிகாரங்களில் காணப்படும் கருத்துக்கள் சிந்தனைக் குரியன. முந்தைய குறட்பாவிலும் இக்குறட்பாவிலும் 'மாண்டது அமைச்சு' என்று கூறப்பட்டது. வருகின்ற குறட்பாக்களில் 'வல்லது அமைச்சு' என்று அமைத்தார். இக்குறளில் அமைச்சனின் ஆற்றல்கள் கூறப்படுகின்றன.

### 633 பிரித்தலும் பேணிக் கொளலும் ...

இக்குறளில் அப்பொழுதைய நிலைக்கு ஏற்ற செயல் அறிதலும், அதனை அவர் அறியாமல் ஏற்ற உபாயத்தால் கடைப்பிடித்தலும் அரியவாதல் நோக்கி 'வல்லது' என்ற சொல்லை வைத்தார். 'சுற்றந்தழால்' என்ற அதிகாரத்தின் இறுதிக் குறட்பாக்கள் சிந்தனைக் குரியன. அப்பொழுதைய நிலைக்கு ஏற்ற செயல் புரிதல் வேண்டும் என்பது இதன் கருத்து. ஆகவே ஆற்றல் நிறைந்த செயல்களை 'வல்லது' என்றார்.

**634 தெரிதலும் தேர்ந்து செயலும் ...**

நாட்டுக்குத் தலைவனான மன்னனின் பண்பாடுகளை ''இறைமாட்சி'' அதிகாரம் குறித்துக் காட்டியதுபோல் அமைச்சனுக்கு இருக்க வேண்டிய ஆற்றல்களை முறைப்படுத்திக் கூறுகிறது. இக்குறள்மூலம் 'தெரிந்து தெளிதல்', 'தெரிந்து செயல் வகை', 'தெரிந்து வினையாடல்', சொல்வன்மை' முதலிய அதிகாரங்களின் கருத்துக்கள் நினைவுபடுத்தப்படுகின்றன.

**635 அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான் ...**

மன்னனாகிய தன் தலைவன் செல்வம் சுருங்கிய காலத்தும் பெருகிய காலத்தும் இடைநிகரான காலத்தும் என்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். 'அறன் வலியுறுத்தல்', 'சொல்வன்மை' முதலிய அதிகாரங்கள் சிந்திக்கத்தக்கன. 'வினைத் திட்பம்' முதலிய அதிகாரங்களும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. 'எஞ்ஞான்றும்' என்பது நன்கு கருதற்பாலதாகும்.

**636 மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு ...**

இயற்கையிலேயே நுட்பமான புத்தி பெற்றிருக்க வேண்டுமென்பதும் அத்துடன் நூலறிவும் இருக்க வேண்டுமென்பதும் சிறப்பாகக் கூறப்பட்டது. இக்குறளால், இயற்கையறிவும் செயற்கையறிவும் ஒன்று சேர அமைந்திருப்பவனாக இருத்தல் வேண்டும் என்றார். வள்ளுவர் வினா முறையில் கருத்தினை அமைத்துக் காட்டினார். மதிநுட்பம் உடைய அத்தகையவர்களைவிட நுண்ணியதாகப் பகைவரால் எண்ணப்பட்டு எதிர் நிற்கும் செயல்கள் 'யாவுள' என்றார்.

**637 செயற்கை அறிந்தக் கடைத்தும் ...**

இக்குறள் ''நூல் நெறியேயாயினும் உலக நெறியோடு பொருந்தாதன செய்யற்க; செய்யின் அது பழிக்கும்'' என, இயற்கையறிவால் உண்டாய பயன் கூறப்பட்டது. இதன் கருத்து நூல்களில் கூறப்பட்டவைகளேயானாலும், உலக நெறியோடு பொருந்தாதனவற்றைச் செய்தல் கூடாது என்பதாகும். ஆதலால்தான் இயற்கையறிவு கூறப்பட்டது. 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' (140) 'எவ்வது உறைவது உலகம்' (426) என்பன சிந்தனைக்குரியன. இதனால் செயல்பட வேண்டிய முறை கூறப்பட்டது.

**638 அறிகொன்று அறியான் எனினும் ...**

மன்னன் நல்லறிஞர் கூறுவதைக் கேட்காமல் தானும் அறியானாயினும் அமைச்சர் அவனுக்கு உறுதி கூறியே ஆகவேண்டும். ஏனெனில், அவனுக்கு இறுதி எய்தல் குற்றத்தை உலகம் தன்மேல் ஏற்றும் என்பார் 'கூறல் கடன்' என்றார். 'அறிவுடைமை' அதிகாரம் இதனால் பெறப்பட்டது. உடனிருப்பவர்களின் இன்றியமையாத கடமை இதில் எடுத்துக் காட்டப்பட்டது. 'கடன் என்ப நல்லவையெல்லாம்' (981) என்பது போன்றவை சிந்தனைக் குரியன. 'தலைவன் கேட்க மாட்டான்' என்று நினைத்து உறுதியானவற்றை அமைச்சனானவன் கூறாமல் இருத்தல் கூடாது.

**639 பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் ...**

'எழுபது கோடி' என்பது உலகம் பேசும் போக்கில் கூறியது; உட்பகையால் தலைவன் திற்றலால் 'காக்கப்படான்' என்பதற்கு இவ்வாறு கூறினார். 'எழுபது கோடி' என்பது மிகப் பலவாய எண்ணிற்குக் கூறியதாகும். பகைவர்கள் வெளிப்பட நிற்றலால் தன்னைக் காத்துக் கொள்ள முடியும். இவர்கள் உட்பகையாக இருப்பதால் தன்னைக் காத்துக் கொள்ளுதல் அரிது என்பதாம். 'உட்பகை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகின்றது. 'ஒரு நாள் எழுநாள் போல்' (1269), 'எழுநாளேம் மேனி பசந்து' (1278) என்பன போன்ற இடங்கள் சிந்திக்கத்தக்கவை. 'பழுது', 'பக்கத்துள்' என்பன சிந்தனைக்குரியன.

**640 முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே ...**

'திறப்பாடு' என்பது வந்த இடையூறுகட்கு ஏற்ற பரிகாரம் அறிந்து செய்தலும் தாம் திண்ணியராதலுமாம். பிழையாமல் எண்ண வல்லராய் இருந்தும் செய்து முடிக்க மாட்டாரும் உளர் என்பதாம்.

'திறப்பாடு' மிகவும் இன்றியமையாததொன்றாம். வந்த இடையூறுகளுக்கு ஏற்ற 'பரிகாரம்' காணலும், திண்ணியராக இருத்தலும், பிழையாமல் எண்ண வல்லமையும் 'திறப்பாடு' என்பனவாம்.

## 65 சொல்வன்மை

**641 நாநலம் என்னும் நலன்உடைமை ...**

நாவால் உளதாகிய நலம், நாநலம் எனப்பட்டது. அஃது உலகத்தைத் தம் வயமாக்கும் நலமாகும். 'நான்குமுறை' கூறியதால் நலம் என்பது சிறப்பையும் பயனையும் உணர்த்திற்று.

**642 ஆக்கமும் கேடும் அதனால் ...**

ஆக்கத்திற்கு ஏதுவாயது நற்சொல் என்றும் கேட்டிற்கு ஏதுவாயது தீச்சொல் என்றும் குறிக்கப்பட்டது. பிறர் சோர்வு போலாது உயிர்கட்கெல்லாம் ஒருங்கு வருதலால் 'காத்து ஓம்பல்' என்றார். 'அடக்கமுடைமை' என்ற அதிகாரத்தில் காணப்படும் 'யாகாவா ராயினும்' (127) என்ற குறட்பா சிந்தனைக்குரியது.

**643 கேட்டார்ப் பிணிக்கும் தகைஅவாய் ...**

இங்கு, 'அவையறிதல்', 'அவையஞ்சாமை' போன்ற அதிகாரங்களும் சிந்திக்கப்பட வேண்டும். சொல்லுக்குரிய குணங்களாவன: சுருங்குதல், வழுவின்மை, விளங்குதல், இனிதாதல், விழுப்பயன் தருதல் முதலானவையாம். 'பிணிக்கும்' என்று கூறியது சிந்திக்கத்தக்கதாகும். சொல்லுபவர் தமது சொற்களினால் கேட்பவர்களைக் கவர்ந்திழுக்க வேண்டும். அவ்வளவு திறமையாகப் பேச வேண்டும். பேசுபவர்கள் சொல்லினை நிறுத்திய பிறகுதான் கேட்பவர்கள் கூட்டவிழ்ந்து செல்லுதல் வேண்டும் என்பதாம். கேட்காதவர்களும் கேட்பவர்கள் சொல்லக் கேட்டு இனிமேல் கேட்பதற்கு ஆவல் கொள்ளுதல் வேண்டும்.

**644 திறன்அறிந்து சொல்லுக சொல்லை ...**

இக்குகுறளில் 'அறம்' கூறப்பட்டது. திறனறிந்து என்பதனால் குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவம் என்பனவற்றால் வரும் தகுதி வேறுபாடுகளாகும். அவ்வாறு சொல்லுவதால் உலகத்தோடு ஒட்ட ஒழுகலையும் இனிமையையும் உண்டாக்கு வதால் அறமாயிற்று. தாம் எடுத்த காரியம் முடிக்க உதவுவதால் பொருளாயிற்று. 'திறனறிந்து' என்று கூறியதால் 'புறங்கூறாமை', 'பயனில சொல்லாமை', 'இனியவை கூறல்' முதலியன போன்ற அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன.

**645 சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் ...**

பிறிதோர் சொல் என்பது மாற்றாரது மறுதலைச் சொல்லாகும். வெல்லுதல் என்பது குணங்களால் மிகுந்திருத்தல் என்பதைக் குறித்தது. 'சொல்லுக சொல்லிற் பயனுடைய' (200) என்ற குறட்பாவும் சிந்தனைக்குரியது. ஐந்து முறை 'சொல்' என்பது காணப்படுவது சிறப்பான தாகும். வெல்லுதல் என்பது குணங்களால் மிகுந்திருத்தலாகும். அதுவே வெல்லச் சொல்லுக என்பதாகும்.

**646 வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொற் ...**

பிறர் சொற்களுள் குற்றமுளவாயினும் அவை நோக்கி இகழார் 'மாசற்றார்கோள்' என்பதுடன் வல்லாரை இகழ்தல் வல்லுநர்க்கும் தகுதியின்மையும் உடன் சேர்த்துக் கூறினார். எண் பொருளவாக' (424) என்பது இங்கு நினைவிற்குரியது. பிறர் விரும்பிக் கேட்கும்படி சொல்லல் வேண்டும்; அத்துடன் பிறர் சொல்லுவதைக் கேட்கவும் வேண்டும் என்பதும் இதன் கருத்தாம்.

**647 சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் ...**

சொலல்வல்லன் என்பது ஏற்குமாறு சொல்லுதல். அவர்கட்கு அவை காரிய மல்லவாயினும் 'ஆம்' எனத் துணியும் வகை சொல்லுதல். 'சோர்வு இலன்' என்பது சொல்ல வேண்டுவனவற்றை மறவாமல் சொல்லுதல். 'பொச்சாவாமை' அதிகாரம் காண்க. 'இகல்' என்ற அதிகாரம் இங்கு நினைவுபடுத்தப்பட்டது. பகைவர்களைப் பற்றி வரும் அதிகாரங்களும் சிந்தனைக்குரியன. பிறர் நம்பித் துணியும் வகையில் சொல்லுவதே 'வல்லன்' என்பதற்கு இலக்கணமாகும்.

**648 விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் ...**

முன் சொல்வனவும் பின் சொல்வனவும் அறிந்து அம்முறையே வைத்தலை, 'நிரந்தினிது' என்பது குறித்ததாகும். 'சொல்லுதல் வல்லான்', 'நூறாயிரவருள் ஒருவன்' என்ற பழங்கால வாக்கினைக் கருதியும் அருமை தோன்றவும் 'பெறின்' என்று கூறினார். 'இனிது சொல்லுதல்' சிந்திக்கத்தக்கதாகும்.

**649 பலசொல்லக் காமுறுவர் மன்றமாசு ....**

இடைவிடாது பல சொல்லுவதையும் சொல்வன்மை என்று விரும்புவாரும் உளர். அப்படிப்பட்டவர்கள் சில சொற்களில் சொல்லும் ஆற்றல் இல்லாதவர்களாவார்கள்,

வல்லவர்கள் அது செய்யார் என்று குறிக்க வேண்டி 'மன்ற' என்றார். சொற்களைப் பேசுவதில் யாருக்கும் விருப்பம் இயல்பாகவே உண்டு என்பதால் 'காமுறுவர்' என்றார். 'காமுறுவர் கற்றறிந்தார்' (399), 'கல்லாதான் சொல் காமுறுதல்' (402) என்பன போன்றவை சிந்தனைக்குரியன.

**650 இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் ...**

மணமுள்ள மலர் மறைவான இடத்தில் இருந்தாலும் மணத்தின் வழியே தேடிச்சென்று அதனை அடைவர். அதுபோல விரித்துரைக்கும் ஆற்றலுள்ளவர்கள் எங்கேயோ இருந்தாலும் தேடிக்கொண்டு போவர் என்பதாம். இதனைக் குறிக்க, 'அனையர்' என்று வைத்தார். மண முள்ள மலர் பாராட்டி விரும்பப்படும். அதுபோலச் சொல்லும் ஆற்றல் பெற்றவர் நன்கு மதிக்கப்படுவர் என்பதும் பொருந்தும் என்க. நூலைக் கற்று வைத்தும் சொல்ல மாட்டாதார் நன்கு மதிக்கப்படார் என்பது கருத்தாகும். ஒரு மலரில் மணம் வந்தாலும் அது பலரும் நுகர்தல் கூடும் என்பதுபோல ஒருவர் பேசினாலும் அதனால் பலர் பயன்படக்கூடும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'அவையறிதல்', 'அவை அஞ்சாமை' முதலிய அதிகாரங்கள் சிந்தித்தறிய வேண்டுவனவாம்.

**651 துணைநலம் ஆக்கம் தரூஉம் ...**

செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லனவாதல் என்பதாம். காணப்படும் துணை நன்மையாயினும் கருதப்படும் வினை, நன்மை சிறந்தது என விளக்கப்பட்டது. 'வினைத்தூய்மை' அதிகாரம் ஆதலினால் 'நலம்' என்று குறித்துக் காட்டி னார். 'பெரியாரைத் துணைக் கோடல்', 'நட்பு' முதலிய அதிகாரங்கள் குறித்துக் காட்டப் பட்டன. ஆக்கம் எனப்படும் செல்வமட்டுமன்றி, இம்மை மறுமை என்று கூறப்படும் அனைத் தையும் 'வினைநலம்' தரும் என்று குறிப்பிட்டார்.

**652 என்றும் ஒருவுதல் வேண்டும் ...**

'புகழ்' என்றோர் அதிகாரம் உண்டு. பெருகல், சுருங்கல், இடைநிற்றல் என்னும் நிலை வேறுபாடு காலத்தான் வருதலின் 'என்றும்' என்றார். 'வேண்டும்' என்பது இங்கு இன்றி யமையாதது என்பதாம். 'ஒருவுக ஒப்பிலார் நட்பு' (800) என்ற முறையினைப்போல, இங்கு 'ஒருவுதல் வேண்டும்' என்றார்.

**653 ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் ...**

'ஒளி' என்பது தாம் உள்ள காலத்து எல்லாராலும் நன்கு மதிக்கப்படுதலாகும். ஒளி கெட வருவது, ஆக்கம் என்பதாகாது; தூய்மையல்லாத தொழில் செய்தார்க்குக் கெடுதி உறுதி என்பதாகும். 'மன்னர்க்கு ஒளி' (556), 'ஒளி ஒருவற்கு' (971) என்பன போன்று வருகின்ற இடங்களைக் கண்டு தெளிக.

**654 இடுக்கட் படினும் இளிவந்த ...**

'இடுக்கண் அழியாமை' அதிகாரம் காண்க. சிறிது போழ்தில் கழிவதாகிய இடுக்கண் நோக்கி எக்காலத்திலும் கழியாத இழிவு அடைதல் கூடாது என்றும், அப்படி அடைந்தாலும்

வருவது வரும் என்பதும் தெளிவினை உடையவர் அறிவர். ஆதலால் 'நடுக்கற்ற காட்சியவர்', 'செய்யார்' என்று கூறினார்.

**655 எற்றென்று இரங்குவ செய்யற்க ...**

'வினைத்தூய்மை' அதிகாரம் ஆதலால் குற்றம், பழி முதலியன வாராது என்பதைக் குறித்தார். ஒரோவழி தவறானவைகளைச் செய்தானேயாயினும் மேற்கொண்டு செய்யாமை நன்று என்பதாம். பின்பு தானே வருந்துகின்ற (இரங்குவ) செயல்களைச் செய்தல் கூடாது என்பதும் இதனால் உணர்த்தப்பட்டது. அச்செயற்குப் பின்னிருந்து இரங்குவானாயின், அது தீரும் வாயில் அறிந்திலன் எனவும், திட்டமிலன் எனவும், பயனில்லன செய்கின்றான் எனவும் தன் பழியைத் தானே தூற்றுகின்றான் எனவும் எல்லாரும் இகழ்தலின் பின் இரங்காமை எனவும் குறிக்க 'நன்று' என்றார்.

**656 ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் ...**

'சான்றாண்மை' அதிகாரத்தைச் சிந்திக்கவும். எக்காரணம் பற்றியும் தீய தொழில்கள் செய்யக்கூடாது என்பதைக் குறித்தது. ஈன்ற தாய் பசித்துன்பத்தினால் துன்புறுமாறு விடவே கூடாது என்பது உய்த்துரை வைக்கப்பட்டது. தாங்க முடியாத துன்பம் ஈன்றாள் பசி வேதனையாகும்.

'சான்றாண்மை' என்னும் அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டதாகும். பாவமும் பழியும் பயக்கும் தீய செயல்களை எக்காலத்திலும் செய்தல் கூடாது. 'ஆயினும்' என்பதில் காணும் 'உம்' மையால் தன்னைப் பெற்றெடுத்த தாயின் உயர்ச்சி குறிக்கப்பட்டது. தாயின் பசி கண்டு இரங்காத நெஞ்சினன் இல்லை என்பது குறிப்பாயிற்று.

**657 பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் ...**

'சான்றாண்மை' என்பதைச் சிந்திக்கவும். 'நல்குரவு' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகிறது. நிலையாத செல்வத்தின் பொருட்டு நிலையான பழியை மேற்கொள்ளுதல் சால்போடு பொருந்தாத காரணத்தால் 'சான்றோர் கழிநல்குரவே தலை' என்றார்.

'நல்லார்கண்பட்ட' (408) என்று அமைக்கப்பட்ட முறையில் இக்குறட்பாவும் காணப்படுகின்றது. பழிகளைச் சுமந்து செல்வம் சேர்ப்போர் உண்டு என்பதும் இதனால் உணர்த்தப்பட்டது.

**658 கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு ...**

'முடிந்தாலும்' என்பது அவ்வினை கருதிய பொருளைத் தருதலாகும்; தந்தாலும் முடிவில் துன்பத்தையே கொடுக்கும் என்பதாம். 'பீழிக்கும் பீழை' (843) என்று கூறியது போல இங்குப் 'பீழை தரும்' என்று குறிப்பிட்டார். 'கடிந்த' என்பது செய்யத்தகாதன என்பதாகும். அப்படிப்பட்ட செயல்களால் பெருமை பெறுதல் முடியாததாகும்.

**659 அழக்கொண்ட எல்லாம் அழப்போம் ...**

பிறரை அழவைத்துக் கொண்டு போகின்றவர்களும் உலகில் உண்டு. அவர்கள் பொருள் மேல் வைத்த ஆசையால் அவ்வாறு செய்கின்றார்கள். அப்படிச் சேர்த்த பொருள் அவர்களிடம் தங்காது; இழந்தவர் அதனைத் திரும்பப் பெறுவர்.

'எல்லாம்' என்பது சிந்திக்கத்தக்கதாகும். 'கொள்வார் பிறர்' (1009) என்று கூறியதைப்போல 'அழப்போம்' என்று இக்குறட்பாவில் கூறினார். பிறகு நன்மையினை உண்டாக்கும் என்பதனைப் 'பிற்பயக்கும்' என்றார்.

**660 சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் ...**

முதலில் ஆக்கம் பயப்பனபோல் தோன்றிப் பின் அழிவே பயத்தலால், அவை 'சலம்' எனப்பட்டன. அவ்வாறு பொருள் சேர்த்து அரசனுக்குப் பாதுகாப்புச் செய்தல் முடியாது. இதனால் 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. 'ஏம மார்த்தல்' என்பது 'ஏமார்த்தல்' என்றாயிற்று. அதாவது ஏமத்தை அடையப் பண்ணுதல் என்பதாம். 'சலம்பற்றிச் சால்பு இல' (956) என்பது போன்றவை நினைத்தற்குரியன. நீரும் கலமும் கெடுவது போலத் தானும் பொருளும் கூடிக் கெடும் என்பது கருத்தாம்.

## 67 வினைத்திட்பம்

**661 வினைத்திட்பம் என்பது ஒருவன் ...**

படை, அரண், நட்பு முதலியவற்றின் திண்மையும், அதற்கு வேண்டுவனவாய இனத்தையும் சேர்த்தே, 'மற்றைய' என்றார். 'பிற' என்பது படை, அரண், நட்பு முதலியவற்றின் திண்மைகளாகும். அவையும் அதற்கு வேண்டுவனவாய இனமாகலின் 'மற்றைய' என்றார். அவை வேண்டுவனவென்றாலும் 'மனத்திட்பமே' அடிப்படையாயிற்று, 'மதி நுட்பம்' (636) என்பது போல இங்கு 'மனத்திட்பம் என்று கூறினார்.

**662 ஊறுஒரால் உற்றபின் ஒல்காமை ...**

உலகப் பேரறிஞர்களைத் தழுவியே ஆசிரியர் கருத்துக்களை அமைக்கின்றார் என்பதற்கு இதுவும் சான்றாகும். 'எண்ணித் துணிக' (467) என்பதைச் சிந்திக்கலாம். உலக நடையினையும், அறிந்தோர் கருத்துக்களையும், நூலோர் கூறியவற்றையும் கண்டு தெளிந்து உண்மை கூறுதல் ஆசிரியரின் முறை என்பதற்கு இதுபோன்ற குறட்பாக்கள் எடுத்துக் காட்டுகளாகும். மனத்திட்பத்தின் வகைகளாக இரண்டு கருத்துக்கள் குறிப்பிடப்பட்டன. 'ஓரால்', 'ஒல்காமை' இரண்டும் சிந்தனைக்குரியன.

**663 கடைக்கொட்கச் செய்தக்கது ஆண்மை ....**

அத்திட்பம் ஆண் தன்மையால் வருதலின் 'ஆண்மை' எனப்பட்டது. தெரிந்து விட்டால் பகைவர் முன் அறிந்து அவ்வினையை விலக்கவும் கூடும். இதனால் மறைத்து செய்தல் வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. அவ்வாறு பிறரறியாமல் செய்யும் திட்பம்

ஆண் தன்மையால் வருவதால் 'ஆண்மை' எனப்பட்டது. 'எற்றா விழுமம்' என்புது, பகைவர் முன்னறிந்து அவ்வினையை விலக்குதல் செய்வானை விலக்குதல் முதலியனவாகும்.

**664 சொல்லுதல் யார்க்கும் எளிய ...**

அரியவற்றை எண்ணிச் சொல்லுதல் மனத்திட்பம் இல்லாதார்க்கும் இயலுமாதலால் 'எளிய' என்றார். 'சொல்லிய வண்ணம்' என்பது கருதற்பாலது. அரியவற்றை எண்ணிச் சொல்லுதல் மனத்திட்பம் இல்லாதார்க்கும் கூடுமாதலால் 'எளிய' என்றார். ஆதலால் 'யார்க்கும்' என்று அமைத்தார். செயல் புரிவதே வேண்டும் என்பது உய்த்துணர வைக்கப் பட்டதாகும். 'சொல்லிய வண்ணம்' என்பது கருதற்பாலது.

**665 வீறுஎய்தி மாண்டார் வினைத்திட்பம் ...**

எடுத்தவினை முற்றுப் பெற்று செல்வமும் புகழும் அவனிடம் வருதலால் 'வேந்தன் கண் ஊறு எய்தல்' என்று அமைத்தார். 'உள்ளல்' என்பது மதிப்பால் மறவாமை என்பதாகும். வினைத்திட்பமுள்ளவர்களை எல்லோரும் விரும்புவார்கள் என்பது இதன் கருத்தாகும்.

**666 எண்ணிய எண்ணியாங்கு எய்துப ...**

எளிதின் எய்துப என்பார், 'எண்ணியாங்கு எய்துப' என்றார். அவர் அவ்வாறல்லது எண்ணாமையின் திண்ணியராகவே வினை முடியும்; அது முடியும் என்பது அவை யாவும் கைகூடும் என்பதாம்.

'பெறின்' என்பது அத்தகைய குணம் அருமையானது என்பதனை உணர்த்திற்று. எளிதின் அடைவார்கள் என்பதற்காக 'எண்ணியாங்கு எய்துப' என்றார். 'எண்ணிய எண்ணியாங்கு', 'எண்ணியார்' என்பன சிந்தனைக்குரியன. 'உள்ளியது எய்தல் எளிது' (540) என்பதையும் அறிக.

**667 உருவுகண்டு எள்ளாமை வேண்டும் ...**

'தூது' அதிகாரத்தில் நல்ல உருவம் இன்றியமையாததாயிற்று. 'அச்சு' என்பது உருள் கோத்த மரம். 'ஆணி' உருள் கழலாது அதன் கடைக்கண் செருகுவது. அது வடிவாற் சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டு உய்க்கும் திட்பம் உடையது.

உருவத்தால் சிறியராயிருந்தே பெரிய வினைகளைக் கொண்டு நடத்தும் திட்பம் உடையவர்களும் இவ்வுலகில் உண்டு என்பது கருத்தாகும். அவர்களை அத்திட்பம் நோக்கி அறிந்து கொள்ள வேண்டும். ஆதலால் வடிவம் கண்டு ஏளனம் செய்தல் கூடாது என்பதால் மனத்திட்பமே வேண்டுவதாயிற்று. உருவம் சிறப்பாக இருக்க வேண்டிய தொழில்களும் உண்டு. தூது செல்லுபவர்களுக்குத் தோற்றம் (உருவம்) சிறப்பாக இருத்தல் வேண்டும். 'அறிவு உருவு ஆராய்ந்த' (684) என்பதைச் சிந்தித்தல் வேண்டும்.

**668 கலங்காது கண்ட வினைக்கண் ...**

துளங்காது என்பது திட்பமுடைமை என்னும் பொருளைக் குறித்ததாம். கலங்கிய வழி ஒழிவதும் 'செய்வதுபோல்' தோன்றுமாதலின், தெளிந்து பலகால் ஆராய்ந்து, தாம் செய்வதாக ஓர்த்த வினையைக் 'கலங்காது கண்டவினை' என்று கூறுகின்றார். செய்யவேண்டிய செயலினைக் கலக்கமின்றி ஆராய்ந்துகாண வேண்டுமென்று கூறினார். 'துளங்காது, தூக்கம் கடிந்து' என்ற இரண்டும் சிந்தனைக்குரியன. தொழில் செய்தலை நீட்டித்துச் செய்தல் கூடாது என்பது இதன் கருத்து.

**669 துன்பம் உறவரினும் செய்க ...**

துணிவு என்பது கலங்காமையாகும். அக்குணம் உடையார்க்கன்றி மற்றையோர்க்கு கணப்பொழுதில் தோன்றி மறையும். முயற்சித் துன்பம் நோக்காது, நிலையுறுதலுடைய பரிணாம இன்பத்தை—அதாவது முதலில் துன்பம்போல் தோன்றி, பிறகு இன்பம் பயப்பது நோக்கிச் செய்தல் கூடாமையின் 'துணிவாற்றிச் செய்க' என்றார்.

செயலாற்றும்போது துன்பம் வருதல் கூடும் என்பது இதன் மூலம் உணர்த்தப்பட்டது. எப்போதும் மனக்கலக்கமே கூடாது என்பதாம். தொழில்முடிந்தபின் இன்பம் பெறுவது உறுதி யென்பதனையும் மனத்திற்கொள்ளுதல் வேண்டும்.

**670 எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் ...**

மனத்தில் திட்பமில்லாதார்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் திட்பங்க ளெல்லாம் உளவாயினும் வினை முடியாதாம். ஆகவே அவையெல்லாம் கெடும் என்பதுபற்றி 'உலகு வேண்டாது' என்றார்.

'வினைத்திட்பம்' — இவ்வதிகாரத்தின் பெயராகவும் அமைந்துள்ளது. வினைத்திட்பம் வேண்டாதாராக இருத்தல் குற்றம் என்பதாம்.

## 68 வினை செயல்வகை

**671 சூழ்ச்சி முடிவு துணிவுஎய்தல் ...**

'சூழ்ச்சி' என்பது பலகாலும் சிந்தித்தலாகும். 'சூழ்ச்சி முடிவு துணி வெய்தல்' எனவே, துணிவு எய்தல் அளவும் சூழவேண்டும் என்பது பெற்றாம். ஆலோசனையின் முடிவு துணிவு அடைதலாகும். அதன்பின் உடனே செயலில் இறங்கிவிட வேண்டும். இல்லா விட்டால் பகைவர் அறியின் தனக்குத் தீதாய் முடியும்; ஆதலால் 'தீது' என்றார்.

'தாழ்ச்சியுள் தங்குதல்' என்பது செய்யுங் காலத்துச் செய்யாமையாம்.

**672 தூங்குக தூங்கிச் செயற்பால ...**

இருவகைத் தொழில்களும் வலிமையாலும் காலத்தாலும் அறியப்படும். முந்திய குறட்பாவில் 'தாழ்ச்சியுள் தங்குதல் தீது' என்றார். இங்கு வினைகளைப் பகுத்துக் கூறினார்.

'தூங்குக', 'தூங்கி', 'தூங்கற்க', 'தூங்காது' என்பன சிந்தித்து அறிய வேண்டுவன. 'தூங்காமை கல்வி' (383) என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

**673 ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ...**

'பொருட்பால்' என்ற பெரும்பகுதியில் பெரும்பாலும் போர் முறைகளை ஆசிரியர் குறிக்கின்றார் என்பது அறியத்தக்கது. நாட்டுத் தலைமைக்கு இது இன்றியமையாதது. வலியான், ஒப்பான், மெலியான் ஆகிய மூவரிடத்தும் நிலைமை நோக்கி நடத்தல் வேண்டும். 'செல்லும்வாய்' என்றது அறிவினை அடிப்படையாகக் கொண்டு நடத்தல் வேண்டும் என்பதாகும்.

பகையினைவிட தான் வலியனாய காலம், தண்டமே நன்று என்றார். வலியான், ஒப்பான், மெலியான் என நிலை மூவகைத்து என்பதும் அவற்றில் வலியதின் சிறப்பும் கூறப்பட்டன.

**674 வினைபகை என்றிரண்டின் எச்சம் ...**

'எதனையும் முடியச் செய்க' என்பது வற்புறுத்தப்பட்டது. மீதியாக விட்டுவிட்டால் பின்னர் வளர்ந்து கெடுக்கும் என்பதாகும். சிறிதளவு மீதியாக விட்டாலும் கெடுக்கும் என்பதனைச் சுட்டிக் காட்டவே 'தீ எச்சம்' என்று கூறினார்.

"இனி இக்குறையாக இருப்பதை என்செய்வது" என்று நினைத்து இகழாது முடியச் செய்ய வேண்டும் என்பதாம். பின் இன்றேல் அது வளரும் தன்மையதாகும்.

**675 பொருள்கருவி காலம் வினையிடனொடு ...**

'இடனறிதல்', 'காலமறிதல்', வலியறிதல்' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப் படுவன. 'இருள்தீர' என்பது சிந்திக்கத்தக்கதாகும். தனக்கும் மாற்றானுக்கும் உள்ள அளவு களைத் தெரிந்து கொள்ளுவதே 'எண்ணிச் செயல்' என்பதால் குறிக்கப்பட்டது. ஒவ்வொரு துறையிலும் நம்முடைய நிலைமை எவ்வாறு? எதிரியினுடையது எவ்வாறு? என்பதையெல்லாம் நன்கு கருதிப் பார்த்தே செயல்படத் தொடங்க வேண்டும்.

**676 முடிவும் இடையூறும் முற்றியாங்கு ...**

முந்தைய குறட்பாவின் கருத்து மேலும் விளக்கம் பெறுகின்றது. முயற்சி, இடையூறு கள் ஆகிய இவற்றின் அளவினைவிட பயனது அளவு பெரிதாக இருக்குமானால் அத்தொழிலினைச் செய்தல் வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. ஆகவே 'படுபயன்' என்று குறிப்பிட்டார். 'பார்த்துச் செயல்' என்றும் அறிவுறுத்தப்பட்டது.

**677 செய்வினை செய்வான் செயல்முறை ...**

முன்பு செய்து முடித்தவன் வழிமுறைகளை அறிந்து செய்தல் வேண்டும். அதனை அறியவே, தானும் அதனாற் செய்து பயனடைவான் என்பதாம். 'உள்ளறிவான்' என்பது சிந்தனைக்குரியது.

**678 வினையான் வினைஆக்கிக் கோடல் ...**

பிணித்தற்கு அருமை தோன்ற 'நனைகவுள்' என்று கூறினார். தொடங்கிய தொழிலொன்றினாலே பிறிதும் ஓர் வினையை முடித்தற்கு வழி யாது என்று எண்ணிச் செய்தல் வேண்டும். அப்படிச் செய்யவே, அம்முறையால் எல்லா வினைகளும் எளிதில் முடியும் என்பதாம். 'ஆக்கிக்கோடல்' என்பதும், 'யாத்தற்று' என்பதும் சிந்தித்து அறிய வேண்டுவன.

**679 நட்டார்க்கு நல்ல செயலின் ...**

'நட்பு' முதலிய அதிகாரங்களும், 'பகைத் திறந் தெரிதல்' முதலிய அதிகாரங்களும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. பகைவரின் பகைவரை நட்பாக்கிக் கொள்ள வேண்டும் என்றார். தனது மெலிவினை அவர்கள் தெரிந்து கொள்ளுவதற்கு முன்பே ஒட்டிக் கொள்ள வேண்டும் என்பார் 'விரைந்ததே' என்றார்.

**680 உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சி ...**

மெலியவர்களை வலிமை மிக்கவர்கள் வந்து தாக்கியபோது ஆளுமிடம் சிறியரான அவர்கள் வாய்ப்புக் கிட்டுமானால் பணிந்து போதல் நல்லதாகும். வலியவர் ஒத்துக் கொள்ளுதல் அரிதானதால் 'பெறின்' என்றார். 'சரணடைதல்' என்பது குறிப்பால் உணர்த்தப் பட்டது. இன்றேல் முதலொடும் கெடுவர் என்பதாம், 'சமாதானம்' என்பதும் பொருந்து மென்க. சமாதானத்திற்கு வாய்ப்பிருந்தால் நிலைமை கருதி செய்து கொள்ளுதல் நலம். பணிதல் மானமுடையார்க்கு கருத்து அன்மையின் 'கொள்வர்' என உலகியலால் கூறினார்.

## 69 தூது

**681 அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் ...**

'அன்புடைமை', 'குடிமை', 'பண்புடைமை' முதலிய அதிகாரங்களின் கருத்துக்கள் உணர்த்தப்பட்டன. வேந்தனால் விரும்பப்படும் குணமுடைமை என்பது சிந்தனைக்குரியது. வேற்றரசரும் அவன் வயப்படுவர் என்பதாகும்.

**682 அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை ...**

'அன்புடைமை', 'அறிவுடைமை', 'கல்வி', 'சொல்வன்மை' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. வேற்றரசனிடம் சொல்லுபவன் ஆதலால் 'ஆராய்ந்த சொல்வன்மை' என்று உணர்த்தினார். தூது உரைப்பவனுக்குச் சொல்வன்மை தலையானதாயிற்று. 'ஆராய்ந்த சொல்வன்மை' சிந்திக்கவும். தூது செல்வானுக்குப் பல அரிய குணங்கள் இருத்தல் வேண்டும்.

**683 நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் ...**

மாற்றரசர்களைக் குறிப்பதற்காக 'வேலார்' என்று குறிப்பிட்டார். தூது, வினை ஆகிய இரண்டும் அடங்கவே 'வென்றிவினை' என்றார். எல்லா நூல்களையும் கற்றவர்கள்

முன்பு, அந்நூல்களைத் தானும் சொல்லவல்லவனாக இருத்தல் வேண்டும் என்பதாகும். தனது தலைவனுக்கு வெற்றி தேடித்தரும் தூதனுடைய பண்பு இவை என்று குறித்தார்.

கொல்லும் இயல்பு கொண்டவர்கள் ஆதலால் 'வேலார்' என்றார். அமைச்சர்களுள் சிறந்தவனாதல் என்பது தோன்ற 'நூலாருள் நூல் வல்லன்' என்றார்.

**684. அறிவுஉரு ஆராய்ந்த கல்வி ...**

எல்லோருமே தூதுவராகச் செல்லுவதற்குத் தகுதியுடையவர்களாக மாட்டார்கள் என்பது, இக்குறட்பாவால் உணர்த்தப்பட்டது. தூதுவர்களாக 'யார்' அனுப்பப்படுவதற்கு உரியர் என்று கூறினார். அறிவு, உரு, ஆராய்ந்த கல்வி இந்த மூன்று தன்மைகளும் ஒருவனிடத்தில் அமைதல் அரிது. ஆகலின் 'செறிவுடையான்' என்றார். இவற்றான் நன்கு மதிப்புடையவனாகவே, வினை இனிது முடியும் என்பதும் கருத்தாகும்.

**685 தொகச்சொல்லித் தூவாத நீக்கி ...**

சொல்லுகின்ற முறையினை நன்கு புலப்படுத்தினார் ; ஆகவே இருமுறை 'சொல்லி' என்ற சொல்லை அமைத்தார். தூதர் வேற்றரசனிடம் பேசும்போது மிகமிகப் பக்குவமாகப் பேச வேண்டும் என்றார். 'நகச் சொல்லி' என்பது சிந்தனைக்குரியதாகும். 'சொல்வன்மை' அதிகாரம் குறிக்கப்பட்டது. தூது செல்லுபவன் உலக அனுபவம் மிகவும் நிறைந்தவனாக இருத்தல் வேண்டும் என்பது இக்குறட்பாவில் காணப்படும் தன்மைகளினால் அறியலாம்.

**686 கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லின்**

'கல்வி', 'அறிவுடைமை', 'காலமறிதல்' முதலிய அதிகாரங்களின் கருத்துரைகள் சிந்தனைக்குரியன. 'கண் அஞ்சான்' என்பது நன்கு கருதற்பாலதாகும். அந்தந்த நேரத்திற்குத் தகுந்தாற்போலப் பேச வேண்டும் என்பதனைக் காட்டவே 'காலத்தால் தக்கதறிவதாம்' என்று அமைத்தார் ஆசிரியர். 'செலச் சொல்லுதல்' என்பதனைச் சிந்திக்கவும். கருமத்தை முடிக்கத் தக்க உபாயம் அறிதற் பொருட்டு நீதிநூற் கல்வியும், அதனாலன்றிப் பிறிதொன்றான் முடியும் காலம் வரின், அவ்வாறு முடிக்க வேண்டுதலின் காலத்தால் தக்கது அறிதலும் தூதனுக்கு இலக்கணமாயின்.

**687 கடனறிந்து காலம் கருதி ...**

'கடன் என்ப நல்லவை எல்லாம்' (981) என்பது போன்று இங்குக் 'கடனறிந்து' என்று குறிப்பிட்டார். காலமறிதல், இடனறிதல் முதலிய அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. வேற்றரசரிடம் தான் செய்யும் முறைமையினைக் 'கடனறிந்து' என்று அமைத்தார். செயற்கையறிவும், இயற்கையறிவும் பெரிதும் பயன்படுத்தப்பட வேண்டியன. தூதுவர்களிடையே தலை, இடை, கடை என்று முத்திறத்தார் உண்டு என்பதாம். பொது அறிவாலும் பிற வற்றாலும் தூதன் தானே வகுத்துக்கொண்டு கூற வேண்டும்.

**688 தூய்மை துணைமை துணிவுடைமை ...**

'வாய்மை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படுகிறது. ஆசைகளினால் ஈர்க்கப்பட்டு வேறுபடக்கூடாது என்பதற்காகவே 'தூய்மை' என்று குறிப்பிட்டார். ஏனைய குணங்கள் மிகவும் இன்றியமையாத் தன்மையின. மேன்மேலும் தூது செல்லுவோனுக்கு இருக்க வேண்டிய அரிய இயல்புகள், பண்புகள் இதில் குறிப்பிடப்பட்டன.

**689 விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் ...**

'பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார்' (417) என்பது போல இக்குறட்பாவில் 'வாய் சோரா' என்று குறித்துக் காட்டினார். 'மாற்றம்' இருமுறை கூறப்பட்டது சிந்தனைக் குரியது. தூதுவர்க்கு மனத்துணிவு மிக மிக இன்றியமையாததாகும். இங்கும் 'வன்கணவன்' என்று கூறினார். 'விடு மாற்றம், வடு மாற்றம்'—சிந்தனைக்குரியன. தூதுவனுக்கு மனத் திண்மை மிக மிக வேண்டற்பாலதாகும்.

**690 இறுதி பயப்பினும் எஞ்சாது ...**

நாட்டுத் தலைவனான அரசனை 'இறைவற்கு' என்று குறித்தார். 'மறவர் இறைவன்' (778) என்பதும் சிந்திக்கத்தக்கது. 'இறுதி பயப்பினும்' என்பதால் தூதர்க்குக் கடிய நிலைமை உண்டாதலும் கூடும் என்பதனைக் காட்டிற்று. இறுதிக்கு அஞ்சி விடாமல் உறுதி பயத்தல் வேண்டும் என்பதாம். தூதுவனுக்கு அச்சமே இருக்கக்கூடாது. 'பயப்பினும்' என்ப தால் இயல்பாக அவ்வாறு நேர்வதில்லை என்பது குறிக்கப்பட்டது.

## 70 மன்னரைச் சேர்ந்து ஒழுகல்

**691 அகலாது அணுகாது தீக்காய்வார் ...**

மன்னர்கள் விரைவில் கோபித்துக் கொள்ளும் தன்மையினர் ஆதலால் 'இகல் வேந்தர்' என்று குறிப்பிட்டார். 'இகல்' என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உண்டு. 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகாரமும் நினைவுபடுத்தற்குரியதே. பெரும்பாலும் மாற்றரசர்பால் பழகுவதையே குறிக்கும் என்றும் கொள்ளுதல் வேண்டும். கடிதில் வெகுளும் தன்மையர் என்பது தோன்ற 'இகல் வேந்தர்' என்றார். மிக அகலின் பயன் கொடாத அரசர் ; மிக அணுகின் அவமதிப் பென்று எண்ணிக் கோபிப்பர் என்பதாம்.

**692 மன்னர் விழைப விழையாமை ...**

'விழைப' என்றது அவர்க்குச் சிறப்பாக உரியவற்றை ; அவை நுகரப்படுவன, ஒப்பனை, மேன்மை என்றிவை முதலாயின. இவற்றை ஒப்பிற்கு அஞ்சித் தாம் விழையாது நீங்கவே, அந்த அச்சம் நோக்கி மன்னர் உவந்து தாமே எல்லாச் செல்வமும் நல்குவர் என்பது கருத்து. எனவே, அவற்றை விரும்பின் கேடு தரும் என்பதாம். தலைமையாக இருப்பவர்கள் மிகவும் விரும்பியிருக்கும் பொருள்களின்மீது நாமும் விருப்பங் கொண்டிருத்தல் என்பது தலைமையில் இருப்பவர்கள் சிந்தனைக்கு மகிழ்ச்சி தாராததாக இருக்கும் என்பது குறிப்பாகும்.

மன்னர்க்குரியவற்றை மற்றவர் விரும்பின் கேடு தரும்; அவருக்குச் சமமாக நாம் இருக்க விரும்புகிறோம் என்று அவர் கருதினால் தீமை வரும்.

**693 போற்றின் அரியவை போற்றல் ...**

தலைமையில் இருப்பவர்கள் தம்மீது சந்தேகங் கொண்டு கோபித்துக் கொள்ளுமாறு நடக்கக் கூடாது. அவ்வாறு ஐயப்பட்டு நம்மைப்பற்றித் தவறாக நினைத்துக் கோபித்து விடுவார்களேயானால் அந்த எண்ணத்தினைப் பிறகு மாற்றுதல் முடியாததாகிவிடும். 'தேற்றுதல் யார்க்கும் அரிது' என்று கூறினார். மன்னர்க்கு ஐயப்பாடோ அல்லது தவறு என்று பட்டுவிட்டாலோ அவர் ஐயப்பட்டுக் கோபப்படுவர்; பிறகு அப்பிழைகளை மாற்றுதல் மிகமிகக் கடினமாகிவிடும்.

**694 செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் ...**

அப்படிச் செய்தால், தனது குற்றங் கண்டு செய்ததாகக் கொள்வர் என்பது கருத்தாகும். 'ஒழுக்கமுடைமை', 'பெரியாரைத் துணைக்கோடல்', 'பெரியாரைப் பிழையாமை' முதலிய அதிகாரங்கள் குறிப்பால் உணர்த்தப்பட்டன. 'சேர்ந்த' என்பது பிறரோடு சேர்ந்து நடத்தல் என்பதாகும்.

**695 எப்பொருளும் ஓரார் தொடரார்மற்று ...**

மன்னர் முதலிய பெரியார்களுடன் நெருங்கிப் பழகும் போது செயல்பட வேண்டிய முறைமை எடுத்துக் காட்டப்பட்டது; கேட்பதற்கு விருப்பங் கொள்ளுதலும் குற்றம் எனப்பட்டது. 'விட்டக்கால் கேட்க' என்பதும் சிந்தனைக்குரியன. 'எப்பொருளும்' என்றதும் 'அப்பொருளை' என்றதும் கருதற்பாலன. கேட்டறிதற்குரிய பொருளாக இருந்தாலும் கூட, மன்னரே தாம் வந்து சொல்லவில்லை என்றால் கேட்கக்கூடாது என்பது தோன்ற 'எப்பொருளும்' என்றார்.

**669 குறிப்பறிந்து காலம் கருதி ...**

'அறிவுடைமை', 'காலமறிதல்', 'இனியவை கூறல்' முதலிய அதிகாரங்களின் கருத்துரைகள் சிந்திக்கத்தக்கன. 'குறிப்பறிதல்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. பொருட்பாலில் 'குறிப்பறிதல்' என்ற அதிகாரம் இருப்பது போலக் காமத்துப்பாலிலும் 'குறிப்பறிதல்' என்றோர் அதிகாரம் உண்டு. காமத்துப்பாலில், 'குறிப்பறிவுறுத்தல்' என்ற அதிகாரமும் இருக்கின்றது. குறிப்பறிதலும், காலம் கருதுதலும், வெறுப்பில்லாதவற்றைச் சொல்லலும், வேண்டியவற்றை மட்டும் சொல்லலும், விரும்புமாறு சொல்லலும் ஆகியவை பெரிதும் சிந்தித்து அறிந்துணர வேண்டியவை. 'வேட்ப மொழிவதாம் சொல்' (643) என்பது போன்றவற்றைச் சிந்திக்கவும்.

**697 வேட்பன சொல்லி வினையில ...**

முந்தைய குறட்பாவின் விளக்கமாகவும் தொடர்பாகவும் இக்குறட்பா அமைந்துள்ளது. சொல்ல வேண்டுவனவற்றையும் சொல்லக்கூடாதனவற்றையும் புலப்படுத்தினார் ஆசிரியர். 'கேட்பினும் சொல்லா விடல்'என்பது சிந்தனைக்குரியது.

சொல்லுவனவும் சொல்லாதனவும் வகுத்துக் கூறப்பட்டன. 'கேட்பினும் சொல்லா விடல்' என்பதனைப் பன்முறையும் சிந்திக்க வேண்டும்.

**698 இளையர் இனமுறையர் என்றுஇகழார் ...**

தலைமையில் இருப்பவர்களிடம் பழகும்போது தலைமைக்குரிய இடத்தினைக் கருதியே பழகுதல் வேண்டும். வயது, இனம் முதலியவற்றைக் கருதி உரிமையெடுத்துக் கொள்ளுதல் தகாது. தம்மைவிட வயதில் இளையவர் என்று எண்ணியும் சொந்த இனத்தவர் என்று எண்ணியும் இகழ்வாகக் கருதிப் பழகினால், அவ்வாறு பழகியவர் ஒதுக்கப்படுவர் என்பதாம். 'வேந்தர்க்கு ஒளி' (390), 'மன்னர்க்கு ஒளி' (556) என்பன போல 'ஒளி' என்றார்.

**699 கொளப்பட்டேம் என்றுஎண்ணிக் கொள்ளாத ...**

'அரசனால் நாம் நன்கு மதிக்கப்பட்டு இருக்கின்றோம்' என்று கருதி மனம் விரும்பியவாறு நடந்து கொள்ளுதல் அறிவுடையோர் செயலாகாது என்பதாம். கொள்ளாதன செய்து அழிவு எய்துவோர் ஏற்றுக் கொள்ளப்பட்டபின் தம்மை வேறொருவராகக் கருதுவர் ஆகலின், முன்னையராகவே கருதி அஞ்சியொழுகுவாரைத் துளக்கு அற்ற காட்சியவர் என்றார்.

**700 பழையம் எனக்கருதிப் பண்புஅல்ல ...**

'பழைமை', 'பண்புடைமை' என்ற அதிகாரங்களைச் சிந்திக்க. 'உறுப்புக் கெழுதகைமை' (802) என்பது போன்ற கருத்துக்கள் 'பழைமை' என்ற அதிகாரத்தில் உள்ளன. 'கெழுதகைமை'யினைச் சிறப்பித்துக் கூறினாலும், இங்கே கெழுதகைமை கேடு தரும் என்றார். 'பழைமை' என்ற அதிகாரத்தில் கெழுதகைமை நன்கு விளக்கப்பட்டுள்ளது. உரிமையோடு செய்வனவற்றிற்குக் 'கெழுதகைமை' எனப்படும். நண்பர்கள் பொறுத்துக் கொள்ளுவார்கள்; ஆனால் அரசன் கெழுதகைமை கேடு பயக்கும் நேரம் சொல்லப்பட்டது.

## 71 குறிப்பறிதல்

**701 கூறாமை நோக்கிக் குறிப்பு அறிவான் ...**

ஒட்பம் உடையவனாக எல்லார்க்கும் அழகு செய்தலால் 'வையக்கு அணி' என்று கூறினார். 'வையத்துக்கு' என்பது 'வையக்கு' என்று வந்தது. இதனால் அமைச்சன் மக்களிற் சிறப்புடையவனாம் என்பதாம். 'குறிப்பறிதல்' என்ற பெயரில் பொருட்பாலிலும் காமத்துப்பாலிலும் காணப்படும் அதிகாரங்களும், குறிப்பறிவுறுத்தல், 'கண்ணோட்டம்', 'கண்விதுப்பழிதல்' முதலிய அதிகாரங்களும் குறிப்பாகக் கண்ணின் இயல்புகளைக் கூறுவன வாகும். குறிப்பு அறிதல் என்ற ஆற்றல் பெற்றவர்களும் உண்டு. அத்தகையவரை 'வையக்கு அணி' என்றார். ஒட்பமுடையவனாய் எல்லார்க்கும் அழகு செய்தலால் இவ்வாறு கூறினார்.

**702 ஐயப் படாஅது அகத்தது ...**

உடல் முதலியவற்றான் ஒவ்வானாயினும், பிறர் நினைத்தது உணரும் தெய்வத் தன்மையுடைமையின் 'தெய்வத்தோடு ஒப்ப' என்று கூறினார். 'தெய்வம்' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. பிறர் உள்ளத்தில் இருப்பதை அவர் கூறாமலேயே 'உரைக்க வல்லவன்' இயற்கை ஆற்றல் மிகுந்தவன் என்பதாம். மனித ஆற்றலுக்கு மேம்பட்டிருக்கும் இயற்கை ஆற்றலினைத் தெய்வ ஆற்றல் என்று கூறினார். ஆதலால், 'கடவுள் வாழ்த்து' என்ற அதிகாரத்தில் கூறப்பட்ட இறைவனுக்கும் இத்தெய்வத்திற்கும் சம்பந்தம் இல்லை. இறைவன் 'தனக்கு உவமை இல்லாதான்' ஆவான். தெய்வத்தன்மை பொருந்தியவனை இங்கே கூறினார்.

**703 குறிப்பின் குறிப்புஉணர் வாரை ...**

முன் குறட்பாவில் கூறியதுபோல இக்குறட்பாவிலும் 'உணர்வாரை' என்றார். உள் நிகழும் நெறி யாவர்க்கும் ஒத்தலின், பிறர் குறிப்பு அறிதற்குத் தம் குறிப்புக் கருவியாயிற்று. பிறர் முகக் குறிப்பானே அவர் மனக்குறிப்பு உணர்வாரை என்பதும் சிந்திக்கத் தக்கதாகும். குறிப்பறிந்து கூறுதல் மிகமிக இன்றியமையாதது என்பதைக் கருதியும், அப்படிப்பட்ட ஆற்றல் பெற்றவர்கள் கிடைப்பது அரிது என்பதைக் கருதியும் 'யாது கொடுத்தும் கொளல்' என்றார். நீக்கவேண்டியவர்களை 'ஒன்று ஈத்தும் ஒருவுக' (800) என்பது போலவும் 'கொடுத்தும் கொளல்' (867) என்பது போலவும் இங்குக் கூறினார்.

**704 குறித்தது கூறாமைக் கொள்வாரோடு ...**

'கூறாமை நோக்கி' (701) என்றதுபோல இக்குறட்பாவில் 'குறித்தது கூறாமை' என்று அமைத்தார். 'வேறு' என்பது சிந்தித்தறிய வேண்டுவதாகும். 'மக்களாதலே வேறு' (60?) என்பதைப் போல, இங்கு 'அனையராதல் வேறு' என்று குறிப்பிட்டார். மக்களைப் பிரித்து வேறு படுத்துவதற்கு உறுப்புகளைக் காரணமாகக் கொள்ளாமல் அறிவினையே கொள்ளுதல் வேண்டும் என்பதாயிற்று.

**705 குறிப்பின் குறிப்புஉணரா ஆயின் ...**

வினாமுறையில் கருத்தினை அமைத்துக் காட்டினார். குறிப்பறிதற்குக் கண் துணையாயிருப்பது சிறப்பிக்கப்பட்டதாகும். உயிரது உணர்வு கண்மேல் ஏற்றப்பட்டது. உறுப்புக்களுள் சிறந்தவை கண்கள் ஆதலால் அவ்வாறு கூறினார். அத்தகைய கண்களால் பயன் இல்லை என்பதாம்.

**706 அடுத்தது காட்டும் பளிங்குபோல் ...**

ஒரு பொருள் பிறிதொரு பொருளின் பண்பைக் கொண்டு தோற்றுதலாகிய தொழில் குறிக்கப்பட்டது. 'காட்டும்' இருமுறை கூறப்பட்டது. தானேகொண்டு காட்டும் தன்மை முகத்திற்கு உண்டு என்பதாம். முகம் சிறந்த கருவியாயிற்று. நெஞ்சம் உள்ளே மறைந் திருப்பது; வெளியில் தெரிவது முகம்; உள்ளேயிருக்கும் நெஞ்சத்தின் தன்மையினை உணர்த்து வது மிகச்சிறப்பு. ஆதலால் பளிங்கும் வெளிப்பொருளை உள்ளே காட்டுகிறது என்பது குறிப்பு.

**707 முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ ...**

'அறிவுடைமை' என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. வினாமுறையில் கருத்து அமைக்கப்பட்டுள்ளது. ஊழ்வினையினைத் 'தான் முந்துறும்' (380) என்று கூறியது போல, இங்கும் தான் முந்துறும் என்றார். 'உயிர்க்கே அறிவு உள்ளது; ஐம்பூதங்களால் இயன்ற முகத்திற்கு இல்லை என்பாரை நோக்கி, 'உயிரது கருத்தறிந்து அஃது உவக்குறின் மலர்ந்தும் காய்வுறின் கருகியும் வரலான், உண்டு என மறுப்பார் போன்று, குறிப்பதற்குக் கருவி கூறினார்.

**708 முகம்நோக்கி நிற்க அமையும் ...**

'நோக்கி' என்று இருமுறை கூறியதும், 'பெறின்' என்று அருமையினைக் கூறியதும் சிந்தனைக்குரியன. 'அமையும்' என்றதும் 'உற்றது' என்றதும் குறிப்பறிவான் ஆற்றலினைக் குறித்துக் காட்டியவையாம். 'முகம் நோக்கி'—'அகம் நோக்கி', சிந்தனைக்குரியன. 'அமையும்' என்பதனால் உற்ற குறை நீர்க்கப்படும் என்பதாயிற்று.

**709 பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் ...**

அருமையினை நோக்கி இக்குறட்பாவிலும் 'பெறின்' என்று கூறினார். 'உரைக்கும்' என்று கூறியது நன்கு சிந்திக்க வேண்டியதாகும். 'கண் உரைக்கல்உறுவது' (1271) என்பது போன்றவை கருதற்பாலனவாம். கண்ணின் பகைமை விளக்கப்பட்டது.

'உணர்வார்ப் பெறின்' என்று மேலே கூறியதுபோல இங்கும் கூறினார். 'கண்ணின் வகைமை' என்றதனால் வேறுபாட்டின் தன்மை சொல்லப்பட்டது.

**710 நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் ...**

அறிவின் நுண்மை அதனை உடையார்மேல் ஏற்றப்பட்டது. நுண்கருவி, நோக்கு என்பது குறிக்கப்பட்டது. மனத்தில் நிகழ்வதனை அளக்குங்கோல் கண்களேயாகும். அதன் அரிய சிறப்பு உணர்த்தப்பட்டது. இங்கிதம், வடிவு, தொழில், சொல் என்பன முதலாகப் பிறர் கருத்தளிக்கும் அளவைகள் பல உண்டு. தலைவனாகிய மன்னன் கருத்தினை அமைச்சர் அளக்கும் கோல் கூறப்பட்டது. 'நுண் கருவி' நோக்கு என்று உணர்த்தப்பட்டது.

## 72 அவை அறிதல்

**711 அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக ...**

சொல்லின் தொகை என்றதால் செஞ்சொல் இலக்கணைச் சொல், குறிப்புச்சொல் என்னும் மூவகைச் சொல்லும் அடங்கின. 'அவை அறிதல்', 'தொகை அறிதல்' என்பன நன்கு புலப்படுத்தப்பட்டன. எல்லா அவைகளிலும் எல்லாவற்றையும் பேசுதல் கூடாது.

**712 இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக ...**

முந்தைய குறட்பாவில் தூய்மையவர் என்றது போல இங்கு நன்மையவர் என்றார். முந்தைய குறட்பாவில் கூறப்பட்ட மூவகைச் சொல்லும் செம்பொருள், இலக்கணைப் பொருள், குறிப்புப் பொருள் என்னும் பொருள்களைப் பயக்குமாறு சொல்லுவதை 'நடை' என்றார்.

**713 அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் ...**

சொல்லின் வகை முறைகளை அறியாதார் யாதும் அறியார் என்பதாம். கற்று வல்ல கலையும் அவரிடம் இல்லை என்பதாம். அவை அறியாக்கால் வருங் குற்றம் கூறப்பட்டது. பிறரால் மதிக்கப்பட மாட்டார்கள் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. அம்மூவகைச் சொற்களால் வருகின்ற சொல்லுதல் வகைமை என்பது கேட்பாரது உணர்வு வகைமை பற்றி வருதலால் **சொல்லின் வகையறிவார்** என்றார்.

**714 ஒளியார் முன் ஒள்ளியர் ஆதல் ...**

'ஒள்ளியார்' என்றது மிக்காரையும் ஒத்தாரையும் என்பதாம். ஒள்ளியராதல் என்பது தம் நூலறிவும் சொல்வன்மையும் தோன்ற விரித்தலாகும். அவை அறியாத புல்லரை **வெளியார்** என்று கூறினார். வயிரமில்லாத மரத்தை 'வெளிறு' என்பது உலக வழக்காகும். 'இன்மை அரிதே வெளிறு' (503) என்பதனையும் சிந்தித்தறிக. அவைக்கு ஏற்றபடி நடந்து கொள்ள வேண்டும்.

**715 நன்றுஎன்ற வற்றுள்ளும் நன்றே ...**

'அரியவற்றுள் எல்லாம் அரிதே' (443) என்ற அமைப்பினைப் போல, இங்கு **'நன்றென்றவற்றுள்ளும் நன்றே'** என்று கூறினார். தம்மின் முதிர்ந்தார் முன் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கம் மிகவும் பாராட்டத்தக்கதென்பதாம். 'செறிவு அறிந்து'(123) என்பதையும் கருதுக. தம் குறையும், அவர் மிகுதியும், முந்துகிளந்தாற்படும் இழுக்கும், கிளவாக்கால் எய்தும் நன்மையும், அறிந்தே அடங்கினமையின் அவ்வடக்கத்தினை 'நன்றென்ற வற்றுள்ளும் நன்று' என்றார்.

**716 ஆற்றின் நிலைதளர்ந் தற்றே ...**

நிலைதளர்ந்து வீழ்தல் என்பது, 'உரனென்னும் தோட்டியான் ஓரைந்துங்காத்து' (24) ஒழுகியவன் பின் தவறிக் கூடாவொழுக்கத்தினன் ஆகிவிடுதல் என்பதாம். பயன் இழத்தலே அன்றி இகழவும் படும் என்பதாகும். தப்புதல் வராமல் சொல்லல் வேண்டும் என்பது இதன் கருத்து.

**717 கற்றுஅறிந்தார் கல்வி விளங்கும் ...**

**'கல்வி', 'அறிவுடைமை'** முதலிய அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. கல்வியின் மேம்பாடு கற்றார்க்கல்லது பிறர்க்கு அறிதல் அருமை என்பதாகும். 'கற்க கசடற' (391) என்பதேபோல் 'கசடறச் சொல் தெரிதல்' என்று இங்கு விளக்கினார். 'கசடு அற' (391) இங்கேயும் கூறப் பட்டது. சொற்களை ஆராய்ந்து அறியும் வல்லார் மிகுதியாக இருத்தல் இயல்பல்ல என்பதால் 'சொல் தெரிதல் வல்லார்' என்று கூறினார்.

**718 உணர்வது உடையார்முன் சொல்லல் ...**

தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளரும் என்பதாகும். தெரிந்தறியும் அறிவுடையார் முன்பு சொல்லுவதுதான் சிறந்தது என்று குறித்தார். உணர்ந்து கொள்ளுவ

தென்பது எல்லோராலும் இயலாது ஆகையால், 'உணர்வது உடையார்முன்' என்று சுட்டிக் காட்டினார். பேசுகின்ற பேச்சு நீர் சொரிதல் போன்றதென்ற உண்மை சிந்திக்கத்தக்கது. நடைமுறையில் 'ஆற்றொழுக்கு' என்று கூறுவர்.

**719 புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க ...**

'வெளியார்முன்' (714) என்று குறித்ததைப்போல, 'புல்லவையுள்' என்று இக் குறட்பாவில் கூறினார். 'பொச்சாவாமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'செலச் சொல்லுவார்' என்பது சிந்தனைக்குரியது. சொன்னால், தம்மை அவை அறியத் தெரியாதவர் என்று நல்லவையினர் இகழ்வர். இதனால்தான் 'பொச்சாந்தும் சொல்லற்க' என்றார்.

**720 அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் ...**

'நூல்இன்றிக் கோட்டி கொளல்' (401) என்று கூறியதுபோல இங்கும் 'கோட்டி கொளல்' என்றார். 'அமிழ்தம்' என்று சிறப்பித்தது சிந்தனைக்குரியது. அமிழ்தம் கெட்டு விடுவதுபோலச் சொல்லும் பயனின்றிப் போகும் என்பதாம். தாழ்ந்தோர் அவைக்கண் எக்காலத்திலும் சொல்லவே கூடாது என்றார். 'அமிழ்தத்தினை' உவமையாகக் கூறியது பன்முறையும் சிந்திக்கத்தக்கது.

## 73 அவை அஞ்சாமை

**721 வகைஅறிந்து வல்லவை வாய்சோரார் ...**

கற்றுவல்லார் இருக்கும் அவையினைக் கண்டு அஞ்சுதல் கூடாது. 711, 712 குறட்பாக் களின் விளக்கங்களைக் காண்க. அச்சம் வந்துவிட்டால் பிழைபடச் சொல்ல நேரிடும் என்பது உணர்த்தப்பட்டது. 'சொல்லின் தொகையறிந்த தூய்மையவர்' (711) என்பது போலவே இங்கும் கூறினார். சிறப்பு கருதி மீண்டும் வற்புறுத்தினார்.

**722 கற்றாருள் கற்றார் எனப்படுவர் ...**

உலகம் அறிவது அவரையே ஆகலின், அதனால் புகழப்படுவாரும் அவர் என்பதாயிற்று. கற்றாருள், கற்றார், கற்றார்முன், கற்ற என்பவை சிந்தனைக்குரியன. 'கல்வி' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'நன்கு செலச் சொல்லுவார்' (719) என்றார். இங்கு 'கற்ற செலச் சொல்லுவார்' என்றார். கற்றறிந்ததோடு நிற்காமல் அவையிலும் சொல்லுவார், 'கற்றாருள் கற்றார்' எனப்பட்டார்.

**723 பகையகத்துச் சாவார் எளியர்...**

அவையில் பேசுவது எளிதல்ல வென்பதும் அருமை யென்பதும் குறிக்கப்பட்டது. போர் செய்தற்குள்ள மனத் துணிவினையும் மறத் தன்மையினையும்விட அவைக்குச்

செல்லுவோருக்குத் துணிவு மிகுதியும் இருத்தல் வேண்டும் என்பதாயிற்று. 'கொள்ளற்க சொல்லேர்' (872) என்பதனைச் சிந்திக்கவும். பகையகத்திற்குச் செல்லுகின்ற மனோதிடம் வீரர்கட்கு எளிதில் வந்துவிடும். ஆனால் அவையில் சொல்லுவதற்கு வாராது. இஃது உளநூல் தத்துவம் ஆகும்.

**724 கற்றார்முன் கற்ற செலச்சொல்லி ...**

எல்லாம் ஒருவற்குக் கற்றல் கூடாமையின் வேறு வேறாய கல்வியுடையார் பலரிருந்த அவைக்கண் தாம் கற்றவற்றை அவர்க்கு ஏற்பச் சொல்லுக; சொல்லவே, அவரும் அவ்வெல்லாம் சொல்லுவா ராகலான், ஏனைக் கற்கப் பெறாதன கேட்டறியலாம் என்பதாயிற்று. 'கேள்வி' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டதாகும். எல்லாம் ஒருவர்க்கு கற்றல் கூடாமையின் வேறு வேறாய கல்வியுடையார் பலரிடமிருந்து தாமும் கேட்டுத் தெரிந்து கொள்ளுதலும் வேண்டும். அதனால் 'மிக்க கொளல்' என்றார்.

**725 ஆற்றின் அளவுஅறிந்து கற்க ...**

சொல்நூல் கற்றே அளவை நூல் கற்க வேண்டுதலின் அதற்கு அது நெறி எனக் கூறப் பட்டது. 'மாற்றம் கொடுத்தற் பொருட்டு' என்று கூறியதால் வழக்காடுதல், வாதமிடுதல் முதலியவற்றிற்குத் தேவையான நூல்களைக் கற்றல் வேண்டும் என்பதாம். முதலில் சொல்நூல் கற்க வேண்டும்; பிறகு 'அளவை நூல்' கற்க வேண்டும். அதைத் 'தர்க்க சாத்திரம்' என்றும் கூறுவர். வாதம் செய்ய வேண்டிய நேரங்களில் இத்தகைய நூல்கள் கற்றிருக்கவேண்டும்.

**726 வாளொடுஎன் வன்கண்ணர் அல்லார்க்கு ...**

வினா முறையில் கருத்தினை அமைத்துக் காட்டினார். அச்சம் என்பது அறவே கூடாது என்று குறிப்பிடப்பட்டது. நுண்ணவை அஞ்சுவோர் கற்ற நூல்களால் பயனில்லை என்பது கருத்து. ஆகவே வன்கண்ணராக இருத்தல் வேண்டும். 'பேடிகை வாளாண்மை போல' (614) என்பது நினைவிற் கொள்ளத்தக்கது. அப்படிப்பட்டவர்கள் நூற்கு உரியவர் களல்லர் என்பதாம். 723-இன் உவமையும் சிந்தித்து அறியலாம்.

**727 பகையகத்துப் பேடிகை ஒள்வாள் ...**

அவை போர்க்களம் என்ற பொருளிலேயே கூறப்படுகின்றது. 'பகை அகம்', 'அவை அகம்' — சிந்திக்கத்தக்கனவாகும். பிடித்தவன் குற்றத்தால் வாள் சிறப்பில்லாததாயிற்று. அஞ்சுபவன் கற்ற நூலின் பெருமையும் அத்தன்மையதாயிற்று. இங்கும் 'பேடி கை ஒள்வாள்' என்றார். கூர்வாள் என்பதால் ஒள்வாள் என்றார். பேடி, பெண் இயல்பு அதிகமும் ஆண் இயல்பு குறைந்தும் உடையவன்.

**728 பல்லவை கற்றும் பயம்இலரே ...**

ஆசிரியர் பற்பல இடங்களிலும் 'செலச் சொல்லாதார்' என்று குறிப்பிடுவது சிந்தனைக்குரியதாகும். சொல்ல முடியாததால், கல்வியின் நுண்மை அறிவாரில்லை என்றாயிற்று; அவை அஞ்சுவார் கற்ற கல்வி பிறர்க்குப் பயன்படாது என்பதாகும். 'பல கற்றும்

கல்லார் அறிவிலாதார்' (140) என்பது போல, 'பல்லவை கற்றும் பயமிலரே' என்றார், பயன் படுதல் இல்லை. 'நல்லவையுள்' என்பது சிந்தனைக்குரியது.

**729 கல்லா தவரின் கடைஎன்ப ...**

அவைக்கு அஞ்சுபவர்களின் இழிவு குறிக்கப்பட்டது. கல்வி யறிவுகளால் எய்த வேண்டிய பயனைத் தாமும் பிறரும் அடைய முடியாமற் போதலால் அவர் கல்வித் துன்பமே கொண்டவர். ஆதலால், 'கல்லாதவரின் கடை' என்று கூறினார். அவையஞ்சுவார் வன்மையாகக் கண்டிக்கப்பட்டார்கள். அக்கல்வியறிவுகளால் பயன் தாமும் எய்தாது பிறரை எய்துவிப்பதும் செய்யாததால் 'கடைஎன்ப' என்று உலகமக்கள் வாக்கில் அமைத்துக் கூறினார்.

**730 உளர்எனினும் இல்லாரொடு ஒப்பர் ...**

'களன்' என்றது அவைக்கண் வீற்றிருந்தவர்களைக் குறிப்பதாகும். அஞ்சுதலால் பேசுதற்கும் வாராதநிலை உண்டாகிவிடும். ஆதலால், 'உளர் எனினும் இல்லாரொடு ஒப்பர்' என்று கூறினார். கற்றவைகளைப் பிறர் அறிய அவையில் சொல்லுதல் மிகமிக இன்றியமையாத தாகும் என்பது வற்புறுத்திக் கூறப்பட்டது. 'அவியினும் வாழினும்என்' (420) போலக் 'களன்' என்றது சபையில் இருந்தாரை. 'செத்தாருள் வைக்கப் படும்' (214) என்பதையும் சிந்திக்கலாம்.

## 74 நாடு

**731 தள்ளா விளையுளும் தக்காரும் ...**

'உழவு', 'சான்றாண்மை', 'குடிமை', 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரங்களின் கருத்துரைகள் சிந்திக்கத்தக்கன. சிறப்பான நாட்டின் இலக்கணம் குறிக்கப்பட்டது.

'செங்கோன்மை' அதிகாரத்துள் 'பெயலும் விளையுளும்' (545) என்று குறித்தார்; சிந்திக்கவும். தக்கார் என்பது அறவோர், அந்தணர் முதலிய சான்றோர்களைச் சொல்லப் பட்டது. செல்வர் என்பது கலத்தினும் காலினும் அரும்பொருள் தரும் வணிகர்.

**732 பெரும்பொருளால் பெட்டக்கது ஆகி ...**

முந்தைய குறட்பாவின் தொடர்ச்சியாகவே இக்குறட்பா அமைந்துள்ளது. நாட்டின் அரிய தன்மைகள் கூறப்பட்டன. இக்குறட்பாவிலும் விளைச்சல் குறிக்கப்பட்டது. 'பெட்டக்கது' என்பது சிந்திக்கத்தகும். 'பெள் தக்கது' பிற நாட்டாரும் விரும்பும் வண்ணம் வளப்பம் உடையதாக இருக்க வேண்டும் என்பதாம். படையெடுப்புக் காரணம் சிந்திக்கத் தக்கது.

**733 பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி ...**

'இறை' என்பது அரசுக்கு மக்கள் கொடுக்க வேண்டிய இறைப் பொருளைக் குறித்தது. நாட்டுத் தலைவனான மன்னனை 'இறைவற்கு' என்றே கூறினார்; இறையைக் குறைபடுத்தாது

தானே கொடுப்பது என்பார். 'இறையொருங்கு நேர்வது' என்றார். 'மேல்வருங்கால் தாங்கி' என்பது சிந்திக்கத்தக்கது. 'தாங்கி' என்றதால் அவ்வாறான பாரம் உண்டாகும் காலங்கள் உண்டு என்பதாகும். இறைப்பொருள் தவறாமல் இறைக்குச் செலுத்த வேண்டும்.

**734 உறுபசியும் ஓவாப் பிணியும் ...**

தலைசிறந்த ஒரு நாடு எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதற்குரிய இயல்புகள் கூறப்பட்டன. தீமையான இவையெல்லாம் இல்லையென்றால் அத்தகைய நாடு நன்கு நடக்கும் என்பதாம். 'உறுபசி' என்பது, உழவர்களின் உழைப்பாலும் ஆற்றல் விளைதலானும் சேராததாயிற்று. இயல்பாக இவ்வாறெல்லாம் இருப்பது சிறந்த நாட்டின் இலக்கணமாகும்.

**735 பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் ...**

'உட்பகை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. மக்களிடையே வேறுபாட்டினை உண்டாக்கி அதனால் ஏற்படும் பலவிதமான கூட்டங்களையும் 'பல்குழு' என்று கூறினார், ஒற்றுமை நிலவாது என்பதாம். 'இல்லது நாடு' என்று கூறியது கருதற்பாலதாகும். உட்பகையே பாழ் செய்வதாகும். மாறுபட்ட எண்ணங்களுடன் பல குழுக்கள் ஒரு நாட்டில் இருப்பது நல்லதல்ல; கொலை செய்யும் இயல்பினரும் இருப்பதுண்டு; இத்தகையோர் இல்லாதிருத்தல் நல்லது. 'கொலையிற் கொடியாரை' (550) என்பதும் சிந்திக்கத்தக்கது.

**736 கேடறியாக் கெட்ட இடத்தும் ...**

விளைகின்ற வளம் குறைவுபடாததாக இருத்தல் வேண்டும் என்பது கருத்தாகும். தலையான நாடு எதுவென்பது சிறப்பாகக் கூறப்பட்டது. நாடு என்பது பகைவரால் கெடுக்கப்பட்டபோதும் வளம் குன்றாமல் இருக்கவேண்டும் என்பதாம். தலையான நாட்டிற்கு முதன்மையான இலக்கணம் கூறினார். பல காரணங்களினால் ஒரு நாடு கெட்டுவிடுவதுண்டு, அப்படியாயினும் வளம் குன்றாமல் சிறக்கவேண்டும் என்று கூறினார்.

**737 இருபுனலும் வாய்ந்த மலையும் ...**

'அரண்' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. இயற்கை வளமே மிகச் சிறந்த வளம் என்பது உணர்த்தப்பட்டது. இத்தகைய இயற்கை அமைப்புக்கள் இருந்துவிட்டால் மிக் நன்மை பெறும் என்பதாகும். இவை நாட்டிற்கு உறுப்புக்கள் எனப்பட்டன. 'அரண்' தனி அதிகாரம் காண்க. இயற்கையான வளங்களின் தனிப்பெருமை எடுத்துக்காட்டப்பட்டது. மாரிக்கண் உண்ட நீர் கோடைக்கண் உமிழ்தலும் உடைமை பற்றி 'வாய்ந்தமலை' என்றார்.

**738 பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ...**

நாட்டிற்கு அழகு என்பதற்கு விளக்கம் கூறப்பட்டது. விளைச்சல் என்பதனைப் பல குறட்பாக்களிலும் குறித்துக் காட்டுவது சிந்திக்கத்தக்கது. மக்கள் இன்பமாக வாழவேண்டும் என்பதனை நன்கு குறித்துக் காட்டினார். 'ஐந்து சால்பு ஊன்றிய தூண்' (983) என்றதுபோல் இங்கும் 'அணி என்ப நாட்டிற்கு இவ்வைந்து' என்றார். இதுபோல் பிற இடங்களிலும் கண்டு தெளிக. இங்கும் 'விளைவு' என்பதனைக் கூறினார். 'நாடு' என்ற இவ்வதிகாரத்தில்

இயற்கை வளம் நன்கு எடுத்துக்காட்டப்பட்டது. ஏமம் என்பது நாட்டின் காவலைக் குறித்தது. அரசன் காவலும், வாழ்வோர் காவலும், அரண் காவலும் அடங்கினவாகும்.

**739 நாடுஎன்ப நாடா வளத்தன ...**

நாடென்ப, நாடா, நாடல்ல, நாட என்பன கருத்துக்களைத் தெளிவுப்படுத்துவன வாகும். முதன்மையான சிறப்புமிக்க நாடு எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதற்கு விளக்கம் தரப்பட்டது. இங்கேயும் 'வளம்' என்பது குறிக்கப்பட்டது. உலகியல் அறிஞர்களின் ஒத்த கருத்தினையும் மனத்திற்கொண்டு கூறுகிறார் ஆதலால் 'என்ப' என்றார். தேடி வருந்திச் செல்வம் பெறாமல் இயல்பாகவே கிடைக்கும் நாடு 'தலையான நாடு' என்றார்.

**740 ஆங்கமைவு எய்தியக் கண்ணும் ...**

வேந்தனோடு மக்கள் பொருந்துதல் உடையவர்களாக இருத்தல் வேண்டும். குடி மக்களிடம் வேந்தன் அருளுடையனாக இருத்தல் வேண்டும். மன்னனும் மக்களும் இணைந்து இருந்து வாழ வேண்டும் என்பதாயிற்று. 'குடிதழீஇ' (544) என்பது சிந்திக்கத் தக்கது. நாட்டிற்குத் 'தலைமை' தாங்கி நடத்துபவனை வேந்து என்றார். அவனையே அரசன், மன்னன் என்றும் கூறுவார். பரம்பரையினைக் கொண்டு அரசன் மகன் அரசனாக வருதல் என்பதனை ஆசிரியர் கூறவில்லை; நல்ல பண்புகளும் ஆற்றல்களும் நிறைந்தவனே தலைவன் என்பதனை 'இறைமாட்சி' என்ற அதிகாரம் குறித்தது. 'வேந்து அமைவு' — எனவே குடிகள் அவன் மாட்டு அன்புடையவராதலும் அவன் இவர்மாட்டு அருளுடையவனாதலும் அடங்கின. நாட்டின் தலைவனுக்குச் சிறப்பு விளக்கப்பட்டது.

## 75 அரண்

**741 ஆற்று பவர்க்கும் அரண்பொருள் ...**

ஆற்றுபவர்க்கும் போற்றுபவர்க்கும் அரண் பொருள் என்பது சிறப்பினை உணர்த்திய தாகும். ஆற்றலுடையராயினும் அரண் இல்லாவிட்டால் அழியும் தன்மை உண்டாகிவிடும் என்பதனைக் குறித்தார். போர் வீரர்களும் பிறவும் அமைந்துள்ளதையே அரண் எனக் கூறுவார் 'அரண் பொருள்' என்றார். அதனையே போற்றுபவர்க்கும் 'பொருள்' என்றார். பிறன்மேல் படையெடுத்துச் செல்லுவோர்க்கும் அரண் சிறந்தது. ஆற்றல் உடையராயினும் அரண் இல்லாவிட்டால் கெடுவர். ஆற்றுபவர்க்கும் போற்றுபவர்க்கும் அரண் பொருளாயிற்று.

**742 மணிநீரும் மண்ணும் மலையும் ...**

நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என இயற்கையும் செயற்கையுமாகிய இந் நான்கும் சூழப்படுவது அரண் என்பதாகும். சேற்று அரண் என்பதும் ஒன்று உண்டு. அதுவும் இவற்றினுள் அடங்கும். அரண் செய்யும் இடம் கூறப்பட்டது; இயற்கை, செயற்கை ஆகிய இருவகையிலும் அரண்களது சிறப்பு கூறப்பட்டது; மதிற்புறத்து மறுநிலம் பகைவர் அரண் பற்றாமைப் பொருட்டு நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் எனக் கூறப்பட்ட இயற்கை செயற்கை அரண்களைக் கருதுக.

**743 உயர்வுஅகலம் திண்மை அருமை ...**

இக்குறட்பாவில் 'அருமை' என்பது நன்கு சிந்திக்கப்பட வேண்டியதாகும். பொறிகளால் அணுகுதற்கு அருமையுடையதாக இருத்தல் வேண்டும். அந்தந்தக் காலத்திற்கு ஏற்றபடி அறிவுடையார் அமைத்துக் கொள்வர் என்பது 'அருமை' என்பதனால் குறித்துக் காட்டப்பட்டது. நூலோர் கூறுகின்ற பலவற்றிலும் மேலானதை எடுத்துரைத்தல் ஆசிரியரின் மரபு. மிகமிக இன்றியமையாத உண்மை ஒன்றினை இக்குறட்பா கொண்டிருக்கிறது. உயர்வு, அகலம், திண்மை என்று சொல்லி 'அருமை' என்றும் கூறினார். உலகியல் அறிஞர்கட்கு ஒப்ப முடிந்த கருத்தாதலால் 'என்று உரைக்கும் நூல்' என்றார். பொதுப்பட அருமை என்று கூறியதால் அறிவின் முதிர்ச்சி வளர்ச்சி கொண்டு அவ்வக்காலங்களில் அரியவைகளைக் கண்டு அமைக்க வேண்டும் என்பதாயிற்று.

**744 சிறுகாப்பின் பேரிடத்தது ஆகி ...**

அரண் அமைந்திருக்க வேண்டிய அளவு முதலியனவற்றைப் பொதுவாகவும் சிறப்பாகவும் குறித்தார். 'ஊக்கமுடைமை' என்ற அதிகாரம் நினைவுப்படுத்தப்பட்டது. 'இடனறிதல்' அதிகாரத்தில் காணப்படும் கருத்துக்களையும் கருதிக் கொள்ளுதல் நல்லது. அரண் என்ற அதிகாரம் தாக்குகின்ற பகைவர்களை எதிர்த்து விரட்டுதல் என்பதனையே முதன்மையாகக் கொண்டு தெரிவிக்கின்றது. பகைவர்களின் மன எழுச்சியினைக் கெடுப்பதாக இருக்க வேண்டும். பிறவற்றினைக் காலத்தினால் அறிவு கொண்டு அமைத்தல் வேண்டும்.

**745 கொளற்குஅரிதாய்க் கொண்டகூழ்த்து ஆகி ...**

வந்து தாக்குகின்ற பகைவர்களிடமிருந்து தம்மைக் காத்துக் கொள்ளுகின்ற தன்மையினையே 'அரண்' என்ற அதிகாரம் பெரும்பான்மையாகக் கூறுகிறது. தான் படைமேற் சென்று தாக்குவதைப் பெரும்பாலும், வலியறிதல், காலமறிதல், இடமறிதல் என்ற அதிகாரங்கள் குறித்துக் காட்டுவன. இக்குறட்பாவில் 'அரிதாய்' என்பது சிந்திக்கத்தக்கது. அருமையானவை அறிஞர்கள் அவ்வக் காலத்தில் நுண்ணறிவால் கொண்டிருப்பவையாகும். 'அரியதாய்' என்றார் ; பொறிகளால் இடங்கொள்ள முடியாததாய் இருத்தல் வேண்டும். அகத்தார் விட்ட ஆயுதம் புறத்தார் மேல் செல்ல வேண்டும். பகைவர் விட்டவை அகத்தார் மேல் செல்லக்கூடாது. 'நிலைக்கு' என்பது இவைகளை எடுத்துக் காட்டின.

**746 எல்லாப் பொருளும் உடைத்தாய் ...**

தனது தலைவனிடத்தில் அன்பும், மானமும், மறமும், சோர்வின்மையும் முதலிய நற்குணங்கள் உடைமை பற்றி 'நல்லாள்' என்று கூறினார். நுகர வேண்டுவனவற்றையும் படைக்கலங்களையும் சேர்த்து 'எல்லாப் பொருளும்' என்று கூறினார். நாட்டுத் தலைவனாகிய மன்னனிடத்தில் அன்பு, மானம், மறம், சோர்வின்மை முதலிய நற்குணங்கள் உடைமை பற்றி 'நல்லாள்' என்றார். 'எல்லாப் பொருளும்' என்பது அத்துறையில் நிறைவு பெற்றவர்கள் கூறுகின்ற அனைத்துமாம்.

**747 முற்றியும் முற்றாது எறிந்தும் ...**

இக்குறட்பாவிலும் 'அரியது' என்று கூறினார். 'அருமை' (743), 'அரிதாய்' (745) என்று கூறியது போல, இங்கும் 'அரியது' என்றார். நுண்ணறிவால் அவ்வப்போது கொண்டுள்ளவற்றை இவ்வாறு கூறினார். 'அரியது அரண்' என்றதால் எல்லா வகையிலும் பகைவர்கள் கைக்கொள்ள முடியாததாயும் அருமையானவை பெற்றிருப்பதாயும் இருக்க வேண்டும் என்பதாம்.

**748 முற்றுஆற்றி முற்றி யவரையும் ...**

'பற்றாற்றிப் பற்றியார்' என்பது சிந்தனைக்குரியது. தாம் பற்றின இடம் விடாது வெல்லுதல் என்பதாம். அரண் அழிப்போம் என்றார்க்கு அருமையானதாகி, அரண் இருப்போம் என்பார்க்கு வெற்றி கொடுப்பது அரண் என்பதாகும். அரணுக்கும் அரணில் இருப்போர்க்கும் தலை சிறந்த உண்மை ஒன்று கூறப்பட்டது. அதுதான் 'பற்றியார் பற்று ஆற்றிவெல்வது அரண்' என்றார்.

**749 முனைமுகத்து மாற்றலர் சாய ...**

தொடக்கத்தில் கெட்டார், பின்னும் கூடிப் போர் செய்தல் கூடாமையின் 'முனை முகத்து—சாய' என்று கூறினார். போர் செய்யும் முறைகள் பல வகைகளைப் பொருத்ததாகும் என்பதனைக் குறிக்கவே, 'வினைமுகத்து வீறு எய்தி' என்றார். 'மாண்டது அமைச்சு' (631, 632) என்று கூறியது போல, இங்கு 'மாண்டது அரண்' என்று அமைத்தார். 'மாண்டது' பொதுவாக அனைத்தும் சிறப்பாக இருக்க வேண்டும் என்பதைக் குறித்தது.

**750 எனைமாட்சித்து ஆகியக் கண்ணும் ...**

'எனைமாட்சித்து ஆயினும் இல்' (52) என்பது போல, 'எனைமாட்சித்தாகிய கண்ணும்' என்று அமைத்துக் காட்டினார். செயல்புரியும் மறவர்களைப் பொருத்தே அரணுடைய சிறப்பு அமைந்துள்ளதென்பதனை உணர்த்தினார். அத்தகைய ஆற்றல் பெற்றவர்கள் இல்லையென்றால் அரண் இருந்தும், இல்லாததென்பதேயாகும். 'வினைமாட்சி' என்பது பன்முறை சிந்தித்தல் வேண்டுவதாகும். வாளா இருத்தலும், அளவறியாது செய்தலும், ஏலாதது செய்தலும் எல்லாம் அடங்க 'வினைமாட்சி இல்லார்' என்றார். அரணைக் காப்பவர்களே இன்றியமையாதவர்கள் என்பதாயிற்று.

## 76 பொருள் செயல்வகை

**751 பொருளல் லவரைப் பொருளாக ...**

அறிவில்லாதவர்களையும் மதிக்கப்படுவராகச் செய்வது பொருளாகும். 'பொருள் செயல்வகை' என்பது இந்த அதிகாரமாகும். மதிக்கப் படுதல் என்பது, அறிவுடையாரும் உயர்ந்தோரும் அவரிடம் சென்று நிற்கப் பண்ணுதலாகும். நான்கு முறை 'பொருள்' என்ற சொல் சொல்லப்பட்டிருப்பது சிந்திக்கத்தக்கதாகும். அறிவில்லாதார், இழிக்குலத்தோர் இன்னபிறவற்றைச் சார்ந்தவர்களைப் 'பொருளல்லவர்' என்றார். அறிவுடையாரும் உயர் குலத்தாரும் அவர்பால் சென்று நிற்கப் பண்ணுவதால் 'பொருளாகச் செய்யும்' என்றார்.

**752 இல்லாரை எல்லாரும் எள்ளுவர் ...**

'செய்வர் சிறப்பு' என்பதனால் அவரை உயரச் செய்து தாம் தாழ்ந்து நிற்றலாகும். 'எல்லாரும் எள்ளுவர்', 'எல்லாரும் செய்வர்' என்பது உலக நடைமுறையில் கண்டு தெளியப் பட வேண்டும். இகழ்தற் கண்ணும் தாழ்தற்கண்ணும் — பகைவர், நட்டார், நொதுமலர் என்னும் மூவரை யாரும் ஒத்தலின் யாவரும் என்றார்.

**753 பொருள்என்னும் பொய்யா விளக்கம் ...**

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல் பற்றிப் 'பொய்யா விளக்கம்' என்றும், ஏனைய விளக்கோடு இதனிடை வேற்றுமை தோன்ற 'எண்ணிய தேயத்துச் சென்று' என்றும் கூறினார். 'விளக்கம்' என்றதனால், 'இருள்' என்று கூறினார்.

**754 அறன்ஈனும் இன்பமும் ஈனும் ...**

அறத்தினையும் இன்பத்தினையும் பொருள் கொடுக்கும் என்று பொதுப்படக் கூறாமல், 'தீதின்றி வந்த பொருள்' என்றது சிந்திக்க வேண்டியதாகும். 'வெஃகாமை' 'கள்ளாமை' போன்ற அதிகாரங்களில் தீமையினால் வருகின்ற பொருள் கூறப்படும். 'திறன்' என்றது பொருள் செய்தற்குரிய நெறியாகும். தீய வழிகளில் பொருள் ஈட்டுவோர் பலருண்டு. நினைத்த இன்பமும் அறனும் பெற வேண்டும் என்றார். பொருள் ஈட்ட வேண்டிய முறையில் சேர்த்தல் வேண்டும். இதனைத் 'திறன் அறிந்து' என்று கூறினார்.

**755 அருளொடும் அன்பொடும் வாரா ...**

'அருளுடைமை', 'அன்புடைமை' என்ற அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. அவ்வாறு வாராத பொருளீட்டம் 660-ஆம் குறட்பாவில் கூறப்பட்டது போலாகும். நல்லவர்கள் 'புல்லார்' என்றும், 'புரள விடல்' வேண்டும் என்றும் கூறினார். நல்ல முறையில் வாராத பொருளீட்டம் பசுமண் கலத்தில் இட்ட நீர்போலச் செய்தானையும் கொண்டு இறத்தலின் அதனைப் புல்லார் என்று கூறி நிறுத்தாமல் 'புரளவிடல்' என்றும் கூறினார்.

**756 உறுபொருளும் உல்கு பொருளும்தன் ...**

வேந்தனுக்கு இயல்பாகவும் உரிமையாகவும் வரவேண்டிய வருவாய் முறை கூறப்பட்டது. இக்குறட்பாவில் நான்கு முறை 'பொருள்' கூறப்பட்டது. பொருவின் இன்றியமையாத்தன்மை குறிப்பால் உணர்த்தப்பட்டது. உறுபொருள் என்பது வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் நிலத்தின் கண் கிடந்து பின் கண்டெடுத்ததும், தாயத்தார் பெறாததுமாம் எனப்படும்.

**757 அருள்என்னும் அன்புஈன் குழவி ...**

அருளுடைமை, அன்புடைமை என்ற அதிகாரங்கள் குறிப்பால் கூறப்பட்டன. தொடர்பு பற்றாதே வருத்தமுற்றார்மேல் செல்வதாய அருள், தொடர்பு பற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்துழி உளதாவதாகலின், அதனை 'அன்பீன் குழவி' என்றார். வறுமையினை நீக்க

வல்லார்க்கு உதவுதலின் 'செவிலி' என்றார். அருள், பிறர் துன்பத்தினை நீக்கும் உயர்ந்த பண்பாகும். எல்லாப் பொருளும் உதவி வளர்த்தலின் 'செல்வச் செவிலி' என்றார்.

**758 குன்றுஏறி யானைப்போர் கண்டற்றால் ...**

குன்றேறியான் அச்சமும் வருத்தமும் இன்றி இருப்பான் என்பது கருதற்பாலதாகும். அது போலவே பொருள் வைத்துத் தொழில் புரிவோர் என்பதாம். பொருள் தன்னிடம் வைத்துக் கொண்டு செய்பவன் என்பதைக் குறிக்கவே, 'தன் கைத்து' என்று கூறினார். தொழில் செய்வதற்குப் பொருள் இன்றியமையாததாகும் என்பது உணர்த்தப்பட்டது. குன்றேறியான் அச்சமும் வருத்தமும் இன்றி நிலத்திடை யானைப் போர் காண்பான். 'ஆட்டுக் கடா' (தகர்) போரினைக் காலமறிதல் அதிகாரத்தில் காண்க.

**759 செய்க பொருளைச் செறுநர் ...**

பொருளினைச் செய்க என்று கூறியது சிந்திக்கத் தக்கதாகும். பொருள் ஈட்டுகின்ற நெறி முறைகளைப் புதிது புதிதாக நாமே கண்டறிய வேண்டும் என்பதாம். பிறர் கொடுத்து ஊதியம் பெறுவதால் செல்வப் பெருக்கம் உண்டாகாது. பொருள் என்னும் எஃகு அருவப் பொருளை அறுக்கும் ஆதலால் 'அதனின் கூரியது இல்' என்றார். உலகியலில் காணப்படும் எஃகு, உருவப் பொருளைத்தான் அறுக்கும். 'படைச் செருக்கு' என்று ஓர் அதிகாரம் உண்டு. செருக்கு அடக்கும் என்னாது 'அறுக்கும்' என்றார். ஏனைய எஃகுகள் அது போல அருவப் பொருள்களை அறுக்க மாட்டாமையின் அதனிற் கூரியது இல் என்றார்.

**760 ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு ...**

நல்வழியில் வருகின்ற பொருள் 'ஒண்பொருள்' எனப்பட்டது. 754-ஆவது குறட்பா மேலும் விளக்கம் பெறுகின்றது. 'எளிய பொருள்களாம்' என்பதனை 'எண்பொருள்' என்றார். 'எண் குணத்தான் (9), 'எண் பொருளவாக' (424) என்பன போன்று வருபவற்றைச் சிந்தித்தறிக. 'செய்க' என்று முந்தைய குறட்பாவில் கூறியதை 'இயற்றியார்' என்பது விளக்குவதாகும். பயன் கொடுத்தே தீரும் என்பதால் 'ஒண்பொருள்' என்றார். ஏனைய இரண்டும் அதன் விளைவு ஆகலின் 'எண்பொருள்' என்றார்.

## 77 படைமாட்சி

**761 உறுப்புஅமைந்து ஊறுஅஞ்சா வெல்படை ...**

'இறைமாட்சி' என்ற அதிகாரத்தின் முதற்குறட்பா 'படை' என்று தொடங்குவதற்கேற்ப இங்கும் 'எல்லாம் தலை' என்று முதன்மையாக வைத்துக் கூறினார். துன்பங்களுக்கு அஞ்சக் கூடாதென்பதனைக் குறிக்கவே 'ஊறு அஞ்சா' என்றார். நாட்டுக்கும் அரசனுக்கும் அதுவே, அப்படையே காவல்ஆதலின் 'வெறுக்கையுள் எல்லாம் தலை' என்றார். 'படைமாட்சி' என்ற இந்த அதிகாரமும் 'படைச் செருக்கு' என்ற அடுத்த அதிகாரமும் படைகளின் நன்மையினையும் சிறப்பினையும் கூறுவன. ஊறு அஞ்சிய வழி வெல்லுதல் கூடாமையின், ஊறு

அஞ்சா' என்றார். எல்லா அங்கங்கட்கும் மன்னனுக்கும் காவலாகலின் 'வெறுக்கையுள் எல்லாம் தலை' என்று கூறினார்.

**762 உலைவிடத்து ஊறுஅஞ்சா வன்கண் ...**

மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்பதாகப் படைகள் பலவகைப்படும். மூலப்படையின் சிறப்பினைத் தனியாக எடுத்துரைத்தார். முந்தைய குறட்பாவில் கூறியதுபோல இங்கும் 'ஊறு அஞ்சா' என்றார்.

**763 ஒலித்தக்கால் என்னாம் உவரி ...**

வீரர் அல்லாதார் பலரினும் வீரன் ஒருவனை ஆளுதல் நன்று என்பதாம். எண்ணிக்கையினைவிட ஆற்றல் மிகுதியே சிறப்பெனக் கூறப்பட்டது. வீரர் அல்லாதார் பலரினும் வீரன் ஒருவனைப் பெற்றிருப்பதே மேலானதாகும். 'ஒலித்தக்கால்' என்பதனையும் 'உயிர்ப்ப' என்பதனையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பாம்பிற்கு செவி கிடையாது என்பதும் அதைக் 'கட்செவி' என்பதும் சிந்திக்கத்தக்கது.

**764 அழிவின்று அறைபோகாது ஆகி ...**

தொல்படை (762) என்று கூறிய கருத்து மேலும் விளக்கம் பெறுகின்றது. அழிவின்மையான் மறமானங்கள் உடைமையும், அறைபோகாமையான் 'அரசன்மாட்டு அன்புடைமையும் பெறப்பட்டன; 'வன்கண்' — சிந்தனைக் குரியது.

மறமும் மானமும் உடைமைபற்றி 'அழிவின்றி' என்று கூறினார். அளவு மீறிய நாட்டுப்பற்றும் மன்னன் பற்றும் இருக்கும் படை அறை போகாது. வீரர்கள் வழிவந்த வீரர்கள் நிறைந்திருக்கும் படை சிறந்த படையாகும்.

**765 கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி ...**

போர்க்களத்தில் இறப்பதற்கு அஞ்சாத வீரர்களைப் பற்றியதாகும். வெற்றியே அவர்களுடைய நோக்கமாகும். 'கூற்றுவன்' வந்தான் என்றால் இறப்பது உறுதி என்பது தெளிவு. எனினும் போர் செய்யத் தயங்காதவர்கள் என்பதாம். 'தற்கொலைப்படை' என்று இதனைக் கூறுவதும் உண்டு. வெற்றிக்கே பாடுபடுவர்; உயிருக்காக அல்ல என்பதாம். வீரர்களின் உயர்ந்த மனத்துணிவு கூறப்பட்டது. நாட்டினைக் காப்பாற்ற தற்கொலைப் படையும் இருக்க வேண்டும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

**766 மறம்மானம் மாண்ட வழிச்செலவு ..**

'மானம்', 'படைச்செருக்கு' முதலிய அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. இதனால் பாதுகாப்பு நிறைந்த படைக்கு இலக்கணம் கூறப்பட்டது. இவைகளால் முறையே பகைவரைக் கடிதிற்கொன்று நிற்றலும், அரசனுக்குத் தாழ்வு வாராமல் காத்தலும் உணர்த்தப்பட்டது. இதனைக் கண்டு பகைவர் நாணமுறுவர்.

**767 தார்தாங்கிச் செல்வது தானை ...**

படைகளை அமைக்கும் முறையினையும் நடத்திச் செல்லும் நெறியினையும் பொதுப் படவும் சுருக்கமாகவும் கூறினார். அவ்வப்போது நிலைமைகளுக்கு ஏற்பப் படைத்தலைவர்கள் செறிந்த அறிவுகொண்டு செய்தல் வேண்டும் என்றார். படை வகைகளும் அமைத்து நிற்கும் வகைகளும் குறிக்கப்பட்டன. தன்மீது வந்த பகைவர் போரினை விளைக்கும் வகுப்பு அறிந்து வகுத்துக் கொள்ளுவதைத் 'தன்மை அறிந்து' என்றார்.

**768 அடல்தகையும் ஆற்றலும் இல்எனினும் ...**

சேனைக்குத் தோற்றப் பொலிவு மிகவும் இன்றியமையாதது என்று கூறப்பட்டது. கண்ட அளவிலேயே பகைவர் அஞ்சுவர் என்பதைக் குறிக்கவே 'பாடு' என்றார். 'இல்லெனினும்' என்றதன் 'உம்'மை, அடற்றகையும் ஆற்றலும் இன்றியமையாததென்பதை உணர்த்திற்று. 'இல்லெனினும்' என்றதால் அவைகளின் இன்றியமையாத் தன்மை உணர்த்தப்பட்டது. படைகளுக்குத் தோற்றப் பொலிவும் மிகுதியும் வேண்டும் என்பதாயிற்று. ஆற்றல் நிரம்ப இல்லையென்று தளரக்கூடாது என்பது குறிப்பு.

**769 சிறுமையும் செல்லாத் துனியும் ...**

படைக்கு இருக்கக்கூடாத தீமையான குறைகள் எடுத்துக் கூறப்பட்டன. வறுமை என்பது 'நல்குரவு' என்னும் அதிகாரத்தினை நினைவுபடுத்துகிறது. மகளிரைக் கவருதல், இளி வரவாயின செய்தல் முதலியன 'செல்லாத்துனி' எனபதால் குறிக்கப்பட்டன. வெறுப் புணர்ச்சியினைத் 'துனி' குறித்தது. இக்குறளில் மன்னர் கொடுக்க வேண்டிய பொருள் தாராமையால் உண்டாகும் தீமைகள் கூறப்பட்டன.

**770 நிலைமக்கள் சால உடைத்துஎனினும் ...**

சேனைத் தலைவர்கள் இல்லையென்றால் சேனைகளினால் பயனில்லையென்பது கூறப் பட்டது. 'தலைமக்கள்' இன்றியமையாதவர்களாவார்கள். தானையினை நடத்துபவர்களே தலைமக்கள் என்பதாயிற்று. படைத்தலைவர் நிலையாக இல்லாமற் போனால், காண்போர் இல்லை யென்றெண்ணித் தாமும் போய்விடுவர் என்பதால் தலைமக்கள் இல்வழி இல் என்றார். நிலைமக்கள் எவ்வளவு தேவையோ அவ்வளவு இன்றியமையாத் தன்மையுடையோர் 'தலை மக்கள்' என்பதாயிற்று.

## 78 படைச் செருக்கு

**771 என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் ...**

'கல்', என்பது 'நடுகல்' ஆகும். தலைவன் எதிரே நின்று இறந்துபட்டவர்கள் பல பேருண்டு என்பது குறித்துக் காட்டப்பெற்றது; போர்வீரன் போர்க்குரல் உரைக்கப்பட்டது.

ஐ — தலைவன், 'என்ஐ'யெனத் தன்னொடு தொடர்பு படுத்திக் கூறியதால் அவன் வேல் வாய் வீழ்தல் பெற்றாம். ஒரு வீரன் மறம் அரசன் மேல் வைத்துக் கூறியவாறு.

**772 கான முயல்எய்த அம்பினில் ...**

'எய்த அம்பு', 'பிழைத்தவேல்' என்பன சிந்தித்தறிய வேண்டுவன. வீரனுக்கு இருக்க வேண்டிய ஊக்கமிகுதி எடுத்துக் காட்டப்பட்டது. எண்ணம் உயர்ந்ததாக இருக்க வேண்டும்; பெரிய வெற்றியினையே நாடுதல் வேண்டும் என்பது குறிப்பாயிற்று.

மாற்றரசன் படையொடு பொருத ஒரு வீரன் புறங் கொடுத்ததாக நாணிப் பின் அவன் மேற்செல்லலுற்றான் கூறியதாகும். கானமுயல் என்பது ஓடிய முயல் என்பதாயிற்று. 'யானை' என்றதால் தரிசு நிலத்தில் நின்ற யானை என்பது பெற்றாம்.

**773 பேராண்மை என்ப தறுகண்ஒன்று...**

பேராண்மையும் ஊராண்மையும் தெளிவு படுத்தப்பட்டன. போர் வீரர்களுக்கு இருக்க வேண்டிய உயர்ந்த பண்பாடு பொதுப்படக் கூறப்பட்டது. 'ஒன்று உற்றக்கால்' என்பது சிந்தனைக்குரிய செய்தியினைக் குறித்தது. 'எஃகு அதனில்' (759) என்று கூறியது போல் இங்கும் 'அதன் எஃகு' என்று கூறினார். அதிகாரம் 'படைச்செருக்கு' ஆனதால் வீரத்தின் மிகுதியையே குறிப்பிடுகின்றார்.

**774 கைவேல் களிற்றொடு போக்கி ...**

போர் வீரனின் உயர்ந்த வீர மிகுதி எடுத்துக் காட்டப்பட்டது. துணிவும் மறத் தன்மையும் நிறைந்தவன் என்பது எடுத்துக் காட்டப்பட்டது. வீர மிகுதியைப் பற்றிக் கூறப் பட்ட கருத்தே சிந்தித்தறிய வேண்டுவதாகும். காலத்தினால் போர் முறைகள் மாறுபடும் என்பது உணரத் தக்கது. செய்திதான் அறிந்து கொள்ளப்பட வேண்டியதேயல்லாமல், அதனை வெளிப்படுத்த எடுத்துக்கொண்ட கருவியைக் கருதவேண்டியதில்லை; அது காலத்தினாலும் இடத்தினாலும் மாறும் தன்மையுடையது என்பதைக் கருதுக.

'போக்கி' என்பது களிற்றினது உயிரைக் கொகு போகுமாறு விடுதல். மகிழ்ந்தான் என்பதனை 'நகும்' என்றார். தேடியது கிடைத்ததால் மகிழ்ந்தான். போரில் பயன்படுத்தப் படுபவை காலத்தின் அமைப்பாகும். நாம் தெரிந்து கொள்ள வேண்டியது, என்றென்றும் சிறந்திருக்க வேண்டிய மனவெழுச்சியும் வீரமும் ஆகும். இதனையே ஆசிரியர் வற்புறுத்தினார்.

**775 விழித்தகண் வேல்கொண்டு எறிய ...**

மிகச் சிறந்த உயர்வான வீரப்பண்பாடு புலப்படுத்தப்பட்டது 'இமைக்காது கண்கள்' என்ற கருத்து வீரனின் அரிய நிலைமையினை உணர்த்திற்று. அவ்வீரனின் தோற்றத்தினைக் கண்ட மாத்திரத்திலேயே பகைவர் அஞ்சி நடுங்குவர் என்பது குறிப்பாகும். மனத்தில் நிலைத்து நிற்கும் வீரத்தின் உயர்ச்சியினைக் கூறினார். போர்க் கருவிகள் காலத்தினால் மாறுபவை களாகும். அவைகளைப் பயன்படுத்திக் கொண்டு என்றும் நிலைத்த வீரத்தினை 'வன்கணவர்' எனும் சொல் மூலம் உணர்த்தினார்,

**776 விழுப்புண் படாதநாள் எல்லாம் ...**

முகத்திலும் மார்பிலும் பட்ட புண்கள் விழுப்புண்கள் எனப்படும். இக்குறளில் போர் வீரனின் பேராற்றல் விளக்கப்பட்டது. 'வழுக்கினுள்' என்பது சிந்தனைக்குரியதாகும். நாள்தோறும் போர் செய்யும் எண்ணங் கொண்டவன் என்பதாம்.

முகத்திலும் மார்பிலும் பட்ட புண்கள் விழுப்புண்கள் எனப்படும். போர் பெற்றிருக்கவும் அது பெறாத நாள்களோடும் கூட்டும் என்பதாகும். சுத்த வீரனுடைய இலக்கணம் கூறப்பட்டது.

**777 சுழலும் இசைவேண்டி வேண்டா ...**

'புகழ்' என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'சுழலும்' என்பதால் அதன் பெருமை விளங்கும்; புகழை விரும்பி உயிரை விரும்பாதவர்கள் என்பது கருத்து. 'கழல்' என்பது போர் வீரர்கள் தமது தலைசிறந்த வீரத்திற்குப் பெறுகின்ற அடையாளமாகும். அந்தக் காலத்திற்கேற்றபடி வீரர்கள் பாராட்டப் படுவார்கள். வீரப்பதக்கம் அணிவது உண்டு. 'சுழலும் இசை' என்பதனால் அதன் அருமை பெருமை கூறப்பட்டது. வீரக்கழல் கட்டுவதைக் 'கழல்யாப்பு' என்றார். வீரர்கள் உயிரையும் வேண்டார் என்பர். புகழினையே வேண்டுவர் என்பதாம். சிறந்த வீரர்கட்குப் பட்டமளித்தல் எப்போதும் உண்டு; வீரச்சின்னங்கள் அளிப்பதுண்டு.

**778 உறின்உயிர் அஞ்சா மறவர் ...**

நாட்டுத் தலைவனான வேந்தனை இறைவன் என்று குறித்தார். மறவர்களின் வீரப்பண்பு எடுத்துக் காட்டப்பட்டது. 'இறைவன் செறினும்' என்று குறித்துக் காட்டியது சிந்திக்கத்தக்கதாகும். 'உயிர் அஞ்சா மறவர்' என்று கூறினார். தலைவனான மன்னனை 'இறைவன்' என்றார். போரின் மீது அவ்வளவு ஆவல் என்பது குறிக்கப்பட்டது. மறவர் எனப்படுவோர் உயிருக்கு அஞ்சாதவர்களாவார்கள்.

**779 இழைத்தது இகவாமைச் சாவாரை ...**

இழைத்தல் என்பது, இன்னது செய்யேனாயின் இன்னனாவேன் எனத்தான் வகுத்தலாம். வஞ்சின முடிப்பான் என்பதாகும். சாதலின் சிறப்பு மெய்ப்பிக்கப்பட்டது. இன்னது செய்யேனாயின் இன்னனாவேன் எனத் தான் வகுத்துக் கொள்ளுதலை 'இழைத்தது' என்றார். வஞ்சின முடிப்பான் போர்க்களம் புகுவதற்கு முன்னே சாவினும் தொலைவு அன்மையின், அது முடித்தார் அவர் எனச் சாதற் சிறப்புக் கூறியவாறு.

**780 புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் ...**

போரில் இறக்கும் மாவீரனின் சிறப்பு விளக்கப்பட்டது. நோயால் இழிவுற்றுச் சாகாமல் போர் வீரனாக மடிவதால், அத்தகைய சாக்காடு யாசித்தும் கொள்ளத்தகுந்தது என்றார். 'விற்றுக்கோள் தக்கது உடைத்து' (220) என்று சொல்லுகின்ற முறையில் 'இரந்து கோள் தக்கது உடைத்து' என்று கூறினார். இல்லிடை நோயால் இறப்பதைவிடப் போரில் இறப்பது பெருஞ் சிறப்புடையதாகும்.

## 79 நட்பு

**781 செயற்குஅரிய யாவுள நட்பின் ...**

நல்ல நண்பர்களை நல்ல பாதுகாப்பு என்று குறித்தார். வினாமுறையில் கருத்து அமைத்துக் காட்டப்பட்டது. நண்பர்களின் அரியகுணம் கூறப்பட்டது. பகைவர் செய்யும் வினைக்கு அரிய காவலாகும். 'பெருந்தக்க யாவுள' (54) என்பது போன்று அமைந்துள்ள வற்றையும் சிந்தித்தறிக. நட்பு செய்தற்கு ஆவாரைப் பெறுதலும், பெற்றால் செய்யும் உபாயமும், செய்தால் திரிபின்றி நிற்றலும் முதலிய அரியன ஆகலின் நட்பின் செயற்கு அரியன 'இல்லை' என்றார். மன்னர்கட்குப் பகைவர்களைத் தோற்கடித்தலே முதன்மையான தொழிலும் செயலும் ஆதலால், கருத்துகளெல்லாம் சிறப்பாகக் காவலர்கட்கும் பொதுவாக அனைவர்க்கும் கொள்ளப்படுதல் வேண்டும்.

**782 நிறைநீர நீரவர் கேண்மை ...**

இனிமை பற்றி 'நீரவர்' என்று கூறினார். 'பேதைமை' என்ற அதிகாரம் குறிக்கப் பட்டது. 'அறிவுடையாரும், அறிவுடையாரும்' செய்த நட்பு முன்சுருங்கிப் பின் பெருகும். பேதையர் நட்பு அதற்கு மாறாக இருக்கும் என்பதாம்.

உலகியல் வாழ்வில் நண்பர்கள் நிலை கூறப்பட்டது. உலகிற்குப் பொதுப்பட எங்கும் என்றும் நிகழ்வனவாகிய நட்பினைக் கூற வந்தவர், உலகப் பொதுவான மதியைக் கூறினார்.

**783 நவில்தொறும் நூல்நயம் போலும் ...**

'கல்வி', 'பண்புடைமை' முதலிய அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. நயத்தினைச் செய்தலால் நயம் எனப்பட்டது. இருவகைகளிலும் ஒருகாலைக் கொருகால் மிகுந்து வரும் என்பதாகும். நல்லோருடைய நட்பின் தன்மை கூறப்பட்டது. கற்கக் கற்கத்தான் நயம் தெரியும் என்பது கருத்தாயிற்று. ஆதலால்தான் 'சாந்துணையும் கல்லாதவாறு' (397) என்றும் கூறினார்.

**784 நகுதற் பொருட்டன்று நட்டல் ...**

நண்பனின் கடமை நன்கு எடுத்துக் காட்டப்பட்டது. 'நகை வகையராகிய' (817) என்பதனையும் சிந்தித்தறிதல் வேண்டும். நட்பு செய்வதன் கருத்து உரைக்கப்பட்டது.

'இடிக்கும் துணையாரை' (447), 'இடிப்பாரை இல்லாத' (448) என்பவை சிந்தித்தற் குரியன. பழியும் பாவமும் தரும் செய்கை துன்பமே பயத்தலால் வேண்டப்படுவன அல்ல என்பதனை 'மிகுதி' என்றார். இன்சொல் பயன் தராவிட்டால் 'இடித்தல்' என்றும் கூறினார்.

**785 புணர்ச்சி பழகுதல் வேண்டா ...**

'மனத்தானாம் மாந்தர்க்கு உணர்ச்சி' (453) என்பதனைச் சிந்திக்கவும். நட்பின் அருமை 'பழகுதல் வேண்டா' என்பதனால் எடுத்துக் காட்டப்பட்டது. 'மனத்தின்

அமையாதவரை' (825) என்பது போன்றவை சிந்தனைக்குரியன. நட்பு என்பதனை உரிமை என்று சுட்டிக் காட்டினார். நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி ஒத்தல் என்னும் காரணம் மூன்றனுள்ளும் பின்னது சிறப்புடையது என்பது இதனால் கூறப்பட்டது.

**786 முகநக நட்பது நட்புஅன்று ...**

நெஞ்சின்கண் நிகழ்வதனை நெஞ்சு என்றார். முகமும் அகமும் ஒருங்கே மலர வேண்டும் என்பது இதன் கருத்தாகும். 'நட்பது நட்பன்று, 'நட்பது நட்பு' என்பதனைச் சிந்தித்தறிக. குறட்பா (830) ஐச் சிந்தித்தறியவும்.

**787 அழிவின் அவைநீக்கி ஆறுஉய்த்து ...**

நண்பனானவன் செய்ய வேண்டிய கடமைகள் நன்கு கூறப்பட்டன. 'அல்லல் உழப்பது' என்பது சீரிய நட்பிற்கு அடையாளமாகும் என்பதாம்; கற்றறிந்த நல்லவர் களுடனே தான் நட்பு செய்தல் வேண்டும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. முதற் குறட்பாவில் (781) காப்பு என்று கூறியது விளக்கப்பட்டது.

நீக்குதல், ஆறு உய்த்தல், அல்லல் உழத்தல் என்பவைகளெல்லாம் உண்மையான நண்பனுக்கு இலக்கணமானவைகளாகும். 'சென்ற இடத்தால்' (422) என்பதனையும் சிந்தித்தறிதல் நலம் பயக்கும்.

**788 உடுக்கை இழந்தவன் கைபோல ...**

நட்பின் இலக்கணம் தெளிவுபடுத்தப்பட்டது. கை தனது மனத்தினும் முற்பட்டு உதவுவதாகும். விரைந்து செல்லல் சிந்திக்கத்தக்கது. உடை நழுவினவனுடைய கை கடிது பற்றித் தாங்கிக் கொண்டாற்போல, அப்பொழுதே அவ்விடுக்கண் களைதல் வேண்டும் என்பதாகும். 'இடுக்கணழியாமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. அற்றம் காத்தற் பொருட்டு கை தன் மனத்தினும் முற்படுதலின், அவ்விரைவு இடுக்கண் களைவதற்கும் இருத்தல் வேண்டும் என்பதாம். உடுக்கை இழத்தலே பெரிய இடுக்கண் என்பது கருதற் பாலது. 'இழந்தவன்' என்பது ஆடை குலைந்தவன் என்பதாகும்.

**789 நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் ...**

நட்பு என்பது நண்பனுக்கு ஏற்ற காலத்தில் எல்லாம் உதவி செய்தலேயாகும் என்ற உண்மை விளக்கப்பட்டது. 'ஒல்லும் வாய்' என்பது கருதற்பாலதாகும். 'ஊன்று நிலை' என்றதால் தளர்ச்சியின்றி உதவுதல் வேண்டும் என்பதாகும். ஒரு ஞான்றும் வேறு படாது மறுமை இம்மைகட்கு உறுதியாய அறம் பொருள்களில் தளர்ந்துழி, அத்தளர்ச்சி நீக்கி அவற்றின்கண் நிறுத்துதற்கு மேல் ஒரு செயலும் இன்மையின், அதனை நட்பிற்கு முடிந்த எல்லை என்றார்.

**790 இனையர் இவர்எமக்கு இன் ...**

"நாம், அவர் என்ற வேற்றுமையில்லை'' என்று பேசினாலும் வேற்றுமையுண்டாகி விடுதலால் 'நட்பும் புல்லென்னும்' என்று கூறினார். இவர் நமக்கு இத்தன்மையர், யாமும்

இவர்க்கு இத்தன்மையோம் என்று பேணிச் சொல்லினும் நட்பு வாடும்; ஆதலால் நட்பினைத் தன்னைத்தான் நினைக்குமாறு போல நினைக்க என்பதாம். இருவரும் அனைத்திலும்— எல்லாவற்றினும் — இன்பம் துன்பம் இரண்டிலும் ஒன்றாகவே இருத்தல் வேண்டும் என்பது நட்பிற்கு இலக்கணமாகும். வேறுபடுத்திப் பேசுதல் நட்பிற்கு இழுக்காகுமாம்.

## 80 நட்பு ஆராய்தல்

### 791 நாடாது நட்டலின் கேடுஇல்லை ...

குணம் செய்கைகளது நன்மையை ஆராய்தல் என்பதாகும். நட்புச் செய்தபின் விடுதல் என்பதே இல்லையாம். நட்டலின், நட்டபின், நட்பாள்வர் என்பன சிந்தித்தறிய வேண்டுவன. ஆராய்ந்து பார்க்காமல் நண்பனாகாதே என்றார். என்றென்றும் நிலைத்து நின்று பயன்படுவது நட்பாகும்.

### 792 ஆய்ந்துஆய்ந்து கொள்ளாதான் கேண்மை ...

தீய குணமும் செயலும் உள்ளவனோடு நட்புச் செய்தால் அவனுக்கு வரும் பகைமையெல்லாம் தனக்கு வந்து தான் இறக்கும் நிலையினையும் உண்டாக்கிவிடுமாம். இருமுறை 'ஆய்ந்து ஆய்ந்து' என்று கூறினார். 'கடைமுறை', 'சாம்துயரம்' என்பன சிந்திக்க வேண்டியன வாகும். குணமும் செய்தலும் தீயானோடு கொள்ளின் அதற்கு வரும் பகைமை எல்லாம் தன் மேலவாய்ப் பின் அவற்றான் இறப்பு வரும் நிலையும் உண்டாகக்கூடும். மாற்றார் கொடுக்காத துன்பம் ஆராய்ந்து செய்யாத நட்பினால்—தீயவை வந்துவிடும் என்பதாம்.

### 793 குணனும் குடிமையும் குற்றமும் ...

'பண்புடைமை', 'குடிமை', 'குற்றங்கடிதல்', 'சுற்றந்தழால்' முதலிய அதிகாரங்கள் குறிப்பால் உணர்த்தப்பட்டன. 'அறிந்து யாக்க' என்பது நன்கு சிந்திக்கப்பட வேண்டியது.

### 794 குடிப்பிறந்து தன்கண் பழிநாணு ....

'குடிமை', 'நாணுடைமை' என்ற அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. காமத்துப் பாலில் 'நாணுத்துறவுரைத்தல்' என்றோர் அதிகாரமும் உண்டு. அது வேறு; மேலோர்கள் வந்த குடிப்பிறப்பால் தான் பிழை செய்யாமையும், பழியை அஞ்சுவான் பிழைத்தன பொறுத் தலும் பெற்றாம். இவ்விரண்டும் உடையானைப் பெறுதல் அருமையானபடியால், அவன் நட்பை விலை கொடுத்தும் கொள்க என்றார். 'மாணாத செய்வான் பகை' (867) என்பது போன்று அமைக்கப்பட்ட குறட்பாக்களில் இதுவும் ஒன்றாகும்.

**795 அழச்சொல்லி அல்லது இடித்து ...**

அழச்சொல்லி, இடித்து என்பன குற்றமான செயல்கள் புரியும்போது என்பதைக் குறிப்பால் உணர்த்தின. 'இடித்து' என்பது 'பெரியாரைத் துணைக்கோடல்' என்ற அதிகாரத்தில் விளக்கப்படுதல் காண்க. வழக்கு என்பது உலகத்தார் அவ்வாறு செய்து போந்த செயல் என்பதாம். 'வழக்கறிய வல்லார்' நட்பு அருமையானது என்பது பெற்றாம். 792-ஆவது குறட்பாவில் கூறியதுபோல இங்கும் 'ஆய்ந்து கொளல்' என்றார். 'வழக்கு அறிய வல்லார்' என்பதைத் தனிப்படுத்திக் காட்டினார்.

**796 கேட்டினும் உண்டுஓர் உறுதி ...**

செல்வக் காலத்திலும் கேடு வந்துற்ற காலத்திலும் அளந்து பார்ப்பதற்கு உதவுவதால் 'கோல்' எனப்பட்டது; கெடுதி உண்டாவதும் நல்லதுதான் என்பதும் உணர்த்தப்பட்டது. 'கிளைஞர்' என்பது நண்பர்களையும் சுற்றத்தார்களையும் குறித்து நின்றதாகும். 'நீட்டி அளப்பது' என்றார். கேடு வந்தால் வருந்துதல் உலக இயல்பு. ஆசிரியர் அத்தகைய கேட்டிலும் நாம் பெற்றுக்கொள்வதோர் நல்லறிவு உண்டு என்று உணர்த்தினார்.

**797 ஊதியம் என்பது ஒருவற்கு ...**

'பேதைமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. அறிவில்லாதாரோடு நட்புச் செய்தல் கெடுதிக்கு இடமளிக்கும் ஆதலால் அவர்கள் நட்பினை விட்டுவிடுதல் 'ஊதியம்' எனப் பட்டது. 'ஒழித்து நீக்குதல்' என்பதையே 'ஒரீஇவிடல்' என்றார். ஒருவற்கு வருவதைத் தான் ஊதியம் என்பார்கள். இங்கு ஒருவனை விட்டு மற்றவன் நீங்குவதே ஊதியம் என்றார். 'பெரிதினிது' (839) என்பதும் சிந்திக்கத்தக்கதுதான்.

**798 உள்ளற்க உள்ளம் சிறுகுவ ...**

'உள்ளம் சிறுகுவ' என்பது தம்மின் வலியாரோடு எதிர்த்தலும், பயனில்லாதனவும் என்பனவாம்; 'ஆற்றறுப்பார்' என்பதும் 'அல்லல் உழப்பதாம்' (787) என்பதும் சிந்தித்தறிய வேண்டுவன. 'உள்ளம் உடைமை உடைமை' (592) என்ற பொருளில் இக்குறட்பாவில் 'உள்ளம்' என்ற சொல் அமைக்கப்பட்டது.

**799 கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை ...**

அப்படிப்பட்ட கொடியவன் செய்வினை உயிர் போகுங்காலத்தில் நினைத்தாலும், உயிர்போகும் துன்பத்தினை விடவும் கொடுமையாக இருக்கும் என்பதாகும். தான் கெட்ட காலத்தில் தன்னைவிட்டு ஓடுகின்ற நண்பனே மிகக் கொடியவனாவான். நல்லவன் என்று எண்ணிச் செய்த நட்பு கொடுமையானதைக் குறிப்பிட்டார். அவன் தனக்குச் செய்த கேடு அடுங்காலை உள்ளினும் உள்ளம் சுடும் என்றார்.

**800 மருவுக மாசற்றார் கேண்மைஒன்று...**

'மருவுக', 'ஒருவுக' என்பன சிந்திக்கத்தக்கன. உலகோடு ஒத்தார் நட்பு இருமை இன்பமும் பயக்கும் என்பதாகும். ஏதேனும் கொடுத்தாகிலும் தீயவர்கள் நட்பினை நீக்கி ஒழித்து விடுக என்று உணர்த்தினார்.

கெட்டவர்களிடம் நட்பு கொண்டுவிட்டால் அவர்கள் சீக்கிரம் நம்மைவிட்டுப் போக மாட்டார்கள் என்ற குறிப்பினைக் கூறினார். வாங்குவதற்குத்தான் கொடுப்பது வழக்கம்; விரட்டுவதற்கும் கொடுக்க வேண்டும் என்றார்.

## 81 பழைமை

**801 பழைமை எனப்படுவது யாதுஎனின் ...**

கிழமையென்பதும் கெழுதகைமை என்பதும் ஒன்றேயாகும். நண்பர்களுக்கு உரிமைகள் உண்டு என்று கூறினார். அவ்வாறு சில நேரங்களில் நண்பர்கள் உரிமையால் தாம் வருந்துவன செய்தாலும் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும். அதுவே 'பழைமை' என்பதாம். மிகப் பழமையான நண்பர்கள் உரிமையால் சில செய்து விடுவார்கள். சில நேரங்களில் கசப்பாகவும் இருக்கும். எனினும், உடன்படத்தான் வேண்டும். இத்தகைய கருத்துக்களை 'பழைமை' என்ற அதிகாரம் சொல்லுகிறது.

**802 நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை ...**

'சான்றாண்மை' அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. நட்பில் வேறுபாடு இல்லாததால் 'உறுப்பு' என்றார். 'கடன் என்ப' (981) சிந்தித்தறிக. 'உப்பு' இனிமை யென்பதாம். 'உப்பமைந்தற்றால்' (1302) என்பதையும் சிந்திக்கவும். கெழுதகைமைக்கும் காலமும் இடமும் கருதுதல் வேண்டும் என்பதனை 700ஆவது குறட்பா உணர்த்துகிறது. நண்பர் கேளாது செய்தல், கெடும்வகை செய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், பணிவு அச்சங்கள் இன்மை—இவைகளுக்குக் 'கெழுதகைமை' என்று பெயர். பழைமை எனக் கருதி உரிமையால் நண்பர்கள் துன்பம் செய்தால் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

**803 பழகிய நட்புஎவன் செய்யும் ...**

வினாமுறையில் கருத்தினை அமைத்துக் காட்டினார். தாம் இசைவில்லாதவற்றைச் செய்தாலும் உரிமை கருதி அவனோடு பழைமை கருதிப் பழகுதல் வேண்டும் என்பது கூறப்பட்டது. செய்தாற்போல உடம்படுதலாவது, தாமும் அவரிடத்து உரிமையால் உடம் படுதலாகும். 'பழகிய நட்பு' என்பதனைக் கெழுதகைமை என்ற சொல்லால் விளக்கினார்.

**804 விழைதகையான் வேண்டி இருப்பர் ...**

கேளாது செய்வதும் கெழுதகைமை எனப்படும். 'வேண்டியிருப்பர்' என்பது அறிவு நிறைந்த நண்பர்களைக் குறித்ததாயிற்று. நட்டாரின் உரிமைகள் பலவுண்டு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. ஒருவர்க்குத் தம் கருமம் தாம் அறியாமல் முடிந்திருத்தலின்,

அதனை அவ்வாறு அறிந்து கெழுதகைமையால் விரும்புதல் அறிவுடையார்க் கல்லது இன்மையின், அவர்மேல் வைத்துக் கூறினார்.

**805 பேதைமை ஒன்றோ பெருங்கிழமை ...**

இரண்டு காரணங்கள் கூறப்பட்டன. 'பேதைமை' அதிகாரம் குறிக்கப்பட்டது. 'செயின்' என்பதால், இயல்பாகச் செய்ய மாட்டார்கள் என்பதாகும். நண்பர்கள் மனம் நோகச் செய்து விட்டால் அன்பில்லாமல் செய்தார்கள் என்று கருதிவிடுதல் கூடாது. பழைய நண்பர்கள் கெடுதி செய்தாலும் அதற்கு இரண்டு காரணங்கள் கூறப்பட்டன. அப்படி நினைக்காமல், அன்பின்மை என்று கொள்ளப்படாது; அன்பு உண்டு என்று கருதல் வேண்டும்.

**806 எல்லைக்கண் நின்றார் துறவார் ...**

நட்பின் தன்மையினை முழுதும் நன்கறிந்தவர்களின் இயல்பு விளக்கப்பட்டது. 'தொலைவிடத்தும் துறவார்' என்பதனை நன்கு அறிந்துணர்தல் வேண்டும். உறுதிப் பாட்டினை இருமுறை 'நின்றார்' என்று குறித்துக் காட்டினார். பழைய நண்பர்களால் சில நேரங்களில் பொருள்கேடும், போர்க் கேடும் வரும்; அதனைத் 'தொலைவு' என்று கூறினார்; 'தொல்லைக்கண் நின்றார்' சிறப்பு கருதப்பட வேண்டியதாயிற்று.

**807 அழிவந்த செய்யினும் அன்புஅறார் ...**

'அன்புடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. நண்பர்கள் செய்ய மாட்டார்கள் என்பதனைக் குறிப்பால் உணர்த்த வேண்டியே 'செய்யினும்' என்று அமைத் தார். 'அன்பின்வழி' என்றது பழைமையாய் வந்த நட்பினைக் காட்டிற்று. 'அழிவந்த' என்பது செல்வம் அழியுமாறும் என்பதனையும் உணர்த்தினார்.

'அன்புடைமை' அதிகாரம் உண்டு. 'தொல்லைக்கண் நின்றார்' என்று மேலே கூறியவர்களை 'அன்பின் வழிவந்த கேண்மையவர்' என்று குறிப்பிட்டார். கேடு செய்தக் கண்ணும் நல்ல நட்பு விடற்பாலதன்று.

**808 கேள்இழுக்கம் கேளாக் கெழுதகைமை ...**

'கெழுதகைமை வல்லார்' என்று குறித்துக் காட்டினார். நண்பர்கள் பிழைசெய்த நாளினையும் பயன்பட்ட நாளாகக் கருதுகின்ற நட்பின் உயர்ச்சி மிகமிக மேன்மையானது என்பது அறிவிக்கப்பட்டது. அங்கே 'வழுக்கினுள் வைக்கும் (776) என்று கூறியதுபோல இங்கு 'நாள் இழுக்கம்' என்றார். இழுக்கம் என்பது சொல்லாது நற்பொருள் வெளவல், பணியாமை, அஞ்சாமை முதலியனவாம்.

**809 கெடாஅ வழிவந்த கேண்மையார் ...**

நம்மிடத்திலும் இத்தகைய அன்புடையவராக இருப்பார் என்று கருதி யாவரும் தாமே வந்து நண்பராவர் என்பதாம். ஆதலால்தான் 'விழையும் உலகு' என்றார். 'கெடாஅ வழி வந்த' என்பது சிந்தனைக்குரியதாகும்.

விடாதாரை என்பதனால் விடுதற்காரணம் கூறப்பட்டது. 'கேண்மையார் கேண்மை' சிந்திக்கவும்.

**810 விழையார் விழையப் படுப ...**

'பண்புடைமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டுள்ளது. 'விழையார் (பகைவர்) விழையப்படுப' என்று குறித்துக் காட்டியது சிந்திக்கத்தக்கது. 'ஒன்னார் விழையும் சிறப்பு' (630) என்று அமைத்தார்.

பிழை செய்த நண்பரிடம் பிழை செய்யாத முன்பு இருந்தாற்போல அன்புடையவராக இருக்கலாம். ஆதலால் பகைவரும் நண்பராவர். 'பகை நட்பாக் கொண்டொழுகும்' (874) என்பதைச் சிந்திக்கவும்.

## 82 தீ நட்பு

**811 பருகுவார் போலினும் பண்புஇலார் ...**

**தீ நட்பு** அதிகாரம் ஆதலால் 'பண்பிலார்' என்றார். 'பண்புடைமை' என்ற அதிகாரம் சிந்தனைக்குரியது. பெருகினால் வருகின்ற கேடு குன்றினால் வாராமையின், 'குன்றல் இனிது' என்றார். தீயவர்கள், பருகுவது போல அளவு கடந்த ஆவலினைக் காட்டுவார்களாம். நட்புக்கு இன்றியமையாதது பண்பு. 'பண்புடைமை' அதிகாரம் காண்க.

**812 உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் ...**

இக்குறட் கருத்தினை வினாமுறையில் அமைத்துக் காட்டினார். தமக்கு நட்பினால் வருகின்ற பயனையே கருதுபவர்கள் ஆதலால் பிறரோடு பொருத்தமில்லாதவர்கள் என்பதாகும். ஆதலால் அவர்களை 'ஒப்பிலார்' என்றார். அப்படிப்பட்டவர்களிடம் நட்பும் பகையும் கொள்ளாமல் பழகுதல் வேண்டும். தமக்கு உற்றன பார்ப்பார் பிறரோடு பொருத்தமிலராகலின் அவரை 'ஒப்பிலார்' என்றார். 'உறின்', 'அறின்' என்பதனால் தீயோர் நட்பு விளக்கப்பட்டது.

**813 உறுவது சீர்தூக்கும் நட்பும் ...**

'கள்ளாமை', 'வரைவின் மகளிர்' முதலிய அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. பொருளையே கருதி வஞ்சித்து ஒழுகுபவர்கள் என்பதாம். 'பயன் தூக்கிப் பண்புரைக்கும்' (912) என்பதும் சிந்தித்தறிய வேண்டியதாம். 'நேர்' கருதிப் பார்க்கவும்.

'இருமனப் பெண்டிரும்' (920) என்பது போலவே இக்குறட்பாவும் அமைந்திருப்பது காண்க.

**814 அமரகத்து ஆற்றுஅறுக்கும் கல்லாமா ...**

போருக்குச் செல்லும் குதிரைகள் கற்றிருக்க வேண்டிய முறைகளும் இலக்கணமும் உண்டு என்பது இதனால் உணர்த்தப்பட்டது. துன்பம் வராத போதெல்லாம் தாங்குவது

போல இருந்து துன்பம் வந்தபோது விட்டு நீங்குபவர்கள் என்பது உவமையால் பெற்றாம். அவருடைய நட்பினால் வருகின்ற தீமை, தனிமையாக இருந்தால் வாராது; ஆதலால் 'தனிமை தலை' என்றார். களத்திடை ஆபத்தினை விளைவிக்கின்ற புரவி போன்றவர்கள் என்பதாம்.

**815 செய்துஏமம் சாராச் சிறியர் ...**

'சிற்றினஞ் சேராமை' என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'சிறியவர்கள்' யாவர் என்பதும் 'புன் கேண்மை' யாது என்பதும் குறிக்கப்பட்டது. "பெறினும் இழப்பினும் என்" (812) என்று கூறியது போலவே எய்தலின் எய்தாமை நன்று என்று கூறினார். 'ஏமம் சாராச் சிறியவர்' வகையினர் உலகில் பலருண்டு.

**816 பேதை பெருங்கெழீஇ நட்பின் ...**

'பேதைமை', 'அறிவுடைமை' என்ற அதிகாரங்கள் கருதற்பாலன. அறிவுடையார் பகைமை ஒரு தீங்கினையும் தாராது என்பதும் உணர்த்தப்பட்டது. பேதைகளின் மிகுந்த நட்பும் துன்பத்தினையே தரும். 'எழுபது கோடி உறும்' (639) என்பது போல, இங்கும் 'கோடி உறும்' என்றார். உலகியல் வழக்குப்படி 'கோடி உறும்' என்றார். அறிவுடையார் பகைமை ஒரு தீங்கும் பயவாது; பேதை நட்பு எல்லாத் தீங்கும் பயக்கும்; 'பேதைமை' அதிகாரம் காண்க.

**817 நகைவகையர் ஆகிய நட்பின் ...**

முந்தைய குறட்பாவில் அமைத்துக் காட்டிய முறைபோல, இங்கும் பத்தடுத்த கோடி உறும் என்று கூறினார். எப்போதும் நகைத்து மகிழ்ந்து கொண்டே இருப்பதுதான் நண்பர்களின் கடமையல்ல என்பதாகும். 'பகை' தொடர்புள்ள அதிகாரங்கள் சிந்தனைக் குரியன. குற்றத்தினை நீக்குவதும், நல்வழியில் செலுத்துவதும், இடித்துக் கூறுவதும் நட்புக்கு அடையாளங்களாகும். வகையர் — என்பது சிந்திக்கத்தக்கது.

'நகுதற் பொருட்டன்று நட்டல்' (784) என்பதும் சிந்திக்கத்தக்கது. 'பத்தடுத்த கோடி' என்றார் நகைவகையராய நட்பு மிக மிகத் தீமை என்றார். பகைவனே மேல் என்றார்.

**818 ஒல்லும் கருமம் உடற்று ...**

உடற்றுபவர்களும் உண்டு என்று உணர்த்தினார். ஒல்லும் கருமத்தினை உடற்றுதல் கூடாது. சொல்லாமலேயே அப்படிப்பட்ட நட்பினை விட்டு விடுதல் வேண்டும். சொன்னால் மீண்டும் நட்பாய் இருப்பதற்குக் கருதுவார்கள். 'சோரவிடல்' என்பது நன்கு புரிந்து கொள்ளப் பட வேண்டியது. 'ஓரீஇவிடல்' (830) என்பது போலச் சோரவிடல் என்றார். சோரவிடல் என்பது விடுகின்றவாறு தோன்றாமல், ஒருகாலைக்கு ஒருகால் ஓயவிடுதல். இத்துடன் பேதையார், நகுவிப்பர் இயல்புகளும் கூறப்பட்டன. இது செய்ய இயல்வதைச் செய்யாதாரைப் பற்றிக் கூறிற்று.

**819 கனவினும் இன்னாது மன்னோ ...**

செயலில் பகைவராகவும் சொல்லில் நண்பர்களாகவும் இருப்பவர்களும் உண்டு. ஆதலால் 'வேறு' என்று இருமுறை குறிப்பிட்டார். கனவிலும் இவரது நட்பு துன்பத்தினைத் தருவதாகும். அப்படியென்றால் நிகழ் காலத்தில் சொல்ல வேண்டுவதில்லை. இன்பத்தினைக் கூறுகின்ற "கனவுநிலை உரைத்தல்" என்ற அதிகாரம் இருக்கின்றது. இத்தகையவர்கள் கொடிய தீ நட்பினர். ஆதலால் கனவிலும் துன்பம் செய்பவராவர்; அவ்வாறாயின் நனவின் கண் எத்தகையவராவரோ?

**820 எனைத்தும் குறுகுதல் ஓம்பல் ...**

மனைக்கெழீஇ மன்றில் பழிப்பார் நட்பினை ஒரு சிறிதளவுகூட நெருங்கவிடக் கூடாது என்றார். அத்தகைய தீய இழிந்த தன்மை படைத்தவர்கள் என்பதாம். 'மனை', 'மன்றில்' சிந்திக்கவும்; இத்தகையவர் வீட்டில் நண்பர்கள் போலப் பேசிப்பழகி, மன்றத்தில் பழிப்பார்கள். கொடிய தீயவர்களாகிய இவர்களை ஒருகாலும் தம்மை அணுகாவகை குறிக்கொண்டு காக்க வேண்டும்.

## 83 கூடா நட்பு

**821 சீர்இடம் காணின் எறிதற்கு ...**

மனத்தால் கூடாதிருந்து தீமை செய்வதற்குக் காலம் வரும்வரை நம்முடன் கூடிக் கொண்டு இருப்பவர்கள் என்பதாம். அடிக்கும் நேரம் வரும்வரை தாங்குவது போல இருந்து, நேரம் வந்தபோது நசுக்குவதற்குத் துணையாக இருப்பது பட்டடையாகும். 'கூடாவொழுக்கம்' என்றோர் அதிகாரம் இருக்கின்றது. பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தால் கூடியொழுகுவார் நட்பு கூடாநட்பாம். எறியும் எல்லை வாராமுன் எல்லாம் தாங்குவதுபோல் இருந்தது, வந்தவுடன் நசுக்கிற்று. அத்தகைய நட்பும் பட்டடை போன்றது.

**822 இனம்போன்று இனமல்லார் கேண்மை ...**

கூடா நட்பினர் நம்முடைய இனத்தவர் அல்லர் என்று கூறினார். 'வேறுபடும்' என்பதால் பழைய அது பகையேயாகும் என்பது அறிவிக்கப்பட்டது. பொதுவாக மகளிர் மனம் மாறுபடும் இயல்புடையது என்று கூறினார். 'மகளிர்' என்ற சொல் 'வரைவின் மகளிர்' என்ற அதிகாரத்தில் காணப்படுகிறது. பெண் மனம் போல என்பது குறிப்பாகும். கூடா நட்பினர் மனம் வேறுபடும்; 'போன்று' என்பதால் அவர்கள் நம் இனம் அல்லர் என்பதாம்.

**823 பலநல்ல கற்றக் கடைத்தும் ...**

மாணார்கள் எப்போதும் பகைமையுள்ளம் கொண்டவர்கள்! பல, நல்ல, கற்ற என்பன நன்கு சிந்திக்க வேண்டியவை. அறிந்த அவைகட்கும் மனத்திற்கும் தொடர்பில்லை என்பது தீயவர்களிடத்தில் காணப்படும் பண்பாகும். மனநல்லர் என்பது கல்வியறிவினால் மட்டும்

உண்டாகிவிடாது என்பது குறிப்பாயிற்று. **பலநல்ல** என்றது, மனக்குற்றம் கெடுக்கும் நூல்களாகும். மனத்துள்ளே பகைமை எண்ணம் கொண்டவர்களை கல்வியுடைமைபற்றி நட்பாகக் கொள்ளற்க என்றார்.

**824 முகத்தின் இனிய நகாஅ ...**

உலகில் இருக்கின்ற மக்கள் வகைகளில் வஞ்சகர் ஒரு வகையினர். **இனியநகா** என்றதைச் சிந்திக்கவும். மனம் தீயதை நினைக்க, முகம் இனிதாய்க் காட்டலின் 'வஞ்சர்' என்றார். அவர்களைப் புரிந்து கொள்ளுதல் எளிதல்ல என்பதற்காக **அஞ்சப்படும்** என்றார். அக்கோபம் குறிப்பதற்கு கருவியான முகத்தாலும் தோன்றாமையின் **அஞ்சப்படும்** என்றார்.

**825 மனத்தின் அமையா தவரை ...**

பகைமையினை மறைப்பதற்காகச் சொல்லுகின்ற வஞ்சனைச் சொற்களை, நல்லவை எனக் கருதி அவர்களை நல்லவர்கள் எனக் கருதுதல் தவறு என்பது உணர்த்தப்பட்டது. பகைமை மறைதற் பொருட்டு சொல்லுகின்ற வஞ்சனைச் சொல்லைச் செவ்விய சொல் எனக் கருதி, அவரைக் கருமங்களில் தெளிதல் நீதிநூல் முறைமை அன்று என்பதாம்.

**826 நட்டார்போல் நல்லவை சொல்லினும் ...**

**சொல்லினும்** என்றதால் சொல்லாமையே பெற்றாம். ஒட்டாராதலால் தீமைபயத்தல் உறுதி என்பதைக் குறிக்கவே ஒல்லை உணரப்படும் என்றார். 'ஒட்டார்பின்' (967) என்பது போன்றவற்றைக் கண்டு தெளிக.

**827 சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க ...**

தம்முடைய வணக்கம் அல்ல என்பதனைக் குறிக்கவே **சொல் வணக்கம்** என்றார். பகைவர்களுடைய குறிப்பினை சொல் வணக்கங்கொண்டு உணர்ந்தறிதல் வேண்டும் என்பதாம். வில்வணக்கம் கொலைக்குக் காரணமாயிற்று; பகைவர் சொல் வணக்கமும் அத்தகையதே. மனமொத்து வணங்குவதல்ல என்பதனைச் சுட்டவே **சொல்வணக்கம்** என்றார். பகைவரது குறிப்பு அவரது வில்வணக்கத்தின் மேல் நின்றது.

**828 தொழுதகை யுள்ளும் படைஒடுங்கும் ...**

**ஒடுங்கும்** என்பது சிந்தனைக்குரியது. பகைவர்களின் குறிப்பைக் கண்டே உணர்ந்தறிதல் வேண்டும். அவர்களைச் செயல்களினாலோ சொற்களினாலோ கண்டறிதல் கூடாது என்பதாம். தொழுத கையும், அழுத கண்ணீரும் பகைவர்களின் கருவிகளாயின. பகைவர் தன்மையைக் காட்டினாலும் அவர் குறிப்பையே நோக்கிக் காக்க என்பதாம்; பகைவர் நட்பு என்று கையாலும் கண்ணாலும் நம்புமாறு செய்வர்.

**829 மிகச்செய்து தம்எள்ளு வாரை ...**

முகநக நட்பது நட்பன்று (786) என்றது பகைவர்களிடத்தில் பழகுகின்றபோது கூடாது என்பதை உணர்த்தியது. 'நகச் செய்து' என்பதும், 'சாப்புல்லற்பாற்று' என்பதும் சிந்தனைக் குரியன. அவர்கள் புறத்தில் 'மிகச் செய்வார்களாம்'; உள்ளத்தில் 'எள்ளுவார்களாம்'.

அகன் ஒன்றும் புறன் ஒன்றும் ஆதல் ஒருவர்க்கு தகாது; எனினும் பகைவர் மாட்டாயின் தகும் என்பது நீதிநூல் துணிவு. எல்லோரிடத்திலும் உள்ளன்புடன் இருத்தல் கூடாது என்பது குறிப்பு.

**830 பகைநட்பாம் காலம் வருங்கால் ...**

முந்தைய குறட்பாவின் கருத்தே இங்கும் தெளிவுபடுத்தப்படுகிறது. பகைவர்களிடம் எவ்வாறு நடந்து கொள்ளுதல் வேண்டும் என்பது குறிப்பு. 'காலம்' என்றதால் பகைவர் நட்பாய் ஒழுகும் காலம் என்பதாயிற்று. கேண்மை ஒரீஇவிடல் (797) என்பது போன்றவை களைக் கருதுக.

அக்காலமாவது, தம்மானும் பகையென்று வெளிப்பட நீக்கலாகாத அளவு ஆம்; அளவெல்லாம் நீக்குக என்பது பெற்றாம்.

## 84 பேதைமை

**831 பேதைமை என்பதுஒன்று யாதெனின் ...**

தனக்குத்தானே தீங்கினைத் தேடிக் கொள்ளுபவன் பேதையாவான். இக்குறளில் என்பது ஒன்று என்பதாக அமைத்துக்காட்டிச் சிந்திக்க வைத்தார். கேடு பயப்பனவற்றைக் கொள்ளுவான் என்பதைக் குறிக்க வேண்டி கொண்டு என்றார். போகவிடல் என்றது சிந்திக்கத்தக்கது.

'ஏதம் என்பது' வறுமை பழிபாவங்கள் முதலியன. ஊதியம் என்பது, செல்வம் புகழ் முதலிய அறங்கள். தானே தன் இருமையும் கெடுத்துக் கோடல் என்பது கருத்து

**832 பேதைமை யுள்எல்லாம் பேதைமை ...**

தன்னால் செய்து முடிக்க முடியாத செயல்களில் மிகவும் ஆசைவைத்து அந்தக் காரியங்களைச் செய்வதை மேற்கொள்ளுபவன் பேதையாவான். இதன்கண் காதன்மை என்று நன்கு அமைத்தார். இருமுறை பேதைமை என்று கூறினார். இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்த செயல்களைப் பேதை விரும்பிச் செய்வான்.

**833 நாணாமை நாடாமை நாரின்மை ...**

பேதையினுடைய தொழில்களை நன்கு நான்கு வகைப்படுத்திக் கூறினார். நாணுடைமை என்ற அதிகாரத்தை நினைவு கூர்க. அன்புடைமை என்ற அதிகாரமும் குறிக்கப் பட்டது. இந்த நான்கு தீய தன்மைகளும் பேதைக்கு எஞ்ஞான்றும் இயல்பாய் வருதலின் தொழில் என்றார். புலவர் தொழில் (394) வேந்தன் தொழில் (549) என்பனவற்றைக் கூறுவது போல இங்கும் பேதை தொழில் என்றார். இத்தீய தன்மைகள் பேதைக்கு எப்போதும் இயல்பாய் வருதலால் 'தொழில்' என்றார்.

**834 ஓதி உணர்ந்தும் பிறர்க்குஉரைத்தும் ...**

இங்கே அடக்கமுடைமை என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. ஓதுதல் சொல்லுதலாம். உயர்ந்த மறை நூல்களை **ஒத்து** (134) என்று கூறுவதாகும். அதனை ஓதுத லென்பதாகும். ஆதலால் 'ஓதி' என்று இங்குக் கூறினார். ஓதுதலும், உணர்தலும், பிறர்க்கு உரைத்தலும் ஆனவற்றைப் பேதையும் செய்வான் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

இப்பேதைமை தனக்கு மருந்தாய இவற்றால் தீராமையானும், வேற்று மருந்து இன்மையானும் பேதையின் பேதையார்இல்' என்றார். இதுவரை பொதுவகையால் பேதையின் தொழில் கூறப்பட்டது. இனிச் சிறப்பு வகையானும் கூறப்படும்.

**835 ஒருமைச் செயலாற்றும் பேதை ...**

எல்லாப் பிறப்பும் ஏழாய் அடங்குதல் அறியப்பட்டதால் **எழுமையும்** என்று முற்று 'உம்'மைக் கொடுத்தார். எழுகின்ற பிறவிகள் பலவும் என்பது கருத்து. பிறவியை அழுந்துதற்கு இடமாகிய **அளறு** என்றார். பேதை துன்பத்தினையே வருமாறு செய்து கொள்ளுவான் என்ற பேருண்மை புலப்படுத்தப்பட்டது. இதனை எல்லா பிறப்புக்களிலும் துன்பத்தினை நுகர, இப்பிறவியிலேயே தானே வலிய வலியச் சென்று துன்பத்தைத் தேடிக் கொள்ளுவான் என்று பேதையின் இழிசெயலைக் குறித்தார்.

பேதை, காலமெல்லாம் துன்புறுவான். உலக வழக்கில், பெருந்துன்பம் அடைபவனை நரகத்தில் இருப்பவன் என்று கூறுவதுண்டு. காலமெல்லாம் துன்புற வேண்டியதைச் சில காலத்துள்ளே செய்து கொள்ளுதல் அரிதாகலின் **ஆற்றும்** என்றார். பேதை, இப்பிறவியில் மட்டும் அல்லாமல் வருகின்ற பல பிறவிகளிலும் துன்புறுவான் என்றார்.

**836 பொய்படும் ஒன்றோ புனைபூணும் ...**

இதனால், தொழிலையும் கெடுத்துத் தானும் கெடுவான் என்றார். பிறகு அத்தொழில் ஆகாதவகையில் செய்து விடுவான் என்பதைப் 'பொய்படும்' என்றார். அவனைக் 'கையறியாபேதை' என்றார். அதுவேயன்றி, சிறைப்பட்டு விடுவான் என்பதை உணர்த்தவே, 'புனைபூணும்' என்றும் குறிப்பிட்டார். 'பொய்படும்' என்பது, பின் ஆகாவகை உள்ளழிதல் என்பதாகும்.

**837 ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் ...**

இக்குறளால், பேதைகளிடத்திலும் பெருஞ்செல்வம் இருக்க நேரிடும் என்றார். இயற் கையினால், (தெய்வத்தால்) அவனிடமும் செல்வம் வந்து சேரும் என்பதனைக் காட்டவே **உற்றக்கடை** என்று கூறினார். செல்வத்தைப் படைக்கும் ஆற்றறில்லாதவன் என்பதனை 'உற்றக்கடை' எனும் சொல் உணர்த்திற்று. தொடர்பு இல்லாதவர்கள்கூட, எல்லாம் பெறுவர் என்பதற்காக ஆர என்றும், உற்றார் உறவினர் உணவும் கிடைக்கப் பெறார் என்பதற்காகப் பசிப்பர் என்றும் குறித்தார்.

ஊழ்வினையால் பேதையும், பெருஞ்செல்வம் பெற்றிருப்பான் என்பது கருத்து.

**838 மையல் ஒருவன் களித்தற்றால் ...**

**கள்ளுண்ணாமை** என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. **பெறின்** எனவே தனது ஆற்றலினாலும், அறிவினாலும் பெறாமல் தெய்வத்தான் (ஊழென்னும் இயற்கையினால்) பெற்றான் என்பதாகும். பேதைமையும் செல்வக் களிப்பும் ஒருங்கே உண்டாவதால் அவனைப் பித்துப் பிடித்து மதுவுண்டவனை ஒப்பான் என்றார். ஆகவே **தலை தடுமாறுவான்** எனப்பட்டது.

**839 பெரிதுஇனிது பேதையார் கேண்மை ...**

'நட்பு' என்னும் அதிகார வகைகள் நினைவுபடுத்தப்பட்டன. **உள்ளப்பிரிதல்** (394) என்றது சிந்தனைக்குரியது. பேதையார் நட்பு நாடோறும் தேய்ந்து வருதலின் துன்பம் தாராததாயிற்று; பேதையரைப் புகழ்வார் போன்று பழித்தார். **பெரிது, இனிது** என்பதால் பேதை உடனிருந்த போது அடைந்த வேதனை உணர்த்தப்பட்டது.

**840 கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் ...**

'சான்றாண்மை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. நல்ல அமளி மாசறக் கழுவாத காலால் குறைவுபட்டு விடுவது போல, சான்றோர் சபையும் பேதையால் இழிவுள்ளதாகி விடும். ஆகவே சான்றோர் நிறைந்திருக்கும் இடத்திற்குப் பேதை போகவே கூடாது. **புகல்** என்பது சிந்திக்கத்தக்கது.

காலை கழுவாமையால் அமளி இழிவாகிறது; பேதை புகுவதால் சான்றோர் அவை இழிவுபடுகிறது.

## 85 புல்லறிவாண்மை

**841 அறிவுஇன்மை இன்மையுள் இன்மை ...**

புல்லறிவாளன் செல்வ மெய்தியிருந்தாலும் யாதொரு பயனும் இல்லை. அதனால் **இன்மையுள் இன்மை** என்றார். நல்லறிவாளர் வறுமை எய்திய போதும் அவர் இகழப்படாமையால், பொருளை **'இன்மையா வையாது'** என்று கூறினார். 'அறிவுடைமை' என்ற அதிகாரம் இங்கே நினைவு படுத்தப்பட்டது. **ஐந்துமுறை** இன்மை என்று கூறியது சிந்தனைக்குரியதாயிற்று. புல்லிய அறிவினை ஆளும் தன்மை என்றார். அதனால் இந்த அதிகாரம் 'புல்லறிவாண்மை' என்று பெயர் பெற்றது. 'கார் அறிவாண்மை' (287) என்பதைச் சிந்திக்க. அறிவு, ஈண்டுத் தலைமை பற்றி நல்லறிவின் மேல் நின்றது. **இன்மையுள் இன்மை, இன்மையா வையாது உலகு** இரண்டும் கருதுக.

**842 அறிவிலான் நெஞ்சுஉவந்து ஈதல் ...**

**தவம், ஈகை** என்ற அதிகாரங்களைச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். புல்லறிவாளன் நற்பணியினைச் செய்யமாட்டான். மேலும் ஈகை செய்யமாட்டான். அப்படிச் செய்தான் என்றால், அதற்குக் காரணம் பெறுகின்றவனுடைய நல்வினைப் பயனே என்று குறிப்பிட்டார். **பிறிது யாதும் இல்லை** என்பதைச் சிந்திக்க.

**843 அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் ...**

பகைவர்கள் தாம் அறிந்தது ஒன்றனைக் காலம் பார்த்திருந்து செய்வதல்லது வறுமை, பழி, பாவம் முதலிய பலவற்றையும் எக்காலத்தும் செய்ய மாட்டாமையின் அவர்க்கும் 'செய்தல் அரிது' என்றார்.

**844 வெண்மை எனப்படுவது யாதுஎனின் ...**

வெண்மையாவது அறிவு முதிராமை. உலகத்தார் இகழ்வர் என்று அறிந்திருந்தும் தன்னை உயர்வாக வெளிப்படுத்திக் கொள்வதைச் 'செருக்கு' (மயக்கம்) என்றார். தனக்கு எல்லாம் தெரியும் என்று கூறுகின்ற அறிவில்லாதவன் தன்மை கூறப்பட்டது.

**845 கல்லாத மேற்கொண்டு ஒழுகல் ...**

கல்வி, கல்லாமை முதலிய அதிகாரங்கள் குறிப்பால் உணர்த்தப்பட்டன. தான் கற்றிருக்காதவைகளைப் பற்றி எடுத்துக் கூறப் புகுந்தால், அப்படிப்பட்டவன் உண்மையில் நன்றாகக் கற்றிருக்கும் நூலின்கண்ணும் பிறர்க்கு ஐயம் உண்டாகிவிடும். 'உண்டாயின்' என்றது சிந்திக்கத் தக்கது. 'கற்க கசடற' என்றதை இங்கே வற்புறுத்தி நிறுவுகின்றார். உலகியல் நடைமுறை காண்க.

**846 அற்றம் மறைத்தலோ புல்லறிவு ...**

இக்குறளில் குறிக்கப்படும் குற்றம் மறைத்தலாவது, அவை இல்லாதபடி செய்தல்; மறைக்கப்படுவன பலவற்றுள்ளும் உயர்ந்தவற்றை யெல்லாம் மறைக்காமல் தாழ்ந்த தொன்றனையே மறைத்து அவ்வளவால் தம்மையும் உலக ஒழுக்கினராக மதித்தலும் புல்லறிவு என்பதாம். 'குற்றங்கடிதல்' என்ற அதிகாரத்தைச் சிந்திக்க.

**847 அருமறை சோரும் அறிவிலான் ...**

'அறை பறை' (1076) என்பதைக் கவனிக்க. உள்ளத்தில் அடக்கி வைக்கப்பட வேண்டிய எண்ணத்தினை அறிவிலான் வாய் சோர்ந்து பிறர்க்கு உரைத்து விடுவான். தானே தனக்கு என்பதைச் சிந்திக்கவும். 'தம்மைப் பீழிக்கும் பீழை' (843) என்று சொன்னது போல் இங்கு 'தானே தனக்கு' என்றார். நல்ல உயர்ந்த கருத்துக்களை அறிவிலார் ஏற்க மாட்டார்கள்.

**848 ஏவவும் செய்கலான் தான்தேறான் ...**

புல்லறிவாளன் பிடிவாதத்துடன் இருப்பான் என்றார். பிறர் நல்லதைக் கூறினாலும் புல்லறிவாளன் கேட்க மாட்டான். இப்படிப்பட்ட குணம் அவன் சாகும்வரை அவனிடம் ஒரு நோய் போலவே இருந்து கொண்டிருக்கும். பாவயாக்கையை இந்நிலம் பொறுத்தற்கு வருந்தும் ஆகையால் 'ஓர் நோய்' என்றார். உயிர் தான் உணரும் தன்மைத்தாய் இருந்தும், நின்ற யாக்கை யைத்தான் மருளல் தன்மைத்தாய் வேறுபடுதலின் 'அவ்உயிர்' என்று கூறினார்.

**849 காணாதான் காட்டுவான் தான்காணான் ...**

புல்லறிவாளர்கள் நல்லறிவு கொள்ளுதல் என்பது எவ்விதத்திலும் நடக்காது. நல்லறிவு சொல்லப் போகும் அறிஞர்களுக்கு அவனே தெரிந்தவன் போலப் புத்தி சொல்ல வந்துவிடுவான். கொண்டது விடாமை புல்லறிவாகும். இக்குறட்பாவினைப் பன்முறை சொல்லிப் பார்த்தால் புல்லறிவாளன் தன்மை வெளிப்படும் ஓசை தோன்றும். 'தான் காணாதான்' என்னும் தொடரைச் சிந்திக்க. கண்டானாம் என்ற அமைப்பு அவன் இழிவினை உணர்த்திற்று.

**850 உலகத்தார் உண்டென்பது இல்என்பான் ...**

உலக வழக்கில் 'பேய்' என்று கூறப்படுவதனை 'அலகை' என்று இக்குறளில் கூறினார். துன்பம் தருவதை — வெறுக்கப்பட வேண்டியதைப் 'பேய்' என்று சொல்லுதல் மக்கள் இயல்பு. ஆதலால் உயர்ந்தோர் உண்டு என்பதை மறுத்துக் கூறுபவன் 'பேய்' என்று கூறப்பட்டான். 'செத்தாருள் வைக்கப்படும்' (214) என்பது போன்று கூறுகின்ற முறைகளில் அமைத்து 'அலகையா வைக்கப்படும்' என்றார். உலகத்தார் என்பதனை 'வையத்து' என்று அமைக் கின்றார். உலக மக்கள் தீமையானவர்களைப் 'பேய்' என்று கூறுகிற வழக்கத்தில் சொல்லி வைத்தார். இவரை 'மக்கட் பதடி (196) என்பதையும் கருதுக.

## 86 இகல்

**851 இகல்என்ப எல்லா உயிர்க்கும் ...**

மக்களையும் விலங்குகளோடு ஒப்பாகும்படிச் செய்யும் என்பது தோன்ற 'எல்லா உயிர்க்கும்' என்றார். 'பண்புடைமை' அதிகாரம் குறிக்கப்பட்டது. பிரித்துக் கூடாமை என்னும் குணத்தினைச் செய்தலால் 'பகல் என்னும் பண்பின்மை' என்றார். இருவர் தம்முள் பொருது வலி தொலைதற்குக் காரணமான மனவேறுபாடு 'இகல்' என்று கூறப்படும்.

**852 பகல்கருதிப் பற்றா செயினும் ...**

'இன்னா செய்யாமை' என்ற அதிகாரம் குறித்துக் காட்டப்பட்டது. இன்னாமை செய்தல், பகைமை வளரத் தாம் தாழ்ந்து வருதலாலும், நீங்கினால் வெறுப்பன தாமே ஒய்ந்து போகத் தாம் ஓங்கி வருவதாலும் 'செய்யாமை தலை' என்றார். 'பகல் கருதி', 'இகல் கருதி' என்பன சிந்திக்கத்தக்கன. இன்னாமை செய்யின் பகைமை வளர்ந்துவிடும். செய்யாதிருந்தால் இகல் ஓய்ந்து தாம் ஓங்கி உயர முடியும். உள்ளத்தில் தோன்றுகின்ற பகைமைப் புழுக்கமே இகல் எனப்படும்.

**853 இகல்என்னும் எவ்வநோய் நீக்கின் ...**

அப்படிப்பட்ட இகல் நோயினை நீக்கிவிட்டால் யாவரும் நண்பராவர் என்பதாம். ஆதலால் எல்லாச் செல்வமும் எய்திக் கொடை முதலிய காரணங்களால் புகழ் பெறும் என்பதாம். எவ்வம் என்பது துக்கம்; 'தா' என்பது வருத்தம். 'தா இல் விளக்கம்' வெளிப்படை என்பதை உணர்த்திற்று. ஆகவே யாவரும் நண்பராவர்,

**854 இன்பத்துள் இன்பம் பயக்கும் ...**

துன்பத்துள் துன்பம் என்பது பலரோடும் பகைத்தால் வலிமை கெட்டு யாவர்க்கும் எளியவனாய் ஆகிவிடுவான் என்பதாம். அதனை எப்பொழுதும் தருதலால், 'இகல் என்னும்' என்றார். 'இன்பத்துள் இன்பம்' என்பது யாவர்க்கும் நட்பாகலின் எல்லாப் பயனும் எய்தி மகிழ்ச்சி பெறுவர் என்பதாம். 'துன்பத்துள் துன்பம் கெடின்' (369) என்று அமைத்துக் காட்டியதுபோல இங்கும் கூறினார். 'இன்பத்துள் இன்பம்' (629) என்பது போல அமைத்தார்.

**855 இகல்எதிர் சாய்ந்தொழுக வல்லாரை ...**

வினாமுறையில் பாடல் அமைக்கப்பட்டுள்ளது. இகலை ஒழித்து வாழ்தல் நாடாள்பவர்க்கு எவ்வகையிலும் அரிதானபடியால் 'வல்லாரை' என்றார். யாவர்க்கும் நண்பராகிவிடுவதால் அவரை வெல்லக் கருதுவார் யாவரும் இல்லை என்று கூறினார். 'எதிர் சாய்ந்து ஒழுக' என்பது சிந்தனைக்குரியது.

**856 இகலின் மிகல்இனிது என்பவன் ...**

'மிகலினிது' என்பது மேன்மேல் ஊக்குதலாகும்; 'தவலும்' என்பது வறுமையால் துன்பப்படுதலாகும். 'கெடலும்' என்பது இறத்தலாகும். இகலின்மிகல் பொருட் கேடும் உயிர்க் கேடும் அப்பொழுதே அவர்க்கு உளவாகும் என்பதாகும்; 'நணித்து' என்பது சிந்திக்கத் தக்கது.

**857 மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் ...**

'இன்னா அறிவு' என்பது தமக்கும் பிறர்க்கும் தீங்கு பயக்கும் அறிவு என்பதாகும். 'மிகல்' என்பது வெற்றியாகும். இகலால் அறிவு கலங்கிவிடும் ஆனபடியால் 'காணார்' என்று கூறினார். மாறுபடுவார்க்கு மெய்ப்பொருள் தோன்றாது. மிகல் மேவல், இகல் மேவல் என்று நன்குணரப் புலப்படுத்தினார்.

**858 இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் ...**

எதிர்த்து நீங்கிய பொழுதே வருதலால் 'சாய்தல் ஆக்கம்' என்றார். 'ஊக்கமுடைமை' அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'ஊக்கின் ஊக்குமாங் கேடு' என்பது சிந்தித்தறிய வேண்டுவதாகும். கேடு அவனிடத்திற்கு வரும் என்பது இதில் குறிக்கப் பட்டது. 'ஊக்கின் ஊக்குமாம் கேடு' என்றார். 'மிகல் ஊக்கும் தன்மை' (855) என்று கூறி அவ்வாறு ஊக்கினால் வருவது கேடு என்றார்.

**859 இகல்காணான் ஆக்கம் வருங்கால் ...**

காணான், காணும் என்பன குறித்துக் காட்டப்பட்டன. முந்தைய குறட்பாவில் கூறியது போல இங்கும் 'ஆக்கம்' என்றார். இகலான் வரும் கேடு பிறரால் அல்ல என்பது தோன்றத் 'தரற்கு' என்றார். ஆக்கம் கேடுகட்கு முன்பு நடப்பன—இகலினது இன்மை, உண்மை (உள்ளது) என்பதாம். ஆக்கத்திற்கும் கேட்டிற்கும் இகல் எவ்வாறு காரணமாயின என்றார்,

**860 இகலான்ஆம் இன்னாத எல்லாம் ...**

இன்னாதன என்பன வறுமை, பழி, பாவம் முதலியனவாம். நகல் என்பது மகிழ்தல்; 'நகலானாம்' என்பது 'நட்பு' முதலிய அதிகாரங்களைச் சிந்திக்க வைப்பதாகும். நன்னயம் என்பதனைப் பெருஞ் செல்வம் (செருக்கு) என்றார்; மாறுபாடு கொண்டால் பொல்லாதவை யெல்லாம் வரும் என்பதாம். நகல் என்பதும் செருக்கு என்பதும் தத்தம் காரணங்கட்கு ஆயின; நகல் — மகிழ்தல்.

## 87 பகைமாட்சி

**861 வலியார்க்கு மாறுஏற்றல் ஓம்புக ...**

'ஓம்புக, ஓம்பா' என்று விளக்கினார். நாட்டுத் தலைவனுக்குக் கூறிய தென்பது சிறப்பாகக் கொள்ளப்படும். 'இறைமாட்சி', 'படைமாட்சி' என்ற அதிகாரங்கள்போல 'பகை மாட்சி' எனப்பட்டது. உலகியலில் வைத்துக் கூறுதல் இவர் இயல்பு ஆதலால் இது 'மெலியார் மேல்செல்லுமிடத்து' (250) என்பதோடு மாறுபடாமை காண்க. அறிவின்மை முதலிய குற்றங் களுடைமையால், அது பகையை மாட்சிப் படுத்தலாம். 'வலியார் மெலியார்' கருத்துக்களை 250ஆம் குறட்பாவிலும் காண்க. வலியர் — மெலியர் என்றது துணை வலிமையை மனத்திற் கொண்டு கூறப்பட்டது. 'ஓம்புதல், ஓம்பா' — சிந்தித்தறிந்து கொள்க.

**862 அன்புஇலன் ஆன்ற துணையிலன் ...**

'அன்புடைமை' அதிகாரம் குறிக்கப்பட்டது. இதுவும் வினா முறையில் அமைந்த பாடலாகும். சுற்றமும், இருவகைத் துணையும், தன் வலிமையும் இல்லாதவன் ஆதலால் அவன் மேல் செல்வார்க்கு வலிமை வளர்வதன்றித் தொலையாது என்பதாம்.

**863 அஞ்சும் அறியான் அமைவுஇலன் ...**

'அறிவுடைமை', 'ஈகை' முதலிய அதிகாரங்கள் குறிப்பால் உணர்த்தப்பட்டன. இந்த நான்கு குற்றங்களும் உடையவன் பகையில்லா விட்டாலும் அழிவானாதலால் 'தஞ்சம் எளியன்' என்றார்.

**864 நீங்கான் வெகுளி நிறையிலன் ...**

'வெகுளி' என்பதனால் 'வெகுளாமை' அதிகாரம் சிந்தனைக்குரியதாகும். 'நிறை' என்பது மறைவானவற்றைப் பிறர் அறியாமல் வைத்திருப்பதாகும். ஆதலால் அதை அவன் அறியான் என்பதாம். கோபத்தினையே கொண்டிருப்பவன் ஆதலாலும், மறை வெளிப் படுத்துபவன் ஆதலாலும், அவன் மீது படையெடுப்பவர்கள் காலம், இடம், வலிமை முதலியன அறிந்து படையெடுக்க வேண்டும் என்பது இல்லை. 'எஞ்ஞான்றும்', 'யாங்கணும்', 'யார்க்கும்' என்பவை சிந்திக்கத்தக்கன. 'நிறையழிதல்' என்ற அதிகாரம் சிந்திக்கத்தக்கது.

**865 வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் ...**

தொல்லோர் வழிவழி வழங்கி வந்ததாகலின் 'வழி' என்றார். தப்பாது பயன்படுதலின் 'வாய்ப்பன' என்றார். இக்குற்றங்கள் உடையவன் தானே அழிதலின் 'பற்றார்க்கு இனிது' என்று விளக்கினார். 'பழி நாணுவார்' (433) என்பது போன்றவை சிந்திக்கத்தக்கதாகும். இதன்கண் 'பண்புடைமை' அதிகாரம் சிந்திக்கவும். **நோக்கான், செய்யான்** என்பன கருதற்குரியன.

**866 காணாச் சினத்தான் கழிபெருங் ...**

'வெகுளாமை' என்ற அதிகாரம் சிந்திக்கத்தக்கது. தன்னையும் பிறரையும் தான் அறியாமைக்குக் காரணமான கோபத்தினையுடையவனை 'காணாச் சினத்தான்' என்றார். காமம் மிகுதியால் வருங் குறைபாட்டினைப் 'பெண்வழிச் சேறல்' என்ற அதிகாரமும் குறித்துக் காட்டுகிறது. தாமே அழிவர் என்பது பற்றி இவர் 'பேணாமை பேணப்படும்' என்றார். 'நீங்கான் வெகுளி' (864) என்பதனை மேலும் கண்டித்துக் **காணாச் சினத்தான்** என்றார்.

**867 கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற ...**

'மாணாத செய்வான்' என்பது, மெலியனாய் இருந்து துணிதலும் வலியனாய் இருந்து தணிதலும் முதலாயினவாம். அப்பொழுது சில பொருள் அழிந்தாலும் பிறகு பல பொருள் பெறுதற்குக் கூடுமாதலால் 'கொளல் வேண்டும் மன்ற' என்று கூறினார். தானே தனக்குத் துன்பத்தினைச் செய்து கொள்ளுவான்; பகைமையினைக் கொடுத்தும் கொளல் வேண்டும் என்று எடுத்துக் காட்டினார்.

**868 குணன்இலனாய்க் குற்றம் பலவாயின் ...**

'குணம்' என்றது 'இறைமாட்சி' அதிகாரத்தில் கூறப்பட்டதாகும். 'குற்றம்' என்பது இந்த அதிகாரத்தில் கூறியனவும் மற்றும் அத்தன்மையனவுமாம். 'இனம்' என்பது சுற்றம், நட்பு, பொருள், படை முதலியனவாம். பகைவர்களுக்கு, இவைகளினால் உண்டாகும் பயன் உள்ளதாதலால் 'ஏமாப் புடைத்து' என்றார்.

**869 செறுவார்க்குச் சேண்இகவா இன்பம் ...**

'அறிவு இலா அஞ்சும் பகைவர்ப் பெறின்' என்பதனை எடுத்துக் காட்டினார். 'பெறின்' என்பதால் எளிதில் அத்தகையவர்கள் கிடைக்க மாட்டார்கள் என்பதாம். அப்படிப் பட்ட பகைவர் மேல் சென்றபோதே பகையின்மையும், செல்வமும், ஒருங்கே அடைதலால் **சேண் இன்பம் இகவா** (நீங்கா) என்று கூறினார் உபாயம் அறிதலும், அறிந்தால் செய்து முடிக்கும் திண்மையும் இல்லாதாரே பகைவராதல் கூடாமையின் **பெறின்** என்றார்.

**870 கல்லான் வெகுளும் சிறுபொருள் ...**

'புகழ்' அதிகாரம் ஒளி என்பதால் குறிக்கப்பட்டது. 'கல்லாமை' அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. 'சிறு பொருள்' என்பது முயற்சி சிறிதாய்ப் பொருள் பெரிதாய் அமையும்

என்பதாம். வெல்லுதல் எளிதாயிருக்கவும், அது மாட்டாதானை வெற்றியான் வரும் புகழ் கூடாது என்பதாம். ஆகவே, இச்சிறிய முயற்சியான் பெரிய பயன் எய்துக என்பது உணர்த்தப்பட்டது.

நீதி அறியாதானை வெல்லுதல் எளிதாய் இருக்கவும் அது மாட்டாதானை வெற்றியால் வரும் புகழ் கூடாது என்பதாம்.

## 88 பகைத்திறம் தெரிதல்

### 871 பகைஎன்னும் பண்பி லதனை ...

மாணாத பகையை ஆக்கிக் கொள்ளுதல் எவ்வகையிலும் தீமையே பயத்தலின் 'பண்பிலது' என்றார். இக்குறளால் பண்புடைமை என்ற அதிகாரம் நினைத்தற்குரியதாம். அதனை (பகையை) விளையாட்டின்கண் வேண்டினாலும் கோபத்தையுண்டாக்கி பகையாகி விடும் ஆதலால் நகையேயும் என்றார். விளையாட்டிலும் செற்றமே விளைந்து 'மெய்யாம்' ஆகலின் 'நகையேயும்' என்றும் கூறினார்.

### 872 வில்லேர் உழவர் பகைகொளினும் ...

'உழவு' என்ற அதிகாரத்தினைச் சிந்திக்கவும். 'கொளினும்' என்ற உம்மையால் கூடாது என்பது பெற்றாம். சிந்தனை, எண்ணம், சூழ்ச்சி என்று குறிப்பிடுபவையெல்லாம் 'சொல்லேர் உழவர்' என்பதால் பெற்றாம். நிலத்தை உழுவதுபோல் செயல் புரிவதை வில், சொல், ஏர் என்று குறித்தார். 'சொல்வன்மை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. வீரம், சூழ்ச்சி என்னும் ஆற்றல்களுள் வீரமே உடையாரோடு பகை கொண்டால் கேடுவருதல் உறுதி யன்று; வந்ததாயினும் தனக்கேயாகும். ஏனைச் சூழ்ச்சியுடையாரோடாயின் தன் வழியில் உள்ளார்க்கும் தப்பாது வருதலின் அது கொள்ளினும் இது கொள்ளற்க என்றார். சொல் என்பது நீதிநூல் மேல் நின்றது.

### 873 ஏமுற் றவரினும் ஏழை ...

'ஏமுற்றவரினும் ஏழை' என்பது சிந்தனைக்குரியதாகும். மயக்கத்தால் இருவரும் ஒப்பாராயினும், ஏமுற்றவர் அதனால் தீங்கு எய்தாமையின், தீங்கு எய்தலும் உடைய இவனை 'அவரினும்' ஏழை என்றார். தமியன் என்பது சுற்றம், நட்பு, படை முதலியன இல்லாதவன் ஆவான்.

### 874 பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை ...

'இன்னாமை இன்பம் எனக்கொளின்' (630) என்று அமைத்துக் காட்டும் முறையே போல் இங்கும் 'பகை நட்பாக் கொண்டொழுகும்' என்றார். 'பண்புடைமை' அதிகாரம் குறிக்கப்பட்டது. 'நட்பு' முதலிய அதிகாரங்கள் நினைத்தற்குரியன. பண்புடையவன் பெருமையின் கீழே உலகம் தங்கும் என்பதாம். 'தங்கும் உலகு' (389) என்பதுபோல இங்கே 'தங்கிற்று உலகு' என்று கூறினார். இந்த இரு குறட்பாக்களிலும் பண்புடைமையின் சிறப்பு உயர்த்தப்பட்டது.

**875 தன்துணை இன்றால் பகைஇரண்டால் ...**

போர் செய்யும் திறன் கூறப்பெற்றது. அந்த நேரத்திற்குத் துணையாகக் கொள்க என்பதே இதன் கருத்து. அதனால் 'இன்துணை' என்றார். இருவரோடு பகை கொள்ளுதல் ஆகாது. 'அவற்றின் ஒன்று' என்பதை உணர்க.

நட்பாக்கிக் கொள்ள வேண்டிய பகைத்திறன் — படைத்திறன் குறிக்கப்பட்டன. அப்போதைக்கு இனிய துணையாகக் கொள்க என்பது குறித்துக் கொள்க என்றார். அழிவின் கண் என்று குறிப்பிட்டதால் அவ்வாறு நடந்து கொள்ள வேண்டிய காலம் குறித்தார்.

**876 தேறினும் தேறா விடினும் ...**

நடுவு நிலைமையாக அவனை வைத்துத் தான் நடந்து கொள்ள வேண்டிய காலம் உணர்த்தப்பட்டது.

முன் தெளிந்தானாயினும் அப்போது கூடாதொழிக என்பது, உள்ளாய் நின்று கெடுத்தல் நோக்கி தெளிந்திலனாயினும் அப்போது நீக்காதொழிக என்பது அவ்வழிவிற்குத் துணையாதல் நோக்கி என்பதாம்.

**877 நோவற்க நொந்தது அறியார்க்கு ...**

நண்பர்களிடமும் பகைவர்களிடமும் நடந்து கொள்ள வேண்டிய முறைகளைக் குறிப்பாகப் போர் செய்யும் காலத்தினை மனத்திற் வைத்துச் சிறப்பாக ஆட்சியாளர்கட்குக் கூறினார். அறியாதார்க்கு வருத்தமுற்றுச் சொல்லா தொழிக என்பதும், பகைவர்களிடம் தமது மெலிவினைக் கூறாதொழிக என்பதும் கருத்து. பகைவர்களிடத்தில் கூறக் கூடாதவற்றைச் சொல்ல வந்த ஆசிரியர் நண்பர்களிடத்தில் தெரிவிக்கக் கூடாதவைகளையும் எடுத்துச் சொன்னார்.

**878 வகையறிந்து தன்செய்து தன்காப்ப ...**

வகையென்பது தான் வலிமை மிகுந்தவனாக இருக்கும் போது எதிரே போர் செய்தலும், மெலியனாகிய அளவில் போர் விலக்கலும் ஆம். தாம் அமைதியாக இருக்கின்றோமென்று எண்ணிப் பகைவர்கள் அடையும் களிப்பினைச் செருக்கு என்றார்.

**879 இளைதாக முள்மரம் கொல்க ...**

களையப்பட வேண்டிய பகையை அது மெலிதாக இருக்கும்போதே களைதல் வேண்டும். அல்லாமல் வலிதாய காலத்துக் களைய முற்பட்டால் தம்மை அதுவே களைந்து விடும் என்றார். களையும் பருவம் உணர்த்தப்பட்டது. கொல்க, கொல்லும் என்பன சிந்தனைக்குரியன.

**880 உயிர்ப்ப உளரல்லர் மன்ற ...**

இகழ்ச்சியால் தமது பகைவர்களின் தருக்கினை அழிக்காதவர்கள் கெடுவர். அப்படிச் செய்யாது விட்டவர்கள் அப்பகைவர் மூச்சு விட்டாலே இறப்பர் என்பதாம். ஆகவே,

'உயிர்ப்ப உளரல்லர்' என்று குறித்துக் காட்டினார். களையாதவழி வரும் குற்றம் நினைவுறுத்தப்பட்டது. **செய்தக்க வல்ல செயக் கெடும்** (466) என்றதைச் சிந்திக்க. அவர் வலியராய் தம்மைக் களைதல் உறுதியானபடியால், இறந்தாரேயாவர் என்றார்.

## 89 உட்பகை

**881 நிழல்நீரும் இன்னாத இன்னா ...**

நான்கு முறை 'இன்னா' என்று கூறப்பட்ட முறை சிந்திக்கத்தக்கது. இது 'உட்பகை' அதிகாரம். 'நோய்' என்பது பெருங்கால், பெருவயிறு முதலியன. **தமர்** என்றதனால் உட்பகை யாதற்கு உரியராய சுற்றமும் உறவும் என்பது அறிக. **இன்னாசெய்தல்** என்பது முன் வெளிப்படாதிருந்து காலமும் வாய்ப்பும் வந்தபோது கெடுத்தல் என்பதாம். புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து, அதை வெல்லும் துணையும் உள்ளாய் நிற்கும் பகைக்கு உட்பகை என்று பெயர். இந்த ஓர் அதிகாரத்தில் மட்டும் ஏழு உவமைகள் இருப்பது சிந்தித்துச் சுவைக்கத்தக்கது.

**882 வாள்போல் பகைவரை அஞ்சற்க ...**

முன்னே அறிந்து காக்கப்படுதலால் **அஞ்சற்க** என்றார். அவ்வாறு அறியவும் காக்கவும் படாமையின் கெடுதல் உறுதியானபடியால் **அஞ்சுக** என்றும் கூறினார். **கேள்போல் பகைவர்** என்பதை எண்ணித் தெளிக.

**883 உட்பகை அஞ்சித்தற் காக்க ...**

'காக்க' என்பது, அவரை அணையாமலும் அவர்க்கு உடன்படாமலும் இருத்தலாகும். மண்ணைப் பகுக்குங்கருவி' 'மட்பகை' எனப்பட்டது. பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலின், கெடுதல் தப்பாது என்பதாம்.

**884 மனம்மாணா உட்பகை தோன்றின் ...**

உட்பகை தோன்றிவிட்டால் அது சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறுபடுத்தும். அவர்கள் வேறுபட்ட வழி மன்னன் உணர்ந்துகொள்ள முடியாதவன் ஆவான். அவற்றால் பற்பல தீமைகள் உண்டாகும். 'மாணா' என்று இருமுறை கூறினார். மாணார்க்கு அரிது' (823) என்பதும் சிந்திக்கத்தக்கது. 'ஏதம் பலவும்' என்பது, சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறுபடுத்தலும், அதனால் அவர் வேறுபட்டவழித் தான் தேறாமையும், பின் அவற்றின் விளைவுகளுமாம்.

**885 உறல்முறையான் உட்பகை தோன்றின் ...**

முந்தைய குறட்பாவில் கூறியது போலவே, இங்கும் 'ஏதம் பலவும் தரும்' என்றார். புறப்பகைக்குத் துணையாய் நின்று அது தோன்றாமல் கொல்லுதல் முதலிய வஞ்சனைகள் செய்தல், அமைச்சர் முதலிய உறுப்புக்களைத் தேய்த்தல் போன்றனவாம். 'உறல்' என்றது தம்மோடு வந்து உறுதல் என்றது. முறைமை என்பது மரபு. 'இறல்' என்பது உயிர்க்கும்

பொருட்கும் இறுதி வருதல். முந்தைய குறட்பாவில் 'மனம் மாணா', 'இனம் மாணா' என்று அமைத்துக் காட்டியதுபோல, இங்கே **உறல் முறையான், இறல் முறையான்** என்றார். இரண்டு குறட்பாக்களும் 'ஏதம் பலவும் தரும்' என்றே முடிந்தன.

**886 ஒன்றாமை ஒன்றியார் கண்படின் ...**

பொருள், படை முதலிய உறுப்புக்களால் பெரியனாய காலத்தும் என்பார் 'எஞ்ஞான்றும்' என்று கூறினார். அப்படிப்பட்ட உட்பகையினர் தோன்றி விட்டால் தலைவன் இறவாதிருத்தல் என்பது இயலாது. அவனுக்குக் கொடிய தீங்கு வந்தே தீரும் எனப்பட்டது.

**887 செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் ...**

செப்பு மூடியோடு புணர்ந்த புணர்ச்சியினைச் 'செப்பின் புணர்ச்சி' என்றார். 'கூடினும் கூடாதே' என்பது சிந்தனைக்குரியது. செப்பும் மூடியும் போலக் கூடியிருந்தும் செப்பு இரண்டானாற் போல உட்பகையினர் இப்படி இருந்தும் பிரிந்திருப்பவரேயாவர் என்பதாம். 'குடி' என்பது 'குடிமை', 'குடி செயல் வகை' முதலிய அதிகாரங்களை நினை படுத்திக் கொள்ள உதவும். உட்பகை உண்டாயினோர் குடி எப்போதும் பகையுடனேயே இருக்கும் என்பதாம்.

**888 அரம்பொருத பொன்போலத் தேயும் ...**

முந்தைய குறட்பாபோல இக்குறட்பாவும் 'உட்பகை உற்ற குடி' என்று முடிந்தது. காரியம் செய்வது போன்று பொருந்தி, மெல்ல மெல்லப் பிரியச் செய்தலால் வலிமை தேய்ந்து விடும் என்பதாம். 'பொருத' என்பதனை இருமுறை சுட்டிக் காட்டினார். உட்பகை அழகு செய்வதுபோலப் பலத்தைக் கெடுக்கும் என்பது சிந்தித்தறிய வேண்டியதாகும்.

**889 எட்பகவு அன்ன சிறுமைத்தே ...**

சிறிது என்று இகழப்படாது என்பது கூறப்பட்டது. எள்ளின் பாதியளவே ஆனாலும் அந்த உட்பகையாலே கேடு வரும். பெருமையெல்லாம் அழிய வருங் கேடு அதன் உள்ளே உள்ளது. எத்துணையும் பெரிதாய கேடு, தனக்கு எல்லை வருந்துணையும் சிறிதாய உட்பகையுள்ளே அடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டு நிற்கும் என்பதாம்.

**890 உடம்பாடு இலாதவர் வாழ்க்கை ...**

அவனுக்கு இறுதி வருதல் உறுதி என்பது கூறப்பட்டது. மனத்தினால் பொருத்தம் இல்லாதாரோடு ஒத்து வாழும் வாழ்க்கை, சிறிய ஒரு குடிசைக்குள்ளே பாம்போடு கூடி வாழ்ந்தாற் போலாகும் என்பதாம். இறப்பது உறுதி என்பதும் மன அமைதி எப்போதுமே இல்லை என்பதும் உணர்த்தப்பட்டன. இடம் சிறுமையானும் பயிற்சியானும் பாம்பால் கொல்லப்படுதல் உறுதி என்பதாயிற்று. இந்த உவமையால் அவன் உயிருக்கு இறுதி வருதல் உறுதியாயிற்று.

## 90 பெரியாரைப் பிழையாமை

**891 ஆற்றுவார் ஆற்றல் இகழாமை ...**

ஆற்றல் என்பது பெருமை, அறிவு, முயற்சி முதலியனவாம். 'பெரியாரைத் துணைக் கோடல்' என்ற அதிகாரமும் இருக்கின்றது. இகழ்ந்தால் அழிக்க வல்லார் என்பது தோன்ற ஆற்றுவார் என்றார். அரண், படை, பொருள், நட்பு முதலியன பிற காவல்கள் ஆகும். இவை அவரால் அழியு மாதலால் இகழாமையைத் தலையாய காவல் என்றார். தவத்தினாலும் பிற வலிமையினாலும் பெரியராயினார் என்பதாம். ஆற்றல் மிக்கார் அரண், பொருள், படை, நட்பு முதலிய அனைத்தையும் அழிப்பதால் அவர்களை இகழாதிருத்தலே தலையாய காவல் என்று கூறினார்.

**892 பெரியாரைப் பேணாது ஒழுகின் ...**

'ஒழுக்கமுடைமை', 'இடுக்கணழியாமை' முதலியவற்றை நினைவில் கொள்க. பெரியாரைப் போற்றி ஒழுகாதவர் துன்பங்களைத் தாமே செய்து கொள்ளுகின்றனர் என்பதாம். 'பேரா இடும்பை' சிந்திக்கத்தக்கது.

**893 கெடல்வேண்டின் கேளாது செய்க ...**

'அடல் வேண்டின்' என்பது பெரியார்களின் தலையான ஆற்றலினைக் குறித்து நின்றது. பெரியோர்களைக் கேளாது செய்தால் கெடுவான் என்பது உறுதி. தான் வாழ வேண்டின் பெரியோர் வார்த்தைகளைக் கேட்க வேண்டும் என்பது உறுதியாயிற்று. தன்னைவிடப் பன்மடங்கு ஆற்றல் உள்ளவர்கள் அழித்தே தீருவர் என்ற உறுதிப் பாட்டினை உணர்த்தவே 'கெடல் வேண்டின்' என்றார். அவ்வாறு விரும்புதல் யாருக்கும் இருக்கக் கூடாது என்பது குறிப்பு.

**894 கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ...**

'இன்னா செய்யாமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தற் குரியது. 'கையால் விளித்தல்' என்பது இகழ்ச்சிக் குறிப்பாயிற்று. வலிமை நிறைந்த வேந்தர்களுக்குக் குற்றம் செய்தலால் வரும் தீமை உணர்த்தப்பட்டது. கூற்றத்தைக் கூப்பிடுகிறவன் இனிமேல் உயிர் வாழ மாட்டான் என்பதாம்.

இகழ்ச்சிக் குறிப்பால் உணர்த்த வேண்டியே 'கையால் விளித்தற்று' என்றார். தாமாக மேல் வந்து உயிர் முதலிய கொண்டு போவதற்குரியவரை அதற்கு முன்னே விரைந்து தம்மேல் வருவித்துக் கொள்வர் என்றார். படைகளின் வீரத்தின் உயர்ச்சியினைப் பேசவந்த இடத்தில் 'கூற்றுடன்று மேல் வரினும்' (765) என்று அமைத்துக் காட்டினார்.

**895 யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் ...**

வலிமை நிறைந்த வேந்தனுடைய கோபத்திற்கு ஆளானவர்கள் வேறு எங்கு சென்றாலும் சென்ற இடத்திலும் இடம் கொடுக்கப்படார் என்பதாம். 'வெந்துப்பின் வேந்து'

என்பது நன்கு சிந்திக்கப்பட வேண்டியது. தம் நிலம் விட்டுப் போனவர்கட்கு இடம் கொடுப்பார் யாரும் இல்லை ஆதலால் 'யாண்டும்' என்றார்.

**896 எரியால் சுடப்படினும் உய்வுஉண்டாம் ...**

தீ முன்பாக உடலினைச் சுட்டுப் பிறகு அது வழியாக உயிர்மேல் செல்லுமாதலால் இடையே உய்யவும் கூடும்; தப்பித்துக் கொள்ளவும் முடியும். அருந் தவத்தோர் கோபம் அப்படிப்பட்டதல்லாமல் தான் நிற்பது கண நேரமானாலும் அதற்குள்ளே யாவர்க்கும் காத்தலரிது என்பதாயிற்று. 'கணமேயும் காத்தலரிது' (29) என்பதைக் கருதுக.

**897 வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் ...**

வினா முறையில் பாடல் அமைந்துள்ளது. 'செறின்' என்றதால் அவர் செறாமை தோன்ற நின்றது. அமைச்சு, நாடு, அரண், படை முதலியன வகைமாண்ட வாழ்க்கையினைக் குறித்தனவாம். 'வெகுளாமை', 'பொருள் செயல் வகை' முதலிய அதிகாரங்கள் குறிப்பால் உணர்த்தப்பட்டன. அருந்தவத்தோர் வெகுளித் தீயால் அனைத்தும் கணத்துள்ளே வெந்து விடும். செல்வக் களிப்பால் அருந்தவத்தோர்க்குக் குற்றம் புரியாதே என்பதாம். நாட்டுத் தலைவனாகிய மன்னவன் செல்வக் களிப்பால் தவமுனிவர்களின் கோபத்திற்கு ஆளாகக்கூடாது.

**898 குன்றன்னார் குன்ற மதிப்பின் ...**

'குணமென்னும் குன்றேறி நின்றார்' (29) என்னும் குறட்பா சிந்தனைக்குரியது. உற்ற நோய் நோற்று வந்த துன்பம் அனைத்தும் தாங்கியவர் தவத்தோர் ஆதலால் 'குன்றன்னார்' என்றார். தமது குடியுடன் அப்போதே மடிந்துவிடுவர் என்பதாம். வெயில், மழை முதலிய பொறுத்தலும் சலியாமையும் உள்ளிட்ட குணங்கள் உடைமையின் 'குன்றன்னார்' என்றார். 'உற்ற நோய் நோன்றல்' (261) என்பதையும் காண்க.

**899 ஏந்திய கொள்கையார் சீறின் ...**

உயர்ந்த தவத்தோர்களை 'ஏந்திய கொள்கையார்' என்று குறித்தார். 'கொள்கை' என்பது சித்திக்கத்தக்கது. 'வெகுளாமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. 'வேந்தனும் இடைவேந்து முரிந்து கெடும்' என்று அமைத்தார். முனிவர்களின் சினத்திற்கு ஆளாகக் கூடாது என்பது உணர்த்தப்பட்டது. 'ஏந்திய' என்பது மிகுந்தவர் என்பதாம். முனிவர்களின் கடுங் கோபம் பலித்தே தீரும் என்பது கூறப்பட்டது. முனிவர்களின் தவ வலிமைக்குப் பயன் இருந்தே தீரும். இவ்வதிகாரம் ஆற்றல் மிகுதியாகப் படைத்த மன்னர்களின் கோபத்திற்கும் முனிவர்களின் கோபத்திற்கும் ஆளாகக் கூடாது என்பதனைக் கூறிற்று.

**900 இறந்துஅமைந்த சார்புடையர் ஆயினும் ...**

உய்யார் என்று 896ஆவது குறட்பாவில் கூறியதுபோல இங்கும் குறித்தார். முந்தைய குறட்பாவில் 'சீறின்' என்றார். இக்குறட்பாவிலும் 897ஆவது குறளிலும் 'செறின்' என்றார். அரண், படை, பொருள், நட்பு முதலியன 'சார்பு' என்பதால் குறிக்கப்பட்டன. சீருடையது

'சீர்' எனப்பட்டது. கழிய — மிக்க தவத்தினையுடையவர்களின் பெருஞ்சிறப்பு எடுத்துக் காட்டப்பட்டது. சார்புகள் எல்லாம் வெகுண்டவரது ஆற்றலால் அழிந்துவிடுவதால் 'உய்யார்' என்றார்.

## 91 பெண்வழிச் சேறல்

### 901 மனைவிழைவார் மாண்பயன் எய்தார் ...

இன்பம் காரணமாக மனையாள் வழி ஒழுகுதல் தவறு என்று குறிக்கப்பட்டது. ஒருவன் கழிபெருங் காமத்தானாக இருக்கக்கூடாது. அளவு கடந்த காமம் அறத்திலும், அவ்வறத்திற்கும் தனக்கும் காரணமான பொருளிலும் செல்லவிடாமல் தடுக்கும் என்பதாம். அவள் தன்மையராதற்குக் காரணம் இன்பம் எனப்பட்டது.

காமம் மிகுதியால், தன்வழி ஒழுகற்பாலதாகிய இல்லாள் வழியே தான்ஒழுகுதல். மனைவியின் சிறப்புக் கடமைப் பண்புகளைக் கூறுவது 'வாழ்க்கைத் துணை நலம்' ஆகிய அதிகாரமாகும். இன்பம் காரணமாக அவள் வழி நின்றவர், அறத்தினும் பொருளீட்டலிலும் செல்லமாட்டாமல் இருப்பர். அத்தகையது விடற்பாலதாம்; 'விழைவார்' என்பதைக் கருதுக.

### 902 பேணாது பெண்விழைவான் ஆக்கம் ...

இன்பங்காரணமாக அவள்தன்மையனாகலின் ஆண் தன்மையினையும் இழந்தவனாகின்றான் என்பதாம். அவனுடைய ஆண்தன்மை அவளுடையதாயிற்று என்று ஆண்பாலார் யாவரும் நாண, அதனால் தன் ஆண்மையின்மை அறிந்து பின் தானும் நாணமடைவான் என்பது நோக்கிப் பெரியதோர் நாணாக நாணுத்தரும் என்றார். இதனால் 'நாணுடைமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. அச்செல்வத்தால் ஈதலும் துய்த்தலும் முதலிய பயன் கொள்வாள் அவளேயாவாள். ஆண்மைச் செய்கை இழந்தவனாவான்; பலரும் நாண இவன் செய்பவனானான். 'விழைவான்' என்பதைக் கருதுக.

### 903 இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை ...

மனையாளிடத்தில் தாழ்ந்து பணிந்து நடத்தல் மனையாளுக்கும் மகிழ்ச்சியளிக்காது என்பது உணர்த்தப்பட்டது. ஆண்மையினையே அவளும் விரும்புவாள்; இவன் கழிபெரும் காமத்தான் ஆதலால் 'தாழ்ந்த' என்று கூறினார். உலகியல் பண்பிற்கு முரணானது என்பது தோன்ற 'இயல்பு இன்மை' என்றார். முந்தைய குறட்பாவில் 'நாணாக நாணுத் தரும்' என்றார். இங்கு 'நல்லாருள் நாணுத்தரும்' என்றார். அவளுக்கு அஞ்சி ஒழுகினால் அவனை நியமிப்பாரில்லை என்று ஆகும். ஆதலால் எல்லாக் குற்றமும் விளையும் என்பது நோக்கி எஞ்ஞான்றும் நாணுத்தரும் என்றார். இக்குறட்பாவில் 'தாழ்ந்த', 'இயல்பின்மை' என்பவை சிந்திக்கத்தக்கன. தாழ்தல் என்பது அச்சத்தை உணர்த்திற்று; அஞ்சி ஒழுகுதலாம்.

### 904 மனையாளை அஞ்சும் மறுமை ...

அஞ்சி நடப்பவன் இழிவு உணர்த்தப்பட்டது. அவனுக்கு மறுமையின்பம் என்பதும் இல்லையாகும். அவனுக்குத் தொழில் செய்யும் திறனும் இல்லாமற்போகும் என்பதாம்.

வினையை ஆளும் தன்மை, தன்தன்மை இல்லாத அவனால் நிறைவேற்ற முடியாது. ஆதலால் 'வீறு எய்தல் இன்று' என்று கூறினார். 'ஆண்மை' என்பது சிந்தனைக்குரியதாகும். 'மறுமை' விளக்கம் கண்டு தெளிக; 'மனையாளை அஞ்சும்' என்பது சிந்திக்கத்தக்கது.

**905 இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற்று ...**

முந்தைய குறட்பாவில் குறித்ததுபோல இங்கும் 'அஞ்சுவான்' என்றார். 'நல்லார்' என்பது சான்றோர், அருந்தவத்தோர், பெற்றோர், விருந்தினர் முதலியவர்களாம். 903ஆவது குறட்பாவில் உள்ளதுபோல, இங்கும் 'எஞ்ஞான்றும்' காணப்பட்டது. 'இருமை' அவன் அஞ்சுவதென்பது குறிக்கப்பட்டது. நல்லவர்கட்கு நன்மை செய்வதற்கும் அஞ்சுவோனால் செய்ய முடியாமற்போகும்; பெற்றோர்கட்கும் நல்லது செய்ய அஞ்சுவான்; அஞ்சுதல் கூடாது.

**906 இமையாரின் வாழினும் பாடிலரே ...**

'பீடு நடை' என்று (59) குறித்துக் காட்டியதைப் போல இங்குப் 'பாடு இலர்' என்று கூறினார். இக்குறட்பாவிலும் 'அஞ்சுபவர்' என்றார். மென்மை பொருந்தியவள் என்பது தோன்ற 'அமையார் தோள்' என்றார். அவளுக்கு அஞ்சுகின்றானே என்பது குறிப்பாகும். பகைத்த வீரர்களை வென்று வீரத்தால் மதிக்கப்பட்டவன் என்பது தோன்ற 'வாழினும்' என்றார். மிகுந்த இன்பத்தில் வாழ்கின்றவர்கள் 'இமையவர்கள்' என்பது உலகப் பழக்கத்தில் நிலவிய கருத்தாகும். ஆதலால் அதனைச் சுட்டிக்காட்டி இழிவினை உணர்த்தினார். அத்தகையவன் ஆண்மையில்லாதவன் என்பதாம். தேவர்கள் என்பது இன்பத்தினையே குறிக்கோளாகக் கொண்டு நினைத்தவாறு வாழ்பவர் என்பது உலகியல் வழக்காகும். இமையார் என்பவர்கள் அவர்களே, மனைவிக்கு அஞ்சி வாழ்பவன் ஆண்மையில்லாதவனாவான்; அஞ்சி வாழ்தல் தீமை.

**907 பெண்ஏவல் செய்தொழுகும் ஆண்மையின் ...**

மனைவியிட்ட வேலையினைச் செய்பவன் என்று குறித்துக்காட்ட 'ஏவல்' என்றார். இதுவும் கழிபெருங்காமத்தானுடைய செயலாகும்; ஏனெனில் அவன் ஆண்மையில்லாதவனாவான். இதனால் 'நாணுடைமை' அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. வேலை வாங்கும் திறமையினை நோக்கிப் 'பெண்ணே' எனப் பிரித்துக் காட்டினார். 'ஒழுக்கமுடைமை' அதிகாரம் குறிக்கப்பட்டது. 'பெருமை' என்ற பெயரில் தனி அதிகாரம் ஒன்று உண்டு. 'ஏவல் செய்து ஒழுகுதல்' சிந்தனைக்குரியதாகும். மனைவியின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடத்தல் இழிவினைத் தரும். ஆண்மை பின்மை உணர்த்தும்; இயற்கைக்கு மாறானதுமாகும்.

**908 நட்டார் குறைமுடியார் நன்றுஆற்றார் ...**

அழகும் மென்மையும் தோன்ற 'நன்னுதலாள்' என்று கூறினார். 'அமையார் தோள்' (906) என்று கூறியது போல இங்கும் கூறினார். 'நட்பு' வகை அதிகாரங்கள் நினைவு படுத்தப் பட்டன. 'பெட்டாங்கு ஒழுகுபவர்' என்பது சிந்தனைக்குரியது. அவள், தானே அறிந்து ஏவலும் பொருள் கொடுத்தலும் செய்கின்றாளாதலால் 'செய்யார்', 'ஆற்றார்' எனக் கூறினார்.

'பெட்டாங்கு ஒழுகுபவர்' என்பது கருதற்பாலது. அவன் தானே அறிந்து ஏவலும் பொருள் கொடுத்தலும் கூடாமையின், இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டார் என்பதாம்.

**909 அறவினையும் ஆன்ற பொருளும் ...**

மனைவியின் கட்டளைப்படி நடப்பவன் என்பதற்காகப் 'பெண் ஏவல் செய்வார்' என்று கூறினார். தான் நுகருகின்ற இன்பமும் நுகரமுடியாது என்பது தோன்ற 'பிறவினையும்' என்றார். புலன்கள் ஐந்து ஆகலின் 'பிறவினை' என்று பன்மையாற் கூறினார். எல்லா வற்றிற்கும் அவன் தலைமையானபடியால் 'இல்' (இல்லை) என்று கூறி முடித்தார். 'பெண் ஏவல் செய்பவர்' சிந்திக்கவும்; மனைவிபால் இவன் இன்பச் செயல்களும் இருக்காது என்பது நோக்கிப் 'பிறவினையும்' என்றார். அறச்செயல்களும் இவனால் நடத்த முடியாதாம்.

**910 எண்சேர்ந்த நெஞ்சத்து இடன்உடையார்க்கு ...**

முந்தைய குறட்பாக்களில் குறித்துக் காட்டியது போல 'எஞ்ஞான்றும்' என்றார். 'பேதைமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. சிறப்பாகவும் குறிப்பாகவும் தலைவர் கட்குக் கூறவேண்டி 'எண்சேர்ந்த நெஞ்சம்' என்றார். சிந்தனை, சூழ்ச்சி, செயல் புரிதல் முதலியவற்றில் செல்லும் நெஞ்சம் என்பதாயிற்று. இத்தகைய நெஞ்சம் உடையவர்கள் கழிபெருங் காமத்தால் தவறு செய்யமாட்டார்கள் என்பதாம். ஆகவே, 'பெண் சேர்ந்தாம் பேதைமை' என்றார். நற்குண நற்செயல்களைப் பெற்றிருந்து தன்னைக் கொண்டவனைச் சார்ந்து ஒழுகுவதே இயல்பான இல்லற முறையும் மனைவியின் கடமையுமாகும். பேதைமை என்பது விழைதல், அஞ்சல், ஏவல் செய்தல் என்ற மூன்றற்கும் காரணமாயிற்று. இல்லறமுறைக்கு மாறான தன்மைகளும் செயல்களும் இவ்வதிகாரத்தால் கூறப்பட்டன.

## 92 வரைவின் மகளிர்

**911 அன்பின் விழையார் பொருள்விழையும் ...**

அதிகாரத்திற்கேற்பப் 'பொருள் விழையும் ஆய் தொடியார்' என்று குறித்துக் காட்டினார். 'அன்புடைமை' அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'இனியவை கூறல்' அதிகாரத்தையும் சிந்திக்க. ஆய்ந்த தொடியினை உடையார் என்றதாலும், இனியசொல் என்றதாலும் அவர்களுடைய கருவி கூறப்பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிது போன்று தோன்றினாலும் பின் வறுமை பயத்தலின் அது கொள்ளற்க என்பதாம். ஆவார், ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு 'அன்புடைமை', 'பொருள் செயல்வகை' முதலிய அதிகாரங்களால் குறிக்கப்பட்டன. இனிய சொல் அவர்களுடைய கருவிகளுள் ஒன்றாகும். ஆதலால் 'இன்சொல் இழுக்குத் தரும்' என்றார்.

**912 பயன்தூக்கிப் பண்புஉரைக்கும் பண்புஇல் ...**

பண்பு சொல்லில்தான் காணப்படுமேயல்லாமல் அவர்கள் உள்ளத்தில் இல்லாதபடியால், 'பண்பு இல் மகளிர்' என்று கூறினார். அது அவர்களுடைய குலத்திற்கு ஏற்றதென்பதை அறிய வேண்டும் என்பதற்காக 'நயன்தூக்கி' என்றார். இருமுறை 'தூக்கி' என்றார்; சிந்திக்கவும்.

வரைவின் மகளிர் எல்லாம் பண்பு இல் மகளிராவர். 'பண்புரைக்கும் பண்புஇல் மகளிர்' என்றார்.

**913 பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் ...**

பொருட்பெண்டிர் என்பது பொருளுக்காகத் தழுவுகின்ற மகளிராவர். அவர் செயல் கூலிக்குப் பிணம் தூக்குவோர் யாதொரு தொடர்பும் எண்ணமும் கொள்ளாது எடுப்பது போன்றதாகும். ஆகவே 'இருட்டறை' என்றார்; 'ஏதில் பிணம்' என்றார். உள்ளத்தில் நினைக்காமல், உடம்பால் தழுவுபவர்கள் என்பதாம். பொருள் ஒன்றினையே கருதும் மகளிர் ஆதலால் அவர்களைப் பொருட் பெண்டிர் என்றே அழைத்தார். அவர்களைத் தழுவும் எண்ணம் ஒருவர்க்கு வரவே கூடாது; இவ்வுவமை இழிவினைக் குறித்தது.

**914 பொருட்பொருளார் புன்னலம் தோயார் ...**

'பொருட்பொருள்', 'அருட்பொருள்' என்று பிரித்துக் காட்டினார். 'புன்மை' என்பது இழிந்தார்க்கே உரியதாகும் என்பதைக் குறித்ததாகும். 'தோயார்' என்பது சிந்தனைக்குரியது. தோய்பவர்கள் யாவர் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'அறிவுடைமை' அதிகாரம் குறிக்கப்பட்டது. அறம் முதலிய நான்கும் பொருள் எனப்படுதலின் 'பொருட்பொருள்', 'அருட்பொருள்' என்று கூறினார். 'தோய்வார்' என்பதை மறுத்துத் 'தோயார்' என்றார்.

**915 பொதுநலத்தார் புன்னலம் தோயார் ...**

முந்தைய குறட்பாவில் குறித்ததுபோலவே இங்கும் 'தோயார்' என்றார். முன் குறட்பாவில் 'ஆயும் அறிவினவர்' என்றார். இங்கு, 'மதி நலத்தின் மாண்ட அறிவினவர்' என்றார். 'மதி நன்மை' என்பது முற்பிறப்புக்களில் செய்த நல்வினைகளால் மனம் தெளிதல் என்பதாம். அவ்வாறில்லாமல், வெறும் கல்வியறிவு மாட்சிமைப்படாமையின் 'மதி நலத்தின் மாண்ட அறிவினவர்' என்றார். மதிநலம் இயற்கைச் சிறப்பினால் ஏற்படுவதுமாகும். அம்மகளிர் 'பொது நலத்தார்' எனப்பட்டார். முன்பு கூறியது போலவே 'புன்னலம் தோயார்' என்றார். அங்கே ஆயும் அறிவினவர் என்றார். இங்கே மாண்ட அறிவினவர் என்று கூறினார். மனத்தெளிவு 'மதிநலம்' என்பதால் குறிக்கப்பட்டது.

**916 தம்நலம் பாரிப்பார் தோயார் ...**

ஆடல், பாடல் முதலிய செயல்கள் அவர்கட்குச் சிறப்பாதலால் 'தகை' என்றார். தோய்ந்தால் அறிவொழுக்கங்கள் அழியும் ஆதலால் அவற்றால் புகழ்பரப்புவோர் 'தோயார்' என்றார். 'பாரிப்பார்' சிந்தனைக்குரியது. அழகினால் களிப்புற்றுத் தமது புல்லிய நலத்தை எல்லாருக்கும் பரப்புவார் 'தோள்' என்பதாம்.

'தம்நலம் பாரிப்பார்', 'புன்னலம் பாரிப்பார்' — இவைகளைச் சிந்தித்தறிக.

**917 நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் ...**

பொருளும் அதனால் செய்யப்படுவதையும் நன்குணர்ந்த நெஞ்சினர், புணர்வது உடம்பு மாத்திரம் என்பதறிந்து அதன் வழி ஓடாது நிற்கும் நெஞ்சினையுடையார் தோயாமையின், அஃதிலார் 'தோய்வர்' என்றார். 'நிறை நெஞ்சம்' என்பது சான்றோர்

களைக் குறித்து நின்றது. காமத்துப்பாலில், 'நிறையழிதல்' என்றோர் அதிகாரம் உண்டு. உள்ளம் ஓரிடத்திலும் உடம்பு வேறோர் இடத்திலும் வைத்திருக்கும் மகளிர் என்பதாம். 'நிறை' என்பது கற்பு, சான்றாண்மைகளைக் குறிக்கும். பொருளும் அதனால் படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்சுடைய மகளிர், நெஞ்சு பொருந்திப் பிறருடன் இன்பம் துய்ப்பவர்கள் அல்லர்.

**918 ஆயும் அறிவினர் அல்லார்க்கு ...**

காமநெறியால் உயிர் கொள்ளும் தெய்வமென்பது உலக வழக்கு. ஆதலால் 'அணங்கு' என்றார். 914, 915 குறட்பாக்களில் கூறியதுபோல இங்கும் 'ஆயும் அறிவினவர்' என்றார். முன்பு இனிதுபோல் இருந்து பிறகு உயிரையும் கொள்ளும் என்பதாம். உலகில் உயர்ந்தோர் கூறுவதையும் நூலோர் கூறுவதையும் ஆராய்ந்தறிந்து கூறுவது ஆசிரியர் முறையாதலால் 'என்ப' என்று குறித்தார். முந்தைய குறளில் 'நிறை நெஞ்சம் இல்லவர்' என்றார். இங்கு 'ஆயும் அறிவினர் அல்லார்' என்று கூறினார்.

**919 வரைவுஇலா மாணிழையார் மென்தோள் ...**

'வரைவுஇல் மகளிர்' என்ற இந்த அதிகாரத்திற்கேற்ப 'வரைவு இலா மாணிழையார்', 'பூரியார் கண்ணும் உள' (241) என்பது போல பூரியர்கள் 'ஆழும் அளறு' என்றார். 'அளறு' என்பது துன்பம் நிறைந்த நிலைமை என்பதாம். துன்பமான இடம் என்றும் உலக வழக்கில் 'நரகம்' என்றும் கூறப்படும். குற்றம் அறியாதவர்கள் ஆதலால், குற்றம் என்பதனைத் தெரிந்து கொள்ள முடியாதவர்கள் ஆதலால் 'புரையிலா பூரியார்கள்' என்றார். ஆழ்தற்குக் காரணம் கூறவேண்டி 'மாணிழையார்' என்றார்; 'அளறு' என்று அழைக்கப்பட்டது. இது துன்பம் நிறைந்த இடம் என்பதாகும். முன்னர் கூறியது போலவே 'புரையிலா பூரியார்கள்' என்றார். 'ஆழும் அளறு' சிந்தித்தறிக. 'வரைவு இலா மாணிழையார் மென்தோள்' என்பதால் அவர்களின் உருவம் உணர்த்தப்பட்டது.

**920 இருமனப் பெண்டிரும் கள்ளும் ...**

ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒருகாலத்திலேயே உடைய மனம் என்பதாம். 'சூது', 'கள்ளுண்ணாமை' முதலிய அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. உருவகமாகக் கூறுதல் ஆசிரியர் மரபு. ஆதலால் செல்வத்தினை 'திரு' (திருமகள்) என்றார். இம்மூன்றும் திருமகளால் நீக்கப்பட்டவர்களுக்குத் தொடர்பு உடையவை. அடுத்து வருகிற அதிகாரம் 'கள்ளுண்ணாமை' அதற்கு அடுத்த அதிகாரம் 'சூது' என்பதாம்.

## 93 கள் உண்ணாமை

**921 உட்கப் படாஅர் ஒளியிழப்பர் ...**

அறிவின்மையால் பொருள், படை முதலியவற்றான் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார்; தம்முன்னோரானும் எய்தி நின்ற ஒளியினையும் இழப்பார் என்பதாகும். 'புகழ்' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. எல்லா நாளும் கள்ளின்மீது காதல் கொண்டு ஒழுகுவார் குற்றம் கூறப்பட்டது. 'உட்கப்படார்' என்பது, 'உட்கும் என்பீடு' (1088)

என்பதை நினைவு படுத்துவதாகும். அறிவு, மனம், ஒழுக்கம் என்பவற்றைத் திருடிச் செல்கின்ற அனைத்தும் 'கள்' என்பதில் அடங்கும். ஆகவே ஒருவர் 'கள்ளுண்ணாமை' வேண்டும் என்றார். கள்ளுண்பர் இழிநிலையில் வைத்துக் கருதப்படுவர். 'காதல்' என்பதைச் சிந்திக்கவும்.

**922 உண்ணற்க கள்ளை உணில்உண்க ...**

'சான்றாண்மை' அதிகாரம் சிந்திக்கத்தக்கது. பெறுதற்கு அரிய அறிவைப் பெற்றும் கள்ளால் அழித்துக் கொள்வாரை இயல்பாகவே அஃது இல்லாத விலங்குகளுடன் வைத்து எண்ண மாட்டார்களாம்; "சான்றோரால் எள்ளப்பட வேண்டாதார் உண்க" என்றார். மதியினை மயக்கி அறிவைக் கெடுக்கும் அனைத்தும் 'கள்' எனப்பட்டது. 'கள்வர்' என்பது திருடுபவர்கள் ஆவர்; அறிவையும் அனைத்தையும் கொண்டு செல்லுவது என்பதாம். ஆதலால் 'உண்ணுதல்' என்றார். 'கள்—தன்மை' உடைய அனைத்தையும் குறித்தது,

**923 ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் ...**

மனம், மொழி, மெய் ஆகியவை தமது வசமின்றிப் போதலால் 'நாணம்' அழியும் என்றார். அழியவே ஈன்ற தாய்க்கும் துன்பம் தருவதாயிற்று. அப்படியிருக்கவே சான்றோர்க்குத் துன்பம் கொடுப்பது என்பது இயல்பேயாகும். வினா முறையில் கருத்து அமைக்கப்பட்டது. பார்ப்பதற்கே துன்பமாகும் என்பதனை 'முகத்தேயும்' என்பதால் குறித்தார். 'முகத்தேயும்', 'முகத்து' என்பன சிந்தனைக்குரியன.

**924 நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் ...**

'நாணுடைமை', 'குற்றங்கடிதல்' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப்பட்டன. பார்ப்பதற்கும் பயந்து உலகத்தார் தூரத்திலேயே நீங்குவர் ஆதலால் 'பேணா' என்று கூறினார். ஒரு வகையாலும் சரிசெய்ய முடியாததால் 'பெருங்குற்றம்' என்றார். இழந்தவர் களிடத்தில் இராது ஆதலால் 'நல்லாள்' என்றார். உருவகப்படுத்திக் கூறுதல் இவர் மரபு ஆதலால், நாண் என்னும் குணம் பெண்ணாகக் கூறப்பட்டது. 'நாணுடைமை' என்றோர் அதிகாரம் உண்டு நாணம் இழந்துவிட்டால் அவன் இழிமகனாவான் என்பதாம்.

**925 கையறி யாமை உடைத்தே ...**

அறிவுடையவர்கள் விலைகொடுத்து ஒன்றினைக் கொள்ளும்போது தீயவற்றைக் கொள்ளார் ஆதலால் 'மெய்யறியாமை கொளல்' என்று குறித்தார். 'கையறியாமை', 'மெய்யறியாமை' என்பன சிந்தனைக்குரியன. 'கையறியாப் பேதை' (836) என்பதைச் சிந்திக்கவும்.

**926 துஞ்சினார் செத்தாரின் வேறுஅல்லர் ...**

உறங்கினார்க்கும் கள்ளுண்பார்க்கும் கண்ணால் வேற்றுமை உயிர்ப்பு நிற்றல் என்பதேயாகும்; உறங்கினாரும் நஞ்சுண்பாரும் ஒப்பர் எனினும் அமையும்; 'எஞ்ஞான்றும்' என்பதனைச் சிந்திக்கவும். அறிவு இல்லாததால் வேறு எனப்பட்டார் என்றார். அறிவினை இழப்பர் என்பதாம்.

**927 உள்ஒற்றி உள்ளூர் நகப்படுவர் ...**

இக்குறட்பாவிலும் 'எஞ்ஞான்றும்' என்று குறித்தார். தளர்ச்சியால் களிப்பினை உணர்ந்து அதனால் கள்ளுண்டதை உணர்வர் என்பதால் 'உள் ஒற்றி' என்றார். 'ஒற்றி' என்னும் சொல் 'ஒற்றாடல்' அதிகாரத்தில் அடிக்கடி வருதல் உணரத்தக்கது. 'கண்சாய் பவர்' சிந்திக்கவும். 'கண்ணின்காண நகுப' (1140) என்றார். இங்கு 'நகப்படுவர்' என்பது இழிவு கருதி. மறைந்து கள் உண்டாலும் ஊர் மக்கள் தெரிந்து கொள்வார்கள் என்பது குறிக்கப்பட்டது. இவனுடைய தளர்ச்சியால் கள்ளுண்ட களிப்பினைத் தெரிந்து அதனால் ஊர் மக்கள் நகுவர்.

**928 களித்தறியேன் என்பது கைவிடுக ...**

கள்ளுண்டால், மனத்தின் கண்ணே மறைத்து வைத்து இருந்தது வாய் சோர்ந்து புலப்படும்; ஆனால், கள்ளுண்பவர்களோ 'களித்தறியேன்' என்று கூறுவார்களாம்; இப்படிப்பட்டதைக் 'கைவிடுக' என்றார். இது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளு வதாகும். 'ஆங்கே மிகும்' என்பதால் களித்தது தெரிந்து விடும் என்றார். கள்ளுண்பார் எதையும் ஒளித்து வைத்திருக்க முடியாது. தான் உள்ளத்தில் மறைத்து வைத்ததெல்லாம் வெளிப்படக் கூறுவான் என்பது மட்டுமல்ல; அதனை மிகைப்படுத்திக் கூறுவான் என்பதும் குறிப்பு.

**929 களித்தானைக் காரணம் காட்டுதல் ...**

நீருள் விளக்குச் செல்லாததுபோல அவன் மனத்துள் காரணம் செல்லாது என்பதாம். ஆகவே, அவனைத் தெளிவித்து நல்லது ஏற்பச் செய்தல் முடியாது. 'கீழ் நீர்க் குளித்தான்' சிந்திக்கவும். குளித்தானைக் குடித்தானுக்கு உவமையாக்கினார். 'தீத்துரீயற்று' என்பதனைச் சிந்திக்க.

**930 கள்உண்ணாப் போழ்தில் களித்தானை ...**

இக்குறளில், வியப்புக்குறியும் வினாக் குறிப்பும் தோன்றக் கருத்தினை அமைத்தார். அவன் குற்றத்தினை உணர்ந்து அப்பழக்கம் நீக்கப்படுதற்கு வழி உணர்த்தப்பட்டது. குடிகாரன் தான் குடிக்காமல் இருக்கும்போது குடித்தவனைப் பார்த்தால் 'தானும் அப்படித் தானே இருப்போம்' என்று நினைத்துப் பார்த்தால் அவன் மனம் மாறும் என்றவாறு. சோர்வு என்பது மனம், மொழி, மெய்கள் தன்வசமாகாமல் போதல்.

## 94 சூது

**931 வேண்டற்க வென்றிடினும் சூதினை ...**

மீன், தூண்டிலிரும்பினை விழுங்கியவுடன் அது தூண்டிற் போட்டவனிடத்திற்கு வந்து விடும். வெற்றி பெற்றதும் அந்த வெற்றி அவன் பொருளனைத்தையும் இழந்து விடும்படியாகச் செய்யும். வெற்றிபெறுதல் அரிது ஆனபடியால் 'வென்றிடினும்' என்று 'உம்'மை கொடுத்தார்.

வெற்றியென்பது சூதாடுவோர் அதனின்றும் நீங்காமைக்குத் தளைபோன்றதாகும். காரியங்கள் பலவும் கெடுதலால் சூதினை **வேண்டற்க** என்றார். சூதாடுவோர் அதைவிட்டு நீங்காமைக்குப் போடப்பட்ட பொருளே தளையாகிறது என்பதும், அதனால் பின் துன்பப்படுதலும் உவமையால் காட்டப்பட்டன.

**932 ஒன்றுஎய்தி நூறுஇழக்கும் சூதர்க்கும் ...**

சூதர்க்கு நல்வாழ்வு வாழவே முடியாது. வினாமுறையில் கருத்தினை அமைத்தார். இதன் பொருள் சூதாடி பொருளினை இழந்தே வருவான் என்பது. **ஓர் ஆறு** என்றதால் அவர்கள் நல்லறம் செய்து நல்லபடியாக வாழ ஒரு வழியும் இல்லை என்பது குறிப்பு.

உலக வழக்கில் நூறு, ஆயிரம், கோடி என்பதுபோல் 'ஒன்றெய்தி நூறிழக்கும்' என்றார். கள்ளுண்டல் போல் சூதும் துன்பம் தரும் என்பதை உணர்த்தினார்.

**933 உருள்ஆயம் ஓவாது கூறின் ...**

அந்தக் காலத்தின் சூதாடுமுறை கூறப்பட்டது. நாட்டுத் தலைவன் இத்தீயப் பழக்கத்தில் இருப்பானானால் காத்தல், இயற்றல் என்கிற கருத்து இல்லாமற்போய் எல்லாம் பகைவரிடம் போய்ச்சேரும். **ஓவாது** என்பதும் **புறமே படும்** என்பதும் நன்கு சிந்திக்க வேண்டியன.

பொருளின்கண்ணும் அதனைக் காத்தலிலும் இயற்றலிலும் கருத்திலன் ஆதலால், அவை பகைவர்பாற்செல்லும் (அவனைவிட்டுத் தாமே போய்விடும்) என்பதாம்.

**934 சிறுமை பலசெய்து சீர்அழிக்கும் ...**

'சீர்' என்பதும் 'வறுமை' என்பதும் முறையே **பெருமை, நல்குரவு** என்ற அதிகாரங்களை நினைவுபடுத்துவன. நல்வினைகளையும் நல்ல இனத்தையும் நீக்கும்; தீவினைகளையும் தீயினத்தினையும் கூட்டுவிக்கும்; இவையெல்லாம் **பல செய்து** என்பதால் பெறப்படும். சூதாடுபவர் வறுமைக்கு எல்லையாவர் என்பதால் **சீர் அழிக்கும்** என்றே கூறினார்.

**935 கவறும் கழகமும் கையும் ...**

'இவறியார்' என்னும் சொல், அதே வேலையாக அதனைக் கைவிடாதவர்களைக் குறிக்கும். **கவறும் கழகமும் கையும்** என்பன ஆழ்ந்து சிந்திக்க வேண்டியன. 'இவறியார்' என்பது, பிறர்க்கு ஏதும் ஈயாத 'உலோபி'கள் என்ற தன்மையினையும் குறித்துக் காட்டும். கழகம் என்பது சூதாடு களம்; கை யென்பது இதற்கு ஏற்ற செயல்; தருக்குதல் என்பது 'நெருக்குதல்'; இவறல் என்பது ஈயாத்தன்மை.

எல்லாப் பொருளும், இன்பமும் நுகர்வதற்கு இருந்தும் சூதாட்டத்தினால் இலராகி ஒழுகுபவரானார். ஆகவே, உளராகியும் இலராகினார்,

**936 அகடுஆரார் அல்லல் உழப்பர்சூது ...**

'மாமுகடி' (617) என்று கூறியதுபோல இங்கும் **முகடியால்** என்று குறித்தார். சூது, செல்வங் கெடுத்து வறுமைபினைக் கொடுத்தலால் **சூது** என்னும் **முகடி** என்றார். உலக வழக்கில் அமைத்துக் கூற வேண்டி **முகடி** என்றார். இவர்க்கு பொய், களவு முதலிய பாவங்கள் சேர்தலால் **அல்லல் உழப்பர்** என்றார். மேலும் பசி தீர உண்ணவுமாட்டார்; இதனை **அகடு ஆவார்** என்று குறிப்பிட்டார். **மூடப்பட்டார்** என்பது சிந்தனைக்குரியது. முகடி—மூதேவி.

**937 பழகிய செல்வமும் பண்பும் ...**

பழகிய என்பது பண்புடனும் பொருந்துவதாகும்; தான் செய்து கொள்ளவேண்டிய அறம் முதலியனவே அன்றி முன்னோரைத் தொடங்கி வருகின்ற செல்வமும், முன் செய்த நல்வினையின் பயனாய பண்பும் இல்லாமற்போகும் என்பது கருத்து. **பொருள் செயல்வகை, பண்புடைமை** முதலிய அதிகாரங்களை நினைவு கூர்க. நற்பணி புரிய வேண்டிய காலம் என்பதைக் குறிக்க **காலைபுகின்** என்றார்.

**938 பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ ...**

**அருளுடைமை** அதிகாரம் குறிக்கப்பட்டது. **வாய்மை** எனும் அதிகாரத்தையும் சிந்திக்க. முந்தைய குறட்பாவில் செல்வம் என்றார்; இங்கு அதனையே பொருள் என்றார். கெடுத்தல், பொய்யனாக்குதல், அல்லல் உண்டாக்குதல் அனைத்தும் சூதினால் வருவதாகும். சூதாடுபவர்களுக்கு இரக்கம் என்பதே உண்டாகாதாம்.

**அல்லல் உழப்பர்** என்பது போலவே **அல்லல் உழைப்பிக்கும் சூது** என்றார். இச்செயல் களுக்கு சூது வினை முதலாகவும், தோல்வி, வெற்றி, செற்றம் முதலியன முறையே கருவிகளாகவும் கொள்ளுதல் வேண்டும். **பொருள், பொய், அருள்** முதலிய நினைத்தற்குரியன

**939 உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ...**

கல்வி, புகழ், பொருள் செயல்வகை முதலிய அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. நாட்டுத் தலைவன் என்றபோது 'செல்வம்' பலவகையானவற்றையும் குறிக்கும். 936ஆம் குறட்பாவில **அகடு ஆரார்** என்று கூறியதை இங்கு **ஊண்** என்றார். உடுப்பதற்கு உடையின்றிக்கூடப் போய் விடுவர் என்பதும் விளையாட்டிற்கேனும் அதனைக் கொள்ளாதே என்பதும் பெற்றாம்.

**ஊண், உடை** என்பனவற்றால் துப்புரவுகள் எல்லாம் கொள்ளப்படும்: காலமும் கருத்தும் பெறாமையின் **புகழ், செல்வம், கல்வி, ஊண், உடை** என்ற ஐந்தும் உளவாகாது என்றார்.

**940 இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் ...**

உயிரினது அறியாமை கூறுவது போன்று சூதினது அறியாமை இங்கே கூறப்பட்டது. தோல்வி அடைய அடைய அச்சூதாட்டத்தின்மீது காதல் மிகுந்து வரும் என்பது கருத்து. ஒருகால் தோற்றவன் பிறகு நீங்கமாட்டானோ என்பதற்கு இது கூறப்பட்டது. **காதற்று** என்பது காதலை உடைத்து என்றதாகும். **உயிர்** என்றது இவ்வினை ஒருமகன் என்று கூறுதற்கு

நாணியதால் ஆகும். உயிரினது அறியாமை கூறுவார் போன்று, சூதாட்டத்தினது அறியாமையைப் புலப்படுத்தினார்.

## 95 மருந்து

### 941 மிகினும் குறையினும் நோய்செய்யும் ...

'நூலோர்' என்று அமைத்துக் கூறினார். வாதம், பித்தம், சீதம் என்பதனை மூன்று என்றார். ஆகாரம் மிகுந்தாலும் குறைந்தாலும் என்பதும் குறிப்பு. அப்போதும் நோய் செய்யும். உடலுக்கு இயல்பாக உண்டாகும் நோய் மூன்று வகைப்படும் என்று பொதுவாகக் குறித்தார். உலகியல் அறிஞர்களின் ஒப்பிய கருத்தினைத் தாமும் கூறுவதால் **நூலோர்** என்றார். வாதப் பகுதி, பித்தப் பகுதி, சீதப் பகுதி என்பன மூன்றும் நோய்களாம்.

### 942 மருந்துஎன வேண்டாவாம் யாக்கைக்கு ...

நோய் உடம்புக்குத்தான் என்பதால் 'யாக்கைக்கு' என்றார். 'உணின்' (உண்ணுவானானால்) என்பது அதன் அருமை நோக்கிக் கூறப்பட்டது. பசியறிந்து உண்பவர்கள் அரிதானவர்கள். 'அற்றது' என்பதும் 'போற்றி' என்பதும் நன்கு சிந்தித்து அறிய வேண்டுவன. முன் உண்ட உணவு அற்றமை அறிந்து உண்பவர் மருந்தினைத் தேட வேண்டாம் என்றார்.

'அற்றது போற்றி' என்பதனைத் தெரிந்து கொள்ள வேண்டும். அதாவது யாக்கை நொய்மை, தேக்கின் தூய்மை, கரணங்கள் தொழிற்குரியனவாதல், பசி மிகுதல் முதலியன காட்டும். பிணிகள் யாக்கைய வாகலின் 'யாக்கைக்கு' என்றார். 'உணின்' என்பது அருமை தோன்ற நின்றது.

### 943 அற்றால் அளவறிந்து உண்க ...

இம்மை, மறுமை, வீடுபேறுகள் எய்தற்பாலது ஈது ஒன்றே யாதலால் 'உடம்பு பெற்றான்' என்றார். யாக்கை நெடிது நின்றால் நெறியினைப் பெருகச் செய்து கொள்ளலாம்; ஆதலால் 'நெடிது உய்க்குமாறு' என்று கூறினார். முந்தைய குறட்பாவில் 'அருந்தியது அற்றது போற்றி' என்றதுபோல, இங்கு 'அற்றால்' என்று கூறினார். 'அற்றது' என்று மேலே கூறியது அவ்வாறு அற்றதறிந்த பிறகு அளவோடு உண்ண வேண்டும் என்பதால் ஆகும். 'சிறிது' (412) சிந்திக்கவும். அறும் (சீரணிக்கும்) அளவு உண்க என்பதனால் அதனைத் தெரிந்து கொள்ளுதல் நமது கடமையாயிற்று.

### 944 அற்றது அறிந்து கடைப்பிடித்து ...

உண்டது அற்றாலும் (செரித்தாலும்) அதன் பயனாகிய 'இரசம்' அறாதாகலான் அதுவும் அறல் (செரித்தல்) வேண்டும் என்பதால் 'துவரப்பசித்து' என்றார். உண்ணுங்கால் அளவறிந்துண்ணுதலேயன்றி, குணமாறுபாடில்லாத உணவாகவும் உண்ணுதல் வேண்டும் என்பதுமாம். முன் குறட்பாவில் அளவறிந்து உண்க என்று கூறி இங்கு குணமாறுபாடில்லாத உணவினை உட்கொள்ள வேண்டும் என்கின்றார். மிகப் பசித்து உண்ணுதல் வேண்டும். 'மாறல்ல' என்பது சிந்தனைக்குரியது.

**945 மாறுபாடு இல்லாத உண்டி ...**

முந்தைய குறட்பாவில் 'மாறல்ல' என்பதை இங்கு விளக்கிக் கூறினார். மாறுபாடு இல்லாத போதும் குறைவாக உண்ணுதல் நல்லது. துன்பமுறுவது உயிரே ஆதலின் அதன்மேல் வைத்துக் கூறினார். மாறுபாடு, ஊறுபாடு என்பன சிந்தனைக்குரிய கருத்துக்களை அமைத்துக் காட்டுவன. மறுத்து என்பதனால் பிணி வராத அளவு உண்ணவேண்டும் என்பதாயிற்று.

**946 இழிவுஅறிந்து உண்பான்கண் இன்பம்போல் ...**

முந்தைய குறட்பாவில் 'மறுத்து உண்ணின்' என்பதனை இங்கு 'இழிவறிந்து' உண்பான் என்று குறித்தார். அதிகமாகச் சாப்பிடுகிறவன், இரையை அளவின்றி எடுத்து அதனால் வருந்தும் விலங்கொடு ஒத்தலின் இரையான் என்றார். இன்பம், நோய் என்பன இரு வகையினருக்கும் வருவனவற்றைக் குறித்தன. 'கழிபேர் இரையான்' என்பது அப்பழக்கத்தினர் உண்டு என்பதனைக் காட்டிற்று. 'நிற்கும்' என்பதனைச் சிந்தித்தறிக. 'இன்பம்' என்பது, வாதம் முதலிய மூன்றும் தத்தம் நிலையில் திரியாமையால், மனம் மொழி மெய்கள் அவன் வசம் நிற்பதாலும், அதனால் அறம் முதலிய நான்கும் எய்தலுமாம். அளவு கடந்து உண்ணுபவனை 'இரையான்' என்றார்.

**947 தீயளவு அன்றித் தெரியான் ...**

துவரப்பசித்து (944) என்பது இங்கு நன்கு விளக்கப்பட்டது. அளவறியாது சாப்பிடுகிறவன் அளவில்லாத நோய்கள் வளருவதற்கு இடமாவான் என்பதாகும். 'தெரியான்' என்னும் சொல் சிந்தனைக்குரியது. 'பெரிது' என்பது தவறு செய்கின்றான் என்பதனை உணர்த்திற்று. இங்கே, நோய் வருதற்கு முதன்மையான அடிப்படைக் காரணம் கூறப்பட்டது. உணவு உண்ணும் அளவு அறிந்து கொள்ளுதல் மட்டும் போதாது; காலமும் அறிதல் வேண்டும் என்பது கருத்து. தெரியானுக்கு நோய் அளவின்றிப்படும் என்பதாயிற்று.

**948 நோய்நாடி நோய்முதல் நாடி ...**

நோய் வருதற்குக் காரணம் உணவும் செயலும்! ஒவ்வொன்றும் தனித்தனியாக அறிந்துணரப்பட வேண்டும். தணிக்கும் வழியினைத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும் என்று கூறி 'வாய்ப்பச் செயல்' என்றார். எனவே 'வாய்நாடி' என்பது மட்டும் போதாது; 'வாய்ப்ப' என்பதும் சிந்தித்தறிய வேண்டுவதாகும்.

நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல், உதிரங் களைதல், அறுதல், சுடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு அது தணிக்கும் வாய் என்றார்.

**949 உற்றான் அளவும் பிணிஅளவும் ...**

இதனால் 'காலமறிதல்' மிகவும் இன்றியமையாததாயிற்று; அனைத்திற்கும் ஏற்ற காலம் தேவையென்பது பெறப்பட்டது. 'கற்றான் கருதிச் செயல்' என்றதால் அச்செயலின் இன்றியமையாத தன்மை புலப்படுகிறது. 'அளவு' என்பது மருத்துவமுறையில் மிகவும் கருதற்பாலது என்பதனை நன்கு தெளிவு படுத்தினார். நூல் நெறியாலும், உணர்வு மிகுதியாலும் ஆராய்ந்து செய்க என்பார், 'கற்றான் கருதிச் செயல்' என்றார். மேற்கூறிய அளவுகளை எல்லாம் நன்கு சிந்தித்துப் பார்த்தல் இன்றியமையாததாயிற்று.

**950 உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழை ...**

நான்கு என்று வருகின்றமையின் அப்பகுதி என்று விளக்கம் செய்து கூறினார். முன் குறட்பாவில் 'உற்றான் அளவு' என்று கூறப்பட்டதையே சிறப்பித்தார். முந்தைய குறட்பாவில் 'கற்றான்' என்றார்; இங்குத் 'தீர்ப்பான்' என்றார். நோயினைப் போக்குகிறவன் என்று குறித்ததால் மருத்துவன், தீர்ப்பானாகவே இருத்தல் வேண்டும் என்பதாயிற்று. இந்த நான்கினையும் சேர்த்து மருந்து என்பதனை இருமுறை குறித்திருப்பது சிந்தனைக்குரியது. 'அப்பால்' என்றதால் அப்பகுதி 'நான்கு' பகுதிகளைக் கொண்டதாகும் என்பது உரைக்கப்பட்டது.

---

**2 பொருட்பால்** **3 ஒழிபு இயல்**

---

## 96 குடிமை

**951 இற்பிறந்தார் கண்அல்லது இல்லை ...**

நடுவுநிலைமை, நாணுடைமை ஆகிய இரண்டு அதிகாரங்களும் குறிக்கப்பட்டன. உயர்ந்த பண்பாடு உடையவர்கள் பிறந்த குடியில் வந்தவர்களுக்கு நடுவுநிலைமையும் நாணுதலும் ஆகிய இக்குணங்கள் இயல்பாகவே (கற்பிக்காமலேயே தாமே) இருக்கும் என்பதாகும். பிறர்க்காயின் கற்பித்த வழியும் நெடிது நில்லாது என்பதாம். இல், குடி, குலம் என்பன ஒரே பொருளினைக் குறிக்கும் சொற்கள். செப்பம் என்பது கருத்தும், சொல்லும், செயலும் தம்முள் மாறுதலில்லாதிருத்தல்; நாணம் என்பது பழிபாவங்களுக்கு அஞ்சுதல். மற்றவர்களுக்குக் கற்பித்த வழியும் நில்லாது என்பதாகும்.

**952 ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் ...**

ஒழுக்கமுடைமை, வாய்மை, நாணுடைமை ஆகிய மூன்று அதிகாரங்கள் நினைவு படுத்தப்பட்டன. மனம், மொழி, மெய் (உடல்) இவற்றால் நடைபெறுவனவற்றைக் குறிப்பால் முறையாக அமைத்தார். இவற்றால், தாமாகவே குற்றம் செய்யார் என்பது குறித்தார். ஒழுகுதல் அறியாது வருகின்றமையின் 'இழுக்கம்' என்றார். இவை இயல்பாகவே இருந்து வருகின்ற பண்புகள்.

**953 நகைஈகை இன்சொல் இகழாமை ...**

ஈகை, இனியவைகூறல் முதலிய அதிகாரங்களும் அவைகளின் தொடர்பான பிறவும் குறித்துக் காட்டப்பட்டன. இயல்பு (951) என்றும், இழுக்கார் (952) என்றும் முந்தைய குறட்பாக்களில் கூறி இக்குறட்பாவில் 'வாய்மை குடிக்கு' என்றார். மேலும் 'வாய்மை' என்ற அதிகாரமும் நினைவு படுத்தப்பட்டது. இந்த நான்கினையும் நற்குடியில் பிறந்தவர்கள் உறுப்பாக உடையவர்கள் ஆவார்கள் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டன.

பொய்மை திரிபு உடைமையின், திரிபின்மையை வாய்மை என்றார். 'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்' (752) ஆதலின் இகழாமையும் கூறினார்.

**954 அடுக்கிய கோடி பெறினும் ...**

செல்வம், பொருள் என்பதைக் கருதி நற்குடியில் பிறந்தவர்கள் இழிவான செயல்களைச் செய்ய மாட்டார்கள் என்பதாம். 'பரம்பரைக் குணம்' என்பது சிந்திக்கத்தக்கது. நற்குடியில் பிறந்தாரின் உயர்ச்சியினை உயர்த்திப் பேசுமுகத்தான் 'அடுக்கிய கோடி பெறினும்' என்றார். உலகியல் நடைமுறையில் பணத்திற்காக வேண்டி எதையும் செய்வர்' என்பது கீழான குணம் படைத்த மக்கள் இயல்பு என்பது உணர்த்தப்பட்டது. 'எழுபது கோடி உறும்' (639) என்பதுபோல் இங்கும் கூறினார்.

உலக வழக்குப்படி 'கோடி' என்றார் ஆசிரியர். கோடி பெறுதல் அரிதாகலின், பெறினும் என்றார். 'எத்தொழில் செய்தேனும் வாழ்ந்தால் போதும்' என்று பழி பாவங்களைத் தரும் தொழில்களை நற்குடிப் பிறந்தார் செய்யவே மாட்டார்கள்.

**955 வழுங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் ...**

'பழங்குடி' வழிவழி வந்த பரம்பரைக் குணம் என்பதை உணர்த்திற்று. இதனால் 'பண்புடைமை' அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. 'வழங்குவது' என்பது ஈகைக் குணத்தினைக் காட்டிற்று. 'உள் வீழ்ந்தக் கண்ணும்' என்பது சிந்தனைக்குரியது. நற்குடியில் பிறந்தவர்கள் எக்காலத்திலும் தம் இயல்பிலிருந்து நீங்கமாட்டார்கள் என்பதாம். 'பொருள் குறைந்த' காலத்திலும் 'பண்பு' கெடமாட்டார்கள். வறுமை அவர்களின் பண்பாட்டினை சிதைக்காது. உயர்ந்த நற்குடியில் பிறந்தவர்களுக்கு இருக்கும் பண்பாடு அன்புடன் ஈகை செய்தலாகும்.

**956 சலம்பற்றிச் சால்பில் செய்யார்மாசு ...**

உயர்குடி என்பது 'மாசற்ற குலம்' என்று உணர்த்தப்பட்டது. மனம் தூய்மையுடையவர்கள் பிறந்த குலமே உயர்குடி என்று பேசப்பட்டது. 'சான்றாண்மை' அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. வறுமையுற்ற காலத்திலும் வஞ்சனை நெஞ்சங் கொண்டு இழி செயல் புரிய மாட்டார்கள் என்பது கருத்து.

இக்குறளில் உயர்ந்த மரபில் வந்தவர்களின் பண்புகள் கூறப்பட்டுள்ளன. 'குடிமை' என்பது இவ் அதிகாரத்தின் பெயராகும். 'மாசு அற்ற குலம்' என்பது சிந்திக்கத் தக்கது. உயர்ந்த குடியில் பிறந்தவர்களாகிய இவர்கள் வாழ்வாங்கு வாழ்பவர்கள்.

**957 குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் ...**

நற்குடியில் பிறந்தவர்களிடம் குற்றம் உண்டாகிவிட்டால் அது உலகில் விரைவில் பரவிவிடும் என்பதாம். இதனால் உலகமக்கள் நற்குடிப் பிறந்தார்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பார்கள் என்பதாகும். 'குற்றங்கடிதல்' என்ற அதிகாரத்தையும் இங்கே சிந்திக்கவும்.

குற்றம் உண்டாகிவிட்டால் அது மறைக்க முடியாததாகிவிடும். 'மாசு அற்ற' என்று முந்தைய குறட்பாவில் கூறியதை மேலும் விளக்கினார். குடியினது உயர்ச்சியும் உணர்த்தப்பட்டது.

**958 நலத்தின்கண் நார்இன்மை தோன்றின் ...**

'அன்புடைமை' என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டதாகும். ஈகைத் தன்மையும் இனியவை பேசுதலும் ஆகிய நற்குணங்கள் இயல்பாகவே இருத்தல் வேண்டும். 'தோன்றின்' என்றதனால் 'தோன்றாமை' குறிப்பால் உணர்த்தப்பட்டது. அன்புடைமை இல்லாதவன் உயர்குடியில் பிறந்தவனல்லன் என்பது குறிப்பு.

நாரின்மையால் ஈகைத் தன்மை இல்லாமையும் கடுஞ்சொல்லும் கூறப்பட்டன. அன்பின்மை — நாரின்மை என்று குறிக்கப்பட்டது. இஃது இயல்பாகவே அக்குடியில் வந்தவர்கட்கு இருக்கும் என்று உறுதி கூறப்பட்டது.

**959 நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் ...**

முளைத்த மாத்திரத்திலேயே நன்மையும் தீமையும் தெரிதலின் இலை முதலியன கூறாராயினர். குலத்தின் இயல்புக்கு, அதனை அறிதற்குக் கருவி கூறுவார் போன்று இன் சொல் வேண்டும் என்றார். **இனியவை கூறல், பயனில சொல்லாமை, புறங் கூறாமை, வாய்மை** முதலியன போன்ற அதிகாரங்கள் இங்கே சிந்திக்கத்தக்கன.

கிடந்தமை உள்ளபடி முளை மாத்திரத்தானே நன்மையும் தெரியும் ஆதலின் இலை முதலியன கூறாராயினர். ஆகவே குடிப்பிறந்தார்க்கு இன்சொல் இருக்கும் என்பதாம்.

**960 நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் ...**

நாணுடைமை அதிகாரம் குறிக்கப்பட்டது. 'வேண்டின், வேண்டும்' என்னும் அமைப்பு முறையினை இருமுறை கூறினார். பணிவு என்கிற நற்குணம் இல்லாதவன், நல்லவர்கள் பிறந்த குடியில் பிறக்காதவன் பணிவு என்பது இருக்கை எழல், எதிர் செலவு முதலாயின. 'நலம்' புகழினைக் குறித்தது. இழிசெயல் செய்தற்கு நாணப்படுதல் வேண்டும்.

## 97 மானம்

**961 இன்றி அமையாச் சிறப்பின ...**

பொதுப்பட 'மானம்' என்பதற்கு அளவு என்பது பொருள். 'இப்படித்தான் வாழவேண்டும்' என்பதாக மனிதப் பிறவிக்கு வாழுகின்ற முறையுண்டு. எப்படியும் யாது செய்தேனும் வாழ்ந்தால் போதும் என்பது இழிந்தோர் வழி. ஆதலால் மனிதத் தன்மை குன்றிவிடும்படியான இழிசெயல்கள் செய்தல் கூடாது. 'அமையா' என்பது இறப்பதைக் குறித்தது. மனித வாழ்க்கை என்பதற்கும் அளவு உண்டு. அஃது வாழ வேண்டும் என்ற அளவு; என்றாலும் எப்படிச் செய்தேனும் சிறப்புடைய எண்ணாதே என்றார்.

**962 சீரினும் சீர்அல்ல செய்யாரே ...**

எக்காலத்திலும் எவ்விடத்திலும் நிலை குலையாத திண்மை யுடையவர்களைக் குறித்துக் காட்ட வேண்டிப் **பேராண்மை** என்றார். நிலையுடைய புகழ் வேண்டியும் இழிவான செயல்களைச் செய்ய மாட்டார்கள். **நோக்காத பேராண்மை** (148), **பேராண்மை** (773) போன்றவற்றைச் சிந்திக்க. எவ்விடத்தும் நிலை குலையாத மனத்திண்மையான் உளதாதல் பற்றிப் 'பேராண்மை' என்று கூறினார்.

**963 பெருக்கத்து வேண்டும் பணிதல் ...**

இக்குறளில் **வேண்டும் பணிதல், வேண்டும் உயர்வு** என்று கூறினார். உயர்வு வேண்டும் என்றது, தாழ்வு வராமல் பழைய உயர்ச்சிக்கண்ணே நிற்றலாகும். செல்வம் நிறைந்தபோது அச்செல்வம் உயர்ச்சி செய்யத் தாம் தாழ்தலும், அல்லாதபோது அது தாழ்வு செய்யத் தாம் உயர்தலும் வேண்டும் என்பதாகும். **பெருக்கத்து, சுருக்கத்து** என்பன சிந்தனைக்குரியன.

தாழ்வு வாராமல் பழைய உயர்ச்சியின் கண்ணே நிற்றல் வேண்டும் என்பதற்கு 'பணியாமை' என்று கூறினார். இடமும் காலமும் கண்டு பொருள் அறிந்து கொள்க; **பணிவுடையன்** (95), **பணியுமாம்** (978) என்பன போன்றவற்றைக் கருதவும்.

**964 தலையின் இழிந்த மயிர்அனையர் ...**

இங்கு, அந்த நிலையினை விடாது நின்றபோது பேணப்படுதலும், விட்டுத் தாழ்ந்த வழி அழிக்கப்படுதலும் உவமையால் கூறப் பெற்றது. ஒரு நேரத்தில் போற்றப்பட்டவர் மறு நேரத்திலேயே இகழப்படுவர் என்பதாயிற்று. ஒழுக்கக் கேட்டால் நிலையினின்று தாழ்ந்து விட்டால், அவர் அவ்வாறு இகழப்படுவார்கள். 'நிலை' என்பது மனிதத் தன்மைக் குரிய ஒழுக்கம் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

**965 குன்றின் அனையாரும் குன்றுவர் ...**

ஒழுக்கக்கேடு என்பதற்கு அளவு இல்லை என்பது குறிக்கப்பட்டது. மலை போல உயர்ந்தோரும் மிகச் சிறிய இழிசெயல் செய்துவிடுவார்களேயானால் அவர்கள் தாழ்ந்து விடுவார்கள் என்பது எடுத்துக் காட்டப்பட்டது. 'குன்றிமணி' எடுத்துக் காட்டப்பட்டது; 'புறங்குன்றி' (277) என்பதனையும் சிந்தித்தறிக. குடிப்பிறப்பு குன்றாகிய மலையினால் குறிக்கப்பட்டது. இழிசெயல் குன்றிமணியால் கூறப்பட்டது. மிகச் சிறிதானாலும் இழிவான செயல் தாழ்த்தியேவிடும் என்பதாயிற்று.

**966 புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் ...**

'புகழ்' அதிகாரம் குறித்துக் காட்டப்பட்டது. 'மானம்' என்பதன் அரிய சிறப்பு நன்கு விளக்கப்பட்டது. 'புகழ்' பயப்பதனைப் 'புகழ்' என்றார். பயனாகிய இந்த இரண்டும் இல்லாமல் வீணாக மானங்கெடுவது ஏனோ என்பதாகும். 'உலகியல்'—மக்களிடையே உள்ள வழக்கு பற்றிப் 'புத்தேள் உலகம்' என்றார். தம்மை இகழ்வார்களிடத்தில் தாம் சென்று

நிற்றலைத் தவிர்க்க வேண்டும். தன்னைத் தாழ்ந்தவன் என்று கூறுபவனிடத்திற்குச் செல்லாதே என்பதை 'இகழ்வார்பின் செல்லாதே' என்றார்.

**967 ஒட்டார்பின் சென்றுஒருவன் வாழ்தலின் ...**

ஒட்டுதல் என்பது பொருந்துதலாகும். 'ஒட்டார்' என்பது பொருந்தாதவர்கள் என்பதாம். அவர்களே நம்மை இகழ்பவராவர். தன்னைத் தாழ்ந்தவனாகவும் இழிந்தவனாகவும் கருதுகிறவன்பின்னே ஒருவன் சென்று வாழ்வதைவிட இறத்தலே மேலானதாகும். இதனால், மேலே கூறிய கருத்து மேலும் விளக்கம் பெறுகின்றது. 'புகழும் புத்தேள் நாடும்' பயவாதேனும், 'பொருள் பெற்று உயிர் வாழ்வோம்' என்பாரை நோக்கிக் கூறியது.

**968 மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை ...**

'ஊன்' ஓம்பும் வாழ்க்கை என்று கூறினார். நற்குணங்களுக்கெல்லாம் இடனாதற் பொருட்டுப் 'பெருந்தகைமை' என்றார். அதுவே 'சான்றாண்மை' என்றும் கூறப்படும். அவை யெல்லாவற்றுள்ளும் அதற்கு வலிமையாகின்ற சிறப்புப் பற்றிப் பீடு என்றார். அஃது அழிந்தால் நின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலின் அதனை 'ஊன்' என்றார். எப்படியும் இறப்பது உறுதி என்று கூற வேண்டி 'மருந்தோ' என்றார். மானத்தின் தொழில் அதற்கு இடனாகிய குடிப் பிறப்பின் மேல் நின்றது.

**969 மயிர்நீப்பின் வாழாக் கவரிமா ...**

உயிரையும்விட்டு என்றும் நிற்பதாகிய மானத்தைக் காப்பாற்றுவர் மானமுடையவர் என்பதாம். அஃது அவர்கட்கு இயல்பு என்பது உவமையால் பெற்றாம். முந்தைய குறட்பாவில் சாதல் வேண்டும் என்றார்; இக்குறட்பாவில் மானம் உடையார் சாவார் என்று கூறினார். உயிரும் மானமும் உடன் நில்லாமைக்கண் பின்னும் போவதாய உயிரை நீத்து, எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை எய்துவர் என்பதாம். உவமை — இக்குணம் அவர்கட்கு இயல்பு என்பதை உணர்த்திற்று.

**970 இளிவரின் வாழாத மானம் ...**

'புகழ்' என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. மானம் உடையாரை, 'தொழுது, ஏத்தும்' என்று சிறப்பித்துக் கூறினார். வாழ்ந்திருத்தல் என்பது மட்டும் சிறப்பாகாது என்பதும், மானத்தோடு வாழ்தல் வேண்டும் என்பதும் கூறப்பட்டது. புகழுக்குக் காரணம் மானமுடைமை என்பதும் சிந்திக்கத்தக்கது. மானம் உடையார் மானம் பொருட்டு இறப்பர் என்பதனைக் குறிப்பால் கூறினார். முந்தைய குறட்பாவில் 'வாழாக் கவரிமா' என்பது போல இக்குறட்பாவில் 'வாழாத மானம் உடையார்' என்றார்.

## 98 பெருமை

**971 ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை ...**

முன் குறட்பாவில் கூறியது போல இக்குறளிலும் 'ஒளி' என்று கூறினார். அது 'மானம்' என்ற அதிகாரம்; இது 'பெருமை' என்ற அதிகாரமாகும். ஒளி என்பது, தான்

இருக்கின்ற காலத்தில் மிகுந்து தோன்றுதலுடைமையாகும். இங்கு ஒளிக்குக் காரணம் அளவிறந்த ஈகையும், 'ஒப்புரவு அறிதலும்' ஆகும். அந்தக் காரணத்தினை மேலிட்டு 'உள்ள வெறுக்கை' என்றார். 'உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை' (600) என்பதும் சிந்திக்கத்தக்கது. ''இசையொழிய வாழ்வாரே வாழாதவர்' (240) என்று கூறப்பட்டதும் சிந்தித்தறிய வேண்டியதே. 'இறந்து வாழ்தும்' என்பது இழிவினைப் புலப்படுத்தியதாகும். முனிவர் களைக் கூறுகின்ற போது குறிப்பாக 'செயற்கரிய செய்வார் பெரியர்' (26) என்றாராயினும், இங்கு அளவிறந்த ஒப்புரவு ஈகையாகும்.

**972 பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும் ...**

'பெருமைக்கும்' (505) என்ற குறட்பா சிந்தனைக்குரியது. 'எல்லா உயிர்க்கும்' என்பது பன்முறையும் சிந்திக்கப்பட வேண்டியது; உயர்வு தாழ்வு என்று மக்களிடையே பிறந்த காரணங் கொண்டு கூறுதல் அறிவுடைமையாகாது என்பது பெற்றாம். ஆதலால் பெருமையென்பது குலத்தினால் அறியப்படாது என்பதும் அதற்குக் காரணமும் கூறப்பட்டது. பிறப்பின் தன்மையில் மக்கள் அனைவரும் ஒன்றுதான் என்று நிறுவினார். பிறப்பினைக் கொண்டு உயர்வு தாழ்வு கொள்ளுதல் குற்றமாகும். நற்செயல், தீயசெயல் ஆகியவை கொண்டுதான் சிறப்பினை அளக்க வேண்டும். ஆதலால் 'சிறப்பு ஒவ்வா' என்றார்.

**973 மேல்இருந்தும் மேல்அல்லார் மேல்அல்லர் ...**

மேலிருத்தல், கீழிருத்தல் என்பவற்றால் செல்வநிலையும் வறுமையும் உணர்த்தப் பட்டன. இருவகையிலும் 'அல்லார்—அல்லர்' என்பது குறித்துக் காட்டப்பட்டது. 'இருந்தும்' என்பது இருமுறை காணப்பட்டது. ஆதலால் இருக்கும் நிலையென்பது உயர்வையோ தாழ்வையோ தந்துவிடாது என்பதாகும். சிறியவர்கள் செல்வப் பெருக்கால் உயர்ந்த நிலையில் இருந்தாலும் பெரியவர்களாகமாட்டார்கள். பண்பும் ஒழுக்கமும் உள்ளவர்கள் பொருளின்றித் தாழ்ந்த நிலையில் இருந்தாலும் சிறியவர்களாகிவிட மாட் டார்கள்; உயர்வாகவே கருதப்படுவார்கள்.

**974 ஒருமை மகளிரே போல ...**

கற்பு நிறைந்த மகளிர் பெருமை எடுத்துக் கூறப்பட்டது. 'ஒழுக்கமுடைமை' அதிகாரம் சிந்திக்கத்தக்கது. பெருமையாவது நிறை உடைமை என்பதாம். 'ஒருமை', 'பெருமை' என்பன சிந்தித்தறிய வேண்டுவன. மேலும், 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' என்பதையும் 'கடலன்ன காமம்' (1131) என்பதையும் சிந்திக்கவும். 'ஒழுகின் உண்டு' என்பதால் மனம், மொழி, மெய்களை ஒடுக்கி ஒப்புரவு முதலிய செய்து உயர்தலாம்.

**975 பெருமை உடையவர் ஆற்றுவார் ...**

பெருமையுடையவர் வறியவரானாலும் 'ஆற்றுவார்' என்பது சிந்தனைக்குரியது. 'பெரியாரைத் துணைக்கோடல்', 'பெரியாரைப் பிழையாமை' என்ற அதிகாரங்கள் இங்கே நினைக்கத் தக்கன. 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்தில் முனிவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'செயற்கரிய' (26) என்று கூறினார். முனிவர்கட்கு எடுத்துக் காட்டிச் 'செயற்கரிய செய்வார்' (26) என்று கூறியது போல உலகில் வாழ்கின்றவர்களைச் சுட்டிக் காட்டினார். அவர்கள் எக்காலத்தும் ஈகை செய்து வருவார்கள் என்பதாம்.

**976 சிறியார் உணர்ச்சியுள் இல்லை ...**

'சிற்றினஞ்சேராமை', 'பெரியாரைத் துணைக்கோடல்' முதலிய அதிகாரங்கள் நினைவு படுத்தப்பட்டன. பெரியாரைப் பெறுதலும் பேணலும் பெருமை என்று கூறப்பட்டது. உணர்ச்சி மனத்தின்கண் தோன்றுவதாகும். 'மனத்தானாம் மாந்தர்க்கு உணர்ச்சி' (453) என்பதனைக் கருத வேண்டும். பெரியோரிடம் பழகி அவர் வழியில் நிற்றல் வேண்டும்.

**977 இறப்பே புரிந்த தொழிற்றாம் ...**

சிறப்பான உயர்ந்த நிலை என்பது தகுதியற்றவர்களிடத்தில் இருக்க நேரிடுமே யானால், எவ்வளவு துன்பம் தரும் என்பதை இதில் குறித்தார். 'படின்' என்பது சிந்தனைக் குரியது. 'சிறப்பு அறிய' (590) என்பதில் சிறப்பு என்பதனைக் கண்டு தெளிக. சிறியார் களிடத்தில் சிறப்புகள் இருந்து விடுமாயின் அவர்க்கு மிகுந்த தருக்கினை அவை உண்டாக்கி விடுமாம். 'இறப்பே பிறந்த தொழிற்றாம்' சிந்திக்க வேண்டும்; அற்பர்கள் பெற்ற உயர்ச்சி மக்களுக்கு பொருள் கேடாக இருக்கும் என்பதாம்.

**978 பணியுமாம் என்றும் பெருமை ...**

'அற்ற மறைக்கும் பெருமை' (980) என்பதைச் சிந்திக்க. பணிந்து ஒழுகுதலும் பெருமை எனப்பட்டதாம்; 'என்றும்' என்பதைச் சிந்திக்கவும்; 'வியவற்க' (439) என்று கூறினார். இக்குறட்பாவில் 'தன்னைவியந்து' என்று குறித்துக் காட்டினார். சிறியவர்கள் தற்புகழ்ச்சி செய்து கொள்வர்; 'பெருமை', 'சிறுமை' ஒப்பிடப்பட்டது.

**979 பெருமை பெருமிதம் இன்மை ...**

சிறுமை அளவு கடந்து செருக்குடன் இருக்குமாம். 'ஊர்ந்து விடல்' சிந்தித்தறிய வேண்டுவதாகும். 'சிறியவர்கள் தமக்கு உண்மையான பெருமையில்லாத போதும், செருக்குக் கொண்டு திரிவார்கள் என்பது குறிப்பாயிற்று. மேலே கூறப்பட்ட 'பெருமை', 'சிறுமை' தன்மைகள் இங்கு விளக்கப்பட்டன. பெருமிதம் கொள்ள வேண்டியவர்கள் அடங்கி இருப்பர்; சிற்றினம் காரணமின்றியே தருக்கித் திரியும்.

**980 அற்றம் மறைக்கும் பெருமை ...**

பெருமையுடையவர்கள் மறைப்பார்கள்; சிறுமையுடையவர் குற்றத்தையே கூறிக் கொண்டு இருப்பார்கள். 'புறங்கூறாமை' போன்ற அதிகாரங்கள் கருதற்பாலன. 'குற்றமே' என்று கூறியதால், சிறிய அற்பர்கள் பிறர் குற்றத்தினையே கூறிக் கொண்டிருப்பர் என்பதாம். இஃது இவர் இயல்பு ஆதலின் வருந்துதல் கூடாது.

## 99 சான்றாண்மை

**981 கடன்என்ப நல்லவை எல்லாம் ...**

உலகியல் அறிந்தார் கூறுவதைக் கொண்டும் கூறுவது ஆசிரியர் மரபு ஆதலால், 'என்ப' என்றார். இவ்வாறு பல இடங்களிலும் ஆசிரியர் கூறுவார். 'கடன்' இருமுறை கூறப்

பட்டதன் சிறப்பினை அறிதல் வேண்டும். ஒழுக வேண்டிய பண்பாடு 'சான்றாண்மை' என்பதாயிற்று. பல நல்ல குணங்களால் நிறைந்திருப்பதே 'சான்றாண்மை'யாகும்.

**982 குணநலம் சான்றோர் நலனே ...**

அகநலத்தினை முன்னே பிரித்துக் கூறியதால், ஏனைப் புற நலத்தினைப் 'பிறநலம்' என்றார்; நலம், நலனே, பிறநலம், நலத்துள்ளது — என்பன சிந்தித்தறிய வேண்டுவன. சால்பிற்கேற்ற குணங்கள் பொதுவகையான் கூறப்பட்டன. உறுப்புக்களாலான நலம் குடிப் பிறப்பும் கல்வியும் முதலாக நூலோர் எடுத்த நலங்களுள் சேராமையின் 'எந்நலத்துள்ளதூஉம் அன்று' என்று கூறினார்.

**983 அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் ...**

அன்புடைமை, நாணுடைமை, ஒப்புரவறிதல், கண்ணோட்டம், வாய்மை என்ற ஐந்து அதிகாரங்களும் கூறப்பட்டன. இந்தக் குணங்கள் இல்லையென்றால் சான்றாண்மை நிலை நிற்காது. ஆதலால் இவற்றைத் 'தூண்' என்றார்; 'ஊன்றிய தூண்'—இதில் சான்றாண்மையின் உயர்வு குறிக்கப்பட்டது.

**984 கொல்லா நலத்தது நோன்மை ...**

நோன்பு நோற்றுச் செய்யப்படுவதே தவமும் துறவறமுமே என்பது குறிக்கப்பட்டது. 'கொல்லாமை' என்ற அதிகாரம் இதில் கூறப்பட்டது. 'புறங்கூறாமை' போன்ற அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. 'நலத்தது' என்பது இருமுறை கூறப்பட்டது. நோன்பு நோற்கும் தவசிகளும் சான்றோர்களும் ஒருமைப்பாடு உள்ளவர்கள் என்பது பெற்றாம். தவம் என்பது ஓர் உயிரையும் கொல்லாத நோன்பிலே இருப்பதாகும். சான்றாண்மைக்குப் பிறர் குற்றம் சொல்லாக் குணம் சிறந்தது என்பதாகும். 'நோன்மை' என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

**985 ஆற்றுவார் ஆற்றல் பணிதல் ...**

சால்பிற்கு ஏற்ற நற்குணம் பணிவு என்பதனைச் சுட்டிக் காட்டினார். 'பணிதல்' என்பது காலத்தினையொட்டி மிகச் சிறந்த பலனைக் கொடுக்கும் என்பதனைக் காட்டவே சான்றோர்களுக்கு வலிமையாவது தாழ்ந்து ஒழுகுதலாகும் என்றார். 'பெரியார்ப் பணிந்து' (680) என்பது சிந்தனைக்குரியது. பணிதல் என்பது சான்றாண்மை நிறைந்தவர்களின் இயல்பாகும். செயல் முடித்தற்குத் துணையாயினாரைப் பணிந்து சேர்த்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்வதனை ஆற்றல் என்று கூறினார்.

**986 சால்பிற்குக் கட்டளை யாதுஎனின் ...**

வெல்லும் ஆற்றல் உடையராயிருந்தும் ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் என்பதைக் குறிக்க வேண்டி 'கொளல்' என்றார். இழிந்தாரை வெல்லுதல் கருதித் தம்மோடு சமத்துவமாகக் கொள்ளாமல், தோல்வியான் அவரைவிட உயர்வார் ஆதலால், சால்பின் அளவு அறியப்படுவதாகும். சால்பென்பது எல்லார்க்கும் நன்மை செய்யும் குணமாம்.

**987 இன்னா செய்தார்க்கும் இனியவே ...**

'இன்னா செய்தாரை' (314) என்பதைச் சிந்தித்தல் வேண்டும். வினா முறையில் கருத்தினை அமைத்துக் காட்டினார். 'இன்னா செய்யாமை' என்ற அதிகாரம் சிந்தனைக் குரியது. 'சால்பு' என்பது யாவர்க்கும் நன்மையே செய்யும் தன்மை. மிகமிக உயர்ந்த பண்பாடு அதுவேயாம். தாமும் இன்னா செய்வாராயின், சால்பால் ஒரு பயனும் இல்லை என்பதாம்.

**988 இன்மை ஒருவற்கு இளிவன்று ...**

கற்பு நிறைந்த பெண்ணைச் சிறப்பித்துத் 'திண்மை உண்டாகப்பெறின்' (54) என்று கூறியது போலவே இங்கும் 'திண்மை உண்டாகப் பெறின்' என்று கூறினார். தளராமை நாட்டுதலின் வலிமையாயிற்று. சால்புடையவர்கள் வறுமையுற்றாலும் மேம்பாடு உடையவராவர்.

**989 ஊழி பெயரினும் தாம்பெயரார் ...**

'பெயரினும் பெயரார்' என்பது சிந்திக்கத் தக்கது. காலவேறுபாட்டால் சான்றோர் மாறமாட்டார்கள் என்பதாம்; இதில் சான்றோர்கள் நின்ற நிலை குலையார் என்று குறிக்கப் பட்டது. சான்றாண்மையினது பெருமை தோன்ற அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங்கிக் கொண்டு நிற்றலின் அது உடையாரைக் கரையாக்கியும் கூறினார்.

**990 சான்றவர் சான்றாண்மை குன்றின் ...**

சான்றோர்க்கு சான்றாண்மை குன்றாமையும், அதற்கு நிலம் தாங்குதலும் இயல் பாயினவாம். முந்தைய குறட்பாவில் 'நிலைகுலையர்' என்று உணர்த்தினார். இந்தக் குறட்பாவில் சான்றோர் நிலைகுலைந்தால் ஊழி பெயரும் என்று குறிப்பிட்டார். பல குணங் களாலும் நிறைந்தவர்களைச் 'சான்றவர்' என்றார்.

## 100. பண்பு உடைமை

**991 எண்பதத்தால் எய்தல் எளிதுஎன்ப ...**

பண்புடைமையை அடைவதற்கு இக்குறளில் வழி கூறப்பட்டது. 'எண்குணத்தான்'(9), 'எண் பொருளவாக' (424) என்பவற்றைச் சிந்தித்தல் நலம். இங்கு 'எண்பதத்தால்' என்றார்; 'யார் மாட்டும்' என்பது நன்கு கருதற்பாலதாகும். குணங்களால் நிறைந்து யாரும் எளிதாகக் காணும் தன்மையும் இருந்தால், பண்புடைமைதானே உண்டாகும். ஆதலால் 'எண்பதத்தால் எய்தல் எளிது' என்றார். தொல்லோர் கருத்தாதலால் 'என்ப' என்றார்.

**992 அன்புஉடைமை ஆன்ற குடிப்பிறத்தல் ...**

'அன்புடைமை', 'குடிமை' என்ற அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. இரண்டும் கூடிய போதுதான் ஆகும் என்பது தோன்ற 'இரண்டும்' என்று 'உம்'மை கொடுத்தார். நற்குடிப் பிறத்தலினால் பழிக்கப்படுவன செய்யாமையும் புறங்கூறாமையும் முதலியன குறிக்கப்பட்டன. முந்தைய குறட்பாவில் கூறியது போலவே 'வழக்கு' என்றார்.

**993 உறுப்புஒத்தல் மக்கள்ஒப்பு அன்றால் ...**

ஒப்புமையைக் கூறுவதற்கு முறை புலப்படுத்தப்பட்டதாம். நிலையில்லாதது உடம்பு. அதனால் ஒத்திருத்தல் காணக்கூடாது. நிலைபெற்றிருப்பது பண்புடைமையாகும்; அதனால் ஒத்திருத்தல் வேண்டும். மனிதத் தன்மை இருந்தால்தான் மக்கள் வகையில் சேர்த்தல் வேண்டும்; ஆகவே மக்கட் பண்பு இருத்தல் வேண்டும் என்பதாகும். இக்குறளில் நன்மக்களோடு ஒருவனை எவ்வாறு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும் என்பதனைத் தெளிவு படுத்தினார். 'ஒப்பு என்றால்', 'ஒப்பதாம் ஒப்பு' என்பவற்றை நன்கு கருதிப் பார்க்க வேண்டும்.

**994 நயனொடு நன்றி புரிந்த ...**

'ஒளி தொழுது ஏத்தும் உலகு' (970) என்று கூறியதைப்போல இங்குப் 'பண்பு பாராட்டும் உலகு' என்று குறித்தார். நயனொடு நன்றி புரிதலும், பயனுடைமையும் பண்பு காரணமாக வந்ததால் அதனைப் 'பாராட்டும்' என்றார். உலகத்தில் ஒருவன் பயனுடைய வனாக வாழவேண்டும் என்பதே வாழ்க்கையின் அடிப்படை நோக்கமாக இருத்தல் வேண்டும். நயனொடு நன்றிபுரிதல், பயனுடைமை ஆகியவை பண்பு காரணமாக வரும்.

**995 நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி ...**

'பாடறிவார்' எனவே அவ்வின்னாமை அறிதலும் பெற்றாம். அதனை அறிந்தவர் பின் அது செய்யார்; இனியவே செய்வர் என்பது கருத்து. பகைவருள்ளும் பண்புடைமை யாயினார் பெருமையினைப் பாராட்டும் உலகம் என்றவாறு; 'ஒன்னார் விழையும் சிறப்பு' (630) என்பதனைச் சிந்திக்க வேண்டும்.

**996 பண்புஉடையார்ப் பட்டுண்டு உலகம் ...**

பண்புடையாரது உயர்ச்சி கூறப்பட்டது. 'புக்குமாய்வது' என்றதால் பண்புடையார் இல்லையானார். எந்த நிலை உண்டாகும் என்பதனைச் சிறப்பாக எடுத்துக் காட்டியதாகும். பண்புடைய மக்கள் சிலராவது இருத்தலினால்தான் உலகியல் நடைபெறுகிறது என்ற உண்மை இதில் உய்த்துணர வைக்கப்பட்டது. பண்பில்லார் சார்பு இன்மையின், ஒரு சார்பும் இன்றி மண்ணில் புக்கு மாய்வது வேண்டாவாயிற்று. உலகம் நிலைத்து நின்று இயங்குகிறது.

**997 அரம்போலும் கூர்மைய ரேனும் ...**

கூர்மையான உணர்ச்சியும் புத்தியும் இருந்தாலும் மரம் போன்றவரேயாவார்; ஏனெனில் மக்கட் பண்பு அவர்கட்கு இல்லையென்பதாம். 'கூர்மை பிறரை வெற்றி கொள்ளுவதற்கு உதவும்; மேலும் அது பிறரைக் கூர்மையாக்கவும் துணைபுரியும். ஆனால், மனிதத்தன்மை இல்லையென்றால் அவர்கள் மரத்திற்குத்தான் சமம்.

**998 நண்புஆற்றார் ஆகி நயம்இல ...**

நட்பு முதலிய அதிகாரங்கள் நினைவு படுத்தப்பட்டன. தீமை செய்வார்க்குத் தாமும் தீமை செய்தால் அவர் தன்மையராவர் என்று கூற வேண்டி, 'கடை' என்றார். 'இனியவே

செய்யாக்கால்' (987) என்பது சிந்தனைக்குரியதாகும். பண்பாளர்கள் தமக்கு இயல்பான அன்புடைமையினையே காட்டுதல் வேண்டும். 'நயம்' என்பது அன்புடைமையேயாகும்.

**999 நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ...**

எல்லாரோடும் கலந்தறியப் பெறாமையால் பண்பு இல்லார்க்கு உலகியல் தெரியாது என்று கூறவேண்டி 'உலகம்' இருளின்கண் பட்டது என்றார். இவனும் அறியான்: அறிவிப்பாரும் இல்லை யென்பதாம். மக்கட் பண்பு இல்லாதார்க்கு இவ்வுலக நீதி யாதும் தெரியாது. இருண்டே கிடக்கும் என்பது பொருள் என்றவாறு. இருள் நீங்கவில்லை என்று கூறினும் அமையும்.

**1000 பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் ...**

பொருள் படைக்கும் ஆற்றல் இல்லாதவன் ஆதலால் 'பெற்ற' என்று கூறினார். மேலும் எல்லாப் பயனும் கொள்ளுதற்கு உதவுவதால் 'பெருஞ்செல்வம்' என்று கூறினார். 'பசுமண் கலத்துள்' (660) என்பதும் சிந்திக்கத்தக்கது. தான் சேர்க்கும் ஆற்றல் இலனாதல் தோன்ற 'பெற்ற' என்று கூறினார்.

## 101 நன்றியில் செல்வம்

**1001 வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் ...**

'செத்தான்' என்று குறிப்பிட்டதால், 'செத்தாருள் வைக்கப்படும் (214) என்பது சிந்தனைக்குரியது. வாய்சான்ற பெரும் பொருளை வைத்தான் ஒருவன் அதனை உண்ணாது செத்தவழி அதன்கண் அவனால் செயக் கிடந்தோர் உரிமையில்லை. ஆதலால், வைக்காது பெற்றபோதே நுகர்க என்பதாம். ஐம்புலன்களாலும் நுகராமல் போனான் என்பதற்காக 'உண்ணான்' என்றார். பொருள் ஈட்டியவனுக்கும், பிறர்க்கும் பயன்படாமல் போகின்ற செல்வத்தினை 'நன்றியில் செல்வம்' என்றார். எனவே அதிகாரம் பெயர் ஆயிற்று.

**1002 பொருளான்ஆம் எல்லாம்என்று ஈயாது ...**

'ஈகை', 'குற்றங்கடிதல்' முதலிய அதிகாரங்கள் சிந்திக்கத்தக்கன. இருமையிலும் எய்தும் இன்பங்கள் அடங்குதலால் 'எல்லாம்' என்றார். பொருள் சேர்ப்பதற்கு முன்னர் இருந்த அறிவு பின்பு மயங்குவதால் 'மருள்' என்றார். பொருள் உண்டாகியிருந்தும் பிறர் பசி கண்டிருந்த தீவினைபற்றி உணவுகள் உளவாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப்பு உளதாம் என்று கூறினார்.

இருமையினும் எய்தும் இன்பங்கள் பலவும் அடங்க 'எல்லாம்' என்றார். இதனால் அவன் இழிப்பிறப்பாளனாவான் என்பதாகும்.

**1003 ஈட்டம் இவறி இசைவேண்டா ...**

'புகழ்' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. இசை யென்னும் புகழ் இருமைக்கும் உறுதியான அறமாகலின், ஈகையால் அதனையே வேண்டல் வேண்டும் என்பதாகும். அதனைச் செய்யாதிருப்பது குற்றமாகும். ஈட்டல் துன்பத்தையும், காத்தல் துன்பத்தையும் அடைகின்ற அறிவின்மை பற்றி 'நிலக்குப் பொறை' என்று கூறினார். 'தோற்றம்' என்பது அதற்குரிய உடம்பினை யாகும். அவன் பிறந்த நாளிலிருந்து பூமிக்குப் பாரம் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

**1004 எச்சம்என்று என்எண்ணுங் கொல்லோ ...**

இக்குறள் வினாமுறையில் அமைந்துள்ளது. ஈகையைச் செய்வான்மேல் புகழ் நிற்கும் என்பதால், அதனோடு பொருந்துதல் இல்லாதவனை 'என் எண்ணுங் கொல்லோ' என்றார். ஆதலால் அவன் ஒருவருக்கும் கொடாத பாவியானான் என்பதாம். 'இசை யென்னும் எச்சம்' (238), 'எச்சத்திற்கு ஏமாப்பு' (112), 'எச்சத்தாற் காணப்படும்' (114) என்பன சிந்திக்கத்தக்கன.

**1005 கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு ...**

இன்பத்திலும் அறம் சிறந்தது. ஆதலால் கொடுத்தல் என்பது முதலாவதாக இக் குறளில் கூறப்பட்டது. ஒன்றுமில்லாதவர்கள் போலப் பயனிரண்டும் இழத்தலின் 'இல்' என்றார்; ஆகவே இவர்கள் வறுமையாளர்களோடு ஒப்பர் என்பதாம். 'ஈகை', 'ஒப்புரவறிதல்' முதலிய அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. உலகப் பேச்சு வழக்கில் 'கோடி' என்றார்.

**1006 ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் ...**

ஈகையினை ஏற்றுக் கொள்ளுவதற்குத் தகுதியுடையவர்களைத் 'தக்கார்' என்றார். நுகரப்படுவதற்கும் ஈயப்படுவதற்கும் உரிய செல்வத்தினைப் பயன்படாததாகச் செய்தலால் அவனை 'நோய்' என்றார். அவனுக்கு ஈட்டல், காத்தல் என்பது துன்பமேயாகும். தானும் நுகராதவனானான் என்பதாம். நுகரப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்குரியதனை இல்லாதபடி செய்தலால் 'ஏதம்' என்றார்.

**1007 அற்றார்க்குஒன்று ஆற்றாதான் செல்வம் ...**

'நலம்' என்றதால் வடிவின் நன்மையும் குணத்தின் நன்மையும் குறிக்கப்பட்டன, இரண்டும் ஒருங்கு பெறுதல் அரிதாகலின் 'பெற்றான்' என்றார். கொடுப்பாரும் கொழு நனுமேயன்றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியோடு உவமை கூறியதால், செல்வமும் ஏற்பானுமே யன்றித் தானும் பயனிழந்து கழியும் என்பதாம். 'அற்றார்' என்றதால் இல்லாதவர்களுக்கே கொடுக்க வேண்டும் என்பதாயிற்று. 'வறியார்க்கு' (221) என்பது சிந்தனைக்குரியது. தானும் ஏற்பானுமாகிய இருவர் மாத்திரம் அல்லாமல் செல்வமும் பயனிழந்து போகும் என்பது உவமையால் கூறப்பட்டது.

**1008 நச்சுப் படர்தவன் செல்வம் ...**

நடுவூர் என்றதால் அப்படிப்பட்ட நச்சு மரம் அருகிலேயிருந்தும் பயனில்லை என்பதாகும். 'பயன்மரம்' (216), 'தப்பாமரம்' (217) போன்றவை சிந்தனைக்குரியன. நச்சு மரத்தின் பழம் உண்டால் கொல்லும் என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது. யாருமே அருகில் செல்லமாட்டார்கள் என்பது குறிப்பாயிற்று. 'பயன்மரம்', 'உள்ளூர்' (216) என்பதையும் கருதுக. அருகிலேயே இருந்தும் பயனில்லாமற் போயிற்று அன்றியும் தீமையும் பிறர்க்குண்டு என்பதாகும்.

**1009 அன்பொரீஇத் தற்செற்று அறம்நோக்காது ...**

'அன்புடைமை', 'அறன் வலியுறுத்தல்' முதலிய அதிகாரங்கள் இக்குறளில் நினைவு படுத்தப்பட்டன. பயனும் அறனும் இன்பமும் செய்து கொள்ளாதானுக்குப் பொருளால் உள்ளது ஈட்டல் துன்பமே என்பது தோன்ற 'ஈட்டிய' என்றார். அவன் வழியிலுள்ளார்க்கும் உதவாது என்பது தோன்ற 'பிறர்' என்றார்; 'உற்றக்கடை' (837) சிந்திக்கவும்.

**1010 சீருடைச் செல்வர் சிறுதுனி ...**

வறுமை வெறுப்பினை உண்டாக்குதலால் அதனைத் 'துனி' என்றார்; யாவர்க்கும் பயன்பட்டவர் அதனால் வறியரானார் என்றாலும், அவ்வறுமை விரைவில் நீங்குதலின் பின்பும் செல்வராய்ப் பயன்படுவர் என்பது உவமையால் பெற்றாம். ஆதலால் நன்றியில்லாத செல்வம் எப்போதும் பயன்படாது என்பதாகும். மாரி ஒருபொழுது பெய்யா விட்டாலும் அடுத்துப் பெய்யும் என்பது உறுதியான செய்தியாகும்.

## 102 நாண் உடைமை

**1011 கருமத்தான் நாணுதல் நாணு ...**

'திரு நுதல் நல்லவர்' என்றதால் இக்குறளில் குலமகளிர் புகழ்ந்து கூறப்பட்டார்கள் என்பதாகும்; ஆண்கள் இழிதொழில் செய்வதற்கு நாணவேண்டும்; எல்லா வகைகளிலும் 'நாணம்' என்பது குலமகளிர்க்கு இருந்தாக வேண்டும் என்பது குறிப்பாயிற்று; காமத்துப்பாலில் 'நாணுத் துறவுரைத்தல்' என்றோர் அதிகாரம் உண்டு. பொது மகளிர்க்கு நாணம் இருக்காது. இழிதொழில் செய்தற்கு நாணுதலே நன்மக்கள் நாணமாகும்; இது ஆடவர்களுக்கு என்பதாயிற்று.

**1012 ஊண்உடை எச்சம் உயிர்க்குஎல்லாம் ...**

மக்களை ஏனைய தாழ்ந்த உயிரினங்களிலிருந்து பிரித்துக் காட்டுகின்ற குணம் நாணுடைமையேயாகும் என்றார். 'எச்சம்' என்பது உறக்கம், பயம், காமம் முதலியனவாகும்; சிறப்பு என்பதால் அவ்வுயிர்களின்றும் வேறுபட்டு நிற்கும் தன்மை என்பதாகும். அவற்றை நீக்கி 'மாந்தர்' என்று தனித்துக் காட்டினார். எல்லா உயிர்கட்கும் இயல்பாகவே உண்ணுதல். உறக்கம், அச்சம், காமம் முதலியன இருப்பதாகும். மக்கட்கு உரிய தனிச்சிறப்பு

என்னவென்றால் 'நாணுடைமையேயாகும்; இழி தொழில் புரிய நாணுதல் வேண்டும். இழி தொழில்கள் பாவமும் பழியும் உண்டாக்கும் என்பதாம்.

**1013 ஊனைக் குறித்த உயிரெல்லாம் ...**

சான்றாண்மை என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. உயிர் உடம்போடு கூடியல்லாமல் பயன் எய்தாது போலச் சால்பு என்பதும் நாணுடைமை என்பதுடன் கூடாமல் பயன் எய்தாது என்பதாம்; 'கற்பு என்னும் திண்மை' (54) என்றது போல 'நாண் என்னும் நன்மை' என்று இங்கே குறித்தார்.

**1014 அணியன்றோ நாண்உடைமை சான்றோர்க்கு ...**

வினா முறையில் வியப்புக் குறியுடன் கருத்தினை அமைத்தார். அழகு செய்தலால் அணி என்றார். பொறுத்தற்கு அருமையானபடியால் 'பிணி' என்றார். 'ஏறு போல் பீடு நடை' (59) என்பது போன்று இங்கும் 'பீடு நடை' என்றார். சான்றோர்களின் உயர்வு எடுத்துக் காட்டப்பட்டது. எத்தகைய அணி பூணுதலும் பீடு நடைக்குப் பொருத்தமாயிற்று என்பதனைக் கூறினார்.

**1015 பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் ...**

பிறர்க்கு வந்த பழியினையும் தமக்கு வந்ததாகவே கருதுவது சான்றோர்க்குப் பெருந்தகைமையாகும். அக்கருத்துடையார் பெரியாராகலின் அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வர் என்பதாம். 'கொள்வர் பழிநாணுவார்' (433) என்பதும் 'பழிநாணுவானை' (794) என்பதும் சிந்திக்கத்தக்கன.

**1016 நாண்வேலி கொள்ளாது மன்னோ ...**

பழி பாவங்கள் புகாமல் காத்தலின் அதனை 'வேலி' என்றார். நாணமாகிய வேலியைப் பெறுவதற்கே விரும்புவார்கள், ஞாலத்தினைப் பெற விரும்ப மாட்டார்கள் என்பதாம். 'நாணம்' அழிய வரும்பொருள் கொள்ளார் என்பதாம். எனவே பொருளினும் நாணம் சிறந்தது என்பதாகும். நாணத்தின் பெருஞ்சிறப்பினைக் குறிக்க வேண்டியே 'ஞாலம் பேணலர்' என்றார்.

**1017 நாணால் உயிரைத் துறப்பர் ...**

உயிரினும் நாணம் சிறந்தது என்பது கூறப்பட்டது. 'உயிரினும் ஓம்பப்படும்' (131) என்பதுபோல இதனை அமைத்துக் காட்டினார். நாணத்தினைக் காப்பாற்ற வேண்டி உயிரினையும் இழப்பார்கள் என்பது இதன் கருத்தாகும். 'உயிர் நீப்பர்' (969) என்று குறிப்பிட்டதுபோல இங்கும் 'உயிரைத் துறப்பர்' என்று கூறினார். 'நாண் துறவார்' என்பது நன்கு சிந்திக்கப்படவேண்டியதாகும்.

**1018 பிறர்நாணத் தக்கது தான்நாணான் ...**

'அறம் நோக்கி ஆற்றுங்கொல்' (189) சிந்திக்கத்தக்கது. அறத்தினையே இறைத் தன்மையாகக் கூறி வருகின்ற ஆசிரியர், இங்கும் 'நாணத் தக்கது' என்றார். நாணோடு பொருந்தி வாழாதானை அறம் சார்ந்திருக்காது என்பதாகும். 'காயுமே அன்பிலதனை அறம்' (77), 'அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு' (204) என்பனபோல இங்கும் 'அறம் நாணத் தக்கது உடைத்து' என்றார்; 'தான்' என்று செய்வானைப் பிரித்துக் கூறியதால் 'பிறர்' என்றார். 'பிறிதின் நோய் தன்நோய் போல்' (315) என்று அமைத்துக் காட்டும் முறையில் இங்கும் அமைத்தார்.

**1019 குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் ...**

'நலம் சுடும்' என்றதால் பிறப்பு, கல்வி, குணம், செயல், இனம் முதலியன யாவும் கொள்ளப்படுவதாகும். கொள்கை அழிந்தாலும் நாணம் அழிவது அதனையும்விட மிகவும் தீது என்பது உணர்த்தப்பட்டது. 'சுடும்' என்று இருமுறை கூறினார். நாணம் இல்லா விட்டால் குலங்கெடும், ஆக்கங்கெடும், பெருமை கெடும் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. நாணம் இல்லாதவனாகிவிட்டால் அவன் பிறப்பு, கல்வி, குணம், இனம் என்று இவற்றால் வந்தன எல்லாமும் கெடும் என்பதாம். 'நாண் இன்மை' மிகமிகத் தீமை யென்றார்.

**1020 நாண்அகத்து இல்லார் இயக்கம் ...**

நாணமில்லாதார் வாழ்தல், உயிருள்ளவராக வாழ்தல் ஆகாதாம். அது பாவை யியக்கம் போன்றதேயாகும் என்று கூறப்படும். நாணமில்லாதார் மக்களல்லர் என்பதும் குறிப்பாயிற்று. 'அகத்து இல்லார்' என்பது சிந்தனைக்குரியது. 'உயிர் மருட்டியற்று' என்றதால் நாணமில்லார் இழிவு கூறப்பட்டது. நாணமில்லாமல் வாழ்கின்ற மக்கள் உயிருடன் இருந்து வாழ்கின்ற மக்களாக மாட்டார்கள். கயிற்றால் இயங்கும் பாவை இயக்கம் போன்றவர்கள் உயிரியக்கம் இல்லாதவர்களாவார்கள்.

## 103 குடிசெயல்வகை

**1021 கருமம் செயவொருவன் கைதூவேன் ...**

பலவகையான செயல்களால் செல்வமும் புகழும் எய்திக் குடிஉயரும் ஆதலால் 'பீடு உடையதுஇல்' என்று அமைத்தார். 'பெருமை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. தான் செய்ய வேண்டிய செயல் அதுவேயாகும் என்பது பெறப்பட்டது. எப்போதும் இடைவிடாமல் பணிபுரிய வேண்டும் என்று கூறினார்.

**1022 ஆள்வினையும் ஆன்ற அறிவும் ...**

நிறைந்த அறிவு என்று கூறினார். இயற்கையறிவு செயற்கையறிவோடு கூடி நிரம்புதலை 'ஆன்ற' என்று குறிப்பிட்டார். 'ஆள்வினை' என்றது மடி (சோம்பல்) நுழையாமல் இருப்பதற்காகும்; ஆன்ற அறிவு என்றது உயர்தற்கு ஏற்ற செயல்களும், அவை முடிக்கும் திறமும் பிழையாமல் எண்ணுதற்கு உரியதாகும். 'ஆள்வினையுடைமை',

'அறிவுடைமை' என்ற அதிகாரங்கள் குறிக்கப்பட்டன. குடி என்பது குடிமக்கள் என்பதைக் குறித்தது. பிறந்த குடி என்பதும் அமையும்.

**1023 குடிசெய்வல் என்னும் ஒருவற்கு ...**

'தெய்வம்' அருமையாகத் துணைபுரியும் என்பதாம். மேலும் இயற்கையும் உதவி புரியும் என்பதாம்; 'தெய்வம்' என்ற தலைப்பில் விளக்கம் காண்க. குடிமக்களுக்குத் தொண்டாற்றுபவனுக்கு அனைவரும் உதவி செய்வர். பொதுத் தொண்டின் சிறப்பு குறிக்கப்பட்டதாகும். 'சூழினும் தான் முந்துறும்' (380) என்று குறிப்பிட்டது போல இங்கு 'மடிதற்றுத்தான் முந்துறும்' என்று கூறினார். 'தெய்வத்தான் ஆகாது எனினும்' (619) என்பது சிந்தனைக்குரியது. 'குடிமக்கட்குத் தொண்டாற்றுபவன்' என்று சொல்பவர்க்கு 'இயற்கை' எனப்படும் ஊழ் விரைந்து வந்து உதவும். சில நேரங்களில் இயற்கையான ஊழ் (தெய்வம்) உதவாமலும் இருக்கும். 'தெய்வத்தான் ஆகாது' (619) என்பதையும் காண்க.

**1024 சூழாமல் தானே முடிவுஎய்தும் ...**

குடிமக்களுக்குத் தொண்டாற்றும் ஒருவனுக்கு எல்லோரும் உதவுவதால் 'தானே முடிவெய்தும்' என்றார். 'படைகுடி' (381) என்று குறித்தது போல 'குடி செயல்வகை' என்ற இந்த அதிகாரம், பொதுமக்களுக்குத் தொண்டாற்றுவதைக் குறித்ததாகும்; ஆதலால் தான் 'சுற்றமாச் சுற்றும் உலகு' (1025) என்றும் கூறினார். 'உஞற்றுபவர்' என்றதால் 'ஆள்வினையுடைமை' அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. 'தானே முடிவெய்தும்' என்று கூறியது சிந்தனைக்குரியது. குடும்பம், கூட்டம், குடிமக்கள் அனைத்தையும் 'குடி' குறிப்ப தாயிற்று. 'தாழாது உஞற்றுபவர்' (620) என்பதைச் சிந்திக்க வேண்டும்.

**1025 குற்றம் இலனாய்க் குடிசெய்து ...**

'சுற்றும் உலகு' என்பது பன்முறையும் சிந்திக்கத்தக்கதாகும். 'குற்றங் கடிதல்' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டதாகும். தாமும் பயன் எய்தல் கருதி யாவரும் சென்று அவனுடன் சேர்ந்து கொள்ளுவார்கள் என்பதாகும். வாழ்நாள் முழுதும் மக்களுக் காகவே பணியாற்றுபவனைக் குடிசெய்து வாழ்வானை என்றார். இந்த உலகமே என்றதனால் குடிமக்களுக்காக வாழ்பவனை உலகமக்கள் தாமே சென்று சூழ்ந்து கொள்ளுவார்கள் என்பதாம். தாமும் பயனெய்தல் நோக்கி யாவரும் சென்று சார்வர் என்பதாம்.

**1026 நல்லாண்மை என்பது ஒருவற்கு ...**

குடிமக்களை உயரச்செய்து தான் வழிப்படுத்திக் கொள்ளுவதை 'இல்லாண்மை ஆக்கிக் கொளல்' என்று கூறினார். அதனை ஆக்கிக் கொள்ளுதல் நல்லாண்மையின்பாற் படும் என்பதாகும். 'ஆண்தன்மை' என்பதற்கு விளக்கம் காணப்பட்டது. 'ஆளும் தன்மை' என்பது சிந்திக்கத்தக்கது இல் என்பது குடியினைக் குறித்ததாகும். குடியிலுள்ள மக்களை உயரச் செய்தல் என்பதை குடியாளும் தன்மை என்று சிறப்பித்தார். போர்த் தொழிலுக்கு ஏற்றது அண்மை.

**1027 அமரகத்து வன்கண்ணர் போல ...**

தொண்டு செய்பவரே நன்கு மதிக்கப்படுவார் என்பது 'ஆற்றுவார்' என்பதனால் கூறப்பட்டதாம் எல்லாருமே மக்களுக்குத் தொண்டு செய்து உயர்த்தும் ஆற்றல் பெற்றுவிட முடியாது என்பது குறிக்கப்பட்டது; 'வன் கண்ணரும்' மக்களுக்குத் தொண்டாற்றும் ஆற்றல் உடையவரும் ஒப்பிட்டுக் காட்டப்பட்டனர். வன் கண்ணரும் ஆற்றுவாரும் ஒரே தன்மையில் கருதப்பட வேண்டியவர்களாவர். மக்களுக்குள் பலர் தலைமை தாங்குபவர் களாக இல்லாமல் குறிப்பிட்ட ஒரு சிலரேதான் இருக்க முடியும் என்பது குறிக்கப்பட்டது.

**1028 குடிசெய்வார்க்கு இல்லை பருவம் ...**

'காலமறிதல்', 'மானம்' என்ற இரண்டு அதிகாரங்களும் குறிக்கப்பட்டன. தனிப் பட்ட வாழ்க்கையும் பொதுமக்களுக்குத் தொண்டாற்றும் வாழ்க்கையும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. 'பருவத்தோடு ஒட்ட ஒழுகல்' (482), 'காலம் கருதி இருப்பர்' (485) என்பவை முன்பே சொல்லப்பட்டிருப்பினும், குடிமக்களுக்குத் தொண்டாற்றும் பொதுத் தொண்டர்கள் பருவத்தினையே கருதி இருத்தல் கூடாது என்பதற்காகக் குடிசெய்வார்க்கு இல்லை பருவம் என்றார். அவர்கள் தனிப்பட்ட மனிதன் நினைப்பது போல தனது மானத்தினையோ பெருமையினையோ கருதிக் கொண்டு, சோர்ந்து, செயல்படாமல் காத்துக் கொண்டு இருக்கக் கூடாது என்று கூறினார்.

'மடியின்மை' அதிகாரம் குறிக்கப்பட்டது. 'மானம்' அதிகாரம் சிந்தித்தற்குரியது. 'காலமறிதல்' அதிகாரத்தில் காணப்படும் 'பருவத்தோடு ஒட்டஒழுகல்' என்பதனை நன்கு சிந்திக்கவும்; பிறவும் காண்க

**1029 இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ ...**

தனது மக்களுக்குத் தொண்டாற்றுபவர்களுக்கு எந்நாளும் துன்பம் வருதலும் உண்டு என்பதனைக் குறிப்பால் உணர்த்தினார். இது வினாமுறையில் அமைந்துள்ளது. 'இடுக் கணழியாமை' அதிகாரம் குறிக்கப்பட்டது. குடும்பம் என்பதால் குடிமக்கள் உணர்த்தப் பட்டார்கள். மெய்வருத்தம் பாராமல் உழைப்பார்கள் என்பது தோன்ற 'உடம்பு' என்றார். குடிமக்களுக்குப் பாடுபடும் ஒருவன் உடம்பு மிகவும் துன்பத்திற்கு ஆளாகவும் கூடும் என்று கூறினார். 'உடம்பு' என்பது சிந்திக்க வேண்டியது. மக்களுக்குத் தொண்டு செய்பவன் உடம்பு மிகுந்த துன்பத்திற்குள்ளாகும் என்பதாயிற்று.

**1030 இடுக்கண்கால் கொன்றிட வீழும் ...**

முந்தைய குறட்பாவில் 'இடும்பை' என்றது போல, இங்கு 'இடுக்கண்' என்றார். மக்களுக்காக உழைக்கும் நல்லவர்கள் தேவை என்பது இதில் உணர்த்தப்பட்டது. குடியோம்புவார் இல்லாக்கால் அக்குடி கெடும் என்று கூறினார். குடிமக்களுக்குத் துன்பம் வந்த போது 'அடுத்தூன்றும்', 'நல்லாள்' இருத்தல் வேண்டும் என்று சிறப்பித்தார். வளர்ப்பாரைப் பெற்ற நிலத்தில் வளர்ந்து பயன்படுதலும், இல்லாவழிக் கெடுதலும் உடைமை யின் மரம் என்று கூறினார். 'இடுக்கண் அழியாமை' என்றோர் அதிகாரமும் உண்டு. படை, குடி, கூழ் (381) சிந்திக்கவும்.

## 104 உழவு

### 1031 சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் ...

பிற தொழில்களால் பொருள் எய்திய வழியும் உணவின் பொருட்டு உழுவாரிடத்துச் செல்ல வேண்டுதலின் 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' என்றார். ஆதலால் பிற தொழில்கள் கடை என்பது குறிக்க வேண்டி 'உழந்தும் உழவே தலை' என்றார். வருந்தியும் உழுதலே தலைமையுடையது என்பதாகும். பெரும்பான்மைத் தொழில் வேளாளர்க்கு உரித்தாய உழவுத் தொழிலாகும். பிற தொழில்களால் பொருள் எய்திய வழியும் உணவின் பொருட்டு உழுவார் பின்னே செல்ல வேண்டுதலின் 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' என்றார்.

### 1032 உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅ∴து ...

கலங்காமல் திண்மையுடன் நிற்றலால் 'ஆணி' என்றார். 'உலகத்தார்க்கு' என்று பொதுபடக் கூறினார். உலகமெங்கும் பரவி நிற்கும் தொழில் உழவேயாகும்; எல்லா இடத்திலும் எல்லாக் காலத்தும் அத்தொழில் நடைபெறுவதென்பதாம். பிற தொழில்கள் அவ்வாறல்ல என்பது குறிப்பாகும். பிற தொழில்கள் செய்பவர்கள் 'எழுவாரை' என்று குறிக்கப்பட்டார்கள். உலகத்தார் தேராகவும் உழவர் அச்சாணியாகவும் குறிப்பிடப் பட்டார்கள். கலங்காமல் நிறுத்துகின்ற ஆணிபோன்று இருப்பதால் ஆணி என்றார்.

### 1033 உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற்று ...

தாமும் மக்கட் பிறப்பினராய் இருந்து பிறரைத் தொழுது அவர் சில கொடுப்பத் தம்முயிர் ஓம்பி அவர்பின் செல்வார் தமக்குரியர் அல்லர் என்பது இக்குறளின் கருத்து. 'வாழ்வாரே வாழ்வார்' என்பதும், 'பின் செல்பவர்' என்பதும் சிந்தித்தறிய வேண்டுவன. 'வசையொழிய வாழ்வாரே வாழ்வார்' (240) என்கின்ற முறையில் இங்கும் அமைத்துக் காட்டினார். உழுதுண்டு வாழ்பவர்களின் சிறப்பினைக் கூறிப் பிறர் எத்தகையோர் என்பதையும் உணர வைத்தார்.

### 1034 பலகுடை நீழலும் தங்குடைக்கீழ் ...

ஆட்சி செய்பவர்களையும் தாங்கிக் காப்பது உழவர்களே ஆவார்கள் என்பது உணர்த்தப்பட்டது. யாசிப்பவர்களுக்கு எல்லாம் கொடுப்பது கருதி 'நீழலவர்' என்றார். ஒற்றுமைபற்றித் 'தம்குடை' என்றார். ஆட்சியாளர்களுக்குச் சின்னமாக 'குடை' கூறப்பட்ட கருத்தினைச் சிந்தித்தறிதல் வேண்டும். உழவர்கள் தமது அரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண் முழுதும் அவனதாகக் கண்டிருப்பர் என்பதாம். தாம் வாழ்தலேயன்றித் தம் அரசனையும் வாழ்விப்பவர்களாவார்கள்.

'நாடு', 'செங்கோன்மை', 'கொடுங்கோன்மை' முதலிய அதிகாரங்களில் விளைச்சலின் இன்றியமையாத் தன்மை நன்கு கூறப்பட்டுள்ளது. 'கவிகைக் கீழ் தங்கும் உலகு' (389) என்று அங்கே கூறினார். இங்கு 'தம்குடைக்கீழ் காண்பர்' என்றார்.

**1035 இரவார் இரப்பார்க்கு ஒன்றுஈவர் ...**

எப்போதும் அழிவில்லாத செல்வமுடையவர்கள் என்பது குறிப்பால் உணர்த்தப் பட்டது. 'கரவாது' என்பது சிந்தனைக் குரியதாகும். 'இரவு', 'இரவச்சம்' — அதிகாரங்கள் குறிக்கப் பட்டன. 'ஈகை' அதிகாரத்தைச் சிந்திக்கவும். உழைத்து உண்ணுபவர்கள் என்னும் சிறப்பு அவர்களுக்கே உரியது. 'கைசெய்தூண் மாலையவர்' என்பதால் எப்போதும் அழிவில்லாத செல்வமுடையவர்கள் என்பதாயிற்று.

**1036 உழவினார் கைமடங்கின் இல்லை ...**

உழவர்களின் கை வாளாவிருப்பின் தாம் உண்டலும் இல்லறம் செய்தலும் யாவர்க்கும் இயலாது. உலகத்து இம்மை மறுமை வீடு என்னும் பயன்கள் நிகழா என்பதாம். இதில் உழவர்களின் கைச்சிறப்பு விளக்கப்பட்டது; 'கை' என்பது ஒழுகுகின்ற முறையினை உணர்த்திற்று. 'விழைவது', 'விட்டேம்' என்பதால் உலக மக்கள் அனைவரையும் குறித்தார். 'தானம் தவம் இரண்டும்' (19) என்று இருவகையினரையும் கூறியது போல இங்கேயும் கூறினார். தாம் உண்டலும் இல்லறம் செய்தலும் யாவர்க்கும் இல்லையாயின.

**1037 தொடிப்புழுதி கஃசா உணக்கின் ...**

உழவு செய்யுந் திறன் கூறுவார் முற்படப் புழுதி உணக்க வேண்டும் என்றார். கையில் அரைக் கழஞ்சு பொடி உதிர உழுவானாகில் பிடி எருவும் வேண்டாம்; தானே விளையும் என்றவாறு. 'புழுதி', 'சாலப்படும்' என்பன சிந்தனைக்குரியவை. 'பிடித்து' என்பது கைப்பிடி யளவு என்பதாகும். உலகியல் நடைமுறை வழக்கில் அமைத்துக் கூறினார். அடுத்து வருகின்ற குறட்பாவில் எரு இடுதல் கூறுகின்றார் என்றாலும் உழுகின்ற முறையின் சிறப்பில் எரு வேண்டாம் என்றார்.

**1038 ஏரினும் நன்றால் எருஇடுதல் ...**

காத்தல் — பட்டி முதலியவற்றால் அழிவெய்தாமல் காத்தலாகும்; உழுதல், எருப் பெய்தல், களை கட்டல், நீர்கால் யாத்தல், காத்தல் என்ற இம்முறையான இவ்வைந்தும் வேண்டும் என்பதாகும். ஐந்து செயலினையும் மிகத் தெளிவாக இச்சிறிய குறட்பாவில் அமைத்திருப்பது நன்கு சிந்திக்க வேண்டியதாகும். இக்குறட்பாவில் ஐந்து தொழில்கள் கூறப் பட்டன. உழவு செய்தலின் முறையினைக் கருதியே இந்த ஐந்தும் அம்முறையிலேயே அமைக் கப்பட்டன.

**1039 செல்லான் கிழவன் இருப்பின் ...**

இக்குறளை இல்லற வாழ்க்கை போன்றே அமைத்துக் காட்டினார். பிறன் கூறாமல் தானே சென்று பார்க்க வேண்டும் என்று குறித்தார். பிறரை விட்டுப் பார்த்திருக்கச் செய்யக் கூடாது என்றும் உணர்த்தினார். 'கிழவன்' உரிமை கொண்டவன் ஆனபடியால் தானே செல்லல் வேண்டும் என்பதாயிற்று. தானே சென்று வேண்டுவன செய்யாமல் வேறிடத்தில் இருத்தலாகாது. மனையாள் ஊடுமாறுபோல என்றது அவன் போகம் இழத்தல் நோக்கி என்பதாம். இல்லறத்தின் குறிப்பினை இங்குக் கூறியிருப்பது சிந்திக்கத் தக்கதாகும்.

நிலத்தினைக் கூறுகின்றபோது இல்லறத் துணைவியைக் கூறினார். நிலம் அசையாத பொருளாகும். மணமாகாத பெண்ணைக் கூறுகின்றபோது பொருளினைக் காட்டி அமைத்தார். 'தமியள் மூத்தற்று' (1007) என்றார். இது அசையும் பொருளினைக் கூறியதாகும். 'ஊடுதல்' மனைவியின் செயலாகும்.

**1040 இலமென்று அசைஇ இருப்பாரை ...**

இக்குறளில் உழுதல் முதலிய செய்வார் யாவர்க்கும் செல்வம் கொடுத்து வருகின்றவாறு பற்றி 'நல்லாள்' என்றார். அது கண்டுவைத்தும் அது செய்யாது வறுமையுறுகின்ற பேதைமை பற்றி 'நகும்' என்று கூறினார். 'மடியின்மை' அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'நாண்என்னும் நல்லாள்' (924) என்பதுபோல, 'நிலம் என்னும் நல்லாள்' என்று இங்குக் கூறினார்.

## 105 நல்குரவு

**1041 இன்மையின் இன்னாதது யாதுஎனின் ...**

'இன்மையே இன்னாதது' என்று நன்கு விளக்கினார். இக்குறள் வினா முறையில் அமைந்துள்ளது. தன்னையொத்த இன்னாதது (துன்பம் செய்வது) பிறிதில்லை யென்பதாம். பல நல்ல உவமைகளைக் கூறுகின்ற ஆசிரியர், வறுமைத் துன்பத்திற்கு (நல்குரவு) உவமை காட்டுகிறபோது வறுமைபோலத் துன்பம் செய்வது வறுமையே என்று கூறினார்.

**1042 இன்மை எனஒரு பாவி ...**

'அழுக்காறு என ஒரு பாவி' (168) என்று கூறியதுபோல இங்கும் 'இன்மை எனவொரு பாவி' என்றார். ஈயாமையானும் துவ்வாமையானும் மறுமை, இம்மை இன்பங்கள் இல்லையாயின என்பதாம்; இதில் நுகர்ச்சி இல்லாதபடி செய்து விடும் என்பது கூறப்பட்டது. இன்பம் இல்லையாகும் என்றவாறு இக்குறளில் வறுமையின் கொடுமை குறிக்கப்பட்டது.

**1043 தொல்வரவும் தோலும் கெடுக்கும் ...**

நல்குரவு அக்குடியில் தொல்லோர்க்கு இல்லாத இழி தொழில்களையும் இளி வந்த சொற்களையும் உளவாக்குமாம்; அந்த இரண்டினையும் ஒருங்கு கொடுக்குமாம். குடிப் பிறப்பினையும் வடிவழகினையும் கெடுக்கும் என்பதும் பொருந்தும் என்க; 'தொகையாக' என்பது சிந்தனைக்குரியது. நசை — ஆசை; நல்குரவினையே நசை என்றார். நசையிலா விட்டால் நல்குரவும் இல்லையாதலால் நல்குரவையே நசையாகக் கூறினார்.

**1044 இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை ...**

'குடிமை', 'பெருமை' என்ற அதிகாரங்கள் சிந்தனைக்குரியன. 'கண்ணேயும்' என்ற 'உம்'மை அவர்மாட்டு அது பிறவாமை தோன்ற நின்றதாகும். இழிவு உண்டாவதற்குக்

காரணமான சொல்லினை உண்டாக்கும். 'எமக்கு ஈய வேண்டும்' என்று கேட்கின்ற சொல் என்பதாம். தாம் அடைகின்ற துன்பமிகுதியால் ஒரு நேரத்தில் நமது நற்குடிப் பிறப்பினையும் மறந்து அது சொல்லுவதாக நினைத்தலாம். அதனால் 'சோர்வு' என்றார்.

**1045 நல்குரவு என்னும் இடும்பையுள் ...**

துன்பமும் தானும் உடனே நிகழ்தலால் நல்குரவைத் துன்பமாக்கினார். அத்துன்பத்தின் காரணமாகப் பலரிடம் சென்று நின்று கேட்டு வாங்குகிற துன்பமெல்லாம் சேர்த்துப் பல துன்பங்கள் ஒன்று சேரும் என்றார். 'இடும்பை' என்ற சொல் 'இடுக்கணழியாமை' அதிகாரத்தில் அடிக்கடி காணப்படுவதாகும். நாள்தோறும் பற்பல வகையான துன்பங்கள் வந்து கொண்டே இருத்தலால் எல்லாத் துன்பங்களும் விளையும் என்றார். 1042இல் ஒரு பாவி என்று சொன்னது போல், இங்கு 'என்னும் இடும்பை' என்றார்.

**1046 நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் ...**

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும், பொருளின்மையாகப் போகும் என்பதால் "யாம் இவர் சொல்லுவதைக் கேட்டால், பிறகு இவர் பொருள் கேட்பாரே" என்று எண்ணி யாவரும் கேளாமையின் பயனில்லாத சொல்லாய் முடிதல் என்பதாம். ஆதலால் கல்வியும் கூடப் பயன்படாது; 'சோர்வு படும்' என்பது சிந்திக்கத்தக்கது. மெய்ந்நூற் பொருள்களை நன்குணர்ந்து சொன்னாலும், வறுமையாளராக இருப்பதால் 'இவர் கூறுவதைக் கேட்டால், ஏதேனும் கைம்மாறு கேட்பார்' என்று நினைத்துச் சொல்லுவதைக் கேட்க வரமாட்டார்களாம்.

**1047 அறஞ்சாரா நல்குரவு ஈன்ற ...**

நல்குரவு உடையான் காரண காரியங்களுள் அறத்தொடு பொருந்தாத தன்மையுடையவனாவான். 'தாயானும்' என்று 'உம்'மை கூறியதால், அவளுடைய இயற்கையான அன்புடைமை விளக்கப்பட்டது. கொள்ளுகின்ற நிலைமையுமின்றிக் கொடுக்கின்ற நிலைமையும் உண்டாவதால் அது நோக்கிச் சுற்றத்தார் யாவரும் துறப்பர் என்பதாம்; 'நோக்கப்படும்' — சிந்திக்கத்தக்கது. காரண காரியங்களும் ஒன்றானும் பொருந்தாதுபற்றி 'அறம்சாரா' என்றார்.

**1048 இன்றும் வருவது கொல்லோ ...**

துன்பத்தின் எல்லையினைக் குறித்துக் காட்ட வேண்டி வறுமையாளன் தான் நேரே பேசுவது போல அமைத்தார் ஆசிரியர். நெருநல் (நேற்று) மிக வருந்தித் தன் வயிறு நிறைத்தான் ஒருவன் பேசுவது 'நெருநல் உளனொருவன்' (336) என்ற கருத்து. 'நெருநல்' என்று இங்குக் கூறப்பட்டது சிந்திக்க வேண்டியதாகும். இதனால் நல்குரவு நாள்தோறும் அச்சுறுத்தும் என்பதாம். துன்பம் மிகுதியால் வருந்தி நேற்று உணவு கிடைத்து உண்ட ஒரு வறுமையாளன் கூறுகின்ற கூற்றாக இக்குறட்பா அமைந்துள்ளது. வந்தால் 'என் செய்வேன்' என்கின்ற எண்ணத்தில் பேசினான்.

**1049 நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் ...**

நெருப்பினும் நிரப்புக் கொடிது என்பதை உணர்த்திற்று. வறுமையுற்றோர்க்கு உறக்கமும் வாராது என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டதாகும். முந்தைய குறட்பாவின்

காணப்பட்டவன் கூற்று இதுவுமாகும்; வறுமை என்னும் நெருப்பு மனத்தினைச் சுடுவதாகும்; கொடுமையினைக் குறிக்க வேண்டி 'துஞ்சலும்' என்றார்; இஃது இயற்கையில் நடவாத ஒன்றாகும்!

**1050 துப்புரவு இல்லார் துவர ...**

'துறப்பார்மன்' (378) என்ற குறட்பாவினையும் கருதிப் பார்த்தல் வேண்டும். மானமழியாமையின் துறப்பதே மேலாயிற்று. 'இல்லார்' ஆனபடியால் முற்றத் துறத்தல் வேண்டும். துறவாவிட்டால் பிறர் வீட்டுக் காடியையும் உப்பையும் தேடியலைய வேண்டும் என்பதாம். மானம் அழியாமையின் செயற்பாலது அதுவே ஆயிற்று. வறுமையுற்றதால் சுற்றத்தார் இவனை விட்டுவிட்டனர். இனி நின்ற தன் உடம்பினை அவன் துறத்தல் வேண்டும். 'துறப்பார்மன்' (378) சிந்திக்கவும்.

## 106 இரவு

**1051 இரக்க இரத்தக்கார் காணின் ...**

இரத்தற்கு (யாசித்தற்கு)ப் பொருத்தமுடையவர்கள் யாரென்றால், கேட்பதற்கு முன்னேயே உணர்ந்து ஈகையினைச் செய்பவர்களாவர். அத்தகையோர் அரிதாதலால் 'காணின்' என்றார். அவரிடம் யாசித்தால், இரவினால் (யாசித்தலால்) வரும் துன்பமில்லாததால் 'இரக்க' என்றார். தகுதியுடையவர்கள் கொடுக்கவில்லை யென்றால் அவர் பழி, தம் பழியன்று என்று குறிப்பிட்டார். அடுத்த அதிகாரம் 'இரவச்சம்' என்பதாகும். உலகியல் நடைமுறை பற்றிக் கூறுகின்றார். கொடுப்பவரைப் பார்த்து யாசிக்க வேண்டும் என்றார். அவர் ஈயாது மறைத்தால் அஃது 'அவர்பழி' என்றார். 'தக்கார் காணின்' என்பது சிந்திக்கத் தக்கது.

**1052 இன்பம் ஒருவற்கு இரத்தல் ...**

துன்பமுறாமல் வருவது அரிதாதலால் 'வரின்' என்று குறிப்பிட்டார். யாசிப்பவர்களுக்குத் துன்பம் உண்டாதல் என்பது உறுதி; ஆதலால், அத்துன்பம் யாசிப்போர்க்கு இல்லாமல் இருந்து விட்டால் உண்மையாகவே அது மிகுந்த இன்பமேயாகும் என்பதாம். நல்குரவால் உயிர் நீங்கும் நிலைமை விலக்கப்படாததாகும் என்பது இந்த இரு குறட்பாக்களாலும் சொல்லப்பட்டது. துன்பப் படாதவாறு கிடைத்தால் இரவும் (யாசிப்பதும்) இன்பமேயாகும்.

**1053 கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் ...**

'சிறிய சுருக்கத்து வேண்டும் உயர்வு' (963) என்றதனால் கரத்தலில்லா நெஞ்சினை உடையவர்க்கு அது கடன் எனப்பட்டது. அப்படிப்பட்ட நல்லவர்களின் முன்னின்று சொல்லுதலால், சிறுமை வராது ஆதலால் 'ஓர் ஏர் உடைத்து' என்று கூறினார். 'ஒப்புரவறிதல்', 'ஈகை', 'சான்றாண்மை' முதலிய அதிகாரங்கள் சிந்தனைக் குரியன. 'ஓர் ஏஎருடைத்து' என்று ஏன் கூறினாரென்றால், மானம் அழியக் கூடிய சொற்களைக் 'கடனறிவார்' சொல்ல மாட்டார்கள் என்பதாம்.

**1054 இரத்தலும் ஈதலே போலும் ...**

முந்தைய குறட்பாவில் கூறப்பட்ட கருத்து மேலும் விளக்கப் பெறுகிறது. 'ஈகை' அதிகாரம் குறிக்கப்பட்டது. 'இரத்தல்' என்பது புகழ் தராவிட்டாலும் முன்னுள்ளதாகிய புகழ் கெட வாராமையின் 'ஈதலே போலும்' என்றார். 'ஈதல் போலும்' என்பது 'இரந்தேம்' (யாசித்தோம்) என்ற சிறுமை அடையாமல் உயர்ந்தாரைப்போலப் பெருமிதத் தவர் ஆவர் என்பதாம். 'கனவிலும் தேற்றாதார்' என்பது சிந்தனைக்குரியது. 'கரத்தல் கனவிலும் தேற்றாதார்' சிந்தனைக்குரியதாகும்.

**1055 கரப்பிலார் வையகத்து உண்மையான் ...**

அப்படிப்பட்டவர்கள் இல்லையென்றால் மானம் நீங்கமாட்டாமையின் உயிர் நீப்பர் என்பதாகும். முன் குறட்பாவில் மறைக்காதவர்களிடம் சென்று 'இரக்க' என்று கூறினார். அத்தகையவர்கள் உலகில் இருப்பது அரிது என்பவர்களுக்கு இது கூறப்பட்டது. அத்தகையோர் இல்லையென்றார்; மானம் தாங்க முடியாமல் இறந்து விடுவார்கள் என்பதாம்; இரப்பவர் முன் நின்றபோதே ஈகை செய்தல் உயர்ந்தோர் கடனாகும்.

**1056 கரப்புஇடும்பை இல்லாரைக் காணின் ...**

மறைப்பதையும் ஒரு துன்பம் என்று கூறினார். 'கரத்தல்' (மறைத்தல்) என்பது ஒருவற்கு வேண்டப்படாததொன்றாகும்; அப்படி மறைக்காதவர்களைக் காணும் பொழுது இரப்பவர்க்கு மிகப் பெரும் மகிழ்ச்சி உண்டாவதால் 'எல்லாம் ஒருங்கு கெடும்' என்றார். மறைத்தலையும் 'இடும்பை' என்றார்; வறுமையினையும் இடும்பை என்றார். சிந்திக்கவும். மறைத்து வைப்பதையே 'கரப்பு இடும்பை' என்றார். கரத்தலாகிய நோயில்லாரைக் கண்டால் யாசிக்கின்ற துன்பம் போகும் என்று இக்குறட்பாவில் யாசிப்பவனுக்கும் உள்ளதை மறைப்பவனுக்கும் வேறுபாடு இல்லை என்பது தோன்ற இரண்டு இடங்களிலும் இடும்பை என்று கூறினார்.

**1057 இகழ்ந்துஎள்ளாது ஈவாரைக் காணின் ...**

'ஈகை' அதிகாரம் குறிக்கப்பட்டது. 'இகழ்ந்து எள்ளாது' என்றதால், நன்கு மதித்தலும் இனியவை கூறலும் பெற்றாம். 'நிரப்பு இடும்பை' (வறுமைத் துன்பம்) கெடுதலேயன்றி ஐம்புலன்களாலும் பேரின்பம் அடைபவராகக் கருதுதலால், 'உள்ளுள் உவப்பது உடைத்து' என்று கூறினார். மறைக்காமல் கொடுப்பவரது பண்பாடு இக்குறளில் விளக்கப் பட்டது. இரப்பாரைப் பார்த்து இகழ்தலும் ஏளனம் செய்தலும் ஒருவருக்கு ஆகாது என்றார். ஆகவே நன்கு மதித்தலும் இனியவை கூறலும் வேண்டும் என்க. 'காணின்' என்பது இரப்பாரின் மன உணர்ச்சியைக் கூறிற்று.

**1058 இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ...**

'மரப்பாவை நாணால்' (1020) என்று குறிப்பிட்டதுபோல இக்குறட்பாவில் 'மரப்பாவை சென்று வந்தற்று' என்று கூறினார். 'ஞாலம்' என்றது உலகிலுள்ள மக்களை யாகும். ஆதலால் இரத்தல் நிலையில்லாதவர்கள் என்பது குறிப்பாயிற்று. ஈதலைச் செய்து புகழும் இன்பமும் எய்தாமையின் அவர் உயிருடையரல்லர் என்பதாம். இரத்தலும் ஈதலும்

உலகத்தின் இயல்பு ஆதலால் இரத்தல் இழிவு என்றே கொள்ளப்படாது என்பதும் உணர்த்தப் பட்டது. ஈகையினைச் செய்து புகழும் புண்ணியமும் எய்துகின்ற வாய்ப்பு இன்மையால் 'மரப்பாவை' என்றார். உலக இயற்கையினைச் சுட்டிக் காட்டி இரப்பாரும் இன்றியமை யாதவர்களாவர் என்றார்!

**1059 ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் ...**

முந்தைய குறட்பா மேலும் விளக்கப்பட்டது. கொடுத்தல் என்னும் வள்ளல் தன்மை வெளிப்படாது. அதனால் அவர் புகழ் அடைய மாட்டார் என்பதாம். 'இரப்பார்' வேண்டும் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. இது வினாமுறையில் அமைக்கப்பட்டுள்ளது. புகழுடையார் உண்டாவதற்கு இரப்பார் காரணமாயிற்று. ஆதலால் 'இரவு' பழிக்கப்படக் கூடாது என்பதும் உணர்த்தப்பட்டது. புகழுக்குக் காரணமே ஈகை என்பது முதன்மையாகக் கூறப்பட்டது. இரப்பவர் இருந்தால்தானே ஈகைக்கு இடமுண்டு! ஆதலால் இரப்பவர் களால் உண்டாகும் நன்மை அறியத்தக்கது.

**1060 இரப்பான் வெகுளாமை வேண்டும் ...**

'வெகுளாமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. யாசிக்கும்போது பிறர் கொடுக்கவில்லையென்று கோபித்தல் கூடாது. அதற்குக் காரணம் கூறவேண்டாம். கோபத்தினைக் கைக்கொண்டு இருந்ததால்தான் யாசிக்கும் நிலைக்கு வந்துவிட்டான் என்பதனை அந்த வறுமைத் துன்பமே சான்றாக இருந்து புலப்படுத்தும். பிச்சை எடுப்பவர் களுக்கும் கடுங்கோபம் வருதல் உண்டு! 105 -இல் கூறியதுபோல இங்கும் 'நிரப்பு இடும்பை' என்றார்; அவனை இந்த நிலைக்குக் கொண்டுவந்து தள்ளியதே கோபமாகும் என்றார்.

## 107 இரவு அச்சம்

**1061 கரவாது உவந்துஈயும் கண்ணன்னார் ...**

இரவுக்கு (யாசிப்பதற்கு) மிகவும் அஞ்சுதல் வேண்டும் என்பதனைக் கூறுவது 'இரவச்சம்' என்னும் இந்த அதிகாரம். 'கோடியும் அல்ல பல' (337) 'கோடி தொகுத் தார்க்கும் (377) என்பன போன்று அமைகின்ற முறைகளையொட்டி இங்கும் 'கோடி உறும்' என்றார். மறைக்காதவர்களிடத்திலும் இரவாதிருத்தலே சிறப்பாகும். 'ஈதல்', 'ஈகை' என்பது நினைவுபடுத்தப்பட்டது. முயற்சியால் உயிரோம்பலே நல்லது என்பது கருத்தாயிற்று. உலகியல் வழக்கில் பேசப்படுவது போலவே 'கோடி' என்றார். இரத்தலுக்கு (யாசிப்பதற்கு) அஞ்ச வேண்டும் என்றார். 'அஞ்சுவது அஞ்சாமை' (428) காண்க. 'கரவாது உவந்து ஈயும்' சிந்திக்க வேண்டும்; ஒருவன் நல்லதோர் முயற்சியால் உயிர் ஓம்ப வேண்டும்.

**1062 இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் ...**

மக்களுயிர்க் கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டுவதாய உணவும் அதற்குக் காரணமான செய்தொழிலும் பழவினை வயத்தான் கூடி இருப்பதென்பது இயற்கையின் முறைமையாகும். அவற்றுள் சில உயிர்க்கு இரத்தலையும் ஒரு செய்தொழிலாக ஒருவன் கற்பித்தான் என்று கூறுவது முற்றிலும் தவறாகும். உலகினை இயற்றிய ஒருவன் அவ்வாறு

செய்தான் என்பவர்களும் உலகில் உண்டு என்பதால், அப்படிச் சொல்லப்படும் ஒருவன் இருப்பானாகில் அவனும் 'கெடுவானாக' என்றார். உலக இயற்கையினை உருவகப் படுத்தி 'இயற்றியான்' என்றார். 'வகுத்தான் வகுத்த' (377) என்பதனையும் கண்டு தெளிக. 'இந்த உலகம்' 'ஒருவனை முதலாவதாக உடையது என்பது முதற் குறட்பாவின் கருத்தாகும். உலகம் இயற்கையின் விளைவால் தோன்றியும் இயங்கியும் வருவதாகும். இறைவன் இடும்பை நீக்குபவனாவான். இரக்குமாறு படைத்தவன் இல்லையென்பது குறிப்பாயிற்று. இஃது இயற்கையின் நியதியாகும். ஊழ்வினை என்றும் கூறலாம்; இயற்கையின் அமைப்பினைக் கூறும் போது, 'வகுத்தான் வகுத்த' என்று இயற்கையின் இயல்பினை உயர்திணை மேல் அமைத்துக் கூறினார்.

**1063 இன்மை இடும்பை இரந்துதீர்வு ...**

நெறியான 'முயற்சி' இருக்க நெறியல்லாத இரவால் (யாசகத்தால்) தீர்க்க நினைப்பதால், அதனை 'வன்மை' என்றார். 'இரந்து தீர்வாம்' என்பது சிந்தனைக் குரியதாகும். 'வன்மை', 'வன்பாடு' என்பது முரட்டுத் தன்மையாகும்; அதாவது உணர்ந்து சிந்திக்காமல் செய்தலாகும், வறுமை தீர்வதற்கு வழி யாசித்தல் என்பதல்லவாம்! 'இரந்து தீர்வார்' என்பது இழிவான எண்ணமாகும்.

**1064 இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே ...**

'சான்றாண்மை' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. ஆகவே 'ஒல்லாச் சால்பு' என்று குறித்தார். அந்த 'இரத்தல்' செயலைச் சால்பு விலக்குமாதலால் 'இரவு ஒல்லாமை' அதன்மேல் ஏற்றப்பட்டது. 'இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே' என்று மிகுதியும் உயர்த்திக் கூறினார். இரவாதார் பெரியர் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. நெறியல்லாத செயல்களைச் சால்புடையார் செய்யமாட்டார் வேறு வழியே இல்லையென்றாலும் இதனைச் செய்யார். 'வையகமும் வானகமும்' (101) என்பது போலக் கூறினார்.

**1065 தெண்ணீர் அடுபுற்கை ஆயினும் ...**

இக்குறளால் 'ஆள்வினையுடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. முயற்சியினால் வந்தது கூழேயன்றித் தெண்ணீர் போன்றதாயினும் இழிவான இரத்தலால் — யாசித்தலால் — வாராமல் தமது உடைமையாகலின் மிகவும் இனியது என்று கூறினார். நெறியினால் வந்தது சிறிதே யானாலும் அது தருகின்ற இன்பம் பெரிது எனப்பட்டது. 'உண்ணலின்' என்று கூறியதால் அதைப் போல இனிமையாக இருப்பது பிறிதில்லை என்பதாயிற்று முயற்சியின் பெருஞ்சிறப்பு எடுத்துணர்த்தப்பட்டது. தன்னுடைய சொந்த முயற்சியால் வந்த கூழ் (உணவு) செறிவின்றித் தெண்ணீர் போன்றதாக இருந்தாலும் இழிவான இரத்தல் செயலில் வந்ததல்ல ஆதலால், அதனை உண்ணுவதைப் போல இனிமை தருவது எதுவுமே இல்லை

**1066 ஆவிற்கு நீர்என்று இரப்பினும் ...**

பசுவினைக் காத்துப் போற்றுதல் பெரிய அறம் என்றும் உணர்த்தப்பட்டது. என்றாலும் அதற்கு நீர் வேண்டி, இரத்தல் 'செயல்' கூடாது என்றார். இரக்கின்றவனுக்கு

இழிவு அச்சொல் அளவேயாகலான் 'நாவிற்கு' என்றார். அறத்தினையும் முயற்சியால்தான் செய்தல் வேண்டும்; யாசித்துச் செய்தல் கூடாது என்பதாம். 'ஈன்றாள் பசி காண்பான்' (656) என்பது போன்றவற்றைச் சிந்தித்தறிக. ஆ (பசுவினைக்) காத்தல் அறமாகும். அந்த அறமும் முயற்சி செய்தே நடைபெற வேண்டும் என்பதாயிற்று. எக்காரணத்தைக் கொண்டும் தனக்கே இல்லாவிட்டாலும் இரத்தல் இழிவு எனப்பட்டது.

**1067 இரப்பன் இரப்பாரை எல்லாம் ...**

இவ்வாறு இரந்து (யாசித்து) இந்த உடம்பினைக் காப்பாற்றினாலும் இந்த உடல் நில்லாத தன்மையுடையது; ஆதலால் இச்செயல் வேண்டாம் என்பது தோன்ற 'இரப்பன்' எனப்பட்டது. நேர்முகமாகப் பேசுவதைப் போல கருத்து அமைக்கப்பட்டது. யாவர் மாட்டும் இரக்காதே என்று கூற வந்து, முற்பட ஈயார்மாட்டு இரத்தல் ஆகாது என்று குறித்தார். இரவாது இறத்தல் இனிது என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது.

'மானத்தை விட்டு யாசிக்காதே' என்றார். இளிவந்த செயலால் காப்பாற்றப் பட்டாலும் உடம்பு நில்லாது. எனவே 'இது வேண்டாம்' என்றார். இரவன் மின்' என்று அமைத்துக் காட்டிய முறை சிந்தனைக் குரியது.

**1068 இரவுஎன்னும் ஏமாப்புஇல் தோணி ...**

முயற்சியால் கடக்க வேண்டுவதனை இரவால் கடந்து செல்ல எண்ணுபவன் அதன் கரை காணாததால் 'ஏமாப்பு இல் தோணி' என்றார். அது பாதுகாப்பு இல்லாததாகும். ஏமாப்பு இன்மை தோணிமேல் ஏற்றப்பட்டது. அது கடப்பதற்கு ஏற்றது அல்ல ஆதலாலும், நிலம் அறியாது செலுத்தியபோது உடைதலாலும் அதன்கண் ஏறாதே என்பதாகும். 'கரவு என்னும் பார்' சிந்திக்கத் தக்கது. முயற்சி செய்து கடக்க வேண்டியதை இரவால் கடக்கச் சென்றவன் அதன் கரை காண மாட்டான். ஏனெனில் நிலம் அறியாது செலுத்தியவழி தோணி உடையும் ஆதலால் 'பக்குவிடும்' என்றார்.

**1069 இரவுஉள்ள உள்ளம் உருகும் ...**

இரத்தலினை விடக் கரத்தல் (மறைத்தல்) கொடிது எனப்பட்டது. உள்ள, உள்ளம், உள்ள, உள்ளதூஉம் என்பன நன்கு சிந்திக்கப்படவேண்டியவை. உருகுகின்ற அளவும் இல்லாமற் போகும் என்பதனால் மனமே இல்லாத நிலை உண்டாகிவிடும் என்று உணர்த்தப்பட்டது. 'இன்றிக் கெடும்' என்பது உணரத்தக்கது. 'உருகும்' என்பதும், 'கெடும்' என்பதும், இரப்பவர்—கொடுப்பவர் தன்மைகளை நன்கு தெளிவுபடுத்தின.

**1070 கரப்பவர்க்கு யாங்குஒளிக்கும் கொல்லோ ...**

இக்குறள் வினாவும் வியப்பும் தோன்ற அமைந்துள்ளது. உள்ளதை மறைப்பவர்க்கு உயிர் எங்கு போய் மறையுமோ என்று சிந்தனை மிகுமாறு கூறினார். உயிர் மறைந் திருக்குமோ என்று கூறியதால், மறைப்பவர் பிணத்திற்குச் சமம் என்பது குறிப்பால் உணர்ந்த பட்டது. இல்லையென்று சொல்லியவுடனே யாசிப்பவர்களுக்கு உயிர் போகின்ற நிலை உண்டாகும். 'சொல்லாட' என்பது சிந்தனைக்குரியதாகும். மறைப்பவர்களுக்கு உயிர் போகாதிருக்கிறதே என்ற கருத்தில் மறைந்திருக்கின்றதோ என்றார். முன்பு கூறியபடியே

கரப்பவர் — இரப்பவர் — இருவரின் மனோ நிலைமைகளை இக்குறட்பா எடுத்தியம்புகிறது. இருவருக்கும் உயிர் எந்த நிலையடையும் என்பது கூறப்பட்டது. மேலே கண்ட குறட்பா போலவே, இங்கும் இரப்பாரைவிடக் கரப்பார் இழிவு கூறப்பட்டது.

## 108 கயமை

### 1071 மக்களே போல்வர் கயவர் ...

'மக்களே' என்று தேற்றேகாரத்தில் 'ஏ' கூறியதால் முழுதும் ஒத்திருப்பார்கள் (வடிவத்தில்) என்பது பெற்றாம். மிகச் சிறிதும் அவர்களிடத்தில் மனிதத் தன்மை இருக்காது என்றும் குறித்தார். ஆகவே அவருக்கு ஒப்பு (உவமை) கூற முடியாது என்றார். 'போல்வர்' என்பது சிந்தனைக்குரியது. 'உறுப்பு ஒத்தல்' (993) என்பதும், 'ஒப்பாரி' என்று கூறப்பட்டதும் கருதற்பாலன. கயவர் முழுதும் மக்கள் போலவே தோற்றத்தில் ஒத்திருப்பர் என்பதாம். மனித குணங்கள் அவர்களிடத்தில் சிறிதும் இல்லை. குணங்களே இல்லாத கீழோர்களாய இவர்களே கயவர்களாவார்கள்.

### 1072 நன்றுஅறி வாரின் கயவர் ...

நன்று என்பதால் இம்மை, மறுமை, வீடு என்பவற்றிற்குரிய புகழ், ஞான, அறங்கள் என்பனவாம். இவைகளைச் செய்ய வேண்டுவோர் வருந்தியும் முயன்றும் செய்பவராவர்; மனத்தில் சிந்தனை மிகுந்தவர்களாக இருப்பர். அவர்கட்கு நற்பணிகள் புரிய வேண்டும் என்கின்ற கவலையும் இருக்கும். இவ்வித எண்ணமே இல்லாத மனமுடையவர்களாதலால் கயவர்களைத் 'திருவுடையர்' எனக் குறிப்பால் இகழ்ந்து கூறினார். நல்லவைகளை நினைக்கும் கவலை அவர்கட்குக் கிடையாதாம். கயவர்கள் பழி பாவத்திற்கு அஞ்ச மாட்டார்கள் என்று அவர்களை நயமாக இழிவு படுத்திக் கூறினார். இம்மை, மறுமை, அறம், புகழ் முதலிய ஞானங்கள் பற்றிக் கவலை இல்லாதவர் திருவுடையார்தானே!

### 1073 தேவர் அனையர் கயவர் ...

இது, புகழ்வார் போன்று பழித்ததாகும்; தேவர்களை நியமிப்பாரில்லை! அவர்கள் விரும்பியபடியெல்லாம் நடப்பவர்களாதலால் 'அனையர் கயவர்' என்றார். 'தேவர்' என்பதன் தெளிவு பிறிதோர் இடத்தில் காண்க. கயவர் வேண்டியன செய்வார். கயவர்கள் யாருக்கும் எதற்கும் அஞ்சி நடக்க மாட்டார்கள்; அது போன்று 'தேவர்' என்பவரும் நடப்பர்; 'மேவன செய்து' என்பது சிந்தனைக்குரியது. உயர்ச்சியும் இழிவுமாகிய தம் காரண வேறுபாடு குறிப்பால் தோன்ற நின்றமையின், இது புகழ்வார் போன்று பழித்தவாறாயிற்று. விலக்கற்பாடின்றி வேண்டிய செய்வார் எனக் கூறப்பட்டது.

### 1074 அகப்பட்டி ஆவாரைக் காணின் ...

பட்டி போன்று வேண்டியவாறே ஒழுகலின் 'பட்டி' என்றார். அவர்கள் நிறைகுணம் இல்லாதவர்கள் என்பதாம். கீழ் மகனானவனைக் 'கீழ்' என்றார். அவர் இறுமாப்புக் கொண்டு நடப்பர் என்பதால் 'செம்மாக்கும்' என்றார். 'சின்ன கயவர்', 'பெரிய கயவர்' என்பது போல,

தன்னைவிடச் சுருங்கிய பட்டியா யொழுகுபவரைக் கண்டால், இப்பட்டி அந்த ஒழுக்கத்தில் மேம்பட்டதாக நினைத்து செம்மாக்குமாம்! மகனுடைய பழக்கம் குறிக்கப்பட்டது. அகப்பட்டி என்பது அகமாகிய பட்டி என்பதாம். பட்டிகளாகப் பல பேர் உண்டு என்பது குறிக்கப் பட்டது.

**1075 அச்சமே கீழகளது ஆசாரம் ...**

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றார். அவாவப்படுவதனை 'அவா' என்றார். அவர்களிடம் 'ஆசாரம்' காணப்படுவது அரிது. அப்படிக் காணப்பட்டால் அதற்குக் காரணம் அச்சமாக இருக்க வேண்டும்; அல்லது அப்படிக் காட்டிக் கொள்ளுவதால் 'பொருள் வருவாய்' இருக்க வேண்டும். 'கீழ்கள்' என்று கூறியது சிந்திக்கத்தக்கது. 'சிறிது' என்றும் கூறினார். 'மாண்டார் நீராடி' (278) என்பதும் சிந்திக்கத்தக்கதாகும். ஆசாரம் அவர்கட்கு இயல்பல்ல; கயவர்க்குப் பயம் உண்டானால் வணங்குவர்; பயன் இருந்தாலும் வணங்குவர்.

'ஆசாரம்' என்ற சொல், நூல்லேயே இந்த குறட்பாவில் மட்டும்தான் காணப்படுகிறது. இயல்பாகவே கீழ் மக்களிடத்தில் ஆசாரம் இருக்காது; அவர்களுக்கு வேண்டியபடி நடந்து கொள்ளுவது தான் இயல்பு; ஆசாரம் அவர்கட்கு இயல்பு அல்ல.

**1076 அறைபறை அன்னர் கயவர்தாம் ...**

வெளிப்பட்டால் குற்றம் விளையும் என்று கருதிப் பிறருக்குத் தெரியாமல் ஒருவன் சொல்லிய சொல் 'மறை' என்று குறிக்கப்பட்டது. கயவர்கள் அடிக்கின்ற பறை போன்றவ ராவர். தாமே போய்ச் சொல்லிக்கொண்டு இருப்பார்கள் என்பதாம். 'உய்த்து' என்றார், அந்த 'மறை'ச் செய்தியினைத் தாங்கமுடியாத பாரம்போல் எண்ணிப் பல இடத்திற்கும் போய்ச் சொல்லிவிட்டு வருபவர்கள் ஆவார்கள்; 'கேட்ட மறை' சிந்திக்கத் தக்கதாகும். பறையைப் போன்றவர்கள் பறையடிப்பது போலப் பேசிக் கொண்டு போவார்கள் இவர்களிடம் மறை பொருளான செய்தியைச் சொல்லிவிட்டால் ஊர் முழுதும் சொல்லிவிடுவார்கள்.

**1077 ஈர்ங்கை விதிரார் கயவர் ...**

மெலிந்தவர்களுக்கு யாதும் கொடார் கயவர் என்பதாம். 'விதிரார்' என்பது சிந்திக்கத் தக்கது. கழுவின கை என்பதைக் குறிக்கவே 'ஈர்ங்கை' என்றார். 'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரமும் சிந்தனைக் குரியதே. அடித்தும் நொறுக்கியும் வாங்கப்பட வேண்டியவர்களும் உலகில் உண்டு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. அடிப்பது என்றுகூடக் கூறி அமையாது உடைக்கும் என்றார். கன்னத்தில் (கொடிறு) உடைக்கும் என்று கூறியதால் பற்களை உடைக்கும் நிலையில்தான் கொடுப்பர் என்பது குறிப்பாயிற்று. ஈகை என்பது இவர்களுக்கு எள்ளளவும் இருப்பதில்லை. அடித்துப் புடைப்பவர்களுக்குத்தான் கொடுப்பார்கள். ஈரக் கையால் காக்கை ஓட்டமாட்டான் என்று பழக்கத்தில் பேசப்படுகின்ற பழமொழியையும் கருதுக.

**1078 சொல்லப் பயன்படுவர் சான்றோர் ...**

முன் குறட்பாவில் 'உடைக்கும்' என்றார். இக்குறட்பாவில் 'கொல்லப் பயன்படும்' என்று கூறினார். பயன் படுதல் என்பது உள்ளது கொடுத்தல் என்பதனைக் குறித்ததாகும்.

'சான்றாண்மை' அதிகாரம் இதில் குறிக்கப்பட்டது. கயவர் நெருக்கிப் பிழிந்தால்தான் பயன் படுபவர் ஆவர். கீழாயினார் இழிவு தோன்ற மேலாயினாரையும் குறித்தார். கயவர்களோடு சான்றோர்களையும் ஒப்பிட்டுக் காட்டினார். 'சொல்லல்', 'கொல்லல்' என்ற இரண்டு சொற்களும் சான்றோர் — கயவர் செயல்களைச் சுட்டிக் காட்டின. பயன்படுதல் பொதுவாகக் கூறப்பட்டது.

### 1079 உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் ...

மற்றவர்கள் நன்றாக இருப்பதைப் பார்த்தாலே கயவர் அவர்கள் மீது குற்றம் இல்லா விட்டாலும், தாமே கற்பனையாகக் குற்றம் சொல்லுவார்களாம். 'காணின்' என்பது சிந்தனைக் குரியதாகும். பொறாமை என்பது அவர்கட்கு இயல்பேயாகும். பிறர் உடுப்பதும் உண்பதும் கண்டாலே பொறுக்க மாட்டார்கள் என்பதாம். 'வடுக்காண வற்றாகும்' என்பதனைச் சிந்திக்கவும்.

### 1080 எற்றிற்குஉரியர் கயவர் ஒன்று ...

வினா முறையில் இப்பாடல் அமைக்கப்பட்டது. உணவில்லாவிட்டாலும் அல்லது அது போன்று வந்தாலும் என்பது தோன்ற 'ஒன்று உற்றக்கால்' என்றார். வாங்குபவர், கயவரின் கயமையறிந்து 'வேண்டாம்' என்று சொல்லுவதற்கு முன்பே விற்பார் என்பது தோன்ற 'விரைந்து' என்றார்; பிறர்க்கு அடிமையாய் நிற்பது என்பது குறிப்பாகும்; ஒரு தொழிலுக்கும் உரியர் அல்லர் என்பதாம். இவர்கள் எந்தத் தொழிலுக்கும் உரியவர்களாக மாட்டார்கள். சிறிய துன்பம் வந்தாலும் பிறர்க்கு விரைந்து தம்மை விற்றுவிடுவார்கள். பிறர்க்கு அடிமையாவதற்குத் தயங்க மாட்டார்கள்.

3 காமத்துப்பால் 1 களவு இயல்

## 109 தகையணங்கு உறுத்தல்

### 1081 அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ ...

இக்குறளில் 'படைத்தோன் சிறப்பாக ஆய்ந்து படைத்த மயில்' என்பதை 'ஆய்மயில்' என்று கூறினார். ஆகவே தேர்ந் தெடுத்த மயில் என்பதாகும். பலவாய்த் திரண்ட குழையினை யுடையாள்; எழுதலாகா வுருவும் தன் வருத்தமும் பற்றி 'அணங்கு கொல்' என்றான் தலைவன். சாயலைக் கண்டு மயில் என்றான். தன்னெஞ்சம் சென்றதாலும், அவள் எதிர் நோக்கியதைக் கண்டும் 'மாதர் கொல்' என்றான். தலைமகள் உருவமும் தோற்றமும் முன் கண்டறியாதனவாக இருந்தமையால் ஐயுற்றான்; மனம் மயங்கு கிறது என்றான். எழுதலாகா உருவத்தைக் கண்டு 'அணங்கு' என்றான். 'தெய்வமகள்' என்பது உலக வழக்கு; அவன் உள்ளத் தினை மயக்கியதால் அவ்வாறு கூறினான்.

### 1082 நோக்கினாள் நோக்கெதிர் நோக்கு ...

இங்கும் 'அணங்கு' என்றான் தலைவன். மானிடப் பெண்தான் என்று தெளிந்ததும் அவள் நோக்கினால் உண்டான வருத்தத்தைக் கூறினான். 'எதிர் நோக்குதல்' என்பதால் அது குறிப்பு நோக்கா யிற்று; நோக்கும் எதிர் நோக்கும் சிந்தனைக் குரியன. அழகினால் வருந்தினான்; இப்போது குறிப்பு நோக்கால் வருந்தினான்; அவன் மனம் பெருத்த அளவுக்கு ஈர்க்கப்பட்டதாம். தெய்வப் பெண்ணின் கூட்டத்தைக் கண்டது போலாம் எனினும் அமையும். காமத்துப் பாலில் கூறப்பட்டவை எல்லாம் பெரும்பாலும் ஆணும் பெண்ணும் பேசுவதைப்போல அமைக்கப்பட்டனவாம்.

**1083 பண்டுஅறியேன் கூற்றுஎன் பதனை ...**

அவள் நோக்கினால் தான் அடையும் வருத்தத்தினை மேலும் கூறுகின்றான். நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பவை 'பெண்தகை' என்பதால் குறிக்கப்பட்டன. அவை அந்தந்தக் குறிகளால் அறியப்பட்டன. பெண்தகையால் இன்பம் பயத்தலும் உண்டென்றாலும் துன்பம் உண்டாக்குதல் மிகுதிபற்றி இவ்வாறு கூறினான். முன் குறட்பாவில் 'சேனை' கூறப்பட்டது. இங்கு 'அமர்' (போர்) என்று குறிக்கப்பட்டது; கண்களே போர் செய்கின்றன என்றார். உலக வழக்கு முறையில் 'கூற்று' என்றார். காம உணர்ச்சிக்குக் 'காமன்' என்பதுபோல உயிரைப் பிரிக்கின்ற நிகழ்ச்சியைக் 'கூற்று', 'கூற்றுவன்' என்றார். இன்பம் கொடுக்க வேண்டிய ஒன்று, துன்பம் கொடுக்கிறதே என்பதைக் கருதி 'கூற்று' என்றான் தலைவன்.

**1084 கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தான் ...**

அவளுடைய நோக்கினால் தொடர்ந்து வருத்தமுறுகின்றான்; அப்பெண்ணோ பேதைமை கொண்டவள்; கண்களோ கண்டவர் உயிருண்ணுபவையாக இருக்கின்றன. ஆகவே இப்படிப்பட்ட மாறுதல் குணங்கட்கும் பேதைமைக்கும் பொருந்தாதவையாக இருக்கின்றன என்றான். 'உயிருண்ணும்', 'அமர்த்தன' என்பன சிந்தனைக்குரியவை. முந்தைய குறட்பாவினைப்போல 'பெண்தகை' என்றார். 'பெண்தகை' என்றதுபோல, 'அமர்த்தன கண்' என்றார்.

**1085 கூற்றமோ கண்ணோ பிணையோ ...**

அப்பெண்ணின் நோக்கினால் தான் வருந்துவதை மேலும் கூறுகின்றான். அவளுடைய கண்பார்வை இன்பமும் துன்பமும் செய்கின்றது என்று கூறுகின்றான். கொடுமை செய்தலால் 'கூற்றம்' என்றான். அவன் மீது ஓடுவதால் 'கண்ணோ' என்றான்; அஞ்சுவதால் 'மானோ' என்றான்; அவளை 'மடவரல்' என்று கூறுகின்றான். இன்பமும் துன்பமும் ஒருங்கு சேர்ந்து உண்டாகின்றன. அவனுடைய ஐயம் கூறப்பட்டது.

**1086 கொடும்புருவம் கோடா மறைப்பின் ...**

கண்கள் செய்யும் கொடுமையினை இன்னும் கூறுகின்றான்; நண்பர்களுக்கு இடித்துக் கூறுபவர்கள் தாம் செம்மையுடையவராதல் பொருட்டு 'கோடா' என்றார். புருவங்கள் இயல்பாகவே கோடுதல் (கோணுதல்) உடையன. ஆதலால் மிகுதிக்கண் மேற்சென்று இடித்தல் (784) செய்ய முடியாதாயின. இக்கருத்து 'மன்' என்றதால் குறிப்பிட்டுக் காட்டப்பட்டது. 'கொடும் புருவம்', 'நடுங்கு அஞர்' என்பவை சிந்தனைக்குரியன. 'இவள்கண்' என்பதைக் கருதுக. புருவங்கள் வளைந்திராமல் நேராக இருந்தால் கண்களை மறைக்கும்; தனக்குத் துன்பத்தினைக் கண்கள் உண்டாக்காமல் இருக்கும் என்றான். வளைந்த புருவங்களே அழகு!

**1087 கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் ...**

அவளுடைய முலைகளினாலாய வருத்தம் கூறப்பட்டது. கண்ணை மறைத்தல் பற்றிக் 'கட்படாம்' என்று கூறினான். துகிலான் (துணியால்) மறைத்தல் நாணுடைய மகளிர்க்கு இயல்பாகும். அத்துகிலினூடே முலைகளின் வெம்மையும் பருமையும் கண்டான். இவ்வளவு ஆற்றலுடைய இவை இனி எப்போதும் சாய்வில என்பது கருதி 'படாஅமுலை' என்று

கூறினான்; சிறிது மறையாவிட்டாலும் அவை கொல்லும் என்பதை உவமை உணர்த்திற்று; முலை கண்டு வேட்கையால் தலைமகன் கூறியதாகும்.

**1088 ஒண்ணுதற்கு ஓஒ உடைந்ததே ...**

அப்பெண்ணின் நுதலின் (நெற்றியின்) அழகால் தான்அடையும் வருத்தத்தினைக் கூறினான்; 'ஞாட்பினுள்' என்றதனால் பகைவராதல் பெற்றாம்; 'பீடு' என்பதால் அவனுடைய மன வலிமையும் உடல் வலிமையும் கூறப்பட்டன. 'ஓ' என்னும் வியப்பின் குறிப்பு அவ்வலிமைகளது பெருமையும் நுதலது சிறுமையும் தோன்ற நின்றது; அவளுடைய ஓர் உறுப்பிற்கே தனது வலிமையெல்லாம் உடைந்து விட்டதே என்று கூறினான் என்றால், 'பிறவற்றிற்கு யாது செய்வேன்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'நண்ணாரும் உட்கும்' என்பதை நன்கு சிந்தித்தல் வேண்டும்.

**1089 பிணையேர் மடநோக்கும் நாணும் ...**

அவள் அணிந்திருக்கின்ற அணிகலன்களால் அவன் அடையும் வருத்தம் கூறப்பட்டது. 'மடநோக்கு' என்பது அச்சத்தினைக் கொண்ட நோக்கு ஆகும். இவளுக்குப் பாரமாக இருத்தலும், தனக்கு அணங்காதலும் கருதாமையின் அணிவித்தார் அறிவிலர். தான் கொடுமை கூறுவான்போல அவளது நலம் பாராட்டினான். இயல்பாக அவள் பெற்றிருக்கும் அழகே போதும் என்றான். வினாமுறையில் குறட்பாக்களின் கருத்துக்கள் அமைக்கப் படுகின்றன. வேற்றுமையாக - வேறுபட்டன என்பதற்கு 'ஏதில' என்றான்.

**1090 உண்டார்கண் அல்லது அடுநறா ...**

தலைமகளின் குறிப்பினை அறியலுற்று சொல்லுகின்றான். 'உண்டார் கண்', 'கண்டார் கண்' என்பன சிந்தித்தறிய வேண்டுவன. மகிழ் செய்தலில் காமம் மதுவினும் சிறந்ததேயென்றாலும், இவள் குறிப்பு ஆராய்ந்து அறியாமையால் 'யான் அது பெற்றிலேன்,' என்று வருந்திக் கூறுகின்றான். காமம் உருவு கண்ட விடத்துக் களிப்பினைச் செய்யும். மயக்கம் கொடுக்கும் இயல்பு பற்றி இரண்டினையும் கூறினார். 'மாலும்' (1081) என்பதையும் 'உள்ளினும் தீரா' (1201) என்பதையும் சிந்திக்கவும்.

## 110 குறிப்பு அறிதல்

**1091 இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ...**

அவள் மனத்திலுண்டான காமக் குறிப்பினை வெளிப்படுத்துகின்ற 'நோக்கு' நோய் செய்கின்ற நோக்காயிற்று. அவளிடம் நிகழ்கின்ற 'அன்பு நோக்கு' மருந்தாய நோக்காயிற்று. நோய் செய்யும் நோக்குப் பொது நோக்கு என்றும் கூறப்படும். அவன் வருத்தம் நீங்கும் வழியும் உண்டாயிற்று. தலைமகன் தலைமகளின் உளப்பாட்டுக் குறிப்பினை அவளுடைய நோக்கினால் அறிந்து கூறினான். 'நோய் நோக்கு' என்பது அவன் மனத்தினாய காமக் குறிப்பினை வெளிப்படுத்துகின்ற நோக்கு; 'மருந்தாய நோக்கு', தன்னிடம் நிகழ்கின்ற அன்பு நோக்கு; நோய் செய்யும் நோக்கினைப் பொது நோக்கு என்பாரும் உளர்.

**1092 கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் ...**

தலைமகளின் உள்ளத்தினைப் புரிந்து கொண்டு பேசுகின்றான். தான் நோக்கியபோது நாணி இறைஞ்சியும் நோக்காதபோது உற்றுநோக்கியும் வருதலால் 'களவு கொள்ளும்' என்றான். அப்பார்வை சிறிது நேரமே இருத்தலால் 'சிறு நோக்கம்' என்றான். அது உள்ளத்தின் உள்ளே நிகழ்வதால் இனிப் புணர்தல் உறுதி எ.்பான், 'செம்பாகம் அன்று பெரிது' என்றான். தலைமகள் தலைமகன் காணாதவாறு நோக்குதலின் அது களவாயிற்று.

**1093 நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் ...**

நோக்கினாலும் நாணியதாலும் அவன் அவளை அறிந்து கொண்டான். முற்பட நோக்கிப் பின்பு நாணினாள். 'நோக்கினாள் நோக்கி' என்பது சிந்திக்கவும். இருவர் உள்ளமும் ஒத்ததை உறுதிப் படுத்திற்று; அவள் எண்ணத்தினையும் உணர்த்தியவளானாள். அவள் நீர் வார்த்தாள் என்றான்; வளர்க்கும் பொறுப்புப் பெண்பாலர்க்கே உரியது என்பது குறிப்பாயிற்று. 'அவள் யாப்பினுள் அட்டிய நீர்' என்றான். காதற் பயிரினை வளர்க்க வேண்டிய பொறுப்பு காதலிக்கே உரியதாகையால் இவ்வாறு குறித்தார்.

**1094 யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் ...**

நாணத்தினாலும் மகிழ்ச்சியினாலும் அவன் அறிந்து கொண்டது. 'மெல்ல' என்பது வெளிப்படாமல் நகைத்தல் ஆகும். மகிழ்ச்சியால் புணர்தற் குறிப்பு இனிது விளங்கியது. மெல்ல நகும் என்பது முறுவலித்தாள் என்பதே. எதிர் நோக்காமல் உடன்படுதலாம் என்றது தன் வசப்பட்டதோர் குறிப்பின் குணம் பற்றிக் கொண்டு இன்புற்று ஆற்றினான் என்பதாம்.

**1095 குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ...**

சிறக்கணித்தல் என்பது வெளிப்பட நிகழாததால், 'போல' என்றான். இனி இவளை அடைதல் உறுதி என்று எண்ணினான்; உடன்பட்டாள் போல நகும் என்பதாயிற்று. அதாவது காமக் குறிப்புடையார் போல நகுதல். இன்பப் புன்முறுவல் செய்தாள். அதனால் அவன் நன்கு தெளிவடைந்தான். கண்ணைச் சுருக்கிப் பார்த்தல் சிறக்கணித்தலாகும்.

**1096 உறாஅ தவர்போல் சொலினும் ...**

சொற்களால் அவன் அறிந்து கொண்டவை. அவள் குறிப்பறிந்த தலைமகன் தனக்குள்ளே சொல்லிக் கொண்டான் என்பது. "இவ்விடம் காவல் மிகுதி உடைத்து; நீவிர் வருதல் கூடாது" முதலியன கடுமையான சொற்கள். 'செறார்' எனவே அன்பு கொண்ட அவள் உள்ளம் பெறப்பட்டது. தன் குறை முடிக்கக் கருதியே போகச் சொல்லுகின்றாள் என்பதனைக் குறிப்பால் அறிந்து உலகியல் மேலிட்டுக் கூறியது; உறுப்பினால் இசைவு காட்டி உரையினால் மறுப்பினும் அது உடன்படுதலாம். உள்ளன்பு இன்மையால் அவள் அவ்வாறு கூறவில்லை என்பதாகும். 'ஒல்லை உணரப்படும்' என்பது சிந்திக்க வேண்டியது.

**1097 செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் ...**

அவள் உள்ளத்தினை நன்கு புரிந்து கொண்ட தலைமகன் சொல்லுகின்றான். சொல்லும் நோக்கும் உள்ளே ஒரு பயன் கருதிச் செய்யப்படுவன. பிறர் இவர்கள் நட்பை அறியக் கூடாது என்பதற்குச் செய்வனவாம். ஆதலால் இவற்றிற்கு அஞ்ச வேண்டாம் என்பு தாயிற்று. ஊடுதலில்லாத சொல்லும், அயலாரைப் போலப் பார்க்கும் பார்வையும் காமம் மிக்க தலைவியின் குணம் என்றவாறு; 'குறிப்பு' என்பது சிந்தித்தறிய வேண்டும்.

**1098 அசைஇயற்கு உண்டுஆண்டுஓர் ஏஎர்யான் ...**

தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்டு தலைமகன் கூறியது. அக்குறிப்பு இனிப் பழுதாகாது என்பதாகும். 'பசையினாள்' என்பது சிந்தனைக்குரியது. ஓசைப்படாமல் நகுதல் செய்தாள்; இது காமக் குறிப்புத் தோன்ற நின்று நகுதல் உடன்படுதலாம் என்றவாறு. 'மெல்ல நகும்', 'சிறக்கணித்தாள் போல நகும்' என்று சொல்லிய காதலன் இங்குப்'பைய நகும்' என்று கூறினான்.

**1099 ஏதிலார் போலப் பொதுநோக்கு ...**

'பொது நோக்கு' என்பது யாவர் மாட்டும் ஒரு தன்மைத்தாய நோக்கு என்பதாகும். நோக்குதல் தொழில் ஒன்றேயானாலும், ஒருவரிடத்திலேயே குறிப்பு வேறுபாட்டால் பல வகையாதல் கூடுமாதலால், 'உள' எனப் பன்மையால் கூறினார். அவர்கள் 'காதலர்' என்பது புறத்து வெளிப்படாமையின், 'ஏதிலார் போல' என்று கூறப்பட்டது. பிறர் தங்கள் காதல் வளர்ச்சியினைத் தெரிந்து கொள்ளாதிருக்க வேண்டியே, காதலர்கள் சில நேரங்களில் முன்னறி யாதவர்கள்போல் 'பொது நோக்கு' நோக்குவார்களாம்.

**1100 கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் ...**

நோக்கால் ஒத்தல் என்பது காதல் நோக்கினர் ஆதல் என்பதாகும். மனத்தின்கண் இல்லாமல் வாயளவில் தோன்றுகின்ற சொற்கள் 'வாய்ச்சொற்கள்' எனப்பட்டன. இருவர் சொல்லும் கேட்டு உலகியல் மேல் வைத்துக் கூறியவாறு. புனத்தைக் காக்க அவள் வந்ததாகவும் வேட்டைக்கு அவன் வந்ததாகவும் ஒருவரிடம் ஒருவர் சொல்லுவது பயனில்லாத (உண்மையல்லாத) சொற்களாகும். அவை கொள்ளப் படாதவையாகும்; ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்ளவே வந்தார்கள் என்பதாகும். ஒருவரை ஒருவர் ஓரிடத்தில் சந்திப்பதற்கு எண்ணங் கொண்டு வந்திருந்தாலும், அதனைக் கூறாமல் வேறு எதற்கோ வந்தது போலச் சொல்லியதால் அச்சொற்கள் 'என்ன பயனுமில' என்று கூறினார்.

## 111 புணர்ச்சி மகிழ்தல்

**1101 கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ...**

இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் தலைவன் கூறியது. இந்த இன்பம் வேறிடத்தில் இல்லாததால் 'கண்ணே' என்று 'ஏ'காரம் கூறப்பட்டது. வேறுவேறு காலங்களில் வேறுவேறு

பொருள்களால் அனுபவிக்கப்படுவன ஒருகாலத்தில் இவன்கண்ணே அனுபவிக்கப்பட்டன என்பதாம். பொறிகள் ஐந்துக்கும் ஒரு காலத்தே இன்பம் பயந்தது இப்புணர்ச்சி என்பதாகும். ஐம்புலனும் ஓரிடத்தில் கூடிய நிகழ்ச்சியாகும்.

**1102 பிணிக்கு மருந்து பிறமன் ...**

'நோய் நோக்கு' (1091) என்பதும் சிந்திக்க வேண்டியதே. இயற்கைப் புணர்ச்சியை நினைந்து முன் வருந்தினான் ஆகலின், 'தன் நோய்' என்றும், அவ்வருத்தம் தமியாளை இடத்தெதிர்ப்பட்டுத் தீர்ந்தானாகலின் 'தானே மருந்து' என்றும் கூறினான். இது இடந்தலைப் பாட்டின்கண் சொல்லியதாகும். இப்பிணியும் எளியவாயவற்றான் தீரப் பெற்றிலம் என்பது தோன்ற (மன்) கூறப்பட்டது. 'பிற' என்பதும் 'தானே' என்பதும் சிந்தனைக்குரியன. 'பிணி' என்று கூறியதும் 'நோய்' என்றதும் விளக்கம் காட்டுவனவாகும். காம நோய் அவளால் தீர்ந்தது; அதனால் அவளே மருந்து என்றான்.

**1103 தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் ...**

"நிலைபெற்ற இன்பத்தினைப் பெறவேண்டிய நீ இச்சிற்றின்பத்திற்கு இப்படியாதல் தகாது" என்றார்க்குத் தலைமகன் கூறியதாகும். இன்பம் நுகர்வார் ஐம்புலன்களையும் நுகர்வார் என்பதாகும்; இத்தன்மைத்தாகிய துயிலைவிட்டுத் தவயோகங்களான் வருந்த வேண்டுதலால், எம்போல்வார்க்கு ஆகாது என்னும் கருத்தால் 'இனிது கொல்' என்றான். 'தேவலோகம்' என்றும் 'தாமரைக்கண்ணான் உலகு' என்றும், 'இந்திரன் உலகு' என்றும் அங்குதான் நிறைந்த இன்பம் உண்டென்றும் கூறுவது உலகியல் கருத்தும் பழக்கமும் ஆகும். இதுபோன்று 'வைகுண்டத்தின்' இன்பம் இருக்குமோ என்றான்; 'மென்தோள் துயிலின்' என்று குறிப்பிட்டான். 'தாமரையினாள்' (617) என்பதனையும் சிந்திக்கவும்.

**1104 நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் ...**

தான் நுகர்ந்த இன்பத்தினை வியந்து கூறுகின்றான் என்பது. கூடுவதற்கு முன் துன்பம் தருதலால் 'நீங்கின் தெறூஉம்' என்றான். கூடியபின் இன்புறுதலால் 'குறுகுங்கால் தண் என்னும்' என்று குறிப்பிட்டான். இத்தன்மைத்தான தீ உலகில் இல்லையாம். ஆதலின் 'யாண்டுப் பெற்றாள்' என்றான். வினா முறையில் கருத்து அமைக்கப்பட்டது. தனது காமத் தீயினையே அவள் தந்தாளாகக் கூறினான். ஏனெனில் அவளால் அது வெளிப்பட்டதாகும். புணர்ச்சி உவகையினால் கூறுகின்றான் என்பதாம். 'தொடின் சுடின்' (1159) என்பது போன்றவை சிந்திக்கத்தக்கவை.

**1105 வேட்ட பொழுதின் அவையவை ...**

புதியதாய் நெஞ்சத்தை இன்பத்தினால் பிணித்தலின் ஆராமை (மனநிறைவு பெறாமை) பற்றி இவ்வாறு கூறினான். புணர்ச்சிக் காலத்து அசைந்து தாழ்ந்த கூந்தல் என்பது, 'தோள்தாழ் கதுப்பு' என்பதால் குறிக்கப்பட்டது. முயலாமல் பெற்றான் என்பது குறிப்பு. 'பொழுதின்' என்றதனால் விரும்பிய அப்பொழுதே கிடைக்கின்றது என்பதாம். 'வேட்ட' என்பது வேட்டல் (259) என்பதை நினைவுபடுத்துகிறது. வருகின்ற குறட்பாவிலும் 'அமிழ்தின் இயன்றன தோள்' என்றார்.

**1106 உறுதோறு உயிர்த்தளிர்ப்பத் தீண்டலால் ...**

அமிழ்தத்தினை உண்பார்க்கு இறப்பில்லை என்பது கருத்தாகும். அதனை இங்கேயே கண்டான். 'தாமரைக் கண்ணான் உலகு', 'அமிழ்தம்' அனைத்தும் இங்கேயே கண்டவனானான். வாடிய உயிரைத் தளிர்ப்பித்தல் பற்றி, அவை 'அமிழ்தின் இயன்றன' என்றான். தளிர்த்தல் என்பது இன்பத்தால் தழைத்தலாகும். 'உறுதொறும்' என்பது நன்கு சிந்திக்கப்பட வேண்டியதாகும். அப்பெண்ணைப் 'பேதை' என்று அழைத்தான். உலக வழக்கில் அமிழ்தத்தினை 'சாவா மருந்து' என்று கூறுவர்.

**1107 தம்இல் இருந்து தமதுபாத்து ...**

"இவளை நீ திருமணம் செய்து கொண்டு இல்லறத்தில் இருந்து பகுத்துண்டு வாழ்தல் வேண்டும்; இத்தகைய களவொழுக்கம் வேண்டாம்" என்றார்க்குக் கூறியதாகும். இல்லறம் செய்வார், எய்தும் துறக்கத்து இன்பம் எனக்கு இப்புணர்ச்சியே தரும் எனத் திருமணத்திற்கு உடன்படாதான் கூறியவாறு; பகுத்துண்டு உண்ணுவதில் இன்பம் மிகுதியாக உண்டு; அதனினும் பெரிது இந்த அரிவைமுயக்கம் என்றான். 'முயக்கு' என்று குறிப்பிட்டான். பகுத்துண்டு மகிழ்வதுபோல் இருவரும் இன்பத்தினைப் பகுத்துண்ணுவார்கள் என்பது குறிப்பாயிற்று.

**1108 வீழும் இருவர்க்கு இனிதே ...**

'ஒத்த அன்புடைய நுமக்கு ஒருபொழுதும் படாத முயக்கமே இனியது' என்பார்க்குத் திருமணம் செய்து வாழும் இன்பம் இங்கேயே உள்ளது என்றான். களவுப் புணர்ச்சியை வியந்து 'வரைவு' (மணம்) உடன்படாதான் கூறியது. விருப்பம் எய்திய தலைவனுக்கும் தலைவிக்கும் இனியது ஒன்று; தென்றல் இடை போதற்கு அரிய கலவி என்பதாம். காற்றும் ஊடுபோவதற்கு இடனில்லாதவாறு இறுக முறுக முயங்கப் பெறும் முயக்கம் என்றவாறு. 'இடை' சிந்தனைக் குரியதாகும். திருமணம் செய்து கொண்டு இல்லற இன்பத்தில் இருப்பதைவிட, இக்களவுப் புணர்ச்சியே சிறந்தது என மகிழ்ந்து கூறுகின்றான்.

**1109 ஊடல் உணர்தல் புணர்தல் ...**

'மறைத்தல் வேண்டாமையின் இடையறாத கூட்டமே இன்பப் பயனுடைத்து' என, திருமணம் செய்து வாழச் சொல்லியபார்க்குக் கூறியதாகும். திருமணம் செய்து இல்லறம் நடத்தினோர் செயல்களை எடுத்துக் கூறினான். அப்படிப்பட்ட பயன், "இருதலைப் பறவையின் ஓர் உயிராய உழுவலன்புடைய எமக்கு வேண்டாம்" என்று கூறினான். முறையே நடைபெறுகிற இயல்புபற்றி ஊடல், உணர்தல், புணர்தல் என்றான். 'காமம்' என்பது அன்பினை உணர்த்தியதாகும். திருமணம் செய்து கொண்டு இல்லறத்தில் ஊடல், உணர்தல், புணர்தல் என்பனவெல்லாம் கொண்டு வாழ்வது 'வேண்டாம்' என்றான். களவுக் கூட்டமே போதும் என்றான்.

**1110 அறிதோறு அறியாமை கண்டற்றால் ...**

புணர்ந்து உடன் போகின்றான் தன்னுள்ளே சொல்லியது என்பதாம். களவொழுக்கத்தில் பல இடையீடுகளால் தடுக்கப்பட்டு எய்தப்பெறாது அவாவுற்றான்; இது பொழுது நிரந்தரமாக எய்தப் பெற்றமையின், 'செறிதோறும்' என்றான். அறிவிற்கு எல்லையின்மையின்

மேன் மேல் அறிய அறிய முன்னை அறிவு அறியாமையாய் முடியும் என்பதாம். அதுபோலச் செறிவிற்கு எல்லையில்லாமல் இப்பெண்ணுடன் செறியச் செறிய முன்னைச் செறிவு செறியாமையாய் முடிகின்றது எனத் தனது ஆராமை (மனநிறைவு கொள்ளாமை) கூறியவாறு இப்புணர்ச்சி மகிழ்தல் தலைமகளுக்கு உண்டு என்றாலும் அவளிடம் குறிப்பால் நிகழ்வது அல்லாமல் கூற்றால் நிகழாமை அறிக; அவளிடம் தனது உள்ளம் செல்லுகின்ற காமச் சுவையினைக் கூறினான். 'அறியாமை கண்டற்றால்' என்பது கருதற்பாலதாகும். 'காமுறுவர்' (399) என்ற சொல்லும், 'கற்றனைத்து ஊறும்' (396), 'நவில்தொறும்' (783) என்பனவும் சிந்திக்கத் தக்கன. 'கல்வி', 'அறிவுடைமை' போன்ற அதிகாரங்கள் நினைவு படுத்தப்பட்டன.

## 112 நலம் புனைந்து உரைத்தல்

### 1111 நன்னீரை வாழி அனிச்சமே ...

தலைமகன் தலைமகளுடைய நலத்தினைப் புனைந்து சொல்லியது. புனைந்துரை எனினும், பாராட்டு எனினும், கொண்டாட்டு எனினும், மகிழ்ச்சி எனினும் ஒக்கும். இயற்கைப் புணர்ச்சியின் இறுதியில் சொல்லியதாகும். 'வாழி' என்பது உடன்பாட்டுக் குறிப்பு. இனி, "யானே மெல்லியன் என்னும் தருக்கினை ஒழிவாயாக" என்று அனிச்சத்தைப் பார்த்துக் கூறினான். அதுபோது உற்றறிந்தான் ஆதலால் ஊற்றின் (தொடு உணர்ச்சியின்) இனிமையையே பாராட்டினான். உடம்பினது மென்மை கூறப்பட்டது. உள்மகிழ்ந்து உரைத்தனன் என்பதாம். காதலியை மிகவும் புகழ்ந்து பேசுகின்றான். பூக்களிலே மிகமிக மென்மையானதைக் குறித்தான். 'அனிச்சப் பூவே! யானே மெல்லியன் என்னும் தருக்கினை விட்டு விடுவாயாக' என்றான்.

### 1112 மலர்காணின் மையாத்தி நெஞ்சே ...

ஒவ்வாததை ஒக்கும் என்று நினைப்பதை 'மையாத்தி' என்றான். இறுமாத்தல், செம்மாத்தல் என்பன போல மையாத்தி என்பது ஒரு சொல். மலர்களைக் கண்டால் தலைமகளை நினைப்பான். அது தலைமகளைக் காணாதிருக்கின்ற காலம் என்பதாம். அவளுடைய கண்களைப் பற்றிப் பேசுகின்றான்; கண் பூவினது நிறம் ஒக்குமாயினும் குணம் ஒவ்வாது என்பதாம். 'தலைவியின் கண்போல வண்ணம் பெற்றோம். விரசப் பார்வை அறியோம்' என்று மலர்கள் கூறும். அவள் கிட்டுதற்கு அருமையானவள் என்பதாம். மலர்களை அவள் கண்களுக்கு ஒப்பிட்டு நினைக்கின்ற நெஞ்சின் பேதைமையை இகழ்ந்து கூறினான். ஒரே 'பொருளினை' மலர், பூ இரண்டும் குறித்தன. பல மக்களும் காணுவதைப் பூ என்றான். இவள் இவன் ஒருவனால் மட்டும்தான் காணக் கூடியவள் ஆவாள்.

### 1113 முறிமேனி முத்தம் முறுவல் ...

உருவக வகையால் கூறியதால் புனைந்துரையாயிற்று. இவ்வகையால் இத்தகைய வடிவழகு உடையாளை எங்ஙனம் 'பிரிந்தாற்றுமோ' என்னும் குறிப்பினால் இனிது புனைந்து உரைத்தான் தலைமகன் என்றவாறு. 'நின்னால் கருதப் பட்டாளை அறியேன்' என்று கூறிய தோழிக்கு அந்தத் தலைவன் (காதலன்) அப்பெண்ணின் அடையாளங்களைக் கூறினான்.

**1114 காணின் குவளை கவிழ்ந்து ...**

பண்பாலேயன்றி தொழிலானும் ஒவ்வாது என்பான் 'காணின்' என்று கூறினான். கண்டால் ஒத்திருக்கவில்லையென்று நாணமடையும் என்பது தோன்ற 'கவிழ்ந்து' என்று கூறினான். காணுதலும் நாணுதலும் இல்லாததால் குவளை மலர்கள் செம்மாந்து வானை நோக்கின என்பதாம். நிலத்தினை நோக்காமைக்குக் காரணம் கூறியவாறு. காணுகின்ற தொழில் இன்மையான் 'காணின்' என்றான்.

**1115 அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் ...**

அப்பெண்ணின் பூவணி கண்டு சொல்லியதாகும். அம்முகிழ் (காம்பு)ப் பாரம் தாங்க முடியாமல் இடை முரியும்; முரிந்தால் இறப்பாள்; ஆதலால் அதற்குச் செத்தார்க்குரிய நெய்தற்பறையே ஒலிக்கும்; மக்கட்குரிய சாக்காடும், பறையடித்தலும் நுசுப்பின்மேல் (இடையின் மேல்) ஏற்றப்பட்டன. இடையினது நுண்மை கூறப்பட்டது. காம்புகளின் பாரமே அவளால் தாங்க முடியாது என்பதாம்; ஆற்றாது தலைமகன் கூறினான் என்றவாறு இடையின் சிறப்பு சொல்லப்பட்டது.

**1116 மதியும் மடந்தை முகனும் ...**

இரவில் சந்திரனைப் பார்த்துத் தலைமகன் கூறியதாகும். ஓரிடத்தில் நில்லாமல் எப்பொழுதும் இயங்குதல் பற்றிப் 'பதியிற் கலங்கிய' என்றான். பதியிற் கலங்காத மீன்கள் அறியுமே யல்லாமல், கலங்கின மீன்கள் அறியாது என்பதும் ஆகும். மீன்கள் கலங்கித் திரிகின்றனவாம்; மீன்கள் கலங்கித் திரிதலாலே இவள் முகம் மதியோடொக்கும் என்பதாம்.

**1117 அறுவாய் நிறைந்த அவிர்மதிக்கு ...**

தேய்தலும் வளர்தலும் மறுவுடைமையும் மதிக்கு உண்டு; இப்பெண்ணின் முகத்திற்கு இல்லை. அதனால் வேறுபாடு எளிதில் புரிந்து கொள்ள முடியும். அப்படியிருந்தும் விண்மீன்கள் அறிந்தில என்று இகழ்ந்து கூறியவாறு. வினா முறையில் அமைத்துக் காட்டப்பட்டது. கலை கலையாகக் குறைந்து வருகின்ற தன்மை 'அறுவாய்' என்பதால் குறிக்கப்பட்டது. மதியினை விடவும் தனது காதலியின் முகம் மிகவும் பொலிவும் சிறப்பும் கொண்டதாகும் என்று புனைந்துரைத்தான் என்பதாம்.

**1118 மாதர் முகம்போல் ஒளிவிட ...**

'மறுவுடைமையால் மாதர் முகம்போல் ஒளிவிடமாட்டாய்; ஆதலால் என்னால் காதலிக்கப்படவுமாட்டாய்; வாழி' என்பது இகழ்ச்சிக் குறிப்பு. மறு போயிற்றாயின் மதியும் மாதர் முகத்தினை ஒக்கும் என்பதாம். 'வல்லையேல்' என்பது சிந்திக்கத்தக்கது. மாதின் அழகு சிறப்பிக்கப்பட்டது.

**1119 மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி ...**

தானே முகத்தின் நலமுழுதுங் கண்டு அனுபவித்தான். ஆதலின் ''சுண்டும் பலர் காணத் தோன்றாதே'' என்று இழித்துக் கூறினான். தோன்றினால் நினக்கு அவ்வொப்பு

உண்டாகாது என்பதாம். இவள்போல் ஒரு வரம்பினையுளதாக்கி ஓரிடத்து உறைதல் நல்லது என்று அம்மதிக்கு உரைத்தான் என்பது குறிப்பாயிற்று. பலரும் காணுமாறு தோன்றுகின்ற சந்திரனை இழித்துக் கூறினான்.

**1120 அனிச்சமும் அன்னத்தின் தூவியும் ...**

முள் வலிமையாக இருக்குமாதலால் 'பழம்' எனப்பட்டதாகும். அவளால் அவனுடன் நடந்து வருதலும் கடினம் என்பதனை உணர்த்தினான். 'தூவி' என்பது குறிப்பிடத் தக்கதாகும். 'அவளை உடனழைத்துச் சென்றுவிடு' என்றார்க்குத் தலைமகன் கூறினான் என்பது குறிப்பாயிற்று. களவியலில் 'உடன் போக்கு' என்பதொன்று உண்டு. காதலியைப் பெற்றோர் அறியாமல் அழைத்துப் போகலாம் என்றாலோ, "அவளால் நடக்க முடியாது" என்றான்.

## 113 காதற் சிறப்பு உரைத்தல்

**1121 பாலொடு தேன்கலந் தற்றே ...**

'பாலொடு தேன்' என்று கூறியதால் அதன் சுவை போலும் சுவையினை உடைத்து என்பதாயிற்று. வேறுவேறு அறியப்பட்ட சுவையை உடைய பாலும் தேனும் கலந்துழி அக்கலவை இன்னதென்று அறிய முடியாதபடி இன்சுவைத்தாம். ஆதலின், எயிறு ஊறிய நீருக்கு உவமையாகக் கூறினான். இயற்கைப் புணர்ச்சியின் இறுதிக்கண் தலைமகன் இவ்வாறு தன் நயப்பினை உணர்த்தினான்.

**1122 உடம்பொடு உயிரிடை என்னமற்று ...**

பிரிவுஅச்சத்தினை நினைத்துக் கூறினான் என்பதாம். 'என்ன' எனப் பன்மையால் கூறியது. இரண்டும் தொன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்து வருதல்; இன்ப துன்பங்கள் ஒக்க அனுபவித்தல், இன்றியமையாமை என்று இவற்றை நோக்கி 'நின்னிற் பிரிய மாட்டேன்' என்று தலைமகன் கூறியவாறு; இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரியலுற்ற குறிப்புக் கண்டு வேறுபட்ட தலைமகளை நோக்கி, "நின்னிற் பிரியேன்; பிரியின் ஆற்றேன்" என்று தலைமகன் கூறியதாகும். 'குடம்பை தனித்து ஒழிய' (338) என்பதும், 'உயிரிடை', 'எம்மிடை' என்பதும் சிந்திக்கத்தக்கவை.

**1123 கருமணியிற் பாவாய்நீ போதாய்யாம் ...**

தலைமகளைவிட்டு நீங்கியிருந்தபோது தலைமகன் சொன்னது. யான் காணாது இருக்க முடியாது; ஆதலால் இவள் புறத்தே போயிருப்பதற்கு உரியள் அல்லள்; என் கண்ணுள்ளேயே இருக்க வேண்டியவளாகின்றாள். இருக்குங்கால் நின்னோடு (பாவைகள்) சேர்ந்து இருக்க இடம் போதாது. ஆதலால் "நின்னினும் சிறந்த இவளுக்கு அவ்விடத்தைக் கொடுத்துப் போவாயாக" என்றான். பாவைகள் போனால் குருடனாவான் என்பதைக் கருதினானில்லை! "காமத்திற்குக் கண்ணில்லை" என்ற பழமொழி சிந்தனைக்குரியது. பாவைகள் இல்லாமல் போய்விட்டால், பார்வை இழந்து விடுவான்; குருடனாவான். இதனையும் மறந்து அவன் பாவைகளைப் போகச் சொன்னான்.

**1124 வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை ...**

புணர்ந்து நீங்குபவன் சொல்லியது என்பதாயிற்று. வாழுங்காலத்தில் வேற்றுமையின்றி அதன்வழி நிற்றலானும், சாகுங்காலத்தில் வருத்தம் செய்தலானும் அவற்றை அவன் 'புணர்வு', 'பிரிவு' என்பவற்றிற்கு உவமையாக்கினான். 'வாழ்தல்', 'சாதல்' என்பன சிந்திக்கத்தக்கன. 'உயிர் தளிர்ப்ப', 'அமிழ்தின் இயன்றன' (1106) என்பன கருதுக.

**1125 உள்ளுவன் மன்யான் மறப்பின் ...**

ஒரு பொழுது நீங்கியிருந்த தலைமகனை நோக்கி, 'நீவிர் பிரிந்திருந்த போது எம்மை மறந்தீரோ' என்றார்க்குச் சொல்லியதாம். தோழி கேட்டதாகக் குறிப்பு. 'மறப்பறியேன்' என்றதால் விளக்கம் தெளிவாயிற்றென்க. 'அமர்க்கட்டு' (1083) என்று கூறியது போல இங்கு, 'அமர்க் கண்ணாள்' என்றான். காதல் மிகுதியினைக் காட்டிற்று என்பதாம். இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருந்தான் என்பது குறிப்பாயிற்று. 'மறப்பு அறியேன்' என்றான். 'உள்ளினேன் என்றேன்' (1316) என்பதனையும் 'குணம்' என்பதையும் சிந்திக்க வேண்டும்; குணங்களே பெண்களின் தனிச் சிறப்பாகும்.

**1126 கண்ணுள்ளில் போகார் இமைப்பின் ...**

இது பிரிந்தபோது பிரிந்திருக்கும் தலைமகனைத் தோழி குறையாகப் பழித்துக் கூறுவாள் என்று அஞ்சித் தலைமகள் அவளுக்குக் கேட்குமாறு தன்னுள்ளே சொல்லிக் கொண்டாள் என்பதாகும். இடைவிடாத நினைவின் முதிர்ச்சியால் எப்போதும் முன்னே தோன்றுதலால் 'கண்ணுள்ளில் போகார்' என்றாள். இமைத்த போதும் அது நிற்றலால், 'இமைப்பின் பருவரார்' என்றாள். இமைத்தால் நெருக்குண்டு வருந்துவதோர் வருத்தமும் செய்யார் என்பதாம். தன் காதலர் அத்தகைய நுட்பமானவர் என்று கூறினாள். இவள் காண்பதும் கருதுவதும் அவனையே என்பது குறிப்பாயிற்று. இமைத்தாலும் அத்தோற்றம் இருக்கின்றது என்றாள்.

**1127 கண்ணுள்ளார் காத லவராக ...**

தலைமகள் தலைமகனின் அருமையினைக் கூறியதாகும். யான் இடையீடின்றிக் காண்கின்றவரைப் 'பிரிந்தார்' என்று கூறுவது எப்படிப் பொருந்தும் என்பதாம். 'திருநுதற்கு' (1123) என்று அவன் கூறினான். 'கண்ணுள்ளார்' என்று இவள் கூறுகின்றாள். எப்பொழுதும் நோக்கியிருத்தலால் கோலஞ் செய்வதற்குக் காலம் பெற்றிலேன் என்றவாறு. 'கோலம் செய்யாதது ஏன்' என்ற தோழிக்குக் கூறியதாம். யான் இடைவிடாது கண்டு கொண்டிருக்கிற காதலரைப் 'பிரிந்தார்' என்று பிறர் கூறுவது தவறு என்று சொன்னாள். மை எழுதாமைக்குக் காரணம் தெரிந்தது.

**1128 நெஞ்சத்தார் காத லவராக ...**

முந்தைய குறட்பாவில் 'கரப்பாக்கு' என்பது போல் இங்கு 'வே பாக்கு' என்றாள். எப்பொழுதும் நெஞ்சிலேயே இருக்கின்றார்; பிரிந்தாரில்லை என்று கூறினாள். 'நீ உண்ணாதது ஏன்' என்ற தோழிக்குக் கூறியவாறு. 'அஞ்சுதும்' என்று கூறியது சிந்திக்கத்தக்கது; 'அறிந்து'

என்பதால் அவள் அறிந்திருக்கின்றாளாம். காதலர் இருக்கும் இடம் கூறினாள். காதலியின் அரிய காதலின்ப உணர்ச்சி தெரிவிக்கப்பட்டது. 'வெய்து உண்டல்', 'வே பாக்கு' இரண்டும் கருதி அறிய வேண்டுவனவாகும்.

### 1129 இமைப்பின் கரப்பாக்கு அறிவல் ...

'கரப்பாக்கு அறிந்து' (1127) என்ற கருத்து மேலும் விளக்கம் பெறுகின்றது. தன் கருத்து அறியாமை பற்றிப் புலந்து சொல்லுகின்றான் ஆதலால், தோழியை வேறுபடுத்தி 'இவ்வூர்' என்றாள். ஒரு பொழுதும் பிரியாதாரைப் 'பிரிந்தார்' என்று கூறாதே என்று குறித்தாள். அவள் துயில் கொள்ளாதிருப்பதற்குக் காரணம் சொன்னாள். இமைக்காதிருப்பது ஏன் என்று கூறினாள். 'அறிவல்' என்பது சிந்திக்கத்தக்கது. ஒரு பொழுதும் பிரியாதாரைப் பிரிந்தார் என்று பழித்துப் பேசுவதை அவளால் பொறுக்க முடியவில்லை.

### 1130 உவந்துஉறைவர் உள்ளத்துள் என்றும் ...

தனது காதலனைச் சிறிதளவும் யாரும் குறை சொல்லக் கூடாது என்பதே அவள் குறிப்பாகும். 'உவந்து உறைவர்' என்பதனால் அன்புடைமை கூறினாள். 'என்றும்' என்று குறிப்பிட்டார். 'மறப்பறியேன்' (1125) என்பதும் சிந்தனைக்குரியதாகும். "பிரியாமையும் அன்புமுடையாரை 'இலர்' எனப் பழிக்காதீர்கள்" என்று சொன்னாள். 'உறைவர்' என்பது கருதற்பாலதாகும். 'உள்ளத்தார் காதலவராக' (1249) ஒப்பிட்டுப் பார்க்கவும். 'உவந்து உறைவர்' என்பதனால் அன்புடைமை கூறினாள்.

## 114 நாணுத்துறவு உரைத்தல்

### 1131 காமம் உழந்து வருந்தினார்க்கு ...

காதலியைப் பார்க்க முடியாமல் பெற்றோர்களால் தடுக்கப்பட்டவளைக் குறித்துத்தான் இன்பமுறாமல் இருக்கும் நிலையில் தலைமகன் கூறியது. 'மடன்மா' விளக்கம் பிறிதோர் இடத்தில் காண்க. தாம் கருதிய இன்பம் பெறமுடியாமையால் காம நோய் உழந்து அதனாலே தனது நாணத்தினை கை விட்டு மன்றத்தில் பலரும் காண 'மடல்' ஏற முடிவு செய்தான். 'ஏமம்' சிந்திக்கத் தக்கதாகும். வருத்தம் தாங்க முடியாமல் கூறுகின்றான் என்பதாம். 'ஏமம்' என்பது அத்துன்பம் நீங்கும் வகை அந்த அனுபவத்தினைக் கொடுப்பதாகும்; பண்டைப் பழக்கத்தைக் கூறினான்.

### 1132 நோனா உடம்பும் உயிரும் ...

'நாணமுடைய நுமக்கு மடல் ஏறுதல் கூடாது' என்றார்க்குத் தலைமகன் கூறியதாகும். நீங்காத நாணமும் இப்போது நீங்கிற்று என்பதாம். 'உடம்பும் உயிரும்' என்றான். அவை தாம் தம்முள் நீங்காமற் பொருட்டு 'மடலேறும்' என்றது, அவன் தன் ஆற்றாமை அறிந்து விரைவில் குறை நேர்தல் நோக்கி என்புதாம். உடம்பொடு உயிரும் மடலேறும் என்றான். நாணினை நீக்கி அவ்வாறு செய்யுமாம். 'நோனா உடம்பு' என்று குறிப்பிட்டான். நாணத்தை நீக்கி விட்டான். 'எம்மிடை நட்பு' (1122) என்பதைச் சிந்திக்கவும்.

**1133 நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் ...**

நாணம் மட்டுமன்றி நல்லாண்மையும் போயிற்று என்று பேசுகின்றான். 'உட்கும் என் பீடு' (1088) என்பதைச் சிந்திக்கவும்; நாண் என்பது இழிவானவற்றைச் செய்வதை விலக்குதல். 'நாணுடைமை' அதிகாரம் கருதுக. ஆண்மையென்பது ஒன்றற்கும் தளராது நிற்றலாம். காமமுற்றார் ஏறும் மடலினைத்தான் 'இன்றுடையேன்' என்று கூறுகின்றான். இப்போது ஆசையினாலே மடலே துணையாயிற்று என்றான். ஆண்மை என்று மட்டும் கூறாமல் 'நல்லாண்மை' என்றான். 'பண்டறியேன்' (1083) என்றது போலப் 'பண்டுடையேன்' என்றான். 'மடல்' ஏறுதல் பழக்கம் உண்டு. காதலியை உறுதியாகப் பெறுவதற்கு இம்முறை பின்பற்றப்பட்டது.

**1134 காமக் கடும்புனல் உய்க்குமே ...**

நாணமும் நல்லாண்மையும் காம வெள்ளத்திற்குப் புணையாக இருக்க முடியாது; மற்றப் புனலினின்று வேறுபடுத்திக் காட்டுவதற்குக் 'கடும்புனல்' என்றான். 'காமக் கடும்புனல்' மிகவும் வலிமையுடையதாயிற்று. 'காமக் கணிச்சி' (1251) என்பதும் சிந்தனைக் குரியது. முன் குறளில் போல இங்கும் 'நல்லாண்மை' என்றார். 'நாணொடு நல்லாண்மை' என்று மேலே கூறியதை இங்கும் கூறுகின்றான். நாணும் நல்லாண்மையும் காம வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன. இந்த வெள்ளத்திற்கு அவை புணை ஆகா!

**1135 தொடலைக் குறுந்தொடி தந்தாள் ...**

தமக்கு இத்துயரம் வந்ததற்குக் காரணம் இங்கு கூறப்பட்டது; மாலை என்பது 'பொழுது கண்டு இரங்கல்' என்ற அதிகாரத்தினை நினைவுபடுத்தும். அவளுடைய மாலைத் துயரினைக் கூறுகின்றது. காமநோய் ஏனைப் பொழுதுகளிலும் உளதேனும், மாலைக்கண் மலர்தல் உடைமையின் 'மாலையுழக்கும் துயர்' என்றான். 'இந்நோய்' (1227) சிந்திக்கத் தக்கது. மிகவும் இளமை பொருந்தியவள் என்பது தோன்ற "தொடலைக் குறுந்தொடி" என்றான். மாலை நோய் செய்தல் (1226) என்பதும் சிந்திக்க.

**1136 மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் ...**

பேதை என்பது பருவம் பற்றிக் கூறியது அல்ல; மடமைக் குணம் பற்றிக் கூறியது. தூக்கம் வராததால் மடல் ஊர்தலையே நினைக்கின்றான் என்றார். 'யாமத்தும்' என்பது சிந்தனைக்குரியது. 'கண்படல் ஒல்லா' என்பது பெண்மையின் நுண்ணிய உணர்வை வெளிப்படுத்தும். அவளுடைய மடமை — அறியாமை பற்றிக் கூறியது. அவள் தூங்கவில்லை; 'வாராக்கால் துஞ்சா' (1179) சிந்திக்கவும்.

**1137 கடல்அன்ன காமம் உழந்தும் ...**

'பெண்ணிற் பெருந்தக்க' (54) என்பது கருதற்குரியது. பிறப்பின் சிறப்பினால் பெண்களுக்கு அடக்கம் உண்டு. அவ்வடக்கம் தனக்கில்லை யென்றான். 'கடலன்ன காமம்' — மிகுதியும் சிந்திக்கத்தக்கது. ஒருமை மகளிரே போல' (974) என்பதும் சிந்தனைக்குரியது. 'பெருந்தக்க யாவுள' (54) என்ற வினாவுக்கு விடையளிப்பது போன்று இக்குறட்பா உள்ளது. பிறவியின் காரணமாக அவளுக்கு இருக்கும் அடக்கம் தனக்கு இல்லை என்றான்.

**1138 நிறைஅரியர் மன்அளியர் என்னாது ...**

காப்புச் சிறை மிகுந்தபோது காமம் பெருகிய நிலையில் அவள் சொன்னது. அவள் தடுக்கப்பட்டு இருக்கின்றாள்; ஊரில் பலரும் அலர் பேசுகிறார்கள் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'நிறையழிதல்' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. பெண்கள் இரக்கத்திற்குரியவர்கள்; 'என்னாது' என்பது சிந்திக்கத் தக்கது. மறைத்து வைத்திருக்க வேண்டியது பெண்களின் இன்றியமையாக் கடமை. 'மறைப்பேன் மன்' (1161) என்பதும் கருதற்பாலது. பிறர் அறிந்து கொள்ளச் செய்கிறது என்பதனை 'மன்றுபடும்' என்றாள். உலகத்துப் பெண்பாலரின் காமத்து இயல்பு கூறுவாள் போன்று அப்பெண், தன் காமம் பெருகியவாறும் இனி அறத்தொடு நிற்றல் வேண்டுமென்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டன.

**1139 அறிகிலார் எல்லாரும் என்றேஎன் ...**

மறுகுதோறும் தடுமாறுகின்றது என்றாள். 'மருண்டு' என்பது அம்பலமாக்குகிறது; அறிகிலார் எல்லாரும் என்றே' என்பது 'மருண்டு மறுகும்' என்பதற்குக் காரணமாயிற்று! பலரும் பேசுகின்றனர் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. 'மறுகும்' என்பதனால் அம்பலமாகிறது குறிக்கப்பட்டது. அம்பலும் அலருமாயிற்று; தெருக்களில் எல்லாம் இவர்கள் காதல் செய்தி பரவிவிட்டதாம்.

**1140 யாம்கண்ணிற் காண நகுப ...**

தலைமகள் தன்னுள்ளே சொல்லிக் கொண்டாள். 'கண்ணின்' என்றதனால் முன்பு கண்டறியாமை உணர்த்தப்பட்டது. யாம் கண்ணால் காணும் வகையில் எதிரே நின்று அறிவில்லாதார் நகைக்கின்றார்கள் என்பதும் குறிப்பாயிற்று. உண்மையறியாது அவ்வாறு சிரிப்பவர்களை 'அறிவில்லார்' என்று கூறினாள். 'காண நகும்' என்பது சிந்தனைக்குரியது. ஒருவரையொருவர் காதலித்து வருகின்ற காதலர்கள் மற்றவர்கள் பார்வைக்குக் கிடைத்து விட்டால் பார்ப்பவர்கள் நகைத்துப் பேசுகிறார்கள். இதற்கு முன் அவர்களை, நகைக்கின்ற வர்கள் பார்த்ததில்லை ஆகையால் 'கண்ணின்' என்று கூறப்பட்டது.

## 115 அலர் அறிவுறுத்தல்

**1141 அலர்எழ ஆர்உயிர் நிற்கும் ...**

ஊரார் அலர் தூற்றிப் பேசுவதை அறிந்து தலைமகன் கூறியது. தலைமகளை அடையப் பெறாத வருத்தமெல்லாம் தோன்ற 'அரிய உயிர்' என்றான். ஊரார் தூற்றிப் பேசுவதால் இருவர் நட்பு உறுதியாயிற்று. அது நல்வினைக் காரணம் என்று கூறக் கருதி, 'பாக்கியத்தால்' என்றான். அவர் கூறாராயின் உயிர் நிற்காது என்பது குறிப்பு. தூற்றிப் பேசுவதைக் குறைபாடு என்றுதான் நினைப்பார்கள்! ஆனால் அதுவே காதலர்களுக்குத் துணையாய் நின்றது!

**1142 மலர்அன்ன கண்ணாள் அருமை ...**

அலர் தனக்குப் பற்றுக்கோடாகி விட்டபடியால், 'ஈந்தது' என்றான். ஈகை என்பது அன்பு உள்ளத்தினால் நிகழ்வதாகும். எளியாரைச் சொல்லுவது போலச் சொல்லுகின்றார்கள்

என்பது; அவள் அருமையானவள் என்கின்றான். 'அருமை அறியா' — சிந்திக்கத்தக்கது. தமது புணர்ச்சி அலர் ஆயிற்று. 'நிறை அரியர்' (1138) என்பது போலக் கூறப்பட்டது. ஊர் முழுதும் பேசிக் கொள்கிறார்கள். ஊரார் பேசுவதால் இருவரின் காதல் உறுதி செய்யப்பட்டது.

**1143 உறாஅதோ ஊர்அறிந்த கௌவை ...**

அவளைப் பெற்றபோது உண்டாகும் இன்பம் போல இன்பமுடையது. அலர் (கௌவை) மிகவும் ஆறுதலாகவும் இன்பமாகவும் இருக்கின்றதாம். 'அலர்' வேண்டும் என்பான் போன்று 'உறாஅதோ' என்றான். 'ஊர் அறிந்த கௌவை'—சிந்திக்கத்தக்கது. 'அன்ன நீர்த்து' என்பது அவன் மனோநிலையினை உணர்த்தியதாம்.

**1144 கவ்வையால் கவ்விது காமம் ...**

'அலர்தல்' — மேன்மேல் மிகுதல் ஆகும். செவ்வையுடையதனைச் செவ்விது என்பது போல, கவ்வையுடையதனைக் 'கவ்விது' என்றார். காதலன், அலரினால் காமம் மலர்கிறது என்றான். கவ்வையினால் காமம் உறுதி பெற்றது என்பதாம். 'தன்மை இழந்து' — சிந்தனைக் குரியது. 'தவ்வென்னும்' என்றது தவறுபடும் என்பதைக் குறிப்பால் உணர்த்திற்று. 'இன்றேல்' இழக்கும் என்றான். 'இன்பம் பயத்தலை' தன்மை என்றார்.

**1145 களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் ...**

வேட்கை மிகுதியால் 'அலரும்' இன்பம் செய்வதாக அமைகின்றது. 'வெளிப் படுந்தோறும் இனிது' என்றது விரைந்து வெளிப்படுதல் என்கிற குறிப்பாகும். 'கண்டார் மகிழ் செய்தல் (1090) என்று கூறினார். இங்கு வெளிப்படுந்தோறும் இனிது என்றார். அலரால் வெளிப்படுந்தோறும் என்று உணர்த்தியது, அவன் உளக் குறிப்பைக் காட்டிற்று. 'கள்ளினும் காமம் இனிது' (1201) என்பது போன்றவை சிந்திக்கவும்.

**1146 கண்டது மன்னும் ஒருநாள் ...**

திங்களைப் பாம்பு பிடித்தது என்பது உலகியல் வழக்கு. உலக இயற்கையில் கோளங்களின் நிகழ்ச்சியால் நடைபெறுவதை உலகமக்கள் பழக்க உரையில் அமைத்துக் காட்டினார். எல்லோராலும் அறியப்பட்டுவிட்டது. ஒரு நாளைக் காட்சியே அலராகி விட்டது என்றான். 'கொண்டற்று' என்பது ஒருவரையொருவர் கொண்டதென்ற குறிப்பு. உலகியல் நடைமுறைப் பேச்சு அப்படிப் 'பாம்பு கொண்டற்று' என்று குறிக்கப்பட்டது. இனி களவொழுக்கம் கூடாது — திருமணம் செய்து கொண்டு வாழ வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது.

**1147 ஊரவர் கௌவை எருவாக ...**

'காமப் பயிர்' அவளால் வளர்க்கப்படுகின்றதென்பது குறிப்பாகும். எருவும் நீரும் உணர்த்தப்பட்டன. காம நோயாகிய பயிர் வளர்கின்றது. 'அட்டிய நீர்' (1093) என்பதும் சிந்திக்கத்தக்கது. மகளைக் கண்டித்து அடக்குவது தாய்க்கே உரியது என்பதை உணர்த்த வேண்டி 'அன்னை சொல்' என்றார். பலர் பல இடங்களில் பேசுவது கௌவை (அலர்)

எனப்படும். 'எரு' பல இடங்களிலும் தெளிக்கப்படுவதாதலால் அலரினை 'எரு' என்றாள். நோய் வளர்ந்துவிட்டது என்று கூறினாள். 'நீளும்' என்பது சிந்திக்கத்தக்கது.

சுருங்குவதற்குக் காரணமாகிய தாமே விரிவதற்குக் காரணமாயினவாம். உழவு என்ற அதிகாரத்தில் 'எரு இடுதல்' (1038) பிறகு 'நீரிடுதல்' என்ற முறைப்படி இங்கும் எரு, நீர் என்று கூறினார். அன்னை சொல்லிக் கொண்டேயிருப்பாள் ஆனபடியால் 'நீர் சொரிதல் போன்று' என்பதாயிற்று.

**1148 நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் ...**

காமத் தீயினை அவித்துவிட முடியாது; மேலும் மேலும் வளர்வது என்றாள்; 'அலர் உரையால்' காமம் தணிக்கப்படுவதொன்று அன்று. 'நுதுத்தல்' என்பது அமுக்குதல், தணித்தல் என்பதுமாகும். 'என்றற்றால்', 'எனல்' என்பன சிந்தனைக்குரியவை. 'எரி', என்பதால் 'காமத்தீ' என்பதுமாயிற்று. கிளர்தற்குக் காரணமான அலரால் அவித்தல் முடியாது என்று சொல்லப்பட்டது. 'மெய்ப் பொருள் கண்டற்றால்' (249) என்பதுபோல 'என்றற்றால்' என்று இங்கே கூறினார்.

**1149 அலர்நாண ஒல்வதோ அஞ்சல்ஓம்பு ...**

அலர் கண்டு நாணமுறுதல் பொருந்தாது என்று கூறினாள். ஏனெனில் 'அஞ்சாதே, பிரியேன்' என்ற காதலரே பலரும் நாணமுறுமாறு பிரிந்துவிட்ட காரணத்தால் என்க. 'அஞ்சல் ஓம்பு' என்று தலைமகன் கூறியிருந்தான். நாணமே உயிரினும் பெரிது என்ற பெண்மைக் குணமும் நாணுதல் முடியுமோ என்று பேசும் நிலையும் உண்டாயிற்று. 'ஒல்வதோ'- சிந்திக்கத்தக்கது. கண்டார் நாணமுறுகின்ற நிலைமை உண்டான பிறகு நாம் நாணமடைந்து என்ன பயன்? பெண்களுக்கு உயிரினும் மேலானது நாணம் என்பது குறிப்பு.

**1150 தாம்வேண்டின் நல்குவர் காதலர் ...**

இருவரும் உடன்போக்கு நிகழ்ச்சிக்கு உடன்பட்டாரான குறிப்பு உணர்த்தப்பட்டது, உடன்போக்கிற்குச் சாதகமான அலரினை இவ்வூர் எடுத்துவிட்டது. 'காதலர்' என்றால், பிறர் அறியாமல் இருவரும் புறப்பட்டுப் போதற்குத் துணிவாயிற்று. காதலரும் இசைவார் என்பது கருத்தாயிற்று. இனித் தாங்களே விரும்பிக் கொடுப்பர், நமது காதலர்க்கு எனினும் அமையும். காதலனுடன் சென்று விடுதற்குத் துணையாக இந்த அலர் இருந்தது என்றாள். 'தாம் வேண்டின்', 'யாம்வேண்டு' என்பன பன்முறையும் சிந்திக்கத்தக்கவை.

3 காமத்துப்பால் 2 கற்பு இயல்

## 116 பிரிவு ஆற்றாமை

### 1151 செல்லாமை உண்டேல் எனக்குஉரை ...

பிரிந்து போய் விரைவில் வருவேன் என்ற தலைமகனுக்குக் கூறியதாகும். அத்தனைக் காலம் பிரிந்திருந்து அவன் வரவு காண வல்லவள் அல்லள் என்பதாம். பிரிந்தபொழுதே இறந்து படும் என்பதாகும். 'வாழ்வார்க்கு உரை' என்பது சிந்திக்கத்தக்கது. 'உயிர் வாழ வல்ல வருக்குச் சொல்லுங்கள்' என்றாள். 'உண்டேல்' என்பது அவளுடைய மனோ நிலையினைக் காட்டிற்று!

திருமணம் செய்து கொண்டு வாழ்கிறபோது நாயகன் தொழிலின் பொருட்டு வெளியூர் செல்லப் பிரிகின்றான். பிரிதலை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. பிரிதல் என்ற சொல்லினை அவளால் கேட்க முடியவில்லை. 'கற்பியல்' என்ற பகுதியில் ''பிரிவு ஆற்றாமை'' என்பது இந்த முதல் அதிகாரமாகும்.

### 1152 இன்கண் உடைத்துஅவர் பார்வல் ...

பிரிவினைத் தலைமகன் குறிப்பால் அறிந்த தலைமகள் கூறியது. 'பார்வல்' என்றதனால் புணர்ச்சி பெறாத பின்னிலைக் காலம் பெறப்பட்டது. 'புன்கண்' என்பது பிரிவார் என்ற அச்சத்தினை உண்டாக்கியதைக் குறிப்பிட்டது. அவரைப் புணர்ந்திருக்கும் இருப்புப் 'பிரிவாரோ' என்று அஞ்சப்படும் துன்பத்தை உடையது. அவர் அவளோடு கூடிய கூட்டம் (புணர்ச்சி) அவளை அவ்வாறு நினைக்க வைத்தது; புணர்ச்சியே அவர் கருத்தினை அறிவித்தது. இதனால் புணர்ச்சி பெறாத பின்னிலைக் காலம் பெறப்பட்டது. தலைமகன் குறிப்பால், பிரிதலை தலைவி உணர்ந்து கொண்டாள். 'இன்கண்', 'புன்கண்', 'பார்வல், 'புணர்வு' — இவ்வாறு இணைத்து கண்டு தெளிக.

### 1153 அரிதரோ தேற்றம் அறிவுடையார் ...

'அறிவுடைமை' என்ற அதிகாரம் நினைவு கொள்ளத் தகும். அறிவுடையார் மாட்டும் பிரிதல் நிகழ்கின்றதே என்று அஞ்சுகின்றாள். அறிவுடையாரிடத்தில் பிரிவு எக்காலத்தும் அரிது என்பது குறிப்பு. அவர் நம்மிடத்தில் அன்புடையார் என்று துணிவது எங்ஙனம் கூடும் என்றாள்; அரிய பல அனுபவங்களைக் குறிப்பால் சுட்டுவது 'தேற்றம்'. இதனை நன்கு சிந்திக்கவும் நாயகனை அறிவுடையார் என்று சிறப்பித்துக் கூறினாள். 'அறிவுடையார் ஆவது அறிவார்' (427) என்பது கருத்து. தான் பிரிந்தால் நாயகிக்கு வரக்கூடிய துன்பத்தினை அவன் அறியவில்லை போலும்!

**1154 அளித்துஅஞ்சல் என்றவர் நீப்பின் ...**

'தேறியார்' என்பது, தன்னைப் பிறர்போல் கூறியது. சொல்லும் செயலும் ஒவ்வாமைக் குற்றம் அவரிடம் என்றாள். 'நீப்பின்' சிந்திக்கத்தக்கது. 'அஞ்சலோம்பு என்றார்' (1149) என்பதும் கருதற்பாலது. இனி வந்து நன்மை செய்யினும் துன்பமன்றியே இன்பமில்லை என்பதாம். 'பிரிவாற்றாமை' என்பது இவ்வதிகாரம் ஆனபடியால் பிரிந்து செல்லலுற்ற தலைமகனின் வார்த்தைகளைச் சுட்டிக் காட்டினாள். உண்டோ தவறு? இல்லை தவறு (1321) — நயம்மிகு சொற்கள்.

**1155 ஓம்பின் அமைந்தார் பிரிவுஓம்பல் ...**

தோழியிடம் தலைவி கூறியதாக அமைந்தது. 'அமைந்தார் என்பது சிந்திக்கத்தக்கது. தனது உயிரை ஆளுதற்கு உரியவர் நாயகரேயாவார் என்று குறித்தாள். பிரிந்தால் அவள் இறந்துபடுவாள்; எனவே 'அரிதால் புணர்வு' என்றாள். செல்லாமல் பாதுகாப்பாயாக — என்பது தலைவியின் குறிப்புரை. 'அவர் நீங்கின்', 'பிரிந்தவர் பின் செல்வாய்' (1248) முதலியவை ஆழ்ந்து கருதுதற்குரியன.

**1156 பிரிவுஉரைக்கும் வன்கண்ணர் ஆயின் ...**

பிரிவினை உரைக்கின்ற அளவுக்கு நாயகர் துணிந்துவிட்டதால் 'வன்கண்ணர்' என்றாள். அன்பும் இரக்கமும் இல்லாதவரானார். 'உரைக்கும்' என்பது சிந்தனைக்குரியது. ஆசையினை விட்டு விடவேண்டும் என்றாள். திரும்பி வந்து அன்பு காட்டுவார் என்பது ஆசையாகும். இனி நம்மை நினைத்து வரமாட்டார் என்றாள். இன்பம் தருவர் என்னும் ஆசை முடியாது என்பதாம். 'நல்குவர் என்னும் நசை' சிந்தனைக்குரியது. கூடியிருக்கும்போதே அன்பின்றிப் பிரிவு எண்ணுதலும் உணர்த்தலும் வல்லவராயினார், பிரிந்துபோய் அன்புடைய ராய் நம்மை நினைத்து வந்து நல்குதல் எவ்வாறு இயலும் என்று கூறினாள்.

**1157 துறைவன் துறந்தமை தூற்றாகொல் ...**

முன்னே நிகழ்ந்தமையால் 'துறந்தமை' என்று கூறினாள். கேட்டவுடனேயே மெலிந்து ஆற்றாமையினால் 'இறவா நின்ற' என்று குறித்தாள். அவன் பிரியலுற்றதை வளையல்கள் தெரிவித்தனவாம். முன்பே அறிதலால் உடம்பு மெலிந்தது என்பதாயிற்று. 'தூற்றாகொல்', 'நின்ற வளை' என்பன சிந்தனைக்குரியன. பிரிவு கேட்டதும் மெலிந்தாள்; வளையல்கள் கழல ஆரம்பித்து விட்டன; இறையென்றது முன்கையின் முற்பகுதியான கோடுகள்; ரேகைக் கோடுகள்.

**1158 இன்னாது இனன்இல்லூர் வாழ்தல் ...**

தோழியர் இல்லாது வாழ்தல் இனிமையானதல்லவென்று கூறினாள். தனது உறவின் முறையார் இல்லாத ஊரிலே வாழ்தல் பொல்லாது எனினும் அமையும். நாயகரைப் பிரிந்து வாழ்கின்ற நிலையே இருக்கக்கூடாது என்பது குறிப்பு. நாயகரை 'இனியார்' என்று குறிப்பிட்டாள். இனிமைக்கு உரியவன் என்பதாம். இரு முறை 'இன்னாது' என்பது கூறப் பட்டது. நாயகன் பிரிவிற்கு உடன்பட வேண்டியதாயிற்று; வருந்துகின்றாள். தனக்கு உற்ற தோழியர் இன்மையால் உலகியல் கூறுவாள் போன்று சொன்னாள்.

**1159 தொடின்சுடின் அல்லது காமநோய் ...**

தீயினால் சுடப்பட்டால் மருந்துகளால் தப்பித்துக் கொள்ள முடியும். காமத்திற்கு அதுவுமில்லை. ஆதலால் 'சுடல்' என்றாள். தீயினும் கொடியதனை எவ்வாறு பொறுத்திருப்பேன் என்றாள். 'தொடின்', 'விடின்' — சிந்திக்க வேண்டுவன. தலைமகன் பிரிவினால் தலைமகள் ஆற்றாளாயினாள். 'தொட்டால் சுடும்', 'விட்டால் சுடும்' என்பன காதல் அருமையினை உணர்த்தப்பட்டன. மந்திரம், மருந்துகளால் தப்பிக்க முடியாத தீ என்பதாயிற்று; காமத்திற்கு இல்லையானபடியால் 'சுடல்' எனப்பட்டது.

**1160 அரிதுஆற்றி அல்லல்நோய் நீக்கி ...**

பிரிவாற்றுதல் என்பது புணர்ச்சியின்மையினைப் பொறுத்துக் கொண்டிருத்தல் என்பதாகும். பிரிவு உணர்த்திய போது துன்பமாயிற்று. அதற்கு உடன்பட்டு பிரியுங்கால் வேதனையாயிற்று. உண்டாகும் காம நோயினைப் பொறுத்தல் மேலும் அல்லல் ஆயிற்று. வரும்வரை மனத்தில் கவலைத் துன்பம் பெரிதாகும். பிரிவு காலத்தில் துன்பத்தினைத் தாங்கியிருத்தல் மிகவும் கொடுமையானது. இத்தனையும் பொறுத்திருந்து பின்னும் உயிருடன் வாழும் மகளிர் உலகில் பலர் உண்டு. ஆனால் நான் இறந்து விடுவேன் என்பது குறிப்பு. பிரிந்தால் உயிர் வாழமுடியாது என்றாள். பிரிவின்கண் நிகழ்வனவற்றைப் 'பிரிவு' என்றாள். நீக்கி, ஆற்றி என்பன அருமை நோக்கி நின்றன. 'வாழ்வார் பலர்' என்பது குறிப்பால் — வாழ மாட்டார்கள் என்பதாயிற்று.

## 117 படர்மெலிந்து இரங்கல்

**1161 மறப்பேன்மன் யான்இ:.தோ நோயை ...**

காம நோயினை வெளிப்படுத்தாமல் மறைத்து வைக்க முடியவில்லையென்பதாம். மறைப்பதால் பயனில்லை என்றாள். மறைத்து வைப்பதுதான் பெண்களுக்கு இயல்பு எனினும் முடியாமை கூறுகின்றாள். 'மணற்கேணி' (396) என்பதும் சிந்தனைக்குரியது. மறைக்க மறைக்க ஊற்று நீர் போல அதிகமாகின்றது. காம நோயின் இயல்பு விளக்கப்பட்டது. மறைப்பது, இறைப்பது போன்றதாயிற்று. 'மிகும்' என்பது கருதற்பாலது.

**1162 காத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் ...**

ஒருகாலைக் கொருகால் மிகுதலால் 'காத்தலும் ஆற்றேன்' என்று அவள் கூறினாள். தூரதேசம் சென்ற காதலர்க்குத் தூது சொல்லி அனுப்பினால், 'இன்னும் உயிரோடு இருந்தேன்' என்பதாகும். ஆதலால் அது எனக்கு நாணத்தினைத் தரும். 'இனி என்ன செய்வேன்' என்றாள். 'கரத்தலும்', 'உரைத்தலும்' சிந்தனைக்குரியன. 'நோய் செய்தார்' என்று நாயகனைக் கூறினாள். 'குறுந்தொடி தந்தாள்' (1135) என்று நாயகன் கூறியது சிந்தனைக் குரியது.

**1163 காமமும் நாணும் உயிர்காவா ...**

'நோனா உடம்பு' (1132) என்று காதலன் கூறியதும் சிந்திக்கத்தக்கது. 'நோனா உடம்பின் அகத்து' என்று தலைவி குறித்தாள். தூங்கும் என்பது, ஒன்றினொன்று மிகாமல் இரண்டும் ஒத்த அளவில் என்பது தோன்ற நின்றதாகும். காமம், நாணம், உயிர் இம்மூன்றும் குறிக்கப்பட்டன. தூது விடவும் முடியாதபடி செய்கின்ற காமமும் நாணமும் தம்முள் ஒத்து உயிரினை நெருக்குகின்றன. ஆகவே உயிராகிய காவடித் தண்டு இற்றேவிடும் என்பதாம்.

**1164 காமக் கடல்மன்னும் உண்டே ...**

'கடலன்ன காமம்' (1137) என்பதும் சிந்தனைக்குரியது. அவளால் நீந்த முடியவில்லை என்றாள். காமக்கடலை நீந்துவதற்குப் புணையாக இருப்பவன் தலைவனேயாவான் என்பது குறிப்பாயிற்று. 'ஏமம் மடல் அல்லது இல்லை' (1131) என்று தலைவன் கூறினான். ஆனால் இங்கு தலைவியோ, 'ஏமப்புணை இல்லை' என்றாள். நீந்திக் கடப்பதற்குப் பாதுகாப்பான புணை என்று வருந்தினாள். தலைவிமார்கள் காமக் கடலில் சிக்கிவிட மாட்டார்கள்; அப்படிச் சிக்கிக் கொண்டாலும் தகுந்த புணையால் நீந்திக் கடந்து விடுவார்கள் என்று சொல்லிய தோழிக்கு இவ்வாறு பதில் கூறினாள்.

**1165 துப்பின் எவனாவர் மற்கொல் ...**

'நட்பு' முதலிய அதிகாரங்கள் நினைவுபடுத்தப் பட்டனவாகும். வினாமுறையில் கருத்து அமைக்கப் பட்டுள்ளது. காம இன்பமாகிய நட்பிலும், துயரத்தினை உண்டாக்குபவ ரானார். தலைவரைப் பற்றிக் கூறினாள். 'துன்னியார் குற்றமும்' (188) என்பது போன்றவை சிந்தனைக்குரியன. பிரிவினால் துயரம் வருகின்றதென்பதனை 'வரவு' என்று குறித்தாள். 'நட்பினுள்' என்பது, 'எம்மிடை நட்பு' (1122) என்பதனை நினைவுபடுத்துகின்றது. பகைமை என்பதே இல்லாத போது தலைவன் செய்தது அவளால் தெரிந்து கொள்ள முடியவில்லை யென்பதாம். ''என்னைகொல் ஏதிலார் மாட்டு'' (188) என்ற முறையில் கருத்து கூறப்பட்டது.

**1166 இன்பம் கடல்மற்றுக் காமம் ...**

காமத்தால் இன்பமுற்றோர்க்கு அதனாலயே துன்பமும் வரும் என்பது குறிப்பாயிற்று. பெற்ற இன்பத்திற்குச் சமமாக இருந்தால் ஒருகால் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் துன்பமோ அதனினும் பெரிதாக இருப்பதால் பொறுத்துக் கொள்ள முடியாததாகும். ''அடுங்கால்'' என்றாள். 'இன்பமுற்றோர் துன்பமுறுதல் உலகியல்' என்பார்க்கு 'ஆற்றல் அரிது' என்றாள். 'நன்றாங்கால் நல்லவர்' (379) என்பது போன்றவற்றைச் சிந்திக்கவும்; 'அதனின் பெரிது'—சிந்தனைக்குரியது.

**1167 காமக் கடும்புனல் நீந்தி ...**

'யாமத்தும் உள்ளுவேன்' (1136) என்று துன்பமுற்ற காதலன் கூறியது போல, இங்கும் ''யாமத்தும் யானே உளேன்'' என்று கூறினார். கரை காண முடியாதது காமம் என்பதனை உணர்த்தினாள். யாரும் அவளுக்குத் துணையில்லை என்று கூறினாள். உறங்காமல் இருக் கின்றாள் என்பது குறிப்பாயிற்று. 'நீந்திக் கரை காணேன்' என்பதனைச் சிந்திக்கவும்.

'காமக் கடும் புனல் உய்க்குமே' (1134) என்பது சிந்தனைக்குரியது. 'யாமத்தும் உள்ளுவேன்' (1136) என்று காதலன் கூறிய எண்ணம் இங்கும் காணப்படுகிறது.

**1168 மன்னுயிர் எல்லாம் துயிற்றி ...**

இரவுப் பொழுதின் கொடுமையினை சொல்லுகின்றாள். அவளுக்கு உறக்கத்தினை உண்டாக்கவில்லை என்றாள். "படல் ஒல்லா" (1136) என்று துன்புற்ற காதலன் கூறியது போல, 'என் அல்லது இல்லை துணை' என்றாள். அன்புடையதாக இருக்கின்றது என்பதனைக் குறித்து 'அளித்து' என்றாள். இவளுக்குத் துணையாக இருக்கின்றது என்று கூறினாள். துணையோடு பொருந்துகின்ற உயிர்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இந்த இரவு இறக்கின்ற நிலையில் இருக்கின்ற என்னைத் துணையாகக் கொள்ளுதல் இரவின் அறியாமையாயிற்று.

**1169 கொடியார் கொடுமையின் தாம்கொடிய ...**

தான் பொறுத்திருக்க முடியாது என்பதனை அறிந்தும் பிரிந்தவரைக் 'கொடியார்' என்றாள். காதலன் பிரிந்திருக்கும் காலத்தும் இரவுப் பொழுது அதிக நேரம் நீட்டித்து இருப்பது போல் அவளுக்குத் தோன்றுகின்றதாம். ஆதலால் 'கொடியார் கொடுமையின்' என்று குறித்தாள். நாயகன் விரைவில் வாராமல் நீட்டித்தலால் 'கொடுமை' என்றாள். பிரிந்திருக்கின்ற காலத்தினை 'இந்நாள்' என்றாள். 'பொழுது விரைவில் விடிவதில்லை' என்றாள். 'நீடுக மன்னோ இரா' (1329) என்பதாக அங்கே கூறப்பட்டது. இங்கே கொடுமை செய்வதாகக் கூறப்படுகிறது. 'கொடுமை' என்பதால் விரைவில் வராமல் இருக்கின்றார் என்பதாயிற்று.

**1170 உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் ...**

கண்களில் நீர் பெருக அழுது கொண்டிருக்கின்றாள் என்பதாகும். அழுதல் பெண்களுக்கென்றே சிறப்பாக உரிய செயலாகும். தலைவன் இருக்குமிடத்திற்குச் செல்லுதல் முடியாதாகையால் 'வெள்ள நீர் நீந்தல மன்' என்று குறித்தாள். மனதிற்குச் செல்லுதல் என்பது நினைப்பேயாதலால் 'உள்ளம் போன்று' என்று தெரிவித்தாள். கண்கள் தாமே சென்று காதலரைக் காணுதல் இயலாது ஆகையால் 'செல்கிற்பின்' என்று குறித்தாள். தலைவன் உள்ள இடத்தினை, 'உள் வழி' என்று கூறினாள். அவர் இருக்கும் இடத்திற்கு மனம் போகும்; கண்கள் போகாது என்பதாம். நினைப்பிற்கும் காட்சிக்கும் உள்ள வேறுபாடு குறிக்கப்பட்டது. காணும் விருப்பம் மேலிட்டவளானாள் என்பதாம். எப்போதும் அழுத வண்ணம் இருக்கின்றாள் என்பதனை 'வெள்ள நீர்' என்றாள். 'அடி நோக்கி அஃது ஆண்டு அவள் செய்தது' (1279) — ஒப்பிட்டுப் பார்க்கவும்.

## 118 கண்விதுப்பு அழிதல்

**1171 கண்தாம் கலுழ்வது எவன்கொலோ ...**

வினா முறையில் பாடல் அமைந்துள்ளது. 'தண்டா நோய்' என்பது சிந்தனைக் குரியது. 'காட்டுவாரில்லை' என்று தலைமகள் கூறுகின்றாள். கண்களுடன் அவள் பேசுகின்ற

பேச்சுக்கள் போன்றதாம். 'தாம் காட்ட' என்பது கண்கள் செய்த வேலையைக் குறிக்கின்றது. அப்படிச் செய்த அவையே இப்போது அழுவது ஏனோ என்றாள். கண்களுடன் பிணங்கிக் கொண்டு பேசுகின்ற தலைவியின் கூற்றாக அமைந்துள்ளது. 'தாம்', 'யாம்' என்பன பிரித்துப் பேசுவதனைக் குறிக்கின்றன. இவ்வாறு பேசுதல் மகளிர்க்கு இயல்பாக அமைந்ததே.

**1172 தெரிந்துஉணரா நோக்கிய உண்கண் ...**

முந்தைய குறட்பாவில், 'எவன் கொலோ' என்றது போல இங்கும் 'உழப்பது எவன்' என்று கேட்டாள். முன்னதாகவே வருவது அறிந்து அது காப்பாற்றாதார்க்கு அது வந்த போது பொறுத்தலே நல்லது. அதுவும் செய்யாது வருந்துதல் பெரிய அறிவற்ற தன்மையே யாகும் என்றாள். இதனைத் 'தெரிந்து உணரா நோக்கிய உண்கண்' என்று கூறினாள். 'வருமுன்னர்க் காவாதான்' (435) என்பதும் சிந்தனைக்குரியது. 'பைதலும் காணான்' (1197), 'பைதல் கொள்' (1223), 'பைதல் நோய்' (1243) என்பன போன்று இங்கும் 'பைதல் உழக்கும்' என்று கூறினாள். 'தானும் அழுது என்னையும் வருத்துவது தகாது' என்று குறித்தாள் 'உணரா' என்று இருமுறை கூறியது சிந்திக்க வேண்டியதாகும்.

**1173 கதுமெனத் தாம்நோக்கித் தாமே ...**

'இது நகத்தக்கது உடைத்து' என்று கூறினாள். அழுகின்ற செயல் முந்தைய குறட்பாவில் கூறப்பட்டது. அந்தச் செய்கையினை 'இது' என்று குறிப்பிட்டாள். அச்செய்கை வருமுன்னர்க் காப்பவர்களுக்கு நகைப்பினை விளைவிக்கும் ஆதலால் 'நகத்தக்கது உடைத்து' என்று கூறினாள். அப்போது கண்கள் சடக்கெனத் தாமே நோக்கியதைக் 'கதுமென' என்று குறிப்பிட்டாள். 'கதும்' என்பது சிந்தனைக்குரியது.

**1174 பெயல்ஆற்றா நீர்உலந்த உண்கண் ...**

கண்கள் முன்பு எனக்குத் துன்பத்தினைச் செய்தன. இப்போது தாமே துன்புறுகின்றன; தப்பிக்க முடியாத நோயினை 'உய்வு இல் நோய்' என்று கூறினாள். அழுது அழுது நீரும் வற்றிப் போய் விட்டதாம். அழவும் முடியாதபடி இருக்கின்றன என்று குறிப்பிட்டாள். கண்களால் அவள் காதல் செய்து இப்போது அவள் துன்புறுமாறு அவை செய்து விட்டனவாம்.

**1175 படல்ஆற்றா பைதல் உழக்கும் ...**

காம நோய் முதலில் பார்த்ததால் வந்ததாகலின் அதனைக் கண்களே செய்ததாக்கிக் கூறினாள். 'படல் ஒல்லா' (1136) என்பதுபோல, 'படல் ஆற்றா' என்று குறிக்கப்பட்டதாம். 'கடலாற்றா காம நோய்' சிந்திக்கத்தக்கது. 'துன்பம் அதனிற் பெரிது' (1166) என்பது போலக் 'கடலாற்றா' என்றாள். முந்தைய குறட்பாவில் 'பெயல் ஆற்றா' — 'உயல் ஆற்றா' என்றது போல் இங்குப் 'படல் ஆற்றா' — 'கடல் ஆற்றா' என்று கூறினாள்.

**1176 ஓஒ இனிதே எமக்குஇந்நோய் ...**

'ஓ' என்பது மிகுதியான தன்மையினைக் காட்டிற்று. தன்னைப் போலவே கண்களும் துன்பப்படுவது அவளுக்கு மகிழ்ச்சியாக இருக்கின்றதாம்! 'இனிதே' என்று கூறுகின்றாள்,

தான் அடைகின்ற துன்ப நோயினை இப்படியெல்லாம் அவள் வெளிப்படுத்துகிறாள் என்பதாம். பெண்மைக் குணத்தின் தன்மையில் அமைத்து, இக்கருத்து அறிவிக்கப்பட்டது. 'இந் நோய் செய்த கண்' என்றதால் நோய்க்குக் காரணம் பெறப்பட்டது.

**1177 உழந்துழந்து உண்ணீர் அறுக ...**

'விழைந்து, இழைந்து, வேண்டி' என்பனவற்றால் தொடக்கத்தில் காதலரைச் சந்தித்த முறைமை எடுத்துக் காட்டப்பட்டது. 'குறிப்பறிதல்' (காமத்துப்பால்) என்ற அதிகாரத்தின் கருத்துரைகள் சிந்திக்கத்தக்கன. பொருட்பாலிலும் 'குறிப்பறிதல்' என்றோர் அதிகாரம் உண்டு; 'உள்நீர்' என்பது சிந்தனைக்குரியது. இடைவிடாமல் இந்நிகழ்ச்சி நடைபெறுவதால் அடுக்கு மொழிகள் அமைக்கப்பட்டன. 'நீர் உலர்ந்த கண்கள்' (1174) என்று அங்கே சொன்னவள், இப்போது 'உண்ணீர் அறுக' என்றாள்.

**1178 பேணாது பெட்டார் உளர்மன்னோ ...**

செயலால் பிரிந்து நின்றமையின் 'பேணாது' என்றாள். முன்பு அருமையான இன்சொற்கள் கூறியவர் ஆதலால் 'பெட்டார்' என்றாள். அவள் பொறுத்திருந்தாலும் கண்கள் அவரைக் காணத் துடிக்கின்றன என்றாள். 'உலகத்தில் தம்மை விரும்பாதவர்களைத் தாம் விரும்புவாரும் உண்டோ' என்றாள்.

**1179 வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ...**

கண்களுக்கு ஒரு போதும் தூக்கமில்லை என்பதற்குக் காரணம் கூறினாள். 'துஞ்சா' என்பது இருமுறை கூறப்பட்டதால் துயிலாததற்குக் காரணம் புலப்படுத்தப்பட்டது. முதலில் புணர்ச்சி வேட்கையால் தூங்கவில்லை. பிறகு பிரிவு அச்சத்தால் தூங்கவில்லை. வந்தாலும் கலவியினால் தூங்க முடியவில்லை என்பதும் அமையும்; அரிய துயரம் என்பதனை 'ஆரஞர்' என்றாள். 'நீயும் பொறுத்திருக்க வேண்டும், உன்னுடைய கண்களும் தூங்க வேண்டும்' என்ற தோழிக்குத் தலைவி இவ்வாறு பதில் கூறினாள் என்பதாம்.

**1180 மறைபெறல் ஊரார்க்கு அரிதன்றால் ...**

பெண்களின் கண்கள் சிறப்புடன் கூடிய தனித்தன்மை வாய்ந்தவை என்பது 'அறை பறை' என்பதால் உணர்த்தப்பட்டதாகும். மறைக்கப்படுவதனை 'மறை' என்றாள். மனத்தில் நிகழ்வதனைப் புறத்துள்ளார்க்கு அறிவித்தலாகிய தொழிலால் ஒற்றுமை இருப்பதால், 'அறை பறையாகிய கண்' என்றாள். பொருட்பாலில் காணப்படும் 'குறிப்பறிதல்' என்ற அதிகாரக் கருத்துக்களை அறிக. அவள் மறைத்தாலும் அவை வெளிப்படுத்துகின்றனவாம். ஊர்மக்கள் அவள் உள்ளத்தில் நிகழ்வதை எளிதில் புரிந்து கொள்ளுகின்றார்களாம்; 'அரிது அன்றால்' என்பது சிந்தனைக்குரியது. மனத்தில் நிகழ்வதனைப் புறத்துள்ளார்க்கு அறிவித்தலாகிய தொழிலால் கண்கள் பறையடித்தற்கு சமமாகி விட்டன.

## 119 பசப்புறு பருவரல்

**1181 நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் ...**

'பண்புடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. காதலர் அன்பு நிறைந்தவர் என்னும் கருத்தால் 'நயந்தவர்' என்று குறிப்பிட்டாள். பிரிந்தால் கூடுதலரிது என்பதை 'நல்காமை' உணர்த்திற்று. முன்பு அவர் பிரிவதற்கு இவள் உடன்பட்டுவிட்டுப் பிறகு பொறுத்திருக்க முடியாத நிலைமையினைப் பிறர் செய்யவில்லை என்பதைக் குறித்து, 'பசந்த என் பண்பு' என்றாள். வெளியில் சொல்ல முடியாத நிலை என்றாள். வினா முறையில் பாடல் அமைந்துள்ளது. தலைவன் பிரிந்த வருத்தத்தினால் தலைவியின் உடம்பில் நிற வேறுபாடு உண்டாகும். பிரிவுக்கு உடன் பட்டாள்; அவர் பிரிந்தார்; பசப்பு நிறம் வந்து வருந்துகிறாள். இதனை யார்க்கு உரைப்பேன் என்றாள்.

**1182 அவர்தந்தார் என்னும் தகையால் ...**

பசப்பு, 'மேனிமேல் ஊரும்' என்றாள். 'முறிமேனி' (1113) இப்படி ஆகிவிட்டது என்பது குறிப்பாகும். உரிமை பற்றி ஊர்கின்றதாம்; பசப்பு நீங்க வேண்டுமானால் அவரால்தான் முடியும் என்பது குறிப்பாயிற்று. பசப்பு நிறம் ஊர்ந்து செல்லுகின்ற தன்மை கூறப்பட்டது. உரிமை பற்றிப் பசப்பு அவள் மேல் ஊர்வதால் அவள் வருத்தப்படக் கூடாது என்பது குறிப்பாயிற்று. பெருமிதமாக வளர்கின்றது என்பதனைத் 'தகையால்' எனுஞ் சொல் குறித்தது.

**1183 சாயலும் நாணும் அவர்கொண்டார் ...**

சாயல், நாணம், நோய், பசலை ஆகிய நான்கும் கூறப்பட்டன. அடக்குந் தோறும் மிகுந்து வருதலால் காம நோய் நாணத்திற்குத் தலைமாறாயிற்று. கொண்டு போனதும் கொடுத்து விட்டுப் போனதும் கூறப்பட்டன. கைம்மாறு செய்யாமல் தன் தலைவர் போய்விடவில்லை என்பதை மிக நயமாகக் குறிப்பிட்டுக் காட்டினாள். துன்பம் தருபவைகளைக் கைம்மாறாகத் தந்தார் என்பது குறிப்பு.

**1184 உள்ளுவன் மன்யான் உரைப்பது ...**

உடல், மனம், வாக்குகளின் வழியதாக இருக்கும் என்பது இயல்பாகும். அப்படியிருக்க அவரையே நினைக்கின்றேன்; அவர் பெருமையே பேசுகின்றேன்; அப்படியிருக்க உடம்பின் நிறம் மாறிவிட்ட நிகழ்ச்சி வஞ்சனையாக இருக்கின்றது என்றாள். அவளால் புரிந்து கொள்ள முடியாததாக இருப்பதால் 'கள்ளம்' என்றாள். உடம்பு மனம், வாக்குகளின் வசத்தின் வழியே செயல்படுவதாகும்; வருவதற்குக் காரணமின்றி வந்ததால் 'கள்ளம்' என்று கூறினாள்.

**1185 உவக்காண்எம் காதலர் செல்வார் ...**

அவர் சென்றதும் பசப்பு வந்ததும் பகலிரவுகள் வருவன போல இருந்ததாம். காதலர் சென்றதை அங்கே போய்க் காண்பாயாக; பசப்பு நிறம் வந்ததை இங்கே காண்க

என்றாள்; பசப்பு நிறம் அவ்வளவு விரைவில் வந்தது என்க. காதலர் செல்வதும் பசப்பு வருவதும் உடனுக்குடனாக நடைபெறுகின்றதென்று கூறினாள். வருகின்ற குறட்பா உவமை முகத்தான் விளக்கிற்று.

**1187 விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் ...**

விளக்குக் கெட இருள் மூடுவது போலும், என் காதலர் பிரியப் பசலை மூடிற்று என்றாள். நாயகன் இருக்கும் போது ஒளி போலவும், பிரிந்த போது இருள் போலவும் ஆனாள் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. 'அற்றம் பார்க்கும்' என்பது இருமுறை கூறப்பட்டது; சிந்திக்கவும். 'முயக்கு அற்றம்' என்று குறிப்பிட்டாள். 'போழப்படா முயக்கு' (1108) என்பதும் சிந்திக்க வேண்டியதாகும். 'முயக்கிடை தண்வளி போழ' (1239) என்ற குறட்பாவும் சிந்தனைக்குரியது. 'விளக்கு, முயக்கு' என்பன சிந்திக்க வேண்டியதாகும். முன்பு பிரியாதிருக்கவும் தனக்கு அவகாசம் பார்த்து வரும் பசப்பு, பிரிவு பெற்றால் என் செய்யாது என்பதனை எடுத்துரைத்தாள்.

**1188 புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் ...**

'அள்ளிக் கொள் வற்றே' என்பது சிந்தனைக் குரியதாகும். தன் உள்ளம் புலப் படுமாறு 'கிடந்தேன்', 'பெயர்ந்தேன்' என்று கூறினாள். ஒரு பக்கமாக விலகியபோதே இந்தப் பசப்பு நிறம் அள்ளிக் கொள்வது போல வந்தது என்றால், இப்பிரிவின்கண் ஆவதற்குச் சொல்லவும் வேண்டுமோ என்பதாகும். 'அவ்வளவில்' என்பது சிந்தனைக்குரியது. கையினால் அள்ளிக் கொள்ளுவதொரு பொருள் போல வந்து விட்டது என்பதுமாகும். அப் புடை பெயர்ந்த அளவிலேயே அந்த நிலை ஏற்பட்டதென்றால், இந்தப் பிரிவின்கண் என்ன ஆகும் என்பதனைச் சொல்லவும் வேண்டுமோ?

**1188 பசந்தாள் இவள்என்பது அல்லால் ...**

பெண்கள்தாம் அடக்கத்திலும் நாணத்திலும் சிறப்புற்று இருக்க வேண்டும் என்பது உய்த்துணர வைக்கப்ப்ட்டது. மறைத்து வைக்கப்பட வேண்டிய பொறுப்பு மிகுதியும் பெண்களுக்கேயாகும். ஆண்களுக்கு அவ்வாறு இல்லை என்பது குறிப்பாகும். ஆதலால்தான் 'துறந்தார் அவர் என்பார் இல்' எனப்பட்டது. ஊரார் அவளைத்தான் குறைவாகப் பேசு கின்றார்களாம். 'சொற்காத்துச் சோர்விலாள்' (56) என்பதும் 'பசந்தாள் இவள்' என்பதும் சிந்தனைக்குரியவை. 'அவர் என்பார்' என்றதனால் வேறுபடுத்திக் கூறினாள். தன் மீதே குற்றம் செய்வதற்கு வருந்தி இவ்வாறு கூறினாள் என்பதாகும்.

**1189 பசக்கமன் பட்டாங்குஎன் மேனி ...**

தலைவன்பால் அவள் கொண்டுள்ள உள்ளன்பு மிகுதி நன்கு புலப்பட்டது. தலைவன் என்றும் நல்லபடியாக இருக்க வேண்டும் என்று ஆசையுடன் சொன்னாள். தன்னுடைய மேனி பசந்தாலும் பரவாயில்லை; பிரிந்து தூரதேசத்தில் இருக்கும் அவர் நன்றாக இருக்க வேண்டும் என்று உட்கருத்தினைப் புலப்படுத்தினாள். 'நயப்பித்தார் நன்னிலையர் ஆவர்' என்பது

சிந்திக்கத்தக்கதாகும். தான் துன்பமடைந்தாலும் பிரிந்தவர் நல்ல நிலையில் இருந்து திரும்ப வந்து பேரன்பு அளிப்பாராக என்பது கருத்தாக அமைந்தது.

**1190 பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே ...**

நாயகன் மீது வைத்துள்ள கழிபேருவகையும் நன்மதிப்பும் புலப்படுத்தப்பட்டன. 'நல்காமை தூற்றார் எனின்' என்றாள். தலைவன் பிரிந்திருப்பதனை — அந்த ஊரார் தூற்றுவதால்—அவள் பொறுக்க முடியாதவளானாள். 'பசந்தாள்' என்று கூறுவதும் நல்லதே என்றாள். தனது 'தலைவனைப் பற்றிக் குறைவாகப் பேசாதிருப்பாராக' என்பது அவள் கருத்தாகும். தன் தலைவனைப் பொல்லாதவன் என்று யாரும் சொல்லக் கூடாது என்பதாம். தலைவனைப் பிறர் குறை கூறுவதை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவரை அருளிலர்' என்று சொல்லாமல் இருக்கட்டும்!

## 120 தனிப்படர் மிகுதி

**1191 தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் ...**

முந்தைய நல்வினை இல்லாவிட்டால் பெற முடியாது என்பதனைக் குறித்துப் 'பெற்றார்' என்றாள். தடையின்றி நுகரப்படும் இன்பமாதலால் 'காழில்கனி' எனப்பட்டது. நம் காதலர் பிரிந்திருத்தலே யன்றிப் பின் வாராமையும் இருப்பதால் அக்கனியை 'யாம் பெற்றிலேம்' என்றாள். 'தாம் வீழப் பெற்றவர்' என்பது சிந்தனைக்குரியது. 'படர் மிகுதி' என்பது தலைவனிடத்தே யில்லாமல் அவளிடத்தில் மட்டும் இருப்பதென்பதாம். 'காமத்துக் காழ் இல் கனி'—அவள் பெறவில்லை என்று வருந்துகிறாள்.

**1192 வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் ...**

வாழ்வார்க்கு மழை வேண்டும்; தலைவிக்குத் தலைவன் அளிக்கும் அன்பாகிய மழை வேண்டும். காலமறிந்து மழை பெய்தல் வேண்டும். தலைவன் காலமறிந்து வருதல்வேண்டும். மழையில்லாவிட்டால் மக்கள் வாடுவர்; தலைவன் அன்பினைப் பெய்யாவிட்டால் அவள் வாடுவாள். 'அற்றால்' என்பது சிந்திக்கத்தக்கது. தலைவன் அன்றி அவள் மயல் தீராது என்பதாகும். மேலிருந்து வானம் பொழிகின்றதென்பது குறிப்பாகும். தலைவன் அளிக்கும் பேரன்பு மழையாயிற்று.

**1193 வீழுநர் வீழப் படுவார்க்கு ...**

தலைவன் அன்பினைப் பெய்வது தலைவிக்குப் பெருமிதத்தினை அளிப்பதாகும். 'தலைவனுடன் இன்புற்று வாழ்தல்' என்பது அவளுக்குச் சிறந்த பெருமையாகும். 'வாழுநம் என்னும் செருக்கு' என்று பாடல் அமைக்கப்பட்டது. 'வீழப்படுவார்' என்பது தலைவிமார் களைக் குறித்தது. தலைவன் தலைவியிடத்துக் கொண்டிருக்கும் பேரன்புதான் அவளுக்கு எல்லாப் பெருமையினையும் உயர்வையும் கொடுப்பதாகும்.

அவரால் விரும்பப் படாமையால் — அவர் வாராததால் தனக்கு அமைவது 'இறப்பு' என்பதாகும். 'வீழுநர் — வீழப்படுவார்' இரண்டும் இன்றியமையாதவை,

**1194 வீழப் படுவார் கெழீஇயிலர் ...**

கற்புடை மகளிரால் நன்கு மதிக்கப்படுவாரை 'வீழப்படுவார்' என்று குறித்தாள். அவ்வாறு நன்கு மதிக்கப்படும் நல்வாய்ப்பு இல்லையாயின் தீவினையாட்டியர் என்பதாம்; உலகத்தாரால் நன்கு மதிக்கப்பட்ட மகளிரும், தம்மால் காதலிக்கப் பட்டவரால், தாம் காதலிக்கப்படாராயின், மதிக்கப்படுபவர்கள் ஆக மாட்டார்கள். காதலரால் நன்கு காதலிக்கப் படும் காதலிமார்களைத் தான் கற்புடைய பிற பெண்களும் விரும்பிப் போற்றுவார்கள் என்பதாகும். நான் நல்வினை செய்தவளில்லை என்று கூறுகின்றாள். அதாவது தீவினையுடை யவள் என்பதாம்.

**1195 நாம்காதல் கொண்டார் நமக்குஎவன் ...**

நாம் அவர்பால் காதல் கொள்ள அவர் நம்பால் காதல் கொள்ளவில்லையென்றால், நாம் பெற்றது துன்பமேயாகும். 'எவன் செய்யவோ' என்பது சிந்திக்கத் தக்கது. அவர் காதல் செய்யாமல் இருக்கின்றாராம். ஆதலாலே பிரிந்திருக்கின்றார் என்பதாகும். இவள் தனியாகத் துன்புற வேண்டும்; 'கொள்ளாக்கடை' — என்பது நிலைமையினை நன்கு விளக்கு வதாகும். கருத்து, வினாமுறையில் அமைந்துள்ளது. காதல் என்பது இருபாலாரிடையேயும் இருப்பதல்லவா என்பதனை வெளிப்படுத்திக் கூறினாள்.

**1196 ஒருதலையான் இன்னாது காமம் ...**

என்னிடம் உண்டான காமவேட்கை அவரிடத்திலும் இருக்க வேண்டும் என்று கூறினாள். 'ஒரு தலையான்', 'இரு தலையான்' என்பன சிந்தனைக்குரியன. முந்தியது துன்பம் தருவதாகும். பிந்தியது இன்பம் தருவதாகும். ஆதலால் 'இன்னாது', 'இனிது' என்று முறையே கூறப்பட்டன. 'உயிர் காவாத் தூங்கும்' (1163) என்பது போல இங்கும் 'காப்போல' என்றார். என்மாட்டு உண்டாய வேட்கை அவர் மாட்டும் உண்டாயின், யான் இவ்வாறு துன்பம் உழத்தல் கூடுமோ என்றாள்.

**1197 பருவரலும் பைதலும் காணான்கொல் ...**

நாணம், நிலம், திரு என்பவற்றை உருவகப் படுத்திப் பெண்களாகக் கூறியதுபோலக் காம உணர்ச்சியைக் 'காமன்' என்றாள். அவனுக்கும் அவளுடைய நோய் மிகுந்த துன்பம் தருவதை அறியமுடியவில்லை என்று கூறினாள். ஒருவரிடத்திலே மட்டும் நின்று அவன் துன்புறுத்துவது நீதியல்ல என்பதாகும். காமனும் அறியாமையில் இருக்கின்றான் என்பதாம்.

காம உணர்ச்சி விருப்பு வெறுப்பு இல்லாமல் எல்லாரிடத்திலும் நிகழ்ந்தது. அதை அறிதற்குரிய காமனும் என்னிடம் வேறுபட்டான்; இனி யான் உய்யும் வழி யாது என்று அவள் கூறினாள்.

**1198 வீழ்வாரின் இன்சொற் பெறாஅது ...**

காதலரிடமிருந்து வருகின்ற சொல் எதுவாக இருந்தாலும் இனிமை பயக்கும் என்பதனை 'இன் சொல்' என்றாள். தலைவனுடைய இனிய சொற்கள் தலைவிக்கு எப்போதும் வேண்டும் என்பதாகும். அப்படிக் கேட்காமல் உயிர் வாழ்கின்ற பெண்களை 'வன்கணவர்' என்றாள். 'உலகத்து வாழ்வார்' — சிந்திக்கத் தக்கதாகும். அவனுடைய இனிய

சொற்கள் அவளுக்கு வாழ்வையே அளிப்பதாகும். நான் வன்கண்மை உடையவளானபடியால் அதுவும் பெற்றிலேன் என்று தலைவி கூறினாள்.

**1199 நசைஇயார் நல்கார் எனினும் ...**

அவர் வாராவிட்டாலும் அவர் சொற்கள் வந்தாலும் போதும் என்று குறித்தாள். அதுவும் பெற்றிலேன் என்றாள். 'நல்கார் எனினும்' என்பது சிந்திக்கத் தக்கது. பிரியமான தலைவர் நமக்கு இன்பம் தாராவிட்டாலும் அவரிடத்திலே சொல் கேட்டாலும் செவிக்கு மிகவும் இனிமையாக இருக்கும் என்றாள். 'யாதானு மோர் சொல்லும்' என்பதனை, 'இசையும்' என்பது காட்டிற்று.

அவர் வரவில்லை என்ற சொல் கேட்டாலும், அவரிடமிருந்து வருதலால் அதுவும் இன்பம் பயக்கும் என்றாள். அதுவும் பெற்றிலேன் என்றாள்.

**1200 உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் ...**

தனது நெஞ்சத்தினைப் பார்த்து தலைவி கூறுகின்றாள் என்பதாகும். தலை மகனிடம் தூதுவிடக் கருதிய அவள் கூறுவதாகும். முடியாத செயலினை மேற்கொண்ட நெஞ்சினைப் பார்த்து 'வாழிய' என்றாள். தன்னுடன் ஒத்து அன்பு செய்யாத தலைவர்க்குத் தூதுவிட அவள் நெஞ்சம் நினைக்கின்றதாம். அது நடவாது என்பதாகும்; அதனைவிடக் கடலைத் தூர்க்க நினைத்தால் அது முடிந்தாலும் முடியும் என்றாள்; 'உறாஅர்க்கு' என்பது தம்முடன் ஒத்த அன்பு இல்லாத தலைவர் என்பதாம். இழிவு தோன்ற 'வாழியே' என்றாள். நடை முறையில் இயலாததை அவள் நெஞ்சம் மேற்கொண்டிருப்பதால் பயனில்லை என்று உணர்த்தினாள்.

## 121 நினைந்தவர் புலம்பல்

**1201 உள்ளினும் தீராப் பெருமகிழ் ...**

தான் தனியாக இருப்பதையும் தலைவியை மறவாதிருப்பதையும் உணர்த்துகின்றான். காதலியை நினைத்தாலும் பெருங்களிப்பு உண்டாவதால் 'கள்ளினும் காமம் இனிது' என்று கூறினான். 'தீரா மகிழ்வு' என்பது சிந்தனைக்குரியது. முந்தைய நாட்களில் நுகர்ந்த இன்பத்தினை நினைத்தாலும் மகிழ்ச்சி உண்டாகும் என்பதாகும். தலைமகன், தலைமகள் இருபாலார்க்கும் பொருந்தும் என்பதாம். 'செய்தலால்' என்பதால் காரணம் கூறப்பட்டது. நினைத்தாலும் பெருமகிழ் செய்வது பிறிதொன்றும் இல்லையாகும். தனித்திருக்கும் தலைவியை நினைக்கின்றான். முன் கூடியிருந்த இன்பத்தினை நினைந்து மகிழ்கின்றான். கள், உண்டால்தான் மகிழ்ச்சியளிக்கும்; ஒருவருக்குக் காமம் கண்டாலும் நினைத்தாலும் மகிழ்ச்சியளிப்பதாகும்.

**1202 எனைத்துஒன்று இனிதேகாண் காமம்தாம் ...**

புணர்ந்த போதும் பிரிந்தபோதும் ஒப்ப இனிது என்பான் 'எனைத்தும் இனிது' என்றான். தான் பொறுத்திருக்கும் வகை கூறியவாறு; காமம் யாதொன்றினாலும் இனியதே.

நினைக்க வருவதொரு துன்பம் இல்லை என்பதாம்; 'எனைத்து ஒன்று இனிதே' என்பது நன்கு சிந்திக்கப்பட வேண்டியது. புணர்ந்தபோதும், பிரிந்தபோதும் ஒப்ப இனிது என்பான், அனைத்தும் இனிது என்றான். தான் பொறுத்திருந்த வகையைக் கூறினான்.

**1203 நினைப்பவர் போன்று நினையார்கொல் ...**

தும்மல் வந்த தலைவி கூறியது. சினைத்தல் என்பது அரும்புதலாகும்; தூரதேசத்தில் இருப்பவர்கள் உறவினராக நினைத்தால் நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றும் என்னும் உலகியல் பற்றித் தலைமகள் கூறியதாகும். சிறிதுதான் நினைக்கின்றார் என்பது குறிப்பாகும்.

தூர தேசத்தில் இருக்கும் நாயகர் தன்னை நினைப்பதால் தும்மல் வருகிறது. உறவினர் பெருக்கத்தால் துன்பம் வரும் என்பதாயிற்று.

**1204 யாமும் உளேங்கொல் அவர் நெஞ்சத்து ...**

வினா முறையில் கருத்து அமைக்கப்பட்டுள்ளது. நெஞ்சத்தார் காதலராக (1128) என்பது போன்றவை சிந்திக்கத்தக்கன. அவள் மனத்தில் தோன்றிய ஐயப்பாட்டினை உணர்த்தினாள் என்பதாம். வந்த தும்மல் முந்தைய குறட்பாவில் கூறப்பட்டது. ஆதலால் இவ்வாறு எண்ணுகின்றாள். 'உளரே அவர்' என்றாள்.

'ஓ ஓ உளதே' என்பது இடைவிடாமை உணர்த்தி நின்றது. வினை முடியாமையின் பொருட்டு வாரார் ஆயினாரோ என்றாள். 'அவர் நெஞ்சத்து', 'எம் நெஞ்சத்து' — நெருக்கம் கூறப்பட்டது.

**1205 தம்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார்**

'நாணுடைமை' அதிகாரம் நினைவு படுத்தப்பட்டது. இக் குறட்பாவும் வினா முறையில் கருத்தினைக் கூறுவதாகும். 'கடி கொண்டார்' என்பது சிந்தனைக் குரியதாகும். தலைவியின் உள்ளத்தின் நிலைமை நன்கு எடுத்துக்காட்டப்பட்டது. ஒருவரைத் தம்மிடம் வருதற்கு ஒருக்காலும் உடன்படாதவர். பலகாலும் சேறல் நாணுடையார் செயல் அல்ல படியால், 'நாணார் கொல்' என்றார். கடிகொண்டார் என்பது கரந்து (மறைந்து) போனார் என்பதாம்; கடிந்து போனார் என்பதும் ஆம். 'ஓவா வரல்' என்பதும் 'நாணார்' என்பதும் சிந்திக்க வேண்டியன.

**1206 மற்றுயான் என்னுளேன் மன்னோ ...**

அவள் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பதற்கான காரணம் கூறினாள். உயிர் வாழ் தற்கு வேறும் உள; அவை பெற்றிலேன் என்பதாம்; தூது வந்து சென்றாலும் உயிர் வாழ்தற்கு உதவியாக இருக்கும். அதுவும் இல்லை. அந்த நாளின் இன்ப நினைப்பே என்னை உயிர் வாழ வைப்பதாகும்; 'உற்ற நாள்' என்பது சிந்தித்தறிய வேண்டுவதாகும். இப்போது இதுவே அவளுக்குப் பற்றுக்கோடு ஆயிற்று.

**1207 மறப்பின் எவனாவன் மற்கொல் ...**

'மறப்பு அறியேன்' என்பது சிந்தனைக்குரியது. மறந்தால் 'உயிர் வாழேன்' என்றாள். 'மறப்பன்' என்று நினைத்தாலும் உள்ளத்தினைச் சுட்டுவிடும். 'எவனாவன்' என்றதால், மறந்தால் இறந்து விடுவாள் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'மறப்பு அறியேன்' என்பதும் 'உள்ளினும் உள்ளம் சுடும்' என்பதும் கற்புள்ள தலைவியின் உளப்பாங்கினைத் தெளிவுபடுத்தியதாகும். 'பிரிவினை' உள்ளினும் சுடும் என்பதாம்.

**1208 எனைத்து நினைப்பினும் காயார் ...**

அவள் நினைப்பதற்கு உடன்பட்டு நெஞ்சில் நிற்கின்றார் என்பதைக் 'காயார்' என்பது உணர்த்தியது. தனக்கு அந்த இன்பத்தினை விடவும் சிறந்தது இல்லை. ஆதலால், 'சிறப்பு' என்றாள். காதலர் அருள் செய்கின்றார் என்பதாகும். அருள் செய்தலென்பது குற்றம் கண்டாலும் கோபியாதிருத்தலாகும். 'நுண்ணியர் எம்காதலர்' (1126) என்பதும் சிந்தித்து அறிய வேண்டுவதாகும்.

**1209 விளியும்என் இன்உயிர் வேறல்லம் ...**

அளியின்மை என்பது காதலன்பு எனப்படுவதாகும். காதலர் காதலிபால் காட்டும் அருளுடைமையாகும். தனது உயிர் அழிந்து கொண்டிருக்கின்றது என்பதனைக் குறிப்பால் உணர்த்தினாள். 'வேறல்லம் என்பார்' என்று அவள் குறித்துக் காட்டினாள். அவர் சொன்ன சொல்லை நினைத்து அழியாய் நெஞ்சே, என்றவாறு; 'இன்னுயிர் சுழியும்' என்றாள். அன்பில்லாமையை நினைந்து வருந்துகிறாள். வருவதாகக் கூறிப் பிரிந்ததும், பிரிந்து வாராமையும், அங்கிருந்து தூது விடாமையும் முதலியன அன்பின்மையைக் காட்டின என்பதாம். அவன் சொன்னதையும் குறித்தாள்.

**1210 விடாஅது சென்றாரைக் கண்ணினால் ...**

மதி, இருவராலும் நோக்கப்படுதலால் இருவர் கண்ணும் அதன் கண்ணே சேர்தலாகும். 'சென்றாரைக் காண' மதி உதவியாயிற்று என்பதாம். குறையுறுகின்றாள் ஆதலால், 'வாழி' என்றாள். கண்ணினால் காணுமளவு போகாமல் இருக்குமாறு மதியை வேண்டினாள். எனது மனத்தில் எப்போதும் இருந்துவிட்டுப் போனவர் என்பதைக் குறிக்க 'விடாது' என்றாள். காமம் மிக்க கழிபடரால் வருந்திக் கூறுகிறாள். துயில் பெறாது வருந்துபவளின் கூற்றாகும். மதியைப் பார்த்துப் பேசுகின்றாள்.

## 122 கனவுநிலை உரைத்தல்

**1211 காதலர் தூதொடு வந்த ...**

'விருந்தோம்பல்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப் பட்டதாகும். வினாமுறையில் கருத்து அமைக்கப்பட்டுள்ளது. விருந்து என்றது, விருந்திற்குச் செய்யும் உபசாரத்தினை யென்பதாகும். அது கனவிற்கு ஒன்று காணாமையின், 'யாது செய்வேன்' என்றாள். கனவு பேருதவி செய்தது என்றாள். கனவு காதலர் தூதொடு வந்தது என்றாள். 'தூது' என்ற அதிகாரம் நினைவுக்கு உரியது.

**1212 கயலுண்கண் யான்இரப்பத் துஞ்சின் ...**

கழிந்த அழகிற்கு இரக்கப்பட்டு 'கயல்உண் கண்' என்றாள். 'உயல்' என்பது காம நோய்க்குத் தப்புதல் என்பதுமாகும். கண்கள் உறக்கங் கொண்டால் 'சாற்றுவேன்' என்றாள், அவை தூங்காமல் இருக்கின்றனவாம். காதலர் வரவையே கண்கள் பார்த்துக் கொண்டிருக்கின்றனவாம். கண்களைப் பார்த்து வேண்டிக் கொள்ளுவேன் என்றாள். 'கண்விதுப்பழிதல்' அதிகாரம் சிந்தித்துப் பார்த்தற்குரியதாகும். தூது விடக் கருதிய அவள் இவ்வாறு கூறினாள்.

**1213 நனவினான் நல்கா தவரை ...**

கனவில் காண்பதனால் உயிர் வாழ்ந்து வருகின்றேன் என்றாள். நனவினால் வாராதவர் கனவிலாவது வருவதால் இன்பம் என்று பெருமை கொள்ளுகிறாள் என்பதாம். அப்படிக் காணுவதையே பற்றுக்கோடாக வைத்து உயிர் போகாதிருக்கின்றது. 'காண்டலின்' சிந்திக்கத்தக்கது. கனவில் காணுகின்ற காட்சியால்தான் ஆற்றியுள்ளேன் என்றாள். கவலைப் பட வேண்டாம் என்று தோழிக்குத் தலைவி எடுத்துக் கூறினாள்.

**1214 கனவினான் உண்டாகும் காமம் ...**

முந்தைய குறட்பாவில் 'நல்காதவரை' என்று கூறியது போல இங்கும் 'நல்காரை' என்றாள். இயல்பாக வாராதவரை அவர் சென்ற தேயமறிந்து சென்று கொண்டு வந்து தந்த கனவால், எனக்கு இன்பம் உண்டாகும் என்றாள். 'கனவினால் உண்டாகும் காமம்' என்பது சிந்தனைக்குரியதாகும். 'நாடித் தரற்கு' என்பது நயமாக உரைக்கப்பட்டதாகும். கனவால் யான் பொறுத்திருக்கின்றேன் என்றாள்.

**1215 நனவினான் கண்டதூஉம் ஆங்கே ...**

இரண்டு இன்பமும் எனக்கு ஒத்தன என்று கூறினாள்: 'ஆங்கே' என்பதும் 'கண்ட பொழுதே' என்பதும் சிந்தனைக்குரியவை. கனவினில் நாயகரைக் காணுவதும் மிகுந்த இன்பமாக இருக்கின்றது என்றாள். 'கண்டதும் ஆங்கே', 'கண்ட பொழுதே' என்பன கருதற்பாலன. 'முன்னும் யான் பெற்றது இவ்வளவே, இன்று கனவில் பெற்றதும் அவ்வளவே'; ஆதலால் பொறுத்திருப்பேன் என்றாள்.

**1216 நனவுஎன ஒன்றுஇல்லை ஆயின் ...**

இன்பத்தின் மிகுதியால் தலைவி தனது எண்ணத்தினைக் கூறுகின்றாள் என்பதாம். 'ஒன்று' என்றது அதன் கொடுமையினை விளக்கி நின்றது. அந்த 'நனவு' இடையே புகுந்து கனவைப் போக்கிவிட்டதாம். கனவில் கண்டு மகிழ்வதைக் குறித்தாள். 'காதலர் நீங்கலர்' என்பது பெண்மைத் தன்மையினைக் குறிப்பால் உணர்த்தப்பட்டது. அது (நனவு) இடையே தோன்றிக் கனவைப் போக்கி அவரைப் பிரித்துவிட்டது.

**1217 நனவினான் நல்காக் கொடியார் ...**

பெண் மனம் இன்ப நினைப்பில் மாறி மாறிப் பேசுவதைக் குறிக்கின்றது. காதலரைக் 'கொடியார்' என்று குறித்தாள். பிரிதலும் பின் நினைந்து வாராமையும் நோக்கிக்

'கொடியார்' என்றாள். விழித்துக் கொண்ட தலைமகள் கூறியது. ஏன் துன்புறுத்துகிறார் என்றாள்; கனவில் கண்ட மாத்திரமேயல்லாமல் கலந்து இன்புறாத கடுந்துயர் நினைந்து வருந்திக் கூறுகின்றவளானாள். 'எம்மைப் பீழிப்பது' என்றாள். 'பீழிக்கும் பீழை' (843) என்பது போலக் காணப்படுகிறது. கனவில் தோள் மேலராகி, விழித்தபோது மறைதலின் துன்பமேற்படுவதால் 'பீழிப்பது' என்றாள்.

**1218 துஞ்சுங்கால் தோள்மேல ராகி ...**

தனது நினைப்பில் தோன்றுவதையும் கனவில் கண்டதையும் உணர்த்துகிறாள். கலவி யிட்டு மறையும் கடுமை பற்றி 'விரைந்து' என்றாள். கனவில் காட்சியும் நனவில் நினைப்பும் கூறப்பட்டனவாகும். 'தோள் மேலர்', 'நெஞ்சத்தர்' என்பன சிந்தனைக்குரியவை. இதனால் எப்போதும் அவளை விட்டுப் பிரியாதிருக்கின்றார் என்று உணர்த்தினாள். ஒருக்காலும் என்னை விட்டு நீங்கி அறியாதாரை "நீ குறைவாகப் பேசாதே" என்று தோழிக்குக் கூறினாள்.

**1219 கனவினான் நல்காரை நோவர் ...**

தலைவரைப் பற்றிப் பிற பெண்கள் குறைவாகப் பேசுவதைப் பொறுக்க முடியாமல் கூறினாள். தாமும் கணவரைப் பெற்றுக் கனவில் காணும் தன்மையரானால், தன்னைக் குறை கூறமாட்டார்கள் என்றாள். 'நோவர்' என்பது சிந்தனைக்குரியது. மற்றவர்கள் கணவனைக் குறை கூறுவதை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

**1220 நனவினான் நம்நீத்தார் என்பர் ...**

'இவ்வூரவர்' என்று குறிப்பிட்டது நினைத்தற்குரியது. வருந்திக் கூறுகின்றாள். வினா முறையில் கருத்து அமைக்கப்பட்டது. முன் குறளில் பொதுப்பட 'நோவர்' என்றாள். இங்கு, 'இவ்வூரவர்' என்றாள்; தன்னை விட்டு நீங்கிப் போனார் என்று ஊரார் கூறுகின்றார்களாம். தூற்றுதல் போல இருக்கின்றது. ஆதலால்தான் 'காணார் கொல்' என்று கேட்டாள். இதனால் கொடுமை கூறப்படாது என்பதாம். துறந்தாரை **நீத்தார்** என்ற சொல் குறிக்கும். இப்போது தலைவன் தலைவியைப் பிரிந்திருப்பதால் அவரை ஊர் மக்கள் 'அவளை நீத்தார்' என்கின்றனர். தன் கனவில் அவர் வந்து போவதை அவர்கள் காணவில்லை.

## 123 பொழுது கண்டு இரங்கல்

**1221 மாலையோ அல்லை மணந்தார் ...**

மாலைப் பொழுதினைக் கண்டு கோபித்துச் சொல்லியது. முன்னாளில் வந்த மாலைப் பொழுது இது அல்ல! மணந்தார் என்பதால் பிரிந்தார் என்பது குறிப்பாயிற்று. 'வேலை' என்பது வேற்படையாக இருந்தாய் என்றாள். 'உயிருண்ணும் வேலை' என்பது சிந்திக்கத் தக்கது. மாலைப் பொழுது குளிர்ச்சி தராமல் வெம்மையை உண்டாக்கியது. 'வாழி' என்பது குறிப்புச் சொல். அது தனித்திருக்கும் மகளிரின் உயிரைப் பருகும் ஒரு கூற்று என்றாள். கூடியிருந்த காலை - காலத்தைக் குறிக்கும்போது 'மணந்தார்' என்றாள். மாலைப் பொழுதினைப் பார்த்துப் பேசுகின்றாள். 'தலைவன் இருக்கும் பொழுது வந்த மாலைப்

பொழுது அல்ல இது! ஏன்? அப்போது இனிமையாக இருந்தது? இப்போது இல்லை' என்பது உணர்த்தப்பட்டது.

**1222 புன்கண்ணை வாழி மருள்மாலை ...**

'மருள்மாலை' என்றது பகலும் இரவும் கலந்த நேரம். ஆதலால் அது மயங்கிற்று என்றாள். கலங்குதலும் தோன்ற நின்றது. அதுவும் ஒளியிழந்து காணப்பட்டதால், துணையும் உண்டாக்கிக் கூறினாள். எனக்குத் துன்பம் செய்தாய்; நீயும் இன்பமாக இல்லை என்னும் குறிப்பால் 'வாழி' என்றாள். தன் மேனி பொலிவு அழிந்ததைக் குறிப்பால் உணர்த்தினாள். வினாமுறையில் கருத்து அமைந்துள்ளது. மயங்குதல் என்றது பகலும் இரவும் தமக்குள்ளே விரவுதலாகும்; மாலை நேரம் அப்படி இருந்தது! ஒளியிழந்த கண்களைப் 'புன்கண்' என்றாள். "எமக்குத் துன்பம் செய்தாய்' — 'நீயும் இன்பமுறவில்லை' என்னும் குறிப்பால், வாழி என்றாள்.

**1223 பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை ...**

தலைவன் இருந்தபோது மாலைப்பொழுது வந்த தன்மையினைக் கூறினாள். குளிர்ச்சி தோன்ற மயங்கி வந்த மாலைப் பொழுது என்றாள். 'இப்போது எவ்வாறு பொறுத்துக் கொண்டு இருப்பேன்' என்று புலப்படுத்தினாள். 'துன்பம் வளர வரும்' என்பது சிந்தனைக் குரியது. பொறுத்திருக்க வேண்டும் என்ற தோழிக்குக் கூறியது. உயிர் வாழ்வதில் வெறுப்பு தோன்றுவதைத் 'துனி' என்றாள். அதனால் 'எவ்வாறு பொறுத்திருப்பேன்' என்றாள்.

**1224 காதலர் இல்வழி மாலை ...**

அருள் ஏதும் இல்லாதாரை 'ஏதிலர்' என்றாள். முன்னெல்லாம் நட்பாய் இன்பம் செய்து மாலை வந்தது. இப்போது பகையாய்த் துன்பம் செய்து வருகின்றது. 'எப்படிப் பொறுத்துக் கொள்வேன்' என்று கூறினாள். 'இல்வழி' என்பதும், 'ஏதிலர்' என்பதும் சிந்தித்து அறிய வேண்டுவன.

**1225 காலைக்குச் செய்த நன்றுஎன்கொல் ...**

தலைவருடன் கூடியிருந்த போது பிரிவர் என்று அச்சப்படும்படி செய்த காலைப் பொழுது இப்போது நன்மை செய்கிறது. ஆதலால் 'நன்று என்கொல்' என்றாள். கூடியிருந்த போது இன்பம் செய்து வந்த மாலைப் பொழுது இப்போது துன்பம் செய்வதாகின்றது. ஆதலால் 'பகை எவன்கொல்' என்றாள். மலைப் பொழுதின் பண்பின்மையைக் குறித்துக் கூறினாள். தன்னோடு ஒத்த காலைப்பொழுது போலாது மாலை தன் கொடுமையால் துன்பம் செய்கின்றது. காலையும் மாலையும் அவர் கூடியிருந்தபோது இருந்த மாதிரி இல்லாமல் இப்போது வேறுபட்டு வருகின்றன.

**1226 மாலைநோய் செய்தல் மணந்தார் ...**

'இவ்வாறு துன்பம் செய்யும் என்று அறிந்திருந்தால் தலைவர் பிரிவுக்கு உடன் பட்டிருக்க மாட்டேன்' என்று கூறினாள். 'மாலை நோய் செய்தல், அறிந்திலேன்' என்று

அறியாமையினை வெளியிட்டாள். மணந்தார் அகலாது இருந்தால் மாலைப்பொழுது நோய் செய்யாது என்பது உணர்த்தப்பட்டது. பிரிவுக்கு ஏன் உடன்பட்டாய் என்ற தோழிக்குக் கூறியது இது.

**1227 காலை அரும்பிப் பகல்எல்லாம் ...**

அரும்புதல், போதாகுதல், மலர்தல் ஆகிய நிகழ்ச்சிகளுக்குக் காலம் குறிக்கப்பட்டது. மலராகு முன்புள்ள நிலைகள் கூறப்பட்டன. காமநோய் மலராகக் காட்டப்பட்டது. காமம் என்று கூறாமல், 'நோய்' என்றது சிந்தனைக்குரியது. பூவினைப் போல இக்காம நோய் காலத்தின் அடிப்படையில் உண்டாகும். மலர்ந்த பிறகுதான் மணம் வரும் என்பது உணர்த்தப்பட்டது. காமநோய் காலத்திற்கு உட்பட்டது; காலத்தினை அறிந்து வருவது. நேரமறிந்து மலருகின்ற மலர் எடுத்துக் காட்டப்பட்டது. அரும்பு, பேரரும்பு, மலர் ஆகிய இம்மூன்றும் காலத்தால் நிகழ்வது.

**1228 அழல்போலும் மாலைக்குத் தூதாகி ...**

பொருட்பாலில் 'படை' குறித்து அதிகாரங்கள் உள்ளன. 'தூது' என்ற பெயரிலும் அதிகாரம் ஒன்று உண்டு. வரவினை முன்னதாகவே உணர்த்துவதால் தூதாயிற்று. கொல்லுங் கருவியாதலால் படையாயிற்று. தானே அடுகின்ற மாலைப் பொழுது, இத்துணையையும் பெற்றால் என் செய்வது என்று வருந்திக் கூறினாள். மாலையோடு வந்த குழலும் கொடிது என்றாள். மாலைப் பொழுது தீப்போல வந்ததாம்; குழல் கேட்டால் அவளால் பொறுக்க முடியவில்லை என்பதாம்.

**1229 பதிமருண்டு பைதல் உழக்கும் ...**

'மதி மருள்' என்பது 'மதி மருண்டு' என்பதாயிற்று. கூற்றமாகக் கருதிக் கூறினாளாகலின், 'மாலை படர் தரும் போழ்து' என்றாள். 'யான் இறந்து படுவல்' என்பதாம். மாலை மயங்கி வரும் போழ்து என் மதி நிலை கலங்கி 'நோய் அனுபவிப்பேன்' என்பதுமாகும். 'பதி மருண்டு', 'மதி மருண்டு' என்பது சிந்தனைக்குரியவை. மாலையைக் கண்ட போதே மதிமயங்கும் என்றாள்.

**1230 பொருண்மாலை யாளரை உள்ளி ...**

தலைவனைப் 'பொருள் மாலையாளர்' என்று குறித்தாள். அவருக்குப் பொருள் தேடுவதே இயல்பாயிற்று என்பதாம்; சாகமாட்டாத உயிர் மெலிந்து நின்றதாம்; தனது உயிர் இன்னும் போகாமல் இருக்கின்றதே என்றும் குறிப்பால் உணர்த்தினாள். 'மாய்வது போலும் என் மாயா உயிர்' என்றாள். வாழ்க்கையினைப் பெரிதும் வெறுத்துக் கூறுகின்றாள். 'மாயும் என் மாயா உயிர்' என்பது சிந்தனைக்குரியது.

## 124 உறுப்பு நலன் அழிதல்

**1231 சிறுமை நமக்கொழியச் சேண்சென்றார் ...**

தலைவன் தூர தேசத்திற்குச் சென்றிருக்கின்றான்; பிரிவுத் துன்பம் அவளால் தாங்க முடியவில்லை. அவரை நினைத்து அழுவதால் அவளுடைய உறுப்புக்கள் அழகு இழக்கின்றன; கண்கள் ஒளியிழந்து விட்டன; அவளுடைய கண்களுக்கு மலர் ஒவ்வாதன என்று கூறிய 'காணிற்குவளை' (1114), 'மலர் காணின்' (1112) என்பவற்றைச் சிந்திக்க வேண்டும். இப்போது கண்கள் நாணமுற்றனவாம்; பொறுத்திருக்க முடியாமல் உறுப்புகள் அழகிழந்தன.

**1232 நயந்தவர் நல்காமைச் சொல்லுக ...**

பிறர் உணர்தற்கு எளிமையாகக் கண்களே கூறுகின்றனவாம். 'பசப்புறு பருவரல்' என்ற அதிகாரம் நினைவு படுத்தப்பெற்றது. வளையல்கள் முன்னமேயே சொல்லுகின்றன என்ற கருத்தில் 'துறந்தமை தூற்றாகொல்' (1157) என்று குறிப்பிட்டது போல, இங்கும் கண்கள் 'சொல்லுவ போலும்' என்றார். 'பனி வாருங்கண்' அவளுடைய நீங்காத் துன்பத்தினை உணர்த்திற்று. கண்களின் நிலைமையினைக் கண்டு உணர்தற்கு அனுமான மாகியிருந்தன என்பதாம். 'அறை பறைகண்' (1180) என்று முன்னர் சொல்லப்பட்டது. இப்போது 'பனி வாரும் கண்' என்றாள்.

**1233 தணந்தமை சால அறிவிப்ப ...**

அவளடைந்த பூரிப்பிற்கு எல்லையில்லை என்பதனைக் குறிப்பால் உணர்த்த வேண்டி 'மணந்த நாள்' என்றும், 'வீங்கிய தோள்' என்றும் கூறினார். அன்று அவ்வாறு பூரித்து இன்று இவ்வாறு மெலிந்தால், இரண்டும் கண்டவர் கடிதின் அறிந்து அவரைத் தகவின்மை கூறுவர். முன் குறட்பாவில் **கண்கள் சொல்லுவ போலும்** என்றாள்; இங்குத் தோள்கள் **சால அறிவிப்ப போலும்** என்று கூறினாள். திருமண நாளன்று பூரிப்பால் தோள்கள் வீங்கினவாம்.

**1234 பணைநீங்கிப் பைந்தொடி சோரும் ...**

மெலிந்து போகின்ற தன்மையினை மேலும் கூறுகின்றாள். 'தொல்கவின்' என்பது சிந்திக்கத்தக்கது. தோள்கள் மெலிந்து விட்டதால் வளையல்கள் கழலுகின்றனவாம். அவர் பிரிந்து குறித்த காலத்தில் வாராமையினை அவை உணர்த்துகின்றன. தோள் அழகு அழிதல் மட்டுமல்லாமல் மெலிந்தும் போகின்றன; 'பணை நீங்கி', 'துணை நீங்கி' என்பனவும் சிந்தனைக்குரியன. மேலே தணந்த தோள்கள் என்றாள்; இங்கே வாடிய தோள்கள் என்றாள். பசிய பொன்னாலான தோள் வளைகள் அணிந்திருந்தாள்; இதனால் அவர் அன்பில்லாதவர் என்பது தெரிந்தது.

**1235 கொடியார் கொடுமை உரைக்கும் ...**

முன்குறட்பா முடிந்தது போல இக்குறட்பாவும் 'தொல்கவின் வாடிய தோள்' என்று முடிந்தது. சோரும் என்று முன் குறட்பாவில் காணப்பட்டது. இங்கே 'கொடுமை உரைக்கும்' என்றாள். அவரோடு கலந்த தோள்களே சொல்லுவன ஆயின் அயலார்

சொல்லுதல் வேண்டுமோ என்பது குறிப்பு. பிரிந்து சென்று வாராதிருப்பவரைக் 'கொடியார்' என்றாள்.

**1236 தொடியொடு தோள்நெகிழ நோவல் ...**

பிறர் தனது தலைவரைக் கொடியவர் என்று கூறுவதை அவளால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை என்கின்றாள். 'நல்காமை தூற்றார் எனின்' (1190) என்றதுபோல, இங்கும் 'எனக் கூறல் நொந்து' என்று கூறினாள். அவள் நொந்து கொள்ளுவதற்குக் காரணம் கூறியவாறு; 'தொடியொடு தோள்' என்று குறிப்பிட்டாள். தலைவன் வாராதிருந்தமைகண்டு தோழி நொந்து பேசுகின்றாள். தன் தலைவரை நொந்து பேசுவதை அவளால் பொறுக்க முடியாமல் இவ்வாறு கூறினாள். 'நொந்து நோவல்' — சிந்தனைக் குரியது.

**1237 பாடு பெறுதியோ நெஞ்சே ...**

வினாமுறையில் கருத்து அமைக்கப்பட்டுள்ளது. 'கொடியார்க்கு' என்பது கொடிய ரல்லர் என்பது தோன்ற நின்ற குறிப்புச் சொல். 'வாடுதோள்' என்பது அவைதாமே வாடுகின் றனவாம். தலைவனிடம் போய்க் கூறுவதால் அவளுக்குத் துன்பம் நீங்கும்; காலத்தினால் செய்த உதவியாகும் என்பதைக் குறித்துப் 'பாடுபெறுதியோ' என்று சொன்னாள். புகழுண்டாகும் என்று எடுத்துரைத்தாள். துன்பமெல்லாம் நீங்கும், காரியம் செய்க என்று கூறிப் 'பாடு பெறுதியோ' என்றாள்.

**1238 முயங்கிய கைகளை ஊக்க ...**

தொழில் முடிந்து திரும்புகின்ற தலைமகன் முன்பு நிகழ்ந்ததைக் குறித்துத் தன்னுள்ளே சொல்லியது. 'பசப்புறு பருவரல்' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது. அவளுடைய இளமையினைக் குறிக்க வேண்டியும் குணத்தினைச் சுட்டிக் காட்டியும் 'பேதை' என்றான். 'வீழும் இருவர்க்கு' (1108) என்பது சிந்தனைக்குரியது. இனி, கடிதின் செல்ல வேண்டும் என்று கூறினான்; அப்படிப்பட்ட 'நுதல்' இப்பிரிவிற்கு யாது செய்யுமோ என்று குறித்தான்.

**1239 முயக்கிடைத் தண்வளி போழ ...**

முந்தைய குறட்பாவில் நுதலைப்பற்றிக் கூறினான். இங்குக் கண்களைக் குறித்தான். 'வளியிடை' (1108) என்பதைக் குறிக்கவே 'தண்வளிப் போழ' என்று இப்போது சொன்னான். பசப்பு நிறம் நினைவு படுத்தப்பட்டது. 'போழ' என்பது உடம்பு இரண்டும் ஒன்றானது தோன்ற நின்றது; கண்ணும் மழை பொழிந்ததாம்; குளிர்ச்சியான கண்கள் என்பதாயிற்று. தண்வளி என்பதில் தண்மை என்பது மென்மையினைக் குறித்தது.

**1240 கண்ணின் பசப்போ பருவரல் ...**

'பசப்புறு பருவரல்' என்ற அதிகாரம் குறிக்கப்பட்டது. 'பருவரல் எய்தன்றே' என்பது சிந்தனைக்குரியது. கண்கள் பசப்பு நிறமுற்றதற்குக் காரணம் குறிப்பால் உணர்த்தப் பட்டது. நுதல், கைகளை நெகிழ்த்தியவுடனே பசந்தது; இதனை 1238ஆம் குறட்பா கூறிற்று; அவ்வாறிருக்க, யான் கைகளையும் ஊக்கி, மெய்களும் (உடம்பு) நீங்கிச் சிறு காற்று உள் நுழையும்வரை பசக்கவில்லையென்று எண்ணித் தனது வன்மையும் நுதலின் மென்மையும்

கருதிக் கண்கள் வெட்கமடைந்தன. அவளுடைய உறுப்புக்கள் ஒன்றினொன்று முற்பட்டு நலன் அழிந்தன என்றான். தான் விரைந்து சேர்தல் வேண்டும் என்று முடிவு செய்தான்.

## 115 நெஞ்சொடு கிளத்தல்

### 1241 நினைத்துஒன்று சொல்லாயோ நெஞ்சே ...

உயிரினும் சிறந்த நாணினை விட்டுச் செய்வது யாதொன்றாயினும் என்பாள். 'எனைத் தொன்றும்' என்றாள். 'விசாரித்துக் கூறுவாயாக' என்றாள் என்பதும் அமையும். பொருட்பாலில், **மருந்து** என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உண்டு. 'எவ்வநோய்' என்பது யாதானும் தீராத நோய்; இருந்தும் மருந்து கேட்கின்றாள். 'ஒன்று', 'தீர்க்கும் மருந்து' என்பன சிந்தனைக்குரியன. 'நெஞ்சொடு புலத்தல்' என்றோர் அதிகாரம் உண்டு.

### 1242 காதல் அவர்இல ராகநீ ...

'பேதைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்படும். நம்மை நினைக்காததால் நம்மிடம் காதல் இலர் என்று தெரிகின்றது. அப்படித் தெரிந்தும் அவர்பால் செல்ல நினைப்பது அறியாமையாகும்; எனவே 'பேதைமை' என்றாள்; 'வாழி' என்பது இகழ்ச்சிக் குறிப்பு. 'நீ நோவது பேதைமை' என்பது சிந்தனைக்குரியது.

### 1243 இருந்துஉள்ளி என்பரிதல் நெஞ்சே ...

நம்மிடம் அருளில்லாதவர் தாமாகவே வாரார் என்றாள்; தாம் அவரிடம் செல்லல் வேண்டும் என்பது குறிப்பாயிற்று. இங்கேயே இருந்து கொண்டு என்பதனை, இருந்து என்றாள். வினாமுறையில் கருத்து உரைக்கப்பட்டது. 'பைதல் உழக்கும்' (1175), 'பைதல் உழப்பது' (1172); இந்த நோயினை இவ்வாறு பற்பல இடங்களில் கூறுவது போல இங்கும் **பைதல் நோய்** என்றாள். 'பரிந்து உள்ளல்' அவளுக்கு இல்லை. 'தொடலைக் குறுந்தொடி தந்தாள்' (1135) என்று காதலன் கூறினான். 'பைதல் நோய் செய்தார்' என்று இங்கு அவள் கூறினாள்.

### 1244 கண்ணும் கொளச்சேறி நெஞ்சே ...

'தின்னும்' என்பதால், அந்த நலிவினைத் தீர்க்க வேண்டும் என்றாள். தான் போக வேண்டும் என்பது குறிப்பாயிற்று. தின்னுகின்ற காரணம் கூறினாள். 'கண் விதுப்பழிதல்' என்ற அதிகாரத்தின் கருத்துரைகள் சிந்தனைக்குரியன. 'நீயே எப்போதும் செல்லுகின்றாய்; கண்களையும் கொண்டு போவாயாக' என்றாள். நெஞ்சினைப் பார்த்துக் கூறினாள். 'என்னைத் தின்னும்' என்பது சிந்தனைக்குரியது. காதல் உள்ளம் பேசுகின்ற பேச்சின் நயம் விளங்குவதாயிற்று.

### 1245 செற்றார் எனக்கை விடல்உண்டோ ...

பெண்களின் இயல்பான தன்மை புலப்படுத்தப்பட்டது. வினாமுறையில் கருத்து உரைக்கப்பட்டது. அந்த வலிமை நமக்கு இல்லாததால் அவரிடம் போவதே நல்லது என்று

கூறினாள். உற்றால் என்பதும், உறாஅதவர் என்பதும் சிந்தனைக்குரியன. 'கைவிடல் உண்டோ' என்பது பெண்மையின் உளப்பாங்கினை உணர்த்திற்று. கணவன்மார்கள் வன்கண்ணராக இருந்தாலும் மனைவிமார்களும் அவ்வாறு இல்லாமல், தாம் தலைவர்பால் சென்று சேர்தலே முறையாகும். 'விடல் உண்டோ' என்று உலக இயற்கையின் மேல் வைத்துக் கூறினார்.

**1246 கலந்துஉணர்த்தும் காதலர்க் கண்டால் ...**

கோபத்தினை நீக்க வல்லவர் காதலர் என்றாள். **உணர்த்தும்** என்பது, கலவி இன்பத்தினைக் காட்டி அதனால் மயக்கிப் புலவிக் குறிப்பினை நீக்குதல் ஆகும். 'பொய்க் காய்வு' என்பது சிந்திக்கத்தக்கது. கண்டால் கோபிக்காத நீ, காணாத போது கோபிக் கின்றாயே என்றாள். 'உணர்த்தும் காதலர்' என்பதும் 'உணராய்' என்பதும் நன்கு சிந்திக்கத் தக்கவை. அவளது உள்ளக்கிடக்கை தெளிவாக்கப்பட்டது

**1247 காமம் விடுஒன்றோ நாண்விடு ...**

காமம், நாணம் ஆகிய இரண்டும் குறிப்பிடப்பட்டன. 'நல் நெஞ்சே' என்றது, இந்த இரண்டினையும் விடாமல் பெண்மையை நிலை பெறுத்தலின் நல்லது என்னும் குறிப்பாயிற்று. 'காமமும் நாணும்' (1163) என்பது போன்றவை சிந்திக்க வேண்டுவனவாம். தலைவரிடம் செல்லக் கருதிய தலைமகள் நாணம் தடுத்தமை கண்டு கூறியது. கணவன்மாட்டுக் காதலும் பிறர் மாட்டு நாணமும் பெண்டிர்க்கு இயல்பாகும். 'நல் நெஞ்சே' என்றது, இரண்டையும் விடாது பெண்மையை நிலை நிறுத்தலின், 'நல்லை' என்னும் குறிப்பாகும்; ஒன்றுக்கொன்று மறுதலையான குணங்கள்.

**1248 பரிந்தவர் நல்கார்என்று ஏங்கி ...**

நாயகர் வந்து விடுவார் என்று நினைத்தலால் 'பேதை' என்று கூறினாள். பிரிந்தவர் பின் செல்லுகின்ற பேதை என்பதனையும் குறித்தாள். தலைமகள் தலைமகனிருந்த தேயத்தை நினைத்து கவன்ற நெஞ்சிற்குக் கூறியது. வருந்திய நெஞ்சம் என்று குறிப்பிட்டாள். 'ஏங்கி' என்பதைச் சிந்திக்கவும். நம்மால் பொறுத்திருந்து வாழ முடியாத நிலையினைக் கண்டு வைத்தும், நல்காது போயினாரைக் காணாத வழிச் சென்று அறிவித்த துணையானே நல்க வருவார் என்று கருதினமையின் 'பேதை' என்றாள்.

**1249 உள்ளத்தார் காத லவராக ...**

இங்கேயே இருப்பவரைப் புறத்தில் தேடிச் செல்லுவது நகைப்பிற்குரியதே என்றாள் 'யாருழைச் சேறி' என்பதைச் சிந்திக்க. அவளுடைய எண்ணத்தின் ஆழ்ந்த இன்பநிலை குறிப்பாக உணர்த்தப்பட்டது. 'நெஞ்சத்தார் காதலராக' (1128) என்று தொடங்கிய குறட் பாவினைப் போல, இக்குறட்பா 'உள்ளத்தார் காதலராக' என்று தொடங்கப் பெற்றது. 'நெஞ்சத்தவராவர் விரைந்து' (1218) என்பதும், 'உள்ளி நீ' என்பதும் கருதற்குரியன. 'கண்ணும் கொளச் சேறி' (1244) என்று சொன்னது போல் இங்கும் யாருழைச் சேறி என்றாள்.

**1250 துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து ...**

அவர் நம்மைக் கூடாது போயினார்; **துன்னாத் துறந்தார்** என்றாலும், நாம் அவரை மறக்க முடியாமல் நினைத்துக் கொண்டிருக்க, 'உடம்பின் அழகேயன்றி இருக்கும் நிறை குணமும் இழப்போம்' என்றாள். **நெஞ்சத்து உடையேமா** என்பது சிந்தித்தறிய வேண்டும். 'மேலும் மேலும் அழகினை இழப்போம்' என்பது இன்னும் என்பதால் குறிக்கப்பட்டது. அவர் நம்மைக் கூடாவண்ணம் விட்டுவிட்டுப் போய்விட்டார். நாம் அவரை மறக்க முடியாமல் இருக்கிறோம். இன்னும் மறந்தால் போன மேனியழகேயன்றி, நின்ற நிறையும் இழந்து விடுவோம்.

## 126 நிறை அழிதல்

**1251 காமக் கணிச்சி உடைக்கும் ...**

நாணம் இருக்கும்வரை நிறை குணம் அழியாது. மனதில் உள்ளதைப் பிறர் அழியாமல், பிறர் கொள்ளாமல், மறைத்துக் காத்தலால் நிறை குணத்தினைக் 'கதவு' என்றார். காமக் கணிச்சி மிகவும் வலிமை உடையது. 'உடைக்கும் என்றார்'. இல்லறத்திற்கு உரியவளான படியால், வீடு, கதவு, தாழ்ப்பாள் என்பன கூறப்பட்டன என்பது குறிப்பு. 'நிறை அழிதல்' என்பது அடக்கற்பாலனவற்றை வேட்கை மிகுதியான் அடக்க மாட்டாது 'வாய் விடுதல்' ஆகும்.

**1252 காமம் எனஒன்றோ கண்ணின்றுஎன் ...**

'கண்ணோட்டம்' என்ற அதிகாரம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. அளவு கடந்து செயல்படுவதால் காமத்தினை இரக்கமில்லாதது என்று குறிப்பான் வேண்டி **கண் இன்று** என்றார். அடக்க முடியாத நிலையினை எடுத்துரைப்பாள் என்க. 'யாமத்தும் ஆளும்' என்பதும் 'யாமத்தும் யானே உளேன்' (1167) என்பதும் சிந்தித்தறியத்தக்கது. இருட்டிலும் 'அடிமைத் தொழில் கொள்ளுகிறது' என்பது குறிப்பாயிற்று; **ஆளும்** என்றாள். நெஞ்சில் தோன்றிய காமம் நெஞ்சால் அடக்கப்படும் என்ற தோழிக்குத் தலைவி கூறியது. அடக்கப் படாமை கூறியவாறு; 'யாமத்தும் உள்ளுவேன்' (1136), 'யாமத்தும் யானே உள்ளேன்' (1167) என்பன போன்று இங்கும் **யாமத்தும் ஆளும் தொழில்** என்றார்.

**1253 மறைப்பேன்மன் காமத்தை யானோ ...**

தும்மலினை அடக்க முடியாது என்பார். அதுவே போல அவளுடைய **நிலைமை** உண்டாகிவிட்டது. வினாமுறையில் கருத்து அமைக்கப்பட்டது. 'என் குறிப்பின்றியும் தோன்றி விடுகின்றது' என்றாள். 'ஊற்று நீர்' (1161) என்பது சிந்திக்கத்தக்கது. 'யானோ' என்பது அவளுடைய முடியாத் தன்மையினைக் குறிப்பிட்டது. 'ஓ' என்பது இரக்கத்திற்குரிய குறிப்பினை உணர்த்தியது. 'இறப்பவர்க்கு ஊற்று நீர்' (1161)—அங்கே சொல்லியவள், இங்கே தும்மல் போல் தோன்றிவிடும் என்றாள். தும்மல் அடங்காதது போல அடக்குகின்றதில்லை என்றாள். மகளிர் காமம் மறைக்கப்பட வேண்டும் என்பதற்குச் சொல்லியது.

**1254 நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன் ...**

முந்தைய குறட்பாவில் காணப்பட்டது போல இங்கு 'யானோ' என்பது கூறப்பட்டது. அடக்கி வைக்கும் ஆற்றல் வன்மையற்றுப் போய் விட்டது என்றாள். 'என்பேன்' என்பதும் 'மன்றுபடும்' என்பதும் கருதற்பாலன. காம வேட்கை வலிமை நிறைந்தது. 'மறையிறந்து மன்றுபடும்' (1138) என்பதனையும் சிந்தித்தறிக; 'என் காமம்' என்று அவள் கூறுவது குறிப்பிடத் தக்கதாகும். பலரும் அறியத் தோன்றி விடுவதை 'மன்றுபடும்' என்று கூறினாள். 'என்னுடைய எல்லையைக் கடந்து சென்றுவிட்டது' என்றாள். நிறையினைத் தாழ்ப்பாள் (1251) என்று சொன்னாள்; அதுவும் உடைந்தது.

**1255 செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை ...**

இன்பத்தோடு கழிய வேண்டிய காலத்தினைத் துன்பத்தோடு கழியுமாறு செய்தலின் 'செற்றார்' என்றார். 'பின் சேறல்' என்பது மனத்தால் இடைவிடாது நினைத்தல். காம நோயுறாதார் மானமுடையவராவர். 'பெருந்தகைமை' என்பது சிந்தனைக்குரியது. 'பெருந்தகைமை பீடுஅழிய' (968) என்பது கருதற்பாலது. காம நோயினருக்கு பெருந்தகைமை இல்லையென்றாள். அதற்குக் காரணமும் கூறினாள். காம நோயால் துன்புறுபவர்களைப் பற்றிக் கூறுகின்ற போது, இந்த எண்ணம் அவளுக்கு உண்டாயிற்று. அவர் பின் செல்லல் என்பது இடைவிடாது நினைத்தல்; நம்மை மறந்தாரை நாமும் மறப்போம் என்ற தோழிக்குக் கூறியது.

**1256 செற்றவர் பின்சேறல் வேண்டி ...**

தனக்கு இந்தக் காம நோய் வந்துற்றது ஒருவகையில் நல்லதென்று கூறினாள். ஏனெனில், காதலர் பின்னே செல்லுகின்ற நல்வாய்ப்பு உண்டாயிற்று என்பதாம். 'அணித்து' என்பது இகழ்ச்சிக் குறிப்பு. இக்காம நோய், யான் சொல்லவும் கேட்கவும் ஆவது ஒன்று அன்று; மிகவும் கொடியது என்றாள். அவர்பின் செல்ல வேண்டிய நிலையினை அவர் உண்டாக்கியதால் அவ்விடம் அன்பு நெஞ்சம் இருப்பதாயிற்று.

**1257 நாண்என ஒன்றோ அறியலம் ...**

'பேணியார்' என்பது தன்து காதலர். தான் விரும்பியவற்றை அவர் செய்கின்றார் என்றாள். கருதியிருந்த கலவிகள் என்பதாகும்; நாயகி நாணத்தினைக் காட்டாமல் இருந்து இன்புற வேண்டியது கலவி என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'அறியலம்' என்றாள்; சிந்தனைக்குரியது. நாணத்தினை அறிய முடியாத நேரத்தினையும் குறித்துக் காட்டினாள். விரும்புமாறு செய்வாராயின் நாணம் உண்டாகாது என்றாள். நாணமுடைமை உண்டாகில் காமம் வெளிப்படாது. 'என' — சிந்திக்கத்தக்கது. வேட்கை மிகுதியினால் கலவிகள் பற்றிக் கூறுவாள். தான் கருதியிருந்தவாறு கலவிகள் நிகழ்ந்தன என்றாள். 'பேணியார் பெட்பச் செயின்' என்பது பன்முறையும் சிந்திக்கத்தக்கது. தலைமகளிடம், 'கோபித்துக் கொள்ள வில்லையே' என்று கேட்ட தோழிக்குக் கூறியது.

**1258 பல்மாயக் கள்வன் பணிமொழி ...**

'கணிச்சி உடைக்கும்' (1251) என்று கூறியதுபோல் இங்குப் 'பெண்மை உடைக்கும் படை' என்று கூறினாள். பெண்மையென்பது நிறை குணத்தின் மேல் நின்றது; அவன் மீது கோபிக்க வேண்டும் என்று இருந்த நாயகியைத் தனது சொற்களால் மாற்றினான். ஆகையால் 'பன்மாயக் கள்வன்' என்றாள். தன்னைவிடவும் அதிகமாக அன்புடையவன் என்று அவன் கூறிய சொற்களைப் பணிமொழி என்றும் குறித்தாள். உடைக்கும் என்றதால் நிறையழிதல் குறிக்கப்பட்டது. கொண்கன், பேணியார், நுண்ணியர், நெஞ்சத்தார் என்றெல்லாம் பற்பல முறைகளில் குறிப்பிட்ட நாயகனை இப்போது 'கள்வன்' என்று கூறினாள். அவன் எத்தகைய படை வைத்துள்ளான் என்பதும் குறிக்கப்பட்டது.

**1259 புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் ...**

சென்றேன், புல்லினேன் என்பன சிந்திக்கத்தக்கன. புல்லியதற்குக் காரணம் கூறினாள். புலத்தற்கு (பிணங்குவதற்கு)க் கருவியான நெஞ்சு தானே கலத்தற்குக் கருவியாய் நிற்றலால், அவளால் புலத்திற்கு முடியவில்லை. ஆதலால் புல்லினாள். உறுவதுகண்டு என்பதும் சிந்தனைக்குரியது. புலப்பல் என என்பது அவளுடைய எண்ணத்தினைக் கூறியதாகும். அவளுடைய மனம் அவள் வசம் இல்லை. இவளோடு இருந்த நெஞ்சம் அவரைக் கண்டவுடனே அவரோடு போயிற்று. புலத்தற் கருவியாய நெஞ்சு தானே கலத்தற் கருவியாய் நிற்றலின் தன்னுடைய முடியாமை கூறினாள். 'அவர் வயின் விதும்பல்', 'நெஞ்சொடு புலத்தல்' 'நெஞ்சொடு கிளத்தல்' முதலிய அதிகாரங்களில் கண்டு தெளிக.

**1260 நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு ...**

இங்கே 'புணர்தல்' என்பது மிகவும் நெருங்கி எதிர்ப்பட்டு இருத்தல் என்பதனைக் குறிப்பால் காட்டப்பெற்றது. ஊடுதல் அரிது என்று உரைத்தாள். 'புலவி', 'ஊடலுவகை' முதலிய அதிகாரங்கள் நினைவு படுத்தப்பட்டன. உண்டோ என்பது இயலாமை என்பதனைக் காட்டிற்று. நிணம், தீ, நெஞ்சம் என்பன நன்கு சிந்திக்கப்பட வேண்டியன. தீயில் இட்டன்ன என்பதும் ஊடிநிற்பேம் என்பதும் நன்கு அறியப்பாலன. உறுதிப்பாடு அவளிடத்தில் இல்லாமற் போய்விடுகிறது என்பதாகும்.

## 127 அவர்வயின் விதும்பல்

**1261 வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும் ...**

'புற்கென்ற கண்ணும்' என்றதால் நுண்ணியவற்றைக் காண முடியாத தன்மை. இனி யான் காணுவது எப்படி என்பதைக் குறிப்பிட்டாள்; விரலும் தேய்ந்துபோயின என்றாள். நாயகனை எண்ணியபடி அவன் வரவை எதிர்பார்த்துக் கொண்டே இருப்பதால் விதுப்பாயிற்று. இது 'அவர்வயின் விதும்பல்' என்ற அதிகாரம். 'புணர்ச்சி விதும்பல்' என்றொரு அதிகாரமும் உண்டு. 'அவர் சென்ற நாள்' சிந்தனைக் குரியது. சுவரில் குறித்து வைத்தல் பெண்கள் பழக்கமாகும். நாயகனைக் காண வேட்கையினால் அவள் சொல்லியதாகும்.

புற்கென்ற என்பதால் கண்கள் நுண்ணியதாகக் காணமாட்டாமையை உணர்த்திற்று. நாள் எண்ணலும் வழி பார்த்தலும் எப்போதும் நடைபெறுவதேயாகும்.

**1262 இலங்கிழாய் இன்று மறப்பின்என் ...**

தோழியிடம் தலைவி கூறியது; 'இலங்கிழாய்' என்று தோழியைப் பார்த்துக் குறித்தாள். நாயகனை மீண்டும் மீண்டும் நினைப்பதால் துன்பம் மிகுந்துவிடும் என்று கூறிய தோழிக்குத் தலைவி சொன்னது. 'மறக்க மாட்டேன்' என்பதற்குக் காரணம் கூறினாள். **இலங்கிழாய்** என்பதனால் வருத்தமில்லாதவளே என்று சொன்ன குறிப்பு அமைந்துள்ளது. 'கலங்கழியும் காரிகை நீத்து' என்பது சிந்தனைக்குரியது. 'எப்போதுமே நினைத்துக் கொண்டிருக்கக்கூடாது. சிறிது மறக்க வேண்டும்' என்ற தோழிக்கு அவள் கூறியது. 'இறந்து படுகின்ற இந்த நேரத்தில் அவரை நினைத்தால் மறுமைக்கண் அவரை அடைவேன்' என்று நாயகி கூறினாள்.

**1263 உரன்நசைஇ உள்ளம் துணையாக ...**

'பொருள் மாலையாளர்' (1230) என்று கூறினாள். இங்கே, **உரன்நசைஇ** என்றாள். போரில் வெற்றியினையே கருதிச் சென்றவர் என்க. **உள்ளம்** என்பது 'உள்ளம் உடைமை உடைமை' (592) என்பதை நினைவு படுத்தும். ஊக்கமுடைமையை உணர்த்தும். ஆடவர்க்கு அதுவே துணையாக இருக்க வேண்டும் என்பது குறிப்பாயிற்று. **இன்னும் உளேன்** என்பது சிந்திக்கத்தக்கது. அந்த நசையால் (ஆசையால்) உயிர் வாழ்கின்றேன். அது இல்லையாயின் இறந்து விடுவேன் என்கிறாள் நாயகி.

**1264 கூடிய காமம் பிரிந்தார் ...**

தொழிலின்மேல் செல்லும்போது காம இன்பம் நோக்காமையும் அது முடிந்த பிறகு அதுவே நோக்கலும் தலைமகனுக்கு இயல்பாதலால், **கூடிய காமமொடு** என்று கூறினாள். கோடுகொண்டு ஏறலாகிய மரத்தினது தொழில் நெஞ்சத்தின் மேல் ஏற்றப்பட்டது. அவரது வரவினை ஆசையென்றும் மலைமீது ஏறி அவள் நெஞ்சம் பார்க்கின்றது. நெஞ்சம் பணைத்து ஏறுகின்றது என்றாள்; **கோடுகொடு** என்பது சிந்தனைக்குரியது; 'மேனிமேல் ஊரும்' (1182) என்று அங்குக் கூறினாள். இங்கு 'கோடு கொடு ஏறும்' என்று கூறுகின்றாள்.

**1265 காண்கமன் கொண்கனைக் கண்ணார ...**

'காண்க' என்பதும் 'கண்டபின்' என்பதும் அவளுடைய மனோ நிலையினைத் தெரிவிக்கின்றன. 'காண்க' என்றது வேண்டிக் கொள்ளுதற் பொருட்டு; கேட்ட அளவிலே நீங்காது என்பதனைக் குறிக்கவே **காண்க** என்றாள். இது காண்டல் வேட்கையால் கூறியது. பசப்பு நீங்கும் வழியினைக் கூறினாள். 'கண்ணாரக் கண்டபின்' என்பது சிந்தனைக் குரியதாகும். தலைமகன் வரவு கூறி பொறுக்க மாட்டாமல் பசலையடையாமல் இருக்க வேண்டும் என்ற தோழிக்கு அவள் கூறியது. கொண்கனைக் கண்டபின் அனைத்தும் நீங்கும் என்றாள்.

**1266 வருகமன் கொண்கன் ஒருநாள் ...**

முந்தைய குறட்பாவில் 'காண்க' என்றாள். இங்கு 'வருக' என்று கூறினாள். அங்குக் 'கண்ணார கண்ட பின்', என்றாள். இங்குப் பருகுவன் என்று குறித்தாள். இனி வர இருக்கும் நோய்களையும் கெடுப்பேன் என்றது குறிப்பு. அவளுடைய மனோ வேகம் அறியப்பட்டது; ஒரு நாளிலேயே எல்லாத் துன்பமும் போகும் என்றவாறு; இது வரவு வேட்கையால் கூறப்பட்ட தாகும்; வருக, பருகுவன், எல்லாம்கெட என்பன சிந்தனைக்குரியன. 'பைதல் நோய் செய்தார்' (1243) என்று கூறியவள் இங்கு 'பைதல் நோய் எல்லாம் கெட' என்றாள். இனி அந்த ஒரு நாளைக்குள்ளே வரக்கடவ நோய்களையும் கெடுப்பேன் என்றாள்.

**1267 புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ ...**

மூன்றனையும் செய்தல் அவள் கருத்தானபடியால் 'கலப்பேன் கொல்' என்றாள், ஆதலால் விதுப்பாயிற்று. 'கண்ணன்ன கேளிர்' என்று அருமையாகக் குறிப்பிட்டாள்; புலத்தல், புல்லுதல், கலத்தல் ஆகிய மூன்று செயல்களும் காமத்திற்கு உரியனவாகும். புலவியும் புல்லலும் ஒரே நேரத்தில் நடத்தல் கூடாமையின் கலப்பேன்கொல் என்றாள். நாயகனைக் கண்ணன்ன கேளிர் என்றாள். புலவியும் புல்லலும் கலத்தலும் ஆகியவை செய்தல், கருத் தாதலின் இது விதுப்பாயிற்று- 'அவர் வயின் விதும்பல்' என்பது இவ்வதிகாரம்.

**1268 வினைகலந்து வென்றீக வேந்தன் ...**

தலைமகன் தலைமகளை நினைத்து மனதிற்குள்ளே சொல்லியது. 'மனைகலந்து மாலைக்கு விருந்து அயர்கம்' என்று கூறினான். இது வினை முடிவதற்கு முன்னே கூறியதால் விதுப்பாயிற்று. வேந்தன் வெல்க என்றும், மனை கலந்து என்றும், மாலைப் பொழுதின் கண் விருந்தயர்கம் என்றும் தலைவன் கூறினான். போரின் பொருட்டு நாயகியைப் பிரிந்திருந்தான் என்பது குறிப்பாயிற்று. மனை என்பது மனைவியைக் குறித்தது. 'மங்கலம் என்ப மனை மாட்சி' (60) கருதுக. நாட்டுத் தலைவனாகிய மன்னர்பொருட்டு பணி மேற்கொண்டு சென்றவன், அப்பணி நீட்டித்துச் செல்வதறிந்து தலைமகளை நினைத்துக் கூறினான். வெற்றி பெற்றபின் விருந்தளித்தல் என்ற முறை குறிக்கப்பட்டது.

**1269 ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேண் ...**

'ஏழ்' என்பது அதற்கு மேலே மிக்க பன்மை குறித்து நின்றது. 'நல்கார் என்று ஏங்கி' (1248) என்பதுபோல, இங்கு 'வைத்து ஏங்குபவர்' என்று கூறப்பட்டது. ஒருநாள், எழுநாள், வருநாள் — என்பன சிந்திக்கத்தக்கவை. சேண் சென்றார் என்பது அவன் மேற்கொண்ட பணி யினைக் குறித்தது. ஏங்குதல் காதலர்களிடையே இயல்பாகும் என்ற உண்மை பெறப்பட்டது.

**1270 பெறின்என்னாம் பெற்றக்கால் என்னாம் ...**

நாயகியின்பால் விரைந்து செல்ல வேண்டும் என்று எண்ணிய நாயகனின் சிந்தனை களாகும். இம்மூன்றும் உடம்பொடு புணர்த்திச் சொல்லப்பட்டன. இவ்வாறு நடந்துவிடுவதற்கு

முன்னே செல்ல நினைத்தான் என்றார். 'உள்ளம் உடைந்து உக்கக்கால்' என்பது சிந்தித்தறிய வேண்டும். தனது நாயகியின் அரிய உள்ளத்தினையும் அறிந்தவன் என்பதாகும். அருமை தோன்ற பெறின் என்றான். மனம் உடைந்த உடனே நிகழ்வதானபடியால் உக்கக்கால் என்றான்.

## 128 குறிப்பு அறிவுறுத்தல்

### 1271 கரப்பினும் கையிகந்து ஒல்லாநின் ...

காதலர்கள் இருவரும் ஒருவரையொருவர் முதன் முதலில் சந்தித்துப் பார்த்துப் பழகிய பார்வைகளைக் 'குறிப்பறிதல்' என்ற அதிகாரம் கூறுகின்றது. இது 'குறிப்பறிவுறுத்தல்' என்ற அதிகாரம். அவள் கூறாமலேயே அவள் உள்ளத்தில் இருக்கும் வேட்கையினை அவன் புரிந்து கொண்டான். 'கரத்தல்' என்பது நாணத்தால் மறைத்தலாகும்; பிரிதற்குறிப்பு இருப்பதாகக் கருதி வேறுபட்டானது குறிப்பினைக் கண்டு அவளுக்குத் தன் பிரியாமைக் குறிப்பினை அறிவுறுத்தினான். விரக மகிழ்ச்சி கண் பார்வையில் காட்டும் என்றவாறு. 'கையிகந்து' என்பது 'கையிகந்த தண்டம்' (567) என்பது போன்றவற்றை அறிவுறுத்தும். 'உண் கண் உரைக்கல்' என்பது சிந்திக்கத்தக்கது. பிரிந்து சென்ற நாயகன் திரும்பிவந்த பிறகு நடைபெறுவதைக் 'குறிப்பறிவுறுத்தல்' அதிகாரம் கூறுகிறது. 'குறிப்பறிதல்' என்ற அதிகாரம் போன்று இதுவும் கண்பார்வை அடிப்படையில் அமைந்துள்ளது.

### 1272 கண்ணிறைந்த காரிகைக் காம்புஏர்தோள் ...

இல்லாததாகிய பிரிவினைத் தன்னிடம் கற்பனை செய்து அதற்கு அஞ்சுவதால் இவ்வாறு கூறினான். பேதை என்றான். பெண்மைக் குணம் மிகவும் இனிமையானது. 'கண் நிறைந்த காரிகை', 'பெண் நிறைந்த நீர்மை' என்பன நன்கு கருதத்தக்கன.

நாணத்தினால் அவள் சொல்லாவிட்டாலும் அவன் குறிப்பால் உணர்ந்து கொண்டான்; பெண்பாலார்க்கு இயல்பாக இருக்கும் குணங்கள் இவளிடம் மிக அதிகமாகவே காணப்பட்டன.

### 1273 மணியில் திகழ்தரு நூல்போல் ...

'அணி' என்பது புணர்ச்சியால் ஆகிய அழகு என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. அழகினுள்ளே இவள் மறைக்கவும் தோற்றுகின்றதொரு துன்பம் உண்டு என்பதாம். நாயகியின் மனநிலை காட்டப்பட்டது. திகழ்வது — சிந்திக்கத்தக்கது. மயக்கம் ஒன்று இவளிடத்தில் உண்டு. நாயகன் பிரிந்து விடுவாரோ என்ற அச்சமேயாகும். உள்ளத்தில் தோன்றும் இன்ப உணர்ச்சியினை வெளியிட்டுக் கூறாமல் இருக்கின்றாள்.

### 1274 முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் ...

'முகை மொக்குள்' என்பது முதிர்ச்சியால் புடைபடுதல். நகையென்பது, புணர்ச்சி இன்பத்தால் நிகழ்வது. அவள் நகைப்பின் கண்ணே இன்பம் ஒன்று உண்டு என்றான். 'நகை மொக்குள்' என்பது சிந்தனைக்குரியது. முந்தைய குறட்பாவும் இதுவும் ஒன்று உண்டு என்று முடிந்தன.

**1275 செறிதொடி செய்துஇறந்த கள்ளம் ...**

அவள் செய்த களவு ஆசை நோய்க்கு ஒரு மருந்தாயிற்று. பிரிவு அஞ்சித் தன் உள்ளத்தில் நின்ற துயரத்தைத் தான் தணிக்கும் வழி ஒன்று உடையதாயிருக்கின்றது. தான் செல்லுதல் என்பதை நீக்குவதாயிற்று. அவள் உடன் வருதல் என்ற குறிப்பும் காணப்பட்டது. 'மருந்து' என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உண்டு. 'நோய் மருந்து' (1091) என்று கூறியதைப்போல, 'தீர்க்கும் மருந்து' என்று இங்கே குறிப்பிட்டான். தன் உள்ளத்தில் மறைந்துப்போன செய்தியினை உணர்ந்து கள்ளம் என்று குறிப்பிட்டான். 'செய்து இறந்த கள்ளம்' என்றான்.

**1276 பெரிதுஆற்றிப் பெட்பக் கலத்தல் ...**

பிரிதற் குறிப்பினால் செய்கின்றது ஆதலால் முடிவில் துன்பம் உண்டாக்குவதாக இருந்தது. அன்பின்மையை எண்ணுவதொரு பிரிவுடைத்து என்பதாம். புணருங் காலத்து முன்பு போலாகாது, மேன்மேலும் விரும்புமாறு புணர்தல் பெரிதான துயரத்தை ஆற்றி மிகக் களிப்புடன் கூடுதல் நாயகர் பிரியும் குறி என்று அறிக. 'இன்கண் உடைத்தவர்' (1152) என்பதும் சிந்திக்கத்தக்கதாகும். 'பெட்பக்கலத்தல்' — சிந்திக்கவும். தலைமகன் குறிப்பறிந்த தலைமகள் அதனை அது தெளிவிக்கச் சென்ற தோழிக்கு அறிவுறுத்தியதாகும். பிரிந்து வந்த தலைமகன் மீண்டும் பிரிந்துவிடுவானோ என்ற குறிப்பு தோன்றலாயிற்று. அவர் கலந்த கலவியால் இவ்வாறு அறிந்தாள். 'பெட்பசெயின்' (1257) என்று கூறியதுபோல் பெட்பக் கலத்தல் என்றார்.

**1277 தண்ணந் துறைவன் தணந்தமை ...**

கருத்து நிகழ்ந்ததாகலின் 'தணந்தமை' என்றாள். யான் தெரிய உணர்தற்கு முன்பே தோள்கள் மெலிந்தன என்பாள், அதனை வளைமேல் ஏற்றி அது தன்னை உணர்வுடைத் தாக்கியும் கூறினாள். "முன்னம் உணர்ந்த" என்பது சிந்திக்கத்தக்கது. 'நின்ற வளை' (1157) என்று அங்கே கூறினார். இங்கே 'உணர்ந்த வளை' என்றார்.

**1278 நெருநற்றுச் சென்றார்எம் காதலர் ...**

நெருநற்றுச் செய்த (நேற்று நிகழ்ந்த) தலையளியால் பிரிவு துணியப்பட்டது. அதனை நெருநற்றுச் சென்றார் என்றுரைத்தாள். அதனை ஐயுற்றுச் செல்கின்றது ஏழுநாள் ஆகலின் அன்றே மேனி பசந்தது என்றாள். இதனை, "ஏழுநாளேம் மேனி பசந்து" என்று கூறினாள். அவர் பிரிவதன் முன்னும் பிரிவர் என்றேங்கி இன்புற்றிலம் என்பது குறிப் பாயிற்று. 'ஒரு நாள்' (1269) என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

நேற்று நாயகன்பால் பெற்ற அன்பின் மிகுதியால் 'நெருநற்றுச் சென்றார்' என்று கூறினாள். எழுநாள் (1269) என்பதனை இங்கும் கருதுக; மேனி தலைமகனின் பிரிதற் குறிப்பினை உணர்த்தியவாறு.

**1279 தொடிநோக்கி மென்தோளும் நோக்கி ...**

நாயகனுடன் உடன்போக்கிற்கு அவள் செய்தது அறிகுறியாக இருந்தது. தொடி, மென் தோள், அடி ஆகிய மூன்றனையும் அவள் முறையாக நோக்கினாள். பிரிவால் உடல்

மெலியும் என்பதை நினைத்து, அதனால் வளைகழலும் என்பதைக் கருதியும், தோள் மெலியும் என்பதையும் — இவ்விரண்டும் நடக்காமல் இருக்க அவர் பின்னே செல்லுதல் வேண்டும் என்பதற்காக அடியையும் நோக்கினாள் எனப்பட்டது. வாய் திறந்து பேசாமலேயே தன்னுடைய எண்ணத்தினை நோக்குகளால் புரியவைத்தாள். நாயகி தன் வருத்தத்தினை வாய்விட்டுக் கூறவில்லை; தனது நோக்கினால் தெரியுமாறு செய்தாள். இதனைத் தோழி நாயகனுக்குக் கூறினாள். தொடி, தோள், அடி ஆகிய மூன்றினையும் நோக்கினாள்.

**1280 பெண்ணினால் பெண்மை உடைத்துஎன்ப ...**

தலைமகள் உடன் வர முடிவு செய்தாள் என்பதனை அறிந்து கொண்ட தலைமகன், தான் பிரிந்து செல்லவில்லை என்ற குறிப்பினை உணர்த்தலானான். அப்போது அவளுடைய பெண்மையினைப் பெரிதும் வியந்தான். அவள் தனது காம நோயினைக் கண்ணினால் கூறினாள். சொல்லி அவர் பிரியக்கூடாது என்று வேண்டினாள்; கண்களின் மிகச் சிறந்த ஆற்றல்களை பொருட்பாலில் 'குறிப்பறிதல்' என்ற அதிகாரம் உணர்த்தும். காதலர் பார்வையின் தன்மைகளை இக் காமத்துப்பாலில் 'குறிப்பறிதல்' என்ற அதிகாரமும் இந்த அதிகாரமும் உணர்த்துகின்றன. 'கண் விதுப்பழிதல்' போன்ற அதிகாரங்களும் கருதற்குரியது. 'இரவு' என்ற பெயரில் அதிகாரம் ஒன்று உண்டு. தலைமகன் பிரியாமல் இருப்பதைத் தோழிக்குக் கூறினான். 'என்ப' என்பது சிந்தனைக்குரியது; தலைமகளும் உடன்வந்து விடுவாள் என்பதைத் தெரிந்து பிரிவதை நிறுத்தினான்.

## *129* புணர்ச்சி விதும்பல்

**1281 உள்ளக் களித்தலும் காண ...**

'களித்தல்' என்பது உணர்ச்சியினைப் புலப்படுத்தும். மகிழ்தல் அஃது அழிந்ததாகும்; இந்த இரண்டும் ஒருங்கே கள்ளுக்கு இல் என்றவாறு; அத்தன்மையான காமத்தினையுடைய யான் எவ்வாறு புலப்பேன் (பிணங்குவேன்) என்றாள். உள்ள, காண என்பன சிந்தனைக்குரியன. கள்ளிற்கு உண்ணக் களித்தலும் மகிழ்தலும் உண்டு என்றாலும், காமத்திற்கு உள்ளக்களித்தலும் காண மகிழ்தலும் உண்டு. 'உண்டார்கண் அல்லது' (1090) என்பது போன்றவைகளும் சிந்தனைக்குரியவை. பிறிதற்குறிப்பினனாகிய தலைவனோடு நீ புலவாமைக்கு (பிணங்காமைக்கு)க் காரணம் யாது என்று கேட்டு நகையாடிய தோழிக்கு நாயகி இவ்வாறு கூறினாள்.

**1282 தினைத்துணையும் ஊடாமை வேண்டும் ...**

ஊடுதல் செய்யக் கூடாத நேரம் குறிக்கப்பட்டது. ஊடினால் வருத்தம் மிகும் என்று பிறர்க்கு உறுதி கூறுவாள் போன்று தன் விதுப்புக் கூறியவாறு; இது 'புணர்ச்சி விதும்பல்' என்ற அதிகாரம். 'அவர்வயின் விதும்பல்' என்றொரு அதிகாரம் உண்டு. ஊட நினைத்த நெஞ்சிற்குத் தலைமகள் கூறியது. தினை — பனை என்பதோர் அளவை 104-ஆவது குறட்பா உரையினையும் பிறவற்றையும் காண்க. 'காமம் நிறையவரின்' என்றபோது, யாது செய்ய வேண்டும் என்பது கூறப்பட்டது. இந்த நேரத்தில் ஊடினால், வருத்தம் மிகும் எனப் பிறர்க்கு உறுதி கூறுவாள் போன்று, தன் காம வேட்கை கூறப்பட்டது.

**1283 பேணாது பெட்பவே செய்யினும் ...**

தனது விதுப்பு கண்கள் மேல் ஏற்றப்பட்டது; அவள் கூறியவை. அப்படிப்பட்ட தன்மையினள் புலந்திருக்க முடியாதவளானாள் என்பது குறிப்பு. பிரிந்து கூடல் முடிந்தது என்பதுமாகும்; நாயகன் எவ்வாறு நடந்து கொண்டாலும் அவனைக் காணாமல் 'எனக்கு உறக்கம்' வராது என்றாள். 'பெட்பவே செய்யினும்' என்பது சிந்தித்தறிய வேண்டியது. **அமையல்** என்றாள்; **பேணாது** என்று நாயகன் செயலைக் குறித்தாள். 'பெட்பவே செய்யினும்' என்பது நாயகன் தன்பால் நடந்து கொள்ளும் முறை கூறியவாறு.

**1284 ஊடற்கண் சென்றேன்மன் தோழி ...**

'சென்றேன்', 'சென்றது நெஞ்சு' என்பது சிந்தித்தறிய வேண்டுவன. 'சேறல், நிகழ்தல்' நினைத்த நெஞ்சிற்கும் ஒத்தலின் **அது மறந்து** என்றாள். ஆதலால் அவள் செய்ய நினைத்தது பயனற்றதாயிற்று. நெஞ்சு அவளுடன் ஒத்துழைக்கவில்லை. நெஞ்சம் ஊடலினை மறந்து, கூடலினையே குறிக்கோளாகக் கருதி இருந்தது. **என் நெஞ்சு** என்று கூறியது கருதுக. ஊடுதல் செய்யலாம் என்றால், அவளுடைய நெஞ்சானது தன் வசம் இல்லாததால், அவ்வாறு செய்ய முடியாமற் போனதாம்; அவள் வேறு—நெஞ்சு வேறு என்பதாகப் பிரித்துப் பேசினாள்!

**1285 எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் ...**

தனது இயல்பினைத் தெளிவாக எடுத்துக் கூறினாள். **'கோல் காணாக் கண்'** என்பது சிந்தனைக்குரியது. நாயகனிடத்தில் அளவு கடந்த காதல் கொண்டவளானபடியால், அவனைப் பார்த்த மாத்திரத்திலேயே **இன்ப நாயகன்** என்று மகிழ்ச்சி உண்டாவதே அல்லாமல் குறை காண முடிவதில்லை. 'பழிகாணேன் கண்டவிடத்து' என்றாள். மை யெழுதும் கோலினை எழுதும்போது கண்கள் காண முடியாது.

இக் குறட்பாவும் வருகின்ற குறட்பாவும் அவளுடைய அன்பான இன்பம் கலந்த தன்மையினைக் கூறுவன. 'கண்ணும் எழுதேம்' (1027) என்பது சிந்தனைக்குரியது. **கோல் காணா, பழிகாணேன்** அறிந்துணர்க.

**1286 காணுங்கால் காணேன் தவறாய ...**

முன் குறட்பாவின் கருத்து மேலும் விளக்கம் பெறுகின்றது. முன்பு நாயகனைப் பற்றிக் கூறிய தவறுகள் இப்போது அவளால் காண முடியவில்லையாம். 'காணுங்கால் காணேன் தவறாய' என்று கூறுகின்றாள். நாயகன் இல்லாத போது பிரிவினைப் பொறுத்திருக்க முடியாதவளாகி அவன்மீது தவறுகளையே காணுகின்றாள்; தோழியிடம் கூறுகின்றாள்; முன்பு தான் நாயகரைப் பற்றிக் கூறிய தவறுகளை இதுபோது—அவரை நேரில் காணும்போது—காணாததால், அவரிடம் புலந்து கொள்ளவில்லை என்று நாயகி கூறினாள்.

**1287 உய்த்தல் அறிந்து புனல்பாய் ...**

'காமக் கடும்புனல்' (1134) என்ற குறட்பாவும் சிந்திக்க தக்கதாகும். புலந்தாலும் பயனில்லை என்பதாகும். 'பொய்க்காய்வு காய்தி' (1246) என்று கூறுவது போல **'பொய்த்தல் அறிந்து'** என்று இங்குக் கூறினாள். **உய்த்தல், பொய்த்தல்** என்பன சிந்தித்தறிய வேண்டுவன

வாகும். புலவிக்குறிப்பு நீங்குவாள் சொல்லியது. இழுத்துக் கொண்டு போகின்ற புனல் என்று காட்டி, காம இன்ப வேகத்தினை உணர்த்தினாள். புலந்தாலும் பயனில்லை என்று கூறினாள். 'காமக் கடும்புனல்' (1134) என்பது சிந்தனைக்குரியதாகும். 'பொய்த்தல் அறிந்து'—சிந்தனைக் குரியது. உய்த்தல் அறிந்து யாரும் புனல் பாய்தல் செய்யார் என்பது குறிப்பால் உணர்த்தப் பட்டது.

### 1288 இளித்தக்க இன்னா செயினும் ...

'பன்மாயக் கள்வன்' (1258) என்று கூறியதுபோல நாயகன் கள்வன் என்று அழைக்கப் பட்டான். நாயகியின் இன்ப வேகத்தினையறிந்த தோழி நாயகனுக்குக் கூறிய குறிப்பாகும். நாணமின்மை, நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மை முதலியனவற்றைச் செய்தாலும் கள்ளுண்பார் உண்ணுவதற்கே போகின்றார்கள். அற்றே என்று குறித்துக் காட்டினாள். முயக்கம் என்பதனைக் குறிப்பால் உணர்த்த வேண்டி மார்பு என்றாள். புலவிக் குறிப்பு நீங்கின தலைமகள் தலைமகனுக்குக் கூறியது என்பதும் அமையும்; என் மனம் களிப்பதற்குக் கள் ஒக்கும், 'கள்வ, உன் மார்பு' என்றவறு. நாயகிக்குத் துன்பம் தருபவற்றை நாயகன் செய் தாலும் அவன் மீது பற்று மிகுந்து வருகின்றதாம். இது நாயகியின் நிலைமை.

### 1289 மலரினும் மெல்லிது காமம் ...

குறிப்பும், வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும் ஒரு காலத்திலே ஒத்து நுகர்வதற் குரியார் இருவர், அதற்கு ஏற்ற இடனும் காலமும் உபகரணங்களும் பெற்றுக் கூடி நுகர வேண்டுதலின், 'அதன் செவ்வி தலைப்படுவார் சிலர்' என்று கூறப்பட்டது. அவற்றுள் யாதானும் ஒன்றினாலும் சிறிது வேறுபடினும் வாடிவிடும். ஆதலால் மலரினும் மெல்லிது என்று கூறினான். இது தலைமகன் புணர்ச்சிக் குறிப்புக் கண்டு, 'பின்பு ஊடிக் கொள்ளலாம் ; இப்போது ஊடுவையாயின் இக்காமம் செவ்வி தப்பும்' என்று புணர்ச்சி வேட்கையால் தலை மகள் நெஞ்சோடு கூறியது. இங்கே, 'மாலை மலரும்' (1227) என்பது கருதற்பாலதாகும். 'மனச்செவ்வி' என்னும் மலர் தொட்ட துணையானே அழிவதாகும்; ஆதலால், 'மலரினும் மெல்லிது' என்று கூறினார். 'சிலர்' என்பது பொருள் பொதிந்ததாகும்.

### 1290 கண்ணில் துனித்தே கலங்கினாள் ...

கண்ணினால் மட்டும் ஊடல் செய்தாள் என்பதாகும். நிகழ்ச்சியின்றி அது சிவந்த துணையேயாதல் என்பதாகும். கண்ணினால் மட்டும் புலந்து, அதனையும் ஊடி நிறுத்தாமல் கலக்கமுற்றாள். புணர்தலில் அதிகமாக விரைந்தாள் ; 'என்னினும் தான் விதுப்புற்று' என்பது சிந்தனைக்குரியதாகும். நாயகரைப் புணர வருகையில் கண்ணும் மனமும் கலங்கினாள் ; புல்லும்போது நாயகரினும் அதிக வேகமாய்த் தானும் இன்பம் பெற்று நாயகருக்கு இன்பம் அளித்தாள் என்பதாம். கலங்குதல் என்பது கண்களினால் அறியப்படுவதொன்றானபடியால், 'கண்ணின்' என்று கூறப்பட்டது. இயல்பாகவே தான் முந்திக் கொள்ளுகின்றவன் என்பதனை உணர்த்தவே 'என்னினும்' என்றாள். தனி ஊடல் ஒரே கருத்தின் அடிப்படையில் சொல்லப் படுவன.

## 130 நெஞ்சொடு புலத்தல்

### 1291 அவர்நெஞ்சு அவர்க்குஆதல் கண்டும் ...

அவர் நெஞ்சு அவர் கருதியதற்கு உடன்படுகின்றது என்பதனை 'அவர்க்கு ஆதல்' என்றாள். எமக்கு ஆகாதது என்றது புலவிக்கு உடன்படாமையாகும். 'ஒரு செயலைத் தாமாகச் செய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினும் செய்வர்; நீ அதுவும் செய்கின்ற தில்லை' என்று தனது நெஞ்சினைப் பார்த்து அவள் கேட்டாள். **எவன் நெஞ்சே** என்பது சிந்தித்தறிய வேண்டுவதாகும். வினாமுறையில் கருத்து அமைக்கப்பட்டது. **அவர்க்கு ஆதல், எமக்கு ஆகாதது** என்பன கருத்தாழம் மிக்கவை. தலைமகனிடம் தவறு உண்டாய வழியும் புலவி கருதாத நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது. ஒரு காரியத்தைத் தாமாகச் செய்து அறியாதார் செய்வாரைக் கண்டாயினும் செய்தல் வேண்டும். 'அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டு' என்றாள்.

### 1292 உறாஅ தவர்க்கண்ட கண்ணும் ...

நெஞ்சோடு புலந்து பேசுகின்றாள்; பழைய அன்பு கருதி நாயகர் கோபிக்க மாட்டார் என்று எண்ணி சென்றாய்; நீ கருதியது முடியுமோ என்று கேட்டாள். நாயகரை 'உறாஅதவர்' என்றாள்; நெஞ்சு செல்லுவதற்குக் காரணம் **செறாஅர்** என்று குறித்தாள். 'கொளச்சேறி'(1244) என்றதுபோலச் 'சேறி என் நெஞ்சு' என்றாள். பழைய கண்ணோட்டம் - அன்பு - பற்றிக் கோபிக்க மாட்டார் என்ற எண்ணத்தினைப் பற்றுக்கோடாக வைத்துச் சென்றாய்; நீ கருதியது முடியுமோ? இவ்வாறு தனது நெஞ்சினைப் பார்த்துப் பேசுகின்றாள்.

### 1293 கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ ...

உலகியல் போக்கினை எடுத்துரைக்கின்றாள்; என்னை விட்டு நீ அவரிடம் செல்லுதல் பழைய பழக்கம் என்பதனைச் சுட்டிக்காட்ட **பெட்டாங்கு** என்றாள்; தான் இதுபோது மான மில்லாதவளாதலின் **கெட்டார்க்கு** என்று குறிப்பிட்டாள். நெஞ்சம் போவதற்குக் காரணம் கூறப்பட்டது; 'கெட்டார்க்கு நட்டார் இல்' என்பது சிந்தனைக்குரியதாகும். **பின் செலல்** என்பது அவளுடைய 'உள்ளப்பாங்கினை'க் காட்டிற்று.

### 1294 இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் ...

முன்பெல்லாம் புலப்பதாக (பிணங்குவதாக) எண்ணி இருந்து பிறகு புணர்ச்சி விரும்புவதால் இவ்வாறு கூறினாள். **சூழ்வார் யார்** என்று வினாமுறையில் கருத்து அமைக்கப் பட்டது. 'நெஞ்சு தன்னுடன் ஒத்திருக்காது' என்று கூறினாள். 'உன்னை எவ்வாறு நம்புவேன்' என்று குறிப்பாக உணர்த்தினாள். அவரைக் கண்டவுடனே எல்லாவற்றையும் மறந்து இன்பம் நுகர எண்ணுகிறாய் என்று நெஞ்சத்தினிடம் சொன்னாள். இது 'நெஞ்சொடு புலத்தல்' அதிகாரம் ஆகையால் 'சூழ்வார் யார்' என்றாள்.

### 1295 பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு ...

மாறாத் துன்பத்தினை நெஞ்சம் கொடுத்துக் கொண்டிருக்கின்றது என்பதனை அறாஅ இடும்பைத்து' என்றாள். 'வாராக்கால் துஞ்சா' (1179) என்ற கருத்து அமைப்பு

முறையில் இக்குறள் அமைந்துள்ளது. இருமுறை **அஞ்சும்** என்று குறிப்பிட்டது சிந்தனைக் குரியது. **இடும்பை** என்ற சொல் இடுக்கணழியாமை என்ற அதிகாரத்தில் மிகுதியாகக் காணப்படும். கலவி நுகர்தல் இல்லாததால் இங்ஙனம் கூறினாள் என்பதும் அமையும். அஞ்சுதல் என்பது மகளிர்க்கு இயல்பான குணம். கண்களை **'உற்றன கண்'** (1179) என்ற முறையில் இக்குறட்பாவும் அமைக்கப்பட்டுள்ளது; தோழிக்குக் கேட்குமாறு தலைமகன் கூறினான். **எஞ்ஞான்றும்** என்று குறித்ததால் நெஞ்சின் அறியாமை புலனாயிற்று.

**1296 தனியே யிருந்து நினைத்தக்கால் ...**

'என்னைத் தின்னும்' (1244) என்று கூறியது போல, இங்கும் 'தினிய' என்று கூறப் பட்டது. தனியாக இருப்பது அவளுக்கு வேதனை என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. **'இருந்து நினைத்தக்கால்'** என்பதும், **'இருந்தது என் நெஞ்சு'** என்பதும் சிந்தனைக்குரியவை. நாயகனின் கொடுமைகளைத் தனியே இருந்து நினைத்தால் அவளைத் தின்னுவதுபோல அவ்வளவு துன்பத்தினை நெஞ்சம் செய்கின்றதாம். **என் நெஞ்சு** என்பது குறிப்பிடத்தக்கது. 'தின்னும் அவர் காணலுற்று' (1244) என்பதுபோல இங்கும் பேசினாள். நாயகரைப் பிரிந் திருக்கும் காலத்தில் நிகழ்வதனைக் கூறினாள். துன்பம் மிகுதியினை இவ்வாறு எடுத்துரைத்தாள்.

**1297 நாணும் மறந்தேன் அவர் ...**

'நாணுடைமை' என்ற அதிகாரம் நினைவுபடுத்தப்பட்டது ஒரு நிலையிலும் நில்லா திருக்கும் நெஞ்சத்தினை 'மாணா' - குறித்தது. கண்டபோது நினைத்து காணாதபோது மறக்கும் தவறைக் காணா வழி நினைந்து கண்ட வழி மறத்தலால் **மடநெஞ்சு** என்று கூறினாள். நாணம் என்பது, எப்போது கூடி ஒழுகினாலும் அவ்வப்போதும், அப்பொழுதுதான் கண்டாள் போல ஒடுங்குதலாகும்; கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், அதனையும் 'மறந்தேன்' என்றாள். **அவர்** - சிந்திக்கவும்; கண்ட பொழுதே புணர்ச்சி விதும்பலால் நாணத்தினையும் மறந்தேன் என்றாள். பெண்களுக்கு உயிரினும் மேலானது என்பது தோன்ற **நாணும்** என்றாள்.

**1298 எள்ளின் இளிவாம்என்று எண்ணி ...**

நாயகரைக் குறைவாகப் பேசுதல் நாயகிக்குத்தான் இழிவாக முடியும் என்பது குறித்து **'எள்ளின்'** என்று கூறப்பட்டது. அவர் தரும் இன்பத்தினையும் செய்யும் நன்மையினையும் 'திறம்' என்றாள். 'உள்ளுவன் மன்யான்' (1184) என்பதும் இங்கே சிந்திக்கத்தக்கது. **'உயிர்க் காதல்'** என்பது கருதுக. 'காதல் நெஞ்சு' என்று கூறப்பட்டது; நாயகனை நாயகி ஏளனமாகப் பேசினால் அது தனக்குத் தானே இழிவாகும் என்ற உயர்ந்த கருத்து கூறப்பட்டது. நாயகன் சிறப்பே தன்னுடைய சிறப்பாக என்றென்றும் கொள்ளல் வேண்டும்.

**1299 துன்பத்திற்கு யாரே துணையாவார் ...**

'துணையாவார்', 'துணைஅல்வழி' என்று கூறிக் கருத்துக்களைத் தெளிவு படுத்தி னாள். இங்கே துன்பம் என்றது தனது நெஞ்சம் தன்னுடன் ஒத்து ஊடலுக்கு உதவாது கூடலுக்குச் செல்லுதல் ஆகும். வினாமுறையில் கருத்து அமைக்கப்பட்டுள்ளது. **'தாமுடைய**

நெஞ்சம்' என்பது சிந்தனைக்குரியது. இன்பத்திற்குத் துணையாவார் உண்டு; துன்பத்திற்குத் துணையாவார் இல்லை என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. நாயகன் நாயகி இருவர்தம் இன்பக் கருத்தில் சொல்லப்பட்டதே யென்றாலும், உலகியல் நடைமுறைக் கருத்தாக இது அமைந்துள்ளது; எண்ணங்கள் பிறக்கின்ற இடமாதலால் **நெஞ்சம்துணை** என்றாள்.

**1300 தஞ்சம் தமர்அல்லர் ஏதிலார் ...**

முன் குறளில் போல இங்கும் 'தாமுடைய' என்று கூறினார். தனது நெஞ்சமே உறவு ஆகாதபோது 'ஏதிலர்' ஆவது எவ்வாறு முடியும்; நெஞ்சமே சுற்றத்தாராக நின்று துணை புரியவில்லையே என்றும் வருந்துகின்றாள். 'தமர் அல்லர்', 'தமர் அல்வழி' என்பன சிந்தனைகுரியவை. தஞ்சம் என்பது எளிமைப் பொருட்டு இடுக்கண் உற்றபோது எய்துதல் ஆகும். **ஏதிலார்** என்று இங்குக் காணப்படுவது, 'ஏதிலார் போல' (1099) என்பது போன்ற குறட்பாக்களை நினைவு படுத்தும். முன் குறளில் கூறப்பட்ட உண்மை இங்கே மேலும் விளக்கம் பெற்றது. நெஞ்சம் தனக்குத் துணையாகாமல் இருப்பது சுட்டிக் காட்டப்பட்டது.

## 131 புலவி

**1301 புல்லாது இராஅப் புலத்தை ...**

தலைமகளிடம் தோழியானவள் நகையாடிச் சொல்லியதாகக் கூறப்படுவது. '**சிறிது**' என்பது சிந்திக்கப்பட வேண்டும். நாயகன் படுகின்ற இன்ப வேதனையைக் காணுவதில் அவர் களுக்கு விருப்பம் உண்டாகின்றதாம். துன்பத்தினைச் செய்யும் காமநோயினை 'அல்லல் நோய்' என்றாள். **காண்கம்** என்பது அவர்களின் உள்ளத்தின் கருத்தினைப் புலப்படுத்தியது. புலவிக் குறிப்புக் கண்டு அவள் உற்ற வருத்தத்தினை அவரும் சிறிது அடைதல் வேண்டும் என்றும், அதனைப் பார்க்க வேண்டும் என்றும் நகையாடிக் கூறினாள். ஆதலால் கொஞ்சம் புலத்தலில் நீடித்திருக்க வேண்டும் என்பது குறிப்பு. நாயகியிடத்தில், புலந்து கொண்டிருக்க அத்தோழி சொல்லியதாகும். இது, நாயகன் நேர்பட்ட வழி கூறியதாகும்; நாயகனிடத்து புலக்குமாறு கூறினாள். 'காண்கம் சிறிது' என்பது சிந்திக்கத்தக்கது.

**1302 உப்புஅமைந் தற்றால் புலவி ...**

'உப்பு' என்பது இனிமையைக் குறித்தது. அது அளவோடு இருத்தல் வேண்டும். சிறிது அதிகமாகி விட்டால் உணவு முழுவதும் கெட்டுவிடும். 'அமைந்தற்றால்' என்று கூறியது சிந்திக்க. 'நீளவிடல்' என்பது புலவியினை அளவறிந்து உணராமல் கலவியின் மேல் எழுந்த குறிப்பு அழுங்குமளவும் செய்தல்; கலவியின் மேல் எழுந்த குறிப்புடன் புலவி நிறுத்தப் படல் வேண்டும்; சிறிது நீளவிடலாகாது என்றாள்; உப்பு மிக்கவழி உணவுப் பண்டம் வீணாகிப் போகும்; அவ்வாறு கலவியும் வீணாகும். **அமைந்தற்று, மிக்கற்று** என்பன ஆழ்ந்த உண்மை யினைப் புலப்படுத்துபவை. புலவி மிக்கவழி கலவி இன்பம் இல்லாமலாகும் என்பதாம்.

**1303 அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் ...**

இன்பம் பெறாது வாடியிருக்கும் பெண்ணை, 'அலந்தாரை' என்று குறித்தாள். 'அல்லல் நோய்' (1301) என்று கூறியது போலவே இக்குறட்பாவிலும் 'அல்லல் நோய்' என்றாள் காமத்தில் புலந்தாரைப் புலவி நீக்கி முயங்காமல் விட்டு விடக்கூடாது என்றார். புல்லாவிடல் சிந்திக்க வேண்டும்; நல்லோர்க்குத் துன்பம் செய்ததற்கு ஒக்கும்; எதுவென்றால் புலந்தாரை முடியப் பிணக்கு அறுத்துக் கூடாத இன்பம் என்றவாறு. உள்ளத்தின் இயல்பு—மனோதத்துவ உண்மை இங்கு எடுத்துக் காட்டப்பட்டது. இன்பவேகம் உள்ளத்தில் இருந்தாலும், பெண்கள் புலத்தல் இயல்பாக இருக்கும். அதனால் அவளைப் புல்லாமலும் கூடாமலும் இருக்கக்கூடாது.

**1304 ஊடி யவரை உணராமை ...**

இந்த அதிகாரம் புலவி. நாயகி பிணங்கிக் கொள்ளுதல். ஏதேனும் காரணம் கூறி நாயகனிடம் புலந்து கொள்ளுகின்றாள். பிற பெண்களிடம் நட்பு கொண்டிருக்கின்றான் என்று கூறிப் பிணங்குகிறாள். பெண்கள் கொடி போன்றவர்கள்; 'வள்ளி' என்பதைச் சிந்திக்க வேண்டும். கொடிக்கு நீர் பெய்தல் வேண்டும்; இன்றேல் வாடிவிடும். சிறிது காலம் நீர் இல்லா விட்டாலும் கொடி வாடிவிடும்; முன்பதாகவே வாடியிருக்கும் கொடி என்பதனை உணர்த்த வேண்டி வாடிய வள்ளி என்று கூறப்பட்டது. 'முதல் அரிந்தற்று' என்பதை நன்கு சிந்திக்கவும். பிணங்கிக் கொண்டிருக்கும் மகளிரை ஊடல் போக்கி ஆவன செய்யாவிட்டால் கொடியின் வேரினைப் பிடுங்கியது போலாகும்; அரிந்தற்று என்பது குறிப்பால் உணர்த்திற்று. இக்குறட் பாவில் கூறப்பட்டுள்ள 'வள்ளி' சிந்திக்கத்தக்கது; அதனை 'வாடிய வள்ளி' என்றார். பெண்மை யின் இயற்கையும் தன்மையும் உணர்த்தப்பட்டது. ஊடியவர்—வள்ளிக் கொடிக்குச் சமம்.

**1305 நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் ...**

தவறு இல்லார்க்கும் புலவி இனிது என்பான் 'நலத்தகை நல்லவர்க்கும்' என்றான். புலவி இன்பத்தினைப் பயக்கும் கலவிக்கு முன்பு நிகழ்வதால் 'அழகு' (ஏர்) என்று கூறினான். தான் நுகர்ந்த இன்பத்திற்குக் காரணமான புலவியை வியந்து கூறினான். புலவியின் மிகுதியினைப் 'புலத்தகை' என்றான்.

**1306 துனியும் புலவியும் இல்லாயின் ...**

துனி, புலவி, காமம், கனி, கருக்காய் முதலியன கூறப்பட்டன. மிகவும் முதிர்ந்து கீழே விழுகின்ற நிலையிலிருக்கும் கனி உண்பவர்கட்கு இனிமை உண்டாக்காது. ஆதலால் 'துனி' இல்லையாயின் 'கனியற்று' என்றார்; கட்டிளமைத் தாய் காய் நுகரும் பருவம் இல்லாத தால் புலவிஇல்லையாயின், கருக்காயற்று என்று கூறினான். இந்த இரண்டும் வேண்டும் என்பது வியந்து கூறப்பட்டது. துனியும் புலவியும் வேண்டும் என்பது; இல்லாயின் என்பது நன்கு சிந்திக்கப்பட வேண்டும்.

**1307 ஊடலின் உண்டுஆங்குஓர் துன்பம் ...**

புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ என்ற எண்ணம் தோன்றுவதால் ஊடல் செய்வ திலும் துன்பம் இருப்பதாக உள்ளது என்றான். ஊடல் கூடலுக்கு விரைதலை உண்டாக்கி

வேண்டும் என்பது குறிப்பாயிற்று. 'நீடுவது' என்பது கால அளவினைக் குறித்தது. ஓர் துன்பம் என்றது உணர்தற்குரியது. தலைமகள் பிணங்கிக் கொண்டிருக்கையில் தலைமகன் அது கண்டு கூறியது. 'புலவி' என்பது இவ்வதிகாரம்; எனவே, இவ்வாறு கூறப்பட்டது. 'ஊடுக மன்னோ' (1329) என்பதும் சிந்தனைக்குரியது. இன்பத்திற்கு இன்றியமையாதது 'ஊடல்' என்பது பெறப்பட்டது.

**1308 நோதல் எவன்மற்று நொந்தார்என்று ...**

'அறியும் காதலர்' என்றதால், ஊடலை இனிது உணர்ந்து கொள்ளும் அறிவுடைய நாயகர் ஆவார். அதனை அறிந்து கொள்ளுவதற்கு நல்ல அறிவும் உணர்ச்சியும் வேண்டும் எனப் பட்டது. அவ்வாறு அறிந்துகொள்ள முடியாத காதலரிடத்தில் ஊடுதல் செய்வதால் என்ன பயன் என்று கேட்டாள். வினா முறையில் கருத்து அமைந்துள்ளது. **நோதல் எவன்** என்பது சிந்தனைக்குரியது. **அறியும் காதலர்** என்பதால் நாயகரும் நல்ல புத்திசாலியாக இருக்க வேண்டும் என்பது குறிப்பாயிற்று. 'அறியும்' என்றது ஊடலினை இனிது உணர்கின்ற தன்மை. அறியாமையின், தாம் புலக்கின்றதனால் பயனில்லை எனத் தன் ஆற்றாமை உணர்த்தப் பெற்றது.

**1309 நீரும் நிழலது இனிதே ...**

நிழலினிடம் இருந்த நீர் குளிர்ச்சி மிக்குத் தாகம் தணித்தலின் இனிதாயிற்று. அது போல புலத்தலும் நல்ல நாயகரிடத்திலே இனிதாம் என்றார். 'நீரும் நிழலும்', 'புலவியும் வீழுநரும்' என்பன சிந்திக்கத்தக்கன. வெயிலுக்கு ஒதுங்கி நிற்க உதவும் நிழல் போல, வெம்மை தீர உதவுபவன் நாயகன் என்பது உய்த்துணர வைக்கப்பட்டது. ஆற்றாமைக்கு நோதலும் கூடுதற்கண் வேட்கையுடையராவர் என்பதாம். புலவிக்கு அன்புடைமை தேவை என்பது கொள்ளத்தக்கது.

**1310 ஊடல் உணங்க விடுவாரோடு ...**

அன்பும் அருளும் இல்லாதாரை உடையர் என்றும், அவரோடு யாம் கூடுவம் என்றும் கருதி அதற்கு முயற்சித்தல் ஆசை மிகுதியானவர்களின் செயலாதலால், ''கூடுவேம் என்பது அவா'' என்று தலைவி கூறினாள். தனது புலவியைச் சாகவிட்டிருக்கும் காதலர் என்று குற்றம் சாட்டினாள். அப்படிப்பட்டவரோடும் கூடுவேம் என்று அவள் மனம் நினைக்கின்றதாம். **உணங்கவிடுவார்** என்பது சிந்தனைக்குரியது. 'என் நெஞ்சம்' என்று குறிப்பிட்டுக் காட்டினாள்.

## 132 புலவி நுணுக்கம்

**1311 பெண்இயலார் எல்லாரும் கண்ணின் ...**

கற்பு, நாணம் முதலிய நற்குணங்கள் இல்லாமல் பரத்தையர்க்கு உள்ளது பெண் ணியற்கை மாத்திரமே என்னும் கருத்தால் 'பெண்ணியலார்' என்றாள். எல்லோரும் ஒரே நேரத்தில் அவனுடைய அழகினைப் பருகுவதால் **பொதுவுண்பர்** என்று கூறினாள். நுட்பமாகச்

சிந்தித்துப் பிணங்குகின்றாள். அவன்மீது அதுவும் ஒரு குற்றமாயிற்று. தாம் (நாயகி) நோக்கி இன்புற்றவாறே பரத்தையரும் நோக்கி இன்புறுவர் என்று கண்டுபிடித்துக் கூறி அவர்பால் பொறாமை கொள்ளுவதால் நுணுக்கமாயிற்று. 'கள்வ' (1288) என்பது போல, பரத்த என்று கூறினாள். மார்பு என்று குறித்ததால் தழுவ மாட்டேன் என்று கூறியது உணர்த்தப்பட்டது.

**1312 ஊடி இருந்தோமாத் தும்மினார் ...**

தும்மினால் வாழ்த்துதல் என்பது மரபு; அவன் தும்மினான்; அவள் அவனுடன் உரையாடுவாள் என்று கருதினானாம். அவன் இயல்பாகவே தும்மினான்; அவள், அவன் குறிப்பினைக் கொண்டு தும்மினான் என்று கொண்டதால் நுணுக்கமாயிற்று. 'நினைப்பவர் போன்று' (1203) என்பதும் சிந்தனைக்குரியது. அவன் தும்மியதற்கு இவள் கூறும் காரணம் குறிக்கப்பட்டது. நாயகி வாழ்த்தினால், ஊடல் தீரலாம் என்பது அவன் கருத்தாக இருந்த தென்பது குறிப்பாயிற்று. இயல்பால் நிகழ்ந்த தும்மலைக் குறிப்பால் நிகழ்ந்ததாகக் கொள்ளுதலால் நுணுக்கமாயிற்று. எனவே 'புலவி நுணுக்கம்' என்பது அதிகாரப் பெயரா யிற்று.

**1313 கோட்டுப்பூச் சூடினும் காயும் ...**

வளையமாகச் சூடினாலும் என்பதைக் 'கோட்டுப்பூ' என்பது உணர்த்திற்று. அவளே கற்பித்துக் கொண்ட காரணம் விளக்கப்பட்டது. 'காட்டிய சூடினீர்' என்பது சிந்திக்கத் தக்கது. அவன் அழகு செய்து கொள்ளுவதையும் குற்றமாகக் கொண்டாள்; 'ஒருத்தியை எனக்கு அறிவித்தற் பொருட்டு' என்று நினைத்தாள் எனினும் அமையும்; இந்தப் பூ பிறர் நிலத்தில் உள்ளது என்று நினைத்துக் கோபித்தாள். வேறு ஒரு பெண்ணிற்கு அவ்வேற்று (நிலத்து)ப் பூவணி காட்டல் வேண்டிச் சூடினீர் என்று கோபித்துக் கொண்டாள்.

**1314 யாரினும் காதலம் என்றேனா ...**

யான் அன்பு மிகுதியால் கூறியதைக் கருத்து வேறுபடக் கொண்டதல்லது பிறிது காரணம் இல்லை என்று கூறினான். 'நீவிர் அன்பு காட்டுகின்ற பலருள்ளும் யாரினும் யாரினும் அன்புடையீர்' என்று சொல்லி ஊடினாள். "புலவியிலும் கூடின முறை நன்றாயது என்று கூறினீர். முன் கூடிய மாதை நினைந்தீரோ என்று ஊடினாள்—என்பதும் அமையும் காதலம் என்பது அவனுடைய உள்ளப் பாங்கினைக் காட்டிற்று. எல்லாருடைய அன்பைவிட அவள்மீது அதிக அன்பு வைத்திருப்பதாகக் கூறினான் என்று பொருள் செய்து கொண்டாள். தலைமகன் கூறுவதாகும்; யான் அன்பு மிகுதியாற் சொல்லியதனை வெறுத்து வேறுபடக் கொண்ட தல்லது பிறிது காரணம் இல்லையென்பதாகும்; 'மகளிர் பலருள்ளும் நின்கண் காதலுடை யேன்'' என்பதாக அவன் கருதினான்.

**1315 இம்மைப் பிறப்பில்பிரியலம் ...**

வெளிப்படையாகக் கூறிய சொல்லை அவள் குறிப்புச் சொல்லாகக் கொண்டு ஊடுகின்றாளேயல்லாமல் தன் மீது தவறு இல்லையென்று கூறினான். பிரியலம் என்பது அவனுடைய ஆழ்ந்த காதலினைக் காட்டிற்று; 'என்றேனா' என்பது அவள் புலந்து

கொள்ளும் நுணுக்கத்தினை வெளிப்படுத்தியது. 'கண் நிறைய நீர் கொண்டனள்' என்பது பெண்களுக்கு இயல்பான எளிதான செயல் என்பதனை உணர்த்திற்று.

வெளிப்படு சொல்லைக் குறிப்புச் சொல்லாகக் கொண்டு அவள் சினம் கொள்ளுகின்றாள்; அவன் மீது தவறில்லை. 'மறுமைப் பிறப்பில் பிரிவீர்களோ?' என்று கூறி வருந்தினாள்.

**1316 உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் ...**

'நினைத்தேன்' (உள்ளினேன்) என்று கூறியதையும் குற்றமாகக் கொண்டாள். 'மறப்பறியேன்' (1125) என்பதும் சிந்தனைக்குரியது. 'என்மறந்தீர்' என்று அவள் கேட்டாள் என்பதால் நுணுக்கமாயிற்று. நுண்ணிய அறிவு படைத்தவள் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. 'என்றேன்', 'ஏன் மறந்தீர்' என்பன கருதத்தக்கவை. **காயும், ஊடினாள், நீர் கொண்டனள்** என்று முந்தைய பாக்களில் சொல்லியவர் இப்போது, **புலத்தக்கனள்** என்றார்; நாயகன் இவ்வாறு கூறுகின்றான்.

**1317 வழுத்தினாள் தும்மினே னாக ...**

வாழ்த்தலோடு புலத்தல் என்பது பொருந்தாமையின் 'அழித்து' என்று கூறினான். அன்புடையார் நினைத்தபோது அவ்வாறு நினைக்கப்பட்டார்க்கு தும்மல் தோன்றும் என்பது மகளிர் வழக்கு. இல்லாத வழக்கத்தை உள்ள வழக்காகக் கருதிப் புலந்தாள். தும்மினாலும் குற்றம் கண்டு பிடித்தாள் என்பது நுட்பமானது. வாழ்த்தினாள்; ஆனால் உடனே அழுதாள். இயல்பாகவே நினைத்தவுடன் அழுகின்ற ஆற்றல் பெண்களுக்கு உண்டு. உண்மையில் எந்த வேறு காதலியும் அவனை நினைக்கவில்லை! வேறு காதலியை அவன் பெற்றுள்ளான் என்பதுமில்லை! தனது நாயகி புலத்தற்காகவே இவ்வாறு கற்பித்துக் கூறினாள். அன்புடையார் நினைத்த வழி, நினைக்கப்பட்டார்க்குத் துன்பம் தோன்றும் என்பது மகளிர் வழக்கு. இதனால் புலந்தாள்.

**1318 தும்முச் செறுப்ப அழுதாள் ...**

தும்மினாலும் குற்றம் என்றாள்; வந்த தும்மலை அடக்கினாலும் குற்றமென்றாள்; 'இனி யாது செய்வேன்' என்று நாயகன் வருந்துகின்றான். 'எம்மை மறைத்திரோ' என்பது நுணுக்கமாயிற்று; 'அழுதாள்' என்பது இயல்பாகப் பெண்கள் செய்வதென்பது குறிப்பு. இவளுக்குப் பயந்துதான் அடக்கினான்; அவள் 'மறைத்திரோ' என்றாள். தும்மினால் கோபங் கொண்டாள் (1317) என்பதற்காக அடக்கினான். 'எம்மை' என்றது, 'நும்மோடு யாதும் பொருத்தமில்லாத எம்மை' என்றாள். தும்மினும் குற்றம், அடக்கினும் குற்றம் என்றால் யாது செய்வேன் என்றான். அவள் மிகவும் நுணுக்கமான புத்தியுள்ளவள்.

**1319 தன்னை உணர்த்தினும் காயும் ...**

இவளுக்குத் தன்னால் உண்மையினைப் புரிய வைக்க முடியாது என்று எண்ணித் தன் மேல் கூறிய தவற்றை உடன்பட்டுப் பணிந்தான்; அப்போதும் புலந்து கொண்டாள்.

'பிற பெண்களிடமும் இப்படித்தான் பணிவீர்களோ' என்றாள். 'தன்னை உணர்த்தினும் காயும்' என்பதை நன்கு சிந்திக்க வேண்டும். இவள் தெளிவித்த வழியும் தெளியாள் என்பது பற்றி என்மேல் ஏற்றிய தவற்றை உடன்பட்டுப் பணிந்தேன்; பணியவே, மற்றவர் களிடமும் இப்படித்தான் இருப்பேன்' என்று கூறிப் புலந்தாள்.

### 1320 நினைத்திருந்து நோக்கினும் காயும் ...

யான் எல்லா உறுப்புக்களாலும் ஒருத்தியோடு ஒத்திருத்தல் முடியாததான படியால், ஒவ்வொரு உறுப்பினைக் கொண்டு ஒவ்வொருத்தியாகப் பலரையும் நினைக்க வேண்டும்; அவர்கள் எல்லோரையும் எனக்குச் சொல்லுங்கள் — என்று கூறிப் புலந்து கொண்டாள். 'அனைத்து நோக்கினீர் யாருள்ளி' என்றாள். வாளா இருந்தாலும் குற்றமாயிற்று. **நோக்கினும்** என்பது சிந்திக்கத்தக்கது. வாய் திறந்து ஒன்றும் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தான் என்பதனை, 'நினைத்திருந்து நோக்கினும்' என்று கூறினாள்.

## 133 ஊடல் உவகை

### 1321 இல்லை தவறுஅவர்க்கு ஆயினும் ...

நாயகர் அளவிறந்த இன்பத்தர் ஆதலின் யான் அடைதற்குரிய பேரன்பினைப் பெற வேண்டும் என்றாள். 'அதற்காகத்தான் ஊடல் செய்கின்றேன்' என்று புலப்படுத்தி னாள். 'வல்லது அவர் அளிக்குமாறு' என்பது சிந்தித்தறிய வேண்டுவதாகும் நாயகியின் உள்ளக் கிடக்கைப் புரியுமாறு செய்யப்பட்டது; 'ஆயினும் ஊடுதல்' என்பது கருதத்தக்கது. தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்ட தோழி — 'அங்ஙனம் நீ புலக்கின்றதற்குக் காரணம் யாது' என்றாட்கு தலைவி கூறியது. நாயகிமார்கள் நாயகன்மார்களிடத்தில் விரும்புவது பேரன்பேயாகும்.

### 1322 ஊடலின் தோன்றும் சிறுதுனி ....

அவர் மீது தவறின்றி நிகழ்கின்ற ஊடல் விரைவில் நீங்குமாதலால் அத்துன்பமும் நில்லாது; எனவே 'சிறுதுனி' என்று கூறினாள். தான் பொறுத்திருந்த தன்மையினைக் காட்ட வேண்டி நிகழ்வதால் 'நல்லளி வாடாது' என்று குறிக்கவேண்டி **வாடினும்** என்றாள். பிறகு உண்டாவது பேரின்பம் ஆனதால், பாடுபெறும் என்றாள். அது வருத்தம் என்று கொள்ளக் கூடாது. புணர்தலும் இன்பம்; புணராது இருப்பதும் இன்பமாகும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டன. ஊடலில் தோன்றுவது **துனி** என்பது பெறப்பட்டது.

### 1323 புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ ...

நீர், தான் நின்ற நிலத்தின் இயல்பு ஆவது போலக் காதலரும் தாம் கூடிய மகளிரின் இயல்பினர் ஆதலால், அது பற்றி அவரோடு புலவி நிகழும் என்பாள். 'நிலத்தொடு நீர் இயைந்தன்னார் அகத்து' என்று கூறினாள். அவர் நமக்கு அப்படிப்பட்டவ ரானபடியால், அப்புலவி, பேரின்பம் தருவதாகின்றது என்பதனை உணர்த்த வேண்டி

'புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ' என்றாள். 'புத்தேள்நாடு' என்பது பேரின்பம் பயக்கும் நாடு என்பது உலக வழக்கு ஆகையால் அதைக் குறித்தார். விளக்கம் பிறிதோர் இடத்தில் காண்க. வினா முறையில் கருத்து அமைக்கப்பட்டது; இந்த இன்பத்திற்கு அந்த இன்பம் இணையாகாது என்று கூறினாள். 'உண்டோ' என்பது நன்கு சிந்தித்தறிய வேண்டும். இது 'ஊடலுவகை' என்ற அதிகாரமாகும்.

## 1324 புல்லி விடாஅப் புலவியுள் ...

என் உள்ளம் உடைக்கும் படை வென்றது வணக்கத்தையும் பணி மொழியையும் என்பதாகும். 'பெண்மை உடைக்கும் படை' (1258) என்பது போன்றவை கருதற்பாலனவாகும். அப்படை தோன்றும் இடத்தினையும் குறித்தாள்; 'புல்லிவிடாப் புலவி' என்பது சிந்தனைக் குரியது. என் உள்ளத்தை அழிக்கும் கருவி, புல்லியவிடத்து விட்டுப் புலந்தபோது தோன்றும் என்றவாறு; புணர்ந்த பின்பு தோன்றாமையால் அதனைக் கெடுக்கும் இன்பமுடைத்து என்று கூறியவாறு. அப்புலவி - 'யாதான் நீங்கும்' என்ற தோழிக்கு நாயகி கூறியது.

## 1325 தவறுஇலர் ஆயினும் தாம்வீழ்வார் ...

தலைமகளை ஊடல் நீக்கிக் கூடிய தலைமகன் மிகுந்த 'உவகை மேலிட்டவனாகக் கூறியதாம். 'இல்லை தவறு அவர்க்கு ஆயினும்' (1321) என்று அவள் கூறினாள். 'தவறிலர் ஆயினும்' என்று இங்கே கூறப்பட்டது; மென் தோள் என்பது நாயகியைக் குறித்ததாகும். மென் தோள் துயிலின்' (1103) என்பது போன்றவை நினைவுபடுத்தற்குரியவை. குற்றம் உண்டாயினும் இல்லையாயினும் ஊடலில் கூடல் நன்று. 'ஆங்கு ஒன்று உடைத்து' என்பது சிந்திக்கத்தக்கது. தலைமகளை ஊடல் நீக்கிக் கூடிய தலைமகன் கழிபெரு உவகையால் தனக்குள்ளே சொல்லிக் கொண்டதாம்; தவறின்றி ஊடியதும் எனக்கு இன்பமாயிற்று என்பதாம்.

## 1326 உணலினும் உண்டது அறல்இனிது ...

பசித்து உண்ணும்போது மிகுதியாகவும் சுவைத்தும் உண்ண முடியும். அதுபோல அகன்று கூடும்போது மிகுந்த இன்பம் என்பதனை அனுபவித்துக் கூறினான். புணர்தலினும் ஊடுதல் இன்பமாம் என்று உணர்த்தப்பட்டது. ஊடுதலால் கூடல் இன்பம் பெருகும் என்பது உணர்த்தப்பட்டது. உணலினும் என்பதும் புணர்தலின் என்பதும் சிந்திக்க வேண்டியன. 'அறல் இனிது' — இந்தக் கருத்தினை மருந்து என்ற அதிகாரத்தில் நன்கு கண்டு தெளிக.

## 1327 ஊடலில் தோற்றவர் வென்றார் ...

கூடுதலென்னும் புணர்ச்சியில் தெரிந்து கொள்ளக் கூடியது இக்குறளில் கூறப்பட்டது. தோற்றவர் என்பது எதிர்த்தல் என்பது முடியாது சாய்ந்தவர் என்பதாம்; இது தலைமகன் கூறியது. யான் அதுபோது சாய்ந்தேன் ஆனபடியால் இப்போது வெற்றி என்னுடையது; பேரின்பம் பெற்றேன் என்று சொன்னான். ஊடல் என்பது காதலர்களுக்குள்ளே நடை பெறுகின்ற பிணக்கு, சிறிய — போர். ஆகவே, அந்த இன்பப் போர்க் களத்தில் வென்றவர், தோற்றார் என்று கூறப்பட்டது. தோற்றவர் வென்றார் என்று கூறியதால் மகிழ்ச்சியும்

இன்பமும் மிகுதிப்பட்டது விளங்கும் எதிர்தலாற்றாது சாய்ந்தவர் தோற்றவர் எனப் பட்டார்; அவர் புணர்ச்சிக்கண் பேரின்பம் எய்தலின் வென்றாராயினார்.

**1328 ஊடிப் பெறுகுவம் கொல்லோ ...**

கலவியினது சிறப்புப்பற்றி 'நுதல் வெயர்ப்ப' என்று கூறினார். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறிதலால் விளையும் இன்பம் ஆகையால், உப்பு எனப்பட்டது. அந்த இனிமையினை 'கூடலில் தோன்றிய உப்பு' என்று கூறினான். இனி அந்தப்பேறு கூடாது எனப் பெற்றதன் சிறப்புக் கூறியவாறு புணர்ச்சிக் காலத்து வேகம் மிகுதலை **நுதல் வெயர்ப்ப** என்றான். 'ஊடிப் பெறுகுவம்' என்பது கருதற்பாலதாகும்.

**1329 ஊடுக மன்னோ ஒளிஇழை ...**

நாயகி ஊடியிருக்கும்போது அவன் வேண்டி நிற்பது அவனுக்கு இன்பமாக இருப்பதால் 'யாம் இரப்ப' என்று குறிப்பிட்டான். ஊடிக் கொண்டே அவள் இருக்க, தான் வேண்டிக் கொண்டே இருக்க வேண்டும் என்பது அவனுடைய ஆசையாகும்; எப்போதும் இருப்பதாக இருக்க வேண்டும் என்றதனால் கூடலினும் ஊடல் நன்று என்பதாகும்; கூடல் என்பது எப்போதும் இருப்பதொன்று ஆகாது என்பது குறிப்பு! 'ஊடுக, நீடுக' என்பன வேண்டிக் கொள்ளும் பொருளில் வந்தன. கூடலின் ஊடலே அமையும் என்ற உவகை இன்பம் குறிப்பிடப்பட்டது; ஊடல் வேண்டப்படுவதாகும்.

**1330 ஊடுதல் காமத்திற்கு இன்பம் ...**

ஒத்த அளவினராதல் என்பதனைக் 'கூடுதல்' என்பது காட்டும். அதனையே **கூடி முயங்கப்பெறின்** என்றார். அருமையினை உணர்த்த வேண்டிப் 'பெறின்' என்று கூறினார். முதிர்ந்த துனியானபோது இன்பம் பயக்கும். முதிராத புலவியானபோது கலவியின்பம் பயக்காது; இரண்டிற்கும், இடையாகிய அளவறிந்து நீங்குதல் அரிது என்பது பற்றிக் 'கூடி முயங்கப் பெறின்' என்றான். 'அந்த இரண்டு இன்பமும் யான் பெற்றேன்' என்று நாயகன் குறித்தான். 'இன்பம்' என்பது இக்குறட்பாவில் இருமுறை வந்துள்ளது.

# சிந்தனைப் பகுதி

## கற்க கசடறக் கற்பவை

திருக்குறட்பாக்களைக் கற்கின்றபோது அவை எப்பகுதியில் எந்த அதிகாரத்தில் கூறப்படுகின்றன என்பதையும், சிறப்பாகக் கூறப்பட்டிருப்பது யாருக்கென்றும், பொதுவாகக் கொள்ளப்பட வேண்டியவை அனைவர்க்கும் என்றும் உலகியல் நடைமுறையில் அமைத்துக் காணாவிட்டால் தெளிவு உண்டாவது அரிதாகும். உலக நடைமுறைகளை ஒட்டிச் செயல்புரிந்து எவ்வளவுக்கெவ்வளவு நல்லறத்தினைப் பின்பற்றி வாழ்க்கை நடத்த முடியுமோ அந்த அளவுக்கு உயர்வான வாழ்க்கையினை நடத்தல் வேண்டும் என்பதே ஆசிரியரின் அடிப்படை எண்ணமாகும். காலம், இடம், சூழ்நிலை முதலியன அறிந்து நல்லெண்ணத்துடன் அறிவின் அடிப்படையில் நன்மை செய்து வாழ்தல் வேண்டும்.

உலகியல் நடைமுறைகளைக் கொண்டு அறிவுரைகளைக் கூறுதலே உலகப் பேராசிரியர்களின் பண்பாகும். ஓர் 'அதிகார'த்திலோ அல்லது 'இயலிலோ' ஒரு கருத்து அமைக்கப்படுமேயானால் அக்கருத்தினை இன்றியமையாத் தன்மையில் வைக்கப்பட்டதென்று அறிதல் வேண்டும். மக்கள் அனைவர்க்கும் பொதுவாகக் கூறப்பட்ட கருத்துக்களையும், சிறப்பாக வற்புறுத்தி இன்றியமையாத் தன்மையில் அமைக்கப்பட்ட கருத்துக்களையும் அறிவின் துணைகொண்டு புரிந்து கொள்ள வேண்டும்.

காமத்துப்பாலில் மட்டும் கருத்துக்களை அமைக்கும்போது, காதலன் - காதலி, தலைவன் - தலைவி, தோழி ஆகியவர்கள் உரையாடுவதைக் கொண்டே ஆசிரியர் தனிப்பட அமைத்திருக்கின்றார்; பெரும்பாலும் அவ்வாறே அமைந்துள்ளது இது மிகவும் சிந்திக்கத்தக்கது. காமத்தின் இன்ப எண்ணங்களை அவரவர்களைக் கொண்டே பேசவிடுவது நீதிபோலும்! இதற்கு விதிவிலக்கு மிகச் சில இடங்களில் மட்டுமே காணப்படுகிறது.

அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் ஆசிரியர் நேரே நமக்குக் கூறுவதாக அற நெறிகள் அமைந்திருக்கின்றன. இரண்டோர் இடங்களில் வீரன் ஒருவனும், வறுமையுற்றோனும், யாசிப்பவனும் நேரில் தங்கள் கருத்துக்களை வெளியிடுவதுபோலச் சொல்லப் பட்டுள்ளது.

காலத்தினாலும் பிற காரணங்களினாலும் மாறுபடக்கூடிய செய்திகளையும் கருத்துக் களையும் பெரும்பாலும் திருவள்ளுவர் கூறவில்லை. என்றென்றும் நிலைத்து நிற்கும் பொதுத் தன்மை வாய்ந்த கருத்துக்களையே எல்லாத்துறையான வாழ்க்கைக்கும் அறநெறியில் வகுத்துக் காட்டியுள்ளார். இந்த விளக்கவுரை நூலில் காணப்படும் பல பிரிவுகளிலும் குறட் பாக்களின் தெளிவான விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒரு குறட்பாவுக்கு ஒரு பகுதியில் தெளிவு உண்டாகவில்லையென்றால், வேறு சில பகுதிகளில் கண்டு தெளிதல் வேண்டும்.

திருவள்ளுவர் பல இடங்களில் கருத்துக்களைக் கூறுகின்றபோது இலங்குநூல், நிரம்பியநூல், உரைசான்ற நூல் என்பது போலக் குறிப்புக் காட்டுகின்றார். நிறைந்த நூலறிவு இருக்கவேண்டும் என்பது இவைகளின் பொதுத் தன்மையான கருத்து. இவ்வாறு பல இடங்கள் உண்டு. காலத்திற்கு ஏற்றவாறு நடைமுறைகள் மாறிக் கொண்டே போகும். அவைகளுக்கேற்ப அவற்றைச் சார்ந்த நீதி முறைகளும் மாறுவதுண்டு. அறநெறிகள் உலகம் உள்ளளவும் அதேபோல நிலைத்திருக்கும். 'அன்பாக இரு', 'உண்மை பேசு', 'தீயவை எண்ணாதே' என்பனவாகிய அறநெறிகள் என்றென்றும் மாறாதவை. இவை போன்ற பிற வற்றையும் கருதுக. மக்களுக்கு ஏற்றவாறு, சமுதாய மாற்றங்களை மனத்திற்கொண்டு அவ்வப்போது பல நூல்கள் எழுதப்படும். இவை காலத்தினாலும் மக்கள் வேறுபாடுகட்கு ஏற்றவாறும் மாறும். அறநூற் கருத்துக்கள் நிலைத்து நிற்பனவாகும்.

உலகப் பொதுமறை என்பதற்கேற்ப எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்திற்கும் ஒத்த பொதுக் கருத்துக்களையே ஆசிரியர் கூறுகிறார். அதுபோல பல சொற்களையும் பொதுவான தன்மையில் அமைத்துக் காட்டுகிறார். சிறப்பான பொருளுக்கு உரிய சொல்லாக இருந்தாலும் இடங்கண்டு பொருளறிதல் வேண்டும். அதன் பொருள் வேறுபாட்டை இடத்திற்கேற்ப அறிதல் வேண்டும். உதாரணமாக இறைவன் என்ற சொல் ஆதிபகவனைக் குறிக்கும் சொல்லாக இருக்கின்றது. இதுவே, நாட்டுத் தலைவனைக் குறிக்கும் சொல்லாக, 'இறை', 'இறைவன்' என்று அரசியல் பகுதியில் பன்முறை சொல்லப்படுகின்றது. இங்கேயெல்லாம், மன்னன், காவலன், தலைவன் என்றே பொருளறிதல் வேண்டும். அதுபோல, துறவிகளைக் குறிக்கும் சொற்களாக நீத்தார், துறந்தார் என்னும் சொற்கள் காணப்படுகின்றன. இத்தகைய சொற்கள் காமத்துப்பாலில் பன்முறை காணப்படுகின்றன. அங்கேயெல்லாம் தலைவியை விட்டுப்போன தலைவன் என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறே பிறவற்றையும் கண்டு தெளிக. மக்களிடையே நிலவிவரும் கருத்துக்களைச் சுட்டிக் காட்டினால்தான், அவர்கள் எளிமையில் புரிந்து கொள்ளுவார்கள். சுட்டிக் காட்டிய பின்னரே அவர்கட்கு உண்மை இதுதான் என்பதாக எடுத்துக்காட்டி நல்வழிப்படுத்தமுடியும்.

ஆசிரியர் கூறும் குறட்பாக்களில் ஒரு சொல் பல இடங்களில் காணப்பட்டால், அவற்றை ஒன்றாகக் கருதிப் பார்த்து அறிவு கொண்டு அவற்றின் வேறுபாடு அறிதல் வேண்டும். கருத்தினைக் கூறுவதற்கு ஆசிரியர் 'கையாளுகின்ற பொருள்களோ, முறையோ பெரிதும் சிந்தனைக்குரியதல்ல; எந்த எண்ணத்தினை — அறநெறியினை நமது உள்ளத்தில் பதிய வைக் கின்றார் என்பதே இன்றியமையாதது. வீரத்தினை உணர்த்துவதற்கு அம்பு, வில், முயல்,

யானை, குதிரை போன்றவை கூறப்பட்டால், அவை கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டு, தாம் சொல்ல வந்த உயர்ந்த கருத்தினை ஆசிரியர் பதிய வைக்கின்றார் என்பதனை மனத்திற் கொள்ளுதல் வேண்டும். போர்க்களத்தில் இப்போது இவை இல்லையே என்று நினைத்தல் கூடாது! வலியுறுத்தப்பட்ட கருத்தினையே மனத்திற் கொள்ளுதல் வேண்டும்.

குணம் என்னும் குன்றேறி நின்ற முனிவர்களின் சிறப்பினைக் கூறவந்த ஆசிரியர் விசும்புளார் கோமான், இந்திரன் என்று குறித்துக் காட்டுவது, மக்கள் உள்ளத்தில் ஐந்தவித்த முனிவரின் ஆற்றலினை ஆழப்பதிய வைக்க வேண்டியதற்காகவேயாகும்.

மக்களிடையே நிலவி வருகின்ற செய்தியினை — கருத்தினை எடுத்துக்காட்டி உண்மையான அறம் இதுவெனப் போதித்தலே பேராசிரியர்களின் முறை. இவ்வாறே பிறவற்றையும் நாம் உய்த்துணர வேண்டும்.

பல மதங்கள், பல சமயங்கள் இவற்றின் சார்புள்ள கருத்துக்கள் — சொற்கள் — சில திருக்குறளில் காணப்படுகின்றன என்று சொல்லப்பட்டாலும், திருவள்ளுவர் அருளிய உலகப் பொது மறையான இந்நூலினை ஒரு சார்பு நூலாக எடுத்துக்காட்ட அவற்றையே காரணமாகக் கொள்ளக் கூடாது. உலகில் உயர்ந்த கருத்துக்களாகக் காணப்படுகின்ற நூல்களிலிருந்தும் பேராசிரியர்களின் கருத்துக்களிலிருந்தும் அறநெறி முறைகளைத் தாம் மேற்கொண்டு 'உலகப் பொதுமறை'யினைத் தந்தருளினார்; நூலில் பலமுறை திருவள்ளுவர் இதனைக் குறிக்கின்றார். பிற நூல்களில் காணப்படும் பொதுவான கருத்துக்களையும் தமது நூலில் சேர்த்து, வேறுபாடுகளைக் களைந்து, அனைவரும் ஒருவழி நின்று அறமறிந்து ஒரே மனித குலமாக வாழ வேண்டும் என்பதற்காகவே இப் பொதுமறையை அவர் அருளினார் என்று அறிதல் வேண்டும்.

இக்காலத்தில் அறநெறி கூறவந்த நூல்கள் எல்லாம் பெரும்பாலும் சமயங்களையும் மதங்களையும் சார்ந்தவையாக இருக்கின்றன என்பதையும் கருதவேண்டும்.

திருக்குறளில் சிறப்பாகக் கூறப்பட்ட அதிகாரங்கள் — பொதுவாகக் கூறப்பட்ட அதிகாரங்கள் என்று பிரித்துப் பார்த்து அறிதல் வேண்டும். அனைத்திலுமே மனிதப் பண்பின் அடிப்படையில் கூறும் கருத்துரைகள் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படுதல் வேண்டும்.

உதாரணமாக அரண், ஒற்றாடல், தூது என்பன போன்ற அதிகாரங்கள் ஆட்சியாளர்க்கென்றே இருப்பவை. 'காமத்துப்பால்' என்பது முற்றும் துறந்த முனிவர்கட்கு தேவையில்லாதது. இவ்வாறு பலவற்றையும் சிந்தித்தறிந்த பின்னரே எளிதில் புரிந்து கொள்ள முடியும்.

'நோன்பு நோற்றல், ஞானம்' என்று இரு பிரிவுகளாகத் துறவறம் — துறவறஇயல் — பிரிக்கப்பட்டுள்ளது. 'அருளுடைமை' முதல் 'கொல்லாமை' வரை ஒன்பது அதிகாரங்கள் விரதம் (நோன்பு) என்று கூறப்படும். நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் இந்த நான்கும் 'ஞானம்' என்று கூறப்படும். மிகவும் கடினமான நல்ல குணங்களையெல்லாம் அப்படியே பின்பற்றித் தீர வேண்டியது துறவறத்தினை மேற்கொண்டவர்களின் அரிய கடமையாகும். கடினமான பண்பாடுகள் அனைத்தையும் நோன்பு என்ற பகுதியில் அடக்கிக் கூறிவிட்டபடியால், ஏனைய எளிய பண்பாடுகள் அவைகளுக்குள் அடங்கின என்று அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

நோன்பு நோற்பதற்காகக் கூறப்பட்ட ஒன்பது அதிகாரங்களைத் துறவிகள் அணுவளவும் தவறாமல் பின்பற்றியாக வேண்டும். உலகப்பற்றும் தொடர்பும் இல்லாமல் ஆசைகளை முற்றும் நீக்கியவர்களாலேயே இந்த நோன்பினை அப்படியே பின்பற்ற முடியும். துறவிகள் 'தவம்' செய்வார்கள். அவர்களால் இல்லறத்தார்போலத் தானம் செய்ய இயலாது. இல்லறத்தார்க்கு எளிமையான 'இனியவை கூறல், அடக்கமுடைமை, செய்ந்நன்றியறிதல்' போன்ற எளிய நெறிகள் கூறப்பட்டன. துறவறத்தார்க்குக் கடினமான வாய்மை, அருளுடைமை, இன்னா செய்யாமை போன்றவை கூறப்பட்டன என்பதையும் சிந்தித்தறிதல் வேண்டும். உலக வாழ்க்கையில் பலவித நடைமுறைத் துறைகளில் வாழ்கின்ற இல்லறத்தார் இத்தகைய நோன்புக்காக அமைக்கப்பட்டவைகளை அப்படியே பின்பற்றுதல் இயலாது. இயன்றவரை பின்பற்றுதல் நல்லதே.

இல்லறத்தார்க்குத் தலையாய கடமை 'தானம்' செய்தலேயாகும்; இதை இடைவிடாமல் செய்தல் வேண்டும்.

ஆசிரியர் திருவள்ளுவனார் உலகியல்பினை மிக நன்கு அறிந்துணர்ந்த பெரியார் ஆவார். உலகில் வாழ்கின்ற மக்கள் பலதிறப்பட்ட தன்மைகள், வாழும் நெறிகள் கொண்டவர்களாக இருக்கின்றார்கள். எல்லோர்க்கும் நன்மையினையும் நல்வழியினையும் கூறுகின்ற வள்ளுவனார், ஒரே வகையில் — முறையில் கூறவில்லை. அவரவர்களின் வாழ்க்கை அமைப்பு முறையினைக் கொண்டே அறமாகிய நல்வழியினை, அவரவர்கட்கு ஏற்ற முறையில் கூறுகின்றார். இதை நாம் ஆராய்ந்தறிதல் வேண்டும். இதுவே நமது ஆசிரியரின் தனிச்சிறப்பாகும்.

ஒவ்வொரு குறட்பாவினையும் நன்கு ஊன்றிப் படித்தல் வேண்டும். அதன் கருத்தினையும் ஆழ்ந்த பொருளினையும் உணர்ந்தறிதல் வேண்டும். எந்த அதிகாரத்தில் அக்குறட்பா அமைந்துள்ளதென்பதையும் கவனித்தல் வேண்டும். சில குறட்பாக்கள் மக்கள் அனைவர்க்கும் பொதுவான கருத்துக்களைக் கொண்டிருக்கும்.

சில குறட்பாக்கள் தனிப்பட்ட குறிப்பான வாழ்க்கையினை மேற்கொண்டவர்களுக்கென்றே இருக்கும். உதாரணமாக, 'நிலையாமை', 'துறவு' போன்றவை துறவிகளுக்கும், 'தூது', 'ஒற்றாடல்' போன்றவை தூதுவனுக்கும் அரசனுக்கும் கூறப்பட்டதாகக் கருதவேண்டும்.

சிறப்பாகக் குறிப்பிட்ட வாழ்க்கையினர்க்குக் கூறப்பட்டிருந்தாலும், பொதுத் தன்மையாக அக்குறட்பா கூறுவதைக் கவனித்தல் வேண்டும். இயன்றவரை ஒப்பிட்டுப்பார்க்க வேண்டிய குறட்பாக்களை ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும். ஒரு குறட்பாவில் காணப்படும் சொற்கள் பிற குறட்பாக்களில் காணப்பட்டால் எல்லாச் சொற்களையும் ஒன்று சேர்த்துப் பொருளறிந்து தெளிவு பெறுதல் வேண்டும். இவ்வாறும் இம்முறைகளிலும், குறட்பாக்களைப் படித்தால்தான் ஐயமின்றியும், குழப்பமின்றியும் தெளிவாகவும் புரிந்து கொள்ள முடியும். பற்பல குறட்பாக்களையும், சொற்களையும் ஒப்பிட்டுப் பார்க்கின்றபோது பல ஐயப்பாடுகள் நீங்கும். முரண்பட்ட கருத்துக்களை ஆசிரியர் எங்குமே கூறவில்லை. சில குறட்பாக்கள் முரண்பட்டவைபோல் தோன்றினாலும், மேற்சொன்ன முறைகளில் கற்றால் எளிமையாகத் தெளிவு உண்டாவதோடு முரண்பட்டதாகக் கருதும் எண்ணமும் அகன்றுவிடும்.

என்றென்றும் நிலைத்து நிற்கின்ற அறமான கருத்துக்களைக் கூறவந்த ஆசிரியர் அக்காலத்தில் வழக்கத்தில் இருந்த கருவிகள், பொருள்கள், மக்கள் மனதிற் கொண்டிருந்த வரலாறு போன்ற செய்திகள் முதலியவற்றை வைத்துக் கொண்டே 'உண்மையான அறம்' இன்னதென்பதனை அறிவுறுத்துகின்றார். எக்கருத்தினை அறிவுறுத்துகின்றார் என்பதுதான் சிந்தித்துப் பின்பற்ற வேண்டிய அறம் எனக் கொள்ள வேண்டுமே அல்லாமல், எதனை வைத்துக் கொண்டு எவ்வாறு கூறுகின்றார் என்பதிலேயே ஆராய்ச்சியைச் செலுத்துதல் வேண்டாத செயலாகும். ஆசிரியர் குறித்துக் காட்டும் பொருள்களும் கருவிகளும் எல்லாக் காலத்திற்கும் எல்லா இடத்திற்கும் பொருந்துவனவாக இருக்குமா என்பதில் நாட்டம் செலுத்தத் தேவையில்லை. ஆசிரியர் கூறவந்த அறத்தினையும் நிலையான நெறியினையும் அறிய அவை உதவியாக இருந்தன என்பதே கொள்ளத்தக்கது.

அருமையான உவமைகளை ஆசிரியர் அமைத்துக் காட்டுகின்றார். கற்பனை நயம் சிறக்குமாறு பல இடங்களில் கருத்துக்களைக் கூறுகின்றார். கற்பனை மிகுதியாகக் காணப் படுவது, காமத்துப்பாலிலாகும். உயர்வினைச் சிறப்பிக்க வேண்டுமென்று பல இடங்களில் கற்பனை அளவு கடந்து காணப்படுகிறது! 'இடுப்பு முரியும்', 'கூற்றுவனைக் கையால் அழைக்கின்றான்' என்பன போன்றவை ஆசிரியரின் நுணுக்கமான அமைப்பு முறைகளாகும். உயர்த்திப் பேசுவதுபோல் பழிப்பதும் இழித்தும் பழித்தும் கூறுவது போன்ற இடங் களும் பலவுண்டு. அதிகம் உணவு கொள்ளுபவனை இழித்துக் கூறவேண்டி, அவன் தாழ்ந்த பிறவியான் என்று குறித்துக்காட்ட இரையான் என்றார். அவன் உண்ணுவது உணவு அன்று, 'இரை' என்றார் (946). இவ்வாறே பலவற்றை உய்த்துணர்ந்து அறிதல் வேண்டும். 'பத்தடுத்த கோடியுறும்' என்பார்; இங்கேயெல்லாம் எண்ணிக் கொண்டிருக்க முடியாது. 'எழுபது கோடி யுறும்' — இப்படி மிகப்பல; இவை போன்றவை எல்லாம் உயர்வான சிறப்பினை மிகுதிப் படுத்திப் புரிந்துகொள்ள வைக்கின்ற முறைகளாகும்.

காலத்தினாலும், இடத்தினாலும், மக்களுடைய பழக்க வழக்கங்களினாலும், சமுதாய அமைப்பினாலும், கற்கின்ற கல்வியினாலும், வளர்ந்து வருகின்ற அறிவினாலும் அவ்வப்போது மாறுகின்ற செய்திகளை, முறைமைகளை ஆசிரியர் சொல்லுவதில்லை. என்றென்றும் எல்லா மக்களுக்கும் நிலைத்து நிற்பதையே சொல்லுகிறார். மனிதன் அறிவின் முதிர்ச்சியால், நுட்பத் தினால் கண்டு சொல்லுவன பல. அவை காலத்தினால் மாறுதல் அடையும். ஆனால், அறத்தின் அடிப்படையில் சொல்லப்பட்டவை என்றும் மாறாமல் இருப்பனவாகும்.

நம் அறிவு கொண்டு நாம் சிந்தித்து திருவள்ளுவனார் உள்ளத்திலனைப் புரிந்து கொள்ளுதல் வேண்டும். 'ஈகை'யின் சிறப்பினை அவர் வற்புறுத்துகிறபோது, 'மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' என்றார். இவ்வுலகில் நடந்து கொள்ள வேண்டிய நன்னெறி யினை எவ்வளவு அருமையாகப் போதித்து மனத்தில் பதிய வைக்கின்றார் என்று அறிதல் வேண்டும்.

கடமையினை அவ்வளவு அருமையாகக் கூறினார். இவ்வாறு வருகின்ற இடங்களை யெல்லாம் அறிவுகொண்டு உய்த்துணர வேண்டும். தேவர் அனையர் கயவர் என்று கயவர்களின் இழிவான குணத்தினைப் புலப்படுத்த உதாரணத்துடன் கூறினார். கயவர்கள் பழிபாவத்திற்குச் சிறிதும் அஞ்சாமல் மனம் போன போக்கில் நடந்து கொள்ளுவார்கள். இவ்வுலகில் ''வாழ வேண்டிய முறையில் வாழ வேண்டும்'' என்கின்ற எண்ணமே அடிப்படையாகவும் முதன்மை

யாகவும் இருக்க வேண்டும். இதுவே ஆசிரியரின் முடிபான நோக்கம். 'எழுபிறப்பும் உள்ளுவர்' என்பது போல ஆசிரியர் கூறுவதை நினைக்கும்போது, தாம் கூற வந்த அறநெறியினை மக்கள் உள்ளத்தில் ஊன்றிப் பதிய வைக்க இவ்வாறெல்லாம் கூறுகின்றார் என்பது புலனாகும். ஆசிரியர் அமைத்துக் காட்டுகின்ற முறைகளை நன்கு உய்த்துணர்ந்து புரிந்து கொண்டால், அவருடைய உள்ளத்தினை எளிதில் அறிதல்கூடும்.

குறட்பாக்களை நன்கு அறிந்து கொள்ளப் பரிமேலழகர்—அல்லது பிற உரையாசிரியர்களின் துணையினை வைத்துக் கொள்ள வேண்டும். அவற்றை நம்முடைய அறிவு கொண்டு சிந்திக்க வேண்டும். மாறுபட்ட கருத்துக்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். 'உரையில்லாமலேயே குறட்பாக்கள் விளங்குகின்றனவே' என்ற மயக்கத்தில் இருக்கக்கூடாது. கருத்துரை—பொழிப்புரை—இவற்றை மட்டும் படித்துவிட்டுக் 'குறட்பாக்களைப் புரிந்து கொண்டேன்' என்று கூறுவது, புகைவண்டி நிலையத்தில் ஊர்ப் பெயர்ப் பலகைகளைப் பார்த்துப் படித்துவிட்டு ஊர் முழுதும் பார்த்துவிட்டேன் என்பது போன்றதாகும்.

## நிலைத்து நிற்கும் நெறிகள்

திருவள்ளுவர் தமது நூலில் எக்காலத்திற்கும் எல்லா மக்களுக்கும் பொதுவாகவும் நிலைத்து நிற்பனவாகவுமுள்ள நெறிகளையே கூறி இருக்கின்றார். காலத்தினாலும் இடத்தினாலும் மக்களிடையே மாறி வருகின்ற பழக்க வழக்கங்களை ஆசிரியர் கூறுவதில்லை. சமுதாயத்தில் மக்களிடையே மாறுகின்ற பழக்க வழக்கங்கள் பலவுண்டு; அவற்றைக் குறட்பாவில் காண முடியாது. குற்றம் செய்தால் தண்டனையுண்டு என்பது பொது விதியாகும். காலத்தினாலும் தேசத்தினாலும் தண்டனை 'முறைகள்' மாறுபடக்கூடும். ஆதலால் அப்படிப்பட்டவற்றை ஆசிரியர் கூறுவதில்லை. பொதுவானவற்றையே எடுத்தோதுகின்றார்.

நோய் தீர்க்கும் மருந்தினைக் கூறும்போது என்றும் நிலைத்து நிற்கின்ற பொதுத் தன்மையான நுட்பங்களையே கூறுகின்றார். காலத்தினாலும் தேசத்தினாலும் அறிவு முதிர்ச்சியாலும் மருந்து முறைகளும் பிறவும் மாறுபடும். ஆதலால் காலத்தினால் மாறுபடுவனவற்றைத் திருவள்ளுவர் குறிப்பிட்டுக் கூறவில்லை.

## அறிவின் சிறப்பு

அறிவுடைமை யென்பதைப் பற்றி ஆசிரியர் இப்படித்தான் சிறப்பித்துக் கூறுகின்றார் என்று நாம் எளிதில் எடுத்துரைக்க இயலாது. 'அறிவுடைமை' என்ற அதிகாரத்தைக் கண்டு தெளிக. வருங்காலத்தில் எவ்வாறெல்லாம் நடைபெறும் என்பதை முன்கூட்டியே அறிவுடையவர்கள் தெரிந்து கொள்ளுவார்கள் என்று அவர் குறிப்பிடுகின்றார்.

**அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்**
**அஃது அறிகல்லா தவர்.** 427

அறிவுடைய பெருமக்களின் சிறப்பினை மிக உயர்த்திப் பேசி, அதுவே மக்களின் தலை சிறந்த பெருமைக்கு அடிப்படைக் காரணம் என்று உணர்ந்துகொள்ள வைக்கிறார்.

**அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்.** 430

இக்குறட்பாவில் 'எல்லாம்' என்பதைப் பன்முறையும் சிந்தித்து உணர வேண்டும். உலகம் பற்பல காரணங்களினால் காலம் செல்லச் செல்ல மாறிக்கொண்டே போகும். அறிஞர், சான்றோர், பெரியோர் என்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவர்கள் புதுமைகளைச் செய்தல் கூடும். எல்லாக் காலத்திலேயும் ஒரே மாதிரி இருத்தல் இயலாது. காலத்திற்கேற்பச் சிறந்த ஒழுக்கத்தில் நடந்து கொள்ள வேண்டும் என எக்காலத்திற்கும் பொருத்தமான உண்மைகளைக் கூறுகின்றார் என்பதற்கு இவையே சான்றாம். இவை போல் பிறவற்றையும் கண்டு தெளிதல் வேண்டும்.

**எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு**
**அவ்வது உறைவது அறிவு.** 426

**உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லார் அறிவிலா தார்.** 140

**செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து**
**இயற்கை அறிந்து செயல்.** 637

உலகம் எந்த முறையில் எப்படிப்பட்ட போக்கில் நல்வழி யறிந்து செல்லுகின்றதோ அவ்வாறு நாமும் நடந்து செல்ல வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். இவற்றை யெல்லாம் பொதுத் தன்மையுடன் சிந்துத்துப் பார்த்து நடந்து கொள்ள வேண்டும். ஒவ்வொன்றையும் அறிவு கொண்டு சிந்தித்துப் பார்த்து தெரிந்து கொள்ள வேண்டும். அறிவின் அடிப்படையில்தான் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்றவாறு நன்முறைகளைப் புரிந்து கொள்ள முடியும். இங்கே இரண்டு குறட்பாக்களைச் சிந்திப்போமாக!

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.** 423

**எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.** 355

## குறையுடைமை

எப்படிப்பட்ட மேதைகளாக இருந்தாலும், நுட்பமான மதி படைத்தவரென்று பலராலும் போற்றப்பட்டவராக இருந்தாலும் கூர்மையான அறிவுள்ளவர் என்று நாம் சிந்தித்துக் கொண்டிருந்தவராக இருந்தாலும் அப்படிப்பட்டவர் களிடத்திலும் அறியாமை இருக்கலாம் என்று ஆசிரியர் சுட்டிக் காட்டுகின்றார்.

**அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் தெரியுங்கால்**
**இன்மை அரிதே வெளிறு.** 503

ஆகவே மனித அறிவு கொண்டு ஆழ்ந்து சிந்தித்து உண்மையினைப் புரிந்துகொள்ள வேண்டியது நமது கடமையாகும். அது வளரக் கூடிய அறிவின் முதிர்ச்சிக்குத் தடையாய் இருக்கக் கூடாது என்பதே ஆசிரியரின் கோட்பாடு. ஆதலால் உலகப் போக்கில் மக்கள் நிலைகளின் மாறுதல்களைக் கண்டு கொண்டு நடப்பதே அறிவுடைமையாகும்.

## விருந்தோம்பல்

இல்வாழ்க்கையில் விருந்து வாழ்வதன் நோக்கம் பல அரிய செயல்களைக் கடமைகளாக மேற்கொண்டு செய்வதற்கே ஆகும். அவற்றுள் சிறப்பானதொன்று 'விருந்தோம்பல்'. இது துறவறம் மேற்கொண்டவர்களால் செய்யப்பட இயலாதது. 'விருந்தோம்பல்' என்பது புதிதாக நம்முடைய வீட்டிற்கு வந்தவர்களைப் போற்றி மகிழ்வித்தல் ஆகும். சிறந்த பெரியோர்கள், ஞானிகள், சான்றோர்கள் ஆகிய மேலோர்களை வரவேற்றுப் போற்றி உபசரிப்பதையே முதன்மையாக வைத்து, 'விருந்தோம்பல்' என்ற அதிகாரம் கூறப்பட்டது. விருந்து நேர்ந்த (இயன்ற) பொழுதெல்லாம்—வருகின்றவர்களை 'ஒக்கல்'—சுற்றத்தார்கள் (43) என்று கூறுவார்கள்.

விருந்தினர்களாக வருகின்ற மேலோர்களை விரும்பி வரவேற்பது மிக மிக உயர்ந்த செயலாகும். அத்தகையோரைப் போற்றுவதெல்லாம் நமக்குப் பெரிய நன்மைகளை தாமே உண்டாக்கிக் கொள்ளுவதாகும். விருந்தினர்களைப் போற்ற வேண்டுமென்று கூறுகின்ற ஆசிரியர் நிலத்திற்கு விதைக்கின்ற 'விதைநெல்' வைத்திருந்தாலும் அதையுங்கூட விருந்தினர்க்கு உணவாக்கிப் போடத் தயங்க மாட்டான் (85) என்ற முறையில் சிறப்பாக அமைத்துப் பெருமைப்படுத்திக் கூறுகிறார்.

## வேள்வி

'வேள்வி' என்பது உயர்ந்த குறிக்கோளோடு செய்யப்படும் செயல்; பயனளிக்கும் பணியாகும். அத்தகைய வேள்வியென்பது, இன்னதுதான் என்று விளக்க வந்த ஆசிரியர் இரண்டு குறட்பாக்களில், வேள்வி யென்பதன் கருத்தினைக் கூறுகின்றார்.

> **இனைத்துணைத்து என்பது ஒன்றில்லை விருந்தின்**
> **துணைத்துணை வேள்விப் பயன். 87**
>
> **பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி**
> **வேள்வி தலைப்படா தார். 88**

நல்ல எண்ணங்களைத் தூய்மையான மனத்திற்கொண்டு நல்ல செயல்களைச் செய்வதையே வேள்வி என்ற பெயரால் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். அன்றும், இன்றும், என்றும் நாட்டில் நடைபெறுகின்ற பழக்க வழக்கங்கள் பல இருக்கின்றன. இப்படிப்பட்ட பழக்க வழக்கங்களை மக்களிடையே இருந்து நீக்கி விடுதல் எளிதான காரியமல்ல; அறிவின் முதிர்ச்சியால் பயனற்ற செயல்கள் நீக்கப்படும். நீக்குவதற்கு அறிவுடையோர்கள் முயற்சி செய்தல் கடமையாகும். அறிவுள்ள பயனுள்ள செயல்கள் நடைபெற்றே ஆகவேண்டும்.

நோன்பு நோற்று அரிய செயல்கள் புரிந்து தவமியற்றுதல் துறவறத்தினை மேற் கொண்டுள்ள முனிவர்களின் இன்றியமையாக் கடமையாகும். அவ்வாறு துறவறத்திற்கு அரிய வழி முறைகளைச் சிறப்பாக வற்புறுத்திக் கூறுகின்ற ஆசிரியர், 'புலால் மறுத்தல்' என்ற அதிகாரம் ஒன்றை அமைத்து, உடலை வருத்திக் கடுந்தவம் மேற்கொண்டு தவமியற்றுபவர் களுக்குப் புலால் மறுத்தலை அருமையாகக் கூறுகின்றார். உலகியலில் பற்பல சூழ்நிலைகளில் வாழ்கின்ற மக்கள் இல்லறத்தார் அனைவருமே புலால் மறுத்து வாழ்தல் இயலாத ஒன்றாகும். இயலுமேல் அவர்களும் 'மறுத்தல்' என்பதனைப் பின்பற்றுதல் சாலச் சிறந்ததாக அமையும். உயர்ந்த நற்செயல்களும் நல்ல தூய மனமுமே அறம் என்பது ஆசிரியரின் உன்னதக் கொள்கை யாகும்.

### சடங்குகள்

வேள்வி (வேட்டல்) என்ற பெயரில் உயிர்களைக் கொல்லுகின்ற பழக்கங்களும் உண்டு! நெய் முதலியன சொரிந்து 'யாகங்கள்' செய்வதும் உண்டு! மனத்தின் தூய்மையினை மறந்துவிட்டுச் சடங்குகளான இச் செயல்களிலேயே மயங்கி இருப்போரும் உண்டு. தவத்தின் மேன்மையினைக் கூறுகின்றபோது உயிரைக் கொல்லாதிருக்க வேண்டுமென்பதையும் அப்படிச் செய்யாமல், 'மற்றபடி' நடந்துகொள்ளுவது பயனற்றது என்பதையும் குறிப்பால் உணர்த் தினார்.

> **அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**
> **உயிர்செகுத்து உண்ணாமை நன்று.** 259

### அருளாளர்கள்

அருளுடைமை என்பது தொடர்பு என்ற இணைப்பு இல்லாமல் இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்லுவதாகிய கருணையாகும். இல்லறத்தார்க்கு 'அன்புடைமை' கூறியது போல, 'அருளுடைமை' துறவறத்திற்குக் கூறப்பட்டது. இல்லறத்தாரும் அருளுடையவர் களாக இருப்பது இயலாதது ஆகும்; இருப்பின் சாலச் சிறந்ததாகும். 'அந்தணர் என்போர் அறவோர்' (30) என்ற குறட்பாவினைச் சிந்தித்து அறிதல் வேண்டும்.

ஊன் உண்பது கொலைப் பாவத்திற்கு அடிப்படைக் காரணமாகவும், ஊன் உண்ணல் என்பது நோன்பு நோற்றுத் தவம் செய்கின்ற அருளுடையவர்களுக்குப் பொருந்தாததாகவும் இருத்தலால் அதனை விளக்குதற்பொருட்டு அருளுடைமையும், அதனை அடுத்துப் புலால் மறுத்தலும் அமைக்கப்பட்டன. திருவள்ளுவர் கூறுகின்ற உயர்ந்த கருத்துரைகள் பற்பல துறை களை மேற்கொண்டு வாழ்க்கையினை நடத்துகின்ற மக்களுக்குச் 'சிறப்பாகவும்', 'பொது வாகவும்' அமைந்துள்ளதென்பதனை அறிவுகொண்டு அறிந்து, சிந்தித்துப் பின்பற்றி வாழ்தல் வேண்டும்.

எடுத்துக்காட்டாகத் 'தவம்' என்பது துறவறத்தினை மேற்கொண்டவர்களுக்கு மட்டுந்தான் பொருந்தும். 'விருந்தோம்பல்' என்பது, இல்லறத்தார்க்கு மட்டுந்தான் பொருந்தும். இது துறவிகளுக்கு இயலாதது. இவ்வாறு ஆங்காங்குக் கண்டறிந்து கற்றல், திருக்குறளை நன்கு புரிந்து கொள்ளுவதற்கு ஒரு முறை என்பதாக அமையும்.

## தானமும் தவமும்

துறவறத்தார்க்குத் தவமும் இல்லறத்தார்க்குத் தானமும் பொதுவான கடமை நெறி யாகக் கூறப்பட்டன. இல்லறத்தார் 'தானம்' செய்தல், துறவிகள் தவத்தினை மேற் கொண்டொழுகுதலுக்குச் சமமாகும். மழையின் பெருமையினைப் பேசவந்த ஆசிரியர் இந்த இருதிறத்தாரையும் சுட்டிக் காட்டுகின்றார்.

> தானம் தவம்இரண்டும் தங்கா வியனுலகம்
> வானம் வழங்காது எனின். 19

இதனால் இவ்விரண்டு வாழ்க்கை முறைகளும் தனித்தனிச் சிறப்பியல்புகளுடன் கூறப்பட்டன என்பது விளங்கும். அந்தந்த நெறிகளில் தவறாது நின்று ஒழுகுதலே அறிவுடைமையாகும். பொதுத் தன்மையுடன் கூறப்பட்டுள்ள நெறிகள், பண்புகள் எத்திறத்தார்க்கும் உடன் பாடானவை என்பதும் உய்த்துணர வேண்டும்.

## கட்டளைக்கல்

உலகில் வாழ்கின்ற பலர் தூய மனம் படைத்தவர்களாகவும், நற்செயல்கள் புரிபவர் களாகவும், தான தருமம் செய்பவர்களாகவும், பிறருக்கு இயன்றவரை உதவுபவர்களாகவும் இருக்கின்றனர். ஆனால் புலால் உண்ணுகின்ற பழக்கம் கொண்டவர்களாக இருக்கின்றனர். இவர்களின் மேன்மையினைச் சிந்திக்கும்பொழுது 'கருமமே கட்டளைக் கல்' (505) என்ற குறட்பாவினைச் சிந்தனை செய்து பார்த்தல் நலம் பயக்கும். இன்று உலகில் நடைமுறையில் பலர் வஞ்சனை யுள்ளம் படைத்தவர்களாகவும், இரக்கம் என்பது இல்லாதவர்களாகவும், மனத்தில் மாசு நிறைய உள்ளவர்களாகவும், கயமைக் குணம் படைத்தவர்களாகவும் இருக்கக் காண்கின்றோம். ஆனால் அப்படிப்பட்டவர்கள் பரம்பரைப் பழக்கத்தினாலும் தங்கள் விருப்பத்தினாலும் புலால் மறுத்து வாழ்கின்றார்கள். "அருளாதான் செய்யும் அறம்" (249) என்பதனைச் சிந்தித்து இத்தகையவர்கள் கணக்கிடப்படுதல் வேண்டும்.

## பகை மனம்

திருவள்ளுவர் 'மாணார்கள்' என்று சிலரைக் குறிப்பிடுகின்றார். இவர்கள் பகைமை யுள்ளம் கொண்டவர்கள். மனம் பொருந்திப் பிறரிடம் பழக மாட்டார்கள். ஆனால் கல்விக் கேள்விகளில் சிறந்தவர்களாக இருக்கக்கூடும். நல்ல பல நூல்களைக் கற்றிருப்பார்கள். ஆனால் மனம் நல்லபடியாக இருக்காது. இதனால் நல்ல நூல்களைக் கற்றுவிட்டாலும் தீய மனம் கொண்டவர்கள் நல்லவர் ஆக மாட்டார்கள் என்று ஒரு குறட்பா பேசுகின்றது.

> பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்
> ஆகுதல் மாணார்க்கு அரிது. 823

மனம் தூய்மையில்லை என்றால், வேறு எந்த முறைகளைக் கொண்டும் அவர்களைச் சிறந்தவர்கள்—நல்லவர்கள்—என்று கருதுதல் தவறு எனக் புலப்படுத்தப்பட்டது. இரண்டொரு

குறட்பாக்களைச் சிந்தித்துப் பார்த்தல் பொருத்தமாகும்; நன்மை பயப்பதுமாகும்; உண்மையறிந்து கொள்ள உதவுவதும் ஆகும்.

> மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
> சொல்லினால் தேறற்பாற்று அன்று. 825

திருக்குறளில் பொதுப்படக் கூறப்படுபவை என்றும் சிறப்பாகச் சொல்லப்படுபவை என்றும் வருகின்றவற்றை நன்கு சிந்தித்து அறிதல் வேண்டும்.

### படிப்பவர்கள்

நூல்களைப் படிப்பதை பழக்கமாகக் கொண்டவர்களைப் 'பார்ப்பார்' என்ற சொல்லினால் ஆசிரியர் குறிக்கின்றார். 'வேதம்' என்று சொல்லப்படுபவை 'ஓத்து' என்று சொல்லப்படும். அவற்றை 'மறை நூல்கள்' என்றும் கூறுவார்கள். ஓதிக் கொண்டிருக்கின்ற நூல்களை மறந்தாலும் மீண்டும் படித்துக் கொள்ளலாம். ஆனால் மக்கட் பிறவி எடுத்தவர்கள், அப்பிறவிக்கு ஏற்றபடி சிறப்பாக ஒழுகவில்லையென்றால்—நடந்து கொள்ளவில்லையென்றால் இழிந்த நிலையடைந்து கெட்டுவிடுவார்கள். நூல்களை ஓதிக் கொண்டிருப்பதனாலேயே ஒழுக்கம் சிறந்தவர்களாகிவிட மாட்டார்கள் என்பது உணர்த்தப்பட்டது.

> மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
> பிறப்புஒழுக்கம் குன்றக் கெடும். 134

நூல்களைப் படிப்பவர்களை ஆசிரியர் பார்ப்பார் என்ற பெயரால் அழைக்கின்றார். ஆதலால் 'பார்ப்பான்' என்ற சொல் இக்குறட்பாவில் காணப்படுகிறது. ஒழுக்கமே முக்கியம் என்பது வற்புறுத்தப்பட்டது. 'பார்ப்பான், பார்ப்பார்' என்பன காரணப் பெயர்களாக அமைந்துள்ளனவென்று கொள்ளுதல் வேண்டும்.

> அருள்கருதி அன்புடையர் ஆதல் பொருள்கருதிப்
> பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல். 285

### சிறப்புக்குக் காரணம்

எல்லா உயிர்களுக்கும் பொதுவாகிய பிறப்புத் தன்மை ஒன்றேயாகும். செயல்களின் வேறுபாட்டால்தான் பெருமை சிறுமைகளைக் கண்டு கொள்ள வேண்டும்.

> பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்புஒவ்வா
> செய்தொழில் வேற்றுமை யான். 972

மக்கள் பண்பும் ஒழுக்கத்தின் மேன்மையும் நடைமுறைச் செயல்களும் உணர்த்தப்பட்டன. மேலானவர்கள்—மேலான குடிமக்கள்—என்று உலக வழக்கில் கூறுவதுண்டு. சிலரைத் தாழ்வான, சிறுமையான குடியில் பிறந்தவர்கள் என்று சொல்லுவதுண்டு. கல்வி கற்று அறிவு பெற்று வாழ்பவர்களைத்தான் மேலானவர்கள் என்று கூறவேண்டும் என்பதாயிற்று.

**மேல்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்**
**கற்றார் அனைத்திலர் பாடு.** 409

நற்பணிகள் புரிகின்றவர்களையே மேலானவர்கள் என்று கூறவேண்டும். தாங்கள் இயற்கையில் உயர்ந்த இடத்தில் இருக்கின்ற வாய்ப்பு கிட்டியதனாலேயே மேலானவர்கள் ஆகிவிட மாட்டார்கள்! இருப்பது சிறியதான இடம்—தாழ்வான இடம் என்று சொல்லிக் கொண்டு அருஞ்செயல் புரிபவர்களைச் சிறியவர்கள் என்று சொல்லுதல் கூடாது.

**மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்**
**கீழல்லார் கீழல் லவர்.** 973

செயல்களினால் மனத் தூய்மையினால் உயர்ந்தவர்களை 'அந்தணர்கள்' என்று ஆசிரியர் அழைக்கின்றார். அதன் காரணத்தையும் 'அந்தணர் என்போர்' (30) என்ற குறட்பாவினால் மிகமிகத் தெளிவாகக் குறிப்பிட்டார்.

**கோல்**

முனிவர்களாகிய அந்தணர்கட்கும் அவர்களின் நெறியாகிய அறத்திற்கும் ஆதியாக—அடிப்படையாக இருப்பது செங்கோலாகும்.

**அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்**
**நின்றது மன்னவன் கோல்.** 543

அந்தணர்கள் அறநெறியில் நின்று உலகிற்கு நல்வழியுணர்த்துபவர்கள் ஆகையால் அவர்களின் பெருஞ்சிறப்பினை நாட்டின் தலைவனாகிய மன்னவனைச் சுட்டிக்காட்டி உணர்த்தினார். உலகின் செழுமைக்கு அடிப்படையாக இருப்பது மழையேயாகும். மழையின் சிறப்பினையும் இன்றியமையாத் தன்மையினையும் 'வான்சிறப்பு' என்ற அதிகாரம் நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

நாடு செழுமையாக இருப்பதற்கு முதன்மையான காரணம் நல்ல விளைச்சலாகும். நல்ல விளைச்சல்தான் நாட்டின் நல்வாழ்வுக்கு முதற் காரணமும் அடிப்படைக் காரணமுமாகும். பூமியில் முளைத்து வளர்பவை நன்றாக இருந்தால் விலங்கினங்கள் மேய்ந்து நல்லபடியாக இருக்கும். விலங்கினங்கள் புல் முதலியவற்றை மேய்ந்து உயிர் வாழ்வனவாகும். மழை இன்றேல் விளைச்சல் குன்றி விலங்கினங்கள் வாடும். பசுக்கள் நன்றாகப் பால் கொடுக்காது என்பதனைச் சுட்டிக்காட்டி, மேய்வதற்குப் புல் விளையாது என்பதை உணர்த்தி, மழை பெய்யாமை என்கின்ற கொடுமைக்கு நாட்டுத் தலைவனின் கொடுமையான ஆட்சியே காரணம் என்று அமைத்தார்.

**ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
**காவலன் காவான் எனின்.** 560

மழையில்லையென்றால் புல்லும் முளைக்காது, என்பதனைப் "பசும்புல் தலை காண்பரிது" (16) என்ற குறட்பாவினால் மெய்ப்பித்தார். பசுமையாக, செழிப்பாக ஒரு நாடு—தேசம்—இருக்க வேண்டும் என்றும் — அப்படியிருப்பதனை உணர்ந்து கொள்ளுவதற்கு உய்த்துணர

வைக்க வேண்டியே 'ஆபயன் குன்றும்' என்று வெளிப்படையாக விளக்கினார். காவலனின் நல்லாட்சி இல்லையென்றால் கொடுமைதான் விளையும் என்பது உய்த்துணரத் தக்கது.

## தொழிலாளர்கள்

தொழில் வளர்ச்சியே ஒரு நாட்டின் தலையாய முன்னேற்றத்திற்கு அடையாளம் என்பதனை அறிவோம். நாட்டில் நல்லாட்சி நடைபெறவில்லையென்றால் தொழிலாளர்களும் நசிந்து விடுவர் என்பதற்காகவே "அறுதொழிலோர் நூல் மறப்பர்" என்று கூறினார். உலகில் எக்காலத்திலும் நடைபெறுகின்ற தொழில் முறைகளை ஆறு வகைகளாகப் பொதுப்படக் கணக்கிட்டுக் கூறுவார்கள். அறுவகைப்பட்ட தொழில் புரிபவர்களை உழவர், வணிகர், ஆசிரியர், கம்மியர், கலைஞர், மருத்துவர் என்று கணக்கிட்டு அமைத்தார்கள். பிற யாவும் இவைகளுள் அடங்கும். நல்லாட்சி நடைபெறும் நாட்டில் இவர்கள் சிறந்து விளங்குவார்கள். 'பெற்றோர், மனைவியர், மக்கள்' ஆகிய மூன்று வகையினரையும் 'இயல்புடைய மூவர்' (41) என்று கூறியது போல 'அறுதொழிலோர்' என்று சொல்லி வைத்தார்.

அறுதொழிலோர் என்பதற்கு அந்தணர் என்று பொருள் கண்டு கூறுவாரும் உள்ளனர். 'அந்தணர் என்போர் அறவோர்' என்று கூறியதாலும், 'அந்தணர் நூற்கும் அறத்திற்கும்' என்று வேறு இடத்தில் தெளிவு படுத்தியதாலும், அறுதொழிலாளர்களை அந்தணர்கள் என்று கூற நினைத்தல் பொருந்தாது. ஆசிரியர் அவ்வாறு நினைத்திருப்பாரேயானால், 'அந்தணர் நூற்கும்' என்றும் கூறி, 'அறுதொழிலோர் நூல் மறப்பர்' என்றும் கூற மாட்டார். 'ஆபயன் குன்றும் அந்தணர்கள் நூல் மறப்பர்' என்பது போலவே கூறியிருக்கலாம்! ஆதலால் சிந்தித்து உண்மையினை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

## நாட்டுத் தலைவன்

மன்னன், வேந்தன், அரசன், காவலன், இறைவன் என்பன போன்ற பல சொற்களால் நாட்டின் தலைவனைக் குறிப்பிடுகின்றார் திருவள்ளுவர். அஃதாவது ஆட்சிக்குத் தலைமை பூண்டிருப்பவனைக் கூறுகின்றார். முடிசூடிய மன்னர்கள் ஆட்சியெப்படி இருக்குமென்றால், 'மன்னர் மகன்தான் மன்னனாக' வருதல் வேண்டும். இம்மரபை—அரச பரம்பரையினைத் திருவள்ளுவர் குறிப்பிடவில்லை. மன்னர் மகன் மன்னனாக வர வேண்டுமென்றும் கூறவில்லை.

உயர்தரமான பண்புகள், தன்மைகள், ஆற்றல்கள், தனிப்பட்ட திறமைகள் கொண்டவனே நாட்டுத் தலைவனாக இருப்பதற்கு உரியவன் என்பதே ஆசிரியரின் மேலான கருத்து. அப்படிப்பட்ட ஒருவனைக் குறிப்பிடுகின்ற போது மன்னன், வேந்தன், காவலன் என்பன போன்ற சொற்களால் அழைக்கின்றார். குடிமக்களுடன் ஒத்து இணைந்து செல்லுகின்ற பரந்த நோக்கத்தால் இருக்க வேண்டிய ஆட்சியே ஆசிரியரின் கோட்பாடாகும். 'முடியாட்சி' என்ற முறையினைச் சிந்திக்கின்ற போது பண்புகளும், திறமைகளும் இன்ன பிறவும் இல்லாவிட்டாலும் 'மன்னர் மகன் மன்னனாக' வந்துவிடக் கூடும். 'இறைமாட்சி' என்ற அதிகாரத்தினைச் சிந்திக்கின்றபோது ஆட்சிக்கு — தலைமைக்கு வருகின்றவனைப்

பரம்பரையானவனாகக் கூறாமல், பண்புகள் பலவும் நிறைந்த ஆற்றலாளனாகவே கூறுகின்றார்.

வேந்தன், அரசன், மன்னன் என்ற சொற்களைக் கொண்டே முடியாட்சியைக் கூறினார் என்று கொள்ளுதல் கூடாது. 'இறைவன்' என்றே மன்னனை அடிக்கடி கூறுவார். தலைவன், முதல்வன் என்றுதான் ஆசிரியர் குறிப்பிட்டார். பெரும்பாலான கடமைகளையும் தனித் தன்மைகளையும் தனக்கென்றே கொண்டு, தேசத்திலும் நாட்டிலும்—இக்காலத்தில்—குடி ஆட்சியில்—ஆட்சி புரிகின்ற 'பிரதமர்', 'முதலமைச்சர்' இவர்கள் பதவியில் வைத்து மன்னர்களைக் கருதிப் பார்த்தல் பொருந்தாததாகி விடாது. இவர்களே அமைச்சர்களையும் பிறரையும் வைத்துக் கொள்வார்கள். ஆசிரியர் வள்ளுவனாரின் இத்தகைய உட்கருத்து விளங்குவதற்கு இச்சிந்தனை பெரிதும் பயன்படும்.

### மக்கள்

'குடி' என்ற சொல் நாட்டில் வாழ்கின்ற குடி மக்களை உணர்த்தும். நாட்டின் முக்கிய உறுப்புக்களை 'ஆறு' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

> படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு. 381

இக்குறட்பாவில் 'குடி' என்பது மக்களை உணர்த்துகிறது. மக்களுக்குச் சேவை செய்கின்ற தலைவர்களை, மக்களாட்சி நாட்டில் பெரிதும் காணுகின்றோம்.

### மக்கள் தலைவர்கள்

குடி மக்களுக்குப் பாடுபடுபவர்களை மிகமிக உயர்த்திக் கூறுவது 'குடி செயல்வகை' என்ற அதிகாரம். மக்களுக்குப் பாடுபடுகிறவன் உடம்பு பல துன்பங்கட்கு ஆளாகும் என்று ஆசிரியர் இப்பகுதியில் கூறுகின்ற உண்மை பன்முறையும் சிந்திக்கத்தக்கது. 'உடம்பு' (1029) என்று கூறப்படுகின்ற குறட்பா இதனை உணர்த்தும். நாட்டு மக்களுக்குப் பாடுபடுகின்றவன், நேரம் காலம் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது என்று கூறுகிறார். 'இல்லை பருவம்' (1028) என்ற குறட்பா இதனை உணர்த்துகிறது. பொதுத் தொண்டு செய்பவன் மானம் மரியாதை களைக் கருதிக் கொண்டிருக்கக் கூடாது (1028) என்றும் கூறுகின்றார். இயற்கையும் அப்படிப்பட்ட உயர்ந்த கோட்பாடு உள்ளவனுக்குத் தானாகவே வந்து உதவும் என்கின்றார். 'தான் முந்துறும்' (1023); குடிமக்களுக்குச் சேவை புரிந்து வாழ்பவனை இந்த உலகத்தவர் தங்கள் சுற்றமாகக் கருதிச் சூழ்ந்து கொண்டிருப்பார்கள் என்று கூறுகின்றார். குடும்பத்திற்கும், பிறந்த குடிக்கும், வாழ்கின்ற குடிமக்களுக்கும் அயராமல் உழைக்க வேண்டிய அரும்பணி கூறப்பட்டது.

### மழை வராது

நாட்டுத் தலைவனாகிய மன்னன் முறை கெட்டு நாட்டினை ஆட்சி செய்வானாயின் அவனது நாட்டில் காலத்தோடு பெய்ய வேண்டிய பருவ மழை தவறும்; மேகம் மழை

பெய்தலைச் செய்யாது. இக்குறட்பா சிந்தனைக்குரியது. முறை கெட்ட ஆட்சிக்கும் மேகங்கட்கும் யாது தொடர்பு என்பதனை அறிதல் வேண்டும்!

முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல். 559

இந்த இடத்தில் மற்றுமொரு குறட்பாவினையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நல்ல நெறிகளைக் கூறும் நூல்களின் முறைப்படி செங்கோலினைச் செலுத்தும் மன்னவனுடைய நாட்டில் பருவ மழையும் குறையாத விளைச்சலும் சேர்ந்து நிற்கும். பருவ மழை பெய்தால் நல்ல விளைச்சல் உண்டாகும் என்பது வெளிப்படையான உண்மை (545).

### கண்ணீர்

மக்கள் அழுத கண்ணீர் செல்வத்தினைத் தேய்க்கும் (555) என்று கூறினார். இதன் காரணம் என்னவென்பதனை நன்கு புரிந்து கொள்ளுதல் வேண்டும். மக்கள் அவதிப் படுவதால் நாட்டில் குழப்பம் மிகுதிப்பட்டு ஆட்சிக்கு அழிவு ஏற்பட்டு அந்த நாட்டு மன்னனுடைய செல்வமனைத்தும் அழியும் நிலைமை, நாட்டில் — மக்கள் புரட்சியால் உண்டாகிவிடும் என்று கூறுவாரும் உண்டு. இது சிந்தனை செய்ய வேண்டிய கருத்தே யாகும். இத்துடன் மற்றுமோர் கருத்தும் கருதற்பாலதாகும். மக்கள் மனவேதனைக்கு அழிக்கும் ஆற்றல் உண்டு; மனமகிழ்ச்சிக்கு ஆக்கும் ஆற்றல் உண்டு.

### முனிவர்கள்

நமக்குள் ஐந்து பூதங்கள் உள்ளன. வெளியுலகில் இருக்கும் ஐந்து பூதங்கள் நிலம், நீர், தீ, காற்று, வான் என்று பொதுப்படக் கூறப்படும். நமக்குள் இருக்கும் ஐந்து பூதங்களுக்கும் வெளியில் இருக்கும் ஐந்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. நாள் தோறும் ஐந்து பூதங்களும் தொடர்பு கொண்டவையாக இருந்து வருவது வெளிப்படையான உண்மையாகும். நாம் வேறு, வெளியுலகம் வேறு அல்ல! உலகிற்குக் குளிர் காலம் வந்தால் நமக்கும் குளிரும். வெப்ப நிலை வந்தால் நமக்கும் உடம்பு வெப்பமாக இருக்கும். இவ்வாறு பலப்பல கூறலாம். சிந்தித்து அறிய வேண்டிய நுட்பங்கள் பற்பல இருக்கின்றன.

புற உலக விஞ்ஞானிகள் இந்த ஐந்து பூதங்களின் துணை கொண்டு உலகமே வியக்கத்தக்க செயல்களைப் புரிகின்றார்கள். ஐந்து பூதங்களையும் தமக்குத் துணையாக அமைத்துக் கொண்டு வெளியுலக விஞ்ஞானிகள் ஆற்றல் மிக்க அதிசயங்களைச் செய்கின்றார்கள். பஞ்ச பூதங்களும் தங்கள் விருப்பப்படி செயல் புரியுமாறு செய்கின்றார்கள். இன்றேல், விமானங்கள், கப்பல்கள் போன்ற பெரும் சாதனைகள் பல நிகழ்தல் கூடுமா?

ஐந்து பூதங்களையும் அகத்திலே—உள்ளுக்குள்ளே—வசப்படுத்திச் சாதனைகளைப் புரிகின்றவர்கள் மெய்ஞ்ஞானிகள். இந்த ஒருமனப்பட்ட மெய்ஞ்ஞானிகளால் தமக்குள் இருக்கும் ஐந்து பூதங்களின் துணைகொண்டு மெய்ஞ்ஞான முறைகளின் பயிற்சியால் வெளி

யுலக ஐம்பூதங்களையும் ஏவல் கொள்ள முடியும். இது ஒருமனப்பட்ட பல நுட்பமான கருத்துக்கள் அடங்கிய உண்மையாகும். இப்போதுகூட சாதாரணமான பயிற்சியுள்ளவர்கள் தண்ணீரின் மீது மிதந்து கொண்டிருப்பதும், பூமிக்குள் பல நாட்கள் இருப்பதுமான நிகழ்ச்சிகளைக் காணுகின்றோம் பலர் பூதங்களின் துணையினால் தக்க பயிற்சி செய்து, இயற்கைப் பூதங்களில் ஒவ்வொன்றினைக் கட்டுப்படுத்தித் தங்களுக்கு ஏவல் புரியுமாறு செய்கின்றனர். இதனால் மக்கள் உள்ளத்தில் இருக்கும் உணர்ச்சிக்கு ஐந்து இயற்கைப் பொருள்களும் இணைந்துள்ளன என்பது வெளிப்படையாகும்.

### கொடுங்கோல்

இந்த அதிகாரத்தில் காணப்படுகின்ற குறட்பாவொன்று, முறை கெட்டு ஆட்சி நடத்துகிறவன் நாட்டில் மழை பெய்யாது என்றும் கூறுகிறது.

> **முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
> **ஒல்லாது வானம் பெயல்.** 559

இந்த அதிகாரத்தில் மற்றொரு நுட்பத்தினை உணர்ந்து கொள்ள வேண்டும். மழையின் பெருமையினை 'வான் சிறப்பு' அதிகாரம் கூறுகிறது. மழையின் சிறப்பினை வள்ளுவர் கூறியிருப்பது பன்முறையும் சிந்திக்கத்தக்கது.

> **துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன்**
> **அளியின்மை வாழும் உயிர்க்கு.** 557

இந்தக் குறட்பாவினை 'முறை கோடி' (559) என்ற குறட்பாவுடன் கருதுதல் வேண்டும். நாட்டில் நடைபெறும் ஆட்சிக்கும் மழை பெய்தலுக்கும் எவ்வாறு தொடர்பு உண்டு என்பதனை நன்கு உணர்ந்தறிதல் வேண்டும். காட்டாக, கொடிய ஆட்சியினைக் **கொடுங் கோன்மை** என்ற அதிகாரம் கூறுவது போல நல்லாட்சியினைச் **செங்கோன்மை** என்ற அதிகாரம் குறிப்பிடுகின்றது.

### செங்கோல்

மக்கள் உள்ளம் நைந்து துன்பப் பட்டால்—அடிப்படைக் காரணங்களினால்—நாடு கேடடையும் என்று அறிந்ததைப் போல, நல்லாட்சி நடைபெறுமேயானால் மக்கள் உள்ளம் குளிர்ந்து மகிழ்ச்சி பெருகும். அந்த நாட்டில் நல்ல மழையும் விளைச்சலும் உண்டாகும் என்று கூறுகின்றார்.

> **இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட**
> **பெயலும் விளையுளும் தொக்கு.** 545

மழை பெய்தலுக்கும் நல்லாட்சிக்கும் எவ்வாறு தொடர்பு உண்டு என்பதனை உய்த்துணர வேண்டும். வான்சிறப்பு என்ற அதிகாரத்தில் பேசிய மழையின் சிறப்பினைச் 'செங்கோன்மை' என்ற இந்த அதிகாரத்தில் மற்றுமோர் குறட்பாவில் சுட்டிக் காட்டியிருப்பதன் பேருண்மையை ஆய்ந்துணர வேண்டும்.

வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழும் குடி. 542

மறை பொருளாக இருக்கின்ற பற்பல உண்மைகளை முதிர்ந்த அறிவு படைத்த முனிவர்கள் உணர்த்தியுள்ளார்கள் என்பதனையும் சிந்தித்துக் கண்டு கொள்ளுதல் வேண்டும்.

நீத்தார்கள்

ஐந்து பூதங்களின் விளக்கம், விரிவு, செயல், உலக அமைப்பு என்பவற்றையெல்லாம் சுருக்கமாக ஒரு குறட்பா அமைத்துக் காட்டுகிறது.

சுவைஒளி ஊறுஓசை நாற்றம் என்றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு. 27

பற்பல அரிய உண்மைகளை உணர்ந்து கொண்டால்தான் குறட்பாவின் நுட்பமான செய்திகள் நன்கு தெளிவாக விளங்கும் என்பது அறிஞர்கள் கண்ட உண்மையாகும். மன உறுதிப்பாடு அரிய செயல்களைச் செய்யும் என்பது வெளிப்படையான செய்தியாகும். ஒரு மனப்பட்டு உறுதியாகத் திடமாக இருப்பதில் பெண்கள் இயல்பாகவே ஆற்றல் பெற்றவர்கள் என்பதனை ஒரு குறட்பா குறிக்கின்றது.

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டுஒழுகின் உண்டு. 974

மக்கள் பெருமையுடன் வாழவேண்டும் என்று பொதுப்படக் கூறுகின்ற முறையில் இக்குறட்பா உள்ளது. ஆண்களைவிடப் பெண்களுக்கு மனவுறுதிப்பாடு நிறைந்துள்ளதென்பதற்குக் காரணம் அவர்களிடம் அரிய ஆற்றலான கற்பு இருப்பதே ஆகும். கற்பின் பெருமையினைக் குறட்பா வொன்று கூறுகின்றது.

கற்பு

பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்புஎன்னும்
திண்மை உண்டாகப் பெறின். 54

இக்குறட்பா ஒருமனப்பட்டு—பிறனுடைய எண்ணமே மனதில் புகாத கற்புள்ள பெண்களைக் குறித்தது. மனத்திண்மை 'கற்பு' என்று தெளிவுபடுத்தப்பட்டது. 'தன்னைக் கொண்ட கணவனே தன்னுடைய உள்ளத்தில் இருப்பதற்கு உரிய ஒருவனாவான்' என்ற திண்மைதான் 'கற்பு' என்று உணர்த்தப்பட்டது. இந்தக் கற்பினைவிட அதாவது — இந்தக் கற்பு என்கின்ற திண்மையுடன், மற்றொன்றினையும் சேர்த்து அடுத்து வருகின்ற குறட்பா கூறுகின்றது.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதுஎழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. 55

இக்குறட்பா கற்பினை மட்டும் கூறுவதன்று. கற்பு முந்தைய குறட்பாவில் விளக்கப்பட்டு விட்டது. கற்பு என்கின்ற திண்மையுடன் மற்றொரு உயர்ந்த கருத்தினையும் இக்குறட்பா

கூறுகின்றது. இதனை இரண்டாவது உறுதிப்பாடு என்று சொல்லுவதாகக் கொண்டாலும், இந்த உறுதிப்பாடு மிகவும் மேம்பட்டதாகக் கொள்ளப்படுதல் வேண்டும். உலக மக்கள் அனைவரும் வழிபட வேண்டிய இறைவனைப்பற்றிக் 'கடவுள் வாழ்த்து' என்ற முதலாவது அதிகாரத்தில் விளக்கமாகக் கூறப்பட்டது. அவனே வாலறிவன்; அவன் நற்றாள் தொழ வேண்டும் என்று வள்ளுவர் கூறினார்.

இத்தகைய தெய்வங்களைக் கற்பனைக்கேற்றவாறு பற்பல பெயர்களில் வழங்கி வருகிறார்கள். இத்தகைய தெய்வங்களை—நமது விருப்பத்தினை நிறைவேற்றி வைப்பவை என்று கூறப்படுகின்ற தெய்வங்களைக் கற்புடைய மகளிர் வணங்கக் கூடாது என்று கூறுகின்றார். அனைத்திற்கும் தனது கணவனே உரியவன் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. வேறு எத்தெய்வத்தினையும் தொழுதல் கூடாது என்கின்ற உறுதிப்பாடு மிகமிக உயர்ந்ததாகும். அவ்வாறு இருப்பதையே, 'யோகம், ஞானம்' என்று பேசப்படுகின்ற தியானப் பயிற்சியின்பால் வைத்துக் கணக்கிடுகிறார்கள். இயல்பாகவேயுள்ள பெண்களாக அனைவரும் வாழ்வது வியப்பல்ல; கற்பு என்பதன் விளக்கத்தினைக் கண்டோம். பலரும் கற்புள்ள பெண்டிராக இருப்பர்; ஆனால் பற்பல தெய்வங்களைக் கும்பிட்டுக் கொண்டிருக்கின்ற பழக்கம் கொண்டிருப்பர். கற்புள்ள பெண்கள், இறைவனை—வாலறிவனை அனைவரும் தொழுதல் போல் தொழ வேண்டும். வேறு எந்தத் (தேவாதி தேவர்கள் எனப்படுகின்ற) தெய்வங்களையும் தொழக் கூடாது என்றார். இதனைக் கூறுகின்ற குறட்பா (55), பெண்களின் ஆற்றல் (சக்தி) மிகுந்து விளங்கும் என்றும், அத்தகையோர்களுக்கு ஐந்து பூதங்களும் கட்டுப்பட்டு (வயப்பட்டு) ஏவல் புரியும் என்றும் கூறினார். அதற்காகவே 'பெய்யெனப் பெய்யும் மழை' (55) என்று பெருமைபடுத்திக் கூறினார்.

கற்புடைமை என்ற பண்புடன் வேறு சிறந்த ஒருமைப்பாடும் இருக்க வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது. கற்பு நிறைந்த பெண்களாக இருக்கும் மகளிர் அனைவரும் வேறு ஏதேனும் தெய்வங்களைப் பழக்க வழக்க வாசனையால் தொழாமல் இருப்பதென்பது அரிது என்பதும் உய்த்துணர வைக்கப்பட்டது.

கற்பு நிறைந்த மகளிர் பிற தெய்வங்கள் என்பவற்றைத் தொழ மாட்டார்கள் என்பதற்கு விளக்கம் கூறுகின்ற முறையில் கணவன்மார்களைத் தொழுவார்கள் என்று கூறி வைத்தார். கணவன்மார்களைத் தொழுவதும் எழுவதும் என்பவை நற்பண்புகளாகும். கற்புடைய அம்மகளிர் பிற தெய்வத்தினைத் தொழாதிருக்கும் பண்பாடு தலையானது என்பது குறிப்பால் கூறப்பட்டது. அறிவுடைய மக்கள் நன்கு சிந்தித்து உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

### தெய்வங்கள்

'தெய்வங்கள் பலப்பல சிந்தை செய்வாரும்' — நலிதரு சிறிய தெய்வங்கள் என்று நாட்டிலே பல பெயர் நாட்டி' என்பன போன்ற சொற்கள் வடலூர் வள்ளலாரால் அருளப் பட்டவையாகும். 'தெய்வம்' என்கின்ற சொல்லினைத் திருவள்ளுவர் 'கடவுள் வாழ்த்து' என்ற முதலாவது அதிகாரத்தில் சொல்லவேயில்லை என்பது பெரிதும் சிந்திக்க வேண்டியதாகும்.

தெய்வத்தைப் பற்றி ஆசிரியர் திருவள்ளுவனார் தமது நூலில் ஆறு இடங்களில் கூறியிருக்கின்றார். இப்பகுதியில் பிறிதோரிடத்தில் அதைக் கண்டு தெளிக.

இயல்பாக ஆறறிவு படைத்த மனித ஆற்றலினைவிடக் (சக்தி) கொஞ்சம் கூடுதலாகப் பெற்றிருப்பதனைத் 'தெய்வம்' என்று கூற வேண்டும். பயிற்சியினாலும் இயற்கையினாலும் இந்த ஆற்றல் உண்டாவதாலும், இந்த ஆற்றல் சிறிது காலம் இருந்து போவதும் உண்டு. இயற்கை, ஊழ் இவைகளைத் 'தெய்வம்' என்று கூறுவதும் உண்டு. 'தெய்வத்தான் ஆகாது எனினும்' (619) என்றொரு குறட்பா சொல்லுகிறது. தெய்வம் தானே வந்து உதவும் என்றொரு குறட்பா, 'தெய்வம் மடிதற்றுத் தான்முந்துறும்' (1023) என்றவாறு குறிக்கிறது. தெய்வம் என்பது இயற்கையென்றே பொருளாகும்.

தெய்வங்களைத் 'தேவாதி தேவர்கள்' என்றொரு பழங்காலப் பேச்சு நடைமுறை வழக்கில் பேசப்படுவதுண்டு. அக்காலத்திலும் உண்டு; எக்காலத்திலும் உண்டு! இவையெல்லாம் திருவள்ளுவர் விளக்கம் தந்துள்ள 'கடவுள் வாழ்த்து'ப் பகுதியிலுள்ள இறைநிலையுடன் சிறிதும் ஒப்பிட்டுப் பேசக் கூடாதவையாகும். இத்தகைய தெய்வங்களைத் தொழுகின்ற பழக்கங்கள் இருந்து வருவது வரலாறாகும். 'கேட்ட வரமளிக்கும் கீர்த்தியுள்ள தெய்வங்காள்' என்று பழம் பாடலொன்றும் கூறுகிறது. குழந்தைப் பேறு இல்லாதவர்கள், குறிப்பாகப் பெண்கள்— இவ்வாறான தெய்வங்களைப் போய் வேண்டிக் கொள்வதுண்டு என்று பழங்கால உலகியல் வழக்கு கூறுகிறது.

### மூன்று அதிகாரங்கள்

பெண்களைப் பற்றிக் கூறும் அதிகாரங்கள் சிந்திக்கத்தக்கவை. கற்பு நிறைந்த மனைவியைப்பற்றிக் கூறுவது 'வாழ்க்கைத் துணைநலம்' என்ற அதிகாரம். மனைவியின் பெருங் கடமை, இனிமை, பெருமை, அருமை முதலியனவற்றையெல்லாம் இந்த அதிகாரம் கூறுகின்றது. கணவனுக்கும் — இல்லத்திற்கும் எவ்வளவு இன்றியமையாதவள் என்பதெல்லாம் இந்த அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளன.

சிற்றின்பம் காரணமாக, மனைவிக்கு அடிமையாகி ஏவல் செய்கின்றவர்களாக சில கணவன்மார்கள் மாறிவிடுவதுண்டு. சில மனைவிமார்கள் கணவன்மார்களை அடிமைகள் போலவே நடத்துவதும் உண்டு. அளவு கடந்த இன்ப வேட்கையால் மனைவி ஏவுகின்றபடியே நடப்பவர்களும் உண்டு. இப்படிப்பட்ட குற்றங்களைப் 'பெண்வழிச்சேறல்' என்ற அதிகாரம் கூறுகின்றது. அறிவுடைய நற்பண்பு நிறைந்த வாழ்க்கைத் துணைவியரின் கருத்துக்களைக் கேட்கக் கூடாது என்று கூறவில்லை! மூன்றாவது, கொடிய விலைமாதர்களைப் பேசுவது; அதுதான் 'வரைவின் மகளிர்' என்ற அதிகாரம். இவர்கள் மணம் செய்து கொள்வதில்லை.

ஒப்பற்ற உயர்ந்த காதல் வாழ்க்கையினையும் தலைசிறந்த தலைவன் தலைவியரின் மேலான இன்ப வாழ்க்கையின் விரிவையும் விளக்கத்தையும் கூறுவது 'காமத்துப்பாலாகும்'.

## வாழ்க அறம்

**'அறமே எல்லாம் ஆகும்.' கீழ்வரும் பாடல்கள் ஒன்றுபடுத்தி ஆழ்ந்து சிந்திக்கத் தக்கன.**

**அறமாகிய கடலே இறைவன்**

'அறவாழி' அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. 8

**அறம் வகுக்கும் முனிவர்கள்**

இருமை வகைதெரிந்து ஈண்டு'அறம்' பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு. 23

**அறம் போதிக்கும் முனிவர்களே அந்தணர்கள்**

அந்தணர் என்போர் 'அறவோர்'மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டுஒழுக லான். 30

**சிறப்பளிப்பது அறமே**

சிறப்புஈனும் செல்வமும் ஈனும் 'அறத்தின்ஊஉங்கு'
ஆக்கம் எவனோ உயிர்க்கு. 31

**அறம் மறந்தால் கேடு விளையும்**

'அறத்தின்ஊஉங்'கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊஉங்குஇல்லை கேடு. 32

**இயைந்த வழியெல்லாம் அறம் செய்க**

ஒல்லும் வகையான் 'அறவினை' ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல். 33

**மனத் தூய்மையே அறம்**

மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்து'அறன்'
ஆகுல நீர பிற. 34

**தீயவை நீங்கினால் அறமாகும்**

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது 'அறம்'. 35

**அறமே நிலைத்த துணையாகும்**

அன்றுஅறிவாம் என்னாது 'அறம்' செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. 33

**அறம் இன்பம் பயக்கும்**

'அறத்தாறு' இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை. 37

**அறத்தால் வருவதுதான் இன்பம்**

'அறத்தான்' வருவதே இன்பம்மற்று எல்லாம்
புறத்த புகழும் இல. 39

**அறம் செய்க**

செயற்பாலது ஓரும் 'அறனே' ஒருவற்கு
உயற்பாலது ஓரும் பழி. 40

**அறமே இல்லறம்**

அன்பும் 'அறனும்' உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 45

**இல்அறமே போதும்**

'அறத்தாற்றின்' இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன். 46

**நோற்பாரினும் மேலானது**

ஆற்றின் ஒழுக்கி 'அறன்'இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. 48

**அறம் செய்யவே இல்வாழ்க்கை**

'அறன்'எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று. 49

**அறமே நல்ல துணை**

'அறத்திற்கே' அன்புசார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. 76

**அறமே தண்டிக்கும்**

என்பு இலதனை வெயில்போலக் காயுமே
அன்பு இலதனை 'அறம்'. 77

**இன்சொல்லில் அறம்**

முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொல் இனிதே 'அறம்'. 93

**சொல்லில் அறம்**

அல்லவை தேய 'அறம்'பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். 96

**அறமே அவனைச் சாரும்**

கதம்காத்துக் கற்றுஅடங்கல் ஆற்றுவான் செவ்வி
'அறம்'பார்க்கும் ஆற்றின் நுழைந்து. 130

**அறத்திற்கு மாறானதைச் செய்யாதே**

பிறன்பொருளாள் பெட்டுஒழுகும் பேதைமை ஞாலத்து
'அறம்'பொருள் கண்டார்கண் இல். 141

**அறத்தின் சிறப்பு**

'அறன்'கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல். 142

**அறமான இல்வாழ்க்கை**

'அறன்'இயலான் இல்வாழ்வான் என்பான் பிறன்இயலாள்
பெண்மை நயவா தவன். 147

**அதுதானே அறம்**

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
'அறன்'ஒன்றோ ஆன்ற ஒழுக்கு. 148

**கொடியதினும் கொடியது**

'அறன்'வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 150

**அறமல்லாததைச் செய்யாதே**

திறன்அல்ல தன்பிறர் செய்யினும்நோநொந்து
'அறன்'அல்ல செய்யாமை நன்று. 157

**அறனாக்கம் கிட்டாது**

'அறன்'ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன்ஆக்கம்
பேணாது அழுக்கறுப் பான். 163

**அறன் தருவது**

சிற்றின்பம் வெஃகி 'அறன்'அல்ல செய்யாரே
மற்றுஇன்பம் வேண்டு பவர். 173

**அறம் செயும் அறிவுளோர்**

'அறன்'அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு. 179

**அறமே சிந்திக்கத்தக்கது**

'அறம்'கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறம்கூறான் என்றல் இனிது. 181

**அறத்தை அழிக்காதே**

'அறன்'அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன்அழீஇப் பொய்த்து நகை. 182

**அறவழி ஆக்கம் பெறுக**

புறம்கூறிப் பொய்த்துஉயிர் வாழ்தலின் சாதல்
'அறம்'கூறும் ஆக்கம் தரும். 183

**அறமின்மை தெரியும்**

'அறம்'சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம்சொல்லும்
புன்மையால் காணப் படும். 185

**அறத்தினாலன்றோ**

'அறன்'நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை. 189

**அறம் தண்டனை கொடுத்துவிடும்**

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
'அறம்'சூழும் சூழ்ந்தவன் கேடு. 204

**அருள் இல்லாதவன் அறம் செய்வதாகாது**

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் 'அறம். 249

**அறம் நிலைத்து நிற்கும்**

அளவுஅறிந்தார் நெஞ்சத்து 'அறம்'போல நிற்கும்
களவுஅறிந்தார் நெஞ்சில் கரவு. 288

**அறமே சாலும்**

பொய்யாமை அன்ன புகழ்இல்லை எய்யாமை
எல்லா 'அறமும்' தரும். 296

**அனைத்திற்கும் முதலான அறம்**

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் 'அறம்'பிற
செய்யாமை செய்யாமை நன்று. 297

**அறவினை**

'அறவினை' யாதுஎனின் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாம் தரும். 321

**அறம் காப்பாற்றும்**

அஞ்சுவது ஓரும் அறனே ஒருவனை
வஞ்சிப்பது ஓரும் அவா. 366

**அறம் தவறாதிரு**

'அறன்'இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடையது அரசு. 384

**அறம் அறிந்த மேலோர்**

'அறன்'அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறன்அறிந்து தேர்ந்து கொளல். 441

**அறவழி அறிக**

'அறம்'பொருள் இன்பம் உயிர்அச்சம் நான்கின்
திறம்தெரிந்து தேறப் படும். 501

**அடிப்படை அறமே**

அந்தணர் நூற்கும் 'அறத்திற்கும்' ஆதியாய்
நின்றது மன்னவன் கோல். 543

**அறம் அறிந்தவன்**

'அறன்' அறிந்து ஆன்றுஅமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்
திறன்அறிந்தான் தேர்ச்சித் துணை. 635

**அறம் உடையது**

திறன்அறிந்து சொல்லுக சொல்லை 'அறனும்'
பொருளும் அதனின்ஊங்கு இல். 644

**அறன் கொடுக்கும்**

'அறன்'ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து
தீதுஇன்றி வந்த பொருள். 754

**அறவினை செய்க**

'அறவினை'யும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ஏவல் செய்வார்கண் இல். 909

**அறம் நோக்குக**

அன்புஒரீஇத் தன்செற்று 'அறம்'நோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர். 1009

**அறம் நாணமடையும்**

பிறர்நாணத் தக்கது தான்நாணான் ஆயின்
'அறம்'நாணத் தக்கது உடைத்து. 1018

**அறம் வருமா**

'அறம்சாரா' நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். 1047

## சொல்லும் இடமும்

**குறட்பாக்களில் காணப்படும் 'சில' சொற்களும்**
**அவை வந்துள்ள பாக்களும் தரப்பட்டுள்ளன.**

**முதல் — முதல**

1 அகர 'முதல' எழுத்துஎல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. 1

2 'முதல்'இலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்
சார்புஇலார்க்கு இல்லை நிலை. 449

3 ஆக்கம் கருதி 'முதல்'இழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார். 463

4 மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளி'முதலா' எண்ணிய மூன்று. 941

5 நோய்நாடி நோய்'முதல்' நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். 948

6 ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி 'முதல்'அரிந் தற்று. 1304

**ஆ, பெற்றம் (பசு), பகடு (எருது)**

1 'ஆ'பயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின். 560

2 'ஆ'விற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல். 1066

3 வலிஇல் நிலைமையான் வல்உருவம் 'பெற்றம்'
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. 273

4 மடுத்தவாய் எல்லாம் 'பகடு'அன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து. 624

**யானை, களிறு (ஆண் யானை)**

1 பரியது கூர்ங்கோட்டது ஆயினும் 'யானை'
வெரூஉம் புலிதாக் குறின். 599

2 வினையான் வினைஆக்கிக் கோடல் நனைகவுள்
'யானை'யால் 'யானை'யாத் தற்று. 678

3 குன்றுஏறி 'யானை'ப்போர் கண்டற்றால் தன்னகத்துஒன்று
உண்டாகச் செய்வான் வினை. 758

4 கான முயல்எய்த அம்பினில் 'யானை'
பிழைத்தவேல் ஏந்தல் இனிது. 772

5 கால்ஆழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
வேலாள் முகத்த 'களிறு'. 500

6 சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதைஅம்பின்
பட்டுப்பாடு ஊன்றும் 'களிறு'. 597

7 கைவேல் 'களிற்றொடு' போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 774

8 கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில். 1087

**மா (குதிரை, மான்)**

1 அமரகத்து ஆற்றுஅறுக்கும் கல்லா'மா' அன்னார்
தமரின் தனிமை தலை. 814

2 மயிர்நீப்பின் வாழாக் 'கவரிமா' அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். 969

**ஏறு (ஆண் சிங்கம்)**

1 புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
'ஏறு'போல் பீடு நடை. 59

2 படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
உடையான் அரசருள் 'ஏறு'. 381

**புலி**

1 வலிஇல் நிலைமையான் வல்உருவம் பெற்றம்
'புலி'யின்தோல் போர்த்துமேய்ந் தற்று. 273

2 பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் 'புலி'தாக் குறின். 599

**நரி, முதலை, ஆமை**

1 கால்ஆழ் களரின் 'நரி'அடும் கண்அஞ்சா
வேல்ஆள் முகத்த களிறு. 500

2 நெடும்புனலுள் வெல்லும் 'முதலை' அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. 495

3 ஒருமையுள் 'ஆமை'போல் ஐந்துஅடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து. 126

**பாம்பு, நாகம், எலி**

1 உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
'பாம்போடு' உடன்உறைந் தற்று 890

2 கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் 'பாம்பு'கொண் டற்று 1146

3 ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
'நாகம்' உயிர்ப்பக் கெடும் 763

**காக்கை, கூகை (கோட்டான்)**

1 பகல்வெல்லும் 'கூகை'யைக் 'காக்கை' இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. 481

2 'காக்கை' கரவா கரைந்துஉண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள. 527

**கொக்கு, மயில், முயல்**

1 'கொக்கு'ஒக்க கூம்பும் பருவத்து மற்றுஅதன்
குத்துஒக்க சீர்த்த இடத்து. 490

2 அணங்குகொல் ஆய்'மயில்' கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு. 1081

3 கான 'முயல்'எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது. 772

**புள் (பறவை)**

1 தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் 'புள்'சிமிழ்த் தற்று. 274

2 குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு. 338

**கயல், மீன், விண்மீன்**

1 'கயல்'உண்கண் யான்இரப்பத் துஞ்சின் கலந்தார்க்கு
உயல்உண்மை சாற்றுவேன் மன். 1212

2 வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் 'மீன்'விழுங்கி யற்று. 931

3 மதியும் மடந்தை முகனும் அறியா
பதியின் கலங்கிய 'மீன்'. 1116

**மரம்**

1 அன்பகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல்'மரம்' தளிர்த் தற்று. 78

2 பயன்'மரம்' உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின். 216

3 மருந்துஆகித் தப்பா 'மரத்தற்றால்' செல்வம்
பெருந்தகை யான்கண் படின். 217

4 மண்ணொடு இயைந்த 'மரத்து'அனையர் கண்ணொடு
இயைந்துகண் ணோடா தவர். 576

5 உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கைஅஃது இல்லார்
'மரமக்கள்' ஆதலே வேறு. 600

6 இளைதாக முள்'மரம்' கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து. 879

7 அரம்போலும் கூர்மைய ரேனும் 'மரம்போல்வர்'
மக்கள்பண்பு இல்லா தவர். 997

8 நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு 'மரம்'பழுத் தற்று. 1008

9 நாண்அகத்து இல்லார் இயக்கம் 'மரப்பாவை'
நாணால் உயிர்மருட்டி யற்று. 1020

10 இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
'மரப்பாவை' சென்றுவந் தற்று. 1058

**வித்து**

1 உரன்என்னும் தோட்டியான் ஓர்ஐந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்குஓர் 'வித்து'. 24

2 'வித்தும்' இடல்வேண்டுங் கொல்லோ விருந்துஓம்பி
மிச்சில் மிசைவான் புலம். 85

3 நன்றிக்கு 'வித்தாகும்' நல்ஒழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 138

4 அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்புஈனும் 'வித்து'. 361

**கரும்பு, கணிச்சி**

1 சொல்லப் பயன்படுவர் சான்றோர் 'கரும்பு'போல்
கொல்லப் பயன்படும் கீழ். 1078

2 காமக் 'கணிச்சி' உடைக்கும் நிறைஎன்னும்
நாணுத்தாள் வீழ்த்த கதவு. 1251

**குழல், யாழ்**

1 'குழல்'இனிது 'யாழ்'இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். 66

2 அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
'குழல்'போலும் கொல்லும் படை. 1228

3 கணைகொடிது 'யாழ்'கோடு செவ்விதுஆங்கு அன்ன
வினைபடு பாலால் கொளல். 279

**கல்**

1 வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதுஒருவன்
வாழ்நாள் வழிஅடைக்குங் 'கல்'. 38

2 பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் 'கல்'. 505

3 என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று 'கல்'நின் றவர். 771

**ஊற்று, ஊருணி, கேணி**

1 மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்பவர்க்கு
'ஊற்று'நீர் போல மிகும். 1161

2 'ஊருணி' நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு. 215

3 தொட்டனைத்து ஊறும் 'மணற்கேணி' மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு. 396

**வில், அம்பு, கணை (அம்பு)**

1 சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க 'வில்'வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 827

2 'வில்'ஏர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
'சொல்'ஏர் உழவர் பகை. 872

3 கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்த'வேல்' ஏந்தல் இனிது. 772

4 சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதை'அம்பின்'
பட்டுப்பாடு ஊன்றும் களிறு. 597

5 'கணை'கொடிது யாழ்கோடு செவ்விதுஆங்கு அன்ன
வினைபடு பாலால் கொளல். 279

**வாள்**

1 நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
'வாள்'அது உணர்வார்ப் பெறின். 334

2 தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
'வாளாண்மை' போலக் கெடும். 614

3 'வாளொடு'என் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடுஎன்
நுண்அவை அஞ்சு பவர்க்கு. 726

4 பகையகத்துப் பேடிகை 'ஒள்வாள்' அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல். 727

5 'வாள்போல்' பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 882

**வேல்**

1 'வேல்'அன்று வென்றி தருவது மன்னவன்
கோல்அதூஉம் கோடாது எனின். 546

2 'வேலொடு' நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. 552

3 கால்ஆழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
'வேல்ஆள்' முகத்த களிறு. 500

4 நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் 'வேலாருள்'
வென்றி வினையுரைப்பான் பண்பு. 683

5 கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்த'வேல்' ஏந்தல் இனிது. 772

6 கை'வேல்' களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 774

7 விழித்தகண் 'வேல்'கொண்டு எறிய அழித்துஇமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு. 775

8 முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
'வேல்'உண்கண் வேய்த்தோள் அவட்கு. 1113

9 மாலையோ அல்லை மணந்தார் உயிர்உண்ணும்
'வேலை'நீ வாழி பொழுது. 1221

**அச்சாணி, அச்சு, தேர்**

1 உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
'அச்சாணி' அன்னார் உடைத்து. 667

2 உழுவார் உலகத்தார்க்கு 'ஆணி'அஃது ஆற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து. 1032

3 பீலிபெய் சாகாடும் 'அச்சுஇறும்' அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். 475

4 கடல்ஓடா கால்வல் 'நெடுந்தேர்' கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து. 496

**தேயம்**

1 பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்
எண்ணிய 'தேயத்துச்' சென்று. 753

**நாடு**

**அதிகாரம் 74 'நாடு' காண்க**

1 யாதானும் 'நாடு'ஆமால் ஊர்ஆமால் என்ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு. 397

2 நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் 'நாடு' கெடும். 553

3 இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் 'நாட்ட'
பெயலும் விளையுளும் தொக்கு. 545

4 புகழ்இன்றால் புத்தேள்'நாட்டு' உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை. 966

5 புலத்தலின் புத்தேள்'நாடு' உண்டோ நிலத்தொடு
நீர்இயைந்து அன்னார் அகத்து. 1323

ஊர்

1 பயன்மரம் 'உள்ளூர்'ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின். 216

2 யாதானும் நாடுஆமால் 'ஊர்'ஆமால் என்ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு. 397

3 உள்ஒற்றி 'உள்ளூர்' நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ஒற்றிக் கண்சாய் பவர். 927

4 நச்சப் படாதவன் செல்வம் நடு'ஊருள்'
நச்சு மரம்பழுத் தற்று. 1008

5 இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் 'ஊர்'. 1129

6 உவந்துஉறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துஉறைவர்
ஏதிலர் என்னும் இவ்'ஊர்'. 1130

7 மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது
அலர்எமக்கு ஈந்ததுஇவ் 'ஊர்'. 1142

8 உறாஅதோ 'ஊர்'அறிந்த கௌவை அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. 1143

9 'ஊரவர்' கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய். 1147

10 தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை எடுக்கும்இவ் ஊர். 1150

11 இன்னாது இனன்இல்'ஊர்' வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு. 1158

12 மறைபெறல் 'ஊரார்'க்கு அரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணார் அகத்து. 1180

13 நனவினான் நம்நீத்தார் என்பர் கனவினான்
காணார்கொல் இவ்'ஊரவர்'. 1220

**ஊழ் — விளக்கம்**

அறத்துப்பாலில் கடைசி அதிகாரம் 'ஊழ்'. இதனை 'ஊழ் இயல்' என்றும் குறிப்பிடுவதுண்டு. இந்த ஊழியல் அறத்துப்பாலுக்கும் பொருட்பாலுக்கும் இடையில் வைக்கப்பட்டுள்ளது.

> ''இனிப் பொருளும் இன்பமும் கூறுவார்
> அவற்றின் முதற்காரணமாகிய ஊழின்வலி
> கூறுகின்றார்.''

—இவ்வாறு உரையாசிரியர் பரிமேலழகர் கூறுகின்றார். பொருள் உண்டாவதற்கும் இன்பம் நுகர்வதற்கும் பொதுவாக ஊழ்வினை இருந்தாக வேண்டும் என்பது கருத்தாயிற்று. பெரும்பான்மை கருதி இவ்வாறு அவர் கூறினார். 'ஊழ்' என்ற அதிகாரத்திற்கு விளக்கவுரை எழுதிய பரிமேலழகர் இவ்வாறு குறித்தார் :

> 'அஃதாவது இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைவதற்கு ஏதுவாகிய நியதி, ஊழ், பாழ், முறை, உண்மை, தெய்வம், விதி என்பன ஒரு பொருட்கிளவி; இது பொருள், இன்பங்கள் இரண்டிற்கும் பொதுவாய ஒன்றனுள் வைக்கப்படாமையானும், மேற்கூறிய அறத்தொடு இயைபு உடைமையானும், அதனது இறுதிக்கண் வைக்கப்பட்டது.'

'ஊழ்' என்ற அதிகாரத்திலும் 'ஆள்வினையுடைமை' என்ற அதிகாரத்திலும் காணப் படுகின்ற இரு குறட்பாக்கள் சிந்தனைக்குரியன.

> ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
> சூழினும் தான்முந் துறும். 380
>
> ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்
> தாழாது உஞற்று பவர். 620

இவ்விரு குறட்பாக்களுக்கு உரை கூறுங்கால் இயற்கை, செயற்கை என்பதனை மனதில் கொண்டு பொருள் காண்பது மரபு. இயற்கையும் வலிவுடையதாகும்; முயற்சியும் வலிவுடைய தாகும்; இயற்கையின் வலிமை செயற்கை என்னும் வலிமையினைவிட மிகுதிப்பட்டிருக்கும் நேரத்தில் 'ஊழ்' வெல்லும். இதனை 'யாவுள' என்ற குறட்பா குறிக்கின்றது. இயற்கையின் செயல் சில நேரங்களில் மென்மையாக இருக்கும்; முயற்சியின் வலிவு அதனைவிட மேம்பட்டதாக இருக்கும். அப்போது 'உப்பக்கம் காண்பர்' என்று கொள்ளுதல் வேண்டும்.

வேதாந்திகள்—சித்தாந்திகள் எனப்படுவோர் இவ்விரு குறட்பாக்களுக்கும் கூறுகின்ற உரைச் சிறப்பும் சிந்திக்கத்தக்கதாகும்.

உயிர்கள் அனைத்தும் தன் இருவினைப் பயன்களால் மாறிமாறிப் பிறப்பனவாகும். அவ்வினைகள் தொடரும்வரை பிறப்பும் இறப்பும் தொடர்ந்து கொண்டே இருக்கும். பிறப்பும் வினைகளுக்கேற்ப பலவகையாக வரும் என்பது அவர்கள் கருத்து.

உயிர்களைத் தொடர்ந்துவரும் வினைகளுக்கு 'ஊழ்' என்று பெயராகும். அந்த வினைகளை 'பிராரத்வகர்மம், சஞ்சித கர்மம், ஆகாமிய கர்மம்' என்று வடமொழியில் கூறுவர். இவைகளைத் தமிழ் மொழியில் நுகர்வினை, எச்சவினை, வருவினை என்று கூறுவார்கள். அனாதி காலந்தொட்டு பிறவிகள் வருதலால், இறந்த உயிரால் வினைப் பயன்கள் நிறைய ஈட்டப்பட்டன. அவ் வினைப்பயன்கள் இறந்த உடம்புகளாலும் அனுபவிக்கப்பட்டன; மீதியிருக்கும் வினைப் பயன்களில், அனுபவிப்பதற்குப் பக்குவப்பட்ட வினைப்பயன்களைச் சுமந்து கொண்டு அனுபவிப்பதற்காகவே இந்த உடல் வந்திருக்கிறது. அனுபவிக்கின்ற இந்த வினைகளுக்கு 'நுகர்வினை' என்று பெயர்; அதாவது 'பிராரத்வ கர்மம்'; மீதியிருக்கும் வினைகளெல்லாம் 'எச்சவினை' (சஞ்சித கர்மம்) எனப்படும். அனுபவிக்க இவை பக்குவப்படவில்லை என்பதாகும். இந்தப் பிறவியில் செய்யப்படுகின்ற இருவினைப் பயன்களை வருகின்ற பிறவிகளில் அனுபவிக்க வேண்டும். இவற்றிற்கு 'வருவினை' (ஆகாமிய கர்மம்) என்பது பெயராகும்.

இந்த மூன்று வினைகளுக்கும் 'ஊழ்வினை' என்பது பொதுப்பெயர். இப்பிறவியில் இடைவிடாது செய்யப்படும் 'தியான யோக சமாதி'களால் 'எச்சவினை — வருவினை' ஆகிய இரண்டும் நசித்துப் போகும். இதனையே 'ஊழையும் உப்பக்கம்' என்ற குறட்பா குறித்து நின்றது. எந்த முயற்சியாலும் விலக்கப்படாமல் அனுபவித்தே தீர வேண்டிய தற்கு நுகர்வினை (பிராரப்தம்) என்று பெயர். இதனை 'ஊழிற் பெருவலி' என்ற குறட்பா குறிக்கின்றது. இவ்வாறு கூறப்படுகின்ற விளக்கமும் சிந்தனைக்குரியதேயாகும். பிற இடங்களிலும் விளக்கம் காண்க.

## குடியாட்சியும் முடியாட்சியும்

திருக்குறளில் 'அரசியல், அங்கவியல்' ஆகிய இரண்டு பகுதிகளும் ஆட்சிமுறை களைப் பற்றித் தெளிவாகக் கூறுகின்றன. என்றென்றும் நிலையாக இருப்பனவும் இட வேறுபாடுகளாலும் காலத்தினாலும் மாறுபடக் கூடிய பழக்க முறைகளையும் ஆசிரியர் கூறுவதில்லை. அறிவு வளர்ச்சியால் அவ்வப்போது அமைத்துக் கொள்ள வேண்டுவன வற்றையும் சுட்டிக் காட்டிப் பொதுப்படக் கூறுகின்றார். நாட்டிற்கு ஒரு தலைவன் இருத்தல் வேண்டும். நாட்டுத்தலைவருக்கு அவ்வப்போது நல்ல அறிவுரைகளையும் அற வுரைகளையும் சொல்லக் கூடிய பெரியவர்கள் துணை இருத்தல் வேண்டும்; அமைச்சர் களும் இருத்தல் வேண்டும். இவற்றைக் குறிப்பாக அறிந்து கொள்ளலாம். நாட்டுத் தலைவனை ஆசிரியர், இறைவன், இறை, மன்னன், வேந்தன், அரசன், காவலன், நிலம் ஆள்பவர் என்பன போன்ற பெயர்களால் குறிக்கின்றார். நாட்டுத் தலைவனான — முதல்வனான மன்னனைக் குறிக்கின்ற அதிகாரத்தின் பெயர் 'இறைமாட்சி' என்று வைக்கப்பட்டுள்ளது. 'இறைவன்' என்ற சொல் அரசியல் — அங்க இயல்களில் நாட்டுத் தலைவனையும், 'கடவுள் வாழ்த்து' என்ற அதிகாரத்தில் ஆதிபகவனையும் குறிக்கின்றது.

'இறைமாட்சி' என்று குறிப்பிட்டதால் எல்லாக் காலத்திலும் நாட்டிற்குத் தலைவன் ஒருவன் இருக்க வேண்டும் என்ற உண்மை பெறப்பட்டது. எல்லாக் காலத்திலே யும் முடியாட்சி இருந்து வரும் என்று கருதுதல் கூடாது. முடியாட்சி மாறி குடியாட்சி வருதலும் கூடும். ஆனால் எந்த ஆட்சி வந்தாலும் தலைவன் என்றொருவன் இருத்தல்

இயற்கையாகும். ஆதலால் 'மன்னர் மாட்சி', 'அரசன் மாட்சி' என்று அதிகாரத்திற்குப் பெயரிடாமல் **இறைமாட்சி** என்று பெயர் வைத்த உண்மை அறிந்துணர வேண்டியதாகும்.

தலைவரைக் குறிக்க வேந்து, அரசன், மன்னன் என்பன போன்ற சொற்களைப் பார்த்து, முடியாட்சி காலத்தில் எழுதப்பட்டதால் அவ்வாறு எழுதினார் என்று கருதினாலும், மன்னர் மகன்தான் மன்னனாக வரவேண்டும் என்ற பரம்பரை உரிமை குறிப்பிடப் படவில்லை. 'முடி' என்ற சொல்லினையும் திருவள்ளுவர் குறிப்பிடவில்லை. ஆதலால் எந்த ஆட்சியினையும் குறித்துக் காட்டாமல், பொதுவாக மக்களுக்கு நன்மையுண்டாக மக்களைத் தழுவியாளுகின்ற தலைவனையும் ஆட்சியினையும் சுட்டிக்காட்டி, என்றென்னும் நிலையாக வுள்ள பொதுப்படையான அரசியல் உண்மைகளை உரைத்தார் என்று அறிதல் வேண்டும். எந்த ஆட்சியிலும் நாட்டிற்குத் தலைவர் என்றொருவர் இருத்தல் வேண்டும் என்பது ஆசிரியரின் முடிந்த முடிபாகும். அத்தலைவருக்கு இருந்தாக வேண்டிய உயர்ந்த பண்பாடுகள் 'இறைமாட்சி' என்ற அதிகாரத்தில் விளக்கப்பட்டன. அந்தத் தலைவருக்கு அமைச்சர்கள் இருத்தல் இயன்றியமையாததாகும். ஆட்சித் தலைவரே மற்ற அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கிறார். இக்காலத்தில் ஆட்சித் தலைவரை 'பிரதமர்', 'முதல்வர்' என்ற பெயர்களினால் அழைக்கின்றோம். பழங்காலத்தில் பெரும்பாலும், பெயருக்குத் தான் அரசர்களாக இருப்பார்கள் என்றும், ஆட்சி முறை அனைத்தையும் அமைச்சர்கள் போன்றவர்களே கவனிப்பவர்களாக இருப்பார்களென்றும் சொல்லுவதுண்டு! ஆனால் ஆசிரியர் கூறுகின்ற அரசன்—இறைவன்—காவலன் எனப்பட்டவர் நற்குணங்கள் அனைத்தும் பொருந்தி, ஆற்றல்கள் நிறைந்து கடமையுணர்ச்சி மிக்கவராக இருக்க வேண்டுமென்று விளக்கம் செய்துள்ளார். ஆசிரியர் பொதுமறை தந்தவர். ஆதலால் குடியாட்சி இலக்கணத்திற்கேற்ப முடியாட்சி காலத்திலேயே நல்ல ஆட்சி நிலைபெறுவதற்கான அறநெறிகளை அமைத்துத் தந்தார் என்று அறிதல் வேண்டும்.

## உடம்பும் உயிரும்

**உடம்போடு உயிரிடை நட்பு**

என்பது கீழ்வரும் இரு குறட்பாக்களிலும் அமைந்து சிந்தனை தருவது.

**குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே**
**உடம்போடு உயிரிடை நட்பு.** 338

**உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு.** 1122

## குடிமக்களும் தெய்வமும்

நாட்டில் வாழ்கின்ற மக்களைக் குடிமக்கள் என்று கூறுவது மரபு. நாட்டுத் தலைவனான அரசன் சிறப்பினைக் கூறுகின்ற முதற் குறட்பாவும் இவ்வாறு அமைந்துள்ளது.

**படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு.** 381

குடிமக்கள் வாழ்கின்ற நாட்டினைப் பற்றி 'நாடு' என்ற அதிகாரம் சிறப்பிக்கின்றது. நல்ல வழிமுறையில் — பரம்பரையில் தோன்றி, உயர்ந்த, மேலான தன்மைகள் நிறைந்த மக்களைக் குடிமை என்ற அதிகாரம் பேசுகின்றது.

பொருள் செயல்வகை, வினை செயல்வகை, தெரிந்து செயல்வகை என்பன போன்ற அதிகாரங்கள் இருப்பதைப் போல் 'குடி செயல்வகை' என்ற அதிகாரம் ஒன்று இருக்கின்றது. இந்த அதிகாரம், குடிமக்களுக்காகத் தொண்டாற்றுகின்ற பெரியோர்களைப் பற்றிக் கூறுகிறது. மக்களுக்குத் தொண்டாற்றும் சிறப்பினைப் பொதுவான அடிப்படையில் இவ்வதிகாரம் கூறுகின்றது. மக்களுக்குப் பாடுபடுகிறவர்கள் 'காலம் வரும் என்று காத்திருக்க மாட்டார்கள்' என்றும் மானத்தினை நினைத்துக் கொண்டிருக்க மாட்டார்கள் என்றும் ஆசிரியர் நினைவுபடுத்துகிறார்.

**குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து**
**மானம் கருதக் கெடும்.** 1028

'குடி' என்பது 'கூட்டம்' என்னும் பொருளிலேயும், 'குடும்பம்' என்னும் கருத்திலேயும் அமைக்கப்பட்டுள்ளது. மக்கள் நிறைந்திருக்கும் அமைப்பினைக் 'குடி' என்று வழங்குவார்கள். இக் குறட்பாவினைக் கருதும்போது, 'காலமறிதல்', 'மானம்' என்ற அதிகாரங்களையும் சிந்தித்தல் நல்லது. குடிமக்களுக்குத் தொண்டாற்றுபவன் 'உடம்பு' மிகுந்த துன்பத்துக்கு ஆளாகவும் நேரும் என்கிறார். இதனை நன்கு சிந்தித்தறிதல் வேண்டும்.

**இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்றம் மறைப்பான் உடம்பு.** 1029

மக்களுக்குப் பாடுபடுகிறவனை உலகமக்கள் பின்பற்றிச் சுற்றிக் கொண்டிருப்பார்கள்.

**குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்**
**சுற்றமாச் சுற்றும் உலகு.** 1025

இக்குறட்பாவில் 'குற்றம் இலனாய்' என்பது பன்முறையும் சிந்திக்கத் தக்கது. குடிமக்களுக்குத் தொண்டாற்றும் பெரியோர்களுக்கு நல்ல துணையெல்லாம் அவர் நினைக்காமலேயே வந்து சேருமாம்.

**சூழாமல் தானே முடிவெய்தும் தம்குடியைத்**
**தாழாது உஞற்று பவர்க்கு.** 1024

இயற்கையும் எல்லா உதவியையும் செய்யும் என்கிறார். இயற்கை ஆற்றல் மனித ஆற்றலினைவிட மேம்பட்டதாகும்.

'தெய்வம்' ஆடையை இறுகக் கட்டிக்கொண்டு முன் வந்து மக்களுக்குப் பாடு படுகிறவனுக்கு உதவி செய்யும்.

**குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும்.** 1023

சில நேரங்களில் இயற்கை யெனப்படும் 'தெய்வம்' உதவி செய்யாமலும் போகும். அப்போது விடாமல் முயற்சி செய்து பயனடைய வேண்டும். அதனைத்தான், 'தெய்வத்தான் ஆகாது எனினும்' (619) என்ற குறட்பா சொல்லுகிறது; சிந்திக்க வேண்டும்.

**மழை பெய்யெனப் பெய்யும்**

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
'பெய்எனப் பெய்யும்' மழை 55

**மழை பெய்யும்**

இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட
'பெயலும்' விளையுளும் தொக்கு. 545

**மழை பெய்யாது**

முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல். 559

'வாழ்க்கைத் துணைநலம்' என்ற அதிகாரம் மனைவியின் நற்குண நற்செயல்களை இனிதாக எடுத்துக் கூறுகிறது. கற்பினைப்பற்றி ஒரு குறட்பா இருக்கின்றது.

**பெண்ணின் பெருந்தக்க யாஉள கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்.** 54

இந்தக் குறட்பா கற்பின் பெரும் சிறப்பினைக் கூறிற்று. கற்பினை விரித்துக் கூற, 'கற்பியல்' என்ற பகுதியே அமைந்திருக்கின்றது. அடுத்து வருகின்ற குறட்பாவையும் 'கற்பு' என்பதோடு சேர்த்துப் பேசுவதுண்டு. அடுத்து வருவது 'தெய்வம் தொழாஅள்' என்ற குறட்பா. இது 'கற்பு' நிறைந்த பெண்ணுக்கு, அதனைவிட மேலானதொரு கடமையினைச் சொல்லுகின்றது. பொதுவாக எல்லாப் பெண்களும் கற்பு நிறைந்தவர்களேயாவார்கள். அது மட்டும் போதாது. கொழுநனைத் தவிர, உலகோர் பற்பலவிதமாகக் கூறுகின்ற வேறு 'தெய்வங்கள்' பலவற்றை அவள் நினைக்கவும் கூடாது; தொழுதலும் கூடாது. 'கடவுள்' என்ற சொல்லால் உணர்த்தப் படுவது எல்லோருக்கும் பொதுவானதாகும். அனைவரும் வணங்கப்பட வேண்டியதாகும். இந்த உறுதிப்பாடுதான் மிகமிக மேலானது. அப்பெண்ணுக்கு ஆதிபகவன், வாலறிவன் என்றெல்லாம் குறிக்கப்படுகின்ற 'கடவுள் வழிபாடும்', 'கொழுநன் வழிபாடும்' ஆகிய இவையே கூறப்பட்டன. 'கடவுள் வாழ்த்து' என்ற முதல் அதிகாரத்தில் 'தெய்வம்' என்ற சொல் கூறப் படாதிருப்பது சிந்தனைக்குரியதாகும்.

## இருபது அதிகாரங்கள்

திருவள்ளுவர் அமைத்துள்ள ஒவ்வோர் அதிகாரத்திலும் கூறவேண்டிய அரிய உண்மை களை வலியுறுத்தும் பொருட்டுப் பெரும்பாலும் ஒவ்வொரு குறட்பாவிலும் பிற அதிகாரங்களை நினைவுபடுத்திக் காட்டுகின்றார். பண்பாடுகளும் கடமைகளும் என்று சொல்லப்படுபவை — ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஆழ்ந்து பதிந்து நிலைத்திருக்க வேண்டுமென்பதே ஆசிரியரின் குறிக்கோள்.

'இறைமாட்சி' என்பது பொருட்பாலில், அரசியல் பகுதியில் முதல் அதிகாரமாகும். இறை, இறைவன் என்பன நாட்டுத் தலைவனைக் குறிக்கும். 'மறவர் இறைவன்' (778), 'இறைவற்கு' (733) என்பன போன்றவற்றைச் சிந்தித்தல் வேண்டும்.

நாட்டு மக்களைக் காப்பாற்றும் முதன்மையான, மேலான கடமையினைக் கொண்ட அரசனைக் குறிப்பிட்டு உணர்த்தும் 'இறை மாட்சி' என்ற அதிகாரத்தில் காணப்படும் பத்துக் குறட்பாக்களிலும் பயிலுகின்ற சொற்களை எண்ணிப் பார்க்கின்றபோது அவை பிற இடங்களில் சொல்லப்பட்டுள்ள அதிகாரங்களில், இருபது அதிகாரங்களுக்குமேல் நினைவு படுத்துவனவாக உள்ளன. கருத்துக்களை அமைத்துக் காட்டும் அரிய முறைகளில் இதுவும் ஒன்றாகும். படைச் செருக்கு, படைமாட்சி, பொருள் செயல்வகை, நாடு (மக்கள்), குடிமை, குடி செயல்வகை, அமைச்சு, நட்பு, நட்பாராய்தல் முதலியன; அரண், ஈகை, அறிவுடைமை, (புல்லறிவாண்மை) ஊக்கமுடைமை, கல்வி (கல்லாமை), அறன் வலியுறுத்தல், மானம், சொல்வன்மை, இனியவை கூறல் முதலியன; செங்கோன்மை, பொறையுடைமை, பண்புடைமை, அன்புடைமை, அருளுடைமை முதலிய அதிகாரங்களும் ஆகும். இன்ன பிறவும் காண்க. நன்கு சிந்தித்துப் பார்க்கின்ற வகையில், 'இறைமாட்சி' என்ற அதிகாரம் அமைந்துள்ளது.

## வினை விழைவான்

தொழில் செய்வதில் பெருவிருப்பம் கொண்ட ஒருவனை 'வினை விழைவான்' என்று குறிப்பிட்டார். தொழில் புரிந்து கொண்டே இருக்க வேண்டும் என்பது ஆசிரியர் வற்புறுத்திக் கூறும் அரிய அறவுரை. தொழில் புரிபவனே தன்னைச் சார்ந்தவர்களின் துன்பத்தினைப் போக்குபவனாவான் என்று கூறுகின்றார். 'துன்பம் துடைத்து ஊன்றும் தூண்' என்று அமைக்கின்றார் (615). வினையில் (தொழிலில்) எப்போதும் நாட்டங் கொண்ட அறிஞன் 'இன்பம் விழையான்' என்றார். அதாவது தான் மட்டும் நுகருகின்ற இன்பத்தில் நாட்டம் செலுத்த மாட்டான் என்பதாம். 'வினைவிழைவார் வேண்டாப் பொருளும் அது' (901) என்பதனையும் கருதிப் பார்த்தல் வேண்டும். தொழில் புரிவ திலேயே விருப்பங் கொண்டவர்கள் நிறைந்த சமுதாயம் விரைந்து முன்னேறும். 'மெய் வருத்தக் கூலிதரும்' (619) என்றும் எடுத்துக் காட்டுகிறார். 'இன்பத்துள் இன்பம் விழையா தான்' (629) என்று வினை செய்பவனைக் குறித்துச் சிறப்பித்தார். 'துன்பம் உறவரினும் செய்க' (669) என்று கூறி, தொழில் செய்து கொண்டே இருக்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறார். 'சொல்லிய வண்ணம் செயல்' (664) என்றும் கூறினார். மனிதப் பிறவிக்கு ஏற்ற குணம் செயல் புரிந்துகொண்டே இருக்க வேண்டும் என்பதேயாகும்.

## இயற்கை, ஊழ், இறைவன், தெய்வம், உலகம்

இயற்கை யென்பதற்குத் தன்மையென்று ஒரு பொருள். இயல்பாக நிகழ்வது என்றும் கொள்ளப்படும். இறைவனையே இயற்கை என்று குறிப்பதும் உண்டு. பேரின்பம் என்று கூறப்படுகின்ற நிலையான வீட்டின்பத்தினைக் கூறுகின்றபோது 'பேரா இயற்கை' (370) என்று கூறினார். ஒருகாலும் நிரம்பாத இயல்பினையுடைய ஆசையினை 'ஆரா இயற்கை' என்று (370) கூறினார். 'ஊழ்' என்று கூறப்படுவதும் இயற்கை யென்றே குறிப்பிடப்படுவதாகும். 'உலகத்து இயற்கை' (374) என்பதனையும் கண்டு தெளிதல் வேண்டும். இஃது ஊழ் என்ற அதிகாரத்தில் சொல்லப்பட்டிருப்பதாகும்.

மலர் மலர்வது இயற்கையின் செயலேயாகும். மலர்தல் என்ற பொருளில் கூற வருகின்றபோது 'ஊழ்த்தும்' (650) என்று குறிப்பிட்டது கருதத்தக்கது. இயற்கையென்பது முறையாக நடத்தல். ஆதலால்தான் இயற்கை, விதி (சட்டம்) என்றும் கூறப்படும். மற்றும்

ஊழ், பாழ், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பனவெல்லாம் ஒரே பொருளினைக் குறிப்பனவே. தவறாத முறைமையினை நியதி என்று கூறுவர். ஊழ்வினை, பழவினை, முன்வினை என்பன போன்று குறிக்கப்படுவன வெல்லாம் இயற்கையென்ற பரந்த சொல்லில் அடங்குவனவாகும் என்று கொள்ளுதல் வேண்டும். 'உலகத்து இயற்கை அறிந்து செயல்' (637) என்பதும் சிந்தனைக் குரியது.

இயற்கை, செயற்கை என்று குறிப்பிடுவது போலவே, விதி, மதி என்பனவும் கொள்ளப் படும். மனித முயற்சியில் நடைபெறுவன வெல்லாம் செயற்கை எனப்படுவனவாகும். மதியின் துணை கொண்டு நடப்பனவென்று அறிதல் வேண்டும். உலக இயற்கை என்பது பொதுவாக நோக்குமிடத்து நிலம், நீர், தீ, காற்று, வான் என்று ஐந்து பிரிவுகளாகக் கூறப்படும். இவை நமக்குள்ளும் இருந்து வருகின்ற படியால், ''பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்'' (271) என்று குறித்துக் காட்டப்பட்டது.

ஊழ் இயற்கையானபடியால், மிகவும் வலிமை நிறைந்தது. முயற்சியின் வலிமை ஊழின் வலிமையினைக் குறைக்க முடியும். இயற்கை என்கின்ற ஊழினால் நிகழ்வது நிகழ்ந்தே தீரும் என்பதும், அதன் 'வலிமை' குறைவது முயற்சியினைப் பொறுத்திருக்கின்ற தென்பதும் தெளிந்தறிய வேண்டும். பிற இடங்களில் விளக்கம் காண்க. ஊழினால் வியப்பான நிலைமைகளும் நிகழ்ச்சிகளும் அமைந்து விடுகின்றன என்பதை 'ஊழ்' என்ற அதிகாரம் தெளிவுபடுத்துகிறது.

இறைவன் என்ற சொல் பற்பல பொருள்களில் கூறப்பட்டுள்ளதாகும். முதல் அதிகாரத்தில் காணப்படும் 'இறைவன்' என்ற சொல் ஆதிபகவனாகிய முதல்வனைக் குறிக்கும். முதல் அதிகாரம் இறைவனின் விளக்கத்தினைத் தருவது. 'தெய்வம்' என்ற சொல் முதல் அதிகாரத்தில் காணப்படவில்லை. **இறைவனைக் குறிக்கும் சொல்லாகத் தெய்வம் என்ற சொல் திருக்குறளில் எங்குமே கூறப்படவில்லை.** இக்காலப் பழக்கத்தில் தெய்வம் என்ற சொல் எல்லாவற்றிற்கும் கூறப்படுவதைக் காணுகிறோம்.

'தெய்வத்தான் ஆகாது எனினும்' (619) என்று கூறுகின்ற போது தெய்வம் என்பது 'ஊழ்' என்ற பொருளில் காணப்படுகின்றது. 'வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் (50) என்று வருகின்றபோது வானத்தில் வாழ்பவர்கள் என்று சொல்லப்படுகிறது (விளக்கம் பிறிதோர் இடத்தில் காண்க). 'தென் புலத்தார் தெய்வம் விருந்து' (43) என்று வருகின்ற இடத்தில் இயற்கையென்று கூறப்படுகிறது; இயற்கைப் பிரிவுகளான ஐந்தினையும் தெய்வங்கள் என்று வழங்குவதும் உண்டு. 'தெய்வத்தோடு ஒப்பக் கொளல்' (702) என்று குறிப்பிடுகின்ற போது மனித ஆற்றலுக்கு மேம்பட்டவர் என்று காட்டப்படுகிறது. 'தெய்வம் தொழாஅள்' (55), 'தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்' (1023) என்கின்ற இடங்களில் இயற்கை யென்பதையே குறித்தன. விளக்கம் பிற இடங்களில் கண்டு தெளிக.

**உலகம்**

வானோர் — மேல் உலகத்தார் என்று கூறுவதுண்டு. 'வான்உறையும் தெய்வம்' என்றும் கூறுவதுண்டு. இந்த வானோரும் அடைதற்கு அரிய உலகம் ஒன்று உண்டு!

**யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்** 346

### மனம் தூய்மை

மனத்தில் அழுக்கில்லாமல் இருப்பதே அறமாகும். அறமே இறைத் தன்மை நெறியாகும். அறமே கடலாக இருப்பவன் இறைவன். பொறாமை, பேராசை, கோபம், பிறரிடம் கொடுமையாகப் பேசுதல் என்பன போன்ற தீமைகள் இருக்கக் கூடாது. எண்ணங்கள் தோன்றுகின்ற இடம் மனமேயாகும். இறைவனுக்கு விளக்கம் தந்து வருகின்ற ஆசிரியர் 'மலர்மிசை ஏகினான்' என்று கூறுகின்றார். அறமே இறைவன் என்றும் அறிதல் வேண்டும்.

என்பு—எலும்பு இல்லாத உயிரினங்களை வெயில் சுடுவதைப் போல, அன்பு இல்லாத மக்களை அறம் தண்டிக்கும். 'என்புஇல் அதனை வெயில்போலக் காயுமே; அன்புஇல் அதனை அறம்' (77). ஆதலால் 'அறம்' செய்தலே அனைத்துமாம் என்றாயிற்று. அன்புள்ளவர்களாக இருத்தலே அறத்தின் சாயல் ஆகும். வேறுபாடின்றி எல்லா மக்களையும் நேசிக்க வேண்டும். அன்பு இல்லாதவர்கள் 'எல்லாம் தங்களுக்கு மட்டும் இருக்கவேண்டும்' என்று நினைக்கும் கொடியவர்கள் ஆவார்கள். 'அன்பிலார் எல்லாம் தமக்கு உரியர்' (72) என்பது வள்ளுவர் வாக்கு. இது அறத்திற்குப் புறம்பான நெறியுமாகும். இப்படி அறநெறியினைக் கண்டு வாழாதவர் அறத்தினை மறந்து வாழ்ந்தால், கேடு உண்டாகிவிடும். 'மறத்தலின் ஊங்கு இல்லை கேடு' (32) என்பது பொதுமறைக் கட்டளையாகும். 'மனம் தூய்மை'யில்லாமல் செய்யப்படுவனவற்றையெல்லாம், ஆசிரியர் 'ஆகுல நீரபிற' (34) என்று கூறுகின்றார்.

அறமல்லாத வழியில் வருவதை இன்பம் என்று கருதி மகிழ்தல் தவறு ஆகும்; குற்றமாகும். அதனைப் 'புறத்த புகழும்இல' (39) என்று சொல்லுகிறார். தீமை செய்பவர்களை 'அறமே' தண்டிக்கும் என்பதனை அறிதல் வேண்டும். மற்றவர்கட்குத் தீமை செய்தால் அறம் அவனைக் கெடுமாறு செய்துவிடும். 'அறம் சூழும் சூழ்ந்தவன்கேடு' (204) என்று சொல்லப் படுகிறது.

ஆதலால், 'ஆகுல நீரபிற', 'புறத்த புகழும்இல' என்பதனை அறிந்து மனம் தூய்மையாக இருந்து வாழ்வதே 'இறைநெறி வழிபாடு' என்று மனத்திற் கொண்டு வாழ்வோமாக!

### மனக்கவலை மாற்றல்

மனக்கவலையினைப் போக்குகின்றவன் இறைவன். 'மனக்கவலை மாற்றல் அரிது' (7) என்ற குறட்பா இதனை உணர்த்துகிறது. உலகில் வாழ்கின்றவர்கட்கெல்லாம், வாழ்க்கையில் கவலை வருவது இயல்பேயாகும். இறைவன் தனக்கு உவமை இல்லாதவன்; இறைவன் இப்படிப்பட்டவன் என்று உவமை காட்ட முடியாது. இறைவனைத் தூய அறிவு வடிவினன் என்று கூறுகின்றார். 'நன்றின்பால் உய்ப்பது அறிவு' (422) என்பதனையும் சிந்தித்து அறிதல் வேண்டும். ஒழுக்கத்தின் தன்மையினையே இறைவன் என்று கூறுகிறார்.

இறைவனை ஆதிபகவன், வேண்டுதல் வேண்டாமையிலான், ஐந்து அவித்தான் என்பன போன்று கூறுகின்ற மரபுப்படி உயர்திணையில் கூறினாலும், பொருளுண்மையினை அமைத்துக் காட்டிச் செம்பொருள், மெய்ப்பொருள் என்றும் கூறுகின்றார்.

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம்இன்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு. 354

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. 355

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி 356

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு. 358

*இறைவன், 'குணங்கள் மயமானவன்' என்பதனை ஒன்பதாவது குறட்பா 'எண் குணத்தான்' என்று சொல்லி முடிக்கின்றது.*

இறைவனுக்கு உருவம் கற்பித்துவிட்டால், பிறகு அதுபோல் பிறிதொன்றை உவமை காட்டிவிட முடியும். இந்த உருவம் இப்படி இருக்கிறது என்று காட்ட முடியும். இறைவன் 'தனக்கு உவமை இல்லாதவனாவான்' என்பதனைச் சிந்திக்க வேண்டும். மனம் தூய்மையே அறமாகவும் அறமான இறைவன் 'வேண்டுதல் வேண்டாமை' இல்லாதவன் ஆதலால், அவனடி சேர்ந்தார் மனக்கவலையின்றி வாழ்வார் என்பதும் உணர்த்தப்பட்டது. 'சேர்தல்' என்பது இடைவிடாது நினைத்தலேயாகும்.

உயர்திணையில் அமைத்துப் பேசுங்காலத்தில் அடி, தாள் என்பனவற்றைக் கூறி விளக்குதல் மரபும் முறையுமாகும். உள்ளத்தில் தீய எண்ணங்கள் இல்லாதவாறு தூய்மை யாக வைத்துக் கொண்டு, இறை நெறியில் நிற்போமாக! 'வாலறிவன்' என்று இறைவனை அறிவின் வடிவத்தில் உணர்த்துகிறார். ஆதலால் தூய அறிவினனை, நற்செயல் புரியும் மனமும் அறிவும் படைத்தவர்கள்தான் வழிபட முடியும். அதுவே வழிபாடுமாகும். அறிவு இருந்தும் தீயனவற்றையே புரிபவர்கள் அன்பில்லாதவர்கள். அறத்தின் தண்டனைக்கு ஆளாவார்கள். 'அஃகி அகன்ற அறிவு என்னாம்' (175), 'அறிவினான் ஆகுவது உண்டோ' (315) என்பன போன்ற குறட்பாக்களைச் சிந்திக்க வேண்டும். அன்பு இல்லாதவர்களாகி அறத்தின் தண்டனைக்கு ஆளாகும் அறிஞர்கள் சிந்திப்பார்களாக.

## அறவினை செய்தல்

நல்ல செயல்களையே செய்தல் வேண்டும் என்பது அறநெறியின் அடிப்படை யாகும். 'செயற்பாலது ஒரும் அறனே' (40) என்று குறளறம் போதிக்கின்றது. நாள்தோறும் இயன்ற வழிகளிலெல்லாம் நல்ல செயல்களைப் புரிந்து கொண்டே இருக்க வேண்டும். நற்சிந்தனை, நற்சொல், நற்செயல் ஆகியவைகளே அறத்திற்கு இலக்கணங்களாகும். இடை விடாமல் 'அறம்' செய்து கொண்டே இருக்க வேண்டும். உயர்ந்த பிறவியாகிய மானிடப் பிறவிக்கு அறிவு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆதலால்தான் அறம் செய்து கொண்டே இருக்க வேண்டும் என்பதாயிற்று. இயன்ற அளவு செய்தல் வேண்டும். மனிதப் பிறவியை விடத் தாழ்ந்த பிறவிகட்கு அறிவு கொடுக்கப்படவில்லை. ஆதலால் அவை நற்செயல்களைத்

'தாமாகவே' செய்யா. அவைகளைப் பயன்படுத்தி நாம் பயன் பெறுகின்றோம். ஆனால் மனிதனுக்கு அறிவு கொடுக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் மனிதன் தானாகவே நாள்தோறும் அறம் செய்தல் வேண்டும். அதுவே இறைவனை வழிபடுதலாகும்.

'செல்லும் வாய் எல்லாம் செயல்' (33) என்று ஆசிரியர் கூறுகின்றார். அறமே இறை ஆகும்; அறம் நல்லவர்களிடத்தில் இயல்பாகவே இருக்கும். இதனை, அறமாகிய இறைவன், நல்லவர்களிடத்தில் தானாகவே சென்று சேர்வான் என்பதாக ஒரு குறட்பா குறிப்பாகக் கூறுகிறது. 'அறம் பார்க்கும் ஆற்றின் நுழைந்து' (130) என்பது குறளறம். இறைவன் 'அறவாழி அந்தணன்' என்பதனை நன்கு மனதில் பதித்துக் கொள்ளுதல் வேண்டும். பிறருக்கு இயன்றவரை நன்மை செய்வதையே மனிதக் கடமையாக — குறிக்கோளாகக் கொள்ளுதல் வேண்டும்; ஈகை செய்து வாழ்வதே அறத்தின் வழிகாட்டியாகும்.

நாள்தோறும் மிக மிகச் சிறிய அளவாவது ஈகை செய்து வாழவேண்டும். இதனை வாழ்க்கையில் சிறந்த பழக்கமாக ஒவ்வொருவரும் கொண்டாக வேண்டும். 'ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே, செல்லும் வாயெல்லாம் செயல்' (33) என்பதே அறம். 'செயல், செயல்' என்று வற்புறுத்திக் கூறப்படுவதனை மனத்துள் கொள்ளுதல் வேண்டும். 'செயற்பாலது' என்றும் வற்புறுத்திக் கூறுகிறார். 'அன்பு, அறம்' ஆகிய இந்த இரண்டினை வளர்க்கவும் செயல் முறையில் நடத்திக் காட்டுவதற்கும் இல்லறம் அமைக்கப்பட்ட தென்பதை அறிதல் வேண்டும். 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' (49) என்று விளக்கம் கொடுத்திருக்கின்றார்.

அன்பும் அறமும் இணைந்திருப்பனவாகும். பிறர்பால் அன்பு கொண்டு இயன்ற அளவு ஈகை செய்தலே வற்புறுத்தப்பட்டது. இத்தகைய வாழ்க்கை நெறியே இறை வழி பாட்டின் முறை ஆகும். இவ்வாறு வாழாமல் செய்யப்படுவனவெல்லாம், 'ஆகுலநீர பிற', 'புறத்த புகழும் இல' என்பனவற்றுள் போய்ச் சேருவனவேயாம். 'அறத்தான் வருவதே இன்பம்' (39) என்பதனை அறிதல் வேண்டும். அந்தணனைக் கூறவந்த ஆசிரியர், அந்தணர் என்போர் அறவோர் (30) என்றார். இறைவனாகிய அறவாழி அந்தணனை வழிபடுகின்ற முறை, நல்லெண்ணத்துடன் பிறர்க்குப் பயன்படுகின்ற செயல்களைச் செய்து வாழ்வதே யென்றறிந்து வழிபடுவோமாக!

## ஒழுக்கநெறியில் நிற்றல்

மெய்யான ஒழுக்க நெறியே இறைவன் நெறியாகும். இறைவனுடைய நெறியினை பொய்தீர் — அதாவது மெய்யான ஒழுக்க நெறி என்று போதித்தார். 'பொறிவாயில் ஐந்து அவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி' (6) என்று அமைக்கின்றார். ஒழுக்கத்தில் நின்று வாழ்வதே இறைவழிபாட்டிற்கு அடிகோலுவதாகும். ஒழுக்கத்திற்கு மாறுபட்டு நிற்பவர்களை 'கூடாவொழுக்கம்' என்ற அதிகாரம் விளக்குகிறது.

மனிதப் பிறவிக்கு உரிய ஒழுக்க நெறிகள் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. இறைவனைத் தூய அறிவினன், தூய மனத்தில் இருப்பவன் என்பதோடு அரிய எளிய குண வடிவானவன் என்றும், ஒழுக்கமே அவனுடைய நெறி என்றும் கூறுகின்றார். ஒழுக்கமாக நடந்து கொள்ளுபவர்கள் இறைவன் வழிபாட்டுக்குரியவராவர். 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' (131) என்று குறளறம் போதிக்கின்றது. அறம் என்பதற்குக் காரணமாக இருப்பது

ஒழுக்கமே என்பதனை 'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்' (138) என்றும் கூறுகின்றார். பிறவற்றையும் சிந்திக்க வேண்டும். அறவோர்களாகிய அந்தணர்களைக் குறிப்பிடுகின்ற போது 'ஒழுக்கத்து நீத்தார்' (21) என்று குறளறம் உரைக்கின்றது. மனிதப் பிறவியில் ஒழுக்கம் குன்றினால் அவன் விலங்கினமே யாவான். 'பிறப்பு ஒழுக்கம் குன்றக்கெடும்' (134) என்றொரு குறள் இயம்புகிறது. ''பிறப்பு ஒழுக்கம்' என்பது எல்லா உயிர்க்கும் 'பிறப்பு ஒக்கும்' (972) என்று நினைக்கின்ற பண்பாடும் ஆகும். இதுவே 'மக்கட் பண்பு' எனப்படும்.

'அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்' 997

என்று ஒன்று கூறப்படுகிறது.

பண்புதான் நற்குணம் எனப்படும். இறைவன் 'எண் குணத்தான்' என்று விளக்கப்படு கின்றான். நற்பண்பு இல்லாதவர்கள் இறை நெறியில் ஒழுக இயலாது. ஆதலால், ஒழுக்க முள்ளவர்களாக வாழவேண்டுமென்பதனை உயிரினும் மேலானதாகக் கருதவேண்டும். மறை நூல்களை ஓதுகின்றவன் அவைகளை மறந்தாலும் மீண்டும் ஓதிக் கொள்ளலாம் (134). ஆனால் ஒழுக்கம் கெடுகின்ற முறையில் நடந்து கொள்ளுவானேயானால் அவன் கெட்டு விடுவான். நூல்களை ஓதுகின்ற காரணம் ஒன்றே ஒருவனை ஒழுக்கமுள்ளவனாகச் செய்து விடும் என்று கருதுதல் தவறாகும் (823). மேலும் இவை போன்ற குறட்பாக்களையும் சிந்தித்தறிதல் நல்லது.

அன்பு உள்ளம், சமத்துவநெறி, பிறரை இகழ்ந்து பேசாத பண்பு, ஈகை செய்து வாழ்கின்ற இயல்பு என்பனபோன்ற குணங்களே மனித ஒழுக்கத்தின் வழிமுறைகளாகும். இந்த வகையில் நாள்தோறும் செயலில் வாழ்ந்து ஒழுகும் வழிபாடுதான் இறைவன் வழிபாடாகும்; இறைநெறி நின்று வாழ்வோமாக.

## சிந்தனைக்குச் சில

**சிந்தனைக்குரிய குறட்பாக்களில் சில தரப்பட்டுள்ளன.**
**பிறவற்றையும் இவ்வாறே கண்டு தெளிக.**

**எழுத்தும் இறைவனும்**

அகர முதல எழுத்துஎல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. 1

**முனிவர்களின் கோபம்**

குணம்என்னும் குன்றுஏறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது. 29

**பல்லக்கு**

அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை. 37

**ஆண் சிங்கம்**

புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை. 59

**அணிகலன்**

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. 60

**அமிழ்தம்**

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ். 64

**குழலும் யாழும்**

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். 66

**தாழ்ப்பாள்**

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். 71

**புழுக்கள்**

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம். 77

**வற்றல் மரம்**

அன்புஅகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று. 78

**தோல்**

அன்பின் வழியது உயிர்நிலை அஃதுஇலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. 80

**சாவாமருந்து**

விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்துஎனினும் வேண்டற்பாற் றன்று. 82

**அனிச்சம்**

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 90

**கனியும் காயும்**

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 100

**விண்ணும் மண்ணும்**

செய்யாமல் செய்த 'உதவிக்கு வையகமும்'
வானகமும் ஆற்றல் அரிது. 101

**ஞாலம்**

காலத்தி னால்செய்த நன்றி சிறிதுஎனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 102

**கடல்**

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது. 103

**துலாக் கோல்**

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்துஒருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி. 118

**தினை, பனை**

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார். 104

எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறன்இல் புகல். 144

தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். 433

**மலை**

நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது. 124

**ஆமை**

ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து. 126

**புண், வடு**

தீயினால் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு. 129

**தாங்குபவரை இகழ்பவன்**

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 151

**பதர்**

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கள் பதடி எனல். 196

**தீ**

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். 202

**நிழல்**

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந் தற்று. 208

**ஊருணி**

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு. 215

**பழுத்த மரம்**

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின். 216

**மருந்து மரம்**

மருந்துஆகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். 217

**யாக்கை**

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம். 239

**உலகங்கள்**

அருள்இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்இல்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. 247

**அருளாதானும் அறமும்**

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம். 249

**வலியார், மெலியார்**

வலியார்முன் தன்னை நினைக்க,தான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து. 250

**படை கொண்டார்**

படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம். 253

**வேட்டல்**

அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று. 259

**பொன்**

சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. 267

**பூதங்கள்**

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும். 271

**புலி, பசு**

வலியில் நிலைமையான் வல்உருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. 273

**வேட்டுவன்**

தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று. 274

**குன்றிமணி**

புறம்குன்றி கண்டுஅனைய ரேனும் அகம்குன்றி
மூக்கின் கரியார் உடைத்து. 277

**மறைந்தவர்**

மனத்தது மாசுஆக மாண்டார்நீர் ஆடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர். 278

**அம்பு, யாழ்**

கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங்கு அன்ன
வினைபடு பாலால் கொளல். 279

**தலைமழித்தல்**

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின். 280

**நீராடல்**

புறம்தூய்மை நீரான் அமையும் அகம்தூய்மை
வாய்மையால் காணப் படும். 298

**விளக்கு**

எல்லா விளக்கும் விளக்குஅல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 299

**கொல்லி**

சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும். 306

**அறைந்தவன்**

சினத்தைப் பொருள்என்று கொண்டவன் கேடு
நிலத்துஅறைந்தான் கைபிழையா தற்று. 307

**எரி**

இணர்எரி தோய்வுஅன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. 308

**கூத்து**

கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று. 332

**வாள்**

நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள்அது உணர்வார்ப் பெறின். 334

**முட்டை**

குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு. 338

**உறக்கம், விழிப்பு**

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 339

**எண், கண்**

எண்என்ப ஏனை எழுத்துஎன்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு. 392

**புண்**

கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். 393

**கேணி**

தொட்டனைத்து ஊறும் மணல்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு. 396

**ஆட்டம்**

அரங்குஇன்றி வட்டுஆடி அற்றே நிரம்பிய
நூல்இன்றிக் கோட்டி கொளல். 401

**பெண் காமம்**

கல்லாதான் சொல்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று. 402

**களர்**

உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களர்அனையர் கல்லா தவர். 406

**பாவை**

நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை அற்று. 407

**விலங்கினம்**

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர். 410

**செவி, வயிறு**

செவிக்குஉணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். 412

**அவி உணவு**

செவிஉணவின் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து. 413

**ஊற்றுக் கோல்**

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். 415

**வைத்தூறு (வைக்கோல்)**

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். 435

**நீர் திரிதல்**

நிலத்துஇயல்பால் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு
இனத்துஇயல்பு அதுஆகும் அறிவு. 452

**பாத்தி**

வகையறச் சூழாது எழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோர் ஆறு. 465

**மயிலிறகு**

பீலிபெய் சாகாடும் அச்சுஇறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். 475

**நுனிக் கொம்பு**

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதுஇறந்து ஊக்கின்
உயிர்க்குஇறுதி யாகி விடும். 476

**ஆறு, போறு**

ஆகாறு அளவுஇட்டிது ஆயினும் கேடுஇல்லை
போகாறு அகலாக் கடை. 478

**கூகையும் காக்கையும்**

பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. 481

**கயிறு**

பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு. 482

**ஆட்டுக்கடா சண்டை**

ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து. 486

**கொக்கு**

கொக்குஒக்க கூம்பும் பருவத்து மற்றுஅதன்
குத்துஒக்க சீர்த்த இடத்து. 490

**முதலை**

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. 495

**படகு, தேர்**

கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து. 496

**நரி, யானை**

கால்ஆழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
வேல்ஆள் முகத்த களிறு. 500

**கல்**

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். 505

**குளம், கரை**

அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடுஇன்றி நீர்நிறைந் தற்று. 523

**காக்கை**

காக்கை கரவா கரைந்துஉண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள. 527

**கோல்**

வான்நோக்கி வாழும் உலகுஎல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி. 542

**வேல்**

வேல்அன்று வென்றி தருவது மன்னவன்
கோல்அதூஉம் கோடாது எனின். 546

**களையெடுத்தல்**

கொலையின் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். 550

**வேல், கோல்**

வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. 552

**கண்ணீர்**

அல்லல்பட்டு ஆற்றாது அழுதகண் ணீர்அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 555

**துளி, அளி**

துளியின்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு. 557

**பசு**

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின். 560

**பேய்**

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண்டு அன்னது உடைத்து. 565

**அரம் தேய்க்கும்**

கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம். 567

**பண், கண்**

பண்என்னாம் பாடற்கு இயைபுஇன்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண். 573

**அணிகலன், புண்**

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்என்று உணரப் படும். 575

**மண், மரம்**

மண்ணோடு இயைந்த மரத்துஅனையர் கண்ணோடு
இயைந்துகண் ஓடா தவர். 576

**நஞ்சு, நாகரிகம்**

பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். 580

**மாறு வேடங்கள்**

துறந்தார் படிவத்தர் ஆகி இறந்துஆராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று. 586

**மலர் நீட்டம்**

வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு. 595

**களிறு**

சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பின்
பட்டுப்பாடு ஊன்றும் களிறு. 597

**புலி, யானை**

பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். 599

**உரம், மரம்**

உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கை அஃதுஇல்லார்
மரம்மக்கள் ஆதலே வேறு. 600

**விளக்கு**

குடியென்னும் குன்றா விளக்கம் மடிஎன்னும்
மாசுஊர மாய்ந்து கெடும். 601

**அடி அளந்தான்**

மடிஇலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு 610

**திரு**

முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 616

**தாமரையினாள்**

மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாள்உள்ளாள் தாமரையி னாள். 617

**வெள்ளம்**

வெள்ளத்து அனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும். 622

**பகடு (எருது)**

மடுத்தவாய் எல்லாம் பகடுஅன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து. 624

**எழுபது கோடி**

பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும். 639

**நாறா மலர்**

இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் கற்றது
உணர விரித்துரையா தார். 650

**பசுமண்கலம்**

சலத்தால் பொருள்செய்து ஏமார்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்துஇரீஇ அற்று. 660

**அச்சாணி**

உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து. 667

**தீ எச்சம்**

வினைபகை என்றுஇரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும். 674

**யானை பிடித்தல்**

வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று. 678

**குளிர் காய்வது**

அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்துஒழுகு வார். 691

**பளிங்கு**

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். 706

**அளக்கும் கோல்**

நுண்ணியம் என்பார் அளக்கும்கோல் காணுங்கால்
கண்அல்லது இல்லை பிற. 710

**வான்சுதை**

ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல். 714

**வளரும் பாத்தி**

உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று. 718

**அங்கணம்**

அங்கணத்துள் உக்க அமிழ்துஅற்றால் தம்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல். 720

**சாவார்**

பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத்து அஞ்சா தவர். 723

**வாள், நூல்**

வாளொடுஎன் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடுஎன்
நுண்அவை அஞ்சு பவர்க்கு. 726

**பேடி, வாள்**

பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சும் அவன்கற்ற நூல். 727

**பொருள், விளக்கு**

பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று. 753

**குழந்தை**

அருள்என்னும் அன்புஈன் குழவி பொருள்என்னும்
செல்வச் செவிலியால் உண்டு. 757

**யானைப் போர்**

குன்றுஏறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்துஒன்று
உண்டாகச் செய்வான் வினை. 758

**எஃகு**

செய்க பொருளைச் செறுநர் செருக்குஅறுக்கும்
எஃகுஅதனில் கூரியது இல். 759

**எலியும் நாகமும்**

ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும். 763

**கூற்றுவன்**

கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்றல் அதுவே படை. 765

**கல்லானவர்**

என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர். 771

**முயல், யானை**

கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது. 772

**எஃகு**

பேராண்மை என்ப தறுகண்ஒன்று உற்றக்கால்
ஊராண்மை மற்றுஅதன் எஃகு. 773

**வேலும் களிறும்**

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 774

**விழுப்புண்கள்**

விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து. 776

**கழல் கட்டுதல்**

சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. 777

**மறவர்கள்**

உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினும்சீர் குன்றல் இலர். 778

**சந்திரன்**

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு. 782

**உடுக்கை**

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 788

**அளப்பதோர் கோல்**

கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல். 796

**பருகுதல்**

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலின் குன்றல் இனிது. 811

**மூவர்**

உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர். 813

**குதிரை**

அமர்அகத்து ஆற்றுஅறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை. 814

**பட்டடை**

சீர்இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. 821

**கற்றமாணார்கள்**

பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது. 823

**வில்**

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 827

**படை, கண்ணீர்**

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. 828

**கையில் பூணுவான்**

பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். 836

**பித்தன்**

மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின். 838

**கழாத கால்**

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். 840

**தவம்**

அறிவிலான் நெஞ்சுஉவந்து ஈதல் பிறிதுயாதும்
இல்லை பெறுவான் தவம். 842

**அலகை (பேய்)**

உலகத்தார் உண்டுஎன்பது இல்என்பான் வையத்து
அலகையா வைக்கப் படும். 850

**வில், சொல்**

வில்ஏர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்ஏர் உழவர் பகை. 872

**பித்துப் பிடித்தவன்**

ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். 873

**முள் மரம்**

இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து. 879

**நிழலும் நீரும்**

நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின். 881

**வாள், கேள்**

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 882

**குயவனார் கருவி**

உட்பகை அஞ்சித்தன் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். 883

**செப்பு**

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி. 887

**அரமும் பொன்னும்**

அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி. 888

**எள்**

எள்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு. 889

**பாம்பு**

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடன்உறைந் தற்று 890

**கையால் கூப்பிடுதல்**

கூற்றத்தைக் கையால் விளித்தற்றா ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல். 894

**எரியும் சுடலும்**

எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்துஒழுகு வார். 896

**குன்றும் குடியும்**

குன்றுஅன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. 898

**இமையவர்கள்**

இமையாரின் வாழினும் பாடுஇலரே இல்லாள்
அமைஆர்தோள் அஞ்சு பவர். 906

**இருட்டறையும், பிணமும்**

பொருள்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ அற்று. 913

**மாய மகளிர்**

ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்குஎன்ப
மாய மகளிர் முயக்கு. 918

**அளறு (நரகம்)**

வரைவுஇலா மாண்இழையார் மென்தோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. 919

**மூன்று வகைகள்**

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. 920

**பித்தன் செயல்**

கைஅறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து
மெய்அறி யாமை கொளல். 925

**நஞ்சு உண்ணல்**

துஞ்சினார் செத்தாரின் வேறுஅல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுஉண்பார் கள்உண் பவர். 926

**நீரில் தேடுதல்**

களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ அற்று. 929

**மீனும் தூண்டிலும்**

வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று. 931

**காதல் சூது**

இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று உயிர். 940

**இரையும் மனிதனும்**

இழிவுஅறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய். 946

**விண்மதி**

குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து. 957

**வேர்**

நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல். 959

**தலைமயிர்**

தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை. 964

**குன்றும் குன்றிமணியும்**

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின். 965

**கவரிமா**

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். 969

**ஏத்தும் உலகு**

இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு. 970

**பிறப்பும் சிறப்பும்**

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். 972

**ஒருமை மகளிர்**

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டுஒழுகின் உண்டு. 974

**நோன்பு**

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 984

**கட்டளைக்கல்**

சால்பிற்குக் கட்டளை யாதுஎனின் தோல்வி
துலைஅல்லார் கண்ணும் கொளல். 986

**ஒப்பு**

உறுப்புஒத்தல் மக்கள்ஒப்பு அன்றால் வெறுத்தக்க
பண்புஒத்தல் ஒப்பதாம் ஒப்பு. 993

**அரமும் மரமும்**

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கள்பண்பு இல்லா தவர். 997

**பகலும் இருளும்**

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள். 999

**பால் திரிந்தது**

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலம்தீமை யால்திரிந் தற்று. 1000

**மணமாகாத பெண்**

அற்றார்க்குஒன்று ஆற்றாதான் செல்வம் மிகுநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று. 1007

**நச்சு மரம்**

நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று. 1008

**மாரி**

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறம்கூர்ந் தனையது உடைத்து. 1010

**வேலி**

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். 1016

**மரப்பாவை ஆட்டம்**

நாண்அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று. 1020

**போர்த் தலைவன்**

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. 1027

**ஆணி**

உழுவார் உலகத்தார்க்கு ஆணியஃது ஆற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து. 1032

**இல்லத்தாள்**

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும். 1039

**நெருப்பில் தூக்கம்**

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதுஒன்றும் கண்பாடு அரிது. 1049

**மரப்பாவை போக்கு**

இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. 1058

**கெடுக**

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகுஇயற்றி யான். 1062

**கஞ்சி**

தெண்ணீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்குஇனியது இல். 1065

**பசுவின் தாகம்**

ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல், 1066

**தோணி**

இரவுஎன்னும் ஏமாப்புஇல் தோணி கரவுஎன்னும்
பார்தாக்கப் பக்கு விடும். 1068

**கயவர்**

மக்களே போல்வர் கயவர் அவர்அன்ன
ஒப்பாரி யாம்கண்டது இல். 1071

**தேவர்**

தேவர் அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்துஒழுக லான். 1073

**ஆசாரம்**

அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது. 1075

**பறை**

அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துஉரைக்க லான். 1076

**கூன்கையர்**

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுஉடைக்கும்
கூன்கையர் அல்லா தவர்க்கு. 1077

**கரும்பு**

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ். 1078

**விற்பவன்**

எற்றிற்கு உரியர் கயவர்ஒன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து. 1080

**மயில்**

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு. 1081

**சேனை**

நோக்கினாள் நோக்குஎதிர் நோக்குதல் தாக்குஅணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து. 1082

**கண், கூற்று**

பண்டுஅறியேன் கூற்றுஎன் பதனை இனிஅறிந்தேன்
பெண்தகையால் பேரமர்க் கட்டு. 1083

**மான்**

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து. 1085

**துணி**

கடாஅக் களிற்றின்மேல் கண்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில். 1087

**மடநோக்கு**

பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணிஎவனோ ஏதில தந்து. 1089

**கள்**

உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று. 1090

**மருந்து**

இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து. 1091

**நீர் வார்த்தல்**

நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதுஅவள்
யாப்பினுள் அட்டிய நீர். 1093

**தானே மருந்து**

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து. 1102

**அவன்உலகு**

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. 1103

**தீ**

நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள். 1104

**தோள்**

வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள். 1105

**உயிர் தளிர்க்கிறது**

உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள். 1106

**காமமும் சேயிழையும்**

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு. 1110

**அன்னம்**

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். 1120

**பாலும் தேனும்**

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வால்எயிறு ஊறிய நீர். 1121

**உடம்பும் உயிரும்**

உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு. 1122

**வெந்துவிடும்**

நெஞ்சத்தார் காத லவர்ஆக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து. 1128

**திங்களும் பாம்பும்**

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று. 1146

**அன்னையும் நீரும்**

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய். 1147

**நெய்யும் நெருப்பும்**

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல். 1148

**பார்வை—புணர்வு**

இன்கண் உடைத்துஅவர் பார்வல் பிரிவு அஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு. 1152

**வளையல்கள்**

துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை. 1157

**விட்டால் தீ**

தொடின்சுடின் அல்லது காமநோய் போல
விடின்சுடல் ஆற்றுமோ தீ. 1159

**நீர் இறைத்தல்**

மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும் 1161

**காவடித் தண்டு**

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து. 1163

**அறைபறை**

மறைபெறல் ஊரார்க்கு அரிதுஅன்றால் எம்போல்
அறைபறை கண்ணார் அகத்து. 1180

**விளக்கு அணைதல்**

விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு. 1186

**காழில் கனி**

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழ்இல் கனி. 1191

**மழையும் அவளும்**

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. 1192

**காமமும் காவடியும்**

ஒருதலையான் இன்னாது காமம்காப் போல
இருதலை யானும் இனிது. 1196

**காமன்**

பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றுஒழுகு வான். 1197

**கள்ளும் காமமும்**

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது. 1201

**தும்மல்**

நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும். 1203

**கொலைக்களம்**

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும். 1224

**காலையும் மாலையும்**

காலைக்குச் செய்த நன்றுஎன்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. 1225

**அரும்பு**

காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய். 1227

**ஆயன் குழல்**

அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை. 1228

**கதவு உடைந்தது**

காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. 1251

**தும்மல் போல**

மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்புஇன்றித்
தும்மல்போல் தோன்றி விடும். 1253

**நாணம் தெரியவில்லை**

நாண்என ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின். 1257

**மாயக் கள்வன்**

பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை. 1258

**நிணம் (கொழுப்பு)**

நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்துஊடி நிற்பேம் எனல். 1260

**தேய்ந்த விரல்**

வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாள்ஒற்றித் தேய்ந்த விரல். 1261

**எழுநாள்**

ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேண் சென்றார்
வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு. 1269

**மணியும் நூலும்**

மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதுஒன்று உண்டு. 1273

**மொக்கு**

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு. 1274

**கள்ளுக்கு இல்லை**

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு. 1281

**பனையும் காமமும்**

தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்
காமம் நிறைய வரின். 1282

**எழுதுகோல்**

எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. 1285

**மார்பு**

இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்அற்றே கள்வநின் மார்பு. 1288

**மலரும் சிலரும்**

மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார். 1289

**உப்பு**

உப்புஅமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். 1302

**வள்ளிக்கொடி**

ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதல்அரிந் தற்று. 1304

**கருக்காய்**

துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று. 1306

**நீர் நிழல் புலவி**

நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது. 1309

**காய்ந்தான்**

நினைத்துஇருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யார்உள்ளி நோக்கினீர் என்று. 1320

**உண்ணலும் ஊடலும்**

உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது. 1326

**நுதல்**

ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலில் தோன்றிய உப்பு. 1328

## அறமே இறைவன்

இறைவனுக்கு விளக்கம் தருகின்ற ஆசிரியர் 'அறவாழி அந்தணன்' (8) என்று குறிப்பிட்டார். அறக்கடலாக இருப்பவனே இறைவன். அறக்கடலையே வடிவாக உடையவன் இறைவன். அந்தணன் என்ற பெயரில் இறையை அமைத்தார். 'மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன்' (34) என்று அறத்திற்கு விளக்கம் தரப்பட்டது. அந்த அறத்தினையே உருவகப்படுத்திக் கூறுகின்றார். அன்பில்லாத மக்களை அறக்கடவுள் தண்டிப்பான் என்றார். அறமே இறைவனாக உணர்த்தப்பட்டது. மனம் தூய்மையாக இருப்பது நன்கு வற்புறுத்தப்பட்டது. 'அன்பு இல் அதனை அறம்' (77) என்ற சொற்கள் இதனை மெய்ப்பிக்கின்றன.

'அடக்கம்' என்ற குணத்தின் சிறப்பினைப் பேசுகின்ற ஆசிரியர் அறக்கடவுள் அத்தகைய பண்பாளனிடத்துச் சென்று அடைவான் என்றார். அறத்தின் செயல் எடுத்துரைக்கப்பட்டது. அறத்தினை உருவகப்படுத்திக் கூறுகின்றார். 'அறம் பார்க்கும் ஆற்றின் நுழைந்து' (130) என்ற குறட்பாவினைச் சிந்திக்க வேண்டும். இவ்வாறே பிறவற்றையும் கண்டு தெளிதல் வேண்டும்.

பிறருக்குக் கேடு பயக்கும் செயல்களைச் செய்யக்கூடாது என்று பற்பல முறைகளில் நீதிகளைக் கூறுகின்றார். அவ்வாறே கூறுகின்றபோது, கெடுதி செய்ய எண்ணினால் 'அறக் கடவுள்' அவனைவிட்டு நீங்கி எண்ணியவனுக்குத் தீமை உண்டு பண்ணும் என்று குறிப்பிடுகின்றார். அறம் என்பது உருவகப்படுத்தப்பட்டது. 'அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு' (204) என்ற குறட்பா இதனை விளக்குகின்றது. இவ்வாறே பல இடங்களிலும் ஆசிரியர் கூறுவதனைச் சிந்தித்து அறிதல் வேண்டும்.

## ஓவாதே செயல்

அறச் செயல்களைச் செய்து கொண்டே இருக்க வேண்டும். 'ஓவாதே' என்றார். அதாவது எப்போதும் இடைவிடாமல் செய்து கொண்டே இருத்தல் வேண்டும். அப்படிச் செய்து வாழ்வதே மனித வாழ்க்கையாகும். 'அறவினை' என்பது மனம் தூய்மையால் செய்யப்படுகின்ற நற்பணிகளாகும். நற்பணிகளின் அடிப்படை ஈகை செய்தலே. எப்படியெல்லாம் செய்ய முடியுமோ அப்படியெல்லாம் இயன்ற அளவு (முடிந்த வரை) செய்து வருவதனைக் குறிக்கவே 'ஒல்லும் வகையான்' என்று அமைத்தார்.

> **ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
> **செல்லும்வாய் எல்லாம் செயல்.** 33

வாய்ப்பு கிடைக்கின்ற நேரங்களில் எல்லாம், வழிகளில் எல்லாம், அறவினை செய்து கொண்டே இருக்க வேண்டும். இப்படிச் செய்கின்ற பழக்கத்தினை - நல்ல வாழ்க்கைப் பழக்கமாகக் கொண்டு வர வேண்டும். ஆதலால்தான் 'ஓவாதே' என்று கூறினார். இவ்வாறு நல்லெண்ணம் கொள்ளுவதும் நற்சொல் உரைப்பதும் நற்செயல் புரிவதும்தான் அறமாகும் என்பதனைக் குறித்துக் காட்டவே, 'அறத்தான் வருவதே இன்பம்' (39) என்று தெளிவுபடுத்தினார். 'வருவதே' என்ற சொல்லில் காணப்படும் 'ஏ'காரம் ஆழ்ந்த பொருளினைக் குறிக்கும். வறியவர்கட்கு ஈகை செய்து, பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பி அதனால் இன்பம்

நுகர்வதுதான் உண்மையான இன்பம் என்பதை வற்புறுத்துவதையே கருத்தாகக் கொண்டு 'வருவதே இன்பம்' (39) என்றார்.

இடைவிடாமல் வறியவர்கட்கு இயன்ற அளவு ஈகை செய்து கொண்டு வருவதுதான் அறம் என்றும் அந்த நெறிதான் இறைவழிபாடு என்றும் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும். இந்த நெறியினைப் புனிதமான அறமாகத் தெரிந்து கொள்ளாமல் பிறவழிகளில் செய்யப் படுவன பயனற்றவை; அனைத்தும் 'ஆகுல நீர பிற' (34) 'புறத்த புகழும் இல' (39) என்பவற்றுள் அடங்கும். அறம் செய்யாமல் - அறவினையினை உணர்ந்து கொள்ளாமல் - பிறரிடம் அன்பு செய்யாமல் வாழ்கின்ற வாழ்க்கை மனித வாழ்க்கை ஆகாது என்று மட்டும் ஆசிரியர் சொல்லி முடித்து விடவில்லை; அன்பு காட்டாமல் மனிதத் தன்மையில்லாமல் இருப்பவர்களை 'அறம்' தண்டிக்கும் என்றே கூறினார்.

என்புஇல் அதனை வெயில்போலக் காயுமே
அன்புஇல் அதனை அறம். 77

ஆதலால் அன்பில்லாத மக்கள் தண்டிக்கப்படுவார்கள் என்பதாயிற்று. அறமே (சக்தி) ஆற்றல் உள்ளதாகக் கூறப்பட்டது. இறைவனை 'அறவாழி அந்தணன்' என்று கூறப் பட்டதையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அறத்தினை இன்னதென்று தெரிந்து கொண்டு அதன்படி நடவாத மக்கள் கேடு அடைவார்கள் என்பதும் குறிக்கப்பட்டது. ...'அதனை (அறத்தினை) மறத்தலின் ஊங்கில்லை கேடு'(32) — இவ்வாறு அறவினை செய்யாத மக்கள் துன்பப்படுவார்கள் என்பது உணர்த்தப்பட்டது. அறவழியில் வாழாத மக்கள் நிறைந்த சமுதாயமும் நாடும் கேட்டிற்கு ஆளாகித் துன்புறும் என்பது உறுதி. இதனை ஆசிரியர் பல முறை கூறுகிறார்.

காயுமே அன்பிலதனை அறம் 77
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு 204
அறம் நாணத்தக்கது 1018

என்பன போன்ற குறிப்புக்களையெல்லாம் நன்கு புரிந்து கொண்ட பிறகு அறம் எவ்வாறு தண்டிக்கும் என்பதனையும் விளக்கமாகப் புரிந்து கொள்ள வேண்டியது அறிவுடைய மக்களின் செயலாகும்.

'அறம்' நல்லவர்கட்கு நன்மை செய்யும்; நல்லவர்களிடத்திற்கு நாடிப் போகும் என்ற குறிப்புக்களையும் நாம் நன்கு தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

சிறப்பு ஈனும் செல்வமும்ஈனும் அறம் 31
அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை 32
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து 130

தீய நெறியில் — ஒழுக்கம் கெட்டு — அறவினை மறந்து — வாழ்கின்ற மக்கள் ஒரு நாட்டில் மிகுதியாகி விட்டால் அந்த நாட்டில் 'அறம்' கேடு விளைவிக்கும் என்பதனையும்

புரிந்து கொள்ள வேண்டும். 'அதனை மறத்தலின் ஊங்கில்லை கேடு' (32) என்கின்ற பேருரையினை மனதிற் கொண்டு நாள்தோறும் அறம் செய்கின்ற பழக்கத்தினை ஒவ்வொருவரும் பழகிக் கொள்ள வேண்டும்.

## இறை வழிபாடு

'கற்றதனாலாய பயன் என்' என்று ஆசிரியர் வினா முறையில் இறைவனுக்கு விளக்கம் தருகின்ற போது, 'தூய அறிவு வடிவினன்' (வாலறிவன்) என்று விளக்கம் தந்து அவனை வணங்குதல் வேண்டும் என்று கூறுகின்றார் — என்று மட்டும் நிறுத்துதல் பொருந்தாது; கற்றவர்கள், கல்லாதவர்கள் அனைவருமே இறைவனை வணங்குதல் வேண்டும். மனம் போன போக்கில் இறைவனை — கடவுளைக் கற்பனை செய்து—அறமல்லாத வழிகளில் நடந்து கொண்டு அதுவே இறைவழிபாடு என்று 'கல்வியறிவு இல்லாதவர்கள்' நடந்து கொள்ளுதல் கூடும் என்ற கருத்தினையும் குறிப்பால் உணர்த்த வேண்டியே இவ்வாறு கூறினார் என்று அறிதல் வேண்டும்.

இறைவன் 'மனத்தில் இருப்பவன்' (மலர்மிசை ஏகினான்) என்று எண்ணி இறைவனை வழிபடல் வேண்டும்; எனவே மனம் தூய்மையாக இருக்கவேண்டும். நாள்தோறும் ஈகை (தருமம்) மிகச்சிறிய அளவாக இருந்தாலும், செய்கின்ற பழக்கத்தினை— வாழ்க்கைப் பழக்கமாகக் கொள்ளுதல் வேண்டும். 'இன்றைய தினம் ஏதேனும் ஓர் அறமாவது செய்தோமா?'' இடைவிடாமல் செய்தல் வேண்டும் என்று கூறுகின்றார். மிக மிகச் சிறிய அளவில் ஈகை (தருமம்) செய்தாலும், அது குறையாகி விடாது. அறமான எண்ணம் உள்ளத்தில் வந்து வளர்கிறது என்பது பொருளாகும்; இதுவே இறை வழிபாடாகும். அறத்தினை மறந்த நாடு கேட்டிற்கு ஆளாகியே தீரும்.

'மலர் மிசை ஏகினான்' என்று இறைவனைக் குறித்தது போல், இறைவழி நிற்பவர்களுக்குத் 'துன்பமே வராது' (யாண்டும் இடும்பை இல) என்றும் 'மனக்கவலை நீங்கும்' (மனக்கவலை மாற்றல்) என்றும் கூறப்படுகிறது. இவையே ஆசிரியரின் இறையருள் உண்மைகளாகும். அப்படியிருக்க மக்கள் கவலையிலும் துன்பத்திலும் உழலுகிறார்கள் என்றால் இவர்கள் அறநெறி மறந்து வாழ்கின்ற மக்கள் என்று கருதிச் சிந்திக்க வேண்டும். 'உலகிலுள்ள எல்லா உயிரினங்களும் நன்றாக இருக்க வேண்டும்' என்ற எண்ணத்தில் வாழ்பவனையே அந்தணன் (30) என்று 'நீத்தார் பெருமை' அதிகாரத்தில் கூறினார்.

இறைவனைக் குறிக்கின்றபோது 'அந்தணன்; அறவாழி அந்தணன்' என்றார் ஆதலால், உள்ளத்தில் நிறைய அன்பு கொண்டு எல்லோரும் இன்புற்றிருக்க இயன்றவரை ஈகை (தருமம்) செய்து வாழ வேண்டும். நாள்தோறும் அவ்வாறு வாழாதவர்கள் அறத்தினை மறந்தவர்கள் ஆவார்கள். 'மறத்தலின் ஊங்கில்லை கேடு' என்றார். அத்தகைய மக்கள்— கூட்டத்தினர் நிறைந்திருக்கின்ற இடம் கேட்டினை அடையும் என்பதாயிற்று. உலகப் பொதுமறை அருளிய ஆசிரியர் உலகிற்கு இறைவன் ஒருவனே என்பதனை முதற்குறட்பாவில் உறுதிப்படுத்திக் கூறினார். அவ்வழி நின்று 'ஒன்றே இறைவன்' என்று எண்ணி வழிபடுவதே இறை வழிபாடாகும். இதற்கு மாறுபட்ட எண்ணம் கொண்டவர்கள் இறை நெறியில் செல்லாதவர்கள் ஆவார்கள்.

'வேண்டுதல் வேண்டாமை இலான்', 'பொறிவாயில் ஐந்து அவித்தான்', 'எண் குணத்தான்', 'பற்றற்றான்', 'மெய்ப் பொருள்', 'செம்பொருள்' என்றெல்லாம் இறைவன்—

இறைத்தன்மை நன்கு தெளிவாக்கப்பட்டு விட்டது. அப்படிப்பட்ட இறைவனை நற்குணங்களாகிய மனத்தினால் வழிபடுவதே இறை வழிபாடாகும்.

நற்குணங்கள்—எண் குணத்தான் வழிபாடு — வாலறிவனைத் தொழுதல் — ஒழுக்க நெறியில் நிற்றல். மனக்கவலை நீக்குதல் — மலர்மிசை ஏகினான் மாணடி சேர்தல்.

**'அறவாழி அந்தணன் தாள் சேர்தல்'**

அறத்தின் வழியில் ஒழுகி நாள்தோறும் அறம் செய்வதே இறைவழிபாடு ஆகும்.

**'மலர் மிசை ஏகினான் மாணடி சேர்தல்'**

தூய மனத்தில் இருக்கும் இறைவனை மனத்தால் நினைத்து வணங்குவதே இறை வழிபாடாகும்.

**'வாலறிவன் நற்றாள் தொழுதல்'**

இறைவன் தூய அறிவினன்; நற்செயல்கள் புரிவதே தூய அறிவினனைத் தொழுதலாகும். 'நன்றின்பால் உய்ப்பது அறிவு' என்பதனை உணர்ந்து நல்ல மனதுடன், நாள் தோறும் இயன்ற அளவு நற்பணி புரிதலே வாலறிவனை வழிபடுவதாகும்.

**பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்றல் வேண்டும்**

இறைவன் நல்லொழுக்கமே வடிவானவன். மக்கள் பிறப்பு ஒழுக்கம் குன்றாமல் வாழ்தலே இறை வழிபாடாகும். ஒழுக்கம் என்பது மக்கள் பிறவிக் கென்றே உண்டானதாகும். பிறருக்கு இயன்ற அளவு உதவி செய்தலும், (ஒப்புரவு அறிதல்) மக்களோடு மக்களாகச் (ஒத்தது அறிவான்) சேர்ந்து கலந்து ஈகை புரிந்து வாழ்தலும் — ஆகிய இன்ன பிற செயல்களே. ஒழுக்கமுடைமைக்கு அடிப்படையாகும். அந்த வழியில் நின்று கடைப்பிடித்து வாழ்வதே இறை வழிபாடென்றும் அறிதல் வேண்டும்.

**அற ஆழி அந்தணன் தாள் சேர்தல்**

பல்வேறு வகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவாக உடையவன் இறைவன். அறமான மனம் கொண்டு நினைத்து வாழ்தல் வேண்டும்.

**அறவாழி**

**மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன்**

மனத்தில் பொறாமை, வஞ்சனை, கடுங்கோபம், பிறரை இகழ்தல் முதலியன போன்ற தீய எண்ணங்கள் இல்லாதிருப்பதே அறமாகும்.

**ஆகுல நீர பிற**

மனத்தில் தீய சிந்தனைகளை வைத்துக் கொண்டு மற்றவர்கள், தன்னை இறை வழிபாடு செய்பவன் என்று நினைக்க வேண்டும் என்பதற்காக வேண்டியே செய்கின்ற

வெளிப்பகட்டான செயல்கள் அனைத்தும் ஆரவார ஆடம்பரங்களேயாகும்; இறை வழிபாடு ஆகாது; பயனற்றவையாகும்.

### சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும்

அறம் இன்னது என்பதனைத் தெரிந்து கொண்டு, அந்த வழியில் வாழ்ந்து செயல்புரிகின்ற மக்கள் எல்லா இன்பங்களையும் அடைவார்கள். நல்லெண்ணம், நற்சொல், நற்செயல் இவையே அறநெறிகளாகும்.

### மறத்தலின் ஊங்கு இல்லை கேடு

அறத்தினை மறந்து நற்பணிகளை நாள்தோறும் செய்யாமல், வாழ்கின்ற மக்கள், கேட்டிற்கு ஆளாகித் துன்புறுவார்கள். அறத்தின் வழியென்பது நற்செயல் புரிவதேயாகும்.

### செல்லும்வாய் எல்லாம் செயல்

அறத்தினை — அறச்செயல்களை நாள்தோறும், இடைவிடாமல் செய்து கொண்டே இருக்க வேண்டும். இயன்ற அளவு செய்து வருதலே போதுமானதாகும். மனத்தூய்மை அன்பினை வளர்க்கும். பிறர்க்குச் சிறிதளவாவது நாள் தோறும் ஈகை செய்துவருதலே அறத்திற்கு முதற்படியாகும். வறியவர்கட்கு ஈதலே ஈகையாகும்.

### வெயில் போலக் காயும்

மக்கள் பிறவி என்பதற்கு அடையாளமே அன்பு நிறைந்த உள்ளத்துடன் வாழ்தலாகும். அன்பும் மனத் தூய்மையும் இணைந்ததென்றே அறிதல் வேண்டும். அன்பு அறம் உள்ளவர்களே இறைவழி நிற்பவர்களாவார்கள். அன்பு இல்லாத மக்களை அறமே தண்டிக்கும்.

## புறத்த புகழும் இல

மனம் போன போக்கில் செயல்கள் புரிந்து கொண்டு அதனால் இன்பம் பெறுவதாக எண்ணுவதெல்லாம் தவறு. அறவழியில் இருந்து வருவதொன்றுதான் உண்மையான இன்பமாகும். மற்றவை இன்பந் தரா; புகழும் தரமாட்டா.

**'நல்லாற்றின் நின்ற துணை', 'இல்வாழ்வான் என்பான் துணை',**
**'அன்பும் அறமும் உடையவனாக இருத்தல்'.**

உயர்ந்த எண்ணங்கள் உள்ளத்தில் நிறைந்து இருக்க வேண்டும். மனைவி மக்களுடன் இன்பம் அனுபவித்துப் பொருளீட்டி வாழ்ந்து மறைவதே மனித வாழ்க்கை ஆகிவிடாது. பிறர்க்கு இயன்ற அளவு துணையாக இருந்து வாழ்கின்ற பழக்கத்தினைப் பழகிக் கொள்ள வேண்டும். இதுவே இல்லறம்; இதுவே அறம்; இதுவே அறநெறியில் வாழ்வதாகும்.

## அறம் எனப்பட்டதே இல்வாழ்க்கை

இல்லற வாழ்க்கையினை மேற்கொள்ளுவது இயல்பாகவே இயன்ற அளவு ஈகை செய்வதற்கென்பதனைப் புரிந்து கொள்ள வேண்டும். ஈகை செய்வதற்கு அன்பு வேண்டும். அன்பினை வளர்ப்பதே இல்லறம். இதுதான் இறைநெறி வழிபாடாகும். மிகச் சிறிய அளவேனும் நாள்தோறும் பிறர்க்கு 'ஈதல்' செய்தல் வேண்டும். பலர் இந்தப் பழக்கத்தினைப்

பழகிக் கொள்ளாமல் இருக்கிறார்கள். இயலாத காரணத்தினால் 'ஈகை' செய்ய முடியாமல் இருக்கின்றார்கள் என்று சொல்லுவது பொதுப்படப் பொருந்தாது. முடிந்த அளவு—சிறிதாவது செய்தலே போதும். 'ஒல்லும் வகையான்' (33) என்று சொன்னதும் அதற்காகத்தான்; இவ்வாறு செய்கின்ற அறநெறிதான் இறைவழிபாடாகும். இதனை மனதிற் கொள்ளுதல் வேண்டும்.

## வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்

இல்லறத்தில் ஈகை செய்து, ஒப்புரவு செய்து பகுத்துண்டு வாழ்வதுதான் வாழ்வாங்கு வாழ்தலாகும். அப்படிச் செய்து வாழ்ந்தாலே போதும். அந்த வாழ்க்கையே மேலான நிலை என்று உலக மக்களிடையே கூறப்படுகின்ற சிறப்பினைத் தரும்.

## சான்றோன் எனக் கேட்ட தாய்

உலக மக்களில் மிகச் சிறந்த குணங்களெல்லாம் நிறைந்திருப்பவனையே சான்றோர் என்று ஆசிரியர் திருவள்ளுவர் கூறுகின்றார். கல்வி, அறிவு, மதிநுட்பம் முதலின பெற்றிருந் தாலும் ஒருவனிடம் சான்றாண்மை — மக்கட் பண்பு இல்லையென்றால் அவன் ஓர் அறிவுள்ள மரத்திற்குச் (997) சமமாவான்.

## அன்பிலார் எல்லாம் தமக்குரியர்

மனத்தில் அன்பு இல்லாதவர் மனிதர்களாகக் கருதப்பட மாட்டார்கள். அவர்கள், மரங்களிலே வற்றல் மரத்திற்குச் சமமானவர் ஆவார்கள். எல்லா இன்பமும் தங்களுக்கே இருக்க வேண்டும், தாங்களே எல்லாம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பது போன்று, இன்ன பிற தீய எண்ணங்கள், அன்பு இல்லாதவர்களிடத்தில் இருக்கும். இப்படிப் பட்டவர்களை அறம் துன்புறுத்தும்; இத்தகைய மக்கள் நிறைந்திருக்கின்ற சமுதாயம் துன்புறும்; இவர்கள் இறைவன் வழிபாடு செய்யாதவர்கள் ஆவார்கள்.

## விருந்தோம்பி வேள்வி தலைப்படுதல்

முனிவர்கள் போன்ற மேலோர்களையும் புதிதாக வருகின்றவர்களையும் விருந்து என்கிற சொல் குறிக்கும். அத்தகைய பெரியார்களை உபசரிப்பதனையே வேள்வி (87, 88) என்று குறிப்பிடுகின்றார். இரண்டு குறட்பாக்களில் மட்டும் இச்சொல் காணப்படுகின்றது. இதைத்தான்—விருந்தினரான பெரியார்களை உபசரிப்பதனையே—சிறப்பாக வேள்வி என்றார். நற்குணமான இதனைப் பழகி நடப்பதே எண் குணத்தானான இறைவழிபாடென அறிவோமாக.

## அல்லவை தேய அறம் பெருகும்

இனிய சொல் பேசுவதையே அறம் என்று கூறுகின்றார். இஃது அருமையான நற்குணம். இனிய சொற்கள் பேசுவதால் தீமை அகலும்; மறுமை இன்பமும் கிட்டும். அறம்

வளரும்; நற்பண்புகளைப் பெற்று அதன்படி நடப்பதே அறமாகும். மனம் தூய்மைக்கு வழி வகுக்கும். இனியவை கூறுதல் போலவே செய்ந்நன்றியறிதல் குணத்தினைப் பழகுதல் வேண்டும்.

### கெடுவல்யான் என்பது அறிக

ஒர வஞ்சனையாக நடந்து கொள்ளுபவன் கெட்டு விடுவான். தீய குணமே ஒருவனை அழிக்கும். நடுவு நிலைமையுடன் நடந்து கொள்ள வேண்டும். தீய குணம் உள்ளவர்கள் பெருகியிருக்கும் நாடு கேடு அடையும். இறைவழிபாடு என்பது நல்ல குணங்களை வளர்ப்பதாகும். நல்ல எண்ணங்கள் தோன்றுகின்ற இடம் மனமேதான். அதனை நன்றாக வைத்துக் கொள்ள வேண்டும். நேர்மையின்றி ஒரவஞ்சனையான மனதை வைத்துக் கொண்டிருப்பவனை அறம் தண்டிக்கும்.

### அறம் பார்க்கும்

இறைத்தன்மையாக ஆசிரியர் கூறும் நற்குணங்கள் அனைத்தும் பொன்னானவையாகும். இவ்வாறு நற்பண்புகளைப் பழகி அதன்படி நடந்தால் அறமே – அறமான இறைத் தன்மையே அவனிடத்தில் தானாக வந்து சேரும் என்று கூறுகின்றார். உயர்ந்த குணங்களைப் பழகாமல் வேடிக்கைபோலச் செய்கின்றவையெல்லாம் இறைவழிபாடு ஆகாது. மனம் போன வழியில் செயல்களைச் செய்து கொண்டு அதனால் ஏற்படுவது மன மகிழ்ச்சியான இன்பம் என்று எண்ணுவதெல்லாம் தவறு என்பதை உணர்த்தவே, 'அறத்தான் வருவதே இன்பம்' (39) என்றும் சொல்லி வைத்தார்.

### நன்றிக்கு வித்தாகும் நல்ஒழுக்கம்

ஒழுக்கத்தினை உயிரினும் மேம்பட்டதாகக் கருதி நடப்பதே மனிதப் பிறவிக்கு இலக்கணமாகும். இறைவன் வழியினை 'பொய்தீர், ஒழுக்க நெறி' என்று கூறினார். அற வாழ்க்கைக்கு வித்து ஒழுக்கமாகும். மனிதத் தன்மையில்லாதவன் விலங்கினமாவான். 'மரம் போன்றவன்' என்றொரு குறட்பாவில் கூறினார். பிறன்மனை நயவாமை என்பது நல்லொழுக்கத்தின் சிகரமான தன்மைகளில் ஒன்றாகும்.

### அறன் அல்ல செய்யாமை நன்று

மிகச்சிறந்த அதிகாரங்களில் 'பொறையுடைமை' என்பதும் ஒன்று. நற்குணங்கள் பலவற்றிற்கும் இக்குணம் இருப்பிடம் எனலாம். பல கருத்துக்களைக் கூறிக்கொண்டு வருகின்ற ஆசிரியர், 'அறம் அல்லாத செயல்களைச் செய்யாதே' என்கிறார். மிகக் கொடிய பாவியாகிய பொறாமைக் குணம் நீங்கினால்தான் மனிதன் அறநெறியில் ஒழுக முடியும்.

### பொல்லாத சூழக் கெடும்

மற்றவர்களுடைய பொருள்களை வஞ்சித்துக் கவர்ந்து கொள்ள நினைப்பவன் கெட்டு விடுவான். தீய குணங்களே ஒருவனை அழிக்கும். நற்பண்புகளை வளர்த்து இறைநெறி நிற்போமாக.

## அறம் நோக்கி ஆற்றும்கொல் வையம்

திருக்குறளில் கொடுமையானவற்றைக் குறிக்கும் பகுதிகளில் ஒன்று புறங்கூறுதலாகும். இக்கொடிய பழக்கம் உள்ளவர்களை இந்நிலம் எவ்வாறு சுமந்து கொண்டிருக்கின்றதோ என்பதாக அமைக்கின்றார். அறத்தின் திறம் இங்கும் சுட்டிக் காட்டப்படுகிறது. நல்ல நல்ல குணங்கள் தவிர இறைவழிபாடென்று வேறு பிறவற்றைக் கருதுதல் அறியாமை என்று உணர்த்தப்படுகிறது இவ்வாறே பயனில்லாத சொற்களைப் பேசித் திரிவதும் மனிதத்தன்மை ஆகாது.

## அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு

'தீவினை அச்சம்' என்ற அதிகாரம் நல்வாழ்க்கை வாழ்வதற்கு வழிகோலும் வகைகளில் ஒன்று. எல்லாவற்றையும் சுட்டும்போது அறத்தினை முன்வைத்தே ஆசிரியர் கூறுகிறார். இது பன்முறையும் சிந்திக்கத்தக்கது. தீய எண்ணத்தினைக் கொண்டு தீய செயல்களைச் செய்பவன் அறத்தினால் தண்டிக்கபடுவான் என்றார்.

## செத்தாருள் வைக்கப்படும்

மக்களோடு மக்களாகச் சேர்ந்து நன்கு வாழ்வதே மனித வாழ்க்கையாகும். பிறருக்கு இயன்ற அளவு உதவி செய்து வாழ்கின்ற பழக்கத்திற்கு (ஒப்புரவுக்கு) ஈடாக எந்த உலகத்திலும் எதையும் சொல்ல முடியாது. ஒத்துப் போகும் பண்புடன் சேர்ந்து வாழாமல், தனித்து வாழ்கின்றவர்கள் செத்தவர்களோடு வைக்கப்பட வேண்டியவர்களாவார்கள்,

## தாமே தமியர் உணல்

பிறரிடம் யாசித்து (பிச்சையெடுத்து) சாப்பிடுவதைவிடக் கொடுமையானது என்ன வென்றால், யாருக்கும் கொடுக்காமல் தன்னந் தனியாகத் தான் மட்டும் சாப்பிட்டு வாழ்கின்றானே அந்தப் பழக்கம்தான் என்றார். மனிதன் என்று தன்னை விளக்கிக் காட்ட வேண்டுமென்றால் பிறருக்கு ஈகை செய்தல் வேண்டும். இயன்ற அளவு நாள் தோறும் ஈகை செய்து வாழ்வதே இறை வழிபாடு ஆகும்.

## வாழ்வாரே வாழ்வார்

ஈகை செய்து இசைபட வாழ்வதுதான் மனித வாழ்க்கை. ஈகை செய்தால் இசை எனும் புகழ் வரும். அப்படி வாழ்பவர்களையே வாழ்பவர்கள் என்று கூறினார். நற்பண்புகளை வளர்த்து அறச்செயல்கள் புரிந்து கொண்டிருப்பதையே இறைவழிபாடு என்றறிந்து வாழ்வோமாக.

## மனத்திட்பம்

நோன்பு நோற்று ஒரு மனப்பட்டுத் தவம் செய்பவர்கள் பெறுகின்ற அரிய ஆற்றல்களைப் பல குறட்பாக்களில் கூறுகின்றார். தவத்தின் வலிமையை 'எண்ணின் தவத்தான் வரும்' (264) என்று கூறுகிறார். 'வேண்டிய வேண்டியாங்கு எய்தல்' (265) என்றும்

தவத்தின் சிறப்பினைச் கூறுகிறார். 'கூற்றம் குதித்தலும் கை கூடும்' (269) என்றும் சிறப்பிக்கின்றார். இப்படிப் பலப்பல. ஒரு மனப்பட்டுத் தவம் செய்கின்றவர்களைப் பற்றிப் பேசிய ஆசிரியர், உலகியல் வாழ்வில் மன உறுதிப்பாடு பெற்றவர்களின் வெற்றியினையும் குறித்துக் காட்டுகின்றார்.

எடுத்த செயலினை முடிப்பதற்கு மனத் திண்மையே இன்றியமையாதது என்பதனைக் கூற வந்தவர், 'மனத்திட்பம்' (661) என்று குறித்துக் காட்டினார்.

> எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின். 666

மனத்திண்மை என்பது அத்தகைய வெற்றியினை அளிக்கும் என்றும் கூறினார். "திண்ணியராக" இருத்தல் எளிதல்ல. அருமை என்பதனை உணர்த்தவே 'பெறின்' என்று முடித்தார். இங்கு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டிய குறட்பாவும் சிந்திக்கத்தக்கதாகும்.

## மேற்கோள் சில

**ஆசிரியர் காட்டியுள்ள மேற் கோள்களில்
குறிப்பானவற்றில் சில தரப்பட்டுள்ளன.**

வானோர்கள், விசும்புளார் கோமான் இந்திரன், வானுறையும் தெய்வம், புத்தேளிர், வானத்தவர், [வானகமும் வையகமும்] அமரர், ஆரிருள், புத்தேள் உலகம், மேலுலகம், இன்னா உலகம், அவ்வுலகம், இமையவர்கள், அளறு, முகடி, புத்தேள் நாடு, தேவர், தாமரைக் கண்ணான் உலகு, திங்களைப் பாம்பு, வானோர்க்கு உயர்ந்த உலகம், அவியுணவின் ஆன்றோர், அடியளந்தான், மாமுகடி, தாமரையினாள், அணங்கு, அலகை முதலியன.

பிற இடங்களில் விளக்கங்களைக் கண்டு தெளிதல் வேண்டும்.

**பூசனை**

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு. 18

**இந்திரன்**

ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி. 25

**வானுறையும் தெய்வம்**

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும். 50

**புத்தேளிர்**

பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெரும்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு. 58

**வானத்தவர்**

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. 86

**வையகம் வானகம்**

செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. 101

அமரர், ஆரிருள்

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். 121

புத்தேள் உலகம்

புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே
ஒப்புரவின் நல்ல பிற. 213

நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு. 234

கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தேள் உலகு. 290

மேல் உலகம்

நல்லாறு எனினும் கொளல்தீது மேல்உலகம்
இல்எனினும் ஈதலே நன்று. 222

இன்னா உலகம்

அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல். 243

அவ்வுலகம்

அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்இல்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. 247

அளறு

உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு. 255

ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு. 835

வரைவிலா மாண்இழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. 919

**வானோர்க்கு உயர்ந்த உலகம்**

யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும். 346

**அவிஉணவு**

செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து. 413

**அடியளந்தான்**

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு. 610

**மாமுகடி, தாமரையினாள்**

மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாள்உளாள் தாமரையி னாள். 617

**அலகை**

உலகத்தார் உண்டுஎன்பது இல்என்பான் வையத்து
அலகையா வைக்கப் படும். 850

**இமையவர்**

இமையாரின் வாழினும் பாடுஇலரே இல்லாள்
அமையார்தோள் அஞ்சு பவர். 906

**முகடி**

அகடுஆரார் அல்லல் உழப்பர்சூது என்னும்
முகடியான் மூடப்பட் டார். 936

**புத்தேள் நாடு**

புகழின்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை. 966

புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீர்இயைந்து அன்னார் அகத்து. 1323

**தேவர்**

தேவர் அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்துஒழுக லான். 1073

**தாமரைக்கண்ணான் உலகு**

தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. 1103

**திங்கள், பாம்பு**

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. 1146

## காமத்துப்பால் குறிப்பும் பிறவும்

திருக்குறளில் மூன்றாவது பாலாக அமைந்துள்ள காமத்துப்பால் இருபத்தைந்து அதிகாரங்களைக் கொண்டுள்ளது. அஃதாவது, இருநூற்றைம்பது குறட்பாக்களைப் பெற்றுள்ளது. இப்பாலில் அமைந்துள்ள குறட்பாக்களைப் பெரும்பாலும் காதலன், காதலி, தோழி ஆகிய மூவருடைய உரையாடல்கள் முறையில் அமைத்தே ஆசிரியர் கருத்துக்களை விளக்கம் செய்துள்ளார். முதல் ஏழு அதிகாரங்கள் களவியல் பகுதி. இது திருமணம் செய்து கொள்வதற்கு முன்பு காதலர் சந்திப்பு முதலான நிகழ்ச்சிகளை அறிவிக்கின்றது.

திருமணம் செய்து கொண்டு வாழ்கின்ற வாழ்க்கையினைக் 'கற்பியல்' என்ற பகுதி கூறுகின்றது. தலைவன் தொழில் காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லுகின்ற நிகழ்ச்சியை முதன்மையாக வைத்தே 'கற்பியல்' தொடங்குகிறது, பிரிந்து செல்வதற்கு தலைவி உடன்பட்டுவிட்டாள்.

பிரிந்த பிறகு கற்புள்ள தலைவி மிகவும் வேதனைப் படுகின்றாள். அவள் படுகின்ற துன்பத்தினையே பெரிதும் 'கற்பியல்' பகுதி கூறுகின்றது; கற்புள்ள தலைவியின் மனப்பண்பு விளக்கப்படுகின்றது.

பிரிந்திருக்கும் தலைவனும் தலைவியைப் பார்க்கத் துடிக்கின்றான். தலைவியும் தலைவனைப் பார்க்காமல் இனி உயிர் வாழ முடியாத நிலைக்கு வந்துவிடுகிறாள். தலைவன் திரும்பி வந்துவிட்டான். இருவரும் இன்பம் துய்த்து மகிழ்கின்றனர்.

இப்படி இருக்கும்போது தலைவன் மறுபடியும் பிரிந்து செல்ல வேண்டிய கருத்துக் கொண்டுள்ளான் என்பதை தலைவி புரிந்து கொண்டாள். தொடக்கத்தில் பிரிவு வேதனையை அவள் அறியாது இருந்ததால் முதன்முறையாக தலைவன் பிரிந்து போவதற்கு உடன்பட்டு விட்டாள். இப்போதோ பிரிந்திருப்பதால் உண்டான வேதனையைத் தெரிந்து கொண்டு விட்டாள். மறுமுறை தலைவன் பிரிந்து செல்லுவானேயானால் தானும் உடன் புறப்பட்டுப் போவதென்று முடிவுசெய்து விட்டாள். இதனைத் தலைவன் தெரிந்து கொண்டான். ஆதலால் தலைவியைவிட்டுப் பிரிந்து போவதை நிறுத்திக் கொண்டான்.

பிறகு, இன்பக் காதலர்களுடைய எண்ணங்கள், ஊடல்கள், கூடல்கள் முதலிய நுணுக்கங்களுடன் காமத்துப்பால் முடிவு பெறுகிறது. மனோதத்துவச் சிந்தனைகள் நிறைந்த

பகுதி இக்காமத்துப் பாலே ஆகும். கற்பனை நயம் அளவுகடந்து செல்லுகிற பகுதி இக்காமத்துப் பால் என்றே கூறவேண்டும். நுணுக்கமான காதலர் செய்திகளை இங்கேதான் பார்க்க முடிகிறது. காமத்துப்பாலில் 'அறம்' என்ற சொல்லினையே காண முடியவில்லை. இது ஒரு வியப்பான செய்தியே.

அனிச்ச மலரையும், அன்னப் பறவையின் மெல்லிய தூவியையும் தரையில் பரப்பி அதன்மீது அவன் காதலி நடந்தால், அவை அவளுக்கு நெருஞ்சி முள்மாதிரி இருக்குமாம்; அவளுடைய பாதங்களின் மென்மை அவ்வாறு கூறப்படுகிறது. (1120) அனிச்சப்பூ என்பது மிகமிக மென்மைத் தன்மையானது; அந்தப் பூவின் காம்புகளைக் களையாமல் அவள் தலையில் சூடிக் கொண்டாள். அந்தப் பாரம் தாங்காமல் அவள் இடுப்பு முரிந்து (1115) விடுகின்ற நிலை உண்டாகிவிட்டதாம். இவ்வாறு பல நுணுக்கமான இடங்கள் உள்ளன! கண்டு தெளிக.

கல்வி, அறிவு, ஆராய்ச்சி முதலியன காமத்தில் பொருத்திக் காட்டப்படுகின்றன. நூல்களாலும் நுட்பமான உணர்வினாலும் ஒரு கருத்தினை அறிய அறிய முந்தைய 'அறியாமை' காணப்படுவதுபோல இப்பெண்ணிடம் இன்பம் துய்க்கத் துய்க்கப் புதுமையே மேன்மேலும் காணப்படுகின்றதென்று (1110) ஒரு குறட்பா கூறுகிறது. உண்ணும் உணவு சீரணிப்பதும் காமத்தில் பொருத்தமாக விளக்கப்படுகின்றன. உண்ணுவதில் வருகின்ற இன்பத்தினைவிட முன்பு உண்ட உணவு சீரணிப்பதில் இன்பம் பெருகுமாம்; அதுபோலக் காமம் புணர்தலைவிட ஊடலில் (1326) மிக்க இன்பம் என்று சொல்லப்படுகிறது. இவ்வாறு பற்பல இடங்களைக் கண்டறிதல் வேண்டும். 'தலைவன் தன்னைவிட்டுப் பிரிந்து செல்லப் போகின்றான்' என்று தலைவி சொன்னாள். அந்த நேரத்தில் தலைவன் வந்து கொண்டிருந்தான். மகிழ்ச்சியான அவன் பார்வையைப் பார்த்த தோழி 'அவர் பிரிந்து போகிறவர் மாதிரி காணப்படவில்லையே' என்றாள். அதற்குத் தலைவி, 'அவர் பார்வை நன்றாகத்தான் இருக்கிறது; ஆனால் அவர் நுகர்கின்ற இன்ப நிகழ்ச்சி நேரத்தில் நடந்து கொண்ட முறை (1152) அவர் பிரிந்து போக இருக்கின்றார் என்பதை உணர்த்திற்று' என்று கூறினாள்.

காமத்துப்பாலில் மிகுதியும் சிந்திக்கத்தக்க இடங்கள் பலவாகக் காணப்படுகின்றன 1108, 1239 ஆகிய இரு குறட்பாக்களும் இன்ப நுகர்ச்சியின்போது இடையில் காற்று செல்லுவதற்கு இடமில்லாதவாறு இருத்தல் என்ற முறையினைக் கூறுகின்றன. விளக்கம் பிற இடங்களில் கண்டு தெளிக.

தலைவியை விட்டுப் பலநாள் பிரிந்திருந்த தலைவன் திரும்பி வந்தான். தலைவனும் தலைவியும் கூடி மகிழ்ந்து இன்பம் துய்த்தனர். பலநாள் பிரிந்திருந்த தலைவன் அல்லவா? மறுநாள் தலைவியைப் பார்த்ததும் அவள் தோற்றத்திலிருந்தே தோழி அனைத்தும் புரிந்து கொண்டாள். 'பெண்களல்லவா நாணத்துடன் கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும்' என்ற குறிப்பில் தோழி தலைவியைக் கேட்டாள். அதற்குத் தலைவி 'நான் எப்படியெல்லாம் விரும்புவேனோ, அதனை அறிந்து என் தலைவன் நடந்து இன்பம் துய்க்கின்றபோது 'நாணம், என்று ஒன்று இருக்கின்றதென்பதனையே (1257) நான் மறந்து விட்டேன்' என்றாளாம்! இவ்வாறு காமத்துப்பால் சிந்தனைக்குரிய கற்பனை நயமும் பிறவும் நிறைந்தது. ஆழ்ந்து சிந்தித்து அனைத்தையும் அறிதல் வேண்டும்.

### எச்சம்

'எச்சம்' என்று ஆசிரியர் பல குறட்பாக்களில் கூறுகின்றார். இதற்கு எஞ்சி நிற்பது, என்பது பொருள். இச்சொல் பரந்த பொருளினைக் கொண்டது. தனக்குப் பின்னர் இருக்கின்ற பரம்பரையினரையும் (சந்ததிகளையும்) குறிக்கும். தம் மக்களையும், தமக்குப் பின்னர் எஞ்சி நிற்கும் சிறப்பினையும் இது குறிக்கும். மறுமையின்பம் என்பதனையும் உணர்த்துவதாகும். 'மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும்' (456) 'மன நலத்தின் ஆகும் மறுமை' (459) என்பன போன்றவை ஒரே அதிகாரத்தில் கூறப்பட்டிருப்பது சிந்தனைக்குரியதாகும்.

மறையாமல் நிற்கும் புகழினைக் குறிக்கும்போது 'இசையென்னும் எச்சம்' (238) என்று குறித்துக் காட்டுகின்றார். 'எச்சத்தால் காணப்படும்' (114) என்று கூறினார். அவ்வாறு கூறுகின்றபோது மக்களையும், எஞ்சி நிற்பதனையும் குறித்துக் காட்டினார். மக்களைப் பெறாதவர்களின் நன்மை தீமைகள், அவரவர்களின் எச்சத்தால் காணப்படும் என்றார். 'எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து' (112) என்று கூறுகின்ற பொழுது அவனுடைய வழியிலுள்ளார் (பரம்பரையினர்) என்பது கூறப்பட்டது. இதனையே 'வழி எஞ்சல்' (44) என்பதும், 'வழி முறை' (508) என்பதும் உணர்த்துகின்றன. 'என்ற இரண்டின் எச்சம்' (674) 'எச்சம் என்று என் எண்ணும்' (1004) 'ஊண் உடை எச்சம்' (1012) 'எச்சம் அவா உண்டேல்' (1075) என்பன போன்றவை இக்கருத்துக்களைத் தெளிவு படுத்துவனவாகும்.

எச்சம் எனும் சொல் கீழ்வரும் குறட்பாக்களில் கண்டு, அதன் சிறந்த பொருள் விளக்கங்களை அறிந்து உணர வேண்டும். ஒப்புநோக்கி ஆய்வதற்குப் பயன்படும்.

1. செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவுஇன்றி
   'எச்ச'த்திற்கு ஏமாப்பு உடைத்து. 112

2. தக்கார் தகவிலர் என்பது அவரவர்
   'எச்ச'த்தால் காணப் படும். 114

3. வசையென்ப வைத்தார்க்கு எல்லாம் இசையென்னும்
   'எச்சம்' பெறாஅ விடின் 238

4. மனம்தூயார்க்கு 'எச்சம்'நன் றாகும் இனம்தூயார்க்கு
   இல்லைநன்று ஆகா வினை. 456

5. வினைப்பகை என்றிரண்டின் 'எச்சம்' நினையுங்கால்
   தீ'யெச்சம்' போலத் தெறும். 674

6. 'எச்சம்'என்று என்எண்ணும் கொல்லோ ஒருவரான்
   நச்சப் படாஅ தவன். 1004

7. ஊண் உடை 'எச்சம்' உயிர்க்கெல்லாம் வேறுஅல்ல
   நாணுடைமை மாந்தர் சிறப்பு. 1012

8. அச்சமே கீழ்களது ஆசாரம் 'எச்சம்'
   அவாஉண்டேல் உண்டாம் சிறிது. 1075

### *சிற்றினஞ்சேராமை — உட்பகை*

இந்தப் பெயர்கள், இரண்டு அதிகாரங்களைக் குறிக்கின்றன. இழிவான எண்ணங்களும் செயல்களும் கொண்ட சிறுமதி படைத்த கூட்டத்தினரைச் சிற்றினம் என்று அழைக்கின்றார். இந்த இனத்துடன் சேர்ந்தால் எவ்வளவு பெரிய கல்விமான்களாக — நல்மனம் படைத்தவர்களாக இருந்தாலும் கெட்டுவிடுவார்கள். ஆதலால்தான் இந்த அதிகாரத்தில் காணப்படும் பத்துக் குறட்பாக்களில் ஏழு குறட்பாக்களை 'மனம்' என்ற சொல்லை வைத்தே தொடங்குகிறார் போலும்! இது சிந்தனைக்குரியது.

உட்பகையினரைப் போலக் கொடியவர் பிறர் இருக்க முடியாது. ஆதலால்தான் இந்த அதிகாரத்தில் உள்ள பத்துக் குறட்பாக்களில் ஏழு குறட்பாக்களை உவமைகளை அமைத்துக் கருத்துக்களை விளக்கினார் போலும்! சிந்திக்கத்தக்கது. மேலே கூறியவாறு பிற அதிகாரங்களில் காண முடியவில்லை.

### ஏம், கொட்க, கொட்பு, படுபாக்கு, வேபாக்கு

குறட்பாக்களில் காணப்படும் சில சொற்கள், பாக்களை நினைவுபடுத்திக் கொள்ளுவதற்கு உதவியாக இருக்கின்றன. கருத்துக்களைப் புரிந்து கொள்ளுவதுடன் குறட்பாக்களும் என்றென்றும் நினைவில் இருந்து வருதல் வேண்டும். 'பகைத்திறம் தெரிதல்' என்றோர் அதிகாரம் உண்டு. இந்த அதிகாரம் சிறப்பாக ஆட்சியாளர்களுக்குத் தேவையான அரிய உண்மைகளைக் கூறுகிறது. பொதுவாக அனைவரும் சிந்திக்கத்தக்கது. பித்துப் பிடித்தவனைப் பற்றிக் கூறுகின்றபோது 'ஏம்' என்ற சொல் காணப்படுகின்றது. 'ஏமுற்றவரினும்' (873) என்று கூறுகின்றார். ஒருவன் தனியாக இருந்துகொண்டு பலருடன் பகைத்துக் கொள்வானேயானால் அவனுக்கு முடிவு விரைவில் வருவது உறுதியாகும். ஆதலால் அப்படிப்பட்டவனைப் பித்துப் பிடித்தவனை விட அறிவில்லாதவன் என்று கூறினார்.

தொழில் செய்வதைப் பற்றிப் பற்பல அதிகாரங்கள் விரிவாகவும் தெளிவாகவும் எடுத்துரைக்கின்றன. அவற்றுள் ஒன்று 'வினைத்திட்பம்' என்னும் அதிகாரம். இது தொழில் செய்வதற்கு முதன்மையாகத் தேவைப்படுவது மனத்திண்மையேயாகும் என்பதை எடுத்துக் காட்டுகிறது. ஒரு வகையில் கூறினால் ஒருவன், தான் செய்கின்ற பணிகளைப் பிறர் தெரிந்து கொள்ளாதவாறு செய்தலும் வேண்டும். அப்பணி முடிந்த பிறகு பலருக்கும் புலப்படும்படிச் செய்தல் வேண்டும். 'கொட்க' என்பது செய்யப்படும் தொழில் முடிவிலே புலப்படும் வகை செய்தல் வேண்டும் என்பதனைக் குறிக்கும். அவ்வாறு இல்லாமல் இடையில் புலப்படுமாயின் 'இடைக்கொட்கின்' (663) துன்பத்தினைக் கொடுத்து விடும் என்கின்றார். ஆட்சியினருக்குச் சிறப்பாகவும், அனைவர்க்கும் பொதுவாகவும் கூறப்பட்டது.

'கொட்பு' என்பதற்குத் திரிபு என்பது பொருள். அதாவது மனமாற்றம் அடைதல்; உறுதியின்றி இருத்தல். சிறந்த நட்பு என்பது எப்போதும் மன உறுதியுடனும் நண்பனுடன் மனத்தளர்ச்சியின்றியும் எக்காலத்திலும் உடனிருந்து பழகுவதாகும். அதனை வலியுறுத்திக் கூறும் பொருட்டுக் 'கொட்பு இன்றி' (789) என்று அமைத்தார். நட்பு மிகவும் சிறந்த முறையில் அமைய வேண்டும் என்பதற்காகத்தான் 'நட்பு ஆராய்தல்' என்ற அதிகாரமும் கூறப்பட்டது. நட்பு, நட்பாராய்தல், பழைமை என்ற அதிகாரங்கள் எல்லாம் சிறந்த

நண்பர்களின் உயர்ச்சியினைக் கூறுகின்றன. உடனிருந்து பழகிக் கொண்டு தீமை புரியும் நண்பர்கள் போன்றவர்களைத் தீநட்பு, கூடாநட்பு என்ற அதிகாரங்கள் தெளிவாக்குகின்றன.

உறுதி கொண்டு ஒழுக்கத்தில் நின்று வாழ்வதே மக்கட் பிறவிக்குச் சிறப்பாகும். ஒழுக்கம் கெட்டு வாழ்வது இழிந்த பிறவிக்குச் சமமாகும். ஒழுக்கம் கெட்டால் 'இழிமகனாகி விடுவோம்' என்ற அச்சமும் இருத்தல் வேண்டும். குற்றம் உண்டாகிவிடுமே என்பதனைக் குறிக்க வேண்டியே, 'படுபாக்கு அறிந்து' (136) என்று குறிப்பிட்டார். இச்சொல்லைக் கொண்டு குறட்பாவினை எளிமையில் நினைவில் வைத்துக் கொள்ளலாம். 'அழுக்காறு' என்ற அதிகாரத்திலும் இச்சொல் காணப்படுகிறது. அழுக்காறு (பொறாமை) கொண்டவன் கீழ் நிலையுறுவது உறுதி. ஆதலால் அழுக்காறு என்ற குற்றத்தினை நல்லவர்கள் செய்ய மாட்டார் கள் என்றும் அதற்குக் காரணம் ஏதம் (குற்றம்) தமக்கு 'வருவது அறிந்து' என்ற உண்மையினை சுட்டிக் காட்டவே 'படுபாக்கு அறிந்து' (164) என்று கூறினார்.

கற்பு நிறைந்த அன்புள்ளத்தளான தலைவியின் வாயிலாக அரிய உண்மை யொன்று வெளிப்படுகின்றது. தலைவன் பிரிந்திருக்கின்ற காலத்தில் இது நடைபெறும். உண்ணுகின்ற உணவினைச் சூடாக உண்ணுவதற்கு அவள் மறுத்தாள். ஏனெனில், உணவு சூடாக இருந்தால் உள்ளத்தில் இருக்கும் தலைவனைப் போய் அது சுட்டு விடும் என்றாள்! தலைவன் துன்புறுவான் என்பதைக் கூற, 'வேபாக்கு அறிந்து' (1128) என்று குறிப்பிடப்பட்டது. என்றென்றும் தலைவன் நினைவாகவே இருக்கின்றாள் என்பது உணர்த்தப்பட்டது. 'நெஞ்சத்தார் காதல வராக' என்று குறட்பா தொடங்கப் பெறுகின்றது. 'வேபாக்கு' என்பது வேகுதல் என்ற கருத்தில் கூறப்பட்டது. கற்பனையும் கலந்த நயம் சிறப்பாகக் காணப்படுகிறது.

## தெய்வம்

தெய்வம் என்ற சொல் வருகின்ற ஆறு குறட்பாக்கள் உள்ளன.

**தென்புலத்தார் 'தெய்வம்' விருந்துஒக்கல் தான் என்றாங்கு**
**ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.** 43

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்**
**'தெய்வத்துள்' வைக்கப் படும்.** 50

**'தெய்வம்' தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்எனப் பெய்யும் மழை.** 55

**'தெய்வத்தான்' ஆகாது எனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும்.** 619

**ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்**
**'தெய்வத்தோடு' ஒப்பக் கொளல்.** 702

**குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் 'தெய்வம்'**
**மடிதற்றுத் தான்முந் துறும்.** 1023

'தெய்வம்' என்கின்ற சொல் பல பொருள்களில் கூறப்பட்டுள்ளது. மேற்கூறிய ஆறு குறட்பாக்களிலும் காணப்படுகின்ற 'தெய்வம்' என்ற சொல் தருகின்ற பொருள்களாவன. தெய்வம் (43), இயற்கை (50), தேவர்கள் (55), இயற்கை (702), தேவர்கள் (619), ஊழ் (1023), (தெளிவும் விளக்கமும் பிற இடங்களில் கூறப்பட்டுள்ளன. முதல் அதிகாரத்தில் 'தெய்வம்' என்ற சொல் கூறப்படவில்லையென்பது குறிப்பிடத்தக்கது. ஊழ், பாழ், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருட் கிளவி. அதாவது ஒரே பொருளினைக் குறிக்கும் சொற்களாகும். 'ஓம்பல்', 'வைக்கப்படும்', 'தொழாஅள்', 'ஒப்பக்கொளல்', 'ஆகாது எனினும்', 'தான்முந்துறும்' என்பன சிந்திக்கத்தக்கன. இக்காலத்தில், தெய்வம் என்ற சொல் இறைவனைக் குறிக்கும் சொல்லாகவே நடைமுறையில் வழங்கப்பட்டு வருகிறது.

## விஞ்ஞானியும் மெய்ஞ்ஞானியும்

இயல்பாக மக்களுக்கு இருக்கும் சிறப்பான அறிவு, மிகுந்திருந்தால் அதனை 'ஞானம்' என்று கூறுவதுண்டு. பேரறிவுகொண்ட சான்றோர்களை ஞானிகள் என்று கூறுவதும் கருதுக. எல்லோருமே ஞானிகளாக இருந்துவிட முடியாது. தன்னலம் அற்றவர்களாகவும் பொதுநலம் வளரப் பாடுபடுபவர்களாகவும் உள்ள ஞானிகளையே உலகம் பெரிதாக பாராட்டுகின்றது. முதிர்ந்த அறிவு படைத்தவர்கள் செயற்கரிய செயல்களைப் புரிவார்கள். ஞானிகளாவதற்கு நுண்ணறிவு படைத்திருத்தல் வேண்டும். ஆழ்ந்த சிந்தனையும் கடின உழைப்பும் தேவை. ஞானம் பெற்ற முதிர்ந்த அறிவாளர்களை 'விஞ்ஞானிகள்' என்றும் 'மெய்ஞ்ஞானிகள்' என்றும் கூறுவார்கள். ஆசைகளை அறவே விட்டொழித்து அரிய தவத்தினை மேற்கொண்டு வீட்டுலகம் எனப்படும் பேரின்ப நிலையினை அடைபவர்கள் மெய்ஞ்ஞானிகள் எனப்படுவர். ஞானிகளைப் பற்றி — மிகவும் குறிப்பாக நான்கு அதிகாரங்கள் கூறப்படுகின்றன. அவை நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்பன. 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரமும் இவர்களைப் பற்றியே கூறுகின்றது.

உலக இயற்கையின் பிரிவுகள் நிலம், நீர், தீ, காற்று, வான் என்ற ஐந்தும் ஆகும். உலகத்தின் இயல்புகள் இந்த ஐந்தின் அமைப்புக்களினாலும் மாறுபாடுகளினாலும் நடைபெறுகின்றன. 'மாயை' என்ற சொல் உலக வழக்கில் அடிக்கடி பேசப்படுகிறது. இதற்கு மாறுதல் என்பதே குறிப்பான பொருள். உலக நிலைகள் அடிக்கடி — வினாடிக்கு வினாடி மாறும் தன்மைகள் உடையன ஆதலால் 'உலகம் மாயை' என்று கூறப்படுவதாகும்.

நிலம், நீர், தீ, காற்று, வான் ஆகிய ஐந்தும் உலக உயிர்களிடத்திலும் உள. இந்த ஐந்தினையும் தெய்வங்களாகக் கொண்டு வழிபடுவதும் உலக வழக்காகும். அவை மிகுந்த ஆற்றல் படைத்தவை என்பது குறிப்பிடத்தக்கதாகும். புறத்தில் காணப்படும் இந்த ஐந்தினையும் தன்னுடைய நுண்ணறிவின் துணையினாலும் ஆழ்ந்த சிந்தனையினாலும் தன்வயப் படுத்தியவன் விஞ்ஞானியானான். அவைகளைத் தனக்கு ஏவல் செய்யுமாறும் அமைத்துக் கொண்டான் என்பது மிகையாகாது. வானொலி, விமானம் போன்ற பல்லாயிரக் கணக்கான அரிய செயல்களை நுண்ணறிவு படைத்தவன் செய்தான் என்றால், அவற்றிற்குக் காரணம் இந்த இயற்கைப் பிரிவுகளான ஐந்து சக்திகளேயாகும். 'அறிவுடையார் எல்லாம் உடையார்' (430) 'மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு' (636) என்பன போன்ற குறட்பாக்களைச் சிந்தித்தறிதல் வேண்டும்.

கல்வி, அறிவு முதலான எதுவுமே இல்லாதவர்கள் கூட விஞ்ஞானத்தினைப் புரிந்து கொள்ளுதலும், நம்பிக்கைக் கொள்ளுதலும் எளிதாகும். ஏனெனில் விமானத்தினை நேரில் பார்க்கிறார்கள்; வானொலியினைக் காதால் கேட்கிறார்கள்: விஞ்ஞானியாவதுதான் மிகமிகக் கடினமேயல்லாமல், அதனைத் தெரிந்து கொள்ளுவதும் புரிந்து நம்பிக்கைக் கொள்ளுதலும் எளிதாகும். பெரும்பாலும் விஞ்ஞானிகள் இயற்கையின் கூட்டுச் சேர்க்கையினால் அரிய செயல்களைப் புரிகின்றார்கள். புறத்தே காணப்படுகின்ற இயற்கையான ஐம்பூதங்களைத் தன் வயப்படுத்திய முதிர்ந்த நுண்ணறிவாளன் விஞ்ஞானியானதைப் போல, மனிதனுக்கு — மனித அமைப்பில் — அகத்தே இருக்கும் ஐம்பூதங்களையும் தன் வயப்படுத்தியவன் மெய்ஞ் ஞானியானான்.

'இருமை வகை தெரிந்து' (23), 'வகை தெரிவான் கட்டே உலகு' (27), 'ஐந்து அவித்தான் ஆற்றல்' (25), 'ஈண்டியற்பாலபல' (342), 'உயர்ந்த உலகம் புகும்' (346), 'செம்பொருள் காண்பது அறிவு' (358), 'இன்பம் இடையறாது ஈண்டும்' (369), 'தன் உயிர்தான் அறப் பெற்றான்' (268), 'குன்றன்னார்' (898), 'ஏந்திய கொள்கையார்' (899) என்பன போன்று கூறப்படுவனவெல்லாம் தவத்தின் ஆற்றல் மிகுந்த மெய்ஞ்ஞானிகளைக் குறிப்பனவாம்.

மெய்ஞ்ஞானம் என்பது அப்படிப்பட்டதன்று. மெய்ஞ்ஞானியாவது என்பதே, கோடியில் ஒருவராலேயே முடியும் என்பது உலகியல் உண்மை. அதுவுமல்லாமல், மெய்ஞ் ஞானம் இன்னதென்பதனைப் புரிந்து கொள்ளுவதற்கே எண்ணிறந்த மேலோர் அளித்த நூல் களைக் கற்றல் வேண்டும். கற்றுணர்ந்த பிறகே ஞானிகள், ஞானம் என்பவற்றில் நம்பிக்கை பிறக்கும்.

மெய்ஞ்ஞானி உள்ளுக்குள் இருக்கும் பஞ்சபூதங்களையும் தன் வயப்படுத்துபவன். கடுந்தவம் புரிந்தே இந்த நிலையினை அடைதல் முடியும். உயிரினையும் தன் வயப் படுத்துபவனே ஞானியாவான். புறத்தே இருக்கும் பஞ்சபூதங்களை வயப்படுத்திய விஞ்ஞானி பல அரிய செயல்களைப் புரிகின்றான் என்றால் அகத்தே இருக்கும் பஞ்ச பூதங்களையும் வயப் படுத்திய மெய்ஞ்ஞானி மிகப் பெரிய அரிய பற்பல செயற்கரிய செயல்களைச் செய்பவனா கின்றான். ஞானியானவன், இருமை (இம்மை, மறுமை) வகை தெரிந்தவனாவான். பிறப்புக் களின் வகைகளை உணர்பவனாவான். **பேரா இயற்கை (370)** எனப்படும் பேரின்பத்தினைக் கண்டுணர்கிறான். இத்தகைய அரிய மெய்ஞ்ஞானத் தன்மைகளைக் கற்றுணர்ந்து அறிதல் மிகமிகக் கடினம். ஆதலால் உலக மக்களில் பலர் அத்தகையவற்றைப் புரிந்து கொள்ளும் விருப்பம் இல்லாதவர்களாகி, ஞானம், ஞானிகள், ஞானிகள் கூறியவை முதலியவற்றில் நம்பிக்கை வைப்பதும் இல்லாதவர்களாகின்றார்கள் .

## எழு பிறப்பு

இயற்கையின் செயல்கள் உலகில் பலவகைப்பட்டதாக அமைந்து கிடப்பனவாகும். அவை நுண்ணறிவு படைத்தவர்களால் அறிந்துணர்ந்து அறிவிக்கப்பட்டுள்ளன. பிறவிகள் பலவற்றையும் ஆசிரியர் திருவள்ளுவர் பற்பல இடங்களில் உய்த்துணர வைக்கின்றார். 'ஏழ்' என்பது 'ஏழு' என்று சொல்லப்படுகின்ற எண்ணிக்கையினை மட்டும் குறிப்பதன்று. 'ஏழ்' என்பது அதற்கு மேலாய மிக்க பன்மையினையும் குறிப்பதாகும். ஒருநாள் என்பதனைக் காதலி பலநாட்களாகக் கருதுகின்றாள் என்பதனைக் கூறவந்த ஆசிரியர் 'ஒருநாள் எழுநாள் போல் செல்லும்' (1269) என்று கூறுகின்றார். 'நேற்றுதான் காதலர் சென்றார். ஆனால் பல

நாட்கள் போலாயிற்று' என்பதனைக் கூற வந்த தலைவி, 'எழுநாளேம் மேனிபசந்து' (1278) என்று குறித்தாள். இவ்வாறே பிறவற்றையும் கண்டு தெளிக.

பற்பல கோடி என்று குறிப்பிட வந்த ஆசிரியர், 'எழுபது கோடியுறும்' (639) என்று கூறுகின்றார். தொடர்ந்து வருகின்ற பிறவிகளில் எல்லாம் தீமை வாராது என்பதனைக் குறிக்க வேண்டி 'எழு பிறப்பும் தீயவை தீண்டா' (62) என்று அமைத்தார். இவ்வாறே, 'எழுமை எழுபிறப்பும் உள்ளுவர்' (107), 'எழுமையும் ஏமாப்பு உடைத்து' (126), 'எழுமையும் ஏமாப்பு உடைத்து' (398), 'எழுமையும் இல்' (538), 'எழுமையும் தான் புக்கு அழுந்தும் அளறு' (835) என்பன போன்று வருவனவற்றையெல்லாம் சிந்தித்தறிக.

பிறப்பதும் இறப்பதும் இயற்கையின் செயல் என்பதனை உணர்த்தவே 'உறங்குவது போலும் சாக்காடு, உறங்கி விழிப்பது போலும் பிறப்பு' (339) என்று கூறினார். நல்வினை, தீவினை என்ற இரண்டு வினைகளுமே பிறப்பிற்குக் காரணம் என்றும், அந்த இருவினையும் இறை நெறியில்—ஞானிகளாய் நிற்பவர்களைச் சாராது என்பதனைக் குறிப்பதற்காகவே 'இருள் சேர் இருவினையும் சேரா' (5) என்றும் கூறினார். நல்வினை, தீவினை என்கின்ற எண்ணங்கள் எதுவுமே மனதில் இல்லாமல் ஆசையற்ற வாழ்க்கையில் இருக்கும் முனிவன் பேரின்ப நிலையான வீட்டின்கண் பிறவியற்று நிலைத்திருப்பான் என்பதனை 'வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து' (24) என்பது கூறுகின்றது.

துறவறத்தினை மேற்கொண்ட ஞானிகள் பிறப்பினை (மீண்டும் பிறப்பதை) அறுப்பவர்கள் என்னும் கருத்தினைப் 'பிறப்பு அறுக்கல் உற்றார்' (345), 'உயர்ந்த உலகம் புகும்' (346), 'பிறப்பு அறுக்கும்' (349), 'மற்றீண்டு வாரா நெறி' (356), 'வேண்டா பிறப்பு' (357), 'பிறப்பென்னும் பேதைமை' (358), 'பிறப்பு ஈனும் வித்து' (361), 'வேண்டும் பிறவாமை' (362) என்பன போன்று வருபவை உணர்த்தும்.

உயிர் இந்த உடம்பினைக் குடியிருக்கும் வீடாகக் கொண்டுள்ளதென்பதனை, 'புக்கு இல் அமைந்தின்று' (340), என்ற குறட்பா உணர்த்தும். 'நிலையானவீடு இல்லையோ' என்ற கருத்து இக்குறட்பாவில் கூறப்பட்டுள்ளதால் ஒவ்வோர் உடம்பும், உயிர் இருந்துவிட்டுப் போகும் வீடு போன்றது என்பது குறிக்கப்பட்டது. உடம்பினைவிட்டு உயிர் பறந்து சென்று விடுகின்றதென்பதனை விளக்குவதாக அமைந்திருப்பது, 'குடம்பை தனித்தொழியப் புள் பறந் தற்றே' (338) என்ற குறட்பா முட்டையிலிருந்து வெளிவந்தவுடனேயே பறந்து செல்லு கின்ற ஒருவகைப் பறவையே இங்குக் கூறப்பட்டிருக்கிறது என்பது சிந்தித்தறிய வேண்டியது.

உடம்புக்கும் உயிருக்குமுள்ள தொடர்பு, உடம்பினைவிட்டு உயிர் பிரியும் நிலை, உயிரினைப் பற்றி நிற்கும் வினைப் பயன்கள், ஆசைகள் என்பதன் உண்மை, 'பொன்றுங்கால் பொன்றாத் துணை' (36) என்பது எல்லாம் 'ஐம் பூதங்கள்' (271) நிலம், நீர், தீ, காற்று, வான் ஆகியவை அமைந்து இருக்கும் இவ்வுடம்பு (உலக நடையில் ஸ்தூல உடம்பு) என்பதும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்துடன் மனம், புத்தி, அகங்காரம் (அந்தக் கரணங்கள் என்பவை) ஆகியவை சேர்ந்து 'ஆன்மாக்கள்' என்று குறிக்கப்படும் உயிர்கள் உலக வினைகளை நுகர்வதற்குக் கருவியாய் இருக்கும் 'உள்ளுடல்' அல்லது 'அரூப உடம்பு' (சூட்சும உடம்பு)

பூத உடம்பை விட்டுப் பிரிகின்றதென்பதும் ஆன இன்னபிற — இவைகளையெல்லாம் நுண்ணறிவு பெற்ற மெய்ஞ்ஞானிகளாலே உணர்ந்து அறிவிக்கப்படுவனவாம். பொதுவாகக் கூறுகின்றபோது இவையனைத்தும் இயற்கையின் செயல்கள் என்றே கொள்ளப்படுதல் வேண்டும். நன்கு கற்றறிய வேண்டிய நூல்களைக் கற்றவர்களே இவற்றைப் புரிந்து அறிந்து கொள்ளுதல் இயலும். உலக இயற்கையின் தன்மைகளை எடுத்துரைக்க வேண்டியே ஆசிரியர் திருவள்ளுவனார் இவற்றை விளக்குகின்றார்.

இயற்கையின் தன்மைகளான செயல்களை 'ஊழ்' என்ற அதிகாரம் குறிப்பாகவும் தெளிவாகவும் உணர்த்துகின்றது. மக்களிடையே, இவ்வுலகில் வியப்பிற்குரிய மாறுபட்ட நிலைமைகளும் அமைப்புகளும் காணப்படுவதற்குக் குறிப்பான காரணம் இயற்கையேயாகும். 'இருவேறு' (374) என்ற குறட்பா இதற்கு எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது. விஞ்ஞானி களால் கண்டுபிடிக்கப்பட்ட பல 'சாதனைகள்' இயங்கக் கூடியதை நாம் கண்ணால் காண முடிந்தாலும், அவை அவ்வாறு இயங்குவதற்குக் 'காரணம்' என்ன என்பதனைக் கண்டறிந்து கூறுவதற்கு இயல்பான அறிவுடையவர்களால் முடியாது. அதனையும் ஒரு விஞ்ஞானிதான் விளக்குதல் வேண்டும். அப்போதும் பலரால் புரிந்து கொள்ள முடியாததாகி விடுகின்றது. அது போல உயிரான ஆன்மா, பூத உடம்பு, இறந்து பிறத்தல் என்பன போன்ற பல அரிய உண்மைகளையும் அறிந்துணர்வதற்கு மெய்ஞ்ஞானிகளால்தான் முடியும். 'ஐந்தின் வகை தெரிவான்' (27) என்பதும் அதனாலேயேயாகும்.

உலக இயற்கையின் நியதிப்படி எழுகின்ற பிறவிகள் பலவுண்டு என்பதனை ஆசிரியர் திருவள்ளுவர் ஆங்காங்கு உணர்த்தினார். உலக உண்மைகள் 'இவை இவை' என்பதனைச் சுட்டிக் காட்டவே இவை கூறப்பட்டன.

இப்பிறவியில் மனிதன் செய்ய வேண்டிய கடமைகள், ஆற்ற வேண்டிய அரும்பணிகள், மனிதத் தன்மை முதலானவையே மக்களுக்குக் குறிக்கோள்களாக இருத்தல் வேண்டும் என்பதே ஆசிரியர் அடிப்படையாகக் கொண்டு அறிவுறுத்திய அறவுரைகளாகும். இக்கருத்து உள்ளத்தில் என்றென்றும் நிலைபெற்றிருக்க வேண்டியவை. 'பிறவிகள்' என்ற தன்மைகளையெல்லாம் மக்கள் அறிந்துணர்வதால் பயனில்லையென்று கருதியும் அல்லது அவற்றை மக்கள் அறிந்துணரச் செய்வது எளிதானதல்ல என்பதைக் கருதியும்—உலகில் வழங்கி வருகின்ற—சில மதங்கள், பிறந்து இறத்தலை—பிறவிகள் என்பவற்றை நம்ப முடியாதென்று ஒதுக்கிவிட்டன போலும்! எழுகின்ற பிறவிகளையெல்லாம் அவை ஒப்புக் கொள்ளவில்லை. இஃது இயற்கைக்கு மாறான கருத்தென்பது தவறாகாது!

பிறப்பு, வீடு என்ற இரண்டினையும் குறிப்பிட வேண்டியே 'இருமை வகை தெரிந்து' (23) என்று கூறினார். வீடு என்பது பேரின்ப நிலை—ஆசைகள் அறுக்கப்பட்ட நிலை—ஆசைகள் அறாதவர்கள் வினைப்பயன்கள் தொடர்வதால் பிறப்பும் இறப்பும் உடையவர்கள் ஆவார்கள். இப்பிறவியிலேயே அப்பேரின்ப நிலையினை அடைதல் முடியும் என்பது உய்த்துணர வைக்கப் பட்டது. பேரின்பம் என்கின்ற நிலைக்கு 'அறமே' துணையாக இருத்தல் வேண்டும்.

## இம்மை மறுமை

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும். 98

மனம்நலத்தின் ஆகும் மறுமைமற்று அஃதும்
இனநலத்தின் ஏமாப்பு உடைத்து. 459

மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறுஎய்தல் இன்று. 904

இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்நிறை நீர்கொண் டனள். 1315

இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். 1042

இப்பிறவியினை இம்மையென்றும் மறுபிறவியினை மறுமையென்றும் குறிப்பிடுவதுண்டு. இதனை 'இம்மைப் பிறப்பில் பிரியலம்' (1315) என்று குறட்பா குறிப்பாக உணர்த்துகின்றது. ஆனால் 'மறுமை' என்பது இப்பொருளில் மட்டும் கூறப்படுவதன்று. பல இடங்களில் மறுமை என்பது, பின்னர் அடையப் பெறுகின்ற பேரின்பத்தினைக் குறிக்கும். பேரின்ப நிலையென்பது அறம் செய்வதால் உண்டாவது. தூய அறமான வாழ்க்கை என்பதால் வருவதுதான் பேரின்பம் என்று கூறப்படுகின்ற உயர்ந்த நிலை. இப்பிறவிக்குப் பிறகு உண்டாகின்ற நற்பிறவியின் நிலை என்பதும் மறுமை என்பதால் குறித்துக் காட்டப் பட்டது. இம்மை, மறுமை என்பதனைச் 'சிறுமையுள் நீங்கிய இன்சொல்' (98), 'மனநலத்தின் ஆகும் மறுமை' (459), 'மனையாளை யஞ்சும் மறுமை யிலாளன்' (904), 'இன்மையென ஒரு பாவி மறுமையும்' (1042) முதலிய குறட்பாக்கள் குறித்துக் காட்டுகின்றன.

உயிரினங்களை ஏழுவகைகளாகப் பிரித்துக் கூறுவதுண்டு. ஏழு வகைகளாகத் தோற்றமளிக்கின்றன என்பது இயல்பாகக் குறிக்கப்படுகின்ற உண்மை. அவை தேவர், மக்கள் (மனிதர்), விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரங்கள் (புல், பூண்டு, மரம் முதலியவை) என்பனவாகும். இவற்றுள் பைக்குள் கட்டுப்பட்டுப் பிறப்பன, முட்டையிலிருந்து பிறப்பன, உடல் பிளந்து பிறப்பன, வித்திலிருந்து உண்டாவன என்று 'நான்கு' முறைகளாக கூறப்படுவதும் உண்டு.

## இவ்வுலகம், அவ்வுலகம்
## இடைப்பட்ட உலகம் — சிந்திக்கவும் !

'இவ்வுலகம்' என்று ஆசிரியர் இவ்வுலக வாழ்க்கையினைக் குறிக்கின்றார். அதாவது மனைவி மக்களோடு வாழ்வதும், பொருள்களின் மீது பற்று வைத்து வாழ்வதும், உலகியல்

நடைமுறைகளில் கலந்து பணி மேற்கொண்டு கடமைகளாற்றி ஒப்புரவு, ஈகை முதலியன செய்து வாழ்வதுமாகும். இவ்வுலக வாழ்க்கையினை மேற்கொண்டவர்கள் உயர்ந்த நிலையினை அடைவதற்கு அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டியது 'தானம்' என்பதாகும். 'தானம் தவம்' (19) என்பதும், 'தவத்தொடு தானம்' (295) என்பதும் இக்கருத்தினைக் குறிப்பாக உணர்த்துவனவாகும்.

வீட்டுலகம் என்பதே அவ்வுலகமாகும். இதனையே பேரின்ப உலகம், பேரின்ப நிலை என்று குறிப்பிடுவார். இந்த வீட்டு உலகத்திற்கு அடிப்படையாக இருக்க வேண்டியது 'தவம்'. இது பிறவியின் ஒரு நிலையாகும். இதனையே மேலே குறிப்பிடப்பட்ட, '19, 295' குறட்பாக்கள் குறித்துக் காட்டுகின்றன. தவத்தினை மேற்கொள்ளுபவர்கள் துறவிகளாவார்கள். தவத்தால் அடையும் பெருஞ்சிறப்பும் 'தானத்தால்' அடையும் பெருஞ்சிறப்பும் சமமாகக் கருதப்பட வேண்டியன. 'தவமும் தவமுடையார்க்கு ஆகும்' (262) ஆதலால் எல்லோரும் அதனை எளிதில் மேற்கொள்ளுதல் இயலாது. 'அவ்வுலகம்' எனப்படும் பேரின்ப நிலையான உலகத்தினைக் குறிக்கின்றபோது, 'வானோர்க்கு உயர்ந்த உலகம்' (346) என்று குறிப்பிட்டுக் காட்டுகின்றார். 'அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை' என்றும் 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' (247) என்றும் கூறினார். பொருளும் அருளும் முயன்று பெறக் கூடியவை என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

வானவர்களுக்கும் உயர்ந்த உலகம் (346) என்பது மிகவும் சிந்தனைக்கு உரிய கருத்தாகும். வானவர்க்கும் அடைதற்கு அரியதான உலகம் அது. இந்த உலகமே 'வீட்டுலகம்' என்று கூறப்பட்டது 'அந்நிலையே பேரா இயற்கை தரும்' (370) என்பது அவ்வுலகம் என்பதனைச் சுட்டிக் காட்டுவதாகும்.

'இடைப்பட்ட உலகம்' என்று கருதப்பட வேண்டியதைப் பற்றிப் பல இடங்கள் காணப்படுகின்றன. இந்த இடைப்படும் உலகத்தினையும் அங்கு வாழ்பவர்களையும் சுட்டிக் காட்டும் குறட்பாக்களை முதலில் அறிந்து கொள்ளுதல் வேண்டும். 'வானோர்க்கும் ஈண்டு' (18), 'விசும்புளார் கோமான்' (25), 'தெய்வம்' (43), 'வான் உறையும் தெய்வம்' (50), 'தெய்வம் தொழாள்' (55), 'புத்தேளிர் வாழும் உலகு' (58), 'நல்விருந்து வானத்தவர்க்கு' (86), 'வையகமும் வானகமும்' (101), 'அமரருள் உய்க்கும்' (121), 'புத்தேள் உலகத்தும்' (213), 'மேல்உலகம்' (222), 'புத்தேள் உலகு' (234), 'புத்தேள் உலகு' (290), 'வானோர்க்கு' (346), 'வானம் நாணியது' (353), 'தெய்வத்தான்' (619), 'தெய்வத்தோடு' (702), 'இமையாரின்' (906), 'புத்தேள் நாடு' (966), 'தெய்வம்' (1023), 'தேவர்' (1073), 'தாமரைக் கண்ணான் உலகு' (1103) 'புத்தேள் நாடு' (1323) இத்தொடர்களும் சொற்களும் காணப்படுகின்ற குறட்பாக்களின் கருத்துக்களை ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும்.

'தெய்வம்' என்ற சொல் பற்பல பொருள்களில் காணப்படுவதென்பது மிகவும் தெளிவாகக் காட்டப்படுகின்றது. இந்த 'இடைப்பட்ட' உலகில் வாழ்பவர்களாகக் கூறப்படுபவர்கள் தாம் விரும்பியவாறெல்லாம் நடப்பார்கள் என்பதனை, 'தேவர் அனையர் கயவர்' (1073) என்ற குறட்பா குறிப்பாக உணர்த்திக் காட்டுகின்றது. காம இன்பத்தில் திளைக்கும் ஒருவன் கூறுகின்ற முறையில் அமைக்கப்பட்டுள்ள, 'தாமரைக் கண்ணான் உலகு' (1103), 'புத்தேள் நாடு' (1323) என்ற இரண்டு இடங்களும் இந்த இடைப்பட்ட உலகம்; இது அவ்வளவு பெருஞ்சிறப்பு வாய்ந்த—நிலையானதல்ல என்பதனைச் சிந்திக்க வைப்பன. இக்குறட்பா

அவ்வாறு கூறுவார் இலர்' என்பதனை உணர்த்துவதே ஆனாலும், மேலுலகத்தினைப் பற்றிய சிந்தனையைத் தூண்டுவதாக உள்ளது. பூசனைகள் செய்யப்படுவது வானவர்க்கு என்றும், அதுவும் 'நடக்காது' என்பதனை 18-ஆம் குறட்பாவும் கூறுகின்றது. இவை அவர்களின் தன்மையினைச் சிந்திக்க வைக்கின்றது.

'விசும்புளார் கோமான் இந்திரன்' என்று வழங்கி வந்த கருத்தினைச் சுட்டிக்காட்டி முனிவர்களின் சிறப்பினை ஆசிரியர் உணர்த்தினார். இக்குறட்பாவின் (25) கருத்தினைக் கருதும் போது 'விசும்புளார்' என்று கருதப்பட்டவர்களின் தலைவனாகப் பேசப்படுபவனுடைய குறைவு காட்டப்பட்டதிலிருந்தே இடைப்பட்ட உலகத்தின் நிலையினை உணர முடிகின்றது. இவ்வுலகில் வாழ வேண்டிய முறையில் வாழ்தலே போதும் என்பதனைக் குறட்பா (50) உணர்த்துகிறது. அவ்வாறு உணர்த்துகின்றபோது 'வானுலகம் செல்ல வேண்டும்' என்று மக்களிடையே பரவி வந்த எண்ணமும் காட்டப்படுகிறது. கற்பிற் சிறந்த மனைவியாக வாழ்ந்து, 'கொண்ட கணவனை வழிபடுதலே போதும்' என்பதனைக் குறட்பா (58) அறிவுறுத்துகிறது. என்றாலும், 'மேல் உலகம் செல்ல வேண்டுமே' என்று மக்களிடையே நிலவிய கருத்தினையும் சுட்டிக் காட்டி உண்மையினை உணர்த்துவது இக்குறட்பாவாகும். அந்த உலகத்தினர் அதாவது புத்தேளிர் உலகத்திலேயே பெருஞ்சிறப்பினை இப்பெண்கள் பெறுவர் (58) என்பதால், கற்பு நிறைந்த இவ்வுலக வாழ்க்கையே மிகவும் உயர்த்திப் பேசப்பெற்றது.

மேலே குறிப்பிட்டபடி, குறிப்பாக 'இருபத்து மூன்று' குறட்பாக்கள், வானோர் எனப்படுபவர்களையும் வானுலகம் எனப்படுவதையும் உணர்த்துவனவாகும். 'அவ்வுலகம்' (247) இந்த இடைப்பட்ட உலகம் அல்ல என்பதனை நன்கு தெளிவுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும். இப்பிறவியின் ஒவ்வொரு மனோநிலையினையே உலகம் என்று குறிப்பிடுவர்.

சிந்தனைக்குரிய சில உலகியல் கருத்துக்களைக் குறிப்பாகவேனும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். இவ்வுலகம், அவ்வுலகம், இடைப்பட்ட உலகம் என்பதனை ஒருவாறு மேலே கூறப்பட்டவற்றிலிருந்து புரிந்து கொள்ளலாம். ஆசையென்பது தான் மீண்டும் பிறவி யெடுப்பதற்குக் காரணம் என்ற அடிப்படை உண்மை திருக்குறளில் நன்கு விளக்கப்படுகிறது. 'அவா அறுத்தல்' என்ற அதிகாரமும் பிற இடங்களும் இந்த உண்மையினை வலியுறுத்துவன. 'புள் பறந்தற்றே' (338), 'விழிப்பது போலும் பிறப்பு' (339) போன்ற குறட்பாக்கள் மறு பிறவியினைக் குறிப்பனவாகும். 'மறு பிறப்பு' என்பது இயற்கை முறையின் அமைப்பாகும்.

உலகில் நிலவி வரும் மதங்களில் சில மறுபிறப்பினை ஏற்றுக் கொள்ளவில்லை. இவை இடைக் காலத்தில் தோன்றிய மதங்கள் எனப்படுகின்றன! மறு பிறப்பின் உண்மையினைப் புலப்படுத்தும் தொல்லையினின்று நீங்கிவிட அவ்வாறு முடிவு செய்தன போலும்! சில மதங்கள் பிறவி உண்டு என்பதனை ஒத்துக் கொண்டு, 'அவை பற்றிய சிந்தனை வேண்டாம்' என்று ஒதுக்கிவிட்டன. ஆனால் உலகப் பொதுமறை தந்த திருவள்ளுவர், உலக உண்மை இதுவென நிறுவ வந்தவராதலால் தெளிவுபடுத்த வேண்டிய கருத்துக்களை நன்கு தெளிவு படுத்தினார். 'இவ்வுலகம்' என்பதனைக் கண்டறிந்தோம். 'அவ்வுலகம்' என்பதனையும் கண்டோம். அவ்வுலகம் என்பதுதான் பேரின்ப நிலையான உலகம் என்பதும், அந்த நிலையடைந்தவர்களுக்கு மீண்டும் பிறவியில்லை யென்பதும் உணர்த்தப்பட்டது. 'பிறப்பு ஈனும் வித்து' (361), 'வேண்டும் பிறவாமை' (362) என்பன போன்றவை இக்கருத்தினை வலியுறுத்துகின்றன.

உலகில் அன்றும் இன்றும் 'இடைப்பட்ட உலகம்' என்று — மேலே குறிப்பிட்டதைப் பற்றிய சிந்தனை இருந்து வருகிறது. இப்படிப்பட்ட சிந்தனை, என்றைக்கும் இருந்து வரும் என்றும் கூறலாம். ஆதலால்தான் ஆசிரியர் வள்ளுவனார் உலக வழக்கில் இருந்த 'அந்த உலகத்தினைப் பற்றியும், அங்கு வாழ்பவர்களாகக் கூறப்படுபவர்களைப் பற்றியும் நாம் உண்மை புரிந்து கொள்ளுமாறு ஆங்காங்குக் குறித்துக் காட்டுகிறார்.

'ஆவி உலகம்' என்பதாக ஒன்று பல நாடுகளிலும் பேசப்பட்டு வருகின்றது. இதனை உடன்பட்டும் மறுத்தும் கருத்துக்கள் நிலவி வருகின்றன. மேல் நாடுகளில் சில இடங்களில் இது பற்றிய ஆராய்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன. இந்த 'ஆவி உலகம்' (இடைப்பட்ட உலகம்) இறந்த பின் ஆவிகள் வாழுகின்ற உலகம் என்றும் கூறப்படும். நமக்குள்ள ஐம்பூத உடல், ஆவிகளுக்கு இல்லை! ஆதலால் அவை எங்கும் செல்லுதல் முடியும் என்று கூறப் படுகிறது. நுண்ணுடம்புடன் இருந்து அவை உலவுகின்றனவாம். இந்த உலகத்தில் செய்த நல்வினை — தீவினைகளின் பயன்களை அடிப்படையாகக் கொண்டு அவை இன்ப துன்பங்களை நுகர்ந்து கொண்டு இருக்கின்றனவாம்! அவ்வாறு அவை வாழ்ந்து குறிப்பிட்ட காலம் முடிந்த பின் மீண்டும் இவ்வுலகில் பிறவி எடுக்கின்றனவாம்! அந்த ஆவிகள் தங்களுக்குத் தலைவனைப் பெற்றிருக்கின்றன என்கிறார்கள். நல்வினை (புண்ணியம்) செய்தவை இன்ப உலகில் இருக்கின்றன; தீச்செயல்கள் (பாவம்) செய்தவை துன்ப உலகில் இருக்கின்றன என்பர். அந்த 'ஆவிகள்' இந்த உலக மக்களுடைய நினைவாக இருக்கின்றனவென்றும், உற்றார் உறவினர் களுக்கு நன்மை செய்யக் கூடியனவென்றும், அவைகளை மகிழ்விக்கவே இங்குப் பூசனைகள் தேவையென்றும் சொல்லப்படுகின்றன. இந்த இடைப்பட்ட உலகத்திற்கும், அருளாளர்களான பற்றற்ற முனிவர்களுக்கே உரித்தான பேரின்பநிலை என்ற வீட்டுலகமான 'அவ்வுலகம்' என்பதற்கும் எவ்விதத் தொடர்புமே இல்லையென்பதனை நன்கு தெரிந்து கொள்ளவேண்டும்.

இடைப்பட்ட உலகமென நாம் குறிக்கின்ற வானுலகம், புத்தேள் நாடு, தாமரைக் கண்ணான் உலகு என்பன போன்ற பெயர்களால் பழக்கத்தில் அழைக்கப்பெறும் உலகினையும் அங்கு வசிப்பவர்களாகக் கூறப்படும் விசும்புளார், தேவர், வானவர் என்ற பெயர்களால் அழைக்கப் படுபவர்களையும் ஆசிரியர் திருவள்ளுவர் சுட்டிக் காட்டுகிறாரே யல்லாமல் சிறப்பித்துக் கூறவில்லை. இந்த உலகில் நல்ல முறையில் வாழ்பவர்களே அவர்களைவிட மேலானவர்கள் என்பதனைப் பல குறட்பாக்களில் தெளிவுபடுத்திக் காட்டுகின்றார்.

அந்த உலகம் இல்லை யென்றும், அங்கு வாழ்பவர்கள் இல்லை யென்றும், அங்கே நிறைந்த நிலையான இன்பம் இல்லை யென்றும் ஆசிரியர் வள்ளுவனார் நேரடியாக மறுத்துக் கூறினாரில்லை. ஏன்? அப்படிப்பட்ட எண்ணம் மக்களிடையே இருந்து வருதல் இயல்பு என்பதனை ஆசிரியர் அறிந்துதான், உய்த்துணர வைக்க வேண்டிய முறையே தலைசிறந்த முறையென்பதால் அந்த இடைப்பட்ட உலகத்தினரையும் உலகினையும் குறித்துக் காட்டி, அவைகளைவிட மேலானது, 'கடமை செய்து வாழ்கின்ற இவ்வுலக வாழ்க்கை' என்று வலியுறுத்தினார். இடைப்பட்ட உலக இன்பம் என்று கூறப்படும் இன்பம் நிலையற்ற தென்பதும், சிறப்பானதன்று என்பதும், அவர்களின் தலைவன் எனப்படுபவனே நல்லவனல்லன் என்பதும், மனம் போன போக்கில் தேவர்கள் செல்லுபவர்கள் என்பதும், இவை போல் வனவும் சிந்திக்கத்தக்கன.

மேலுலக இன்பத்தினையே கருதுகின்ற இவ்வுலக மக்களுக்கு அறவுரை கூறும் போதெல்லாம் 'இவ்வுலகக் — கடமையே — அறமே' மேலானதென்று கூறுவார். அவ்வுலக

(இடைப்பட்ட உலகம்) இன்பமென்று கருதி இவ்வுலக மக்களின், கடமை தவறுகின்ற அறியாமையினைப் போக்குவதற்காகவே அவ்வுலகத்தினை அடிக்கடி எடுத்துக் கூறுவார். இடைப்பட்ட உலகம் உண்டென்று உடன்பட்டே கூறும் முறை போல அவ்வுலகத்தினையும் (இடைப்பட்ட உலகத்தினையும்) அங்கு வாழ்பவர்களையும் சிறப்பிக்காமல் இவ்வுலக அறவாழ்க்கையினையே வற்புறுத்தி, இடைப்பட்ட உலக இன்பமே இன்பம் என்று பழக்கத்தினால் கருதும் இவ்வுலக மக்களுக்கும் மனநிறைவு காட்டி — உண்மையினைக் கூறி கடமையுணர்ச்சியில் நிலைக்கச் செய்தார்.

## எழுபிறவி, எழுமை

'எழுபிறவி' என்பதனைப் பலபிறவிகள் என்றும் கொள்ளுதல் வேண்டும். எழு, எழுமை இவற்றைச் சிந்தித்து அறிக.

1. 'எழுபிறப்பும்' தீயவை தீண்டா பழிபிறங்காப்
   பண்புடை மக்கட் பெறின். 62

2. 'எழுமை' 'எழுபிறப்பும்' உள்ளுவர் தம்கண்
   விழுமம் துடைத்தவர் நட்பு. 107

3. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
   'எழுமையும்' ஏமாப்பு உடைத்து. 126

4. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
   'எழுமையும்' ஏமாப்பு உடைத்து. 398

5. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது
   இகழ்ந்தார்க்கு 'எழுமையும்' இல். 538

6. ஒருமைச் செயலாற்றும் பேதை 'எழுமையும்'
   தான்புக்கு அழுந்தும் அளறு. 835

7. ஒருநாள் 'எழுநாள்'போல் செல்லும்சேண் சென்றார்
   வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு. 1269

8. நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்
   'எழுநாளேம்' மேனி பசந்து. 1278

இயற்கை, இயற்றல், இயற்றியார்க்கு, இயற்றியான் என்பவை சிந்தித்து ஒன்றுபடுத்திக் கருதற்பாலன.

1. ஆரா 'இயற்கை' அவாநீப்பின் அந்நிலையே
   பேரா 'இயற்கை' தரும். 370

2. இருவேறு உலகத்து 'இயற்கை' திருவேறு
   தெள்ளியர் ஆதலும் வேறு. 374

3. செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
'இயற்கை' அறிந்து செயல். 637

4. 'இயற்றலும்' ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு. 385

5. ஒண்பொருள் காழ்ப்ப 'இயற்றியார்'க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு. 760

6. இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகு'இயற்றி யான்'. 1062

*உலகத்துடன் ஒத்து வாழ்தல் என்ற குறிப்பினை 637ஆம் பாடலும் கீழ் வருவனவும் சுட்டிக் காட்டுதல் சிந்திக்கத்தக்கது.*

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். 140

எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு. 426

*எண் ஒப்பிட்டுக் கருதுக*

*'எண்' என்ற சொல்லின் பொருளினைச் சிந்தித்து நன்கு விளங்கிக் கொள்ளுதல் வேண்டும்.*

1. கோள்இல் பொறியின் குணம்இலவே 'எண்'குணத்தான்
தாளை வணங்காத் தலை. 9

2. 'எண்'என்ப ஏனை எழுத்துஎன்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு. 392

3. 'எண்'பொருள் ஆகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்பது அறிவு. 424

4. 'எண்'பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும். 548

5. ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு 'எண்'பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு. 760

6. 'எண்'சேர்ந்த நெஞ்சத்து இடன்உடையார்க்கு எஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல். 910

7. 'எண்'பதத்தால் எய்தல் எளிதுஎன்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. 991

### தானம் தவம் இரண்டும்

தானமாவது, அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடு கொடுத்தல்; தவமாவது மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின. பெரும்பான்மை பற்றித் தானம் இல்லறத்தின் மேலும், தவம் துறவறத்தின் மேலும் நின்றன.

—பரிமேலழகர்

### ஒல்லும் வகையான்

இல்லறம் பொருள் அளவிற்கு ஏற்பவும் துறவறம் யாக்கை நிலைக்கு ஏற்பவும் செய்தல்; இடைவிடாமல் செய்தல்; மனம் வாக்கு காயங்களினால் செய்தல் வேண்டும். அறங்களாவன: முறையே நற்சிந்தையும், நற்சொல்லும், நற்செயலும் ஆகும்.

—பரிமேலழகர்

### நூல் முழுவதிலும் உள்ள சில சொற்கள்

இது பொதுமறை ஆதலால் 'குறிப்பான' சொற்களை நூல் முழுதும் அமைத்துள்ளார். இடங்கண்டு சொல்லின் பொருளினை அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

1. செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
   இல்லாளின் 'ஊடி' விடும். 1039

2. துப்புரவு இல்லார் துவரத் 'துறவாமை'
   உப்பிற்கும் காடிக்கும் கூற்று. 1050

3. 'காமம்' வெகுளி மயக்கம் இவைமூன்றன்
   நாமம் கெடக்கெடும் நோய். 360

4. கொல்லா நலத்தது 'நோன்மை' பிறர்தீமை
   சொல்லா நலத்தது சால்பு. 984

5. அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம்பு என்றார்
   பலர்நாண 'நீத்தக்' கடை. 1149

6. தமர்ஆகித் தன்'துறந்தார்' சுற்றம் அமராமைக்
   காரணம் இன்றி வரும். 529

7. துறைவன் ‘துறந்தமை’ தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை. 1157

8. பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்
‘துறந்தார்’ அவர்என்பார் இல். 1188

9. நனவினான் நம்‘நீத்தார்’ என்பர் கனவினான்
காணார்கொல் இவ்வூ ரவர். 1220

10. துன்னாத் ‘துறந்தாரை’ நெஞ்சத்து உடையேமா
இன்னும் இழத்தும் கவின். 1250

காமத்துப்பாலில் இயல்பாக உள்ள சொற்களான காமம், ஊடுதல், புலத்தல் முதலியன — உழவு, துறவு முதலிய பகுதிகளிலும், சான்றாண்மை அதிகாரத்தில் நோன்பு என்பதும், ‘நீத்தார் பெருமை’, ‘துறவறம்’ முதலிய பகுதிகளில் இயல்பாக இருக்க வேண்டிய சொற்கள், ‘நல்குரவு’ என்ற அதிகாரத்திலும், இயல்பாக துறவறத்தில் காணப்படுகின்ற பல சொற்கள்—காமத்துப்பால் அதிகாரங்களிலும் காணப்படுகின்ற அமைப்பு சிந்திக்கத்தக்கதாகும். பிற இடங்களையும் இவ்வாறே கண்டு தெளிக.

## இரு பெண்டிர் - உவமை

செல்வத்தினை உலக நடைமுறையில் அசையும் பொருள், அசையாப் பொருள் என்று கூறுவதுண்டு. அசையும் பொருளாகிய செல்வத்திற்கு (பணத்திற்கு)த் திருமணமாகாத பெண்ணையும், அசையாப் பொருளுக்குத் திருமணமான பெண்ணையும் உவமை காட்டினார். இது சிந்தனைக்குரியதாகும்.

அற்றார்க்குஒன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று. 1007

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும். 1039

## நல்லறிவு புல்லறிவு கார்அறிவு

நல்லறிவினை ‘அறிவுடைமை’ என்ற அதிகாரம் கூறுகின்றது. சிறிது அறிவு பெற்றிருந்து மிகப்பெரிய அறிவுள்ளவனாகத் தன்னை நினைத்துக் கொண்டு தவறுகள் பல செய்து வாழ்பவனைப் பற்றிப் ‘புல்லறிவாண்மை’ என்ற அதிகாரம் கூறுகின்றது. இத்துடன் ‘கார் அறிவு’ என்பதனையும் சிந்திக்க வேண்டும். இது களவு செய்பவனுக்குள்ள அறிவு; ‘கள்ளாமை’ அதிகாரத்தில் காணப்படுகிறது.

களவென்னும் கார்அறிவு ஆண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல். 287

## சிந்தனைக்குரிய சில

### அறம்

மனம் தூய்மை; மனத்தினைத் தூய்மையாக வைத்துக் கொண்டு நினைக்கின்ற எண்ணங்கள், பேசப்படுகின்ற சொற்கள் செய்யப்படுகின்ற செயல்கள் அனைத்தும் அறங்களாகும்.

அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் ஆகிய இந்நான்கும் இன்னபிறவும் மனத்தில் இல்லாதிருப்பதே மனம் தூய்மையாகும்.

தூய்மையான மனத்தில், அறங்களாகக் கூறப்படுபவைகளில் ஒன்றே 'ஒன்று' நிலைத்து விடுமேயானால் ஏனைய அறங்களாகக் கூறப்படும் அனைத்தும் இயல்பாகவே அத்தகையவரிடம் சேர்ந்து இருத்தல் இயல்பாகும். ஆதலால்தான் ஒவ்வோர் அறமும் தலைசிறந்ததாக வற்புறுத்திக் கூறப்பட்டது. திருக்குறள் ஓர் அறநூல். 'அறம்' என்ற சொல்லை இன்றியமையாத இடங்களில் எல்லாம் சொல்லுகின்றார் வள்ளுவர். மூன்று பால்களாகப் பிரிக்கப்பட்டுள்ள இந்நூலில் அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் பல இடங்களில் காணப் படுகின்ற 'அறம்' என்ற சொல்லைக் காமத்துப்பாலில் சொல்லாமலேயே விட்டிருப்பது சிந்திக்கத்தக்கது.

### உப்பு

'உப்பு' என்பதற்கு இனிமை என்று பொருள். ஊடல் என்பதனைக் கூறவந்த ஆசிரியர் அதற்கு உப்பினை உதாரணமாகக் கூறுகின்றார். ஊடலுக்குக் காரணமானவர்கள் பெண்களே யாவார்கள். அவர்கள்தான் ஊடல் செய்வார்கள்; செய்யவும் வேண்டும். சமையல் செய்யும் போது உப்பு போடப்படும்; இதனைச் செய்பவர்களும் பெண்களேயாவர்கள். ஆதலால்தான், ஊடலுக்கு உப்பினை உவமையாகக் கூறியது மிகப் பொருத்தம் எனலாம்!

### செயல்! செயல்! செயல்!

செயலாற்றிக் கொண்டே வாழ்தல் வேண்டும் என்பதனை வற்புறுத்த வேண்டியே மும்முறை கூறப்பட்டது. இது ஆசிரியர் திருவள்ளுவர் மறை மொழியாகக் கூறிய அரிய செந் நெறி. எப்போதும் செயலாற்றிக் கொண்டே இருக்கவேண்டும்; செயலற்று இருப்பது, மக்கள் வாழ்க்கைக்குப் புறம்பானதாகும். திருக்குறளில் அமைந்துள்ள அதிகாரங்களின் பெயர்களிலும் இதனை வற்புறுத்துவதைக் காணமுடிகிறது. உதாரணமாக, 'குடி செயல் வகை', 'தெரிந்து செயல்வகை', 'தெரிந்து தெளிதல்', 'தெரிந்து வினையாடல்', 'வினை செயல்வகை', 'பொருள் செயல்வகை' என்பனவும் இவை போன்ற பலவும் கருதற்பாலன.

செய்தல், தொழுதல், சேர்தல், புரிதல், நிற்றல், வணங்குதல், வழங்குதல், நல்குதல், ஒழுகுதல் முதலியனவும் இவை போன்றவையும் ஒரே பொருளினைக் குறிப்பன வாகும். செயல் புரியாத தன்மை பெரும் தீமையினைப் பயக்கும். செயலாற்றாத மக்கள் கொடிய நிலைக்கு ஆளாவார்கள் என்பதனை 'மடியின்மை' என்ற அதிகாரமும் பிறவும் காட்டுகின்றன.

செயலாற்றுபவர்களே பயனுடையவர்களாவார்கள் என்பதனை, **நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்** (994) என்பது குறித்துக் காட்டுகிறது. புகழுடன் வாழ்தல் என்பது இயன்றவரை 'ஈகை' என்னும் செயல் புரிவதாகும். இதனை, 'ஈதல் இசைபட வாழ்தல்' (231) என்பது உணர்த்துகிறது. தவத்தின் ஆற்றல் பெற்றவர்களைக் குறிப்பிடும்போது, 'செயற்கரிய செய்வார் பெரியர்' (26) என்பதாகக் கூறுகின்றார். அவர்களே, 'செந்தண்மை பூண்டு ஒழுகுபவர்கள்' (30) என்று செயலாற்றுவதைக் காட்டிச் சிறப்பிக்கப்படுகின்றார்கள். சிறப்பாகக் குறித்துக் காட்டுகின்ற வகையில் ஊக்கமுடைமை, ஆள்வினையுடைமை என்ற அதிகாரங்களைத் தனிச்சிறப்புடன் கூறமுடிகிறது. 'தூங்குக தூங்கிச் செயற்பால, தூங்கற்க தூங்காது செய்யும் வினை' (672) என்பது தொழில் புரிதல் என்று கூறப்படுகின்ற பல திறப்பட்ட வழிகளில், அமைக்கப்பட்டுள்ளது. 'இருள்தீர எண்ணிச் செயல்' (675), 'பார்த்துச் செயல்' (676) என்பவையெல்லாம் சிந்தனைக்குரியன.

முடிந்த வகைகளில் எல்லாம் நற்பணிகளைச் செய்து கொண்டே இருக்க வேண்டும் என்று அறிவுறுத்தும்போது, 'செல்லும்வாய் எல்லாம் செயல்' (33) என்பதைக் காணு கின்றோம். 'அன்று அறிவாம் என்னாது அறம் செய்க' (36) என்றார். 'செயற்பால தோரும் அறனே' (40) என்பதும் சிந்திக்கத் தக்கதாகும். 'ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை' (43), 'இல்வாழ்க்கை ஆற்றின்' (46), 'முயல்வாருள் எல்லாம் தலை' (47), 'ஆற்றின் ஒழுக்கி நோற்பாரின்' (48) என்பன போன்றவற்றைக் கருதிப் பார்த்து, வாழ்க்கை அமைப்பின் முறையே முயற்சியுடன் செயல்பட்டுக் கொண்டிருப்பதுதான் மக்கள் கடமை என்பதனை உணர்ந்தறிதல் வேண்டும்.

'வினை செயவான் கோடாமை கோடாது உலகு' (520) என்ற கருத்தினைக் கூர்ந்து கவனிக்கும் போது செயல் புரிபவன் எவ்வளவு உயர்த்தப்படுகிறான் என்பது புரிகின்றது. 'குன்றுவ செய்தல் இலர்' (954) 'சலம் பற்றிச் சால்பில் செய்யார்' (956) என்பன செயலின் தன்மைகளை எண்ணிப் பார்க்கச் செய்வனவாம். 'கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை' (663), 'துன்பம் உறவரினும் செய்க' (669), 'வேண்டாரை வேண் டாது உலகு' (670), 'விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்' (648) என்பன உலக மக்க ளிடையே செயல் புரிதல் என்பது எவ்வாறு சிறப்பாகக் கொள்ளப்படுகின்ற தென்பதனை உணர்த்துகின்றன. 'இயற்றலும் ஈட்டலும்' (385), 'ஈத்தளிக்க வல்லார்க்கு' (387) 'காப்பாற்றும் மன்னவன்' (388) என்பன போன்றவையெல்லாம் நன்கு அறியத்தக்கன.

'ஆற்றும் நன்றி' (67), 'ஆற்றும் உதவி' (70), 'என்பும் உரியர் பிறர்க்கு (72), 'செய்தல் பொருட்டு' (81), 'ஓம்புவான் வாழ்க்கை' (83), 'ஓம்புவான் இல்' (84) 'செய்த உதவிக்கு' (101), 'செய்த நன்றி' (102), 'நன்றி செயினும்' (104), இப்படியாக எண்ணிறந்த இடங்களில் ஆசிரியர், பற்பல வகைகளில் மனித வாழ்க்கையின் கடமையும் மேன்மையும் எப்போதும் செயலாற்றுவதிலேயே அமைந்துள்ள தென்று உணர்த்தினார்.

**திருக்குறள் கருத்துக்களை நெஞ்சில் வைத்துச் செயல்படுவோமாக.**

திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்த

# திருக்குறள்

## பரிமேலழகர் உரைவளம்

உரையாசிரியர்களுள் முதன்மை பெற்றுத் திகழ்பவர் பரிமேலழக ராவார்! இவ்வுரையாசிரியர் எழுதியுள்ள உரைப்பாயிரமும், பால் களுக்கும் இயல்களுக்கும் அதிகாரப் பெயர்களுக்கும் தந்துள்ள விளக்கங்களும் அப்படியே தரப்பட்டுள்ளன. சிந்தித்தறிய பெரிதும் பயன்படும்.

### அறத்துப்பால்

### உரைப் பாயிரம்

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும், அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் நெறி அறிந்து எய்துதற்கு உரிய மாந்தர்க்கு உறுதி என உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை அறம், பொருள், வீடு, இன்பம் என்பன. அவற்றுள் வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், துறவறம் ஆகிய காரண வகையான் கூறப்படுவதல்லாது இலக்கண வகையான் கூறப் படாமையின் நூல்களால் கூறப்படுவன ஏனை மூன்றுமே ஆம்.

அவற்றுள், அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழித்தலும் ஆம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று அவ்வவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல். வழக்காவது ஒரு பொருளைத் தனித்தனியே ‘எனதுஎனது’ என்று இருப்பார், அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள் மேல் சொல்வது. அது ‘கடன் கோடல்’ முதல் பதினெட்டு பதத்தது ஆம்.

தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை, அந்நெறி நிறுத்துதற் பொருட்டு, ஒப்ப நாடி அதற்குத் தக ஒறுத்தல். இவற்றுள், வழக்கும் தண்டமும் உலக நெறி நிறுத்துதற் பயத்தலாவது அல்லது ஒழுக்கம் போல மக்கள் உயிர்க்கு உறுதி பயத்தல் சிறப்பில ஆகலானும், அவைதம் நூலானே அன்றி உணர்வு மிகுதியானும் தேய இயற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை ஒழித்து, ஈண்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவரால் சிறப்புடைய ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தாய், வருணந்தோறும் வேறுபாடு உடைமையின், சிறுபான்மை ஆகிய அச்சிறப்பியல்புகள் ஒழித்து, எல்லார்க்கும் ஒத்தலின் பெரும்பான்மை ஆகிய பொது இயல்பு பற்றி 'இல்லறம்', 'துறவறம்' என இருவகை நிலையால் கூறப்பட்டது.

அவற்றுள், இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லு கின்ற நெறிக்கண் நின்று அதற்குத் துணையாகிய கற்புடை மனைவி யோடும் செய்யப்படுவது. ஆகலின், அதனை முதற்கண் கூறுவான் தொடங்கி எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற் பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.

## 1 அறத்துப்பால் 1 பாயிர இயல்

### 1 கடவுள் வாழ்த்து

*அஃதாவது, கவி தான் வழிபடு கடவுளையாதல் எடுத்துக் கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை என அறிக. என்னை? சத்துவம் முதலிய குணங்களான் மூன்று ஆகிய உறுதிப் பொருட்கு அவற்றான் மூவராகிய முதற் கடவுளோடு இயைபு உண்டு; ஆகலான், அம்மூன்று பொருளையும் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமை ஆகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படைக் கூறினார் என உணர்க.*

### 2 வான் சிறப்பு

*அஃதாவது, அக்கடவுளது ஆணையான் உலகமும், அதற்கு உறுதியாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல், அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.*

### 3 நீத்தார் பெருமை

*அஃதாவது, முற்றத் துறந்த முனிவரது பெருமை கூறுதல். அவ்வற முதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவார் அவர் ஆகலின், இது வான் சிறப்பின் பின் வைக்கப்பட்டது.*

### 4 அறன் வலியுறுத்தல்

அஃதாவது, அம்முனிவரான் உணர்த்தப்பட்ட அம்மூன்றனுள் ஏனைப் பொருளும் இன்பமும் போலாது அறன், இம்மை மறுமை வீடு என்னும் மூன்றனையும் பயத்தலான், அவற்றின் வலியுடைத்து என்பது கூறுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும் 'சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும் — அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல' (புறநா. 31) என்றார் பிறரும்.



### 5 இல்வாழ்க்கை

அஃதாவது, இல்லாளோடு கூடி வாழ்தலினது சிறப்பு. இல்நிலை அறஞ்செய்தற்கு உரிய இருவகை நிலையுள் முதல் ஆதலின், இஃது அறன் வலியுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

### 6 வாழ்க்கைத் துணைநலம்

அஃதாவது, அவ் இல்வாழ்க்கைக்குத் துணை ஆகிய இல்லாளது நன்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

### 7 புதல்வரைப் பெறுதல்

அஃதாவது, இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாக இறுக்கப்படூஉம் கடன் மூன்றனுள், முனிவர் கடன் கேள்வியானும், தேவர் கடன் வேள்வியானும், தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலானும் அல்லது இறுக்கப் படாமையின், அக்கடன் இறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல். அதிகார முறைமை மேலே பெறப்பட்டது.

### 8 அன்புடைமை

அஃதாவது, அவ்வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கண் காதலுடையன் ஆதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும். இல்லறம் இனிது நடத்தலும், பிற உயிர்கள்மேல் அருள் பிறத்தலும் அன்பின் பயன் ஆகலின், இது வேண்டப் பட்டது. வாழ்க்கைத் துணைமேல் அன்பு இல்வழி இல்லறம் இனிது நடவாமை, 'அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும் — துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின் — விருந்து எதிர் கோடலும் இழந்த என்னை' (சிலப். 16, 71—73) என்பதனானும், அதனால் அருள் பிறத்தல், 'அருள் என்னும் அன்புஈன் குழவி' (குறள் 757) என்பதனானும் அறிக.

### 9 விருந்து ஓம்பல்

அஃதாவது, இருவகை விருந்தினரையும் புறந்தருதல். தென்புலத்தார் முதலிய ஐம்புலத்துள் முன்னைய இரண்டும் கட்புலனாகாதாரை நினைந்து செய்வன ஆகலானும், பின்னைய இரண்டும் பிறர்க்கு ஈதல் அன்மையானும், இடைநின்ற விருந்து ஓம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதல் ஆயிற்று. வேறாகாத அன்புடை இருவர் கூடியல்லது செய்யப் படாமையின், இஃது அன்புடைமையின் பின் வைக்கப்பட்டது.

### 10 இனியவை கூறல்

அஃதாவது, மனத்தின் கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனிய சொற்களைச் சொல்லுதல். இதுவும், விருந்தோம்புவார்க்கு இன்றியமையாது ஆகலின், விருந்தோம்பலின் பின் வைக்கப்பட்டது.

### 11 செய்ந்நன்றி அறிதல்

அஃதாவது, தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை. இனியவை கூறி இல்லறம் வழுவாதார்க்கு உய்திஇல் குற்றம் செய்ந்நன்றி கோறலேயாகலின் அதனைப் பாதுகாத்துக் கடிதற் பொருட்டு, இஃது இனியவை கூறலின் பின் வைக்கப்பட்டது.

### 12 நடுவு நிலைமை

அஃதாவது, பகை நொதுமல் நண்பு என்னும் மூன்று பகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை. இது, நன்றி செய்தார்மாட்டு அந்நன்றியினை நினைத்த வழிச் சிதையுமன்றே அவ்விடத்துஞ் சிதையலாகாது என்றற்கு, செய்ந்நன்றி அறிதலின் பின் வைக்கப் பட்டது.

### 13 அடக்கம் உடைமை

அஃதாவது, மெய், மொழி, மனங்கள் தீ நெறிக்கண் செல்லாது அடங்குதல் உடையன் ஆதல். அஃது ஏதிலார் குற்றம்போல் தன் குற்றமும் காணும் நடுவு நிலைமை உடையாற்கு ஆதலின், இது நடுவு நிலைமையின் பின் வைக்கப்பட்டது.

### 14 ஒழுக்கம் உடைமை

அஃதாவது தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத்தினையுடையர் ஆதல். இது, மெய்ம் முதலிய அடங்கினார்க்கு அல்லது முடியாது ஆகலின், அடக்கம் உடைமையின் பின் வைக்கப்பட்டது.

### 15 பிறன் இல் விழையாமை

அஃதாவது, காம மயக்கத்தால் பிறனுடைய இல்லாளை விரும்பாமை. இஃது, ஒழுக்கம் உடையார்மாட்டே நிகழ்வதாகலின், ஒழுக்கம் உடைமையின் பின் வைக்கப்பட்டது.

### 16 பொறை உடைமை

அஃதாவது, காரணம்பற்றியதால், மடமையானாதல் ஒருவன் தமக்கு மிகை செய்த வழித் தாமும் அதனை அவன்கண் செய்யாது பொறுத்தலை உடையராதல். நெறியின் நீங்கிய செய்தாரையும் பொறுக்க வேண்டும் என்றற்கு, இது பிறன் இல் விழையாமையின் பின் வைக்கப்பட்டது.

### 17 அழுக்காறாமை

இதனுள் 'அழுக்காறு' என்பது ஒரு சொல். அதற்குப் பொருள் மேலே உரைத்தாம் (குறள் 35). அச்சொல் பின் அழுக்காற்றைச் செய்யாமை என்னும் பொருள்பட எதிர்மறை ஆகாரமும் மகர ஐகார விகுதியும் பெற்று 'அழுக்காறாமை' என நின்றது. இப்பொறாமையும் பொறைக்கு மறுதலை ஆகலின், இதனை விலக்குதற்கு இது பொறைஉடைமையின் பின் வைக்கப்பட்டது.

## 18 வெஃகாமை

அஃதாவது, பிறர்க்குரிய பொருளை வௌவக் கருதாமை. பிறர் உடைமை கண்ட வழிப் பொறாமையே அன்றி அதனைத் தான் வௌவக் கருதுதலும் குற்றம் என்றற்கு இஃது அழுக்காறாமையின் பின் வைக்கப்பட்டது.

## 19 புறங் கூறாமை

அஃதாவது, காணாதவழிப் பிறரை இகழ்ந்து உரையாமை. மொழிக்குற்றம் மனக்குற்றம் அடியாக வருதலான், இஃது அழுக்காறாமை, வெஃகாமைகளின் பின் வைக்கப்பட்டது.

## 20 பயன்இல சொல்லாமை

அஃதாவது, தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பம் ஆகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என வாக்கின்கண் நிகழும் பாவம் நான்கனுள், பொய் துறந்தார்க்கு அல்லது ஒரு தலையாகக் கடியலாகாமையின் அஃது ஒழித்து, இல்வாழ்வாரால் கடியப்படும் ஏனை மூன்றனுள், கடுஞ் சொல் இனியவை கூறலானும், குறளை புறங்கூறாமையானும் விலக்கி, நின்ற பயனில் சொல் இதனான் விலக்குகின்றார். ஆகலின், இது புறங்கூறாமையின் பின் வைக்கப்பட்டது.

## 21 தீவினை அச்சம்

அஃதாவது, பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல். இதனான் மெய்யின்கண் நிகழும் பாவங்கள் எல்லாம் தொகுத்து விலக்குகின்றார் ஆகலின், இது பயன் இல சொல்லாமையின் பின் வைக்கப்பட்டது.

## 22 ஒப்புரவு அறிதல்

அஃதாவது உலக நடையினை அறிந்து செய்தல். உலக நடை வேத நடைபோல அறநூல்களுள் கூறப்படுவதன்றித் தாமே அறிந்து செய்யும் தன்மைத்தாகலின், ஒப்புரவு அறிதலென்றார். மேல் மனம் மொழி மெய்களால் தவிரத் தகுவன கூறினார். இனிச் செய்யத் தகுவனவற்றுள் எஞ்சி நின்றன கூறுகின்றார் ஆகலின், இது தீவினையச்சத்தின் பின் வைக்கப்பட்டது.

## 23 ஈகை

அஃதாவது, வறியாராய் ஏற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். இது மறுமை நோக்கியது ஆகலின், இம்மை நோக்கிய ஒப்புரவு அறிதலின் பின் வைக்கப்பட்டது.

## 24 புகழ்

அஃதாவது, இல்வாழ்க்கை முதல் ஈகை ஈறாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப் பயனாகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி. இது, பெரும்பான்மையும் ஈதல்பற்றி வருதலின், அதன் பின் வைக்கப்பட்டது.

1 அறத்துப்பால் 3 துறவற இயல்

இனி முறையானே 'துறவறம்' கூறிய தொடங்கினார். துறவறமாவது மேற் கூறிய இல்லறத்தின் வழுவாது ஒழுகி அறிவுடையராய்ப் பிறப்பினை அஞ்சி வீடுபேற்றின் பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம். அதுதான் வினைமாசு தீர்ந்து அந்தக் கரணங்கள் தூய ஆதற்பொருட்டு அவரால் காக்கப்படும் 'விரதங்களும்', அவற்றான் அவை தூய ஆயவழி உதிப்பதாய 'ஞானமும்' என இருவகைப்படும்.

### விரதம்

அவற்றுள் விரதங்களாவன : 'இன்ன அறம் செய்வல்' எனவும் 'இன்ன பாவம் ஒழிவல்' எனவும் தம் ஆற்றலுக்கு ஏற்ப வரைந்து கொள்வன. அவைதாம் வரம்பில ஆகலின் பெருகும் என்று அஞ்சி, அவை தம்முள்ளே பலவற்றையும் அகப்படுத்து நிற்கும் சிறப்புடையன சிலவற்றை ஈண்டுக் கூறுவான் தொடங்கி, முதற்கண் அருள் உடைமை கூறுகின்றார்.

### 25 அருள் உடைமை

அஃதாவது, தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடைமை போல இது துறவறத்திற்குச் சிறந்தமையின் முன் கூறப்பட்டது.

### 26 புலால் மறுத்தல்

அஃதாவது, ஊன் உண்டலை ஒழிதல். கொலைப் பாவத்தைப் பின்னும் உளது ஆக்கலின் அதற்குக் காரணம் ஆதலையும், முன்னும் அதனால் வருதலின் அதன் காரியம் ஆதலையும் ஒழுங்குடைத்தாய ஊன் உண்டல் அருளுடையார்க்கு இயைவதன்று ஆகலின் அதனை விலக்குதற்கு, இஃது அருள் உடைமையின் பின் வைக்கப்பட்டது.

### 27 தவம்

அஃதாவது மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில் நிலை நிற்றலும் மாரியினும் பனியினும் நீர் நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்து, பிற உயிர்களை ஓம்புதல். புலால் மறுத்து உயிர்கள்மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப்படுவது ஆகலின், இது புலால் மறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

### 28 கூடா ஒழுக்கம்

அஃதாவது, தாம் விட்ட காம இன்பத்தை உரன் இன்மையின் பின்னும் விரும்புமாறு தோன்ற அவ்வாறே கொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாய தீய ஒழுக்கம். அது விலக்குதற்கு இது தவத்தின் பின் வைக்கப்பட்டது.

## 29 கள்ளாமை

அஃதாவது, பிறர் உடைமையாயிருப்பது யாதொரு பொருளையும், அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாமை. கருதுதலும் செய்தலோடு ஒத்தலின், 'கள்ளாமை' என்றார். இல்வாழ்வார்க்கு ஆயின் தமரொடு விளையாட்டு வகையால் அவரை வஞ்சித்துக் கோடற்கு இயைந்த பொருள்களை அங்ஙனம் கொள்ளினும் அமையும்; துறந்தார்க்கு ஆயின் அதனைக் கருதிய வழியும் பெரியதோர் இழுக்காம் ஆகலின், இது துறவறமாயிற்று. புறத்துப் போகாது மடங்கி ஒருதலைப்பட்டு உயிரையே நோக்கற்பாலதாய அவர் மனம் அஃது ஒழிந்து புறத்தே போந்து பல்தலைப்பட்டு உடம்பின் பொருட்டுப் பொருளை நோக்குதலேயன்றி, அது தன்னையும் வஞ்சித்துக் கொள்ளக் கருதுதல் அவர்க்குப் பெரியதோர் இழுக்காதல் அறிக. இவ்வாறு 'வாய்மை' முதல் 'கொல்லாமை' ஈறாய நான்கு அதிகாரத்திற்கும் ஒக்கும். பொருள் பற்றி நிகழும் குற்றத்தை விலக்குகின்றதாகலின், இது காமம் பற்றி நிகழ்வதாய கூடா ஒழுக்கத்தின் பின் வைக்கப்பட்டது.

## 30 வாய்மை

அஃதாவது, மெய்யினது தன்மை. பெரும்பான்மையும் காமமும் பொருளும் பற்றி நிகழ்வதாய பொய்ம்மையை விலக்கலின், இது 'கூடா ஒழுக்கம்'' 'கள்ளாமை'களின் பின் வைக்கப்பட்டது.

## 31 வெகுளாமை

அஃதாவது, சினத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவன்மாட்டு உளதாய இடத்தும் அதனைச் செய்யாமை. இது பொய்ம்மைபற்றி நிகழ்வதாய வெகுளியை விலக்கலின்' வாய்மையின் பின் வைக்கப்பட்டது.

## 32 இன்னா செய்யாமை

அஃதாவது, தனக்கு ஒரு பயன் நோக்கியாதல், செற்றம் பற்றியாதல், சோர்வானாதல் ஓர் உயிர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை. இன்னா செய்தல் வெகுளி ஒழியவும் நிகழும் என்பது அறிவித்தற்கு, இது வெகுளாமையின் பின் வைக்கப்பட்டது.

## 33 கொல்லாமை

அஃதாவது, ஐயறிவு உடையன முதல் ஓர் அறிவு உடையன ஈறாக, உயிர்களைச் சோர்ந்தும் கொல்லுதலைச் செய்யாமை. இது மேற்கூறிய அறங்கள் எல்லாவற்றினும் சிறப்புடையதாய்க் கூறாத அறங்களையும் அகப்படுத்து நின்றதலின் இறுதிக்கண் வைக்கப்பட்டது.

இனி, அவற்றின் பயன் ஆகிய ஞானம் கூறித் தொடங்கினார். ஞானமாவது வீடு பயக்கும் உணர்வு. அது 'நிலையாமை' முதல் 'அவா அறுத்தல்' இறுதியாக நான்கு அதிகாரத்துள் அடக்கப்பட்டது.

## 34 நிலையாமை

அவற்றுள், நிலையாமையாவது தோற்றம் உடையன யாவும் நிலையுதல் இலவாம் தன்மை. மயங்கிய வழிப் பேய்த்தேரில் புனல்போலத் தோன்றி, மெய்புணர்ந்த வழிக் கயிற்றில்

அரவு போலக் கெடுதலின் பொய் என்பாரும், நிலை வேறுபட்டு வருதலால் கணந்தோறும் பிறந்து இறக்கும் என்பாரும், ஒருவற்றான் வேறுபடுதலும் ஒருவற்றான் வேறுபடாமையும் உடைமையின் நிலையுதலும் நிலையாமையும் ஒருங்கேயுடைய என்பாரும் எனப் பொருட் பெற்றி கூறுவார் பலதிறத்தராவர்; எல்லார்க்கும் அவற்றது நிலையாமை உடம்பாடாகலின், ஈண்டு அதனையே கூறுகின்றார். இஃது உணர்ந்துழி அல்லது பொருள்களில் பற்றுவிடாது ஆகலின், இது முன் வைக்கப்பட்டது.

## 35 துறவு

அஃதாவது, புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய யாக்கையின் கண்ணும் உளதாம் பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கி விடுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 36 மெய் உணர்தல்

அஃதாவது, பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களா னன்றி உண்மையான் உணர்தல். இதனை வடநூலார் 'தத்துவ ஞானம்' என்ப. இதுவும் 'பற்றற்றான் பற்றினைப் பற்றியவழி உளதாவது ஆகலின், அக்காரண ஒற்றுமைபற்றித் துறவின் பின் வைக்கப்பட்டது.

## 37 அவா அறுத்தல்

அஃதாவது, முன்னும் பின்னும் வினைத் தொடர்பு அறுத்தார்க்கு நடுவு நின்ற உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றமையின், வேதனைபற்றி ஒரோவழித் துறக்கப்பட்ட புலன்கள் மேல் பழைய பயிற்சி வயத்தான் நினைவு செல்லுமன்றே; அந் நினைவும் அவிச்சை எனப் பிறவிக்கு வித்து ஆம் ஆகலின், அதனை இடைவிடாது மெய்ப் பொருள் உணர்வான் அறுத்தல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

1 அறத்துப்பால் 4 ஊழ் இயல்

இவ்வாற்றான் இம்மை மறுமை வீடு என்னும் மூன்றனையும் பயத்தற் சிறப்புடைத்தாய அறம் கூறினார்; இனிப் பொருளும் இன்பமும் கூறுவார், அவற்றின் முதற் காரணமாகிய ஊழின் வலி கூறுகின்றார்.

## 38 ஊழ்

அஃதாவது, இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி ஊழ், பாழ், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி யென்பன ஒரு பொருட் கிளவி. இது பொருள் இன்பங்கள் இரண்டிற்கும் பொதுவாய் ஒன்றனுள் வைக்கப் படாமை யானும், மேற்கூறிய அறத்தோடு இயைபு உடைமையானும், அதனது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

## 2 பொருட்பால் 1 அரசியல்

இனி, இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருள் இன்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவான் எடுத்துக்கொண்டார். அது தன் துணைக் காரணமாய அரசன் நீதி கூறவே அடங்கும். அரசன் நீதியாவது காவலை நடாத்தும் முறைமை. அதனை **அரசியல், அங்கவியல், ஒழிபியல்** என மூவகைப்படுத்து, மலர்தலை உலகிற்கு உயிரெனச் சிறந்த அரசனது இயல்பு இருபத்தைந்து அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி முதற்கண் இறைமாட்சி கூறுகின்றார்.

### 39 இறைமாட்சி

அஃதாவது, அவன் தன் நற்குண நற்செய்கைகள் உலக பாலர் உருவாய் நின்று உலகம் காத்தலின் 'இறை' என்றார். 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்' (திருவாய். 348) என்று பெரியாரும் பணித்தார்.

### 40 கல்வி

அஃதாவது, அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல். அவையாவன: அறநூலும், நீதி நூலும், யானை குதிரை தேர் படைக்கலம் என்று இவற்றின் நூல்களும் முதலாயின. அரசன் அறிவுடையன் ஆயக்கால் தன்னுயிர்க்கே அன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதல் நோக்கி, இஃது அரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதிபயத்தற் சிறப்புடைமையின் பொதுப்படக் கூறுகின்றார். மேல் 'தூங்காமை கல்வி' (குறள் 383) எனத்தோற்றுவாய் செய்த மாட்சியை விரித்துக் கூறுகின்றமையின், இஃது இறை மாட்சியின் பின் வைக்கப்பட்டது.

### 41 கல்லாமை

அஃதாவது, கற்றலைச் செய்யாமை என்றது அதனின் ஆய இழிபினை. கல்விச் சிறப்பு மேல் விதிமுகத்தால் கூறிய துணையான் முற்றுப் பெறாமை நோக்கி, எதிர்மறை முகத்தானும் கூறுகின்றதாகலின் இது கல்வியின் பின் வைக்கப்பட்டது.

### 42 கேள்வி

அஃதாவது, கேட்கப்படும் நூற்பொருட்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல். கற்ற வழி அதனின் ஆய, அறிவை வலியுறுத்தலானும், கல்லாத வழியும் அதனை உண்டாக்குதலானும். இது கல்வி, கல்லாமைகளின் பின் வைக்கப்பட்டது.

### 43 அறிவு உடைமை

அஃதாவது, கல்வி கேள்விகளின் ஆய அறிவோடு உண்மை அறிவு உடையன் ஆதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்,

## 44 குற்றம் கடிதல்

அஃதாவது, காமம், வெகுளி, கடும் பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப்பட்ட குற்றங்கள் ஆறனையும் அரசன் தன்கண் நிகழாமல் கடிதல். இவற்றை வடநூலார் பகை வர்க்கம் என்ப. இவை குற்றம் என்று அறிதலும் கடிதலும் அறிவுடையார்க்கு அல்லது கூடாமையின், அதன்பின் வைக்கப்பட்டது.

## 45 பெரியாரைத் துணைக்கோடல்

அஃதாவது, மூவிரு குற்றமும் முறைமையின் கடிதலின், காவற் சாகாடு உகைத்தற்கு உரியனாய அரசன், தீ நெறி விலக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கோடல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும். பேரறிவு உடையராவார்: அரசர்க்கும் அங்கஙகட்கும் மானுடத் தெய்வக் குற்றங்கள் வாராமல் காத்தற்கு உரிய அமைச்சர், புரோகிதர்.

## 46 சிற்றினம் சேராமை

அஃதாவது, சிறிய இனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவது, 'நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லை என்போரும்' (புறநா. 29) விடரும், தூர்த்தரும், நடரும் உள்ளிட்ட குழு. அறிவைத் திரித்து இருமையும் கெடுக்கும் இயல்பிற்றாய அதனைப் பொருந்தின் பெரியாரைத் துணைக் கோடல் பயன் இன்று என்பது உணர்த்தற்கு இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

## 47 தெரிந்து செயல்வகை

அஃதாவது, அரசன் தான் செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யும் திறம். அச்செயல் பெரியாரைத் துணைக் கோடல் பயனுடைத்தாய வழி அவரோடும் செய்யப்படுவது ஆகலின் இது சிற்றினம் சேராமையின் பின் வைக்கப்பட்டது.

## 48 வலி அறிதல்

அஃதாவது, அவ்வுபாயஙகளுள் ஒறுத்தல் குறித்த அரசன் நால்வகை வலியையும் அளந்தறிதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 49 காலம் அறிதல்

அஃதாவது, வலியான் மிகுதியுடையானாய்ப் பகைமேல் சேறலுற்ற அரசன், அச்செலவிற்கு ஏற்ற காலத்தினை அறிதல். அதிகார முறைமையும் இதனானே விளஙகும்.

## 50 இடன் அறிதல்

அஃதாவது, வலியும் காலமும் அறிந்து பகைமேற் செல்வான் தான் வெல்லுதற்கு ஏற்ற நிலத்தினை அறிதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 51 தெரிந்து தெளிதல்

அஃதாவது, அமைச்சர் முதலாயினாரைப் பிறப்புக் குணம் அறிவு என்பனவற்றையும் செயலையும் காட்சி, கருத்து, ஆகமம் என்னும் அளவைகளான் ஆராய்ந்து தெளிதல். வலி முதல் மூன்றும் அறிந்து பகைமேற் செல்வானுக்குத் தானை வினையுற்றுச் செய்தல் பொருட்டும் அறை போகாமல் பொருட்டும் இது வேண்டுதலின் அவற்றின் பின் வைக்கப்பட்டது.

## 52 தெரிந்து வினையாடல்

அஃதாவது, அத்தெளியப்பட்டாரை அவர் செய்யவல்ல வினைகளை அறிந்து அவற்றின் கண்ணே ஆளுந் திறம் அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 53 சுற்றம் தழால்

அஃதாவது, அரசன் தன் கிளைஞரைத் தன்னின் நீங்காமல் அணைத்தல். வினை செய்வாரைக் கூறி ஏனைச் சுற்றம் கூறுகின்றார். ஆகலின், இது தெரிந்து வினையாடலின் பின் வைக்கப்பட்டது.

## 54 பொச்சாவாமை

அஃதாவது, உருவும் திருவும் ஆற்றலும் முதலாயவற்றான் மகிழ்ந்து தற்காத்தலினும் பகை அழித்தல் முதலிய காரியங்களினும் சோர்தலைச் செய்யாமை. மேற்சொல்லிய சுற்றத்தாரால் பயனுள்ளது இச்சோர்வு இல்வழியாகலின், இது சுற்றம் தழாலின் பின் வைக்கப் பட்டது.

## 55 செங்கோன்மை

அஃதாவது, அரசனால் செய்யப்படும் முறையினது தன்மை. அம்முறை ஒருபாற் கோடாது செவ்வியகோல் போறலின் செங்கோல் எனப்பட்டது. வடநூலாரும் தண்டம் என்றார். அது சோர்வில்லாத அரசனால் செயற்பாலது ஆகலின், இது பொச்சாவாமையின் பின் வைக்கப்பட்டது.

## 56 கொடுங்கோன்மை

அஃதாவது, அம்முறையினது கோடுதல் தன்மை. ஈண்டும் உவமையின் பெயர் பொருள்மேல் ஆயிற்று. செங்கோன்மைக்கு மாறு ஆகலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

## 57 வெருவந்த செய்யாமை

அஃதாவது, குடிகள் அஞ்சுவதும், பகுதி அஞ்சுவதும், தான் அஞ்சுவதும் ஆய தொழில்களைச் செய்யாமை. அவை செய்தல் கொடுங்கோன்மைப்பாற் படுதலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

## 58 கண்ணோட்டம்

அஃதாவது, தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. இஃது அவர் மேற்கண் சென்றவழி நிகழ்வது ஆகலின், அப்பெயர்த்தாயிற்று. மேல் வெருவந்த செய்யாமையுள் கூறிய அதனையே சிறப்புப் பற்றி விரித்துக் கூறுகின்றமையின், இஃது அதன் பின் வைக்கப்பட்டது.

## 59 ஒற்றாடல்

அஃதாவது, பகை, நொதுமல், நட்பு என்னும் மூன்று திறத்தார் மாட்டும் நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரை ஆளுதல். மேற்சொல்லிய இலக்கணத்தனாய அரசனுக்குத் தன் நாடு செலுத்துங்காலும் பிறர் நாடு கொள்ளுங்காலும் வேண்டுவன கூறுகின்றார் ஆகலின், அவ்இருமைக்கும் இன்றியமையாதாய இது முன் வைக்கப்பட்டது.

## 60 ஊக்கம் உடைமை

அஃதாவது, மனம் மெலிதலின்றி வினை செய்தற்கண் கிளர்ச்சி உடைத்ததால், ஒற்றரான் நிகழ்ந்தன அறிந்து அவற்றிற்கு ஏற்றவினை செய்வானுக்கு இஃது இன்றியமையாமையின், ஒற்றாடலின் பின் வைக்கப்பட்டது.

## 61 மடிஇன்மை

அஃதாவது, கருதியன செய்யுங்கால் சோம்புதல் இல்லாமை. ஊக்கம் உடையார்க்கு ஒரோவழிக் குணவயத்தான் மடிவருதல் நோக்கி இஃது ஊக்கம் உடைமையின் பின் வைக்கப் பட்டது.

## 62 ஆள்வினை உடைமை

அஃதாவது, இடைவிடாத மெய்ம்முயற்சி உடையன் ஆதல்; அஃது ஆளும் வினை யெனக் காரியத்தான் கூறப்பட்டது. மடி கெடுத்தாலும் வினைமுயற்சியான் அன்றி ஆளப் படாமையின், இது மடியின்மையின் பின் வைக்கப்பட்டது.

## 63 இடுக்கண் அழியாமை

அஃதாவது, வினையின் கண் முயல்வான், தெய்வத்தானாக, பொருளின்மை யானாக மெய்வருத்தத்தானாகத் தனக்கு இடுக்கண் வந்துழி, அதற்கு மனங் கலங்காமை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

2 பொருட்பால் — 2 அங்க இயல்

இனி, முறையானே அரசியல் நடாத்துதற்கண் ஒன்றற்கு ஒன்று துணையாய அங்கங்கள் ஆறனது இயல்பு முப்பத்திரண்டு அதிகாரத்தால் கூறுவான் எடுத்துக் கொண்டு, அவை ஆறனுள்ளும் 'காவற் சாகாடு உகைத்தற்' (புறநா. 185) கண் அவ் அரசற்கு இணையாய அமைச்சனது இயல்பு பத்து அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி, முதற்கண் அமைச்சு கூறுகின்றார்.

## 64 அமைச்சு

அஃதாவது, அமைச்சனது தன்மை என்றது அவன் தன் குணங்களையும் செயல்களையும்.

## 65 சொல்வன்மை

அஃதாவது, தான் கருதிய வினை முடியுமாற்றால் அமைச்சியல் நடத்தற்கு ஏதுவாய சொற்களைச் சொல்ல வல்லானாதல். மேல் 'ஒருதலையாச் சொல்லலும் வல்லது' (குறள் 634) என்றதனையே சிறப்புப் பற்றி விரித்துரைக்கின்றமையின், இஃது அமைச்சின் பின் வைக்கப் பட்டது.

## 66 வினைத் தூய்மை

அஃதாவது, செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்ல ஆதல். சொல்லேயன்றிச் செயலும் நன்றாக வேண்டும் என்கின்றமையின், இது சொல் வன்மையின் பின் வைக்கப்பட்டது.

## 67 வினைத் திட்பம்

அஃதாவது, அத்தூய வினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 68 வினைசெயல்வகை

அஃதாவது, அத்திட்பமுடைய அமைச்சன் அவ்வினையைச் செய்யும் திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 69 தூது

அஃதாவது, சந்தி விக்கிரகங்கட்கு (இணைத்தற்கும் பிரித்தற்கும்) வேற்று வேந்தரிடைச் செல்வாரது தன்மை. அவ்விரண்டினையும் மேல் வினைசெயல்வகை என்றமையின், இஃது அதன் பின் வைக்கப்பட்டது. தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவான் எனத் தூது இருவகைப்படும். அவருள் முன்னோன் அமைச்சனோடு ஒப்பான் ஆகலானும், பின்னோன் அவனில் காற்கூறு குணம் குறைந்தோன் ஆகலானும், இஃது அமைச்சியலாயிற்று.

## 70 மன்னரைச்சேர்ந்து ஒழுகல்

அஃதாவது, அமைச்சர் அரசரைப் பொருந்தி ஒழுகுமாறு. இது 'வேந்து அவாம் பண்பு உடைமை' என மேலே (குறள் 681) வேண்டப்பட்டமையின், தூதின் பின் வைக்கப் பட்டது.

## 71 குறிப்பு அறிதல்

அஃதாவது, அரசர் கருதிய அதனை அவர் கூறாமல் அறிதல். இது மன்னரைச் சேர்ந்தொழுகற்கு இன்றியமையாதாகலின், அதன் பின் வைக்கப்பட்டது.

## 72 அவை அறிதல்

அஃதாவது, அரசனோடிருந்த அவையினது இயல்பை அறிதல் காரியஞ் சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே யன்றி, இதுவும் வேண்டுதலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

## 73 அவை அஞ்சாமை

அஃதாவது, சொல்லுதற்குரிய அவையினையறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 74 நாடு

இனி, அவ்வரசனாலும் அமைச்சனாலும் கொண்டு உய்க்கப்படுவதாய், ஏனை அரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய நாடு ஓர் அதிகாரத்தாற் கூறுகின்றார்.

## 75 அரண்

இனி, அந்நாட்டிற்கு உறுப்பாய் அடங்குமாயினும், பகைவரால் தொலைவு வந்துழி, அது தனக்கும் அரசன் தனக்கும் ஏம மாதற் சிறப்புப் பற்றிப் பிறிதோர் அங்கமாக ஓதப்பட்ட அரண் இவ்வதிகாரத்தால் கூறுகின்றார்.

## 76 பொருள் செயல்வகை

இனிப் பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் ஆக்கவும் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம் இவ் அதிகாரத்தாற் கூறுகின்றார்.

## 77 படைமாட்சி

இனி, அப்பொருளினான் ஆவதாய் வெல்வதாய படை இரண்டு அதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் 'படைமாட்சி' கூறுகின்றார். அஃதாவது படையினது நன்மை.

## 78 படைச்செருக்கு

அஃதாவது, அப்படையது மறமிகுதி. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 79 நட்பு

இனி, அப்படைபோல அரசனுக்கு வினையிடத்து உதவுவதாய நட்பினை ஐந்து அதிகாரம் விதிமுகத்தானும், பன்னிரண்டு அதிகாரம் எதிர்மறை முகத்தானும் கூறுவான் தொடங்கி, விதிமுக அதிகாரம் ஐந்தனுள்ளும் முதற்கண் நட்பு கூறுகின்றார். அஃதாவது, இன்னது என்பதூஉம் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

## 80 நட்பு ஆராய்தல்

அஃதாவது, மேற் சொல்லிய இலக்கணத்தாரை ஆராய்ந்தறிந்தே நட்க வேண்டுதலின் அவரை ஆராயும் திறம் அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 81 பழைமை

அஃதாவது, நட்டாரது பழமையராந்தன்மை பற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். காரணப்பெயர் காரியத்திற்கு ஆயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டார் எனினும் பொறுக்கப்படும் குற்றமுடையராகலானும் ஊழ்வகையானும் நட்டார்மாட்டுப் பிழை உளதாம் என்பது அறிவித்தற்கு, இது நட்பு ஆராய்தலின் பின் வைக்கப்பட்டது.

## 82 தீ நட்பு

இனிப் பொறுக்கப்படாத குற்றம் உடைமையின் விடற்பாலதாய நட்பு, நட்பாராய்தற்கண் சுருங்கச் சொல்லிய துணையான் அடங்காமையின், அதனை இருவகைப்படுத்து இரண்டு அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி, முதற்கண் தீ நட்புக் கூறுகின்றார். அஃதாவது தீக்கணத்தாரோடு உளதாய நட்பு. குணத்தின் தீமை ஒற்றுமை பற்றி உடையார் மேற்றாய், அதுபின் அவரோடு செய்த நட்பின் மேற்றாயிற்று. அதிகாரமுறைமை கூறாமையே விளங்கும்.

## 83 கூடா நட்பு

இனி, ஏனைக் கூடா நட்புக் கூறுகின்றார். அஃதாவது பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தால் கூடியொழுகுவார் நட்பு.

## 84 பேதைமை

இனி, அந்நட்பினை எதிர்மறுத்துப் பகை முகத்தாற் கூறிய தொடங்கினார். அப்பகை தான் முற்றக்கடியுங் குற்றமன்மையின் உளவாய வெகுளியானும் காமத்தானும் வருவதாம். அவற்றின் வெகுளியான் வருவன ஐந்து அதிகாரத்தானும் காமத்தான் வருவன ஐந்து அதிகாரத்தானும் கூறுவார். அவ் இரண்டிற்கும் அடியாய மயக்கத்தை இருவகைப்படுத்து, இரண்டு அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி, முதற்கண் பேதைமை கூறுகின்றார். அஃதாவது, யாதும் அறியாமை.

## 85 புல்லறிவாண்மை

இனி, ஏனைப் புல்லறிவாண்மை கூறுகிறார். அது புல்லிய அறிவினை ஆள்தல் தன்மை என விரியும். அஃதாவது, தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொற் கொள்ளாமை.

## 86 இகல்

இனி, அவற்றான் வரும் வெகுளி காமங்களுள் அரசர்க்கு வெகுளி பெரும்பான்மைத் தாகலின், அதனான் வருவன கூறுவான் தொடங்கி, முதற்கண் இகல் கூறுகின்றார். அஃதாவது, இருவர் தம்முள் பொருதுவலி தொலைதற்கு ஏதுவாய மாறுபாடு.

## 87 பகை மாட்சி

அஃதாவது, அறிவின்மை முதலிய குற்றங்களுடைமையாற் பகையை மாட்சிப்படுத்தல், அரசர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையின்மேற் பொது வகையான் விலக்கப்பட்ட இகலை, ஈண்டுச் சிறப்பு வகையான் விதிக்கின்றார். ஆகலின், இஃது அதன் பின் வைக்கப் பட்டது.

## 88 பகைத்திறம் தெரிதல்

அஃதாவது, மாணாத பகையை ஆக்குதற் குற்றமும், முன் ஆகி நின்ற பகையுள் நட்பாக்கற்பாலதும், நொதுமல் ஆக்கற்பாலதும், அவற்றின்கண் செய்வதும், ஏனைக் களைதற் பாலதன்கண் செய்வனவும், களையும் பருவமும், களையாக்காற்படும் இழுக்கும் என்று இத் திறங்களை ஆராய்தல். 'இரட்டுற மொழிதல்' என்பதனாற் பகையது திறமும், பகையிடத்து ஆக்குந் திறமும் என விரிக்கப்பட்டது. இவையெல்லாம் மாணாப்பகைய ஆகலின், இது **பகைமாட்சி**யின் பின் வைக்கப்பட்டது.

## 89 உட்பகை

அஃதாவது, புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து அதுவெல்லும் துணையும் உள்ளாய் நிற்கும் பகை. இதுவும் களையப்படுவதை பாலதாகலின், பகைத்திறம் தெரிதலின் பின் வைக்கப்பட்டது.

## 90 பெரியாரைப் பிழையாமை

அஃதாவது, பெரியராயினாரை அவமதித்து ஒழுகாமை. 'இரட்டுற மொழிதல்' என்பதனால் பெரியார் என்பது ஆற்றலாற் பெரியாராய வேந்தர் மேலும், தவத்தாற் பெரியாராய முனிவர் மேலும் நின்றது. மேற் சொல்லாது எஞ்சி நின்றது ஆகலின், இது வெகுளியான் வருவனவற்றது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

## 91 பெண்வழிச் சேறல்

இனிக் காமத்தான் வருவன நேரே பகையல்லவாயினும் ஆக்கம் சிதைத்தல், அழிவு தலைத் தருதல் என்னும் தொழில்களால் பகையோடு ஒத்தலின் பகைப்பாற்படுவனவாம்; ஆதலால் அவற்றைப் பகைப் பகுதியது இறுதிக்கண் கூறுவான் தொடங்கி, முதற்கண் பெண்வழிச் சேறல் கூறுகின்றார். அஃதாவது தன்வழி ஒழுகற்பாலளாய இல்லாள் வழியே தான் ஒழுகுதல்.

## 92 ) வின் மகளிர்

அஃதாவது, தம் நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது. அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு; ஆதலால் தமக்குரிய மகளிரான் வருங் குற்றத்தின் பின்வைக்கப்பட்டது.

## 93 கள் உண்ணாமை

இனி, ஒழுக்கமும் உணர்வும் அழித்தற்கண் அவ்வரைவின் மகளிரோடு ஒப்பதாய கள்ளினை உண்ணாமையது சிறப்பு எதிர்மறை முகத்தால் கூறுகின்றார்.

## 94 சூது

இனி, அக்கள்ளுண்டல்போல அறம் பொருள் இன்பங்கட்கு இடையீடாகிய சூதாடலும் பிணியுழத்தலும் கூறுவான் தொடங்கி, முதற்கண் சூதினது இயல்பு கூறுகின்றார்.

### 95 மருந்து

பழவினையானும் காரணங்களானும் மக்கட்கு வாதம் முதலிய பிணிகள்வரும்: அவற்றுள் பழவினையான் வருவன அதன் கழிவின்கண் அல்லது தீராமையின் அவை ஒழித்து' ஏனைக் காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் திறம் கூறுகின்றார். காரணங் களாவன: உணவு செயல்களது ஒவ்வாமையாகலின், பிணிகளும் காரணத்தான் வருவனவாயின•

## 2 பொருட்பால் 3 ஒழிபு இயல்

இனி, அவ்வரசியலினும் அங்க இயலினும் அடங்காது ஒழிந்த வற்றது இயல்பு பதின்மூன்று அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி, முதற்கண் குடிமை கூறுகின்றார்.

### 96 குடிமை

அஃதாவது, உயர்ந்த குடியின்கண் பிறந்தாரது தன்மை உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையாதாகலின், அச்சிறப்புப் பற்றி இது முன் வைக்கப்பட்டது.

### 97 மானம்

இனிக் குடிபிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் தொடங்கி, முதற்கண் மானம் கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆம். இஃது அக்குடிப்பிறப்பினை நிறுத்தலுடைமையின், அச் சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டது.

### 98 பெருமை

அஃதாவது, செயற்கு அரிய செய்தல், தருக்கு இன்மை, பிறர்குற்றம் கூறாமை என்றிவை முதலிய நாற்குணங்களாற் பெரியாரது தன்மை, நிலையினும் மேன்மேல் உயர்த்தல் பயத்தவாய இவை உளவாது நிலையில் தாழாமை உள்வழியாகலின், இது மானத்தின் பின் வைக்கப்பட்டது.

### 99 சான்றாண்மை

அஃதாவது, பல குணங்களானும் நிறைந்து அவற்றை ஆள்தல் தன்மை. பல குணங் களானும் என்பது சாலுதல் தொழிலால் பெறப்படுதலின் 'அவற்றை' என்பது வருவிக்கப் பட்டது. பெருமையுள் அடங்காத குணங்கள் பலவற்றையுந் தொகுத்துக்கொண்டு நிற்றலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

### 100 பண்பு உடைமை

அஃதாவது, பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லார் இயல்பு களும் அறிந்து ஒத்து ஒழுகுதல்; 'பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்' (கலித் - நெய்தல். 16) என்றார். பிறரும் அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 101 நன்றியில் செல்வம்

அஃதாவது, ஈட்டியாற்கும் பிறர்க்கும் பயன்படுதல் இல்லாத செல்வத்தினது இயல்பு. உடையானது குற்றம் செல்வத்தின்மேல் ஏற்றப்பட்டது. அதிகார முறைமைமேல் தோற்றுவாய் செய்த அதனான் பெற்றாம்.

## 102 நாண் உடைமை

அஃதாவது, மேற்சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களால் உயர்ந்தோர் தமக்கு ஒவ்வாத கருமங்களில் நாணுதல் உடையராந்தன்மை அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 103 குடி செயல் வகை

அஃதாவது, ஒருவன் தான் பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம். இது தாழ்வின் கண் நாணுதலுடையார்க்கு உளதாவது ஆகலின் நாணுடைமையின் பின் வைக்கப்பட்டது.

## 104 உழவு

அஃதாவது, சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாய உழுதல் தொழில் செய்விக்குங்கால் ஏனையோர்க்கும் உரித்து. இது, மேல்குடி உயர்தற்கு ஏது என்ற ஆள்வினை வகையாகலின் குடி செயல்வகையின் பின் வைக்கப்பட்டது.

## 105 நல்குரவு

அஃதாவது, நுகரப்படுவன யாவும் இல் ' .

## 106 இரவு

இனி, 'மானந்தீரா இரவு இரவாமையோடு ஒத்தலின், அதனானும் வீடெய்தற் பயத்ததாய உடம்பு ஓம்பப்படும்' என்னும் அறநூல் வழக்குப் பற்றி மேல் எய்திய துவரத் துறத்தல் விலக்குதற் பொருட்டு 'இரவு' கூறுகின்றார். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 107 இரவு அச்சம்

அஃதாவது, மானந் தீரவரும் இரவிற்கு அஞ்சுதல் அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 108 கயமை

அஃதாவது மேல் அரசியலுள்ளும் அங்கவியலுள்ளும் சிறப்பு வகையாற் கூறப்பட்ட குணங்களுள் ஏற்புடையன குறிப்பினால் யாவர்க்கும் எய்த வைத்தமையின், ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும், ஈண்டு ஒழிபு இயலுள் வெளிப்படக் கூறியனவுமாய குணங்கள் யாவும் இலராய தீயோரது தன்மை. அதனால் இஃது எல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.

3 காமத்துப்பால் 1 களவு இயல்

இனி, அப்பொருளைத் துணைக் காரணமாக உடைத்தாய் இம்மையே பயப்பதாய் இன்பம் கூறுவான் எடுத்துக் கொண்டார். ஈண்டு இன்பம் என்றது ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாய காம இன்பத்தினை; இச்சிறப்புப் பற்றி வடநூலுள் போசராசனும் 'சுவை பல என்று கூறுவார் கூறுக; யாம் கூறுவது இன்பச்சுவை ஒன்றனையுமே' என இதனையே மிகுத்துக் கூறினான். இது புணர்ச்சி, பிரிவு என இரு வகைப்படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோ எனின், இவர் பொருட் பாகுபாட்டினை அறம், பொருள், இன்பம் என வடநூல் வழக்குப்பற்றி ஓதுதலான், அவ்வாறே அவற்றைப் பிரிவின்கண் அடக்கினார் என்க.

இனி, அவை தம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவு என்றும், பிரிவைக் கற்பு என்றும், பெரும்பான்மை பற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலக நடையோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாக்கிக் கூறுகின்றார். அக் கைகோள் இரண்டனுள்ளும் களவாவது பிணி, மூப்பு, இறப்புக்கள் இன்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் உருவும், திருவும், பருவமும், குலனும், குணனும், அன்பும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை உடையராய தலைமகனும், தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் அன்றிப் பால்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது அதனை ஏழு அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி, முதற்கண் **தகை அணங்கு உறுத்தல்** கூறுகின்றார்.

## 109 தகை அணங்கு உறுத்தல்

அஃதாவது, பொழில் விளையாட்டு விருப்பான் ஆயம் நீங்க, அதன்கண் தமியளாய் நின்றாளை, வேட்ட விருப்பான் இளையார் நீங்கத் தமியனாய் வந்து கண்ணுற்ற தலைமகன், அவள் வனப்புத் தன்னை வருத்தும் உறுவித்தலைச் சொல்லுதல். இது, கண்ணுற்ற பொழுதே நிகழ்வதாகலின், முதற்கண் கூறப்பட்டது.

## 110 குறிப்பு அறிதல்

அஃதாவது, தலைமகன் தலைமகள் குறிப்பினை அறிதலும், தோழி குறிப்பினை அறிதலும், அவள்தான் அவ்விருவர் குறிப்பினையும் அறிதலுமாம். தகை அணங்குற்ற தலைமகன் தலைமகளைக் கூடுங்கால் இது வேண்டுமாகலின், **தகை அணங்கு உறுத்தலின்** பின் வைக்கப்பட்டது.

## 111 புணர்ச்சி மகிழ்தல்

அஃதாவது, அங்ஙனம் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புகழ்ச்சியினை மகிழ்ந்து கூறல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 112 நலம் புனைந்து உரைத்தல்

அஃதாவது, தலைமகன் தலைமகள் நலத்தைப் புனைந்து சொல்லியது. இது, புணர்ச்சி மகிழ்ந்துழி நிகழ்வதாகலின், புணர்ச்சி மகிழ்தலின் பின் வைக்கப்பட்டது.

### 113 காதற் சிறப்பு உரைத்தல்

அஃதாவது, தலைமகன் தன் காதல் மிகுதி கூறலும், தலைமகள் தன் காதல் மிகுதி கூறலும் ஆம். இது, புணர்ச்சியும் நலனும் பற்றி நிகழ்வதாகலின், **புணர்ச்சி மகிழ்தல், நலம் புனைந்து உரைத்தல்**களின் பின் வைக்கப்பட்டது.

### 114 நாணுத்துறவு உரைத்தல்

அஃதாவது, சேண்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் தோழிக்குத் தன் நாண் துறவு உரைத்தலும், அறத்தோடு நிற்பிக்கலுற்ற தலைமகள் அவட்குத் தன் நாண்துறவு உரைத்தலும் ஆம் இது காதல் மிக்குழி நிகழ்வது ஆகலின், **காதற் சிறப்பு உரைத்த**லின் பின் வைக்கப்பட்டது.

### 115 அலர் அறிவுறுத்தல்

அஃதாவது, களவொழுக்கம் வேண்டிய தலைமகள் பிறர் கூறுகின்ற அலர் தனக்காகின்றவற்றைத் தோழிக்கு அறிவுறுத்தலும், வரைவாக உடன்போக்காக ஒன்று வேண்டிய தலைமகளும் தோழியும் அவ் அவரை அவன் தனக்கு அறிவுறுத்தலும் ஆம். இது நாணுத் துறந்தவழி நிகழ்வதாகலான், **நாணுத்துறவு உரைத்த**லின் பின் வைக்கப்பட்டது.

## 3 காமத்துப்பால் — 2 கற்பு இயல்

இனிக் கற்பு பதினெட்டு அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி முதற்கண் பிரிவு ஆற்றாமை கூறுகின்றார்.

### 116 பிரிவு ஆற்றாமை

அஃதாவது, வரைந்தெய்திய பின் தலைமகன் அறம் பொருள் இன்பங்களின் பொருட்டு சேயிடையினும் ஆயிடையினும் தலைமகளைப் பிரிந்து செல்லும்; செல்லும் ஞான்று **அப்பிரிவினை அவள் ஆற்றாளாம் தன்மை** அஃது ஈண்டுப் பிரிவு உணர்த்திய தலைமகற்குத் தோழி கூறலும், அவள் தனக்குத் தலைமகள் தானே அவன் குறிப்பான் உணர்ந்து கூறலும், பிரிவுணர்த்திய வழிக் கூறலும், தலைமகன் பிரிந்துழி ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறலும் என நால்வகையால் கூறப்படும்.

### 117 படர்மெலிந்து இரங்கல்

அது படரான் மெலிந்து இரங்கல் என விரியும். அஃதாவது பிரிவற்றாளாய தலைமகள் தான் உறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலின், அந்நினைவான் மெலிந்து இரங்குதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

### 118 கண்விதுப்பு அழிதல்

அஃதாவது, கண்கள் தம் காட்சி விதுப்பான் வருந்துதல். காட்சி விதுப்புத் தலைமகனைக் காண்டாற்கு விரைதல். இது படரான் மெலிந்தவழி நிகழ்வதாகலின் படர் மெலிந்து இரங்கலின் பின் வைக்கப்பட்டது.

## 119 பசப்புறு பருவரல்

அது பசப்புற்ற பருவரல் என விரியும். அஃதாவது பசப்புறுதலானாய வருத்தம் இதனைப் 'பந்தெறிந்த வயர்' (கலித். குறிஞ். 4) என்பது போலக் கொள்க. பசப்பாவது பிரிவாற்றாமையான் வருவதோர் நிறவேறுபாடு இது தலைமகனைக் காணப் பெறாதவழி நிகழ்வதாகலின், **கண் விதுப்பு** அழிதலின் பின் வைக்கப்பட்டது.

## 120 தனிப் படர் மிகுதி

அது தனியாகிய படர்மிகுதி என விரியும். அஃதாவது படர்மிகுதி தலைவன்கண் இன்றித் தன் கண்ணதேயாதல் கூறுதல். அறமும் பொருளும் நோக்கிப் பிரிதலின் அவன்கண் இல்லையாயிற்று. இது, பசப்புற்று வருந்தியாட்கு உரியதாகலின், **பசப்புறு பருவரலின்** பின் வைக்கப்பட்டது.

## 121 நினைந்தவர் புலம்பல்

அஃதாவது, முன்கூடிய ஞான்றை இன்பத்தினை நினைந்து தலைமகள் தனிமை எய்தலும் பாசறைக் கண் தலைமகன் தனிமை எய்தலுமாம். இவ்வாறு இவர்க்கும் பொது வாதல் பற்றிப் பன்மைப்பாலாற் கூறப்பட்டது. இது படர் மிகுதல் தன் கண்ணதாக நினைந்த தலைமகட்கும் உரித்தாகலின் அவ்வியைபு பற்றித் **தனிப்படர் மிகுதியின்** பின் வைக்கப்பட்டது.

## 122 கனவுநிலை உரைத்தல்

அஃதாவது, தலைமகள் தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக் கனவு நனவின்கண் நினைவு மிகுதியாற் கண்டதாகலின் இது **நினைந்தவர் புலம்பலின்** பின் வைக்கப்பட்டது.

## 123 பொழுது கண்டு இரங்கல்

அஃதாவது, மாலைப்பொழுது வந்துழி அதனைக் கண்டு தலைமகள் இரங்குதல். 'கனாமுந்துறாதவினையில்லை' (பழமொழி - 2) என்பது பற்றிப் பகற்பொழுது ஆற்றி இருந்தாட்கு உரியதாகலின் இது **கனவு நிலை உரைத்தலின்** பின் வைக்கப்பட்டது.

## 124 உறுப்பு நலன் அழிதல்

அஃதாவது, தலைமகள்தன் கண்ணும், தோளும், நுதலும் முதலாய அவையங்கள் தம் அழகு அழிதல் இஃது, இரக்கம் மிக்குழி நிகழ்வதாகலின் **பொழுதுகண்டு இரங்கலின்** பின் வைக்கப்பட்டது.

## 125 நெஞ்சொடு கிளத்தல்

அஃதாவது, ஆற்றாமை மீதூரத் தனக்கு ஓர் பற்றுக்கோடு காணாத தலைமகள் தன் நெஞ்சோடு செய்திறன் அறியாது சொல்லுதல். இஃது, உறுப்புக்கள் தம் நலனழிந்தவழி நிகழ்வதாகலின், **உறுப்பு நலன் அழிதலின்** பின் வைக்கப்பட்டது.

## 126 நிறை அழிதல்

அஃதாவது தலைமகள், மனத்து அடக்கற்பாலனவற்றை வேட்கை மிகுதியான் அடக்க மாட்டாது **வாய்விடுதல்**; 'நிறையெனப்படுவது மறைபிறர் அறியாமை' (கலித். நெய்தல். 16) என்றார் பிறரும். அஃது அழிதற்காரணம் நெஞ்சொடு கிளந்தமையின், இது **நெஞ்சொடு கிளத்த**லின் பின் வைக்கப்பட்டது.

## 127 அவர்வயின் விதும்பல்

அஃதாவது, சேயிடைப் பிரிவின்கண் தலைமகனும் தலைமகளும் வேட்கை மிகவினான் **ஒருவரையொருவர் கண்டாற்கு விரைதல்**. தலைமகன் பிரிவும் தலைமகள் ஆற்றாமையும் அதிகாரப்பட்டு வருகின்றமையின், இருவரையும் சுட்டிப் பொதுவாகிய பன்மைப் பாலாற் கூறினார். பிறரெல்லாம் இதனை 'தலைமகனை நினைந்து தலைமகள் விதுப்புறல்' என்றார். சுட்டுப் பெயர் சொல்லுவான் குறிப்பொடு கூடிய பொருள் உணர்த்துவதல்லது தான் ஒன்றற்குப் பெயராகாமையானும், கவிக்கூற்றாய அதிகாரத்துத் தலைமகன் உயர்த்தற் பன்மையாற் கூறப் படாமையானும் அஃது உரையன்மை அறிக. இதனுள் தலைமகள் கூற்று நிறையழிவான் நிகழ்ந்ததாகலின், அவ்வியைபு பற்றி **நிறை அழித**லின் பின் வைக்கப்பட்டது.

## 128 குறிப்பு அறிவுறுத்தல்

அஃதாவது, தலைமகன், தலைமகள், தோழி என்று இவர் **ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுத்தல்**. இது, பிரிந்து போய தலைமகன் வந்து கூடிய வழி நிகழ்வதாகலின், **அவர்வயின் விதும்ப**லின் பின் வைக்கப்பட்டது.

## 129 புணர்ச்சி விதும்பல்

அஃதாவது, தலைமகனும் தலைமகளும் **புணர்ச்சிக் கண்ணே விரைதல்**. மேற் புணர்ச்சி மிகுதிபற்றித் தலைமகன் பிரிதற் குறிப்பு அறிவுறுத்த தலைமகள் அவன் மாட்டே நிகழாது வேட்கை மிகைவினால் பின்னும் தன் கண்ணே நிகழ்தலான், இது **குறிப்பு அறிவுறுத்த**லின் பின் வைக்கப்பட்டது.

## 130 நெஞ்சொடு புலத்தல்

அஃதாவது, காரணம் உண்டாய வழியும் புலக்கக் கருதாது புணர்ச்சி விதும்புகின்ற **நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும், தலைமகன் புலத்தலும் ஆம்**. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 131 புலவி

அஃதாவது, இருவர் நெஞ்சும் புணர்ச்சி விதும்பாது புலக்கக் கருதிய வழி **ஒருவரோடு ஒருவர் புலத்தல்** அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 132 புலவி நுணுக்கம்

அது புலவியது நுணுக்கம் என விரியும். அஃதாவது தலைமகனும் தலைமகளும் ஓர் அமளிக்கண் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற் காரணமில்லையாகவும் காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணமுளதாக உட்கொண்டு அதனை அவன் மேலேற்றி அவள் புலத்தல். காரணத்தின் நுணுக்கம் காரியத்தின்மேல் நின்றது. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## 133 ஊடல் உவகை

அஃதாவது, அப்பெற்றித்தாய ஊடலால் தமக்குக் கூடல். இன்பம் சிறந்துழி அச்சிறப்பிற்கு ஏதுவாய அவ்வூடலைத் தலைமகள் உவத்தலும் தலைமகன் உவத்தலும் ஆம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

திருக்குறளின் சிறப்புப் பாயிரமாகிய

# திருவள்ளுவ மாலை

1 திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோடு
உருத்தகு நற்பலகை ஒக்க — இருக்க
உருத்திர சன்மர் எனவுரைத்து வானில்
ஒருக்கஓ என்றதோர் சொல்.

— அசரீரி

அருள் செல்வத்தையும் அதற்குத் தக்க தெய்வத் தன்மையையும் உடைய திருவள்ளுவரோடு, அவர் இருத்தற்குத் தனது உருவத்தினாலே தக்க நல்ல சங்கப் பலகையிடத்து உருத்திரசன்மர் ஒருவரே ஒப்ப ஏறி இருக்கக் கடவர் என்று கூறி, விண்ணிலிருந்து அவ்விடத்துள்ள புலவர் கருத்தையெல்லாம் ஒற்றுமை செய்யும்படி ஒரு வாக்கியம் 'ஓ' என்று இரைந்து எழுந்தது.

2 நாடா முதல்நான் மறைநான் முகன்நாவிற்
பாடா இடைப்பா ரதம்பகர்ந்தேன் — கூடாரை
எள்ளிய வென்றி இலங்கிலைவேல் மாற,பின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

— நாமகள்

பகைவரைப் புறங்கொடுக்கச் செய்து இகழ்ந்த வெற்றியை உண்டாக்கி விளங்கா நின்ற இலை போலும் வேற்படையையுடைய பாண்டிய மன்னனே! உலகத்தார் விதி விலக்குகளை அறிந்து உய்யும் வழியை நாடி, படைப்புக் காலத்திலே நான்முகனது நாவிலிருந்து இருக்கு முதலாகிய நான்கு வேதங்களையும் பாடி, நடுவான காலத்திலே பாரதமாகிய வேதத்தைக் கூறினேன்; அதற்குப் பிற்பட்ட இக்காலத்திலே என் வாக்கு திருக்குறளாகிய வேதத்தைச் சொல்லி வள்ளுவன் வாயின்கண்ணதாயிற்று.

3 என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்க் — குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

— இறையனார்

புலவர்க்கு அரசனாகிய வள்ளுவன் வாயிற் பிறந்த திருக்குறளானது, எக் காலத்தும் தன் அழகு கெடாது நெடுங்காலம் கழியினும் நிலைபெற்று மலர்ந்து தேனைச் சொரிகின்ற குணமுடையதாய் விளங்குமாதலால் குறைவுபடாது செய்ய தளிர்களையுடைய கற்பகத்தினது கடவுள் தன்மை பொருந்திய உயர்வாகிய மலர்போலும்.

4 நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
தான்மலைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த — நூன்முறையை
வந்திக்க சென்னி,வாய் வாழ்த்துக, நன்னெஞ்சம்
சிந்திக்க, கேட்க செவி.

— உக்கிரப்பெருவழுதியார்

நான்முகன் தன் உருவை மறைத்து திருவள்ளுவராகத் தோன்றி நான்கு வேதங் களின் உண்மைப் பொருளை அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாற்பொருளாகத் தமிழில் தந்து கூறிய திருக்குறளாகிய திருமுறையை என் தலைவணங்குக, வாய் துதிக்க, நல்ல மனம் தியானிக்க, காது கேட்க.

5 தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால் — மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

— கபிலர்

மனையில் வளர்க்கப்படுகின்ற பறவைப் பேடுகள் உலக்கைப் பாட்டால் கண்ணுறங்குகின்ற வளம் பொருந்திய நாட்டையுடைய மன்னனே! திருவள்ளுவரால் அருளப்பட்ட குறள் வெண்பா மிகப் பெரிய பொருளைத் தன் உட்கொண்டு காட்டுதல், தினையரிசியின் அளவுக்கும் போதாத சிறிய புல்லினது நுனியிலுள்ள பனிநீர் உயர்ந்த பனையின் அளவான அதன் சாயையைத் தன்னுட்கொண்டு காட்டும் தன்மை போலும் குணத்தையுடைத்து.

6 மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞாலம் முழுதும் நயந்தளந்தான் — வாலறிவன்
வள்ளுவரும் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாம்அளந்தார் ஓர்ந்து.

— பரணர்

திருமாலும் குறளாய்ப் (வாமன அவதாரம்) பிறந்து வளர்ந்து இரண்டு பெரிய அடிகளால் உலக மனைத்தையும் விரும்பி அளந்தான்; மெய்யறிவினையுடைய திருவள்ளுவரும் தம்மினின்றும் தோன்றி அந்நிலை நிற்கின்ற வெண்பாக் குறளின் இரண்டு சிறிய அடிகளால் அவ்வுலகம் அனைத்திலும் உள்ளோரால் நினைக்கப்பட்டவற்றை யெல்லாம் ஆராய்ந்து அளந்தார்.

7 தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆனா அறமுதலா அந்நான்கும் — ஏனோருக்கு
ஊழி னுரைத்தாற்கும் ஒண்ணீர் முகிலுக்கும்
வாழியுல(கு) என்னாற்றும் மற்று.

— நக்கீரர்

தானே மறைபொருள் அனைத்தையும் அறிந்து, தண்ணிய தமிழில் குறள்வெண் பாக்களால் விட்டு நீங்குதல் கூடாத அறம் முதலாகிய அந்நான்கு பொருள்களையும் அவற்றை அறியாதவர்களுக்கு அவர் எளிதின் அறிய, முறையால் சொல்லியருளிய திருவள்ளுவருக்கும் ஒண்ணிய நீரைத் தந்த மேகத்துக்கும் இவ்வுலகம் எதிர் நன்றி யாது செய்யும்? ஒன்றும் இல்லை. அவரும் அம்மேகமும் வாழ்க!

8 அறம்பொருள் இன்பம்வீ டென்னும்அந் நான்கின்
திறம்தெரிந்து செப்பிய தேவை — மறந்தேயும்
வள்ளுவன் என்பானோர் பேதை அவன்வாய்ச்சொல்
கொள்ளார் அறிவுடை யார்.

— மாமூலனார்

அறம், பொருள், இன்பம், வீடு என்று சொல்லப்பட்ட நான்கினது கூறுபாட்டை யும் தெரிந்து உலகத்தார்க்குச் சொல்லிய தேவனை மறந்தாயினும் ஒரு மனிதனாக எண்ணி, வள்ளுவன் என்று சொல்லுவதற்கு ஒருவன் உளனாயின், அவன் அறிவில் லாதவன் ஆவான்; அவன் வாயிற் பிறந்த அச்சொல்லை அறிவுடையார் ஏற்றுக் கொள்ள மாட்டார்,

9 ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார் — நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

— கல்லாடர்

அறுவகை மதத்தோருள் ஒரு மதத்தோர் தமது நூலிலே உலகமும் உயிரும் கடவுளுமாகிய பொருள்கள் ஒன்றே என்று நாட்டுவாராயின், மற்றொரு மதத்தார் தம் நூலிலே அதனை மறுத்து அவை வேறாம் என்று நாட்டுவர்; அப்படி வேறென்று நாட்டின், பின்னொரு மதத்தார் அதனை அன்றென்று மறுப்பர். (இவ்வாறு மதநூல்கள் எல்லாம் முரண்படுகின்றன. திருவள்ளுவராலே முப்பாலாகச் சொல்லப்பட்ட குறளை நன்றென்று கொள்ளுதற்கு எவ்வகைப்பட்ட பகுதியோரும் உடன்படுவர்.

10 மும்மலையும் முந்நாடும் முந்நதியும் முப்பதியும்
மும்முரசும் முத்தமிழும் முக்கொடியும் — மும்மாவும்
தாமுடைய மன்னர் தடமுடிமேல் தாரன்றோ
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

— *சீத்தலைச் சாத்தனார்*

பாக்களின் முறைதெரிதற்கிடனாய திருவள்ளுவர்தம் திருக்குறளானது, கொல்லி மலை நேரிமலை பொதிய மலை என்ற மூன்று மலைகளையும், குடநாடு புனநாடு தென்னாடு என்ற மூன்று நாடுகளையும், பொருனை காவிரி வைகை எனப்படுகின்ற மூன்று ஆறுகளையும், கருவூர் உறையூர் மதுரை என்ற மூன்று ஊர்களையும், மங்கல முரசு வெற்றிமுரசு கொடை முரசு எனப்படுகின்ற மூன்று முரசுகளையும், இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழையும், விற்கொடி புலிக்கொடி மீனக்கொடி என்ற மூன்று கொடிகளையும், கனவட்டம் பாடலம் கோரம் எனப்படுகின்ற மூன்று குதிரைகளையும் தாம் முறையேயுடைய சேர சோழ பாண்டியர் எனப்படுகின்ற மூவேந்தருடைய பெரிய முடிகளின் மேலும் கொள்ளப்பட்ட மாலையன்றோ?

11 *சீந்திநீர்க் கண்டம் தெறிசு க்குத் தேனளாய்*
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில் — காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு

— மருத்துவன் தாமோதரனார்

தன் பகையென வெகுண்டு மலையைக் குத்துகின்ற பெரிய களிறு போலுள்ள மன்னனே! *சீந்திநீர்ச்* சருக்கரையையும் சிதைக்கப்பட்ட சுக்கையும் தேனொடு கலந்து மோந்தபின் அதனால் தலைக் குத்துடையோர் யாவருக்கும் தலைக்குத்து இல்லையாகும். திருவள்ளுவர் அருளிய திருக்குறளினாலே *சீத்தலைச்* சாத்தனார்க்குத் தலைக்குத்து இல்லையாயிற்று.

12 தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று — வாளாதாம்
அப்பால் ஒருபாவை ஆய்பவோ வள்ளுவனார்
முப்பால் மொழிமூழ்கு வார்.

— நாகன்தேவனார்

நாணத்தொடு பொருந்திய தாமரை மலர்களையுடைய ஒரு குளத்து நீரின் கண்ணே மூழ்குவோர் வேறு தண்ணீரை விரும்பாதொழிதல் வியப்பைச் செய்வதன்று; திருவள்ளுவரது முப்பால்களையுடைய நூலின்கண்ணே தோய்பவர் தாம் வீணாக அப்பால் ஒரு நூலை விரும்பமாட்டார். ஆதலின் இதுவே வியப்பைத் தருவது.

13 பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறும் சேரச் — சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லவரார் வள்ளுவரல் லால்.

— அரிசில்கிழார்

வேதத்தில் பரவிக் கிடக்கும் எல்லாப் பொருள்களையும் இப்பூமியிலுள்ளோர் அறிதற்பொருட்டு வேறாகப் பிரித்து, அதுவது தனது தனது வகையோடு சேரும்படி சுருங்கிய சொல்லால் பொருள் விளங்க விரிவாகச் சொல்லுதல் வல்லார் திருவள்ளுவரல்லது ஒருவரும் இல்லை.

14 கானின்ற தொங்கலாய்! காசிபனார் தந்ததுமுன்
கூனின் றளர்ந்த குறளென்ப — நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தாமின் றளந்த குறள்.

— பொன்முடியார்

மனம் நிறைந்த மாலையையுடைய பாண்டிய மன்னனே! முன் காசிபரால் தரப்பட்ட குறளை, மண்ணின்கண்ணே நின்று உலகத்தை அளந்த குறளென்று சொல்லுவர். தாம் இங்கே எழுந்தருளித் திருவள்ளுவராலே தரப்பட்ட குறள், நூலின் முறையோடு கூடி, விண்ணின்கண்ணே நின்றும் மண்ணின்கண்ணே நின்றும் உலகத்தை அளந்தது.

15 ஆற்றல் அழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார் — ஏட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று. — கோதமனார்

மறையோர்கள் நான்கு வேதங்களையும் வாய்ப்பாடமாகக் காப்பாற்றி ஏட்டினில் எழுதி வைத்தால் வலியில்லாரும் ஓதுவாராகலின் அவற்றின் வலிமை குறையுமென்று ஏட்டின்கண் எழுதார்; திருவள்ளுவரது திருக்குறளை ஏட்டிலே எழுதி வைத்து வலியுடைய வரும் வலியில்லாரும் ஓதினாலும் வலிமை குறைதல் இல்லை.

16 ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின் — போயொருத்தர்
வாய்க் கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.

— நத்தத்தனார்

பாயிரம் நான்கு அதிகாரங்களைச் சேர்த்து தொகையாகிய அரிய ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களையும் ஓதியுணர்ந்த பின்பு, போய் ஒருவரது வாயாலே கேட்டறிதற்கு நூலுளவோ? (இல்லை.) நிலைபெற்ற தமிழிலே புலமை நிரம்பியோராகிப் பிறர் தம்மிடத்து வந்து கேட்க வீற்றிருக்கலாம்.

17 உள்ளுதல் உள்ளி உரைத்தல் — உரைத்ததனைத்
தெள்ளுதல் அன்றே செயற்பால — வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வார்
எப்பா வலரினும் இல்.

— முகையனூர் சிறுகருந்தும்பியார்

திருவள்ளுவரது திருக்குறளின் மேற்பட்ட நூலொன்று உளதென்று சொல்ல வல்லார் எவ்வகைப்பட்ட புலவருள்ளும் இல்லை. (ஆதலால்) நாம் இந்நூலைக் குறித்துச் செய்யக்கடவன, நாம் இதன் பொருளைச் சிந்தித்துக் கொள்ளுதலும், சிந்தித்துப் பிறர்க்கு அதனைச் சொல்லுதலும், பிறராலே சொல்லப்பட்ட அதனைத் தெளிதலும் அல்லவா?

18 சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும்
போற்றி உரைத்த பொருளெல்லாம் — தோற்றவே
முப்பால் மொழிந்த முதற்பா வலரொப்பார்
எப்பா வலரினும் இல்.

— ஆசிரியர் நல்லந்துவனார்

அறிவுடையோரால் சொல்லப்பட்ட பல நூல்களாலும் தப்பாத அரிய வேதத்தாலும், காப்பாற்றி வைத்திருந்து உலகத்தார்க்குச் சொல்லப்பட்ட பொருள்கள் எல்லாம் தன்னிடத்தே காட்டும்படி திருக்குறளைச் சொல்லிய திருவள்ளுவரை ஒப்பார் எவ்வகைப் பட்ட பாவலருள்ளும் இல்லை.

19 தப்பா முதற்பாவால் தாமாண்ட பாடலினான்
முப்பாலின் நாற்பால் மொழிந்தவர் — எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.

— கீரந்தையார்

எவ்விடத்திலும் கூர்மை வைத்த சிறப்புப் பொருந்திய வேலையுடைய பாண்டியன் மனம் மகிழ, சொல்லப்பட்ட பொருள் வழுவாமல் முதன்மையுடைய பாவாகிய குறள் வெண்பாக்களாலே தாம் மாட்சி பெற்ற பாடல் தொழிலினாலே மூன்று பால்களிலே அறம் முதலிய நான்கு பகுதிப் பொருளையும் அருளியவர் கடவுள் தன்மையையுடைய திருவள்ளுவ நாயனார்.

20 வீடொன்று பாயிரம் நான்கு விளங்கறம்
நாடிய முப்பத்து மூன்றொன்றூழ் — கூடுபொருள்
எள்ளில் எழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை.

— சிறு மேதாவியார்

திருவள்ளுவராலே சொல்லப்பட்ட திருக்குறளின் அதிகார வகை, பாயிரம் நான்கு அதிகாரத்தையும், அறம் முப்பத்து மூன்று அதிகாரத்தையும், ஊழ் ஓரதிகாரத்தை யும், பொருள் எழுபது அதிகாரத்தையும், காமம் இருபத்து ஐந்து அதிகாரத்தையும் உடையது.

21 உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப — இப்பக்கம்
மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு.

— நல்கூர் வேள்வியார்

வடமதுரைக்கு அப்பக்கத்தைக் குறித்துச் சென்றோனாகிய உமாதேவியினது தோளை மணந்த கடவுளை ஆதாரமென்று சொல்லுவர்; நீர் வளத்தையுடைய தென் மதுரைக்கு மாதாநுபங்கி எனப்படுகின்ற குற்றமற்ற புலமையாகிய தேனைச் சொரிகின்ற செவ்விய நாவாகிய மலரையுடையவரை (திருவள்ளுவரை) ஆதாரமாகக் கூறுவர். உபகேசி நப்பின்னையென்றும், அவள் தோள் மணந்தான் கண்ணபிரான் என்றும், உத்தர மாமதுரை அவன் அவதரித்த வட மதுரை என்றும், மாதாநுபங்கி செருக் கொழிதலுடையான் என்றும் பொருள் கூறுவர்.

22 அறநான் கறிபொருள் ஏழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து — பெறலரிய
நாலும் மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலும் ஒழிந்த பொருள்.

- தொடித்தலை விழுத்தண்டினார்

பாயிரம், இல்லறம், துறவறம், ஊழெனு அறப்பாலின் உட்பிரிவுகள் நான்கும், அரசு, அமைச்சு, அரண், கூழ், படை, நட்பு, ஒழிபென அறியப்பட்ட பொருட்பாலின் உட்பிரிவுகள் ஏழும்: ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று, அவ்விருபாற் கூற்றெனக் காமத்துப்பாலின் உட்பிரிவுகள் மூன்றுமாகப் பகுதி செய்து, பெறுதற்கரிய அறம், பொருள், இன்பம், வீடு எனப்படுகின்ற நான்கு பொருள்களையும் சொல்லிய பெருநாவலரே அவற்றுளடங்காது ஒழிந்த பொருள் உளதாயின் அதனை நன்றாக அறியவல்லவர் போலும்.

23 செய்யா மொழிக்கும் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே — செய்யா
அதற்குரியர் அந்தணரே ஆராயின் ஏனை
இதற்குரியர் அல்லாதார் இல்.

— வெள்ளி வீதியார்

ஒருவராலே செய்யப்படாத மொழியாகிய வேதத்துக்கும் திருவள்ளுவரால் அருளப் பட்ட தன் வழியின் ஒழுகுவோர்க்குப் பயன் விளைவிலே பொய்படாத மொழியாகிய திருக்குறளுக்கும் பொருள் ஒன்றே; ஆராயுங்கால் செய்யப்படாத அவ்வேதம் ஓதுதற் குரியவர் அந்தணரே; பொய்படாத இத்திருக்குறள் ஓதுதற்கு உரியவர் அல்லாதார் உலகத்தில் இல்லை.

**24** ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித் — தீதற்றோர்
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளம் உருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

— மாங்குடி மருதனார்

திருவள்ளுவரது வாயினின்றும் தோன்றிய திருக்குறளின் மாட்சியைச் சொல்லின், அஃது ஓதப்படுவதற்கு எளிய சொற்களையுடையதாகியும், அறியப்படுதற்கு அரிய பொருள்களை உடையதாகியும், வேதம் எனப்படுகின்ற பொருளாகியும் அவ்வேதத்தின் மிக விளங்கி, குற்றமற்றோர்கள் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் அவர்களுடைய மனத்தைக் கரைக்கும்.

**25** பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக — ஆய
அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

— எறிச்சலூர் மலாடனார்

திருவள்ளுவ நாயனார் அவ்வேதத்தின் கருத்துக்களை ஆராய்ந்து, தம்மாலே செய்யப்பட்ட நூலினது திறத்திற்குத் தக்க நன்மையுடைமையால் இவையே உரியவை யென்று தெரிந்து, அறத்துப் பாலைப் பாயிரம் நான்கு அதிகாரமும், இல்லறவியல் இருபததிகாரமும், துறவறவியல் பதின்மூன்று அதிகாரமும், ஊழ் ஓரதிகாரமுமாக நால்வகையுடைத்தாகக் கூறினார்.

**26** அரசியல் ஐயைந்து அமைச்சியல் ஈரைந்து
உருவல் அரண்இரண் டொன்றுஒண்கூழ் — இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்(று)
எண்பொருள் ஏழாம் இவை.

— போக்கியார்

எண்ணப்பட்ட பொருட்பால் 'அரசியல்' இருபத்தைந்து அதிகாரமும், 'அமைச்சியல்' பத்து அதிகாரமும், அரணியல் இரண்டு அதிகாரமும், 'பொருளியல்' ஓர் அதிகாரமும், 'படையியல்' இரண்டு அதிகாரமும், 'நட்பியல்' பதினேழு அதிகாரமும், 'ஒழிபியல்' பதின்மூன்று அதிகாரமும் ஆகிய இவ்வியல்கள் ஏழுடைத்து.

27 ஆண்பாலேழ் ஆறிரண்டு பெண்பால் அடுத்தன்பு
பூண்பால் இருபாலோர் ஆறாக — மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு.

— மோசி கீரனார்

பெயர் பெற்ற திருவள்ளுவர் ஆண்பாற் கூற்று ஏழ் அதிகாரமும், பெண்பாற் கூற்றுப் பன்னிரண்டு அதிகாரமும், ஒருவரையொருவர் அடுத்து அன்பைப் பூணுதற் பகுதியுடைய அவ்விருபாற் கூற்று ஆறு அதிகாரமுமாக, மாட்சியான காமத்துப் பாலின் இயல்கள் மூன்றாக நன்கு கூறினர்.

28 ஐயாறும் நூறும் அதிகாரம் மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப் — பொய்யாது
தந்தான் உலகிற்குத் தான்வள் ளுவனாகி
அந்தா மரைமேல் அயன்.

— காவிரிப்பூம்பட்டினத்து காரிக்கண்ணனார்

அழகிய தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் நான்முகக் கடவுள்தான் திருவள்ளுவனாகி, அதிகாரம் நூற்று முப்பத்து மூன்றாக, வட மொழியிலிருந்த மெய் யாகிய வேதப்பொருள் பொய்யுறாது விளங்கும் பொருட்டு, உலகத்தார்க்குத் தமிழில் செய்து தந்தான்.

29 எல்லாப் பொருளும் இதன்பால் உளஇதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால் — சொல்லால்
பரந்தபா வால்என் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

— மதுரைத் தமிழ் நாகனார்

பலவகை நூல்களாலும் சொல்லப்பட்ட எல்லாப் பொருளும் இந்நூலகத் தடங்கி யிருக்கின்றன; இதனிடத்து இல்லாத யாதொரு பொருளும் எந்நூலகத்தும் இல்லை; (ஆதலால்) சொல் அளவினாலே விரிந்த நூல்களால் பயன் யாது? திருவள்ளுவராலே தரப்பட்ட இந்நூலொன்றே மண்ணுலகத்தார்க்குத் துணையாதல் அமையும்.

30 எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும் — முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

— பாரதம் பாடிய பெருந்தேவனார்

பாரதம் ஸ்ரீராம கதையையும், மனுஸ்மிருதி பழைய வேதத்தையும் ஒப்பன வாகும். எவ்வகைப்பட்ட பொருள்களையும், எவ்வகையோரும் அவற்றின் தன்மை யோடு அறிய அவர்க்குச் சொல்லும்படிக்குத் திருவள்ளுவர் சொல்லால் வந்த திருக்குறளுக்கு உவமானமாகத் தக்கது வேறொன்றில்லை,

**31** **மணற்கிளைக்க நீரூறும் மைந்தர்கள் வாய்வைத்(து)**
**உணச்சுரக்கும் தாய்முலை ஒண்பால் — பிணக்கிலா**
**வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்(கு)**
**ஆய்தோறும் ஊறும் அறிவு.**

**— உருத்திரசன்மகண்ணர்**

மணலைத் தோண்டுந்தோறும் நீர் பெருகும்; பிள்ளைகள் வாய் வைத்து சுவைக்குந் தோறும் தாயினது முலைக்கண் நல்ல பால் பெருகும்; அவைபோல பிணங்குதற்கு ஏது இல்லாத வாய்மைச் சொல்லை உடைய திருவள்ளுவரது திருக்குறளை ஆராயுந்தோறும் அறிவுடைய புலவர்க்கு அறிவு வளரும்.

**32** **ஏதமில் வள்ளுவர் இன்குறள்வெண் பாவினால்**
**ஓதிய வொண்பொருள் எல்லாம் — உரைத்ததனால்**
**தாதவிழ் தார்மாற! தாமே தலைப்பயந்த**
**வேதமே மேதக் கன.**

**— பெருஞ்சித்திரனார்**

பொடியோடு விரிந்த பூமாலையை யுடைய பாண்டியனே! குற்றமில்லாத திருவள்ளுவர் இனிய குறள் வெண்பாக்களே நான்கு வேதங்களாலும் சொல்லப்பட்ட ஒன்றிய பொருள்களை யெல்லாம் கூறினமையால் மேம்பாட்டுக்குத் தக்கவை அக்குறள் வெண்பாக்களோ? முதல் நூலாய் நின்று அவற்றைப் பயந்த வேதங்களோ? நீ சொல்வாயாக.

**33** **இன்பம் பொருளறம் வீடென்னும் இந்நான்கும்**
**முன்பறியச் சொன்ன முதுமொழிநூல் — மன்பதைகட்(கு)**
**உள்ள அரிதென் றவைவள் ளுவர்உலகம்**
**கொள்ள மொழிந்தார் குறள்.**

**— நரிவெரூஉத் தலையார்**

திருவள்ளுவர், இன்ப முதலிய இந் நாற்பொருள் இயல்புகளையும் மக்கட் பரப்புக்கு அக்காலத்தில் அறியும் வண்ணம் சொல்லப்பட்ட பழமொழி வேதமானது ஓதியுணரப்படுதற்கு அரிதென்று, அவற்றை உலகத்தார் எளிதில் உணரும்படி திருக்குறளைக் கூறினார்,

34 புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல் — நிலவு
பிறங் கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றும்
கறங்கு இருள்மாலைக்கும் பெயர்.

— மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார்

உலகின்கண்ணே புலவரெனத் திருவள்ளுவரையன்றி வேறு சிலரையும் புலவர் என்று சொல்லுதல், மாலையென்பது நிலவாய் விளங்குகின்ற அந்திக்கும் பெயராக, மற்றும் சூழ்கின்ற இருளையுடைய அந்திக்கும் பெயராகச் சொல்லுதல் போலும்.

35 இன்பமும் துன்பமும் என்னும் இவையிரண்டும்
மன்பதைக் கெல்லாம் மனமகிழ — அன்பொழியா(து)
உள்ளி உணர உரைத்தாரே ஓதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

— மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்

புகழப்படும் சீரையுடைய திருவள்ளுவர், பின் வரக் கடவனவாய சுகமும் துக்கமும் என்னப்பட்ட இவற்றினுடைய இருவகைக் காரணங்களையும் ஆராய்ந்து அறியவும், தம்மேலன்பு நீங்காமல் உள்ளங் களிகூரவும் திருக்குறளை மக்கட் பரப்புக்கெல்லாம் வாயுறை வாழ்த்தாகக் கூறினார்.

36 பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனதம்
ஆவிற் கருமுனியா யானைக்(கு) — அமரரும்பல்
தேவில் திருமால் எனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.

— கவிசாகரப் பெருந்தேவனார்

மலர்களுக்குள்ளே தாமரை மலரும், பொன்களுக்குள்ளே சாம்புனதப் பொன் னும், பசுக்களுக்குள்ளே காமதேனுவும், யானைகளுக்குள்ளே ஐராவதமும், தேவர் களுக்குள்ளே திருமாலும் போல, நூல்களுக்குள்ளே திருவள்ளுவரது குறள் வெண்பாச் சிறந்தது என்று அறிவுடையோர் சொல்லுவர்,

37 அறமுப்பத் தெட்டுப் பொருளெழுபது இன்பத்
திறம்இருபத் தைந்தால் தெளிய — முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்
ஓதவழுக் கற்ற துலகு.

— மதுரைப் பெருமருதனார்

திருவள்ளுவர் அறத்தின் கூறுபாடு முப்பத்தெட் டதிகாரங்களாலும், பொருட் கூறுபாடு எழுபது அதிகாரங்களாலும், இன்பத்தின் கூறுபாடு இருபத்தைந்து அதிகாரங்களாலும் தெளியும் பொருட்டு, காரண காரிய ஒழுங்கால் வேதத்தின் உயர்வாகிய பொருளைக் குறள் வெண்பாக்களாலே ஓதலால், உலகமானது வழுவுதலினின்றும் நீங்கிற்று.

38 அறமுதல் நான்கும் அகலிடத்தோர் எல்லாம்
திறமுறத் தேர்ந்து தெளியக் — குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநேர் ஒவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

— கோவூர் கிழார்

அறம் முதலிய நான்கு பொருள்களையும் அகன்ற உலகத்துள்ளோ ரெல்லாம் வகைப்பட ஆராய்ந்து தெளியும் பொருட்டுக் குறள் வெண்பாக்களாலே சொல்லப்பட்ட திருவள்ளுவ நாயனாரது முப்பால்களை யுடைய புத்தகத்தின்கண்ணே முற்காலத்துள்ள பெரியோரது நூல்களுக்கு நேர்தல் பொருந்தாது.

39 தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார் — நாவிற்(கு)
உயலில்லை சொற்சுவை ஓர்வில்லை மற்றும்
செயலில்லை என்றும் திரு.

— உறையூர் முதுகூற்றனார்

தெய்வத் தன்மையாற் சிறந்த திருவள்ளுவரது குறள் வெண்பாக்களோடு கூடிச் சிறந்து தோன்றா நின்ற முப்பால்களையும் ஓதாரது வாக்கிற்கு இன்சொற் சொல்லி வாழ்தல் உண்டாகாது; மனத்திற்குச் சொற்களின் சுவையை அறிதல் உண்டாகாது. இவையன்றியும் காயத்துக்கு நல்ல செயலுண்டாகாது என்று நினைத்து திருமகள் அவரிடத்துச் சேராள்.

40 இம்மை மறுமை யிரண்டும் எழுமைக்கும்
செம்மை நெறியில் தெளிவுபெற — மும்மையின்
வீடவற்றின் நான்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடினார் இன்குறள்வெண் பா.

— இழிகட் பெருங்கண்ணனார்

இகபரங்கட் காவன இரண்டையும் வினைப்பயன் தொடர்தற்குரிய எழு பிறப்பிற்கு மாகச் செவ்வையான வழியால் யாவரும் தெளிதல் பெறவும், அறம் பொருள் இன்ப மென்னும் முப்பால்களுள் அம்முப்பாற் பொருள்களோடு வீடுமாகிய நாற்பொருள்களில் விதிகள் வழங்கவும் திருவள்ளுவ நாயனார் இனிய குறள் வெண்பாவைப் பாடினார்.

41 ஆவனவும் ஆகா தனவும் அறிவுடையார்
யாவரும் வல்லார் எடுத்தியம்பத் — தேவர்
திருவள் ளுவர்தாமும் செப்பியவே செய்வார்
பொருவில் ஒழுக்கம்பூண் டார்.

— செயிர்க்காவிரியார் மகனார் சாத்தனார்

மக்களுக்கு ஆவனவற்றையும் ஆகாதவற்றையும் அறிவுடையார் யாவரும் இதிலிருந்து எடுத்துச் சொல்லுதற்கு வல்லவராவார். ஆதலால் தேவராகிய திருவள்ளுவ ராலே சொல்லப்பட்டவற்றையே ஒப்பில்லாத ஒழுக்கத்தை மேற்கொண்டவர் செய்வார்.

42 வேதப் பொருளை விரகால் விரித்துலகோர்
ஓதத் தமிழால் உரைசெய்தார் — ஆதலால்
உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் உண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு.

— செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார்

வேதத்தின் பொருளை உலகத்தார் ஓதியுணரும் பொருட்டு உபாயத்தால் விரித்துத் தமிழ் மொழியினாலே சொல்லியருளினார்; ஆதலால் நினைப்பவர் நினைக்கும் பொருளெல்லாம் திருவள்ளுவர் திருவாயிற் பிறந்த திருக்குறளின்கண்ணே உண் டென்று அறிவுடையோர் சொல்லுவர்.

43 ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்(து) இதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால் — ஆரியம்
வேதம் உடைத்து; தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா உடைத்து.

— வண்ணக்கஞ் சாத்தனார்

வடமொழி வேதமுடைத்து; தமிழ் மொழி திருவள்ளுவ நாயனார் சொல்லிய குறட்பாவுடைத்து; ஆதலால் வடமொழியையும் தென் மொழியையும் ஆராய்ந்து இதைக் காட்டிலும் இது சிறப்புடைத்தென்று ஒன்றைத் தெரிந்து சொல்லுதல் கூடாது.

44 ஒருவர் இருகுறளே முப்பாலின் ஓதும்
தரும முதல்நான்கும் சாலும் — அருமறைகள்
ஐந்தும் சமயநூல் ஆறுநம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள்.

— களத்தூர் கிழார்

இருக்கு முதற் பாரதம் ஈறாகிய அரிய வேதங்கள் ஐந்தும் அவ்வேதத்தின் வழிப்பட்ட சமயநூல்கள் ஆறும் நம்முடைய திருவள்ளுவரால் உலகத்தார்க்குப் புத்தியாகச் சொல்லப்பட்ட நூலில் அடங்கும். ஆதலால், ஒருவர் ஒரு விகற்பமும் இரு விகற்பமுமாகிய இருவகைக் குறள்களையுமே முப்பால்களில் மனனஞ்செய்து அறியப்படுகின்ற அறமுதலிய நாற்பொருள்களும் அவருக்குப் போதும்.

45 எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ணம் — இழுக்கின்றி
என்றெவர் செய்தன எல்லாம் இயம்பின
இன்றிவர் இன்குறள்வெண் பா.

— நச்சுமனார்

எழுத்து முதல் வண்ணம் ஈறாகச் சொல்லப்பட்ட இவற்றுள் வழுவுதலில்லாமல் எக்காலத்தில் எவரால் எவை செய்யப்பட்டன. அவையெல்லாம் இக்காலத்து இத் திருவள்ளுவராலே செய்யப்பட்ட இவ்வினிய குறள் வெண்பாக்களிற் சொல்லப்பட்டன.

46 கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணின்
நிலைநிரம்பும் நீர்மைத் தெனினும் — தொலைவிலா
வானூர் மதியம் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூல் நயத்தின் பயன்.

— அக்கார்சக்கனி நச்சுமனார்

மதியமும் முப்பால் நூலும் பதினாறு கலைகளாலும் அறுபத்து நான்கு கலைகளாலும் நிறைந்து நோக்குதற்கு, ஆராய்ச்சி செய்தற்கு இனிதாகி, முகக்கண்ணின் நிலையில், அகக்கண்ணின் நிலையில் நிரம்புகின்ற தன்மையுடைத்தாயினும் குணமுடைத் தாயினும் திருவள்ளுவரது முப்பால் நூலினது நயத்தால் விளைவதாகிய இனிய பயனானது ஒழிவின்றி ஆகாசத்தின்கண்ணே திரிகின்ற மதியினிடத்து உண்டோ?

47 அறந்தகளி ஆன்ற பொருள்திரி இன்பு
சிறந்தநெய் செஞ்சொல்தீத் தண்டு — குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு. — கப்பாலத்தனார்

தருமம் அகலாகவும், பொருள் திரியாகவும், காமம் நெய்யாகவும், செவ்விய சொல் நெருப்பாகவும், குறட்பாத் தண்டாகவும் திருவள்ளுவ நாயனார் பூமியின்கண் வாழ்வோரது அகத்திருளை ஒழிப்பதாகிய விளக்கு ஏற்றினார்.

48 உள்ளக் கமலம் மலர்த்தி உளத்துள்ள
தள்ளற் கரியஇருள் தள்ளுதலால் — வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரும் ஒக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு — குலபதி நாயனார்

நெஞ்சமாகிய தாமரை மலரை விரித்து, மக்களது அகத்திலுள்ள பிறிதொன்றனாலே நீக்கப்படாத அஞ்ஞான இருளை நீக்குதலால், திருவள்ளுவரது குறள்வெண்பாவும், புறத்துத் தாமரை மலரை விரித்துப் புறத்திருளை நீக்குகின்ற சூரியனும், அச்செய்கையைக் கொண்டு ஒக்குமென்று கொள்ளத் தகும்.

49 பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே — முப்பாலில்
தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து. — தேனீக்குடி கீரனார்

கடவுள் தன்மையுடைய திருவள்ளுவ நாயனார் மூன்று பாக்களையுடையதாகக் கூறிய குறள் நூலைக் கேட்டறிதலால் உலகின்கண் வாழ்வாருடைய மனத்துப் பொய்யின் பகுதியிற்பட்டவை யெல்லாம் பொய்யேயாய்ப் போயின; பொய்மை யல்லாத மெய்யின் பகுதியிற் பட்டவை யெல்லாம் மெய்யேயாய் விளங்கின.

50 அறனறிந்தேம் ஆன்ற பொருளறிந்தேம் இன்பின்
திறனறிந்தேம் வீடு தெளிந்தேம் — மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற்
கேளா தனவெல்லாம் கேட்டு — கொடிஞாழன்மாணிபூதனார்

பகைவரை யெறிந்த வாட்படை தங்கிய வீறோங்கும் பாண்டியனே! திருவள்ளுவ நாயனாரது வாக்கால், இதற்குமுன் கேட்கப்பட்டில்லாதவை யெல்லாம் இப்போது கேட்டு அறத்தின் திறனை யறிந்தோம்; பொருளின் திறத்தினை அறிந்தோம். இன்பத்தின் திறத்தினை அறிந்தோம்; வீட்டின் திறத்தை அறிந்தோம்,

51 சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கு மாமருந்து — முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள்வெண் பா. — கவுணியனார்

முற்பட்டதாகிய நல்ல வழியை நாமறியும் பொருட்டு நாவால் விளங்குகின்ற புலமையையுடைய திருவள்ளுவ நாயனாரால் சொல்லப்பட்ட இனிய குறள் வெண்பாக்கள், நினைத்தால் மனத்திற்கு இன்பம் செய்வன; கேட்டால் காதுக்கு இன்பஞ் செய்வன; ஓதினால் வாய்க்கு இன்பஞ் செய்வன; தொடர்ந்து வருகின்ற இருவினைகளாகிய நோய் களுக்குப் பெரிய மருந்துகளாவன.

52 வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்திங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத் — தெள்ளிய
வள்ளுவர் இன்குறள் வெண்பா அகிலத்தோர்
உள்ளிருள் நீக்கும் ஒளி. — மதுரைப்பாலாசிரியனார்

சுக்கிரன், தேவகுரு, சூரியன், சந்திரன் என்பன புறத்திருளை விரைவிலே நீக்கும் ஒளிகளாம். (அவை போல) முற்றுணர்ந்த திருவள்ளுவ நாயனாரது இனிய குறள் வெண்பா உலகத்தோரது உள்ளிருளை நீக்கும் ஒளியாம்.

53 வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்கும்
தெள்ளமுதின் தீஞ்சுவையும் ஒவ்வாதால் — தெள்ளமுதம்
உண்டறிவார் தேவர் உலகடைய உண்ணுமால்
வண்டமிழின் முப்பால் மகிழ்ந்து. — ஆலங்குடி வங்கனார்

திருவள்ளுவரது பாட்டினது தீஞ்சுவையைச் சொல்லுமிடத்து, உண்ணப்படுகின்ற தெள்ளிய அமுதினது தித்திப்பாகிய சுவையும் ஒப்பாகாது; அத்தெள்ளிய அமுதை உண்டு அதன் சுவையை அறிபவர் தேவர்கள்; வளம் பொருந்திய தமிழின் கண்ணதாகிய முப்பாலாகிய அதின் மும்மடி சிறந்த பாலை எவ்வுலகத்தாரும் மகிழ்ந்து உண்டு தீஞ்சுவை யறிவார்.

கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள். — இடைக்காடர்

நாயனாரது நூலின் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களும், கடுகை அதனடுவே துளை செய்து, ஏழுகடல் நீரையும் அத்துளையுட் பெய்து, தன்னளவில் குறுகும் வண்ணம் தறித்து வைத்தால், அதுபோல்வன ஆகும்.

அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

நாயனாரது நூலின் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களும், கடுகினும் மிக நுண்ணியதாகிய அணுவை அதன் நடுவே துளை செய்து, ஏழு கடல் நீரையும் அத்துளையுட் பெய்து, தன்னளவிற் குறுகும் வண்ணம் தறித்து வைத்தால் அதுபோல்வன ஆகும்.

## திருக்குறள்

| ஆசிரியர் திருப்பெயர்கள் | நூலின் திருப்பெயர்கள் |
|---|---|
| 1. திருவள்ளுவர் | திருக்குறள் |
| 2. நாயனார் | முப்பானூல் |
| 3. தேவர் | உத்தரவேதம் |
| 4. முதற்பாவலர் | தெய்வநூல் |
| 5. தெய்வப்புலவர் | திருவள்ளுவர் |
| 6. நான்முகனார் | பொய்யாமொழி |
| 7. மாதாநுபங்கி | வாயுறை வாழ்த்து |
| 8. செந்நாப்போதார் | தமிழ்மறை |
| 9. பெருநாவலர் | பொதுமறை |

# வரலாற்றுச் சுருக்கம்

இன்னுரைப் பகுதி, குறிப்புப் பகுதி, உரைப்பகுதி, உரை விளக்கப் பகுதி, சிந்தனைப் பகுதி என்று ஐந்து பிரிவுகளாக இந்த உரை நூலினைப் பிரித்து எளிமையாகவும் தெளிவாகவும் இருக்குமாறு அமைத்துள்ளேன். பல உரையாசிரியர்களும் தமிழ் அறிஞர்களும் வெளியிட்டுள்ள பதிப்புக்களை மனத்திற் கொண்டு நிறைவு செய்துள்ளேன். இந்த ஐந்துப் பகுதிகளிலும் குறட்பாக்களின் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. உரைப் பகுதி மட்டும் சொல்லுக்குச் சொல் உரை தருகின்றது. மற்ற நான்கு பகுதிகளும் பற்பல விளக்கங்களுடன் குறட்பாக்களுக்கு ஐயமறத் தெளிவு தருவன ஆகும்.

கடந்த 40 ஆண்டுகட்கு மேலாக மக்களிடையே திருக்குறள் பரவ வேண்டும் என்ற தொண்டினைச் செய்து வருகின்ற நான் அவ்வப்பொழுது குறிப்பாக எழுதி வைத்திருந்த அனைத்தையும் ஒன்று சேர்த்து இந்த உரை நூலினை வெளியிடுகின்றேன். இயன்ற வரை இந்த நூலில் காணப்படுகின்ற ஐந்து பகுதிகளையும் கற்றறிந்த பிறகு திருக்குறளின் முழு வடிவத்தையும் ஓரளவு உணர்ந்ததான மன நிறைவு ஏற்படும் என்பதில் ஐயமில்லை.

தமிழ்ப் புலமை நிறைந்த பேரறிஞர்கள் மட்டும் அறிந்திருந்த குறட்பாக்களைப் பாமர மக்களும் ஒருவாறு உணர்ந்து கொள்ளுமாறு தொண்டாற்றிய மன நிறைவு எனக்கு உண்டு. ‘பாமர மக்களும் எளிமையாகக் குறட்பாக்களைப் புரிந்து கொள்ளுமாறு செய்த பெருமை தங்களுக்கு உண்டு’ என்று அன்பர்கள் கூறிய போதெல்லாம், அவ்வார்த்தைகளை முகமனாகக் கொள்ளாது, உண்மை என்றே ஏற்றுக் கொண்டு நான் பணியாற்றி வருகின்றேன்.

உயர்நிலைப் பள்ளியில் படிக்கின்ற பொழுதே 1330 குறட்பாக்களையும் மனப்பாடம் செய்து கொண்டேன். தமிழார்வம் வளர்ந்து வரும் அந்த நாட்களில், பேச்சாற்றல் பெற்று மாணவர்களிடையே பள்ளிக்கூடங்களில் வாய்ப்புக்கள் நேர்ந்த போதெல்லாம் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தேன். உயர்நிலைப் பள்ளிப் படிப்பினையும் கல்லூரிப் படிப்பினையும் திருச்சிராப்பள்ளி அர்ச். சூசையப்பர் உயர்நிலைப் பள்ளியிலும் கல்லூரியிலும் மேற்கொண்டேன். இலக்கிய மன்றங்களில் பேச்சுப் போட்டிகளில் பரிசுகள் பெறுகின்ற வாய்ப்புக்களை அதிகமாகப் பெற்றிருந்தேன். குறட்பாக்களை விளக்கம் செய்கின்ற பழக்கத்தினை 1935ஆம் ஆண்டிலிருந்தே தொடர்ந்து செய்து வந்தேன். பொதுமேடைகளிலும் பொதுமக்களிடையிலும், திருக்குறள் சொற் பொழிவுகளை முதன்மையாகக் கொண்டு யாருமே பேசாதிருந்த காலம் அந்தக் காலம் என்பது மிகையாகாது.

அந்தக் காலத்தில்தான் எந்தெந்த முறையில் குறட்பாக்களை நகைச்சுவையாகவும், நயமாகவும், அன்றாட வாழ்க்கைக்குப் பொருத்தமாக இருக்குமாறும் சொல்ல வேண்டும் என்ற முயற்சியில் நான் ஈடுபட்டேன். நினைத்த நேரத்தில், நினைத்த குறட்பாக்கள் நினைவிற்கு வருமாறு பயிற்சி செய்து கொண்டேன். என்னுடைய திருக்குறள் தொண்டினை முதன் முதலாக, திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில்தான் தொடங்கினேன். திருச்சிக்கு அடுத்த பொன்மலையில் அக்காலத்தில் வாழ்ந்த தமிழறிஞர்கள் அடிக்கடி என்னை அழைத்துச் சென்று திருக்குறள் சொற்பொழிவு நிகழ்த்துமாறு செய்தனர். இவ்வாறே திருச்சி மாநகரிலும் சுற்றுப்புறங்களிலும் குறட்பாக்களைப் பரப்பும் சீரிய தொண்டில் என்னை ஆட்படுத்திக் கொண்டேன்.

1940ஆம் ஆண்டில் சேலம் மாநகரத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். நீதிமன்றத்தில் சில ஆண்டுகள் பணிபுரிந்தேன். திருக்குறள் சொற்பொழிவு செய்யும் என் ஆற்றலைப் புரிந்து கொண்ட நண்பர்கள் பற்பல நிகழ்ச்சிகளை அமைத்துத் திருக்குறள் பேசுமாறு செய்தார்கள். முதன் முதலாக சேலம் பிரம ஞானசபைத் தொடர்பாக டாக்டர் தனக்கோடி நாயுடு அவர்கள் சொற்பொழிவு ஒன்றினை ஏற்பாடு செய்திருந்தார். அந்த நிகழ்ச்சிக்கு **ஜஸ்டிஸ் சுந்தரம் செட்டியார்** தலைமை வகித்தார். அவர்கள் முடிவுரையில் என்னைப் பற்றிச் சொல்லிய புகழுரைகள், சேலம் மாவட்டத்தில் நான் இருக்க நேர்ந்த 3 ஆண்டுகளிலும், அரிய சேவை செய்வதற்குத் தொடக்கமாயிருந்தன என்பதைக் குறிப்பிட வேண்டும்.

சேலம் கல்லூரியில் அப்போது அ. இராமசாமி கவுண்டர் என்பவர் முதல்வராக இருந்தார். அவர் ஒரு சிறந்த மேதை. நல்ல பகுத்தறிவுவாதி. தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மூன்று மொழிகளிலும் சிறந்த புலமை பெற்றிருந்தார். நானும் அவரும் நண்பரானோம். அவர் கல்லூரியில் 10 நாட்களுக்கு திருக்குறள் சொற்பொழிவு நிகழ்த்துமாறு அடியேனைப் பணித்தார். 10 நாட்களிலும் சிறந்த பேரறிஞர்கள், பொதுமக்கள் வந்திருந்து சிறப்பித்தார்கள். அப்போது, முதுபெரும் புலவர்களாகிய திம்மப்பையர், நடேச உடையார் முதலிய பெரும் புலவர்கள் இருந்தார்கள். 10 நாட்கள் முடிந்ததும் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்குமாறு முதல்வர் புலவர்களிடம் கூறினார். திம்மப்பையர் கூறியதாவது:

'இந்த இளைஞர் மிகமிகக் கடினமான குறட்பாக்களுக்கெல்லாம் எளிமையாக உரை சொல்லி விட்டார். பற்பல தர்க்க வாதங்களுக்கு இடம் கொடுத்து வருகின்ற பல குறட்பாக்களுக்கு நயமாகவும் எளிமையாகவும் இவர் சொல்லிய முறை மிகவும் வியப்பாக இருந்தது.' இவ்வாறு

அக்கல்லூரியின் பேராசிரியர் என்னைப் பாராட்டி 40 ஆண்டுகளுக்கு முன்னர் சொல்லிய வார்த்தைகளை நான் பணிவோடு ஏற்றுக் கொண்டேன். பின்னர் முதல்வர் திரு. இராமசாமி கவுண்டர் அவர்கள் என்னுடைய வேண்டுகோளை ஏற்று, கல்லூரியில் இடம் தந்து, திருக்குறள் வகுப்பு நடத்துவதற்குத் துணையாக இருந்தார். கிழமைதோறும் வகுப்பு நடத்திக் குறட்பாக் களுக்கு விளக்கம் செய்து வந்தேன். குறட்பாக்களில் நுட்பமான ஆழ்ந்த புலமை அந்த நாட் களில் எனக்கு இல்லையென்றாலும், போதிய அளவு விளக்கம் தரும் தகுதியைப் பெற்றிருந்தேன். அப்போது மாவட்டக் கலெக்டராக R. M. சுந்தரம் என்பவர் இருந்தார். திருக்குறள் வகுப்பு நடத்துவதை அறிந்து அவர் மிகவும் பாராட்டினார்.

இன்றும் என்றும் மறக்க முடியாத தமிழ்ப் பேரறிஞரும் பல்கலை விற்பன்னருமான பா. வே. மாணிக்கவேல் நாயக்கருடைய மூத்த அண்ணார் பொன்னுசாமி நாயக்கர் என்பவர் ஆவார். அவர்கள் சேலத்துக்கு அடுத்த பாகல்பட்டி மிட்டாதாரர்; கம்பராமாயணம் முதலிய நூல்களில் மிகப் பெரும் புலமை பெற்றவர்; அவர் சேலம் வருகின்ற போதெல்லாம் என்னுடன் அளவளாவி மகிழ்வார். அக்காலத்தில் கடல்போல் படித்த புலவர்களில் ஒருவர் ஆசிரியர் வரத நஞ்சைய பிள்ளை அவரைச் சேலத்தில் சொற்பொழிவு நிகழ்த்த பலமுறை அழைப்ப துண்டு. அவரை, 'நடை அகராதி' என்று பாராட்டிப் பேசுவர்.

அவர் சொற்பொழிவு நிகழ்த்துகின்றபோது, பல நேரங்களில் என்னை அருகில் உட்கார வைத்துக் கொள்வார். அவர் பேசிக்கொண்டு வரும்போது, தனக்கு நன்கு நினைவுக்கு வரவில்லை யென்றால் திருக்குறளில் சில சீர்களை மட்டும் சொல்லி, 'அது எந்தக் குறட்பா?' என்று கேட்பார். நான் உடனே அக்குறட்பாவினைச் சொல்லுவேன்.

திருக்குறள் வகுப்புக்களை நடத்திக் கொண்டு வந்தபோதே, திருக்குறள் மாநாடு ஒன்று, சேலத்தில் நடத்த வேண்டுமென்று நண்பர்களிடம் கலந்து பேசி, அவர்களின் துணை கொண்டு 1941 ஆம் ஆண்டு முதன் முதலாக சேலத்தில் திருக்குறள் மாநாட்டினை முன்நின்று நடத்தினேன். மாநாட்டிற்கு வந்திருந்த பேரறிஞர்களில் குறிப்பிடத் தக்கவர் பன்மொழிப் புலவர், ஞா. தேவநேயப்பாவாணர் ஆவார். அவர் திருச்சியில் உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றி வந்தார். அவருக்கும் முதல்வர் இராமசாமிக் கவுண்டருக்கும் முதன் முதலாக நட்பும் தொடர்பும் ஏற்படுவதற்கு அந்த மாநாடு பெரிதும் துணையாக இருந்தது. பின்னர், பாவாணர் அக்கல்லூரியில் பேராசிரியராக அமர்த்தப் பெற்றார். அதுவரை பெரும்புலவர் உலக ஊழியர், தமிழ்மறவர் புலவர் பொன்னம்பலனார் முதலியோர் என்னுடைய சொற்பொழிவுகளைக் கேட்டு, ஆக்கமும் ஊக்கமும் தந்தனர். 'திருக்குறளினைப் பாமர மக்களும், புரிந்து சுவைக்குமாறு செய்து குறட்பாக்களைப் பரவச் செய்யும் தங்கள் பணிகளை நான் மிகவும் பாராட்டுகின்றேன்' என்று உலக ஊழியர் என்னிடமும் பல நண்பர்களிடமும் சொல்லி மகிழ்வார்.

புலவர் சாம்பசிவ ரெட்டியார் என்ற தமிழாசிரியர் ஒருவர் நாமக்கல்லில் பணிபுரிந்து, தமிழர் சமுதாயத்துக்காக மிகப் பெருந் தொண்டாற்றி வந்தார். என்னை அவர் அழைத்துப் போய் பல நிறுவனங்களில் திருக்குறள் விரிவுரை நிகழ்த்தும் பணியினை மேற்கொள்ளும்படி செய்தார். முன்பு சேலம் மாவட்டத்திலிருந்த காவேரிப் பட்டணத்தில் ஓய்வு பெற்றுள்ள முது பெரும் தமிழ்ப் புலவரான திரு. K. இராமச்சந்திரனார் பல பள்ளிகளுக்கும் நிறுவனங்கட்கும்

என்னை அழைத்து போவதுண்டு. இவ்வாறே தமிழ் நாட்டில் தமிழாசிரியர்கள் பலரும், தலைமையாசிரியர்களும் எண்ணிறந்த திருக்குறட் சொற்பொழிவுகளை நிகழ்த்துவதற்கும், திருக்குறள் இன்பத்தினைப் பரப்புவதற்கும் காரணமாக இருந்தனர் என்று குறிப்பிட்டு அவர்கள் அனைவர்க்கும் நன்றி தெரிவித்துக் கொள்கின்றேன்.

தமிழகமே என்றென்றும் மறக்க முடியாத தமிழினத்தின் தலைவர்களில் ஒருவரான, உயர்திரு. சர். பன்னீர் செல்வம் அவர்கள் முதன்மையாக நின்று, திருவையாற்றில் தமிழ்ப் பெருங் கல்லூரியினை நிறுவனம் செய்தார். அப்பெருங் கல்லூரியில் முதன் முதலாகக் கற்றுத் தேர்ந்த தமிழ்ப் பெரும் புலவர்களில், வை. பொன்னம்பலனார், உலக ஊழியர், சி. இலக்குவனார் முதலியவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லுவதுண்டு. திருவையாற்றில் 1938 – 39ஆம் ஆண்டுகளில் சில மாதங்கள் அங்குத் தங்குகின்ற வாய்ப்பு எனக்கு இருந்தது. அப்பொழுது, உயர்திரு. P.S. சுப்பிரமணிய சாஸ்திரியார் திருவையாற்றுக் கல்லூரியில் முதல்வராக இருந்தார். அவர் சிறந்த மேதையாகவும் மும்மொழிப் புலவராகவும் திகழ்ந்தார்.

அப்போது தமிழ்க் கல்லூரியில் நான் திருக்குறள் தொடர் சொற்பொழிவு செய்தேன். எந்தெந்த சொல் எந்தெந்த குறட்பாக்களில் காணப்படுகிறதென்றும், உறுதியான மனப்பாடம் இருந்ததால் எப்படியெல்லாம் கவர்ச்சிகரமாகச் சொல்ல முடியும் என்றும் பேசிக் காட்டினேன். மாணவர்களும் ஆசிரியர்களும் பெரிதும் பாராட்டினர். அந்த மாணவர்கள் எல்லாம் தமிழாசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்று விட்டார்கள். திருச்சி மாவட்டத்தில் இருந்தபோது, பற்பல உயர்நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், ஏனைய நிறுவனங்களிலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தபோது, திருச்சி மைய நகரத்தில் நகர இளைஞர் மன்றம் (சிட்டிஅமெச்சூர்ஸ்) ஒன்று பணியாற்றி வந்தது. அவர்கள் தொடர் சொற்பொழிவு ஏற்பாடு செய்து என்னைத் திருக்குறள் பேசுமாறு செய்தனர். அம் மன்றத்தினை நல்ல ஆதரவு தந்து வளர்த்து வந்தவர், முத்தமிழ்க் காவவர் கி. ஆ. பெ. விசுவநாதம் ஆவார். 'பொதுமக்களும் திருக்குறளினைச் சுவைக்க முடியும்' என்ற பணியினை நான் மேற்கொண்டிருப்பதைக் கண்டு பலரும் பாராட்டி என்னை ஊக்குவித்தனர். அப்போது தான் நான் கல்லூரிப் படிப்பை முடித்தேன்.

அரசியல் துறையிலும் சமுதாயத் துறையிலும் மிகச் சிறந்த சொற்பொழிவாளர்கள் அக்காலத்தில் இருந்தனர் என்றாலும், திருக்குறள் கருத்துக்களைப் பொருத்தமாகவும், அன்றாட வாழ்க்கைக்கு ஏற்புடைத்தான குறட்பாக்களை உணர்த்துகின்ற தன்மையும் பழக்கமும் இல்லாத வர்களாக இருந்தார்கள் என்றே கூற வேண்டும். திருக்குறளை நன்கு கற்ற மேதைகள் நாட்டில் இருந்தார்கள். ஆனால், பாமர மக்களும் எளிமையாகப் புரிந்து கொள்ளுகின்ற முறைகளை வகுத்துக் காட்டி பணியாற்றினார்களில்லை. காலத்திற்கு ஏற்றவாறு, நகைச்சுவை யுடன் நயம்பட உரைக்கும் பழக்கத்தினை, அவரவர்கள் மேற்கொண்டுள்ள பணிக்குப் பொருத்தமான குறட்பாக்களை ,நான் சொல்லி வந்தேனாகையால், பலரும் குறட்பாக்களைப் படிக்கின்ற ஆர்வமுடையவரானார்கள்.

திருச்சிராப்பள்ளியில் சிறந்த முறையில் பணியாற்றி வருகின்ற தமிழ்ச் சங்கத்தில் சில ஆண்டுகட்கு முன்பு, தொடர்ந்து திருக்குறள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினேன். திருக்குறளில் கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் உள்ள பத்துக் குறட்பாக்களையும் பத்து நாட்கள் பேசினேன். ஒரு குறட்பாவுக்கு விளக்கம் சொல்கின்றபோது பற்பல அரிய குறட்பாக்களைத் தொடர்புப் படுத்திக் காட்டினேன். மிகப் பெரிய பேராசிரியர்கள் 10 நாட்களும் வந்திருந்து சிறப்பித்தனர்.

கடைசி நாளில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தரும், தமிழ்த் தந்தையுமான அமரர் திவான்பகதூர் T. M. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் தலைமை வகித்து, 'முப்பால் வித்தகர்' என்ற பட்டம் அளித்தும் பொற்கிழி அளித்தும் சிறப்பித்தனர்.

திருச்சி மாவட்டத்தில் பல அன்பர்கள் துணை கொண்டு திருக்குறள் சொற்பொழிவு நிகழ்த்தி மக்களிடையே குறள் மணம் கமழத் தொண்டாற்றியதுபோல, சேலம் மாவட்டத்திலேயும் 3 ஆண்டுகள் அலுவல் காரணமாக நான் தங்கியிருந்த காலத்தில் திருக்குறளுக்குத் தொண்டாற்றும் அரிய வாய்ப்பினைப் பெற்றேன். சேலம் நகரில், அரிசிப்பாளையம், செவ்வாய்ப்பேட்டை, குகை, அம்மாப்பேட்டை முதலிய இடங்களில் முறையாகவே திருக்குறள் சொற்பொழிவுகளை நிகழ்த்தி, திருக்குறளைப் பரப்பும் பணியினைச் செய்தேன். 1940 முதல் 1943வரை இத் தொண்டினைச் செய்து வந்தேன்.

சேலம் குமரசாமிப்பட்டியில், பெருந் தனவந்தரும் ஆன்மீகத் துறையில் பண்பு கொண்டவருமான **நடேச பண்டாரம்** என்ற பெரிய மனிதர், நல்ல பெரியவர்கள் பலரிடமும் தொடர்பு கொண்டும், இயன்றவரை பிறர்க்கு உதவிபுரிந்தும் வாழ்ந்து வந்தார்; என்னுடைய திருக்குறள் சேவையைப் பெரிதும் பாராட்டி வந்தார்.

அக்காலத்தில் பெரிதும் போற்றப்பெற்ற தவத்திரு. விபுலானந்த அடிகளார் (மயில்வாகனம்பிள்ளை) யாழ்ப்பாணத்துத் தமிழர். தமிழ்ப் பெரும்புலமையும் இசைப்புலமையும் பெற்றிருந்தார். தமிழ் நாட்டில் தமிழர்களிடையே இசை நுணுக்க ஆராய்ச்சிக்கு வித்திட்டவர். அவர் ஒருமுறை சேலம் வந்திருந்தார். அந்த ஆண்டு 1941 என்று நினைக்கின்றேன். அப்பொழுது பெருந்தகை நடேச பண்டாரம் அவர்கள் இல்லத்தில் வரவேற்பும் விருந்து உபசரிப்பும் நடந்தன. அடிகளாரிடம் ஐயப்பாடுகளைக் கேட்டறியும் உரையாடல் நடந்தது. நான் பணிவுடன், திருக்குறளில் 'துறவு' என்ற அதிகாரத்தின் முதல் குறட்பாவுக்கு விளக்கம் தருமாறு கேட்டேன்.

**யாதெனின் யாதெனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்.**

இக்குறட்பாவிற்கு அடிகளார், மிகத் தெளிவான முறையில், எளிய நடையில் எல்லாரும் வியக்குமாறு பொருள் கூறினார். மேலும் அவர், 'நான் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பாலபண்டித பரீட்சை எழுதியபோது இக்குறட்பாவினைத்தான் முக்கிய வினாக்களில் ஒன்றாகக் கேட்டிருந்தார்கள்' என்று பழைய செய்தியையும் குறிப்பிட்டார்.

தருமபுர ஆதீனம் தமிழ்த்துறைப் பகுதியிலிருந்து 1942 ஆம் ஆண்டு திருக்குறள் பதிப்பு' பற்றி ரூபாய் 500 பரிசு அளிப்பதாக திருக்குறளில் தேர்வு நடத்தி அதில் மதிப்பெண்கள் முதன்மை பெறுபவர்க்கு முதல் பரிசு அளிப்பதாகக் குறிப்பிட்டிருந்தது. நண்பர்கள் என்னை அத் தேர்வு எழுதுமாறு தூண்டினர். 'திருக்குறள் பரிசுபெற எழுதுகின்ற தேர்வுக்குத் தகுதி-அரசினரால் நடத்தப்படும் வித்துவான் 'பிரிலிமினரி'யில் வெற்றி பெற்றிருக்க வேண்டும்' என்பதாகும். உடனே நண்பர்களின் விருப்பத்துக்கு இணங்கி 1943 - மார்ச்சில் தேர்வுக்குப் பணம் கட்டி, திருச்சியில் சென்று தேர்வு எழுதி வெற்றியும் பெற்றேன். உடனே தருமபுர ஆதீனத்துக்குத் திருக்குறள் தேர்வுக்குரிய விதிமுறைகளைக் கேட்டு எழுதினேன், அவரிடமிருந்து வந்த பதில் திடுக்கிடச் செய்தது; திகைப்பையும் உண்டாக்கியது.

திருக்குறள் நூலில் வினாக்கள் கேட்பதுடன், சைவ சமயத்துக்குரிய சிறுசிறு நூல்களில்— 20 க்கு மேற்பட்ட நூல்களின் பெயர்களைக் குறிப்பிட்டு, அவற்றிலும் வினாக்கள் கேட்கப்படும் என்று குறிப்பிட்டிருந்தார்கள். அந்த நூல்களையெல்லாம் படித்து முடிப்பதற்கே பலகாலம் ஆகும். பெயர்தான் 'திருக்குறள் பரிசு' என்று குறிப்பிடப் பட்டிருந்ததே தவிர, படிக்க வேண்டிய நூல்கள் பலதரப்பட்டனவாக இருந்ததால், அந்தத் தேர்வினை எழுதாமல் நிறுத்தி விட்டேன்.

பின்னர், சேலத்தில் பணிபுரிந்த காலத்தில் அலுவலகத்தில் விடுப்பு எடுத்துக் கொண்டு சென்னை சட்டக் கல்லூரியில் வந்து சேர்ந்தேன். அப்பொழுது புரசைவாக்கத்தில் தங்கினேன். வைக்கோல்காரத் தெருவில் உள்ள மாநகராட்சி நடுநிலைப் பள்ளியில் திருக்குறள் வகுப்பினை நடத்திக் கொண்டு வந்தேன். பல நண்பர்கள் குறள் வகுப்பினை ஆதரித்துச் சிறப்பித்தனர். சட்டப் படிப்பினையும் திருக்குறள் வகுப்பினையும் ஒன்று சேரச் செயலாற்றி வந்தேன். **தமிழறிஞர் அ. கி. பரந்தாமனார்** அவர்களும், புலவர்கள் பலராயனார், நடேசனார், வடிவேலனார் முதலியவர்களும் மிகவும் ஆதரவும் ஊக்கமும் தந்து, திருக்குறளினைப் பரப்பி வரும் நற்பணியினைச் சிறப்பித்தார்கள். குறட்பாக்களை அட்டைகளில் எழுதி அவைகளை விளம்பரப் படுத்திக் கொண்டு தெருக்களிலெல்லாம் தமிழ் முழக்கம் செய்யும் தொண்டினையும் நண்பர்களுடன் செய்து கொண்டிருந்தேன். என்னுடைய சொற்பொழிவுகளைக் கேட்ட மக்கள், 'எல்லோருமே திருக்குறளினை எளிமையாகப் படித்து புரிந்து கொள்ளலாம் போல் இருக்கின்றதே; இதுவரை மிக மிகக் கடினம் என்று எண்ணிக் கொண்டிருந்தோமே' என்று பேசிக் கொள்ளத் தொடங்கினர்.

திருக்குறள் வகுப்பின் நற்பயனாக திருக்குறள் மாநாடு ஒன்றினை நடத்த முடிவு செய்யப்பட்டது. சென்னையிலேயே முதன் முதலாக, அந்த முறையில் நாங்கள் நடத்திய மாநாடுதான் சிறப்புற்றிருந்தது என்று கூறலாம். பேராசிரியர்கள் ரா. பி. சேதுப்பிள்ளை, ஜி. சுப்பிரமணிய பிள்ளை, இராசாக்கண்ணனார் முதலானவர்கள் பங்கேற்றுச் சிறப்பித்தார்கள். 'இதுவரை விற்பனை ஆகாதிருந்த திருக்குறள் புத்தகங்கள் கொஞ்சம் நாட்களாக விரைந்து விற்பனையாகின்றதே' என்று கூறி மிகப் பெரிய புத்தக வெளியீட்டுக் கழகத்தினர் மகிழ்ந்தனர். அந்த அளவுக்கு திருக்குறள் பயிலும் ஆர்வம் வளர்ந்தது.

தமிழகத்தின் பல மாவட்டங்களிலும் வழக்கமாகச், சென்று திருக்குறள் தொண்டு செய்து கொண்டிருந்த எனக்கு, பம்பாய் செல்லும் வாய்ப்புக் கிடைத்தது. இந்திய மொழிகள் பலவற்றிலும் மொழி பெயர்த்து விளம்பரம் செய்யக் கூடிய மிகப் பெரிய அலுவலகம் ஒன்றில், தமிழ்த் துறையில் வாய்ப்புக் கிடைத்ததைப் பெரிதாக மதித்து அப்பணியை ஏற்றுக் கொண்டேன். பம்பாய் வாழ் தமிழர்களிடையே திருக்குறள் பரப்புகின்ற பெரும்பணி கிடைத்தது என்பதே எனக்குப் பெரிய மகிழ்ச்சியாக இருந்தது. பம்பாய் வாழ் தமிழர் களிடையே திருக்குறள் பணியைச் சீரிய முறையில் சிறப்பாகச் செய்துவந்தேன். பம்பாய் நகரத்தைச் சார்ந்திருந்த தாராவி, மாதுங்கா, சையான் முதலியவிடங்களில் வாழ்ந்த தமிழர் களிடையிலும், நகரத்துக்குத் தொலை தூரத்திலுள்ள தமிழர்கள் வாழ் ஊர்களிடையிலும் இடைவிடாமல் திருக்குறள் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தேன். அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான மனத்துணிவு, ஊக்கம், முயற்சி, மனங்கலங்காமை போன்ற கருத்துக்கள் அமைந்த குறட்பாக்களைப் பெரிதும் விளக்கி வந்தேனாதலால் குறட்பாக்களைப் படிக்கும் ஆர்வம் மக்களிடையே விரைந்து வளர்வதாயிற்று.

உண்ணும் உணவுக்கு அவ்வப்போது தொட்டுக் கொள்ளும் ஊறுகாய் போல, திருக்குறள் அந்தக் காலத்தில் இருந்து வந்தது. புராண இதிகாச நூல்களைச் சோறு, குழம்பு போலவும் திருக்குறளினை ஊறுகாய் போலவும் வைத்துக் கொண்டிருந்தார்கள். இந்த எண்ணத்தினை மாற்றியமைக்க வேண்டும் என்பதையே என் வாழ்நாளின் அடிப்படை நோக்கமாகக் கொண்டேன். திருக்குறளைச் சோறாகவும் குழம்பாகவும் வைத்துக் கொண்டு புராண இதிகாசங்களை ஊறுகாயாக வைத்துக் கொள்வதுதான் முறையான செயல் என்பதை மெய்ப்பிக்க வேண்டும் என்று முயற்சித்தேன். அம்முயற்சியில் ஓரளவு வெற்றி கிட்டியது என்று மன நிறைவு கொள்ளுகின்றேன்.

அரசுப் பணியிலிருந்து விடுபட்டு, புதுக் கோட்டையில் தங்கியிருந்த காலத்தில் சுற்றுப்புற நிறுவனங்களிலும், பள்ளிக் கூடங்களிலும், திருக்குறள் சொற்பொழிவுகளை நிகழ்த்தி வந்தேன். குறட்பா மணம் அப்பகுதிகளில் கமழ ஆரம்பித்தது. அப்பொழுது அருமையான தமிழ்த் தொண்டு ஆற்றிவந்த 'பொன்னி' பத்திரிகையில் கட்டுரைகள் மூலமாகவும் குறட்பணி ஆற்றி வந்தேன். தென் ஆர்க்காடு மாவட்டத்தின் தலை நகரான கடலூரில் கூட்டுறவு முறையில் 'திருக்குறள் அச்சகம்' என்ற பெயரில் 1949 ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்று, அதனைப் பொறுப்பேற்று நடத்துகின்ற பணியை எனக்கு அளித்தனர். திருக்குறள் பரப்புகின்ற பணியினை, அந்தக் காலத்தில்தான் — சேர்ந்தாற்போல கடலூரிலும் திருச்சியிலும் செய்து வந்தேன். சொற்பொழிவுகள் மூலம் குறள் பரப்பும் பணியினை ஆற்றி வந்த நான், சிறுசிறு புத்தகங்கள் பற்பல வெளியிட்டும் **'குறள் மலர்'** வார இதழை நடத்தியும், மக்களிடையே பெருத்த அளவில் திருக்குறள் பரவுமாறு செய்தேன். மிகக் குறைந்த விலையில் புத்தகங்கள் வெளியிட்டு, பல ஆயிரக் கணக்கில் விற்பனை செய்கின்ற வாய்ப்பினைப் பெற்றேன். இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியும், தமிழ்ப் பாதுகாப்பு உணர்ச்சியும் தமிழர்களிடையே வேகமாக அக்காலத்தில் வளர்ந்து வந்தது. தமிழ்நாடு முழுதும், தமிழர்கள் எண்ணிறந்த மாநாடுகளை நடத்தினர். ஒவ்வொரு மாநாட்டிலும், ஆயிரக்கணக்கான என் சிறு திருக்குறள் புத்தகங்கள் விற்பனை ஆயின. பல்லாயிரக் கணக்கான மக்கள் எளிமையாகப் படித்துக் குறளார்வம் மிக்கவர்களாயினர். அப்புத்தகங்களின் பெயர் வருமாறு :

| | |
|---|---|
| வள்ளுவனார் உள்ளம் | மானத்தை விற்காதே |
| திருக்குறள் – மூலம் | இன்பம் இருக்கும் இடம் |
| வள்ளுவர் காட்டிய வழி | காதல் கள்வன் |
| அவள் சிரித்த சிரிப்பு | மயங்கிய நெஞ்சம் |
| இன்பத் தோட்டம் | காதல் உழவன் |
| ஏன் இந்த வாழ்வு | திருக்குறள் காமத்துப்பால் |
| இன்பம் தரும் இன்பம் | வள்ளுவரைக் காணோம் |

இப்புத்தகங்கள் அனைத்தும் சேர்ந்தே ஐந்து ரூபாய்க்கு மேல் ஆகவில்லை. அதனால் தான் மக்கள் எளிமையாக வாங்கவும் திருக்குறள் பரவவும் எளிமையாக இருந்தது. இது வல்லாமல், 'திருக்குறளில் நகைச்சுவை', 'அகமும் முகமும்', 'வள்ளுவர் வகுத்த வாழ்க்கைப் பாதை', 'வள்ளுவர் வழிப்பயணம்' என்பன போன்ற பல நூல்களையும் எழுதி வெளியிட்டேன்.

திருக்குறளினை மக்களிடையே பரப்ப வேண்டும் என்ற தொண்டினை மேற்கொண்டு அந்தப் பணியினை இயன்றவரை செய்து வந்ததனால், திருக்குறளைப் படிக்க வேண்டும் என்ற

எண்ணம் மக்களிடையே உண்டாயிற்று. ஆதலால் தான் தமிழகத்தில் நிறைந்த புலமை பெற்ற தமிழறிஞர்கள் பலர் திருக்குறள் சம்பந்தமான நூல்களை எழுத ஆரம்பித்தனர். இவ்வாறு புலமை நிறைந்த தமிழறிஞர்கட்கு, திருக்குறளின் நூல்கள் எழுத வேண்டும் என்ற எண்ணம் உண்டானதற்குக் காரணம் மக்களிடையே திருக்குறள் படிக்கும் ஆர்வம் மிகுந்துள்ளது என்பதை அவர்கள் புரிந்து கொண்டமையே ஆகும்.

1935 - ஆம் ஆண்டில் தொடங்கிய திருக்குறள் பரப்பும் பணியினைத் தொடர்ந்து செய்து வந்ததன் பயனாகத் தமிழ்ப் பெரும் புலவர்களின் திருக்குறள் ஆராய்ச்சி நூல்களைக் காலம் தாழ்த்தியாவது நம்மால் காண முடிந்தது.

திருச்சி 'இம்பீரியல்' அச்சுக் கூடத்தின் உரிமையாளரான அமரர் மாணிக்கம்பிள்ளை அவர்கள்தான் 'குறள் மலர்' பத்திரிகையை அச்சிட்டு வெளியிட்டு வந்தார். அப்பத்திரிகையின் ஆசிரியராக இருந்து இயன்றவரை பணியாற்றி வந்தேன். தமிழ் நாட்டிலேயே திருக்குறளுக் கென்றே முதன் முதலாக வாரப்பத்திரிகை நடத்தப் பெற்றது என்றால், அது 'குறள் மலரே' ஆகும். வாரந்தோறும் ஆயிரக் கணக்கில் அப்பத்திரிகை அச்சிடப் பெற்று, பல்லாயிரக் கணக்கான தமிழர்கள் வாரந்தோறும் திருக்குறள் கற்கும் உணர்ச்சியினை அம்மலரின் வாயிலாகப் பெற்றனர். வாரந்தோறும் பல குறட்பாக்களுக்கு விளக்கவுரை எழுதி வந்தேன். முழுக்க முழுக்க அம்மலர், திருக்குறளைப் பரப்புவதற்கென்றே நடத்தப் பெற்றது.

மக்களுக்கு எளிமையாக திருக்குறளை விளங்க வைக்க வேண்டும் என்ற எண்ணத்தில், பற்பல கோணங்களில் குறட்பாக் கருத்துக்களை எழுதி வந்தேன். 'வள்ளுவர் வழிப் பயணம்' என்று தொடர்ச்சியாக நான் எழுதி வந்த கட்டுரைகள், கற்போருக் கெல்லாம் குறள் படிக்கும் ஆர்வத்தினை மிகுதியும் உண்டாக்கியது. பிற்காலத்தில் 'வள்ளுவர் வழிப் பயணம்' என்ற நூல் வெளிவந்து பலருக்கும் பெரிதும் பயன்பட்டது. 'குறள் மலர்' பத்திரிகை தமிழ் நாட்டில் தொண்டு செய்யாதிருந்தால், தமிழ் மக்களிடையே பெரும் பகுதி திருக்குறள் பரவியிருக்காது என்று கூறுதல் மிகையாகாது. 'குறள் மலர்' பத்திரிகையை படித்த காரணத்தினால் தான், பல அறிஞர்களும் திருக்குறளை எளிமையாகச் சொற்பொழிவாற்றும் பழக்கத்தினைப் பெற்றனர். இப்பொழுதும் தமிழறிஞர் பலர் குறள் மலர் பத்திரிகைகளின் தொகுப்பினைப் பாதுகாத்து வைத்துப் பயனடைந்து பெருமையடைகின்றனர்.

அக்காலத்தில் தமிழ்ப் பேரறிஞரான A. C. செட்டியார் அவர்கள் பன்முறை என்னை அழைத்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் திருக்குறள் சொற்பொழிவுகளை நிகழ்த்த ஏற்பாடு செய்திருந்தார். தொடர்ந்து அப்பல்கலைக் கழகத்தில் அழைக்கின்றார்கள். இரண்டு ஆண்டுகட்கு முன்னதாக, சிதம்பரம் நாவலர் உயர்நிலைப் பள்ளியில் பத்து நாட்கள் திருக்குறள் தொடர் சொற்பொழிவு நிகழ்த்தினேன். எல்லா நாட்களிலும் பேராசிரியர்களும் பொது மக்களும் புலவர்களும் வந்திருந்து சிறப்பித்தனர். வடஆர்க்காடு மாவட்டம் வேலூரில், 'வசந்த கால விழா' என்று அமரர் A. S. அருணாசலம் பிள்ளை அவர்கள் நடத்துவது வழக்கம். அவர்கள் என்னை அழைத்து, திருக்குறள் தொடர் சொற்பொழிவு நிகழ்த்துவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

**'திருக்குறளையும் மக்கள் சுவைக்குமாறு தொடர்ந்து பேசமுடியும்**
**என்ற ஆற்றலினைத் தங்களிடத்தில்தான் நான் கண்டேன்'**

என்று வியந்து எனக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டியவர் **புலவர் ஐயா நாயக்கர்** அவர்கள் ஆவார். அவர் வடஆர்க்காடு மாவட்டத் தமிழாசிரியர் கழகத் தலைவராக இருந்தவர். அணியிலக்கணத்தில் சிறந்த மேதையாக அவர் விளங்கியமையால் 'அணியிலக்கண ஐயா நாயக்கர்' என்ற பட்டம் பெற்றார். வட ஆர்க்காடு மாவட்டத்தின் பல விடங்களிலும் யான் திருக்குறள் சொற்பொழிவு செய்வதற்கு அவரே காரணமாவார். ஆரணிக்கு அடுத்த **களம்பூர்** என்னும் ஊரில் தொடர்ந்து திருக்குறள் சொற்பொழிவு நிகழ்த்தும்படி செய்தார். வேலூரில் இருக்கும் ஊரில் கல்லூரியில் அக்காலத்தில் **'யோக சுந்தரம்'** என்ற பேராசிரியர் அக் கல்லூரியில் பணி புரிந்து வந்தார். அவர்காலம் முதல் இன்று வரை, அக்கல்லூரிப் பேராசிரியர்கள் வாய்ப்பு நேரும் போதெல்லாம் சொற்பொழிவுக்கு என்னை அழைக்கத் தவறுவதில்லை.

மதுரைத் திருவள்ளுவர் கழகத்தினைத் தொடங்கியும் நடத்தியும் வருகின்ற புரவலர் கி பழனியப்ப பிள்ளை அவர்கள் பல்லாண்டுகளாகவே, மதுரை நகரத்திலேயும் சுற்று வட்டாரங்களிலும் திருக்குறள் சொற்பொழிவு செய்வதற்கு எனக்கு மிகுந்த துணையாக இருந்து வருகிறார். அண்மையில் மதுரைப் பல்கலைக் கழகம், திருக்குறள் ஆராய்ச்சி சொற் பொழிவு நிகழ்த்த என்னை அழைத்திருந்தது; சென்றேன் துணைவேந்தர் உயர்திரு வ. சுப. மாணிக்கம் அவர்கள் தலைமையில் சொற்பொழிவுகள் நிகழ்த்திப் பாராட்டுதலைப் பெற்றேன்.

பல்லாண்டுகளாகத் திருக்குறள் தொண்டாற்றிய எனக்கு 1951 ஆம் ஆண்டு குடந்தை மாநகரில் சிறப்பான முறையில் பட்டமளிப்பு விழா நடத்தப் பெற்றது. அவ்விழாக் குழுவிற்குத் திருச்சி ஜில்லா போர்டு தலைவர் **உயர்திரு இராஜா சிதம்பர ரெட்டியார்** அவர்கள் தலைவ ராகவும், குடந்தை **தஞ்சைமணி S. கணபதி அவர்கள்** செயலாளராகவும் இருந்தனர். குடந்தை நகரத்தில் பல முறை திருக்குறள் சொற்பொழிவுகள் நிகழ்வதற்கு இன்றியமையாத பணி யாற்றியவர் S. கணபதி ஆவார். அந்தப் பட்டமளிப்பு விழா நிகழ்ச்சிகள் காலை முதல் மாலை வரை நடைபெற்றது. **எனக்குப் பட்டம் அளித்த முதல் விழா** அதுவே ஆகும். உடையார் பாளையம் குறுநில மன்னர், (ஜமீன்தார்) பெருமைமிகு **கச்சியுவரங்க காளாக்க தோழ உடையார்** அவர்கள் அவ்விழாவிற்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார். தமிழ்ப் பெரும் புலவர்களும் அறிஞர் பெருமக்களும் விழாவில் கலந்து கொண்டனர். அவர்களுள் டாக்டர் மா. இராசமாணிக்கனார், தமிழ் மணம் கி. இராமலிங்கனார், ஓய்வு பெற்ற நீதிபதி K. S. இராமசாமி சாஸ்திரியார் முதலியோர் குறிப்பிடத் தக்கவர் ஆவார்கள். குறுநிலமன்னர் பட்டமளிக்கும் பட்டயத்தை எடுத்துக் கொடுக்க, டாக்டர் மா. இராசமாணிக்கனார் தம்முடைய திருக்கரங்களினால் **'திருக்குறளார்'** என்ற பட்டத்தினை உவகையோடு அளித்தார்.

1952-ஆம் ஆண்டில் நாடாளு மன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு நான் டெல்லிக்குச் சென்றபொழுது குறள் மலர் பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த இயலாமற் போயிற்று. தேர்தலில் வெற்றி பெற்றுள்ள காரணங்கள் பலவற்றுள்ளும், விரிந்து பரந்து கிடக்கின்ற 'ஆசிரியர் உலகம்' குறிப்பிடத்தக்கது. தொடக்கப் பள்ளி ஆசிரியர்கள் தாங்கள் நடத்தும் மாநாடுகளிலும் விழாக்களிலும் பெரும்பாலும் என்னை அழைத்துத் திருக்குறள் சொற்பொழிவாற்றுமாறு செய்து வந்தனர்; அக்காலத்தில் ஆசிரிய சங்கங்களில் நல்ல பொறுப் பேற்றிருந்த திருவாளர்கள் இராமைய தேவர், வீரையன் முதலானோர் குறிப்பிடத் தக்கவர் ஆவார். சிறந்த தமிழ்ப் புலவர்களும் ஆசிரியர்களும் தமிழ் அறிஞர்களும் தொடர்ந்து அவ்வப்போது என்னை அழைத்து, தமிழகம் முழுதும் சொற்பொழிவு நிகழ்த்தும் வாய்ப்பினை

உண்டாக்கித் தந்த காரணத்தினால்தான் தமிழ் மக்களிடையே திருக்குறளைப் பரப்புகின்ற நற்பணியினை என்னால் செய்ய முடிந்தது.

மனோன்மணீயம் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட தமிழ்ச் சங்கம் திருவனந்தபுரத்தில் நற்பணியாற்றி வருகின்றது. கேரளத்தில் வாழ்கின்ற தமிழன்பர்களின் அழைப்பினை ஏற்று, அந்தத் தமிழ்ச் சங்கத்தில், இனிய திருக்குறள் சொற் பொழிவுகளை நிகழ்த்தி வந்தேன்.

திருச்சியில் கல்லூரியில் படிக்கும் காலத்திலேயே கவிதைகள் எழுத வேண்டும் என்ற ஆர்வம் எனக்கு இருந்து வந்தது. இப்போது நடப்பவை போல, கவியரங்கம் அக்காலத்தில் நடைபெறுவதில்லை ஒரு முறை தொடர்ச்சியாக பக்திச் சுவை நிரம்பிய நூறு விருத்தப்பாக்கள் முருகன் மீது பாடி முடித்தேன். அந்த நூலுக்கு 'முருகன் முறையீடு' என்று பெயர் வைத்தேன் அப்பொழுது, திருச்சி அர்ச். சூசையப்பர் உயர்நிலைப் பள்ளியில் தமிழ் ஆசிரியராக இருந்த இரா. மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் என் கவிதைகளைப் படித்து மகிழ்ந்து என்னைப் பாராட்டி கவிதைகளைச் செப்பனிட்டுக் கொடுத்தார். 'இந்தக் கவிதைகள் ஒரு நூல் வடிவில் வந்தால் சிறப்பாக இருக்கும்' என்று கூறினார். என்னால் இயற்றப் பட்ட 'முருகன் முறையீடு' என்ற பாடல்களை, திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் பார்வைக்கு என் நண்பர்கள் தந்தனர். அவர் படித்துப் பார்த்து மிகவும் பாராட்டினார். 'இந்த இளமையிலேயே கவிதை புனைவது நல்ல எதிர்காலத்தை உணர்த்து கிறது' என்று நண்பர்களிடம் சொல்லிப் பாராட்டினார். அப்பொழுது திருச்சி தென்னூரில் இராமன் செட்டியார் என்பார் கடை வைத்திருந்தார்; அவரிடம் பொருளுதவி செய்யுமாறு தூண்டி, 'முருகன் முறையீடு' என்ற நூல் அச்சிட்டு வெளியிடச் செய்தார். அந்த நூலுக்கு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள், அர்ச். சூசையப்பர் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர், மு. நடேச முதலியார், தமிழ்ப் பெரும்புலவர் இரா. மீனாட்சி சுந்தரனார் ஆகியோர் அருமை யான சாற்றுக்கவிகள் அளித்து நூலினைச் சிறப்பித்ததோடு, மாணவநிலையில் இருந்த என்னை ஊக்குவித்தனர்.

அந்தச் சாற்றுக் கவிகள் பலவற்றுள்ளும், வெண்பா ஒன்றினை மட்டும் இங்கு குறிப்பிடு கின்றேன். இது வாரியார் சுவாமிகள் பாடிய பாடல்களுள் ஒன்றாகும்.

"மறையா பிரமேத்தும் வள்ளல் முருகன்
முறையீட்டை அன்பாய் மொழிந்தான்—பொறையார்
புகழ்வீரா சாமி புதல்வனருட் போதம்
திகழுமுனி சாமிநலம் சேர்ந்து."

இப்பொழுதும் வாரியார் சுவாமிகள் என்னுடைய திருக்குறள் தொண்டினைப் பாராட்டி வருகின்றார்கள். அவருடைய 75ஆம் ஆண்டு நிறைவு விழாவில் பல இடங்களில் அவரை நான் பாராட்டிப் பேசியதுண்டு. ஒருமுறை வேலூரில் பேசிக் கொண்டிருந்த பொழுது, வாரியார் சுவாமிகள் எனக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார். முன்னாள் அமைச்சர் பூவராகவன் அவர்கள் பல பெரியார்களின் துணையுடன் நடத்தி வந்த மன்றத்தின் சார்பில் பல்லாண்டுகளாகத் திருப்புகழுக்கும் திருக்குறளுக்கும் தொண்டாற்றியவர்களைப் பாராட்ட வேண்டும் என்ற கருத்தின்படி வாரியார் சுவாமிகளையும் என்னையும் அழைத்திருந்தார். அந்த விழா சென்னை இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் சிறப்பாக நடந்தேறியது.

பெருந்தலைவர் காமராஜர் எங்கள் இருவரையும் பாராட்டிப் பொன்னாடை போர்த்தி, கேடயம் வழங்கிச் சிறப்பித்தார். 'நாள்தோறும் ஆயிரக் கணக்கான மக்கள் பாராட்டி வருகின்ற இவர்களை நான் வந்து பாராட்டுவதில் என்ன புதுமை இருக்கிறது!' என்று பெருந்தலைவர் கூறிய சொற்கள் இன்றும் என் நெஞ்சில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

தேவகோட்டையில் இருந்த திரு. சோமசுந்தரம் செட்டியார் என்பவர் திருக்குறளுக்கு அரிய சேவை செய்து வந்தார். அவ்வாறே காரைக்குடி குறள் கழகமும் திருக்குறள் பணியினைச் செம்மையாகச் செய்து வருகிறது. இந்த இடங்களில் எல்லாம் தொடக்க காலம் முதற் கொண்டே நான் திருக்குறள் சொற்பொழிவுகளை நிகழ்த்தி மிகுந்த ஆர்வத்தினை மக்களிடையே உண்டாக்கியுள்ளேன். கர்னாடக மாநிலத்தில் வாழ்கின்ற தமிழ்மக்கள் திருக்குறள் சொற்பொழிவினைக் கேட்கப் பலமுறை எழுதிக் கொண்டிருந்தனர். ஒருமுறை 'சிமோகா' என்ற நகரத்திற்குச் சென்று, திருக்குறள் விரிவுரை நிகழ்த்தி அவர்கள் ஆர்வத்தினை நிறைவு செய்துள்ளேன். பெங்களூர் தமிழர்கள் பன்முறை எனது குறட்பா உரைகளைக் கேட்டு மகிழ்ந்தனர்.

டில்லியில் ஐந்து ஆண்டுகள் நாடாளுமன்ற உறுப்பினராய் இருந்த காலத்தில் திருக்குறள் சிறப்பினைப் பன்முறை எடுத்துக் கூறும் வாய்ப்பினைப் பெற்றிருக்கிறேன். டில்லி மாநகரிலும் சுற்று வட்டாரங்களிலும் வாழ்ந்து வருகின்ற தமிழ் மக்களிடையே இனிய குறட்பாக்களைப் பேசி ஆர்வத்தினைத் தூண்டுகின்ற வாய்ப்புக் கிடைத்தது. நாடாளு மன்றத்தில் அப்பொழுது துணைச் சபாநாயகராக இருந்த அனந்த சயனம் அய்யங்கார் அவர்கள் பலவிடங்களில் தமிழர்களிடையே திருக்குறள் சொற்பொழிவுகளை நிகழ்த்துகின்ற வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்தார். நாடாளுமன்றத்தில் நான் பேசுவதற்கு நல்ல ஊக்கமும் ஆர்வமும் கொடுத்தவர் அவர்களே ஆவார். 1952லிருந்து 1957 வரை நாடாளுமன்றத்தின் சேவை திருக்குறளுக்குச் செய்யும் சேவையாகவே இருந்ததென்று கூறலாம்.

சில ஆண்டுகளுக்கு முன்னதாக, டில்லி மாநகரத்தில் சிறப்பான ஒரு விழா எடுத்து குடியரசுத் தலைவர் அவர்கள் தலைமையில் திருவள்ளுவர் உருவச் சிலையினைத் திறந்து வைத்தார்கள். அந்த விழாவிற்கு முதல் காரணமாக இருந்தவர் அப்பொழுது மாண்புமிகு அமைச்சராக இருந்தவரும் இப்பொழுது சென்னை சட்டசபையில் மாண்புமிகு சபாநாயகராக, உள்ளவரும் ஆன உயர்திரு க. இராசாராம் அவர்கள் ஆவார். அச்சமயம் மதிப்பிற்குரிய சி. சுப்பிரமண்யம் அவர்கள் டெல்லியில் அமைச்சராக இருந்து திருவள்ளுவர் சிலை திறப் பதற்குத் துணைநின்றார்கள். அந்த மிகப் பெரிய விழாவுக்குப் பல பேரறிஞர்கள் அழைக்கப் பட்டிருந்தாலும், என்னை முக்கியமாகக் கலந்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தி மாண்புமிகு க. ராசாராம் அவர்கள் அழைத்துச் சென்றார்கள். 20 ஆண்டுகளுக்கு முன்னதாக டில்லி மாநகரத்தில் இடைவிடாமல் தமிழர்களிடையே ஏற்படுத்திய திருக்குறள் ஆர்வம் பிற்காலத்தில் தலைநகரில் திருவள்ளுவர் சிலை அமைப்பதற்கு ஒரே காரணமாக அமைந்திருந்தது என்று கூறுவது மிகையாகாது.

நாடாளுமன்றத்தில் உறுப்பினராயிருக்கும் ஒருவரின் பெயர் பல பதிவு ஏடுகளிலும் காணப்படுவதாக இருக்கும். அவ்வாறு எழுதப்பட வேண்டிய இடங்களில் எல்லாம் என்னுடைய பெயரை திருக்குறளார் என்றே எழுதச் செய்தேன். அதனால் தமிழ் மொழியறியாத வடநாட்டவரும் திருக்குறளைத் தெரிந்து கொள்வதற்கு உரிய வாய்ப்பு உண்டானது என்றே கூறவேண்டும். நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவருக்கு டில்லியிலிருந்து முதலில்

ஒரு செய்தி கேட்பது வழக்கம். அதாவது, 'உங்கள் பெயரையும் எந்தவகையில் எழுதுதல் வேண்டும்' என்று கேட்பார்கள். எல்லோரும் வழக்கமாகத் தங்கள் பெயரையும் வீட்டு முகவரியும் எழுதி அனுப்புவார்கள். நான், என் பெயரை மட்டும் குறிப்பிடாமல், திருக்குறளார் என்பதையும் சேர்த்து எழுதி அனுப்பினேன். அதனால்தான் நாடாளுமன்றம் பதிவேடுகளிலும், காசோலை கொடுக்கின்ற வாய்ப்புக்களிலும், பல்வேறு காலங்களில் உறுப்பினர்களுடன் தொடர்பு கொண்டு எழுத வேண்டிய காலங்களிலும் திருக்குறளார் என்ற பெயரையே எழுதிக் கொண்டு வந்தார்கள். திருக்குறள் என்ற பெயரைத் தமிழறியாதவர்களும் நாவினால் சொல்லுகின்ற வாய்ப்புக் கிடைத்ததை ஒரு பெரிய மகிழ்ச்சியாகவே கருதினேன்.

டில்லியிலிருந்தபோது சுவாமி சிவானந்தர் என்ற முனிவர் ரிஷிகேசத்தில் தவவாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார். அவரது ஆச்சிரமத்தில் என்னைத் திருக்குறள் சொற்பொழிவு நிகழ்த்துமாறு சொல்லிக் கேட்டு மகிழ்வார். அவர் குணம் என்னும் குன்றேறி நின்றவர். பல முறை என்னுடைய சொற்பொழிவுக் கருத்துக்களைக் குறித்துக் காட்டி விமரிசனம் செய்து, எனக்கு ஊக்கம் அளித்தார். ஒரு நாள் 'வேள்வி' போன்று சீடர்களுடன் வழிபாடு நடத்தி எனக்கு '**திருக்குறள் கேசரி**' என்ற சிறப்புப் பட்டத்தையும் அளித்தார்

மதுரை மாநகரின் நற் பெயருடனும் புகழுடனும் வாழ்ந்து வந்த பெரியார்களான தமிழர்களின் தலைவர்களுள் **தமிழவேள் சர். பி. டி. இராசன்** அவர்களும் ஒருவராவார்; தமிழ் மக்களின் உள்ளங்களில் என்றென்றும் நினைவில் நிறுத்தப்பட்டு இருப்பவர் அவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பொன் விழாவினைப் பத்து நாட்களுக்கு மேலாக, காலை முதல் இரவுவரை அருமையாக நடத்தினார். அந்த ஆண்டு 1954 - 55 என்று நினைக்கின்றேன். பத்து நாட்களும் அவ்விழாவில் கலந்து, சொற்பொழிவாற்றும் வாய்ப்பினை எனக்கு அளித்தார்கள். நிகழ்ச்சி நிரலில் கண்டுள்ளவாறு நான் சொற்பொழிவாற்றியதோடு அல்லாமல் பற்பல நேரங்களிலும் என்னைப் பேசச் செய்து, கமழுகின்ற குறள் மணத்தில் மக்களை மகிழச் செய்தார்கள். பொன்விழா நிகழ்ச்சிகளில் **கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், டி. கே. எஸ். சகோதரர்கள்** முதலிய பெருங்கலைஞர்களின் நாடகங்கள் நடக்கின்ற போதெல்லாம் இடைவேளைகளில் ஐயா பி. டி. இராசன் அவர்கள் என்னைப் பேசுமாறு ஆணையிட்டு மகிழ்வார்கள். பொன்விழா முடிந்த பிறகு தனியாக ஒரு நிகழ்ச்சி அமைத்து என்னைச் சிறப்பித்து, தமிழகத்தின் சிகரமான புலவர் பெருமக்களில் ஒருவரான கார்மேகக் கோனார் அவர்களை வாழ்த்தச் செய்து, எனக்கு 'வெள்ளித் தட்டு' ஒன்றினைப் பரிசாக அளித்தார்கள்.

சேலம் மாநகரில் 1954-ஆம் ஆண்டு என்னுடைய திருக்குறள் தொண்டினைப் பாராட்டு முகத்தான், நகரப் பெரியார்களில் ஒருவரும், இராவ்சாஹிப் பட்டம் பெற்றவரும், நகரமன்றத் தலைவரும், சென்னை சட்டசபை உறுப்பினரும் ஆகிய **உயர்திரு பி. இரத்தினசாமி பிள்ளை** அவர்கள் சிறப்பான விழா ஒன்று நடத்தினார்கள். அதிகமான சுற்றுப் பயணம் செய்து, திருக்குறள் சொற்பொழிவு செய்த மாவட்டங்களில் சேலம் மாவட்டம் என்னைப் பொறுத்த வரையில் முதன்மையானதென்று கூறி மகிழ்கின்றேன். சேலத்தில் நடைபெற்ற அந்த விழாவுக்கு சர். பி. டி. இராசன் அவர்கள் தலைமை வகித்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர், திவான் பகதூர் டி. எம். நாராயணசாமிபிள்ளை அவர்கள் '**தமிழ் மறைக் காவலர்**' என்ற பட்டத்தினை எனக்கு அளித்துச் சிறப்பித்தார்கள். கலைவாணர் N. S. கிருஷ்ணன், நாதகர சக்கரவர்த்தி காருகுறிச்சி அருணாசலம் முதலிய பெரும் கலைஞர்கள் வந்திருந்து விழாவினைச் சிறப்பித்தார்கள். தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் மா. இராச

மாணிக்கனார், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் முதலிய பேரறிஞர்கள் வந்திருந்து பாராட்டுரை நிகழ்த்தினார்கள். விழாத் தலைவர் அவர்கள் எனக்குப் பொன்னாடை போர்த்திப் பெருமை படுத்தினார்கள்.

திருச்சியை அடுத்த பொன்மலையில் திருக்குறள் கழகம் என்ற பெயரில் நிறுவனம் அமைத்து, அமரர் ஆறுமுகனார் அவர்கள் தலைவராயிருந்து நடத்தி வந்தார். அருட்பாவின் நுணுகிய ஆராய்ச்சியாளர் வித்துவான் வீ. இளங்கண்ணனார் அக்கழகத்தின் செயலாளராயிருந்தார். அக்கழகத்தில் அடிக்கடி என்னை அழைத்துச் சொற்பொழிவு நிகழ்த்தச் செய்து, திருக்குறளின் 133 அதிகாரங்களையும் தொடர்ந்து விளக்குகின்ற வாய்ப்பினைத் தந்து மக்களுக்குக் குறளார்வம் உண்டாகுமாறு செய்தார்கள். மிக அதிகமாகச் சொற்பொழிவாற்றிய இடம் பொன்மலை என்று கூறுவதில் நிறைந்த பொருள் இருக்கின்றது. (எனக்குப் பொன் மலையில்தான் திருமணமும் நடந்தது.) இவ்வாறு 133 அதிகாரங்கள் முடிந்த பிறகு தொகுப்பு நிகழ்ச்சியாக 10 நாட்கள் திருக்குறள் தொடர் சொற்பொழிவினைச் செய்தேன். அந்த விழா ஒரு மாநாடு போலக் காட்சியளித்தது. இறுதி நாளில், யானையின்மீது திருக்குறள் சுவடி வைக்கப்பட்டு 'உலகத் தமிழ் மறை' என்ற கொடி ஏந்திய வண்ணம் ஒரு பெரிய ஊர்வலம் நடத்தப்பட்டது. அவ்வூர்வலத்தில், மிகப் பெரிய இரயில்வே அதிகாரிகளும் ஏராளமான பொதுமக்களும் கலந்து கொண்டார்கள். தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் பாராட்டு விழா நடைபெற்றது. அவ்விழாவில் பேராசிரியர்களான அய்யம்பெருமாள் கோனார், ரம்போலா மாஸ்கரனேஸ், டாக்டர். இராசமாணிக்கனார் முதலானோர் பாராட்டுரை நிகழ்த்தினார்கள்; மதிப்பிற்குரிய தவத்திரு குன்றக்குடி அடிகளார் பொன்னாடை போர்த்தினார்கள்.

பல ஆண்டுகளாகத் திருக்குறள் தொண்டு செய்துவரும் கழகங்களாகவும், நான் அடிக்கடி சென்று பேசி வருகின்ற இடங்களாகவும் அமைந்துள்ள தென்காசி திருவள்ளுவர் கழகம், காரைக்குடி குறள் கழகம், மதுரை திருவள்ளுவர் கழகம், தேவகோட்டை திருக்குறள் கழகம், போன்ற கழகங்களின் வரிசையில் உடுமலைப் பேட்டை அரிமா சங்கத்திலும், அது போன்ற பிற மன்றங்களிலும், அந்த வட்டாரத்திலும் தொடர்ந்து திருக்குறள் சொற்பொழிவுகளை நிகழ்த்துமாறு செய்து, ஆசிரியப் பெருமக்களும் பொதுமக்களும் பயன்படுமாறு செய்த திருவாளர் செந்தில் ஆறுமுகம் அவர்கள் என்றென்றும் என் நினைவில் இருப்பவர் ஆவார்.

வட ஆர்க்காடு மாவட்டத்தினைச் சார்ந்த திருவண்ணாமலையில் வள்ளலார் சன்மார்க்க சங்கம் என்ற பெயரில் அருமையான நிறுவனம் நடைபெற்று வருகின்றது. அங்கே ஒரு முறை கோபுர வாயிலில் 10 நாட்கள் தொடர் சொற்பொழிவினை நிகழ்த்தினேன். ஆசிரியப் பெரு மக்களும் புலவர்களும் பொதுமக்களும் வந்திருந்து பயன் பெற்றுச் சிறப்பித்தார்கள். திருவாளர் ஸ்ரீராமுலு செட்டியார் அவர்களும் கலை நம்பி அவர்களும் அதை முன் நின்று நடத்தினார்கள் இறுதி நாளில் நகரத்தின் முக்கிய தெருக்களில் எல்லாம் பாராட்டு ஊர்வலம் நடத்தினார்கள்; அந்த நிகழ்ச்சியின் பெரும் பயனாக ஓராண்டு கழித்து, திருவண்ணாமலையில் மூன்று நாள் நிகழ்ச்சியாகத் திருக்குறள் மாநாடு ஒன்றினை நடத்த முடிந்தது மிகப் பெரிய தமிழ் மேதைகள் அம் மாநாட்டில் கலந்து பேசினார்கள்.

உலக மகா கவிஞர்களில் ஒருவரான யோகி சுத்தானந்த பாரதியார், மகாவித்துவான் தண்டபாணி தேசிகர், அ. நடேச முதலியார் முதலியவர்கள் திருக்குறள் கருத்தினை எடுத்துக்

கூறினார்கள். மூன்று நாட்களும் நான் திருக்குறள் பணியினைச் செய்து தருகின்ற வாய்ப்பினைப் பெற்று மகிழ்ந்தேன்.

இன்றும் என் உள்ளத்தில் பசுமையான நிகழ்ச்சி ஒன்று நினைவில் இருக்கின்றது. வட ஆர்க்காடு மாவட்டத்தில் செங்கம் என்ற நகரம் நல்ல தமிழறிஞர்களைப் பெற்றிருப்பதாகும். அங்கு நான் பலமுறை சென்று பேசி வருவதுண்டு. பல ஆண்டுகளுக்கு முன்பாக திருக்குறள் மாநாடு ஒன்றினை நண்பர்கள் நடத்தினார்கள். அந்த மாநாட்டில் பெரும்புலவர் நடேச முதலியார் போன்றவர்களும் எம் போன்ற நண்பர்களும் கலந்து பேசிய உரைகளைவிட அரிமா போன்று வீர முழக்கம் செய்து வந்த அரசியல் தலைவர் பா. ஜீவானந்தம் அவர்கள் சிறப்புரை ஆற்றியதுதான் மிகவும் பெருமைக்குரியதாகும். 'திருக்குறளாருக்கு மட்டும்தான் திருக்குறள் தெரியும் என்று நினைக்காதீர்கள்; எனக்கும் கொஞ்சம் தெரியும்' என்று நகைச்சுவை தோன்ற அடக்கமாகப் பேசிய காட்சியை என்னால் மறக்க முடியாது. அவர் பிறகு தாம்பரத்தில் திருக்குறள் பெருவிழா ஒன்றினை அமைத்து என்னை அழைத்துப் பேசுமாறு பணித்தார்கள்.

ஒருமுறை கல்கத்தா சென்றிருந்த பொழுது, அங்குள்ள பல சங்கங்கள் என்னுடைய திருக்குறள் சொற்பொழிவினைக் கேட்டுச் சிறப்பித்துப் பாராட்டின. அங்குள்ள தமிழ் அன்பர்கள் திருக்குறள் கற்கும் பேரார்வத்தில் இருந்ததைக் கண்டு நான் வியப்புற்று மகிழ்ந்தேன்.

திருக்குறள் தொண்டினை 1935-ஆம் ஆண்டிலிருந்து செய்து கொண்டு வந்த எனக்கு, பெருமைக்குரிய முன்னாள் கல்வியமைச்சர் அவினாசிலிங்கம் செட்டியார் தாம் பதவியில் இருந்தபோது பள்ளிக் கூடங்களில் திருக்குறளைக் கட்டாய பாடமாக்கிய செய்தி மிகவும் மகிழ்ச்சி யளித்தது. பேராசிரியர் சி இலக்குவனார் அவர்கள் நாகர்கோயில் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது, என்னை அழைத்துப் பலவிடங்களிலும் சொற்பொழிவு நிகழ்த்தச் செய்து, திருக்குறள் பரவுவதற்கு ஆற்றிய தொண்டினை என்னால் என்றுமே மறக்க முடியாது

கடந்த 30 ஆண்டுகளுக்கும் மேலாக தமிழக வானொலி நிலையங்களில் திருக்குறளில் சொற்பொழிவுகள் நிகழ்த்தும் வாய்ப்பினைப் பெற்று வருகின்றேன். என்னுடைய திருக்குறள் தொண்டிற்கு வானொலி நிலையங்கள் துணையாக நிற்கின்றன என்பதைக் குறித்து மகிழ்ச்சி யடைகின்றேன். "திருவள்ளுவருக்கு இரண்டாயிரம் ஆண்டு நிறைவு விழா அடுத்த ஆண்டு வர இருக்கிறது. நாம் எப்படி நடத்தலாம்" — என்ற கருத்தினை ஒருநாள் உயர்திரு M. S. கோபால் கேட்டார். அவர் அப்பொழுது திருச்சி வானொலி நிலையத்தின் பெருமைமிகு இயக்குநராக இருந்தார். மக்களுக்குச் சேவை செய்வதே வாழ்க்கையின் குறிக்கோள் என்ற பெருநோக்கம் அவர்பால் ஊறியிருந்தது. அவர் பல வானொலி நிலையங்களில் இயக்குநராக வந்த பிறகு தான், அவ்விடங்களில் தமிழ் இலக்கியங்கட்குப் புதுப் பொலிவு மிகுந்தது எனலாம். வெறும் பாட்டுக்களையே ஒலி பரப்புவதுதான் வானொலி நிலையத்தின் வேலை என்ற எண்ணத்தை மாற்றி, மிகுதியாக இலக்கியங்களைச் சொற்பொழிவுகள் மூலமும் பட்டிமன்றங்கள், வழக்காடு மன்றங்கள், கவியரங்கங்கள் முதலியன மூலமாகவும் ஒலி பரப்பலாம் என்று நடத்திக் காட்டி, தமிழுக்கு ஏற்றம் தந்த பெருமை, உயர்திரு M. S. கோபால் அவர்களையே சாரும் என்று கூறுதல் தகும்.

திருக்குறளினை வாரம் ஒருமுறை ஒலிபரப்பி 52 வாரங்கள் அவ்வாறு முடிந்த பிறகு அடுத்த ஆண்டு திருவள்ளுவரின் ஈராயிரம் ஆண்டு நிறைவு விழா கொண்டாடுவது சிறப்பாக இருக்கும் என்று கூறினேன். ஆழ்ந்து சிந்தித்தபின் இயக்குநர் ஒத்துக் கொண்டார். தவத்திரு குன்றக்குடி அடிகளார், ஆறுமுக முதலியார், நடேச முதலியார் முதலானோர் வாரச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார்கள். நானும் பல வாரங்கள் பேசுகின்ற வாய்ப்பினைப் பெற்றேன்.

திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டு நிறைவு விழா மதுரை மாநகரில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. எனக்கு அவ்விழாவில் பெரும்பங்கினை ஏற்றுக் கொள்ளச் செய்தனர். வானொலியில் நடைபெற்ற ஓராண்டு சொற்பொழிவுகளை வள்ளுவர் உலகம் என்ற பெயரில் நூல் வடிவமாகக் கொண்டுவந்த பெருமையும் இயக்குநர் திரு. கோபால் அவர்களையே சாரும். ஒருமுறை மேலும் புதுவை வானொலியில் திருக்குறள் முழுதும் அமைகின்ற முறையில் ஆறு சொற்பொழிவுகளை நிகழ்த்துமாறு செய்ததும் நினைவில் நிற்கிறது. அந்தச் சொற்பொழிவு களையெல்லாம் பொதுமக்கள் கேட்டு மகிழ்ந்து மிக்கப் பயனடைந்ததாகப் புகழ்ந்தார்கள். கோவை வானொலி நிலையமும் என்னுடைய திருக்குறள் சொற்பொழிவுகளை மிக நல்லமுறையில் பதிவு செய்து ஒலி பரப்பி வருகிறது நான் மேற்கொண்ட திருக்குறள் தொண்டுக்கு இத்தகைய வானொலி நிலையத்தினர் ஒத்துழைப்புத் தருவது போற்றத்தக்கது. சென்னை வானொலி நிலையமும் நல்ல முறையில் திருக்குறள் தொண்டு செய்து வருகிறது. புதுவை, நெல்லை வானொலி நிலையத்தினரும் என்னுடைய திருக்குறள் தொண்டுகளைப் பாராட்டி, வாய்ப்பு நேரும் போதெல்லாம் என் சொற்பொழிவுகளை ஒலி பரப்பி வருகின்றார்கள்.

நாளிதழ்களும் வார இதழ்களும் அவ்வப்பொழுது என்னுடைய திருக்குறள் பேச்சுக் களை வெளியிட்டு ஊக்கந்தந்தன. அண்மைக் காலத்தில் கல்கண்டு, ஆனந்த விகடன், குமுதம், சாவி, இதயம் பேசுகிறது, ஞானபூமி முதலிய இதழ்கள் எல்லாம் அவ்வப் பொழுது, என்னுடைய திருக்குறள் செய்திகளை வெளியிட்டு என் திருக்குறள் பணிக்குத் துணை புரிந்தன. ஒருமுறை குமுதம் என்னுடைய திருக்குறள் சேவையினைப் பாராட்ட வேண்டும் என்று கருதி, '45 ஆண்டுகளாக இவர் குரல் திருக்குறள்' என்ற தலைப்பில் என் புகைப்படத் துடன் என் திருக்குறள் தொண்டினைப் பாராட்டிப் புகழ்ந்துள்ளது.

1981ஆம் ஆண்டு மதுரை மாநகரில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் தமிழக முதல்வர், புரட்சித் தலைவர் எம். ஜி ஆர். அவர்கள் எனக்குப் பெரிய பொறுப்பு ஒன்றினை அளித்திருந்தார்கள். விழா அமைக்கப் பட்டிருந்த நாட்களில் ஒருநாள் திருக்குறளுக்காக கொடுக்கப்பட்டிருந்தது. அந்த திருக்குறள் விழாவில் தலைமை ஏற்று நடத்தும் பணியினை என்னிடம் ஒப்படைத்திருந்தார். என்னுடைய தலைமையில் பேராசிரியர் பதின்மர், திருக்குறளைப் பற்றிச் சிறப்பான விரிவுரைகள் நிகழ்த்தினார்கள். பல்லாயிரக்கணக்கான தமிழர்களும் பிறநாட்டு மக்களுமாகக் கூடிக் கேட்டு மகிழ்ந்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. நானும் முன்னுரை முடிவுரை என்ற முறைகளில் ஒருமணி நேரம் நகைச்சுவையுடன் ஆழ்ந்த பல கருத்துக்களையும் பேசினேன்; கேட்ட மக்கள் மகிழ்ச்சிக் கடலில் மிதந்தார்கள் என்று கூறுவது தற்பெருமை ஆகாது. இந்தப் பேச்சினை சென்னையிலிருந்து வெளிவரும் 'சாவி' என்ற வார இதழ் மிக உயர்வாக எழுதி என்னை ஊக்கப்படுத்தியது. மாநாட்டுப் பேச்சினை வானொலி நிலையங்களும், தொலைக்காட்சி நிலையமும் நல்ல முறையில் ஒலி—ஒளி பரப்பிச் சிறப்புச் செய்தன.

உலகத் தமிழ் மாநாட்டில் நான் பேசிய பேச்சினைக் கேட்ட அன்பர்கள், "பல ஆண்டுகளாக உங்கள் திருக்குறள் சொற்பொழிவுகளை நாங்கள் தொடர்ந்து கேட்டு வருகின்றோம். ஆனால் இன்று மாநாட்டில் பேசிய பேச்சினைப் போல், நீங்கள் எப்போதுமே பேசியதில்லை; அவ்வளவு சிறப்பாகவும் உயர்வாகவும் இருந்தது" என்று என்னிடம் வந்து கூறி எனக்கு மேலும் மேலும் திருக்குறள் ஆர்வம் எழும்படி ஊக்குவித்தனர்.

கடந்த நாற்பதாண்டு அனுபவத்தில் என்னை அடிக்கடி அழைத்து திருக்குறள் சொற்பொழிவு நிகழ்த்துமாறு செய்த நகரங்களில் திருவாரூரும் ஒன்று ஒருமுறை திருவாரூரில் என்னுடைய சொற்பொழிவு முடிந்த பிறகு தமிழ் நாட்டின் தலைவர்களில் ஒருவராக மதிக்கப் பெறும் நண்பர் **கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்** நன்றியுரையில் அருமையாகப் பாராட்டிப் பேசியதைக் கேட்டு மக்கள் பெரிதும் மகிழ்ந்தனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

சிதம்பரத்தில் சுவாமி சகஜானந்தா என்ற பெருந்தலைவர் ஒருவர் இருந்தார். அவர் காந்தியவாதி. தமிழிலும் வடமொழியிலும் புலமை பெற்றவர். மிகப் பெரிய தேச பக்தர். மகாத்மா காந்தியடிகள் திருச்சிக்கு வந்திருந்த போது அவரும் வந்திருந்தார். நான் திருக்குறளில் பயிற்சி பெற்றுப் பேசுவதைக் கேட்டு அவர் மகிழ்ந்து எனக்கு மனவெழுச்சியினை உண்டாக்கினார். சப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனார் அவர்களுடன் அவருக்கு நெருங்கிய நட்பு உண்டு. செக்கிழுத்த செம்மல் வ. உ. சி அவர்கள் தமிழ்ப் பெரும் மேதைகளுள் மேதையும் தலைவரும் ஆவார். அவரைப் பற்றிக் குறிப்பிடும் போது சுவாமி சகஜானந்தர், "வ. உ. சி. அவர்கள் காலையில் தோட்டத்துக்குப் பல் துலக்கச் செல்வார். அப்பொழுது கிணற்றினைச் சுற்றிக் கொண்டே எல்லாக் குறட்பாக்களையும் ஒப்பிப்பார்." இவ்வாறு என்னிடம் மனப்பாடச் சக்தியை இன்னும் அதிகமாக வளர்க்க வேண்டும் என்று அவர் குறிப்பால் உணர்த்தியது இன்று சொல்வது போலவே எனக்கு அது நினைவுறுத்திக் கொண்டிருக்கிறது.

உலக உத்தமர் மகாத்மா காந்தியடிகளார் முதற்கொண்டு பெருந்தலைவர் காமராஜர் வரையுள்ள மாபெரும் அரசியல் தலைவர்களும், தமிழ்நாட்டிலும் வடநாட்டிலும் உள்ள சமுதாயச் சீர்திருத்தத் தலைவர்களும் ஒரு மனதாகப் பாராட்டப்பெறும் உலகத் தலைவர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர் **தந்தை பெரியார் ஈ வே. இராமசாமி அவர்கள்**. தமிழகத்திற்கும் தமிழர் சமுதாயத்துக்கும் அவர் செய்த தொண்டு ஈடு இணையற்றதாகும். 1924 ஆம் ஆண்டில் ஈரோட்டில் **குடியரசு** வார இதழைத் தொடங்கிய பொழுது, "அப்பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு' என்று முடிகின்ற இரண்டு குறட்பாக்களை முன் பக்கத்தில் அச்சிட்டு வந்தார். ஆதிகாலம் முதற்கொண்டே என்னுடைய சிறிய திருக்குறள் தொண்டுக்குத் **தந்தை பெரியார்** ஊக்கம் அளித்து வந்தார்கள். அன்று முதல் இன்று வரை, திராவிட இயக்க அன்பர்கள் முழு மூச்சாக திருக்குறள் தொண்டாற்றும் எனக்கு ஒத்துழைப்புத் தந்து வருகின்றனர். 1948 ஆம் ஆண்டில் தந்தை பெரியார் அவர்கள் சென்னை இராயபுரத்தில் மிகப்பெரிய திருக்குறள் மாநாட்டினை நடத்தினார்.

**தமிழ் மாமுனிவர் திரு. வி. கலியாண சுந்தரனார், கல்விக் கடல் சக்கரவர்த்தி நயினார், பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், மாண்புமிகு நாவலர் நெடுஞ் செழியன்** முதலிய பெரியார்கள் பங்கேற்று அம்மாநாட்டினைச் சிறப்பித்தனர். என்னை

அழைத்து, சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்துமாறு பெரியார் ஆணையிட்டார். இயன்றவரை சிறப்பாகச் சொற்பொழிவாற்றினேன். திருக்குறளைப் பற்றிப் பேசும் போதெல்லாம் 'கற்பு, மானம், முதலிய கருத்துக்களையெல்லாம் விமரிசனம் செய்து, வள்ளுவர் கருத்தினைப் பகுத்தறிவு கொண்டு ஆராய வேண்டும்' என்று தந்தை பெரியார் அடிக்கடி கூறுவார்.

மக்களுடைய நல்வாழ்விற்காகவே வாழ்நாள் முழுதும் தியாகம் செய்த தந்தை பெரியார் அவர்கள் வாழ்ந்த வாழ்க்கைக் குறிப்புக்களில் சிலவற்றை எடுத்து—குறட்பாக்களுடன் ஒப்பிட்டு நூலொன்று எழுதி வெளியிட்டேன். ''வள்ளுவர் குறளும் ஈ. வே. ரா வாழ்க்கையும்'' என்பது அந்நூலின் பெயராகும். கிட்டத்தட்ட 18 முறைகட்கு மேல் சிறை சென்ற அப்பெரியார் எவ்வளவு துன்பங்கள் அடைந்திருக்க வேண்டும் என்பதையும், யாருக்காக அத் துன்பங்களையெல்லாம் அடைந்தார் என்பதையும், பகுத்தறிவுடன் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்பதையும் விளக்குவதே அந்த நூலின் அடிப்படைக் கருத்தாகும். அந்த நூலில் பல குறட்பாக்களை விளக்கம் செய்து எழுதினேன். ஒரு காலத்தில் தமிழ் இலக்கிய உலகில் புரட்சிகரமான நன்மைகள் செய்த பசுமலை நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்களும் முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களும் காஞ்சி பரவஸ்து, இராஜ கோபாலாச்சாரியர் அவர்களும் திருச்சி வித்வான் இரா. மீனாட்சி சுந்தரனார் அவர்களும் பெரியாரைப் பற்றி நான் எழுதிய அந்த நூலுக்கு சிறந்த மதிப்புரைகள் தந்து என்னைச் சிறப்பித்தார்கள்.

உலகிலேயே சிறந்த நாகரிகமும் தொன்மையும் உடைய திராவிடப் பண்பாட்டினைத் திருக்குறளிலிருந்து எடுத்துக் காட்டி ''திருவள்ளுவரும் திராவிடக் கொள்கையும்'' என்ற நூலினை அந்தக் காலத்திலேயே எழுதி வெளியிட்டேன். அளவில் மிகச் சிறிய நூலாயினும் நூதனமான கருத்துக்களை விளக்கியதால் அந்நூல் மிகவும் பாராட்டப் பெற்றது.

ஒரு காலத்தில் தந்தை பெரியார் அவர்கள் உருசியா தேசம் சென்று வந்தார். வந்த பிறகு எப்போதும் போல சிறந்த பகுத்தறிவுச் சொற்பொழிவுகள் நிகழ்த்திக் கொண்டிருந்தார். அவருடைய சொற்பொழிவுகளை அடிக்கடி கேட்ட எனக்கு அன்பு, கருணை, இரக்கம், சமரசம், சமத்துவம், சன்மார்க்கம் என்று முழங்கிய வடலூர் வள்ளலார் நினைவுகள் என் உள்ளத்தில் தோன்றிக் கொண்டிருந்தன. வேறுபாடுகளைக் களைந்து, சமத்துவத்தைப் போதித்த வடலூர் வள்ளலார் கருத்துக்களுடன் தந்தை பெரியார் அவர்கள் மக்களிடையே வற்புறுத்திக் கொண்டு வந்த சமத்துவமும் பகுத்தறிவும் கொண்ட கருத்துக்களை விளக்கிச் சிறிய நூலொன்று எழுதினேன். இந்த நூல் பல ஆண்டுகட்கு முன்னரே வெளியிடப்பெற்றது. அந்த நூலுக்கு ''வடலூரும் ஈரோடும்'' என்னும் பெயர் கொடுத்தேன். பொருத்தமான இடங்களில் குறட்பாக்களை இணைத்து அதில் விளக்கம் செய்துள்ளேன்.

அணியணியாய்க் கூற வேண்டிய செய்திகள் எத்தனையோ உண்டு. என் வாழ்நாளில் தொடர்ந்து செய்து வருகின்ற நற்பணி திருக்குறள் பரப்புகின்ற பணியேயாகும். மிகப் பெரிய அளவில் தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவினை நமது தமிழக அரசு நடத்திய போதெல்லாம் என்னை அழைத்துப் பேசச் செய்த நேரங்களில் குறட்பா பணியே அப்பணி என்ற முறையில் பேசினேன். பாரதியார் நூற்றாண்டு நிகழ்ச்சிகளிலும் தமிழக அரசினர் என் கடமையினை ஆற்றச் செய்து நான் மேற்கொண்டுள்ள வாழ்நாள் பணியான திருக்குறள் பரப்பும் தொண்டினைச் செய்ய வாய்ப்பளித்து வருவதும் மனநிறைவைத் தந்து எனக்கு ஊக்கமூட்டுவதாகும்.

கோயமுத்தூரில் ஒருமுறை வியப்பான செய்தி ஒன்று நடந்தது. 'பிரசிடெண்ட் ஹாலில் திருக்குறள் சொற்பொழிவு நிகழ்த்தினேன். கற்றோர் நிறைந்த கூட்டத்தில் நான் பேசி முடிந்ததும் தலைமை வகித்த பெரியவர் கூட்டத்தினரைப் பார்த்து, 'உங்களுக்கு ஏதேனும் ஐயப்பாடு இருந்தால் கேளுங்கள்; திருக்குறளார் விடை சொல்லுவார்' என்றார். உடனே அக்கூட்டத்தில் கடைசியில் உட்கார்ந்திருந்த ஒருவர், ''நான் ஒருகேள்வி கேட்க வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து நின்றார். பெருவியப்புடன் எல்லோரும் அவரை உற்று நோக்கினர். கூட்டத்தில் சிறிய சல சலப்பும் கலகலப்பும் ஏற்பட்டது. ஏனெனில் எழுந்து நின்றவர் நம்நாட்டின் பெரிய விஞ்ஞானியாகிய G. D. நாயுடு ஆவார். நான் உடனே எழுந்து நின்று, 'தாங்கள் கேட்கலாம்' என்று பணிவுடன் சொன்னேன். அவர் கேட்ட ஐயப்பாடு இதுதான்: 'திருக்குறள் முழுதும் படித்தால் பைத்தியம் பிடிக்கும் என்கிறார்களே!' உடனே நான் தாமதமில்லாமல், 'படிக்க வேண்டிய முறையில் ஒழுங்காகப் படிக்கவில்லை என்றால் நீங்கள் சொன்ன மாதிரி நடந்தாலும் நடக்கலாம்' என்றேன். அந்த விந்தைமிகு அறிஞர் பல்லாண்டுகளாக என்னிடம் அன்பு காட்டி வந்தார். என்னை ஊக்கப்படுத்திவரும் மற்றொரு தொழில் மேதை — சிந்தனையாளர் — பொள்ளாச்சி வள்ளல் ந. மகாலிங்கம் அவர்களையும் மறக்க முடியாது.

இரண்டு ஆண்டுகட்கு முன்னதாக 'குறளியம்' என்ற பத்திரிகை ஒன்றினை ஈரோட்டில் தொடங்கி வைத்தேன். வேலா. இராசமாணிக்கம் அவர்கள் அந்த இதழுக்கு ஆசிரியராக இருந்து வெளியிட்டு வருகிறார். அந்த இதழில் நானும் எழுதி வருகின்றேன். தமிழ்நாட்டில் நிறைந்த புகழ் பெற்ற திருக்குறள் அட்டாவதானியான திரு பெ. இராமையா, திருக்குறள் அஷ்டாவதானம்செய்த பெரியார் அமரர் தி. ப. சுப்பிரமணியதாஸ் அவர்களும் நம்முடைய பாராட்டுக்குரியவர் ஆவர்.

1960 ஆம் ஆண்டில் மலேஷியா, சிங்கப்பூர் முதலான நாடுகட்குச் சென்றிருந் தேன். 3 மாத காலம் சுற்றுப் பிரயாணம் செய்தேன். அங்குள்ள தமிழ்ப் பெருமக்கள் அளவு கடந்த ஆர்வத்துடன் எனது திருக்குறள் விளக்கச் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ந்து பாராட்டினார்கள். பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்குப் பாடம் போதிக்கும் முறையில் அன்றாடம் வானொலியில் ஒலிபரப்புவதற்காக என்னுடைய திருக்குறள் பேச்சுக்களை ஒலிப்பதிவு செய்து வைத்துக் கொண்டார்கள்.

''திருக்குறள் சம்பந்தமான வினாக்களையெல்லாம் எழுதி அனுப்பினால், அவைகட்கு எல்லாம் திருக்குறளார் அவர்கள் விடை சொல்லுவார்கள். உடனே வினாக்களை எழுதி அனுப்பவும்'' என்று வானொலியில் பொதுமக்களுக்கு அறிவிப்பு செய்தார்கள். இந்தத் தேதியில் இந்த நேரத்தில் விடைகளைக் கேட்கலாம் என்றும் அறிவிப்புச் செய்தார்கள். குறித்த நாளில் குறிப்பிட்ட நேரத்தில் என்னை அழைத்தார்கள். நிலைய அதிகாரி ஒருவர், வந்த வினாக்களை யெல்லாம் ஒழுங்குபடுத்தி என்னைக் கேட்க, ஒவ்வொன்றுக்கும் நான் விடை அளித்தேன். கோலாலம்பூர் வானொலி நிலையத்திலும் என்னுடைய பேச்சுக்களை ஒலிப்பதிவு செய்து கொண்டார்கள்.

ஈப்போ, கோலாலம்பூர், சிங்கப்பூர் முதலிய நகரங்களில் தொடர்ந்து, 10 நாட்கள். 20 நாட்கள் என்று பேசும்படி அன்பர்கள் ஏற்பாடு செய்துவிட்ட படியால், வேறு பல ஊர் களினின்று வந்த அழைப்புக்களை ஏற்றுக்கொள்ள இயலாமல் போயிற்று. இருப்பினும், பினாங்கு சிகாமெட், மலாக்கா, டெலிகான்சன் போன்ற இடங்கட்கும் சென்று சொற் பொழிவுகள் நிகழ்த்தி வந்தேன். ஈப்போ நகரில் இருந்த தமிழர் மகாசபையில்

'குறள் நாவலர்' என்ற பட்டத்தினை அளித்தனர். அப்பட்டத்தினை பெரிய தங்கப் பதக்கத்தில் பொறித்து அன்பளிப்புச் செய்தார்கள்.

அப்பொழுது, சிங்கப்பூர் சட்டசபையில் சபாநாயகராயிருந்த திரு. கந்தசாமி அவர்கள் திருக்குறள் பணிபுரிய எனக்கு ஆதரவாக இருந்தார். சிங்கப்பூரில் அப்பொழுது, கல்வி அமைச்சராக இருந்த திரு. இராசரெத்தினம் அவர்களிடம் தமிழர்களின் சார்பில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பெற்ற திருக்குறள் நூல் ஒன்றினை அரசு நூல் நிலையத்துக்கு அன்பளிப்புச் செய்தேன். மலேஷியாவிலிருந்து புறப்படும்போது தமிழறிஞர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, தமிழ்த்துறையில் பெரும்பணி ஆற்றுவதற்காக அப்போதுதான் மலேஷியா வந்திருந்த அறிஞர் தனிநாயக அடிகளாரின் சீரிய தலைமையில் பாராட்டு விருந்து அளித்து என்னைச் சிறப்பித்தார்கள்.

"இதுவரையில் மலாயா நாட்டிற்கு வந்திருந்த தமிழறிஞர் யாருக்குமே செய்யாத சிறப்பினை தங்களுக்குத்தான் செய்திருக்கிறோம்" என்று வழியனுப்பிய மலேஷியா அன்புப் பெரியார்களில் ஒருவர் "திருக்குறளார் பாராட்டு மலர்" என்ற பெயரில் அச்சிடப்பட்ட புத்தகம் ஒன்றினை என்னிடம் கொடுத்தார். மிக அழகான முறையில் பல பெரியார்களின் பாராட்டுரைகள் அந்த மலரில் காணப்பட்டன; ஆயிரம் பிரதிகட்குமேல் அச்சிட்டிருக்கின்றார்கள் என்று அறிந்தேன். திருக்குறள் சார்பில் எனக்கு அவர்கள் அளித்த பெருமைக்கு என்றும் நன்றியுடையேன்.

தென் ஆர்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் நகரில் என்னைப் பாராட்டு முகத்தான் தமிழகத்தின் பல பெரியார்களின் நல்லுரைகளை வாங்கி மலர் ஒன்று வெளியிட்டார்கள். அந்த மலர் வெளியீட்டு விழா தமிழவேள் சர். பி. டி. இராசன் அவர்கள் தலைமையில் 1955 ஆம் ஆண்டில் நடைபெற்றது.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், சர். பி. டி. இராசன், பேராசிரியர் ஏ. சி. செட்டியார், நகைச் சுவை அரசர் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், நாடாளுமன்றச் சபாநாயகர் அனந்த சயனம் அய்யங்கார், டாக்டர் மு. வரதராசனார், பேராசிரியர் காமாட்சி குமாரசாமி அம்மையார், பேராசிரியர் டாக்டர் மெ. சுந்தரம் முதலியோரின் அரிய சொற் செல்வங்கள் எல்லாம் அப்பாராட்டு மலரில் இடம் பெற்றிருந்தன.

அக்காலத்திலிருந்தே பொதுமக்களுக்கும் திருக்குறள் கற்கும் எழுச்சி உண்டாக வேண்டுமென்று இயன்றவரை நாள்தோறும் இடைவிடாமல் பேசியும் எழுதியும் வந்ததன் பயனாகப் பாமர மக்களும் தமிழ் மறையின் இன்றியமையாத் தன்மையை உணர்ந்துவிட்ட காரணத்தினால் இப்பொழுது பேருந்துகளில் எல்லாம் திருக்குறள் மணம் கமழுமாறு செய்தும் வள்ளுவர் கோட்டம் அமைத்தும் மகிழ்ச்சியும் மனநிறைவும் கொள்ளுகின்ற நிலையில் திருக்குறளால் மக்களிடையே முதன்மையான பெருமையும் சிறப்பும் எனக்கு இருப்பது கருதிப் பெருமைப் படுகின்றேன்.

என்னுடைய வாழ்நாளில் வேறு எப்பணியினையும் மேற்கொள்ளாது, திருக்குறள் கருத்துக்களைப் பரப்புவதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு ஆற்றிய பணிகள் அனைத்தையும் விளக்கமாக எழுதப் புகுந்தால் அதுவே மிகப் பெரிய நூலாகும் என்று கருதி அவ்வாறு எழுதாமல் சுருங்கக் கூறியுள்ளேன்.

இந்த வரலாற்றுச் சுருக்கத்தில் திருக்குறள் பணியை மேற்கொண்ட என்னுடைய வாழ் நாள் நிகழ்ச்சிகளில், எதையுமே விளக்கமாக எடுத்துச் சொல்ல நான் விரும்பவில்லை.

**உலகப் பொதுமறை திருக்குறள் உரை விளக்கம்** என்ற பெயரில் வெளியிடப் பெறும் இந்நூலில் குறட்பாக்களை எளிமையாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற கருத்தினையே முதன்மையாக வைத்து எழுதி முடித்துள்ளேன்.

இந்நூல் வெளிவருவதற்கு அரும்பாடுபட்டு இரவு பகல் என்று பாராமல், உணவு உறக்கம் என்பவற்றைக் கருதாமல் இந்நூல் பதிப்புப் பணியில் முழுமூச்சாக நின்று முடித்த **சேகர் பதிப்பக உரிமையாளர் வெள்ளையாம்பட்டு சுந்தரம்** அவர்கட்கு என்னுடைய வாழ்த்துடன் உளமார்ந்த பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கின்றேன். மிகப் பெரிய பொருட் செலவு உண்டாகும் என்பதை அறிந்திருந்தும், அதற்காகத் தளராமல், 'உலகப் பொது மறை' என்னும் உயர்ந்த நூலை வெளியிடுகின்ற பொறுப்பு—தமிழ் நாட்டிற்கே செய்கின்ற கடமை என்று கருதிப் பெருமனதுடன் இந்நூலினை வெளியிட முன்வந்த **திருமகள் நிலையத்தின் உரிமையாளர் உயர்திரு அ. இராமநாதன் செட்டியார்** அவர்கட்கு என்றென்றும் கடப்பாடுடையேன். அனைத்துக்கும் உறுதுணையாக நின்ற **தமிழ்ப் பேரறிஞர் சிலம்பொலி செல்லப்பனார்** அவர்கட்கும் நன்றியறிதலுடையவனாவேன்.

பதிப்புப் பணியில் அன்போடு உடனிருந்து துணைபுரிந்த புலவர் பெருமக்களாகிய திருவாளர்கள் முத்து. எத்திராசன் எம். ஏ., சேலம் மா. அய்யாசாமி எம்.ஏ., பாகூர் க. குப்புசாமி, அச்சிறுபாக்கம் தாமரைக் கண்ணன், பேராசிரியர் மது. ச. விமலானந்தம் ஆகிய அனைவர்க்கும் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டுள்ளேன்.

இப்பெரிய நூலை குறுகிய காலத்தில் நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த வெற்றி அச்சக உரிமையாளர் திருவளர் செல்வர் எஸ். குப்புசாமி அவர்கட்கு, எல்லாம் வல்ல இறைவன் எல்லா இன்பங்களையும் நல்கிச் சிறப்பிக்க வாழ்த்துகின்றேன்.

ஒவ்வொரு தமிழர் இல்லத்திலும் "**உலகப் பொது மறை**" இருத்தல் வேண்டும் என்று விரும்புகிறேன்.

விழுப்புரம்
20.7.1982

அன்புள்ள,
**திருக்குறளார்**

# பாட்டு முதற் குறிப்பு